சிவமயம்

# ஐந்தாம் பகுதியின் முன்னுரை

1. நான்காம் பகுதியின் பின், சரியாய் 1 ஆண்டும் நான்கு மாதங்களும் கூடிய கால அளவில் இப்பகுதி வெளிவருதல் திருவருளின் ஆணையாலாகியது. புராணத்தின் எஞ்சிய பகுதிகளும் இவ்வளவின்றி விரைவில் வெளி வருவனவாகில் இன்னும் ஒன்றரை ஆண்டெல்லையில் உரை முழுதும் அச்சுநிறைவு காணலாம். அன்பர்கள் தரும் ஊக்கமும் உதவிகளும் திருவருளும் முன்னிற்க.

2. இப்பகுதியில் ஆளுடையபிள்ளையார் புராணம் பிற்பகுதி முழுமையும் வெளி வருகின்றது. இது வம்பறாவரிவண்டுச் சருக்கத்தின் II பாகமாகும். அச்சருக்கத்தின் எஞ்சிய ஏனைய புராணங்கள் (வம்பறாவரிவண்டுச் சருக்கம் III பாகம்) VI பகுதியாகவும், பெரியபுராணத்துள் அதன்மேல் உள்ள ஏழாவது "வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்" முதல் பதின்மூன்றாவது வெள்ளானைச் சருக்கம் வரை ஏழு சருக்கங்களும் VII பகுதியாகவும் வரவுள்ளன.

3. இப்பகுதி வெளியாகுமிடையில் இவ்வெளியீட்டுக்கு எல்லா வகைகளாலும் பேரூக்கமும், உதவியும் தந்தருளியிருந்த ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் என்னும் முனிவர்பெருமான் சென்ற விரோதி ஆண்டு சித்திரைத் திங்கள் 10-ம் நாள் திருத்தில்லையில் இறைவன் திருவடி சார்ந்தனர். அந்நிகழ்ச்சி இவ்வெளியீட்டுக்குப் பெருத்த நட்டமாகும், அஃதறிந்து முன்னரே அறிவித்துள்ளேன். திருஞானசம்பந்த நாயனார் புராணத்துள் மூன்று பாகங்கள், விரும்பும் அன்பர்கள் இலகுவில் பெற்றுப் பயனடையும் பொருட்டுத் தனி வெளியீடுகளாகப் பதிக்கப்பட்டுள்ளன, அவை (1) திருப்பாசுர விளக்கம், (2) பூம்பாவை, (3) ஆளுடைய பிள்ளையார் திருமணம் என்பனவையாம். அவற்றுடன், வழிபாட்டுக்குதவும்பொருட்டு ஆளுடைய பிள்ளையார் துவாதச நாமார்ச்சனை என்னும் பன்னிருபெயர்த் துதியும் தனியாக வெளியிடப்பட்டுள்ளது. அக்கருத்துடனே ஆளுடைய பிள்ளையார் 108 பெயர்த் துதியும், 1000 பெயர்த் துதியும் வெளியாக வேண்டும் என்னும் கருத்துடன் உரிய முயற்சிகளும் செய்து வருகின்றேன். சரிதச் சுருக்கமும் தனியாக வெளிவந்துள்ளது.

4. உரை எழுத்துப் பணி நிறைவு விழா சென்ற 13-7-48ல் சிதம்பரத்திற் கொண்டாடப்பட்டது பற்றி அன்பர்களுக்கு முன்னமேயே விரிவாக IV பகுதியில் அறிவித்துள்ளேன். இப்போது ஆளுடைய பிள்ளையார் புராண உரை அச்சு நிறைவு விழா நாளது வைகாசித் திங்கள் 19-ம் நாள் (1-6-1950) திருநல்லூர்ப் பெருமணம் என்னும் ஆச்சாபுரத்தில் பிள்ளையாரது திருநாட் சிறப்புடன் நடைபெற உள்ள செய்தியை அன்பர்களுக்கு மகிழ்வுடன் அறிவித்துக்கொள்கின்றேன். திருவருளும் பெரியோர்களின் ஆசியும் அன்பர்களின் ஆதரவும் முன்னிற்க. ஆளுடைய பிள்ளையார் புராணத் தொடக்கம் முதற்சஞ்சிகை வெளியீடு 25-4-47ல், அவர் அவதரித்ததும் திருஞான முண்டருளி விளங்கியதுமாகிய சீகாழிப் பதியில், தருமபுர ஆதீனம் மகா

சந்நிதானங்களின் அருளினால் நிகழ்ந்தது. இப்போது அப்புராணம் முழுமையும் அச்சு நிறைவாகிய வெளியீட்டு விழாவும அவர்களது ஆசியின் வழியே அவர்க ளாதீனத்துக் குட்பட்ட ஆச்சாபுரப் பதியினில் கொண்டாடப்பெறுவது திருவருட் சம்மதமாகும்.

5. இபபகுதி வெளிவரு மிடையில காகிதமும் அசசுச் செலவும் பிறவுமாகப் பல வகையாலும் முட்டுபபாடுகள நேர்நத போதெலலாம் "உடுககை யிழந்தவன் கைபோல வாஙகே, இடுககண களைவதாம நட்பு" எனறபடி, உற்றிடத துதவிகள் பலவும் மனமுவநது செய்த எனது ஆருயிர்நண்பர் கோவை - திரு. கா. ச. இரததின சபாபதி முதலியாா (C. S R.) அவர்களுககு என கடபபாடுடைய நன்றியைச் செலுததுகினறேன.

6. இவவெளியீட்டில் முன்போலவே எலலா வகையாலும் உதவி செய்த எல்லாப் பெருமக்களுக்கும் என் மனமாாநத நனறியைச செலுததுகின்றேன.

கோயமுத்தூர்
சேக்கிழார் நிலையம்
1 - 6 - 1950

அடியேன
C. K. சுப்பிரமணிய முதலியார்
பதிபபு-உரை-ஆசிரியன்

உ

சிவமயம்

## ஐந்தாம் பகுதி — வம்பறுவரிவண்டுச் சருக்கம் - II

## திருஞானசம்பந்த நாயனார் புராணம் - பிற்பகுதி
## 631—1256

## பொருளடக்கம்

### முன்சேர்க்கை



### திருத்தொண்டர் புராணமும் - உரையும்



### பின்சேர்க்கை

சிவமயம்

# படங்களின் அட்டவணை

## (எண்கள் - IV பகுதியின் தொடர்ச்சி)



**திருஆக்கூர்**

சிறப்புலி நாயனாரும் மனைவியாரும்

—பாட்டு - 3659



**திருவொற்றியூர்**

ராஜ கோபுரம்

—பாட்டு - 2930



**திருஆப்பனூர்**

அம்மை கோயிலும் விமானமும்



**குறும்பலா**

தலமரம் - (பட்டது)



திருஞானசம்பந்த நாயனார்
திருநெல்வேலியில் தங்கிய திருமடம்
தொண்டர்கள் நாயனார் கோயில் என வழங்குகிறது
-பாட்டு - 2785



குறும்பலா - குற்றாலம்
நீர்வீழ்ச்சி - (பொங்குமாகடல்)
-பாட்டு - 2784



திருக்குற்றாலநாதர் கோயில்
முகப்புப் பார்வை —பாட்டு - 2784



சமணர் கழுவேறிய இடல்

—பாட்டு - 2753



புனல்வாதம் நிகழ்ந்த வைகைக் கரை

மதுரை —பாட்டு - 2709



திருஞானசம்பந்தநாயனார் எழுந்தருளியிருந்த திருமடம்

மதுரை —பாட்டு - 2574



திருக்கண்டியூர்

கோபுரமும் கோயிலும்

—பாட்டு - 2250



திருநாவுக்கரசர் அமைத்த திருமடம்

திருப்பூந்துருத்தி

பாட்டு - 2844



திருக்குற்றாலநாதர் கோயில்
மேலிருந்து பார்வை —பாட்டு - 2781



சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமானாரும்
திருவஞ்சைக்களம்-கோயில் முன்கோபுர வாயிலில் உள்ளவை



திருவஞ்சைக்களம்
கோயிலும் - முன்கோபுரமும் (உட்புறமிருநது பார்வை)
—பாட்டு - 4256



திருஞானசம்பந்தரும் தேவியாரும்
(மூலத்தானம்)
ஆச்சாபுரம் திருநல்லூர்ப் பெருமணம்



பாலசம்பந்தரும் கல்யாணசம்பந்தரும் (உற்சவ மூர்த்திகள்)
திருநல்லூர்ப்பெருமணம் —பாட்டு - 3151



நெல்லையப்பர் கோயில்
—பாட்டு - 2785



திருக்குற்றாலம் - அருவியும்
முன்கோபுரமும்
—பாட்டு - 2784

# திருநல்லூர்ப் பெருமணம் கோயில்

பாட்டு - 3152

சுவாமி கோயில் விமானம்





அம்மை கோயில் விமானம்



திருஞானசம்பந்தர் கோயில் விமானம்

முன் கோபுரம்





முன்கோபுரமும் குளமும்



1. நெல்லையப்பர் கோபுரம் 2. விமானம்
3. தலவிருட்சம், தாமிர சபை ஸ்தூபி
(திருநெலவேலி)



திருப்பரங்குன்றம்—குன்றமும் கோபுரமும்
முகப்பு மண்டபமும்



திருப்பூவணம், ஸ்தூபியும் கோபுரமும்



**திரு ஏடகம்**
சுவாமி - அம்மை விமானங்களும் கோபுரங்களும்



**திரு ஏடகம்**
சுவாமிஅம்மன் தூபிகளும், 2வது கோபுரங்களும்
(பின்புறமிருந்து பார்வை)



**ஏடு சென்றணைதரும் ஏடகம்**
வைகைத் துறையும்
ஏடகநாதர் - திருக்கோபுரங்களும்
(நதியிலிருந்து பார்வை)



ஆளுடைய பிள்ளையார்,
திருநீலநக்கர், திருமுருகர்,
திருநீலகண்டயாழ்ப்பாணர்
இவர்களுடன் உரை யரங்கேற்று
மண்டபத்தில் எழுந்தருளிய கோலம்



யானையின்மேல் புராண உரைச்
சுவடியை ஏற்றி நகர்வலம்
வரும் கோலங்கள்
ஆச்சாபுரம்



திருப்பூவணம் - சுவாமி கோபுரம்



புராண உரைச் சுவடியை யானையின்மேல் ஏற்றி
உரை ஆசிரியர் அடியார்களுடன் வரும்
விழாக் கோலம்—ஆச்சாபுரம்



ஆச்சாபுரம், ஆளுடையபிள்ளையா
நாயன்மார்களும்,
புராண உரைச் சுவடியும்



திருவள்ளுவர் ஆலயம், மயிலாப்பூர்



பூம்பாவையார் ஆலய விமானம்
கோயிலுள் வடமேற்கில் உள்ளது



அம்பிகை மயிலுருவுடன் பூசிக்கது



புன்னை மரமும் ஆலயமும்
“மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை”



# திருத்தொண்டர் புராணம்

## திருஞான சம்பந்த நாயனர் புராணம்

திரு. C.K. சுப்பிரமணிய முதலியார் உரையுடன்



# ஞானசாத்திரக் கருத்துக்கள்

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளும்
ஆக்கியிடு மன்பர்க் கவன். 69

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனையன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண். 12

ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்தல்—ஏடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்த லீங்கிவைதா மோங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல். 70

இன்றிச் சமயத்தி லல்லதுமற் றேழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார்—இன்றிங்கே
அங்க முயிர்பெறவே பாடு மடியவரார்
எங்குமிலை கண்டா யிது. 65

—திருக்களிற்றுப்படியார்

உ

சிவமயம்

# திருஞான சம்பந்த நாயனார் சரித ஆதரவுகள்

## தேவார அகச்சான்றுகளும் மற்றும் சைவத் தெய்வத் திருமுறைகளிலும் கல்வெட்டுக்களிலும் கண்டவற்றுட் சிலவும்

### 1. நாயனாரது முன்னைநிலை

*பிள்ளையார் பிறவியில் வாரா நிலையில் இறைவரை மறவா தாட்கொண்டு அவனே தானாகச் சிவனது ஆனந்தத்தில் இருந்த ஓர் முத்தான்மா என்பது ஆசிரியர் பல இடங் களிலும் எடுத்துக்காட்டும் பொருளாம் “பண்டு திருவடி மறவாப் பான்மையோர்” (1953) ; “பவமற வென்னைப் புணர்ந் தாண்டவப் பண்பு கூட, நவமலாப் பாதங் கூட்டும்” (3142), “உன பாதமெய்ப்பந் நீழல் சேரும் பருவமீ தென்று பாட” (3143) என்பன முதலியவை சிந்திக்கத் தக்கன*

**நாயனார் தேவாரம்**

**2-ம் திருமுறை:—** “ * * * ......திருந்தடி

மறக்குமா றிலாதவென்னை மையல்செய்திம் மண்ணின்மேற்
பிறக்குமாறு காட்டினாய், பிணிப்படு முடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குன்ற தென்னையே”

—துருத்தி - நட்டராகம் - 5

“பண்டு நான்செய்த பாவங்கள் தீர்ப்பார் பாம்புர நன்னக ராரே”

—தக்கராகம் - பாம்புரம் - 10

“......இன்று நல்லூரப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே”

—அந்தாளிக் குறிஞ்சி - நல்லூர்ப் பெருமணம் - 8

### 2. ஞானப்பா லுண்டருளியதும், இறைவரைச் சுட்டிக் காட்டித் “தோடு டைய செவியன்” என்று பாடியதும் —

**நாயனார் தேவாரம்**

**3-ம் திருமுறை:—** “போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்”

—கோல்லி - கழுமலம் - 2

**குறிப்பு :—** சீகாழிப் பதிகங்களிலெல்லாம் பிள்ளையார்தமக்கு ஞானப்பால் ஊட்டிய அம்மையாரது நினைவுகொண்டு அவரை இறைவரது உடனாகவே வைத்துப் பாடியருளும் உட்குறிப்பினையும் கண்டுகொள்க.

**11-ம் திருமுறை :—** “* * * உலகமூன் றாக்குங் களைக ணாகி
முதலிற் காலமினி துவீற் றிருந்தழித்
தாதையொடு வந்த வேதியச் சிறுவன

**பட்டினத்துப் பிள்ளையார் :—** "தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த
"அன்னா யோ!"வென றழைப்பமுன் னின்று
ஞான போனகத் தருளட்டிக் குழைத்த
ஆனாத் திரளை யவனை யயி னருள
வந்தணன் முனிந்து, "தந்தா ரியார்?"என
"அவனைக் காட்டுவ னப்ப! வாவென
"தோடு டைய செவியன்" என்றும்
"பீடு டைய பெம்மான்" என்றும்
கையிற் சுட்டிக் காட்ட
ஐய! நீ வெளிப்பட் டருளினை யாங்கே"

—திருக்கழுமல மும்மணிக்கோவை - 1

குறிப்பு :—தளர்நடைப் பருவம்-மூவாண்டு ; வளர்பசி - இதனைத் "தொடர்ந்த பிரிவுணர்வு" (1953) என்று உரை செய்தருளினார் ஆசிரியர். அருள்-அட்டி - "சிவ ஞானத் தின்னமுதங் குழைத்தருளி" (1966) ; முனிந்து தந்தா ரியாரென - "யார் அளித்த பாலடிசி லுண்டதுநீ எனவெகுளா" (1970) ; கையிற் சுட்டிக் காட்ட - "உச்சியினி லெடுத்தருளு மொருதிருக்கை விரல்சுட்டி" (1971) ; தோடுடைய செவியன்-பீடுடைய பெம்மான் - தேவாரக் குறிப்புகள் அளபெடைகள் செய்யுணிறைத்தன. தேவாரம் சரித அகச்சான்றுக் காட்டியருளினார் அடிகளார். புராணம் இதனை உட்கொண்டு அருளப்பட்டது காண்க.

ஷை "* * * வேதத் தலைவனை மெல்விரலாற்
**நம்பியாண்டார்** றேட்டியங் காத னிவனென்று தாதைக்குச் சூழ்விசும்பிற்
**நம்பிகள் :—** காட்டிய கன்று... '—ஆளுடைய பிள்ளையார் - திருவந்தாதி - 13

"அளிவந்த கண்பிசைந் தேங்கலு மெங்க ளரனருணையாய்க்
கிளிவந்த சொல்லிபொற் கிண்ணத்தில் ஞான வமுதளித்த "
ஷை - 73

"நறைகண்ணி யாளவிறந்த ஞானத்தை யமிர்தாக்கிப்
பொற்கிண்ணத் தருள்புரிந்த போனகமுன் னுகர்ந்தனையே ;
தோடணிகா தினனென்னுந் தொல்மறைக ளுருஞான்றுந்
தேடரிய பராபரனைச் செழுமறையி னகப்பொருளை
யந்திசெம் மேனியனை யுடையாளம் பலசொல்லி
யுந்தைக்குக் காணவரு னுவனென வுரைத்தனையே"

—ஆளு. பிள் - கலம்பகம் - 1

"* * * பிரம புரத்தரற் கயமென் குதலைச் செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
தையல் அருள்பெற் றனனென்பர்......"

—திருத்தொண்டர் திருவந்தாதி - 33

"ஊழி முதல்வ னுவனென்று காட்டவல்லான"

—ஆளு. பிள் - திருத்தொகை -

குறிப்பு :—பிள்ளையார் அவதரித்த பதி-குலம்-குடி முதலியவை அவரது தேவாரங்களில் பல இடத்தும் காணத் தக்கன.

"கழுமல வூரர்க்கு" —அரசு. தேவா.

**கல்வெட்டு :—**

1020 A. D இராஜேந்திர சோழா - 7வது ஆண்டு - தஞ்சை - நன்னிலம் - **திருவிடைவாய்** - கோயிலின் முன்வாயிற் சுவரில் உள்ளது; விடையபுரம் என்ற விதராச பயங்கரபுரத்து வியாபாரிகள் சொக்கக்கூத்தர், நாச்சியார், **திருஞானம்பெற்ற பிள்ளையார்** - பிரதிமைகளைத் தாபித்துப் பூசை நடத்த ஏற்பாடு செய்தது :—இத்தலத்தில்தான் பிள்ளையாரது பதிகங்களுள் முன் கிடைக்காத "மறியார்கரத் தெந்தை" என்ற பதிகம் சுவரில் கல்வெட்டுச் செதுக்கப்பட்டிருந்ததனைப் படியெடுத்து இப்போது பதிப்புக்களிற் சேர்க்கப்பட்டுள்ளது. இந்தக் கல்வெட்டு (1020 A. D.) சேக்கிழார் பெருமான் காலத்துக்கு முந்தியது.

## 3. தாளம் பெற்றது – (திருக்கோலக்கா)

**7 ந் திருமுறை:— நம்பிகள் தேவாரம்**

"நாளுமின்னிசையாற்றமிழ் பரப்பும்ஞான சம்பந்தனுக்குலகவர் முன்
றாளமீந்தவன் பாடலுக் கிரங்குந் தன்மை யாளனை......"
—திருக்கோலக்கா - தக்கேசி - 8

**11-ம் திருமுறை :— நம்பியாண்டார் நம்பிகள்**

"உறுகின்ற வன்பினொ டொத்திய தாளமும்"
"* * * கோலக்காவிற் கரநொடியாற்,
பண்ணார் தரப்பாடச் சண்பையர் கோன்பாணி நொந்திடுமென்
றெண்ணு வ்யுத்தகர்க மிட்ட செம்பொற் றாளங்க ளீய"
"* * * போனகந் தானனன் பொன்சிவிகை
யருந்திட வொத்தமுத் தீசெய வேற வரனளித்த" ஷை - 40
"* * * ......பெற்றது
குழகனைப் பாடிக் கோலக் காப்புக(கு)
அழகுடைச் செம்பொற் றாளமவையே"
—ஆளு பிள் - மும்மணிக்கோவை - 4
"தாளம் பிரியாத் தடக்கைய சத்து" —ஷை - 19
"செம்பொன்னொளி வீசுகிற தாளம்" — ஷை திருக்கலம்பகம் - 9

**குறிப்பு :—** திருக்கோலக்காவில் இறைவருக்குத் **திருத்தாளமுடையார்** - (சத்தபுரீசர் - வடமொழி) என்றும், அப்பதிக்குத் **திருத்தாளமுடையார் கோயில்** என்றும், அம்மைக்கு **ஓசைகொடுத்த நாயகி** என்றும் பெயர்கள் வழங்குகின்றன.

## 4. முத்துச் சிவிகை பெற்றது

**2-ம் திருமுறை.—** "அரத்துறை யடிகடம் மருளே"
—பிள். தேவா - பியந்தைக்காந்தாரம் - நெல்வாயிலரத்துறை - 1

**11-ந் திருமுறை :— நம்பியாண்டார் நம்பி**

"..... ஞானசம்பந்தற்குச் சீர்மணிகள், பொருந்துஞ் சிவிகை
கொடுத்தனன் காண் ..அரத்துறை மேய வரும்பொருளே"
—ஆளு. பிள் - திருவந்தாதி - 83
"........வறிற,
நத்திய மாவுந் தவிர வரத்துறை, முத்தின் சிவிகை முன்னுட்,பெற்றே"
—ஆளு பிள் - மும். கோவை - 4
"..... விருத்தனைப் பாடி முத்தின் சிவிகை முன்னுடை பெற்ற
வத்தன்......" —ஷை - 28

"……நெல்வாயின், முத்தின் சிவிகை முதல்கொண்டும்……"
—ஆளு. பிள் - உலாமாலை -

"……பைந்தரள நன்சிவிகை"—ஆளு. பிள் திருக்கலம்பகம் - 9

"……ஞாலத்து
முத்தின சிவிகை யரன்கொடுப்ப முன்னின்று
தித்தித்த பாடல செவிக்களித்தான……"
—ஷை திருத்தொகை -

5. முயலகனேய் தீர்த்தது – (திருப்பாச்சிலாச்சிராமம)

1-ம் திருமுறை:—"……பாச்சிலாச் சிராமத் துறைகின்ற, மணிவளர் கண்டரோ
பிள்ளையார் மங்கையை வாட மயல்செய்வ தோவிவர் மாண்பே"
தேவாரம் —தக்கராகம் - (பதிக முழுதும் மகுடம்)

11-ம்திருமுறை:—"* * * வள்ளல
நம்பியாண்டார் மழவன சிறுமதலை வானபெருநோய தீர்த்த
நம்பி குழகன்……" —ஆளு பிள் - திருத்தொகை -

6. பனிநோய் தீர்த்தது – (திருக்கொடிமாடச் செங்குன்றூர்)

1 ம் திருமுறை:—"* * * நாமடியோம
பிள்ளையார் செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்"
—வியாழக் குறிஞ்சி-திருநீலகண்டம் (பதிக முழுதும் மகுடம்)

11-ம் திருமுறை:— நம்பியாண்டார் நம்பி
"மின்னா குடுமி நெடுவெற பசங்கொங்கில வீழ்பனிநோய்
தன்னார் வழிகெட் டழிந்தமை சொலலுவர் காணிறையே
மன்னா பரிசனத தோமேற் புகலு மெவர்க்குமிக்க
நனறு வலாபெரு மானரு காசனி நல்கிடவே"
—ஆளு பிள் - திருவந்தாதி - 86

"* * * தாழபொழில்சூழ
கொங்கிற் பனிநோய பரிசனததைத தீர்ப்பித்தும்……"
—ஷை திருவுலா மாலை -

குறிப்பு:—புராணததுள இத திருவாசகுகளையே விரித்து ஆசிரியர் காட்டிப் போநதருளியமை காணக.

7. முத்துப் பந்தர் பெற்றது – (திருப்பட்டீச்சுரம்)

4-ம் திருமுறை:—"எரி யூட்டியெழில் காட்டிநிழல கூட்டுபொழில் சூழ்பழையாறை"
பிள்ளையார் —சாதாரி - பட்டீச்சுரம் - 1

என்ற திருப்பதிகத்தின் சொல்லாற்றற குறிப்புக காணக.

8. உலவாக்கிழி பெற்றது – (திருவாவடுதுறை)

3-ம் திருமுறை:—"* * * இதுவோ வெமை யாளுமா றீவ தொன்றெமக் கில்லையேல்,
பிள்ளையார் அதுவோ வுன தின்னருள்……"
—காந்தார பஞ்சமம் - நாலடி மேல்வைப்பு - திரு
ஆவடுதுறை - (பதிக முழுதும் மகுடம்)

குறிப்பு :—இதற்கு " நீணிதி வேண்டினாக கீவ தொன்று மற்றிலே னுன்னடி யல்லதொன் றறியேன " என்று " பேரருள வினவிய செந்தமிழ் " என றுரைசெய தருளினர் ஆசிரியர்.

4-ம் திருமுறை:—"காயிரும் பொழில்கள சூழ்ந்த கழுமல வூரர்க கம்பொன்
அரசுகள் ஆயிரம கொடுபபா போலு மாவடு துறைய னாரே"
தேவாரம் —(நேரிசை)

11-ம்திருமுறை:—"* * * சோலைத்
நம்பியாண் திருவா வடுதுறையிற செமபொற் கிழியொன
டார் நம்பிகள் றருளாலே பெற்றருளு மையன......"

—ஆளு. பிள் - திருந்தொகை -

"* * * அததருசீர
மாயிரு ஞாலதது மனனு வடுதுறைபுக
காயிரஞ செமபொ ன துகொணடும... .."

—ஷை - திருவுலா மாலை -

"* * * கொணடது
பூவிடு மதுவிர பொறிவண டுழலும
ஆவடு துறையிற பொனனு யிரமே"

—ஷை திருமும்மணிக்கோவை - 4

"* * * திரு வாவடு துறையிற றிசமுழ
எநதையைப பாட விசைத்தத தொலையா நிதியமெயதித
தந்தையைத் தீத்தொழில் மூட்டிய கோன்......"

—ஷை - திருவந்தாதி - 85

(தீத்தொழில் - சிவ வேள்வி ; தொலையா நிதியம் - உலவாககிழி.)

9. விடந் தீர்த்தது – (திருமருகல்)

2-ம் திருமுறை — "* * * மருகல
பிள்ளையார் உடையாய தகுமோ விவளுண மெலிவே" (1)
தேவாரம் "......மருகல, எந்தாய தகுமோ விவளே சறவே" (2)
" . . மருகல மகிழ்வா யிவளை
......இறையாா வளைகொண் டெழிலவவ வினையே......" (3)
" . . மருகல மகிழ்வா யிவளை
மெலிநீர் மையளாக கவுமவேண டினையே" (4)
"..... இவள தன
அணிநீ லவொண்கண் அயாவாக கினையே" (5)
"புலருந தனையுக துயிலாள புடைபோந்
தலறும் படுமோ அடியா ளிவளே" (6)
"தொழுவா ளிவளைத துயராக் கினையே," (7)
"..... இவளை, அலராக கினையே" (8)
"......இவளை, மயர்வாக கினையே" [9]
"செறியார் குழலி நிறைநீக கினையே" (10)

—இந்தளம் - மருகல்

குறிப்பு :—"உடையானை யுடையானே! தகுமோ விந்த வொள்ளிழையா ளுண் மெலிவென் றெடுத்துப் பாட" என்று இவற்றின் கருத்தினை எடுத்துக்காட்டி யருளி னர் ஆசிரியர்.

11-ம் திருமுறை:—"வயலார் மருகற் பதிதன்னில் வாளர வாற்கடியுண்
நம்பியாண் டயலார் விழுந்த வவனுக் கிரங்கி யமிவழிந்த
டார் நம்பிகள் கயலார் கருங்கண்ணி தன்றுயர் தீர்த்த கருணைவெள்ளப்
புயலார் தருகையி லொன்னத் தோன்றிடும் புண்ணியமே"
—ஆளு. பிள் - திருவந்தாதி - 49

"......தீர்த்தது
தாதமர் மருகற் சடையனைப் பாடிப்
பேதுறு பெண்ணின் கணவனை விடமே"
—ஆளு. பிள் - மும். கோவை - 4

"......வியலி யற்றிரு மருகல் விறல்கொடு விடம ழித்தருள் போதன்"
—ஷை - கலம்பகம் - 18

"......மாற்றி யிட்டது வல்விட வாதையே..." —ஷை - 41

"......மருகல்விடந் தீர்த்தபிரான். "
—ஷை - திருத்தொகை -

10. படிக்காசு பெற்றது – (திருவீழிமிழலை)

1-ம் திருமுறை:—
பிள்ளையார் "அடியவர் குழுமிட வவனியி னிகழ்பவா"
தேவாரம் —வியாழக்குறிஞ்சி - வீழிமிழலை - 9

3-ம் திருமுறை:—"......மற்றுருள மன்னுயிர்களுக
ஷை கெண்ணிறிவி லின்பமிகழ் வெய்த ." —சாதாரி-வீழி - 3

"நண்ணிவரு நாவலர்க ளோடுபல வளாககிகழ் கின்றபுகழ்சோ..."
—ஷை - ஷை - 6

"......அடிகக்கன்பா தன்பிலரே" —ஈரடி - வீழி - 9

1-ம்திருமுறை:—"வாசி தீரவே, காசு நல்குவீர், மாசின் மிழலையீ, ரேச லில்லையே" (1)
"கறைகொள் காசினை - முறைமை நல்குமே" (2)
"......மிழலையீர், காசுகை தவிர்மினே" (8)
—குறிஞ்சி - இருக்குக் குறள் -

ஷை "தெரிந்த வடியார்கள் சென்ற திசைதோறும
விரும்பி யெதிர்கொள்வர் வீழி மிழலையே" —குறிஞ்சி - 1

7-ம் திருமுறை:—".. ...பரிசினு லடிபோற்று பத்தர்கள
நம்பிகள் பாடியாடப் பரிசது நல்கினீர்" (5)
"......இருந்துநீர் தமிழோ டிசைகேட்கு
மிச்சையாற காசுநலகினீர்......" (8) —சீகாமரம் - வீழி

9-ம் திருமுறை:—"பாடலங் காரப் பரிசில்கா சருளிப் பழுத்தசெந் தமிழ்மலர் சூடி
சேந்தனூர் நீடலங் காரத் தெம்பெரு மக்க ளெஞ்சனு ளிறைந்தபின் றனை"
—திருவிசைப்பா - வீழி.

**11-ம் திருமுறை:**—"பாடிய செந்தமி ழாறபழுந் காசு பரிசில்பெற்ற
**நம்பியாண்டார்** நீடிய சீர்த்திரு ஞானசம் பந்த னிறைபுகழால
**நம்பிகள்** தேடிய பூந்திரு நாவுக் கரசோ டெழினமிழலைக்
கூடிய கூட்டத்தி னுலுள தாயத்திக் குவலயமே"
—**ஆளு. பிள் - அந்தாதி - 80**

"......அவனியிடர் முழுதுபோ யகல,
வயலணிதென் வீழிமிழ லையினிலவு காசினமலி
மழைபொழியு மானகுண மதுரன......"
—**ஆளு பிள் - கலம்பகம் - 24**

"......வீழிமிழலைப் படிக்காசு கொண்டபிரான"
—ஷை - **திருத்தொகை -**

## 11. மறைக்கதவம் அடைத்தது – (திருமறைக்காடு)

**2-ம் திருமுறை:**—"......மறைக்காட றைமாதா
**பிள்ளையார்** இதுநன் கிறைவைத் தருள்செய்க வெனக்குன்
கதவந் திருக்காப்புக் கொள்ளுங் கருத் தாலே" —**இந்தளம் - 1**

**11-ம் திருமுறை:**— "அடைத்தது மாமறைக் காடர்தங் கோயிற் கதவினை"
**நம்பியாண்டார் நம்பிகள்** —**ஆளு. பிள் - திருவந்தாதி - 91**
"......அடைத்தது
அரைசோ டிசையா வணிமறைக் காட்டுக்
குரைசேர் குடுமிக் கொழுமணிக்கோ யிற்கதவே......"
—ஷை - **மும். கோவை - 4**

"..... இருங்கதவந் தானடைத்தும......"
—ஷை - **திருவுலா மாலை -**

"......நித்திலக்கண்
மாடத் தொளிரு மறைக்காட் டிறைக்கதவைப்
பாடி யடைப்பித்த பண்புடை யான்......"
—ஷை - **திருத்தொகை -**

## 12. பாண்டியன் சுரநோய் தீர்த்ததும சுரவாதம் வென்றதும்

**1. வாதம் நிகழும்; அதில் திருநீறே வெற்றி தரும; சமணர் அழிவுபெறுவர், என்றது.**

**2-ம் திருமுறை:**—"புத்தரோ டமணைவாதி லழிவிக்கு மண்ணல
**பிள்ளையார்** திருநீறு செம்மை திடமே
அத்தகு நலல நலல வலைநல்ல நல்ல
வடியா ரவர்க்கு மிகவே"
—**பொது - பியந்தைக் காந்தாரம் - 10**

**குறிப்பு :—**இது பாண்டி நாட்டுக்குப் புறப்படு முன்பே திருமறைக்காட்டில் பிள்ளையார் அருளியது.

**2. பிள்ளையாரது திருமடத்தில் சமணர்கள் தீயிட்டதும், அவ்வெப்பு அரசனைச் சாரப் பிள்ளையார் அருளியதும்.**

3-ம் திருமுறை:—"ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பிள்ளையார் பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
தேவாரம் பைய வேசென்று பாண்டியற் காகவே" (1)
"அமணர் கொளுவும் சுடர் - தென்னன் பாண்டியற் காகவே"
என்று பதிக முழுதும வரும மகுடமும் காண்க.
"......ஆலவா யாதி யருளினால்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம பநத னுரை......" (11)
என்ற திருக்கடைக்காப்பும் காண்க.
—கௌசிகம் - ஆலவாய்

3. வாது செயத் திருவுள்ளங் கேட்டறிந்தது.

3-ம் திருமுறை:—"காட்டு மாவுரி" (பண்-கௌசிகம்) என்ற பதிக முழுமையும;
"வேதவேளவினை" (பண்-பழம்பஞ்சுரம்) என்ற பதிகமுழுமையும்.

4. சுரவாதம நிகழ்ந்ததும், அதில் பாண்டியன சுரம தீர்த்ததும், அமணர் தோல்வி யுற்றதும். (திருவாலவாய்)

2-ம் திருமுறை:—"குண்டிகைக கையர்க ளோடு (சாக்கியா கூட்டமும கூடக)
பிள்ளையார் சண்டிகைப பிப்பது நீறு" (10)
"தேற்றித தென்னனுட லுற்ற தீப்பிணி யாயின தீரச
சாற்றிய பாடல்கள......" (11)
—காந்தாரம் - திருவாலவாய் - திருநீற்றுப் பதிகம்

11-ம் திரு "காந்தூ கனலிற் குளிர்படுத தக்கட்ற் கூடலினவாய்
முறை:— வேந்தின் றுயா தவிர்த்த தானே......"
நம்பியாண் —ஆளு. பிள் - திருவந்தாதி - 71
டார் நம்பி "பத்திச சிவமென்று பாண்டிமா தேவியொடுங்
கொற்றக கதிர்வேற குலச்சிறையுங கொண்டாடும்
அற்றைப் பொழுதத் தமணரிடு வெந்தீயைப்
பற்றிச சுடுகபோய்ப பாண்டியனை யெனவல்லான்"
—ஷை - திருத்தொகை -

5. அனல் வாதம் (திருவாலவாய்)

3.ம் திருமுறை:— "......நள் ளாறாத நாயமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலே மெய்மமைமயே" (1)
என்ற பதிக முழுமையும் மகுடமும,
"கொற்றவ னெதிரிடை யெரியினி லிடவிவை கூறிய
சொற்றெரி யொருபதும..... " என்ற திருக்கடைக்காப்பும்
—பண்-சாதாரி - திருநள்ளாறு - திருவிராகம்

1-ம் திருமுறை:—"......ள்ளா றுடைய நமபெரு மானிது வெனகொல் சொல்லாய்...
கூடல்ஆல வாயின்க ணமர்ந்தவாறே......"
பிள்ளையார் பதிக முழுமையும் திருக்கடைக்காப்பும்.
—நட்டபாடை - திருநள்ளாறுந் திருவாலவாயும்

11-ம்திருமுறை:—"......எரியா யிடுமபதிகம்
நம்பியாண்டார் அழி யுலகத தழியாமற் காட்டினை......"
நம்பிகள் —ஆளு. பிள் - திருத்தொகை

### 6. புனல் வாதம் (திருவாலவாய்)

3-ம் திருமுறை:—"தெற்றென்ற தெய்வந்தெளி யார்கரைக் கோலைத்தெண்ணீர்ப்
பிள்ளையார் பற்றின்றிப் பாங்கெதிர் வின்னூரவும் பண்புநோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானுமன்றே" (11)
—கௌசிகம் - திருப்பாசுரம் -

ஷை "ஏடுசென் றணைதரு மேடகத் தொருவனை" (11)
—பண்-கொல்லி - ஏடகம்

11-ம்திருமுறை:—"......நிலவிய
வைகையாற் றேடிட்டு வானீ ரெதிரோட்டுஞ்
நம்பியாண்டார் செய்கையான மிக்க செயலுடையான......"
நம்பிகள் —ஆளு பிள் - திருத்தொகை -

"......நதிப் புனலினெதிர் பஃறி யுய்த்தன....."
—ஷை - திருக்கலம்பகம் - 34

"......கவிநீ ரெதிரோட மதித்தருள் செய்......" —ஷை - 14

"நீரெதிர்ந்து சென்றும் (நெருப்பிற் குளிர்படைத்தும்......)"
—ஷை - திருவுலாமாலை

### 7. வாதிற் றோற்ற சமணர் கழுவேறுதல்

2-ம் திருமுறை:—"அமணை வாதி லழிவித்த மண்ணல திருநீறு செம்மை திடமே"
பிள்ளையார் —பொது - பியந்தைக் காந்தாரம் - 10

11-ம் திருமுறை:—"......வளைபிரம் போர்கழு வாவுடலம்
விண்டினஞ் சூழக் கழுவின வாக்கிய வித்தகனே"
நம்பியாண்டார் —ஆளு. பிள் - திருவந்தாதி - 6
நம்பிகள் "வலிசெழு குண்டாசகு வைகைக் கரையன்று வான்கொடுத்த
......கவுணியர் தீபன்" —ஷை - 12

"......வைகைக்
குழுவா யெதிர்ந்த வுறிகைப் பறிதலைக் குண்டர்தங்கள்
கழுவா வுடலங் கழுவின வாக்கிய கற்பகமே" —ஷை - 28

"......நீதிகெட்டா
குலையக் கழுவின்குழுக் கண்டவன......" —ஷை - 81

"......வாதினில வல்லமணைப் பணைணக் கழுவினுதி வைத்த..."
—ஷை - 98

"......கண்டது, உறியொடு பீலி யொருகையிற் கொள்ளும்
பறிதலைச் சமணைப் பல்கழு மிசையே......"
ஆளு. பிள் - மும். கோவை - 4

"......வைகையி லமணை வாதுசெய்த தழுத்த
சைவ சிகாமணி... .." —ஷை - 13

"......வைகை யமணமலைந்தான......" —ஷை - 29

"......சூழொளிய
கோதைவேற் றென்னன் கூடற் குலநகரில்
வாதி லமணர் வலிதொலைய—காதலாற்
புண்கெழு செம்புனலா றோடப் பொருதவரை
ங்கழுவிற் றைத்த மறையோனை......"

"......எண்பெருங் குன்றத்தி
லன்றமணர் கூட்டத்தை யாசறுத்துப—பொன்ற
வுரைசெழுவு செந்தமிழ்ப்பா வொன்றினால் வென்றி
நிரைகழுமே லுய்த்தானை......"

—ஆளு. பிள் - திருவுலாமாலை -

"......அருகந்தர் குலமொன்றி முழுதுங் கழுவிலேறக்
கறுத்தது......" —ஷை - திருக்கலம்பகம் - 9

"...புன்நெறிமுறுகு கைரச்சமணை நிரைகழு விறுத்தியன..."—ஷை - 34

"......மனனு குண்டரை வென்றது வாதையே" —ஷை - 41

"..... பாழி யமணைக் கழுவேற்றினன்......"

—ஷை - திருத்தொகை -

குறிப்பு:—இவைபற்றி 2751-ம் பாட்டினகீழ் (IV-பக. ௧௦௬௧—௧௦௬௬ வரை) உரைத்தனவும், 2759-ம பாட்டின கீழும் (பக. ௧௦௭௫—௧௦௭௬), பிறண்டும் உரைத்தவையும் பாாக்க

## 13. ஓடஞ் செலுத்தியது – (திருக்கொள்ளம்பூதூர்)

3-ம் திருமுறை:— " .. .. நம்பனை யுள்கச்
பிள்ளையார் செல்ல வுந்துக சிந்தை யார்தொழ, நல்கு மாரருள் நம்பனே" (1)
"ஓடம் வந்தணை யுங்கொள்ளம பூதூர்......" (6)
"ஆறு வந்தணை யுங்கொள்ளம் பூதூர்......" (7)

—ஈரடி மேல்வைப்பு - காந்தார பஞ்சமம் -

11-ம் திருமுறை:—"......மருவினிய,
நம்பியாண்டார் கொள்ளம்பூ தூர்க்குழக னாவா யதுகொடுப்ப
நம்பிகள் உள்ளமே கோலாக வூன்றினன்......"

—ஆளு. பிள் - திருத்தொகை -

"......நினைந்தது, அள்ளற பழனக் கொள்ளம் பூதூர்,
ரிக்கரை யோட மகக்கரைச செலவே......"

—ஷை - மும். கோவை - 4

## 13-A. புத்தரை வாதில் வென்றது – (திருத்தெளிச்சேரி)

2-ம் திருமுறை:—"......வெந்த லாகிய சாக்கிய ரோடு சமணர்கள்
பிள்ளையார் தந்தி றத்தன நீக்குவித் தீரோா சதிரரே"

—பண்-இந்தளம் - தெளிச்சேரி - 10

## 14. ஆண்பனை பெண்பனை யாக்கியது – (திருவோத்தூர்)

1-ம் திருமுறை:— "குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்"
பிள்ளையார்

—பழந் தக்கராகம் - 11

11-ம் திருமுறை:—"......ஆண்பனை பெண்பனை யாக்கி......"

—ஆளு. பிள் - திருவந்தாதி - 39

நம்பியாண்டார் "......பாடிற,
நம்பிகள் றருமறை யோத்தூ ராண்பனை யதனைப
பெருகிற மெய்தும் பெண்பனை யாகவே......"

—ஷை - திருமும். கோவை - 4

"...நீடு, திருவோத்தூ ராண்பனையைப் பெண்பனை யாகென்னும்
பெருவார்தனை தானுடைய பிள்ளை......"
—ஷை - திருத்தொகை -

## 15. எலும்பு பெண்ணாக்கியது — (திருமயிலை)

2-ம் திருமுறை:— "......அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்" (1)
பிள்ளையார்
—சீகாமரம் - திருமயிலை -

பதிகப் பாட்டுதோறும் "காணாதே போதியோ பூம்பாவாய்" என்று வரும் மகுடங்களின் வகை காண்க.

11-ம் திருமுறை:— " .....வெய்யவிடம்,
நம்பியாண்டார் மேவி யிறந்தவயில வேற்கண் மடமகளை
நம்பிகள் வாவென் றழைப்பித்திம மண்ணுலகில் வாழ்வித்த
சீர்நின்ற செம்மைச் செயலுடையான......"
—ஆளுடைய பிள் - திருத்தொகை -

## 16. திருமணத்தில் வந்தாருடன் சிவனைச் சேர்ந்தது

3-ம் திருமுறை:— "..... இன்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே" (8)
பிள்ளையார்
—அந்தாளிக் குறிஞ்சி - நல்லூர்ப் பெருமணம்

இதனுள் பிள்ளையார் முத்தி விண்ணப்பம் செய்தருளியமை தெளியப்படும்.

11-ம்திருமுறை:— "வார்ந்த கணைபொழிற் காழிக் கவுணியர் தீபனல்லூர்ச்
நம்பியாண்டார் சீரந் கணைந்த பெருமணந் தன்னிற் சிவபுரத்து
நம்பிகள் வாரந் கணைகொண்கை மாதொடும் புக்குறும் போதுவந்தார்
ஆரங் கொழிந்தனர் பெற்றதல் லாலவ வரும்பதமே"
—ஆளு. பிள் - திருவந்தாதி - 60

"விடந்திளைக்கும் அரவல்குல மென்கூந்தல் பெருமணத்தின்
வடந்திளைக்குங் கொங்கை புல்கிய மன்மதன .. "
—ஷை - கண்பை விருத்தம் - 10

"......முத்தமிழ்நூ லெல்லா முழுதுணர்ந்த பிள்ளையார்க்
கொத்த மணமிதுவென் றேத்தித் தமர்களெல்லாஞ்
சித்தங் களிப்பத் திருமணஞ்செய் காவணத்தே
யற்றைப் பொழுதத்துக் கண்டுடனே நிற்கப்
பெற்றவாக ளோடும் பெருமணம்போய்ப் புக்குத்தன்
அத்த னடியே யடைந்தா னழகிதே"
—ஷை - திருத்தொகை -

**குறிப்பு** :—யாழ்மூரிப் பதிக வரலாறும், திருநீலநக்கர், திருமுருகர், சிறுத்தொண்டர், திருநீலகண்டப் பாணர் முதலியோர்க்குத் தோழமை யீந்தருளிய வரலாறும் முதலாயினவும் நம்பியாண்டார் நூல்களின் ஆதரவு பெறுகின்றன.

இப்புராணத்துக்கு வகை நூலாய் விளங்கியது நம்பியாண்டார் நம்பிகளது திருத்தொண்டர் திருவந்தாதியாகும். இதனுள்ளே ஆளுடைய பிள்ளையார் புராணத்துக்குப் பேராதரவாய் நிற்பன அவர்பால் வழிமொழி பெற்ற ஷை நம்பிகள் பிள்ளையார்மேற் பாடியருளிய திருவந்தாதி முதலிய நூல்களாகும். இவற்றையெல்லாம் உட்கொண்டே ஆசிரியர் "நங்க ளுதனும் நம்பியாண் டார்நம்பி, புந்தி யாரப் புகன்ற வகையினால், வந்தவாறு..." என்று தொடக்கத்துப் போற்றியருளினர் எனக.

உ

சிவமயம்

## பிள்ளையார் சரித ஞானசாத்திர நூட்பங்களுட் சில

1. ஆரியங் கடந்தவித் தொண்டர்க்குச் சாக்கிரம்
ஆரியமாய் நின்றதென் றுந்தீபற
அறந்தா ரவர்களென் றுந்தீபற. —திருவுந்தியார்

2. சுரந்த திருமுலைக்கே துய்யசிவ ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச—சுரந்த
தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா னனபிருந்த வாறு. —திருக்களிற்றுப்படியார் - 54

3. ஆரியந் கடந்தசுடர் தோகையுட னென்றும
பிரியாதே நிற்கின்ற பெம்மான—ஆரியத்தைச
சாக்கிரத்தே செய்தருளித் தானசெய்யுந் தன்மைகளும்
ஆக்கியிடு மன்பர்க் கவன —ஷை - 69

4 ஓடுஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப
பாடல பனைதாளம பாலசெய்தல்—வெட்டிர்வெப
பென்புக் குயிர்கொடுத்த லீங்கிவைதா மோங்குபுகழ்த
தென்புகலி வேந்தன் செயல —ஷை - 70

5. "......ஈசன இயல்பு பேசுதல் தவிர்க ;
காழி மாநகர்க் கவுணியர் கடவுள்
ஞான மாகிய நறபதி கங்கள்
எழுதற மனபாத மின்புற மொழியாற்
களிறென வணைந்த கனமனப புத்தன
முருட்டுச் சிரமொன் றருட்டின ரனறி
வாய்ந்த வாளொன் றேந்தின ரிலரே ;
எனறது மீர்வாள் கொனறதென் பதுபோல்
தனித்துணை யருளாற றணித்தன ரெனபா...... "
—சங்கற்ப நிராகரணம் - 7-2, ஈசுவர வவிகாரவாதி நிராகரணம் - 21-29

6. " தம்முதல் குருவுமாயத் தவத்தினி லுணாத்த...... "
—சிவஞான போதம் - 8 சூ.

' ஈண்டு இவ்வான்மாக்களுககு முற்செய தவத்தான் ஞானநிகழுமென்றது..."

ஞானம் - சாதனமாகிய ஞானம எனக.

"ஆளுடைய பிள்ளையார் முதலிய நாயனமார்க்குத் தவமின்றியும் ஞானம் நிகழ்ந்ததாலோ ? வெனனும் ஆசங்கையை நீககுதற்கும், படிமுறையானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே அமையாதெனபது உணர்த்துதற்கும் முற்செய் தவம் என விசேடித்தார். " —மாபாடியம்

* * * *

7. தீக்கை யென்னுஞ் சொரூபப் பொருள் மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுக்குமென்று ஆகமங்கள் கூறுதலானும்......ஆன்மா ஞானமொன்றானே வீடெய்தற் பாற்றென வரையறுத்துக் கூறுதலானும், தீக்கை மாத்திரத்தானே சிவப்பேறு கூடுமென்றல் பொருந்தாதென மறுக்க.

இனி, ஒளியானன்றி இருணீங்காதவாறு போல, ஆணவமும் ஞானத்தானன்றித் தீக்கை மாத்திரத்தானே நீங்காதெனவும், அத்துவ சுத்தியின் அத்துவாக்களின் நிரம்பிக் கிடந்த சஞ்சித கன்ம மாத்திரையே நீங்குமெனவும், அதனானே ஞானத்திற்கு உரியனாவனெனவும் கொள்க......

“ மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி ஞானநெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான் ” —போதம்-8; 1 ம் அதிகரணம்

குறிப்பு :—இந்நுட்பங்களை யெல்லாம் ஆளுடைய பிள்ளையார் தமது திருமணத்துள் வந்தார்க்கெல்லாம் “ எம்மைப் போக்கருளீரே ” என்று முத்தி விண்ணப்பமாகிய பாவனை - திருநோக்கம் முதலிய தீக்கை விசேடங்களையெல்லாம் செய்தும், ஸ்ரீபஞ்சாக்கரத் திருப்பதிகம் ஓதி ஞானத்தைக் கொடுத்தும், “ இம்மணத்தில் வந்தோர், ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக ” (3146) என்று முத்தி வாயிற் புகும் வழியினைக் காட்டியும் அருளிய வரலாறுகளுள் வைத்துக் கண்டுகொள்க.

* * * *

8. “ ......மன்றப் பாண்டியன், கேட்பக் கிளந்த, மெய்ஞ்ஞானத்தின்
ஆட்பா லவர்க்கரு ளென்பதை யறியே ” —இருபா இருபஃது - 2

வையை யாற்றின் கரையாகிய தீட்சா மண்டபத்தில், பாண்டியனாகிய இருவினையொப்பும் மலபரிபாகமும் வந்த நன்மாணாக்கனுக்குப் பரம ஞானாசாரியராகிய ஆளுடைய பிள்ளையார், பாவனை-நோக்கம்-பரிசம்-முதலிய தீக்கை விசேடங்களைச் செய்து, பரம ஞானோபதேசமாகிய மெய்ஞ்ஞானத்தைப் புகட்டியருளியது “ திருப்பாசுரம் ” என்ற அருளிப்பாடாகும் என்பது அருணந்தி சிவாசாரியாரது விளக்கம். இக்கருத்தையே ஆசிரியர்பெருமான் தமது திருப்பாசுர விரிவுரையில் விளக்கியருளினார் என்பது புராண உரையினுட் காட்டப்பட்டது. (திருப்பாசுர விளக்கவுரை பார்க்க)

உ

சிவமயம்

# பெயர் விளக்கம்

## எண்கள் - பாட்டு எண்கள்

**அதிகை வீரட்டானம்** - 2862. நடுநாட்டுப் பதிகளுள் ஒன்று. அட்டவீரட்டானங்களுள் ஒன்று ; புரமெரித்த வீரம் நிகழ்ந்த பதி.

**அநபாயன்** - 2745. II குலோத்துங்கச் சோழர் ; பெரிய புராணம் பாடக் காரணமா யிருந்த அரசர்.

**ஆப்பனூர்** - 2783. பாண்டி நாட்டுப் பதிகளுள் ஒன்று.

**ஆளுடைய பிள்ளையார்** - அந்தணர் வாழ்வு 2651 ; அம்பொன் மலைக்கொடி முலைப்பால் குழைத்த ஞானந் தமுதுண்ட பிள்ளையார் 2916; அருமறைவாழ் பூம்புகலி யண்ணலார் 2679 ; அன்பின் மெய்ம்மையுரு 2921 ; ஆறுசூடினார் திருமகனார் 2972 ; இன்னருட் பிள்ளையார் 2765 ; உடைய பிள்ளையார் 2964 ; உலகனைத்து மீன்றளித்த அம்மை திருமுலைப் பாலில் குழைத்த ஆரமுதுண்டார் 3065 ; எண்ணில் பாக்கியப் பயனுயுள்ள பாலறுவாயர் 2636; கவுணியர்தங் காவலனார் 2892; காழிநாடுடையவர் 2951 ; காழியினில் வந்த கவுணியர்தம் போரேறு 2040 ; சண்பைப் புரவலர் 2634, 2641 ; சண்பை முதல்வனார் 2623 ; சண்பையர் பெருமான் 2552 ; சண்பைப்பர் வள்ளலார் 2584 ; சண்பையாளி 2812 ; சண்பையாளு மன்னர் 2887 ; சண்பைவந்த வடலேறு 2810 ; சிவக் கன்று 2569 ; சூகரமு மன்னமுமாய்த் தேடினா ரிருவருக்கும் தெரிவரியார் திருமகனார் 2894 ; செய்ய மேனியர் திருமகனார் 2605 ; சைவ சிகாமணி 2918 ; ஞாலமிரு ணீங்கவரும் புகலி வேந்தர் 2907 ; ஞானத்தின் றிருவுரு 2626 , ஞானபோனசர் 2543 ; ஞானப் புங்கவர் 2752 , ஞான மணிவிளக்கு 2550 ; ஞானவா ரமிர்தமுண்டார் 2658 ; தவநெறி வளர்க்க வந்தார் 3149 ; தவவரசு 3104 ; தனிப் பொருப்பின் மங்கை திருமுலைப்பா லுண்டருளும் வள்ளலார் 2848 ; திருக்கழுமலத்தார் செல்வர் 2662; திருக்கழுமலத்தார் வேந்தர் 2592 ; தீதகற்ற வந்தருளும் திருஞான சம்பந்தர் 3151 ; தெய்வ மலைமகள் குழைத்த ஞானமுண்டவர் 2749 , தென்றமிழ் விளங்கவந்த திருக்கழுமலத்தான் 2708 ; தேனக்க மலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும், கானத்தின் எழு பிறப்பு 2626 ; நாயகப் பிள்ளையார் 2622 ; நான்மறையின் றனித்துணை 2626 ; நீடிய ஞானம்பெற்றார் 2705 , நீற்றணி திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளையார் 2711 ; பரசமய கோளரி 2554, 2802 ; பரசமயங்கள் வீழ்த்தார் 3126 ; பானறுங் குதலைச் செய்ய பவளவாயப் பிள்ளையார் 2700 ; புகலிய நிறைவர் 2564; புண்ணியப் பிள்ளையார் 2760 ; புண்ணிய விளைவு போல்வார் 3123 , பெரும்புகலிப் பெருந்தகையார் 2895 ; பெறற்கரும்பே றலகுய்யப் பெற்றருளும் பிள்ளையார் 2896 ; மண்ணில வளர் மதிக்கொழுந்து 2626 ; மண்ணினுக் கிடுக்கண் டீர வந்தவர் 3119 ; மண்ணெலா முய்யவந்த வள்ளலார் 2760 ; மனறுள் ரளித்த ஞான வட்டில் வண்கையன் 2708 ; மாதவத்தோர் பெருவாழ்வு 2771 ; முத்தமிழ் விரகர் 2678 ; மும்மைத் தமிழின் வேந்தன் 2812 ; முற்று மெய்ஞ்ஞானம் பெற்ற மூர்த்தியார் 3120 ; மைதிகழுந் திருமிடற்றார் அருள்பெற்ற வான்பொருள் 2771 ; மெய்ஞ்

ஞானத்தெல்லை 3141 ; வளர் வெண்டிங்கள் மேய வேணியர்பால ஞானம் பெற்றவர் 2618 ; வேதபாரகன 2812 ; வைதிக சூளாமணி 2771 ; வையக முய்ய வநத வளளலார் 2635.

இடைச்சுரம் - 3023. தொண்டை நாட்டுப பதிகளுள ஒனறு.

இந்திரநீல பர்ப்பதம் - 2925. வடநாட்டுப பதிகளுள ஒனறு.

இரும்பைமாகாளம் - 2862. தொணடை நாட்டுப பதிகளுள் ஒனறு.

இலம்பையங்கோட்டூர் - 2902 தொண்டை நாட்டுப பதிகளுள ஒன்று.

உண்ணாமுலையாள் - 2868. திருவணணாமலையில அமமை பெயர்.

ஏகாம்பரம் - 2843. காஞ்சிபுரம் திருககோயில. மாமரம் தலமரமாதலின வநத பெயர்.

கங்கை - 2549. ஆறு.

கச்சிமேற்றளி - 2899. கசசிப பல பதிகளுள ஒன்று.

கச்சி அனேகதங்காவதம் - 2896. கசசிப பல பதிகளுள ஒன்று.

கண்டுமுட்டு - 2581. புறச சமயிகளைக கண்டால் தீமை எனற சமணர் கொளகைக்கு வழஙகும் மரபுப பெயர்.

கண்ணப்ப நாயனார் - 2911 அறுபானமுமமை நாயனமாாகளுள ஒருவர்.

கணணன் - 27?9. கிருட்டினன.

கபாலீச்சரம் - 2974. திருமயிலாபபூாத திருக்கோயிலின பெயர்

கம்பர் - 2857. திருவகாமபரததில் இறைவர் பெயர்.

கம்பவாணர் - 2891. திருவகாமபரததின இறைவர் பெயர்.

கன்னிநாடு - 2760. பாண்டி நாடு.

கன்னிமாவனம் - 2861. திருபபாதிரிபபுலியூர்.

காஞ்சி - 2883. காஞ்சிபுரம.

காஞ்சி நெறிக்காரைக்காடு - 2898. கச்சிப பல பதிகளுள் ஒன்று.

காமக்கோட்டம் - 2896 காஞ்சிபுரததில காமாட்சியம்மையார் தவஞ செயது அறம வளர்ககும தனிக கோயில.

காரிகரை - 2912. தொணடை நாட்டுத தலம ; வைபபுத தலஙகளுள ஒனறு. காளததிககுச செலலும வழியில உள்ளது.

காலன் - 2638. இயமன.

காழி - 2571. சீகாழி

காளத்தி - 2911. தொணடை நாட்டுப பெரும பதியாகிய மலை.

காளன் - 2918. திருககாளததியில இறைவரைப பூசித்த பாமபு.

கானப்பேர் - 2784. பாண்டி நாட்டுப பதிகளுள ஒன்று.

குரங்கணின் முட்டம் - 2882. தொணடை நாட்டுப பதிகளுள ஒனறு.

குற்றலம் - 2784. பாணடி நாட்டுப பதிகளுள ஒனறு

குறும்பலா - 2784. பாணடி நாட்டுப பதிகளுள ஒனறு.

கேட்டுமுட்டு - 2582. கேட்கத தகாத புறசசமய வார்த்தையைக் கேட்டால் வரும் தீமைபற்றிச் சமணர் கொளகை குறிகக வழஙகும மரபுப பெயர்.

குலச்சிறையார் - 2543. நெடுமாறனாரது மநதிரியார்.

கொள்ளம்பூதூர் - 2796. சோழநாட்டுப பதிகளுள் ஒன்று.

கோகரணம் - 2925. துளுவநாட்டுப பதி.

கௌரியர் தலைவன் - 2611. பாணடியர்.

**சந்திர மண்டபம்** - 2810. திருத்தெளிச்சேரிக் கருகில் ஆளுடைய பிள்ளையார் அமர்ந்தருள, அவர் திருமுன்பு புத்த வாதம் நிகழ்ந்த இடம்.

**சிவபாதவிருதயர்** - 2777. ஆளுடைய பிள்ளையாரின் தந்தையார்.

**சிவபெருமான்** - 2638.

**சுழியல்** - 2784. பாண்டி நாட்டுப் பதிகளுள் ஒன்று.

**சேது** - 2787. இராமேச்சரத்திலே கடற்கரை.

**ஞானமெய்ந்நெறி** - 3146. சிவநெறி.

**தக்கோலம்** - 2903. தொண்டை நாட்டுப் பதிகளுள் ஒன்று.

**தண்டகத் திருநாடு** - 2858 தொண்டை நாடு; தண்டகன் ஆண்டமையாற் போந்த பெயர்

**தமிழ்நாடு** - 2550. பாண்டி நாடு.

**தலைச்சங்கப் புலவனார்** - 2565 சிவபெருமான்; சொக்கலிங்கப் பெருமான்.

**திருஅச்சிறுபாக்கம்** - 3030. தொண்டை நாட்டுப் பதிகளுள் ஒன்று.

**திருஅரசிலி** - 3032. தொண்டை நாட்டுப் பதி.

**திருஅறையணிநல்லூர்** - 2867. நடுநாட்டுப் பதிகளுள் ஒன்று.

**திருக்கழுக்குன்று** - 3027. தொண்டை நாட்டுப் பதிகளுள் ஒன்றாகிய மலை.

**திருக்கழுமலம்** - 3043. சீகாழிப் பன்னிரு பெயர்களுள் கடைசிப் பெயர்.

**திருக்களர்** - 2794. சோழ நாட்டுப் பதி.

**திருக்கேதாரம்** - 2924. வடநாட்டுப் பதி.

**திருக்கேதீச்சரம்** - 2788. ஈழநாட்டுப் பதி.

**திருக்கோணமலை** - 2788. ஈழநாட்டுப் பதி.

**திருக்கோவலூர்** - 2865. நடுநாட்டுப் பதி.

**திருத்தினைநகர்** - 2860. நடுநாட்டுப் பதி.

**திருத்தெளிச்சேரி** - 2802. சோழ நாட்டுப் பதி.

**திருநாவுக்கரசர்** - 2772. நாயனார்.

**திருநீலநக்கர்** - 3051. நாயனார்.

**திருநெறி** - 2757. சிவநெறி.

**திருநெய்த்தானம்** - 2847. சோழ நாட்டுப் பதி.

**திருப்பழனம்** - 2847 சோழ நாட்டுப் பதி: சத்தத் தானங்களுள் ஒன்று.

**திருப்பரங்குன்று** - 2782. பாண்டி நாட்டுப் பதி.

**திருப்பருப்பதம்** - 2925. வடநாட்டுப் பதி.

**திருப்பாசூர்** - 8909. தொண்டை நாட்டுப் பதி.

**திருப்பாதிரிப்புலியூர்** - 2860. நடுநாட்டுப் பதி.

**திருப்புத்தூர்** - 2783. பாண்டி நாட்டுப் பதி.

**திருப்பூவணம்** - 2784. பாண்டி நாட்டுப் பதி.

**திருமதுரை** - 2774. பாண்டி நாட்டுத் தலைநகரம்.

**திருமயிலாபுரி** - 2931. தொண்டை நாட்டுப் பதி; திருமயிலை என வழங்கும்.

**திருமாணிகுழி** - 2860 நடுநாட்டுப் பதி.

**திருமாற்பேறு** - 2900. தொண்டை நாட்டுப் பதி.

**திருமுருகர்** - 3051. நாயனார் பெயர்.

**திருவக்கரை** - 2861. தொண்டை நாட்டுப் பதி.

**திருவடுகூர்** . 2861. நடுநாட்டுப் பதி.

---

**திருஞானசம்பந்த நாயனாரின் தேவியார்.** *செம்பொன் செய் வாசிச் சூட்டுத் திரு மணிப் புனைபூண் செல்வப், பைம்பொனின் மாலை வேய்ந்த பவளமென் கொடியொப்பார்.*

உ
சிவமயம

# மேற்கோள் நூல் அகராதி

---

தொகுத்தவர் : K. ஆறுமுக நாயனார், திருநாவுக்கரசு நாயனார் சைவ சித்தாந்த கழகம், திருத்துறையூர், (நடுநாடு).

உ

சிவமயம்

# அருஞ் சொற்றொடர் அகராதி

[எண்கள் - பாட்டு எண்கள்]

உ
சிவமயம்

# திருஞானசம்பந்த நாயனார் புராணத்தைப் பற்றிய

## சில குறிப்புக்கள்

திருவிடைவாய் :—இது சோழ நாட்டுப் பாடல் பெற்ற பதிகளுள் ஒன்று. தஞ்சைச் சில்லா நன்னிலந் தாலூகாவைச் சேர்ந்தது. திருவாரூருக்கும் நீடாமங்கலத்துக்கும் இடையில் உள்ள கோரடாச்சேரி என்ற ரயில் நிலயத்திலிருந்து தெற்கில் 2 நாழிகையளவில் உள்ள பாண்டவாறு என்னும் நதியின் கரையில் தென்புறமுள்ளது. பாண்டவாறு என்பது காவிரியின் பிரிவுகளாகிய கிளைகளுள் ஒன்று. இதற்கு ஆளுடைய பிள்ளையார் பதிகம் கிடைத்துள்ளது. இத்திருப்பதிகம் முன் அகப்படாததனால் முன் பதிப்புக்களில் சேர்க்கப்படவில்லை. அது முழுதும் அத்திருக்கோயில் சுவரில் கல்வெட்டுச் செதுக்கப்பட்டிருந்ததனால் ஆராய்ச்சியாளர்கள் அதைக் கண்டுபிடித்து எடுத்து எழுதி வெளியிட்டபடி இப்போதுள்ள தேவாரப் பதிப்புக்களிற் சேர்க்கப்பட்டுள்ளது. "பாதாளீச்சரமும் பாடி முன்னணைந்த பதி பிறவும் பணிந்து போற்றி" (2794) என்றதனுள் பதிபிறவும் என்ற பகுதி இப்பதியினை உள்ளிட்டுக் குறிக்கலாம் என்று சில அன்பர்கள் கருதுகின்றார்கள். இப்பதிகம் "மறியார் கரத்தெந்தை" என்று தொடங்குகிறது. 11-ம் திருமுறை க்ஷேத்திர வெண்பா-(7) "தென் விடைவாய" என்றது இப்பதி.

கல்வெட்டுக்களிற் கண்ட சரித ஆராய்ச்சிக் குறிப்புக்கள் :—[இவை வித்வான்-திரு. M. இராஜமாணிக்கம் பிள்ளை, M. O. L., L. T., அவர்கள் அன்புடன் அனுப்பிய குறிப்புக்களுட் கண்டவை.] திருஞானசம்பந்த நாயனார் வரலாறு பற்றிய கல்வெட்டுக்கள் இல்லை; அவர்பெயரால் பிற்காலச் சோழர் காலத்தில் மடங்கள், தோட்டங்கள் முதலியவை வழங்கி வந்தன என்பதும், சில தானங்கள் விடப்பட்டன என்பதும் தெரியவருகின்றன. (1) சீகாழியில் "ஆளுடைய பிள்ளையார் திருமாளிகையில் தமிழ் விரகர் கணபதி, குகசேயில் திருக்கைக்கோட்டியில் எழுந்தருளியிருக்கிற முறைகள் திருக்கைப் புக்கி அழிவுள்ளன எழுந்தருளுவித்ததும், திருமுறைகள் பூசித்ததும் இருக்கைக்கு இவ்வூர் இறையிலியாக விட்ட நிலம்......" என்பது II குலோத்துங்கன் - 1-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (381 - 1918); —(2) அம்மன்னரது 10-வது ஆட்சியாண்டு :—"திருஞான சம்பந்தருக்குப் பால் போனகத்திறகு நிலம் விடப்பட்டது" (374 of 1918); —(3) அம் மன்னர் 12-வது ஆட்சியாண்டு :—ஆளுடைய பிள்ளையார் கோயிலில் எழுந்தருளுவித்த மங்கையர்க்கரசி நாச்சியாருக்கு நிவேதனத்துக்கு வீரசோழ நல்லூரில் நிலம் விடப்பட்டது (375 of 1918) [குறிப்பு : இந்த இரண்டாம் குலோத்துங்கர்தாம் அநபாயர் என்ற மன்னர் என்றும்; சேக்கிழார்பெருமான் காலத்தவர் என்றும் அறியப்படுபவர்] ;—(4) II இராஜாதிராஜன் - ஆட்சி 11-வது ஆண்டு - ஆளுடைய பிள்ளையார் கறியமுதுக்குப் பயறு கொடுக்க நிலம் விடப்பட்டது (379 of 1918) ;—(5) III குலோத்துங்கர் - ஆட்சி 6-வது ஆண்டு - இராஜ வித்யாதரி என்பவள் ஆளுடைய பிள்ளையாரை (புதிதாக) எழுந்தருளச் செய்தாள் (361 of 1918) ;—(6) குரத்தி ஓட (திருஞான சம்பந்தர் புராணம் 639 = 2536) குரத்தியர் - சமணப் பெண்துறவிகள்; இவர்களுக்குத் தனி மடம் உண்டு. I பராந்தகன் காலத்தில் விளாப்பாக்கத்தில் குரத்தியர் மடம் இருந்தது. அதன் தலைவியார் பத்தினிக் குரத்தியடிகள் என்பவர் (53 - 1900); வெடிவில் இருந்த மடத்தில் 400 பேருக்கு மேற்பட்ட குரத்தியர் இருந்தனர் (S. S. I.

III - 92) ;—(7) போதிமங்கை - பூதமங்கலம் - இவ்வூரில் கி. பி. 450-ல் புத்த தத்தா இந்த வேணுதாச விகாரத்தில் தங்கியிருந்து "விநய விநிச்சயம்" என்னும் நூலை எழுதினார் (Prof. K. A. N. Sastry's cholas - vol. I - p. 128) ;—(8) திருவோத்தூர் (ஆண்பனை . பெண்பனை ஆக்கிய பதி):—இவ்வூரைச் சுற்றிய பல சமணர் கிராமங்கள் இன்றும் இருக்கின்றன ;—(9) ஏகம்பத்தில் திருமடம் (புரா - பாட்டு 998=2896) - அந்நாளில் ஏகம்பத்தில் காபாலிக மடம் இருந்தது என்ற உண்மையை மகேந்திர வர்மன (A. D. 600—630) எழுதிய மத்தவிலாசப் பிரகசனம் என்னும் நூலைக்கொண்டு அறியலாம்.

இவற்றாற் பெறப்பட்ட தொகைப் பொருளாவன:—சேக்கிழார் பெருமானது காலத்திலேயும் அதனையடுத்தும் இந்நாயனாரது பெயர்களுள் திருஞான சம்பந்தர், ஆளுடைய பிள்ளையார், தமிழ் விரகர் முதலிய பல பெயர்கள் வழக்கத்தில் இருந்தன. இவருக்குத் தனிக் கோயில்கள் அமைக்கப்பட்டு அவற்றுள் சிறப்பாகிய வழிபாடுகள் நிகழ்ந்தன; பால் போனகம், பயறுடன் சமைத்த கறியமுது முதலியவை நிவேதிக்கப்பட்டன ; இவர் கோயிலினுள் இவர்பால் தலையன்பு பூண்ட மங்கையர்க்கரசியம்மையாரையும் எழுந்தருளுவித்து வழிபட்டனர். இவரது திருமுறைகளும் வழிபடப்பட்டன. * * *

சமணப் பெண் துறவிகள் குரத்தியர் எனப்பட்டனர் அவர்கள் பெருங் கூட்டமாகத் தனி மடங்களில் இருந்தனர். * * * புத்தர், நாயனாரிடம் வாதுக்குப் போதிமங்கையில் வந்த காலத்துக்கு முன்பே புத்தர்களது வணமைபெற்ற (விகாரம் எனப்படும்) மேகாயிலும் புத்தர் கூட்டமும் இருந்தன. * * * திருவோத்தூரிலும் அதனைச் சுற்றிலும் ஆண்பனை - பெண்பனையாக்கிய அற்புதம் நிகழ்வதற்குக் காரணராகவிருந்த சமணர் கூட்டம் வலிமை பெற்றிருந்தது. இன்றும் அங்குப் பல கிராமங்களில் சமணர் உள்ளனர். * * * காஞ்சிபுரத்தில் சைவர்கள் தங்கும் மடங்கள் பல இருந்தன. அவற்றுள் ஒன்றில் பிள்ளையார் தங்கினார்—என்னும் சில செய்திகளேயாம்.

உ

சிவமயம்

# ஆளுடைய பிள்ளையார் புராண உரைப் பதிப்பு நிறைவு விழா

## ஆச்சாபுரம்

இவ்விழா ஆச்சாபுரம் என்னும் திருநல்லூர்ப் பெருமணத்தில் 1—6—1950 (விக்ருதி௵ வைகாசி௴ 19௳) வியாழக்கிழமையன்று சிறப்பாய நடந்தேறியது. தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான அத் திருக்கோயிலில் ஷை ஆதீன மகாசந்நிதானங்களின் அருளாணையின் ஆதரவுப்படி இவ்விழா நிறைவெய்தியது. அதிகாலையில் திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கும் தேவியாருக்கும் மகாபிஷேகம் மகாலங்காரம் மகாதீபாராதனை நிகழ்ந்தன. அதுபோழ்து புராண உரைப் பிரதிகளை நாயனாரது திருவடியிற் சார்த்தி வழிபாடு நிறைவாயிற்று. அதன்பின் பாலசம்பந்தர் உற்சவமூர்த்தியைச் சிவிகையில் மகாலங்காரத்துடன் எழுந்தருளுவித்து யானை சாமரை முதலிய சகல விருதுகளுடன் திருவெண்ணீற்றுமையம்மை சந்நிதிக்கு எழுந்தருளுவித்து வழிபாடு நிகழ்ந்து எல்லாருக்கும் திருவெண்ணீறும் அருட்பிரசாதங்களும் வழங்கப்பட்டன. பின்பு சிவிகையில் திருஞானசம்பந்தப்பெருமானார் - திருநீலகண்ட யாழ்ப்பாணரும், திருமுருக நாயனாரும், திருநீலநக்க நாயனாரும் உடன் தொடர்ந்து வர, இரதத்தில் திருவீதி எழுந்தருளினார். புராண உரைச் சுவடிகளை திவ்யாலங்கிருதத்துடன், ஆதீன கர்த்தர் அவர்கள் இதற்கென்று வரவழைத்திருந்த யானைமீது எழுந்தருளுவித்து ஷை திருமுறைகளைச் சேக்கிழார் மரபில்வந்த ஒரு நல்லன்பர் தாங்கிவரவும், பின்னர் இருந்து ஒரு அன்பர் சாமரை யிரட்டி வரவுமாகத் திருவீதி வலம்வரும் ஆனந்தக் காட்சி நிகழ்ந்தது. அதுகாலம் முதுவேனிற் பருவமாயிருந்தும் அன்று முழுதும் சூரியன் தனது கடுங்கதிர்களை வெளிக்காட்டாது மறைத்ததும் வானத்தில் மேகங்கள் சூழ்ந்து நுண்துளி தூற்றி மந்தமாருதம் வீசிக் குளிர்ச்சி செய்ததுமாக இருந்த நிலைகள் தெய்வத் திருவருட் கடையாளமாய் விளங்கின. சிதம்பரம் தேவார ஆசிரியர் - திரு. S. இராமலிங்க ஓதுவார் அவர்களும், அண்ணாமலைப் பல்கலைக் கழக இசையாசிரியர் தேவாரம் - திரு. சுப்பிரமணிய முதலியார் அவர்களும், சீகாழித் தேவார ஆசிரியரும், தருமபுர ஆதீன ஓதுவா மூர்த்திகளும், சிதம்பரம் சீகாழிப் பாடசாலைகளின் மாணவ மாணவிகளும், கோயமுத்தூர்ச் சேக்கிழார் தேவாரப் பள்ளிக்கூட மாணவர்களுமாகச் சேர்ந்து பெருந் திரளாகக் கூடிய திருக்கூட்டம் சைவத் தெய்வத் திருமுறை முழக்கம் செய்து நகர்வலத்தினைச் சிறப்பித்தது. அங்கங்கும் திருவீதியில் உபசரிப்புகள் நிகழ்ந்தன. நகர்வலச் சிறப்பினை யாவரும் என்றும் கண்டு களிக்கும்படி சிதம்பரம் சிவ தேவார பாடசாலை அதிபர் திரு. சின்னையா முதலியார் அவர்கள் படங்கள் (போட்டோ) எடுத்து உதவினர். சீகாழி சிதம்பரம் முதலிய பல பதிகளினின்றும் அடியவர்களும் பெரிய மிராசுதார்களும் திரளாகக் கூடிவந்து வழிபாட்டிலும் நகர்வலத்திலும் கலந்து சிறப்பித்தனர். வந்தவர்கட்கெல்லாம் விழாவின் முன்னை நாளும், விழாவில் முப்போதும், பின்னாளும் உறையுள், உணவு முதலிய எல்லா வசதிகளையும் ஆச்சாபுரம் மிராசுதாரும், பஞ்சாயத்துத் தலைவரும், கூட்டுறவுச் சங்கத் தலைவரும், அட்வொகேட்டுமாகிய உயர்

சைவத்திருவாளர் S. முருகேச முதலியார், B.A., B.L., அவர்கள் மனமுவந்து செய்து உதவினர். கோயிலில் நடைபெறும் சிறப்புக்களையும், நகர்வலத்தின் வைபவத்தையும், மாலையிற் பாராட்டுக் கூட்ட அமைப்புக்களையும், ஆதீனச் சார்பில் வைத்தீசுவரன் கோயில் கட்டளைவிசாரணை ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளும், ஆச்சாபுரம் கோயில்விசாரணை திரு. வைத்தியலிங்கம் பிள்ளை அவர்களும் நேரில் கண்காணித்து எவ்விதக் குறைவுமில்லாமல் இயற்றுவித்தனர். பாராட்டுக் கூட்டம் திருக்கோயிலின் முன், வடகிழக்கே உள்ள ஸ்ரீ ஞானசம்பந்தர் மடத்திற்காக வகுக்கப்பட்ட இடத்தில் அமைத்த புதிய அலங்காரக் கொட்டகையில் மாலை 4½ மணிக்குத் தொடங்கிற்று. அங்கே ஸ்ரீ பாலசம்பந்தமூர்த்திகள் நாயன்மார் மூவருடன் வெளிப்பட எழுந்தருளியிருந்தனர். ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமைதாங்கி முன்னுரை, அணிந்துரை, முடிப்புரைகளைச் சிறப்பாக வகுத்தருளினர். ஓதுவார் மூர்த்திகள் தேவார பாராயணம் செய்தனர். சீகாழிக் கல்விக் கழகத்தார் அச்சிட்ட வரவேற்புரையைச் சீகாழி மிராசுதாரும் அன்பருமாகிய திரு சொ. சீனிவாச முதலியார் அவர்கள் வாசித்தனர். தருமையாதீனப் புலவர் ஆரணி வித்வான் - திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் உரையாசிரியருக்கு வாழ்த்துப் பாமாலை நவமணிமாலையாகப் பாடி வாசித்தளித்தனர். சீகாழிப் பெருநிலக்கிழார் திரு. S. சீனிவாச முதலியார் அவர்களும், திரு. துடிசைக்கிழார் - A. சிதம்பரனார் அவர்களும், சிதம்பரம் தேவார பாடசாலை அதிபர் திரு. சின்னையா முதலியார் அவர்களும், சிதம்பரம் பாடசாலைத் தேவார ஆசிரியர் ஸ்ரீமத். S. இராமலிங்க ஓதுவார் மூர்த்திகளும் உரையாசிரியரையும் உரை நயங்களையும் பற்றிப் பாராட்டிப் பேசினார்கள். உரையாசிரியர் உரைநிறைவு பற்றித் திருவருளால் தமக்குக் கிடைத்த பேற்றினைப் பற்றிப் பேசினர். தருமை ஆதீன மகா சந்நிதானங்களின் ஆசியும் திருவருட் பிரசாதங்களும் உரையாசிரியருக்குத் தம்பிரான் சுவாமிகளால் வழங்கப்பட்டன. இரவு 8 மணி அளவில் மங்கல வாழ்த்துடன் சபை நிறைவாயிற்று. அதன்மேல் திருக்கல்யாண விழாவும், நகர்வலமும் நிகழ்ந்தன. அதிகாலை 5 மணியளவில் மூன்று நாயன்மார்களுடன் திருஞானசம்பந்த நாயனார் திருமணக் கோலத்துடன் காதலியைக் கைப்பற்றிக்கொண்டு சிவச்சோதியுட் கலக்கும் அருட்காட்சி நிகழ்ந்ததனை அன்பர்கள் யாவரும் கண்டு தொழுது பெரும் பேறு பெற்றனர்.

திருவிழாவை ஆசிபூர்வமான ஆணை தந்து அருளிய தருமை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானங்களுக்கும், உடனிருந்து நடத்திக்கொடுத்த ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளுக்கும், கட்டளைவிசாரணை திரு. வைத்தியலிங்கம் பிள்ளை அவர்களுக்கும், வரவேற்புத் தலைவராக நின்று உபசரணை செய்த ஆச்சாபுரம் திரு. S. முருகேச முதலியார், B.A., B.L., அவர்களுக்கும், படங்கள் எடுத்து உதவிய சிதம்பரம் தேவார பாடசாலை அதிபர் திரு. சின்னையா முதலியார் அவர்களுக்கும், தேவார ஆசிரியர் மாணவ மாணவிகளுக்கும், வாழ்த்துப் பாமாலையும் வரவேற்புரையும் பாராட்டுரைகளும் வழங்கிய எல்லாப் புலவர்களுக்கும், மற்றும் மனமொழி மெய்களால் இவ்விழா சிறப்புற நிகழச் செய்து ஊக்கமளித்த எல்லாப் பெருமக்களுக்கும் உரையாசிரியரால் வணக்கமும் நன்றியும் செலுத்தப்பட்டது.

இவ்வளவும் உண்ணின்று இயக்கியருளிய இறைவர் திருவருளுக்கும் திருஞானசம்பந்த நாயனாரது திருவடித் தாமரைகளுக்கும் எனது வணக்கத்தைச் செலுத்துகின்றேன். ஒன்றுக்கும் பற்றாத நாயினேனையும் தனது பேரருட் பெருந் தொண்டர் சரிதங்களின் உரை எழுதி வெளியிடவும் சிவபெருமான் தண்ணருள் சுரந்தருளினர்.

இப் பெரும்பணி தொடங்கி இப்போது 15 ஆண்டுகள் சென்றன. யாக்கை நிலையாமை என்ற நீதிநூற் பகுதி எப்போதும் நினைவில் வருகின்றது. ஆயினும் இப்புராணத்துள் எஞ்சிய பகுதிகளையும் விரைவில் அச்சியற்றவும் புராண உரையினை முழுதும் கண்டு பெருவிழாச் செய்து வணங்கும் பெரும் பேற்றினைப் பெறவும் ஆயுளும் அறிவும் ஆற்றலும் அடியேனுக்கு அருளுவார் என்றே நம்பி இறைஞ்சி அவரது பொன்னார் திருவடிகளின் விண்ணப்பஞ் செய்கின்றேன்.

"அருளா தொழிந்தா லடியேனை யஞ்சே லென்பா ராரிங்குப்
பொருளா வென்னைப் புகுந்தாண்ட பொன்னே பொன்னம் பலக்கூத்தா"

"நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே"

கோவை
சேக்கிழார் நிலயம்
1-6-1950

அடியார்க்கடியேன்,
C. K. சுப்பிரமணிய முதலியார்
பதிப்பு - உரையாசிரியன்

உ

சிவமயம்

# ஆச்சாபுரத்தில்

# பெரிய புராணத்துள் ஆளுடைய பிள்ளையார் புராண விரிவுரை அரங்கேற்று விழா

திருநின்ற செம்மைபெற்ற பன்னிரண்டாம் திருமுறையான
பெரியபுராண விரிவுரையாளர் - உயர்சைவத் திருவாளர் -
சிவக்கவிமணி-கோயம்புத்தூர் - C. K. சுப்பிரமணிய முதலியார், B A, அவர்கட்கு
திருநல்லூர்ப்பெருமணம் எனனும் ஆச்சாபுரத்தினிடத்துப்
பெரியபுராண விரிவுரை அரங்கேற்றத்தில் அன்பால் அளித்த

## வரவேற்பு உரை

**சேக்கிழார் மரபிலுதித்த பெரியீர்!**

*உங்கள் வரவு நல்வரவாகுக; அன்பர்களாகிய நாங்கள் தாய்வரவை எதிர்பார்த்திருக்கும் பறவைப் பார்ப்புப்போல் உமது வரவை எதிர்பார்த்திருக்கின்றோம்*

**சிவநேசச் செல்வரே!**

*தங்கள் பன்னிரண்டாம் திருமுறையின் விரிவுரையையும், ஆராய்ச்சியையும், நுட்பமான பொருள் விளக்கத்தையும் காணுந்தோறும் எங்களுக்கு உண்டாகும் மகிழ்ச்சி தங்களைக் காணவேண்டும் எனனும் பற்றை உண்டாக்கியது. அதன் பயனை இப்பொழுது அடைந்ததனால் நாங்கள் மிகவும் மேன்மை பெற்றவர் ஆகின்றோம். ஆகையால் தங்களை மனமகிழ்வோடு வரவேற்கின்றோம்.*

**ஆங்கில அறிஞரே!**

*தாங்கள் தமிழ்க்கல்வியோடு ஆங்கிலமும் கற்று வல்ல வழக்கறிஞராதலால் தங்கள் பெரியபுராண விரிவுரை பல வகையிலும் உலக இயலோடு பொருந்தி விளங்குகின்றது கண்டுகளித்த களிப்பால் தங்களை ஒருமுறை இருமுறை மும்முறையாக வரவேற்கின்றோம், வருக! வருக!! வருக!!!*

**தமிழ் கற்றறிந்த வித்தார கவிஞரே!**

*தமிழ்ப் புலவர்கள் நூலை விளக்கமாக விரித்து உரை செய்யவும் பேசவும் வல்லவர் வித்தார கவிஞர் என்பர். அதற்கு உதாரணமாகத் தாங்கள் விளங்குதல் கண்டு வியந்த நாங்கள் தங்களை வித்தார கவிஞரே என அழைக்கின்றோம். வித்தார கவிஞரே வருக!*

**சன்மார்க்கத் தலைவரே!**

*தங்கள் ஒழுக்கமும் சிவபெருமானிடத்தும் சிவனடியவர்களிடத்தும் பதிந்த தங்கள் உள்ளமும் உண்மை அன்பும் வாய்மையும் சிவத்தொண்டும் இன்சொல்லும் இன்முகமும் கண்டோர் வியக்கும் நிலையில் உள்ளன. தாங்கள் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் சிவஞானமும் பெற்றுத் தமிழ்நாட்டுத் தாயான காவிரி மணலைவிடப் பன்னாள் வாழ்ந்திருக்கும்படி அம்மையை இடப்பால் கொண்ட ஆனந்த நடராசரை வேண்டுகின்றோம்.*

சீர்காழி
1–6–50

இங்ஙனம்,
காழிக் கல்விக் கழகத்தார்

# II

## கோவை - சிவக்கவிமணி-சைவத்திரு - C. K. சுப்பிரமண்ய முதலியார் அவர்கள்

ஆசசார்யாளபுரததில

ஸ்ரீ ஞானசம்பந்தமூர்த்திகள் புராணவுரைப் பதிப்பு நிறைவு விழாவில்

அளபுமிககுப பாடிய

## வா ழ் த் து ப் பா மா லை

உலகமெலா மினபோங்கி யிடாநீங்கி யுயாநதுதிசழ்ந துலகக முனனாட்
பலகவிக்கு மிலககணமாப பாககியசசேக கிழாரருளும பனனிரணடா
மிலகருளின வடிவான திருமுறைககுப பேருரையை யியறறி நமமை
மலசரும மாயைகடந் தலவருளி னுறையவைதத வளளல வாழ்க. (௧)

சேக்கிழாா கோததிரததுச செழுநதமிழபபா வலனுமுற சிறந்து நினறோன்
சேககிழான் மலரடிககே சிநதனையை யிடமாககித திருவைப பெறறோன
சேககிழா ரிவவிருப தாறுறருண டினிலிருககச சேயா வநதே
சேக்கிழாா பெயருளநா ளெலாம் விளஙகுங கவிமணியாஞ் சிவனை வாழக (௨)

பெரியபுரா ணமவடிவாற பெரியபுரா ணமமெனயாம பேணிப போறறிப
பிரியபுகன றுலககவுரை பதினையாண டாவெழுதிப பிறங்கச செய்து
கரியடல மறுவிததுக கருணையுருப பெருமானசிாக கழலின பேஙக
உரியபரம் பரைககொடையை யுலகுபெற வருளவளளா லுவநது வாழக. (௩)

பணடுதிருச் சிறறம் பலபபுலவர் போதனையும பாகக லைக்கற
கணடுநிக ராபபாடுங கநதசா மிபபுலவா கருணை நோனபும
தொணடுசிவ னடிககாறறுந தமிழசசைவா பழநதவமும தொடாபு கொணடுள்
வணடுரியா நீதபபே ரானநத மொடுவடிவாய வநதாய வாழக. (௪)

பாவலனே வாழகசிவ பத்திமையாய வாழகதமிழ்ப பணபு மிகக
காவலனே வாழ்கவுல காவலனே வாழ்கபெயா நாடத தோற்றுஞ
சேவலனே வாழ்கவுரை செய்வகையா லழைக்குமிடஞ் சென்று நோககும
பூவலனே வாழகநினைப போல்வாரார்? புலனடககும் புலவா வாழக. (௫)

புவிநாடும் புகழ்வளர்ந்து புலவோாசென னெறிவிளககிப புனித வாழ்வை
யவிநாடும் வானோர்க்கும அரியதெனை வுலகவர்க்கிங் களித்த வளளால்
அவிநாசிக் கருணும்பா மலரடிககுத தமிழமாலை யணிநத சீரா
கவிநாடும பெயர்ச்சுப்ர மண்யனெனும் முதலோனே கவினறு வாழக. (௬)

தில்லைநகர்ப பொனமனறிற பெரியபுரா ணததிருநூல் செமமை யோர்வாா
எல்லையிலா திருசகவரங கேற்றியதொல் பெருஙகாட்சி யிநநாள யாககும
சொல்லைவெலக் கிடைககுமுயர் தவப்பயனைச் சிவனருளாற் றொடாநது வாய்க்க
நலலைநின தரியபெருஞ செயலன்றோ காரணம? மெயஞ ஞானி வாழ்க. (௭)

ஆண்டுதொறும் பெருஙகோவைத தமிழச்சஙகத தெழிலகததே ஆசான் பூசை
வேணடுவகை புராணவர லாற்றுவிரி வுரையோடு மேவி யாற்றிப

பூண்டுதிகழ் சைவத்தொண் டளவுகடந் தியற்றுபெரும் புலவா வாழ்க
[illegible]ண்டுவிழி திகைப்பிக்குங் கண்டிகைவெண் ணீற்றழகா துலங்கி வாழ்க. (அ)

வாழ்கவள நிறைகோவை வாழ்கசேக் கிழாமரபு வாழ்க சைவம்
வாழ்கதொண்டை மண்டலவே ளாளர்முத லியர்குடிகள் வாழ்க தொன்னூல்
வாழ்ககவிக கோன்கந்த சாமிநம்பி சுபரமண்ய வள்ளல் வாழ்க
வாழ்கபசு வீழ்கமழை வளம்பலகி உலகமெலாம் வாழ்க வாழ்க. (க)

தருமபுர ஆதீனப் புலவர்,

ஆச்சார்யார்கள்புரம் 1–6–1950 } காமக்கூர்-வித்வான் - முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்,
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்பள்ளி,
ஆரணி (வடார்க்காடு).

## III

### "தினசரி" – 5-6-'50

கோவை-சிவக்கவிமணி வக்கீல் - ஸ்ரீ சி. கே. சுபபிரமணிய முதலியார் இயற்றிய பெரியபுராணததிலுள்ள திருஞானசம்பநதா புராணம் விரிவுரை அரஙகேற்று விழா, நேற்று ஆச்சாள்புரத்தில் தருமபுரம் ஆதீனததிறகுச் சொந்தமான வேளூர் தேவஸ்தானம் விசாரணை கட்டளை ஸ்ரீ. சோமசுந்தரத் தம்பிரான் தலைமையில் நடைபெற்றது.

காலை 9 மணிக்கு ஸ்ரீ. திருஞான சம்பந்தர் புராண விரிவுரையை யானையின்மீது நன்கு அலஙகாரம் செய்து வைத்துச் சிதம்பரம், சீர்காழி, திருவாரூர் ஆகிய இடஙகளிலிருந்து வந்துள்ள பிரபல தேவார ஆசிரியர்கள், மாணவர்கள் தேவார பாராயணம் செய்ய நகர்வலம வந்தது. சிவக்கவிமணி ஸ்ரீ. முதலியார் தான் இயற்றிய பெரிய புராண விரிவுரை நுணுக்கங்களையும், திருவருட்டுணை எனபதைபபறறியும் விரிவாகப பேசினார். அண்ணாமலை சாவகலாசாலைத் தமிழ் விரிவுரையாளா ஸ்ரீ. ஜி. சுபரமணியம் பிள்ளை "ஞானக்கண" என்பதைப பறறிப பேசினார், சீர்காழி ஸ்ரீ. சீனிவாச முதலியார், துடிசை ஸ்ரீ. சிதம்பரனார், ஆரணி, தமிழ் பண்டிட் ஸ்ரீ. மாணிக்கவாசக முதலியார், சிதம்பரம் தேவார பாடசாலை அதிபர் ஸ்ரீ. சின்னையா முதலியார், ஸ்ரீ. ராமலிங்க ஓதுவா மூர்த்தி ஆகியோர்கள் சிவக்கவிமணி ஸ்ரீ. சி. கே. சுபரமணிய முதலியாரின் திறமைகளைப் பாராட்டிப் பேசினாகள்.

சீர்காழி கல்விக் கழகததின் சார்பில் ஸ்ரீ. சொ. சீனிவாச முதலியார், சிவக்கவி மணிக்கு ஓர் வரவேறபுப பததிரம் வாசித்துக் கொடுததார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

பெரிய புராணம்

என்னும்

# திருத்தொண்டர் புராணம்

## இரண்டாங் காண்டம்

ஆறாவது

## வம்பறா வரிவண்டுச் சருக்கம் - II

திருச்சிற்றம்பலம்

வம்பறா வரிவண்டு மணநாற மலரு
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன் ;
ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன் ;
நம்பிரான் றிருமூல னடியார்க்கு மடியேன் ;
நாட்டமிகு தண்டிக்கு மூர்க்கர்க்கு மடியேன் ;
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியே ;
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

திருச்சிற்றம்பலம்

—திருத்தொண்டத்தொகை (௬)

உ

சிவமயம்

# 28. திருஞானசம்பந்த நாயனார் புராணம்

## தொடர்ச்சி

அணங்கமர் யாழ்முரித் தாண்பனை பெண்பனை யாக்கியமண்
கணங்கழு வேற்றிக் கருவிடந் தீர்த்துக் கதவடைத்துப்
பிணங்கலை நீரெதி ரோடஞ் செலுத்தின வெண்பிறையோ
டிணங்கிய மாடச் சிரபுரத் தான்ற னிருந்தமிழே. —(39)

காரணி கலைபொழிற் காழிக் கவுணியர் தீபனல்லூர்ச்
சீரணி கலைநற் பெருமணந் தன்னிற் சிவபுரத்து
வாரணி கொங்கை மாதொடும் புக்குறும் போதுவந்தார்
ஆருங் கொழிந்தனர் பெற்றதல் லாலவ ரும்பதமே —(60)

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி - நம்பியாண்டார் நம்பி.

பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோற்றோணி கண்டீர்—நிறையுலகிற்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
றன்மாலை ஞானத் தமிழ் —(11)

—ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை - ஷெ.

ஓடஞ் சிவிகை யுலவாத கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்தல்—ஏடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்த லீங்கிவைதா மோங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல்"

—திருக்களிற்றுப்படியார். - (70)

* * * * *

## புராணம் (தொடர்ச்சி)

[மங்கையர்க்கரசி யம்மையாரும் குலச்சிறை நாயனாரும் விடுத்த விண்ணப்பத்துக் கிணங்கி, ஆளுடைய பிள்ளையார் சமண சமய நிராகரிப்பும் சைவ ஆக்கமும் கருதித் திருமறைக்காட்டி னின்றும் பாண்டி நாட்டுக்குத் திருவருள் வழியே எழுந்தருளி வருகின்றார். அப்போது சமணர்க்கு மேல் வரும் கெடுதியைக் குறிக்கும் தீக்கனாக்களும் துன்னிமித்தங்களும் நிகழ்ந்தன.]

2531. பீலியுந் தடுக்கும் பாயும் பிடித்தகை வழுவி வீழக்
கால்களுந் தடுமா றோடிக், கண்களு மிடமே யாடி,
மேல்வரு மழிவுக் காக வேறுகா ரணமுங் காணார்
மாலுழந் தறிவு கெட்டு மயங்கின ரமண ரெல்லாம். ௬௩௩

(இ - ள்); பீலியும்...வீழ - மயிற்பீலிக் கற்றையும், தடுக்கும், பாயும் அவற்றைப் பிடித்த கைப்பிடி முதலியவற்றினின்றும் தாமே நழுவி விழவும்; கால்களும் -

கால்களும் தடுமாற்றத்தை யடைந்து தள்ளாடியும்; கண்களும் இடமே யாடி - கண்கள் இடப்பக்கத்தே துடித்தும்; அமணர் எல்லாம் - அமணர்களெல்லாம்; மேல் வரும்...காணார் - இவற்றால் அறிவிக்கப்படுமாறு பின்னால் உறுதியாகத் தமக்கு வரும் அழிவுக்கு வேறு காரணம் ஒன்றும் தோன்றாதவர்களாகி; மயங்கினர் - மயங்கினார்கள்.

(வி - ரை). பீலி - தடுக்கு - பாய் - பீலிக்கற்றைகளைப் பிடித்தலும், தடுக்கினை இடுக்குதலும், பாயினை உடுத்தலும் சமணர் வழக்குக்கள்; பிடித்த கையினின்றும் பீலி வழுவி வீழ்ந்தது; தடுக்கு இடுக்கிய இடத்தினின்றும் வழுவிற்று; உடுத்த இடையினின்றும் பாய் வழுவிற்று.

பீலி பிடித்த கை - என்றதனால் ஏனையவற்றின் இடங்கள் ஏற்புழிக் கோடல் பற்றிக் கொள்ளப்பட்டன.

கால்களும் தடுமாறிடிக் கண்களும் இடமேயாடி - கால்கள் பின்னித் தடுமாறுதலும், (ஆண்மக்களுக்கு) மக்களுக்கு இடக்கண் துடித்தலும் துன்னிமித்தங்கள் என்பர்; கால் தடுமாறுதல் உடலில் உயிர்ச்சத்தி குறைதலால் வருவது; இஃது ஆகாது; ஆண்மக்களுக்கு இடக்கண்ணும் பெண்களுக்கு வலக்கண்ணும் துடித்தலும் ஆகா என்பர் ஆண்மக்களுடலில் வலப்பாகம் வலுத்த ஆண்பாகமென்றும் இடப்பக்கம் அத்தகைய வலிவின்றிய பெண்பாகமென்றும் கூறுவர். கண் துடித்தல் உயிர்ச்சத்தியின் குறைவு காட்டுதலால் முன்னரே வலிகுறைந்த பகுதி மேலும் சத்தி குறைய அழிவு காட்டும் என்பதாம்; இவ்வாறே இராமன் கதையினுள் பன்னசாலையில் இராவணன் வருமுன் சீதைக்கு வலந்துடித்ததென்றும், அசோகவனத்தில் இடம் துடித்ததென்றும் வரும் கூற்றுக்களின் கருத்தும் காண்க;

கால்களும் - உம்மை உடலைத்தாங்கி நிற்கும் வலுத்தன்மை கொண்ட கால்களும் என்று சிறப்பும்மை.

இடமே யாடி - தீமை அறிவிக்குமாறு தொடர்ந்து மாறின்றி இடதுபக்கமே என்று ஏகாரம் பிரிநிலை. கண் ஆடுதல் - துடித்தல்.

மேல்வரும் அழிவு - நிமித்தங்கள் அறிவிக்கின்றபடி உறுதியாய் வருமென்றறிந்து கொண்ட அழிவு;

வேறு காரணமும் காணார் - காரணம் - நிமித்தங்களும் அவற்றால் தெரியப்படும் அழிவும் வருதற்கு உரிய காரணம்: வேறு - நிமித்தங்களுக்கு, அழிவு காட்டுதலின் பொருட்டு நிகழ்வது தவிர, வேறு நோய் முதலிய காரணங்கள்; காரணங்காணுதல் - அதற்கு மாற்றுத்தேடுதலின் பொருட்டேயாகலின் காரணம் - மாற்று என்றே பொருள் கொண்டனர் முன் உரைகாரர்:

மாலுழத்தல் - அறிவு நிலை தடுமாறுதல். உழந்து - மால்உழந்து - உழத்தலால்:

அறிவுகெட்டு மயங்கினர் - இப்பாட்டிற் கூறியவை உடற்புறக் கருவிகளின் நிகழ்வன. முன்பாட்டிற் கூறியவை வெளியிற் காண்பன. மேல்வரும் பாட்டில் அகக்கரணங்களின் மாறுபாட்டால் நிகழ்வனவற்றைக் கூறும் முறையும் காண்க. 633

2532. கந்தியர் தம்மிற் றாமே கனன்றெழு கலாங்கள் கொள்ள
வந்தவா றமணர் தம்மின் மாறுகொண் டேறு செய்ய
முந்தைய வுரையிற் கொண்ட பொறைமுத லவையும் விட்டுச்
சிந்தையிற் செற்ற முன்னுந் தீக்குணந் தலைநின் றார்கள். ௬௩௪

(இ - ள்) கந்தியர்...கொள்ள - சமணத் தவப்பெண்கள் தம்முள் தாங்களே சினந்து எழுகின்ற கலகங்களைச் செய்யவும்; வந்தவாறு...மாறுசெய்ய - நேர்ந்தபடி

அமண முனிவர்களும் தம்முள் மாறுபட்டுக்கொண்டு ஒருவர்க்கொருவர் ஊறுசெய்ய வும்; முந்தைய...விட்டு - தங்கள் முந்தைய நூல்களின் விதித்தபடி தாம் தாம் மேற் கொண்ட பொறை முதலாகிய அவற்றையும் கைவிட்டு; சிந்தையில்...தலை நின்றார் கள் - மனத்தில் சினம் முதலாகிய தீக்குணங்களிற் சிறந்து நின்றார்கள்.

(வி - ரை) கந்தியர் - சமணத்தவ மகளிர்; ஆரியாங்கனைகள் என்பது மரபு. கணவனுள்ளபோதே துறவு பூண்டோர்; கலாம் - கலகம்:

தம்மில் தாமே கனன்றெழு கலாங்கள் கோள்ள என்றும், தம்மில் மாறு கொண்டு ஊறுசெய்ய - என்றும், முறையே தவமகளிரும் முனிவரும் தத்தமக்குள் தாமே கலகமிட்டுத் துன்புறுத்திக் கொள்ளுதல் கூறப்பட்டது: பெண் ஆண் என்ற இருபாலாரும் கலாய்த்தல் கூறியதும் காண்க. தம்முடன் மாறுபட்டார் பிறர் வந்து கலாம் விளைத்தலே இயல்பாம்; அங்ஙனம் மாறுபடாது ஒரு நெறிப்பட்ட குழுவினர் தமக்குள் கலாம் கொள்ளுதல் இயல்பு விரோதம்; இங்ஙனம் வேறு காரணமின்றி நிகழ்தலின் இவை அழிவு முன் காட்டுதல் காரணமாக நிகழும் (உற்பாதம்) துன் னிமித்தமாயின. கந்தியர்களை-முற்கூறினர் பயிற்சியானன்றி இயற்கையானும் மகளிர் பொறையுடையாராதல் வேண்டும் என்ற சிறப்புப் பற்றி:

வந்தவாறு - நேர்ந்த நேர்ந்தபடி; ஒழுங்கும் முறையுமின்றி; அந்தவாறு என்று கொண்டு முன்கூறிய அம்மகளிர் கலாங்கொண்டது போலவே என்றுரைப்பாரு முண்டு.

அமணர் - அமண முனிவர்களாகிய குருமாரும் பிறரும்: இங்குக் கூறியது ஆண்மக்களை;

ஊறுசெய்ய - தமக்குள் ஊறுபாடு - துன்பம் - செய்ய; பொறை விடுதலோடு இம்சை செய்யாவிரதமும் விட்டார் என்பது:

முந்தைய உரையிற் கொண்ட பொறை முதலவையும் - முந்தைய உரையில் - தமது பழ நூல்களின் விதியினால்; உரைப்படி; கொண்ட - மேற்கொண்டிருந்த; முதலவை - முதன்மையானவை; பொறையினையும் அதுபோன்ற நற்குணங்களையும் முதலாவதாக மேற்கொள்ள வேண்டுமென்பது சமணர்களின் பழைய நூல்களில் கூறப் படுவன; அவையும் - உம்மை உயர்வு சிறப்பு;

செற்ற முன்னும் தீக்குணம் தலைநின்றார்கள் - நற்குணங்களை விட்டதனோடமை யாது, நன்மையும் தீமையு மிரண்டு மின்றிப் பொதுவிலும் அமையாது, அவற்றுக்கு மாறாகிய தீக்குணங்களையும் மேற்கொண்டு அவற்றில் தலைசிறந்து நின்றார்கள். தலை நிற்றல் - முற்படுதல்; சிறத்தல்;

பொறை முதல் வைப்பும் விட்டு—என்பதும் பாடம். 634

2533. இப்படி யமணர் வைகு மெப்பெயர்ப் பதியு மெய்தும்
ஒப்பிலுற் பாத மெல்லா மொருவரி னொருவர் கூறி
மெய்ப்படு தீக்க ளவும் வேறுவே றாகக் கண்டு
செப்புவான் புறத்து ளோருந் தென்னவன் மதுரை சேர்ந்தார். ௬௩௫

(இ - ள்) இப்படி...கூறி - இவ்வாறு அமணர்கள் தங்கும் எவ்வகைப்பட்ட பெயர் களையுடைய பதிகளிலும் பொருந்திய ஒப்பில்லாத துன்னிமித்தங்களை யெல்லாம் ஒரு வருக்கொருவர் சொல்லிக்கொண்டு; மெய்ப்படு...செப்புவான் - பலிக்கக்கூடிய தீயவைகளுக்களும் வேறு வேறாகக் கண்டு அவற்றையும் சொலலும் பொருட்டு; புறத்து

உள்ளோரும்...சேர்ந்தார் - வெளியே உள்ளவர்களும் பாண்டியனது மதுரைமா நகரத்திற் சேர்ந்தனர்.

(வி - ரை) **உற்பாதம்** - துன்னிமித்தம்; மேலே கூறியவை; **மெய்ப்படு தீக்கனா** - கனவில் நிகழ்ந்தவை நனவில் மறந்து படுவனவும், பயன் குறியாதொழிவனவு முள்ளனவாதலின் அவற்றை நீக்குதற்கு மெய்ப்படுகனா என்றும், கனாக்களுள் நன்மையும் கலந்து பயப்பனவுளவாதலின் அவற்றை நீக்குதற்குத் தீக்கனா என்றும் கூறினார். பிறிதினியையு நீக்கிய விசேடணங்கள்,

**கண்டு** - கனவு நிலையில் கண்டு; **செப்புவான்** - சொல்லும் பொருட்டு; வானீற்று வினையெச்சம்;

**புறத்துளோரும் - சேர்ந்தார் - புறத்து** - மதுரைநகரின் புறத்து; யானைமலை முதலியவற்றினின்றும்; **புறத்துளோரும்** - என்ற உம்மை அகத்து - நகரத்து - உள்ளோர் அணைதலேயன்றி என இறந்தது தழுவிய எச்சவும்மை; புறத்துள்ளோர் கூடியபோது நகரத்துள்ளோர் கூடியமை கூறுமிலேயமையுமாதலின் அதனை வேறு எடுத்துக் கூறாராகி எச்சவும்மையாற் பெறவைத்தார் ஆசிரியர். மேல்வரும் பாட்டுப் பார்க்க;

**தீக்கனா** - இவை மேல் 2535 முதல் 2538 வரை நான்கு பாட்டுக்களிற் கூறுதல் காண்க. 635

அமணர்க்கு நிகழ்ந்த தீக்கனாக்கள்

2534. அந்நகர் தன்னில் வாழ்வார் புறம்புநின் றணைவார் கூடி
மன்னவன் றனக்குங் கூறி மருண்டவுள் ளத்த ராகித்
துன்னிய வழுக்கு மெய்யிற் றாசிலார் பலரு மீண்டி
"யின்னன கனவு கண்டே" மெனவெடுத் தியம்ப லுற்றார். ௬௩௬

2535. "சீர்மலி யசோகு தன்கீ ழிருந்தநந் தேவர் மேலே
வேரொடு சாய்ந்து வீழக் கண்டன; மதன்பின் னாக
ஏர்கொண்முக் குடையுந் தாமு மெழுந்துகை காறறிப் போக
வூருளோ ரோடிக் காணக் கண்டன;" மென்று ரைப்பார். ௬௩௭

2536 "குண்டிகை தகர்த்துப் பாயும் பீலியோர் குரத்தி யோடப்
பண்டிதர் பாழி நின்றுங் கழுதைமேற் படர்வார் தம்பின்
ஒண்டொடி யியக்கி யாரு முலையிட்டுப் புலம்பி யோடக்
கண்டன;" மென்று சொன்னார் கையறு கவலை யுற்றார்; ௬௩௮

2534. (இ - ள்) அந்நகர் .. கூறி - அந்நகரில் உள்ளோரும் வெளியினின்றும் அணைவார்களும் கூடி அரசனுக்கும் அறிவிப்பு அனுப்பிச்சென்று; மருண்ட....ஈண்டி - மருட்சி கொண்ட மனத்துடையவராகி அழுக்குப்படிந்த உடம்பில் அணியில்லாத அமணர் பலரும் நெருங்கிச் சேர்ந்து, "இன்னன...இயம்பலுற்றார் - இன்னின்ன கனாக்களைக் கண்டோம் என்று எடுத்துச் சொல்வார்களாகி, ௬௩௬

2535. (இ - ள்) "சீர்மலி...கண்டனம்" - சிறப்புடைய அசோகமரம் அதன் அடியில் அமர்ந்தருளிய நமது அருகக்கடவுளின் மேலே வேரோடு சாய்ந்து வீழக் கண்டோம்; அதன் பின்னாக...என்று உரைப்பார் - அதன் பின்னே, அழகிய முக்குடையும் தாமுமாக அத்தேவர் எழுந்து கைகளைத் தொங்கவிட்டுச் செல்லவும், அதனை

ஊரிலுள்ள சனங்கள் ஓடிச்சென்று காணவும் கண்டோம், என்று மேலும் சொல்வாராகி ; ௬௩௭

2536. (இ - ள்) குண்டிகை...ஓட - கமண்டலத்தை உடைத்துப் பாயினையும் கிழித்து ஒரு பெண் குரு ஓடவும் ; பண்டிதர்...தம்பின் - பண்டிதர்களாகிய சமண முனிவர்கள் தமது குகைகளினின்றும் கழுதைகளின் மேலேறிச் செல்வாராகவும், அவர்களின் பின்னே ; ஒண்டொடி...கண்டனம் - ஒள்ளியதொடிகளையணிந்த தவப் பெண்களும் அலையிட்டு அழுது ஓடவும் கண்டோம் ; என்று...உற்றார் - என்று கவலைகொண்டார்களாகிச் சொன்னார்கள்.

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன. ௬௩௮

2534. (வி - ரை) வாழ்வாரும் - நின்றாரும் கூடிச்சென்று என்க. உம்மைகள் விரிக்க ;

கூறி - சொல்லி விடுத்து முன்னே சென்று; கூறிவிடுத்து - என்பது; அவனிடம் அறிவித்த திறங்கள் மேற்கூறப்படுவன.

அழுக்குத்துன்னியமெய்யில் தூசுஇல்லார் - அழுக்குத்துன்னுதல் - பலநாட் குளியாது வெயிலின் நிறுதல் முதலிய வழக்குகளையுடைமையால் ஆவது ; "வேர் வந்துற மாசூர்தர" (தேவா) "கழுவாவுடலம்" (11-ம் திருமுறை - ஆளு - அந்) வெளிப்பட அழுக்குத்துன்னக் கண்டும் தூசுஇல்லையாக எண்ணும் மயக்கமுடையார் என்று இரட்டுற மொழிதலால் பிறிதொரு பொருளும் பட நின்ற நயம் காண்க. தூசு இல்லார் - ஆடையின்றி அமணேதிரிவார். இவை சமண குருமார் வழக்கு ;

"இன்னன கனவு கண்டோம்" என - மேல் இவ்விவ்வாறு என்று கூறுமாறு;

இயம்பலுற்றாராகி-உரைப்பாராய்க் (2535) கவலையுற்றாராய்ச் சொன்னார் (2536) என்று இம்மூன்று பாட்டுக்களையும் முடிவுபடுத்திக் கொள்க ;

மேல்வரும் பாட்டில் தமது குரவர் குரத்திகளுக்கும் வரக்கண்ட கேடாகிய நிலைகளைக் கூறினார் ; அதன் மேல்வரும் இரண்டு பாட்டுக்களினும் அக்கேடுகள்-அவ்விளைவுகள்-வரும் மூலமும் அதனால் மன்னவனுக்கு வரும் பயனும், தமக்கு நேரும் அழிவும் கண்டு கூறுகின்றார்கள் ; கலைஞானங்களில் தேர்ந்தாராதலின் இக்கனவுகள் தீமை பயந்தே விடுமென்றும் கண்டார்கள் (2539) ; இவற்றை முன்னறிவிப்புச் செய்தது சிவனது கருணைத்திறம் ; அவ்வாறறியச் செய்யினும், இவை தாம் சைவத்திற்குச் செய்த தீமைகளின் பயனாக வருவன என்று உணர்ந்து அவற்றினின்றும் நீங்கி உய்யும் வழியை இவர்கள் தேடித் தப்பியிருக்கலாம்; அது செய்யாது கெட்டனர் இவர்; செய்ய வொட்டாது தடுத்தது கன்ம நிலையும் ஆணவமல மறைப்புமாம் : கந்தபுராணத்தினுள் சிங்கமுகன் - பானுகோபன் - இரணியன் இவர்கள் அறிவித்தும், அறுமுகக்கடவுள் தாமே நேர் நின்று காட்டி அறிவித்தருளியும் கேளாது, கிளையுடன் வீழ்ந்த சூரபதுமன் வரலாற்றையும், அவை போலவரும் சரிதங்களின் உள்ளுறைகளையும் இங்கு வைத்துக்கூர்ந்து நோக்கிக்கொள்க. அறிவிக்க அறிதல் உயிர் இயல்பு, அறிவித்தாலும் அறியாமற் செய்தல் ஆணவ மலவலிமையும் கன்ம நிலையுமாம் என்பன ஞானசாத்திர உண்மைகள். 636

2535. (வி - ரை) சீர்மலி அசோகு...தேவர்-அருகக்கடவுள் அசோகமரத்தின் கீழ் இருப்பதாக வைத்து வணங்குதல் சமண சமய வழக்கு ;

அசோகு தேவர்மேல் வேரோடு சாய்ந்து வீழ்தல் - நிழல் தந்து அமர இடமும் தந்த மரம் அவர்மேல் சாய்ந்து வீழ்தல் அவரைப் பறறுக் கோடின்றிச்சாடி அகலச் செய்வதன் குறிப்பு ;

முக்குடை - அருகக்கடவுளது குடை; குடையும் தாழும் எழுந்து - குடையுடன் எழுந்து; கை நாற்றுதல் - மேலே உயர்த்தாது கையினைத் தொங்க விடுதல் அழிவுக் குறிப்பு; நாற்றுதல் - உதறுதல் எனறலுமாம்;

போக - இடப்பெயர்ச்சி குறித்தது; அதுவரை அங்கு அமர்ந்து ஆட்சிசெய்திருந்த தெய்வம் அவ்விடம் விட்டுப் பெயர உள்ள குறிப்பு:

ஊருளோர் ஓடிக் காண-தெய்வம் விரைந்தும பெயர்ந்தும போதும் நிலைக்குறிப்பு; ஊருளோர் காண என்றது பெயர்ந்து போகும் தெய்வத்தைப் பின்பற்றிச் செல்லாது ஊரவர் கண்டு கழித்தது தாம் அங்கே தங்கி முன்னை சமயம் பற்றுவர் என்ற குறிப்பு:

சீர்மலி - ஏர்கோள் - என்றமையால் முன்இருந்த அச்சிறும் ஏரும் தவிரும்படி என்றது குறிப்பு. 637

2536. (வி - ரை) குண்டிகை தகர்த்து - கையில மந்திரித்த நீருடைய குண்டிகை கொண்டிருத்தல சமண குருமார் வழக்கு. அதைத் தகர்த்தல் - அச்சமயப் பற்றுக்கோடு கைவிட்டமை குறிப்பு:

பாயும் பீறி - பாய் - மரவுரியும உடையாகக கொள்ளும தடுக்கும; பீறுதல் - கிழித்தெறிதல; தகர்த்துப் பீறி ஓடுதல் - தம சமயசசாரபுகளைத் தாமே விட்டு இடம் விட்டு நீங்குதல குறித்தது; "பாயக ளிழுப்பார் பறித்லையா"(தண்டியடிகள்-22).

குரத்தி - பெண்குரு: பெண் துறவி: குருவின மனைவி எனபாருமுண்டு:

பண்டிதர் - கலைவல்ல குருமார்; இவர் குருமார்களுள் ஆணமக்கள; பாழி - சமண குருமார் தங்கும் குகை; பாழிநின்றும் கழுதை மேற்படர்தல்-தமஇருக்கையை விட்டுத் தோலவியும பரிபவமும உற்று நீங்குதல; கழுதை - மூதேவியின் ஊர்தி; இழிபுக் குறிப்புமாம; "கழுதைமேல் வைத்து ஊர்வலஞ் செய்விப்போம்" என்று வஞ்சினங் கூறும நாட்டு வழக்கும காண்க.

இயக்கியார் - தவமகளிர்; இயக்கத் தேவதையுமாம். இயக்கர் - கானநூல் முதலிய விஞ்சை வல்லோர்; இப்பொருளில கழுதை மேற்படரும பண்டிதர்களின் பின்னே அவர்கள பசபபிப பரபபிய மயக்கக் கலைகளும் ஓடின என்பதாம; இயக்கி - தரும தேவதை என்பர் முன உரைகாரர்; அதன பொருத்தம் ஆராயக.

உளையிட்டுப் புலம்பி - உளையிடல் - தீயொலி செய்தல;

ஓட - ஓட - நீங்குதலின விரைவுக் குறிப்பு:

கவலையுற்றாராகிச் சொன்னார் - என்க. உற்றார் - உற்று - முற்றெச்சம; வினை முற்றாகவே கொண்டுரைப்பினுமிழுக்கிலலை; சொன்னார்; கவலையும் உற்றனர்:

கையறுகவலை - கையறும்படி நோவதனற் போதும கவலை; கையறுதல் - செயலறல்.

தம்மின் - படர்வார் - உழைவிட்டு - எனபனவும பாடங்கள. 638

2537. "கானிடை நட்ட மாடுங் கண்ணுதற் றொண்ட ரெல்லாம்
மீனவன் மதுரை தன்னின் மிரவிடக் கண்டோ" மென்பார்;
"கோனவன் றுனும் வெய்ய கொழுந்தழன் மூழ்கக் கண்டோம்;
ஆனபின் பெழவுங் கண்டோ; மதிசய மிதுவா" மென்பார்; ௬௩௯

2538. மழவிடை யிளங்கன் றென்று வருதுரங் கழகர் தன்னை
உழறிடச், சிதறி யோடி யொருவருந் தடுக்க வஞ்சி

விழவொரு புகலு மின்றி மேதினி தன்னை விட்டு
நிழலிலா மரங்க ளேறி நின்றிடக் கண்டோ மென்பார் ; ௬௪௦

2539. " ஆவதென் பாவி காளிக் கறுத்திற மடிகண் மார்க்கு
மேவிய தீங்கு தன்னை விளைப்பது திடமே !" யென்று
நேர்வுறு மனத்த ராகி நுகர்பெரும் பதமுங் கொள்ளார்
" யாவது செய" லென் றெண்ணி யிடருழன் றழுங்கி னார்கள். ௬௪௧

2537. (இ - ள்) கானிடை...என்பார் - சுடுகாட்டில் நடனம் ஆடுகின்ற கண்ணுதலையுடைய சிவனது தொண்டர்கள் எல்லாம் பாண்டியனது மதுரைமாநகரில் வந்து சேர்தலைக் கண்டோம் என்பார்கள் ; கோன் அவன்...கண்டோம்-அரசன்றானும் வெவ்விய கொடிய தீயினுள் மூழ்கக் கண்டோம் ; ஆனபின்பு எழவும் கண்டோம் - அவ்வாறு மூழ்கிய பின்னர் அதினின்றும் மேலே எழுந்திடவும் கண்டோம் ; அதிசயம் இது ஆம் என்பார் - இது அதிசயமாம் என்பார்கள் : ௬௩௯

2538. (இ - ள்) மழவிடை...சிதறி ஓடி - இளமையுடைய இடபக்கன்று ஒன்று வந்து நமது சங்கத்தைச் சுழல மிதித்துக் கலக்க அதனால் சிதறுண்டு ஓடி ; ஒருவரும் தடுக்க அஞ்சி - எவரும் அதனைத் தடுக்கப் பயந்து ; விழ ஒரு ..கண்டோம்-அபயம் வீழ்ந்து ஒளிக்க வேறு ஒரு புகலிடமும் இல்லாமல் பூமியைவிட்டு நிழலில்லாத மரங்களின்மேல் ஏறி நின்றிடவும் கண்டோம் ; என்பார் - என்று சொல்ல ; ௬௪௦

2539. (இ - ள்) ஆவதென் ? பாவிகாள் !...என்று - " பாவிகளே ! இதன் முடிவுதான் எதுவோ " இந்தக் கறுக்களின் விளைவு நம அடிகண்மார்களுக்குப் பொருந்திய தீங்கினை விளைப்பது உறுதியேயாம !" என்று துணிந்துகூறி ; நேர்வுறும்...கொள்ளார் - துன்பமுற்ற மனத்தையுடையவர்களாகி உண்ணத்தக்க உணவுகளையும் உண்ணாதவர்களாகி; யாவது...அழுங்கினார்கள்-யாது செய்வது என்று எண்ணமிட்டுத் துன்பமுற்று இவற்றைக் கேட்டவர்கள் வருந்தினார்கள் ; ௬௪௧

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிவுகொண்டன.

2537. (வி - ரை) கான் - சிவன் நடமாடும் சுடுகாடு.

" கானிடை...விரவிடக் கண்டோம் " - கண்ணுதல் தொண்டர்கள் மதுரையில் விரவிடாது சூழ்ச்சி செய்து அவர்கள் இருந்த இடத்தில் நாம் இருந்தோம்; இப்போது அந்நிலை மாறி நம்மை ஓடத்துரத்து அவர்கள் பழையபடி மதுரையில் வந்து பொருந்துதலைக் கண்டோம் - என்பது குறிப்பு. விரவிட - இதுவரை விரவாதிருந்தோர் விரவிட ; விரவுதல் - வந்து பொருந்துதல் ; மீனவனது மதுரை - என ஆறனுருபு விரிக்க ; கானிடை - ஆடும் என்றது சமணர் கூற்றாதலின் இழிவுக்குறிப்பும் பட நின்றது.

கோன்...எழவும் கண்டோம் - கோன் அவன் - அம்மீனவனாகிய மன்னவன் ; அவன் - மீனவன் மதுரை என்று சுட்டிய அவன் : கொழுந்தழல் மூழ்குதல்-பின் எழுதல் - கொடிய வெப்பு நோயினுட்படுதலும், பின் மீளுதலும் குறிப்பு : தீ மூழ்கி எழுதல் அமண்மாசு நீக்கிப் புனிதமாதற் குறிப்பும் பட நின்றது.

அதிசயம் - கொழுந்தழல் மூழ்கினோன் அழிந்துபடாது மீள எழுதல் அதிசயம் எனப்பட்டது ; " அதிசயங் கண்டாமே " (திருவா).

கொழுந்தழல் - மூழ்க - என்பனவும் பாடங்கள்.

2538. (வி - ரை) மழவிடை இளங்கன்று ஒன்று வந்து - மழ - இளம் - ஒரு பொருட் பன்மொழி; மிக்க இளமை குறித்தது; கன்று - என்பது அதனை மேலும் வலியுறுத்திற்று; விடைக்கன்று - ஆண் கன்று; விடை - ஆண்பால் என்ற குறிப்பளவில் நின்றது; சிவசம்பந்தமாகிய குறிப்புமாம்; ஒன்று - ஒப்பற்றது; வந்து - வெளியே நின்றும் போந்து; பிள்ளையாரது வருகைக் குறிப்பு.

உழலுதல் - சுற்றிச் சூழ்ந்து மிதித்துக் கலைத்தல்;

சிதறி ஓடுதல் - சிதைந்து விரைந்து நீங்குதல்;

விழ ஒரு புகலுமின்றி - விழ - அபயமபுக்கு ஒளிக்க என்ற பொருளில் வந்தது; அரசனது புகலிடம் இழப்பது குறிப்பு.

மேதினிதன்னை விட்டு - பூமியில் பற்றுக்கோடின்றி: நிலவுலக வாழ்வை நீத்து என்ற குறிப்புமபட நின்றது.

நிழலிலா மரங்கள் - கழுககோலகளின் குறிப்பு. இப்பாட்டிற் கூறப்பட்ட கனாத்திறம் பிள்ளையாருடன் சமணர் கூட்டம் வாது செய்து தோற்று ஒடிக்கழுவேறி முடிய நின்ற விளைவுகளைக் குறித்துணர்த்தல் காண்க;

என்பார் - என்பதும் பாடம். 640

2539. (வி - ரை) ஆவதேன்! - இவையெல்லாம் என்னாய் முடியுமோ? நம்மால் இதற்குத் தீர்வு செய்யலாவதென்னோ? என்ற குறிப்புமாம்.

பாவிகாள்! - இரங்குதலின் கண் வந்த குறிப்பு மொழி, "பாவியேன் கண்டவண்ணம் பரமனாகக் கடுத்ததென்னோ?" (818); இக்கொடுமையைத் தமது பாவநிலையின் மேல் சுமத்திக் கூறும் உலக வழக்குப் பற்றியது.

இக்கனாத்திறம்...திடமே - இதன் காரணமும் முடியுமெல்லையும் நம்மாலறியப் படாவிடினும் இஃதொன்று மட்டும் திடம்-உறுதி - என முடித்தனர்; கனாக்கள் அவர்களையும் அவர்களனைவரையுமே பற்றி நிற்றலால் இவ்வாறு முடித்தனர். ஏகாரம் தேற்றம்.

அடிகண்மார்க்கு மேவியதீங்கு தன்னை விளைப்பது-மேவிய தீங்காவது வரக்கடவதென்றறிவிக்கப்பட்ட தீமை, முன்கன்மத்தாற் பொருந்துவதாகிய என்ற குறிப்புமாம். அடிகண்மார் சீலமுடையராதலின் தீங்குவரக் கடவதன்று; ஆயின்முன்னை வினையால் வந்து மேவிய-பொருந்திய - என்பது குறிப்பு; மேவிய - என்று இறந்த காலத்தாற் கூறினார் உறுதி பற்றி; திடமே - உறுதியே:

நுகர் பெரும் பதம் - நண்பகலில் கொள்ளும் உணவு: சமணர் இரவுண்ணா மரபுடையராதலின் பகலுணவை நுகர்பெரும் பதமும் - என்றார்; உம்மை சிறப்பு; பதமும் கொள்ளாதிருத்தல் - மனவருத்தமும் கவலையும் காரணமாக வந்த நிலை. அவர் தமது சமயத்தில் வைத்த அன்பின் மிகுதி காட்டிற்று. பதம் - வீட்டுநிலை என்ற குறிப்புமாம். பதம் கொள்ளார் - வீட்டுநிலை கைக் கொள்ளார்

யாவது செயல்? - தீர்வாகச் செய்யத்தக்கது இன்னதென்றறிய மாட்டாது திகைத்த நிலை: 641

## அம்மையார்க்கும் அமைச்சனார்க்கும் நிகழும் நன்னிமித்தம்

2540. அவ்வகை யவர்க ளெல்லா மங்கிலை மையாக ளாகச்
சைவநன் மரபின் வந்த தடமயின் மடமென் சாயற்
பைவளர ரரவே ரலகுற் பாண்டிமா தேவி யார்க்கும்
மெய்வகை யமைச்ச னார்க்கும் விளங்குநன் னிமித்த மேன்மேல்.

(இ - ள்) அவ்வகை...ஆக - அவ்வகையில் அவ்வமணர்கள் எல்லாம் முன்கூறிய அந்த நிலைமையினையடைந்தவர்களாக; சைவ நன்மரபில்......அமைச்சனார்க்கும் - சைவத்தின் நன்மரபில் வழிவழிவந்த பெரிய மயில்போன்ற இளமையாகிய மெல்லிய சாயலையும் பையரவல்குலையு முடைய பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியம்மையாருக்கும் மெய்ம்மையுள் சிறந்த அமைச்சனாராகிய குலச்சிறையாருக்கும்; நன்னிமித்தம் மேன்மேல் விளங்கும்-நன்னிமித்தங்கள் பலவும் மேலும் மேலும் விளங்குவனவாயின.

(வி - ரை) அவ்வகை - அவர்கள் - அந்நிலைமையர்கள் - அகரம் இரண்டும் சேய்மைச் சுட்டுக்கள் இதுவரை அவர்கள் பாணின்ற நமது கருத்தை மீட்டு இனி இப்பக்கம் அணியவர்களாகிய அம்மையாரபால் திரும்பும் குறிப்புடையன. இவ்வாறே முன் " இந்நிலையவர்கள் "—" அந்நிலை யமணர் " (2529) என்றதும் ஆண்டுரைத்ததையும் பார்க்க. அந்நிலை - மையர்கள் எனப் பிரித்து, மையர்-அறிவினுள் இருள் கொண்டவர் என்ற குறிப்புமாம்.

சைவ நன்மரபில் வந்த...பாண்டிமாதேவியார்-மங்கையர்க்கரசியார்; இவ்வாறு அம்மையாரைப் போற்றிய திறம் அவர் பாதங்களிற் கொண்ட பேரன்பு மிகுதியையும், சமணத்தை விட்டுச் சைவத்திறத்திற் பேசப் புகுகின்றதனால் விளைந்த பெருமகிழ்ச்சியினையும் உள்ளக் கிளர்ச்சியினையும் உணர்த்திற்று; சைவத்தாபன நிலைபேசத் தொடங்குகின்ற இவ்விடத்து அதனைச் செய்து உதவிய அம்மையைப் போற்றும் தகுதியும் காண்க. " சைவத் துறையின் வழிவந்த குடிவளவர் " (1900)

மெய்வகை அமைச்சனார் - குலச்சிறையார்; ஒருபாற் கோடாது நாட்டுக்கும் அரசுக்கும் உறுதி தேடிய மெய்ம்மைத்திறம் போற்றப்பட்டது; அரசன் எவ்வழி நிற்பினும் தாம் உண்மைத்திறத்தினையே நாடிச் செய்தனர் என்பது; மெய்ம்மை-சத்தாந் தன்மை; அது அழிவில்லாத சிவநெறியின் தன்மை குறித்தது;

பையர .தேவி - பையர வல்குற் பாண்டிமா தேவி (தேவர்)

நன்னிமித்தம் மேன்மேல் விளங்கும் எனக; விளங்கும் - விளங்கின; விளங்கும் - பூதிசாதன விளக்கம் போற்றல் பெறாது ஒளிகுன்றியிருந்த நிலை நீங்கி விளங்க நின்றமை காட்டுதலின் விளங்கும் நல் நிமித்தம் - என்றார்; பழம்பெருஞ் சைவத்தின் பழம் பெருநிலை விளங்க வருவனவாதலின் இவை பொதுப்படக் கூறுவதன்றி இன்னவென்று விரிக்க வேண்டாவாயின.

அமணரெல்லாம் - என்பதும் பாடம். 642

2541. அளவிலா மகிழ்ச்சி காட்டு மரும்பெரு நிமித்த மெய்த
உளமகிழ் வுணருங் காலை யுலகெலா முய்ய வந்த
வளரொளி ஞான முண்டார் வந்தணைந் தருளும் வார்த்தை
கிளர்வுறு மோகை கூறி வந்தவர் மொழியக் கேட்டார். கூசங

(இ - ள்) அளவிலா...எய்த - அளவில்லாத பெருமகிழ்ச்சியினை முன்னறிவிப்பாகக் காட்டுகின்ற அரியபெரிய நிமித்தங்கள் வந்து பொருந்த; உளம்மகிழ்வு உணருங் காலை - உள்ளத்தில் மகிழ்ச்சியினை உணர்கின்ற அப்போது; உலகெலாம்...வார்த்தை- உலகெலாம் உய்யும்படி அவதரித்த ஒளி வளரும் ஞானத்தினை உண்டருளிய பிள்ளையார் வந்து சேர்ந்தருளும் நல்வார்த்தையினை; கிளர்வுறும்...கேட்டார் - கிளர்ச்சி பொருந்திய உவகைச் செய்தியை அறிவித்துக்கொண்டு வந்தவர்கள் சொல்லக் கேட்டார்கள் (அம்மையாரும் அமைச்சனாரும்).

(வி - ரை) அளவிலா மகிழ்ச்சி காட்டும் - நிமித்தம் - மகிழ்ச்சி - மகிழ்ச்சியைத் தரும் பின் நிகழ்ச்சியினை. காட்டும் - முன் அறிவிக்கும.

உளம்மகிழ்வு உணரும் காலை - மனத்தினுள் தானே எழுந்த மகிழ்ச்சியினை நுகர்ந்து கொண்டிருக்கும்போது ; நல்நிமித்தம் கண்டார் - மகிழ்வுகொண்டார் : அவ்வாறு மகிழ்வுகொண்ட அப்போதே - வார்த்தை கேட்டார் என்று இந்நன்னிமித்தங்கள் பயன்தந்த விரைவு கூறப்பட்டது :

உலகெலாம் - இறைவா இப்புராணத்துக்கு எடுத்துத் தந்தருளிய முதன் மங்கல மொழி ; அதனை ஆசிரியர் அருமை காட்ட அருமையாக வைத்தாண்ட சில இடங்களுள் இஃது ஒன்று ; " உலகெலா முய்ய வுறுகியாம பதிகம் " (பஞ்சாக்கரப்பதிகம்-ஏயர்கோ - 88). " அஞ்செழுத் தோதி யேறிஞருய்ய உலகெலாம " (2114) : பிள்ளையார் இனி உலகுய்யச் செய்தருளும சைவ விளக்கமாகிய அருளிப்பாடுகள் குறித்தன ;

ஒளி வளர்ஞானம் - என்க, சிவஞானம், ஒளி - உள்ளொளி ; ஒளி வளர்க்கும் ஞானமாவது சிவத்தன்மையை உள்ளே பெருகச்செய்யும என்றதாம " அலகில ஞானக் கடலி டைப்படு, மமிர்த யோகச் சிவவொ ளிப்புக, வடிய ரேழுக கருளினைச் செயும் " (திருநா - ஏகா்தச - 1. நமபியாண்டார் நமபி. 11-ம திருமுறை) ; " உள ளொளி பெருக்கி " (திருவாசகம) ; " ஒளிவளர் விளக்கே " (திருவிசைபபா)

வந்து அணைந்தருளும் வார்த்தை - மதுரையினை அணுக வந்தணைந்த செய்தி ; " மதுரைத் தொன்னகர் வந்தணைகின்றார " (2528) என்ற வரலாற்றுத் தொடர்ச்சியாதல் காண்க : 2529 முதல 2539 வரை கூறியவை யிடைப்பிறவரலாகப் பின்சரிதவினைவுகளைத் தொடர்புபடுத்திச் செலுத்திக்கொள்ளும் பொருட்டுக் கூறப்பட்டன.

வந்தவர் ஓகைகூறி - மொழிய என்க. வந்தவர் - பிள்ளையாருடன் வந்தவர்களுள் முன்னறிவிப்பாக வந்தவர் ; அம்மையாரும் அமைச்சனாரும் விடுக்கச்சென்று வந்தவர் என்றலுமாம் ; கண்டுவந்தவர்கள் எனறுலும பொருந்தும். ஓகை - உவகைச் சொல ; ஓகை கூறி மொழிதலாவது மகிழ்வு கூறும் தொடக்கத்துடன் கூறுதல் ;

கிளர்வுறும் ஓகை - உணர்வுட்கொண்ட மனமகிழ்ச்சி மேலே பொங்கிச் செயலாக எழும்படியான உவகைச் சொற்கள் , அவ்வாறு கிளர்வுறு நிலை வரும்பாட்டிற் கூறப்படுதல் காண்க ;

அணைந்தருளும் வார்த்தை கேட்டார்-முன்னர்த் திருமறைக்காடு சேர்ந்த நன்னிலை கேட்டார் (2503) ; இப்போது அதனைத் தொடர்ந்து மதுரையிலணைந்தருளும் வார்த்தை கேட்டார் என்று தொடர்புபடுத்திக் கூறிய நயம் காண்க.

அணைந்தருளும் - அணைந்து அருளைச் செய்யவுள்ள என்ற பொருளும் தந்து நின்றது.

கேட்டார் - மாதேவியாரும அமைச்சனாரும என்ற எழுவாய் அவாய்நிலையான் வந்தது.

ஓகை கூற - என்பதும் பாடம். 643

2542\. அம்மொழி விளம்பி னோர்க்கு வேண்டுவ வடைய நல்கி
மெய்ம்மையில் விளங்கு காதல் விருப்புறு வெள்ள மோங்கத்
தம்மையு மறியா வண்ணங் கைமிக்குத் தழைத்துப் பொங்கி
விம்மிய மகிழ்ச்சி கூர மேவிய சிறப்பின் மிக்கார். சுசச

(இ - ள்) அம்மொழி...நல்கி - அந்த மொழியைச் சொன்னவர்களுக்கு வேண்டுவனவற்றை நிரம்பக் கொடுத்து ; மெய்ம்மையில்...ஓங்க - மெய்ம்மையிலே விளங்கும்

பெரு விருப்பம் பொருந்திய காதலின் வெள்ளமானது மேலே பெருகி ஓங்கிட ; தம்மை யும்...கூர - தம்மையும் அறியாதபடி வரம்பு கடந்து பொங்கித்திரண்ட மகிழ்ச்சி பெருக ; மேவிய சிறப்பின் மிக்கார் - இவ்வாறு பொருந்திய சிறப்பினால் மிகுந்தவ ராயினர்.

(வி - ரை) மிக்கார் - முன்பாட்டிற் போலவே ஈண்டும் மாதேவியாரும் அமைச்சனாரும் என்ற எழுவாய் வருவித்துக்கொள்க ; உள்ளத்தில் மகிழ்வு பொங்க அதன் வயத்தினுள் அழுந்தித் தம்மையும் அறியாவண்ணம் நின்றாராதலின் இந்த இரண்டு செய்யுட்களினும் அவர்களைக் குறிக்கும் பெயர்களாகிய எழுவாய் மறைந்து நின்ற கவிநயம் காண்க.

மொழி விளம்பினோர்க்கு ..நல்கி - இது உலக வழக்கிலும் நிகழ்வது காண்க ; வேண்டுவ - அவர்கள் தம்பால் வேண்டுவன என்றும், தாம் வேண்டுவன் றறை என்றும், அவர்கள் எக்குறைபாடும் இன்றி நிரம்பியிருக்க வேண்டுவனவற்றை எல்லாம் என்றும் உரைக்க நின்றது ; அடைய - நிரம்ப ; அடையும்படி என்றலுமாம் , ஆளுடைய நம்பி கள் தமது நகருக்கு எழுந்தருளா நின்றார் என்று முன்னேயோடி அறிவிப்பப் "பொன ஞர் கிழியு மணிப்பூணும் காசும் தூசும் பொழிந்தளித்தார்" (வெள். சருக். 16) என்னும் வரலாறும், அவ்வாறு வரும் பிறவும் இங்கு நினைவு கூரத்தக்கன.

மெய்ம்மையில் விளங்கு - உண்மைத் தன்மையில் விளங்குதலாவது சத்தாகிய சிவநெறியில் விளங்குதல்.

விருப்புறுகாதல் வெள்ளம் - என்க ; வெள்ளம் - பெருக்கு என்ற பொருள் தந்து நின்றது ;

தம்மையும் அறியாவண்ணம் கைமிக்குத் ததும்பிப் பொங்கி - தம்மையே மறக்கும் நிலை வரும்படி வரம்பு கடந்து ஓங்கி ; கைமிகுதல் - வரம்பு கடந்து பெருகு தல் ; கைகூடுதல் - என்புழிப்போலக் கை - என்பது வேறுபொருளின்றி மிகுதிப் பொருள் தந்து நிற்பதோர் முன் னொட்டுமொழி ; விம்முதல் - வெளிப்படப் பெருகு தல் ; சிறப்பு - சீர்பெறும் தன்மை ; மிக்கார் - மிகுந்தாராயினார் ; ஆக்கச் சொல்வருவிக்க. 644

2543. மங்கையர்க் கரசி யார்பால் வந்தடி வணங்கி நின்ற
கொங்கலர் தெரிய லாராங் குலச்சிறை யாரை நோக்கி
" நங்கடம் பிரானு ராய ஞானபோ னகர்முன் பெய்தி
'யிங்கெழுந் தருள வுய்ந்தோ' மெனவெதிர் கொள்ளு" மென்றார்.

(இ - ள்) மங்கையர்க்கரசியார்பால்...நோக்கி - மங்கையர்க்கரசியம்மையார் தம் மிடம் வந்து அடிவணங்கி நின்ற மணமுடைய மாலையணிந்த குலச்சிறையாரை நோக்கி ; நங்கள் தம்...என்றார் - நமது பெருமானாராகிய ஞானபோனகரது திருமுன்பு சென்று சேர்ந்து 'இங்கு எழுந்தருளியவதனால் நாங்கள் உய்திபெற்றோம்' என்று கூறி வரவேற்றுக்கொள்க என்று கூறினர்.

(வி - ரை) மங்கையர்க்கரசியார்பால் - அம்மையார் தம்மிடத்து ;

அடிவணங்கி நின்ற - அரசியாராதலின் மந்திரியார் அடிவணங்கி நின்று கேட்டல் மரபு ;

நங்கள்தம் பிரானுராய - நங்கள் - அரசரையும் மந்திரியாரையும் உளப்படுத்திக் கூறிய உளப்பாட்டுத் தன்மைப் பன்மை ; பிரானுர் ஆய - விண்ணப்பித்துக்கொண்ட தனை ஏற்றருளித் தலைமையை மேற்கொண்ட என்று குறிக்க ஆய-என ஆக்கச்சொல்

புணர்த்தியோதினார் ; திருவவதாரத்தின் தன்மையாலே நமது பிரானாராய் வந்தவா என்றலுமாம் ; "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க...அமுத" (1899) என்ற குறிப்புமபட நின்றது.

"இங்கெழுந்தருள உய்ந்தோம்" என - இது எதிர்கொள்ளும் முறை பற்றி அமமையார் தமது திருவுள்ளக் கருத்தைக் கூறியது ; எழுந்தருள - எழுந்தருளப் பெற்றதனால் ; எழுந்தருளுவதனால் எனக் காரணப் பொருளில் வந்த வினையெச்சம்.

உய்ந்தோம் - இறந்த காலம் உறுதியும் விரைவும் குறித்தது. என - என்ற கருத்துடன் நலவரவு கூறி ; இக்கருத்தையே அமைச்சர் பெருமானார் பின்னர்ப் பிள்ளையார் திருமுன்பு தமது முறையால் விரித்துக்கூறிய நிலை கண்டுகொள்க ; இன்றெழுந்தருளப் பெற்றபே றிதனால் நிறைத்தக்க திருவருளுடையோம் - நற்றமிழ் வேந்தனும் உய்ந்து - மேன்மையும் படைத்தனம் (2557) என்ற அருமையான திருப்பாட்டின் கருத்துக்களை இங்கு வைத்துக் காண்க : 645

2544. மன்றலங் குழலி னாரை வணங்கிப்போந் தமைச்ச னாரும்
வென்றிவே லரச னுக்கு முறுதியே யெனவி ரைந்து
பொன்றிகழ் மாட வீதி மதுரையின் புறத்துப் போகி
யின்றமிழ் மறைதந் தாரை யெதிர்கோள வெய்துங் காலை ௬௪௬

2545. அம்புய மலராள் போல்வா "ராலவா யமர்ந்தார் தம்மைக்
கும்பிட வேண்டு" மென்று கோற்றவன் றனக்குங் கூறித்
தம்பரி சனங்கள் சூழத் தனித்தடை யோடுஞ் சென்று
நம்பரை வணங்கித் தாமு நல்வர வேற்று நின்றார். ௬௪௭

2544. (இ - ள்) மன்றலம்...போந்து - மணம்பொருந்திய கூந்தலினையுடைய மங்கையர்க்கரசியம்மையாரை வணங்கிச்சென்று ; வென்றி என - வெற்றிவேலேந்திய மன்னவனுக்கும் இச்செயல் உறுதி பயப்பதாகும் என்று உட்கொண்டு ; விரைந்து...போகி - பொன் வேலைப்பாடுகள் பொருந்திய விளங்கும் மாடங்களையுடைய திருவீதிகளின் புறத்தில் விரைந்துசென்று ; இன்தமிழ் ...காலை - இனிய தமிழினால் வேதங்களை அருளிச்செய்து தந்த பிள்ளையாரை எதிர்கொள்ளும் பொருட்டுச் சேர்கின்றபோது, ௬௪௬

2545. (இ - ள்) அம்புயமலராள் போல்வார் - தாமரை மலரில் வீற்றிருப்பவள் போல்பவராகிய மங்கையர்க்கரசியம்மையார் ; ஆலவாயமர்ந்தார் தம்மை...கூறி - திருவாலவாயுடைய பெருமானைத் தாம் சென்று கும்பிடவேண்டுமென்று அரசனுக்கும் கூறி, தம் பரிசனங்கள் ...சென்று - தமது பரிசனங்கள் சூழ்ந்துவரத் தனித்த காவலுடனே சென்று ; நம்பரை வணங்கி - திருவாலவாயுடைய பெருமானாரை வணங்கி; தாமும்... நின்றார் - தாமும் பிள்ளையாரை நலவரவேற்கும் முகத்தால் நின்றனர்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிவுகொண்டன. ௬௪௭

2544. (வி - ரை) வணங்கிப்போந்து - அரசியாரது கட்டளையை மேற்கொண்டு அதனைச் செய்துமுடித்தற் பொருட்டு விடைபெற்றுக்கொள்ளும் வகையால் வணங்கிச் சென்றனர் ; போந்து - அரண்மனையினின்றும் புறம்போந்து ;

போந்து - விரைந்து-போகி-எய்தும் - என்று கூட்டி முடிக்க. வென்றிவேல் அரசனுக்கும் உறுதியே என - அச்செயல் அரசியின் கட்டளையை நிறைவேற்றும்

வகையாலே செய்தக்க தொன்றுவதன்றி, அரசனுக்கும் உறுதிபயக்கத் தக்கதாத லின் அக்காரணத்தாலும் செய்தக்கதாம் என்பது; என்னை? அரசனது நேர்முகமான ஆணைபெறாது செல்கின்றாராதலின், அது தகுதியாமோ எனமெண்ண வந்து, அரச னுக்கு எவ்வாற்றானும் உறுதிதேடுதல் அமைச்சர் கடனாகலான அவ்வகையாலும் இது செய்தக்க தொன்றெனத் துணிந்தனர் எனக.

**பொன்திகழ் மாடவீதி மதுரையின் புறத்து** - பொன்திகழ்மாடம் -பொன்னாற் செய்த அணிவகைகளை உடைய மாடங்கள்; இவை சிகரம் - பித்திகை முதலாயின; **மதுரையின் புறத்துப்போகி** - நகரின்புறத்துச் சென்று வரவேற்று எதிர்கொள்வது முறையாதலின் இவ்வாறு நகரினை நீங்கி வெளியே சென்றருளினர்; நகரப்புறத்தில் மதில்கள் சூழ்ந்த நகரம் தூரத்தே தோன்றக்கூடிய அளவு சென்றனர் என்பது "தருவள விளம்பித தலையளித் தருளும்ப பொழுதில், ஓங்கெயில் புடைசூழ் மதுரை தோன்றுதலும" (2559) என மேல் உரைக்குமாற்றால் அறியப்படும்.

**இன் தமிழ் மறை தந்தார்** - பிள்ளையார்; மறையின் பொருளை இனிய தமிழிலே தந்தருளியவர் என்பது. அத் தமிழ் மறையே பின்னர் உய்தித்தர நின்றமையால் இத் தன்மையாற் கூறினார்.

**எதிர்கோள எய்தும் காலை** - எழும் ஓசை கேட்டுக—களிப்பினராகா (2552) என்பதுடன் முடிந்தது.

**அமைச்சனாரும் எய்தும் காலைத் தாமும் நல்வரவேற்று நின்றார்** - என இருவரது வரவேற்புச் செயல்களும் ஒன்றாக முடிவுபெற வைத்த நயமும் காணக;

**என நினைந்து - மறை சோற்றாரை** - என்பனவும் பாடங்கள். 646

2545. (வி - ரை) **அம்புயமலராள்** - துவாதசாந்த பெருவெளியில் 1000 இதழ்த் தாமரையின்மேல் வீற்றிருக்கும் உமையம்மையார். "பங்கயச் செல்வி பாண்டிமாதேவி" (தேவா). திருமகள் என்பாருமுண்டு;

**அம்புய மலராள் போல்வார்** - மங்கையர்க்கரசியார்; ஆலவாயமர்ந்தாரைக் கும்பிடுதலில் முதலில் நிற்பவர் உமையம்மையாராகிய கருத்தும் காணக; "கைலாய வாண! கௌரி நாயக! நின்னை வணங்கிப் பொன்னடி புகழ்ந்து, பெரும்பதம் பிழையா வரம்பல பெற்றோர், இமையா நெடுங்கண் ணுமையா ணங்கையும்" (திருவிடை - மும் - கோ-28 - பட்டின - 11-ம் திருமுறை); "அண்ண லாரதமை யருச்சனை புரிய வா தரித்தாள், பெண்ணி னல்லவ ளாகிய பெருந்தவக் கொழுந்து" (1128); முதலி யவை பார்க்க.

"**ஆலவாயமர்ந்தார் தம்மைக் கும்பிடவேண்டும்**" என்று **கொற்றவன் றனக் கும்கூறி**-இறைவரைத் திருக்கோயிலிற் சென்று கும்பிடும் நிலையினை மாதேவியார் அரச னுக்கும் கூறிச் சென்றார்; **கொற்றவன் தனக்கும்**-மன உடன்பாடில்லாத அரசனுக்கும் என்ற உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. "தாங்கள் - சைவ வாய்மை ஒழுக்கத்தி னின்ற தன்மை, பூங்கழற் செழியன் முன்பு புலப்படா வகைகொண் டுய்த்தார்" (2502) என முன்னர்க் கூறிய கருத்துக் காணக; அரசன் முன்பு புலப்படா வகை சைவ ஒழுக்கத்தினைக் கொண்டு உய்த்த அம்மையார் இங்குக் கொற்றவனறனக்கும் கூறிக் கோயிலுக்குச் சென்றனர் என்பது முன் கூறமொடு முரணாதோ? என்னின முரணாது; ஆண்டு. முன் (2502)ல் உரைத்ததனை பார்க்க; அந்நாளில் சமண்மிக்கு, அரசனும் அந்நெறிச் சார்பு தன்னை அறமென நினைந்து நிற்பச் சைவ வைதிக நன்னெறி திரிந்து மாறி நடந்தது என்ற மட்டில் நாட்டின் நிலை போந்ததே யன்றிச், சைவம் முற்றும் மறைந்துபோக வில்லை; ஆலவாயுடையார் கோயில் பணிகளும் அந்நிலைக்

கேற்றபடி நிகழ்ந்தனவேயன்றி மறைக்கப்படவில்லை ; தொண்டர்களும் பலர் இருந் தனர் ; வழிபாடுகளும் அருகியேனும் நிகழ்ந்து வந்தன ; 2573 பார்க்க ; தேவியார் திருக்கோயிலுக்குச் சென்று அவ்வப்போது வழிபடுதலையும் கோயிற் பணிகளையும் அரசன் முற்றும் மறுத்தானல்லன் ; இவ்வாறாருவெல்லாம் மாதேவியார் கொற்றவன் றனக்கும் கூறிச் சென்றமை முன் கூறாேடு முரணாது அமையுமெனக ; அற்றேல் அஃதாக, மாதேவியார் கூறிச சென்றமையும், அதற்குக கொற்றவன மாறாது இசைந்தமை யாதோ ? எனின், அஃது அவன மன நிலை ; முன் விரிததவாறு முற் றும் மாறியொழியாமையானும் திருவருட்டுணையானும அமைவுடைததாயிற றெனக. பின் சரித விளைவுகளும கருதுக.

**தம் பரிசனங்கள் சூழத் தனித்தடையோடும் சென்று-தம் பரிசனங்களாவார்** - மாதேவியாரககுரிய அநதபபுரததுத தனிப பரிசனஙகள ; இவர்கள் பெரும்பாலமை பெணகளாவார். **தனித் தடை** - தனியாக அமைநத திரை வீழதத சிவிகையும் காவ லாளரும் முதலாயின அமைபபுகள ; 2758 பாாகக ; அரண்மனையின் புறததே செல் லும்போது அரச மாதேவிமாாகள இவ்வாறு செலவது முனனுள வழக்கு. **தடை** - காவல் ; பிறாது நோக்கம் - செயல முதலியவை செலலாவகை தடுககும் அமைபபுக்க ளாதலின் காவல் - தடை எனபபடடது ; “ தடைபல புக்க பின்பு தனிததடை நின்ற தததன் ” (475)

**நம்பரை வணங்கி** - திருவாலவாயுடைய இறைவரைக் கும்பிட்ட பினனர் ; அரசனுககுச சொல்லிப போநததும உணமையே என்ற குறிப்பு : **வணங்குதல்** - பிள்ளையாரைத் தநதருளியதன் பொருட்டு நன்றி; பின்னர் அரசனும இக்கருததேபற்றித் துதித்தல் காண்க. (2766)

**நம்பரை** - திருஞான சம்பநதரை எனறுரைததாருமுணடு. அது பொருந்தாமை யறிக.

**தாமும்** - மநதிரியாா வரவேற்றலுடன் தாமும் என உம்மை இறநதது தழுவிய எச்சவும்மை.

**தனக்குக் கூறி** - எனபதும பாடம் 647

வேறு

2546. திருநிலவு மணிமுத்தின் சிவிகையின்மேற சேவிதது
வருநிலவு தருமதிபோல் வளரொளிவெண் குடைநிழற்றப்,
பெருகொளிய திருநீற்றுத் தொண்டர்குழாம் பெருகிவர
அருள்பெருக வருஞானத் தமுதுண்டா ரணைகின்றார் ; ௬௪அ

பிள்ளையார் மதுரையை அணைதல்

(இ - ள்) திருநிலவு...குடை நிழறற - சிவனது அருட் செல்வம் பொருந்திய அழகிய முததுச சிவிகையின மேலே நின்று சேவிததுககொணடு வருகின்ற நிலவு பொழியும் மதிபோல வளரும ஒளியினை உடைய முதது வெண்குடை நிழலைச செய்ய வும் ; பெருகொளிய...வர - பெருகும் ஒளியினையுடைய திருநீறறுத தொண்டர் கூட்டம் பெருகிச சூழநது வரவும ; அருள்பெருக...அணைகின்றாா - திரு அருள் பெரு கும்படி வநதவதரிதத சிவஞானத தமுதுணட பிளளையாா மதுரையினை வநதணைகின்று ராயினாா.

(வி - ரை) இபபாட்டு “மதுரைத தொன்னகர் வநதணைகின்றாா” (2528) என்று முன்கூறி விடுத்த இடததின் தொடாச்சி ; செய்யுள் யாபபும் அதுவே யாகித தொடர்பு

பட முன் கிறுத்திய கொச்சகக் கலிப்பாவினாலே மீண்டும் யாத்த நயமும் காண்க. இடைப்பட்ட எல்லாம் வேறாகிய அறுசீர் விருத்தமாதலும் காண்க.

**திருநிலவு** - திரு - சிவனது அருட்பெருகும் திரு; சிவனருளால் வந்த திரு; **மணி** - அழகிய; மணியாகிய என்றலுமாம்.

**சிவிகையின்மேற் சேவித்து வரும் மதிபோல் - குடைநிழற்ற** - சிவிகையின் மேல் கவித்த முத்துக்குடை ஒரு மதிபோல் நிருந்தது; மதி அங்கு நிற்கும் இயைபு என்னை? எனின் மதியாதலின் மேனின்று சேவித்தது போல நின்றது என்பதாம்; குடைக்கு மதி மெய்பற்றி வந்த உவமம்; சேவித்து வரும் மதி என்றது தற்குறிப் பேற்றம்; மதிமுதல வானவர் பிள்ளையாரைச் சேவித்து வரத்தக்கார் என்பதும் உட்குறிப்பு; 137, 1395; வெள் - சருக் - 34 முதலியவை பார்க்க. "சதுரானனனுஞ் சகராயுதனும், சந்தராதவரும் இந்த்ராதியரும், மதுரா புரிவா தறிவா மெனமேல் வரவந் தனன் வைதிக வாரணமே" (தக்கயா); மதி - பாண்டியர் குல முதலவன் என்பதும் குறிப்பு.

**பெருகுஒளிய திருநீறு** - இதுவரை "பூதி சாதன விளக்கம் போற்றல் பெறு தொழிந்த" நிலை மாறி, இனி அத்திருநீற்றின் ஒளி பாண்டிய நாட்டிற் பெருக நிகழ் வது குறிப்பு; ஏனைய ஒளிகள் யாவும் குறைந்தொழிய, அவ்வாறு குறைந்தழியாது நித்தமாய்ப் பெருகும் ஒளியாகிய திருநீறு என்ற கருத்தும் காண்க; ஞானம் பெருகும் ஒளி என்றலும் ஆம்.

**பெருகிவர** - அங்கங்கும் தொண்டர் கூட்டம் வந்து சார்ந்து பெருக. இனிப் பாண்டி நாட்டிற் பெருகி வரும்படி என்றலுமாம்.

**வளரொளி வெண்குடை போல் நிழற்ற** - அமுதத்தின் ஒளியே போலப் பெரு கொளிய திருநீற்றுத் தொண்டர் குழாம் புடைசூழ என்ற நயமும் காண்க; வெண் ணீற்றொளி போற்றி நின்று" (2114) என்ற கருத்தைச் சிந்திக்க.

**அருள்பெருக - அமுதுண்டார்** - உலகில் சிவனருள் பெருகும்படி தாம் அமுதுண் டவர்; ஏனையோர் அமுதுண்டால் அது அவ்வவர்க்கே சில நலந் தந்தொழிய இவர் அமுதுண்டமை உலகில் யாவர்க்கும் சிவனருள் பெருகச் செய்தது; "திருத்தோணி யமர்ந்த பிரானருள் பெருக" (1923); "தாவில்சரா சரங்களெல்லாஞ், சிவம் பெருக் கும் பிள்ளையார்" (1924)

**வரும்** - உலகில் வந்தவதரித்த; **அருள்பெருக வரும்** - சிவனருள் பெருகிய பாண்டி நாட்டில் நிகழும் பொருட்டுவரும் என்ற குறிப்பும் காண்க.

**வளர்ஞானத்தமுது**—என்பதும் பாடம். 648

**2547.** துந்துபிகண் முதலாய தூரியங்கள் கிளராமே
அந்தணரா மாதவர்க ளாயிரமா மறையெடுப்ப,
வந்தெழுமங் கலநாத மாதிரமுட் படமுழங்கச்
செந்தமிழ்மா ருதமெதிர்கொண் டெம்மருங்குஞ் சேவிப்ப, கூசகூ

**2548.** பண்ணியவஞ் சனைத்தவத்தாற் பஞ்சவனாட் டிடைப்பரந்த
எண்ணிலமண் ணெனும்பாவ விருஞ்சேனை யிரிந்தோட
மண்ணுலகை மேயன்றி வானுலகுஞ் செய்தபெரும்
புண்ணியத்தின் படையெழுச்சி போலெய்தும் பொலிவெய்த, கூருo

2549. துன்னுமுழு வுடற்றுகளாற் சூழுமுணர் வினிற்றுகளால்
அன்னெறியிற் செறிந்தடர்ந்த வமண்மாசு கழுவுதற்கு
மன்னியொளிர் வெண்மையினாற் றூய்மையினால் வழுதியர்தங்
கன்னிநாட் டிடைக்கங்கை யணைந்ததெனுங் கவின்காட்ட, ௯௫௧

2550. பானல்வயற் றமிழ்நாடு பழிநாடும் படிபரந்த
மானமிலா வமணென்னும் வல்லிருள்போய் மாய்வதனுக்
கானபெரு கொளிப்பரப்பா லண்டமெலாங் கொண்டதொரு
ஞானமணி விளக்கெழுந்து வருவதெனை நலம்படைப்ப, ௯௫௨

2551. புரசைவயக் கடகளிற்றுப் பூழியர்வண் டமிழ்நாட்டுத்
தரைசெய்தவப் பயன்விளங்கச் சைவநெறி தழைத்தோங்க
வுரைசெய்திருப் பேர்பலவு மூதுமணிச் சின்னமெலாம்
“பரசமய கோளரிவந் தா”னென்று பணிமாற, ௯௫௩

வேறு

2552. இப்பரிசங் கணையுஞ் சண்பையர் பெருமா னெழுந்தருளும்பொழு திசைகளும்
ஒப்பினித் திலப்பொற் றனிப்பெருங்காளமுலத் தய்ய வொலித்தெழ மோகை
செப்பரும் பெருமைக் குலச்சிறை யார்தஞ் செவிநிறை யமுதெனத்தேக்க
அப்பொழு தறிந்து தலத்தின்மேற் பணிந்தே யளப்பருங் களிப்பினரானார். ௯௫௪

2547. (இ-ள்) தந்துபிகள் ...மறை யெடுப்ப-துந்துபி முதலாகிய வாத்தியங்களின் ஓசை மேலெழாமல் அந்தணர்களாகிய மறை முனிவர்கள் அனந்தமாகிய வேதங்களை எடுத்தியம்பவும்; வந்தெழும் ..முழங்க - வந்து எழுகின்ற மங்கல நாதங்கள் எல்லாத் திசைகளும் உட்பட முழங்கவும்; செந்தமிழ்...சேவிப்ப - செந்தமிழுடன் பொருந்தி வரும் தென்றற் காற்றும் எதிர்கொண்டு வரவேற்று எப்பக்கமும் சேவிப்பவும், ௯௪௧

2548. (இ-ள்) பண்ணிய...பரந்த-செய்த வஞ்சனை பொருந்திய தவம் முனைனிலையாகப் பாண்டிய நாட்டில் பரவிய; எண்ணில...இரிந்தோட - எண்ணில்லாத சமணம் என்னும் பாவமாகிய பெரிய சேனை உடைந்து ஓடும்படியாக; மண்ணுலகமே யன்றி... செய்த - இங்கிலவுலகமே யல்லாமல் விண்ணுலகமும் கூடச் செய்ததாகிய; பெரும்... பொலிவெய்த - பெரிய புண்ணியமாகிய படை எழுச்சி போலப் பொருந்திய பொலிவு உண்டாகவும்; ௯௫௦

2549. (இ-ள்) துன்னும...துகளால் - நெருங்கிப் பொருந்தி முழுவுடலில் உள்ள அழுக்கினாலும், தீய சூழ்ச்சியை உடைய உணர்வின் மாசினாலும்; அல்நெறியில்...கழுவுதற்கு - நெறியல்லா நெறியில் முழுதும் சேர்ந்த சமணம் என்னும் அழுக்கினைக் கழுவிப் போக்கித் தூய்மையாக்குதற்காக; மன்னியொளிர்...தூய்மையினால் - நிலைபெற்று விளங்கும் வெண்மையினாலும் தூய தன்மையினாலும்; கங்கை - கங்கை நதியே; வழுதியர் ..இடை - பாண்டியரது கன்னி நாட்டிலே; அணைந்தது எனும் கவின் காட்ட - வந்து சேர்ந்தது போன்ற அழகினை எடுத்துக் காட்டவும்; ௯௫௧

2550. (இ-ள்) பானல...பரந்த - கருங்குவளை மலர்களையுடைய வயல்கள் சூழ்ந்த தமிழ் நாடானது பழியைச் சேரும்படி அங்குப் பரவிச் சூழ்ந்த; மானமிலா... மாய்வதனுக்கு - மானமில்லாத அமணர் என்னும் வலிய இருளானது கெட்டுப்போய்

மாய்ந்தொழிவதறகாக ; ஆனபெருகு...நலமபடைப்ப - ஆயின பெருகிய ஒளியின் பரப்பினாலே எல்லா அணடஙகளையும் தனது நிறைவினுள் அடககிக் கொணடதாகிய ; ஒப்பற்றதொரு ஞானமணிவிளககு எழுந்தவருவதுபோலும் நனமையைச செயயவும்,

2551. (இ - ள்) புரசை ..பயன்விளங்க - கழுத்துக் கயிறறையும் வெறறியினையும் உடைய மதமபொருந்திய யானைகளையுடைய பாணடியாகளது தமிழ் நாட்டின நிலமசெயத தவத்தின் பயன் விளஙகவும் ; சைவநெறி தழைத்தோஙக - சைவநெறி தழைததோஙகும் பொருட்டும் ; உரைசெய்...பணிமாற - எடுததுச் சொல்லும் திருப்பெயாகள் பலவறறையும் ஊதுகின்ற முததுச சினனங்கள் யாவும் "பரசமய கோளரி வந்தான்" என்று பணிமாறவும ; ௬௫௫

2552. (இ-ள்) இபபரிசு...எழுநதருளுமபொழுது-இவவாறுகிய பரிசுகளுடன அணைகின்ற சீகாழித தலைவா எழுநதருளிவரும அபபொழுது ; இசைககும...ஓசை - இசைககின்ற ஒப்பிலலாத முததுககளாலாகிய அழகிய தனிககாளமானவை உலகமுயய எடுததுச் சொல்லுதலால் எழுகினற ஓசையானது;செபபரும ..தேகக-சொலலுதற்கரிதாகிய பெருமையுடைய குலசசிறை நாயனாரது திருசசெவிகளில நிறையும அமுதம போலப பெருகியிட ; அபபொழுது...ஆனூா - அபபொழுது அறிநது நிலததின்மேல் மேனிபட வீழ்ந்து பணிநதே அளததறகரிய மகிழ்சசியையுடையவராயினா. ௬௫௬

இநத ஆறு பாட்டுகளும ஒரு பொருள்மேல வநது தொடாநது ஒரு பொருள் கொணடுரைகக நினறன.

2547. (வி - ரை) தூரியங்கள் கிளராமே மறை எடுப்ப - தூரியங்கள் - மங்கலம் முழக்கும் பல வகைப் பெருவாத்தியஙகள ; கிளராமே-ஓசை மேலோஙகாதபடி; உச்சசுரத்தில் மறை முழக்குதலால் தூரியஙகளின் ஓசை கீழ்பபட்டன என்பதாம்; ஆயிரம் மாமறைகள் - ஆயிரம் - மிகுதி குறிததது ; தூரியஙகள் கிளராமைக்குக் காரணம் காட்டியபடி ; எடுப்ப - இனி அநநாட்டில எடுக்கும்பொருட்டு என்ற குறிப்பும், மறையொலியின் மிகுதிக் குறிபபுமாம்.

மங்கல நாதம் - மஙகல ஓசை முழககும சஙகு, முரசம முதலியவறறின் நாதங்கள் ; மாதிரம் - திககுக்கள ; உட்படுதல் - நாததத்தின் பரபபினால் திக்குககளும் அதனுட்படும்படி விரிநது செல்லுதல் ;

செந்தமிழ்மாருதம் எம்மருங்கும் சேவிப்ப - செந்தமிழ் மாருதம் - செந்தமிழுடன் பொருந்தி வருகினற தென்றல ; தமிழுடன பொருநதுதலாவது - செந்தமிழ் முனிவனது இருககையாகிய பொதிகையின்றும் பிறநது வருதல். "பிறநத தெங்கள் பிரான் மலயததிடை...மறம பயினறசெத கோதமிழ் மாருதம்" (313) என்றதும் ஆண்டுரைததவையும் பார்கக ; தமிழ் மலையிற பிறந்து தமிழ நாட்டிற பயின்று தமிழுடன் விரவிவருதலால் செந்தமிழ் ஞானசமபநதரைச சேவிகக வந்தது என்ற நயமும் காண்க ; செந்தமிழ ஞானததமிழைச் சேவிததல் முறையாதலும் குறிபபு.

எம்மருங்கும் - மாருதம் தென்றற காறறுகலின் தெற்கு நின்று வடககு நோக்கிப் பின்னையாரையும் உடன்வரும் நற்றவர் கூட்டததையும எல்லாப் பக்கமும் சூழ்ந்து கொண்டு சேவித்தது. மாருதம் - பாண்டி நாட்டுக குரித்தாதலும் குறிபபு.

எதிர் கொண்டு - எதிர் வரவேற்றல்போல ; மாருதம் எதிர் கொண்டு சேவிப்ப என்றது தற்குறிப்பேற்றம். எதிர் கொள்ளுதல் - வடக்கினின்றும் தெற்கு நோக்கி மதுரைக்கு வருவாரைத, தெற்கினின்றும் வடக்கு நோக்கிச் சென்று சூழும் நிலை உண்மையில் எதிர் கொண்டதாம் என்க.

2548. (வி - ரை) பண்ணியவஞ்சனைத்தவத்தால் - பாந்த - பாண்டி நாட்டிற் சமணம் பரவுதற்குச் சமணர் செய்யும் வஞ்சச் சூழ்ச்சியாகிய போலித்தவம் ஒரு காரணமாயிற்று என்பது; "கொல்லாமை மறைந்துறையு மமண்சமயம் குறுகுவார்" (1302); "தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து" (1312); வஞ்சனைத்தவமாவது உண்மையாயன்றிப் பிறரை வஞ்சித்தற் பொருட்டுத் தவவேடமும் செயலும் மேற்கொள்ளும் நிலை.

பாந்த - பாவமெனும்இருஞ்சேனை இரிந்து ஓட-புண்ணியத்தின் படையெழுச்சி-பாவச்சேனையை ஓட்டப் புண்ணியப் படை எழுந்து வரவேண்டுமென்ற நியதியினை உருவக முகத்தாற் குறித்தமை காண்க. "அண்டார்கள் டாள்வோரா மல்லற்படை வாராமே" என்ற திருவாசகம், திருப்படை யெழுச்சிப் பகுதியின் கருத்துக்களை இங்கு வைத்துக் காண்க.

அமண் - பாவ இருஞ்சேனையை ஓடச் செய்ய மண்ணுலகும் வானுலகும் கூடிச் செய்த பெரும்புண்ணியத்தின் படைஎழுச்சி என்றதனால் அமணர் செய்த பாவ வலிமை மண்ணுலகும் வானுலகும் செய்த பெரும் புண்ணிய ஈட்டத்தினாலன்றித் தொலைக்கலாகா அளவினது என்ற குறிப்பும் காண்க.

மண்ணும் விண்ணும் செய்த பெரும்புண்ணியமே திரண்டு பிள்ளையாராது வருகையின் எழுச்சியாகி வந்தது என்பதாம். இரண்டிடத்தினும் முறசெய் புண்ணியப் பயனாய்ப் பிள்ளையார் எழுந்தருளினார் என்பது கருத்து;

மண்ணுலகமேயன்றி வானுலகும் செய்த—"வாழ்க வந்தணர், வானவ ரானினம், வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக, ஆழ்க தீய தெல்லாமர னாமமே, சூழ்க வையக முந்துயர் தீர்கவே" (திருப்பாசுரம் - 1) என்று எழும் அருளாணையினால் மண்ணுலகமும் விண்ணுலகமும் தீமை நீங்கி யின்பவாழ்வு வாழ்வதற்கு இவ்வெழுச்சியே காரணமாய் நின்றமையால் மண்ணுலகோரும் விண்ணுலகோரும் செய்த புண்ணியப் பயனே இதுவென்றார்.

மண்ணும் விண்ணும் வாழ்வடைதல் பிள்ளையாரது அவ்வருளாணையினாலாவ தென்பது "உலக மின்புறச், சந்தவேள் விகண்முதலச் சங்கரர்க்கு முன், வந்தவர்ச் சனை வழிபாடு மன்ன" (புரா 821) என்றும், "வேள்வி நற்பயன் வீழ்புன லாவது, நாளு மாச்சனை நல்லுறுப் பாதலால், ஆளு மன்னனை வாழ்த்திய தாச்சனை, மூளு மற்றிவை காக்கு முறைமையால்" (புரா 822) என்றும், "ஆழ்க தீயதென் றோதிற் றய னெறி, வீழ்க வென்றது வேறெல்லா மரன் பெயர், சூழ்க வென்றது தொல்லுயிர் யாவையும், வாழி யஞ்செழுத் தோதி வளர்கவே" (823) என்றும், "சொன்ன வையக முந்துயர் தீர்கவே, யென்னு நீர்மை யிகபரத் திற்றுயர், மன்னி வாழுலகத்தவர் மாற்றிட முன்னார் ஞானசம்பந்தர் மொழிந்தனர்" (புரா 824) என்றும், "எங்களை வாழ முன்னோடு வைகையினி விட்டார்" (12 0)என்றும் அத்திருப்பாசுரத்தின் உள்ளுறையினை உலகங் கண்டுய்யும் பெருங்கருணையால் ஆசிரியர் விரிவுரையாற் கூறியருளிய வாற்றாலறிக.

பாவம் - ஓடச் செய்த புண்ணியத்தின் எழுச்சி - என்றது உயிர்கள் பல பிறவிகளில் செய்த முன்னைத் தவத்தின் புண்ணிய மேலீட்டினாலே தம் முதல்வனே குருவாய் எழுந்தருளி முன்னே வந்து "இதுவரை ஐம்புலவேடர்க்குட்பட்டு வளர்ந்து அயர்ந்தனிர்; இறைவனது பேரருள் பெறுந் தகுதியுடையீர் நீவிர்; அவன் தன்மையிது; அவனை அடையும் நெறியிது; "இனி இந்நெறியே சென்றங் கடைதும்மின்" என்றெல்லாம் காட்டியும் கூட்டியும் வாழ்விப்பன் என ஞானசாத்திரம் உபதேசிக்கும்

(போதம் - 8 சூ.) உண்மைகளை இங்குக் கருதிக்காண்க; பிள்ளையார் எழுந்தருளும் இச்சிலைமையினை; "வெம்பும் பிறவியிலே வீழாமல் வீடளித்த, சம்பந்த மாமுனியென் றம்பிரான் - அம்புவியோர், போற்றுந் திருவடி...வானேன் பவனி வரக் கண்டு வல்வினையேன், ஏனோரு மேதறுதலகண டேத்தினேன்—தானென்னைப், பார்த் தான் பழயவினைப் பஞ்சமலக் கொத்தைதயெலலா, நீததா னினைவுவே றாககினன்— எத்தரிய, தொண்ணூற் றறுவர்பயி றெக்கிற் றுவக்கறுத்தான், கண்ணூறு தேனமுதம காட்டினன்—வெண்ணீறும், வேடமும பூசையுமே மெய்யென்றான் பொயயென்றான், மாடையும் வாழக்கை மனையுமே—நாடரிய, வஞ்செழுததி, னுள்ளீ டறிவிததா னஞ் செழுததை, நெஞசழுததி நேய மயலாககி ..கிறைமேவி, வாழ்பவாபோன மண்ணுடம பில் மன்னுமுரோ மம்பறிததத, தாழவுகினை யாதுகி றனகற்றி. .யாழவிககு, மஞச மகற்று மதமுததி யெனறுரைககும், வஞ்சமனன் பாழி மருவாதே-செஞ்சொலபுனை, யாதிமறை யோதி யதனபயனென றமமறியா, வேதியாசொன மெய்யென்று மேவாதே-ஆதியினமே, லுறற திருநீறுஞ் சிவாலயமு முள்ளததுச், செறற புலயர்பாற் செல்லாதே - நறறவஞ்சேர், வேடமுடன் பூசையருன மெய்ஞ்ஞான மில்லாத, மூடரு டன் கூடி முயஙகாதே-நீட, வழித்துப பிறபப தறியா தானைப, பழிததுத திரிபவரைப பாராதே - விழிததருளைத், தநதெமமை யாணடருளுஞ சம்பந்த மாமுனிவன்......" என்று நெஞ்சுவிடு தூதினுள உமாபதி சிவாசாரியா அருளிச செயத கருததுக்களின் கணகொணடு கும்பிட இதன உளளுறையும் உணமைததிறமும தெறறெனவிளஙகும்;

2549. (வி - ரை) துன்னுமழ உடல்துகள் - முழுஉடலும் துன்னும தூகள என்க. இஙகுததுகள் என்றது அழுககு. இது உடல் கழுவாமையானும, "வோவங் கற மாசூர்தர வெயினின்றுழலு" தல, அடுபாறை கிடத்தல, சுடுபாறை கிடததல, பல தலக்காமை முதலிய சமணரது சமய வழக்கஙகளானுமாவது; "கழுவா வுடலம்" (11 - திருமுறை - ஆளு - அந் - 28)

சூழும் உணர்வினில் துகள்-சூழ்தல் - வஞ்சகச் சூழ்ச்சி புரிதல. சூழும் உணர்வு - வஞசனைகளை எண்ணும் அறிவு.

அல்நெறியிற் செறிந்து - அல்நெறியாவது நெறியல்லாத அவநெறிதன்னைத் தவ நெறியென்று கொணடு பிடிதது ஒழுகுதலால; செறிந்து அடைந்த - செறிதலால போநத; அல்நெறியில் செறிதல் - அவநெறியே கடைபபிடிதது விடாது பறறிப பரபபுதல; அல் - இருள என்று கொணடு, ஒளிககுமாறுகிய இருள நெறி எனறலும் குறிபபு.

அமண்மாசு கழுவுதற்குக்—கங்கை அணைந்ததேனும் - மாசு கழுவ நீா வேணடு மாதலின், இஙகு அமண சமயப பரபபை மாசு எனறுருவகித்ததற கேற்ப அதனைப போக்கும் பிள்ளையாரது வருகை எழுசசியினைக கங்கை எனறுருவகிததாா; மிகப பெரிய மாசு கழுவ மிகபபெரிய நீா வேணடப்படும் எனற குறிபபுமாம.

வெண்மையினுல் தூய்மையினுல் கங்கை யணைந்தது எனும் - பிளளையாரது வருகை எழுச்சிக்கும கங்கைககும பொதுததனமை இவை யிரணடினும் உள்ள வெண்மையும் தூய்மையுமாம்; வெண்மை திருநீற்றி னொளியாலும, தூய்மை-அகத தூய்மை-திருவைந்தெழுததாலும் ஆம; "மாசிலாத மணிதிகழ மேனிமேற் பூசுநீறு போலுள்ளும் புனிதர்கள" (141)

முழவுடற்றுகளும் உணர்வினிற்றுகளும் - "வடிவுபோல் மனதது மாசு துன்னிய வமணர்" (2660) என்பது போல உண்மாசும் புறமாசும் குறித்தலால் அவற்றை முறையே புறந்தூய்தாககும் வெண்மையாலும, அகந்தூய்தாக்கும் தூய்மையினாலும்

நிறைந்த பொருள் எழுந்து போந்து வந்தது என்றதாம். "உண்மாசு கழுவுவது நீறென்றே" (திருவிளை - புரா - விருத - படு).

**வெண்மையினால்** - தூய்மையினால் - **கங்கை, அணைந்தது** - கங்கை வெண்ணிற முடையது என்பது "நிறைகளி னூறலொடுத்த, தாடிய நீறது கங்கையுந் தெண்ணீர் யமுனையுமே, கூடிய கோப்பொடுத்த தாலுமை பாகமெங் கொற்றவற்கே" (பொன் - அந் - ௬௦) என்ற கழறிற்றறிவார் நாயனார் திருவாக்கானுமறிக; கங்கையின் தூய்மையாவது எத்துணை நாட்கள் வைத்திருப்பினும் தனது தன்மை கெடாது காட்டும் நிலையானும், தன்னுட் பெய்த பொருள்களையும் மூழ்கிய உயிர்களையும் தூய்மைப் படுத்தும் தன்மையாலும் அறியப்படும்; இதன் நீரினைப் பரிட்சித்தறிந்த மேற்றிசைப் பௌதிகநூல் விஞ்ஞானிகள் இந்நீரிலுள்ள ஒருவகை உயிர்ச்சத்து இருத்தலே அது கெடாதிருத்தற்குக் காரணமாமென்று ஆராய்ந்தறிகின்றனர்.

**மன்னி ஒளிர் வெண்மை** - திருநீற்றின் ஒளியாதலின் நிலைபெற்ற விளக்க முடைத்தென்றார், **மன்னிஒளிர்** என்பதனைத் தூய்மையுடனும் கூட்டுக.

**கன்னிநாட்டிடைக் கங்கை யணைதற்கியை** பென்னையோ! எனின் மாசுகழுவுதற்குப் போந்த தென்பது குறித்தார். இவ்வாறு கங்கை முதலிய பெருந்தீர்த்தங்கள் ஒவ்வோரிடங்களில் ஒவ்வொரு நிமித்தம் பற்றி ஓரோர் காலங்களிற் போதுவதுண்டென்பது நூல் வழக்குக்களானும், அனுபவத்தாலும் அறியப்பட்டவுண்மை; "பூமருவுங் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்தம், மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங்கோயில்" (2307) என்றும், "தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை சரசுவதி பொற்றாமரைபுட் கரணி தெண்ணீர்க், கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே," (தேவா - தாண்) என்றும் வரும் திருவாக்குக்களும், தில்லைப் பரமானந்த கூபத்திலுள்ள ஐப்பசி முன்பக்க நவமியில் கங்கை வருவதென்றும் அந்நாளில் எடுத்து வைத்த அத்தீர்த்த நீர் ஓராண்டளவு கெடாதிருக்கு மென்றும் உள்ள வழக்கும், திருக்குருகாவூரில் பாற்கிணறு எனும் தீர்த்தத்தில் தை அமாவாசையில் கங்கை அணைவதெனவும் வழக்கும் அன்று அந்நீர் பால் நிறமாக ஆகும் அற்புதமும் முதலியனவும் இங்கு வைத்துக் கருதற் பாலன.

**வழுதியர்** - என்ற பெயரால் குறித்தது அருஞானின்று வழுவியதனால் தீமை பெற்ற அரசன் மாசு கழுவித் தூயனாகவுள்ள குறிப்புப் பெற வைத்த சொன்னயம்; 651

2550. (வி - ரை) **தமிழ்நாடு பழி நாடும்படி** - தமிழ்நாடு தன் பெயருக்கேற்ப உய்தி தரும் தமிழினை நாடாது பழிபெறும் வினையை நாடும்படியாக என்றது குறிப்பு; **தமிழ்நாடும்** - என்று உயர்வுசிறப்பு உம்மை தந்து பாடங்கொள்வாரு முண்டு;

**மானமிலா அமணென்னும் வல்லிருள்** - **மானம்** - "எஞ்ஞான்றுந் தந்நிலையிற் றாழாமையும் தெய்வத்தாற் றாழ்வு வந்துழி யுயிர்வாழாமையுமாம்" என்பர் ஆசிரியர் பரிமேலழகர்; "பண்ணிய வஞ்சனைத்தவ" முடையாராதலானும், அரசுகளது சரிதம், பிள்ளையாரது சரிதம் முதலிய வரலாறுகளால் அறியப்படுமாறு அரசன்பால் வஞ்சனை செய்து சித்திரித்துப் பொய் முதலியவை சூழ்தலானும், தம நிலையாகிய கொல்லாமையை விடுத்துக் கொலை முதலிய மறங்களைச் செய்யத் துணியும் வரலாறுகளாலும், பிறவாற்றாலும் இவ்வமணர்கள் **மானமிலார்** என்று கூறப்பட்டனர்.

**வல்லிருள் போய் மாய்வதனுக்கு** - மாயை சாலவல்லவர்களாதலின் **வல்லிருள்** என்றார்.

**இருள்போய் மாய்தலாவது** - ஒளியின் முன் வலியிழந்து மறைந்து நிற்றல்; மாயாத இருள் (ஆணவமலம்) போலன்றி இது மாயும் இருள் என்றதாம்;

**ஆன** - ஆயின; ஆககமாவது திருவருள் வலிமையினால அததன்மைத்தாதல்; "என் உளமே புகுந்த வதனால்" "திரு வால வாயர னிறகவே"; "வாது செயத திருவுள்ளமே" "வாதில வென்றழிக்கத் திருவுளளமே" என்பனவாதி திருவாக் குக்களும வரலாறுகளும காண்க;

**பெருந...ஞானமணி விளக்கு** - ஒவவோர அண்டப பகுதிகளினும் ஒவ்வோர் இரவி - மதி - முதலாகிய ஒளிகள் புற இருளை நீககி அமைந்து நிற்கவும், சிவனது சிததாகிய ஞான வொளியொன்றே எலலா அணடங்களினும பரந்து அகவிருளை அரந்து பொய்நீக்கி மெய்யினைப புலபபடுததுவதாகலான அண்ட மேலாங் கொண் டது என்றும, ஒரு என்றும், ஞான விளக்கு எனறும கூறினா, மணி விளக்கு என் றது அநதச் சிவ சிததாகிய ஞானம் கட் புலபபடாது நிறைநது விளங்கவும், பிள்ளையா ராகிய இந்த ஞானவிளககுக கடபுலபபடுவதாய் எழுதல வருதல முதலிய செயல்களுக் கிலக்காய் மனங கவரும அழகு பொருநத வெளிபபடுதல் குறிததது.

**பெருகுஒளி** - மேலும் மேலும் பெருகும ஒளி;

**நலம் படைப்ப** - முனனாப போலிவெய்த (2548) எனறும, கவின் காட்ட (2549) எனறும கூறிய ஆசிரியா இருகு நலம் படைப்ப எனறார், முன் கூறிய பாவம் இரிதலும் மாசு கழுவுதலும சாதன நெறிகளின பின முதலில வரும பயன்களாகவும, இருள் போய் ஞானம் வருதல் முடிநத பயனாகவும் உளள நிலை குறிக்க; இருணீக்க மும் ஞான விளக்கமுமே உடனிகழ்வனவாய நிறைநத பெருநலமாதல் காண்க. 652

2551. (வி - ரை) **புரசை...பூழியர்** - இதுவரை தாழ்வு பொருநதிய அரசு இனி வெற்றிபெறறுயரவுள்ள நிலையின் குறிபபு.

**வண்தமிழ்** - தமிழ் இகபரமாகிய எலலாப பயனகளும தரும குறிபபு.

**தரைசெய் தவப் பயன்** - **தரை** - தரையில உள்ளோா - பாண்டி நாட்டாா; அந நிலமகள் செயத தவங காரணமாக அதில பிளளையாா எழுநதருளித தீணடப் பெற்றது எனற குறிபபுமாம்; "தருமேவு மலைமகளுஞ சலமகளு மறியாமற், றிருமேனி முழுதுநில மகடீண்டித திளைபபெயத" (திருவிளை-மணசும-பட - 28); **பயன் விளங்க** - முனனம ஒடுஙகி யிருநத பயன இபபோது வெளிபபடடு விளக்கமடைய;

**விளங்கச் சைவநெறி தழைத்தோங்க** - விளஙகுமபடி சைவம தழைதது ஓஙக என்றது சைவ நெறியினின்று தழைததலே தரையின் பயன எனறபடி;

**விளங்க - ஓங்க - வந்தான் - என்று பணிமாற** எனக கூட்டி உரைக்க.

**உரை செய்திருப்பேர் பலவும் ஊதும்** - வாயினால் சொல்லத் தக்க பிள்ளையா ரது திருபபெயர்கள் பலவறறையும எடுதது உரதத ஒலியால ஊதி உலகுககு அறிவிக கும்; **உரை செய்** - உரைககத தகக; பிளளையாரது திருபபெயாகளே மக்கள் வாயார உரைசெயது உயயத தருவன எனபது; "ஞானசம பநத ரெனறு நாமமந் திரமுஞ் சொல்ல" (2619);

**மணிச்சின்ன மேலாம்** - சிவனருளிய முததுககளாலாகிய காளம, தாரை சின்னம் என்ற எல்லாம; **மணி** - முததினைக குறிததது.

**சின்னம்** - பொதுப பெயராய வநதது, **ஊதும்** - இவை போ பலவும் ஊது கின்ற வகைகளை 2119—2120—2121 பாட்டுக்களிற் காணக.

**பணிமாறுதல்** - ஊததல்; சின்னஙகள் ஒலிசெய்தற்கு வழங்கும் மரபு வழக்கு;

**பரசமய கோளரி வந்தான்** - இனி இந்நாட்டிற் பிள்ளையார் திருவருள் வழிச் செய்தருளும் நிகழ்வு பற்றி இத்தன்மையால் எடுத்துக்கூறி ஊதின ;

**புரசை** - யானைக் கழுத்துக் கயிறு ; **வயம்** - வெற்றி ;

**கடம்** - மதம் ; மதமுடைமை யானையின் சிறப்பு ; 653

2552. (வி - ரை) **இப்பரிசு** - முன் ஐந்து பாட்டுக்களினும் கூறிய தன்மை பொருந்த ; இப்பரிசு - அணையும் பெருமான - எழுந்தருளும்பொழுது என்க.

**எழுந்தருளும் பொழுது** - அவர் என்ற எழுவாய் வருவித்துக் கொள்க ; **அணையும்** - அணைகின்ற என எச்சமாக உரைக்க.

**ஒப்பில்...ஓசை** - **காளம்** - எக்காளம் என்பர் ; இதுமிக உரத்த ஓசையுடன் பிள்ளையாரது திருநாமத்தை எடுத்துக்கூறி "இவர் உலகுய்ய வந்தார்" என்ற பொருள் பட இசைப்பது ; நெடுந்தூரத்துள்ளோரும் செவிப்புலப்படக் கேட்க உள்ளது ; உருவத்தானும் பெரிது ; ஆதலின் இதனை வேறு பிரித்துத் தனிப்பெருங் காளம் என்ற சிறப்படைமொழி தந்தோதினர் ; "முன் தனிக்காளம் வையம் மேழுடன் மறைகளு நிறைதவத் தோரு, முய்ய ஞானசம்பந்தன் வந்தான்" (2119) என்றதற் கேற்ப ஈண்டும் உலகுய்ய ஒலித்து எழும் ஓசை என்றார் ; உலகுய்ய ஓசை எழுதலாவது அதனைக்கேட்டு மக்கள் வந்தணைந்து உய்தி பெறுதல்.

**செவிநிறை அமுதுஎன** - பயன்பற்றி வந்த உவமை ;

**நேக்குதல்** - நிறைதல ; **ஓசை** - **நேக்க** - என்க ;

**அப்பொழுது** - அப்பொழுதே ஏகாரம் தொக்கது ;

**தலத்தின் மேற் பணிந்தே** - கண்ணுற காணாராயினும் ஓசை கேட்ட பொழுதே நினைவு பிள்ளையார்பாலும் திருக்கூட்டத்தின் பாலும் சென்று சேர அகக் கண்ணுற கண்டு நிலத்தின் வீழ்ந்து வணங்கினார். "நெஞ்சினி னிறைந்த வாரவமுன் செல்லக் கண்டு" (2553) என்பது காண்க; கேட்ட பொழுதே அன்பு பெருகும் நிகழ்ச்சி யுண்டாதல் தலையன்பினறிதம். தூரத்தே கண்டபோது வணங்குதல் மேற்பாட்டிற் கூறுவார்; "வெற்றவே யடியா ரடிமிசை வீழும் விருப்பினன்" (தேவா) என்று இவரது விருப்பமாகிய திருவுள்ளநிலைபற்றிப் பிள்ளையார் திருவாக்கால் பாராட்டப் பட்டதும், இவர் தம புராணத் துரைத்தனவும் பார்க்க.

அறிந்து அப்பொழுதே பணிந்து எனக

**இப்பரிசு** - தூரியங்கள் கிளர்ந்மே மறைகள் எடுப்பவும், தென்றல் எதிர் கொண்டு சேவிப்பவும் (2547) ; அமண பாவசசேனை இரிந்தோட மண்ணும் விண்ணும் செய்த புண்ணியப் படை எழுச்சி போலப் பொலியவும் (2548) ; அமண மாசு கழுவக் கங்கை அணைந்ததெனும் கவின் காட்டவும் (2549) ; அமண வல்லிருள் போய மாய்வதற்கு அண்டமெலாம் பரந்த ஞானமணி விளக்கு எழுந்து வருவது எனும் நலம் படைப்பவும் (2550) ; சைவம ஓங்கப் பரசமய கோளரிவந்தான் என்று சின்னமெல்லாம் பணிமாறவும் (2551) ; ஆக இப்பரிசு என்று இவ்வாறு பாட்டுக்களைத் தொடர்பு படுத்திக் கொள்க. இவ்வாறன்றிச் சேவிப்ப அணைகின்றார் ; பொலிவெய்த அணைகின்றார் ; கவின்காட்ட அணைகின்றார் ; நலம்படைப்ப அணைகின்றார் என்று தனித்தனி முடித்தலும், சேவிப்ப - எய்த - காட்ட - படைப்ப - பணிமாற அணைகின்றார் என்று முன் பாட்டுடன் கூட்டி முடித்தலுமாம்.

**அணையும்** - அணைகின்றார் என முன் நிகழ்காலத்தாற் கூறினார் ; பிள்ளையாரது அணைதலாகிய செயலின் பயன் அன்று மட்டுமன்றி முக்காலமும் தோன்று மியற்கை யுடையதாதலின் மீண்டும் நிகழ்காலத்துப் பொருணிலைமையுடைய செய்யு மென்னும்

வாய்பாட்டினால் அணையும் என்றார்; "முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை, யெம்முறைச் சொல்லு நிகழுங் காலத்து, மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்" (தொல் - சொல் - வினை 43) என்பதிலக்கணம்; இது முக்காலமுந் தோன்று மியல்பினை, இக்கருத்துப் பற்றியே பின்னாக குலச்சிறையாரது திருவாக்கில் விரித்தல் (2557) காண்க; அன்று பிள்ளையாரது அணைதலே இன்றும் சைவம் நிகழ்வதற்குக் காரணமா யுள்ளது என்பது தேற்றம். 654

2553. அஞ்சலி குவித்த கரங்களுந் தலைமே
லணைந்திடக் கடிதுசென் றணைவார்,
நஞ்சணி கண்டர் தந்திரு மகனா
ருடன்வரு நற்றவக் கடலை
நெஞ்சினி னிறைந்த வார்வமுன் செல்லக்
கண்டுநீ ணிலத்திடைத் தாழ்ந்து
பஞ்சவர் பெருமான் மந்திரித் தலைவர்
பாங்குற வணைந்துமுன் பணிந்தார். ௬௫௫

(இ - ள்) அஞ்சலி...அணைவார் - அஞ்சலியாகக் கூப்பிய கைகளும் தலையின் மேலே சேர விரைந்து சென்று அணைவாராகி; நஞ்சணி...கண்டு - விடத்தை அணிந்த கண்டராகிய இறைவரது திருமகனாருடன் வரும் நல்ல தவமுடைய அடியார்களின் கடல்போன்ற திருக்கூட்டத்தை மனத்தில் நிறைந்த ஆசை முன்செல்ல அக நோக்கிற் கண்டுகொண்டாராதலின்; நீள நிலத்திடை...பணிந்தார் - நீளும் நிலத்தின் மிசைத் திருமேனி பொருந்த வீழ்ந்து பாண்டிய மன்னரது மந்திரிகளுள் தலைவராகிய குலச்சிறையார் பாங்குறச் சென்று முன்னே பணிந்தனர்.

(வி - ரை) அஞ்சலி...அணைவார் - காளத்தின் ஓசை செவியில் நிறைய, உடனே தலத்தின் மேற்பணிந்தார்; எழுந்தார்; கைகள் கூப்பின வண்ணமே தாமே தலைமேல் ஏறின; விரைவாக ஓசைவரும் திசை நோக்கி முன்னே அணைவாராயினர், இவ்வாறாக, கரங்கள் தலைமேல் அணைந்திட - தம் முயற்சியின்றிக் கைகள் தாமே சிரமேற் கூப்பியபடியே ஏறின;

மகனார் - அவர் அளித்த பால் உண்ட முறைமையால் மகனார் என்று உபசரிக்கப் பட்டவர். 1666லும் 1966லும் முன் பலவிடத்தும் உரைத்தவை பார்க்க.

மகனாருடன் வரும் நற்றவக்கடல் - பிள்ளையாருடன் வருதற்கு முன்னை நற்றவம் புரிந்த அடியவரின் கூட்டம். கடல் போன்ற பரப்புடையதனைக் கடல் என்றுபசாரம்.

நெஞ்சினில்...ஆர்வம் - முன்செல்லக் கண்டு - தாழ்ந்து பணிந்தார் - முன் பாட்டில் ஓசை செவி நிறையக் கேட்டு நிலமிசைத் தாழ்ந்து பணிந்தார்; இங்கு, அவ் வோசை வழி எதிர் நோக்கி நெஞ்சம் முன்னே சென்று கண்டு கொண்டமையால் கண்டு தாழ்ந்து பணிந்தார்; முன்னர்க் கேட்டுப் பணிந்தார்; இங்குக் கண்டுப் பணிந்தார். ஆயின் கண் கூடாகக் காண்பது பின்னரேயாயினும், இப்பொழுது ஆர்வம் முன் செல்ல மனத்தாற் கண்டு பணிந்தனர் என்பதாம்.

மந்திரித் தலைவர் - நிலத்திடைத் தாழ்ந்து பணிந்த நிலையே கிடந்தவர் பின்னர்ப் பிள்ளையார் திருக்கைகளாற் பற்றி எடுக்கவே எழுந்தனர். 2555 பார்க்க. இந்நிலை மந்திரித் தொழிலின் பேறறிவுடைய முயற்சி வகைகளுள் ஒன்றுமென்பார் மந்திரித்

தலைவர் என்ற தன்மையாற் கூறினார். இது பின்னர்க் காட்டுதும்; (2555 பார்க்க.) ஆசிரியா பெருமானும் மந்திரியாராதல் கருதுக.

பாங்குற - தமிழ்நாடு பாங்கு பெறும் பொருட்டு; பாங்குறப் பணிந்தார் என்று கூட்டுக.

முன் - திருக் கூட்டத்தின் முன் அணிகள் சேர்வதற்கும் முன்பு. 655

2554. நிலமிசைப் பணிந்த குலச்சிறை யாரை
நீடிய பெருந்தவத் தொண்டர்
பலருமுன் னணைந்து வணங்கிமற் றவர்தாம்
படியினின் றெழாவகை கண்டு,
மலர்மிசைப் புத்தேள் வழிபடும் புகலி
வைதிக சேகரர் பாதம்
குலவியங் கணைந்தார் தென்னவ னமைச்சர்
குலச்சிறை யாரெனக் கூற, கூ௫௬

2555. சிரபுரச் செல்வ ரவருரை கேட்டுத்
திருமுகத் தாமரை மலர்ந்து
விரவொளி முத்தின் சிவிகைநின் றிழிந்து
விரைந்துசென் றவர்தமை யணைந்து
கரகம லங்கள் பற்றியே யெடுப்பக்,
கைதொழு தவருமுன் னிற்ப,
வரமிகு தவத்தா லவரையே நோக்கி
வள்ளலார் மதுரவாக் களிப்பார், கூ௫எ

2556. "செம்பியர் பெருமான் றிருமக ளார்க்குந்
திருந்திய சிந்தையீ ருமக்கும்
நம்பெரு மான்றன் றிருவருள் பெருகு
நன்மைதான் வாலிதே;" யென்ன
வம்பல ரலங்கன் மந்திரி யாரு
மண்மிசைத் தாழ்ந்தடி வணங்கித்
தம்பெருந் தவத்தின் பயனனை யார்க்குத்
தன்மையா நிலையுரைக் கின்றார், கூ௫அ

2557. "சென்றகா லத்தின் பழுதிலாத் திறமு
மினியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனா
லெற்றைக்குந் திருவரு ளுடையேம்;
நன்றியி னெறியி லழுந்திய நாடு
நற்றமிழ் வேந்தனு முய்ந்து
வென்றிகொ டிருநீற் றொளியினில் விளங்கு
மேன்மையும் படைத்தன" மென்பார்; கூ௫௯

*2558 " இங்கெழுந் தருளும் பெருமைகேட் டருளி
யெய்துதற் கரியபே றெய்தி
மங்கையர்க் கரசி யாரு'நம் முடைய
வாழ்வெழுந் தருளிய' தென்றே
'யங்குநீ ரெதிர்சென் றடிபணிவீ'ரென்
றருள் செய்தா "ரெனத்தொழு தார்வம்
பொங்கிய களிப்பான் மீளவும் பணிந்து
போற்றினார் புரவல னமைச்சர். ௯௯௦

2554. (இ - ள்) நிலமிசை...... வணங்கி - நிலத்தின்மேல் வீழ்ந்து பணிந்த வண்ணமேயிருந்த குலச்சிறையாரை நீடிய பெரிய தவத்தினையுடைய தொண்டர்கள் பலரும் முன்பு வந்து அணைந்து வணங்கி; மற்று அவர் தாம்...கண்டு - மற்று அவர் தாம் நிலத்தினின்றும் மேல் எழாமல் இருந்த வகையினைக் கண்டு; மலர்மிசை... குலவி - பிரமதேவர் வழிபட்ட சீகாழியில் வந்த வைதிகத் தலைவராகிய பிள்ளையாரது பாதங்களை அடைந்து வணங்கி; " அங்கு...குலச்சிறையார் " எனக் கூற - " அங்குப் பாண்டியனது அமைச்சனாராகிய குலச்சிறையார் அணைந்துள்ளார் " என்று சொல்ல, ௯௮௬

2555. (இ - ள்) சிரபுரச் செல்வர்...அணைந்து-சீகாழிச் செல்வராகிய பிள்ளையார் அவர்களது சொற்களைக் கேட்டுத், திருமுகமாகிய தாமரை மலர்ந்து, பொருந்திய ஒளியினையுடைய முத்துச் சிவிகையினின்றும் இறங்கி விரைவுடன் சென்று அவரை அணைந்து, கரகமலங்கள்...எடுப்ப - கைகளாகிய தாமரைகளாற் பற்றியே மேல் எடுப்ப; அவரும் கைதொழுது முன்நிற்ப - அக் குலச்சிறையாரும் கைதொழுது திரு முன்பு நிற்க; வரமிகு ..அளிப்பார் - வரம்மிகும் செவ்வியினின்ற அவரது தவங் காரணமாக அவரையே நோக்கி வள்ளலாராகிய பிள்ளையார் இனிய திருவாக்கினை அளிப்பாராகி, ௯௮௭

2556. (இ - ள்) " செம்பியர் பெருமான......வாலிதே " என்ன - சோழ மன்னரது திருமகளாராகிய மங்கையர்க்கரசி யம்மையாருக்கும் திருந்திய சிந்தையினையுடைய உமக்கும் நமது சிவபெருமானுடைய திருவருள் பெருகும் நன்மைதான் சிறந்துள்ளதே " என்று சொல்ல; வம்பலர்...வணங்கி - மணமுடைய மாலையினை அணிந்த மந்திரியாரும் நிலமுற வணங்கி நின்று; தம்பெரும்...உரைக்கின்றார் - தமது பெருந்தவத்தின் பயனே போன்ற பிள்ளையாருக்கு நிகழும் தன்மையாகிய நிலையினை எடுத்துச் சொல்கின்றாராகி, ௯௮௮

2557. (இ - ள்) சென்ற காலத்தின்...திருவருளுடையேம் - சென்ற காலத்திலே பழுதின்றி நின்ற திறமும், இனி எதிர்காலத்தில் வரும் சிறப்புடைய திறமும், இன்று தேவரீர் எழுந்தருளப்பெற்ற பெரும் பேற்றினால் விளங்கும்; இதனால் முக்காலத்திலும் திருவருளுடையோம்; நன்றியில்...படைத்தனம் எனபார் - நன்றியில்லாத (அமண) நெறியிலே அழுந்திய இந்நாடும் நற்றமிழ் அரசனும் உய்திபெற்று வெற்றி கொள்ளும் திருநீற்றின் ஒளியினில் விளங்கும் மேன்மையினையும் பெற்றோம் என்பாராகி, ௯௮௯

2558. (இ - ள்) " இங்கெழுந்தருளும்...எழுந்தருளியது " எனத்தொழுது - இங்குத் தேவரீர் எழுந்தருளும் பெருமையினைக் கேட்டருளியவுடனே மங்கையர்க்கரசி யம்மையாரும் ' நம்முடைய வாழ்வு எழுந்தருளி வருகின்றது ' என்று கூறி, ' அவ்

விடத்து நீர் எதிர்கொண்டு சென்று திருவடிகளைப் பணிவீர் என்று அருளிச்செய்தார்' என்று விண்ணப்பஞ் செய்து வணங்கி; ஆர்வம்...அமைச்சர் - அன்பு பொங்கிய களிப்பினாலே மீளவும் பணிந்து அரசனது அமைச்சராகிய குலச்சிறையார் துதித்தனர். ௬௬0

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2554. (வி - ரை) நிலமிசைப் பணிந்த.. ...கண்டு - குலச்சிறையார் திருக் கூட்டத்தை நோக்கி நிலமிசைப் பணிந்தபடியேயிருந்தனர்; பிள்ளையாரது திருக்கூட்டத்தினின்றும் பல தொண்டர்கள் முற்பட அவர்பால் அணைந்து வணங்கினர்; அப்போதும் அவர் தாம நிலத்தினின்றும் எழாது இருந்தனர்; அதனை வந்த திருத்தொண்டர் கண்டு என்றபடியாம்.

மலர்மிசைப் புத்தேள் - தாமரையில் இருக்கும் பிரமதேவன்; புத்தேள் - தேவன்.

வைதிக சேகரர் - வைதிகநெறித் தலைவர்; சேகரம் - முடிபோல வைதிகர் தம் தலைமேற் கொள்ளத்தக்கவர் என்றபடி.

துலவி - அடைந்து தொழுது.

"அங்கணைந்தார்...குலச்சிறையார்" என-குலச்சிறையார் தாரத்தேவந்து அணைந்தனர் என்று; அங்கு - அவர் பணிந்தபடி நிலமிசைக்கிடந்த இடத்தைச் சுட்டியது.

தென்னவனமைச்சர் - முன்னரும் "பஞ்சவர் பெருமான் மந்திரித் தலைவர்" (2553) என்று கூறினார்; அரசாங்க மந்திரித் தலைவராதலின் அரசகாரியம் முற்றும் கடன் இவர்மேனின்றது; ஆதலின் அவர் அணைந்து பணிந்தமை அரசனும் அரசநாடும் முழுமையும் அணைந்து பணிந்ததுவேயாம் என்ற குறிப்புப்பெற ஈரிடத்தும் அமைச்சர் என்றொழியாது அரசனுடன் புணர்த்தி ஓதினார்.

துலவி - அமைச்சர் - குலவி என்று கூட்டிப் பாதம் பொருந்த அமைச்சர் அங்கு அணைந்தார் என்றுரைப்பாருமுண்டு. துலவியிங்கு எனபதும் பாடம். 656

2555. (வி - ரை) திருமுகத்தாமரை மலர்ந்து - முகமிக மலர்ந்து; மலர்ந்து என்பதற்கேற்ப முகத்தைத் தாமரை என்று உருவகித்தார். முகமலர்தல் - அகமலர்ச்சி காட்டும் குறிப்பாதலின் அகமும் மலர்ந்து என்பதும் உடன் கூறியதாயிற்று; முக மலர்தல் என்ற வழக்கும் காண்க; ஈண்டுக் கருணை கூர்ந்து எனக.

சிவிகை நின்றிழிந்து விரைந்து சென்று அவர்தமை அணைந்து - தாம் எழுந்தருளியிருக்கும் இடத்தில் வந்து வணங்க வேண்டிய அவர், நெடுந்தூரத்தே வணங்கிய படி கிடத்தலின் அவரிருக்குமிடந்தேடி வந்தணைந்தனர் குருநாதராகிய பிள்ளையார்; இது குலச்சிறையாரது வணக்கத்தின் அழுத்தத்தாற் போந்த பயன் என்க; திருமறைக்காட்டினின்று பாண்டி நாட்டிலுக்கும் மதுரையம்பதிக்கும் பிள்ளையாரை வந்தணையப்பண்ணியது போலச், சிவிகையினின்றும் இழிந்து மந்திரியார் இருந்து வணங்கிக்கிடந்த இடத்துக்கும் எழுந்தருளியணையச் செய்தது அவர்களது திருத்தொண்டின் உறைப்பாகும்; அப்பூதி நாயனார் திருமனைக்கடையினில் அரசுகள் அவரைத் தேடிச் சென்றருளுமாறு செய்தது அவரது அழுந்திய நினைவேயாம் என்ற வரலாறும் இங்கு நினைவு கூர்தற்பாலது; "சூழுமாகிய பரசமயத்திடைத் தொண்டு, வாழு நீரமையீருமைக்காண வந்தனம்" (2571) என்று பிள்ளையார் அருளுவதனையும் காண்க; விரைந்து சென்று - அவரை எடுத்து அருளும் கருணையின் விரைவு.

கரகமலங்கள் பற்றியே எடுப்ப - கரகமலங்கள்-கைகளாகிய தாமரைகள்; "திருமுகத்தாமரை," என்றதற்கேற்பக் கைகளையும் தாமரைகள் என்றார்; கரகமலங்களாற்

பற்றியே என்க, "இன்ன ருட்பெருஞ் சிறப்பொடுந் திருக்கையா லெடுத்தார்" (2569); "இருவரையுந் திருக்கையா லெடுத்தருளி" (2629) என்று பின்னர் வருவனவும் காண்க; குலச்சிறையாரது கரகமலங்களைப்பற்றி என்று இரட்டுற மொழிந்து கொள்ளவும் நின்றது;

**எடுப்ப** - "எழுக" என்று திருவாக்கினாலருளாது கைகளால் எடுத்தல் "அவர் தாம் படியினின் றெழாவகை கண்டு" தொண்டர்கள் அறிவித்தபடி தாமும் கண்டமையாலும், எடுத்தாலன்றி எழார் என்று கண்டருளினமையாலுமாம்; இது மந்திரியாரது திருத்தொண்டினது உறைப்பும், மந்திரத் தொழில் வன்மையுமாம்; என்னை? 'எழுக' என்ற சொல்லின் அருளளவினன்றிச் செயலினாலும் மேல் எடுக்கப்பெறும் அருளைப் பெறும் தகுதி எனக. எங்கள் நாடு கீழ்ப் கிடக்கின்றது; அதனை மேல் எடுத்தருளல் வேண்டுமென்று வாக்கினால் கூறாது தாம் வணங்கிச் செயலால் விண்ணப்பித்தனர் அமைச்சர் பெருமான்; அதற்கு அவ்வாறேயாகுக என்று பிள்ளையார் தமது வாக்கினால் கூறாது கைகளால் எடுத்த செயலால் அருள் புரிந்தனர்; எனவே பாண்டிநாட்டினை ஈண்டு வினைபபரசமயக் குழியினின்றும் மேல் எங்கும் அருட்செயல் அதன் மந்திரியாரை எடுத்த செயலானே ஈண்டே நிகழ்ந்துவிட்டதென்க; பின்னர் நிகழ்பவை எல்லாம் இதன் தொடர்ச்சியாகிய சடங்குகளே என்பதாம்; எடுப்ப என்பது "என்னை யிப் பவத்திற் சேரா வகையெடுத்து" (சித்தி - சுபக - பாயி 2) என்புழிப்போலப் பரசமயத் தீமை காதது எடுத்த குறிப்புருவகப் பொருளும்பட நின்றது.

**கைதொழுது அவரும் முன் நிற்ப** - பிள்ளையார் கர கமலங்கள் பற்றி எடுப்ப எழுந்து அவர் திருமுன்பு தொழுத படியே நின்றனர். அவரது அருட் செய வினைப்பெற்ற வண்ணமே அருட்டிருவாக்கினையும் பெறுதலை வேண்டி எனக; அக் கருத்தினை அறிந்த வள்ளலாரும் அவ்வாறே நாம் முற்பட்டு மதுர வாக்களித்தல் மேற்கூறப் படுதல் காண்க.

**வரமிகு தவத்தால்—வாக்களிப்பார்** - வரம் பெறுதற்கு உரியதாய் மிகுந்து பக்குவ காலம் வந்த தவம் காரணமாக - வரம் தரும் வாக்களிக்கப் பெற்றார் எனக. "தமிழ் நாட்டுத் தரைசெய் தவப்பயன் விளங்க" (2551) என்றதும், மேல் "தம் பெருந்தவத்தின் பயனையாக்கு" (2556) 'நற்றவத்து மானியார்...யானுமென் பதியுஞ் செய்த தவ மென்கொல்" (2570) என்பனவும் கருதுக, வரமிகு தவமாவது வரம் பெறுதற் கணித்தாக மிகுதி பெற்ற தவம்.

**வள்ளலார்—அளிப்பார்** - வள்ளலாராதலின் அளிசெய்து தாமே முற்பட வாக்கருளினார் என்பது.

**அவ்வுரை—இவருரை—**என்பனவும் பாடங்கள். 657

2556. (வி - ரை) **மகளார்க்கும் - உமக்கும் - திருவருள் பெருகும் நன்மை தான் வாலிதே** - திருவருள் பெருகுதலால் வரும் நன்மை; **வாலிதே** - சிறந்து செல்கின்றதே.

**செம்பியர் பெருமான் குல மகளார்க்கும்** - மன்னிய சைவத் துறையின் வழி வந்தும், அதனின் மாறாது ஒழுகியும், அதனைப் பற்பல இடையூறுகளின் இடையிலேயும் விடாது பற்றியும், தம்நாடு சைவத்தின் ஓங்க நினைந்து முயன்றும் வந்த பெருமை பற்றியும், அரசியாராக ஆணை தந்து இயக்கும் முதன்மையும், உரிமை பற்றியும் சோழரது மகளார் என்ற தன்மையாற் கூறி முதற்கண் வைத்துக் கேட்டருளினார்; "இங்குப் பெண்ணுக்கு முதன்மை தந்து விசாரிப்பது கருத்தென்று விசேடம் காண்பாருமுண்டு; அது பொருந்தாமை தேற்றம். மண்

ணலா நிகழ மன்னனும் மன்னு மணிமுடிச் சோழனறன மகளாம், பணணினோ மொழியாள் '' என்றும், " மஙகையாககரசி வளவர்கோன் பாவை " என்றும் வரும் தேவாரக் கருததுக்களும காணக ; இததிருப பதிகததினுள் அம்மையாரை முதலிலும் அமைச்சனாரை அடுத்தும வைததுக் கூறிய வைபபுமுறையும காணக.

நம்பெருமான் என்று தம்மையும உளபபடுததிக் கூறியது கருத்தொன்றிதத திருத்தொணடின உரிமைபற்றி ;

திருவருள் பெருகு நன்மைதான் வாலிதே - உயிாகளுக்கு வரும் இனபமும துன்பமும் இறைவா செய்யும அருளால வருவது கூடுவன ; அவவாறு இறைவா கூட்டு விபபதும் நனமையின பொருட்டேயாம் எனபது துணிபு ; இஙகு வாலிதே - என்றது நன்கு செல்கின்றது - இன்பமாகச செலகின்றது - எனற நிகழகாலக குறிபபு ; ஏகாரம வினா ; இது நலம வினவும வகையால எழுநதது ; ஆயின, " மானி யாா தமக்கு மானக், குனறெனு நினற மெயயமைசசக் குலசசிறை யார்த மகசும், நன்றுதான வினவக கூறி " (2570) எனறபடி திருமறைககாட்டில இவர் கள் வரவிட்ட அறிவுடை மாநதாபால வினவிக் கேட்டறிநது கொண்ட பிள்ளையாா, இங்கு " நன்மைதான வாலிதே " எனறு மீணடும வினவிய தென்னையோ ? எனின, முன்னர்க் கேட்டறிநதது பிறாபாற கேளவி ; இங்குககணட போது நேரிற கேட்பது கணடறிவதாவதாம மரபு. ஆதலின வினவிய தெனக. இனி இவவாறு கொள்வதுடன, இரட்டுற மொழிநது கொணடு, மறைககாட்டில அவாகள பாலறிந்தபடி நாட்டின தீஙகு பரவிய நிலையினுககு " வருநதற்க " என அஞ்சல அரு ளும் முகததால், முன்னா நம் பெருமான செயத திருவருள் இனிபபெருகும் ; இனறு காணும் நன்மைதான் வாலிதேயாம ; எனறு பிரிததுப, பிளளையாரது விளக்கம் பொருநதக கூறும் அமுத வாழ்த்தாக உரைததலுமாம ; இபபொருளில் பெருகும் - இனிபபெருக நிகழும என வினைமுற்றாகக கொளக ; ஏகாரம - தேறறம் ; பிரிநிலையு மாம்.

மண்மிசைத் தாழ்ந்து - பிள்ளையாா வினாவுககு விடை கூறும முகததால் வணங்கி.

தம்பெருந் தவத்தின் பயன் அனையார் - பிள்ளையாா ; தம் - தம்மையும் அம்மை யாரையும அரசனையும நாட்டினையும உளபபடுததிக கூறியது ; பெருந் தவத்தின் பயன் அனையார் - முனனைப பெருநதவஞ் செயதிருநதாலனறி இபபயன கிடையா தென்பது.

தன்மையாம் நிலை - உள்ள நிலை , தன்மை - உணமை. மேற கூறுவது உபசார மாம் முகமனாகிய இயல்பு அன்றி உள்ளபடி உணாநது கூறும உணமை என்பது

செம்பியர் தலைவன் - எனபதும பாடம. 658

2557. (வி - ரை) இது மிகச சிறநத ஆழநத கருததுடன அமைசசுத திறம விளஙகும் பெருமையுடையதொரு திருபபாட்டு.

சென்ற காலத்தின்...பெற்ற பேறு - திருவருள் - எனறதனால் சென்ற காலத தையும், வாலிதே என்றதனால நிகழ காலத்தையும, பெருகும் நன்மைதான் என றதனால் எதிர்காலததையும குறிதது வினா நிகழநதமையால மூன்று காலததும நன்மையே எனறு கூறி, அதறகுக காரணம நிகழ்காலததிற பெறற பேறேயாம எனறு முடித்தனர். இன்று எழுநதருளும இபபேறு சென்ற காலததின பழுதிலாத திற மாகிய பெரும தவததாலனறிக கைகூடாததாதலின கழிகாலத்தில திருவருள நன கிருந்து அததவத்தை முற்றச் செய்தது ; இனி இனறு எழுநதருளும இபபேறு மேல

வருங் காலத்தில் பெருகும நன்மையினைச் செய்யும எனபது உறுதியாதலின் எதிர காலச் சிறபபு இப்பேறறின பயனுகக் கிடைக்கும என்று கூறினர்; எனவே சென்றகாலச் சிறபபு இனறு பேறுதர, இது எதிர்காலச் சிறபபினைக காட்ட இவ் வாறு மூன்று காலமும திருவருள் பெருகு நன்மையின வாலிதாம் நிலைமையில் உள்ளோம் என்ருர்; பெருமானது அருளின் நனமையினைப பிள்ளையார் வினவக, குலச்சிறையார அதனைப பிள்ளையாரது எழுநதருளுதலின் மேற்சாரத்தி, இதுவே பெருமான் திருவரு ளின் நன்மையின் உருவாய வநதுளளது எனறு முடிதத நயமும் காணக; இதனல் எறறைககும திருவருள் உடையேம் எனறு முடிவு கொளக; இது பிளளையார் அம்மை யாரையும் தமமையும குறிதது வினவியபடியால் உடையேம் எனறது அதறகு விடை யாக இருவரும உடையோமாயினேம் எனறு கொளள நினறது.

நன்றியில் ..படைத்தனம் - முனபாட்டிற கூறியபடி கேட்டருளியதற்கு ஏறப இருவர் நலமும பறறி விடை கூறினும அநநலம அரசனையும நாட்டினையும பறறிய நலததை இன்றியமையாதாதலின மேலும கூறலுறறு, அதுவே தமது கருததாகிய விணணபபமாக இவவருகையின பயனுய அதனையும பெறறனம என உறுதியும் விரை வும் பறறி இறநத காலததாற கூறிய நயமும காணக.

மேன்மையும் படைத்தனம்-பிள்ளையார் தம் இருவர் நன்மையினையே வினவினு ராதலின, அதனேடு சாரததி விடைகூறிய நாட்டினலமும் அரசனலமும் தமது நலமே யாகிய மேன்மையேயாம என வினுவுககேறற விடையாகப் பொருததிக் கூறிய திற மும் காணக.

நன்றியில் நெறி - நன்மையறற சமண நெறி; தீ நெறி என்னுது நன்றியில் நெறி என்றது தீமையை வாயினுலுங் கூருத மரபு.

நற்றமிழ் வேந்தன் - "தமிழ்நா டுறற தீங்கினுக களவு தேறருச சிந்தையில்" (2502) என்றதும் ஆணடுரைததவையும் பாாகக.

வென்றிகொள் திருநீற்றின் ஒளி - திரு நீற்றுப பதிகததால் வெறறி வரும் வரலாறறின் முற குறிபபு; "புததரொ டமணை வாதி லழிவிக்கு மணணல் திருநீறு செம்மை திடமே" (தேவா) எனற திருவாக்கும கருதுக.

அழுந்திய நாடும் வேந்தனும் ஒளியினில் விளங்கும் மேன்மை என்றதனுல் முனனா இருளில அழுநதிய தாழவு எனபதனைப பெறவைதத நயமும் காண்க.

நீற்றின் ஒளியினில் - என்பதும் பாடம். 659

2558. (வி - ரை) இது பிள்ளையாரை எதிர்கொள்ளும்படி அம்மையார் அமைச்சரைக் கட்டளையிட்டு ஏவி யனுபபிய திறததை உரைததது; அம்மையார் வாக்கினைப பறறியே முன்னிலைக கூறருக அறிவிதத நயமும, இவ வரவேற்பு அரசாங்க நிலையில அமர்நது செய்யபபடுகினற தெனறறிவிதத நிலையும காண்க.

எம்முடைய வாழ்வு எழுந்தருளியது - வாழவு தருபவரை வாழவு என்று பணபின் உருவமேயாக உருவகிததார்; "ஞானத்தின் றிருவுருவை" (2626) எனறு மேல்வரும் பாட்டின் கருததினையும ஓாக; பிளளையாரை ஒரு மானிட உருவுடையராக இவர்கள கருதவிலலை; திரு அருளின் உருவாக, தமது வாழ்வின உருவமேயாக, ஞானததின் உருவமாக, என்றிவ்வாறே கண்டு கொணடனா: வாழ்வு - "இங்கெழுந்தருள உய்ந் தோம்" என - 2543 என்ற கருததும காணக.

அங்கு - பின்ளையார் எழுந்தருளி வரும அவ்விடத்து முன் சென்று; எழுநதரு ளும் வார்ததை - கூற வந்தவா மொழியைக கேட்ட (2541) அப்போது எழுந்தருளிய அந்த இடத்தில் என்க.

மீளவும் பணிந்து போற்றினார்- அமமையாரது விணணபபததைத தெரிவித்ததன் பொருட்டு மீண்டும் பணிநதனா. அமைச்சர்-அமைச்சராதலின் எனபது குறிப்பு. 660

2559. ஆங்கனம் போற்றி யடிபணிந் தவர்மே
லளவிலா வருள்புரி கருணை
தாங்கிய மொழியாற றருவன விளமபித்
தலையளித் தருளுமப் பொழுதில்
ஓங்கெயில் புடைசூழ் மதுரைதோன் றதலு
முயாதவத தொண்டரை நோக்கி
"ஈங்குநம் பெருமான் றிருவால வாய்மற்
றெமமருங் கின"தென வினவ, கூககக

2560. அன்பரா யவர்முன் பணிந்தசீ ரடியா
ரண்ணலா ரடியிணை வணங்கி
முன்புநின் றெடுத்த கைகளாற காட்டி
"முருகலர் சோலைகள சூழ்ந்து
மின்பொலி விசும்பை யளக்குநீள கொடிசூழ்
வியனெடுங் கோபுரந் தோன்றும்
என்பணி யணிவா ரினிதமாந் தருளும்
திருவால வாயிது" வென்றார். கூககஉ

2559. (இ - ள்) ஆஙகனம...பொழுதில - அவவாறு துதிததுத திருவடியில வீழ்ந்து பணிநதவாமேல அளவிலலாத அருளைத தரும கருணை கூாந்த மொழிகளால் தக்கவற்றைச சொலலித தலையளி செய்தருளும் அபபோது; ஓஙகு எயில்...தோனறு தலும் - ஓஙகிய மதிலகள பககங்களிற சூழநத மதுரையமபதி கட்புலபபடத தோனறு தலும் கணடு; உயாதவத தொணடரை வினவ - உயரும தவமுடைய தொண்ட ரைப பாரதது, "இவவிடததுநமது இறைவா எழுநதருளுகினற திருவாலவாயானது மறறு எபபக்கததில் உளளது?" எனறு கேட்க; கூககக

2560. (இ ள்) அனபராயவா...காட்டி - அவவாறு வினவப பெறற அன்பரா யவர்முன் பணிநத சிறபபுடைய அடியாராகிய குலச்சிறையாா பிள்ளையாரது இணையார் திருவடிகளை வணஙகித திருமுன்பு நினறு எடுதத கைகளினாலே சுட்டிக் காட்டி; "முருகலா...திருவாலவாய இது" எனறாா-வாசம விரிகினற சோலைகளாற்சூழபபட்டு, மின்பொலியும ஆகாயததை அளக்குமபடி நீணட கொடிகள சூழ்நத பெரிய நீண்ட கோபுரஙகள் தோனறுகினற இது, எலுமபின அணிகளை அணிநத சுந்தரேசுரவாா இனிதாக விருமபி வீறறிருககும திருவாலவாயாம" என்று சொன்னா. கூககஉ

இநத இரணடு பாட்டுக்களும் தொடாநது ஒரு முடிபு கொணடன.

2559. (வி - ரை) அடிபணிந்தவர்மேல் - அடிபணிநத குலச்சிறையாரும அவரைத தம பொருட்டுச சென்று அடிபணிவீரெனறு எவிய அமமையாரும ஆகிய இருவா மேலும் என்பது குறிபபு.

அளவிலா...தலையளித்தருளும் அப்பொழுதில் - கருணையை உட்கொண்ட மொழிகளால் தலையளி செயதபோதில்; அமமையாா பணிததபடி கூறிப பணிந்த குலச்சிறையாருககு அதனை ஏறறு அருளிய மொழிகளாற கூறிச சிறபபருளும் மரபு பறறியது.

**அப்பொழுதில் - மதுரை தோன்றுதலும்** - குலச்சிறையார் முன் சென்று எதிர் கொண்ட இடம், மதுரைமா நகரமும், மதிலும் கோயில் கோபுரங்களும் வடக்கிருந்து வருவோர்க்குக் கண்ணுக்குத் தோன்றும் எல்லையின் அப்புறமாகிய தூரமுள்ள இடம் என்பது ஈண்டுக் கருதத் தக்கது.

**உயர்தவத் தொண்டரை** - வந்து பணிந்த குலச்சிறையாரை; பொதுவாக எல்லா அடியார்களையும் என்றலுமாம்.

**நம்பெருமான் திருவாலவாய் மற்று எம்மருங்கினது ? என வினவ**-நகரமும் பற் பல ஆலயங்களும் பற்பல கோயில்களுமாகச் சோலைகளினிடையே தோன்ற, அவற் றுள்ளே திருவாலவாய்க் கோயில் எது என்று வினவியபடி. **மற்று** - இங்குத்தோன்றும் ஏனையவற்றுள் என்ற பொருள்பட நின்றது. " திருக்காளத்தித்திருமலை யிம்மலைகளில் யாதென்று கேட்டார " (2917) என இவ்வாறே பின் வருவதுடன் ஒப்பு நோக்குக. 661

2560. (வி - ரை) **அன்பராயவர் முன்பணிந்த சீரடியார்** - குலச்சிறையார் ; தொண்டர்களைப் பொதுவில் நோக்கிப் பிள்ளையார் வினவியதாகக் கொள்ளின், அவர் களுள்ளே அவர்களைப் பணிதலே பண்பாகவுடைய சிறப்புடையவராகிய குலச்சிறை யார் விடை கூறினார் என்க.

**அண்ணலாரடியிணை வணங்கி** - வினவிய பிள்ளையாருக்கு விடைகூறும் மரபு.

**முன்புநின்றெடுத்த கைகளாற் காட்டி** - பிள்ளையாரது பின்னே தொடர்ந்துவந்த குலச்சிறையார் இவ்வினவுக்கு விடை கூறுமாற்றால் முன்பு வந்து நின்று என்க ; **எடுத்த** - மேலே தூக்கிச் சுட்டிக் காட்டிய ; பிள்ளையார் கரகமலங்களாற் பற்றி எடுக்கப்பட்ட என்ற குறிப்பும் காண்க ; பாண்டி நாட்டைத் தாங்கி மேலெடுக்கத் துணையாய் நின்ற என்ற குறிப்பும்பட நின்றது காண்க.

**முருகலர்...இது திருவாலவாய்** - திருவாலவாயத் திருக்கோயிலின்ப் பண்பு தெரியப்போற்றியபடியும், அடையாளங்கூறிக் காட்டியபடியுமாம். மேல் "போற்றிக் காட்ட" (2561) என்பது காண்க. அதோ சோலைகள் நிலத்திற் சூழ்வன ; அதோ அவற்றின் இடையே நீள் கொடிகள் வானிற் சூழ்வன ; அதோ அவற்றி னிடையே பெரிய நீண்ட கோபுரங்கள் தோன்றுவன ; இதுவே எமது இறைவர் இனிதமர்ந்தருளும் ஆலவாய்க் கோயில் என்றபடி. **தோன்றும் இது - திருவாலவாய்** என்க ; ஆங்கு மேலே காணப்பட்ட கோபுரத்தால் காணப்படாத கோயிலினைக் கண்டு கொள்ளக் காட்டிய அளவை நிலையும் காண்க.

**என்பணி யணிவார்** - அணியல்லாத என்பினை அணிந்ததுபோலத் தகுதியற்ற எனது பணியினையும் அணியாகப் பூண்டவர் என இரட்டுற மொழிந்து கொள்ளவைத்த (**என்பு - அணி**) நயமும் காண்க ; முன்னைப் பொருளில் என்பாகிய அணி எனவும், பின்னையதில் **என் - பணி** எனது பணி எனவும் கொண்டு சிறப்பும்மை விரித்துக் கொள்க.

**இனிதமர்ந்து அருளும்** - தமது பணியினையும் ஏற்று அருள்புரிந்து பிள்ளையாரைத் தந்த சிறப்பும் உணர்த்தியபடி; "இனைத் தருட் பிள்ளை யாரைத் தந்தனையிறைவ" (2765) என்று பின்னர் மன்னர் போற்றும் கருத்துக் காண்க ; **அருளும்** - முன்னும் இன்றும் பின்னரும் அருளும் என மூன்று காலமும் குறித்து நின்றது ; **இனிது அமர்ந்து** என்ற கருத்தும் இது ; " இனியன வல்ல வற்றை யினிதாக நல்கு மிறைவன் " (பெயர்த்தைக் காக் - பிள் - கொச்சைவயம். 5).

விசும்பையளக்கும் - திருவாலவாய் - என்று கூட்டித் தேவருலகம் முதலிய புவனங்களின் நிலைகளை எல்லாம் நிலையிட்டருளும் எல்லார்க்கும் முன்னே தோன்றி முளைத்த இறைவனார் எழுந்தருளும் கோயில் என்றும், தேவர் தமது பதங்களை எல்லாம் காவல்பெற வந்து வணங்கும் கோயில் என்றும் இதன் தொன்மையும் பெருமையும் தோன்றக் கூறியபடி என உரைத்தலுமாம்: இப்பொருளில் விசும்பு - விண்ணுலகம் எனக. திருவாலவாயாவது எனபதும் பாடம். 662

2561. தொண்டர்தாம் போற்றிக் காட்டிடக் கண்டு
துணைமலர்க் கரங்குவித் தருளி
மண்டுபே ரன்பால் மண்மிசைப் பணிந்து
"மங்கையர்க் கரசி"யென் றெடுத்தே
"யெண்டிசை பரவு மாலவா யாவ
திதுவே" யென றிருவாதம் பணியுங்
கொண்டமை சிறப்பித் தருளிநற் பதிகம்
பாடினார் குவலயம் போற்ற. சாசா௩

(இ - ள்). தொண்டர்தாம் ... பணிந்து - பெருந் தொண்டராகிய குலச்சிறையார் தாமே இவ்வாறு போற்றிக் காட்டியிடக் கண்டு, மலர்போன்ற இரண்டு கைகளையும் சிரமேற் குவித்து நிறைந்த பேரன்பினாலே தரையின்மேல் வீழ்ந்து பணிந்து எழுந்து நின்று; மங்கையர்க்கரசி ... சிறப்பித்தருளி - "மங்கையர்க்கரசி" என்று தொடங்கி எண்டிசையோரும் பரவுகின்ற திருவாலவாய் ஆவது இதுவே என்று மகுடம்பொருத்தி அம்மையாரும் அமைச்சனாருமாகிய இருவருடைய பணிகளையும் சிறப்பித்து அருளிச் செய்து உலகம் போற்றும்படி நற்பதிகத்தினைப் பாடியருளினார்.

(வி - ரை) தொண்டர் தாம் - குலச்சிறையார் தாமே; போற்றிக் காட்டிட-முன் பாட்டிற் கூறியபடி அறிவித்த வகையினால் தாம் போற்றுதலும் பிள்ளையாருக்குக் காட்டுதலுமாகிய இரண்டினையும் ஒரு செயலினாற் செய்த திறங் காண்க; காட்டிடக் கண்டு - அடையாளங்களுடன் காட்ட அவற்றின் வழியே கண்டு; மண்மிசைப் பணிந்து - வரும் வழியிடைத் தெருவில் மண்மேல் திருமேனி பொருந்த வீழ்ந்து பணிந்து; கோபுரத்தைக் கண்டவுடனே அது தூலலிங்கமாகிய இறைவரது திருமேனியாதலின் அவ்விடத்தே வணங்குதல் வேண்டும் என்ற மரபொழுக்கம் குறித்தது; திருக்கோயிலினுள் நிலமுற வீழ்ந்து வணங்கக் கூசும் புலலறிவாளர், பிள்ளையார் காட்டியருளிய இவ்வழியைக் கண்டேனும் திருந்துவார்களாக.

மங்கையர்க்கரசி என்று எடுத்தே - இது பதிகத் தொடக்கத்தினையும், "ஆலவாயாவ திதுவே" என்பது பதிகத்தின் ஒவ்வொருபாட்டினிறுதியாகவரும் மகுடத்தையும், "இருவர் தம்பணியும் கொண்டமை சிறப்பித்து" என்பது பதிகக் குறிப்பாகிய கருத்தினையும் எடுத்துக் காட்டியபடியாம்.

குவலயம் போற்ற நற்பதிகம் பாடினார் - எனக; குவலயம் போற்ற - உலகம் இப்பதிகத்தினைப் போற்ற என்றும், இப்பதிகத்தினையே துணையாகக் கொண்டு இனிப் போற்றியுய்ய என்றும் உரைக்க நின்றது; நற்பதிகம் - ("வெள்ளை நீறணியும் கொற்றவன") நலங்களைப் பெறுவிக்கும் பதிகம்; "அந்நலம் பெறுசீர்" என்ற பாடல் காண்க; பதிகப்பாட்டுக் குறிப்புகள் பார்க்க; குவலயம் போற்ற - போற்றும்படி உட்கொண்டு. இடையிலே போற்றுதலில்லாத பாண்டிநாடு இனிப் போற்றிச் சிவநெறியில் ஓங்குக என்ற திருவுள்ளக் குறிப்புடன்

என்றலுமாம் ; " பன்னலம் புணரும " " சிவன்றிரு நீறறினை வளர்க்கும ", (பதிகம்) என்பன முதலியவை காண்க. 663

**திருவாலவாய்**

*திருச்சிற்றம்பலம்* பண் - புறநீர்மை

**மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைமட மானி**
*பங்கயச் செலவி பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும பரவ*
பொறகழ லுருவன பூதநா யகனுல வேதமும் பொருள்களு மருளி
*யங்கயற் கண்ணி தனனொடு மமர்நத* வாலவா யாவது மிதுவே. (1)

வெற்றவே யடியா ரடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியுங்
கொற்றவன் றனக்கு மந்திரி *யாய குலச்சிறை குலாவினை றேததும*
*ஒறறைவெள் விடைய* னும்பரா ரதலைவ னுலகினி லியற்கையை யொழிந்திட்
டற்றவர்க் கற்ற *சிவனுறை கின்ற வாலவா யாவது மிதுவே.* (2)

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி குலச்சிறை *யெனுமிவா பணியும்*
*மங்கலம் பெறுசீ ராலவா யீசன் திருவடி யாங்கவை போறறிக*
*கன்னலம் பெரிய காழியுள ஞான சமபநதன் செநதமி ழிவைகொண*
*டின்னலம் பாட* வல்லவ *ரிமையோ ரேததவீற றிருபபவ ரினிதே.* (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக்குறிப்பு** :—*பாணடிமா தேவியாரும் குலசசிறையாரும* எனும் இருவர் தம் பணியும் கொண்டு அருள்புரியும இறைவா அஙகயற கண்ணியோடும் இனிது அமர்ந் தருளும் திரு ஆலவாயாவது மிதுவே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு**:—*எடுதத திருபபாட்டினில அம்மையாரைப பாராட்* டிய திறததினின் மேம்பாட்டை விரிதது அதனையே ஆதாரவாக வைதது அவர் தம் புராணததுள் ஆசிரியா விரிவுரை செய்து வரலாறு கூறும திறம் காணக. (மஙகையர்க கரசியமமையாா புராணம். 1). 1-3-5-7-9-பாட்டுககளில அமமையாா பணியை யும், 2-4-6-8-10 பாட்டுககளில குலச்சிறையாா பணியையும, 11-வது பாட்டாகிய திருக்கடைக காபபினில் இருவா பணிகளையும் பாராட்டி அவர் கள் பணியும் அங்கலம் பெறுசீராலவாயீசன என இறைவரைப போறறியமைந்த பதிகத் திருவாகின்றிறமும், அதன பயனுகப் பாணடிநாடும தமிழநாடும் சைவமும அன்று முதல் இன்றுவரையும இனிமேலும் அடையும பெருநலஙகளையும் ஓக ; இப் பதிகக் குறிப்புககளையே பற்றிக் குலசசிறை நாயனா புராணத்தினுள் ஆசிரியர் அவா வரலாறு விரிததமையும் கருதுக ; இததிருபபதிகம் சைவததிறம உலகில் நின்று நில வப் புத்துயிரளிததுக் காதத பெருஞ் சிறப்புடைய பதிகஙகளுள் ஒன்று. பாணடி நாட் டில் பிள்ளையார் எழுநதருளிப் பாடிய அங்காட்டுத் தலப்பதிகஙகளுள் முதலாவது பதிகம் இது ; பிள்ளையார் பதிகங்களின பின்னரே போந்தன அரசுகளும் நம்பிகளும் அருளும் பதிகஙகள்.

இப்பதிகம் புறநீர்மைப பணணில் அமைநத சிறபபும் கருதத்தக்கது ; புறநீர்மை பகற்பண்களுள் ஒன்றுகும் ; இதறகு இக்காலததுக் கொள்ளும் இராகம் பூபாளம் என்பர். இது விடியற்காலம் ஞாயிறு உதிக்குமுன் உள்ள ஒரு முகூர்த்த வேளையில் (மூன்றே முக்கால் நாழிகை) பாடத்தக்க தென்பர் ; இதுவே திருப்பள்ளி எழுச்சிக் குரிய வேளையுமாம் ; " நீறணிந்தா ரகத்திருளும் நிறைகஙகுற புறத்திருளு, மாறவரு

திருப்பள்ளி யெழுச்சியினின் " (1333) என்று இதன் இயல்பை ஆசிரியர் விரித்துக் காட்டியருளினர் ; இது பற்றி ஆண்டுரைத்தவை பார்க்க; பாண்டி நாட்டிற் பழிநாடும் படி பரந்த அமண் என்னும் வல்லிருள் போய் மாய்ந்து விடியும் காலம் வந்தது என்ற குறிப்பும் தருவதாம். இதனால் பிள்ளையார் எழுந்தருளிப்பாடிய நேரம் விடியற்காலமாம் என்பதும் குறிப்பர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) வளவர்கோன் பாவை - சிறப்புப்பற்றிச் சோழனது மகளார் என்ற நிலைமையால் முதலிற் கூறிப் பாண்டிமா தேவி என்ற நிலையைப் பின் வைத்தார் ; சிறப்பாவது வழிவழி சைவ நெறியிற் றிறம்பாமையும் அதன் ஏற்றத்தை மறவாது முயலுதலுமாம் ; " மன்னிய சைவத்துறையின் வழிவந்த குடிவளவர் " (1900) என்றும், " சிவன்றிரு நீற்றினை வளர்க்கும்" (தேவா) ; " தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை " " தங்கள் பொங்கொளிவெண் டிருநீறு பரப்பினாரை " (மங்கை - புரா 1) என்றும் கூறும் கருத்துக்கள் காண்க. மானி - பெருமையுடைய அம்மையார் ; காரண இடுகுறியாய் மங்கையர்க்கரசி யம்மையாரைக் குறிக்க வழங்குவது ; பங்கயச் செல்வி - ஆயிரம் இதழ்த் தாமரையில் வீற்றிருக்கும் உமையம்மை போல்வார். 1718 - 1758-ல் உரைத்தவை பார்க்க ; அழலுநவன் - தீயினால், பின்னர் நிகழும் அனல்வாதமும், அனல் வாதமும், வெல்லும் வரலாற்றுக் குறிப்பும், இனம் பற்றிப் புனல்வாத வரலாற்றுக் குறிப்பும் காண்க ; வேதமும் பொருள்களு மருளி - வேதத்துக்குப் பொருளருளிய திருவிளையாடற் குறிப்பும், இனி வேத நூனெறியே யாக்கும் பயன் பற்றிய பகுதிகளின் குறிப்பும் கருதியது ;—(2) வேற்றவே - வேறொரு பயனும் வேண்டாமலே ; வீழ்தல் - அடியற்ற மரம் போல வீழும் நிலை குறிப்பு. வெள்ளை நீறணியும் கொற்றவன் - பிற்சரித விளைவுக் குறிப்பு ; உலகினில் இயற்கையை ஒழிந்திட்டு அற்றவர்க்கு அற்றசிவன் - பாசப்பற்று முழுவதும் நீங்கியவர்க்குத் (அவ்வறுதலாகிய தொழிலாற்) தான் முழுவதும் வெளிப்பட்ட சிவன் - " அற்றவே பெற்றார் நினைனன்பார் " (திருவா), " உற்றவா பெற்றவ மற்றவை முற்றும், அற்றவர்க் கற்றவன் அல்லவாக கல்லவன் " (இருபாவிருபஃது 20),—(4) அணங்கு - கங்கை ;—(5) செய்ய தாமரை மேலன்னம் - " பங்கயச் செல்வி " (1); செய்ய - முத்தித் திருவுக்கு முதல்வியாகிய என்றது குறிப்பு ;—(7) நீறும் - திருநீற்றன்பினைப் பலவாற்றாலும் விளக்கம் பெறக் கூறுதல் காண்க ; பளிங்கின் பெருமலையுடனே - மரகதம் அடுத்தாற் போல் - இறைவர் பளிங்கு மலை போலவும் அம்மை மரகதக்கொடி போலவும் உள்ளார் ; " மரகதக் கொடியுடன் விளங்கு, தென்னு பேரொளிப் பவளவெற் பென " (1644)—(8) நாவணங்கு இயல்பாம் அஞ்செழுத்து - ஐந்தெழுத்து ஓதுதல் நாவிற்கு இயற்கையா லமைந்தது. " நாவினுக் கருங்கல நமசிவாயவே " " நாப்பிணை தழுவிய " " நான் மறக்கினுஞ் சொல்லுநா நமசிவாயவே " என்பனவாதி திருவாக்குக்கள் காண்க, நல் இயல்பாதும் கோவணம் பூதிசாதனம் - கோவணமும் பூதியும் மணியும் நல் இயல்பாக உடலிற் பொருந்துவன ;—(9) மண்ணெலாம் - மன்னும் - அக்காலம் சோழர் ஆட்சி பெருக நிகழ்ந்தமை காணத்தக்கது ; " உலகெலாங் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் " (தேவா) ; " அனபாயன் பொற்குடை நிழற் குளிர்வது " (85) ; முதலியவை ஒப்பு நோக்கத் தக்கன ; மன்னும் - மன்னுகின்ற ; நிகழ்காலக் குறிப்பும் அருளாசிக் குறிப்பும்பட ஓதியது காண்க ;—(10) தன் - இங்கு அண்டநாயகரைக் குறித்தது ; அண்டநாயகரைத் தொண்டர் குலாவக் கண்டு குலச்சிறையார் அது கருதி யின்புறுகின்றார் என்பது ; தன் - குலச்சிறையாரைக் குறிப்பதாக உரைப்பாருமுண்டு ; துறியின் கன்

நெறியிடை வாரா - அந்நெறியில அவர் கொளளும் குறிப்பினில் அடங்காத ;—(11) பணியும் அந்நலம் பெறுசீர் - இறைவர் இவ் விருவரது பணிகளையும் ஏற்றருளும் சிறப்பு ; பணிகளும் வேண்டிய அந்நலஙகளைப பெறவுளள என்றலுமாம் ; இன்நலம் - இனிய நன்மை பெறும்படி.

தலவிசேடம்—திருவாலவாய் - பக்கம் கரு௲ அ௦ பார்க்க.

2562. பாடிய பதிகம் பரவியே வந்து பண்புடை யடியவ ரோடுந்
தேடுமா லயனுக் கரியவர் மகிழ்ந்த திருவால வாய்மருங் கணைந்து
நீடுயர் செல்வக் கோபுர மிறைஞ்சி நிறைபெரு விருப்புடன் புக்கு
மாடுசூழ் வலங்கொண் டுடையவர் கோயின் மந்திரி யாருடன் புகுந்தார்.

(இ - ள்) பாடிய...வந்து - அவவாறு பாடிய திருபபதிகத்தாற் பரவியபடியே வந்து ; பணபுடை....அணைந்து - அடிமைப பணபு பொருநதிய அடியவர்களோடும், தேடும் மாலுக்கும் அயனுக்கும் தெரிவரியராய நினற இறைவனார் மகிழநதெழுந் தருளிய திருவாலவாயத திருக்கோயிலின பககத்தே அணைநது ; நீடுயர்...புக்கு - நீண்டு உயர்ந்த செல்வத திருக கோபுரததைப் பணிந்து நிறையும பெரு விருப்புடனே உள்ளே புகுநது ; மாடுசூழ் வலங்கொணடு - பககத்திற் சூழும் திருமாளிகையினை வல மாகச் சூழ்ந்து வநது ; உடையவா ..புகுநதாா - இறைவரது திருககோயிலினுள்ளே மந்திரியாராகிய குலச்சிறையாருடனே புகுநதருளினா.

(வி - ரை) பாடியபதிகம் பரவியே வந்து - "பாடினார் குவலயம் போற்ற" (2561) என்று முன்கூறியபடி பாடிய திருபபதிகததினைப பாடிய வண்ணம் - பரவிய படியே ; "ஆலவா யாவது மிதுவே" என்று பாடித துதிததுக கணடு கொண்டபடி வந்து திருவாலவாயினை அணைநதனா ; "காளத்தி கண்டு கொண்டு, குளிர்வரு நதியூ டேகிக குலவரைச சாரல் சாாந்தாா" (749) என்ற நிலை கருதுக.

பண்புடை அடியவர் - "நற்றவக்கடல" (2559), "உயாதவத தொணடர்" (2559) ; இவாகள் பிள்ளையாருடன் வநத திருததொணடாகள ; "பெருகொளிய "திருநீறறுத் தொணடர்குழாம் பெருகிவர" (2546). இவர்களே முன்னர்ப் பிள்ளை யாரைப் பாண்டி நாட்டுக்கெழுநதருளிச் சமணரை வெனறு சைவம் விளங்க அருள வேண்டுமென்று போறறினவர்கள் என்க. 2512—பார்கக. இவையெல்லாம குறிக் கப் "பண்புடை யடியார்" என்றார் ; குலச்சிறையாா அரசாஙக நிலையில் எதிர்கொளச் சென்றார் ; தமிழ்நாட்டுப் பதிகள் எல்லாம அமணர்களது பலதிறபபட்ட பாழிகளும் பள்ளிகளுமாகிச், சைவநெறியினிற சிததஞ் செல்லா நிலைமையில் நிகழ்ந்தும், அம்மையார் அமைச்சனா ரிருவர் தம் பாங்குமனறிச் சைவ மஙகெயதாதாகியும், போந்த தன்மைகளால் சைவத் திருத்தொணடாகள் பலா பினளையாரை எதிாகொள்ளப் போதும் நிலையினரில ரென்பது குறிப்பு முன் 2499—2500—2501-ல் உரைத்தவை பார்க்க ; அடியாரோடும் - அணைந்து என்று கூட்டுக.

திருவாலவாய் - இங்குத் திருககோயிலைக குறிததது.

நீடுயர் செல்வக் கோபுரம் இறைஞ்சி - "நீள கொடிசூழ வியனெடுங கோபுரந் தோன்றும்" (2560) எனறும், "மணமிசைப பணிந்து" (2561) என்றும் முன்னர் கூறினார். அங்குக் கொடி சூழ்ந்த கோபுரச் சிகரங்கள தோன்றின. கோபுரத்தால் அறியப்பெற்ற திருக்கோயிலினையும் திருநகரததினையும் முன்னாப பணிந்தனர் ; இங்குக் கோயில் முழுதும் கோபுர முழுதும் காட்சிப பட்டன. முறைபபடி கோபு ரத்தை இறைஞ்சித் திருக்கோயிலினுள் புகுந்தனர்.

மாடு சூழ்புடை வலங் கொள்ளுதல் - இறைவர் எழுந்தருளியுள்ள நிலையின் பக்கத்திற் சூழ்ந்து உள்ளே அமைந்த திருமாளிகையினை வலமாக வந்து திருமுன்பு புகும் மரபு.

கோயில் - இறைவர் உள்ளே எழுந்தருளியுள்ள திருமுன்பு.

குறிப்பு - பாண்டி நாட்டில் அமணென்னும் வல்லிருள் சூழ்ந்தது ; அதனை மாய்ப்பதற்கு ஞானமணி விளக்கு எழுந்து வந்தது ; இஃது இரவு குறித்தது ; இனிப் பிள்ளையார் எழுந்தருளும் பொழுது இசைக்கும் காளத்தின் ஒலி குலச்சிறையார் செவியின் அமுது எனத் தேக்கிறது ; அப்பொழுது அவ்விரவு போய்ப் புலரும் காலமாகிய புலரி - (வைகறை) அணுகியது ; "அருணனிந் திரன்றிசை யணுகின னிருள்போ யகன்றது வுதயம" (திருவா) ; அங்கு வரலாறு கூறும் ஆசிரியரது தெய்வத் திருவுள்ளத்தில் திருவருட் குறிப்பின் வழி அந்நேரம் காட்டும் புறநீர்மைப் பண்ணின் சந்தம் எழுந்ததாக அந்த யாப்பில் வரலாறு கூறத் தொடங்கிக் கூறி வந்தருளினார் ; பிள்ளையாரைக் குலச்சிறையார் எதிர்கொண்டு பணிந்து அவரது திருவருள் பெற்றுப் போந்த போது பிள்ளையார் திருவாலவாயத் திருப்பதிகம் திருவருளால் இப்பண்ணிலும் சந்த யாப்பிலும் எழுந்தன ; அதனை அருளியபடியே பிள்ளையாரும் தொண்டர்களுடன் அமைச்சரோடு திருவாலவாய்க் கோயிலை அணைந்தனர். பொழுதும் புலரி நீர்ந்து விடிந்தது; இவ்வரலாற்றின் இச்சந்தப் பாடல் யாப்பும் முடிந்தது; திருமுன்பு சென்று திருவாலவாயுடையாரைக் கண்டதும் "நீல மாமிடற் றால வாயிலான, பால தாயினார் ஞால மாள்வரே" என்ற ஆணையின் அருளும் பிறந்தது ; சமண இருளும் மாய்ந்து இறந்த தன்மையதாயிற்று ; சைவமும் சிறந்தது ; பிள்ளையாரது பதிகம் திருவருட் குறிப்பின் வழியே காலத்துக்கும் நிலைக்கும் ஏற்க உதித் தெழுந்ததாக, அதன் வழியே வந்த ஆசிரியரது திருவாக்கும் அருட்குறிப்புத்தர எழுந்ததாம் என்க. 664

வேறு

2563. ஆளு மங்கண ராலவா யமர்ந்தினி திருந்த
காள கண்டரைக் கண்களின் பயன்பெறக் கண்டு
நீள வந்தெழு மன்பினாற் பணிந்தெழ நிறையார்
மீளவும்பல முறைநில முறவிழுந் தெழுவார் ; கசுரு

2564. அங்க மெட்டினு மைந்தினு மளவின்றி வணங்கிப்
பொங்கு காதலின் மெய்ம்மயிர்ப் புளகமும் பொழியுஞ்
செங்க ணீர்தரு மருவியுந் திகழ்திரு மேனி
யெங்கு மாகிநின் றேத்தினார் புகலிய ரின்றவர். சாசா

2563. (இ - ள்) ஆளும....கண்டு - ஆட்கொண்டருளும் அங்கணராகித் திருவாலவாயில் விரும்பி இனிதாக எழுந்தருளியிருக்கும் திருநீலகண்டராகிய இறைவரைக் கண்கள் பெற்றதன் இனிய பயனைப் பெறும்படி கண்டு ; நீள. .நிறையார் - நீளுமாறு வந்து எழும் அன்பினாலே பணிந்தெழுந்தும் அமைதி பெறாராகி ; மீளவும்... எழுவார் - மீண்டும் மீண்டும் பல முறை திருமேனி நிலம் பொருந்த விழுந்து எழுவாராகி, கசுரு

2564. (இ - ள்) அங்க மெட்டினும் ..வணங்கி - எட்டு அங்கத்தானும் ஐந்து அங்கத்தானும் அளவில்லாதபடி வணக்கங்கள் செய்து ; பொங்கு....அருவியும் - உண்ணிறைந்து பொங்கி எழும் அன்பின் மிகுதியினாலே மெய்யின்கண் மயிர்க்கூச்செறி

தலும், செங்கணைகள பொழிகின்ற நீரின் அருவி போன்ற பெருக்கும்; திகழ்... நின்று - திருநீற்றின் ஒளிவிளங்கும் திருமேனியில் முழுவதும பொருந்தும்படி நின்று; புகலிய நிறைவர் ஏத்தினார் - சீகாழித் தலைவராகிய பிள்ளையார் துதித்தருளினார். கூகூகூ

இந்த இரண்டு பாட்டுகளும் தொடர்ந்து ஒரு முடிவு கொண்டன.

(வி - ரை) ஆளும் அங்கணர் - இனி மன்னவனை ஆட்கொண்டருளும் அங்கண்மையுடையார் என்றது குறிப்பு. இதுவரை ஆட்கொண்டது முன்செய் தீவினைப் பயன் தந்து மறக்கருணை செய்து அவன அலமருதல் கண்ணுற்றருளியதாம்; இனி அவனது வினைகள ஒத்துத் துலையென நிறறலாலே அருகண்மை செய்து ஆளாக ஏறறுக் கொண்டருளும் நிலை; அங்கணர் என்ற குறிபபுமிது. ஆளுமங்கணர் - கண்டு என்று கூட்டி ஆட்கொளவந்த பிள்ளையார் கணடு எனறலுமாம.

ஆலவாயமர்ந்தினிதிருந்த காளகண்டர் - அரசனும நாடடவரும் முன் செயத தீவினைகளாகிய விடததை அமுதமாக ஏற்றருளுபவா என்பது குறிபபு; "நீலமா மிடறு, ஆலவாயிலான" என்ற தேவாரக கருததை விளககியபடி.

பயன்பெறக் கண்டு - "கணகாள் காண்மினகளோ கடனஞ்சுண்ட கண்டன் றன்னை" (திருவாசகமாலை).

கண்களின் பயன் - கண் கிடைககபபெறற பயன - ஞானக்கணணால் எப பொழுதும காணபவா புறககணணும் பயன பெறக்கண்டார எனறும, இதுவரை கண காணாது பயனிழந்த மதுரை மக்கள் இனிக்கணடு பயன பெறும்படி தாம்கண்டு என்றும் உரைகக நின்றது; "இங்கெம்மைக் கண்விடுதத" (2776).

பணிந்தெழ நிறையார் - மீளவும் பலமுறை - விழுந்தெழுவார் - அளவின்றி வணங்கி என்று மேல்வரும் பாட்டுடன கூட்டியுரைத்துககொள்க. நிறையார் - நிறைவு (அமைதி - திருததி) பெறாதவராகி; வணஙகுதல மூன்று - ஐந்து - ஏழு - ஒன்பது - பதினொன்று என முறைபபட விதிககபபட்டது. அவவாறு அளவுபட வணஙகுதலில் மனம அமையாது; அளவில்லாதபடி பலமுறையும வீழ்நது வணங்கி எழுநதனர் எனபதாம்; நிறையாா - விழுநதெழுவாா - வணஙகி - நின்று - ஏத்தினார் என வரும்பாட்டுடன முடிகக.

நீளவந்து எழும் அன்பினால் - இவவாறு அளவுகடநத நிலையில வீழ்ந்தெழுந்து வணங்குதல் அளவுகடநது பொங்கி எழுும அனபினாலன்றி விளையாது எனபதாம். 665

2564. (வி - ரை) அங்கமேட்டினும் ஐந்தினும் அளவின்றி வணங்கி - அட்டாங்க பஞ்சாஙகமாகச செய்யும வணக்கஙகளை எணணில்லாதபடி செயது; அட்டாங்க வணக்கம் - எட்டங்கங்களும் நிலநதோய வணஙகுதல; ஐந்து அங்கங்கள் நிலம்பட வணஙகுதல பஞசாஙக நமக்காரம எனபபடும; இவை இனனவென்று முன்னர்க் கூறப்பட்டன. ஆணபாலாா இவையிரணடும செய்தல் வேணடும்; பெண்பாலாா ஐந்தஙக வணக்கமே செயதறகுரியா

மயிர்ப்புளகமும் கண் நீரருவியும் திருமேனி எங்கும்ஆகி - திருமேனி முழுதும் மயிர்பபுளகம கொண்டது; கணணீா அருவிபோலப் பெருகித் திருமேனி முழுதும் நனைநதது; இவவாறாகிய நிலையடைநது. "உடமபெல்லாங் கண்ணா யண்ணா வெள்ளந்தான் பாயாதால்" (திருவா).

திகழ் திருமேனி - திகழ்தல் - பேரழகினாலும் திருநீறறொளியினாலும் விளங்குதல்.

**எத்தினர்** - பலவகையாலும தோததிரம் செய்தனர் ; பதிகத்தாலேத்துதல் மேற் கூறப்படும். 666

2565. "நீல மாமிடற் றாலவா யா"னென நிலவும்
மூல மாகிய திருவிருக் குக்குறண் மொழிந்து
சீல மாதவத திருத்தொண்டர் தம்மொடுந் திளைத்தார்
சாலு மேன்மையிற் றலைச்சங்கப் புலவனார் தம்முன். ௬௬எ

**(இ - ள்)** *நீல...மொழிந்து*- "*நீல மாமிடற* *றால வாயிலான்*" *என்று தொடங்கி நிலவுகின்ற மூலமாகிய திருஇருக்குக குறட் பதிகததினை அருளிச்செய்து ; சாலும்...தம்முன* - *பொருந்திய மேன்மையினையுடைய தலைச்சஙகப புலவனாராகிய சோமசுநதரமூாததியின திருமுனபு ; சீல...திளைததார்* - *ஒழுக்கத்தான மிகுந்த மாதவமுடைய திருததொணடராகிய குலச்சிறையாருடனே கூடி அன்பினுள அழுந்தி மகிழ்ந்தனா.*

**(வி - ரை)** "**நீலமாமிடற் றலவாயான்**" என - இது பதிகத தொடக்கம் ; **நிலவுதல்** – *நிலை பெறுதல*

**நிலவும் மூலமாகிய திருவிருக்குக் குறள் இருக்குக்குறள்** - *பதிகபபாட்டின் யாபபு வகை ; மூலம் - சிறிய அளவில ஒடுங்கிப் பெரிதினைத தோற்றுவிககும தனமையுடைய பொருள் ; விததும அஙகுரமுமபோல ; மேலவரும நிகழசசிகளின காரணமாக நின்ற திருவாக்குக்களை அடக்கிப பினனாத் தோறறுவிக்கும நிலை குறிபபு ; யாப்பிலக்கணத தள, அடி இருசீரளவிற்கொண்ட குறட்பாவே ஏனை எல்லாப பாக்களுககும பாவினங் கட்கும் தொடககமாம என்ற சொல்வகைக் கருததும, அதுபோலவே முனகூறிய பொருள் வகைக் கருததும புலபபட இவவாறு மூலமாகிய என்றா ; மேல்வரும நிகழச்சிகளின குறிபபினையே திருவுளததுக் கொணட அருளால் இப்பதிகம் போந்த தென்பது "ஆல வாயிலான பால தாயினர் ஞால மாளவரே" எனறு பின்னர்ப பாண்டியன சிவநெறி சாரும நிலை குறிததருளை அறியபபடும. "முடிவி லின்றமிழ செடிக ணீக்குமே" என்ற திருககடைககாபபும காணக. மூலம் - மூல இலககியம் எனறலுமாம.*

சாலு மேன்மையில் தலைச்சங்கப் புலவனார் தம்முன் - திளைத்தார் - என்க.

**மேன்மையின் தலைச்சங்கப் புலவனார் - மேன்மையின்** - *மேனமையினையுடைய, இரண்டனுருபும பொருளும உடனதொககன. மேனமையில- திளைததாா எனறுகூட்டி உரைததலுமாம. சாலுதல் - பொருநதுதல , அமைதல்.*

**தலைச்சங்கப் புலவனார் தம்முன்** - *திருவாலவாயுடையாரைத தமிழ்ச் சங்கப் புலவா தலைவா என்ற தனமையைக குறிபபினாலே கணடும, திருவுளததுட் கொணடும் வணஙகினா ; அரசுகளும "சென்றணைநது மதுரையினிற நிருநதிய நாறசஙகததுள் ளிருந்து தமிழாராயந தருளிய வஙகண "ராகவே (1668) கணடு வழிபட்டதனையும் காணக ; ஆண்டுரைததவையும இஙகு நினைவுகூாக ; "தமிழ்நாடு பழிகாடும படிபரந்த மானமிலா வமணென்னும் வலவிருளபோய் மாய்வதனுககு" (2550) எனறு முன் கூறிய குறிப்புககளும கருதுக ; புலவனார் - திருவாலவாயுடையாா. பிளளையாரது தமிழருமையறியும பெருமான என்பதும குறிபபு இவரைத திரிபுரமெரிதத விரி சடைக கடவுள் என்பது முதலாகப் பழநதமிழநூல்கள் பேசும்.*

**சீலமாதவத் திருத்தொண்டர்** - *குலச்சிறையார் ; பிள்ளையாருடன் போந்தவனைத் தொண்டர்கள் என்றலுமாம்.* 667

திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் திருவிருக்குக்குறள்—பண் - குறிஞ்சி

நீல மாமிடற், றால வாயிலான், பால தாயினர், ஞால மாள்வரே. (1)

அடிக ளாலவாய்ப, படிகொள் சம்பந்தன், முடிவி லின்றமிழ், செடிக ணீகுமே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பாண்டி நாட்டில் உற்ற தீமைகளை நீக்கிப பாண்டியனையும அந்நாட்டினையும் வெண்ணீறு இடுவித்துச் சிவநெறியிற் புகுத்துதல் கருத்து.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) நீலமாமிடற்று ஆலவாயிலான்-விடமுண்டு அமரர்களைக் காத்ததமைபோல அமண் கழுவிய பாண்டிநாட்டினைக் காப்பர் ; பாலதாயினர் - அவன் சார்பு இப்போதின்றி இனிப் பெற்றுச் சைவராவார் ; ஆயினர் - ஆள்வர் - ஆகக்சொல், அவ்வாறுதல் வருங்காலம் எனபதனையும், ஆவான் அரசன் என்பதனையும் குறித்தது ; " அகில காரணா தாள்பணி வாரகடாம, அகில லோகமு மாளற் குரியர் " (139) என்ற கருததும் காணக ;—(2) ஞாலம் - உலகங்கள் ; ஏழுமாம் - கலபபினாலும் நிமித்த காரணராம தன்மையாலும் இவவாறு கூறினார் ; சீலம் - சரிதை—(3) ஆலநீழலார் - கல்லாலின அடியில் இருப்பவர் ; பாலதாமின் - உலகர்க்கும் அந்நாட்டவர்க்கும அருளினால உபதேசித்தது.—(5) ஆடல் - சாரவிலாதாரை அடுகின்ற தன்மை ; மாயப பசுவை வதைத்த திருவிளையாடல் காணக.—(10) தேரமண் சேற்ற வீரன்-சரிதக குறிப்பும் உடையது ; சேற்ற - துணிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினார் ; —(11) செடிகள் - நாட்டுக்கு அந்நாள் நேர்ந்த கேடும், இனி இப்பதிகத்தினைப் பயில்வார்பால் வரக்கூடியனவாகிய தீமைகளும் ஆம்.

2566. சேர்த்து மின்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்புச்
சாத்தி, நல்லிசைத் தண்டமிழ்ச் சொன்மலர் மாலை
பேர்த்து மின்புறப் பாடி, வெண் பிறையணி சென்னி
மூர்த்தி யார்கழல் பரவியே திருமுன்றி லணைய, சாசஅ

2567. பிள்ளை யாரெழுந் தருளிமுன் புகுதுமப் பொழுது
வெள்ள நீர்பொதி வேணியார் தமைத்தொழும் விருப்பால்
உள்ள ணைந்திட வெதிர்செலா தொருமருங் கொதுங்குந்
தெள்ளு நீர்விழித் தெரிவையார் சென்றுமுன் பெய்த, சாசக

2568. மருங்கின் மந்திரி யார்பிள்ளை யார்கழல் வணங்கிக்
கருங்கு ழற்கற்றை மேற்குவி கைத்தளி ருடையார்
" பருங்கை யானைவாழ் வளவர்கோன் பாவையா " ரென்னப்
பெருங்க ளிப்புடன் விரைந்தெதிர் பிள்ளையா ரணைந்தார், சஎO

2569. தென்ன வன்பெருந் தேவியார் சிவக்கன்றின் செய்ய
பொன்ன டிக்கம லங்களிற் பொருந்தமுன் விழுந்தார் ;
மன்னு சண்பையர் வள்ளலார் மகிழ்சிறந் தளிக்கும்
இன்ன ருட்பெருஞ் சிறப்பொடு திருக்கையா லெடுத்தார். சஎக

2566. (இ - ள்) சேர்த்தும...சாத்தி - சேர்க்கின்ற இனிய இசையினையுடைய பதிகத்தினையும் திருக்கடைக் காப்புச் சாத்தி நிறைவாக்கி ; நல் இசை...பாடி - நல்ல

இசையினையுடைய தண்ணிய தமிழச சொற்களாலாகிய மலாமாலையினைப் பேர்த்தும் இன்பம் பொருந்தபபாடி ; வெண...அணைய - வெள்ளிய பிறையினை அணிந்த சென்னியினையுடைய இறைவரது திருவடிகளைப பரவியே திருமுன்றிலினை வந்து அணையும் போது ; ௬௬௮

2567. (இ - ள்) பிள்ளையார்...அபபொழுது - முன்னாப பிள்ளையார் திருக்கோயிலினுள்ளே எழுந்தருளிப புகுநத அபபொழுது ; வெள்ள நீா...உள்ளணைந்திடகஙகை தங்கும சடையினையுடைய இறைவரைத தொழுகின்ற ஆாவததோடும் உள்ளே அணைநதிடலாலே ; எதிா செலா து...தெரிவையாா - அவர் எதிரிற் செலலாது ஒரு பககததில் ஒதுஙகிய தெள்ளும நீரிற பொருநதிய கணகளையுடைய தெரிவையாராகிய அம்மையாா , சென று முனபு எயத - (அவர்து) திருமுன்பு சேர ; ௬௬௯

2568. (இ - ள்) மருஙகின...வணஙகி - பககததே வநத மநதிரியாராகிய குலச்சிறையாா பிள்ளையாரது திருவடிகளை வணஙகி நினறு ; "கருநகுழல்...பாவையார்" என்ன - "கரிய கூநதலின மேலே கூபபிய கைததளிா்களை யுடைய அமமையார் பரிய கையினையுடைய யானைகள வாழுமவளச சோழ மனனரது மகளாா" என்று சொல்ல ; பெரும...அணைநதாா - பெருமகிழச்சியுடனே விரைநது அவவம்மையார் எதிரே அவா வநது அணைநதனராக ; ௬௭௦

2569. (இ - ள்) தெனனவன...வீழநதாா - பாணடியனது பெருந தேவியாராகிய மஙகையாக்கரசி யமமையாா சிவக்கனறுகிய அவரது சிவநத பொன் அடித தாமரைகளிற் பொருநதும்படி முன விழுந்து பணிநதனா ; மன்னு...எடுததாா - நிலைபெற்ற சீகாழிப பதியவாகளது வளளலாராகிய பிள்ளையாா மகிழசசி கூர அளிக்கும் இன்னருளுடைய பெருஞ சிறப்பினேடும் திருககைகளால அவரை எடுததருளினர். ௬௭௧

இந்நானகு பாட்டுககளும் தொடாந்து ஒரு முடிபு கொணடுரைககினறன. பொருட்டொடாபுபறறி 2568-ல் அணைந்தார் என்றதனை எசசமாகக கொணடுரைதது ஒரு முடிபு காட்டி உரைககப்பட்டது ; வினை முறறாகவே கொணடு வேறு முடிபு கொள்ளினுமிழுக்கில்லை.



2566. (வி - ரை) சேர்த்தும் இன்னிசை - கருதிய பயனைக கூட்டும் இனிய இசை ; இசைகள குறிதத அவவப பயன தருதலை இசை நூல வகுததுக கூறும் ; ஏனைய இசைகள் போலொழியாது, பிள்ளையார் கூட்டிய பணணிசை உயாநத பயன் தருதலின சேர்ததும் இன்இசை என்று சிறபபித்தாா.

நல்லிசைத் தண்டமிழ்ச் சொன்மலர் மாலை பேர்த்துமின்புறப் பாடி - "மலமா மிடற்று" என்ற இபபதிகமேயனறி வேறு மொரு பதிகமும் பாடியருளினா என்பது குறிப்பு ; அபபதிகம இறநது பட்டது போலும ! ; "முடிவி லின்றமிழ செடிக ணீக்குமே" என இப பதிகப பயன கூறியபடி, பாணடி நாட்டின துன்ப நீக்கங் கருதி இப்பதிகததினையும், அதனின் வேறாய இன்ப ஆக்கத்துககாக மறறுமொரு பதிகமும் அருளுதல இயைபுடைத தெனக ; இவவாறே பின்னா "வாது செயத்திருவுளளமே" "வாதில் வென்றழிககத் திருவுளளமே" என்று இரணடு பயன் கருதி வெவவேறு இரண்டு பதிகங்கள் அருளியமை கருதுக ; "பரசமய நிராகரித்து நீறாக்கும்" (1917) என்றதும், ஆணடுரைததவைபும பாாக்க ; இன்புற - இனபம உறும் பொருட்டு எனற கருததும் இது ; பேர்த்தும் - மாலை - பாடி - மீணடும மறறும் ஒரு மாலை பாடி ; பதிகமும், போததும என்ற உம்மைகளால வேறு பதிகம எனபது தெளியபபடும். இவ்வாறன்றி அபபதிகததினையே மீண்டும அனுசந்திததுப் பாடினர் என்றுரைப பாருமுண்டு.

**கழல் பரவியே** - முன் பதிகம் பொருளியல்பும் பயனும் கூறி ஆணைதரும் இயல்பில் அருளினர்; இப்பதிகம் அவ்வாறன்றி இறைவரது திருவடிகளைத் துதிக்கும் வகையானருளப்பட்ட தென்பது குறிப்புப் போலும்.

அணைய - முன்பெய்த - என்ன - அணைந்தாராக - விழுந்தார்; எடுத்தார் - என முடித்துக் கொள்க. 668

2567. (வி - ரை) **எதிர்செலா தொருமருங்கு ஒதுங்கும்** - இது இப்பாட்டின் கருத்து நுட்பம்; மிகவும் மனங்கொளத்தக்கது:—பிள்ளையாரையெதிர் கொள்ளும்படி குலச்சிறையாரை ஏவினர் அம்மையார்; அவரும் அவ்வாறே எதிர்கொள்ள எய்தும் காலைத் தாமும் தமது நிலைமைக்கேற்றவாறு எதிர்கொள வேண்டுமென்று அம்மையார் எண்ணினார்; ஆலவாயமர்ந்தாரைக் கும்பிட வேண்டுமென்று கொற்றவன் றனக்கும் கூறித் திருவாலவாய் சென்று நம்பரை வணங்கிப் பிள்ளையார் வரவை எதிர்நோக்கி நல்வரவேற்று நின்றனர் (2545); பின்னர்ப் பிள்ளையாரும் திருவாலவாயினுள் எழுந்தருளினார்; ஆனால், அவரை நல்வரவேற்கும் பொருட்டே அங்கிருந்த அம்மையார் அப்போது அவர் முன்பு எதிர் செல்லாது ஒருபுறம் ஒதுங்கிக் கொண்டனர்; பிள்ளையாரும் ஆர்வத்தால் வேறெங்கும் நோக்காது நேரே உட்சென்று முறையினால் இறைவரை வணங்கிப் பாடி அருள்பெற்றுப் புறம்பு திருமுன்றிலில் எய்தினார்; அப்போது அம்மையார் அவர் திருமுன்பு எய்தினர் என்பதாம்.

**முன்புகுதும் அப்பொழுது...உள்அணைந்திட** - அணைந்திட - அணைந்திடலால; பிள்ளையாரை நலவரவேற்பதற்காக வந்த அம்மையார் அவர் உட்புகும்போது எதிர் செல்லாது ஒதுங்கிக்கொண்டதன் காரணம் கூறியபடி; என்னை? - உட்புகும் அப்பொழுது இறைவரைத் தொழும் பெருவிருப்பினுற் செல்கின்றாராதலின் அப்பொழுது அதற்கிடையூறாய்க் குறுக்கிட்டு முன்னின்று வரவேற்பது தகுதியன்று; அன்றியும் திருக்கோயிலில் வழிபடச் செல்வோர் அதற்குப் புறம்பாகிய வேறொன்றினும் கவனம் செலுத்துதல் முறையன்றாதலின் அவரும் இவரைக் காணமாட்டார்; தமது வரவேற்பும் கருதிய பயன்தராது ஒழிந்து வீணாகும்; மேலும் மறறொன்று - பிள்ளையார் உட்புகுந்து தமது பெருமானை வணங்குவர்; தம்பொருட்டு வேண்டி அவரது அருள்பெற்று மீள்குவர்; அவ்வாறு மீளும் பொழுது முன் சென்று வணங்கின் பிள்ளையாரருளேயன்றி அவ்வருட் பிரசாதத்தினையும் பெறத் தக்கது என்ற நிலையும் கருதத்.

**தெள்ளுநீர் விழி** - அன்புக் கண்ணீர் பெருகும் கண்கள்; இது தாயார்த்தன்மை நிலையினால் எழுந்தது; "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூச றரும்" (குறள்); "சாரத் திருமுலைக்கே தய்ய சிவஞானஞ் சுரந்தளித்தண்டார் பிள்ளையெனச் சொல்லச - சுரந்த, தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த, மனமுடையா ளன்பிருந்த வாறு" (களிறு - 54); "இல்லா முலைப்பாலுங் கண்ணீர் மேற்திழைபா, னல்லா யுளவாமால்" (போதம் 8 சூத்;) என்று வரும் திருவாக்குக்களும், "ஏந்திய இழைகளை யுடையாட்குக் குழவிமாட்டுளதாகிய அருவாகிய அன்பினைப் பிற ரறியுமாறு வெளிப்படுத்தும் அவ்வன்பினுருவாகிய முலைப்பாலுங் கண்ணீரும் அவண் மாட்டுக் குழவியைக் காணுமுன் இல்லாவாய்ப், பின்னுளவாம்" "அவ்விரண்டும் அன்பின் வடிவே பிறவல்ல வென்பது, அன்பு நிகழ்தற்குரிய காரண முள்வழி வெளிப்பட்டு, அஃதில்வழி வெளிப்படாத ஒற்றுமை நோக்கிக் கண்டுகொள்க" என்று வரும் சிற்றுரையும் காண்க; இங்குக் கண்ணீர் மட்டும் கூறினாரேனும் மேற்கூறிய நியாயத்தால் இனம்பற்றி முலைப்பாலுங் கொள்க. இக்கருத்தைப் பற்றிப் பின்வந்த பெரியா

ராகிய சிவப்பிரகாச சுவாமிகளும் "முன்னின் னிலைவிளம்பக், கொங்கை சுரந்தவருட் கோமகளோ" (நால்வர் நான்மணிமாலை) என்று போற்றினார்.

**தெரிவையார்** - தெரிவை - பெண்களின் ஏழு பருவங்களுள் ஆறாவது; 25 வயது முதல் 31 வயது வரையும் உள்ள பருவம்; இஃது அப்பொழுது அம்மையாரது வயதைக் குறிக்கும் மொழி என்று கருத இடமுண்டு; பெண்பாற் பொதுப் பெயர் என்று கொள்ளினு மிழுக்கில்லை; இங்கு இப் பெயரால் கூறியது இதனைப் பயனும் படு பொருளும் தெரிந்து செயலாற்றும் தன்மையுடையார் என்ற குறிப்புத் தருதற்கு; "மானியார் மனக் கருத்து முற்றியதென மகிழ்தே" (2570) என மேற்கூறுதல் காண்க.

**முன்பு எய்த** - பிள்ளையார் திருமுன்பு செல்ல. 669

2568. (வி - ரை) மருங்கின், வணங்கி - மருங்கின் **மந்திரியார்** - பிள்ளையாருடன் வந்த திருத் தொண்டர்களுள் பக்கத்தே வந்த குலச்சிறையார்.

**பிள்ளையார் கழல் வணங்கி - மந்திரியார் - "பாவையார்" என்ன** - என்று கூட்டுக. இஃது அம்மையாரைப் பிள்ளையாருக்கு மந்திரியார் அறிமுகப் படுத்திய முறை; இஃது முந்நாளின் புது நாகரீக முறைகளுள் ஒன்றாகக் கிடைத்ததாகக் கருதி மகிழ்ந்து கொள்வாருமுளர்; இங்குக் காணும் உயர்ந்த நிலையினைக் கண்டு யாவரும் பின்பற்றி நலம் பெறுவாராக; வணங்கி அறிவிக்கும் முறையும் காண்க

"**கருங்குழல் பாவையார்**" என்ன - இது அமைச்சர் விண்ணப்பித்தது; **மேற் குவி கைத்தளி நடையார்** - அது போழ்து அம்மையார் சிரமேற் கைகுவித்து நின்றனர் என்பதறியப்படும்; இதனை முன்பாட்டிற் கூறாது இங்கு அமைச்சர் வாக்கிற் கூறவைத்த கவிநயம் கண்டு கொள்க; கற்றை - தொகுதி; **கைத்தளிர்** - கைகளாகிய தளிர் என்க; திருவடிகளில் தளிர்களையிட்டு வணங்கிப் பழகிய கைகள் என்ற குறிப்பும் காண்க. பிள்ளையாரை வணங்கத் தளிர்களையும் மலர்களையும் கையிற் கொண்டிருந்தார் என்றதும் குறிப்பு

**பருங்கை யானை வாழ் வளவர் சோன்** - யானை வாழும் வளத்தினையுடையார். யானைப் படையும் குறிப்பு

**வளவர்கோன் பாவையார்** - சோழரது மகளார் என்றறிவித்த திறம் காண்க; இதுபற்றி முன் "வளவர்கோன் பாவை" (தேவார); "செம்பியர் பெருமான் திருமகளார்" (2556) என்ற இடங்களிலும், பிறண்டு முரைத்தவை பார்க்க; பிள்ளையார் அருளிய தேவாரத்தை உடனிருந்து கேட்ட நினைவின் குறிப்பினை உட்கொண்டு அவரது திருவுள்ளத்திற் கேற்கும்படி அறிவித்த குறிப்புமாம்.

**எதிர்** - அம்மையார் முன்பு; பிள்ளையாரது முன்பு அம்மையார் சிரமேற் கை கூப்பி எய்தினார்; மந்திரியார் அறிவிக்கப் பிள்ளையாரும் விரைந்து அம்மையாரெதிர் அணைந்தனர். இவை அன்பின் திறம்.

**கைம்மலநடையார்**—என்பதும் பாடம். 670

2569. (வி - ரை) **பெருந்தேவியார்** - பட்டத்துக்குரிய தேவியார்; "பெருங் கோப்பெண்டு" முதலிய பெயர் வழக்குக்கள் காண்க.

**சிவக்கன்று** - ஆளுடைய பிள்ளையார்; **கன்று** - இளமையும் அருமையும் குறித்தது; "புண்ணியக் கன்று" (1959).

**பொன்னடிக் கமலங்களிற் பொருந்த முன் விழுந்தார்** - நிலமுற விழுந்து வணங்கியபோது தமது தலை அவரது திருவடிகளிற் பொருந்தும்படி என்பது.

மகிழ் சிறந்து அளிக்கும் இன்னருட் பெருஞ் சிறப்பு - அருள் கொடுக்கும் சிறப்பாவது எழுக என்று அருளாசி புரிந்து செய்தல்; இறைவர்பாற்பெற்ற அருளை மகிழ்ந்து வழங்கும் சிறப்பு என்ற குறிப்புமாம்.

திருக்கையா லெடுத்தார் - முன்னர்க் குலச்சிறையாரையும் இவ்வாறே "கர கமலங்கள் பற்றியே எடுப்ப" என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

விழுந்தார் - எடுத்தார் - என்று இருவர் செயலும் ஒருங்கே இப்பாட்டாற்கூறியது கவிநலம்; அழுதார் பாலுண்டார் என்பது போல விழுந்தமையால் எடுக்கப்பெற்றார் என்று காரணக் குறிப்புப்பட நின்றது. முன் உரைத்தவை பார்க்க. 671

2570. ஞான போனக ரெதிர்தொழு தெழுந்தநற் றவத்து
மானி யார்மனக் கருத்துமுற் றியதென மதித்தே
பான லங்கண்க ணீர்மல்கப் பவளவாய் குழறி
"யானு மென்பதி யுஞ்செய்த தவமென்கோல்!" என்றார். ௬௭௨

(இ - ள்) ஞான போனகரெதிர்...மானியார் - பிள்ளையாரெதிரில் தொழுதெழுந்த நல்ல தவத்தையுடைய அம்மையார்; மனக்கருத்து முற்றியதென மதித்தே - தமது மனத்துட் கொண்ட கருத்தாகிய சைவத் தாபனமும் பாண்டி நாட்டின் மீட்சியும் முற்றுப் பெற்றன என்றே துணிவு கொண்டு; பானலங்கண்கள்...என்றார் - நீல மலர்போன்ற கண்களில் நீர் பொருந்தப் பவளம் போன்ற வாய் குழறி "யானும் எனது பதியும் 'தேவரீர் இங்கு எழுந்தருளும் இப்பேறு பெறுதற் பொருட்டு' முன் செய்த பெருந்தவம்தான் என்னை கொல்லோ!" என்று கூறினார்.

(வி - ரை) இது பிள்ளையார் தம் அடிபொருந்த வீழ்ந்த அம்மையாரை அருட் கையினாலெடுத்தருளியபின், அம்மையாரது மனஞ் சொற் செயல்களைக் கூறியபடி.

தொழு தெழுந்த - தொழுதபடியே அடிபொருந்த வீழ்ந்தவர் தொழுத வண்ணமே எழுந்தனர். தொழுது - தொழுதபடி.

நற்றவத்து மானியார் - நல்ல தவத்தையுடையா ராதலின் எனக் காரணக் குறிப்புப்பட வந்த அடைமொழி.

மனக்கருத்து முற்றியது எனவே மதித்து - எனக; எனவே என்று ஏகாரம் பிரித்துக் கூட்டுக. மனக்கருத்து - 2511-ல் உரைக்கப்பட்டது. அமணர்களால் கட்டழிந்த சைவ ஒழுக்கம் குன்றிய நிலையினை ஆளுடைய பிள்ளையாரால் நீக்கித் திருநீற்று நெறி தழைக்கச் செய்வது.

முற்றியது எனவே - விரைவும் உறுதியும்பற்றி எதிர்காலத்து நிகழ்வதனை இறந்த காலத்தாற் கூறினார்;

கண்கணீர் மல்க - வாய்குழறி - இவை அன்பு மிகுதியால் உளதாகும் ஆனந்த மேலீட்டினால் நிகழ்வன.

யானும் என்பதியும் செய்ததவம் என்கோல்! - இது அம்மையார் பிள்ளையாரை நல் வரவேற்ற முறையில் கூறியது; என்பதி - எனது கணவர் - பாண்டியர்; பதி - என்பதற்கு - நகரம் - நகரமாந்தர் என்று உரைப்பாருமுண்டு; பதியினையும் உடன் கூறியது இல்லறநிலை முறையும் பிள்ளையார் எழுந்தருளியதனால் அவர்க்கே மிக்க பயன் செய்யு நிலையும்பற்றி என்க.

செய்ததவம் - தேவரீர் இங்கு எழுந்தருளும் இப்பேறு பெறுதற் பொருட்டு என்பது குறிப்பெச்சம்.

செய்த - இந்நாள் இது பெறுதற்குரிய பெருந் தவம் ஒன்றும் யாம் செய்திலோம்; பெருந்தவத்தாலன்றி இப்பேறு வாராது; ஆதலின் தவம் முன் செய்திருத்தல் வேண்டும் என்பார் செய்த - என முன்னை நிலைபற்றிக் கூறினார்.

தவம் என்கொல்! - யாங்களறிய வாராத அத்துணைப் பெரிது என்று அதிசயக் குறிப்புப்பட வந்த வினா; "நன்னிலை கன்னி நாட்டு நல்வினைப் பயத்தாற் கேட்டார்" (2503) என்றது இங்கு நினைவு கூர்தற்பாலது. 672

2571. யாழின் மென்மொழி யார்மொழிந் தெதிர்கழல் வணங்கக்,
காழி வாழவந் தருளிய கவுணியர் பிரானுஞ்
" சூழ மாகிய பரசம யத்திடைத் தொண்டு
வாழ நீர்மையீர் உமைக்காண வந்தன " மென்றார். ௬௭௩

(இ - ள்) யாழ்...வணங்க - யாழ்போன்ற இனிய மென்மொழியினையுடைய அம்மையார் இவ்வாறு சொல்லி மீண்டும் தமது திருவடிகளை வணங்க; காழி...பிரானும் - சீகாழியவர் வாழ்வடையும்படி வந்தருளிய கவுணியர் தலைவரும் (அம்மொழி கேட்டு); "சூழுமாகிய ..வந்தனம்" என்றார் - சுற்றும் பரவிய பரசமயச் சூழலினிடையே திருத்தொண்டின் நெறியில் விடாது வாழ்கின்ற நீர்மையுடையீர்களே! உங்களைக் காணும் பொருட்டு வந்தனம் என்று அருளிச் செய்தார்.

(வி - ரை) யாழின் மென் மொழியார் மொழிந்து - அம்மையார் கூறிய வரவேற்பு மொழி பிள்ளையார் திருச்செவிகளில் சாரந்தபோது விளைந்த நிலைமையை இவ்வாறு அடைமொழியாற் சிறப்பித்துக் கூறினார்; "யாழைப்பழித் தன்னமொழி மங்கை" (திருமறைக்காடு - நம்பி. தேவா); "பண்ணி னேர்மொழி யாளுமை" (ஷை திருநா. தேவா) என்றும் உமாதேவியாரது அருண் மொழிகளைச் சிறப்பித்ததாகப் பிள்ளையாரது திருச்செவிகளில் அம்மையாரது விண்ணப்பமும் தாயின் இன் சொற்களின் தன்மையுடன் புகுந்தன என்பதாம். பிள்ளையார் கூறியருளிய விடையில் "தொண்டு வாழு நீர்மையீர் உமைக்காண வந்தனம்" என்றதும், "பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி" என்ற பதிகமும் தாயைக் காணவரும் சேயின் தன்மையாகிய இக்குறிப்புத் தருவதாம்.

எதிர் வணங்க - எதிர் வணக்கமாவது (அருள்மொழி பெறும் வகையால்) நல வரவேற்பு மொழி மொழிந்த பின் மீண்டும் வணங்குதல். "மீளவும் பணிந்து" (2558) என்றது காண்க.

காழிவாழ வந்தருளிய - காழிப்பதி வாழ வந்த என்றலுமாம்.

சூழுமாகிய...நீர்மையீர் - சூழும் ஆகிய - சூழலாகிய, சுற்றுமுற்றும் எங்கும் சூழ்ந்துநின்ற; தமது சமயத்தினைப் பரப்புதலேயன்றிச் சூழ்ச்சிகளாலே சைவ சமயத்திற்குக் கேடு சூழ்கின்ற என்ற குறிப்புமாம்; சுழல் காற்றுப் போல எங்கும் சூழ்ந்து வளைந்து ஆழ்த்துகின்ற எனபதும் குறிப்பு;

பரசமயத்திடைத் தொண்டு வாழும் நீர்மை - தமது சைவநெறியே மிக்கு நிகழும் காலையிலேயும் திருத்தொண்டு நெறியில் நன்கொழுகி வாழ்தல் அரிதாவது மக்களின் வலிய மலபந்த நிலை; அதனோடு பரசமயச் சூழலின் இடையே திருத்தொண்டு நெறி வாழ்வது மிகவும் அரிது; மேலும் தாம் அந்நெறி வாழ்வதேயன்றி ஏனையோரும் வாழ்வடைய வேண்டும் என்று எண்ணிச் செயல் புரிவது மிக மிக அரிது என இதன் அருமை புலப்பட வாழநீர்மையீர் என்றார். தவம் என்கொல் என்ற

அம்மையாருக்கு முன்னைத் தவமின்றி நீர் இம்மையே செய்யும் பெருந்தவம் இது என்றருளிய குறிப்பும் காண்க. நீர்மை - அன்பின் உண்மை நிலை.

நீர்மையீர் உமை - நீர்மையீராதலின் உமைக்காண வந்தனம் என்று காரணக் குறிப்புப்பட ஓதியருளினார். நீர்மையீராகிய உமை எனக்.

காண - இங்கு அவரது திருவுள்ளக் கருத்தினைத் திருவருளால் முற்றறிவித்துக் காண - நிறைவெய்தக் காண - என்னும் பொருளில் வந்தது; நோயுள்ளாரை மருத்துவன் பார்க்க வருகிறான் என்று வழங்கும் வழக்குப்போலக் காண்க.

உமை - அம்மையாரையும் அமைச்சனாரையும் உளப்படுத்திய குறிப்புமாம். 673

2572. இன்ன வாறருள் செய்திடத் தொழுதடி வீழ்ந்தார்;
மன்னு மந்திரி யார்வரு திறமெலா மொழிய
அன்ன மென்னடை யார்தமக் கருள்செய்து போக்கித்
துன்னு மெய்த்தொண்டர் சூழவந் தருளுமப் பொழுது, ௬௭௪

2573. செல்வ மல்கிய திருவால வாயினிற் பணிசெய்
தல்கு தொண்டர்கள் பிள்ளையா மருங்கணை திறைஞ்சி
"மல்கு காரம ணிருள்கெட வீங்குவந் தருள
எல்லை யிஃறவஞ் செய்தன" மெனவெடுத் திசைத்தார்; ௬௭௫

2574. அத்திருத் தொண்டர் தங்களுக் கருண்முக மளித்து
மெய்த்த காதலி னவரொடு மெ புறத்தினின் மேவிச்
சித்த மின்புறு மமைச்சனார் திருமடங் காட்டப்
பத்தர் போற்றிடப் பரிசனத் தொடுமினி தமர்ந்தார். ௬௭௬

2572. (இ-ள்) இன்னவாறு...அடிவீழ்ந்தார்-இவ்வாறு பிள்ளையார் அருளிச் செய்யவே அம்மையார் அவரது திருவடிகளில் விழுந்து வணங்கினார்; மன்னும்...மொழிய-நிலைபெற்ற மந்திரியாராகிய குலச்சிறையார் நாட்டின் சோர்ந்த (துன்பமாகிய) நிலைகளை எல்லாம் எடுத்துக்கூற; அன்ன...போக்கி - (அவற்றை யெல்லாம் கேட்டு) அன்னம் போன்ற மெல்லிய நடையினையுடைய அம்மையாருக்கு அருளைப் புரிந்து விடை கொடுத்தபின்; துன்னும்...அப்பொழுது - நெருங்கிய மெய்த் தொண்டர்கள் சூழ்ந்துவர எழுந்தருளிவரும் அப்போது; ௬௭௪

2573. (இ - ள்) செல்வம்...இறைஞ்சி - செல்வம் பெருகிய திருவாலவாய்த் திருக்கோயிலின் கண்ணே திருப்பணிகள் செய்து வாழும் பெருகிய திருத்தொண்டர்கள் பிள்ளையாரின் பக்கத்தில் வந்து வணங்கி; "மல்கு...செய்தனம்" என - வந்து சேர்ந்த சமணராகிய இருள் கெட்டொழிய இங்குத் தேவரீர் (முழுமதிபோல்) வந்தருளுதற்கு எல்லையில்லாத பெரிய தவஞ் செய்தோம் என்று; எடுத்து இசைத்தார் - எடுத்துத் துதித்தனராக, ௬௭௫

2574. (இ - ள்) அத்திருத் தொண்டர்...அளித்து - அந்தத் திருத்தொண்டர்களுக்கு அருண் முகத்தோடு உதத்தரவுகள் செய்து; மெய்த்த...மேவி - உண்மை பொருந்திய பெருவிருப்பத்தோடும் அவர்களுடனே திருக்கோயிலின் புறத்தே வந்து; சித்தம்...இனிதமர்ந்தார் - மனத்தில் இன்பம் பெருகிய அமைச்சராகிய குலச்சிறையார் பிள்ளையார் எழுந்தருளி யிருத்தற்குரிய திருமடத்தினைக் காட்ட அடியார்கள் சூழ்ந்து போற்றியிடத் தமது பரிசனங்களுடனே இனிதாகப் பிள்ளையார் அங்கு அமர்ந்தருளினார்.

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டுரைக்க நின்றன.

2572. (வி - ரை) இன்னவாறு அருள் செய்திட - முன்பாட்டிற் கூறியபடி அருளைச் செய்ய ; பிள்ளையார் கூறியவை உபசாரமாகிய இன்மொழிகள் மட்டிலமையாது அருளித்தரும் நன்மொழிகள் என்றும், வாக்களவிலமையாது செயலளவில் அருளைச் செய்தன என்றும் கொள்க ; என்னை ? தொண்டு வாழும் நீர்மையீர் ! - வாழும் - என்னும் நிகழ்கால எச்சம் உமது திருத்தொண்டின் வாழ்வு எக்காலத்தும் இடையறாது நிகழ்வதாகும் தன்மையதாம் என ஆசி மொழிந்ததாயிற்று ; உமைக் காண வந்தனம் என்றதனால் அத்தன்மை செய்தருள இறைவனருளால் எமது வருகை கூடிற்று என்று உறுதி மொழி தந்தருளியதாயிற்று ; முன்னர் அடிகளிற் பொருந்த வீழ்ந்த தம்மை அருட் டிருக்கைகளால் எடுத்த செயலினாலே தமது மனக்கருத்து முற்றியதென மதித்த அம்மையாருக்கு இச்சொற்கள் அதனை உறுதிப்படுத்தும் அருள் மொழிகளேயாயின எனக ; வாக்கு முன்னும் செயல் பின்னும் நிகழுமியல்பு மாறி இங்குச் செயல் முன்னும் வாக்குப் பின்னுமாக நிகழ்ந்தது அருளின் மிகுதி காட்டிற்று எனக. இதனையே தொடர்ந்து மேலும் அருள் செய்து என்ற குறிப்பும் காண்க.

தொழுது அடி வீழ்ந்தார் - அருள்மொழி பெற்றதன் பொருட்டு மீளவும் பணிந்தார். ஆசாரியரிடம் திருநீறு பெறுவோர், பெறுமுன்னர் வணங்கிப் பெறுதலும், பெற்றபின் அணிந்துகொண்டு மீள வணங்குதலுமாகிய சைவ மரபு விதிகளும் காண்க.

வந்திற மேலாம் மந்திரியார் மொழிய - வந்திறமெலாம் - நாட்டிற்குக் கேடு வந்த தன்மைகளை எல்லாம் ; இவை சமண இருள் பரவி மன்னனும் அம்மாயத் தழுந்த நாடுமுற்றும் சைவ நெறியிற் சித்தம் செல்லா நிலையில் நிகழுகின்றமையும், இதுபற்றித் தாங்கள் பிள்ளையார்பால் விண்ணப்பம் போக்கியமையும் ஆகிய எல்லா வகைகளையும் ; இவை 2498—2505 உரைக்கப்பட்டன ; இவற்றை முன்னர்க்கூறாது அம்மையார் திருமுன்பு திருவாலவாயில் விரித்து விண்ணப்பித்த திறமும், அம்மையார் சொல்லாது அமைச்சனார் எடுத்துக்கூறும் திறமும் உயர்ந்த உலகநிலை மேம்பட்ட ஒழுக்கத்தினுக்கும் அரசாங்கமுறை ஒழுங்குகளுக்கும் சிறந்த உதாரணங்களாம்.

போக்கி - அம்மையாரை முன்னர் விடை கொடுத்து அரண்மனைக்குச் செல்ல விடுத்த நிலையின் நலத்தையும் உலகியல் ஒழுக்க நன்முறையினையும் காண்க. அன்ன மென்னடையார்க்கு - " செய்யதா மரைமே லன்னமே யனையார் " என்பது பிள்ளையாரது தேவாரம்.

துன்னுமெய்த் தொண்டர் - பிள்ளையாருடன் வந்த மெய்த்திருத்தொண்டர்கள். முன் " உயர்தவத்தொண்டரை " (2559) என்ற குறிப்பும் காண்க.

எழுந்தருளும் - திருவாலவாயின் புறத்திரு முன்றிலில் எழுந்தருளிவரும். 674

2573. (வி - ரை) செல்வம் - அருட் செல்வம். இஃது ஈண்டு இறைவர் தம்மை வந்தடைந்த எல்லாவுயிர்க்கு மெளியராய்ச் செய்தருளிய பலதிறப்பட்ட அருட்டிருவிளையாடல்களால் எளிதிலறியப்படும்.

பணிசெய்து அல்கு தொண்டர்கள் - அல்குதல் - தங்குதல் ; மிகுதல் என்றலுமாம் ; குறைதல் என்று கொண்டு மன ஊக்கங் குறைந்து நிற்றல் என்றலுமாம் ; இவர்கள் திருக்கோயிற் பணி செய்யும் திருத்தொண்டர்கள் ; " இருவர்தம் பாங்கு மன்றிச் சைவமங் கெய்தா தாக " (2501) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க ; மூர்த்தி நாயனார் புராண வரலாறும் அவ்வாறுள்ள பிறவும் நினைவு கூர்க ; அரசியாரும் அமைச்சனாரும் வணங்கி விண்ணப்பித்த பின்னரும் அமைதிபெறாது பணிசெய் தொண்டரும் அணுகவந்து வரவேற்று விண்ணப்பித்த முறையும் ஆர்வ மிகுதியும் காண்க.

**மருங்கு அணைந்து** - இதுவரை சிறிது தூரத்தே நின்றிருந்த இவர்கள் இப்போது அணுக வந்து.

**இருள் கெட - வந்தருள்** - இருள்கெட என்றதனால் முழுமதி போல என்று வருவிக்கப்பட்டது; "நிலத்திடை வானின் நின்று நீளிருள் நீங்க வந்த, கலைச்செழுந் திங்கள் போலுங் கவுணியர்" (2649) என்று மன்னவன் காணும் நிலையினையும், "வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தை" (2626) என்று அம்மையாரும் அமைச்சனாருங் காணும் நிலையினையும் உரைப்பது காண்க; அடியார்களது சுழலார் துயர் வெயில் வெப்பம் நீக்கிக் குளிர்ச்சி தருதலின் மதியாகவே பின்னர் உருவகித்தார். அதுபற்றி ஈண்டும் முழுமதி என்று வருவிக்கப்பட்டது. இவ்வாறன்றி ஆதித்தன் போல என்று வருவித்துரைப்பார் ஆறுமுகத் தம்பிரானார்; அதன் பொருத்தம் ஆராயத் தக்கது; அரசனது முன்பு, முதலில் அமணர்கள் கண்டு சினந்து சூழ்ந்தபோது "காலை எழுங் கதிரவனைப் புடைசூழுங் கருமுகில்போல்" (2654) என்பது ஈண்டுக் கருதத் தக்கது; ஆனால் பகைவரைக் காயும் தன்மையால் ஆண்டு அவ்வாறு வேறு திறம்பட உருவகிக்கப்பட்டது என்க; அவ்விடத்தும் கதிரவன் என்று வாளா கூறினால் கடு வெயிற் காய்பவன் என்ன வருமாதலின், பிள்ளையார் தன்மையிடத்து அவ்வாறு கொள்ளல் தகுதியன்றென்று கருதுவார் போன்று ஆசிரியர் "காலை எழுங் கதிரவனை" என்று சிறப்பித்தமையும் கருதுக. — அடியார்க்குத் தண் நிழல்செய்யும் மதி போலவும் அல்லார்க்கு அழல் போலவும் உள்ளவன் இறைவன்; "அழல் தானே" "நிழல் தானே" (தேவா - பின் - நெல்லிக்கா). அத்தன்மையே பிள்ளையார்பாலும் உள்ளதாம். (திரு. வ. சு. செ. அவர்கள் குறிப்பு)

**எடுத்திசைத்தல்** - வரவேற்கும் முறையால் போற்றுதல். 675

2574. (வி - ரை) **அருள்மொழி** - அருளிப்பாடாகிய நன்மொழி; இது வருவித்துரைக்கப்பட்டுள்ளது. **அருள்முகம்** - அளியுடைய பார்வை என்றலுமாம்.

**புறத்தினில்** - திருவாலவாய்த் திருக்கோயிலின் புறத்தே;

**சித்தம் இன்புறும்** - மனத்துள் இன்பம் மிகப்பெற்ற. பலகாலம் எண்ணியிருந்த கருத்து முற்றி நிறைவேறும் நிலை கண்டமையால் மனத்துள் இன்பமுற்றார்;

**அமைச்சனார் திருமடங்காட்ட** - இத்திருமடம் குலச்சிறையார் பிள்ளையாருக்காக அமைத்த மடம்; இதன் வழக்காய வழிவழி வந்து நிலவுவது இப்போது திருஞான சம்பந்தராதீனம் என வழங்கும் ஆதீனத்தின் திருமடம் என்ற வரலாறு கேட்கப்படுகின்றது; இத்திருமடம் தெற்காவணிமூலத் திருவீதியில் உள்ளது; பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்தினுள் வாகீசர் போன்ற ஒரு பெரியார் தமது மடத்தினில் வருக என்று பிள்ளையாரைப் பரிசனங்களுடன் வேண்டி அழைத்துச் சென்றார் என்று சொல்லப்பட்டுள்ளது; பெரும் பற்றப் புலியூர் நம்பி திருவிளையாடலுள் அது வாகீச சுவாமிமடம் என்ற பெயரால் சுட்டப்படுகின்றது; இவற்றின் பொருத்தம் ஆராயத் தக்கது; அரசியாரும் அமைச்சனாரும் செய்த விண்ணப்பத்தின்படி எழுந்தருளிய பிள்ளையாருக்கும் உடன் வந்தார்க்கும் அமைச்சனாரே திருமடம் முதலிய குறைவறுப்புக்கள் அமைத்தல்முறை; மேல்வரும் பாட்டில் "பாண்டிமா தேவியாரருளால் குலச்சிறையார் விருந்தளிப்ப" என்பது காண்க; அன்றியும், வாகீசர் என்பது திருநாவுக்கரசு சுவாமிகளைக் குறிப்பதாக, அவர் பெயரால் திருவாலவாயில் மடம் அமைவதற்கு இயைபில்லை; அரசுகள் இதன் பின்னரே இங்கு எழுந்தருளுதல் காண்க; முன்கூறிய திருவிளையாடற் புராண வரலாறுகள் வடமொழிப் புராணங்களைப் பின்பற்றி எழுந்தன போலும்!

பத்தர் போற்றிட - உடன்வந்த திருத்தொண்டர்களும், அந்நாட்டில் உள்ள ஏனைய அன்பரும். பரிசனம் - உடன் வந்தவர்கள். 676

2575. பரவு காதலிற் பாண்டிமா தேவியா ரருளால்
விரவு நண்பொடு குலச்சிறை யார்விருந் தளிப்பச்
சிரபு ரத்துவந் தருளிய செல்வரங் கிருந்தார் ;
இரவி மேற்கட லணைந்தன னெல்லிவந் தணைய ; ௬௭௭

2576. வழுதி மாநக ரதனிடை மாமறைத் தலைவர்
பழுதில் சீரடி யாருடன் பகல்வரக் கண்ட
கழுது போல்வருங் காரமண் குண்டர்கள் கலங்கி
இழுது மையிருட் கிருளென வீண்டின ரொருபால். ௬௭௮

2575. (இ - ள்) பரவு...அளிப்ப - போற்றும் பேரன்பினாலே மங்கையர்க்கரசியம்மையாரது அருளினாலே பொருந்தும் அன்புடனே குலச்சிறையார் விருந்து அமைத்தளிப்ப ; சிரபுரத்து.. இருந்தார் - சீகாழியில் வந்தருளிய செல்வராகிய பிள்ளையார் அத்திருமடத்தில் எழுந்தருளியிருந்தனர் ; இரவி...அணைய - சூரியன் மேல கடலில் சேர்ந்தான ; அதன்மேல் இரவு வந்தணைப்பவே, ௬௭௭

2576. (இ - ள்) வெளிப்படை - பாண்டியரது பெருந்திரு நகரத்தினகண் பெருமறைகளின் தலைவராகிய பிள்ளையார் குற்றமற்ற சிறப்புடைய அடியார்களுடனே பகலில் வரக்கண்ட, பேய்போன்று வரும் கரிய அமண குண்டர்கள் கலக்க மடைந்து குழம்பாகிய மை போன்ற இருளுக்கும் மேம்பட்ட இருள்போல ஒரு புறத்துக் கூடினர். ௬௭௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன ; எல்லிவந்து அணையும்படி இரவி மேலகட லணைந்தனன் என்று கூட்டி முன்பாட்டைத் தனிமுடிபாகக்கி யுரைப்பினு மிழுக்கா று.

2575. (வி - ரை) பாண்டிமா தேவியார் அருளால் குலச்சிறையார் விருந்தளிப்ப - அரசியாரால் அழைக்கப்பட்டுப் பிள்ளையார் எழுந்தருளியபடியால் அவரை விருந்தளித்து உபசரித்தல் அரசகுடும்பத்தின் கடமையாயிற்று ; அரச குடும்பத்தின் இல்லறக் கடமைகள் யாவும் மனைக்கிழத்தியாராயும் வாழ்க்கைத் துணைவியாராயும் நின்ற அரசியாரின் மேனின்றன ; இத்தன்மைகள் யாவையும் குறிக்க அரசியார் அருளால் என்றார் ; அமைச்சனார் தாமே விருந்தளித்து யாவையும் குறைவறுப்ப வல்லவ ராயினும், செயல்முறை யாவும் அவரே செய்தாராயினும், குலச்சிறையார் விருந்தளிப்ப என்றொழியாது பாண்டிமா தேவியார் அருளால் விருந்தளிப்ப என்றது இக்காரணம் பற்றியேயாம் ; பாண்டிமா தேவியார் ஏவுதற் கருத்தாவும், குலச்சிறையார் இயற்றுதற் கருத்தாவுமாய் நின்றனர் எனக் ;

பாண்டிமா தேவியார் - குலச்சிறையார் - இங்கு அம்மையார் விருந்தோம்பலாகிய இச்செயலைப் பாண்டியரின் மாதேவியாராகிய நிலையில இயற்றினர் என்பார் முன்னெல்லாம் சுட்டியபடி வளவர்கோன் பாவையார் - மங்கையர்க்கரசியார் - மாணியார் - தெரிவையார் என்றெல்லாம் கூறாது பாண்டிமா தேவியார் என்றார் ; குலச்சிறையாரும் இச்செயலை அரசாங்க அமைச்சர் என்ற நிலையால அன்றி மாதேவியாரின் ஏவலின்வழித் தமது தனி நிலையில் இயற்றினர் என்பார் முன் பலவிடத்தும் கூறியபடி மந்திரியார்—அமைச்சனார் என்ற தன்மையாற் கூறாது குலச்சிறையார்

என்றார் ; எனவே இவ்விருந்தோம்பல் முதலியவை அரசகாரியமாகாது அரச குடும்பத்தின் இல்வாழ்க்கை நிலையின் கடமையாகிய இல்லறங்களுள் ஒன்றாய் இயற்றப் பெற்றது என்றறிவித்த கவிநயம் காண்க ; Royal guest - State guest என்பன வாதி நவீன வழக்குக்கள் காண்க.

அருளால் - அன்பின் மேம்பட்ட நிலையின் எழும் செயல என்பது குறிப்பு ; விருந்தோம்பும் செயலகள் இல்லக்கிழத்தியாருக்கு உரியன என்பதும், பெண்பாலாரின் சிறப்புக் கடமைகளுள் ஒன்றென்பதும குறிப்பாலுணர்த்தப் பட்டன ; " மத்தக் கரியுரி யோனறில்லை யூரன் வரவெனலுந், தத்தைக் கிளவி முகத்தா மரைத்தழல வேன் மிளிர்ந்து, முத்தம் பயக்குங் கழுநீர விருந்தொடென் றோதுமுன்னம், கித்தக் கருங் குவ ளைச்செவவி யோடிக கெழுமினவே " (திருக்கோவை. 388) என்று மணிவாசகப பெருமானார் இதன் இயலபினைச்சுவைபட்க கூறியருளிய சிறப்புக காண்க ; அம்மையார அரணமனையினின்றவாறே இவையெலலாம திருந்த ஏவியமைத்தனா என்பதாம்.

பரவு காதலின் - போற்றிப பாராட்டும அன்பின மிகுதியினாலே ;

விரவு நண்பு - காதலுடன் பொருந்திய நண்பு. இது விருந்தோமபுவாரிடத்தும் இயற்றுவோரிடத்தும் இன்றியமையாது வேணடப படுவன.

செல்வர் - அரச விருந்துக்கும் மேற்பட்ட அருட்செல்வம் உடையவர் எனபது குறிப்பு ; அந்த - அமைச்சனா காட்டிய அத்திருமடத்தில்.

எல்லி வந்தணைய - எல்லி - இரவு ; அணைய - அணையும் போது ; அணைய - ஈண்டினார் என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க ; அணைய - அணையும்படி.

2576. (வி - ரை) வழுதி மாநகர் - பாண்டியர்களது தலைநகரமாகிய மதுரை ; மாநகர் - தலைநகர் ;

பகல்வரக் கண்ட - குண்டர்கள் என்று கூட்டுக ; பகல் - பகலில் அரசன் அமண் சாரபினிருப்பவும அஞ்சாது மறைவாயன்றி வெளிப்படையாக வர என்றதும் குறிப்பு ; பகல் - ஞாயிறு எனறு கொண்டு ஞாயிறுவரக கண்ட என்றலுமாம் ; பிள்ளையாரும அடியாரும் கூடிய கூட்டத்தில் விளக்கம ஞாயிற்றினை ஒத்தது என்பதாம்.

அடியாருடன் வரப் பகல் கண்ட கழுதுபோல் - கலங்கி - எனறு கூட்டி உரைத்தலுமொன்று ; கழுது - பேய் ; பேயகள இரவில வெளிப்போந்து சரித்து உலவும் தன்மையும் பகல் கண்டவுடன் கலங்கி ஓரிடத்து ஒதுங்குந் தன்மையு முடையன; "வாதுசெய் சமணும் சாக்கியப் பேய்கள் " (பிள - தேவா - அச்சிறு பாக்கம்).

காரமண் குண்டர்கள் - கார் - கரிய நிறமுடைய ; உடல போலவே அகமும் கருமையுடையார் என்ற குறிப்புப் பெறக காரமண் என்றார், அகத்துட் கருமையாவது பொய், சினம், வஞ்சனை, பொறாமை முதலிய தீக்குணங்கள் நிறைதல் ; குண்டர் - கீழ்மக்கள்; இருட்கிருள் - புற இருளும் அக இருளும் குறித்தது.

இழுது மை இருட்கு இருள் என - இழுது - குழம்பு ; மையிழுது என்க. மைக் குழம்பு.

மைஇருட்கு இருளாம் என - மைக்குழம்பு போன்ற திணிந்த இருளுக்கும் மேம்பட்ட இருள் ; கு என்ற நான்கனுருபு எல்லைப பொருளில் வரும் ஐந்தனுருபின் பொருளில் வந்தது ; " வண்ண நீடிய மைக்குழம் பாமென, நண்ணல் செய்யா நவிருள் யாமத்து " (455) " கருகு மையிரு ளின்கணங் கட்டுவிட், டுருகு கின்றது போன்றது " (454) என்ற கருத்துக்கள் காண்க ;

இருளென - கரிய அமணரை இருளுக்கு உவமித்தார் ; உருப்பற்றி வந்த உவமம். இருளென ஒருபால் ஈண்டினர் - பகல் வந்தபோது இருள் ஒருபுடை ஒதுங்குதல்

இயல்பாதலின் வினைபற்றி வந்தவுவமுமாம்; கழுதுபோல் என்றதும் இவ்வாறே உருவும், பிறரைப்பற்றி அலைந்தலாகிய வினையும் பற்றி வந்தவுவமம்; கழுதுபோல் வரும் என்றது இரவிற் பேய் போனறு என அவர்தமியல்பு பற்றியும், இருளென ஒருபால் ஈண்டினர் என்று பகலில் இருள் போன்று எனப் பிள்ளையார் முன் அவர்தம் நிலைபற்றியும் தெரிவிக்க இரண்டு வகையால் உவமை கூறினார்; "இருட் குழாஞ் செல்வது போல" (1349)-ல் உரைத்தவையும், "அவ்விருளன்னவர்" (1387) முதலியவையும் பார்க்க.

பகல்வரக் கண்ட இருளென ஒருபால் ஈண்டினர் - பகலில் வந்தபோது இருள் செயலின்றி ஒருபுடை ஒதுங்கும் இயல்பும் குறித்தது;

ஒருபால் ஈண்டினர் - வஞ்சகச் சூழ்ச்சி புரிவார் வெளிப்படையானன்றி ஒருபுடை மறைவிடத்துக் கூடுதல் இயல்பாம் என்ற குறிப்பு.

இழுது மெய்யிருட்கிருள் - என்று பாடங் கொள்வாருமுண்டு; இப் பொருட்கு, மெய்யிருட்கு இவர்களின் உடலின் இருளி (கருமை) னுக்கு; இருள் இழுதும் - பூத இருளும் பின்னடையும் என்றுரைக்க; இழுதுதல் - பின்னிடைதல்; 678

2577. அங்கண் மேவிய சமணர்கள் பிள்ளையா ரமர்ந்த
துங்க மாமடந் தன்னிடைத் தொண்டர்தங் குழாங்கள்
எங்கு மோதிய திருப்பதி கத்திசை யெடுத்த
பொங்கு பேரொலி செவிப்புலம் புக்கிடப் பொறாராய், ௬௭௯

2578. "மற்றிவ் வான்பழி மன்னவன் மாறனை யெய்திச்
சொற்று" மென்றுதஞ் சூழ்ச்சியு மொருபடி துணிவார்
கொற்ற வன்கடைக் காவலர் முன்சென்று குறுகி
"வெற்றி வேலவற் கெங்களை விளம்புவீ" ரென்றார். ௬௮0

2577. (இ - ள்) அங்கண் மேவிய சமணர்கள் அவ்விடத்துப் பொருந்திய சமணர்கள்; பிள்ளையார்...புக்கிட - பிள்ளையார் எழுந்தருளிய பெருந்திரு மடத்தின் கண்ணே திருத்தொண்டர் கூட்டங்கள் எவ்விடத்தும் கூடிப்பெருக ஓதிய திருப்பதிகத்தின் இசை ஓங்கி மேலெழும் பேரொலியானது தமது செவிப்புலங்களிற் புகுத; பொறாராய் - பொறுக்கலாற்றாதவர்களாகி, ௬௭௯

2578. (இ - ள்) "மற்று...சொற்றும்" என்று - "மற்று இந்தப்பெரும் பழியினை மன்னவனாகிய பாண்டியனை யடைந்து சொல்வோம்" என்று கொண்டு; தம் சூழ்ச்சியும்...துணிவார் - தமது சூழ்ச்சியினையும் ஒரு படியாகத் துணிவு கொள்வாராகி; கொற்றவன...குறுகி - அரசனது அரண்மனை வாயில் காப்போர்முன் போய்க் குறுகி; "வெற்றி ...விளம்புவீர்" என்றார் - வெற்றியுடைய வேலேந்திய அரசனிடம் நாங்கள் வந்த செய்தியினை அறிவியுங்கள் என்று கூறினார். ௬௮0

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2577. (வி - ரை) அங்கண் மேவிய - முன்பாட்டிற் கூறியபடி கண்டு கலங்கி ஒரு பால் ஈண்டிய.

துங்க மா மடம் - துங்கம் - உயர்வு; மா - சிறப்பு; துங்கம் மா என்பவை பொருளானும் அருளானும் பெருமை குறித்தன. ஒரு பொருட் பன்மொழி மிகப் பெரிய என்று மிகுதி குறித்ததென்றலுமாம் "செல்வப் பெருமடம்" (2507) என்பது காண்க. தக்கயாகப் பரணியிலும் இதனைப் பெருமடம் என்பதும் காண்க.

**மடந்தன்னிடைக் குழாங்கள் எங்கும் ஓதிய** - திருமடத்தின் கண் தொண்டர்கள் தனித்தனி குழாங்கூடியிருந்து மடம் எங்கணும் திருப்பதிகங்களை ஓதிக் கொண்டிருந்தனர் என்க. "திரு ஆரூரமருங்கெலாந், தெள்ளு மோசைத் திருப்பதி கங்கள்பைங் கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்" (93) "சாரிகையின் பண்ணின் கிளவி மணி வாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால" (1019); "அண்டர் பெருமான் திருப் பாட்டி னமுதம் பெருகச் செவிமடுக்கு, தொண்டர் வதன பங்கயமுந் துளித்த கண்ணீ ரரும்புமால" (1020) என்பனவாதி திருவாக்குக்களால் அந்நாளில் நாடு எங்கெங்கும் திருப்பதிகங்கள் பயிலப்பட்டு வந்தன என்பதறியப்படும்; கணநாத நாயனார் திருமுறை யெழுதுவோர் வாசிப்போர்களைத் திருத்தொண்டின் வினை விளங்கிட வேண்டிய குறை யெலாமுடித்து மேவிடச் செய்தே தொண்டரை ஆக்கினர் (கணநாதர் புரா. 3) என்பதறியப்படும். பிள்ளையாரது திருமண எழுச்சியில் "தகைவிலா விருப்பின் மிக்க பதிகங்கள் விளம்பிச் சார்வார்"களின் (3100) கூட்டம் கலந்து செலவதும் காணப்படும்; இவ்வாறு காணும் முன்னை நாள் வழக்கு மாறி இந்நாளில் திருப்பதிகங்களைப் பயிலும் நன்மரபு மக்களுள் காணப் தரிதாகி விட்டது இக்காலக் கொடுமை.

**எங்கும் ஓதிய** - அப்பெருமடத்தின் பல பகுதிகளிலும் **இசை எடுத்தபொங்கு பேரொலி** - பலர் கூடி உச்ச சுரத்திற் பாடிய ஒலியின் பெருக்கு, **இசை எடுத்தல்** உரிய பண்களிற் பாடுதலையும்; **பொங்குதல்** - அன்பு மிகுதியினையும்; **பேர் ஒலி** என்றது தொகுதியால் விளையும் பெருக்கினையும் குறித்தன.

**செவிப்புலம் புக்கிட** - ஒலியலைகள் தாம் கிளம்பின இடத்தினின்றும் காற்றை இடமாகக் கொண்டு பரம்பரையிற் சென்று கேட்போர் செவியிந்திரியத்தில் தாக்கும் என்பது இலக்கணம். கண்ணிந்திரியம் சென்றியைந்து விடயத்தை யறியுமாறு போலன்றிச், செவி முதலிய ஏனையிந்திரியங்கள் "கண்ணிந்திரியத்தை நோக்கச்சத்துவ குணத்தாற் குறைவுடைமையின், அவை தம்மிடம் வந்த விடயத்தை இயைந் துணர்தலே யன்றிச் சென்றியைந்து விடயத்தை அறியு மாறிலலை" என்பது ஞான நூற்றுணிபு; நவீனருக்கும் செவியினைப் பற்றி இதுவே துணிபாம்; அவரும் புறத்தினின்றும் ஒலியலைகள் வந்து செவியில் உள்ள மத்தளம் போன்ற தசையினைத் தாக்கி அந்நரம்புகளை இயக்க ஒலியுணர்வு நிகழு மென்பர்; இவை யெல்லாம் குறிக்கச் **செவிப்புலம் புக்கிட** என்றார், கண்போல வேண்டா விடத்து அடைத்துக் கொள்ளும் அமைப்பில்லாமையால் எல்லா ஓசை ஒலிகளும் செவிக்குள் புகுவன. தாம் வேண்டாது வெறுப்பினும் அவ்வொலி புக்கிட என்றதாம்;

**பொறாராய்** - அதனிடத்துப் பொறுமை கொண்டவராய்; "நீற்று மேனிய ராயினர் மேலுற்ற, காற்றுக் கொள்ளவு நில்லா வமணர்" (தேவா - ஆலவாய் - நாலடி மேல்வைப்பு 8) என்ற தன்மைகளும், கண்டுமுட்டு-கேட்டுமுட்டு என்ற தன்மைகளும் காண்க; **பொறாராய்** - இப்பதிகங்கள் சமண சாக்கியங்களின் இழிபை எடுத்துரைத்து மக்களை உண்மைநெறி காட்டித் தேற்றுவனவாதலின், அவை தம் செவியினிற் கேட்கலாற்றாதவராயினர் என்பதும் குறிப்பு.

**பொறாராய்த் துணிவார் - துறுகி - என்றார்** - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க; 679

2578. (வி - ரை) **இவ்வான்பழி** - **வான்** - பெரிய என்ற பொருளில் வந்தது; **மற்று** - **இ** - அவர்கள் கருத்திற்கு மாறாகிய இது என்றார்; **பழி** - இவ்வொலி கேட்டதும், கண்டதும் தமக்குப் பழியாகவே கொண்டனர் என்பதாம்; **பழி** - தீங்கு.

கேடு; "தக்க தல்லநீர கடுத்தது சாற்றுதற்கு" (682) என்றும், "கண்டு முட்டு யாம்" என்றும் கூறுவனகாண்க; பதி - என்று பாடங்கொண்டு பதியின் மன்னவன் என்பாருமுண்டு;

சொற்றும் என்று தம் சூழ்ச்சியும் ஒருபடி துணிவார் - கண்டதனையும் கேட்டதனையும் சொல்லுதலேயன்றி மேலும் வஞ்சனைச் செயல் சூழ்வதனையும் துணிந்து கொண்டனர். சூழ்ச்சி-வஞ்சநினைவு; ஒருபடி - ஒருசேர; கடைக்காவலர் - வாயில் காப்போர்; குறுகி - வஞ்சமும் சூழ்ச்சியும் துணிந்து தகுதியற்ற செயலிற் புகுகின்றாராதலின் நிமிர்ந்து செல்ல மாட்டாது குறுக்கமாகிய நிலையிற் சென்றனர் என்ற குறிப்புமாம். "அடிகண்மா ரெல்லாரு மாகுலமாய் மிகவழிந்து" (1351) என்ற நிலை கருதுக; கவலையி னிலைகாட்ட உடற் குறுக்கத்தினைப் பாசாங்காக மேற் கொண்டனர் என்றலுமாம்;

"வெற்றி ..விளம்புவீர்" என்றார் - அரச சமுகத்திலும், பெரியோர் முன்பும் முன் அறிவிப்புச் செய்து விடை பெற்றபின் செல்லும் மரபு. இது முன்னுள முதல் நமது நாட்டில் வழங்கியது; 2507—2509 பார்க்க. வேலவற்கு - வேல் - ஆயுதப் பொதுமையுணர்த்தி நின்றது; தடாதகைப் பிராட்டியாரபால் வேல் வளை செண்டு பெற்ற உக்கிரகுமார பாண்டியர் மரபில் வந்த என்ற குறிப்புமாம்; எங்களை - நாங்கள் வந்தணைந்ததனை. 680

2579. வாயில் காவலர் மன்னவன் றனைமெதிர் வணங்கி
"யாய மாகிவந் தடிகண்மா ரணைந்தன" ரென்ன,
வேயி னனையை வாரென, வவருஞ்சென் றிசைத்தார்;
பாயி னுடன் மூடுவோர் பதைப்புடன் புக்கார். ௬௮௧

(இ - ள்) வாயில் காவலர்...என்ன - வாயில் காப்போர் சென்று அரசன் முன்பு வணங்கி "அடிகண்மார்கள் எல்லாரும் கூட்டமாக வந்தணைந்துள்ளார்" என்று அறிவிக்க; ஏயினன் "அணைவார்" என - அவ்வடிகண் மாருடனே ஒத்த கருத்துடையானாகிய அரசன் "அவர்கள் அணைவார்களாக" என்று கூற; அவரும் சென்று இசைத்தார்- அவர்களும் புறத்துச் சென்று அடிகண்மார்களிடம் அதனைச் சொன்னார்கள்; பாயினுல...புக்கார் - பாயுடுக்கையினால் உடலை மூடும் அச்சமணமுனிவர்கள் பதைப்போடும் உள்ளே புகுந்தனர்.

(வி - ரை) என்ன;—என;—இசைத்தார்;—புக்கார், என வாயில் காப்போர் அரசனிடம் அறிவித்த செயலும் அரசன் கூறியதும், அதனை அவர்கள் அடிகண்மாருக்கு அறிவித்ததும், அதன்படி அவர்கள் உள்ளே புகுந்ததும் ஆகிய நான்கு செயல்களையும் இவ்வொரு பாட்டிற் செறிவு பெறக் கூறினார். அவை நிகழ்ந்த மிக்க விரைவும், மனக் கலக்கத்துடன் பதைத்து நின்ற நிலையும் உணர்த்துதற்கு. அம்மையாரும் குலச்சிறையாரும் விடுத்த பரிசனங்கள் திருமறைக்காட்டிற் சென்று பிள்ளையார்பால் சேர்ந்தறிவித்த நிலையினை முன் 2505 - 2509 வரை - 5 பாட்டுக்களாற் கூறிய அமைதியினை ஈண்டு ஒப்பு நோக்குக சைவ ஆக்கத்தின் பெருக்கமும், சமணத்தின் அழிவாகிய சுருக்கமும் குறிப்பிற் பெறவைத்த நயமும் காண்க,

ஆயமாகி - கூட்டமாகக் கூடி, அடிகண்மார் - சமண முனிவர்கள், கள் - சிறப்பும், மார் பன்மையும் உணர்த்திய விகுதிகள்;

ஏயினன் "அணைவார்" என - ஏயினன் - ஒத்தவன்; அடிகளமாருடன் ஒத்த கருத்துடையவன்: ஏய்தல் - ஒத்தல்; (மனம்) பொருந்துதல் என்றலுமாம், அணைவார் - அணைவாராக; ஏயினன் - இசைந்தவனுய என்றலுமாம்.

சென்று - வாயிற் புறத்து நின்ற அடிகண்மார்களிடம் போய்;

பாயினால் உடல் மூடுதல் - பாயுடுத்தல் அமண குருமார் வழக்கு;

பதைப்புடன் புக்கார் - பதைப்பு - 2576ல் கூறிய மனக்கலக்கத்தாலும், பொறுமையை மறைத்து அதனை அரசனிடம் மிகுதிப்படுத்திக் காட்டும் சூழ்ச்சியாலும் நிகழ்ந்தது; இது உலகியல் வழக்கிலும் காணப்படும்;

பாயினால் உடல் மூடுவார் பதைப்புடன் புக்கார் - உடலைப் பாயினால் மூடுதல் போல உள்ளத்தில் மூண்டு வந்த கலக்கத்தையும் பொறுமை காரணமாக மூண்ட வஞ்சச் செயலையும் மேற்கொண்ட பதைப்பினால் மூடினார் என்ற குறிப்பும் காண்க.

ஏயினார்ணைவா ரேன - என்பதும் பாடம். 681

2580. புக்க போதவ ரழிவுறு மனத்திடைப் புலர்ச்சி
மிக்க தன்மையை வேந்தனுங் கண்டெதிர் வினவி
"ஒக்க நீர்திரண் டணைவதற் குற்றதென்?" னென்னத்
"தக்க தல்லதீங் கடுத்தது சாற்றுதற்" கென்றார்; ௬௮௨

(இ - ள்) புக்கபோது...கண்டு - அவ்வாறு அவர்கள் தன் முன்பு புகுந்தபோது அவர்களது அழிவுறும் மனத்தின்கண் வாட்டம் மிகுந்திருந்த தன்மையினை அரசனும் கண்டு; எதிர்வினவி...என்ன - அதனை முன் வினவி "நீர் ஒக்கத்திரண்டு கூடி வந்து இங்கு அணைவதற்குப் பொருந்திய காரணம் யாது?" என்று கேட்க; தக்கதல்ல... என்றார் - சொல்லத்தக்கதல்லாத தீமை நேர்ந்தது என்று சொன்னார்கள்.

(வி - ரை) அழிவுறும் மனத்திடைப் புலர்ச்சி மிக்க தன்மை மனம் அழிவுறுதலாவது கவலையினாலும் கலக்கத்தாலும் மனமுடைதல்; புலர்ச்சி - வாட்டம்.

மனத்திடைப் புலர்ச்சி மிக்க தன்மையைக்கண்டு - மனம் வாடிய நிகழ்ச்சியை முகம் புலர்தல் முதலிய நியதமாகிய புற நிகழ்ச்சிகளால் அறிந்து; அனுமான அளவையாலறிந்து: "அகத்தினழகு முகத்திற் றெரியும்" என்பது பழமொழி. "அடுத்தது காட்டும் பளிங்குபோல நெஞ்சம், கடுத்தது காட்டு முகம்" (குறள்).

வேந்தனும் - ஒத்த மனப்பண்புடைய வேந்தனும் அப்பண்பினால் கண்டு என உம்மை எச்சவும்மை.

எதிர் ..வினவி என்ன - காரணம் வினவும் தன்மையால்; புறக்குறிகளால் மன வாட்டத்தைக் கண்டனன்; அதன் காரணம் அறிய வேண்டினன்; அதனை அவர் அனைவர்பாலும் கண்டனன்; அதுவே அவர் அனைவரும் ஒப்பத் திரண்டணையவும் செய்தது என்றும் கண்டனன்; அடிகண்மார் மனம் வாடியதென்னை என வினவுதல் மரபன்றாதலின் அவ்வாறு திரண்டணையச் செய்ததென்னை என வினவினன். "கடித ணைவா னவர்க்குற்ற தெனகொலென்" (1351).

சாற்றுதற்குத் தக்கதல்ல தீங்கு அடுத்தது - எனக், அல்ல தீங்கு - அல்லலாகிய தீங்குகளின் தொகுதி, மரபு பற்றி அரசன் வினவியபடியே அவர்களும் அவ்வாறே அது வாயாற் சொல்லத்தகாததும் நீர் கேட்கத் தகாததுமாகிய தீங்கு அடுத்த காரணம் என்ற நயம் காண்க. மொழி முறை பிறழ வைத்தது மனக்கலக்கம் காட்டற்கு என்க. இவ்வாறு மறைத்துக் கூறியது அரசனது ஆதரவை மிகுவித்தலும் கருத்து. மேல் "பரிந்து" எனபது காண்க. இரட்டுற மொழிதலால் தக்க தல்லது ஈங்கு அடுத்தது என்று பிரித்துரைத்தலுமாம்; இந்நகரில் வரத்தகாதது என்ற குறிப்புப்பட விடயத்தை ஒருவாறு உணர்த்திய நயமும் காண்க. இதனையே தொடர்ந்து அரசன் மேல் வினவுதலும் காண்க. 682

2581. "ஆவ தேனுமக் கடுத்தது கூறுவீ" ரென்று
காவ லன்பரிந் துரைத்தலுங் காரமண் கையர்
"மாவ லாயுன்றன் மதுரையிற் சைவவே தியர்தாம்
மேவ லாலின்று கண்டுமுட் டியா"மென்று விளம்ப, ௬௮௧

2582. என்று கூறலுங் "கேட்டுமுட் டியானு" மென் றியம்பி
"நன்று நல்லறம் புரிந்தவா றா"மென்று நகுவான்
"கன்று முள்ளத்த னாகி"யக் கண்ணுத லடியார்
இன்று மாநக ரணைந்ததென் ? னவர்கள்யா ?" ரென்றான். ௬௮௨

2581. (இ - ள்) ஆவதேல்..உரைத்தலும் - அப்படியாயின் உமக்கு நேர்ந்ததனை எடுத்துச் சொல்லுங்கள் என்று அரசன் பரிவுகொண்டு சொல்லுதலும்; காரமண் கையர்...விளம்ப - யானை வீரனாகிய அரசனே! உனது மதுரைமா நகரில் சைவவேதியர்கள் வந்து பொருந்தியதனைக் கண்டமையாலே இன்று நாங்கள் கண்டுமுட்டு ஆயினோம் என்று சொல்ல, ௬௮௧

2582. (இ - ள்) என்று கூறலும் - என்று இவ்வாறு அவர்கள் கூறலும்; கேட்டுமுட்டு யானுமென்று இயம்பி - யானும் அதனைக் கேட்டமையால் கேட்டுமுட்டு ஆயினேன் என்று சொல்லி; நன்று...நகுவான் - நான் நல்லறம் புரிந்தவாறு நன்றாயிருந்தது என்று இகழ்ந்து சிரித்து; கன்றும் உள்ளத்தனாகி - கறுவுதல் கொண்ட மனத்துடனே; அக்கண்ணுதல்...என்றான் - அந்த நுதற்கண்ணுடைய சிவனது அந்த அடியார்கள் இன்று இந்தப் பெருநகரினை அணைந்த காரணம்தான் யாது? அவர்கள் யாவர்? என்றான். ௬௮௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2581. (வி - ரை) ஆவதேல் - நீர் கூறுமாறு அது சொல்லுதற்குத் தக்கதல்லவாயின்;

நுமக்கு அடுத்தது கூறுவீர் - நீங்கு சொல்லத்தகாததாயின் அதனைச் சொல்லாது விடுத்து, அதனால் உமக்கு நேர்ந்த விளைவினைக்கூறி அது கொண்டு அதன் காரணத்தை உணரச் செய்யுங்கள்; அடுத்தது - விளைந்தது, நேரிட்டது; சொல்லுதற்கு அடாதது நேர்ந்ததாயின் அடுத்தது கூறுக, அடுக்குமாறு - பொருந்துமபடி சொல்லுங்கள் என்றலுமாம்.

பரிந்து உரைத்தலும் - அரசனது பரிவு தங்கள் பால மிகும்படி சூழ்ச்சியுடன் வாட்டமாகிய முகக்குறியுடன் சென்றும், அவன் வினவியபோது சாற்றுதற்குத் தக்கதன்று என மறைபொருள்படக் கூறியும் நின்றமையால் அவ்வாறே அவன் பரிவு கொண்டு எனக; அவரது "சூழ்ச்சியு மொருபடி துணிவார்" என உரைத்தற்கேற்பப் பயன் பெற்றனர் என்று காட்டப் பரிந்து என்ற கவிநயம் காண்க.

"மாவலாய்...யாம்" என்று - இது சமண அடிகண்மார் அரசன் கேட்ட செய்திக்கு விடை கூறிய நிலை; மாவலாய் என்று அரசனது படை வலிமையும் வீரமும் பற்றிக் கூறியது, இத்துணை வலிய நினது ஆணையை அவமதித்து வந்த அவர்களைத் தண்டம் செய்தேனும் போக்குதல் வேண்டும் என்ற எண்ணம் தருதற்கு, இது உலகியலில் மக்கள் மனத்தத்துவ இயல்பினைத் தமக்கேற்றவாறு பயன்படுத்திக் கொள்ளும் முறைகளுள் ஒன்று. உன்றன் மதுரை என்ற கருத்துமிது. மாவலாய் - குதிரைப் படையாய் - குதிரை யேற்றம் வல்லவனே - என்றலுமாம்.

**மதுரையிற் சைவவேதியர் தாம் மேவலில்** - இதனால் அந்நாளில் மதுரையில் சைவ வேதியரையும், சிவநெறி மாதவர்களையும் காண்பதரிதாகும் நிலையினை அமணர் விளைத்து விட்டார்கள் என்பதும், அந்நிலையே அரசன் துணை கொண்டு காவலும் செய்து வந்தனர் என்பதும் அறியப்படும்;

**மேவலால் இன்று கண்டுமுட்டு யாம்** - மேவலால் - மேவக் கண்டதனால்; "கண்டு முட்டு" - காண்பதனால் வரும் தொடக்கு, "தீட்டு" என்பது; காலையில் சைவ வைதிகத் திருவேடத்தார்களைக் காண நேர்ந்தால் அதனைத் தீட்டாகக் கருதி அதனைப் போக்க நோன்பிருந்து கழுவாய் தேடிக் கொள்வது அமணர்கள் மரபு; இவ்வாறே சைவம் பற்றிய பேச்சுக் கேட்டலும் "கேட்டு முட்டு" எனப்பட்டு அதுவும் ஒரு இழிவு தொடக்காகக் கருதப்படும்; ஒருவரைத் தீண்டினால் இழிவு தொடக்கும் என்று கொள்ளும் தீண்டாமை என்னும் இந்நாள் வழக்கினைத்தானும் கடந்து கொள்ளும் மாக்கள், காணாமை, கேளாமை என்ற இச்சமண வழக்குக்களைப் பற்றி என்ன சொல்வரோ? கண்டு முட்டு, கேட்டு முட்டு என்பன சமணர்களுள் வழங்கும் குறியீடாகிய பரிபாஷை வழக்கு; இவற்றினோடன்றிச் சைவர்களைச் சுட்டெரிக்கவும், மற்றும் கொலை புரியவும் சூழ்ந்த அவர்களது கொடுமை கொல்லாமை என்ற அறப்போர்வை போர்த்து அதனுள் மறைந்து நின்றது. இங்கு மேல்வரும் வரலாறும் அரசுகள், நமிநந்தியார் சரித வரலாறுகளும் காண்க; தமது சமயம் பரப்பும் நோக்கத்தால் அவர்கள் கொலை முதலாகிய எக்குற்றமும் செய்யும் வன்னெஞ்சினராய் ஒழுகினர். சைவ சமயத்தையும் சைவ வைதிகர்களையும் அவர்கள் வெறுத்தனர்; ஊரில் இல்லாது செய்தனர்; கொலையும் சூழ்ந்தனர்; அவர்கள் ஊரில்வரக் காண்பதனை வெறுத்தனர்; சைவர்கள் தமக்குரிய மடத்தினுள் தமது சமயப் பாடல் பாடியதைக் கேட்கப் பொறாராயினர்; இந்நாளினும் கிறித்தவர் முதலிய புறச் சமயிகள் தமது சமயம் பரப்பச் செய்யும் பலவித முயற்சிகளையும் இங்கு ஒப்பிட்டு நினைவு கூர்க; இக்கொள்கைகள் ஆதியில் மிக நல்லன - இடைக்காலத்தில் இத்தீமைகள் புகுந்தன என்று இங்குப் பரிந்து இரங்குவாருமுண்டு; முன்னும் அன்றும் இன்றும் உள்ள இவர்கள் நிலைகள் ஒன்றே என்பது சரிதவாயிலான் அறியப்படும் உண்மை. 683

2582. (வி - ரை) **கேட்டு முட்டு யானும் என்று இயம்பி** - அரசன் சமணச் சார்பாகிய மயக்கத்தினுள் தோய்ந்து அழுந்தியிருந்த நிலை குறிக்கப்பட்டது.

**"நன்று நல்லறம் புரிந்தவா நான்" என்று நகுவான்** - **நான் நல்லறம் புரிந்தவா நன்று என்க**; சைவத்தையும் பிற சமயங்களையும் அரத்தி ஒழித்தலே நல்ல அறமெனக் கொண்டது அவர்களது சமயம், ஆ - ஆறு; நன்று என்ற சொல்லும், நகுதலாகிய செயலும் இகழ்ச்சிக் குறிப்புப்பட நின்றன

**கன்றும் உள்ளத்தன் ஆகி** - கன்றுதல் - கோபித்தல்; மனத்தினுட் கோபங்கொண்டு; தனது ஆணை வரம்பினை மதியாது வந்தனர் என்ற கோபம்; இப்பயனை விளைக்கவே அமணர் முன் கூறியவாறு காண்க. "முந்தைய வுரையிற் கொண்ட பொறைமுத லவையும் விட்டுச், சிந்தையிற் செற்ற முன்னாந் தீக்குணந் தலைநின்றார்கள்" (2532) என்றதற் கிலக்கிய மிங்குக் காண்க; இவ்வாறே அரசுகளது வரலாற்றினும் அடிகணமார் பொய்ப்பிணி கொண்டு போய் நின் சமயமழித்தார் எனக்கேட்ட பல்லவனும் "கன்று" (1353) "மூண்டசினப் போர்மன்னன்" (1359) ஆயினன் என்பது காண்க; மேலும் "செயிர்த்து" (2584) என்பதும் காண்க.

**அக்கண்ணுதலடியார் இன்று இம்மாநகர் அணைந்ததேன்? அவர்கள் யார்? என்றான்** - அக்கண்ணுதல் என்றும் அவ்வடியார் என்றும் கூட்டிக் கொள்க; அகரச

சுட்டுச் சேய்மை குறிப்பதாம், இங்கு மன்னன் கண்ணுதலையும், அவனடியார்களையும் அணுகலாற்றாது சேய்மைக்கண் நின்று ஒழுகிய தன்மை குறித்தது; இன்று - இத்துணை நாட்களும் முன்னெல்லாம் வராது இன்று; இம்மா நகர் - எனது ஆணைவலியினுள் அடங்கிக் காவல் பெற்ற இத்தலைநகர்; அணைந்தது என் - என்ன காரணம், எனக் காரணத்தை முன்னர்த் தெரிந்துகொள்ள விரும்பும் ஆர்வத்தால் அதனை யார் என்று கேட்பதன் முன் வினவினன், 684

2583. "மாலை வெண்குடை வளவர்சோ ணாட்டுவண் புகலிச்
சூல பாணிபான் ஞானம்பெற் றானென்று சுருதிப்
பால னன்பர்தங் குழாத்தொடும் பணிமுத்தின் சிவிகை
மேல ணைந்தன னெங்களை வாதினில் வெல்ல", ௬௮௫

2584. என்று கூறுவா ரித்திறம் முன்புதா மறிந்த
தொன்று மங்கொழி யாவகை யுரைத்தலுந், தென்னன்
மன்ற லம்பொழிற் சண்பையார் வள்ளலார் நாமஞ்
சென்று தன்செவி நிறைத்தலுஞ் செயிர்த்துமுன் சொல்வான், ௬௮௬

2585. "மற்ற வர்மறை யவன்தனிம் மருங்கணைந் தானேல்
உற்ற செய்தொழில் யாதுசெய் வோ"மென வுரைப்பச்
செற்ற மீக்கொண்ட சிந்தையுஞ் செய்கையு முடையோர்
கொற்ற மன்னவன் மொழிக்கெதிர் குறித்துரை செய்வார், ௬௮௭

2586. "வந்த வந்தணன் றனைநாம் வலிசெய்து போக்குஞ்
சிந்தை யன்றியச் சிறுமறை யோனுறை மடத்தில்
வெந்த ழற்பட விஞ்சைமந் திரத்தொழில் விளைத்தால்
இந்த நன்னக ரிடத்திரா னேகு"மென் றிசைத்தார். ௬௮௮

2583. (இ - ள்) மாலை ..என்று - (ஆதி) மாலையினையும் வெண் கொற்றக் குடையினையும் உடைய சோழர்களது வண்மையுடைய சீகாழியில் சூலபாணியாகிய சிவனிடத்தில் ஞானம் பெற்றான் என்று; சுருதிப்பாலன் வெல்ல - மறைச்சிறுவன் அன்பர்களின் கூட்டத்தினோடும் குளிர்ந்த முத்துச் சிவிகையின் மேல் எங்களையும் வாதினில் வெல்ல அணைந்தனன் ௬௮௫

2584. (இ - ள்) என்று கூறுவார் - என்றிவ்வாறு கூறுவாராகி; இத்திறம்... உரைத்தலும் - இத்திறங்களை முன்பு தாம் அறிந்த செய்திகள் ஒன்றும் ஒழியா வகையினால் சொல்லவும்; மன்னன் - அரசன், மன்றலம் ..செயிர்த்து - வாசனையுடைய அழகிய சோலைகள் சூழ்ந்த சீகாழியவர்களது வள்ளலாரது திருப்பெயர் சென்று தனது செவிகளை நிறைத்தலும் கோபித்து, முன் சொல்வான் - முற்படச் சொல்வானாகி; ௬௮௬

2585. (இ - ள்) மற்ற .உரைப்ப - மற்று அந்தப்பெரு வேதச் சிறுவன் அவ்வாறு இங்கு அணைந்தானாகில் செய் தொழிலாகப் பொருந்தியவற்றை யாது செய்வோம் என்று சொல்ல, செற்றம் .உரை செய்வார் - கோபம் மேலே பொங்கி எழும் மனமும் தொழிலும் உடைய அவ்வமணர் வெற்றியுடைய அரசனது மொழிகளுக்கு விடையாகக் குறித்து எடுத்துச் சொல்வார்களாகி, ௬௮௭

2586. (இ - ள்) வந்த...சிறுதை யன்றி-வந்த அந்தணனை நாம வலிமை செய்து போக்கும் எண்ண மன்றி; அச்சிறு மறையோன ...ஏகும் என்று இசைததார் - அந்த மறைச்சிறுவன் தங்கும மடததில் வெவவிய தழல சேரும்படி விளைசை மந்திரத் தொழில் விளைபபோமாயின, இந்த நலல நகரததினிடம் இராது வெளியே சென்று விடுவான் எனறு சொன்னார்கள்; ௬அஅ

இந்நானகு பாட்டுக்களும தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2583. (வி - ரை) மாலை வெண்குடை வளவர் - மாலை - ஆததி மலர் மாலை; மாலை என்ற பொதுபபெயா வளவா எனற பெயாககு அடை மொழியாய இடநோககி இஙகுச் சோழர்ககுரிய ஆததிமாலையைக குறிதது நின்றது.

வெண்குடை - முடி மனனாக்குரிய சிறபபடையாளஙகளுள ஒனறு.

வளவர் சோணு(ட்)டு - வளவர் நாடு எனறாலே அமையுமாதலின சோழ நாடு என்றதில் சோழ எனறது வாளாபெயராய நினறது: சோழநாடு சோணுடு என மருவியது; வளவாகட்குப பிறநாடுகளும் ஒவவொரு காலஙகளில உரிமையாயின அது குறிக்கக கூறிய குறிபபுமாம்.

சோணுட்டு - புகலி - ஞானம் பெற்றுனென்று - வெல்ல - அணைந்தனன் - அரசன் அவர்கள் அணைந்தது என்? அவர்கள் யாா எனறு வினவியதற்கு மறுமொழி யாக அவாகளின தலைவரது நாடும, ஊரும, பேரும, தகுதியும், அணைந்த கருமமும் எடுததுக் கூறியவாறு காணக. அரசனது வினவுக்கு விடையாகக கூறியவறறை மட்டும் சிறபபாக இப்பாட்டாற் கூறி, விடையல்லாது தாம் அறிந்தவறறை யெல்லாம் தாமறிந்தபடி ஒனறும் ஒழியாது எடுதது சொலலியவறறைப் பொது வகையால மேற் பாட்டிற கூறும் கவிநயம் காணக.

சூலபாணி பால் ஞானம் பெற்றுனென்று - வெல்ல - அணைந்தனன் - சூலபாணிபால் ஞானம் பெற்றன் - எலலா ஞானஙகளுககும காததா ஆதி சூலபாணி என்பது வேதம். அக்குறிபபுப்பெறக கூறியதாம; பெற்றுனென்று - பெறறுனென்று சொல்லிக கொண்டு; பெற்றதனுல் என்ற உணமைக குறிபபுமபட நினறது; வெல்ல அணைந்தனன் - அணைநததென? எனற வினவுககு வெல்ல அணைந்தனன் என்றனா; வெல்ல - வெல்வதறகென்று எணணி; வெலவதற்காக எனறு பிறசரிதத குறிப்புப்பட கினறமையும காணக அவாகளையறியாமலே அவர்கள் வாக்கில் உண மைக் குறிபபு நிகழ்ந்தது காணக.

எங்களை - உனது ஆதரவு பெற்ற எஙகளை எனபது உரைக குறிபபு; சிறப பும்மை தொககது.

மேல் அணைந்தனன் - மேன்மை பெற என்றது குறிபபு. 685

2584. (வி - ரை) இத்திறம் - இததனமையாகிய செயதிகள; இவ்வாறாக என்றலுமாம்.

அறிந்த தோன்றும் அங்கு ஒழியா வகை உரைத்தலும் - அரசன் வினவியனவும், வினவாதனவும, ஆணடைககு வேணடுவனவும் வேண்டாதனவும, பொருந்துவனவும் பொருந்தாதனவும என்ற பாகுபாடின்றித தாம அறிநத காரணமொன்றினையே கொண்டு எல்லாம் கூறினர்: இது அவர்களது மனக்கலககததினையும் மீக்கொண்ட சினத்தினையும், பேராசையினையும குறிபபது.

நாமம் சென்று தன் செவி நிறைத்தலும் - "செவிபபுலம் புகவிடப பொறுராய்" (2577) என்றதும் ஆணடுரைததவையும் இவ்விடததுக் கருதுக; நிறைத்தலும் - நிறை தலும் என்னது பிறவினையாறக் கூறியது அவனது விருபபததிறகு மாறுபாடாயினும்

அவர்கள் கூறியதனால் வலிந்து வந்து நிறைந்தது என்ற குறிப்பு; அவர்களைப் போலவே அரசனும் செயிர்த்து நிறையழிந்து கலக்க மடைந்தமை காண்க; மேல் "யாவது முறையாடாதே எண்ணத்திற கவலையோடும்" (2587) என்பதும் காண்க.

**செயிர்த்து முன் சொல்வான்** - உரைப்ப என மேலவரும் பாட்டுடன் கூட்டுக. **முன்** - முற்பட; பின் சொல்வன வேறு விதமாம் என்ற குறிப்புப்பட முன்சொல் **வான்** - என்றார். பின்சொல்வன, தீவினையின் விளைவாகச் சுரநோய மூண்டபோது, இங்குச் சொல்வது போல ஒரு சார்பாகச் சொல்லாமல் ஐயப்பாடாகிய நிலைகொண்டு இருவர் பக்கமாகச் சொன்னமையும், "இந்நோ யகலுமே லறிவேன்" (2620), "வென்றவர் பக்கஞ் சேர்வன்" (2621) என்றும், "இருதிறத் தீருந்தீரும், கைதவம் பேச மாட்டேன்" (2647) என்றும், நீங்கட்கேறிய தெய்வத் தன்மை யெண்ணிடைத் தெரிப்பீர்" (2657) என்றும வருவன காண்க, அதன்பின் நோய் நீங்கச் சிவநெறியின் உறுதிபெற்று "மறைச்சூல வள்ள லாரே, யிந்தவெப் படைப்ப நீங்க வெனக்கருள் புரிவீர்" (2667), "ஞானசம் பந்தர் பாத நண்ணினே னுய்ந்தேன்" (2670) என அம் மணரை விட்டுச் சைவ நெறியிலே சார்பு பெற்று அவ்வொரு பக்கமாகச் சொல்வதும், அமணரை இகழ்ந்து முறை செய்வதும் காண்க. இக்குறிப்பெல்லாம் பெறுவிக்கு மாறு இங்கு "முன் சொல்வான்" என்றார்.

**வள்ளலார் நாமம் செவிநிறைத்தலும் செயிர்த்து** - பின்னர் அரசன் சுரநோயுற்ற போது "வேணியர்பால் ஞானம், பெற்றவர் விருமபி நோக்கிற் றீயவிப் பிணியே யன்றிப் பிறவியுந் தீரும்" என்று அம்மையாரும் அமைச்சனாரும் கூறியபோது பிள்ளையாரது திருநாமம் மந்திரமாகி அயர்வு அகன்று பேசும் வன்மைத் தந்தது; (2619); இப்போது அதுவே செயிர்ப்பினை விளைத்ததென்னை? எனின், பித்தந் தலைக் கேறியபோது பாலுங் கைக்கும், அது நீங்கும்போது இனிக்கும்; இப்பண்பில் வைத் துக் காண்க; வினைதீரும் பக்குவம் வருமவரை இறைவனருள் திரோதானசத்தியாய உண்மை ஞானத்தை மறைத்துக் கன்மத்தை ஊட்டுவிக்கும்; பக்குவம் வரும்போது அதுவே அருட் சத்தியாய இன்பந்தரும் என்பது ஞானநூற் றுணிவு.

**வள்ளலார்** - வெறுத்துத் தீயவை செய்தபோதும் அருளினை மேற்கொண்டு நிற்கும் வள்ளன்மை குறித்தது. பிறசரித விளைவுகள் காண்க.

**அங்கோளியர் - மன்றலார்** என்பனவும் பாடங்கள். 686

2585. (வி - ரை) **மற்ற மாமறை மைந்தன் இம்மருங் கணைந்தானேல்** - நீவிர் கூறுகிறபடி அணைந்துள்ளானாகில்; **மற்ற** - மாறுபாடுடைய என்ற குறிப்பு; சமணர் மாயையினுட்பட்ட நிலையின் ஞாதலின் நோயுள்ளவன் பிதற்றுதல் போல இங்குப் பிள்ளையாரை ஒருமையிற் கூறுதலும், நோய் நீங்கியவனது உண்மைக் கூற்றுப் போலப் பின்னர் "மாமறைச் சிறுவர்" (2620), "சடையினருக் கன்பரா மிவரும்" (2657), "வந்தெனை யுய்யக் கொண்ட மறைக்குல வள்ள லாரே" (2667) என்றும் கூறும் நிலை களும் காண்க.

**உற்ற செய்தொழில் யாது செய்கோம்?** - **உற்ற** - பொருந்த முடையதாய; **யாது செய்கோம்** - அரசன் முற்றும் தன் வசமிழந்து அமணர் வசப்பட்டு அவர் பணித்த வழியில் ஒழுகினன் என்பது; இவ்வாறே சைவநெறியிற் புகுந்த அரசுகளை "என் செய்வது" (1353), "செய்வதினிச் சொல்லும்" (1360), "இனிக்கடியுந் திற மெவ்வாறு" (1373); "இனிச் செய்வதென்?" (1385) என்று அமண அடி கண்மாரை பன்முறையும் கேட்டு அவர் சொல்லியபடியே பல்லவ அரசனும் நிகழ்த்தி யவை இங்கு நினைவு கூரத்தற்பாலன. இவையும் பிறவும் அந்நாளில் சமண சமயம்

எதனையும் பலம்பெற்று வேறன்றி அரசாளும் முடிமன்னரானவரையும் தன் வசப்படுத்தி ஆட்டுவித்துச் சைவத்துக்குக் கேடு சூழ்ந்த தென்பதனை விளக்கும். இவை அந் நாளின் நாட்டு நடப்புச் சரித வரலாறுகளாலும் உறுதி பெறுகின்றன.

செற்றம் மீக்கொண்ட சிந்தையும் செய்கையும் உடையோர் - "சிந்தையிற் செற்ற முன்னுற தீக்குணந் தலைநின்றார்கள்" (2533) என்றது காண்க. செய்கையும் - அச்சிந்தையோ டமைந்திடாது அதனைச் செயலிலும் நிறைவேற்றினார்கள் என்பது.

எதிர் - விடையாக; குறித்து - தமது குறிப்பினையே கொண்டு. 687

2586. (வி - ரை) வந்த அந்தணன் - நமது நகரத்திற்கு விருந்தினனாய் வந்த அதிதி என்பார் வடவர்; அரச ஆணை முறையில் வலிசெய்து போக்கல் முறையாகா தென்பர் பின்னாகக் கூறுதற்குக் காரணங் கூறுவார் போன்று வந்த என்று தொடங்கினர் இது தங்கள் தீத்தொழிலினை மறைப்பதற்குச் சமணர் செய்யும் சூழ்ச்சிகளுள் ஒன்று.

வலிசெய்து போக்கும் சிந்தையன்றி - வலிந்து போக்கும் சிந்தை நமக்கு வேண்டாம்; அது தகுதியன்று என்பது, பின்னர் தாம் கூறும் யோசனையாகிய விஞ்சையின் கொள்கை உண்மையில் அதுவேயாம்; அன்றியும், பின்னர் அவர்கள் தீயினையே பொதிந்து விட்ட செயதியாகிய புறங்கழச்சியும் அதுவேயாம். இவற்றை யும், தமது உள்ளுறையினையும் மறைக்கத் தமக்கு அச்சிந்தையில்லை என்றார், இஃது மேலுமொரு சூழ்ச்சித் திறம்.

சிறு மறையோன் - மறைச் சிறுவன் என்றது இவ்வாறு கூறியது இலேசுபடும் குறிப்புப்படக் கூறுதல். இஃது மேலுமொரு சூழ்ச்சி; தாம் செய்வது சிறு காரியம் என்று அரசன் எண்ணச் செய்யும் சூழ்ச்சியாம்.

வெந்தழற்பட விஞ்சை மந்திரத் தொழில் விளைத்தால் - தழற்பட - தழல் போன்று காட்ட; இவ்வாறு விஞ்சை மந்திரத்தால் வரும் தழல், அணிமையில் தீ மூளுவது போலவே காட்டுதலின்றிப் பெருங்கேடு விளைக்காது என்பது அத்தொழிலினர் கண்டது; விஞ்சை - வித்தை; உண்மையல்லாத தொன்றை உண்மை போலக் கருத வைக்கும் இந்திரசாலம். "மணிமாளிகை மேடை சதுரங்க சேனையுடனே, வந்ததோர் வாழ்வுமோ ரிந்திரசாலக் கோலம்" (தாயுமானார்) "இந்திர ஞாலம் போலவந் தருளி, யெவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத், தானே யாகிய தயாபர னெம்மிறை" என்று மணிவாசகப் பெருமான் (திருவா) இதனை விளக்கியருளினார்.

மந்திரத் தொழில் - மந்திரத்தின் மூலம் செய்யும் தொழில் - கையானன்றி மந்திர செபத்தினால் செய்தல்; இவ்வாறு மூன்றாகக் கூறியதும் மேலுமோர் சூழ்ச்சித் திறமாம். என்னை; விஞ்சையாகிய மந்திரத்தின் தொழில் என்ற பொருளும் பிறிதோர் வழியால் விஞ்சையும், அது பயன் றராதாயின் மந்திரமும், அதுவும் பயன்படா தாயின் தொழிலும் என உம்மைத் தொகையாக்கி உரைக்க நின்ற பொருளும் படக் கூறியது காண்க; மேலங்கழச்சியும் காண்க.

வெந்தழற்பட....தொழில் - இவ்வாறாகிய மந்திர விஞ்சைத் தொழிலும் ஒன்று உண்டு. அதனை ஏவுதல் என வழங்குவர்; அது அவ்வுபாசனை தைவந்தோரது ஏவல் வழி நிற்கும் சிறு தெய்வங்களின் செயலா லாவது, இதனைச் "சென்றுநாம் சிறுதெய்வஞ் சேரோமல்லோம்" (தாண்) என்று அரசுகள் காட்டி அருளினர். கந்தபுராணத்தினுள் அக்கினிமுகாசுரன் இவ்வாறு தன்னகாக காளியினை வீரவாகு தேவர் மேல் ஏவி விடுத்த சரிதமும் காண்க; ஆனால் அவை முதல்வன் மாட்டும் அடியார் மாட்டும்

செல்ல மாட்டாமையும் ஆண்டே கண்டு கொள்க ; இதன் உண்மை 2596-ல் ஆசிரியர் காட்டுதலும் காண்க. வெந்தழற் பட - பட என்பது யாம் அதற்குக் காரணமாக வாதம் மூண்டு பட்டொழிய என்று பிற்சரித விளைவுக் குறிப்பதாக அவர் வாக்கிலே போந்த திறமும் காண்க.

**இந்த நன்னக ரிடத்திரான் ஏதும்** - தமது சார்பு நற்சார்பு என்றும், சைவர் சார்பு அல்லாமல் தொன்றுதொட்டு விலக்கப்பட்ட குறியது என்றும் குறிப்புப் பெற நன்னகர் என்றது மேலுமொரு சூழ்ச்சித்திறம். இரான் - இரானாகி ; முற்றெச்சம் முற்றாகவே கொள்ளினு மிழுக்கில்லை.

**மாநகரிடத்து** - என்பதும் பாடம். 688

**வேறு**

2587. "ஆவதொன் றிதுவே யாகி லதனையே விரைந்து செய்யப்
போவ"தென் றவரைப் போக்கிப் பொய்ப்பொரு ளாகக் கொண்டான்
யாவது முரையா டாதே யெண்ணத்திற கவலை யோடும்
பூவணை யமளி புக்கான் ; பொங்கெழிற் றேவி சேர்ந்தாள். ௬௮௯

(இ - ள்) **ஆவதொன்று...போக்கி** - "செய்யலாவது ஒன்று இதுவேயானால் அதனையே விரைந்து செய்யப் போவீராக" என்று கூறி அவர்களைப் போகும்படி விடுத்து ; **பொய்ப் பொருளாகக் கொண்டான்** - பொய்யினைப் பொருள் என்று கொண்ட மன்னவன் ; **யாவதும்...புக்கான்** - யாதும் யாவரிடமும் பேசாமல் மனத்தில் நிறைந்த கவலையினோடும் மலர்கள் பரப்பிய படுக்கையிற் சேர்ந்தனன் ; **பொங்கெழில் தேவி சேர்ந்தாள்** - மிக்கெழுகின்ற எழிலையுடைய பாண்டிமா தேவியார் அங்குச் சேர்ந்தனர்.

(வி - ரை) **ஆவது ஒன்று இதுவே ஆகில்** - **ஆவது** - செய்யலாவது, செய்யத் தக்கது ; **ஒன்று** - வேறு பலவன்றி ஒன்றேயாக, **இதுவே யாகில்** - இதுவேயன்றிப் பிறிதில்லையானால், அரசன் கூறும் பொறுப்புவாய்ந்த நிலை காண்க ; விருந்தாக வந்தவரைப் போக்குதல் நீதிநூல் விலக்கு, அரசாங்க முறைக்கும் தவறு ; குடியிருக்கும் மடத்தில் தீப்பட விளைத்தல் அரசாங்க முறைக்கும் தான் மேற்கொண்ட சமண சமய நூலுக்கும் விலக்கு ; இவற்றையெல்லாம் உணர்ந்த அறிவினுடன் கொண்ட அரசன் "செய்தக்க செய்யாமை யானுங் கெடும்" (குறள்) என்பது நீதியாதலின், அக்குறிப்பினை உட்கொண்டு **செய்யலாவது ஒன்று** என்றான் ; **ஒன்று** - இஃது ஒன்று தவிர வேறொன்றுமில்லை யெனும்படி ஒரே வழி - என்பது குறிப்பு - **இதுவே யாகில்** - ஏகாரம் பிரிநிலை ; இதனை விட்டு வேறு வழியில்லையாயின் ; முன்னரும் **உற்ற செய்தொழில்** என்ற குறிப்புக் காண்க.

**அதனையே** - ஏகாரம் தேற்றம், **ஆகில் அதனையே** - அஃது ஆவதோ அன்றோ என முடிக்கும் பொறுப்புத் தன்னிடமாக மேற் கொள்ளாது அவ்வடிகளிடமே சார்த்தின அரச தந்திர முறையின் மேன்மை கருதுக

**போவது** - போவீராக ; போவது செய்க என்ற வியங்கோள் தொக்கு நின்றது ; இதனுடன் தொலைந்து முடிவிற் கழுவேறிக் கழிந்து போவது என்ற குறிப்பும் காண்க.

**போக்கி** - மன்னனிடத்து அவர்களுக்கு இருந்த மேன்மை நிலை இதனுடன் கழிந்து போவதாயிற்று என்ற பிற்சரித விளைவுக் குறிப்புக் காண்க. உயர் நிலையே

யனறி இதொழில் முடிவில மனனனுரையினுலே இவர்களுயிரும் போவதாகும் என்ற குறிபபும காணக.

பொய் பொருளாகக் கொண்டான் - பொருளல்லாத பொயயினைப பொருளாக உட்கொணடவன , " பொருளல லவறறைப பொருளென் றுணரும மருள் " (குறள்) பொய் பொருள் - பொருள் - மெய எனறு கொணடு, ஒனறினையே பொய்யும் மெயயு மாம என்ற சமணா கொளகையுடைய என்றலுமாம. அததிநாததி - என்ற அவா களது மநதிரம, உணடுமாம—இல்லையாம ; மெயயும் பொய்யுமாம எனற குறிப்பினை உடையது.

யாவதும் உரையாடாதே எண்ணத்திற் கவலையோடும் - மனததிற் கவலை மிக்க போது பிறரிடம பேசசு நிகழாது ; இது மனத தததுவ இயலபு ; கவலை - இஃது இனன தெனபதனைப பின்னர் 2589 - 2590 பாட்டுககளில அரசன தன வாககினுலே அறி விககச செயயும கவிநலமும தகுதியும காணக.

பூவணை அமளி - பூவணை - அமளியிற புதுப பூககள பரபபுதல வழக்கு ; பூ - மெனமை - அழகு எனறலுமாம. அமளி - படுககை. " போதா ரமளிககே " (திருவா - திருவெம்பாவை - 2).

பொங்கெழில் தேவி - பொங்கு - மேனமேலும மிகுகினற ; பிளளையாா வரப பெறறமையால குறைநீஙகி அரசனும உயதி பெறறுச் சைவமோஙகு நிலை கைவரப் பெறறேம எனற உள மகிழசசியினுல புறபபொலிவும மிகுவதாயிறறு எனபது குறிபபு

தேவி - பாணடிமா தேவியாராகிய (2592 - 2593) மஙகையாககரசியாா.

அமளி - புக்கான் ; தேவிசேர்ந்தாள் - எனறமையால அஃது இரவுக்காலம் என்று குறிப்பிதத நயம காணக.

எழிற்றேவி சார்ந்தும் - உரையாடாதிருநதான எனக கவலை மிகுதி உணர்ததியது காணக.

பொய்ம்மையைப் பொருளாக் கொண்டான் - புகுந்தனர் தேவியாரும் - என் பனவும பாடமகள. 689

2588. மன்னவ னுரைப்ப தின்றி யிருக்கமா தேவி யார்தாம்
" என்னுயிாக் குயிரா யுளள விறைவனீ யுறற தென்னோ ?
முன்னுள மகிழ்ச்சி யின்றி முகமபுலாந் திருநதா ; யின்று
பன்னிய வுள்ளத தெய்துமை பருவர லருள்செ " யென்றார். ௬௯0

(இ - ள்) மனனவன...மாதேவியாா தாம - அரசன இவவாறு சொல்லாடாது இருததல கணடு மாதேவியாா ; " என னுயிரககுயிராயுளள...அருள செய் " என்றார் - எனது உயிரககுயிராக உளள என நாயகரே! நீா எனனேவுறறீா ? ; முன் உள்ள மகிழசசியிலலாமல முகம வாடியிருநதீா ; இன்று இவவாறு எணணமிடும் உமது உள்ளததிலே பொருநதிய வருததததினை உரைததருளும " என று சொனனுா.

(வி - ரை) உரைப்பதின்றி - சொலலாடாது ; வாய பேசாமல ; உயிர்க்குயிரா யுள்ள இறைவன் நீ —"தெயவந தொழாஅள கொழுநற றொழுதெழுவாள்" (குறள்); " கொணடவட்குத தெயவங் கொழுநனே " முதலிய நீதிநூற் றுணிபுகள காண்க ; கொழுநன் பொருட்டே உலக வாழ்வைத தாஙகி நிறறலும, அவனுககுக் கேடுவரின் வாழககை துறததலும நமது நாட்டில பணடைப பெரியோா வகுததொழுகிய நலல முறை ; பதுமகோமளை, சூரபதுமன இறநதானென்று கேட்டலும உயிர் துறநதன்ள ;

கணவன் தம்மை மனைவி என்ற நிலையினை நீத்த தநிந்தவுடன் உடலின் தசை முதலியவற்றை உதறித் துறந்து கல்ல பேய் வடிவம் பெற்றனர் காரைக்காலம்மையார். இவை முதலிய இலக்கியங்கள் உணர்ந்து போற்றத்தக்கன; இங்கு இவ்வொழுக்கத்திற் றலைசிறந்து நின்ற மாதேவியார் கூறியது உபசாரமன்றி முழுதும் உண்மைமொழிகளேயாம்; இதுவே கற்பினது உயர்ந்த குறிக்கோளும் இலக்கணமுமாம்; உண்மையிவ்வாறாகவும் இங்குக் கணவனாகிய அரசன் சமணத்தில் இருப்ப அதற்கு மாறுபட்டு அவன் முன்பு புலப்படா வகை மனைவியாராகிய அரசியார் தாம் சைவத்திறத்தில் நின்றொழுகிப் பிள்ளையாரை வரவழைத்து விளைத்த செயல்கள் எல்லாம் "கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை" என்பனவாதி முன்னர்க்கூறியவற்றோடு முரணுவனவே? எனின், முரணா; என்னை? சொல்லாவன எல்லா உயிர்க்கும் உயிராகி ஆன்ம நாயகராகிய இறைவன் பணித்த வேத சிவாகமங்களே! அவற்றின் வழி திறம்பாது நிற்றலே கற்பாம்; இங்கு மன்னன் மயக்க முற்றுத் திறம்பி நின்றபோது தாமும் அம்மயக்கத்திலே நிற்றல் கற்பாகாது இழுக்கேயாகும்; அவனை மயக்கந் தீர்த்து நன்னெறிப் படுத்தி ஆன்மலாபம் பெறச் செய்து "பெற்றிமையானுடன் என்றும் பிரியாத உலகெய்த" வழிதேடுதலே உயர்ந்த கற்புநெறியாம்; மன்னவனும் நாடும் நன்மை பெறவே தேவியார் முயன்றனராதலின் அஃது உயர்வாகிய கற்புநிலையேயாம். இக்கருத்துப்பற்றியே பிள்ளையாரை முதலில் வணங்கி வரவேற்றபோது அம்மையார் "பவளவாய் குழறி, யானும் என்பதியுஞ் செய்த தவ மென்கொல்" என்றார், என்றதும் கருதுக; இவைபற்றிக் காரைக்காலம்மையார் புராணத்தும், பிறாண்டும் உரைத்தவை யெல்லாமும் கருதுக. அன்றியும் கணவன் பித்துக்கொண்டு தற்கேடு சூழ்ந்தால் மனைவி அவன் வழியே யமையாது பித்தம் தீர்த்து உய்வித்தல் கற்பன்றோ?

**என்னோ உற்றது** - உற்றது - பொருந்திய தீமை, என்ன விஞ வினைக்குறிப்பு; ஓகாரம் - அசை; என் - நோ - என்று பிரித்து நோய் என? என்றலுமாம்.

**முன் உளமகிழ்ச்சியின்றி முகம் புலர்ந்திருந்தாய்** - முன் உள மகிழ்ச்சி - வழக்கம் போல என்றுமுள்ள உள்ள மகிழ்ச்சி; இதனால் அரசன் - அரசியாரது இல்வாழ்க்கைத் திறம் அன்பினிறைந்ததாய மிகு மகிழ்ச்சிக்கிருப்பிடமாய் இருந்ததென்பது புலப்படும், சமய நிலையில் வேறுபட்ட அம்மையார் செயல்கள் எல்லாம் அரசன் மாட்டுக் கொண்ட அடிப்படையாகிய அன்பு காரணமாக எழுந்தனவே யாதலின் இந்நிலை கூடிற்றென்க. முன்கூறிய கற்பினியல்பு இதனாலாகியது.

**உளம் மகிழ்ச்சியின்றி முகம் புலர்ந்து** - முகவாட்டம் உண் மகிழ்ச்சியின்மையைக் காட்டிற்று என்பதாம்.

**பன்னிய** - வருத்தப்பட்டுப் பலபலவும் எண்ணமிட்ட. **பருவரல்** - வருத்தம்.
**அருள்செய்** - இரக்கப்பட்டு விண்ணப்பிக்கும் முறை. 690

2589. தேவியார் தம்மை நோக்கித் தென்னவன் கூறுகின்றான்
"காவிநீள் கண்ணி னாய்! கேள் காவிரி நாட்டின் மன்னுந்
தாவில்சீர்க் கழும லத்தான் சங்கர னருள்பெற் றிங்கு
மேவினா னடிகண் மாரை வாதினில் வெல்ல" வென்று, ௬௯௧

2590. "வெண்பொடி பூசுந் தொண்டர் விரவினா; ரவரை யெல்லாங்
கண்டுமுட் டடிகண் மார்கள்; கேட்டுமுட் டியானும்; காதல்
வண்டணைத் துதைந்த கோதை மானியே! யிங்கு வந்த
பண்புமற் றிதுவே யாகும்; பரிசுவே றில்லை" யென்றான். ௬௯௨

2589. (இ - ள்) தேவியார தமமை .கூறுகின்றுன - மாதேவியாரை நோக்கி பாணடியன சொலவாறுகி ; காவிநீள...என்று - நீலோற்பலம போன்ற நீண்ட கண்ணையுடையாய ! கேட்பாயாக ! சோழரது காவிரி நாட்டினகணணே நிலை பெற்ற குற்றமற்ற சிறப்பையுடைய சீகாழிப பதியவன சங்கரனுடைய அருளைப பெற்று இஙகு அடிகணமாரை வெலலும பொருட்டு அணைநதனன ; என்று கூறி மேலும சொலவாறுகி, சுகூக

2590. (இ - ள்) வெண்பொடி ..விரவினூர - வெணபொடியாகிய திருநீற் றினைப் பூசும தொணடாகள அனேகா வநது பொருநதினாகள ; அவரை...அடிகண மாாகள் - அவர்களை எலலாம கணடதனுல அடிகணமாகள் கணடுமுட்டு ; யானும... கேட்டுமுட்டு - அசசெயதியினைக கேட்டதனுல நானும கேட்டுமுட்டு ; காதல்... மாணியே - என காதலுககுரியவளாய, வணடுகள தேனுணணும் பொருட்டு நெருஙகிச் சேர்ந்த மாலைசூடிய மாணியே ? ; இஙகு...இலலை என்றுன் - இஙகுக கூடிய தனமை இதுவேயாம ; வேறு பரிசொனறுமிலலை என்றுன். சுகூஉ

இநத இரணடு பாடடுககளும தொடாநது ஒருமுடிபு கொணடன.

2589. (வி - ரை) காவிநீள் கண்ணிறய் ! கேள் - இவாகளது இலலற நிலையின் வாழ்ககை நலம உணாததிறறு, " காதல...மாணியே "[1] என்று மேறபாட்டிலும் வருதல் காணக ; 2558ல உரைததவை பாாகக.

காவிரி நாடு - சோழநாடு :—அரச மரபுச சிறபபுப பறறிச சோழநாடு என்னுது ஆறறுச சிறபபுப பறறிக காவிரிநாடு என்றது மாதேவியாரது மரபு பறறி இநத இழுக்குத தொடாபுடையதென்று தொனியாலும பொருளபடாதிருததற பொருட்டு.

சங்கரன்...வெல்ல - அரசனது வாககில் அவனையுமறியாது சரித விளைவாகிய உணமைக் குறிபபுப போநதமை காணக, "சூலபாணிபான ஞானம பெறறுனென்று" என்று அடிகணமாா கூறியதன உடனபாட்டையும, அருள் பெறறு என்ற வாயமையும் காணக.

கூறுகின்றன் - என்று - என்றன் - என மேலவரும பாடடுடன முடிகக. என்று - என்று கூறி மேலும.

வெல்லவென்று மேவினுன் என்று இபபாடடினையே முடிததுக கொளளுதலு மொனறு ;

வெல்ல வேண்டி - எனபதும பாடம. 691

2590. (வி - ரை) வெண்பொடி - திருநீறு ; இது சமணா கூறும் மரபு. அவா இதனை வெளளை நிறமுடையதொரு பொடி என்ற அளவில கண்டு கொணடாரனறி, அது அணிபவரது மலததினை நீறறும தனமையுடையது என்றும, அதனுல் அதறகு நீறு எனப பெயா போந்தது என்றும அறிநதாரலா. " பாச மறுபபது நீறு " (தேவா).

கண்டுமுட்டு - கேட்டுமுட்டு - 2581 - 2582 பாாகக. சமணரது மாயததழுநதி யதனுல அவாகள சொல்லை அவவாறே நமபிப பினபறறினன.

காதல் - மானியே - என்து காதலுககுரியவளே ! காதலியே !

வந்த பண்பு - மனக கவலையும, அதனுல முகம் புலாதலும, மனவருத்தமும் பிறவும ; " எண்ணத்திற் கவலை " (2587) என்றதனை விளக்கியவாறு.

பரிசு வேறில்லை - பரிசு - தனமை ; 692

2591. மன்னவ னுரைபபக் கேட்டு மங்கையர்க் கரசி யார்தாம்
" நின்னிலை யிதுவே யாகி னீடிய தேய்வத் தன்மை

யன்னவர் வாது செய்தால் வென்றவர் பக்கஞ் சேர்ந்து
துன்னுவ துறுதி யாகுஞ்; சுழிவுறேல் மன்ன !" வென்றார். ௬௯௩

(இ - ள்) வெளிப்படை. அரசன் அவ்வாறு சொல்லக்கேட்டு மங்கையர்க்கரசியம்மையாரும் அரசனை நோக்கி "உனது நிலை இவ்வாறேயானால், அழிவு படாமல் நீடிய தெய்வத் தன்மை விளங்கும்படி அவர் வந்து வாதம் செய்தால் அதில் வென்றவருடைய பக்கத்திற் சேர்ந்து பொருந்துவதே உறுதியாகும்; வருந்த வேண்டா" - என்றனர்.

(வி - ரை) இது அரசனைக் கவலைப்படாதபடி தேற்றிய முறை; இதன்கண் ணும் உண்மை நிகழ்ச்சிக் குறிப்புப்பட வருதல் காண்க.

நீடிய - அழிவுபடாத; தெய்வத் தன்மை - தெய்வத் தன்மை விளங்கும் நிலையில்; புலப்படும்படி.

வென்றவர் பக்கம் சேர்ந்து துன்னுவ துறுதியாகும் - அவரே வெல்வார் என்பது உறுதி; அவர் பக்கம் சேர்ந்து துன்னுவது உறுதி, உறுதி-உண்மையாய - நிச்சயமாய நிகழ்வது; உறுதியாகும் - அதுவே உறுதி பயக்கும் செயலாகும், என்று வழிப்படுத்தும் போதனைக் குறிப்பும் காண்க. சேர்ந்து - என்றதனால் இப்போது சேர்ந்த சமயம் வெற்றி பெறுவதில்லை என்பது குறிப்பு.

நீடிய தெய்வத் தன்மை - "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே, மாதொரு பாகனார்தாம் வருவர், மற்றத்தெய் வங்கள், வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யும்" (சித்தி—2 25) என்றபடி பிற தெய்வங்களும் சிவனுணையால் நீதி செலுத்தவரினும், நீடியிரா அழிவெய்தி இறத்தல் பிறத்தல்களுக்கிடமாயவையும் ஆதலின் அவ்வாறின்றி அழிவில்லாத தெய்வத் தன்மை என்க; "தேறிய தெய்வத் தன்மை யெனனிடைத் தெரிப்பீர" (2657).

சுழிவுறுதல் - மனம் வாடுதல், கவலை கொண்டு அலமருதல்.

சுழிவுறேல் - வருத்தப்பட வேண்டா; 693

2592. சிந்தையிற் களிப்பு மிகுத்த " திருக்கழு மலத்தார் வேந்தர்
வந்தவா றெம்மை யாள" வெனவரு மகிழ்ச்சி யோடுங்
கொந்தலர் குழலார் போதக், குலச்சிறை யாரங் கெய்த
விந்தநன் மாற்ற மெல்லா மவர்க்குரைத் திருந்த பின்னர், ௬௯௪

2593. கோற்றவ னமைச்ச ரூங் கைதலை குவித்து நின்று
" பெற்றனம் பிள்ளை யாரிங் கணைந்திடப் பெறும்பே " றென்பார்
" இற்றைநா ளீசனன்பர் தம்மைநா மிறைஞ்சப் பெற்றோம்;
மற்றினிச் சமணர் செய்யும் வஞ்சனை யறியோ" மென்றார். ௬௯௫

2592. (இ - ள்) சிந்தையிற் களிப்பு...போத-மனத்தினுள் மிகவும் களிப்படைந்து "சீகாழித் தலைவர் எம்மையாளும் பொருட்டு வந்த ஆறுதான் என்னே !" என்று வரும் மகிழ்ச்சியினுடனே விரியும் மலர்களை யணிந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசியம்மையார் போந்தபோது; குலச்சிறையார் அங்கு எய்த - குலச்சிறையார் அவ்விடத்தே வந்துசேர, இந்த பின்னர் - இந்த நல்ல வார்த்தைகளை யெல்லாம் அவரிடம் சொல்லிய பின்பு, ௬௯௪

2593. (இ - ள்) கொற்றவன...என்பார் - அரசனது மந்திரியாரும் கைகளைத் தலைமேலே கூப்பி நின்று, "பிள்ளையார் இங்கே அணைந்திடத்தக்க பெரும் பேறுதான்

பெற்றோம்" என்று சொல்வாராகித் தொடர்ந்து; "இற்றைநாள்...அறியோம்" என்றார் - இன்று இறைவரது அடியாரை நாம் கண்டு வணங்கும் பேறு பெற்றோம்; மற்று இனிச் சமணர் செய்யக்கூடிய வஞ்சனை எதுவோ அறியோம்" என்று சொன்னார். ௬௯௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2592. (வி - ரை) திருக் கழுமலத்தார் வேந்தன்...என்றது அம்மையார் மனத்தில் களிப்பு மிகுதற்குக் காரணமாய் எழுந்த கருத்து; வந்தவாறு - வந்த நிலை தான் எத்தகைய பெரும் பேறாக நாம் பெற நின்றதென ஆச்சரியக் குறிப்பு. இக் கருத்தே அமைச்சனார் மனத்தினுள்ளும் எழுந்தது; ஆதலின் அவர் இதனை விரித்துரைக்கு முகத்தால் "பெற்றனம் பிள்ளையாரிங் கணைந்திடப் பெறும் பேறு" என்றனர். பிள்ளையார் வருகையைத் தமது பெரும் பேறாகவும், தம்மை ஆட்கொள்ளும் பொருட்டே அது நிகழ்ந்ததாகவும் இருபெரு மக்களும் கருதினர் எனபதாம்.

போந்து - அரசனிருந்த இடத்தினின்றும் வெளியே சென்று,

இந்த நன்மாற்ற மெல்லாம் - அரசன் இருந்த நிலைகண்டு தாம் வினவியதற்கு அவன் கூறியதும் அதற்குத் தாம் மொழிந்ததும் ஆகிய செய்திகள் மாற்றம் - அவை சொல்லளவில் நிகழ்ந்தன வாதலின் மாற்றம் என்றார்; மாற்றம் - மாறுதல் என்று கொண்டு அரசனிடம் நிகழ்ந்த மாறுதலும் அதனை மாற்றத் தாம் கூறியவையும் என்றுரைத்தலுமாம்.

அவர்க்குரைத்து இருந்த பின்னர் - மந்திரியாருக்குச் சொல்லித் தமது இடத்தில் அமர்ந்த பின்பு; தமக்கும் அரசனுக்கும் உள் நிகழ்ந்தவற்றை அவர்க்குரைத்ததென்னையோ? எனின், சைவ ஆக்கத்தின் பொருட்டு இருவரும் செய்த பணியாதலின் மேல் ஆகவேண்டுவனவற்றை நாடி நலஞ் செய்தல் அமைச்சர் மேல் நிற்றலான அவர் அறிந்திருத்தல் வேண்டும் என்னும் உலகியல் அரச தந்திர முறைபற்றியாம்; இருந்து - தமது ஆசனத்தில் அமர்ந்து; 694

2593. (வி - ரை) "பெற்றனம்...பேறு" என்பார் - அரசியார் உரைத்ததனையே உடன்பட்டுத் தாமும் அவ்வாறே மகிழ்வதாகக் கூறினார். இருவரிடத்தும் ஒரு தன்மையாகவே அகக்கருத்தும் அதனால் மகிழ்ச்சியும் எழுந்தன; ஆனால் அமைச்சுத்திறம் வல்லவராதலின் அதனோடமையாது மேலும் எண்ணி மேல் விளைவினைக் கருதலளவையான் அறிந்து மேலேயும் கூறுவாராகி என்பது குறிக்க என்பார் என எச்சமாக்கி மேற் புகுகின்றார்; "தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாய்ச், சொல்லலும் வல்ல தமைச்சு" (குறள்). அவ்வாறு தெரிந்தநிலை மேற்கூறுவார்; அம்மையார் கருத்தை உடன்பட்ட நிலை முன்னரும், தாம் தெரிந்த நிலை பின்னரும் கூறிய முறைகள் காண்க.

இற்றைநாள்...பெற்றேம் - இற்றை நாள் - முன்னாட் பலநாள் பெறாது ஏங்கியிருந்தும் பெறாது பெற்ற நிலைக்குறிப்பு; அன்பர்தம்மை சிவனடியார்களைப் பொதுவாகவும் பிள்ளையாரைச் சிறப்பாகவும் குறித்தது;

மற்று இனி - மற்று வினைமாற்றின்கண் வந்தது; இது வரை தமது நிலையும் இனி அமணர் நிலையும் கூறினார்;

இனிச் செய்யும் வஞ்சனை - செய்யும் - செய்யக்கூடியதென்று அறியும்; அவர்களியல்பினை அறிந்துள்ளாராதலின் இவ்வாறு முன்னறிவிப்பும் எச்சரிக்கையுமாகக் கூறினர்; வஞ்சனை வஞ்சச் செயல்; அறியோம் - வஞ்சச் சூழ்ச்சிச் செயல் செய்குவர் என்பது மட்டும் உறுதி; ஆனால் அது எத்தன்மைத்து என்று கூறவியலாது; என்றதாம். மேல் அம்மையார் கூறுதலும் காண்க. 695

2594. மானியார் தாமு மஞ்சி "வஞ்சரிப் புலையர் தாங்கள்
ஈனமே புரிய வல்லார், செய்வ தென் னோ"வென் றெண்ணி,
"ஞானசம் பந்தர் தம்பா னன்மையல் லாது செய்யும்
ஊனம்வந் தடையி னாமு முயிர்துறந் தொழிவ" தென்றார். ௬௯௬

(இ - ள்) மானியார் தாமும் அஞ்சி - அரச மாதேவியாரும் அஞ்சி; வஞ்சரிப் புலையர்...எண்ணி - வஞ்சகர்களாகிய இவர்கள் ஈனமான செயல்களையே செய்ய வல்லவர்; அதற்கு நாம் என்ன செய்வது; என்று எண்ணமிட்டு, ஞானசம்பந்தர்... என்றார் - திருஞானசம்பந்தரிடம் நன்மையல்லாத செயல்களை இவர்கள் செய்து அதன் மூலம் கெடுதி வந்து சேருமாயின் நாமும் உயிர் துறப்போம் என்று கூறினார்.

(வி - ரை) இது மந்திரியார் கருத்திற் கூறிய எச்சரிக்கையின் மேல்விளைவைப் பற்றி அம்மையார் சிந்தித் தறிந்து சொல்லியது.

வஞ்சர் வல்லார் - செய்வதென்? மந்திரியார் - மற்றினி, அமணர் செய்யும் வஞ்சனை அறியோம் - என்றதனை உட்கொண்டு, அற்றன்று, அவர் செய்வது ஈனமே யாம் என்பதனை அறிவோம், ஆனால் அதற்குமாறாக நாம் செய்யக்கிடந்த தென்னையோ? என்று எண்ணமிட்ட அம்மையார், அவர் வஞ்சச் சூழ்ச்சியே புரிகுவர்; புரியினும் அதனை மேற்கொன்றும் பிள்ளையார்பாற் சாரவியலாது, ஒரு வேளை அவ்வாறன்றி என் மேற் கூறுகின்றார் (செய்வது) என்னும்-எதுவோ என்றலுமாம்.

நன்மையல்லாது செய்யும் ஈனம் வந்தடையின் - அடையின் - வந்து அடையாது என்பதுகுறித்தே. ஆயினும் ஒரு வேளைவரின், என்றார்; நன்மையல்லாது - தீமை சொல்லலாகா மரபு பற்றி இவ்வாறு கூறுவது பெரியோர்கள் வழக்கு. "ஒழுக்க முடையார்க்கொல்லாவே தீய, வழுக்கியும் வாயாற் சொலல்" (குறள்); பிள்ளையார்பால் வேறொன்று படுமாயின் என வாய்காற் சொல்லவுமஞ்சி அஞ்சியது அம்மையாரின் அன்பு நிறைந்த மனநிலை.

யாமும் உயிர் துறந்தொழிவது - "செய்வதென்" என்று எண்ணமிட்டு அம்மையார் துணிந்த முடிவு; தாம் உயிர் துறப்பதே அதற்கு முடிவு என்பது, முயற்சியின்றி உயிர் தானாகவே நீங்கும் என்பதும் குறிப்பு; அம்மையார் தலையன்புடையாராதல் காண்க.

நன்மையல்லாத செய்ய - என்பதும் பாடம் 696

2595. இவர்நிலை யிதுவே யாக; விலங்குவேற் றென்ன னானை
அவனிலை யதுவா, மந்தி ரருகாதந் நிலையா தென்னில்
தவமறைந் தல்ல செய்வார் தங்கண மந்திரத்தாற் செந்தீ
சிவநெறி வளர்க்க வந்தார் திருமடஞ் சேரச் செய்தார்; ௬௯௭

வேறு

2596. ஆதி மந்திர மஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதி ரத்தினு மற்றைமந் திரவிதி வருமே!
பூதி சாதனர் மடத்திற்றம் புணைந்தசா தனைகள்
சாதி யாவகை கண்டமண் குண்டர்க ளயர்ந்தார், ௬௯௮

2595. (இ - ள்) இவர் நிலை இதுவே ஆக - இவர்களது நிலைமை இவ்வாறே யாகின்றதாக; இலங்கு...அதுவாம் - விளங்கும் வேலேந்திய பாண்டியனுகிய அவனிலை முன்கூறிய அதுவாம்; அந்நாள் - அற்றை நாளில்; அருகர்...என்னில - அருகர்களின் நிலை யாதாம்? என்றால்; தவமறைந்து...சேரச் செய்தார் - தவவேடத்துள் மறைந்து நின்று, அல்லாத தீச்செயல்களைச் செய்வார்களாகிய அவர்கள் தங்களது மந்திரத்தினாலே, சிவநெறி வளர்க்கத்திருவவதரித்து வந்த பிள்ளையாரது திருமடத்திலே செந்தீயினைச் சேரும்படி செயல் செய்தனர். ௬௬௭

2596. (இ - ள்) ஆதி...வருமே - ஆதி மந்திரமாகிய திருவைந்தெழுத்தினை ஓதுகின்றவர்கள் பார்க்கின்ற திசையிற்றானும் மற்ற மந்திரங்களின் செயல்கள் சென்று சேருமோ? (சேரா), பூதி...தளர்ந்தார் - திருநீற்றுச் சாதனம் பூண்ட பிள்ளையாரது திருமடத்தில் தாம் புனைந்த சாதனைகள் ஏவியபடி குறித்த பயனைத் தாராதொழிந்த வகையினைக் கண்டு அவ்வமணர்களாகிய கீழ்மக்கள் தளர்ச்சி யடைந்தனர். ௬௬௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2595. (வி - ரை) இப்பாட்டினால் அரசியார் அமைச்சனார் ஒரு திறமும், அரசன் ஒரு திறமும், அமணர் மற்றொரு திறமுமாக மூவேறு திறத்தவரது நிலைகள் மூவேறு திறம்பட நின்ற தன்மை கூறப்பட்டது, அவற்றுள், இவர் நிலையிதுவே - இவர் - அரசியாரும் அமைச்சனாரும்; நிலை இதுவே - இது - முன் 2592 - 2593 பாட்டுக்களில் உரைக்கப்பட்டது; இவர் - இது என்று அணிமைச் சுட்டினாற் கூறியது இது இறுதியாகக் கூறிய அணிமைபற்றி; இவர்களே நமக்கு அணியார் என்ற குறிப்புமாம். முதலிற்கூறிய குறிப்புமது;

இலங்குவேல் தென்னனுன அவன்நிலை அதுவாம் - இவர்களுக்கு அடுத்து முன் கூறியது அவன் நிலையாதலின் அதனை அடுத்துவைத்து ஓதினார். அவன் நிலை முன் 2587—2590ல் உரைக்கப் பட்டது.

அருகர்தம் நிலை - அது அவன் நிலைக்கு முன் 2586ல் உரைக்கப்பட்டது; அதனை இங்குத் "தவம்மறைந்து அல்ல செய்வார்" என்றார்.

தங்கள்...செய்தார் - அவர்கள் தமது நிலையே பற்றி அதற்கேற்ற செயலும் செய்தனர் எனப்பார் செய்வார் - செய்தார் என முடித்தார்.

செந்தீ திருமடம் சேர எனக; சேரச் செய்தார் - "சேர்க" என்று மந்திரம் கணித்து ஏவினர்; சேர்தற் பொருட்டுத் தாம்குறித்த தொழில் - செயல் - செய்தனர். விஞ்சை மந்திரத் தொழில் விளைத்தால் (2586).

தங்கள் மந்திரத்தால் - தீயை ஏவல் கொள்ளும் சிவ மகா மந்திரங்களும் உண்டு; ஆயின் இவர்கள் அவ்வாற்றானன்றித் தங்கள் சமய மந்திரத்தினையே நம்பி அதனையே கொண்டு செயல் செய்ததனால் தங்கள் மந்திரம் என்றார்' "அமணர் கொளுவும் சுடர், பையவே சென்று பாண்டியற் காகவே" என்று ஏவிய மகா மந்திரச் சார்பினில்லாத தங்கள் மந்திரம் என்பதும் குறிப்பு; மேல் வரும் பாட்டில் "ஆதி மந்திர மஞ்செழுத் தோதுவார்" (2596) என்ற குறிப்புமிது.

சிவநெறி வளர்க்க வந்தார் - பிள்ளையார்; வந்தார் - திருவவதரித்தவர்; அங்கு அந்நாட்டிற்கு வந்தவர் என்ற வரலாறுக குறிப்புமாம். வளர்க்க என்றதனால் சிவநெறி எந்நாளும் அழியாததாதலின் முன்னைப்போல் திகழ்விக்க என்ற அளவில் பொருள் கொள்க.

**தவம் மறைந்து அல்ல செய்வார்** - தவம் என்ற மேற்போர்வையினுள் மறைந்து கொண்டு அல்லாதவற்றையே செய்கின்றவர்கள்; **அல்ல** - அறமல்லாதவற்றை - பாவச் செயல்களை; அகர வீற்று பலவறி சொல் செயப்படு பொருளில்வரும் இரண்டனுருபு தொக்கது. "கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம்" (1302) என்ற விடத்துரைத்தவை பார்க்க. 697

2596. (வி - ரை) **ஆதிமந்திரம்...வருமே** - இது கவிக்கூற்று. **ஆதி மந்திரம்** - ஆதியின் மந்திரம், ஆதியாகிய மந்திரம், ஆதிக்குகந்த மந்திரம், என்று பலவும் உரைக்கின்றது.

**நோக்கும் மாதிரம்** - பார்க்கின்ற திசை; **மற்றை மந்திரம்** பயனல்லாத மற்ற - என்றது குறிப்பு.

**மற்றை மந்திர விதி வருமே** - ஏகார வினா வராது என்று எதிர்மறை குறித்தது; **மந்திர விதி வருதலாவது** குறித்த பயன் தருதல்; **விதி** - குறித்த செயல் செய்தல்; "வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம்" என்ற கருத்துக் காண்க.

**ஓதுவார்** - **ஓதுதல்** - விதிப்படி எண்ணிக் கணித்தல்

**பூதிசாதனர்...புனைந்த சாதனைகள்** - **சாதனைகள்** - **சாதனம்** - ஒரு பொருளைக் குறித்தபடி நிறைவேற்றும் கருவி; **சாதியாவகை** - தாம் கொண்ட கொள்கையை நிறைவேற்ற இருத்தல். **சாதியாவகை** - சமணர்களது மந்திர உச்சாடனம் பலன் பெறும் போயின தன்மையைக் கூறுது, அதனைக் கண்டு அமணர் தளர்ந்த தன்மை பற்றிக் கூறியது கவிநயம்.

**புனைந்த சாதனைகள்** - **புனைந்த** - உண்மையல்லாது தாம் கற்பித்த.

**பூதிசாதனர் யடத்தில்** - அவர் புனைந்த சாதனைக்கு மேற்பட்ட சாதனை கைவந்தவர்கள் என்பது குறிப்பு. பூதிசாதனராதலின் புனைந்த சாதனைகள் சாதியாவாயின என்று காரணங்கூறி விரித்துரைக்கின்றது.

**துண்டர்கள்** - கொலையாகிய பாவச் செயல் செய்யும் கீழ்மக்கள் என்பது குறிப்பு. 698

2597. தளர்ந்து மற்றவர் தாஞ்செய்த தீத்தொழில் சரியக்,
கிளர்ந்த வசசமுன் கெழுமிய கீழ்மையோர் கூடி
"விளங்கு நீண்முடி வேந்தனீ தறியினம் மேன்மை
யுளங்கொ ளா;னமர் விருத்தியு மொழிக்கு"மென் றுணர்வார், ௬௯௯

2598." மந்தி ரச்செயல் வாய்த்தில ; மற்றினிச் செய்யும்
புந்தி யாவதிங் கிது"வெனப் பொதித்தழல் கொடுபுக்
கந்தண் மாதவர் திருமடப் புறத்தய லிருள்போல்
வந்து தந்தொழில் புரிந்தனர் வஞ்சனை மனத்தோர். ௭௦௦

2597. (இ - ள்) தளர்ந்து...சரிய - மற்று அவர்கள் தாம் செய்த அத்தீத் தொழில் பயன்தராது வீழக்கண்டு மனந் தளர்ந்து; கிளர்ந்த...கூடி - எழுந்த அச்சமானது முன்னே மிகுந்ததனால் கீழ்மைத்தன்மையோர்களாகிய அந்த அமணர்கள் கூடி; விளங்கு.. உணர்வார் - விளங்கும் நீண்ட முடி மன்னனாகிய பாண்டியன் இதனை அறிந்தானாயின் நமது மேம்பாட்டினில் இனி மனம் வைக்க மாட்டான், நமது பிழைப்பு வழியினையும் ஒழித்து விடுவான்" என்று உணர்வாராகி, ௬௯௯

2598. (இ-ள்) மந்திரச செயல...இது என - மந்திரத்தின் செய்கை குறித்த பயன் தரவில்லை; மற்று இனிமேல் தெரிந்து செய்யும் ஆலோசனையாவது இதுவே யாகும் என்று துணிந்து; பொதிதழல் கொடுபுக்கு - பொதியும் தழலினை எடுத்துக் கொண்டு புகுந்து; அந்தண ..வந்து - அழகிய தண்மையுடைய மாதவர்களாகிய சிவனடியார்கள் துயிலகின்ற திருமடத்தின் புறத்தின் பக்கத்தில்; வஞ்சனை மனத்தோர் - வஞ்சனை நிறைந்த மனத்தையுடைய அவ்வமணர்கள்; இருளபோல வந்து தம தொழில்புரிந்தனர்; இருள் போல வந்து சேர்ந்து தமது மனங்கொண்ட தீத் தொழிலைச் செய்தனர். ௭௦௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2597 (வி-ரை) சரியந் - தளர்ந்து எனக; தீந் தொழில் - தீய தொழில், இரட்டுற மொழிதலால் தீயைச் சேரச் செய்த தொழில் என்றலுமாம் சரிதல் - பயன் தரா தொழிதல்; சரிய - சரிய அதனைக் கண்டு;

விளங்கும் நீள்முடி வேந்தன் - இது காறும் நின்றது போலன்றி இனி விளக்கம் பெற நீளும் முடியினைச்சாரும் என்றது தொனிக் குறிப்பு. நீணமுடி விளங்கும் என்று கூட்டினுமாம்; நீளுதல் - நெல்வேலிச் செருவென்று வாகை பூழியர் வேம்புடன் புனைந்தமையாலும், விளங்குதல் - 'திருநீற்றின் னெறிவிளங்க வுரைசெய பெரும் புகழ்விளக்கி''ய திறனும் காணப்படும் (நின்றசீர் நெடுமாறர் புரா 7 - 8 - பார்க்க); புகழும் புண்ணியமும் பெருகும் நிலைக்குறிப்பு.

நம்மேன்மை உளம் கொளான் - நமது சமயம் மேன்மையுள்ள தென்று கருத மாட்டான். இதுவரை நாம் மேன்மையுடையோம் என்று உள்ளத்திற் கொண்டான். இனி அக்கருத்தினை உள்ளத்தில் வைக்காது அகற்றி விடுவான், நம்மேன்மை - நம சமயத்தில் உள்ளதாகக் கொண்ட மேன்மை; "இருதிறத் தீருந் தீரும்; கைதவம் பேசமாட்டேன" (2647); "நீங்க டேறிய தெய்வத் தன்மை யெனனிடைத் தெரிப் பீர" (2657); "வெந்தொழி லருகர் தோற்றீ ரென்னைவிட் டகல நீங்கும்" (2667), "வெப்புநோய் கவர்ந்தபோ தொன்றுமங் கொழித்திலீர்க ளென்னவர் துமக்கு" (2674); "பொய்யினுல மெய்ம்மை யாக்கப் புகுந்தீர் போமின" (2690) என்பனவாதியாகப் பின் அரசன் கூறுவன காண்க. இதுவரை அரசன் இவர்களது மேன்மை உளங் கொண்டிருந்த நிலை 2580 — 2591 பாட்டுக்களின் நிகழ்ச்சியாற் கண்டு கொள்க.

நமர் விருத்தியும் ஒழிக்கும் - "மெய்வ கைத்திற மறிந்திடின் வேந்தனும் வெகுண்டு, சைவ னாகிநம் விருத்தியுந் தவிர்க்கும்" (1347) என்றிவ்வாறே உட்கொண்டு அரசுகளது சரித்திரத்தினுள் சமணர்கள் பல்லவ அரசன்பால் முறைப்பட்ட வஞ்ச நிகழ்ச்சியினையும் இங்கு நினைவு கூர்க. வேற்றுச் சமயத்தார் அரசர் சார்பினைப் பலதிறப் பட்ட சூழ்ச்சிகளாலும் பெற்று அதனால் தத்தம் சமய நிலைகளைப் பரவச் செய்தலும், அதுகொண்டு தாம் சீவனோபாயமும் பொருளும் தேடிக் கொள்ள வழிசெய்து கொள்ளுதலும், பற்பல காலங்களில் இத்தமிழ் நாட்டிலும், பிற நாட்டினும் இன்றுவரை நிகழ்ந்துவரக் காண்கின்ற உண்மை, பௌத்தர் ஈழநாட்டினும் பரவி அரசன் சார்பு கொண்டு பிழைத்துச் சைவ வாதம் செய்யத் தில்லைக்குவந்த வரலாறு திருவாதவூரர் சரித்திரத்துட் காணலாம்; ஈழ நாட்டின் இந்நாளிலும் அவர்களின் பரவுதல் காணவுள்ளது; இந் நாட்டிற் சமணம் புத்தம் இரண்டும் பரவித் தாம் தாம் பிழைப்புத்தேடி அதன் பொருட்டுச் சைவ விளக்கத்தைத் தகைக்குறைத்து நிகழ்ந்தமை சமயாசாரியர்களின் வரலாறும் நாட்டுச்சரித நிகழ்ச்சிகளும் உண்மைப்படுத்தும்; கிறித்தவர், முகம்மதியர்,

முதலிய புற நாட்டுச் சமயங்களின் பரப்புதல்களும் இன்று வரை நம் நாட்டில் இவ்வாறே நிகழ்தலும் காணவுள்ளன; ஒருவனைத் தாழ்த்தி மற்றவன் பிழைத்தல் என்பது உலகியல் நிலையிலேயன்றிச் சமய நிலையிலும் காண்பது ஆணவத்திறம் கட்டுண்ட மனிதனின் இயல்பாய நின்றது; பல வகையாலும் நிகழும் உலகியற் போர்களுக்கும் இதுவே உள்ளுறை எனக; இவ்வுண்மையினை உணர்ந்து ஒழுகினால் உலகம் கலக்கமின்றி நலம் பெற்று வாழ வழியுண்டாகும்; விருத்தி - சீவனோபாயம்; சீவிதம் - சாவமானியம் என்பர். அமர்விருத்தி - அமர்த்திய - நியமித்த - தொழில் என்றலுமாம்.

உணர்வார் - உணர்வாராகி; உணர்தல் மனத்தில் துணிதல். உணர்வார் - புரிந்தனர் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 699

2598 (வி - ரை) "மந்திரச் செயல்...இது" என் - சமணர் மனத்தினுள் எண்ணமிட்டுத் துணிந்த நிலை.

செய்யும் புரதி ஆவது இங்கு இது - புரதி-புத்தி தத்துவத்தின் தொழில்; இது வென-புத்தி தத்துவம் இது செய்யத்தக்கது என நிச்சயித்தலும், இதனை நான் செய்வேன் என்று அகங்காரம் பற்கால் எழுந்திருந்தும், செயல்புரியும்; "அந்தமனம் புத்தியுடனகாரம் - சிந்தையிவை, பற்றியது நிச்சயித்துப் பற்கா லெழுந்திருந்தது, குற்றது சிந்திக்கு முணர் " (உண்மை விளக்கம் - 16) என்று அந்தக்கரணங்களின் தொழில்களாகிய இவற்றின் தன்மைகளை ஞான சாத்திரம் பேசுதல் காண்க.

இது என - இது என்று துணிந்து, அடியார்பால் வரும் தீமையாதலின் அதனை இன்னதென்று கூறாது அவர்கள் துணிந்து செய்த செயலாற் கருதவைத்த ஆசிரியர் மரபு காண்க, பின்னரும் "பொதிதழல் கொடுபுக்குத் தந்தொழில் புரிந்தனர்" என மறைவுபடக் கூறிய மரபும் காண்க; "தானமுன் நினைத்த அப்பரிசே" (481); "பாதகனுந் தன்கருத்தே முற்றுவித்தான்" (647)

பொதிதழல் - வெளிப்படாது மறைத்த தழல்; கூரையிற் பொதியும் தழல் என்றலுமாம்; தழலை உள்ளே வைத்துப் பின்னர்த் தானே வெளிப்படும் தீக்கந்தகம் (Phosphours) போன்ற நெருப்புப் பொருள்கள் என்றலுமாம். சமணர் இத்தகைய கலை ஞானங்களில் வல்லவர் என்பர்; பின்னர், "மருவு வித்தவத் தொழில்வெளிப்படுதலும்" (2599) என்பதும் இக்குறிப்புத்தருவது.

அந்தண் மாதவர் - அழகிய தட்பமாவது - "யான் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்" (திருமந்திரம்), "வையகமுந் துயர் தீர்கவே" (தேவாரம்); "மகவெனப் பல்லுயிரனைத்தையு மொக்கப் பார்க்குநர், செல்வக் கடவுட் டொண்டர்" (திருவிடை மருதூர் மும்மணிக் கோவை 7) முதலிய திருவாக்குக்களாலறியப்படும், மாதவர் - திருமடம் - "மாதவர் துயிலும் இத்திருமடம்" (2600); இத்திருமடம் அமைச்சனார் பிள்ளையார் தங்குதற்காக நிறுவுவித்தது; (2574).

திருமடப்புறத்து அயல் - வந்து - காவலமைத்த திருமடத்தின் முன்பேயாயினும் உள்ளேயாயினும் புகுத இயலாதவர்களாகிப் புறத்தில் ஒருபக்கமாகச் சார்ந்து வந்து; "திருமடப் புறச் சுற்றினில்" (2599), வந்து - தாம் இருந்து மந்திரத் தொழில் செய்த இடத்தினின்றும் வந்து.

தந்தொழில் புரிந்தனர் - தொழில் - "தொழில் விளைத்தால்" (2586) என்று கூறிய குறிப்புப்படியே செயலிற் செய்தனர்.

வஞ்சனை மனத்தோராதலின் புரிந்தனர் எனக; பிறரை வஞ்சித்துத் தாம் பிழைக்கும் வழி தேடுவோர் வஞ்சகர் எனப்படுவர். இங்கு அரசனை வஞ்சித்த செயலும்

வந்த அந்தணாகளைத தீததொழில் முயற்சியாலே வஞ்சித்து அரசுறுத்தி நகரினை விட்டு நீககச் செயதலும் உடைய மனததுடையவா.

இருள் போல் - ஒளியை மறைததலால இருள் எனறூா. "இருட்கிருளென" (2877); "இருட்குழாம" (1349) என இவாகளை இருளுககே உவமிததல் கருதுக; "ஞானததின, கண்ணை மறைதத கடியதொழி லாணவம" (போறறிப பஃறொடை) "இருண மலநிலை" எனறபடி வஞ்சததால ஞானததை மறைததுவிட முயன்றூராதலின் இவவாறு ஆசிரியா ஆணை தநதருளினா; ஆணவம - வஞசம - முதலியன கருநிற முடையன வென்பது மரபு. 700

2599. திருமடப்புறச் சுற்றினிற் றீயபா தகததோர்
மருவு விததவத தொழில்வெளிப படுதலு மறுகிப
பரிச னததவா பதைபபொடுஞ் சிதைததது நீக்கி
அருக ரிததிறம் புரிநதமை தெளிந்துசென் றணைவார், ௭0௧

2600. கழும லபபதிக் கவுணியா கறபகக் கன்றைத
தொழுது நின்றமண் குண்டாசெய் தீங்கினைச் சொன்ன
பொழுது, "மாதவா துயிலுமித் திருமடப புறம்பு
பழுது செய்வதோ! பாவிகாள்!" ளெனப் பரிந்தருளி, ௭0௨

2601. "என்பொ ருட்டவா செய்ததீங் காயினு மிறையோன்
அன்ப ருக்கெய்து மோ?"வென்று, பினனையு மச்சம்
முன்பு றப்பின்பு முனிவுற முததமிழ விரகர்
"மன்பு ரக்குமெய் முறைவழு" வெனமனங் கொண்டா, ௭0௩

2602. "வெய்ய தீங்கிது வேந்தன்மேற்" றெனும்விதி முறையால்
"செய்ய னேதிரு வாலவா" யெனுநதிருப் பதிகஞ்
"சைவர் வாழ்மடத் தமணாக ளிட்டதீத் தழல்போய்ப்
பைய வேசென்று பாணடியற் கா"கெனப பணிததார். ௭0௪

2599. (இ - ள்) திருமடப புறச சுறறினில . வெளிபபடுதலும - திருமடத தின புறசசுறறிலே அநததீய பாதகாகளாகிய அமணாகள சோததிய அந்தத தீத் தொழில வெளிபபடுதலும; மறுகி நீககி - பரிசனஙகள கலஙகிச சுழனறு பதைப புடனே அதனைச சிதைவு செயது போககி; அருகா... ..அணைவாா - சமணாகளே இவவாறு செய்தனா என்று தெளிநது போய அணைவாாகளாகி, ௭0௧

2600. (இ - ள்) கழுமலபபதி...சொனன பொழுது - சீகாழிபபதியில கவுணி யா் குடியில வநத கறபகக கனறுகிய பிளளையாரைத தொழுது நினறு, அமணக கீழ் மக்கள் செய்த தீஙகினைச சொனன பொழுது: "மாதவா. .பாவிகாள்!" எனப்பரிந் தருளி - சிவனடியாாகளாகிய மாதவாகள துயிலும இநதத திருமடததின புறப்பககத தில் தீஙகு செயவதோ! பாவிகளே" என்று பரிவு கொணடருளி, ௭0௨

2601. (இ - ள்) "என் பொருட்டு ..எயதுமோ?" என்று - இது என் பொருட்டாக அவாகள் செயத தீஙகு ஆயினும், இறைவாது அடியாாகளுக்குப பொருந் துவதாகுமோ? என்று உட்கொணடு; பின்னையும்... முனிவுற - மேலும அச்சம்முன்னே

வரப பினபு கோபமும வர ; முததமிழவிரகா...என மனங் கொணடார - முத்தமிழ விரகராகிய பிளளையார " அரசன காவல புரியும நீதி முறை வழுவிறறு " என்று திருவுளளங கொணடாராய ; ௭0௩

2602. (இ - ள்) வெய்ய முறையால - (முன் சொனன காரணததால்) கொடுமையாகிய இநதத் தீங்கு வேநதன மேலதேயாகும எனற விதி முறையினாலே ; "செயயனே...பதிகம்-செயயனே' திருவாலவாய என்று தொடங்கும் திருப்பதிகததினை; "சைவா...ஆக" எனப பணிததாா - சிவனடியார்கள வாழும திருமடததில் சமணாகள கொளுவிய தீயானது மெலலவே சென்று பாணடியனுக்கு ஆகுக!" என்று கட்டளை யிட்டருளினா ௭0௪

இநத நானகு பாடடுககளும தொடாநது ஒரு முடிபு கொணடன.

2599 (வி - ரை) திருமடப் புறச் சுற்றினில் - திருமடததின வெளிப பக்கததுச சுறறிலே ; சுற்று - சூழநத அமைபபு.

மருவுவித்த - பிற வினையாற கூறினா ; அமணா நேரே கையினால பொதி தழலாகக கொணடு பொருநதச செயத, தன் செயலாகத தீககடவுள சென்றாலலர்; 2596 பாாககக.

தொழில் வெளிப்படுதலும் - பொதிதழலாக மருவுவிததாராயினும, அததழல் மூண்டு எரியத தொடங்கி அவா செயத தொழிலை வெளிபபடுததிற றெனக

மறுத்தல் - கலஙகி இஙகுமஙகுமாகச சுழனறு ஓடிச் செயல செயதல

பதைப்போடும் சிதைத்து அது நீக்கி - சநதியில இரவில வெளிபபடுதலாலும் பிளளையாாபால கொண்ட அனபின மிகுதியினாலும அவாககு அடாத தெனற பரிவினாலும பதைததனா ; சிதைத்து அது நீக்கி - தீயை அவியச செயதலின, தீபபறறிய பகுதிகளைச சிதைதது நீககுதல சிறநத உபாயமாம.

அநகர் இத்திறம் புரிந்தமை தெளிந்து - தெளிதல் - பல வகையாலும நாடித் துணிநது கோடல, யாவா செயதா ரெனத தெளிவாகத தெரிநதாலனறிப பிள்ளையாரிடம செயதி அறிவிததல பயனறறதாகு மாதலின தெளிநதபின சென்றனர் ; தீ வெளிபபடலும முதலில செயயததககது அது பரவாதபடி சிதைததல ; அடுத்துச் செயததககது அதனை யாா செயதாா என்று தெளிநது கோடல; இனி மூனறாவதாகச் செயயததககது அதனை உடையவரிடம அறிவிததல. இபபரிசனஙகள அறிவுடையோரா தலின இவறறை முறையே இயறறினா.

அநகர் புரிந்தமை - கருதலளவையாற றெளிநதனா எனக.

சென்று - பிளளையாா எழுநதருளியிருநது துயில கொளளும இடததிற்குச் சென்று.

அணைவார் - அணைவாராகி, முறறெசசம ; அணைவார் சொன்ன - என மேல வரும பாட்டுடன் கூட்டுக. 701

2600. (வி - ரை) கற்பகக் கன்று - கற்பகம் - வேணடுவாா வேணடுவதே யீயும தெயவததனமையுடைய தொரு மரம எனபா ; அஃதுபசாரம ; இறைவனை கறபகமாவாா ; " கறபகமே யானுனனை விடுவே னலலேன " (தாண); பிளளையாரைக கறபகக கன்றெனறது அததனமை பெறறுடைய பிளளையாதலின எனக. இங்கு, அமணா - அரசன - அமமை - அமைசசா - அநநாடு அனபா - அரனடியாா - முதலிய பல திறபபட்டோருக்கும அவரவா வேணடிய செய்திக கேறற பயனை அருளும் செயலினுள் பிளளையாா புகுநதருளகினற அவசர மாதலின இததனமையாற

கூறினர். மாறுபாடு கொண்ட அமணர்க்கும் அரசனுக்கும் அவ்வவர் வேண்டியது ஈதல் யாங்ஙனமெனின்? அமணர் தீமை வேண்டினராதலின் தீமையின் பயனைப்பெற்று முடிவில் அரச தண்டனையினுடன் நிரய தண்டனையினின்றும் தப்பினர்; அரசன் அமணரின் தீமைக்கு உடன்பட்டு நின்றமையாற்றீய சுரம் பெற்றுத் திருநீற்றினால் நலமும் பெற்றனன் என்க.

**மாதவர்..பாவிகாள்**-இத்தீய செய்தி கேட்டவுடனே பிள்ளையாரது திருவுள்ளத்தில் முதலில் எழுந்த கருத்து அடியவர்பால் நேர்ந்த அபசாரம் பற்றியதே யாகும். அடியவர்பால் அபசாரப்பட்டது பெரும் பாவமாகும் என்பார், பாவிகாள்! என்றார்;

**மாதவர்**-சிவனடியார்; **துயிலும்**-துயில் கொள்ளும்போது இரவில் தீக்கொளுவினர் என்ற காலக் குறிப்பு; மக்கள் குடியிருப்பு இடத்தில் தீவைத்தல் இற்றைநாள் அரசாட்சிக் குற்ற நீதிச்சட்டத்திலும் பெருந்தண்டனைக் குள்ளாக்கும் பெருங்குற்றமாம் என்பர்; - (Arson). அதன்மேலும் மக்கள் துயிலும்போது வீட்டிற்குத் தீவைத்தல் மிகப் பெருங் குற்றமாம். அதன் மேலும் மாதவர் துயிலும் போது தீவைத்தல் அதனினும் பெருங் குற்றமும் பாவமுமாம் என்ற குறிப்பெல்லாம் படக் கூறியது காண்க. **பாவிகள்** - என்பதும் பாடம்.

**பரிந்தருளி** - **பரிவு** - இரக்கம்: இச்சமணர் அடியார்களிடம் அபசாரப்பட்டுப் பெருங் கொடு நரகத்துக்காளாகும் உய்தியில்லாத குற்றம் செய்தனரே என்று முதலில் அவர்கள் பால் இரங்கியருளினர் பிள்ளையார்; **அருளி** என்ற குறிப்புமது; அவ்வுயிர்கள் படுந் துன்பங்கண்டுழி இரங்கன் மாத்திரையே சீவன் முத்தர் பலவுயிரனைத்தையு மொக்கப் பார்க்குந் தன்மையாம் என்று 12ம் சூத்திரத்தினுள் ஞான நூல் பேசுதல் காண்க. இதன் தன்மை பற்றி மேல்வரும் பாட்டிற் "பின்னையும் அச்சம் முன்புறப் பின்பு முனிவுற" (2601) என்ற விடத் துரைப்பவையும் கருதுக. 702

2601. (வி - ரை); "என் பொருட்டு...எய்துமோ?" என - இது சமணர்கள் செயலைப் பற்றிப் பிள்ளையார் மேலும் துணிந்தருளிய நிலையைக் கூறியபடி, "**என் பொருட்டு அவர் செய்த தீங்காயினும்**"— இத்தன்மையின் அமணர்கள் இவ்வடியார்களின் பொருட்டன்றி என்பொருட்டே செய்தனர் என்பதனை அறிவேன்; ஆதலின் அதனைப் பொருட் படுத்தாது அவர்களது அறியாமைக்கு இரங்கி விடுத்தலோ, தடுத்தலோ, தண்டம் செய்வித்தலோ இவை என்பாலதேயாம்; ஆயின் என்பாற் செய்த அபசாரத்தை நான் பொறுத்து விடினும் அடியார் பாற் செய்த அபசாரம் அவ்வாறு விடுதற்கு எய்துமோ? (பொருந்துமோ?); பொருந்தாது என்த் திருவுள்ளங் கொண்டனர் பிள்ளையார்.

**பின்னையும் அச்சம் முன்பு உறப்பின்பு முனிவு உற**-**பின்னையும்**-மேலும்; பரிவு கொண்டதன் மேலும் என்பதாம்; பரிவு கொண்டது அமணரின் பொருட்டு; **அச்சங் கொண்டது** அடியவர்களின் பொருட்டு? (அச்சம் - இது பற்றி மேற்பாட்டும் பதிகக் குறிப்பும் பார்க்க); **பின்னையும்** வந்தவை இரண்டு நிலைகள். அவை அச்சம் முனிவு என்பன. அவற்றுள் **முன்பு வந்தது** அச்சம்; பின்பு வந்தது **முனிவு** எனக; இவர்கள் ஏதப்படும் வகையில் அடியார் நின்றது பற்றியது அச்சம்; அடியவர்கள்பால் ஏதப்படுதலின் ஒறுத்துத் தூய்மைகள் செய்தலும், இனியும் அவர்கள் அவ்வாறு அபசாரப் படாமைக் காத்தலும் பற்றி **முனிவு** எழுந்தது; "தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் - தஞ்சொ லாற்றில் வந்திடா விடிலு றுத்தி வளாரினா லடித்துந் தீய, பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்; இந்த நீர் முறைமை யன்றோ

வீசனார் முனிவு மென்றும்" (சித்தி 2 - 106). எனவே ஈண்டுப் பிள்ளையார் மேற்கொண்டது ஆணவக் குணமாகிய முனிவு அன்று எனவும், இறைமைக் குணமாகிய கருணையின் விளைவு எனவும் கண்டு கொள்க.

**முத்தமிழ் விரகர்** - பிள்ளையாரது தமிழின் மூலம் கோபமும் பிரசாதமும் இனி வர வுள்ளமையால் இங்கு இத்தன்மைபாற் கூறினார்; **சுடர்**, பையவே சென்று பாண்டியற் காகவே" "வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக், கொப்ப ஞான சம்பந்த னுரை **பத்தும்**" என்ற பதிகக் குறிப்புக்கள் காண்க.

**மன்புரக்கு மெய் முறை வழுவென மனங்கொண்டார்** - குடிகளுக்கும், தன்னாட்டில் வருவோர்க்கும், **தன்னாலும் தன்பரிசனத்தாலும்** கள்வர், பகைவர்களாலும் வேறுயிர்களாலும் வரக்கூடிய ஐந்து பயங்களையும் காத்து அறத்தைக் காவல் புரிவது அரசன் கடமை. இதன் தன்மை முன் (121) விளக்கப்பட்டது. ஈண்டு அமணரால் விளைந்த தீமைக்கு அரசனே பொறுப்பாளி என்பது அறநூலின் வழியும் துணியப்படும். **மன்** - அரசன், **புரக்கும் முறை** - அரசன் நாடு காவல்புரியும் நீதிமுறை **வழு** - வழுவியதனால் விளைந்தது, **மெய்ம்முறை** - வெறும் மேற்பார்வைக்காக அன்றி உண்மையாகச் செலுத்தும் நீதி; "மாதவர் நோன்பும் மடவார் கற்புங் காவலன் காவலின்றித் தங்கா" என்பது (மணிமே); மூர்த்திநாயனார் புராணத்திலுள்ள வடுகக் கருநாடகர் மன்னன் சமண சார்பினால் அடியாரை வன்மை செய்து பட்ட வரலாற்றின் பகுதிகளும், ஆங்கிலேய அரசுகளின் வரலாற்றுப் பகுதிகளும், தண்டியடிகள் வரலாறும், பிறவும் ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

**மன்புரக்கு மெய்ம்முறை வழு - என மனங்கொண்டார்** - ஈண்டு அமணர்களே இத்தீச்செயல் செய்தோர் என்றறிந்த பிள்ளையார் இத்தீங்குக்கு அமணர் முதற் காரணராயினும் அது வாராமற் காவல் புரியும் முறையில் அரசன் வழுவியது மேலும் துணைக் காரணமாம் என்று திருவுள்ளத்திற் துணிபு கொண்டனர், இந்த அடியார் பால் செய்த அபசாரத்திற்குப் பொறுப்பு யாவர் என்று துணிந்தபடியாம்; **பரிவும் அச்சமும் முனிவும்** உற்ற நிலையில் ஏனை மக்கள் போலத் தளங்குதலின்றி நேர்மையில் மனம் வைத்துத் துணியும் பெரியோர் நிலையாம். இத்துணிபினால் இக்குற்றத்திற்காகச் செய்யப்படும் தண்டம் முதற்கண் அரசனையே சாரத் தக்கதென்பதை மேல்வரும் பாட்டிற் கூறுவர். **மனங் கொள்ளுதல்** - மனத்தினுள் ஆய்ந்து கொள்ளுதல். 703

2602. **(வி - ரை) "வெய்ய தீங்கு இது வேந்தன் மேற்று" எனும் விதி முறையால்** - அரசனது நாடு காவல் முறையின் வழுவே இதற்குக் காரணம் என்ற துணிபின்மேல் அரசனும் அங்கமும் என்ற இரண்டில் அமைச்சுத்திறம் நேர்பட நிகழ்வது தெரிதலின், பாரிசேட அளவையால், இது வேந்தன் மேற்று எனத் துணிவது விதி எனப்பட்டது; மன்புரக்கு மெய்ம்முறை வழு என மனங் கொண்டது அரசநீதி வழுவாதாயின் இது நிகழாது; அரசநீதி வழுவாமையும் தீங்கு நிகழாமையும் நியதமான காரண காரியமாகி வரும் உடனிகழ்ச்சிகள்; ஆதலின் தீங்கு நிகழக் கண்டவின் நீதி வழுவிற்று என முன் துணிவது எதிர்மறைக் கருதலளவையான் வரும் விதி; **மேற்று** - மேலது; பொறுப்பு அவன்மேல் நின்றது, **விதி** - உலகியல் நீதி; **முறை** - இறைவர் நியதி; விதியும் முறையும் என்க; பிள்ளையார் இவ்வாறு தமது சிவத்தன்மையால் உணர்ந்தாராயினும் உலகியல் நீதி விதியினும் வைத்துத் துணிபு கண்ட நேர்மை காண்க. அதனை விரித்து எடுத்துக் காட்டி அமணர் கொளுவிய தீயினை அரசனிடம் பையச் சென்று பாண்டியற்கு ஆக! என்பப் பணித்த அருளிப் பாட்டின் காரணத்தை உலகறிய வைத்த ஆசிரியரது தெய்வக் கவிமாண்பும், பிள்ளையார்பால் உலகம் அபசாரப்படாமற் காக்கும் கருணை மாண்பும் காண்க.

"செய்யனே திருவாலவாய்" எனும் - இது பதிகத் தொடக்கம்.

"சைவர்...ஆக" என - இது பதிகக் கருத்தும் குறிப்புமாம்; தம் பொருட்டா னன்றி அடியார்கள்பால் நேர்ந்த அபசாரத்தின் தீர்வே பிள்ளையார் திருவுள்ளங் கொண்டது என்பது முன் இரண்டு பாட்டானும் உரைக்கப்பட்டது; அவை பரம் பரையாற்றேனறி வந்து உருக்கொண்டு முடிவு பெற்ற ஆணையின் உருவம் ஈண்டு உரைக்கப்பட்டது; ஆதலின் கூறியது கூறலன்மையுணர்க; பதிகப் பாட்டுக் குறிப்புக் கள் பார்க்க.

இட்ட தீத்தழல் - இட்ட - விஞ்சை மந்திரத்தாலறிப் பொதிந்தழல் கொடுப்பக்குக் கொளுவிய என்பதும் குறிப்பு; தீத்தழல் - தழல் ஐம்பூதங்களுள் ஒன்று; இறைவனது பெருந் திருமேனிகளுள் ஒன்று; உயிர்களின் நலங்கருதி இறைவர் தரும் தனுகரண புவன போகங்களுட்படுவது; ஆயின் இங்கு அது தீமையின் பொருட்டுப் பயன்படுத்தப் பட்டதென்பார் தீத்தழல் என்றார், தீ - தீமை என்ற பண்புப் பொருள்பட நின்றது; ஒரு பொருட் பன்மொழியாகக் கொண்டுரைப்பாருமுண்டு; மேலும் இதன் இயல்பினை மேல் சமணரது கனலவாதப் பகுதியிற் கண்டு கொள்க, அமணர்கள் இட்ட தீ - "அமணர் கொளுவும் சுடர்" (பதிகம்).

"பையவே சென்று பாண்டியற்கு ஆக என" - இது பதிகத்தின் மேற் கொண்டது; பதிக முதற்பாட்டும் பாட்டுக் குறிப்பும் பார்க்க.

போய் - சென்று - போய் இங்குந்த திருமடத்தினின்றும் பாண்டியனிடம்; சென்று - அவன் உடலினுள்; போதல் - புறச் செலவும், செல்லுதல் - உட்புகு தலும் உணர்த்தின.

"தீத்தழல் போய் - சென்று ஆக" - இது பிள்ளையார் தழலினை ஆணையிட் டது; "நாடு மைம்பெரும் பூதமு நாட்டுவ" என்பது சிவபூத கணங்களின் வன்மை. தீக் கடவுள் அடியார்களின் வழிநின்று ஏவல் கேட்டுப் பணி செய்தொழுகும் தேவர் களுள் ஒருவனேயாதலின் பணித்தார் என்றார்.

ஆக என என்பது ஈற்றகரம் தொகுத்து ஆகென என நின்றது; பையவே - என்றது முனிவிலும் பரிவிலும் எழுந்த கருணையின் தெளிவு, ஆக என்பது அருந் தண்டத்தினும் வைத்த அருளிப் பாட்டின் முத்திரைச்சி; Justice tempered with mercy என்பர் நவீனர்; ஆக - ஆக்கமுண்டாக என்ற ஆசிமொழி. இத்தண்டத்தி னால் அரசனும் அவனால், அவன் நாடும், அதனால் சைவமும் ஆக்கம் பெறுக என்பது திருவுள்ளம்.

பணித்தல் - கட்டளை யிடுதல்; இவ்வாறு பணிசெய் என்றருளினர்; வருணன் முன்பு மாதவஞ் செய்து அரசுகளைத் தலைமேல் ஏந்தினன்; (1395); இந்திரன்மால் பிரம ரெழிலார் மிகுதேவரெலாம் வந்தெதிர்கொண்டு வெள்ளை யானையின்மீது ஆளுடைய நம்பிகளை அழைத்துச் செல்லும் பேறுபெற்றவர்" (வெள்-சருக. 33-34); "பூவார் திசைமுக னிந்திரன் பூமிசை, மாவா ழகலத்து மான்முதல் வானவர்;" தேவா சிரியன் திருவாயிலில் அடியார்களின் சமயநோக்கி வாழ்வடைந்து நிற்கின்றனர் என்பது முன் (137) உரைக்கப்பட்டது; மணிவாசகப் பெருமான் கலைமகளை ஏவல் கொண்டருளிப் புத்தர்கள் நாவினின்று போ என்று பணித்த வரலாறும் காண்க. 704

திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் பண் - கௌசிகம்

செய்ய னேதிரு வாலவாய் மேவிய,
வைய னேயஞ்ச லென்றருள் செய்யெனை,

பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்,
பைய வேசென்று பாண்டியற் காகவே. (1)

அப்ப னலவா யாதி யருளினல
வெபபந தெனனவன மேலுற மேதினிக
கொபப ஞானசம பநத னுரைபததுஞ
செபப வலலவா தீதிலாச செல்வரே. (11)

திருசசிறறமபலம

**பதிகக் குறிப்பு :—** " அமணா கொளுவும சுடா பையவே சென று பாண்டியற காக " எனப பணிததது (2602)

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—குறிப்பு** - பாடடுதேதா றும, " அஞசலென றருள செயயெனே " " அமணா கொளுவும சுடா - பாணடியறகு ஆகவே " என றருளுதல காணக ; **கோளுவும் சுடர்** என றதனல அமணா பொதிதழல கையினிற கொணடு கொளுவினா எனபதும, அமணா செயல பாணடியறகாகவே என றமையால் இததீமை யரசனமுறை வழுவியதனல விளைநதமையாலே அரசனமேற சாாதல நீதி என று துணிநதனா எனபதும, பையவே என றதனல தீயுருவமாக அன றி வெபபு நோயின உருவில் மெலலப பறறுக என று பணிததனா எனபதும, ஆகவே என றமையால இது அருளிபபாடு எனபதும, கஞ்சலாரமண் கையு ரிடும்கனல் (7) என றதனல அமணா இரவிற நீசகொளுவினா எனபதும, " அஞ்சலேன் றருள் செய்எனே " என றதனல அடியாாககு எதம வாராமற காததற பொருடடுப பாடியருளினா எனபதும முதலிய வரலாறறுப பகுதிகள ஆதரவு பெறப போநதவாறு கணடுகொளக ;—(1) **செய் யனே !** - எரிபோல மேனியன ஆதலில எரியினின று காகக வலலவன என்றதும், **ஐயன்** - முதலவனுதலிற காககுமுரிமையுடையவன என றதும குறிபபு. **பையவே சென்று** - அருடகுறிபபு : தீயின உருவாயனறி வெபபு நோயின உருவுடன மெலலப போயபப பையச செலக ; சுரமும வேகமாயச சென று தாககினல கெடுதி நேருமாத லின கேடு வராதபடி மெலலச செலக என றது ; " பககமே சென று " (3) " பககமில தெனனன " (7) எனபவையும இககுறிபபு , **ஆகவே** - **ஆக** - ஆசி மொழி , " அலமநத போதாக அஞசேல " (தேவா) எகாரம பிரிநிலை ; தேறறுமாம ; **பையவே சென்று** எனப பணிததமைபறறி மேல (2603-ல) வருவதும ஆணடு உரைபபவையும பாாகக ,—(2) **சித்தனே** - எலலாம வலல சிததரான திருவிளையாடற குறிபபு ; சிததராகிய தனமையால அவரே அமணா கொளுவிய தீயினை வெபபு நோயாக மாறறவும, ஈணடு நின று ஆணடுச செலுததவும, உடலிற புகுததவும, பிறவும வல்லவா எனபது குறிபபு , **அஞ்சல்** - அசசம ; அடியாா பொருட்டு எழுநததாதலின "அஞசுவதி யாதொன றுமிலலை யஞச வருவது மிலலை" என ற அடியாரின வீரததன்மை யுடன முரணுமை யறிக ; " அஞசுவ தஞசாமை பேதைமை யஞசுவ தஞச லறிவாா தொழில " (குறள) ; " வாளுலா மெரியு மஞசேன...ஆளலா தவரைக கணடா லமமநா மஞசு மாறே " எனபன வாதி கருததுககளும காணக ; **பத்திமன்** - பததி சேரும் மனனவன என ற குறிபபு ,—(3) **தக்கன் வேள்வி தகர்த்தருள் ஆலவாய்ச் சொக்கனே** - அதுபோல சமணா வஞசனைக கொடுமையினையும தகாகக வலலவா எனபது குறிபபு ; " நணணலாா புர மூனறெரி " (5) ; " செஙகண வெளவிடை யாய் ; (7) ; " தாததன வீரம தொலைததருள (8) எனபனவு மிககுறிபபு ; **எக்கர்** - கொடியர் , **பக்கமே** - அவா பககமேயாக ; " தீததிறததாா பககமே சோக " (சிலப); கோரக எதிா செல்லாது ஒரு புறமாய ஒதுஙகி என ற குறிபபுமாம ,—(4) அட்ட

**மூர்த்தியனே** - தீயினைத் தனது அட்ட மூர்த்தத்தினுள் ஒன்றாகக் கொண்டவன; மேல் கனலவாத வரலாற்றினுள் "அட்ட மூர்த்தியைப் பொருளென வுடைமையா லமர்ந்து, பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கியது" (2684) என்னும் கருத்தும் காண்க; **பட்டி** - பொது; (5) **எண்ணிலா** - சிவன் அடியார் பெருமையை உளங் கொள்ளாத; **எண்** - எண்ணுதல், தொழிற் பெயர்; **எண்ணிலாத** - அனேகராகிய என்றலுமாம்; **பண்** - **இயற்றமிழ்** - தமிழ் என்றதனைப் பண்ணுடனும் கூட்டுக. இசையும் இயலும் கூறவே இனம்பற்றி நாடக மடக்கிய முத்தமிழும் கொள்ளப்படும் —(6) **வஞ்சஞ் செய்து** - 2577 - 2586 - 2597 முதலியவை பார்க்க. **தஞ்சமென்று சரண் புகுந்தேன்** - "தாமென்று மனந்தளராத் தகுதியரா யுலகத்துக், காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினன்," (பிரமபுரம் - தேவா) என்ற கருத்து;—(7) **வெள்விடையாய்** - மாயப் பசுவை வதைத்த திருவிளையாடற் குறிப்பு; —(8) **தூர்த்தன்** - தீயோன் - இராவணன்; **ஆத்தன்** - (ஆப்தன்) உற்றவன்; **ஏத்து** - (சிவனை) ஏத்துதல்;—(9) **தூ விலா** - **தூ** - தூய்மை;—(11) **வெப்பம்** - சுடா வெப்பு நோயாக மாறி; வெப்பமாக; **மேதினிக் கோப்ப** - உலகத்துக்கு நலம் பொருந்த.

வேறு

2603. பாண்டிமா தேவியார் தமது பொற்பிற,
பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும்,
ஆண்டகையார் குலச்சிறையா ரன்பி னாலு,
மரசன்பா லபராத முறுத லாலும்,
மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்
வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்
தீண்டியிடப் பேறுடைய னாத லாலுந்
தீப்பிணியைப் "பையவே செல்க" வென்றார். எOரு

(இ - ள்) பாண்டிமா தேவியார் ...பாதுகாத்தும் - பாண்டிமா தேவியாரது அழகிய மிக்க நீண்ட திருமங்கல நாணைப் பாதுகாத்தல் வேண்டப்படுதலாலும்; ஆண்டகையார்... அன்பினாலும் - ஆண்டகைமையுடைய குலச்சிறையாரது அன்பினாலும்; அரசன்பால் ...உறுதலாலும் - அரசனிடம் அபராதம் சேர்ந்ததனாலும்; மீண்டு ...ஆதலாலும் - மீண்டும் சிவநெறியினை அடையும் விதியிருத்தலாலும், வெப்பு நோய் தீரும்படி அரசனது மேனியைத் தீண்டித் திருவெண்ணீற்றைச் சீகாழி மன்னர் இடும் பேறு அரசன் உடைமையாலும்; தீ ...என்றார் - தீப்பிணியைப் "பையவே செல்க" என்று பணித்தனர்.

(வி - ரை) **தீப்பிணியை...என்றார்** - "பையவே சென்று" என்ற பதிகத்துக்குக் காரணம் விரித்துக் கூறியது இப்பாட்டு.

**பாண்டிமா தேவியார்...பாதுகாத்தும்** - அம்மையாரது திருமங்கலநாண் பாது காவல் பெறவேண்டி யிருத்தலின் அதன் பொருட்டு அரசனைத் தீயால் அழிவுபடாது காத்தல் வேண்டப்பட்ட தென்பதாம்; "யானுமென் பதியுஞ் செய்த தவம்" (2570) என்றது காண்க.

**ஆண்டகையார் ..அன்பினாலும்** - குலச்சிறையார் அரசன்பாற் கொண்ட அன்பு நீடித்தல் ஒரு காரணம். "நற்றமிழ் வேந்தனு முய்ந்து, வென்றிகொள் திரு

நீற்றொளியினில் விளங்கு மேன்மையும் படைத்தனம்" (2557) என்றதனால் அவ
ரன்பு தேற்றமாதல் காண்க.

**அரசன்பால் அபராதம் உறுதலாலும்** - அம்மையார்க்கும் அமைச்சனார்க்கும் அருளுதல் வேண்டப்படின் அரசனைத் தீப்பிணி வாராது வாளா விடுத்திருக்கலாமே? எனின், அற்றன்று, அரசனிடம் வந்த சிவாபராதத்திற்குக் கழுவாய் செய்து தூயனாக்க வேண்டிய கடப்பாடு பற்றி இவ்வாறருளினார் என்பதாம்.

**மீண்டு... ஆதலாலும்** - இவையிரண்டும் தொடர்புடைமை பற்றி ஒரு காரணமாகக் கொள்ளப்பட்டன; மீண்டு சிவநெறி யடைதல் விதி - இறைவர் நியதி - என்பதும், அதற்கு வாயிலாகிய சாதனம் அவன்றன் முன்னைத் தவத்தால் பெற்றுடையன் என்பதுமாம்; "என்பதியும் செய்த தவமென்கொல்" (2570) என்று அம்மையார் கூறியருளியது காண்க. புகலி வேந்தர் தீண்டி வெண்ணீறு இட என்க; பேறு முன்னைத்தவம். இடுதல் - பூசுதல்

**தீப்பிணியை** - தீயாகிய பிணிப்பினை, ஈண்டுப் பிணி என்றது கட்டி வீழ்த்தும் வினை என்ற பொருள்பட நின்றது. பிணித்தல் - கட்டுதல் தமது அருளால் தீயின் உருவாய் வரும் பிணி - நோய் - என்றலுமாம்

**குறிப்பு** - வரலாறு கருதலில் முன்னும் மேலும் தொடர்ந்து செல்லும் கலிநிலைத்துறைச் சந்த யாப்பினிடையில் இப்பாட்டுத் தனித்து எண்சீர் விருத்தமாகப் புகுந்து நிற்கின்றதனாலும், ஆசிரியரது சிறந்த பொருட்செறிவும் சொற்பண்பும் இன்மையாலும், பாதுகாத்தும், அன்பினாலும், உறுதலாலும், விதியினாலும், ஆதலாலும் என்வரும் முடிபுகள் பொருந்தாமையாலும், குலச்சிறையார் அன்பினால் என்றது பொருந்தாமையாலும், தீயைச் செலக என்றதன்றிப் பிணியைச் செலக என்பது பதிகத்துச் சொல்லும் கருத்து மன்றாதலாலும், "புத்தரொ டமணை வாதி லழிவிக்கு மண்ணல் றிருநீறு செம்மை திடமே" (தேவா) என முன்னர் அருளியமையாலும், "வெண்ணீறு வேந்தனையு மிடுவித்து" (2512) என்று தொண்டர்கள் செய்த விண்ணப்பத்தின்படி ஆக என்று முன்னரே "அருள் புரிந்த"னர் (2513) ராதலால் இப்பாட்டு வேண்டப்படாமையாலும், இஃதன்றியே வரலாறு இடையீடின்றித் தொடர்ந்து செல்வதாலும், பிறவாற்றாலும் இப்பாட்டுப் பிற்காலத்துப் புலவரால் நேர்ந்த இடைச் செருகலோ? என்பது எனது பணிவாகிய ஐயப்பாடு; அன்பர்கள் கூர்ந்து நோக்கித் தெளிந்து கொள்வார்களாக. * 705

வேறு

2604. திருந்து திசைப்பதிகத்தொடை திருவால வாயின்
மருந்தினைச் சண்பை மன்னவர் புனைந்திட வருளால்
விரிந்த வெந்தழல் வெம்மைபோய்த் தென்னனை மேவிப்
பெருந்த ழற்பொதி வேதுப்பெனப் பெயர்பெற்ற தன்றே. ௭௦௪

(இ - ள்) சண்பை மன்னர் - சீகாழி மன்னவராகிய பிள்ளையார்; திருவாலவாயின் மருந்தினை - திருவாலவாயில் எழுந்தருளியுள்ள மருந்துருவமாகிய இறைவரை; திருந்து..புனைந்திட - திருந்தும் இசையினையுடைய திருப்பதிகம் புனைந்து போற்றியருள, அருளால் - அவரது திருவருளாலே, விரிந்த...பெற்றதன்றே - விரிந்து செலுத்திய வெவ்விய தீத்தொழில் முழுதினும் கூடிய வெம்மையின் தொகுதி

* இதுபற்றி எனது 'சேக்கிழார்' என்ற நூலில் ௨௦௧ முதல் ௨௨௪ வரை கூறியவையும், ஆண்டு இப்பாடல் பற்றி ௨௧௭ - ௨௧௮ உரைத்தவையும் பார்க்க.

சென்று பாண்டியனை அடைந்து பெரிய தீயின பொதியாகிய வெப்பு நோய் எனப் பெயர் பெற்றது அப்பொழுதே.

(வி - ரை) **திருந்து இசைப் பதிகத் தொடை** - **திருந்து** - பகைமை, செற்றம் முதலிய தீய கருத்துக்களானன்றி அரசனும் நாடும் திருந்த வேண்டுமென்ற ஒரே கருத்துடன் அருளிய; **திருந்து - தொடை** எனக்; திருந்துதற்குக் காரணமாகிய தொடை; இசை - இன்னிசை; பதிகப்பண.

**மருந்தினைத் தொடை புனைந்திட - மருந்து** என்றா, திருந்தவும் நோய் நீங்கவும் உதவ வேண்டுதலின; மருந்தினைத் தொடை புனைதல் என்றது மருந்து அத்தொடையி னுள் விளங்க என்ற குறிப்புத் தருவது; **தொடை** - உள் வைத்தல்.

**அருளுதல்** - இறைவரது திருவருளாதல், "மற்றைத் தோற்ற மலபாகம் வரக்காத் தல் போகந் துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்த லாகும், போற்றவரும் அருள்; அருளே யன்றி மற்றுப் புகன்றவையும் அருளொழியப் புகலொ ணாதே" (சிவப் - 18); ஒருவற்கு நோய்வரச் செய்தல் அருளாமோ? எனின், உலகில் வரும் நோய்கள் யாவும் பலவாற் றூலும் உடலுட் புகுந்த கேடுகளை நீக்கும் பொருட்டே உடலியலபின அமைக்கும் இறைவரது அருளமைப்பேயாம் என்பது மருத்துவ நூற்றுணிபுமாம், இங்கு உயிரினகட் சேரும் பாவவினையையும் நோய் தந்து தீர்த்தல் இறைவரருளேயாம்; அரசுகளைச் சூலை தந்தாண்ட வரலாறும் "பண்டுபுரி நற்றவத்துப் பழுதினளவு இறைவழுவுந் தொண்டரையா ளக்கருதி சூலையே தனைத்தனைக, கண்டருசெற றியருள" (1314) எனப்பட்டது இங்கு நினைவு கூர்தற்பாலது

**அருளால் - போய் - மேவி** - என்று முடிக்க; "சுடா - ஆக" என்ப பிள்ளை யார் பணிக்கத் திருவருளால் போய் மேவிற்று என்பது, "அஞ்சல என்று, அருள்செய் யெனை" என்று பிள்ளையார் விண்ணப்பிக்க அத்திருவாக்கினுள்ளே நின்று திருவருள இயற்றுவித்தது என்பதாம்; பிள்ளையார் திருவாக்குப் பணிக்கத் தீ சென்ற தன்றே? எனின், ஆம். அஃதொக்கும், ஆயின, பிள்ளையார் திருவாக்குச் சிவசத்தியினுள நிறைந்து நிற்க, அச்சிவ சிற்சத்தி நிகழ்வித்ததென்பது ஞானநூற் றுணிபு; "ஆவ தென்முனனொ ணுவலர் பெருமான், பண்டொரு முதலை யுண்டமைந் தனைவர, வழைத்தன னென்றுய பிழைப்பில தனுஉற, 'தந்திடல் வேண்டு' மென்றன ரன்றே" (சங்கற்ப நிராகரணம் - 9 - சிவசமவாதி நிராகரணம்). இவ்வாறே பிறவும் காண்க;

**விரிந்த வெந்தழல் வெம்மை போய் - விரிந்த** - பலவாற்றானும் புறத்திலே வெளிப்பட்டுத் தோன்றி விரிந்த; **வெம்மை போய்** - தழல் போகாமல் தழலின வெம்மையே சென்றது; தழல் ஒன்றினைப் பற்றி நின்றல்லது தொழிற்படாதாதலின் இங்கு வெம்மைக்குணம் போய தென்னனமெனில் தூலமாய் நின்ற தழல் சூக்கும நிலை பெற்றுச் சூக்கும ஆகாயம் பற்றுக்கோடாகச் சென்ற தெனக.

**தென்னனை மேவிப் பெருந்தழற் பொதிவெதுப்பு எனப் பெயர் பெற்றது - மேவி** - திருமடத்தின இட்டுச் சிதைக்கப்பட்ட இடத்தினின்றும் பாண்டியன உடலின் கட்பொருந்தி; **பெருந்தழற் பொதி வெதுப்பு** - தூலமாகிய பெரிய தழலின் பொதியாகிய வெப்பு; **பொதி** - மூட்டை; தொகுதி; **வெதுப்பு** - வெப்பு என மருவி வழங்கும்; **வெதுப்புதல்** - சுடுதல்; வெதுப்புதலாகிய தொழில் அதனைச் செய்யும் நோய்க்கு வந்தது; ஆகுபெயர்.

**தழல் வெதுப்பு எனப் பெயர் பெற்றது** - தழலே இவ்வுருவங்கொண்டு வந்ததேனும் இங்குத் தழல் என்ற தன்மையாலன்றி வெதுப்பு என்ற பெயரால் அறி யப்பட்டது; தீ வீழ்ச்சியில் உள்தாகும் மின்சார சக்தியானது செப்புக் கம்பியினைப் பற்றுக்கோடாகக் கொண்டுசென்று அதற்கென்றமைந்த கண்ணாடிக் குப்பியினுள்

வெளிப்படும்போது விளக்கு எனப் பெயர்பெறுவது போலக் காண்க. அரசனுணையானது நீதிமன்றத் தலைவர்பால் வெளிப்படும்போது நீதி முறை என்றும், தண்டத் தலைவர்பால் விளங்கும்போது தண்டம் என்றும் பெயர்பெறுமா போலவும் காண்க. இவ்வாறு வரும் பிறவும் காண்க.

**அன்றே** - அப்போதே; அருளாணை சென்று சேரும் விரைவு குறித்தது.

**சண்பை மன்னவர்** - மன்னவனை மறுத்துத் திருத்துதல் பிறிதொரு மன்னவனுக்கன்றி இயலாதென்ற இயல்புக் குறிப்பு. 706

2605. செய்ய மேனியர் திருமக னுறைமடத் தினில்
நைபு முள்ளத்த ராயமண் கையர்தா நணுகிக்
கையி னாலெரி யிடவுடன் படுமெல்லி கரப்ப
வெய்ய வன்குண கடலிடை யெழுந்தனன் மீது. எ0எ

(இ - ள்) செய்ய . மடத்தில் - சிவந்த திருமேனியினையுடைய இறைவருடைய திருமகனாராகிய பிள்ளையார் எழுந்தருளிய திருமடத்தில்; நையும் எரியிட - கவலையினால் வாடும் உள்ளத்தையுடையவர்களாக அமணராகிய கீழ்மக்கள் பக்கத்தில் வந்து கையினால் கொண்டுபோய்த் தீக்கொளுவ, உடன்படும் எல்லி கரப்ப - உடனிருந்து சம்மதித்த இராப்போது மறைய, வெய்யவன்...மீது - சூரியன் கீழ்கடலின்மீது வந்து எழுந்தனன்

(வி - ரை) செய்ய மேனியர் - "எரிபோன மேனிப்பிரான் திறம்" (தேவா). "செய்யனே" என்ற பதிகக் குறிப்புப்பட நின்றது.

திருமகனார் - அத்தனே, ஐயனே, அப்பன், என்ற பதிகக்குறிப்புக் காண்க; மகனார் - பாலூட்டியதனால் மகன்மை முறைமை கொண்டவர். இதுபற்றி முன் உரைத்தவை பார்க்க.

நையும் உள்ளம் - நைதல் - கவலையினால் இஃது கைகூடுமோ என்று வருந்துதல்:

நணுகிக் கையினால் எரியிட - விஞ்சை மந்திரத்தொழில் செய்த இடத்தினின்றும் பிள்ளையாரது திருமடத்தை அணுகி; மந்திரத்தொழில் வாயத்திலதாயினமையாற் கையினாலே எரிகொண்டு கொளுவினர் என்ற சரிதக் கருத்து.

**உடன்படும் எல்லி** - எல்லி - இராப்பொழுது; உடன்படும் - தற்குறிப்பேற்ற அணி: கரப்ப என்றதும் அது; தீவினை செய்தலைக் கவனித்தும் உடன் வாளாவிருந்தமையால் உடன்படும் என்றார்.

**வெய்யவன் - எழுந்தனன்** - குற்றஞ்செய்த அரசனை வெதுப்ப உள்ளவனதலின் வெய்யவன் என்றார்.

**மீது எழுந்தனன்** - விண்ணினின்மீது எழுந்தான், இதுவும் தற்குறிப்பேற்றம். கடலிடை - இடையினின்றும். இப்பாட்டினால் சமணர் எரிகொளுவிய இரவு போய்ப் பகல் வந்தமை கூறப்பட்டது. அம்மையார் கருத்துமுற்றி மேலெழுதல் குறிப்பு என மேலவரும் பாட்டுக் காண்க. 707

2606. இரவு பாதகர் செய்ததீங் கிரவிதன் மரபிற்
குரவ னோதியார் குலச்சிறை யாருடன் கேட்டுச்
"சிரபு ரப்பிள்ளை யாரையித் தீயவர் நாட்டு
வரவ ழைத்தநா மாய்வதே!" எனமன மயங்கி, எ0அ

2607. பெருகு மச்சமோ டாருயிர் பதைப்பவர் பின்பு
திரும டப்புற மருங்குத் தீங்கின்மையிற் றெளிந்து
"கருமு ருட்டமண் கையர்செய் தீங்கிது கடைக்கால்
வருவ தெப்படி யா?"மென மனங்கொளும் பொழுது, ௭0௯

2608. "அரச னுக்குவெப் படுத்த"தென் றருகுகஞ் சுகிகள்
உரைசெ யப்பதைத் தொருதனித் தேவியார் புகுத
விரைவு மச்சமு மேற்கொளக் குலச்சிறை யாரும்
வரைசெய் பொற்புய மன்னவன் மருங்குவந் தணைந்தார். ௭௧0

2606. (இ - ள்) இரவு கேட்டு - (முன்னைநாளின்) இரவிலே பாதகர்களாகிய அமணர்கள் செய்த தீங்கினைச் சூரிய மரபிலே வந்த குராமலரை யணிந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசி யம்மையார் குலச்சிறையாருடனே கேட்டு, "சிரபுரப்பிள்ளையாரை......நாமமாய்வதே" என மனமயங்கி - சீகாழிப் பிள்ளையாரை இந்தத் தீயவர் நாட்டினிலே வரும்படி அழைத்த நாம் உயிர் துறந்து விடுவதே இதற்குத் தீர் வாகும்" என்று மனம் மயங்கி; ௭0௮

2607. (இ - ள்) பெருகும்...பதைப்பவர் - மேன் மேற் பெருகுகின்ற அச்சத்துடனே அரிய தமதுயிர் பதைக்கும் அவ்விருவரும், பின்பு...தெளிந்து - அதன்பின், திருமடத்தின் புறப்பக்கத்திலும் தீங்கு இல்லாமை கேட்டதனாலே தெளிந்து, "கருமுருட்டு...எப்படியாம்?" என மனங் கொளும் பொழுது - "கரிய முருட்டு உடலுடைய சமணக் கீழ்மக்கள் செய்த இந்தத் தீங்கு இதன் வழித்தாய் விளைவது எவ்வாறாகுமோ?" என்று மனத்தில் எண்ணமிட்ட போது; ௭0௯

2608. (இ - ள்) "அரசனுக்கு வெப்பு அடுத்தது" என்று...பதைத்து - "அரசனுக்கு வெப்புநோய் மேவிற்று" என்று மெய் காவலராய் அருகில் உள்ள கஞ்சுகி மாக்கள் கூறப் பதைபதைத்து; ஒரு...புகுத - ஒப்பற்ற பெருந்தேவியார் (அரசன் துறையுளில்) புகுத; விரைவும்...வந்து அணைந்தார் - விரைந்த செலவும் பயமும் பொருந்தக் குலச்சிறையாரும் மலை போன்ற அழகிய புயங்களையுடைய அரசன் பக்கத்தில் வந்து அணைந்தனர். ௭௧0

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2606. (வி - ரை) இரவு - முன்னைநாள் இரவினில. செய்த தீங்கு-செய்ததாகிய தீக்கொளுவிய செயல்; தீக் கொளுவினர் என்ற மட்டில் கேட்டனரே யன்றி அது உடனே சிதைக்கப்பட்டதனையும் தீமை ஒன்றும் நேராமையினையும் பின்னரே கேட்க வுள்ளார், உலக நிலையில் செய்தியறிவிப்போர் இவ்வாறு அறிவிப்பது இயல்பு.

இரவிதன் மரபில் குரவ ஓதியார் - இரவி - சூரியன்; சூரிய மரபு - சோழ மரபு; இங்கு இத்தன்மையாற் கூறியது மதி விளங்கும் இராக்காலம் விளக்க மற்ற குற்றங்கள் நிகழ்வதற்கு இடமாகவும், ஞாயிறு விளங்கும் பகல், அவை புலப்படவும் நீக்கம் பெறவும் நிகழ்ச்சிகள் பெறும் கால மென்பதும், மதி மரபில் வந்த பாண்டியனது குற்றம் மறைய இரவிமரபில் வந்த அம்மையினாலே தீர்வு பெற உள்ள தென்பதும் குறிப்பு; முன் பாட்டில் "உடன்படு மெல்லிகரப்ப - வெய்யவன் மீது எழுந்தனன்" (2605) என்ற குறிப்பைத் தொடர்ந்து கூறியபடி; "தென்னர் குலப்பழி தீர்த்த தெய்வப் பாவை" (மங்கை - புரா). குரவம் - குராமலர்; ஓதி - கூந்தல்.

**குலச்சிறையாருடன் கேட்டு** - செய்தியறிவித்தவர்கள் இவ்விருவருக்கும் அறிவித்தனர் எனக; உரிமைத் தேவியாராதலின் அம்மையாருக்கும், அரசாங்க முறைமை பற்றி அமைச்சனாருக்கும் முதல் அறிவிப்பு இன்றியமையாமை யுணர்க.

**“சிரபுரப் பிள்ளையாரை .மாய்வதே” என மனம் மயங்கி** - இஃது அம்மையாரும் அமைச்சனாரும் எண்ணிப் பதைத்த நிலை. தாம் அழைத்து வந்த பிள்ளையாருக்குத் தம்மை யறியாமலே தீங்கு இழைத்தற்குத் தாம் காரணர்களாய் நின்றமையால் அவ்வபராதத்திற்குத் தம் உயிர்மாய்ப்பதே தக்க தண்டமாம் என்று கொண்டனர், தம் செயலால் பிள்ளையார்க்குத் தீங்கு நிகழக்கண்டு உயிர் வாழ்தலைவிடச் சாதல் நன்றென்றலுமாம், இவ்வாறு இவர்கள் முன்னரே (2594) துணிந்து கொண்டமையும் காண்க. **தீயவர்** - குணத்தாலும் தீக்கொளுவியதனாலும் தீயவர்

**மதி மயங்கி** - என்ற பாடம் பொருத்த மன்று. 708

2607. **(வி - ரை) பெருகும் அச்சமோடு ஆருயிர் பதைப்பவர்-அச்சம் பெருகுதல்** - அமணர் செய்த தீங்கினைக் கேட்டார்களன்றி அது உடன் பிள்ளையார் திருவார்த்தை கேட்டாரலர், சிதைக்கப் பட்டதனையும் தீதின்மையினையும் கேட்டலும் முலை சுரந்த தலையன்பின் நிலையுடையவர் அம்மையாராதலின் இங்குத்தீங்கு கேட்டவுடன் அச்சம் பெருக உயிர் பதைத்தனர், பிள்ளையார் திருமறைக்காடு சேர்ந்த நன்னிலை - கேட்ட அப்பொழுதே - சேட்படு புலத்தரேனும் சென்றடி பணிந்தார் ஒத்தாராயினர் அம்மையாரும் அமைச்சனாரும் (2502—2504) என்றது காண்க. “நாம் மாய்வதே” எனும் துணிவு கொண்டாராதலின் அதன்படியே உயிர்பதைத்தனர். அடுத்தார்க்குத் தீயவை நேரக் கேட்டபோது உயிர் போகும் நிலை வருதல் தலையன்பின் திறம் எனக

**பின்பு தெளிந்து** - உயிர் பதைக்கு நிலை வந்த பின்னர்த் தீதில்லாத செய்தியைக் கேட்டனர்; அதனால் பதைப்பு நீங்கித் தெளிந்தனர். திருமடத்தில் அமணர் தீத்தொழில் செய்து விட்டனர், ஆனால் தீதிலலை எனக் கேட்ட செய்தியில் முற்பகுதி கேட்டவுடன் உயிர் பதைத்தலும், உடன் பிற்பகுதி கேட்டலும் தெளிதலும் நிகழ்ந்தன. ஒரு கணத்தில் முற்பகுதியில் ஒன்றும், பிற்பகுதியில் மற்று ஒன்றுமாக நிகழ்ந்த இரு வேறு மன நிகழ்ச்சிகளை இவ்வாறு பாகுபடுத்தி அறிவித்த தெய்வக் கவிநலம் காண்க. (Psychological sequence) இவ்விரண்டும் காலத்தால் இடையீடு பெருமல் நிகழ்ந்தனைப, **பதைப்பவர்** - பதைப்பவராய (எதிர்கால முற்று எச்சப்பொருளில் வந்தது) **தெளிந்து** என்றதுடன் கூட்டி முடிக்க வைத்த கவிநலமும் காண்க.

**திருமடப்புற மருங்கு** - ‘திருமடப்புறத்தயல” (2598); திருமடப் புறச்சுற்று; (2599); புறச்சமயிகள் புறத்தின் மருங்கன்றி அணுகலார் என்ற குறிப்பினைக் காட்டிச் செல்லும் கவிநலம் காண்க.

**தீதின்மை** - தீத்தொழிலால் தீமை விளையாமை, தீதின்மை கேட்டலால் எனக.

**கடைக்கால் வருவ தெப்படியாம்?** - **கடைக்கால்** - ஒரு விடயத்தைத் தொடங்கும் நிலை - கட்டிடத்துக்கு அடிநிலை கோலுதல் போல - (அஸ்திவாரம் என்பர்); அடிநிலை எப்படியோ அதன்படியே மேல் கட்டிடமும் அகல நீள உயர முதலியவை அமையும். இங்கு அமணர் தீத்தொழிலில் அடி நிலை தொடங்கினார்களாதலின் அதன்மேல் விளைவும் பயன்களும் அதனை யொட்டியே நிகழும்; அஃது எவ்வண்ணமோ என்றார், **கடைக்கால்** - முடியும் வேளை என்பாரு முண்டு; அது பொருந்தாமையறிக.

**மனங் கொள்ளுதல்** - எண்ணமிடுதல். எண்ணமிடலாவது தீத்தொழில் கேட்டலும் உயிர் பதைத்தனர்; தீதின்மை கேட்டு அது தெளிந்தனர்; பின்னர் தீத்தொழில்

அப்போது தீமை செய்யா தொழியினும், எக்கருமமும பயன் தருதே விடுமாதலின், பின்னர் என்ன பயனைத் தருமபடி எப்படி வந்து முடியுமோ என றிவவாறு எண்ணுதல். 709

2608. (வி - ரை) வெப்பு - வெப்பு நோய், வெப்பு - என்ற பண்பு அதனை யுடைய நோய்க்கு வந்தது பண்பாகு பெயர்; அடுத்தது - வந்து நேர்ந்தது; செய்வோர் செயலுக்குத் தக்கதே அடுக்குமாதலின அவவாறு அடுத்தது என்ற குறிப்பும் காண்க.

அருகு கஞ்சுகிகள் - அரசனருகில் எப்போதும இருந்து காவலும ஏவலும் உரிய மாக்கள், கஞ்சுகிகள் - சட்டையணிந்த சேவகர், இந்நாளிலும அரசாங்க உயர் நிலைகளில ஆணையாளர் பக்கம் அதற்கென்று குறித்த அடையாளங்களை யுடைய சட்டைகளை அணிந்த காப்பாளர் - தூதுவர் - இருத்தல காண்க. இங்குக் குறித்தவர்கள அரசன பக்கம் இருக்கும் காவல் மாக்கள். அருகு - பக்கம். அருகு - வெம்மையால் அருகிய என்றுரை கொள்வாருமுளர்; அது பொருந்தாமையறிக. கஞ்சுகம் - மெய்யுறை. கஞ்சுகி - மெய்க்காப்பாளர்.

உரை செய - தேவியாரிடமும், அமைச்சரிடமும சொலல.

பதைத்து ஒருதனித் தேவியார் புகுத - பதைத்து - தமது நாயகருக்கு வெப்பு வந்தமையால அவருடன பாதியாக எண்ணப்படும நாயகியாருக்குப பதைப்பு உற்றது; ஒரு தனி தேவி என்ற குறிப்புமிது; புகுத - அரசன இருந்த உறையுளில் புகுத.

விரைவும் அச்சமும் - தீர்வு தேடுதலில விரைவும், சிவாபராத மாதலின் தீர்வு எவ்வாறு நேருமோ என்ற ஐயப்பாட்டினுல அச்சமும உண்டாயின. 710

2609. வேந்த னுக்குமெய் விதிர்ப்புற வெதுப்புறு வெம்மை
காந்து வெந்தழற் கதுமென மெய்யெலாங் கவர்ந்து
போந்து மாளிகைப் புறத்துநின் றூர்களும் புலர்ந்து
தீந்து போம்படி யெழுந்தது விழுந்துட லிரங்க. எகக

(இ - ள்) வேந்தனுக்கு வெம்மை - அரசனுக்கு உடல நடுக்கம வர வெதுப்புறும் நோயின சூடு; காந்து.. போந்து - எரிதலால வெப்பத்தை வீசும தழல் போல விரைவாக உடம பெல்லாம் உள்ளடங்கப புறத்திலும் பரவி; மாளிகை...உடல் இரங்க - அரண்மனை உறையுளின புறத்தே நின்றவர்களும வாடித் தீந்து போகும்படி உடல் கிடந்து உலர மேல எழுந்தது.

(வி - ரை) அரசனுக்கு உற்ற நோயின் வெப்ப மிகுதியின தன்மையினையும் நோயின விளைவினையும உரைத்தது இப்பாட்டு.

விதிர்ப்புறு வெம்மை - விதிர்த்தல் - நோய மிகுதியால உடல் நடுக்கமுறுதல்; காந்து தழல் - வெளியில வீசும சூடு; கதுமென - விரைவாக. விரைவுக் குறிப்பு;

மெய் எலாம் கவர்ந்து போந்து - வெப்பு நோயின வெம்மை அரசனது உடல் முழுதும தனனுட்படுத்தி மிக்குப்புறத்திலும வீசி.

மாளிகைப் புறத்து நின்றர்களும் புலர்ந்து தீந்து போம்படி - மாளிகை - மாளிகையின கண்; புறத்து நின்றர்கள் - அரசனிருந்த மாளிகைப பகுதியின் அடுத்தப் புறத்துக் காவல நின்றவர்கள்; இவர்கள "அருகு கஞ்சுகி மாக்கள்" "உழைச் செல்வோர்" முதலாயினேர்; புலர்தல் - வெப்பினுல் வாடுதல; தீந்து போதலாவது வெப்பின் மிகுதிதாக்க மேனிகருகுதல்.

உடல் திரங்க - உடல் உலர்ந்து சுருங்க; வெம்மை - கவர்ந்து; உடல திரங்க - எழுந்தது என முடிக்க; உடல் விழுந்து திரங்க எனக; உடல விழுதலாவது தன முயற்சி யொன்று மின்றி வீழ்ந்து கிடத்தல.

க்னமென - என்பதும பாடம். 711

2610. உணர்வு மாவியு மொழிவதற் கோருபுடை யொதுங்க
அணைய லுற்றவ ருருகுதூ ரத்திடை யகலப்
புணரி ளங்கத லிக்குருத் தொடுதளிர் புடையே
கொணரி னுஞ்சுருக கொண்டவை நுண்டுக ளாக, எகஉ

2611. மருத்து நூலவர் தஙகளபல் கலைகளில் வகுத்த
திருத்த குந்தொழில் யாவையுஞ் செய்யவு மேன்மேல்
உருதமெ ழுககவெப புயிரையு முருக்குவ தாகக்
கருத்தோ ழிந்துரை மறந்தனன் கௌரியா தலைவன். எகங

2610. (இ - ள்) உணர்வும ஒதுங்க - உணர்ச்சியும உயிரும ஒழிவதற்காக ஒரு பக்கமாய் ஒதுங்கி நிறகவும; அணையலுற்றவர் அகல - பககத்தில வருபவர்கள தூரமாகச் சென்று அகலவும், புணர் துகளாக - பொருந்தும வாழையிளந் குருத்தும நீரக்குளிரியும பககத்திற கொண்டுவரினும வெப்பத்தால் காய்ந்து சுருங்கி அவை நுண பொடியாகவும்; எகஉ

2611 (இ - ள்) மருத்து நூலவர்...செய்யவும - மருத்து நூல வல்லவர்கள தஙகளுடைய பல கலைகளிலும வகுத்தோதப்பட்ட சிறந்த தக்க மருத்துத தொழில்கள எல்லாவற்றையும செய்திடவும், மேன மேல...உருக்குவதாக - மேலும மேலும முடுகி எழுந்த வெப்பு நோய உயிரையும உருக்குவதாகியிட, கருத தொழிந்து...தலைவன - நினைவு ஒழிந்து பேச்சின்றிக கிடந்தனன பாணடியன் அரசன். எகங

இந்த இரண்டு பாட்டுக்களும தொடர்ந்து ஒரு முடிவு கொணடன.

2610. (வி - ரை) உணர்வும...ஒதுங்க—உணர்வு - உணர்ச்சி பிரக்ஞை - என்பது வடமொழி; ஒழிவதற்கு - ஒழிந்து போவதற்கு முன்னங்கமாய ஆயத்தமாக - ஒழிவதன பொருட்டு; ஒருபுடை ஒதுங்குதல் - உடல முழுதும இன்ன இடத்தில உள்ளது என்று குறிக்கத்தக்கியலாதபடி எல்லா விடத்தும வியாபித்து நின்ற உணர்வும உயிரும அவ்வாறன்றி உணர்வுள்ளது - உயிர் உள்ளது என்று ஒரு பக்கம ஒதுங்கின; இது அவை முற்றும ஒழிந்து போவதற்கு முடிவில காணுமபடி அடையாளம போலக் காட்டின என்பது. ஒழிவதற்கு - ஒழிவதன பொருட்டு.

அருகு அணைய வந்தவர் எனக, தூரத்திடை அகல - பக்கத்தில வந்து கண்டு காரியம செய்ய வந்தவர்களும இவ் வெப்பம வீசுதலினால் சூடுண்டு பக்கத்தில அணுக மாட்டாது தூரத்திற் போக.

புணர்...துகளாக - வைகுரி, கொடுஞ் சுரம், முதலிய மிக்க வெப்பு மேலேறும நிலையுள்ள நோய்கள வரின அவரை வாழையிளந் குருத்திற கிடப்பித்தல, நீரக்குளிரி அருகில் வைத்தல முதலியவை அவ்வெப்பு ஏறுமல தடுக்கும முறைகளாம; இக் காளில பனிக்கட்டியை வைத்துக் கட்டுதல் முதலிய முறைகளும காண்க. இங்கு வாழைக் குருத்து - குளிரி என்னும இவை இதன பொருட்டுக் கொணரப்பட்டவை, கொணரினும் - சுருக்கொண்டு - என்றது அவை கொணடுவந்து உரியவாறு இட்டுப

பயன் படுத்து முன்னே சுருங்கிப பொடியாயின என்றதாம; **நுண்துகள் ஆக** - பொடிபட; குளிரியினை வெப்புத்தீரப் பயன்படுத்துதல் முன்னரும் (319) காண்க. 712

2611. (வி - ரை) **மருந்து நூலவர் செய்யவும் - தங்கள் பல்கலைகள்** - நோய் வகையாலும், அவற்றைத் தீர்க்கும் வாய்களின் வகையாலும், அவை செயல் வகையாலும், பிறவாற்றாலும் மருத்து நூல்கள் பலகலைகளாகப் பிரியும்; "நோய் நாடி நோய்முதல் நாடி யதுதீர்க்கும், வாய்நாடி வாய்ப்பச் செயல்" (குறள்). இவ்வாறு நாடும் பற்பல கலைகளினும் வல்லோர் அவற்றுள் வகுத்த இந்நோய்க்கு ஏற்றவற்றுள் மிகச் சிறந்தனவாகிய செயல்கள் எல்லாவற்றையும் செய்யவும்; **திரு** - சிறப்புடைய; **தரும்** - நோய்க்குத் தக்க; **தொழில்** - தீர்வுமுறை. **யாவையும்** - உம்மை முற்றும்மை; **செய்யவும்** - சிறப்பும்மை.

**மேன்மேல் உருத்தெழுந்த வெப்பு உயிரையும் உருக்குவது ஆக** - தீர்வு செய்த விற் றவிராததன்றி, செய்த தீர்வின் அளவுக்கு மேன்மேல் முடுகி ஓங்கிற்று; ஓங்கின அளவு உடலையேயன்றி உயிரையும் உருக்கிற்று என்பது. **உயிரை உருக்குதல்** - உயிரின் வலி நிலை திரும்படி குறைத்தல்.

**கருத்து ஒழிந்து** - தன்னுணர்ச்சி நீங்கி மரம்போற் கிடந்து, **உரை மறந்தனன்** - பேசும் ஆற்றல் நீங்கினன், **கௌரியர்** - பாண்டியர்.

**கருத்தழிந்து** - என்பதும் பாடம். 713

2612. ஆன வன்பிணி நிகழ்வுழி யமணர்க ளெல்லாம
மீன வன்செயல் கேட்டலும் வெய்துயிர்த் தழிந்து
"போன கங்குலிற் புகுந்ததின் விளைவுகொ?" லென்பார
மான முன்றெரி யாவகை மன்னனமாட் டணைந்தார். எகச

(இ - ள்) **ஆன வன்பிணி நிகழ்வுழி** - இவ்வாறான வலிய நோய் மூண்டு நிகழும் போது; **அமணர்கள் எல்லாம் .அழிந்து** - சமணர்கள் எல்லாரும் அரசனது நிலைமையினைக் கேட்டலும் பெருமூச்சு விட்டு மனமுடைந்து வருந்தி; **போன ..என்பார்** - "சென்ற இரவிற் செய்த செயலினால் வந்த விளைவுதானோ இது?" என்று ஐயுறுவாராகி; **மானம்.. அணைந்தார்** - தமக்கு நேர்ந்த அவமானம் முன் தெரியாதபடி மறைத்து அரசனிடம் வந்து அணைந்தனர்.

(வி - ரை) **ஆன** - முன் கூறியபடி முடிவதாயின; "ஆகவே" என்ற ஆணையருளின்படி வரலான என்ற குறிப்புமாம்; **வன்பிணி** - மருத்து நூலவரின் திருத்தரு தொழில்கள் எவ்வெவற்றாலும் குறையாது நின்று மேலும் முடுகிய வலிமை குறித்தது.

**அமணர்கள் எல்லாம்** - முன் இரவில் இருள் போலச் சென்று தந்தொழில் விளைத்த அவ்வமணர்க ளெல்லாரும்.

**செயல்** - நிலை என்ற பொருளில் வந்தது, **கேட்டலும் - அழிந்து - அணைந்தார்** - தேவியாரும் - குலச்சிறையாரும் அச் செய்தி கேட்டலும் அணைதலும் முன்னர் நிகழ்ந்தன; சமணர்பால் அவை கடையில் நிகழ்ந்தன; அவர்களது காவாமை வன்னெஞ்சின் நிலை குறித்தது.

**வெய்துயிர்த்து அழிந்து** - கேட்டலும் பதைத்தனர் தேவியார்; அஞ்சினார் அமைச்சனார்; அந்நிலைகள் மன்னனிடம் அவர்கள் கொண்ட அன்பினால் விளைந்தன; ஈண்டு அமணர் வெய்துயிர்த் தழிந்த நிலை தமது வஞ்சம் பலன் றராதொழிந்தமை

யாலும் தமது தீத்தொழில் வெளிப்பட்டுத் தமக்கே கேடு தருமென்ற அச்சத்தாலு மாயிற்று.

**போன கங்குலிற் புகுந்ததின் விளைவுகொல்? -** இது சமணரது ஐயப் பாடான மனநிலை, தாம் செய்தது தீமையாகிய பாவம் என்பதாம். அதுவே இவ்வாறாக விளையும் என்பதிலும், விளைக்க வல்லார் பிள்ளையார் என்பதிலும் நம்பிக்கையில்லாதவர்களாதலால் ஐயப்பாடுற்று இவ்வாறு தமக்குள் ஐயங் கொண்டனர் ஆயின் இந்த ஐயப்பாடு நிகழ்ந்ததென்னை? எனின், தமது செயலுக்கும் இவ் விளைவுக்கும் உள்ள விரைவாகிய தொடர்ச்சியும் ஒற்றுமையும் முதலிய சம்பந்தம் பற்றி என்க.

**மானம் முன் தெரியா வகை - மானம் -** மேன்மை, இங்கு அது தவறுபட வருதலால் உள்ள மனநெகிழ்ச்சி என்ற பொருளில் வந்தது, அவமானம் - வெகுமானக் குறைவு எனப்புழிப்போல, **முன்தெரியா வகை -** வெளிப்பட்டுப் பிறர் அறிந்து கொள்ள முடியாதபடி புறத்தோற்றத்தினுள் மறைத்தது. **மானம் -** அவமானம் என்றலுமாம். 714

வேறு

2613. மால்பெருக்குஞ் சமண்கையர் மருங்கு சூழ்ந்து
வழுதிநிலை கண்டழிந்து வந்த நோயின்
மூலநெறி யறியாதே தங்கள் தெய்வ
மொழிந்தவினமந் திரங்கொண்டு முன்னும் பின்னும்
பீலிகொடு தைவருதற் கெடுத்த போது
பிடித்தபீ லிகள்பிரம்பி னோடுந் தீந்து
மேலெரியும் பொறிசிதறி வீழக் கண்டு
வெப்பினதி சயநோக்கி வெருவின் மிக்கார். ௭௧௫

**(இ - ள்)** மால் பெருக்கும்...அறியாதே - மயக்கத்தையே பெருக்கச் செய்யும் சமணராகிய கீழ் மக்கள் பக்கத்தில் வந்து சூழ்ந்து பாண்டியனது நோயின் முடுகிய நிலையினைக் கண்டு மனமழிவுற்று, அவனுக்கு நேர்ந்த நோயினது மூலத்தினை அறியாமலே, தங்கள் தெய்வம்...எடுத்த போது - தங்கள் தெய்வத்தின் மொழியினை எடுத்துச் சொல்லும் மந்திரத்தினைச் சொல்லிக்கொண்டு மயிற் பீலியினால் முன்னும் பின்னுமாகத் தடவுதற்காக எடுத்தபோது; பிடித்த...கண்டு - கையிற் பிடித்த பீலிகள் அவற்றுடன் சேர்ந்த பிரம்பினோடும் தீந்து மேல் தீப்பற்றி எரிதலால் தீப்பொறிகள் சிதறி வீழக் கண்டு, வெப்பின் மிக்கார் - வெப்பினது அதிசயத்தினை நோக்கி மிகவும் வெருண்டனர்.

**(வி - ரை)** இப்பாட்டும் மேல்வரும் பாட்டும் அமணர்கள் அரசனிடம் வந்து சூழ்ந்து செய்த காவாகிய மந்திரத் தீர்வுச் செயல்களைக் கூறத்தொடங்குவன

**மால்பெருக்கும் சமண் கையர் -** எழுவகைப் பதார்த்தங்களை அநேகாந்த வாதத்தாற் கூறிப் பொருளியல்பு இவற்றுள் ஒன்றாகச் சொல்லவும் படும், சொல்லவும் படாது எனக்கூறும் சமயமாகலின் பொருள் துணிபு தெளிவுபெறாது மயக்கத்தைப் பெருக்கத்தரும் சமயமாயிற்று. தங்கள் சமயத்தின் மயக்கத்தினைப் பாண்டியனுள்ளத்திற் பெருக்கும் என்றலும் குறிப்பு.

**வழுதி -** பாண்டியன், அமணர் சார்வினால் வழுவியது பற்றி வினை மூளப் பெற்றவன் என்று குறிப்புப்பட இங்கு இப்பெயரால் கூறினார். **தீ -** தொழிற்பெயர் விகுதியாதலும் காண்க.

**வந்த நோயின் மூலநெறி அறியாதே** - நோயினைத் தீர்க்க முற்படுவோர் அந் நோயினை அறிதலேயன்றி அது வந்த மூலத்தினையுமறிதல் வேண்டுமென்பது மருத்துநூற்றுணிபு; இங்கு இந்நோயின் மூல நெறியாவது தங்களுடைய கரவுச் செயலேயாம் என்பதனை அறியாமல் என்க. முன்பாட்டிற் கூறியது ஐயப்பாடாகிய நிலையன்றித் தெளிந்த நிலையன்று என்பது காண்க, பொருணிச்சயம் தெளிதலன்றி, அநேகாந்த வாதம் கூறுவோராதலின் நோயின் மூலத்தினையும் அவ்வாறே தெளியாராயினர் என்ற குறிப்பும் மேல் மால் பெருக்கும் என்றதனாற் பெறப்பட்டது காண்க.

**தங்கள் தெய்வமொழி நவில் மந்திரங்கொண்டு** - தமது தெய்வத்தின் பெயராற் சொல்லப்படும் மந்திரத்தினை உச்சரித்துக் கொண்டு, தெய்வ மொழியினால் - நவிலப் பெற்ற - மந்திரம் என்றலுமாம்; தமது தெய்வம் அருளிய என்றலுமாம். **மந்திரம் கொண்டு** - உச்சரித்துக் கொண்டு - உட்கொண்டு; ஆதாரவாகக்கொண்டு என்றலுமாம், மந்திரிப்போர் குறித்த தெய்வப்பெயர் பூண்ட மந்திரத்தைக் கணித்துக்கொண்டே செயல் புரிதல் மரபு.

**முன்னும் பின்னும் பீலி கொடு தைவருதல்** - இது அமணர் மந்திரத் தொழில் செய்யும் முறை; **பீலி** - மயிற்பீலிக் கற்றை. இதனை ஏந்திச் செல்லுதல் அமண குருமார் மரபு, அதனோடு பிரம்பினையும் ஏந்துவதுண்டு. முன்னும் பின்னுமாகப் பாண்டியன் உடலைத் தடவுதற்காகப் பீலியை எடுத்தனர். அப்போதே அது தீந்து தீப்பற்றிப் பொறி சிதறியதனால் அமமுயற்சியினை விட்டனர் என்பது.

**வெப்பின் அதிசயம் நோக்கி வெருவின் மிக்கார்** - வெப்பு நோயின் வெப்ப மிகுதியால் விளைந்த அதிசயமாவது வெப்ப மிகுதியால் மயிற்பீலியும் தீந்து தீப் பொறி பாறுதல்; சுரநோய் இவ்வாறு பொருள்களைத் தீப்பற்றச் செய்தல் அதிசயமாயிற்று; வெரு - சடுதியில் நேர்ந்த மிக்க அச்சம். "வெருக் கொண்டாற் போலழுவா" (1953)

வெருவன் மிக்கார் - என்பதும் பாடம். 715

2614\. கருகியமா சுடையாக்கைத் தீயோர் தங்கள்
கைத்தூங்கு குண்டிகைநீர் தெளித்துக் "காவாய்
அருகனே! அருகனே!" யென்றென் றோதி
யடல்வழுதி மேற்றெளிக்க வந்நீர் பொங்கிப்
பெருகுமெரி தழல்சொரிந்த நெய்போ லாகிப்
பேர்த்துமொரு தழலதன்மேற் பெய்தாற் போல
"ஒருவருமிங் கிருமருங்கு மிராது போ"மென்
றமணரைப்பார்த் துரைத்தரச னுணர்வு சோர்ந்தான். ௭௧௬

(இ - ள்) கருகிய.. தெளிக்க - கருகிய அழுக்குடைய உடலையுடைய தீயோர்களாகிய அவ்வமணர் தமது கையில் தொங்குகின்ற குண்டிகையின் நீரினை மேலே தெளித்து "அருகனே! அருகனே! காப்பாயாக" என்று பல முறையும் ஓதி வலிமைபெற்ற பாண்டியன் மேல் தெளிக்க; அந்நீர்...போல - அந்த நீரானது பொங்கி முன்னமே பெருகி எரியும் தீயின் மேல் சொரிந்த நெய் போல ஆகி அதன் மேலும் ஒரு நெருப்பினை வாரித் தூவியது போல ஆக, "ஒருவரும்...சோர்ந்தான்" - "நீங்கள் ஒருவரும் இங்கு இருபுறமும் இராமல் அகன்று போங்கள்" என்று அரசன் அமணரைப் பார்த்துச் சொல்லி உணர்ச்சி சோர்ந்து அவசமாயினன்.

(வி - ரை) கருகிய - கரிய நிறமுடைய; வெப்பினாற் கருகிய என்ற குறிப்புமாம். தீயோர் - அத் தீத்தொழில் செய்தவர் என்பதும் குறிப்பு.

கைத்தூங்கு குண்டிகைநீர் தெளித்து - தெளிக்க - உரியபடி மந்திரித்த நீர் நிறைந்த குண்டிகை சுமந்து செல்லுதல் சமண குருமார் வழக்கு; முன்னர்த் தெளித்துப் பின்னர் மந்திரஞ் சொல்லி மேலும் தெளித்தல் மந்திரம் செய்யும் தொழில்முறை. ஆதலின் இருமுறை தெளித்துத் தெளிக்க என்றார். முன்னர்த் தெளித்த நீர் தழலின் மீது நெய் சொரிந்தது போலவும், பின்னர்த் தெளித்த நீர் அதன் மேலே பின்னும் தழலைத் தூவியது போலவும் இருந்த தென்றார்; முன்னரே அரசனுள்ளே பரவியது தீயேயாதலின் மீண்டும் தெளித்த நீரும் தழல்போல ஆயிற்று என்று இருவழியும் சமணர் செயலுக்குத் தீயினை உவமித்தார். "சந்தின் றழலைப் பனிநீ ராலவித்த தடவுங் கொடியீர்" (32) என்றதும், பிறவுங் காண்க.

போல - போலவதாயிடலால

இப்பாட்டு ஐயப்பாடான பாட்டுக்களுள் ஒன்று, இதுபற்றி என்து சேக்கிழார்—உகஅ பக்கம் பார்க்க. 716

வேறு

2615. பாண்டிமா தேவி யாரும் பயமெய்தி யமைச்சர் பாரம்
பூண்டவர் தம்மை நோக்கிப் "புகலியில் வந்து நம்மை
யாண்டுகொண் டவர்பாற் கங்கு லமணர்தாஞ் செய்த தீங்கு
மூண்டவா றினைய தாகி முடிந்ததோ?" வென்று கூற, எகஎ

2616. கொற்றவ னமைச்ச ராருங் குலச்சிறை யாருந் தாழ்ந்து
"மற்றிதன் கொடுமை யிந்த வஞ்சகர் மதிலகண் மூன்றுஞ்
செற்றவ ரன்பர் தம்பாற் செய்ததீங் கரசன் பாங்கு
முற்றிய; திவர்க டாக்கின் முதிர்வினீ தேயா" தென்பார், எகஅ

2617. இருதிறத் தவரு மன்ன னெதிர்பணிந் "திந்த வெப்பு
வருதிறம் புகலி வந்த வள்ளலார் மதுரை நண்ண
அருகர்கள் செய்த தீய வஞ்சித மதனால் வந்து
பெருகிய; திதற்குத் தீர்வு பிள்ளையா ரருளே" யென்று, எகக

2618. "காயமு மனமு மாசு கழுவுதல் செய்யார் செய்யும்
மாயமு மிந்த நோயை வளர்ப்பதே! வளர்வெண் டிங்கண்
மேயவே ணியர்பால் ஞானம் பெற்றவா விரும்பி நோக்கிற்
றீயவிப் பிணியே யன்றிப் பிறவியுந் தீரு" மென்றார். எஉ0

2615. (இ - ள்) பாண்டிமா தேவியாரும்...நோக்கி - பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசி யம்மையாரும் அமைச்ச பாரத்தை மேற்கொண்ட குலச்சிறையாரை நோக்கி; "புகலியில...முடிந்ததோ?" என்று கூற - சீகாழியில் அவதரித்து நம்மை ஆளாகக் கொண்ட பிள்ளையாரிடத்து இரவிலே அமணர்கள் செய்த தீங்குதானே இவ்வாறாக வந்து முடிந்ததோ?" என்று சொல்ல, எகஎ

2616. (இ - ள்) கொற்றவ னமைச்சராரும்...தாழ்ந்து - அது கேட்டு அரசரது அமைச்சராகிய குலச்சிறையாரும் அவரை வணங்கி; "மற்றிதன...ஆவது"

என்பார் - மற்று இந்த நோயின் கொடுமையானது, மதில்களையுடைய மூன்று புரங்களையும் எரித்தவருடைய அன்பரிடத்து இந்த வஞ்சகர்களாகிய அமணர்கள் செய்த தீங்கு அரசனிடத்து வந்து நிரம்பியது ; இதனை இவ்வமணர்கள் தீர்க்க முயன்றால் அது மேலும் பெருகி முடுகுவதேயாகும் '' என்று சொல்வாராகி, எகஅ

2617. (இ - ள்) இரு திறத்தவரும் . எதிர் பணிந்து - இரண்டு திறமுடையவர்களும் அரசனெதிரிற் பணிந்து ; இந்த வெப்பு...பெருகியது - இந்த வெப்பு நோய் வரும் திறமாவது சீகாழிப் பதியில் வந்த வள்ளலாராகிய பிள்ளையார் மதுரையின்கண் வந்து பொருந்த அது கண்டு அமணர்கள் செய்த தீமையாகிய அநுசிதச் செயலால் விளைந்து பெருகியது ; இதற்குத் தீர்வு பிள்ளையார் அருளே என்று - இதற்குத் தீர்வு செய்ய வல்லது பிள்ளையாரது அருளேயாம் என்று எடுத்துக் கூறி, எகக

2618. (இ - ள்) காயமும் வளர்ப்பதே - உடம்பிலும் மனத்திலும் பொருந்திய மாசு கழுவாத சமணர்கள் இனிச் செய்யும் மாயத்திறங்களும் இந்த நோயினை வளர்ப்பதேயன்றிக் குறைத்தல் செய்யா ; வளர்வெண் திங்கள் . தீரும் என்றார் - வளரும் வெண்மதி பொருந்திய சடையினையுடைய இறைவர்பால் ஞானம்பெற்ற அப்பிள்ளையார் விரும்பி நோக்கினாராகில் தீய இந்தப் பிணியேயன்றிப் பிறவி நோயும் தீரும் என்று சொன்னார்கள் எஉ0

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2615. (வி - ரை) பய்மெய்தி - தமது கணவர் கருத்தொழிந்து உரை மறந்து கிடந்த நிலையும், உணர்வும் உயிரும் ஒழிவதற்கு ஒருப்பட்டு ஒதுங்கிய நிலையும், வெப்புக் குறையாது மேலும் எழுந்து உயிரையும் உருக்குவதாகிய நிலையும், இது சிவனடியார் பாற்செய்த அபசாரத்தினால் விளைந்த நிலையுங் கண்டு, மேல் எவ்வணம் முடிவதாகுமோ என்றஞ்சினார் அம்மையார்.

அமைச்சர்பாரம் நோக்கி - அமைச்சர் பாரம் பூண்டவர் தம்மை - குலச்சிறையாரை, அமைச்சராதலின் அவரை நோக்கி என்க. அமைச்சுத் திறம் மூன்று காலமும் உணர்ந்து அரசுக்கு வரும் தீமைகளை எல்லாம் போக்கும் ஆற்றலும் கடமையுமுடையதாதலின் அத்தன்மையோரே இங்கு வேண்டுவனவற்றை அறியவும், இயற்றவும் தக்கவர் என்பது கருத்து ; அக்கடமை மிகப் பெரிதும் அரிதுமாகிய தொன்று என்பார் பாரம் என்றார் ; பூண்டவர் - மேற்கொண்டவர். " தமக்கன்பு பட்டவர் பாரமும் பூண்பர் '' (அரசுகள் - அரநெறி 2 இந்தளம்).

புகலியில் வந்து - வந்தல் - அவதரித்தல் ; அங்கு நின்றும் இங்கு அருளாற் போந்து என்பதுமாம், " இங்குநம் மில்லங்கள் தோறு மெழுந்தருளி '' (திருவெம் - திருவா). ஆண்டு கொண்டவர் - ஆட்கொண்ட செயல் முற்றுப்பெற்ற தென்பார் இறந்த காலத்தாற் கூறினார்.

கந்தல் ..முடிந்ததோ ? - இது அம்மையார் கொண்ட ஐயப்பாடு ; முன்னர்த் " தீங்கிது கடைக்கால் வருவ தெப்படியாம் ?'' என்று ஐயங் கொண்டனர் ; இங்கு " அத்தீங்குதான் இனியதாகி முடிந்ததோ ?'' என்று மேலும் அதனையே தொடர்ந்து கொண்டனர், முடிந்ததோ ? - அத் தீங்கின் விளைவு இதனுடன் முடிந்ததோ ? இன்னும் மேலும் விளையும் குறையுண்டோ ? ; ஆகி - " பாண்டியற்காகவே '' என்று விடுத்துப் போல் ஆக்கத்திற் கேதுவாகி என்று குறிப்புமுடன் நின்றது ; இனைதல் - வருந்துதல் என்ற குறிப்புமாம்.

பூண்டவாறு - தீ மூளும் தன்மை என்பதும் கருத்து.

அமணர்கள்—என்பதும் பாடம்.

2616. (வி - ரை) கோற்றவ னமைச்சனாராம் குலச்சிறையார் - அமைச்சுத் திறத்தின் நிலைபற்றி விடையளிக்கின்றார் என்று மேலும் கூறுதல் காண்க.

மற்றிதன் கொடுமை முற்றியது - இது அம்மையார் வினவிய ஐயத்துக்கு அமைச்சனார் துணிந்த விடை கூறியது.

வஞ்சகர் - செய்த தீங்கு - அரசன் பாங்கு முற்றியது...முடிந்ததோ? என்ற வினாவுக்கு இனி அரசன் பாங்கு வரக்கடவ தொன்று மின்று - என்று கூறியபடி; அரசன் பாங்கு முற்றிய தென்றமையால், அமணர் பாங்கில் முற்றாது பெரிதும் பின்னர் வர எஞ்சியுள்ளது என்றதும் குறிப்பு. செய்தது ஈங்கு - என்று பிரித்து, ஈங்கு - பாண்டியனிடம் என்றலுமாம்.

இவர்கள் தீர்க்கின் முதிர்வதேயாவது - மேல் விளைவதாகிய வருங்கால நிகழ்ச்சியை அமைச்சுத் திறத்தால் ஓர்ந்து சொல்லியது; தீர்க்கின் - தீர்வு தேட முயன்றால்; அவர்கள் அவ்வாறு முயல்வது கருதல்ளவையால் தெரிந்தாராதலின் அதனால் தீராது மேலும் நோய் மிகச் செயல்வதேயாகி முடியும் அதனை எடுத்துக்காட்டியபடி; மேல் (2661) உரைப்பது பார்க்க; இவ்வாறு துணிந்தமை நோய்க்குக் காரணமாய் நின்ற பொருளே பின்னரும் உடலுடன் சேர்ந்தால் நோயினை மிகச் செய்யும் என்ற மருத்துநூற்றுணிபும், உலக நூற்றுணிபும் பற்றி எனக் ஒப்புமுறை மருத்துவமென்று (Homeopathy) ஒன்று உளதேயெனின் அது வினை பற்றியனவற்றுக் கேலாமை யுணர்க.

தீர்க்கின் - அரசன்பால் தமது செல்வாக்கினால் தாமே முந்திக்கொண்டு தீர்க்க முற்பட்டு முயல்வாராகளென்று அறிந்து கூறியது அமைச்சுத்திறன்.

முதிர்வதே - மூண்டு பெருகும் நிலையடைவதே.

மதில்கள் மூன்றும் செற்றவரன்பர் - ஆண்டவனது தன்மை அடியார்களிடம் விளங்குமாதலின் அம்முறையால் இவ்வன்பரும் பகைவர்களைச்செற்று நீக்குவார் என்பது குறிக்க இத்தன்மையாற் கூறினார். 718

2617. (வி - ரை) இருதிறத்தவர் - இத்திறத்தில் நின்ற இருவரும், அம்மையாரும் அமைச்சனாரும்,

மன்னனோதிர் - மன்னவன் முன்பு - மன்னவன் கருத்தொழிந்து உரை மறந்து கிடந்தனனாதலின் (2611) மன்னவனைப் பணிந்து என்னாது எதிர் என்றார். ஆயின் பணிதல் எற்றுக்கெனின் மரபுபற்றி எனக; அற்றேல் அஃதாக; கருத்தொழிந்து கிடந்தவன்பால் அறிவுறுத்தல் எவ்வாறு நிகழுமெனின், அது மேல்வரும் (2619) பாட்டில் கூறுவது காண்க.

இருதிறத்தவர் - அம்மையார் சைவத்திறம் பற்றியேயன்றிக், கணவன் என்ற தன்மையானும் ஈண்டு ஆவன செய்தற் கடப்பாடுடையராதலின், சைவத் திறமும் அமைச்சுரிமையும் பூண்ட அமைச்சரினும் திறமுடையார் என்று குறிக்க, இருவர் என்னாது இருதிறத்தவர் என்றார்.

"இந்த வெப்பு...அருளே" என்றதும் மேல் "காயமும்...தீரும்" என்பதும் இருதிறத்தவரும் மன்னனுக்கு உரைத்தவை.

வந்திறம் - வந்து புகுந்த விதம், அதனால் வந்து - அது காரணமாக - அதன் மூலமாக - விளைந்தது; இது நோயின் மூலமாம், பெருந்தகல் - மூளுதல்; பெருகிய தன்மைகள் முன் (2609 - 2610 - 2611) பாட்டுக்களில் உரைக்கப்பட்டன.

வள்ளலார் - வள்ளற்றன்மை. பாண்டி நாட்டவர்க்கருளும் பொருட்டுத் தாமே மதுரை நண்ணியருளியமையாலும், அமணர்கள் தீக்கொளுவிய போதும் செம்மையிற

திறம்பி வேறு முனிவு கொள்ளாது, அரசனையும் நாட்டவரையும் ஆட்கொண்டு திருத்தியருளும் கருணையே திருவுள்ளம் கொண்டு "பையவே சென்று...ஆகவே" என்று ஆசி புரிந்தமையாலும், மேல்வருவனவற்றாலும் உணரப்படுதலை உட்கொண்டு கூறியது.

**மதுரை நண்ண** - ஆலவாயின் முதற் பெயர்; "மதுரைத் தொன்னகர் வந்தணை கின்றார்" (2528) என்றதனைத் தொடர்ந்து கூறியவாறு காண்க. "மதுரையின் புறத்து" (2544); "மதுரை தோன்றுதலும்" (2559); மதுரை என்ற பெயர் போந்த வரலாற்றில் அறியப்படுமாறு போல இங்குப் பிள்ளையாரால் புனிதமாக்கப்படும் நகரமாம் என்ற குறிப்பு,

**தீய அநுசிதம் அதனால்** - தீமையை வாக்கினாலும் சொல்லலாகாது என்ற மரபு பற்றிக் கூறியது; தீய - தீமை உடைகொண்ட என்ற குறிப்பும் காண்க.

**இதற்குத் தீர்வு பிள்ளையார் அருளே** - முன்னர் இதன் கொடுமை என்றதனால் நோயினையும்; தீய அநுசிதம் என்றதனால் நோய் மூலத்தையும், கூறியவாறே, தீர்வு என்றதனால் "அது தணிக்கும் வா"யினையறிவித்தபடி; "வாய்ப்பச் செயல்" என்றதனை வரும் பாட்டுக்களிற் கூறுதல் காண்க. "நோய்நாடி நோய்முதல் நாடியது தீர்க்கும், வாய்நாடி வாய்ப்பச் செயல்" (குறள்); என்று - என்று சொல்லி, என்று - என்றார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

அநகர்கள்-எதிர்பணிந் தெய்த - இரவு செய்த அநுசிதம் - என்பனவும் பாடம்.

2618. (வி - ரை) **காயமும் மனமும் மாசு கழுவுதல் செய்யார்** - அமணர்; **காயம் கழுவாமை** பிராணிகள் சாம் என்று உடல் குளியாதிருக்கும் சமணரது வழக்குக் குறித்தது; "கழுவாவுடலம்" (ஆளு - பிள் - திருவந் - 28); **மனமாசு கழுவாமை** - மனம் தூய்மை செய்யாது வஞ்சனை நிறைதல்.

**செய்யும் மாயம்** - தாம் செய்த வஞ்சத் தீச்செயலினையும், அதனால் இது விளைந்ததென்றதனையும் வெளிப்படுத்தாது ஒன்று மறியாதார் போன்று நடித்து நோய் தீர்க்க முயலும் வஞ்சம்; மாயம் - பாசாங்கு - மறைவு - என்ற பொருளில் வந்தது.

**வளர்ப்பதே** - தணிப்பதன்றி வளர்ப்பதனையே செய்யும், ஏகாரம் பிரிநிலை. செய்யும் (ஆகும்) என்பது தொக்கு நின்றது.

**வளர் வெண்திங்கள் மேயவேணியர்பால் ஞானம் பெற்றவர்** - இறந்துபட நின்ற மதியினை வளர்வித்த இறைவன்பால் பெற்ற ஞானம் ஆதலின் அந்நிலையினின்ற அரசனையும் உய்விக்க வல்லது என்பது குறிப்பு; பால்ஞானம் - பாலின் வழிபெற்ற என்ற சரிதக் குறிப்பும் தரநின்றது.

**விரும்பி நோக்கப்...பிணிதீரும்** - விரும்பி நோக்க - "இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு, நோய்நோக்கொன் றந்நோய் மருந்து" (குறள்) என்புழிப் போலக் கொள்க; பாண்டியற்காகவே என்ற மறக்கருணை நோக்கால் வந்த நோய், விரும்பி நோக்கும் அறக்கருணை நோக்கினால் தீரும் என்பது;

**விரும்பி நோக்கிற் - பிறவியும் தீரும்** என்றது பார்த்த பார்வையால் மலநீக்கம் செய்து முத்தி சாதனம் தரும் பரமசாரியராதல் குறிக்கப்பட்டது; "சிரபுரத் தலைவர் தீண்டி - நீறு பூசப்பெற்று - முதல்வனையறியுந் தன்மை, துன்னினன் வினைகளோர்த்துத் தலையென நிற்ற லாலே" (2717) என்றும், "மீன்வற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி" (2757) என்றும் வரும் தீக்கைமுறைக் குறிப்புக்கள் காண்க. "மன்ற

பாண்டியன் கேட்பக் கிளக்கு மெய்ஞ்ஞானம் " (இருபா - 2) என்ற ஞானசாத்திரமும் காண்க.

பிறவியும் தீரும் - தீராத பிறவியும் என உம்மை சிறப்பும்மை, எச்சவும்மையு மாம். மேல் தீக்கையின் விளைவாகிய சரிதக் குறிப்பும் காண்க.

விரைந்து நோக்க - என்பதும் பாடம். 720

2619. மீனவன் செவியி னூடு மெய்யுணா வளிப்போர் கூற
ஞானசம் பந்த ரென்னு நாமமந் திரமுஞ் செல்ல,
ஆனபோ தயர்வு தன்னை யகன்றிட, வமண ராகும்
மானமில் லவரைப் பார்த்து மாறமொன் றுரைக்க லுற்றான்; ௭௨௧

2620. மன்னவ னவரை நோக்கி, " மற்றிவர் செய்கை யெல்லாம்
இன்னவா றெய்து நோய்க்கே யேதுவா யின "வென் றெண்ணி,
" மன்னிய சைவ நீதி மாமறைச் சிறுவர் வந்தால்
அன்னவ ரருளா லிந்நோ யகலுமே லறிவேன் " னென்றான்; ௭௨௨

2621. என்றுமுன் கூறிப் பின்னும் " யானுற்ற பிணியைத் தீர்த்து
வென்றவர் பக்கஞ் சேர்வன், விரகுண்டே லழையு " மென்ன,
அன்றவ ருவகை பொங்கி யார்வத்தா லணையை நூக்கிச்
சென்றநீர் வெள்ளம் போலுங் காதல்வெள் ளத்திற் செல்வார்; ௭௨௩

2622. பாயுடைப் பாதகத் தோர் திருமடப் பாங்கு செய்த
தீவினைத் தொழிலை நோக்கி யுள்ளழி திருவுள் ளத்தான்
மேயவத் துயர நீங்க விருப்புறு விரைவி னோடு
நாயகப் பிள்ளை யார்தந் நற்பதம் பணிவா ராகி, ௭௨௪

2623. மன்னவ னிடும்பை தீர மற்றவன் பணிமேற் கொண்டே
யன்னமென் னடையி னாரு மணிமணிச் சிவிகை யேறி
மின்னிடை மடவார் சூழ வேற்படை யமைச்ச ரும்
முன்னணைந் தேகச் சண்பை முதல்வனார் மடத்தைச் சார்ந்தார். ௭௨௫

2619. (இ - ள்) மீனவன் கூற - பாண்டியனது காதிலே மெய்யுணர்வு அளிப்பவர்களாகிய அம்மையாரும் அமைச்சனாரும் முன் கூறியவாறு சொல்ல, ஞான சம்பந்தர் என்று...செல்ல - அதனுள் திருஞானசம்பந்தர் என்னும் திருப்பெயராகிய திருமந்திரமும் உடன் செல்ல, ஆன...அகன்றிட - அப்போது அயர்ச்சி தன்னை நீங்குதலால், அமணராகும் உரைக்கலுற்றான் - அமணர்கள் என்னும் மானமில்லாத மாக்களைப் பார்த்து ஒருசெய்தி சொல்லலாயினன், ௭௨௧

2620. (இ - ள்) மன்னவன்...எண்ணி - " மற்று இவர்களது செய்கைகள் எல்லாம் இப்படிப் பொருந்திய நோயினுக்கே காரணமா யிருந்தன " என்று மனத் துட் கருதி; மன்னவன் அவரை நோக்கி - அரசன் அவர்களைப் பார்த்து, மன்னிய என்றான் - நிலைபெற்ற சைவ நீதியின் பெருமறைச் சிறுவராகிய பிள்ளையார் இங்கு வந்தால் அவருடைய அருளினாலே இந்த நோய் நீங்குமாகில் அறிவேன் " என்று கூறினான், ௭௨௨

2621. (இ - ள்) என்று முன்கூறிப் பின்னும் - இவ்வாறு முன்னே சொல்லி மேலும்; யானுற்ற...என்ன - (தேவியாரையும் அமைச்சரையும் நோக்கி) நான் பொருந்திய இந்த நோயினைத் தீர்த்து வெற்றி கொள்பவர் பக்கத்துச் சேர்வேன்; உபாயம் இருந்தால் அழையுங்கள் என்று சொல்ல; அன்று அவர்...செல்வார் - அன்று அவர்கள் அணையை உடைத்துச்சென்ற வெள்ளம்போலப் பேரன்பு என்னும் வெள்ளத்தினுடன் செல்வாராகி, எஉரு

2622. (இ - ள்) பாயுடை ..நீங்க - பாயுடையினைக்கொண்ட அமணர்களாகிய பாதகர்கள் திருமடத்தின் பக்கத்திற் செய்த தீவினை செய்கை நினைந்து உள்ளழியும் திருவுள்ளத்திற் பொருந்திய அந்தத்துன்பம் நீங்கும்படி; விருப்புறு ..பணிவாராகி - விருப்பம் மிக்க விரைவினுடனே தமது நாயகராகிய பிள்ளையாரது நல்ல திருவடிகளைப் பணிவார்களாய்; எஉஉ

2623. (இ - ள்) மன்னவன்...மேற்கொண்டே - அரசனது துன்பம் தீரும் பொருட்டு மற்று அவனது பணியினை மேற் கொண்டவர்களாகியே; அன்னமென் நடையினாரும் - அன்னம் போன்ற மெல்லிய நடையினையுடைய மங்கையர்க்கரசியாரும்; அணிமணி...ஏக - அழகிய மணிகளிழைத்த சிவிகையின் மேல் ஏறிக்கொண்டு, மின் போன்ற இடையினையுடைய காவற் பெண்கள் சூழ்ந்து வரவும், வேற்படையினையுடைய அமைச்சனாராகிய குலச்சிறையாரும் முன்பு அணைந்து செல்லவும்; (இவ்வண்ணமாகச்) சண்பை முதல்வனார் மடத்தைச் சார்ந்தார் - சீகாழித் தலைவராகிய பிள்ளையாரது திருமடத்தைச் சார்ந்தனர். எஉங

ஐந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிவுகொண்டுரைக்க நின்றன.

2619. (வி - ரை) செவியினூடு கூற - கருத்தொழிந்து உரை மறந்து கிடந்த நிலைமையிலிருந்தானாதலின் அவனது செவியின் பக்கத்துச் சென்று பொருந்தும்படி கூற வேண்டியதாயிற்று, இது ஆசாரியன் மந்திரோபதேசம் செய்யு முறையுமாம் என்பது ஆகமவிதிகளானுணரப்படும்; இக்குறிப்புப்பற்றியே மேல் "நாமமந்திர முஞ் செல்ல" என்றார்; "அஞ்செழுத்தி னாமத்தான் காண்" (தேவா) என்றபடி திருவைந்தெழுத்தும் இறைவன் திருநாமமேயாம்,

மெய் உணர்வெய்ப்போர் - அம்மையாரும் அமைச்சனாரும். இதுவரையும் அரசன் செவியுறக் கூறிய வினையோர் அன்னரல்லாது தீயுணர்வே புகட்டி அவனைத் தீ நெறிக்கட் செலுத்தினார் என்பது குறிப்பு.

ஞான சம்பந்தர் என்னும் நாமமந்திரம் - ஞான சம்பந்தர் - என்பது ஒற்று நீக்க ஐந்தெழுத்தே யாதலின் மந்திரம் எனப்பட்டது, நாவுக்கரசு என்றதும் இவ்வாறே அப்பூதியாரை உய்வித்த நாம மந்திரமாயினமையும் காண்க; "தான் செய்யுந் தன்மைகளு, மாக்கியிடு மன்பாக கரன்" (களிற்றுப்படி); மந்திரம்-நினைப்போனைக் காப்பது என்பது பொருள்; அத்தொழிலைச் செய்யும் சொல்லுக்கு ஆகு பெயராய் வந்தது; இங்கு இத் திருநாமம் மந்திரமே யான தன்மை, "கருத்தொ ழிந்துரை மறந்து" (2611) கிடந்த அரசன் இம் மந்திரம் செவிவாயாக உட்புகுதலும் (ஆனபோது) அயாவு தன்னை யகன்று, மேல், உண்மை நெறி நிற்கத்தலைப்பட்டு உரைக்கத் தொடங்குகின்ற தனாலறியப்படும்.

மந்திரமும் செல்ல - உம்மை - முன் (2618)ல் கூறிய செய்தி சொல்லியதனோடு மந்திரமும் உடசெல்ல என்று இறந்தது தழுவிய எச்சவும்மை. செல்ல - அச்செய்திகூறிய வாக்கியத்தினுடனே மந்திரமும் உட்புக எனக. சொல்ல - என்பது பாடமாயின் அதற்குத்தக உரைத்துக் கொள்க.

**ஆனபோது அகன்றிட** - அப்போதே அயர்ச்சி நீங்கிட ; மந்திரசத்தி தொழிற் பட்டவுடன் பயன் தந்த விரைவு குறித்தது; **போது** - தேற்றேகாரம் தொக்கது ; மின்சார வேகம் (Elctric Speed) என்பது முதலாகத் தாமறியளவையில் சடசத்தியின் வேகம் பற்றி வழங்குவர் நவீனர் ; ஆனால் இது சிவசிற்சத்தியின் றொழிற்பாடாதலின் நினைவின் மாத்திரையின் பயன் விளைப்பதாம்.

**அகன்றிட** - அகன்றிடலான ; கருத்தொழிந் துரைமறந்த நிலையில் நோய் முற்றிக் கிடந்த அரசன், நோய் நீங்காத நிலையிலிருந்தேயும் கருதவும் உரைக்கவும் வல்லனாயினதன் காரணங் கூறியபடி.

**மான மில்லவர்** - அமணர் ; வஞ்சனையும் பொய்யும் நிறைந்தும் அது புறத்துத் தோன்றுவகை கரந்து ஒழுகுதலும், தமது செயல் பயன்றராமை கண்டும் திருந்தாது மேலும் அவ்வாறே செயல் செய்தலும் முதலாயின உடையவர்.

**மாற்றம் ஒன்று** - **மாற்றம்** - சொல் ; "வள்ளலார் நாமம் சென்று தன் செவி நிறைத்தலும் செயிர்த்து" கூறிய (2584) முன்னை நிலையினின்று மாறுதல் பெற்ற என்ற குறிப்புப்பட இங்கு **மாற்றம்** என்றார் முன் அமணர் கூறியதும் பிள்ளையாரது **நாமம்** தான் ; இங்கு அமைச்சர் - அமைச்சனார் (2584) கூறியதும் அத்திரு நாமமேயாம் ; ஆயின் இங்கு அதனையே **மெய்யுணர் வளிப்போர்** கூறியவாற்றால் அது முன்னை நிலையினை மாற்றியது எனக் ; **ஒன்று** - ஒப்பற்றது என்றும், பலபடியாகச் செல்லாது இனி ஒரே படியாய்ச் செல்வது என்றும் கொள்ள நின்றது. 721

2620. **(வி - ரை)** அவரை நோக்கி...எண்ணி - கண்டு நோக்கி - என்றது கருத்தினுள் வைத்து ஊன்றி அளந்து என்ற அக நோக்கத்தினை உணர்த்தி நின்றது. முன்பாட்டில் **பார்த்து** என்றது புறப்பார்வை யாதலிற் கூறியது கூறலன்மை யுணர்க; மேல் **எண்ணி** என்றதும் காண்க, **எண்ணி** - துணிந்து, "எண்ணித் துணிக கருமம்" (குறள்); **மற்ற இவர்** என்றது மற்றவர் என நின்றது. **எண்ணி** - அமணர்பால் வைத்த மதிப்புப்பற்றிச் சீர்தூக்கும் நிலையுமாம்

**இன்னவாறு எய்தும் நோய்க்கே ஏது** - காரண காரிய முறைமையாலே செய்கையான விளைந்தது இந்நோய் என்று வழியளவையான் அறிந்ததாம். ஏகாரம் இன்றியமையாத இயைபு குறித்தலின் பிரிநிலை.

**மன்னிய...அறிவேன்** - இஃது அரசன் எண்ணி மனத்துட் டுணிந்த முடிபினைப் புறத்திற் கூறியபடி ; **அறிவேன்** - எனது துணிவு உண்மையோ அன்றோ என்று அறிவேன். முன் உடன்பாட்டுக் கருதலளவையால் துணிந்த உண்மையினை, மேலும் எதிர் மறைக் கருதலளவையால் நிச்சயிப்பேன் என்றதாம் ; மற்றவர் செய்கையால் நோய் வந்தது என்பதனை அஃது அருளால் அகலுமாயின் முடிந்த முடிபாகத் துணிவேன் என்றது கருத்து.

**மன்னிய சைவ நீதி** - சமணம் போல இடையில் வாராததும் இடையில் அழிவு பெறாததுமாகி நிலைபெற்ற என்பது மன்னன் மனத்துள் அப்போது எழுந்த உணர்வு பற்றிக் கூறியது.

**மாமறைச் சிறுவர் - அன்னவரருளால்** - "மற்ற மாமறை மைந்தன்" (2585) என்று முன் கூறியதனை ஈண்டு ஒப்பு நோக்குக.

"ஆணவத்தோ டத்துவித மானபடி" என்றாற்போல முன் அமணர் வயமாய் நின்ற அரசனுக்கு அமணராகிய பொய்யுணர் வளிப்போர் தன்செவி நிறைக்கக் கூறியதும் வள்ளலார் நாமமேயாயினும் அது செயிர்ப்பு (கோபம்) விளையக் காரணமாய **மற்ற மைந்தன்** என ஒருமையிற் கூறச்செய்தது; ஈண்டு அந் நாமமந்திரமே வாயிலாக

மெய்யுணர் வளிப்பபோர் தன்செவியுனூடு கூறுதலின் அது மெய்யுணர்வே விளைத்தது. மறைச் சிறுவர் - அன்னவர் என்றும், அருளால் என்றும் பன்மையின் ஓதச் செய்தது; அதுவேயுமன்றி அமணர் சொல்லுக்கெல்லாம் அடிமைப் பட்டுக் கிடந்த அவனது மன மயக்கத்தை நீக்கி நன்மைதீமை நாடியறியும் ஞானத்தையும் கொடுத்தது.

அகலுமேல் அறிவேன் - என்றது, அம்மையாரையும், குலச்சிறையாரையும் நோக்கிக் கூறியது; இஃது அவர்கள் "ஞானம் பெற்றவர் விரும்பி நோக்கில் - பிணியே யன்றிப் பிறவியும் தீரும்" என்று தனது செவியினூடு கூறியதற்கு விடையாகவும், தான் மனத்துள் அமணர்களைப் பற்றி எண்ணிய கருத்தளவைத் துணிபுக்கு முடிபு காட்டுவதாயும் அமைந்தது காண்க.

இந்நோயகலுமேல் - அவர் பிணி தீர்த்தலேயன்றிப் பிறவி தீர்க்கவும் வல்லார் என்பதனையும் அறிவேன் என்ற குறிப்புமாம், அகலுமேல் - நீங்குமாயின்.

மாமறைத் தூலவர் - என்பதும் பாடம். 722

2621. (வி - ரை) என்று முன்கூறிப் பின்னும் அழையும் என்ன-முன் கூறியது தனது உள்ளத்துணிபினை அம்மையார் அமைச்சனார் கூறியதற்கு விடை கூறு முகத்தால் அறிவித்தது; மேற் பின்னும் அழையும் என்றது அவர்கட்கு உத்தரவுதந்து ஆணையிட்டது; அரசன் கருத்தொழிந் துரைமறந்து கிடந்த நிலையில் தீர்வுதேடுதற்கு அவனது ஆணையின்றியே செயல் செய்தல் அமைச்சர் கடனன்றோ? எனின்: முழுதும் உணர்ச்சி நீங்கிய நிலையன்றாதலானும், (2590) அமணர் சார்பு பற்றிக் கண்டுமுட்டு கேட்டுமுட்டு என்ற நிலையில் அரசன் நின்றமையானும் அது கூடாது எனக.

வென்றவர் பக்கம் சேர்வன் - என்றது இன்னமும் ஒரு படித்தான துணிவு பெறுனும் அமணர் சார்பின் பற்றுவிடத் தொடங்கிய நிலையில் இருசார்பும் பற்றாது பொதுப்பட நின்ற மனநிலை குறித்தது.

விரகு உண்டேல் - மாமறைச் சிறுவரை அழைத்தற்கு உரிய உபாயம் உண்டானால், விரகு - உபாயம்; வழி. விரகு - உபாயம் வேண்டப்படுவ தென்னையோ?, எனின், அரசர் செல்வத்தைப் பொருட் படுத்தி வரும் நிலையினரல்ல ராதலின் தான் சென்று கண்டு வேண்டாது அழைக்க வருவரோ என்றும், சிவநிந்தை பேசுவோர் முதலிய "பிணக்கரைக் காணுக் கண்வாய் பேசாப் பேய்க ளோடே" என்றபடியுள்ள நிலையில் இங்கு வருவரோ என்றும், அவர்பால் அனுசிதம் செய்த இவர்கள் சூழலினுள் இங்கு வருவரோ என்றும் இன்னோரன்ன ஐயப்பாடுகளால் அழைத்து வருதற்கு உபாயம் தேடவேண்டியதாம் என்பது அரசன் கருத்து; பின்னர், அழைத்த பின்னரும் பிள்ளையார் நேரே அங்கு அரசனிடம் எழுந்தருளிவாராது ஆலவாயப் பெருமானிடம் சென்று வேண்டித் திருவுள்ளம் மகிழ்ந்த பின்பே எழுந்தருளிய நிகழ்ச்சியும் கருதுக.

அழையும் - அழைத்து வாருங்கள் என்று "ஞானம் பெற்றவர் விரும்பி நோக்கில் பிணியே யன்றிப் பிறவியும் தீரும்" என்று உறுதி கூறிய மாதேவியாரையும் அமைச்சனாரையும் நோக்கிக் கூறியது.

அன்று அவர் உவகைபொங்கி - அன்றுவரை முன் பல காலமும் ஏங்கி அரசனையும் நாட்டினையும் சிவநெறிப்படுத்தும் கவலை கொண்டதனால் உவகையின்றியிருந்த அவர்கள், அன்று உவகை பெற்றன ராதலின் அது திருவருள் பெற வருங்கால நன்மையினை நோக்கி மேன் மேலும் பொங்குவதாயிற்று.

ஆர்வத்தால்...காதல் வெள்ளத்தில் செல்வார் - உவகை பொங்கியதால் அது ஆர்வமாக விளைய, அது மேலும் முதிர்வதனால் காதல் வெள்ளமாயிற்று; உவகை - ஆர்வம் - காதல். ஒன்றற்கொன்று மீதூரும் அன்பு நிலைகள்.

**அணையை நூக்கிச் சென்ற நீர் வெள்ளம் போலும் காதல் வெள்ளம் - நூக்குதல்** - அழித்தல், தகர்த்தல், அணை - தன்னியல்பின் ஓடுகின்ற நீரினைத் தடுத்து நிறுத்தித் தேங்கும்படி செய்தல் போல, இங்கு அரசன் சைவ நெறியிற் பிறழ்ந்திருந்த செயல் இவர்களது இயல்பிற் செல்லும் சைவ ஒழுக்கத்தினைத் தடுத்து அதனைப் "புகைமற செழியன் முன்பு புலப்படா வகைகொண் டியக்கச்" செய்தது (2502) என்றது குறிப்பு. இங்கு அரசன் நிலைமாறி விட்டமையானும் "அழையும்" மென்று தானே ஆணை தந்தமையானும் அந்த அணை அழிவு பட்டது எனக.

**நூக்கி** - எனக்கூறியது இவர்களது அன்பின் முதிர்ச்சியால் நிகழ்ந்த செயல்களின் விளைவுகளாலே அத்தடை உடைபட்டமை குறித்தது.

**காதல் வெள்ளம்** - மிகுதிப்பாடு; வெள்ளத்திற் செல்லுதல் என்றது வெள்ளத்தின் வயமாய்ச் சென்றமை குறித்தது.

**செல்வார்** - செல்வாராகி; செல்வாராகிப் - பணிவாராகிச் - சார்ந்தார் என மேல் வரும் பாட்டுக்களுடன் முடிக்க. 723

2622. (வி - ரை) **பாயுடைப் பாதகர்கள்** - பாயுடையினை உடைய அமணர், **பாயுடை** - பாயாகிய உடை.

**பாங்கு** - பக்கத்தில்; **தீவினைத் தொழில்** - தீமையுடைய செய்கை. தீயினை செய்த தொழில் என்ற குறிப்புமாம்.

**உள்ளழிதல்** - உள்ளுடைதல்; உள்ளிட மெல்லாம் நைதல்

**உள்ளழி திருவுள்ளத்தால் மேய அத்துயரம்** - அமணரது தீச்செயல் மனத்தை வருத்த அது துயரம் விளைத்து அகம் புறமாகிய கருவிகளை யெல்லாம் துன்ப வசமாக்கியலைக்கின்ற நிலை. "நாம் மாய்வதே" என மனமயங்கிப (2606), பதைத்த (2608) நிலை முன் சொல்லப்பட்டது.

**துயரம் நீங்க விருப்புறு விரைவு** - தீச்செயலால் விளைந்த விளைவினை நீக்கத்தீர்வு அகப்படக் கண்டபோது அதனைப் பெறுதலின் நிகழும் மனவேகம். "உண்ணின்றை விருப்பினேடும்" (826) என்றது காண்க.

**நாயகப் பிள்ளையார்** - நாயகன் - நியமஞ் செய்து நடத்துபவன்; தலைவன்.

**நற்பதம் பணிவாராகி** - "இதற்குத் தீர்வு பிள்ளையா ரருளே" (2617) என்று துணிந்தாராதலின், அவ்வருள் பெறுதல் அவர் பதம் பணிந்தாலன்றிப் பெற இயலாமையின், அச்செயலின் முற்பட்டுச் சென்றார் என்பதாம் 724

2623 (வி - ரை) **மன்னவன் இடும்பை தீர மற்று அவன் பணி மேற்கொண்டே** - "அத்துயரம் நீங்கப் - பணிவாராகி" (2622) என்று முன் உரைத்த ஆசிரியர், இங்கு "மன்னவ னிடும்பை தீர" என்றருளிய தென்னை? எனின்; முன் சொன்னமை தமது பொருட்டும், இங்குக் கூறியது மன்னவன் பொருட்டும் என இரு பொருளும் கருதிச் சென்றனர் எனக, இதற்கு முன் இவர்கள் செயல் யாவும் இவ்விரு பொருளுங் கருதிச் செய்தனவே யாயினும் (2557 - 2570 - முதலியவை பார்க்க). அவை யெல்லாம் அரசனது மன வொற்றுமையினையும் இல்லாது தாமே செய்தன; இங்கு அவனுடைய உடம்பாடும் கூடிய தென்ற வேற்றுமை குறித்தற்கு இவ்வாறு பிரித்து வெவ்வேறு பாட்டுக்களிற் கூறினார்; மற்று அவன் பணிமேற் கொண்டே என்று மேலுங் கூறிய கருத்துமிது; **மற்று** - இதுகாறும் மாறுபட்டு நின்றவன் என்ற குறிப்புடன் நின்றது. சிறப்புப் பற்றித் தமது துயரந்தீர்தலை முன் வைத்தார், **மேற்கொள்ளுதல்** - தாங்குதல்; மேலாக ஏற்றல்; மேலே புறப்பார்வையிற் காணும்படி

தாமருதல என்ற குறிப்பும தருவது காணக; ஏகாரம் - பிரிநிலை; பணியே மேற் கொண்டு என்று பிரித்துக் கூட்டியுரைத்தலுமாம.

அவன் பணி - அவனது ஆணை; பணி - பணித்து ஆணையிட்ட செயல்; "அழையும்" என்ற ஆணை (2621).

மடவார் சூழ - அமைச்சனாரும் முன் அணைந்து ஏகச் சிவிகை ஏறிச் சார்ந்தார் - என்க; சிவிகை ஏறிச செல்லுதலும மடவார் சூழச செல்லுதலும, அந்நாள் உயர் குலத் தோரினும வழங்கும வழக்கு; இவை அரசியாரின உயர்ந்த உலக நிலைக்கும பொருந்துவன; இங்கு மடவார் என்றது படையேந்திய காவற் பெண்டிரும் ஏவற் பெண்டிராகிய தோழியருமாம; அமைச்சனார் பரியேறிச் சென்றமை மேற்பாட்டிற் காணக.

வேற்படை அமைச்சனார் - படை - அமைச்சர் நிலையில அவர் தாங்கும் உடைவாள் முதலியவை; படை - படைஞர் என்றலுமாம

நடையினரும் - முன்னர்ப் பிள்ளையாரை எதிர் கொள்ளுதற்கு அமைச்சனாரைப் பணித்தமையே போல (2543), ஈண்டும அவர் ஒருவரே பணி மேற்கொண்டு சென்றழைத்தல சாலுமாயினும அவ்வாறமையாது அன்புமேலீட்டினால் அம்மையாரும சென்றனர் என உம்மை எச்சப பொருள் தந்து நின்றது.

நடையினரும் ..சார்ந்தார் - அமைச்சனார் முன் ஏகப், பின் மடவார் சூழச் சிவிகை ஏறிச் சார்ந்தார் என இம்முறையே சென்றாராயினும், நடையினரை முன்னர் வைத்துக் கூறிய அமைதி மனத்தின் விரைவினால் அவர் முற்சென்றனர் என்ற குறிப்புப் பெறநின்றது.

மடத்தில்—என்பதும் பாடம். 725

2624\. திருமடஞ் சாரச் சென்று, சேயரிக் கண்ணி னார்முன்
வரிபரி யிழிந்து நின்ற வமைச்சனார், "வந்த பான்மை
சிரபுரப் பிள்ளை யார்க்கு விண்ணப்பஞ் செய்வீர்" ரென்னப்,
பரிசனத் தவரும் புக்குப் பதமறிந் துணர்த்து கின்றார்; எ உ சு

2625\. "பாண்டிமா தேவி யாரும் பரிவுடை யமைச்ச னாரு
மீண்டுவந் தணைந்தா" ரென்று விண்ணப்பஞ் செய்யச், சண்பை
யாண்டகை யாரு "மீண்ட வழையு"மென் றருளிச் செய்ய,
மீண்டுபோந் தழைக்கப் புக்கார் விரைவுறும் விருப்பி னோடும். எ உ எ

2624\. (இ - ள்) திருமடம் சாரச் சென்று - திருமடத்தினைச் சார அணுகிச் சென்ற பின்; சேயரிக் கண்ணினார் . என்ன - செவ்வரி படர்ந்த கண்களையுடைய அம்மையாரின் முன்னே இவர்ந்து வந்த குதிரையினின்றும் கீழே இறங்கி நின்ற அமைச்சனார், "நாங்கள் வந்த தன்மையினைச் சீகாழிப் பிள்ளையார்பால விண்ணப்பஞ் செய்வீர்களாக" என்று பரிசனத்தவர்களிடம் கூற; பரிசனத்தவரும்...உணர்த்துகின்றார் - அந்தப் பரிசனங்களும் உள்ளே சென்று விண்ணப்பிக்க ஏற்ற செவ்வியினை அறிந்து சொல்வார்களாகி, எ உ சு

2625\. (இ - ள்) பாண்டிமாதேவியாரும...விண்ணப்பஞ் செய்ய - பாண்டிமா தேவியாராகிய அம்மையாரும், அன்புடைய அமைச்சனாராகிய குலச்சிறையாரும மீண்டு வந்து அணைந்துள்ளார்கள் என்று விண்ணப்பம் செய்ய; சண்பை...அருளிச் செய்ய - அது கேட்ட சீகாழி ஆண்டகையாரும "அவர்களை உள்ளே இங்கு அழையுங்கள்" என்று அருளிச் செயயவே; மீண்டு போந்து அழைக்க - அப்பரிசனங்கள் மீண்டு

சென்று அவ்வாறே அவர்களை வருமபடி அழைக்க; விரைவுறும் விருப்பினோடும் புக்கார் - விரைவுடைய விருப்பத்தினோடும் உள்ளே புகுந்தனர். எஉஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2624. (வி - ரை) சார - அண்மையாக; சேயரிக் கண்ணினார் - மங்கையர்க்கரசியார்; செவ்வரி படர்ந்திருத்தல் மாதர் கண்ணழகியலபுகளுள் ஒன்று.

**முன்வரு பரியிழிந்து நின்ற** - அமைச்சனார் பரியின்மிசை ஏறி வந்தமை இங்குக் கூறினர்; அம்மையார் சிவிகை யேறிப் போந்த பின்னர்த் தாம் பரியேறி, முன்னர் வந்து அம்மையார் திருமடத்தினைச் சாருமுன் வந்து பரியினின்றிழிந்து நின்றனர் என்ற மரபு குறிக்கொள்க. இக்கருத்தினைப் புலப்படுத்தவே அம்மையார் "சிவிகை யேறி" என்று முன் பாட்டில் இதனைக் கூறாது இப்பாட்டிற் கூறியது மென்க; இழிந்து நின்ற என்ற கருத்தும் மரபும் காண்க.

"வந்த.. செய்வீர்" என்ன - இத் திருமடத்தின் வாயில் காப்போராகிய பரிசனங்களை நோக்கி அமைச்சனார் கூறியது; "பரிசனத்தவரை நோக்கி" என்பது மேற் கூறுதலின் உய்த்துணர வைத்தார்; சொற் சுருங்கக் கூறும் அழகும் அமைதியும் பற்றி; மேல்வரும் பாட்டினும் (அவரும்) "மீண்டு போந்து அழைக்க" என்ற விடத்தும் இவ்வாறே கூறுதல் காண்க. இவை அமையத்துக் கேற்றபடி செயல் நிகழ்ந்த விரைவும் குறித்து நின்றன. முன் அறிவிப்புச் செய்ய விண்ணப்பித்து விடை பெற்று உட் செல்லுதல் அந்நாளிலும் பெரியோரிடத்தும், அரச சமுகத்தும், இவை போன்ற உயர் விடங்களிலும் வழக்கு என்பது முன்னரும் கூறப்பட்டது. 2507 - 2508 - 2509 முதலியவை பார்க்க.

**பதம் அறிந்து** இனமுகச் செவ்வியினை அறிந்து; இஃது செயதியறிவிக்கும் ஏவலாளர் தலைவரின் செவ்வி நோக்கி யறிவித்தல் வேண்டு மென்னும் தகுதி குறித்தது; "நகைமுகச் செவ்வி நோக்கி" (2509) என்று முன்கூறியதும் காண்க.

**உணர்த்துகின்றார்** - பிள்ளையார் - உணருமபடி கூறுவாராகி; முற்றெச்சம்; நிகழ்காலத்தாற் கூறியது காலவழுவமைதி; உணர்த்துகின்றாராகி - விண்ணப்பஞ் செய்ய என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

**விண்ணப்பஞ் செய்வீர்** என்று கூறிய மரபு காண்க; மேலும் "விண்ணப்பஞ் செய்ய" என்றதும் காண்க. பிள்ளையாரது சந்நிதானத்தை இறைவரது திருமுன்பே யாகக் கருதிய நிலை காட்டப்பட்டது.

**வந்த பான்மை** - மாதேவியாராகிய அம்மையாரும் தாமும் வந்துள்ள தன்மையினை; வந்த என்பதில் எழுவாயும், பான்மை என்றதில் இரண்டனுருபும் தொக்கன. இவையும் விரைவுக் குறிப்பு. **செய்தி** என்னாது **பான்மை** (தன்மை) என்று பண்பு குறித்துக் கூறினர்; குறிப்பினால் நிகழ்ச்சிகளை உணர்ந்து கூறும் அறிவுடைய பரிசனங்கள் என்பது குறித்தற்கு. 726

2625. (வி - ரை) "**பாண்டிமாதேவியாரும்...அணைந்தார்**" என்று - இது பரிசனங்கள் பிள்ளையாரிடம் விண்ணப்பித்தது. மாதேவியாரை முன் வைத்துக் கூறியது சிறப்பும் அமைதியும் பற்றி; **பரிவுடை அமைச்சனார்** - இவர்கள் வந்த காரணம் மாதேவியாரைப் பொறுத்ததாம் என்றும், அதனை நிறைவாக்கும் வகையில் அவர்கள் பால் பரிவு காரணமாக அமைச்சனார் உடன் அணைந்தனர் என்றும் குறிப்புப் பெறக் கூறிய நயம் காண்க; அடைமொழி யின்றித் தேவியாரையும், பரிவுடை என்று

அமைச்சனாரையும் கூறியது இக்கருத்து; பரிவு - அரசர் காரியத்தினை நிறைவாக்க மேற்கொண்ட அன்பு.

**மீண்டு வந்து அணைந்தார்** - முன் வந்ததேயன்றி மீண்டும் என எச்சவும்மை தொக்கது; முன்னை நாள் வந்து அணைந்து வரவேற்றுத் திருமடமுங்காட்டி எழுந்தருளச் செய்தவர்கள் மீண்டும் வந்தனர். எனவே இதனுள் விரைவுக் குறிப்புப்பட்டதொரு விசிட்டச் செய்தி யுண்டென்பது பெறவைத்த நயம் காண்க; முன்னை நாள் வந்தணைந்தமை அமணர்களால் விளைந்த பொதுத் தீமைபற்றி நிகழ்ந்தது; இப்போது மீண்டும் வந்தணைந்தமை அதனுடன் அமணரால் முன்னிரவில் நேர்ந்த சிறப்புத் தீமையின் விளைவு பற்றி நிகழ்ந்தது என்ற தொடர்ச்சிக் குறிப்பும் காண்க, இரவின் நிகழ்ச்சியும் விளைவு குறித்த பிள்ளையாரது அருளாணையும் பரிசனங்கள் அறிவார்களாகலான் என்பது, இவ்வாறன்றி உம்மை விரிக்காமல் மீண்டு வந்து என்றே கொண்டு முன்வந்தவாறன்றி அமணர்களது தீமையினின்று அரசன் மீட்சிபெறும் நிலையால் அவனது உடன்பாடு கொண்டு வந்து என்றுரைத்தலுமாம். **மீண்டு** - மீண்டமையால் என்று காரணக் குறிப்புப்பட உரைத்துக் கொள்க.

**ஆண்டகையாரும்** - இனியன அல்லவற்றையும் இனிதாகக் கொண்டு நல்கும் அருட்டன்மையும் பேராற்றலும் ஆண்டகைமை எனப்படும்.

**ஈண்ட** - இங்கு வரும்படி; **ஈண்டுதல்** - அணிமையாதல்; விரைய என்றலுமாம். "ஈண்டநீ வருவாயோலம்" (432).

**மீண்டு போந்து அழைக்க - விண்ணப்பஞ் செய்ய** - இரண்டு செயலுக்கும் பரிசனங்கள் என்ற எழுவாய் முன் பாட்டினின்றும் கூட்டுக.

**விண்ணப்பித்தல்** பிள்ளையார் திருமுன்பும், **அழைத்தல்** அம்மையார் அமைச்சனார் திருமுன்பும் நிகழ்ந்தன.

**விரைவுறும் விருப்பினோடும் புக்கார்** - என்க, விருப்பத்தினும் விரைவு முந்திய தென்பது குறிப்பு, **விரைவு**-அமணர் செய்த தீச்செயலினுக்குத் தாம் மனமிக அழிந்த நிலையை விண்ணப்பிக்கவும், அத்தீச் செயலின் உட்படாத பிள்ளையாரது திருமேனி நலம் கண்டு மகிழவும் போந்தது; அதன் பின்னராக, அதுபற்றி வந்த மன்னவன் நோயினையும் தங்கள் இடும்பையினையும் விண்ணப்பிக்கவும் விரைவு உண்டாயது என்க. இஃது அவர்கள் பிள்ளையாரைக் கண்டு வீழ்ந்து நெடிதுயிர்த்து உரைகுழறிப் பிள்ளையாரது திருவடி பற்றிக் கிடந்த நிலை (2628) யினும், பிள்ளையார் வினவியதற்குக் கூறிய விடை (2630—2831) யினும் அறியப்படும்.

**மிக்கார் - புக்கார்** - மிக்கார்களாகிய அன்னமென் னடையி னாரும் அமைச்சனாரும் திருமடத்தினுள்ளே பிள்ளையாரது திருமுன்பு புகுந்தனர். **மிக்கார்** - வினைபெயர்; **புக்கார்** என்பதனை வினையெச்சமாக்கி மேல்வரும் பாட்டில் **கண்டார்கள்** என்றதனோடு முடித்தலுமாம். 727

வேறு

2626. ஞானத்தின் றிருவுருவை, நான்மறையின் றனித்துணையை,
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்,
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தி னெழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள். ௭௨௮

(இ - ள்) ஞானத்தின் திருவுருவை - சிவஞானத்தினாலமைந்த திருவுருவத்தினை யுடையவரை; நான மறையின் தனித் துணையை - நான்மறைகளினுடைய ஒப்பற்ற துணையாயினாரை; வானத்தின்...கொழுந்தை - வானத்தின் மேலேயன்றி மண்ணுலகத் தின்கண் வளர்மதியின் கொழுந்துபோல்வாரை, தேனக்க...எழுபிறப்பை - தேன் ஊறி வழிகின்ற கொன்றை மலரைச் சூடிய சிவந்த சடையினையுடைய சிவபெருமானது சீகாழித் தொடுத்தெடுத்த திசைக்கின்ற கானத்தின் எழு பிறப்புக் கிடமாகிய பிள்ளை யாரை; கண்களிப்பக் கண்டார்கள் - கண்கள் களிப்படையும்படி கண்டார்கள்.

(வி - ரை) அம்மையாரும் அமைச்சனாரும் ஆளுடைய பிள்ளையாரை அன்று கண்ட காட்சியினை அவர்கள் மனத்துட்கொண்ட அவ்வாறே எடுத்துக் காட்டுவது இத் திருப்பாட்டு இவ்விருவரும் தனித் தனியும், ஒருசேரயும், முன்னை நாளும் கண்டனர்: அவ்வாறு கண்டகில வேறு; இடையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளாலும் அவைபற்றி இவர்கள் மனத்தினுள் எழுந்த பலவேறு வகைப்பட்ட எண்ணங்களாலும் இங்குக் கண்ட நிலை வேறு என்பதனை விளக்கமுறக் கூறியபடி

இனி, முன்கண்ட காட்சி பொதுக் காட்சியும், இங்குக் கண்டது சிறப்புக் காட்சியுமாம்; சிறப்பு, பொதுவினைத் தன்னுள்ளடக்கி விரித்துக் காட்டுமாதலின் முன்னர் விரிக்காது ஈண்டு விரித்தார் என்க.

அன்றியும், இங்குக் கண்ட இந்நிலையே எழுந்தருளிய பிள்ளையார் - திருவால வாயப்பெருமானைக் கும்பிட்டு, அவரது திருவருட் குறிப்பு நோக்கம்பெற்று அரச னுக்குக் காட்சியருளியும் நோய் நீக்கியும் ஞானோபதேசம் செய்தும் ஆட்கொண் டருளுவாராதலானும், இந்நிலையே மதுரைமா நகரினுள்ள பலதிறப்பட்ட மக்களும் அமணர்களும் கண்டு தத்தமது தரத்திற் கேற்றவாறு பயன்பெறக் காட்சியருளுவா ராகலானும், இவ்வாறு இவர்கள் கண்டதுபற்றி விரித்தருளினார் என்றலுமாம். "எழுச்சியிற் காட்சிபெற்றார், நண்ணிய சமயம் வேறு நம்மனரெனினும் முன்பு, பண்ணிய தவங்களென்கொல் பஞ்சவன் றஞ்ச மேவிப், புண்ணிய மூர்த்தி வந்து மதுரையிற் புகுந்த வென்றார்" (2642) என்றும், "தென்னனொடு வாழ்வந் தணைந்தார்" (2700) என்றும், "சிவிகைமேற் பிள்ளை யார்தாம் வருமழ கென்னே யென்பார் வாழ்ந்தன கண்கள்" (2701) என்றும், மேலும் வருவன காண்க

அன்றியும், ஞானோபதேசத்தால் அரசனையும் நாட்டினரையும் உய்விக்கக் குரு மூர்த்தியாக எழுந்தருளும் எல்லையாதலின் இவ்வாறு கண்டார்கள் என்ற கருத்தும் காண்க. இவ்வாறே, பின்னரும், திருநல்லூர்ப் பெருமணத்தில் புண்ணியத் திருமணத் தின் வந்தார் யாவருக்கும் ஞான மெய்ச்சொல் உபதேசித்து முத்திப் பெரும்பேறு தந்தருள வந்தருளும் காட்சியினையும் விரித்துக் கூறுதல் காண்க இங்குப் பிள்ளையார் ஞானதேசிகராய் எழுந்தருளுகின்றார் என்பது பாண்டியனுக்கிய சற்சீடனுக்கு, "வினைக ளொத்துத் தலையென நிற்றலாலே" "ஆலவாயிலான் பால தாயினார் ஞால மாளவரே" (தேவா) என்பது முதலாகப் பாவனு தீக்கை, சட்சுஷீ தீக்கை, பரிச தீக்கை, வாசக தீக்கை முதலியன செய்து, வைகைக் கரையையே தீக்கை மண்டபமாக வைத்து, "முன்னைவல் வினையு நீங்கி முதல்வனை யறியும் தன்மை" தந்து திருவடியும் சூட்டும் வரலாறுகள் இங்குக் கருத்தத் தக்கன; இக்கருத்தே பற்றி "மன்ற பாண்டியன் கேட் பக்கினக்கு மெய்ஞ்ஞானத்தின், ஆட்பா லவர்க்கருளென்பதை யறியே" (இருபா விருபஃது - 2) என்றார் ஞானநூ லுடையாரும். இவை ஞானோபதேசமாதல் மேல் ஆசிரியர் தாமே ஆண்டு விரித்தருளுமாற்றால் உணர்க. இதுவரை வரலாறு கூறிவந்த

யாப்பினை மாற்றி, நாற்சீரடிக் கொச்சகக் கலிப்பாவினால் மேல் வரலாறு கூறத் தொடங்கும் ஆசிரியரது திருவுள்ளக் கருத்தும் கருதுக.

இனி, ஞானத்தின் திருவுரு முதலாகச் சீர்தொடுக்கும் கானத்தின் எழுபிறப்பு என்றது வரை நான்கும் முறையே ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் சைவ நன்னெறி நான்கினையும் குறிப்பினாலுணர்த்தி நிற்கும் வகையான இந்நான்கு நெறிகளால் இறைவனையடையும் வழிகாட்டியருளும் மெய்க் குரவராகிய பிள்ளையார் நின்ற நிலை குறித்தலும் காண்க.

இன்னும் இவ்வாறு பற்பல அரிய குறிப்புக்களும் பெறவைத்த இத்திருப்பாட்டினருமை அனுபவமுடைய தேசிகர்வாயக் கேட்டறிந்து சிந்திக்கத் தக்கது.

**ஞானத்தின் திருவுரு** - சிவஞானத்தினாலமைந்த திருமேனியை உடையவர். "உணர்வரிய மெய்ஞ்ஞானம்" (1967) தாமுணர்ந்த தவமுதல்வராதலின் ஏனையோர் போலப் பசுபாச ஞானங்களாலன்றிப் பதிஞானத்தானே திருவடியை எப்போதும் மறவாதுகண்டு கொண்டிருப்பவர் என்பது. அத் திருவடிநிறைவாகிய மெய்ஞ்ஞானத்தாலே பிள்ளையார் முற்று முணர்ந்த நிலையுடையார் என்பது முன்னர் "வேயுறு தோளி பங்கன்" என்ற பதிகக் கருத்தானும், அதனுடன் "புத்தரோ டமணை வாதி லழிவிக்கு மண்ணல் திருநீறு செம்மை திடமே" என்றதனாற் சிறப்பாகவும், மற்றும் பலவாற்றானும் விளக்கமாகவும் அறியக் கிடத்தல் காண்க; இவ்வாறு காலங்கடந்த முற்றுணர்வாகிய சிவமெய்ஞ்ஞானமே எல்லாமவல்ல பேராற்றலுடையதாதலின் அது தமது வலிய இடர்களை யெல்லாம் நீக்கி யுய்விக்க வல்லதாம் என்பதும் குறிப்பாகக் கண்டனர் என்க. "உணர்வரிய, காலங்கள் செல்லாத காத லுடனிருத்தி, காலங்கண் மூன்றினையுங் கண்டு" (களிற்றுப்படி. 31). இக்கருத்தினைப் பின்னர் 'ஓடுநீ ருடன்செ லாது நிற்குமோ வோலை யென்பார், நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்ல ரென்பார்" (2705) என்று பிள்ளையாரை இவ்வாறே காட்சிபெற்ற ஆலவாய் மக்களது வாக்கில் வைத்து ஆசிரியர் உணர்த்துதலும், "ஏகமாஞ் சிவமெய்ஞ்ஞான மிசைந்தவர்" (புரா - 1237); "அலகின்மெய்ஞ் ஞானத் தெல்லை யடைவுறுங் குறியால்" (புரா - 1243), "ஞானமெய்ந் நெறிதான் நமச்சிவா யச்சொ லாமென்று ..அருள்செய்து" (ஷெ 1247); என்பனவற்றாலுணர்த்துதலுமாம் "போதநிலை முடிந்தவழி" (ஷெ 1253) என்று முடித்துக் காட்டுதலும் காண்க

**நான் மறையின் தனித் துணையை** - சிவஞானத்தின் துணையானே மறை வழக்கினையும் சைவ நெறியினையும் சமணர் வஞ்சனையினின்றும் மீட்டு ஓங்கத் துணை செய்தலே ஈண்டு இவர்கள் வேண்டியதாதலின், அதனை அடுத்து நான்மறையின் தனித்துணையாகக் கண்டனர்: "வேத வேள்வியை நிந்தனை செய்துழல், ஆத மில்லி யமண்", "மறைவ ழக்கமிலாத மாபாவிகள்" "ஓதி யோத்தறி யாவமண்" "அழல் தோம்பு மருமறை யோர்திறம் விழல தென்னு மருகர்" "நீற்று மேனிய ராயினர் மேலுற்ற, காற்றுக்கொள்ளவு நில்லாவமணர்" முதலாக வரும் திருவாக்குக்கள் காண்க. **தனி** - ஒப்பற்ற; தனிமுதலாகிய; துணை செய்வாரைத் துணை என்று உபசரித்தார்.

**வானத்தின் மிசையன்றி மண்ணில் வளர் மதிக்கொழுந்தை** - **மிசையன்றி** - மிசை உள்ள மதிபோலன்றி; அதற்குள்ள குறைபாடுகள் இன்றி என்பது குறிப்பு. **மேல் வளர்** என்ற குறிப்புமது, வானமதியானது வளர்தல் குறைதல் உள்ளது - இது என்றும் வளர்வது; அது பௌதிக ஒளி தருவது - இது ஞான ஒளி தருவது என்பன

முதலாகக் கண்டு கொள்க. கொழுந்து - இளமையும், இனி 16 கலையளவும் நிறைந்து மாறாத நிறைவு பெறும் தன்மையும் குறிப்பு. மதிதரும் ஊன ஒளிபோலன்றி ஞானவொளியும் ஞானவெற்றியும் ஈண்டுக் கருதப்பட்டன. மேல் "நிலத்திடை வானினின்று நீளிருள் நீங்க வந்த கலைசெழுந் திங்கள் போலுங் கவுணியர்" (2649) என்பதனாலும் காண்க. "கண்ணிறை கதிரே கலைவளர் மதியே" (1990) என்று தொடக்கத்திற் றொண்டர்களும் தோணிபுரத்தவர்களும் கண்டு துதித்ததும் இக்குறிப்பு.

**தேன்நக்க...எழுபிறப்பை** - தேன்நக்க - தேன் துளித்து விரிகின்ற; நக்குதல் - விரிதல் என்னும் பொருட்டு; அரும்பு விரியும் பருவம் நகைத்தல் போன்றிருத்தலின் இவ்வாறு கூறுதல் வழக்கு, இறைவரது திருமேனியில் அணியப் பெறுதலால் மகிழ்கின்ற என்பதும் குறிப்பு; "**முருந்துயிர்க்க நகைக்கும் பதத்தினுடன் பறித்த அலர்கின் மலர்கள்**" (1023); "நல்ல கமழ்முகை யலரும் வேலைத், தெய்வ நாயகர்க்குச் சாத்தும் திருப்பள்ளித் தாமம்" (559); என்றவை காண்க. திருமுடியிற் சாத்தும் போது தேன்பிலிற்ற மலர்கின்ற என்பது.

**கொன்றை - சடையார் - சீர் - தொடுக்கும் கானம்** - சடையார் சீர் என்றதனால் சடை சிவபெருமானுக்கே யுரிய சிறப்புடையாளமாதலும், கொன்றையும் அவ்வாறே குறித்தலானும், சிவபெருமானது சிறப்புக்களையே யன்றிப் பிறிதொன்றும் பேசாத தொடையின் கானம் என்றவாறாயிற்று; "மதுமலர் நற்கொன்றையா னடியலாற் பேணா" "கைச்சிறு மறியவன் கழலலாற் பேணுகை கருதேன்" (தேவாரம்) என்ற றிருவாக்குக்கள் காண்க. **கொன்றை மலர்** - பிரணவத்தினைக் குறித்தலால் "ஓமெனும் பதத்தில் வேத மாதியுற்பவிக்கு மாலவித்தினுக்கு மாபோல" என்றபடி பிள்ளையார் தொடுத்த கானம் வேதமேயாதல் குறிக்கப்பட்டது.

**கானத்தின் எழுபிறப்பு** - கானம் எழுவகைப்பட்ட சுரங்களிற் பிறந்து விரிவதாதலின் எழுபிறப்பு என்றார்; "பாலையீரேழு கோத்த பண்" என்பது முதலாக அறியப்படும் முதற் பண்களும், இவற்றின் **வழிப்பிறந்து** வருவனவாகிய பண்களின் பேதங்களும் அடக்கக் **கானத்தின் எழுபிறப்பு** என்றார்; இவற்றை மேளகர்த்தா இராகங்கள் என்றும் சன்னிய ராகங்கள் என்றும் கூறுதல் நவீன வழக்கு; **கானம்** என்பது **காந்தர்வ வேதம்** என உபவேதங்கள் நான்கனுள் வைத்து எண்ணப்படும் இது எல்லாக் கடவுளர்க்கும் உவகை வரச்செய்யும் என்ப, சிவனை யல்லாத பிறதெய்வங்களையும், மக்களையும், ஏனையுயிர்களையும் பாடி வரும் பாட்டுக்களுக்குப் பயன் பட்டுத் தான் பயன் பெறாது வருந்தித் தவங்கிடந்த **கானம்** என்ற தெய்வம் எழு பிறவியும் பிறந்து இறுதியில், "**கொன்றையா னடியலாற் பேணா**" வெம்பிரானாராய திருஞானசம்பந்த நாயனாரது திருவாக்கினின்றும் போந்த திருப்பதிகங்களுட் பொருந்தி உறுதிபெற்ற தென்ற குறிப்பும், **கானத்தினெழுபிறப்பு** என்றதனாலும், எழு என்றதனாலும், "**கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்**" என்று உடம்பொடு புணர்த்தியோதிய குறிப்பினாலும், பெறப்படும், எழு - இங்குத் தீவினை தீர்த்து எழுவிக்கும் என்ற குறிப்புமாம், சீர்வினையே என்ற பிரிநிலை யேகாரம் தொக்கது.

**தேனக்க மலர்க் கொன்றை** என்றும் - **தேனக்க கானம்** - என்றும் இரட்டுற மொழிந்துகொள்க; **எழுபிறப்புக் கானத்தின்**-என்று மாற்றியுரைக்கவும் நின்றது.

**கண்களிப்பக் கண்டார்கள்** - **கண்களிப்ப** - **களித்தல்** - உயிரின் உணர்வு நிகழ்ச்சி கண்ணாகிய புற இந்திரியமும் மனமும் ஆகிய இவற்றுடன் ஆன்மா இயைந்து கண்ட காட்சியினால் உயிர் களிப்பையடைந்தது எனக, "அவற்றி

ஞன ஆனமா ஒற்றிதனக காணினலலது அவை ஒனறையும விடயியலா ஆகலான, ஐயுணாவுகள் ஆனமாவா லுணரும '' என்ற சிவஞானபோதம 5ம சூததிரக கருததுங் காண்க. ஈணடுக கண எனற பொறியினவழி உயிரில விளைநத நிகழசசியாகிய களிப பிளைக் கணணின நிகழசசியாக உபசரிததாா.

இத்திருப்பாட்டின் தொகைக்குறிப்பாவது : செஙகணவிடையாா திருமலாககை நீணடபெறற சிறவஞா, அஙகண மாயை யாக்கையின்மே லளவின் றயாநத சிவ மயமாயச - சூழ்ந்தவொளியிற றோனறிஞா (1260) எனறு சேயஞூாப பிளளை யாரைக கணடதபோல யாவாகருந தநதைதா யெனுமவாிப படியளிததா, ராவதனு லாஞுடைய பிளளையாரும, தாவிறனிச சிவஞான சமபநதருமாய்க கலைஞானமு முணாவரிய மெயஞுஞானமு முணாநதாரையும, அசசிவஞானத்தின் திருவுருவேயாகக கணடாாகள எனறும, அசசிவஞானமே இறைவனருளிய மறைகளின விளககததுககு இடையூறு நோநதபோது அது வராமற காககும தனித் துணையாவதெனறும, மணணில வநது பிறவி வெபபந தீர்ததுத தணணிய ஞான வொளி செயயும மதிக்கொழுநது போனறாா இவரெனறும ; இவா அவவாறு துணை செயதருளுதல சடையாரது சீாகளையே பரவும திருவாககுககளால ஆவதாதலின அநதக் காரணத்தின் எழுபிறப்பு இததிருவுருவமே எனறும இவவாறு கருத்துட் கொணடு களிததனா எனபதாம. இது அவா நிலைககேறறவாறு அருளும திருவருட் குறிபபணாததக கணட காட்சி எனக.

ஞானத்தின்றிருவுரு - ஞானததினுலமைநத திருவுரு, மூனறும வேறறுமையுருபும பொருளும உடனறொகக வழிச, சாாியைகள தொகாது வநதன.

உணமையுணாநது பிழமபுணரபபடாத பணபுகளுள கணணீரும மூலைபபாலும போல் பிளளையாரது திருமேனியும மெயஞுானததினுலமைநதது எனபதாம. அருண மெய்ஞ்ஞானம பெறறாருடைய மாயேயவுடலம பகல விளக்குப்போல அவவருண ஞானததுள மறைநது அதனுளடஙகித தான புலபபடாது நிறகுமாதலின பிளளையாா திருமேனி ஞானததினுலமைநததேயாம முனனரும "பேருணாவிற பொலிகினற பிளளையாா" எனறதும ஈணடுணரறபாறறு. 728

2627. கணடபொழு தமணகோடியோர் செய்தகடுந் தொழினினைந்தே
மண்டியகண ணருவிநீர் பாயமலாக் கைகுவிததுப்
புணடரிகச் சேவடிககீழ்ப பொருநதநில முறவிழுநதா
கொண்டகுறிப் போடுநேடி துயிர்த்தழிந்த கோள்கையராய், எஉசு

2628. உரைகுழறி மெய்ந்நடுங்கி யொன்றுமறிந திலராகித
தரையினமிசைப் புரணடயர்ந்து சரணகம லம்பறறிக்
கரையில்கவ லைக்கடற்கோர் கரைபற்றி னர்போன்று
வினரவுறுமெய் யன்பினுல் விடாதொழிவாா தமைக்கண்டு, எகூ0

2629. அருமறைவாழ் பூம்புகலி யண்ணலா ரடிபூண்ட
விருவரையுந திருககையா லெடுததருளித் தேறறிடவுந
தெருமந்து தெளியாதாா தமைநோக்கிச் சிறப்பருளித்
" திருவுடையீ ! ருங்களபாற் றீங்குளதோ ?" வெனவினவ, எகூக

2630 "வெஞ்சமணர் முன்செய்த வஞ்சனைக்கு மிகவழிந்தே
அஞ்சினோம்; திருமேனிக் கடாதென்றே யதுதீர்ந்தோம்;
வஞ்சகர்மற் றவர்செய்த தீத்தொழில்போய் மன்னவன்பால்
எஞ்சலிலாக் கொடுவெதுப்பா யெழுகின்ற" தெனத்தொழுதார். ௭௩௨

2631. "வெய்யதொழி லமண்குண்டர் விளைக்கவரும் வெதுப்பவர்தாஞ்
செய்யுமதி மாயைகளாற் றீராமைத் தீப்பிணியான்
மையலுறு மன்னவன்முன் மற்றவரை வென்றருளில்
உய்யுமெம துயிருமவ னுயிரு"மென வுரைத்தார்கள். ௭௩௩

2627. (இ - ள்) கண்டபொழுது...நினைந்தே - அவ்வாறு கண்டபோது அமணராகிய கொடியவர்கள் செய்த கொடிய தொழிலை நினைந்தே; மண்டிய கண் அருவி நீர்பாய - கண்களினின்றும் அருவிபோல மிகுந்த நீர் சொரிய; மலர்க்கை குவித்து - மலர் போன்ற கைகளைக் கூப்பி, புண்டரிக...வீழ்ந்தார் - (பிள்ளையாரது) தாமரை மலர்போன்ற சிவந்த திருவடிகளின்கீழ் பொருந்தும்படி நிலமுற வீழ்ந்து வணங்கினவர்களாய், கொண்ட கொள்கையராய் - உட்கொண்ட குறிப்பினுடனே பெருமூச்செறிந்து மனமழிந்த நிலையினர்களாய், ௭௨௯

2628. (இ - ள்) உரை குழறி அறிவழிந்தலராகி - மொழி தடுமாறி உடல் நடுங்கி மனம் கலங்கியதனால் ஒன்றும் அறிந்திலர்களாகி, தரையின் பற்றி - நிலத்தின் மேலே புரண்டு அயர்ச்சி அடைந்து பிள்ளையாரது திருவடித் தாமரைகளைப் பற்றிக்கொண்டு, கரையில...தன்மைக் கண்டு - எல்லையில்லாத கவலையாகிய கடலின் வீழ்ந்து அயர்வார்கள் அதினின்றும் ஏறுதற்கு உரியதொரு கரையினைப் பற்றிக் கொண்டவர்கள் போல விரைகின்ற மெய்யன்பு காரணமாக விடாமல் பற்றிக்கொண்ட படியே கிடந்த அவர்களைக் கண்டு, ௭௩௦

2629. (இ - ள்) அருமறைவாழ் பூம்புகலி அண்ணலார் - அரிய மறைகள் வாழ்வடையும் அழகிய சீகாழியில் வந்தருளிய அண்ணலாராகிய பிள்ளையார், அடி பூண்ட தன்மைநோக்கி - தமது திருவடிகளைப்பற்றிப் பூண்டுகொண்டு கிடந்த அவ்விருவரையும் தமது திருக்கையினால் எடுத்தருளித் தேற்றுதல் செய்யவும் மனஞ்சுழன்று தெளிவடையாமல் கலங்கி நின்ற அவர்களை நோக்கியருளி, சிறப்பருளி...என வினவ - சிறப்புச் செய்தருளித் "திருவுடையவர்களே! உங்களிடம் ஏதேனும் தீங்கு வந்துள்ளதோ?" என்று கேட்டருள, ௭௩௧

2630. (இ - ள்) வெஞ்சமணர்...அஞ்சினோம் - கொடிய சமணர்கள் முன்னே செய்த வஞ்சனைகளைப்பற்றி மிகவும் கலங்கி அச்சமடைந்தோம்; திருமேனிக்கு... அது தீர்ந்தோம் - திருமேனியினிடம் அவை ஒன்றும் தீங்குசெய்ய அடுக்காது என்று அறிந்து அவ்வச்சத்தினைத் தீர்ந்தோம், வஞ்சகர்...எனத் தொழுது - வஞ்சகர்களாகிய மற்று அவர்கள் செய்த தீத்தொழில்போய் அரசனிடம் அளவில்லாத கொடிய வெப்பு நோயாக எழுந்து நின்றது என்று சொல்லி வணங்கி, ௭௩௨

2631. (இ - ள்) வெய்யதொழில்...வெதுப்பு - கொடுந்தொழில் செய்யும் அமணர்களாகிய கீழ்மக்கள் செய்தவற்றால் விளைந்த வெப்புநோய், அவர்தாம்...... தீராமை - அவர் தாமே செய்யும் மதிகொண்ட மாயத்தீவுத் தொழில்களாலே தீராத

படியினாலே ; தீப்பிணியால் என்றுரைத்தார் - தீப்பிணியினாலே மயக்கமடைந்த மன்னவன் முன்பாக மற்றவர்களை வென்று அருளிச்செய்தால் எமது உயிரும் அம் மன்னவனது உயிரும் உய்தி பெறுவனவாகும் என்று சொன்னார்கள். ௭௩௩

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்கின்றன. பொருளின் தொடர்ச்சியும், செயலின் றொடர்ச்சியும், பிற அமைதிகளும் நோக்கி இவ்வாறுரைக்கப்பட்டது.

2627வது பாட்டினைக் கொள்கையராய - நிலமுற விழுந்தார் என்று கூட்டி முடித்தது, ஏனை நான்கும் வேறு முடிபாகக் கூட்டி உரைப்பினுமிழுக்கில்லை.

2627. (வி - ரை) கண்டபொழுது...நினைந்தே - கண்களிப்பக் கண்ட காட்சியானது இத்தகைய பிள்ளையாரபால் இத்தகைய கொடுந்தொழில் செய்து தீமை விளைத்தனரே என்ற எண்ணத்தை உடனே தோற்றுவித்தது ; அது தோற்றவே காட்சியிற்பெற்ற களிப்பினை உடனே அடியோடு மாற்றியதன்றி அதனினும் பன் மடங்கு அதிகமாகிய கவலையினையும் வருத்தத்தினையும் கடல்போல விளைத்தது , இது குறிக்கவே கண்டதனால் விளைந்த களிப்பினை ஒருபாட்டானும் அதனைத் தொடர்ந்து நிகழ்ந்த கவலையினை இரண்டு பாட்டுக்களானும் கூறிய கவிநயம் காண்க. கண்ட பொழுது - நினைந்தே என்றதனாற் களிப்பக்கண்ட காட்சியே மேல்நினைவுக்குக் காரணமாயிற்று என்று குறித்தார் ; கொடியோர் செய்த கடுந்தொழில் - செயல் செய்தாரும் கொடியார்; அவர் செய்த செயலும் மாபெருங் கொடுமையுடையது என்றபடி.

கண்ணீர் பாய்தல் - கைதுவித்து நிலமுற வீழ்தல் - நெடிது உயிர்த்தல் - அழிதல் - இவை மனத்துள் நிகழ்ந்த வருத்தம் கவலை முதலிய மிகுந்த துன்பங்களின் மெய்ப்பாடுகள்

கொண்ட குறிப்போடு - கொள்கையர் என்றவை இக்கருத்தை விளக்குவன. குறிப்பு - முன்கூறியபடி எழுந்த மனநிகழ்ச்சிகளின் தோற்றம் ; கொள்கை - கொள்ளப்பட்ட செயலுக்காகி வந்தது.

மண்டிய - நீர் என்று கூட்டுக. மண்டுதல் - மிகுதல்.

அருவி போன்றதனை அருவி என்றதுபசாரம்.

மலர்க்கை - உவமத்தொகை , மலர்க்கை என்றதற்கேற்பப் புண்டரீகச் சேவடி என்றார் ; திருவடியைத் தீண்டிப் பூண்டுகொள்ளும் தகுதியும் பண்பும் உடைய கைகள் என்றது குறிப்பு , மலர்க்கை - மலர்களை எந்திக் குவித்துத் தூவி வணங்கிப் பழகிய கைகள் என்ற குறிப்பும் காண்க. பொருந்த - என்ற குறிப்பும் காண்க.

அழிதல் - மனமுடைந்து நைதல். 729

2628. (வி - ரை) உரைகுழறுதல் - மெய் நடுங்குதல் - ஒன்றுமறிந்திலராதல்- தரையிற் புரளுதல் - அயர்தல் - இவையும் முன்பாட்டிற் கூறிய மெய்ப்பாடுகளின் தொடர்பால் ஒன்றன்மேலொன்றாய பரம்பரையின் முதிர்ந்து புறத்து நிகழும் மெய்ப்பாடுகள்.

ஒன்றுமறிந்திலர்-முன்னாகக் கண்டவுடன் களிப்பு வந்தது; அதனைத் தொடர்ந்து மேல் நினைவு வந்ததனால் வருத்தம் வந்தது ; இவை மாறி அவ்விரண்டு நிலையுமின்றி மனமழிதலால் ஒன்றுமறியா நிலை வந்தது.

**தரையின்மிசைப் புரளுதலும் அயர்தலும்** மிக்க துன்பத்தான் நிகழ்வனவாம் என்பது உலகத்தில் அனுபவங்களினும் காணலாம்.

**சரண கமலம் பற்றி** - முன் பாட்டில் **மலர்க்கை** என்றும், **புண்டரிகச் சேவடி** என்றும் கூறிய கருத்தையே தொடர்ந்து கூறிய நயம் காண்க.

**கரையில்...போன்று - கவலைக்கடல் -** கவலையாகிய கடல்; **மிகுதிபற்றிக் கடல்** என்றார்; **கவலைக்கடந்து** - கடலைக் கடந்தேறுதற்கு; **கரைபற்றுதல் -** கரையினைத் தலைப்படுதலால் அதனை நெகிழவிடாது பற்றிக்கொள்ளுதல். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்" என்றும், "தாள் சேர்ந்தார்க் கல்லால் மனக்கவலை மாற்றலரிது" என்றும் வரும் திருக்குறட் கருத்துக்களை நோக்குக.

**கரையில் கவலைக் கடலாவது -** பெருங் கவலைகளின் தொகுதி; இவை முன் 2593-2594ல் கூறிய அரசர்களின் குறிப்பினாலும், மேல் 2630-2631ல் கூறுவனவற்றாலும் உணரப்படும்; தம் தம் வாழ்வாக அழைக்க வந்த தெய்வமாகிய பிள்ளையார்பால் தம் கருத்துக்கு மாறாக அபசாரம் நிகழ்ந்துவிட்டமையும், அவர் அருளால் மன்னனையும் நாட்டினையும் உய்யச்செய்ய எண்ணியதற்கு மாறாக அடியார்பால் அபசாரப்படுதலால் அரசன் தீப்பிணியான் மயங்கிக் கிடந்தமையும், நாடு பாவப்பயன் பெற நின்றமையும், பிறவுமாம்.

**கரைபற்றினர் போன்று** - பயன்பற்றி வந்த உவமம்

**விரைவுறும் மெய்அன்பு - விரைதல்** - வேகமாகப் புறத்தோற்ற நிகழ்தல்; **விடாது ஒழிவார்** - பற்றுவிடாத நிலையினர்; **சரணம் பற்றியபடியே** கிடந்தனர் - என்க. ஒழி - துணிவுப்பொருள் விகுதி.

அறிந்திலர் தம்மை—என்பதும் பாடம் 730

2629. (வி - ரை) **அருமறைவாழ் - அண்ணலார்** என்று கூட்டுக. மறைவழக்கிறக்கு இழுக்கு வந்தபோது அதனை நீக்கி நிகழ்வித்தலின் மறைகள் வாழ்வடையும் என்றார்; மறைவாழ வந்த அண்ணலார் என்க; "வேதநெறி தழைத்தோங்க" (1899) "மறைவளர் திருவே" (1989) முதலியவை காண்க. மறையோர்களை மறையென்றுபசரித்ததாகக் கொண்டு அருமறையோர் வாழும் பூம்புகலி என்று கூட்டி உரைப்பினுமமையும்.

**அடிபூண்ட** - தமது திருவடிகளைப் பற்றிக்கொண்டு விடாதொழிந்த

**திருக்கையா லெடுத்தருளி-**வாக்கினு லருளுதலன்றித் திருக்கைகளால் எடுத்தருளுதல் விரைவுக்குறிப்பு முன் உரைத்தவையும் காண்க (2555 - 2569 - பார்க்க.)

**அடிபூண்ட இருவரையும் -** முன்னர்த் திருக்காப்புறத்தும், திருவாலவாயுடையார் கோயில் திருமுன்றிலிலுமாக இவருள் ஒவ்வொருவரே அவரது இரண்டு திருவடிகளையும் பற்றிக் கிடந்து திருக்கையால் எடுத்தருளப்பெற்றனர்; ஈண்டு இருவரும் ஒருங்கே அத்திருவடிகளைப் பற்றினராக ஒரே காலத்து இருவரும் எடுத்தருளப்பெற்றனர் என்பது குறிப்பு.

**எடுத்தருளி - எடுத்தல் -** கவலைக் கடலினின்றும் மேலே எடுத்தாற்போன்று மேலே எடுத்து என்ற குறிப்புந் தந்து நின்றது; "என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத்து", "இனித்தமுடைய எடுத்த பொற்பாதம்", "எடுக்கு மாக்கதை" என்பனவாதி யிடங்களிற்போல.

**தேற்றிடவும் தேறுமந்து தெளியாதார் · தேற்றிடுதல் -** உண்மை தெருட்டுதலால் மனந்தேறச் செய்தல்.

**தெருமந்து** - மனம் சுழன்று; தெருமருதலால் என்று காரணக் குறிப்புப்பட நின்றது; பிள்ளையார் தேற்றிடவும் தெளியாமைக்குக் காரணங் குறித்தவாறு.

**சிறப்பருளி** - சிறப்புடைய அருட்கண்ணோக்கம் செய்தருளி; **சிறப்பு** - அவர் வேண்டிய உயதிபெறும் தன்மையைக் கண்பார்வையின் மூலம் தருதல்.

**தீங்கு** - அருட்டிரு; திருவுடையீர்களாகிய உங்கள்பால்; ஏனையோர்பாற் சேறல் போல உங்களிடத்தும்; உங்கள்பாலினும் என்று சிறப்பும்மை தொக்கது.

**தீங்குளதோ?** - மெய்ப்பாடுகளினால் அறிய வந்தபடி ஏதேனும் தீங்கு உளதோ எனக. இங்குத் தீமையே நலம் விளைவதன் தொடக்கமாதலின் நலம் கேட்கும் குறிப்புடன் நின்றது; "தீங்குளவோ வெனவினவ" (1321) என்றவிடத்துரைத்த குறிப்புக்களை ஈண்டு வைத்துக் காண்க. 731

2630. (வி - ரை) இப்பாட்டினாலும் மேல்வரும் பாட்டினாலும் அவர்கள் தம் மனத்துள் ஒன்றன்மேலொன்றாக நிகழ்ந்த நினைவுகளை அவ்வாறே எடுத்துக் கூறுகின்றார்கள்.

**வெஞ்சமணர்...அஞ்சினோம்** - இது தீத்தொழில் விளைத்த செய்தியினைக் கேட்டவுடன் முதலில் எழுந்த நினைவு.

**முன்மிக அழிந்தோம்** - எனக; **முன்** - முதற்கண்.

**திருமேனிக்கு...தீர்ந்தோம்** - இஃது அவ்வாறெழுந்த அச்சத்தினின்றும் நீங்கிய நிலையும் தீர்ந்த காரணத்தையும் கூறியபடி; திருமேனிக்கு வந்து பொருந்தாது என்று திண்ணமாயறிந்த நினைவுவர அச்சம் தீர்ந்தது, அச்சமாவது ஈண்டு அமணர் இட்ட தீயினால் பிள்ளையாரது திருமேனிக்கு ஏதேனும் ஊறு விளைந்திருக்குமோ என்றதாம். **அது** - அவ்வாறெழுந்த அச்சம்.

**வஞ்சகர்...எழாநின்றது** - இது அதன்மேல் அடுத்தபடியாகத் தாம் எதிர்பாராத விளைவாக அத்தீயானது மன்னனிடம் சேர்ந்த தன்மையினைத் தாம் அறிந்தபடி உரை செய்ததாம்; மேல்வரும் பாட்டிற் கூறும் விண்ணப்பத்திற்குத் தோற்றுவாய் செய்தபடியுமாம்.

**தீத்தொழில் மன்னவன்பால் போய்** - எனக.

**தீத்தொழில்** - தீயை மூட்டிக் கொளுவிய தொழில் எனவும், இரட்டுற மொழிதலால் தீயதொழிலெனவும் உரைக்க நின்றது.

**மன்னவன்பால் போய் வெதுப்பாய் எழாநின்றது** எனக. இங்கு வருமோ என்றஞ்சினோம், இங்கு அவ்வாறு வருதற்கு அதற்கு வலிமையில்லை; ஆதலின் அங்கு மன்னவன்பால் காரண முறையினால் போய் எழுந்தது.

**எஞ்சலிலாக் கொடுவெதுப்பு** - எஞ்சுதலாவது கொடுமை ஒன்றுனும் எஞ்சாது - குறையாது - எல்லாம் ஒருங்கு சேர்ந்தது.

**தொழில் - வெதுப்பாய் எழாநின்றது** - தொழில் கருமமாகிய சூக்கும நிலையடைந்து பின் வெதுப்பாய்த் தூலமாய் உருப்பட்டு எழுந்தது; **எழுந்தது** என்றதனால் சூக்குமநிலை நீங்கித் தூலமானமை குறிக்கப்பட்டது. 732

2631. (வி - ரை) **வெய்யதொழில்...மன்னவன்** - இஃது அவர்களது உள்ளத்தில் அடுத்து மூன்றாவதாக எழுந்த நிகழ்ச்சி.

**அமண் குண்டர் விளைக்கவரும் வெதுப்பு - அவர் செய்யும் - மாயைகளால் தீராமை** - அவர்கள் செயலால் விளைந்த நோய்க்கு அவர்களே தீர்வாகச் செய்யும் வஞ்சனை முயற்சிகளால் தீராதிலதாக; **மாயைகள்** - இங்கு வஞ்சச் செயல்கள்

என்ற பொருளில் வந்தது: மதி - மதியின் சூழ்ச்சியினாலே; தீராமை - தீராமையால்; தீராமை - மையலுறும் என்று கூட்டுக.

**தீராமை மையலுறும் மன்னவன்முன் - அவரை வென்றருளில் உய்யும் -** என்று ஒருதொடராக வைத்தோதினாரேனும் - தீராமல் மன்னனை மையல் செய்துள்ளது; அவர்களை அவன் முன்பே வென்றருள வேண்டும் என்று இருபிரிவாக உரைத்தல் கருத்தாகக் கொள்க.

**வெய்ய தொழில் தீராமை** - தீத்தொழில் செய்த அவர்களே தீர்வுத் தொழில் செய்வது போல முயல்கின்றாரென்றும், அதனால் அந்நோய் தீராது பெருமயக்கம் விளைக்க அரசன் அதனுள் மயங்கிக் கிடக்கின்றானென்றும், அவர்களை அவன் காண வென்றருளாவிட்டால் அவனுயிர் சோரும் எங்கள் உயிரும் அதன் முன்பே சோரும் என்றும் அங்குற்ற நிலைமைகளையும் பின் செய்தக்க நிலைமைகளையும் எடுத்துரைத்து விண்ணப்பித்த நயம் கண்டுகொள்க

**அவர் தாம் செய்யு மதிமாயைகளால் தீராமை** - அவர் தாம் - செய்த அவர் தாமே; நோயின் காரணர்களாகிய அவர் உடனிருக்கும் செயல் நோயை நீக்கச் செய்திலது; காரணம் அவ்வாறு உடன் நிற்கக் காரியம் கெடாது என்ற நியாயப்படி என்பதாம்; இனித் தாம் செய்யும் மதி மாயைகளால் தீராமை என்றதற்கு இரட்டுற மொழிதலால் நோய் அவரால் விளைந்ததாயினும் விளைத்த அவரே தம் செயலின் விளைவை மாற்ற வலியிலராய் நின்றனர் என்ற குறிப்புப்பட உரைத்தலுமாம்; "சுடர், பையவே சென்று பாண்டியற்காகவே" என்று பணித்ததனால் அரசனுக்கு வெப்புடுக்கப் பணித்த பிள்ளையாரே பின்னர் "தேற்றித் தென்னனுடலுற்ற தீப்பிணியாயின தீரப்" பாடல் சாற்றித் தீர்வும் வகுத்தருளுவர், அதுபோல இவர்கள் தாம் செய்யும் மதிமாயைகளால் தமது செயலின் விளைவினை மாற்ற வலியிலார் என்ற குறிப்பும் காண்க.

**தீப்பிணியால்** - தீயபிணி - தீயினால் விளைந்த பிணி - தீயின் உருவாகிய வெப்பு - என்று பலவும் உரைக்க நின்றது

**மையல்** - நோயின் கடுமையால் நேர்ந்த விளைவு; கருத்தொழிந்துரை மறந்து கிடந்தநிலை

**உய்யும் எமதுயிரும் அவனுயிரும் என** - எமது உயிரைக் காத்தல் தேவரீரது முதற்பாரம்; அவற்றைக் காத்தற் பொருட்டு அவனுயிரைக் காத்தல் வேண்டும்; எமதுயிரும் அவனுயிரும் அவ்வாறு பிரிக்கப்படாது பிணைந்துள்ளன; என்பனவாதி குறிப்புக்கள் பெறக் கூறிய நயம் காண்க; மேலும் அவனுயிர்க்கு இடர் நேர் வருமாயின் அதன்முன் எமதுயிர்க்கு இடர் வரும் என்பார் எமதுயிர் என்பதனை முன் வைத்துக் கூறினார்; எண்ணும்மை தந்து பிணைத்ததும் இக்கருத்து; ஆயினும் இறைநிலையில் தேவரீரது திருவருட் செயலுக்கு உரியனவாம் தன்மையில் எங்கள் உயிர் அன்பினால் அணிமையான நிலையிலும், அவனுயிர் அவ்வாறன்றித் திருவருட் கயலாய சேய்மையான நிலையிலும் இருவேறு திறம்பட நிற்பன என்று குறித்தற்கு "எங்கள் உயிர்கள் உய்யும்" என்று ஒருங்கு சேர்த்துக் கூறாது, உய்யும் "எமதுயிரும் அவனுயிரும்" என்று வேறு பிரித்துக் கூறிய தெய்வக் கவி நயமும் காண்க; உய்யும் வகை பெறுதலில் இரண்டும் ஒன்றாய்ப் பிணைந்து வினையால் நன்றாகக் கட்டுற்று நிற்பன என்பார் உய்யும் என ஒரு வினையால் முடிபும் காட்டினார்.

**வென்றருளில்** - வெல்லுதல் ஒரு செயல்; அருளுதல் அதன்மேற் செய்தக்க வேறொரு செயல்; வெல்லுதல் பாச நீக்கமும், அருளுதல் சிவப்பேறும் குறித்தன.

இவையிரண்டும் நிகழ்ந்த தன்மைகளுள், வெல்லுதல் பின்னர்ச் சுரத்தினிலும் தீயினிலும் நீரினிலும் அரசன்முன் சமணரை வென்றதனாலும், அருளுதல் திருநீறு தந்து ஆட்கொண்டு சிவாகம மந்திரோபதேசமாகிய திருப்பாசுரத்தினை உபதேசித்த வகையாலும் அறியப்படும்; சரித நிகழ்ச்சிகளுட் கண்டுகொள்க.

வென்றருளில் உய்யும் - என்றதனால் அது செய்தருளாவிடில் உய்தி பெறாது அழிவுறுவோம் என்பதும் குறிப்பு.

மதியாண்மைகளால்—என்பதும் பாடம். 733

வேறு

2632. என்றவ ருரைத்த போதி லெழில்கொள்பூம் புகலி வேந்தர்
"ஒன்றுநீ ரஞ்ச வேண்டா; வுணர்விலா வமணர் தம்மை
யின்றுநீ ருவகை யெய்த யாவருங் காண வாதில்
வென்றுமீ னவனை வெண்ணீ றணிவிப்பன் விதியால்" லென்றார். ௭௩௪

(இ - ள்) வெளிப்படை. முன் பாட்டுக்களிற் கூறியபடி அவர்கள் சொன்னபோது அழகிய பூப்போன்ற புகலியின் தலைவராகிய பிள்ளையார் 'நீங்கள் ஒன்றும் அஞ்ச வேண்டா, உணர்வில்லாத சமணர்களை இன்று நீவிர் மகிழ்ச்சியடையும்படி எல்லாரும் காணுமாறு வென்று பாண்டியனைத் திருநீறணியும்படி இறைவனாணையிலே செய்வேன்" என்று கூறியருளினார்.

(வி - ரை) இப்பாட்டினால் அம்மையார் அமைச்சர் இவர்கள் கூறியதற்குப் பிள்ளையார் கூறியவிடை அறிவிக்கப்பட்டது.

எழில்கொள் என்பது பூவுக்கு அடைமொழி, பூம்புகலி - அழகிய சீகாழிப்பதி; எழிலில்லாத பூக்களும் உளவாதலின் அவற்றை நீக்க எழில்கொள் பூ என்றார்; பிறிதினியைபு நீக்கிய விசேடணம்; பூ - தாமரையைக் குறித்தது

ஒன்றும் நீர் அஞ்ச வேண்டா என்றது அஞ்சி வந்தவர்க்கு அஞ்சற்க என்று முதலில் அபயம் கொடுத்தபடி.

வென்று...அணிவிப்பன் - வென்று அருளில் என முன்பாட்டிற் கூறியதற்கு அவ்விரண்டினையும் செய்வோம் என்றுறுதி கூறியபடி.

விதியால் - விதியால் அணிவிப்பன் என்க. விதியால் - விதிப்படி, ஊழின் நியதிப்படி என்ற குறிப்புமாம். மேல் "ஆவது மழிவு மெல்லாம் அவர் செயல்... திருவுள்ளம் அறிவேன்" (2634) என்று கூறுதலானும், ஈண்டுத் திருவருளினைப் பற்றாது தாமே அணிந்து செய்வேன் என்று கூறுதலானும், முன்னர்ப் பிள்ளையார் கூறிய கருத்துக்கு மாறுபடுதலானும், பிறவாற்றானும் இங்குக் கூறும் விடை பிள்ளையாரது திருவுள்ளக் கிடைக்கு மாறாகக் காணப்படுகின்றது. செய்யுணடையாலும், முன்னரும் மேலும் கூறிச் செல்லும் யாப்பின் தொடர்ச்சி இடைப்பட்டு மாறுதலாலும் இப்பாட்டு ஐயப்பாட்டுக்கு இடம் தருகின்றது; மேலும் இவ்விரண்டு பாட்டுக்களையு மின்றியே சரிதத் தொடர்பு செம்மையாய நிகழ்வதும் காணப்பெறும். மேல்வரும் (2633) பாட்டும் இவ்வாறே காண்க. (என்து சேக்கிழார் 218-219 பக்கங்கள் பார்க்க).

ஒன்றும் - ஒன்றுக்கும் - ஒன்றினாலும்; உணர்வு - நல்லுணர்வு. 734

வேறு

2633. மொழிந்தருள அதுகேட்டு முன்னிறைஞ்சி முகமலர்வார்
"அழுந்துமிடர்க் கடலிடைநின் றடியோமை யெடுத்தருளச்
செழுந்தரளச் சிவிகையின்மேற் றென்னாடு செய்தவத்தால்
எழுந்தருளப் பேறுடையோ மென்பெறோ" மென்று தொழுதும். ௭௬௫

வேறு

2634. ஆவது மழிவு மெல்லா மவர்செய லமண ராகும்
பாவகா ரிகளை நோக்கும் பழுதுட னீங்க வெல்லச்
சேவுயர் கொடியி னாதந் திருவுள்ள மறிவே னென்று
பூவலர் பொழில்சூழ் சண்பைப் புரவலர் போதுகின்றார்; ௭௬௬

2635. வையக முய்ய வந்த வள்ளலார் மடத்தி னின்று
மெய்யணி நீற்றுத் தொண்டர் வெள்ளமுந் தாமும் போந்து
கையிணை தலையின் மீது குவியக்கண் மலர்ச்சி காட்டச்
செய்யவர் சடையார் மன்னுந் திருவால வாயுட் புக்கார். ௭௬௭

2633. (இ - ள்) மொழிந்தருள - முன் கூறியவாறு பிள்ளையார் அருளிச் செய்ய, அதுகேட்டு முகமலர்வார் - அதனைக் கேட்டுத் திருமுன்பு வணங்கி முகம் மிக மலர்ச்சி கொண்டவர்களாகி, "அழுந்தும் என்பெறோம்" என - அழுந்திக் கிடந்த துன்பமாகிய கடலினின்றும் அடியேங்களை மேலே எடுத்தருளும் பொருட்டுச் செழிய முத்துச் சிவிகையின்மீது தென்னாடு செய்த பெருந்தவப் பயனாலே எழுந்தருளும் பெரும்பேறு பெற்றுடையோம்; (அதனால்) வேறு என்ன பேறுதான் பெற மாட்டோம் "(எதுவும் பெற வல்லேம்)" என்று கூறி வணங்கியதும், ௭௬௫

2634 (இ - ள்) ஆவதும் செயல் - ஆக்கமும் அழிவும் ஆகிய எல்லாம் "அவர்" என்று மறைகள் சுட்டிக் கூறும் இறைவரது செயலேயாகும்; அமணராகும்...வெல்ல - அமணர் என்னும் பாவஞ் செய்வோர்களைப் பார்க்கவும் பேசவும் மற்றும் செயல் செய்யவும் நேர்தலால் வரும் பழுது அச்செயல்களுடனே நீங்கவும், அவர்களை வென்றிடவும், சேவுயர்...அறிவேன் என்று - இடபத்தை உயர்த்திய கொடியினையுடைய சிவபெருமானது திருவுள்ளக் குறிப்பினை அறிவேன் என்று கூறி; பூவலர்...போதுகின்றார் - பூக்கள் அலர்கின்ற சோலைகள் சூழ்ந்த சீகாழித் தலைவராகிய பிள்ளையார் செல்கின்றாராகி, ௭௬௬

2635. (இ - ள்) வையகம்...வள்ளலார் - (அவ்வாறு செல்லும்) உலகம் உய்யும் பொருட்டே வந்தவதரித்த அந்த வள்ளலார்; மடத்தினின்று...போந்து - திருமடத்தினின்றும் மெய்யிலே அணிந்து கொண்ட திருநீற்றின் பொலிவினையுடைய திருத்தொண்டர் கூட்டமும் தாமுமாகச் சென்று, கையிணை காட்ட - இரண்டு கைகளும் தலையின்மீது குவியவும், கண்கள் மலர்ச்சியினைக் காட்டவும்; செய்ய... புக்கார் - சிவந்த சடையினையுடைய இறைவர் நிலைபெற எழுந்தருளியிருக்கும் திருவாலவாயத் திருக்கோயிலினுள்ளே புகுந்தனர். ௭௬௭

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டுரைக்க நின்றன.

2633. (வி - ரை) முன்பாட்டில் பிள்ளையார் அருளியனவாகக் கூறிய மொழிகளைக் கேட்டு அம்மையாரும் அமைச்சனாரும் அவற்றுக்கு விடைகூறும் பகுதியாக அமைந்தது இப்பாட்டு.

அது - முன்பாட்டில் மொழிந்தருளியது.

முகமலர்வார் - முகமலர்வாராகி; முற்றெச்சம்; முகமலர்ச்சி அகமலர்ச்சியினால் விளையும் மெய்ப்பாடாகி அதனைக் காட்டி நிற்றலால் அகமலர்ச்சியினை வேறு கூறாராயினர்.

இடர்க்கடலிடை நின்று...எடுத்தருள - ஏகதேச வுருவகம்; அடியோமை - அரசனையும் நாட்டவரையும் உள்ளடக்கிய உளப்பாட்டுத் தன்மைப் பன்மை; எடுத்தல் - துன்ப நீக்கி யின்பமடைவித்து மேலோங்கச் செய்தல்.

தென்னுடு செய்தவத்தால் - தென்னவனுடு என்றது தென்னுடு என மருவிற்று; செய்தவம் - முன் செய்த தவம்.

பேறுடையோம் என்பெறேம்! - பேறுடையோமாதலின் வேறென்ன தான் பெறமாட்டோம்? என்றது எழுந்தருளும் பேறுதானே வேறு எல்லாப் பேறுகளையும் தரவல்லது என்பது குறிப்பு; என்பெறேம் - எதிர் மறையும் வினாவும் வேறெல்லாப் பேறும் எளிதில் பெறவல்லோம், எமக்கரியது ஒன்றுமில்லை என்று உடன்பாடும் உறுதியும் குறித்து நின்றன.

அவர் கேட்டு—என்பதும் பாடம் 735

2634. (வி - ரை) ஆவதும் அழிவும் - ஆக்கமும் கேடும் என அவ்வத் தொழில்களைக் குறித்த பெயர்களாய் நின்றன; வெல்லுதல் - அழித்தல்; அருளுதல் - ஆதல் என இவ்விரண்டும் முன்னர் (2631) அவர்களால் வேண்டப்பட்டமையால் அவையிரண்டும் அவரருளன்றி நிகழா என்பார் எல்லாம் அவர் செயல் என்றார்; ஆக்குதலும் அழித்தலும் என்னுது ஆவதும் அழிவும் என்றது அவர் செயலினாலே இவை தாமே விளைவன என்றபடி. அவர் - அவன் என்று மறைகளுட் பேசப் பெற்ற அவர் என உலகறி சுட்டு.

அவர் செயல் - ஆதலின் - திருவுள்ளம் அறிவேன் என்று காரணப் பொருள்படக் கொள்க.

பாவகாரிகள் - பாவத்தைச் செய்பவர்கள், காரி - செய்பவன்; அதன் மேல் கள் விகுதி பெற்றது. பாவகாரிகளை நோக்கும் பழுது உடன் நீங்க - பாவிகளைப் பார்த்தலும் பழுது; நோக்கும் பழுது - நோக்குதலால் விளையும் தீமை; "பிரட்டரைக் காணுகண; வாய்பேசாதப் பேயகளோடே" (திருவிசைப்பா); "வெண்ணீறணிகிலாதவரைக் கண்டா லம்ம நாமஞ்சுமாறே" (திருவா) என்பன வாதி திருவாக்குக்கள் நிற்கத், "தீயாரைக் காண்பதுவும் தீதே" என்று நீதி நூலும் பேசும்; "கண்டு முட்டு" என்னும் சமணர் கொள்கையும் இதற்குக் கருத்துடையதாம்; பாவகாரிகளை நோக்குதல் பழுதாவது போல அவர்களால் நோக்கப்படுதலும் பழுது தருவதாம் என்பதும் அறிந்தோர் மரபு.

உடன் நீங்க - நோக்கின அப்பொழுதே அந்தப் பழுது ஊன்றாது கழிய; உடன் நீங்குதல் - தோன்றிய அவ்வளவே அழிவெய்துதல்; பார்த்தலால் வரும் விளைவுகளைப் பற்றி முன் ஆண்டாண்டும் உரைத்தவையும், இனியும், 2636லும், பிறாண்டும் உரைப்பவையும் நினைவு கூர்க.

**நீங்க வெல்ல** - நீங்கவும் அவர்களை வெல்லவும்; எண்ணுமவைகள் தொகைன்; பாவகாரிகளை நோக்குதலும் அவர்களுடன் பேசி வாது செய்தலும் ஆகிய தீமை ஒன்று; அதன்மேல் தொடர்ந்து அவர்களை வெல்லுதலும் அழித்தலும் ஆகிய செயல் மற்றொன்று; இவற்றை முறையே, "நோக்கி நான் வாதுசெய்த திருவுள்ளமே?" என்ற பதிகத்தாலும், "வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே" என்ற வேறொரு பதிகத்தாலும் வேண்டிப் பாடித் திருவுள்ள மறிதல் காண்க.

**சேவுயர் கொடியினார்** - "சாலவும், வதிலாா ஆண்மென்னன மேலவிளங்கி யோ காட்டுக, கோதிலா வேறுங் கொடி" (திருவா - தசாங்கம் - 10); "சேவுயருந் திணைகொடியான்" (பிள் தேவா. கழுமலம் - மேகரா - 1) "ஏதமில் வீர வெள்விடைக் கொடியும்" (11-ம் திருமுறை. கோயினான் - 4), பற்றலரை வெற்றி கொள்ளும் கொடி என்பது குறிக்க இத்தன்மையாற் கூறினார்.

**திருவுள்ளம் அறிதல்** - அறியும் வகை மேல் 2636 - 2637 - 2639 பாட்டுக்களிற் காண்க

**என்று - போதுகின்றார் - போந்து - புக்கார்** - என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க: **போதுகின்றார்** - போதுகின்றாராகி; முற்றெச்சம்.

**அழிவதேல்லாம்—நீங்கிவெல்ல**—என்ற பாடங்களுமுண்டு. 736

2635 (வி - ரை) **வள்ளலார்** - முன் கூறிய அந்த வள்ளலார் என்று சுட்டு வருவிக்க

**வந்த வள்ளலார் - வந்த** - அவதரித்து இவ்வுலகில் வந்த, பாண்டிநாட்டுக்கு வந்த என்ற குறிப்பும் கொள்க, பாண்டிநாட்டுக்கு வருதலால் வையக மூய்தலாவது சைவம் தழைத்தது தீயது ஆழ்ந்து எல்லாம் அரனுமமே சூழ்தலால் வரும் விளைவு; **வள்ளன்மை** - இவர்கள் விண்ணப்பத்திறங்கேட்டு, அரசுகளது கருத்தையும் கடந்து தாமே திருவுளங்கொண்டு, தீய சமணர் நடுவுட்போந்த அருள்வளம்

**மெய்அணி நீற்றுத்தொண்டர் வெள்ளம்** - மெய்-திருமேனி; நீறு அணி மெய்த் தொண்டர் என்று கூட்டியுரைக்கவும் நின்றது, வெள்ளம் - பெருங்கூட்டம்; திரள் நீர்ப்பெருக்குப்போலப் பெருகிச் செல்வது; வெள்ளம் - பேரெண் குறித்தது என்றலுமாம்.

**கையிணை - குவியப் - புக்கார்** - கைகளைச் சிரமேற் கூப்பித் தொழுதபடியே புகுந்தனர். குவிய - தாமே குவிய

**கண்மலர்ச்சி காட்டுதல்** - இறைவரது திருமுன் செல்லும் ஆனந்தக் குறிப்பு; **கண் மலர்ச்சி** - உள்ள மகிழ்ச்சியின் மெய்ப்பாடு.

**செய்யவார் சடையார்** - செய்ய சடையார் என்றும் வார்சடைச் செய்யார் என்றும் கூட்டி உரைக்கவும் நின்றது; "செய்யனே! திருவாலவாய் மேவிய, ஐயனே!" என்று முன்கூறி யழைத்தருளிய குறிப்புமபட நின்றமை காண்க

**மடம்** - குலச்சிறையார் காட்டத் (2574) தாம் எழுந்தருளியிருந்து அமணர் புறம்பு செய்த தீச்செயல் அழிந்த திருமடம்

**மடத்தினின்று - போந்து - உட்புக்கார் எனக.** 737

2636. "நோக்கிட விதியி லாரை நோக்கியான் வாது செய்யத்
தீக்கனன் மேனி யானே திருவுள்ள மே?"யென் றெண்ணில்
பாக்கியப் பயனு யுள்ள பாலரு வாயா மெய்ம்மை
நோக்கிவண் டமிழ்ச்செய் மாலைப் பதிகந்தா னுவல லுற்றார், ௭௩௮

2637. கானிடை யாடு வாரைக் "காட்டுமா வுரி" முன் பாடித்
தேனலர் கொன்றை யார்தந் திருவுள நோக்கிப்; பின்னும்
ஊனமில் "வேத வேள்வி" யென்றெடுத் துரையின் மாலை
மானமில் லமணர் தம்மை வாதில்வென் றழிக்கப் பாடி, ௭௩௯

2638. "ஆலமே யமுத மாக வுண்டுவா னவர்க்க ளித்துக்;
காலனை மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை; யடியேற் கின்று
ஞாலநின் புகழே யாக வேண்டு; நான் மறைக ளேத்துஞ்
சீலமே! யால வாயிற் சிவபெரு மானே!" யென்றார். ௭௪௦

2636. (இ-ள்) தீக்கனல் மேனியானே! - மிக்கு எரியும் தீப்போன்ற திருமேனியினையுடைய இறைவரே!; நோக்கிட...வாதுசெய்ய - நோக்குதற்கு விதியில்லாத அமணரை நோக்கி யான் வாது செய்வதற்கு; திருவுளமே என்று - தேவரீருக்குத் திருவுள்ளமோ? என்று, எண்ணில...பாலறுவாயர் - எண்ணில்லாத பாக்கியங்களின் பயன்போன்றுள்ள பாலறுவாயராகிய பிள்ளையார்; மெய்ம்மை நோக்கி - உண்மைத் திறத்தை நோக்கி; வண்தமிழ்...நவிலலுற்றார் - வண்மையுடைய தமிழால் இயன்ற மாலையாகிய திருப்பதிகத்தைப் பாடியருள்வாராகி, ௭௩௮

2637. (இ-ள்) கானிடை...நோக்கி - கானகத்தில் நட்டம் ஆடுவாராகிய இறைவரைக் "காட்டுமாவுரி" என்று தொடங்கிப் பாடித் தேன் அலர்கின்ற கொன்றையணிந்த இறைவரது திருவுள்ளக் குறிப்பினைத் தெளிந்து கொண்டு; பின்னும்...மாலை - மேலும் ஊனத்தை இல்லையாகச் செய்யும் "வேத வேள்வி" என்று தொடங்கிச் சொற்பதிகத்தினை; மானமில...பாடி - மானமில்லாத அமணர்களை வாதத்தில் வென்று அழிக்கவும் பாடி, ௭௩௯

2688. (இ-ள்) நான்மறைகளேத்தும்...சிவபெருமானே! - நான்கு வேதங்கள் போற்றுகின்ற சீலமானவரே! திருவாலவாயில் எழுந்தருளிய சிவபெருமானே!; ஆலமே...காய்ந்தனை - தேவரீர் விடத்தையே அமுதமாக உண்டு, தேவர்களுக்கருள் அளித்ததனோடு மார்க்கண்டனுக்காகக் காலனையும் உதைத்தருட்டினீர்!, அடியேற்கு இன்று ஞாலம் நின்புகழே ஆகவேண்டும் - இன்று அடியேனுக்கு இந்த நிலவுலகம் முழுதும் தேவரீரது புகழே ஆகப் பரவுதல் வேண்டும்; என்றார் - என்று விண்ணப்பித்தார். ௭௪௦

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

2636. (வி-ரை) நோக்கிட விதியிலாரை நோக்கி - முன் "பாவகாரிகளை நோக்கும்" (2634) என்றதும், ஆண்டுரைத்தவையும் காண்க. விதி - நூல்களின் விதி; நோக்குதற்கும் நோக்கப்படுதற்கும் என இருபாலும் கொண்டுரைத்துக் கொள்க; அமணர்கள் பிள்ளையாரது அருள்நோக்கம் பெறுதற்கு அப்போது ஊழ்விதியுடையரல்லர் என்பதாம்; இப்பொருளில் விதி - ஊழ், நியதி என்று கொள்க.

நோக்கி - வாதுசெய்ய - திருவுள்ளமே - அமணரை நோக்குதலும் கூடாது; வாது செய்தலும் கூடாது; இரண்டும் சைவத்திறத்தில் விலக்கப்படும். தீயோரை நோக்குதலும் கூடாது என்ற விதியின் நுட்பம் முன் (2634) விளக்கப்பட்டது; நோக்குதலும் வாது செய்தலும் கூடாவெனின், இங்குப் பிள்ளையார் அவற்றைச் செய்ய முற்படுதல் தகுதியாமோ? எனின், கூறுதும், "வாது செய்து மயங்கு மனத்தரா,

யேது சொல்லுவீ ராகிலு மேழைகாள் !, யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம், மாதே வனலலா றேவர்மற றில்லையே" என்பது அரசுகளது ஆணை; ஏனைச சமயங்களின் உண்மைகள் எல்லாம் சைவத்தில் ஒவ்வோர் அங்கமாயமைந்து அடங்குவன; ஆனால் சைவத்திறம் வேறெதனினும் அடங்காது; இவ்வாறு ஒவ்வோர் பகுதியாகிய சிலசில கொள்கைகளை மட்டில் கொண்ட சமயங்கள் தாந்தாம் முழு உண்மையும் கொண்டவை என்றகங்கரித்தெழுந்து உலக மாக்களை வஞ்சித்துப் பரசமயக் குழியில் வீழ்த்தக் கண்டபோது உலகம் எமாறுமல் உய்யும்பொருட்டு அவ்வவற்றின் உண்மை நிலைகளை இகலிலராய்த் திருவருள்வசமாய நின்று வாது செய்து காட்டியருளுதல் உலகத்தை வழிப்படுத்தும் பெரியோர் கடமையாகும்; அன்றியும் நமது பெருஞ் செல்வங்களாகிய சைவக் கோயில்களையும், சைவக் கொள்கை நிலைகளையும், பிறசமயிகள் கவர்ந்து ஆக்கிரமித்தபோது நமது உடைமையை மீட்டுப் பாதுகாவல் செய்வதும் நமது கடமையாகும். இங்குப் பிள்ளையார் நிகழ்த்தியவை இம்மட்டே அடங்குவன; புறச்சமயங்கள் சமயளவில் நில்லாமல் மேலெழுந்து கவரத் தொடங்கியபோது அரசு செயலினின்றும் உலகம் எமாறுது காவல் புரிதலே பிள்ளையாரும் அரசுகளும் (பழையாறை வடதளி) இயற்றிய அருட்செயல்களாம். சமயங்கள் எவற்றையும் அழித்தல் சைவத்திறம் அன்று; எல்லாச் சமயங்களும் உயிர்களின் பக்குவ பேதம்பற்றி வேண்டப்படுவனவே, இவைபற்றி முன் 1562ல் உரைத்தவையும், பிறவும் பார்க்க. சைவத்தின் உண்மைச் சமரசமாவது பக்குவபேதம்பற்றிப் படிமுறையால் எல்லாவற்றையும் அவ்வந்நிலையில் அமைத்துக் காணுவதேயாம். இதுவன்றிச் சிலசில சொற்களும் கருத்துக்களும் ஒன்றாக வருதல் கொண்டே எல்லாம் ஒன்று என்று கூவிச் சமரசங் காணுதல் போலிச் சமரசமெனவொழிக. அவையெல்லாம் சைவவுண்மைகளை உள்ளபடி உணராத தேசிகர்பால் ஒழுங்குபட உபதேசம்பெறாமலும், அனுபவத்தில் ஒழுகாமலும் போந்த குறையால் நேர்ந்த போலியுரைகளென்க.

**தீக்கனல்** மேனியானே - **தீக்கனல்** - ஒரு பொருட் பலசொல் தன்மை மிகுதி குறித்தது; மிக்க தீ என்க. தீ ஒன்றே அடுதலும் செய்யும்; சுடுதலால் காத்தலும் செய்யும். தீ மிகின் உயிர்போம்; தீ இன்றாயினும் உயிர்போம், எனவே, இங்கு அழித்தலும் காத்தலும் செய்யவல்ல திருமேனி கொண்டவர் என்பார் தீக்கனல் மேனியென்றார் என்பதுமாம்; தீயினையும் எரிக்கும் தீப்போன்ற என்ற குறிப்புமாம். "நெருப்பையு மெரிக்கும்" (திருப்புகழ்); அமணர் இட்ட தீயினை மேம்பட்டு அதன் வினைவைப் பாறச் செய்வது என்பதுமாம். கனல் - கனல்கின்ற என்றலுமாம்.

**"திருவுள்ளமே"** என்று மெய்ம்மை நோக்கி-தேவரீருக்குத் திருவுள்ளந்தானோ? என்று இறைவரது மெய்ம்மையுள்ளே தாம் "அவனே தானே யாகிய அந்நெறி, யேகனாகி" நின்று நோக்கிக் கண்டு" என்க. அந்நிலையில் நின்றாராது உள்ளத்தில் உணருமபடி நலகுவன் இறைவன்; "சீரடியார் தங்கள் வழித்தொண்டை யுணர்நல்கி" (341) முதலியவை பார்க்க; "அவனருளா லல்லது ஒன்றையும் செய்யார்" ராகித் தம் வயமற்று அவனருளே கண்ணாகக் காணும் பெருமக்கள் சிவனது நிறைவினுள் அடங்கி எல்லாங்காண வல்லவராவர்; இந்நிலை அவ்வாறு நிலலாத பிறர்க்கு விளங்குதலரிது, நிமித்தமறிதல், திருவுளச்சீட்டு இடுதல், குறிபார்த்தல், பூக்கேட்டல் முதலியனவாக இக்கால் வழங்கும் பலவும் இதன்வழியே அவ்வவர் தரத்துக்கேற்ப வந்தவை என்க; பின்னர்ப் பிள்ளையார், "திருமுறையினைத் தாமே நீற்று வணக்கையால் நிமிர்" க்கத் (2680) திருநள்ளாற்றுப் பதிகம் எழுதிய ஏடுவர, அதனுள்ளே திருவருள் வெளிப்பாட்டினைக் காணும் நிகழ்ச்சியும் இக்கருத்தே பற்றியது.

**எண்ணில் பாக்கியப்பயன்** - அளவில்லாத ஆனமாககள செய்த அளவிலலாத தவஙகளாறபெறற பாககியஙகளுககெலலாம இவரைப பெறுதலே பயன் எனக. இதனை "எஙகள பாக்கி யபபய ஞைபபதி குனறைவாழ் சேககிழான" எனறு எமது பாககியப பயனுகிய மாதவச சிவஞான முனிவா, ஆசிரியா சேககிழாா பெருநதகை யாருககு ஆககி எடுததாணடு இதன அருமபொருளை விளககியருளியமை காணக.

**பாலறுவாயர்** - அமமையாா ஊட்டியருளிய ஞானபபாலின மணம இடையறாது கமழாது ஞானவாசகுட பிறநது வருமா திருவாயா எனபதாம; ஆதலின அநதச சிவ ஞான வயததால இறைவரது திருவுளளததை நோககிக கணடனா எனபது குறிகக இபபெயரால எணடுக கூறினா; "சுநதரபபொற றேுணிமிசை யிருநதபிரா னுட னமாநத துணைவி யாகும, பைஙதொடியா டிருமுலையின பாலறு மதுரமொழிப் பவள வாயர்" (1995) என இககருததை ஆசிரியா முனனா விளககியருளியதனை நினைவுகூாக. இபபெயாச சிறபபையும அருமையினையும நோக்கியே பினவநத பெரியார்கள் தம மககளுககு இபபெயரை இடடு வழஙகிப பயனபெறும உலக வழககு உளதாயிற்று; ஆசிரியரது தமபியாா "பாலறுவாயா" எனற பெயா சூடடபபெறற வழக்கும கருதுக

**வண்தமிழ் செய்மாலை** - வண்மையாவது அறததாறறின நினறு அருள்வழியே சென்று உயிாக்குறுதி காடடுதல; அமணாபால சணடுத, திருவருள மறக்கருணை யாயச செலலும நியதியின விளைவின வெளிபபாட்டுககுக காரணமாதல்பறறி அவா திறததும் வணமையாயிறறெனக.

**நுவல லுற்றா்**-உறறுராகிப பாடி எனறு முறறெச்சமாக்கி மேலவரும பாட்டுடன் முடிகக. 738

2637. (வி - ரை) "**காட்டுமாவுரி**" **முன்பாடி** - "காட்டுமாவதுரி" எனறு தொடஙகும திருபபதிகததை முனனே பாடி; **கானிடையாடுவார்** - கானில் ஆடுதல் சஙகாரததையும புநருறபவததையும குறிததலால அமண இருள மாயவதனையும சைவம் மீளத தழைவதனையும குறிததது.

**முன்பாடி** - **முன்** - திருமுனபு, திருவுளள மறிதற பொருட்டுப பாடியருளிய பதிகஙகளுள முனனா இதனைப பாடி எனறலுமாம. பதிகக கருததுப பாாகக.

**முன்பாடித் திருவுள்ள நோக்கி** - திருவுளளக கருதது வாது செயதலேயாம எனறறிநததனுல மேலும அவவாறு செயயும வாதினில கடைபோக வெலலுதலும் வெனறு, அழிததலும வர வேணடுதலின அவறறுககும திருவுளள முளதோ எனபது குறிபபு அதனை இரணடாவது பதிகமாகிய "வேத வேள்வி" என்ற பதிகததிற வினவி யருளுகினறாா. முனபதிகததில "வாதுசெயத் திருவுள்ளமே" எனறு திருவுளளம வினவியருளிய பிளளையாா, இபபதிகததில "வாதில் வென்றழிக் கத் திருவுளளமே" எனறதனுல "வாது செயவதறகுத திருவுளளம உவநதுகொண டருளினா இறைவர்" எனறு பிளளையாா தமது திருவுளளததில உணாநத பின்னரே, அதன் பின வாதில வெனறழிககத திருவுளளம வினவியருளினாா என்பதாம; வாது செயத திருவுளளம பெறவிலலையாயின, மேல வாதில வெனறழிகக வுளளமறிதல் பொருந்தாமை யறிக; ஆயின பினனா வினவிய இத திருவுளளததினை ஆம் என்று பிளளையாா உணாநதமை எதனுற பெறுது மெனின? "நோககும பழுது னிஙகட வெல்லச சேவுயா கொடியினுனறன திருவுளள மறிவேன" (2639) எனறு உட் கொணடு திருவாலவாயுட புககு வணஙகி வினவிய பிளளையாா, அவவாறு திருவுள்ளத திசைவினைக கொணடாலனறி அதனை மேறகொணடு செனறிரா ராதலின் திரு

வுள்ளம் பெற்றனர் என்பது வழியளவையாற் றுணியப்படும்; இதனை மேல் "நாதர் மருண்முன் பெற்று நாடிய மகிழ்ச்சி பொங்க—விடைகொண்டு"—(2639) என்று ஆசிரியர் விளக்குதல் காண்க. "கோனை விடைகொண்டு" என்ற பதிகமும் காண்க. எனவே, பின்னர் நிகழும் சமய வாதமும், அதன் தொடர்பாக நிகழும் வெற்றியும், அமணர் அழிவும் சிவபெருமானது திருவுள்ளமாகிய ஆணையால் நிகழ்ந்தன என்பதும், ஈண்டுப் பிள்ளையார் செயல்கள் யாவும் "அவனே தானே யாகிய அந்நெறி, யேக னாகி யிறைபணி" நின்றமையால் சிவச் செயல்களேயாம் என்பதும், இவைபற்றிப் பிள்ளையாரது கருணைத்திறம் பற்றியும் சைவத் திறம் பற்றியும் பிறவாறும் செய்யப்படும் நவீன ஆராய்ச்சிகளாகிய விசாரங்கள் உண்மையுணர்ச்சி யில்லாமையால் எழுந்த போலியுரைகளே யாமென்பதும் தெற்றென விளங்கும். மேலும் அங்கங்கும் இவை விளக்கப்படும்.

**காட்டுமா வுரி முன்பாடிப் - பின்னும், வேத வேள்வி என்று பாடி** - "காட்டுமாவ துரி"யினுள்ள பரசமய நிராகரிப்பதனையும், "வேத வேள்வி"யினுள்ள நீற்று நெறியினை ஆக்குதலையும் (1917) வேண்டித் திருவுள்ளம் அறிய எழுந்த நிலைக் குறிப்பும் காண்க. இவை இரண்டும் சிவஞான போதத்துப் 10 - 11-ம் சூத்திரங்களின் கருத்தாக இறைவர் உயிர்களுக்குச் செய்யும் இருவேறு அருள் வகைகளாதலும் கண்டு கொள்க. இவையே பிள்ளையாரின் திருவவதாரத்தின் உள்ளுறைகளா மென்பது சிவபாத விருதயருக்குத் தோணியப்பர் அருள் புரிந்த வகையால் தொடக்கத்திலே உணர்த்தப் பட்டது. இவை இரண்டும் வெவ்வேறு திறம்பற்றிய நிலைகளாதலின் தனித்தனி இரண்டு பதிகங்களால் வேண்டப்பட்டன.

எனவே வெல்லுதலும் அழித்தலும் பிள்ளையாரது திருவுள்ளமாதலன்றி இறைவரது திருவுள்ளமாகி உயிர்களின் கன்மப் பயன்களை நுகரச் செய்யும் அழித்தற்றொழிலின் பகுதியாய விளைவன்வா மென்பதும் அறியப்படும்.

**ஊனமில் - ஊனத்தை இல்லையாகச் செய்யும் எனக; ஊனம் - அமணர்கள் சைவத்திறத்திற்கும் பிள்ளையார்க்கும் அடியார்க்கும் செய்த தீமைகள்.**

**உரையின் மாலை** - திருப்பதிகம், நாலடிமேல் வைப்பாகிய யாப்பினியல்பும், மேல் வைப்பாகிய பின் ஈரடியும் பதிகக் குறிக்கோளை உணர்த்திய தொடர்ந்த நிலையும் பற்றி மலரும் காரும் போல வரும் இயல்புணர்த்த மாலை என்றருளினார்; "மதித்த விப்பாடல்" என்ற பதிகக் குறிப்பும் காண்க.

**வென்றழிக்கப்பாடி** - "வென்றழிக்க" என்பது பதிகக் குறிப்பு; வாதுசெய்யத் திருவுள்ளம் இறைவர் கொண்டமை யுணர்ந்தாராதலின், வாது செய்யின், அதன் முடிபு வெற்றியாதல் வேண்டும், அது வேண்டவே ஒட்டிச் செய்யப்படுவது வாத மாதலின் அதன் முடிபு தோல்வியுற்றாரது அழிவுபாடாதலும் வேண்டும், இவை காரண காரிய முறையால் நிகழ்வனவாதலின் அவ்வளவும் செய்தலில் தமது மனம் செல்லாமையால் திருவுள்ளம் வினவினார் என்க. இதனால் அமணரை அழித்தல் பிள்ளையாரது திருவுள்ளக் கருத்தன்றென்பது நன்கு போதரும்.

**மானமில் அமணர் - மானம் - பெருமை, அவமானம் எனவுமாங்கும்; "மானம்" (குறள்), தோல்வி பெற்றும் அதனுள் அமைந்து ஒழுகி நலம்பெற மாட்டாது, மேலும் மேலும் அங்கரித்து எழுவதனால் மானமில் என்றார்; மானம் - அளவு என்று கொண்டு தம் சமய அளவுட்படாது மிகைப்படச் சென்றவர் என்றலுமாம்.** 739

**2638.** (வி - ரை) **நான்மறைகள் ஏத்தும் சீலமே!** என்றும், **ஆலவாயிற் சிவபெருமானே!** என்றும் இரண்டு தன்மைகளால் இறைவரை விளித்து, ஆல மழு

தாக உண்டு வானவர்க் களித்ததும், காலனை மார்க்கண்டர்க்காகக் காய்ந்ததும் என்ற இரண்டு அருளிப்பாடுகளைப் பற்றிப் போற்றினார்; இவற்றினைக் கண்டு அடியேனும், இன்று அடியேற்காக ஞாலம் நின்புகழே மிக வேண்டும் என வேண்டிக் கொள்கின்றேன் என்றபடி.

**சீலம்** - என்றது மறைகளாற் போற்றப்படும் சொரூபம் என்னும் (இறைவரது) சிறப்பிலக்கணம். "சீலமோ வுலகம் போலத் தெரிப்பரிது" என்புழிச் சீலம் இப்பொருட்டாதல் காண்க. (சித்தி - 1-50), சங்கார காரணனாயுள்ள தனி முதல்வன்.

**ஆலவாயிற் சிவபெருமான்** - என்றது ஐந்தொழில் செய்வதற்கு உன்முகமாகி நிற்கும் தடத்தம் என்னும் (இறைவரது) பொதுவிலக்கணம்.

**ஆலமே அமுதமாக உண்டு வானவர்க் களித்தல்** - அறக்கருணை; **காலனைக் காய்தல்** - மறக்கருணை; ஈண்டு இரண்டும் செய்யத்தக்க தென்பது குறிப்பு.

**ஆலமே யமுதமாக உண்டு** - "ஆலத்தினா லமிர்தாக்கிய கோன்" (திருக்கோவை) தடையாயிருந்த தத்துவங்களால் சுத்தி செய்து சிவானுபவத்துக்குத் துணையாகுமாறு செய்தல் குறிப்பு.

**வானவர்க்களித்து** - சிறப்பாயப் பாண்டி நாட்டவர்க்கும் பொதுவாகச் சைவவுலகத்துக்கும் புரிதல் குறித்து நின்றது; வானவரை மயக்க எழுந்து வருத்திய விடத்தை ஒடுக்கித் தன் அளவில் அடக்கி வைத்தது போலப், பாண்டியனையும் பாண்டி நாட்டவரையும், அரனடியாரையும் மயக்கிப் பொய் மிகுத்து மறைவழக்கம் அருகிப் பூதிசாதன விளக்கம் போற்றல் பெறாது ஒழிய மேல் எழுந்து பரவிய சமணகையர் சாக்கியர் தம் பொய்ந்நெறியினை மேலடராது ஒடுக்கித் தம் அளவில் நிறுத்தி என்ற குறிப்புப்பட நின்றது.

**மார்க்கண்டர்க்காக் காய்ந்து** - மார்க்கண்டரை முன்னிலையாகக் கொண்டு காலனைக் காய்ந்த செயல்; அஃது அவர்களுக்கேயன்றி அடியவர்க்கெல்லா மாகியவாறு போல, ஈண்டு இதனை, "இன்று அடியேற்காக" வேண்டினும் இப்பயன் அடியார்க்கெல்லாமாகுதல் வேண்டும் என்பது குறிப்பு. "ஞால நின்புகழே மிக வேண்டும்" (தேவா) என்ற கருத்துக் காண்க. காலன் மார்க்கண்டரை அடரவந்தமைபோல ஈண்டுச் சமணரும் பிள்ளையார்பால் தீத்தொழில் செய்தமையும் கருதுக. "கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடியவர்க்கா" (தேவா). மிருகண்டர் மகன் மார்க்கண்டர் என்பது வடமொழியியல்.

**அடியேற்கின்று ஞாலம் நின்புகழேயாக வேண்டும்** - "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற தேவாரக் கருத்துரைத்தபடி.

**நான்மறைக ளோத்தும் சீலமே!** - சிவமும் சத்தியுமாய் நின்று உயிர்களுக் கருளும் கருணையே சீலம் எனப்பட்டது. "பாதி மாதுடனாய பரமனே!" (தேவா) என்ற பதிகக் கருத்து. இங்குச் சீலம் என்றது சிவனது இறைமைக் குணத்தை என்பது 'நான்மறைக ளோத்தும்' என்ற விசேடணத்தால் அறிக: சீலமுடையாரைச் சீலம் என்றுபசரித்தார். "விடந்தனையுண்டு கண்டத்தே வைத்த பித்த நீசெய்த சீலம் கண்டு" (நம்பி. புன்கூர் - தக்கேசி - 5) என்ற கருத்துக் காண்க. சமணர்கள் கொண்ட கொள்கையாகிய அறம் - சீலம் - இவை வேறு; இங்குக் கூறிய சீலம் வேறு, சொற்பொது ஒற்றுமை கருதியே இவையிரண்டும் ஒன்றென மயங்கிக் கொண்டு ஆதி சமணர் இச் சீலத்தைப் பொருளாகக் கொண்டு வழிபாடு செய்தனர் என்றும், பிற்காலச் சமணர் அதனினின்றும் பிறழ்ந்ததனால் அத்தீமையைக் களையப் போந்தனர் பிள்ளையார் என்றும், பலவாறும் மயங்க வைக்கும் திரிபாகிய விசேட

ஆராய்ச்சிகள் சிலர் செய்வாருமுண்டு; அவை பொருந்தாமை முன்னர்க் காட்டப் பட்டது; பின்னும் காண்க.

**ஞாலம் நின்புகழே மிகவேண்டும்** என்றதனால் அறத்தை ஞானம் அரன்புகழ் ஞாலத்தில் மிகாது குன்றி நிகழ்ந்த தென்பது பெறப்படும்; படவே அந்நிலையை நீக்கி அரன் புகழ் உலகு எங்கும் பரவச் செய்தலையே பிள்ளையார் வேண்டினார் என்பதும் பெறப்படும்; "மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்மிகுத்தே, ஆதி யரு மறைவழக்க மருகியர னடியார்பாற், பூதிசா தனவிளக்கம் போற்றலபெறா தொழியக்கண்டு" (1916) என்றது காண்க. "ஆழ்க தீயது எல்லா மரனாமமே, சூழ்க" (பாசுரம்) என்று இதன் முடிவில் வேண்டிய திருவாக்கும் கருதுக.

**ஆலவாயிற் சிவபெருமானே!** - எங்கும் நிறைந்து விளங்கும் அக்கருணை வெளிப்பட்டருளும் இடமாவது இஃது என்றதாம். "மண்ணகத்திலும் வானிலு மெங்குமாம், திண்ணகத் திருவால வாயாய" (கௌசிகம் - 3).

**மார்க்கண்டிக்கா** —என்பதும் பாடம். 740

## IV திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் பண் - கௌசிகம்

காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனான்
வேட்டு வேள்வி செய்யாவமண் கையரை
யோட்டி வாது செயத்திரு வுள்ளமே! (1)

செந்தெ னாமுரா லுந்திரு வாலவாய்
மைந்த னேயென்று வல்லமெ ஞசறச்
சந்த மாரத்தமிழ் கேட்டமெய்ஞ் ஞானசம்
பந்தன் சொற்பக ருமபழி நீங்கவே. (11)

திருச்சிற்றம்பலம்.

**பதிகக் குறிப்பு :**—கரியுரி போர்த்த கடவுளே! நோக்கிட விதியிலாத அமண் கையரை நோக்கி நான் ஓட்டி வாது செய்தல் தேவரீருக்குத் திருவுள்ளமே! என்று இறைவரது திருவுளத்தின் அருட்குறிப்பினை வினவி யறிந்தது. "திருவுள்ள மறி வேன" (2624), "திருவுளமே" (2636); "திருவுள நோக்கி" (2637).

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) காட்டு மா - யாகத்தி லெழுந்து பகைகாட்டி வந்த யானை; காட்டானை என்பாருமுண்டு, அது - பகுதிப் பொருள் விகுதி, உடல் போர்த்து என்று கூட்டுக. நாட்டம் - கண், மூன்று இங்குச் சிறப்பாகிய நெற்றிக் கண்ணைக் குறித்து நின்றது. மாவுரித்ததுவும் நெற்றிக் கண்ணுடைமையும் பகையை அழிக்கும் தன்மைக் குறிப்புப்பட நின்றன. கண் என்னாது நாட்டம் என்றதும், உரித்து என்றொழியாது உரி உடல் போர்த்து என்றதும், அந்த அழித்தலும் காவல் கருதி நிகழ்வது என்றற் குறிப்புப்பட நின்றன. உரை செய்வன் - வினவுவேன்; வேட்டு வேள்வி செய்யார்; ஆதலின் என அடைமொழியால் ஏதுக் கூறினார்: மேல் வருவனவும் இவ்வாறே; ஓட்டி - ஒட்டி என்பது முதல் நீண்டு வந்தது செய்யுள் விகாரம்; "ஒட்டியே செய்வ தென்றார்" (2695), வாது ஒன்றினின்றும் மேல். இரண்டும் மூன்றுமாக நீள்வதும் குறிப்பு; நான் வாது செய - என்று கூட்டுக; திருவுள்ளமே - ஏகாரம் வினா.—(2) ஈர்உரி - ஈர்தலால் பெற்ற உரி; உரி - தோல்; உரித்தலாகிய பெயர் அதனால் பெறப்படும் பொருளுக்காகி வந்தது ஆகுபெயர்; முன் பாட்டில் "உரித்துரி" என்றதும் காண்க, பொய்த்த - பொய்யாகிய; வஞ்சகமாகிய;

**வன்தவம்** - வலிமையாவது மயிர் பறித்தல், சுடுபாறையிற் கிடத்தல் முதலாக உடலை வருத்துதல்; **வேடத்தார்** - வேடமாத்திரையாயொழிந்து உரிய ஒழுக்கமில்லாமை குறிப்பு; **சித்தர்** - பொய்த்தவத்தையே குறிக்கொண்ட சித்தத்தவர்; **அழித்தல்** - ஈண்டு அவர் தீமையைப் போக்குதல் என்ற கருத்துக் கொண்டது, மேல் "அழிக்க" (10) என்றதும் இக்கருத்து; மேல் "கற்பழிக்க" (3) என்றதும் காண்க.—(3) **மண் - வான் - எங்கும்** - நடு - மேல் - கீழ் என்ற மூவுலகங்களிலும்; **எங்கும்** - கீழுலகத்தைச் சொல்லாமற் குறிக்கும்; "**வானே நிலனே பிறவே**" - "**ஞாலமே விண்ணே பிறவே**" (திருவா); **திண்ணகம்** - செறிந்து பிரியா நிறைவுடைமை; **பெண்ணகம்** - பெண் துறவியரிடையில்; **நெண்ணர்** - நெஞ்சின் கொடுமையுடையோர்; **கற்பு** - கற்பித்த பொய்க் கொள்கைகளின் தொகுதி;—(4) **ஓத்து** - வேதம்; **நீதி** - சைவநீதி - ஒழுக்கம்; **ஆக** - விளங்க; "நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கும்" (2756), **நினைந்தருள் செய்திடுதல்** - நினைத்தல், இறைவரது அருட்சங் கற்பம்.—(5) **ஆர்தல்** - நிறைதல்; **திருவுள்ளமே - செப்பாய்** என்று கூட்டுக; **செப்புதல்** - உணர்த்துதல்; பைய - கெட;—(6) **வீறு** - ஈண்டு உண்மை; **மோட்டமண்** - முருடாகிய அமண், **வேடர்** - வேடத்தையுடையவர்; **சீறுதல்** - கோபித்தல், எவரையும் சீறுதல் செய்யலாகா தென்பது விதியாதலின் திருவுள்ளம் கேட்டருளினர்;—(7) **செண்டடித்தல்** - இலகுவில் வெற்றி கொள்ளுதல், **உளற** - கலக்க;—(8) **பாவர்** பாவமுடையார்; **காக்க** - மறையச் செய்ய; பிறவினை;—(10) **மீன்படுப்பார்** - மீன் பிடித்துண்பவர்; மீன்கள் நீரின் வெளிப்போந்தும், அப்போது வேறெவரும் அவற்றைக் கொலை செய்யாமலே தாமே இறந்துபடுதலால் மீன் பிடித்தல் கொலையாகா தென்பது புத்த சாக்கியர்களது கொள்கை. அறம் பேசித் திரிந்து கொலை புரிதலாற் பதிதர்; **அழிப்பர்** - அழிவு செய்குவோர், சைவ விளக்கத்தை அழித்தவர்; ஆதலின் அவரை அழிக்க எனக் காரணப் பொருள்பட உடம்பொடு புணர்த்தி ஓதியருளினர்;—(11) **அமண் ஆசு** - அமணரால் நேர்ந்த குற்றம்; **ஆசுஅற** - ஆசு அறும்படி செய்ய; **தமிழ்** - தமிழ்மாலை, **கேட்ட** - வினவிய, பழிநீங்கப் பகரும்; "வண்டமிழ் செய்மாலை" (பதிகம் - கௌசிகம் - 11)

V திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் பண் - பழம்பஞ்சுரம்—நாலடி மேல்வைப்பு

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி யமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுட னாய பரமனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. (1)

கூட லாலவாய்க் கோனை விடைகொண்டு
வாடன் மேனி யமணரை வாட்டிடன்
மாடக் காழிச்சம் பந்தன் மதித்தவிப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. (11)

**பதிகக் குறிப்பு** :— நோக்கிட விதியிலாரை நோக்கியும் ஒட்டியும் வாது செய்யத் திருவுள்ளமே? என்று வினவி இறைவர் அதற்குத் திருவுளங்கொண்டமை யருட்குறிப்பினால் உணர்ந்தனர் பிள்ளையார், அறமுயின் வாது செய்தால் அது வெற்றிபெற முடிதல் வேண்டும்; ஒட்டி வாது செய்தல் குறிப்பாதலின், அம்முடிவில் அதநீயோர் அழிவு

படுதலும் உளதாகும்; இவையிரண்டினளவும் இவ்வாறு சென்று முடிதற்குத் திருவுள்ளமே என்று பின்னர் மேலும் வினவித் திருஅருட் குறிப்புணர்தல் இப்பதிகக் குறிப்பு; முன் பதிகத்துள் "வாது செய்யத் திருவுள்ளமே" என்றதும், இங்கு "வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே" என்பதும் காண்க. "பரசமய நிராகரித்து நீறாக்கும்" (1917) என்றவிடத்தும், பிறாண்டும் உரைத்தவை ஈண்டுச் சிந்திக்கத் தக்கன. தாம் வினவிய வண்ணமே திருவுள்ளக் குறிப்பினை உள் உணர்ச்சியிற் பிள்ளையார் உணரப்பெற்றவர் என்பது முன்னர்த் "தமிழ் கேட்ட" (முன் பதிகம்) என்றும், இங்கு "விடைகொண்டு - மதித்த" (இப்பதிகம் - 11) என்றும் வருவனவற்றால் துணியப்படும். இவ்வாறு இறைவரால் உணர்த்தினன்றி உணர்த்தப்படும் பரிபக்குவமுடையவர் பிள்ளையார் என்பதும் கருத்து.

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) வேத வேள்வி - ஆதமில்லி - வென்றழிக்கத் திருவுள்ளமறிதற்கெழுந்த காரணமுமுணர்த்தி நின்றன இவ் வடைமொழிகள்; ஆதம் - அறிவுடைமை; ஆதமில்லி - அறிவிலி; "ஆதமிலி நாயேனை" (திருவா) (2) வைதிகம் - வேதநெறி; கைதவம் - பொய், எய்தி - எய்தலாகாதவரை எய்தி; "தோகநெறி விதியிலாரை" (2636), "காணக் கண்ணிவாய பேசாதப் பேய்களோடே" (திருவிசைப்பா);—(3) வழக்கம் - வழி வழங்குதல், மறிய - உடைய; வெற்றி கொள்ள;—(4) அறுத்த - அறுதியிட்ட, வரையறுத்த, அங்கம் ஆறு - வேதாங்கம்; கறுத்த - வெறுத்த, ஆழ்அமணர் - பாவக்குழியில் ஆழ்ந்த அமணர், கையர்கள் - கீழ்கள்; செறுத்து - மேற்கொள்ளலாகாத சினத்தைத் தாங்கி; முறித்த - தளிர்த்த; "முறிமேனி" - குறள் - (1113), கொழுந்தாகிய. "முறியே தளிரே" (தொல் - பொ. 642); வாள் முறித்த - ஒளி முகிழ்த்த;—(5) அருகர் திறங்களைச் சிந்த - அமணர்களது கொள்கைகளைச் சிதறுவிக்க; அழிக்க - முறிய என வருபவற்றின் கருத்தினை விளக்கியவாறு காண்க; மேல் "திறமழிய" (7) என்பதும் இக்கருத்து. சிந்த - சிதறுவிக்க. பிறவினைப் பொருளில் வந்தது,—(6) விளிவுட்டு சிந்தை - இகழும் மனம்; ஒட்டி - ஒட்டி;—(7) விழலதென்னும் - வீண் எனனும்; பழுது என்ற சொல்லும்; அது - பகுதிப் பொருள் விகுதி,—(8) நீற்று...நில்லா அமணர் - சமணர் சைவத்திறத்தின்மேல் வைத்த வெறுப்பினையும் பகைமையினையும் அளவுபட எடுத்துக் காட்டியபடி; திருநீற்று மேனியுடைய சிவனடியார்மேற் பொருந்திய காற்றுத் தானும் தம்மேல் அணையப்பொறுத வன்கண்மை பொருந்திய உள்ளம் உடையார் என்றது, தேற்றி - உண்மையை உலகமறியச் செய்து; ஆற்ற - மிகவும்,—(9) சீலம் - பெருமை விளங்க,—(10) தேன்ற - அழிய; கன்று - பகைத்த;—(11) விடைகொண்டு - மதித்த - அருட்குறிப்பினை உணர்ந்து வாதின் மேற்செல்ல விடை பெற்ற உட்குறிப்புடன் விண்ணப்பித்த.

2639. நாதர்தம் மருள்முன் பெற்று நாடிய மகிழ்ச்சி பொங்கப்
போதுவார் பணிந்து போற்றி விடைகொண்டு புனித நீற்று
மேதகு கோலத் தோடும் விருப்புறு தொண்டர் சூழ
மூதெயிற் கபாட நீடு முதற்றிரு வாயில் சார்ந்தார். ௭௬௧

(இ - ள்) நாதர் பெற்று - இறைவரது திருவருட் குறிப்பினை முன்னே பெற்றுக்கொண்டு; நாடிய ...போற்றி - நாடியிருந்த அருள் உணரப்பெற்றமையாற் பெற்ற மகிழ்ச்சி பொங்கும்படி போவாராகி வணங்கித் துதித்து; விடைகொண்டு - வாதின் மேற்கொண்டு செல்ல இறைவர்பால் அருள் விடை பெற்றுக்கொண்டு; புனித நீற்றின் ..சார்ந்தார் - தூய திருநீற்றின் அணி விளங்கும் மேன்மையுடைய

திருக்கோலப் பொலிவினுடனே அன்புடைய திருத்தொண்டர்கள் சூழ்ந்துவரப் பழமை யாகிய மதிலின் நிலைவாயில் பொருந்திய முதற்றிருவாயிலினைச் சார்ந்தருளினார்.

(வி - ரை) அருள்முன் பெற்று - இறைவரது திருவருட் குறிப்பினைத் தமது திருவுள்ளத்தில் முன் உணரப்பெற்றவராகி.

நாடிய மகிழ்ச்சி - நாடிய பொருளைப் பெறப்பெற்றமையாற் போந்த மகிழ்ச்சி.

விடைகொண்டு - வாதத்தின் மேற்செலவுதற்கு விடைபெறுதலே இப்பதிகக் குறிப்பாமென்பது "கோனை விடைகொண்டு...மதித்தவிப் பாடல்" என்ற திருப் பதிகத்தாலறிக ; பதிகத்துட் " கோன் " என்றதும அரசனையின்றி அடியவர்க்குச் செயலில்லை என்ற குறிப்புந்தந்து நின்றது. சொக்கநாதர் மதுரையின் அரசாட்சியுடை யவர் என்ற வரலாற்றுக்குறிப்புமாம்.

முதற்றிருவாயில் - கோயிலினுட் செல்லும்போது புகும் முதல வாயில்; கபாடம்- கதவு. 741

2640. அம்மலர்க் குழலி னார்க்கு மமைச்சர்க்கு மருள வேண்டிச்
செம்மணிப் பலகை முத்தின் சிவிகைமேற் கொண்ட போதில்
எம்மருங் கினிலுந் தொண்ட ரெடுத்தவாரப் பெல்லை யின்றி
மும்மைநீ டுலக மெல்லா முழுதுட னிறைந்த தன்றே. எ௪உ

(இ - ள்) அம்மலர்க் குழலினார்க்கும்...போதில் - அந்த மலர்களையுடைய குழலை யுடைய அம்மையாருக்கும் அமைச்சனாராகிய குலச்சிறையாருக்கும் அருள் புரிய வேண்டிச் சிவந்த மணிகள் பொருந்திய பலகையுடைய முத்துச் சிவிகையின்மேல் பிள்ளையார் எழுந்தருளியபோது; எம்மருங்கினிலும் ..ஆர்ப்பு - எல்லாப் பக்கங்களிலும் தொண்டர்கள் எடுத்திசைத்த ஆரவாரவோசை; அன்றே - அப்போதே; எல்லை யின்றி...நிறைந்தது - அளவிலலாது பெருகி மூன்றாகிய நீண்டவுலகங்களில் எங்கும் நிறைந்தது.

(வி - ரை) அம்மலர்க் குழலினார்க்கும் அமைச்சர்க்கும் - அகரம் தமமிடம் புக லடைந்த அரசனை ஆட்கொண்டருளும்படி விண்ணப்பித்த அந்த என்று (2631) முன்னறிசுட்டு. அவ்வமைச்சர்க்கும் எனச்சுட்டு ஈண்டும் கூட்டுக. அம் - அழகிய என்றலுமாம்.

குழலினார்க்கும் அமைச்சர்க்கும் அருளவேண்டி - அரசனையும் நாட்டினரையும் ஆட்கொண்டருளுதல் இவர்கள் பொருட்டேயாம் என்பது; இவர்களது விண்ணப்பமே இவ்வருளிப்பாட்டுக்குக் காரணமாதலும் கருதுக.

செம்மணிப்பலகை - மணி - அழகு என்றலுமாம்.

மேற்கொள்ளுதல் - மேலே எழுந்தருளி மேற்செலல் ஒருப்படுதல்.

மும்மை - ஈண்டு எண் குறித்து நின்றது ; " தமிழ் மும்மை " என்புழிப்போல

தொண்டர் - பிள்ளையாருடன் போந்த திருக்கூட்டம். 742

2641. பல்லிய நாதம் பொங்கப் படர்திரு நீற்றின் சோதி
நல்லொளி வட்ட மாகி நண்ணிமேல் வருவ தென்ன
வில்வளர் தரளக் கோவை வெண்குடை நிழற்ற, வெவ்வே
றெல்லையில் முத்தின் காளந் தாரைசங் கெங்கு மோத ; எ௪௩

2642. கண்ணினுக் கணியா யுள்ளா ரெழுச்சியிற் காட்சி பெற்றார்
நண்ணிய சமயம் வேறு நம்பின ரெனினு முன்பு

"பண்ணிய தவங்க ளென்கொல் பஞ்சவன் றஞ்ச மேவிப்
புண்ணிய மூர்த்தி வந்து மதுரையிற் புகுந்த" வென்றார். ௭௭௪

2641. (இ - ள்) பலவிய நாதம் பொங்க - பலவகைப்பட்ட இயங்களின் ஓசை மிக்கு எழுந்திசைக்க; பட...நிழற்ற - எங்கும் படர்ந்து பெருகும் திருநீற்றின் சோதியானது நல்ல ஒளிவட்டமாக உருவெடுத்துப் பொருந்தி மேலே வருவதுபோல ஒளிபெருகும் முத்துக் கோவைகளையுடைய வெண்குடையானது மேலே நிழலைச் செய்ய; வெவ்வேறு...ஓத - வேறு வேறாக அளவில்லாத முத்துக் காளமும் தாரையும் சங்கங்களும் எங்கும் இசைக்க, ௭௭௩

2642. (இ - ள்) கண்ணினுக்கு...எனினும் - கண்ணினுக்குரிய அணியாக விளங்கும் பிள்ளையாரது திருவெழுச்சியின் காட்சியினைப் பெற்ற அந்நகர மாந்தர்கள் தாங்கள் சார்ந்த சமணமாகிய வேற்றுச் சமயத்தை நம்பினராயினும்; பஞ்சவன் றஞ்ச மேவி - பாண்டியன் அடைக்கலம் புகும் பொருளாகப் பொருந்தி; புண்ணிய . புகுந்த - புண்ணிய வடிவினராகிய இவர் தாமே வந்து மதுரையிற் புகுவதற்கு; பண்ணிய தவங்கள் என்கொல்? - (இப்பாண்டியன்) முன்னே செய்த தவங்கள் தாம் எவையோ? என்றார் - என்று சொன்னார்கள். ௭௭௪

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2641. (வி - ரை) பொங்க - நிழற்ற - ஓத(ச்) செல்லும் எழுச்சி என, வரும் பாட்டுடன் முடிக்க.

திருநீற்றின் சோதி - ஒளி வட்டமாக நண்ணி மேல் வருவ தென்ன வெண்குடை நிழற்ற என்றது மேலே கவிந்து நிழற்றும் வெள்ளிய முத்துக் குடையானது திருநீற்றின் பரந்த ஒளி ஒரு வட்டமாகப் பொருந்தி மேல் வருவது போல இருந்த தென்பது மெய்யும் உருவும்பற்றி வந்த உவமம் மதியைச் சூழ்ந்து பரிவேடம் ஒளி வட்டமாகப் பொருந்தும் காட்சி இங்கு நினைவு கூர்தற்பாலது; "சிவிகையின் மேற் சேவித்து வருநிலவு தருமதிபோல் வளரொளிவெண் குடைநிழற்ற" (2546) என்று முன் கூறிய கருத்தும், திருநீற்றுத் தொண்டர் குழாத்திற்கு நிலவின் கடலை உவமித்தது "திரண்டுவருந் திருநீற்றுத் தொண்டர் குழா மிருமருங்குஞ் சேர்ந்த போதில், இரண்டு நிலவின் கடல்க ளொன்றாகி யணைந்தனபோ லிசைந்த வன்றே" (1498) என்றதும் ஆண்டுரைத்தவையும் இங்குக் கருதற்பாலன.

படர் திருநீற்றின் சோதி - படர் திருநீறு என்றும், படர் சோதி என்றும் ஈரிடத்தும் கூட்டுக.

வெண்குடை நிழற்ற - அரச அடையாளமாகிய பத்து அங்கங்களுட் சிறப்புடைய ஒன்றாதலின் ஈண்டுக் குடையினை இவ்வாறு சிறந்த உவமானத்தாற் சிறப்பித்துக் கூறினார்.

வெவ்வேறு - ஓத - என்க; தாளம், தாரை, சங்கு இவற்றின் ஓசைகள் வெவ்வேறாதல் காண்க. முத்தின் என்பதனைத் தாரை என்பதனுடனும் கூட்டுக. ஓதுதல் - புகழ்களை எடுத்து ஒலித்தல். வில்வளர் தாளக்கோவை - வில் - ஒளி; முத்துக்கள் கோத்து அணிபெற அமைத்த.

நாதமோங்க் - எங்குமோத்த - எங்குமுத - என்பனவும் பாடங்கள். 743

2642. (வி - ரை) கண்ணினுக்கு அணியாய் உள்ளார் - கட்புலனுக்காட்சிக்குப் பேரழகுடையாராய் விளங்கும் பிள்ளையார்; செவி - கை முதலியவற்றுக்குப் போலக் கண்ணுக்கு அணிகலம் இடுவாரிலர்; ஏனையவற்றிற் சிறப்புடைய கண்ணுக்கணியின்றி யிருத்தல் சாலாமையின் சிறந்த அதற்குச் சிறந்த அணியே வேண்டும், அச்சிறந்த அணி

யாவது பிள்ளையாரது அழகினைக் கண்டலே யாம் என்பது. "நாவினுக் கருங்கல நமச்சி வாயவே" (அரசு - தேவா); "கண்ணுக் கணிகலங் கண்ணோட்டம்" (குறள்) என்பனவாதி கருத்துக்கள் காண்க.

உள்ளார் எழுச்சி - உள்ளாரது எழுச்சி; ஆறும் வேற்றுமைத் தொகை.

எழுச்சியிற் காட்சி பெற்றார் - எழுச்சியினைக் கண்ணாரக் காணும் பேறு பெற்றவர்கள்.

**வேறு சமயம் நண்ணினர் நம்பினர் எனினும் - காட்சி பெற்றார் என்றார்** - என்று கூட்டுக. **நண்ணிய,** என்றதனால் முன்பு தொன்று தொட்டு வரும் தமது சமயமல்லாது புதிது புகுந்த சமயம் என்றும், **வேறு** என்றதனால் அது புறச்சமய மென்றும், **நம்பினர் எனினும் - என்றார்** - என்றதனால் அதில் கொண்ட நம்பிக்கை புறத்தளவில் ஒழிய அதனை அடிப்படுத்தி உள்ளூற நின்ற முன்னைய வுண்மை யுணர்வே மேம்பட்டு வெளி வந்தது என்றும் கூறியது கண்டு கொள்க.

**எழுச்சியிற் காட்சி பெற்றார்** - இவர்கள் நகரமாந்தர். சமணத்திற் புதிதாகப் புக்கவர்கள்; சமணக் குருமார் வேறு; அவர்களே கண்டு முட்டு முதலிய கொடிய கொள்கை பற்றி நின்று வாதில் வென்றழிக்கப்பட்டவர் என்பதறிதல் வேண்டும்; அக்குருமார் வயப்பட்டு எழுச்சி காணாது சென்றோரும், அன்றிப் பொறுமை உணர் வின்மை, ஊழின்மை, அறியாமை, மடிமை முதலியவற்றால் காணாது ஒழிந்தோரும் நீங்க, ஏனையோர்களில் எழுச்சியின் காட்சிப் பேறு பெற்ற நகர மாந்தர்கள் என்பதாம்.

"**முன்பு பண்ணிய ..புகுத" என்றார் - முன்பு** - முற்பிறவிகளில்; "படிமுறை யானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே அமையாதென்பது உணர்த்துதற்கு முற் செய்த தவம் என விசேடித்தார்" என்று வரும் சிவஞான போதக (8-சூத்) கருத்துக்கள் காண்க. அன்றியும், இப்பிறவியில் அரசன் சமணரது மாயத்தழுந்தி அபசாரப்பட்டுக் கிடத்தலால், இப்பேறு கிடைத்தற்குரிய தவம் ஏதும் செய்திலனாதலின் இது முன்பு பண்ணிய தவங்களின் பயனாகப் பெற்றப்பே றென்றார்; **தவங்கள்** - ஒரு வகையாலன்றிப் பல படியாகவும் தவங்கள் செய்திருந்தாலன்றி இது பெறுதல் அரிதாம் என்பது.

**என்கொல்? -** எவையோ? யாம் அறியோம் என்றபடி. எதிர்மறை அனுமானத்தால் முன்னைத் தவங்களுண்டென்று நிச்சயித்துக் காண்பதன்றி அவை இன்ன வென்பதறிகின்றிலம் என்றார் என்க.

**பஞ்சவன் தஞ்சம் மேவி - பஞ்சவன்** - பாண்டியன்; **தஞ்சம் -** அடைக்கலம் புகுமிடம்; **மேவி** - தாமாகமுன் வந்து; பஞ்சவனுக்கு அடைக்கலம் புகுமிடமாகத் தாமே வலிய எழுந்தருளி; நான்கனுருபு தொக்கது.

**புண்ணிய மூர்த்தி** - புண்ணியமே வடிவாக வுடையவர்;

**மூர்த்தி** - மூர்த்திமான் உண்ணிறைந்து இருத்தற்கிடம் மூர்த்தி எனப்படும்; ஆசனம் - மூர்த்தி - மூர்த்திமான் என்னும் சிவாகம மரபு காண்க.

**வந்து - புகுத** - அறியாது கிடக்கும் அரசன் முன்பு தாமே எழுந்தருளி வந்து புகுவதற்கு.

**எழுச்சியிற் காட்சி பெற்றார் - தவங்கள் என்கொல் - என்றார் - காட்சி** என்பது அகப்பொருணிகழ்ச்சிகளில் முதலில் நிகழ்வது, அதன் பின்பு ஐயம், தெளிதல், நயப்பு, உட்கோள், தெய்வத்தை மகிழ்தல் என்பன முறையே நிகழ்வன. அவற்றி னியல்பு எல்லாம் அகப்பொருளிலக்கியமாகிய திருக்கோவையாருள்ளும், பொருளிலக்கணத்துள்ளும் விரிக்கப்படும். ஆண்டுக் கண்டு கொள்க. ஈண்டுப் பிள்ளையாரது

எழுச்சியினால் இருபாலும் காட்சி என்ற நிகழ்ச்சியுடன் படும் நல்லூழ் பெற்றோர் பஞ்சவன் தஞ்சமாக வந்து இப்புண்ணிய மூர்த்தி தாமே நமது மதுரையிற் புகுந்து எங்களுக்குக் காட்சியருளி ஆட்கொள்ள வந்த பெருமையினைப் பெற நாங்கள் முன்னையிற் செய்த நல்ல புண்ணியம் தான் என்னே? என்ப பிறிதொரு பொருளும் குறிப்பிற் பெறப்படுதல் காண்க; "இக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த, விளைவையல் லால்விய வேனய வேன்றெய்வ மிக்கனவே" (திருக்கோவை - 6); "பிணியு மதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின்னும், பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே" (ஷை - 5) முதலிய திருவாக்குக்களின் கருத்துக்கள் ஈண்டு வைத்துக் கருதத்தக்கன.

சமணர் கொளுவிய தீ பிள்ளையார்பால் அணுகாது, கொளுவுதற் கிசைந்த அவர்களது அரசன்பாலே அணுகி அவர் ஆணையினால் தீப்பிணியாய் எழுந்ததுவும், அப்பிணியினைத் தீர்த்தற்கும் அவரருளே ஆணையாய் எழுந்து போந்ததும் என்றிவ்வொரு காட்சி கண்ட துணையானே, தாம் முன் கொண்ட மையல் நீங்கினவர் இங்குக் கூறும் நகரமாந்தர்; இனி, இதன்மேல், பிள்ளையாரது ஆணையினால் மருவும் தீப்பிணி நோய் தீர்ந்து வழுதியுமுழுதும் உய்ந்தமையும், அனல் வாதத்திற் பிள்ளையாரது அருளின் வெற்றிப்பாடும் கண்டு புனல் வாதத்தினை மேற்கொண்டு பிள்ளையார் எழுந்து போதுவதனைக் காணும் நகர மாந்தர்களாகிய மாதர் மைந்தர்கள், அக்காட்சித் துணையாக "நம் விழுமந் தீர்த்த ஞானசம்பந்த ரிந்த நாயனார் காணீர்" (2700); "நாதனு மால வாயி னம்பனே காணும்" (2702), "போற்றுவா ரெல்லாஞ் சைவ நெறியினைப் போற்றும்" (2706) என்பனவாதியாக மேலும் உண்மையுணர்ந்து கூறும் உயர்தரம் காண்க, இவர்கள் முன் கூறியவர்களின் அடுத்த மேல்தரமாகிய பக்குவமுடையோர்; இனி, அதன் மேல் வைகைக் கரையாகிய தீட்சா மண்டபத்தில் பாண்டியனுக்குப் பெருங் குருவாகிய பிள்ளையார் திருப்பாசுரத்தால் ஞானோபதேசம் செய்து ஆட்கொண்டு திருநீறு அளித்தபோது புனல் வாதத்தின் வெற்றியும் கண்டு, தாமும் உய்ந்து, "மற்றவர் மதுரை வாழ்வார், முன்னரி னொன்றாக வெல்லாந் தூயநீ றணிந்து கொண்டா ராகி" (2755) ஆட்கொள்ளப் பட்டவர் அதற்கடுத்த மேல்தரமாகிய பக்குவமுடைய நகர மாந்தர்; என்றிவ்வாறு பலதிறப்பட்ட பக்குவான்மாக்களுக்கும் எமது ஞான குருநாதர் அருளிச் செய்த பலதிறப்பட்ட அருளின் வண்ணங்களைக் கண்டு கொள்க. 744

2643. தென்னவன் றேவி யார்நற் றிருமணிச் சிவிகை மீது
பின்வர, வமைச்சர் முன்பு பெருந்தொண்டர் குழாத்துச் செல்லப்,
பொன்னணி மாட வீதி யூடெழுந் தருளிப் புக்கார்
கன்னிநா டுடையான் கோயில் காழிநா டுடைய பிள்ளை. ௭௪௫

(இ - ள்) தென்னவன் ...பின்வர - பாண்டியனது தேவியாராகிய அம்மையாரும் அழகிய மணிகளையுடைய சிவிகையினை மேல் கொண்டு தமது பின்னே வரவும், அமைச்சர்...செல்ல - அமைச்சனாராகிய குலச்சிறையார் தமது முன்பு திருத்தொண்டர் கூட்டத்துடனே கலந்து செல்லவும்; பொன்னணி... எழுந்தருளி - இவ்வாறு பொன்னணிகளையுடைய மாடவீதியின் வழியாக எழுந்தருளிச் சென்று; காழிநாடுடைய பிள்ளை - சீகாழி நாட்டுத் தலைவராகிய பிள்ளையார்; கன்னி நாடுடையான் கோயில் புக்கார் - கன்னி நாட்டரசனாகிய பாண்டியனது அரண்மனையினுள்ளே புகுந்தனர்.

(வி - ரை) முன் பாட்டில் பிள்ளையார் திருவீதியில் எழுந்தருளி வரும் எழுச்சியின் சிறப்பினைக் கண்ட நகர மாந்தர் வாக்கில் வைத்துக் கூறினார்; இப்பாட்டில், அவ்வெழுச்சியினுடன் அம்மையாரும் அமைச்சனாருமுடன் கலந்து செல்லும் நிலையினைக் கூறுகின்றார்.

**தென்னவன்.. பின்வர - அமைச்சர் முன்புசெல்ல** - அம்மையார் பிள்ளையாரது பின்பும், அமைச்சனார் முன் செல்லும் திருக்கூட்டத்துடன் முன்புமாகச் சென்றனர்; அம்மையார் காலவழக்குக்கும் அரசுமரபு வழக்குக்கும் ஏற்பச் சிவிகையிற் பின் சென்றனர், அமைச்சர் முன்பு தாம் ஊர்ந்து வந்த குதிரையை விட்டுத் தொண்டர்களுடன் நடந்து சென்றனர் என்க; பின்பு வரும் அம்மையாரை முன் வைத்துக் கூறியது சிறப்புப்பற்றி; அமைச்சனார் பரியிலேறித் திருமடத்துக்கு வந்தமை "வருபரியிழிந்து" (2624) என்றதனாலறிக. பிள்ளையார் திருத்தொண்டர் கூட்டத்துடன் செல்லும்போது தாம் பரிமிசைச் சேறல் மரபன்றாதலின் அமைச்சனார் பெருந் தொண்டர்குழாத்துடன் கலந்து முன்பு நடந்து சென்றனர் என்பது, இதனை அவர் ஊர்ந்து வந்த பரியைப்பற்றிக் கூறாது விட்ட தன்மையாற் கருதி யறியவைத்த கவிநயமும் கண்டு கொள்க; எஞ்ஞான்றும் தொண்டர் குழாத்தினை வணங்கி வழிபடும் நிலையினின்றவர் குலச்சிறையார் என்பது அவர்தம் புராணத்துட் கூறியவாற்றானறிக.

**பிள்ளை - கோயில் - புக்கார்** - என்று கூட்டுக, **காழிநாடுடைய பிள்ளை - கன்னி நாடுடையான்** - என்றமையால் பிள்ளையாரும் அரசனும் ஒப்பத் தத்தம் நிலையில் நாடுகாவல் உடையோர் என்பது குறிக்கப்பட்டது, தடாதகைப் பிராட்டியார் ஆண்டதனால் கன்னிநாடு என்பது பாண்டியநாடு; அரசனும் பிள்ளையாரருளால் இனி சைவத்தலைமை பெறநின்றமை குறிப்பு; பின்னர் "சோற்றவன் - சண்பைப் புரவலர்" (2644) என்னும் குறிப்பும் காண்க

**குழாத்துட் செல்ல**—என்பதும் பாடம் 745

2644. கொற்றவன் றன்பான் முன்பு குலச்சிறை யாரவந் தெய்திப்
பொற்றட மதில்சூழ் சண்பைப் புரவலர் வரவு கூற,
முற்றுயர் சிறிது நீங்கி முழுமணி யணிப்பொற் பீடம்
மற்றவன் "முடியின் பக்கத் திடு"கென வல்ல னானான். ௭௪௫

(இ - ள்) கொற்றவன் . கூற - அரசனிடத்து முன்னால் குலச்சிறையார் வந்து சேர்ந்து அழகிய பெரிய மதில் சூழ்ந்த சீகாழித் தலைவராகிய பிள்ளையாரது வருகையை அறிவிக்க; முற்றுயர் சிறிது நீங்கி - முன் இருந்த துன்பம் சிறிது நீங்கப் பெற்று; மற்றவன் - மற்று அந்த அரசன்; முழு மணியணி பொற்பீடம் - முழுதும் மணிகளை அணியாகவுடைய பொற் பீடத்தை; முடியின் பக்கத்தே இடுக என - தனது முடியின் பக்கத்தே இடுக என்று சொல்ல; வல்லன் ஆனான் - வலிமை பெற்றவனாயினான்.

(வி - ரை) **கொற்றவன் - புரவலர்** - முன் பாட்டின் குறிப்புப் பார்க்க.

**முன்பு** - பிள்ளையாரும் ஏனையோரும் வரும் முன்னர்; இவ்வாறு முன்பு வந்து அறிவிப்புச் செய்து வரவேற்கும் வகையில் ஒழுங்கு படுத்திப் பீடமிடச் செய்து வைத்தல் அரச காரிய ஒழுங்கு முறைகளுள் ஒன்று.

**வரவுகூற முற்றுயர் சிறிது நீங்கி** - நல்வரவு கேட்ட அத் துணையாலே முன் இருந்த துயர் சிறிது நீங்கப் பெற்றான் என்க காரணப் பொருள்படக் **கூற - நீங்கி** என்றார்; **கூற** - கூறக் கேட்டதனால்; "**கூற - சொல்ல - ஆனபோ தயர்வு தன்னை யகன்றிட**" (2619) என்றது காண்க.

**நீங்கி** - நீங்கப் பெறுதலால்; துயர் நீங்கியதனால் நல்லறிவு சிறந்தே வர என்பதுமாம்.

**முழுமணி அணிப் பொற்பீடம்** - பிள்ளையார் எழுந்தருளுதற்கேற்ற நல்ல ஆசனம். பெரியோர் எழுந்தருளு முன்னமே அவர்க்குத் தக்க ஆசனமமைத்தல் இற்றைநாளினும் நாகரிக வழக்கு.

**"முடியின் பக்கத் திடுக"** என - பிள்ளையார் தன் முடியின்கீழ் வீற்றிருக்கத் தக்கார் என்றுட்கொண்டு வழிபடும் முறையால் இவ்வாறு அரசன் கூறியது திருவருட் குறிப்பினால் எழுந்தது உய்யும் காலம் அணிமையாதற் குறிப்பு; மேல் "செல்கதிக் கணிய னானான்" (2667) என்பது காண்க.—"நல்லநெறி, யெய்துவதோர் காலந்தன்னைப் பரைக்கண் டின்புறுதல், உய்யு நெறிசிறிதே யுண்டாகி" (போற்றிப்பஃறொடை) என்ற ஞானசாத்திரமுங் காண்க.

**மற்றவன்** - வேற்றுச் சமயத்துட்பட்டு நின்ற அவனும் எனக. உம்மை தொக்கது; "நண்ணிய சமயம் வேறு நம்பினனெனினும்" (2642) என்று நகர் மாந்தர்க் குரைத்த உண்மை அரசன்பாலும் பொருந்தியதாயிற்று என்பதாம்.

**சிறிது நீங்கி** - முழுதும் நீங்கி உய்யும் தன்மை மேல் "முழுதும் உய்ந்தான்" (2668) என்பதனுட் காண்க.

**வல்லன் ஆனான்** - திறம்பெற்றவனாயினன்; ஆக்கச்சொல் அருமைப்பாடு குறித்தது. 746

2645\. மந்திரி யாரைப் பின்னு மெதிர்செல மன்ன னேவச்
சிந்தையுண் மகிழ்ந்து போந்தார்; செயலையான் சமபத் துளளோர்
பைந்துண ரலங்கன் மன்னன் பரிசுகண் "டிதுவோ பண்பால்
நந்தனிச் சமயந் தன்னை நாட்டுமா" றென்று பின்னும், ௭௪௭

2646\. "நின்னற நெறியை நீயே காத்தருள் செய்தி யாகில்
அன்னவர் தம்மை யிங்கே யழைத்தனை யவரும் யாமும்
முன்னுற வோக்கத் தீர்க்க மொழிந்துமற் றவரால் தீர்ந்த
தென்னினும் யாமுந் தீர்த்தோ மாகவு மிசைவா" யென்றார். ௭௪௮

2645 (இ - ள்) மந்திரியாரை...ஏவ - மேலும், எதிர் சென்றழைத்து வரும்படி அமைச்சனாரை அரசன் ஏவியிட, சிந்தையுள் மகிழ்ந்து போந்தார் - மனத்தினுள் மிக மகிழ்ச்சி கொண்டு அவரும் போந்தனர்; செயலையான...கண்டு - அசோகினாகிய அருகனது சமயத்தில் உள்ள அமணர்கள் பசிய கொத்துக்களாலாகிய வேப்பமாலையை அணிந்த மார்பையுடைய பாண்டிய அரசனது தன்மையினைக் கண்டு; "இதுவோ...நாட்டுமாறு?" என்று - நமது ஒப்பற்ற சமயத்தினைப் பண்பினால் நாட்டும் வழியிதுவோ? என்று கூறி; பின்னும் - மேலும் சொல்வாராகளாய், ௭௪௭

2646 (இ - ள்) நின்...ஆகில் - உனது அறநெறியாகிய சமயத்தை நீயே காத்தருள் செய்வாயானால்; அன்னவர்...அழைத்தனை - அவரை இங்கே வரும்படி அழைத்தாய், (அவ்வாறு அழைத்தாலும்), அவரும்...மொழிந்து - அவரும் நாங்களும் உனது முன்னே ஒருங்கு கூடி இந்நோயைத் தீர்க்கும்படி சொல்லி, மற்று...இசைவாய் என்றார் - மற்று அவரால் நோய் தீர்ந்தாலும் நாங்களும் தீர்த்தோம் என்று சொல்ல உடன்படுவாயாக என்று சொன்னார்கள். ௭௪௮

இந்த இரண்டு பாட்டுக்களும் ஒரு முடிபு கொண்டன.

2645 (வி - ரை) **மந்திரியாரை...ஏவ** - பின்னும் - பொற்பீடம் முடியின் பக்கத்திடுக என ஏவியதனோ டமையாது மேலும்;

**எதிர்கொள** - முன் சென்று பிள்ளையாரை எதிர் கொண்டு அழைத்து வரும்படி; ஆசனத்தை முன்னே கற்பித்துப் பின் மூர்த்தியை அழைத்து அதில் எழுந்தருள வைத்துப் பூசிக்கும் முறை கருதுக;

பிள்ளையாரது வருகையைத் தானும் கேட்டுமுட்டு என்று வருந்தியும், திருமடத்தில் வெந்தழற்பட விளைசை மந்திரத்தொழில் விளைக்க அமணர்க்குடன்பட்டிருந்தும், (2557) கவலையோடு முகம்புலர்ந்து (2588) அவரை நகரினின்றும் வெளிப் போக்க எண்ணியது முன்னை நாளிரவில் அரசனது நிலை, இது "காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவி" என்றபடி மலத்தால் கட்டுண்டு நன்மை தீமை யறியாது "நன்றெலாந் தீதாயுந் தீதெலா நன்றாயும், கன்றி வரும்" உயிர்களின் நிலை, அவ்வாணவமாக்களபால் இறைவரது திரோதான சத்தி பிறவி வெம்மைப் பிணியின் உருவில் போந்து தொழில் செய்யச் செய்ய அவ்வாணவ இருள் சிறிதுசிறிதாக நீங்கி நல்லறிவு படிப்படியாக வெளிப்பட்டு நற்றொழிலில் செலுத்தும் என்பது ஞான நூற்றுணிபு; ஈண்டு, "அமணர் கொளுவும் சுடர், பையவே சென்று **பாண்டியற் காகவே**" என்ற அருளிப்பாடாகிய நோய் தொழிற்படவே, முன்னர் வெறுப்புக்கொண்டு வெளிப் போக்க எண்ணியது மாறிப், பிள்ளையாரது வருகையில் விருப்பம் உண்டாயிற்று; அவரது நாம மந்திரமும் கூறி, அவர் விரும்பி நோக்கிற், தீயவிப் பிணியே யன்றிப் பிறவியும் தீரும் என்றபோது அவர் வந்தால் அவரது அருளா லிந்நோ யகலுமேல் அறிவேன் என்று (2620) அவரை அழைத்து வர வுடன்பாடு விளைத்தது; அவர் வரவு கூற அவருக்குத் தன் முடியின் பக்கத்துப் பீடம் இடுக (2644) என்று கூறச்செய்தது; அதன் மேலும் எதிர் கொளும்படி அமைச்சரை ஏவச் செய்தது - (2645); முன்னர் அமணர் சொல்லு மெல்லாவற்றுக்கும் உடன்பட்டுநின்ற நிலை நீங்கிச் செய்தவப்பயன் வந்தெய்தும் செவ்வி முன் உற்றலாலே அமணர் கூறியவற்றை மறுத்துக் "கைதவம் பேச மாட்டேன்" (2647) என்னவும், பிள்ளையார் எழுந்தருளியதனைக் காணப்பெற்றபோது கையெடுத்தெய்த நோக்கி முடியின் பாங்கர்த் தமனியப்பீடங் காட்டவும், "செழுவுறு பதியாதென்று விருப்புடன் கேட்கவும்" (2651) ஆகும் நிலைகளையும் செய்தது; அருள் பதியப் பதியப் இருள் படிப்படியாக நீங்குதலும், நலம் அங்கங்கும் விளைதலும் இவ்வாறு பின் "தென்னர் கோனையும் யார்க்குந் திருநெறி நடாத்தனரே" (2758) என்பது ஈறாக வரும் எல்லா நிகழ்ச்சிகளிலும் படிமுறையில் வைத்து அங்கங்கே ஆசிரியர் காட்டக் கண்டுகொள்க; 2667 - 2668 - 2670 - 2690 - 2716 - 2717 - 2718 - 2755 முதலியவை பார்க்க.

**சிந்தையுள் மகிழ்ந்து** - இதுவரை அரசனது நலங்கருதித் தாமே செய்துவந்த அரசகாரியமாகிய பிள்ளையாரது வரவேற்பினை முன் அரசியார் ஏவல்வழி யமைந்து (2543) செய்ய நேர்ந்ததுபோல, இப்போது அரசனும் உடன்பட்டுப் பீடம் அமைக்கவும் எதிர் செல்லவும் ஏவியமையால் மகிழ்ந்தனர்.

**சேயலையான்** - அருகன்; சேயலை - அசோகமரம்; அசோகமரத்தின்கீழ் உள்ளவன் அருகக்கடவுள் என்பர். "செயலைத் தண்டளிர்" (முருகு).

**மன்னன் பரிசு** - இவ்வாறு பிள்ளையாரை வரச்செய்து உபசரிக்க ஒருப்பட்டு முற்பட்ட தன்மை.

**இதுவோ நாட்டுமாறு** - இது அமணர் அரசனுக்குச் சொல்லியது, தீமை செய்தேனும் தம் சமய நிலையை நாட்டுவது என்ற அமணரது கொள்கைக்கேற்பக் கூறியது; மேலும் தொடர்ந்து மேல்வரும் பாட்டிற் கூறும் நிலையும் காண்க. **இதுவோ** - ஓகாரம் இது அன்று என எதிர்மறை குறித்தது.

**பின்னும் - என்றார்** என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 747

2646 (வி - ரை) **நின் அறநெறியை நீயே காத்தருள் செய்தியாகில் - நின் அறநெறியை** - என்று அச்சமயத்தை அரசனது உடைமையாக்கக் கூறியது அரசனைத் தமது செயலுக்கு உடன்படுத்துதற் கருத்து; **நந்தனிச்சமயம்** என முன்பாட்டில் அரசனையும் தம்முடன் உளப்படுத்திக் கூறியதும், தமது நெறியின் மேம்பாடு காட்டிக் கூறியதும் இக்கருத்து; "தலைநெறியா கியசமயந் தனையழித்துன் னுடைய, நிலைநின்ற தொல்வரம்பி னெறியழித்த பொறியிலியை, அலைபுரிவாய்" (1354) என்று பாடலிபுரத்தில் அமணர் பல்லவனுக்கும் இவ்வாறே உரைத்த கருத்தும் காண்க. இஃது அரசனே சமய காவலனவான் என்ற பொதுவழியை அமணர் தமது நலங்கருதிப் பயன்படுத்திக்கொண்ட முறை. **செய்தியாகில்** - செய்வாயானால்;

**நீயே காத்தருள் செய்தியாகில்** என்றது சமயநெறி உனது உடைமை, உன் உடைமையைக் காத்தல் உனது கடமை; அரச கடமைகளிற் றிறம்பாது ஒழுக நீ மறுக்கமாட்டாய்; அறநெறியின் - என்று அமணர் தமது தீய கருத்தைப் புகட்டுதற்கு முன்னுரை - பீடிகை - கூறியபடி. **செய்தியாகில்** - இசைவாய் என்று கூட்டுக.

**அன்னவர் தம்மை இங்கே யழைத்தனை** - சமயநிலையின்படி காணக்கூடாத அவரை - அழைக்கக்கூடாத அவரை - நகரைவிட்டுப் போகுதற்குரிய அவரை - அவ்வாறே நீ அனுமதித்து உனது குரவர்களாகிய நாங்கள் முன் இரவு - "தீத்தொழில் விளைத்த அவரை - என்று இவ்வாறு பல குறிப்புக்களும்பெற **அன்னவர் தம்மை** என்று முன்னறிசுட்டினாற் கூறினார்;

**அழைத்தனை** - அழைத்தல் அடாத செயலே, ஆயினும் சில காரணம்பற்றி அழைத்துவிட்டாய்; இருந்தபோதிலும் நமது சமய காவலின் பொருட்டு அவ்வடாத செயல்தீர, இனி மேற்கொள்ளத்தக்கது நாம் கூறுமாறு இசையும் இஃது என மேற் கூறுதற்குரிய காரணமும் அமைதியும் காட்டியபடி.

**அவரும் ..இசைவாய்** - சமயக் கொள்கைக்கு மாறுபாடானதொரு அடாத செயலைச் செய்ய நேர்ந்தபோது மேலும் சமயநெறி வழுவாது அதனைத் தீர்க்கவல்லதொரு உபாயம் கைக்கொள்ளத்தக்கது என்பது முறை, இவ்விடத்தில் அத்தகைய உபாயம் இதுவேயாம் என்று அரசனை இசைவுபடப் புகட்டியபடி; "இக்கூற்றால் அக்காலச் சமணர் உண்மைச் சமணத்தின் செந்நெறியினின்றும் வழுக்கி வீழ்ந்தவர் என்பது வெள்ளிடைமலையென விளங்குதல் காண்க" என ஈண்டு விசேட ஆராய்ச்சியுரை செய்வாருமுண்டு; இது தவறான ஆராய்ச்சிமுறை என்பதை முன்னர்ப் பல விடத்தும் எடுத்துக் காட்டினோம்; "கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம்" (1302), "கொலையும் பொய்ம்மையு மிலமென்று கொடுந்தொழில் புரிவோர்" (1346); "கொலைபுரியா நிலைகொண்டு பொய்யொழுகு மமண்குண்டர்" (1354) முதலியவையும் பிறவும் காண்க. சமயத்திற்காகக் கொலை முதலியவும் செய்யத்தகும் என்னும் கொள்கை சமண சமயத்துக்கு மட்டுமேயன்றி, மற்றும் புறமும் அகமுமாகிய கூறுபாடுடைய பல சமயங்களினும் காணப்படும் என்பது அவ்வவற்றின் நூல்களானும், சரித வரலாறுகளானும் அறியப்படும் உண்மை; முற்காலமோ இடைக்காலமோ எதுவாயினும் சமண சமயம் இக்கொள்கையைக் கொண்டிருந்ததென்பது தேற்றம்;

ஆதலின் முற்காலச் சமணம் வேறு - அது உயர்ந்த நிலையினது என்றும், பிற்காலச் சமணம் அதனின்றும் வீழ்ந்துபட்டதென்றும், பிறவும் இங்குச் செய்யும் ஆராய்ச்சிகள் ஒரு சார்புபற்றி எழுந்த மயக்க உணர்வு காரணமாக வருவன எனக. 1344 - 1347-பாட்டுக்களினும், "நினையாதொரு போது மிருந்தறியேன்" (பதிகப்பாட்டுக் குறிப்பு - III பக்கம் - அஎ) என்றவிடத்தும், பிறவிடும் உரைத்த சமயநிலை பற்றிய குறிப்புக் களும் ஈண்டு மனங்கொள்ளத்தக்கன; சைவத்திறத்தில் இதுபோன்று வருவனவற்றின் உள்ளுறையும், இதற்கும் சைவநிலைக்கும் உள்ள வேறுபாடும், தண்டியடிகளுயனா புராணம் (7), கோட்புலி நாயனார் புராணம், எறிபத்த நாயனார் புராணம் முதலிய வற்றுட் கண்டுகொள்க.

**இசைவாய் என்றார்** - இங்கு அமணர் இவ்வாறு பொய்ம்மையுள் இசையும்படி புகட்டியது சமயக்காவலை மேற்கொண்டதும், தமது விருத்தியினையுட் கொண்டதும் ஆம்.

அறநெறியை - இவ்வமணர் இப்பொய்ம்மையைத் தம் சமயக் கொள்கையாக மேற்கொண்டனர் என்பது குறிக்க இங்கு **அறநெறி** என்றார். முன்பாட்டிற் "செயலை யான சமயத்துளனோர்" (2645) என்றும், "தனிச்சமயம்" என்றும், மேல்வரும் பாட்டில் "பொய்த்தவமாகக் கொண்ட" (2647) என்றும் கூறுதல் இக்கருத் துடையன. 748

2647. பொய்த்தவ மாகக் கொண்ட புன்றலைச் சமணர் கூறச்
செய்தவப் பயன்வந் தெய்துஞ் செவ்விமுன் னுறுத லாலே
"யெய்திய தெய்வச் சார்வா லிருதிறத் தீருந் தீருங்;
கைதவம் பேசமாட்டேன்;" னென்றுகை தவனுஞ் சொன்னான். எசக

(இ - ள்) பொய்த்தவமாக...கூற - (மேற்கண்டவாறு) பொய்யைத் தவமாகக் கொண்ட புன்மை பொருந்திய தலையினையுடைய அமணர்கள் சொல்ல; செய்தவப் பயன...உறுதலாலே - முன் செய்த தவத்தின் பயன் வந்து பயன்தரும் பக்குவம் முன்வந்து பொருந்துதலினாலே, எய்திய...சொன்னான் - சேர்ந்த உங்கள் தெய்வங் களின் சார்பினாலே இருபக்கத்தீர்களும் தீருங்கள், நான் நடுநிலை கோடி வஞ்சகம் பேசமாட்டேன் என்று பாண்டியனும் சொன்னான்.

(வி - ரை) பொய்த்தவமாகக் கொண்ட - பொய்யினையே தவமாக மேற் கொண்ட; முன்பாட்டில் அமணர் கூறியதனை அனுவதித்துக் காட்டியபடி; 2689 பார்க்க. தலைமயிர் பறித்தலை ஒரு தவமாகக் கொண்டவர் என்பதும் குறிப்பு.

**புன்தலை** - புல்லிய - புன்மையுடைய - தலை; புன்மையாவது மயிர் பறித்த லாலும், பிராணிபடும் என்று கழுவாது விடுதலாலும் இழிவுபடுதல்.

**செய்தவப்பயன்...உறுதல்** - பாண்டியன் முன்னைப் பிறவியிற் செய்த தவப் பயன் பக்குவப்பட்டு வந்து கூடும் சமயம் வாய்த்தல்; இதுகாறும் சமணர்களுடன் கூடி அவர்களது தீமைகளுக்கு உடன்பட்டு நன்மையறியாது நின்ற அரசன் இப் போது அவர்கள் கூற்றை மாறுபட்டு அவர்தங் கொள்கைக்கு உடன்பட மறுத்து நடு நிலையினின்றும் பிறழமாட்டேன் என்றது;

**கைதவம் பேசமாட்டேன்** - என்று கூறவந்த நிலை முன்னைத் தவத்தாலாகியது என்பது; அற்றாயின் அந்த முன்னைத்தவம் இதுகாறும் அமணர்களுடன்பட்டபோது கைகொடாது நின்றதென்னையோ? எனின், முன்னைத் தவம் பக்குவப்பட்டு வந்து கூடும் காலத்தேதான் வெளிப்பட்டுப் பயன்படும் எனக.

**செவ்வி** - தவப்பயன் வந்து கூடிப் பலிக்கும் பரிபக்குவ காலம்; பின்னர் "வினைக ளொத்தத் தலையெனக் கிற்றலாலே" (2717).

**உறுதலாலே - என்று - சொன்னான்** - என்று கூட்டுக. முன்னைத் தவப்பயன் வரும் செவ்வி கூடியிராதாயின் முன்போலவே அமணரது மாயைக்குட்பட்டு நிற்பன் என்பதாம்.

**எய்திய தெய்வச் சார்வால்** - நீங்கள் தனித்தனி பொருந்திய தெய்வங்களின் சார்பாகிய பலத்தினை, அவ்வவரின் தெய்வப் பதத்தினால். "மருத்து நூல்வா . தொழில் யாவையும் செய்யவும் மேன்மேல், உருத்தெழுந்தெப் புயிரையும் உருக்குவதா" யிற்று (2611). ஆதலின், மருந்தினாலன்றி மணி மந்திரங்களாகிய தெய்வப்பலத்தினாலே தீர்த்தற்கென்று கண்டிருந்துகொண்ட அரசன் கூறியபடி.

**இருதிறத்தீரும் தீரும்** - இருபக்கத்தவரும் தனித்தனி தீருங்கள், "ஒக்கத் தீர்க்க மொழிந்து" (2646) என்று அமணர் கூறியதை மறுத்து, அரசன் இருவரையும் வெவ்வேறு பிரித்துத் தீருங்கள் என்றான். இதுபற்றியே அமணர் "நாங்கள் - ஒருபுடை வாமபாகம், முன்னம் மந்திரித்துத் தெய்வ முயற்சியாற் றீர்த்தும்" என்று (2660) பின்னர்த் தமது தொழிலுக்கு இடத்தையும் காலத்தையும் வேறு பிரித்துக் கூறுவது காண்க.

**கைதவம்** - வஞ்சனை - தந்திரம் செய்யும் மனம்; அதுபற்றி வரும் மொழிக்கு ஆயிற்று, ஆகுபெயர்.

**கைதவன்** - பாண்டியர்களது மரபுப்பெயர்; **கைதவம் - கைதவன்** - சொற்பின் வருநிலை. **கைதவனும்** - முன்பெல்லாம் அமணர்களுடன்பட்டிருந்த அவனும் என உம்மை சிறப்பும்மை. 749

2648\. என்றவ னுரைப்பக் குண்ட ரெண்ணங்கெட் டழுந்த வெல்லைத்
தென்றமிழ் நாடு செய்த செய்தவக் கொழுந்து போல்வார்
வன்றனிப் பவன முன்னர் வாயிலு ளணைந்து மாடு
பொன்றிகழ் தரளப் பந்திச் சிவிகைநின் றிழிந்து புக்கார். ௭௫௦

**(இ - ள்)** என்றவன் எல்லை - என்று அரசன் சொல்ல அமணர்கள் தமது கருத்துச் சிதைந்து மனங் குன்றி இருந்த அளவில்; தென்றமிழ் போல்வார் - தென்றமிழ் நாடாகிய பாண்டியநாடு முன்னர்ச் செய்த செய்தக்க தவத்தின் கொழுந்து போல்வாராகிய பிள்ளையார்; வன்தனி...புக்கார் - வலிய ஒப்பற்ற அரண்மனையின் முன்புள்ள வாயிலினுள்ளே சேர்ந்து பக்கங்களில் பொன் பூண்டு விளங்கும் முத்துக்கள் நிரைத்த சிவிகையினின்றும் இறங்கி உள்ளே புகுந்தருளினார்.

**(வி - ரை)** எண்ணம் கெடுதலாவது கொண்ட கருத்து நிறைவேறாமையில் மனமுடைதல்.

**எல்லை** - நிலை; இருந்த வேலை என்பது பாடமாயின் இருந்தபோது என்றுரைத்துக் கொள்க.

**செய்த செய்தவம்** - சொல்லணி. **செய்தவம்** - செய்தக்கதாகிய நற்றவம்; "செய்தக்க" (குறள்) என்புழிப்போல, தவமென்ற பேரால் அதுவரை அமணர் செய்த செய்தக்கவல்லாத அவம்போலாது முன்னர்ச் செய்த செய்தக்க தவம் என்க.

**கொழுந்து** - பிள்ளையாரின் இளமை குறித்தது; இனிமேல் முற்றிய நன்மை விளைத் தரவுள்ள குறிப்பும் காண்க.

**வன்தனிப் பவனம்** - வன்மையாவது காவறகட்டு; பவனம் - அரணமனை.

**வாயிலினுள் அணைந்து - சிவிகை நின்று - இழிந்து** - வாயிலினுள்ளே வருமள வும் சிவிகையில் எழுந்தருளி வந்து அதனபின அரணமனையினுள அதினின் றிறங்கி வந்து என்ற முறை குறிக்க.

**புக்கார்** - அரண்மனையினுள்ளே அரசன இருந்த இடத்துப புகுந்தனர்.

மன்தனிப் பவனம்—என்பதும் பாடம். 750

2649. குலச்சிறை யாரமுன் பெய்தக், கொற்றவன் றேவி யாரும
தலத்திடை யிழிந்து சென்றா ; தண்டமிழ் நாட்டு மன்னன்
நிலத்திடை வானி னின்று நீளிரு ணீங்க வந்த
கலைச்செழுந் திங்கள் போலுங் கவுணியா தம்மைக் கண்டான். எடுக

(இ - ள்) குலச்சிறையார்..எய்த - அரசனிடம அறிவித்தபின குலச்சிறையார பிள்ளையாரது திருமுனபு வந்து சேர, கொற்றவன...சென்றா - அரசமா தேவியாரும அரணமனையினுள்ளே வந்து தமது சிவிகையினினறும இறங்கிச் சென்றனா; தண் தமிழ நாட்டு...கண்டான - தண்மையுடைய தமிழ நாட்டின மன்னனாகிய பாண்டியன் வானத்தினின்றும நீண்ட இருள நீங்குமபடி நிலத்தினில வந்த நிறைந்த கலைகளையுடைய செழித்த திங்களைப போலும கவுணியா பெருமானாகிய பிள்ளையாரைக் கண்டான.

(வி - ரை) முன்பு எய்த - திருவாலவாயினின்றும பிள்ளையார போத, முன்பு பெருந் தொண்டா குழாத்துச் சென்ற (2643) அமைச்சனா, அரண்மனையை அணு கியபோது அத்திருக்குழாத்தின முனபு நீங்கி, முன்னா விரைவிற சென்று அரண மனையினுள புக்கு அரசனுக்கு அறிவித்து, அவன ஏவலவழிப பீடம அமைத்து எதிர சென்று அழைக்குமபடி மீண்டு, பிள்ளையார முனபு வந்து எய்தினா எனக.

**கொற்றவன் தேவியாரும் தலத்திடை இழிந்து** - அரசனுக்கு முன அறிவிப்பின் பொருட்டும், ஆசனம அமைத்ததற்பின அவன ஏவல வழி அவனுக்காக எதிர் சென்ற ழைத்தற பொருட்டுமாக அமைச்சனா திருக்குழாத்தினீங்கி முன சென்றனா; அரசி யாரக்கு அத்தகைய அரசகாரிய மொன்று மின்மையின பிள்ளையாரைப பின்பற்றித் தொடர்ந்து தமது சிவிகையில வந்தனா; இழிந்து - தமது சிவிகையினின்றும கீழே இறங்கி. (2643)

**தண் தமிழ் நாட்டு மன்னன்** - வெப்பு நோய நீக்கிக் குளிரச்செய்ய வுள்ள தன்மைக குறிப்புப்பற்றித் **தண் தமிழ்** - என்று தண்மையோடு புணாத்தி ஓதினா; "தமிழுமாருதம" (313) என்ற குறிப்பு மிது, தண்மையைப பொதியமலைசசாாபு பற்றி நாட்டொடு புணாத்தித் **தமிழ்த் தண் நாட்டு** என்று கூட்டி உரைப்பினுமமையும். முன்னாத "தென்றமிழ் நாடு செய்த செய்தவம" (2648) என்ற குறிப்பு மிது; பிள்ளையாரது ஞானத்தமிழே இந்நலம் செய்வதாம என்பாா இனம்பற்றி அறிவித்த குறிப்புமாம்; "தமிழ் நாதன் ஞான சம்பந்தன" (ஆலவாய் - கொலலி - 11) என்ற பதிகமும காண்க.

**நீள் இருள் நீங்க வானினின்று நிலத்திடை வந்த** - என்க; நீள் இருள்; திணிந்த பிணிப்பாகிய அமண அக விருள; வான் - இங்கு அறிவொளி வானம் (சிதா காசம) குறித்தது; வானினின்றபடியே இவவிருணீக்குதல சாலாமையின நிலத்திடை வருதல் வேண்டப்பட்ட தென்பது குறிப்பு.

**கலைச் செழும் திங்கள் போலும்** - கலை - வளாவும குறைவும் படாத கலை; செழுமையாவது நிரமபியிருத்தல. "வளாமதிக் கொழுந்தை" (2625)

**திங்கள் போலும்** - ஞான அமுதக்கலையோடும் குளிர்ச்சி செய்தலால் திங்களை உவமித்தார், பயவுவமம் வெண்ணீற்றுப் பூச்சின் விளக்கத்தால் நிறம் பற்றி எழுந்த "இரண்டு நிலவின் கடல்கள் (1498)" என்றபடி உருவுவமமுமாம் "கலை வளர் மதியே" (1990) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. பிள்ளையாரது ஆண்டெல்லைப் பதினாறாக வரும் குறிப்பும் கொண்டது.

**கண்டான்** - முன்னை நாளிற் "கண்டுமுட்டடிக்கண் மார்கள் கேட்டு முட்டியானும்" (2590) என்ற அரசன், முற்செய் தவப்பயன் வந்தெய்தும் செவ்வியுற்றதனால் இங்கு அந்நிலை மாறி விருப்பொடும் கண்டான், அகப் பொருட்டுறைகளுள் காட்சி என முதற்கண் நிகழும் இயல்பெல்லாம் எண்ணு வைத்துக் கண்டுகொள்க, "நற்பெரும் பான்மைகூட்ட...விளங்கிழையவரைக் கண்டார்" (285), "பண்டைவிதி கடை கூட்டப் பரவையாரும் கண்டார்" (258), "விதியாற் கண்ணுற்றார்" (ஏயா கோன் - புரா. 226) முதலியவையும், முன் "காட்சிபெற்றார்" (2642) என்றவிடத்துரைத்தவையும் இங்கு வைத்துக் காண்க, "திங்கள் போலும் கவுணியர்" என உடம்பொடுபுணர்த்தி ஓதின குறிப்பினால் வெப்பமிக்கார்பாலே திங்களின் வரவு பயன் செய்யுமாறு, பயன் கூர்தர விருப்புடன் கண்டான் என்பது பெறப்பட்டது.

**நீளிருணீங்க நிலத்திடை வந்த திங்கள்** - "இருளிரண்டின் மாக்கள், சிந்தையுட் சார்ந்து நின்ற பொங்கிய இருளை-செங்கதிரவன் போல்நீக்கும்" (10) என்ற கருத்துக்கள் இங்கு வைத்துக் கருதத்தக்கன, முன்னர்ச் செங்கதிரவன் என்ற ஆசிரியர் இங்கு வெப்பு நீக்கமும் அமுத ஞானவொளியும் வேண்டப்படும் குறிப்புணர்த்தக் கலைசெழுந் திங்கள் என்ற தகுதியும் கவிநயமும் காண்க.

**கண்டான்** - இக்காட்சியின் சிறப்பும் பயனும் நோக்கி இதனை விதந்தெடுத்துத் தனியாக ஓதியருளினார், இதனால் விளைந்த மனநிகழ்ச்சியைப் புறச்செயலால் மேல் வரும் பாட்டிற் கூறுவதும் காண்க. 751

2650. கண்டவப் பொழுதே வேந்தன் கையெடுத் தெய்த நோக்கித்
தண்டுணர் முடியின் பாங்கர்த் தமனியப் பீடங் காட்ட
வண்டமிழ் விரகர் மேவி யதன்மிசை யிருந்தார் ; மாயை
கொண்டவல் லமண ரெல்லாங் குறிப்பினு ளச்சங் கொண்டார்.

(இ - ள்) **கண்ட...நோக்கி** - கண்ட அப்போதே அரசன் கைகளை எடுத்துத் தூக்கி வழிபடும் பண்பு பொருந்தும்படி நோக்கி; **தண்டுணர்.. காட்ட** - குளிர்ந்த மலர்களையுடைய தனது முடியின் பக்கத்தில் இடப்பட்டிருந்த பீடத்தில் எழுந்தருளும்படி கைகளைக் காட்ட, **வண்டமிழ்...இருந்தார்** - வண்மையுடைய தமிழ் விரகராகிய பிள்ளையார் அதன்மேல் எழுந்தருளி அமர்ந்தருளினார், **மாயை...கொண்டார்** - மாயக் கலைகளைக் கொண்ட வன்மையுடைய அமணர்கள் எல்லாரும் குறிப்பினுள்ளே பயங் கொண்டார்கள்.

(வி - ரை) **கண்ட அப்பொழுதே ..நோக்கி** - கண்ட என்றது முன்னர் விருப்பொடு கண்ட காட்சி.

**கண்ட** - முன்பாட்டில் "கண்டான்" என்றபடி கண்ட, **அப்பொழுதே - நோக்கி** எனக; அக்காட்சியோடு உடனிகழ்ச்சியாய் நோக்கம் நிகழ்ந்தது; இங்கு நோக்கம் என்பது வழிபடும் பண்பு காட்டும் பார்வை குறித்தது, "கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி" என்புழிப்போலக் கொள்க, **நோக்குதல்** - ஒரு குறிப்பினொடு

பாரத்தல், **எய்த** - வழிபடும் பண்பு பொருந்த; வரவேற்கும் தன்மை பொருந்த என்றலுமாம்;

**அப்பொழுதே கை எடுத்து - நோக்கி - பீடம் காட்ட** - கை எடுத்தலும், நோக்குதலும், பீடம் காட்டுதலும் ஒன்றன்பின் ஒன்றாய் எழும் மன நிகழ்ச்சிகளின் வழி நிகழினும் விரைவு பற்றி ஒருங்கே நிகழ்ந்தனவாகக் காணப்பட்டன என்பது; **கை எடுத்து** - நேரே எழுந்து கை கூப்பி வணங்கும் ஆற்றல் இல்லாது நோய் மிகுதிருந் தமையால் கைகூப்பி என்னாது **கை எடுத்து** என்றார்; **கை எடுத்தல்** வழிபட்ட நிலை புணர்த்தும் வகையால் கையை மேல் எடுத்தல், **நோக்கி** என்றதும், **பீடம் காட்ட** என்றதும் இவ்வாறு அரசன் உட்பட்டுக் கிடந்த நோயினைக் கூடிய நிலையை உணர்த்துதல் காண்க; வெப்பு நோயின் கடுமையால் அரசன் முடியசையும் நிலையிற் கிடந்தான் என்பது "துளங்குமமுடித் தென்னன் முன்னிவை" (கொலலி - ஆலவாய் - 11) என்று அப்போது அங்கு அருளிய பிள்ளையாரது தேவார அகச் சான்றினால் அறியப்படும். **எய்த** - அணுக எய்தியபோது என்றலுமாம்.

**பீடம் காட்ட** - இப்பீடத்தி லமருங்கள் என்று கையினாற் காட்ட; சிவ பூசையில் இறைவரை எழுந்தருளுவிக்கும் முறையில் ஆவாகனம், தாபனம், சன்னிரோதனம் முதலிய கிரியைகளின் பொருட்டுக் கையினால் உரிய முத்திரைகள் காட்டும் தன்மையும் எண்ணுக கருதத் தக்கன.

**சூண்டுணர் முடியின் பாங்கர் - பீடம்** - "முடியின் பக்கத் திடுக என" முன்னர் அரசன் கூற, அமைச்சனார் அவ்வாறே இடுவித்த பீடம்; **தண் துணர் முடி** - வேப்பமலாக் கொத்துக்களணிதல் பாண்டியாக் குரியது, **துணர்** - இடம் நோக்கி வேப்புமலாக் கொத்துக் குறித்தது; கடுஞ்சுர நோய் கொண்டார் முடிப்பக்கம் வேப்பிலைக் கொத்துக்களை இட்டு வைக்கும் வழக்கின் குறிப்பும் எண்ணுக கொள்ளத் தக்கது, "மருத்து நூலவா தங்களபல் கலைகளின் வகுத்த, திருத்தகுந் தொழில் யாவையும் செய்யவும்" (2612) என்றது காண்க. வெப்பு நீங்க இட்ட வேறு இலைகளுமாம்.

**அதன்மிசை மேவி யிருந்தார்** எனக; அணைந்து அதன் மேல் எழுந்தருளி அமர்ந்தருளினார்.

**மாயை கொண்டார்-மாயை** - முன்கூறிய வஞ்சம் பொய் முதலியவற்றைக் குறித்து நின்றது; **வன்மையாவது** கன்மனம், வன்கண்மை; எவ்வாற்றாலும் தமது சமயக் கொள்கையை விடாத வன்மை நிலை எனினுமாம்.

**அச்சம் குறிப்பினுட் கொண்டார்** - **குறிப்பாவது** மனத்துள் எழுந்த குறிப்பு. அச்சம் வெளிப்படாமல் உள்ளேகொண்டனர் எனக. "அச்சம் மறைத்து" (2653); "பயத்தால் நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலா நின்றார்" (2686), "ஊறுடை நெஞ்சி லச்சம் வெளிப்பட ஒளிப்பார் போன்று" (2715) முதலியவை காண்க; இனி, இவ்வாறனறித, தென்னவன் கண்டு - நோக்கிக், காட்டிய குறிப்பினாலும், பிள்ளையார் எழுந்தருளிய குறிப்பினாலும், பீடத்தில் மேவியமர்ந்த குறிப்பினாலும் அச்சம் கொண்டனர் என்றலுமாம்; **குறிப்பினுள்** - முன்பொருளில் **உள்** - ஏழாம் வேற்றுமைப் பொருளும், பின்னையதில் மூன்றுவதன் பொருளும் கொண்டதென்க. 752

2651. சேழியனும் பிள்ளை யார்தந் திருமேனி காணப் பெற்று
விழியுற நோக்க லாலே வெம்மைநோய் சிறிது நீங்கி
யழிவுறு மனநேர் நிற்க வந்தணா வாழவை நோக்கிக்
"கெழுவுறு பதியா" தென்று விருப்புடன் கேட்ட போது, எழுக

**வேறு**

2652. "பொன்னிவளந் தருநாட்டுப் புனற்பழனப் புறம்பணைசூழ்
கன்னிமதிற் கழுமலமாங் கருதுமூர்" எனச்சிறந்த
பன்னிரண்டு பெயர்பற்றும் பரவியசொற் றிருப்பதிகந்
தென்னவன்முன் பருள்செய்தார் திருஞான சம்பந்தர் எருச

2651. (இ - ள்) செழியனும் நீங்கி - பாண்டியனும் பிள்ளையாரது திருமேனியைக் காணப் பெற்றவனாகி விழிபொருந்த நோக்கியதனாலே வெப்பு நோய் மேலும் சிறிது நீங்கப் பெற்று; அழிவுறு மனம் நேர்நிற்க - ஒருநிலை நில்லாது வசமிழப்பதும் சிறிது வசமுறுவதுமாகி நின்ற மனம் ஒரு வகையாய் நேரே நிற்கவும் பெற்று; அந்தணர் கேட்டபோது - அந்தணர் வாழ்வாக வந்தவதரித்த பிள்ளையாரை நோக்கி "வாழ்வு பொருந்துதலைப் பெற்ற பதியாவது யாது?" என்று விருப்பத்துடனே கேட்டபோது, எருங

2652. (இ - ள்) பொன்னி என - காவிரி பாய்ந்து வளந் தருகின்ற சோழ நாட்டிலே நீர் நிறைந்த வயல்களையுடைய மருதநிலம் சூழ்ந்த அழியாத மதில் சுற்றிய திருக்கழுமலம் என்பது நாம் கருதும் ஊராகும் என்று; சிறந்த திருப்பதிகம் - சிறப்புடைய பன்னிரண்டு பெயர்களையும் பற்றிய போற்றிய கருத்துடைய திருப்பதிகத்தினை, திருஞானசம்பந்தர் - ஆளுடைய பிள்ளையார்; தென்னவன் முன்பு அருள் செய்தார் - பாண்டியன் முன்பு அருளிச் செய்தனர்; எருச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

2651. (வி - ரை) செழியனும் - முன்னாகக் கண்டு முட்டு என்னும் அமணர் கொள்கையுட்பட்டு நின்ற செழியனும் என உம்மை சிறப்பு.

**காணப்பெற்று - விழியுற நோக்கலாலே** - முன்னாகக் கண்டான் (2649) என்றும், "**எய்த நோக்கி**" (2650) என்றும் வந்தவிடத்துரைத்தவை பார்க்க, இதனை மீண்டுங் கூறியது அதன் விளைவாக "**வெம்மை நோய் சிறிது நீங்கி**"ய தன்மைச் சரித்த மொட்டுப்புணர்த்தற்கு என்க, இவ்வாறன்றிக் காணப்பெறுதல் அரசனாலும், **விழியுற நோக்கல்** பிள்ளையாராலும் நிகழ்ந்தனவாகக் கொண்டு, அரசன் பிள்ளையாரைக் காணப்பெற்றனன், அதனோடு பிள்ளையாரால் விழியுற நோக்கவும் பெற்றான் என்று குறிப்புப்பட உரைத்தலுமாம்; இப்பொருளில் **நோக்கம்** அருள் நோக்கமெனும் சாட்சுஷ தீக்கை;

**விழியுற** - அரசன் கண்ட பார்வையோடு பிள்ளையாரது அருட் பார்வை பொருந்த,

**நோக்கலாலே வெம்மை நோய் சிறிது நீங்கி** - முன்னர் நாம மந்திரமுஞ் செல்ல வானபோதுயாவுந் தன்னை அகன்றிட - மறைச் சிறுவர் வந்தால், இந்நோய் அகலுமேல் அறிவேன் - வென்றவர் பக்கஞ் சேர்வன் என்று சொல்லும் தன்மை பெற்றான் (2620); அவர் வரவு கூற, மேலும் முற்றுயர் சிறிது நீங்கப் பீடம் முடியின் பக்கத்திடுக என்னவும், மந்திரியாரை எதிர் செல்லவும் கூறவல்லனானான் (2644); அதனோடு கைதவம் பேசமாட்டேன் என்று கூற மனவன்மையும் பெற்றான் (2647); கண்டுப் பிள்ளையாரைக் காணப்பெற்று நோக்கவும் பெற்றபோது மேலும் வெம்மை நோய் சிறிது நீங்க மனம் நேர் நிற்கப் பிள்ளையாரை விருப்புடன் "உய்யும் பதி யாது?" என்று கேட்கும் வலிமையும் பெற்றான்; என்றிவ்வாறு படிப்படியாய் நோய் நீக்கமும் அறிவு விளக்கமும் பரம குருநாதராகிய பிள்ளையார் சார்பினாற் பெற்றமையும், மேலும் இவ்வாறே பெற நிற்பவையும் கருதுக.

**அழிவுறும் மனம் நேர் நிற்க** - முன்னே நோயின் கடுமையால் அழிந்து வசமிழந்த மனம் நேராக நிற்க. "கருத்தழிந்துரை மறந்தனன்" (2612), சிறிது அளவு நீங்கலாலே அழிவுறும் மனம் என்றார்; "துளங்கும் முடித்தென்னன்" (தேவா) என்றது நோயின் கடுமை காட்டிற்று. **அழிவுறுமன்னோர்**—என்பதும் பாடம்.

**அந்தணர் வாழ்வு** - பிள்ளையார். **வாழ்வு** - வாழ்வு தருபவரை வாழ்வென்றது உபசாரம். **கெழுவு** - பொருந்துதல்.

**கெழுவுறு பதியாது** - **கெழுவுதல்** - உம்மால் வாழ்வு பெறுதல்; **பதியாது?** - உமது ஊர் எது என்றது புதியரை வரவேற்கும் முறையில் விருப்புடன் அவரோடு பேசத் தொடங்கும் மரபினில் இவ்வாறு வினவுதல் உலக வழக்கு. "வளவர் சோணாட்டு வண் புகலி" (2583); "தாவில்சீர்க் கழுமலத்தான்" (2589) என்று கூறிய வாற்றால் பிள்ளையாரது பதியினை முன்னரே அறிந்த அரசன், பின்னரும் பிள்ளையாரை இவ்வாறு வினவுதல் மேற்கூறிய உலக மரபு வழக்குப் பற்றியது.

**விருப்புடன் கேட்டபோது** - அமணர் சார்பால் முன் வெறுப்பு நிலையில் அரசன் நின்றமை முன்கூறிய ஒருமைச் சுட்டுக்களாலும், மனநிகழ்ச்சி, புறநிகழ்ச்சிகளாலும் அறியப்படும்; "எங்குறைவீர்; நீர்தாம் யார் இயம்பும்" (1797) என்புழிப் போன்றவை வெறுப்பின் நிகழும் வினைகள்; ஈண்டு அவ்வாறன்றி முன்னை நிலைமாறி விருப்பின் நிகழ்ந்ததென்க.

**கேட்டபோது** - **அருள்செய்தார்** - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 753

2652. (வி - ரை) **பொன்னி வளந்தரு நாடு** - சோழநாடு; **புனற் பழனப் புறம்பணை சூழ்** - நாட்டு வளமும், சிறப்பும், நிலமும், பிறவும் குறித்துக் கூறியபடி.

**கன்னிமதிற் கழுமலம்** - நகரச் சிறப்பு, **பதியாது** என்று வினவியவன் தமது நாடல்லாத பிறநாட்டரசனாதலின், ஆறும் நாடும் நிலமும் பிறவுமாகிய சிறப்புக்களுடன் எடுத்துக் கூறி யறிவுறுத்துதல் முறையாதலின் வாளா **பதியை** மட்டில் கூறாது இத்துணையும் கூறிய தென்க. **கன்னி** - கட்டழியாத் தன்மை.

**பன்னிரண்டு பதிகம்** - சீகாழியின் பன்னிரண்டு திருப்பெயர்களையும் பற்றுக்கொண்டு பரவிய சொன்மாலையாகிய திருப்பதிகம்; **பற்றும்** - பதிகம் என்றும், **சொற்றிருப் பதிகம்** என்றும் கூட்டுக, **பற்றுதல்** - பெயர்களையே பொருளாகக் கொள்ளுதல். **பரவிய** - பெயர்களைத் துதித்த; "கைதொழுது பாடுமூரே" (3) "நாம் புகழு மூரே" (5) "நாம் கருது மூரே" (2 - 6 - 9) எனவரும் பதிகம் பார்க்க. ஒவ்வோர் பெயர்பற்றிய ஒவ்வோர் பாட்டும் **நூல்** - **பனுவல்** - எனப்பட்டன.

**பெயர்பற்றும் பரவிய** - "பெயரை நாளும், பரவியசீர்ப் பன்னிரண்டு நன்னூலா" (12) என்ற பதிகத் திருக்கடைக் காப்பின் கருத்து; நாம் கருதும் பதியாகிய ஊரே அதனைப் போற்றினால் உயதி தரவல்லது என்று அரசனுக்குக் கூறியபடி.

**கழுமல நாம் கருது பூர்** - இது பதிகத்தின் மகுடமாய் உள்ள கருத்து; பதிகப் பாட்டுத்தோறும் வரும் முடிபு காண்க. பன்னிரண்டு பெயர்களுள் ஏனைப் பதினொன்றும் கூறி அவற்றை உள்ளிட்டு இதனோடு பன்னிரண்டு பெயர்களாய் நிகழும் ஊர் என்பது; கழுமலப் பெயரால் முடித்து மகுடமாக்கிக் கூறியது அது பன்னிரண்டனுள் இறுதி ஊழியில் பெற்ற பெயராதலாலும், ஈண்டுப் பாண்டியனை மலங்கழுவி உய்யக்கொண்டு நாட்டினரை உய்விக்கும் ஆசாரியராக எழுந்தருளியுள்ள குறிப்பினாலுமாம்; "அமண் மாசு கழுவுதற்கு" (2549) என்று எழுச்சியில் இக் கருத்தினைத் தொடக்கத்திலே காட்டியதனை நினைவு கூர்க.

**பன்னிரண்டு பெயர் பற்றும் பரவிய சொற்றிருப் பதிகம்** - "பிரமனூர் வேணுபுரம்" என்று தொடங்கிப் பன்னிரண்டு பெயர்களையும் பாட்டுத்தோறும் உடன்கொண்டு போற்றிய காந்தாரப்பண் - திருச்சக்கரமாற்று என்ற பதிகம். பெயர் பெற்றுப் பரவிய என்பது பாடமாயின், ஒவ்வொரு பாட்டும் பன்னிரண்டு பெயர்களை உட்கொண்டும், பிரமனூர் முதல் கழுமலமீறாக அவ்வரிசையில் வரும் பெயர்களை முதலாகக் கொண்டும், ஒவ்வொன்றும் தனித்தனி முடிபு பெற்ற நன்னூலாகிய பனுவன் மாலையாகிய என்றுரைத்துக் கொள்க; பெயர் பெறுதலாவது கொண்டு தொடங்கிய தலைப் பெயரையே அவ்வப் பாட்டின் பெயராகப் பெறுதல்; முதற் பாட்டுப் பிரமனூர்ப் பாட்டு; இரண்டாவது பாட்டு வேணுபுரப் பாட்டு, மூன்றாவது பாட்டு புகலிப் பாட்டு என்றிவ்வாறு கொள்க, இப்பெயர் முறைபற்றி 1912ல் உரைத்தவை இங்கு நினைவு கூர்தற்பாலன "உள்ளிட்டங் காதியாய" (பதிகம் - 1).

**தென்னவன் முன்பு அருள் செய்தார்** - பதி வினவிய அரசன் முன்பு அவனைத் தேற்றுதற் பொருட்டு அவனது அரண்மனையில் அருளப்பட்டது என்று பதிக வரலாறு கூறியபடி, சீகாழிப் பதிகமாயினும் மதுரையில் அருளப்பட்டது என்பதனை உளங்கொள வைத்துச் சுட்டிக் காட்டியது ஆசிரியரது அருட்கவிநலம்; இவ்வாறே பின்னர்த் தாதையார் சாரவிருந்த தோணியமர்ந்தாரைக் கண்டு போற்றிய "மண்ணி னல்ல" என்ற பதிகம் மதுரையில் திருமடத்தி லருளப்பட்டதென வரலாறு காட்டுவதும் காண்க.

**திருஞான சம்பந்தர்** - பிள்ளையாரது திருப்பெயர் முற்றும் கூறியருளியது திருக்கடைக் காப்பில் "நாவினலம் புகழ்சீர் நான்மறையான் ஞானசம்பந்தன்" என்றருளியதனைக் குறிக்கொள வைத்ததனோடு, பாண்டியனுக்குத் திருஞானத்தைப் புகட்டி ஆட்கொள்ள வந்த குறிப்புப்பெற வைத்ததுமாம். 754

### திருக்கழுமலம்

திருச்சிற்றம்பலம்

**திருச்சக்கரமாற்று - பண் - காந்தாரம்**

பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ் சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவயம் உள்ளிட்டங் காதியாய
பிரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலநாம் பரவுமூரே (1)

காவி மலர்புரையுங் கண்ணார் கழுமலத்தின் பெயரை நாளும்
பாவியசீர்ப் பன்னிரண்டு நன்னூலாப் பத்திமையாற் பனுவன் மாலை
நாவி னலம்புகழ்சீர் நான்மறையான் ஞானசம்பந்தன் சொன்ன
மேவி யிசைமொழிவார் விண்ணவரில் எண்ணுதலை விருப்புளாரே (12)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—கெழுவுறு பதியாது என்று வினவிய அரசனுக்குப் பிரமபுரம் முதலிய 12 பெயர்களையுடைய திருக்கழுமலம் நாம் கருதும் ஊர் என்று விடை கூறியது. **குறிப்பு :** இப்பதிகத்துள் ஒவ்வொரு பாட்டும் தனித்தனி அவ்வொரே கருத்துக் கொண்ட பனுவல்; அது 12 பேர்களைக் காலக்கிரம வரிசையிற் போற்றிய தலை மாலையாம்; அப்பன்னிரண்டு பெயர்களே அவ்வரிசையுள்ளே சுழன்று வருதலால் சக்கரமாற்று எனப்படும். "பன்னிரண்டு நன்னூல" என்றதும் காண்க.

**பதிகப்பாட்டுக் குறிப்பு :**—(1) உள்ளிட்டு - சோதது, உள்ளிட்டுப் பன்னிரண்டாய் நின்ற ஊர் - முன்சொன்ன பதினொரு பெயர்களுடன் கழுமலம் என்பது

சேர்த்துப் பன்னிரண்டு பெயர்களுடையதாய் நின்ற ஊர் என்க; இப்பன்னிரண்டு பெயர்களும் அவ்வரிசையில் வருமாறு தனித் தனியே தொடக்கமாக வைத்தும், பன்னிரண்டு பெயர்களையும் ஒவ்வொரு பாட்டிலும் வைத்தும் போற்றுதலால் இப்பதிகம் பன்னிரண்டு பாட்டுக்களையுடையதாயிற்று, "பெயரை நாளும் பரவிய சீர்ப் பன்னிரண்டு நன்னூலா" என்பது காண்க, ஆதியாம் பிரமன் - ஊழிகடந்த முதல்வர்; சிவன் (2); வெள்ளம் - ஊழி; ஓங்குதல் - மிதத்தல்; ஓங்கும் தோணிபுரம் - ஓங்குதலால் இப்பெயர் பெற்றதென்பார் உடம்பொடு புணர்த்தி ஓதினார்: முன் பாட்டில் பெருநீர்த் தோணிபுரம் - என்றதும் இக்கருத்து; கோட்டாறு - சீகாழியில் வரும் ஆறு; செல்வம் காணிய - செல்வங்காணும் பொருட்டு; காணுதல் - அனுபவிக்கப் பெறுதல்; (3) நீர்மேல் நின்ற மூதூர் - மிதந்த தோணிபுரம்; அமரர் பெருமாற்கின்பம் பகருமூர் - இந்திரனுக்கு அபயம் கொடுத்துக்காத்த சரிதக்குறிப்பு. (4) தலை பண்டு ஆண்ட மூதூர் - சிரபுரம்; வழிமொழித் திருவிராகம் முதலியவை பார்க்க; (5) தொல் நீரில் தோணிபுரம் - பழைய ஊழிகளில் மிதந்ததனாலே தோணிபுரமாகிய ஊர்; இன்னீர் - இனிய நீர்மையுடைய; இல் நீர் என்று கொண்டு இந்திரன் மறைந்து தங்கும் இல்லாக - வீடாக - உதவிய வேணுவின் காரணமாகக் கொண்ட என்றலுமாம்; சிலம்பன் நகர் - சிரபுரம் "சிலையான் மலிந்த சீர்ச்சிலம்பன் சிரபுர மேயவனே" (பல் பெயர்ப் பத்து - தக்கேசி - 7); பொன்னீர் - அழகிய; (6) தாமரையான் - பிரமன்; தலை முன் ஆண்ட அண்ணல் நகர் - சிரபுரம்; (7) ஆராத்தூராய் - பூந்தராய்; (10) இன்ன பெயர் பன்னிரண்டும் - உடையவூர் என்க; "பெயர் பற்றும்" (2652); (11) நீச்சல் - நீத்தலும், நீத்தல் என்பது எதுகை நோக்கி நீச்சல் எனவந்தது; நம்மேல் அச்சங்கள் தீர்த்தருளும் அம்மான் - அரசனுக்கு அஞ்சல் அளித்தற் குறிப்பும் காண்க; (12) பாவிய - பரவிய; பாவுதல் - பரப்புதல்.

2653. பிள்ளையார் செம்பொன்மணிப் பீடத்தி லிருந்தபொழு
துள்ளநிறை பொறுமையினா லுழையிருந்த காரமணர்
கொள்ளுமனத் திடையச்ச மறைத்துமுகங் கோபத்தீத்
துள்ளியெழு மெனக்கண்கள் சிவந்துபல சொல்லுவார்; ௭௫௫

2654. காலையெழுங் கதிரவனைப் புடைசூழுங் கருமுகில்போற்
பீலிசேர் சமண்கையர் பிள்ளையார் தமைச்சூழ்வார்
ஏலவே வாதினால் வெல்வதனுக் கெண்ணித்தாந்
சோலுறா வெடுத்தோதித் தலைதிமிரப்பக் குரைத்தார்கள். ௭௫௬

2653. (இ - ள்) பிள்ளையார்...பொழுது - பிள்ளையார் அழகிய பொற்பீடத்தில் எழுந்தருளியிருந்த போது; உள்ளம்...அமணர் - மனத்துள் நிறைந்த பொறுமையினாலே பக்கத்திலிருந்த கரிய அமணர்கள், கொள்ளும்..மறைத்து - மனத்தினுட் கொண்ட அச்சத்தை மறைத்து; முகம்...சிவந்து - முகத்தினில் கோபத்தீயானது துள்ளி எழுவது போலக் கண்கள் சிவந்து; பல சொல்லுவார் - பலவாறு சொல்வார்களாகி; ௭௫௫

2654. (இ - ள்) காலை...போல காலையில் இளங்கதிர் பரப்பி எழும் சூரியனைப் பக்கங்களிற் சூழும் கரியமுகிற் கூட்டம் போல; பீலிசேர்...சூழ்வார் - மயிற் பீலிகளை ஏந்திய சமணக்கையர் பிள்ளையாரைச் சூழ்வாராய்; ஏலவே...எண்ணி - பொருந்தும்படி வாதினால் வெல்வதற்கு எண்ணங் கொண்டு; தாம...குரைத்தார்கள் - தாம் பேணிய

ஆருகத நூல்களிற் கண்ட பொருள்களை எடுத்துச் சொல்லித் தலைகளைத் திமிர்க்கும்படி குரைத்தார்கள். ௭௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2653. (வி - ரை) **உள்ள நிறை பொறாமையினால்** - அவருள்ளத்தில் முன்னர் மிக்கு நிறைந்திருந்தமை காரணமாக; ஈண்டுப் பொறாமையாவது அறநெறியை முன் காட்டி வஞ்சனை பொய் முதலிய உபாயங்களால் சைவத்தை ஒடுக்கித் தாமே வாழ வேண்டுமென்ற மனநிலை குறித்தது, இது அழுக்காறு எனப்படும்; "அழுக்கா றவா வெகுளி யின்னாச்சொ னான்கும், இழுக்கா வியன்ற தறம்" (குறள்) என்றவிடத்து அழுக்காறு என்பதற்கு ஆசிரியர் பரிமேலழகர் பிறராக்கம் பொறாமை என்றுரைத்தது காண்க.

**பொறாமையினால் கண்கள் சிவந்து பல சொல்லுவார்** - அழுக்காறினால் அவாவும், அது முற்றுப்பெற்றபோது வெகுளியும், அது பற்றிக் கடுஞ் சொல்லும் என இவை ஒன்றுபற்றி ஒன்றாக மேன்மேல் தொடர்ந்து வரும் என்று முன் திருவள்ளுவர் கூறியபடி ஈண்டு அமணர் பொறாமையினால் கண்சிவந்து பல சொல்லுவாராயினர் எனக்கண்டு கொள்க; மேலும் இறுதியில் இப்"பொறாமை காரணமே யாகத், தங்கள்வாய் சோர்ந்து தாமே தங்கள்வாதி லழிந்தோ மாகில், வெங்கழு வேற்றுவானிவ் வேந்தனே யென்று சொன்னார்" (2696) என்பதும், "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத், தீயுழி யுய்த்து விடும்" (குறள்) என்றபடி அதுவே அவர்களை அழிவின்கட் செலுத்தியதும் காண்க.

**உள்ள நிறை** - அழுக்காறு வந்தபோது அது வேறு எந்த நற்குணத்துக்கும் இடந்தராது தானே உள்ளத்தை முழுதும் கவர்ந்து கொள்ளும் என்பது.

**உழையிருந்த காரமணர்** - அரசனது நோய் கேட்டு வந்து அதனைத் தீர்ப்பதற்குச் சூழ்ந்து நின்ற அமண் குருமார், கார் என்றது புறக்கருமையும் அகக்கருமையும் குறித்தது; அழுக்காறு முதலிய தீக்குணங்கள் தாமதத்தினின்றும் போதுவன என்பதும், தாமதத்துக்கு நிறம் கருமையாகக் கூறப்படுவதும் காண்க, அழுக்காறு முதலிய நான்கனையும் இழுக்கென்று தள்ளாது மேற்கொண்டு ஒழுகுதலின் இவர்கள் புறத்துக் காட்டுமாறு அறவோராகாது மறவோரேயாவர் என்பதும் குறிப்பு.

**மனத்திடைக் கொள்ளும் அச்சம்** - என்க. இரண்டனுருபும் அத்துச் சாரியையும் தொக்கன;

**முகம்கோபத் தீத்துள்ளி எழும் எனக் கண்கள் சிவந்து பல சொல்லுவார்** - முகத்தின் கண்ணே சினமாகிய தீ துள்ளி எழுவது போல, கோபத்தைத் தீயாகக் கூறுவது மரபு, தன்னை மேற்கொண்டாரைத் தான் உடம்பொடு எரித்து விடுதல்பற்றி; எரித்தலாவது பலவாற்றாலும் உள்ளும் புறமும் குறைவித்தல்; "உள்ளங் கவர்ந்தெழுந் தோங்குசினம்" என்பது நீதிநூல், தீக் கொழுந்து விட்டெழுதற் கிடம் முகமாகவும், அங்குக் கண்சிவத்தல் தீயாகவும், பல சொல்லுதல் தீத்துள்ளி எழுதலாகவும் உவமிக்கப்பட்டன; உருவும் வினையும் பற்றி எழுந்த தொடர்நிலையுவமம், "எரி துள்ளினாலென வெகுண்டான்" (527); "கதவிக் கெரிகதிர்" (சிவஞான போதம் - 10 - சூத் - வெண்) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. "உளத்திடைக் கிளர்ந்த சினத்தீ; காட்டம் எரிகால்வ, புகை நண்ணுவன தண்டம்" (மூக்கு); (கந்தபு - அசுரே - மகேந் - செல - 37)

பல - பொருந்தாதவையும் சொல்லத்தகாதவையும் என்பது குறிப்பு, இவை இன்ன என்று கூறாது பல என்றொழிந்தது மிக்குறிப்பும் உயர் கவி மரபுமாம்.

**சொல்லுவார் - துரைத்தார்கள்** என வரும் பாட்டுடன் முடிக்க.

**அனற்கண்கள்**—என்பதும் பாடம் 755

2654. (வி - ரை) **காலை ..முகில்போல்-பிள்ளையார் தமைப் பீலி சேர்கையர் சூழ்வார்** - பிள்ளையார் காலை எழும் கதிரவனுக்கும்; பீலிசேர்கையர் கருமுகிலினுக்கும் உவமிக்கப் பட்டனர்; உருப்பற்றி வந்த உவமம்; முகில் சூழ்தல் - மெய்யாற் சூழ்தலுக்கு வினைபற்றி வந்தது; காலை எழும் கதிரவன் என்றதனால் செந்நிறம் போந்தவாறு காண்க; "காலையே போன்றிலங்கும் மேனி" (அற் - அந்.) என்ற அம்மையார் திருவாக்கும் காண்க;

**காலை எழும்** என்றதனால் முன்னுள்ள இரவின் இருளை ஓட்டி எழும் கதிரவன் செயல்போல முன்னே சூழ்ந்திருந்த அமணிருளைத் துரத்ததலும், கதிரவனைப் புடை சூழும் கருமுகில் என்றதனால் முகில் அவன் முன் தன் செயல் வலிமைபெற்று நிற்க மாட்டாது உடைதல் போல ஈண்டு அமணர் உடைந்து மறைதலும் குறிப்பிற் பெற வைத்த பண்பு உவமை நயமும் காண்க.

**பீலி சேர் சமண்கையர்** - பீலி - அமணகுருமார் எப்போதும் கையிற் கொள்ளும் மயிற் பீலி; கையர் - கையினை உடையவர் என்றும், கீழ்மக்கள் என்றும் இரு பொருளும் பட உரைக்க நின்றது.

**ஏலவே** - காலமும், இடமும், பிறவும் பொருந்த மாறாகல், அவர் நோய் தீர்த்தது தம்மேல வெற்றி கொள்ளு முன்பு என்ற குறிப்புமாம்.

**வாதினால் வெல்வதனுக்கு எண்ணி** - நோய் நீக்க மாட்டாமையால் தாம் தோற்பதும் (2612—2616), அவர் அதனுள் வெற்றி பெற்றவுள்ளமையும் அறிந்த அமணர், அதனைவிட்டு நூல் வாதத்தினால் வெற்றி கொள்ள எண்ணி.

**வாது** - நூல் வாதம், **வாதினால்** - வாதப்பொருள் கருவியாக.

**தாம் கோலும் நூல்** - தாம் கைக்கொண்டு உய்த்த ஆருகத சமய நூல்; **கோலுதல்** - கற்பித்தல்; செய்தல் என்றலுமாம்; "வேறொரு சமயஞ் செய்தே" (தேவா)

**தலை திமிர்ப்ப** - தலை அசைத்து; இது வாதத்தின் குறி.

"**திமிர்த்தல்** - சொல்லின் வேகத்தால் நடுக்குற்று வருந்துதல்" என்பர் ஆறுமுகத் தம்பிரானார்.

**துரைத்தார்கள்** - நாய் குரைத்தல் போல இழி சொற்களைப் பொருளின்றி உரக்கக் கூவினார்கள். அவர்களது சொலலிழிபு தோன்றக் கூறினார்; இழி சொற்களாதலின் அவை இன்ன வென்க் கூறலுமாகா தென்பார் இவ்வாறு குறிப்பிற் பெறக் கூறிய கவிநலம் காண்க; முன்னர்ப் பல **சொல்லுவார்** என்ற குறிப்பும் காண்க: முன் கதிரவன் என்றதற்கேற்ப "சூரியனைப் பார்த்து நாய் குரைத்தாற் போல" என்ற பழமொழி நினைவுபடக் கூறிய நயமும் கண்டு கொள்க; நாய் சினந்தொலித்தலைக் குரைத்தல் என்பது மரபு வழக்கு; இஃது எடுத்த பொருளை விட்டு விலகி வேறு மொன்றிற் செலுத்த முயலுதல்; தோலவியுறுவோர் கைக் கொள்ளும் உபாயங்களுள் ஒன்று; தமது பொருமை சினம் முதலிய தீக்குண மிகுதிப்பாட்டால் பாண்டியன் கிடந்த அவதியின் காலமு மிடமும் கூட நோக்காது அமணர் இவ்வாறு துணிந்தனர் என்க.

**சூழ்வார்** - சூழ்வாராகி; முற்றெச்சம்- பலவாறுயச் சூழ்வாராகி என்றும் சூழ்ச்சி - உபாயம் - செய்வாராகி என்றும் உரைக்க நின்றது; வரும்பாட்டுப் பார்க்க. சூழ்வார் - ஓதிக - குரைத்தார்கள் என்று கூட்டுக. 756

2655. பிள்ளையா ரதுகேளாப் "பேசுதிர்நும் பொருளெல்லை
யுள்ளவா" றென்றருள, வூத்தைவாயப் பறித்தலையர்
துள்ளியெழுந் தனேகராய்ச் சூழ்ந்துபதறிக் கதற,
வொள்ளிழையா ரதுகண்டு பொறாராகி யுண்ணடுங்கி, ௭௫௭

வேறு

2656. தென்னவன் றனைநோக்கித் "திருமேனி யெளியா போலும்
இன்னருட் பிள்ளை யாரமற் றிவ ருவ ரெண்ணி லார்கள் ;
மன்ன! நின் மயக்க மெங்கள் வள்ளலார் தீர நலகும ;
பின்னையிவ் வமணா மூளவார் வல்லரேற் பேச" வென்றார். ௭௫௮

2655. (இ - ள்) பிள்ளையார்...என்றருள - பிள்ளையார் அதனைக் கேட்டு "உங்கள் கொள்கையின் படிக்குள்ள பொருள் முடிபுகளை உள்ளபடி பேசுங்கள்" என்று அருளிச்செய்ய; ஊத்தைவாய...கதற - ஊத்தைவாயினையும் பறித்த தலையினையுமுடைய அவ்வமணர் துள்ளி அநேகராக எழுந்து பிள்ளையாரைச் சூழ்ந்து பதறிக் கதறவே; ஒள் இழையார்...உள் நடுங்கி - ஒள்ளிய இழைகளை அணிந்த பாண்டிமா தேவியார் அதனைக் கண்டு பொறுக்கலாற்றாது உள்ளம் நடுக்கமுற்று, ௭௫௭

2656. (இ - ள்) தென்னவன் றனை நோக்கி - பாண்டியனைப் பார்த்து; திருமேனி...இவர் - இனிய அருளையுடைய பிள்ளையாராகிய இவர் எளியராம் சிறுவர்; உவர் எண்ணிலார்கள் - மற்று அங்கு நிறகும் உவர்களாகிய அமணர்கள் எண்ணிலாதவர்கள், மன்ன...நலகும் - அரசனே! உனது சுரநோயின் மயக்கத்தினை எங்கள் வள்ளலாராகிய பிள்ளையார் தீரும் வண்ணம் அருள் செய்வார்; பின்னை...பேச என்றார். அதன்பின் இவ்வமணர் வாது செய்ய வல்லவரானால் பேசுவாராக என்றார். ௭௫௮

2655. (வி - ரை) அது - அமணர் தாம் கோலும் நூல் எடுத்தோதிக் குரைத்த அதனை ;

நும் பொருள் எல்லை உள்ளவாறு பேசுதிர் - உமது சமய நூல்களுள் உண்மைப் பொருளாகக் கூறும் முடிபுகளை உள்ளபடி இவ்வாறு குரைத்தெழாமல் ஒழுங்குபடப் பேசுங்கள் என்றதாம்.

பொருள் எல்லை - முடிந்த கொள்கைகள்; அதாவது சமய வாதத்தின் ஒழுங்குபட அறுதியிட்டுக் கூறும் முடிபு; "நீங்கள் செப்பிவரும் பொருள் நிலைமை தெரிக்க" (புரா - 913); "உங்கள் தலைவனும் பொருளும் உரைக்க" (ஷை 914); "நாட்டினிற முதற்றான யாவது?" (ஷை - 916) என்றும், "புகன்மினும் மிறையு நூலு மதத்தலைவினேரெய்தும் கதியும்" (திருவிளை - புரா - மண் சு - பட - 101) என்றபடி வாதிக்கும் அச்சமயக் கொள்கையின்படி அவர் கூறும் கடவுள் இலக்கணமும், அளவைநூல் இலக்கணமும், அச்சமயத்தோர் கொள்கையின்படி அடையும் முத்தியிலக்கணமும் என்றிவற்றை அடைவுபட முடித்துக் கூறுதல்.

உள்ளவாறு பேசுதிர் - வாதத்தின் அமைவில் ஒழுங்குபடுத்தி உரையுங்கள், இதனால் அவர்கள் பொறாமையும் சினமும் மேற்கொண்டு ஒழுங்கற்ற முறையில் பேசினார்கள் என்றதாம்; "பல சொல்லுவார்" (2653) "குரைத்தார்கள்" (2654) என்று ஆசிரியர் கூறிய குறிப்புக் காண்க; பல சொல்லுதல் - ஒன்றாக ஒழுங்கிற கூறாது பலவாறு கூறுதல்.

**பேசுதிர்** - சினந்த முறையிலன்றிப் பேசுக என்க, இதனால் வாதில் வெல்ல எண்ணி வாதத்திற் கறைகூவி முற்பட்டழைத்தோர் அமணர்கள் என்பதும், அதனை உடன்பட்டுப் பிள்ளையார் அவர்கள் மேற்கொண்டெழுந்த சமய வாதத்தினை ஏற்று ஒழுங்குபட்ட முறையில் அதனைத் தாமும் செய்ய உடன்பட்டு அழைத்தருளினார் என்பதும் பெறப்பட்டன.

**ஊத்தை வாய்** - பல் துலக்கிற் புழு முதலிய பிராணிகள் சாகும் என்று பற்றலக்காத ஒழுக்கமுடையராதலால் ஊத்தை மிக்க வாய்; இதனால் வரும் துர்நாற்றத்தை மறைக்க அவர்கள் வாய்க்கு ஒரு மறைப்பு இட்டுக் கொள்ளுதலும் வழக்கென்பர்.

**பறித்தலையர்** - தலை மயிரைப் பறித்த நிலையினர்; ஒருவர் சமண ஆசிரமம் புகும்போது அதனில் முதியோர் பலர் சூழ்ந்து "இப்துக்க - பிற்சுக்" (இப்போது துக்கம் - பின்னால் சுகம்) என்ற மந்திரம் சொல்லிக் கொண்டு அவரது தலைமயிரைப் பறித்தல் அவர் சமய வழக்குக்களுள் ஒன்று என்பர்.

**துள்ளி...கதற** - துள்ளி எழுதலும், ஒழுங்குபெற ஒவ்வொருவராயன்றி அனேகராய் எழுதலும், சூழ்ந்து கொள்ளுதலும், பதறுதலும், முறை தவறிக் கதறுதலும் முதலியவை வாதமுறைக்கேற்காத செயல்கள்; பிள்ளையார் அருளியபடி நேரிய முறையில் வாதத்திற் புகாது இவ்வாறு பிழைபட நடந்து கொண்டதற்கு அமணர்களது பொறாமையும் சினமும் காரணமாம்.

**ஒள்ளிழையார்...உள்நடுங்கி** - ஒள் இழையார் - நேரிய நூன்முறையினையே கொண்டு ஒழுகுமவர் என்ற குறிப்பும் காண்க; "ஆயிழையாய்" (சிவஞானபோதம் 7 சூத் - 3 அதி - வெண்பா) என்றவிடத்து "நுணுகிய நூல்களை ஆராயவது" "இழை நூலாகலான் நுண்டுச் சாத்திரத்தை யுணர்த்திற்று" என்று எமது மாதவச் சிவஞான முனிவர் உரை வகுத்தமை கருதுக; **பொறாராகி உள்நடுங்கி** - முன்னை இரவில் கரந்து தீத்தொழில் செய்த அவர்கள் இங்கு நேரிலும் முறைதவறி ஒழுகத் தலைப்பட்டாராதலின், அதனால் யாது விளையுமோ என்ற அச்சத்தால், காணப்பொறாத நிலையும் மன நடுக்கமும் விளைந்தன; அன்றியும், இது தாயமைக் குணமாகிய கருணையின் விளைவுமாம்; இதனை மேல்வரும் பாட்டில் விரித்து "இளஅருட் பிள்ளையாரிவர் திருமேனி எளியர் போலும் - உவர் எண்ணிலார்கள்" என்பதும் காண்க. அமணர்கள் மேலும் அடாத செயல்களைத் தமது கூட்டப் பெருக்கின் வலியினாலும் பொறாமை கொண்ட மூண்ட சினத்தாலும் செய்ய முற்படுவார்கள் என்ற கருத்து எழுந்தது; அதுகண்ட அமைச்சரும் அரசனும் இருக்கவும் அம்மையார் முற்பட்டுத் தடுத்தனிலை "அச்சந் தாயதலை யன்பின் முன்பு நிற்குமே" (574) என்றவிடத் துரைத்த நிலையின் தன்மையாலறிக

**முள்வார்** என்ற குறிப்பும் அச்சங் காட்டியது. 757

2656. **(வி - ரை)** இது மங்கையர்க்கரசியார் மனநடுங்கி அரசனை நோக்கி அமணர்களது தகாத செயலை முறையிட்டுத் தவிர்ப்பார்போன்று கூறியது. **தென்னவன்றன்னை நோக்கி** என்ற குறிப்புமிது.

**மற்று இன்னநட் பிள்ளையார் திருமேனி யெளியர் போலும் என்க; பிள்ளையார் திருமேனி எளியர் = உவர் எண்ணிலார்கள் = வள்ளலார் நல்கும் = பின்னை அமணர் பேச** என்ற நான்கும் திருவுள்ளத்துட் கொண்டு அம்மையார் கூறியவற்றுள், முதற்கண் எழுந்தது பிள்ளையாரது திருமேனியின் எளிமையேயாம்! அதுவே தாய் தலையன்பின் தன்மை.

மற்று இன்னருட் பிள்ளையார் இவர் திருமேனி எளியர் போலும் - இனிய அருள் வன்மையுடையர் ஆயினும் திருமேனி இளையராதலின் எளியர்போலும் என்றபடி.

போலும் - அருளின் வலிமையால் மேனியும் எளியரல்லாதிருத்தலும் கூடும் என்ற ஐயப்பாடு குறித்தது.

மற்று இவர் - அதுவரை மன்னனுக்கு மற்றவராய் நின்று இப்போது மன்னனுக்கும் தமக்கும் அணியராயினார் என்று குறிப்புப்பட்ட பிள்ளையாரை இவர் என்றார்.

உவர் எண்ணிலார்கள் - உவர் - உகரச்சுட்டுச் சேய்மைக்கும் அண்மைக்கும் இடைப்பட்ட நிலை குறிக்குமென்ப; சமண்டு அமணர்கள் அப்போது அரசனுக்கு முற்றும் சேயாருமல்லராய், முற்றும் அணியாருமல்லராய் நின்ற நிலை குறித்தது. எண்ணிலார்கள் - அரசனது நலமேயன்றித் தந்நலத்தினையும் தாம் கொளுவிய தீயினை வலல் கொண்ட பிள்ளையாரது வெற்றிப்பாட்டினையும் எண்ணாதார் என்ற குறிப்புமாம். "அறந்துறந்து தமக்குறுதி யறியாத புலமறிவோர்" (1300) என்ற கருத்துக் காண்க. உவர் - உவர்த்தலுக்கு வெறுத்து ஒதுக்குதற்கு - உரியார்கள் என்ற குறிப்புப் படக் கூறியதுமாம்.

எங்கள் வள்ளலார் நின்மயக்கம் தீர நல்கும் எனக் - எங்கள் - அருமைப்பாடு குறித்த பன்மை; தம்மையும் அமைச்சரையும் உளப்படுத்தி முன் நிகழ்ச்சிக் குறிப்புப் பெற வந்த உளப்பாட்டுத் தன்மைப் பன்மை என்றலுமாம்; மயக்கம் - பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்ந்த மருளினால் போந்த வினையு, மயக்கம் அதன் விளைவாகிய நோய் முதலிய தீமைகளின் தொகுதிகளாயிற்று, மயக்கம் - "கருத்தொழிந் துரைமறந்" (2611) திருந்தநிலை சிறிதளவில் நீங்கியும் முற்று நீங்காத மயக்க நிலை.

பின்னை - முன்னே மயக்கம் தீர அவர் நல்கும், அதன் பின்னே; நல்கும் - உறுதி குறித்தது.

மூள்வார் - பொருமையும் சினமும் மூளப்பெற்றோர்; வல்லரேல் - வல்லரல்லர் தொழிகுவர் என்பது குறிப்பு பேச்சு; அகரம் வியங்கோள் விகுதி.     758

2657 மாறனு மவரை நோக்கி "வருந்தனீ!" ரென்று, "மற்று
வேறுவா தென்கொ லென்மேல் வெப்பொழித் தருகர் நீரும்
ஆறணி சடையி னார்க்கன் பராமிவரு நீங்கள்
தேறிய தெய்வத் தன்மை யென்னிடைத் தெரிப்பீ" ரென்றான்.

(இ - ள்) மாறனும் என்று - பாண்டியனும் மங்கையர்க்கரசியம்மையாரை நோக்கி "நீ வருந்த வேண்டா" என்று சொல்லி, மற்று...என்கொல் - பிற வேறு வாது என்ன வேண்டும், அருகர் நீரும் இவரும் - அருகர்களாகிய நீங்களும் கங்கையைத் தரித்த சடையினையுடையாருக்கு அன்பராகிய இவரும், என்மேல் வெப்பு ஒழித்து - என்மேல் உள்ள இந்த வெப்பு நோயை ஒழியச் செய்து, நீங்கள்...என்றான் - நீங்கள் அவ்வவர் தெளிந்த தெய்வங்களின் உண்மைத் தன்மையை என்னிடத்தில் விளக்குவீராக என்று சொன்னான்.

(வி - ரை) மாறனும் என்றான் - "மன்ன!" (2656) என்று அரசன் என்னும் நிலையில் வைத்து அம்மையார் அஞ்சிக் கூறி முறைப்பாடு செய்து, மிகைபட நிகழ்ந்த அமணர்களது செயலை ஒழுங்குபடுத்த வேண்டினாராதலின் அந்நிலையினை மேற்கொண்டே அரசன் முறைப்படுத்தி ஒழுங்குசெய்த நிலை கூறப்பட்டது. மாறன் - இதுவரை பற்றி நின்ற அமணர் சார்பினின்றும் மாறிச் சைவ நெறியில் வரவுள்ளவன் என்றதும் குறிப்பு

**வருந்தல் நீ** - உண்ணடுங்கி முறைப்பட்ட அம்மையாரை அஞ்சல் என்றமைப்பது முதற்கடமையாதலின் இதனை முன்னே கூறினார்.

**மற்று வேறு** - வேறு வேறு; **மற்று** என்பது தன்னிடையன்றி வேறாகிய என்பதும், **வேறு** என்பது நோய் தீர்த்தலன்றிப் பிற என்பதும் குறித்தது.

**என்மேல் - வெப்பு ஒழிந்து** - என்பது காண்க; **வாது** - சாதியொருமை.

**என்மேல் வெப்பு ஒழிந்து - தேரிப்பீர்** - வெப்பு ஒழியச் செய்தலால் தெரியச் செய்வீராக; **ஒழித்து** - ஒழியச் செய்தலால் எனக் காரணங் குறிப்புப்பட நின்றது.

**அருகர் நீரும் - அன்பராம் இவரும்** - இவர்களைத் தனித்தனி நோக்கிக் கூறியது; **தேறிய** தெளிந்து கைக்கொண்ட.

**தேறிய தெய்வத்தன்மை** - "தேறிய தொண்டரை" (திருவிருத்தம்); தெய்வத்தின் உண்மைத் தன்மையை என இரண்டனுருபு விரிக்க.

**தேரிப்பீர்** - தெரியச் செய்வீர் - விளக்குவீர். இருதிறத்தவரையும் பிரித்துக் கூறியதனால் இருவரும் தனித்தனி தீர்த்து உண்மை காட்டுங்கள் என்றபடி; "அவரும் யாமும் முன்னுற ஒக்கத் தீர்க்க மொழிந்து" (2646) என்று அமணரது வஞ்ச மொழிக்கு "இருதிறத் தீரும் தீரும்" என முன் (2647) குறிப்பிற் கூறிய விடையினை இங்கு விளக்கி விரித்து முறைசெய்து நியமித்தபடி; பிள்ளையார் விழியுற நோக்கலாலே வெம்மைநோய் சிறிது நீங்கியதனால் அரசன் இவ்வாறு அடைவுபடுத்தும் வன்மை பெற்றனன் எனக்

**ஆறணி சடையினார்க்கு அன்பராம் இவர்** - "மைந்தன் - அணைந்தானேல்" (2585) என்றும், "கழுமலத்தான் சங்கரனருள் பெற்று இங்கு மேவினான்" (2589) என்றும் முன்கூறிய ஒருமைக் கூற்றுக்களுடன் இங்குக் கூறும் பன்மைகளை ஒப்பு நோக்குக; இது பிள்ளையாரது நாமமந்திரக் கேள்வியும், திருமேனிக் காட்சியும், திருநோக்கமும் பெற்ற திருவருட்பேற்றினால் முன்னைய நோயும் மயக்கமும் சிறிது நீங்கப் பெற்றமையாலாகியது.

**என்னிடை** - என்முன் எனவும் உரைக்க நின்றது. 759

2658. ஞானவா ரமுத முண்டார் நற்றவத் திருவை நோக்கி
"மானினேர் விழியி னாய்கேண் ! மற்றெனைப் பால னென்று
நீநனி யஞ்ச வேண்டா ; நிலையிலா வமணர்க் கென்றும்
யானெளி யேனலே"னென் றெழுந்திருப் பதிகம் பாடி, ௭௬௦

2659. பெற்றியா லருளிச் செய்த பிள்ளையார் தமக்கு முன்னஞ்
சுற்றுநின் றழைத்த லோவா வருகர்க்குந் தென்னர் கோமான்
"இற்றைநா ளென்னை யுற்ற பிணியைநீ ரிகலித் தீருந் ;
தேற்றெனத் தீர்த்தார் வாதில் வென்றவ" ரென்று செப்ப ; ௭௬௧

2660. மன்னவன் மாற்றங் கேட்டு, வடிவுபோன் மனத்து மாசு
துன்னிய வமணர் தென்னர் தோன்றலை நோக்கி "நாங்கள்
உன்னுடம் பதனில் வெப்பை யொருபுடை வாம பாகம்
முன்னமந் திரித்துத் தெய்வ முயற்சியாற் றீர்த்து" மென்றார்.

2658. **(இ - ள்)** ஞான ஆர் அமுதம்...நோக்கி - ஞானமாகிய நிறைந்த அமுதத்தினை உண்டருளிய பிள்ளையார் நல்ல தவத்தையுடைய திருவாகிய அம்மையாரை

நோக்கி ; "மானின் நேர்விழி மாதராய் கேள் - மானின விழியினைப்போன்ற விழிகளை யுடைய அம்மையே கேட்பாயாக !; மற்று என்னை...வேண்டா - மற்று என்னைச் சிறுவன் என்று நீ மிகவும் அஞ்ச வேண்டாம் ; 'நிலையிலா அலேன்'..பாடி - நன்னிலையில்லாத அமணர்களுக்கு என்றும் யான் எளியேனல்லேன்" என்ற கருத் துடன் எழுகின்ற திருப்பதிகத்தினைப் பாடியருளி, எ௬0

2659. (இ - ள்) பெற்றியால...தமக்கும் - திருவருளைப் பற்றிய தன்மை யினால் அவ்வாறு திருப்பதிகம் அருளிச்செய்த பிள்ளையாருக்கும் ; முன்னம்... அருகர்க்கும் - தன் முன்பு சூழ்ந்து நின்று குறைத்தலை நீங்காத அமணர்களுக்கும் (ஒன்றுபோலவே), "இற்றைநாள் . வென்றவர்" என்று - இன்றைய நாளில் என்னை யடைந்த "இவ்வெப்பு நோயினை நீர் இருவீரும் தனித்தனி வேறு இகல வைத்து ஒட்டித் தீருங்கள் ; தெளிவுபெறத் தீர்த்தவர்களே வாதில் வெற்றி பெற்றவராவர்" என்று ; தென்னர் கோமான் - பாண்டிய மன்னவன் ; செப்ப - சொல்ல, எ௬௧

2660. (இ - ள்) மன்னவன் மாற்றம் கேட்டு - அரசனது மாற்றத்தினைக் கேட்டு ; வடிவுபோல் அமணர் - உடம்பினைப் போலவே மனத்தினும் மாசு பொருந் திய அமணர்கள் ; தென்னர் தோன்றலை நோக்கி - பாண்டியனாகிய அரசர் பெருமானை நோக்கி , நாங்கள் என்றார் - "நாங்கள் உனது உடம்பில் ஒரு பக்கத்தில் இடப்பாகத் தின் வெப்பு நோயை முதலில் மந்திரித்துத் தெய்வ முபற்சியினாலே தீர்ப்போம்" என்றனர். எ௬௨

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

2658. (வி - ரை) திரு - திருப்போல்வாரைத் திரு என்றது உபசாரம். தவத் திரு - தவமாவது பாண்டி நாடும் அரசனும் சைவமும் ஓங்கும்படி செய்த தவம்.

மானின் நேர்விழி - இது பதிகத் தொடக்கம், பதிகச் சொல்லும் பொருளும் போற்றப்பட்டன ; மான் - மானின விழி குறித்தது ஆகுபெயர். இங்கு இத்தன்மை யாற் கூறியது உண்ணடுங்கி உரைத்த நிலையும், அதனுல் மருண்ட பார்வையும் கண்டது பற்றியாம்.

மற்றுஎன்னை - மற்று - அம்மையார் பிள்ளையாரைத் திருமேனி எளியர் போலும் என்று எண்ணிய நிலைகுறித்தது.

நிலையிலா அமணர் - நிலை - உண்மை நிலை ; நிலையிலாராதலின் - அவர்க்கு எளியேனலேன் என்று காரணக் குறிப்புப்பட உடம்பொடு புணர்த்தி ஓதினார். நிலை யில்லாமை - தெளியா தொருபொருளே பொய்யு மெய்யுமா மென்னும் புரைநெறி என்ற குறிப்புமபட நின்றது.

என்றும் - இன்று இங்குமட்டுமன்றி வேறு எங்கும் எப்பொழுதும்.

இப்பாட்டுப் பதிகக் கருத்துணர்த்திற்று. இப்பதிகமொன்றே தனி ஒருவரை முன்னிலைப் படுத்திக் கூறிய அமைதியுடையது.

திருவையோத்த—என்பதும் பாடம். 760

2659. (வி - ரை) பெற்றி - சிவத்தன்மை; அவனருளாலல்ல தொன்றையுஞ் செய்யாராய்த் திருவருள் வசத்தராய நிறபதனுல் சிவச் செயலே தம் செயலாக நிகழும் தன்மை ; "திருவாலவாயர னிற்கவே" "சொக்க னென்னு ளிருக்கவே' என்ற பதிகம் காண்க.

பிள்ளையார் தமக்கும் அருகர்க்கும் - செப்ப எனக. இகலி - என்றதனுல் ஒட்டித் தனித்தனி செய்க என்று வகுத்தவாறு காண்க.

இற்றை நாள் உற்ற - என்றும், இற்றை நாளே தீரும் என்றும் உரைக்க நின்றது

தேற்றேன - தெளிய - விளங்க; விரைய என்றலுமாம்;

தீர்ப்பவரே - என்று பிரிநிலை ஏகாரம் தொக்கது.

வென்றவர், ஆவர் என்று ஆக்கச் சொல் வருவிக்க; இப்பாட்டு அரசன் கூறிய முடிபு; முன்னர் (2657) அருகர் நீரும், அன்பராம் இவரும் தேரிப்பீர் என்று பொதுப்படத் தன்முன் செய்யும் வாதமாவது இது என்று கூறினன், இங்கு அவ்வாதத்தின் முடிபு இது என்றும் கூறினன், "வாதுசெய்தத் திருவுள்ளமே" "வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே" என்ற இரண்டு பதிகங்களால் முறையே பெற்ற அருட் குறிப்பின் வழி நிகழ்ச்சிமுறை தொடங்கியவாறு கண்டுகொள்க.

சுற்றும் நின்று அழைத்தல் ஓவா - வேறு வாது என்னே? வெப்பொழித்துத் தெரிப்பீர் என்று அரசன் ஆணையிட்டும் ஒழியாது, அக்கிரமித்து வணங்கணராயப் பின்னரும் குரைத்துக் கொண்டிருந்த; அழைத்தல் - குரைத்தல் - கூவுதல். 761

2660. (வி - ரை) மன்னவன் மாற்றம் - மாற்றம் - சொல். இங்கு முன் பாட்டிற் கண்டபடி வாதத்தின் முடிபு இது என்று மன்னவன் கூறிய பொருளுக்கு வந்தது; மாற்றம் - மாற்றங்களின் - சொற்களின் - துணிபு; இரட்டுற மொழிதலால் மாற்றம் - மாறிய நிலை என்று கொண்டுரைத்தலுமொன்று, மாறிய நிலையாவது, "தென்னவன் றானு முன்செய் தீவினைப் பயத்தி னாலே, யந்நெறிச் சார்வு தன்னை யற மென நினைந்து நிற்ப" (2498), "தடங்கொண் மன்னனு மவர்கண் மாயத் தழுந்த" (2510) என்ற நிலைமாறிப் ("செய்தவப் பயன்வந் தெய்தச் செவ்விமுன் னுறுத லாலே" (2647) முன்னைச் சார்புகொண்ட நிலை நீங்கிப்) பிணியைத் தீர்த்தவரே வாதில் வென்றவராவர் என்று முடிபு கூறியது, "வணிகனவாய் மாற்றங் கேட்டு" (1764) என்ற காரைக்காலம்மையார் புராணமும் காண்க.

வடிவுபோல் மனத்தும் மாசு துன்னிய அமணர்-வடிவு மாசு துன்னுதலாவது உடல் கழுவாமையாலும், பல் துலக்காமை, மயிர் பறித்தல் முதலிய மரபினாலும், "வேர்வந்துற மாசூர்தர வெயிலின்னின் றுழல்வாரும்" (பிள - தேவா - அணணுமலை - கட்டபாடை - 10) என்றபடி வெயிலினிற்றல், சுடுபாறை கிடத்தல் முதலிய ஒழுக்கினாலும் உடலில் மாசு - புற அழுக்கு - மிகுதல்; மனத்து மாசு துன்னுதல் - உள்மாசு எனனும் வஞ்சம் - பொய் - கொலை முதலிய தீமைகள் மனத்தினுட் சார்ந்து பெருகுதல்; இங்குச் சரித நிகழ்ச்சியில் முன் கூறியபடி இவர்களது சொற்செயல்களினாலே இந்நிலை தெளியப்படும் பொருராய் (2577); சூழ்ச்சி (2578); அழிவுறு மனத்திடைப் புலர்ச்சி (2579) செற்றமீக் கொண்ட சிந்தையும் செய்கையுமுடைமை (2585), உறை மடத்தில் விஞ்சைமந்திரத் தொழில் விளைக்கச் சூழ்தல் (2556); தீய செயலும் தீத்தொழிலும் (2596 - 2597); மானமிலாது பின்னருஞ் சூழ்தல் (2261); மன்னனுக்குப் பொய்ம்மையும் வஞ்சனையும் புகட்டுதல் (2645) முதலியவை காண்க; அமணர்களது மாசு துன்னிய மனத்துநிலை அரசுகள் புராண வரலாற்றினும், தேவாரங்களினும், தண்டியடிகள்-நமிநந்தியடிகள் புராணங்களினும், பிறுண்டும் உணரப்படும்.

மனத்தும் - உம்மை - எண்ணும்மை.

நாங்கள்...தீர்த்தும் - இது அமணர் அரசனது முடிபினை ஏற்று வாதினை மேற்கொண்டு தாம் செயல் புரியப் புகுந்த நிலை குறித்தது; உடம்பதனில் வெப்பை ஒரு புடை வாமபாகம் - வெப்பு உடம்பினில் எங்கும் பரவியுள்ளதாக அதனில் ஒருபுடையாகிய இடது பாகத்தில் உள்ள நோயினை; இகலித் தீரும் (2659) என்ற ஆணையை ஏற்று இடப்பாகத்து நோயினை நாங்கள் தீர்க்கின்றோம் என மேற்கொண்டது.

**முன்னம்** - முதலில். பிள்ளையார் தனுசெயல் புரிவதன்முன் எனத் தாமகன் முந்திக் கொண்டது; **வாமபாகம்** - வாமபாகத்துத் நோய்க்கு ஆகிவந்தது; **வாமம்** - இடப்பக்கம். **வாமபாகத்தைத்** தோந்து கொண்டது உடற்கூற்றின்படி இடப்பாகம் பெண்பாகமானதால் ஆண் மக்களுக்கு அப்பகுதியில் பற்றிய நோய் வலிதின்றி எளிதில் தீர்த்தற்குரியது ஆதலானும், வலப்பாகம் ஆண்பாகமானதால் ஆண் மக்களுக்கு வலப்பாகத்திற் பற்றிய நோய் தீர்த்தல் எளிதன்றாதலானும் முயற்சியின் வலிய பகுதியைப் பிள்ளையாருக்கு விட்டு எளிய பகுதியை எடுத்துக் கொண்டனர்: இஃது அமணர் மருத்துநூல் முதலிய கலைஞானங்களின் வல்லமை கொண்டு துணிந்த வஞ்சச் செயல்களுள் ஒன்று எனக.

**முன்னம்**-என முந்திக்கொண்டதென்னை எனின், "போன கங்குலிற் புகுந்ததின் விளைவுகொல் ?" (2612) என்று அஞ்சிய அமணர் தமது தீத்தொழிலின் பயனை இவ்வாறு நோயாகப் பற்றச் செய்யும் பிள்ளையார் இகலி முற்பட்டு ஒரு பகுதியை நோய் தீர்ப்பாராயின் அது மற்றப் பகுதியின் நிலையை முடிக்கச் செய்துவிடுமென்று கொண்ட அச்சம் காரணம்; இவ்வுணர்ச்சி முன்னை அனுபவத்தாலும் கலைஞான அறிவினாலும் வந்தது என்க, "இருபுடை வெப்புங் கூடி யிடங்கொளா தென்னப் பொங்க" (2663) மேல் விளைதல் காண்க

**மந்திரித்துத் தெய்வ முயற்சியால்** - "தேறிய தெய்வத் தன்மை எனணிடைத் தெரிப்பீர்" (2657) என்று இங்கு நோய் நீக்கம் வாயிலாக அவ்வத் தெய்வ உண்மை காட்டுவதாகலின் இவ்வாறு கூறினர். 762

VI திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லி

**மானி னேர்விழி மாத ராய்!** வழு திக்கு மாபெருந் தேவி!கேள
பானல் வாயொரு பாலன் ஈங்கிவ னென்று நீபரி வெய்திடேல;
ஆனை மாமலை யாதி யாய இடங்க ளிற்பல அல்லல்சே
ரீனர் கட்கெளி யேனலேன்றிரு வால வாயர னிற்கவே (1)
எக்க ராமமண் கையரு நக்கெளி யேனலேன்றிரு வாலவாய்ச்
சொக்க னென்னு ளிருக்க வேதுளங் கும்மு டித்தென்னன் முன்னிவை
தக்க சீரப்புக லிக்கு மன்றமிழ் நாதன் ஞானசம் பந்தன்வாய
ஒக்க வேயுரை செய்த பத்து முரைப்ப வாக்கிட ரில்லையே (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—பிள்ளையாரைச் சூழ்ந்து அமணர் அநேகராயப் பதறிக் கத்தக் கண்டு, அம்மையார் உணர்ந்தேங்கிப் "பிள்ளையார் திருமேனி எளியர்: அமணர் எண்ணிலார்கள்" என்று அஞ்சி அரசனிடம் கூறியபோது, பிள்ளையார் அம்மையாரை நோக்கி விளித்து "என்னைப் பாலனென்று நீயிக அஞ்சவேண்டா; ஆலவாயரன் என்னுள் நிற்கவே இந்த ஈனர்கட்கு யான் எளியேன் அல்லேன்" என்று, (நோயமிக்குத் தலை நடுங்கிய நிலையிற் கிடந்த) அரசன்முன் தேற்றியது; **குறிப்பு** - மக்களுள்ளே தனிப் பட்டவரை முன்னிலைப்படுத்திப் பிள்ளையார் கூறியருளிய பதிகம் இஃதொன்றேயாம்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு**:—(1) மானின் (விழி)நேர் விழி எனக; **மான்**-மானின் விழிக்கு வந்தது - ஆகுபெயர்; உளங்கொக்குற்ற மருண்ட தன்மை மானின் மருண்ட பார்வை உவமையாயிற்று; **பால்நல்** - எனக; **பானல் வாயொரு பாலன்** - இளமைப் பருவம்மட்டிற் குறித்தது; பாலருவாயர் என்ற பெயர்க் குறிப்புமாம், **பரிவு** - பயம் - அச்சம்; **ஆனைமாமலை ஆதியாய இடங்கள்** - மதுரையைச் சுற்றியுள்ள எண்பெருங்

குன்றங்கள் ; யானைமலை - பனிமலை - நாகமலை - பசுமலை முதலாயின. இவை ஒவ்வொன்றிலும் 1000 போகள சமண குருமாா பள்ளிகள் வகுத்து வாழ்ந்தனா. அவா அங்குக் கிடந்த குகை - கற்பாறைப் படுக்கை முதலிய அடையாளங்களை இன்றும் காணலாம். இவர்களே வாதம் செய்து கழுவேறினவாகள ; பல அல்லல் - சுடுபாறையிற் கிடத்தல் - மயிா பறித்தல் முதலிய உடற்றுன்பப் போலித்தவங்கள ; ஈனர் - கீழ்மைக் குணமுடையோா, எளியேனலேன்...நீர்கவே - சிறறலால் எளியேனலேன் ; "உளமே புகுந்த அதனாலே - நல்லகல்ல அடியாரவாக்கு" (தேவா)—(2) ஆகமத்தோடு அமைந்த - ஆகமங்களென்றும் மந்திரங்களென்றும் கற்பித்துப் புனைந்து கொண்ட ; சங்கத பங்கமாய் - பாகதத்தொடு வடமொழிச் சிதைவுகளால, பாகதம் - பிராகிருதம ; இரைந்துரைத்த - வெற்றோசைபட உரைத்த ; உரைக்க ஆகதர் - என்று கூட்டுக ; சனங்கள் வெட்குறு பக்கமாய் - நல்ல மாந்தா நாணவும வெள்குறும்படி ஒழுங்கினமுடையராய ; (3) பாட்டுப் பாாக்க. மாகதக்கரி - மிக்க மதம உடைய யானை, நின்றுண்பது - சமணா வழக்கு ; ஆகதர்-சமணர்; ஆருகதம எனபது ஆகதம என வந்தது,—(3) அத்ததபொருள...மொழிந்து - பொருள நிச்சயமாவது உண்டும் இல்லையுமாம என்பது சமணா கொள்கை ; இப்பொருள கொண்டது "அத்திநாத்தி" எனனும அவாகளது மந்திரம, வாதிலழிந்து .ஓடிந்து-சமணரை வாதில வெல்லும் சரித வரலாற்றுக் குறிப்பு ; நக்கம் - நிவாணம-உடையிலலாமை; சித்திரர் - புனைந்துரைப போா ;—(4) சுநது சேனன் முதலியவை சமண குருமாா மேறகொளளும பெயாகள் ; சேனர் - பட்டப்பெயா, அரசுகளுக்கு அமணா "தங்களிலமே லாந்தரும சேனரெனும் பெயா கொடுத்த"மை காண்க. மர்நீபோல் - மெய்யும வினையும பற்றி எழுந்த உவமம ; முன மாகதக் கரிபோல் (2) என்றதுமது ; ஆரியத்தோடு செந்தமிழ்ப் பயன் அறிகிலா அந்தகர் - அமணாகள ஆரியமும தமிழுமாகிய கலை வல்லவாகளாய்ப் பல சிறந்த நூல்களையும் இயற்றியுள்ளாாகள ; ஆயினும அம்மொழிகளின் வேதங்களையும ஞானநூலகளையும ஓதியுணர்ந்தொழுகாது பேதித்து நின்றமையால பயனறிகிலர் என்றாா. "தென்றமிழ்ப் பயனாயுள்ள திருத்தொண்டத் தொகை" (358); "வாயிருந்தமிழேபடித் தாளுரு, வாயிரஞ் சமண" (அரசு - தேவா - பழையாறை வடதளி) ; அந்தகர் - குருடா ; அறிவுக்கண் இழந்தோா.—(5) கிளிவிருத்தம் - எலிப் பாட்டு எனபன சமணா செய்த சமயச் சிறுநூல்கள எனபா ; நரிவிருத்தம்-சீவக சிந்தாமணி செய்த திருத்தக்கதேவரியற்றியது. மதுரைச் சங்கத்தில அச்சிடப்பட்டுள்ளது. கிளிப்பாட்டு, எலிப்பாட்டு எனபனவும, நரிவிருத்தம போல நிலையாமையை உணாத்தக் கற்பித்துக் கொண்ட கதைகள. நரிவிருத்தக் கதை வடமொழிப் பஞ்சதந்திர நூலிலும சிறிது வேறுபாட்டோடு காணப்படுகின்றது. நரிவிருத்த முன்னுரையில் ஸ்ரீ ராகவையங்கா விரித்துரைத்தவை பாாக்க. பக்கம் - நடுவுநீாந்து ஒருபக்கமாக. அறங்காட்டி - மாடேலாங்கவர் கையர் - அறமாகிய வேடங் காட்டிப் பொருள் கவரும் கீழ்கள. "விருத்தியும கெடுக்கும" (1347), கசிவு - அனபு ; சேட்டை - திருத்தறறோர்,—(6) கனகநந்தி...மொழிகொளா-நந்தி சமணருளளும புத்தருள்ளும் குருமாா கொளளும் பட்டப்பெயா, கனக நந்தி முதலாயின குருமார் பெயர்கள்; மொழி - பெயர் ; அனகன் - அருகன ; சினகர் - சமணா ;—(7) பந்தணம் - கட்டு; பரிவு - ஆசை ; மந்தணம் - இரகசியம - மறைவு மொழி; அநதணம்...அருகந்தணம்-புத்தணம் - அமணர் பரிபாஷையான உபசாக்கங்கள்; சிந்தணர்-சமணா;—(8) சீலி - ஒழுக்கு ; தீப்போலி - தீயினைப் போன்ற உருவுடையவா-சிவபெருமான்; "செந்தீயின் உருவாளன்" "எரிபோன மேனிப் பிரான்"—(9) சாமவத்தை'யினர்கள்போற் றலை

யைப் பறித்து-சாகும் அவதையையுள்ளோர் தலை பறிதல் நோய் முடுகிய நிலை; அது போல இவர்களும் மயிர் பறிக்கும் ஒழுக்குள்ளவர்; சரித விளைவுக் குறிப்புமாம். பொடிசுக்கு முதலியவை கூட்டிய பொடி தினலும் சமண ஒழுக்குக் குறித்தது; "சுக்குத் தினனும" (தேவா); வாய் சகதிக்கு நேராம் அவர் - சகதி (சேறு) போல வாய் நாற்றமுள்ளவர்கள்;—(10) இடுக்கு - வஞ்சம்;—(11) எக்கர் - வஞ்சகர்; துளங்கும் முடித்தென்னன் முன்னிவை - உரை செய்து - வெப்புநோய் மிகுதியால் தலை நிலைநிற்கலாற்றாது நடுக்கமுற்றதாக கிடந்த பாண்டியன் முன்பு இப்பதிகம் பாடப் பட்டது என்ற சரித வரலாறு அகச்சான்று.

2661. யாதுமொன் றறிகி லாதா ரிருளென வணையச் சென்று
வாதினில் மன்ன வன்றன் வாமபா கத்தைத் தீர்ப்பார்
மீதுதம் பீலி கொண்டு தடவிட மேன்மேல் வெப்புத்
தீதுறப் பொறுது மன்னன் சிரபுரத் தவரைப் பார்த்தான். எகூக

(இ-ள்) யாதும் ... சென்று - ஏதேனும் உண்மைநிலை ஒரு சிறிதும் அறியும் ஆற்ற லில்லாராகிய அமணர்கள் இருளைப்போல அரசனைக் கிட்டிச் சென்று; வாதினில... தீர்ப்பார் - வாதத்தின் முற்பட்டு மன்னனுடைய இடப்பாகத்து நோயினைத் தீர்ப்பார் களாகி; மீது ..தடவிட - அவன் உடம்பின்மேல் தமது மயிற்பீலிக் கற்றையைக் கொண்டு (மந்திரித்துத்) தடவ, வெப்பு மேன்மேல் தீதுற - வெப்புநோய் மேன் மேலும் அதிகரித்துத் தீமை செய்தலால்; பொறுது - ஆற்றமாட்டாதவனாகி; மன் னன்...பார்த்தான் - அரசன் சீகாழித் தலைவரை வாதினில் தனது நோயினைத் தீர்க்க வேண்டுமென்ற குறிப்புடன் பார்த்தான்.

(வி - ரை) யாதுமொன்றும் அறிகிலாதார் - அமணர்; யாதும் என்பது அறி யும் பொருளையும், ஒன்றும் என்பது அறியும் அளவையும் குறித்தன; ஒன்றும் - முற்றும்மை தொக்கது "யாது மொன்றுமென பக்கலுண்டாகில" (410); அறிகி லாதார் - கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை; "மெய்ம்மையாரு கிறப தனறு கூற்றம் நம்மேல" (தேவா - அரசு-திருவா); உண்மைநிலை யறிவும், அஃதில்லை யாயினும் அனுபவத்தாலறியும் ஆற்றலு மில்லாதாராதலின் இவ்வாறு இவ்வாதத்தில் துணிந்து முற்பட்டனர் என்பது குறிப்பு.

இருள் என - இருட் கூட்டம்போல, உருப்பற்றிய உவமம், "இழுது மை யிருட் கிருள் என" (2576)

அணையச் சென்று - தாங்கள் நின்ற இடத்தினின்று பாண்டியனை அணுகச் சென்று.

மீது - பாண்டியனது உடலின்மேல்; பீலி - அமண குருமார் எப்போதும் மயிற் பீலி கையிற்பிடித்தல் மரபு; தம்பீலி கொண்டு - தாம் கையிற் பிடித்த பீலியினாலே, கொண்டு - கருவிப்பொருளில் வந்த மூன்றுருவத்தன சொல்லுருபு.

பீலியினால் தடவுதல் - மந்திரிக்கும் முறையில் அவர்கள் செய்யும் கிரியை

வெப்பு மேன்மேல் தீதுற - தடவத் தடவ முன்னைய வெப்பு மேலும் மேலும் தீயதாய் - வெப்பு மிகுவதாய - பொறாத - அங்கரிக்க, தீது - வெப்பம் - தீத் தன்மை.

பொறுது - பொறுக்கமாட்டாதவனாகி தாங்கலாற்றானாகி

பார்த்தான் - "கண்ணிற சொலி" என்பது அரசர்க்குக் கண் மாதலின் 'இதில் அமணர் தோற்றனர்; இனி நீவிர் நும்பக்கத்து வாதத்தினை மேற்கொள்க' என்ற

குறிப்புப் பார்வையிற்றோன்ற; "நோக்கம் கண்டு" என மேற்கூறுதல் காண்க. வெப்பு மேனமேல் நீறுறப்பொருந்த நிலையில் பேசமாட்டாது பார்த்தான் என்ற குறிப்புமபட நின்றது. 768

2662. தென்னவ னோக்கங் கண்டு திருக்கழு மலத்தார் செல்வர்
"அன்னவன் வலப்பால் வெப்பை யாலவா யண்ண னீறே
மன்னுமந் திரமு மாகி மருந்துமாய்த் தீர்ப்ப" தென்று
பன்னிய மறைக ளேத்திப் பகர்திருப் பதிகம் பாடி, ௭௬௯

2663. திருவளர் நீறு கொண்டு திருக்கையால் தடவத் தென்னன்
பொருவரு வெப்பு நீங்கிப் பொய்கையிற் குளிர்ந்த தப்பால்;
மருவிய விடப்பால் மிக்க வழலெழு, மண்டு தீப்போல்
இருபுடை வெப்புங் கூடி யிடங்கொளா தென்னப் பொங்க, ௭௭௦

2664. உறியுடைக் கையா டாயி னுடுக்கையர் நடுக்க மெய்திச்
செறிமயிற் பீலி தீயத், தென்னன்வெப் புறுதீ தம்மை
யெறியமா சுடலுங் கன்றி, யருகுவிட் டேற நிற்பார்
அறிவுடை யாரை யொத்தா ரறிவிலா நெறியி னின்றார். ௭௭௧

2662. (இ - ள்) தென்னவன் நோக்கம் கண்டு - பாண்டியனது நோக்கத்தினைக் கண்டு; திருக்கழுமலத்தார் செல்வர் - சீகாழியார்களுடைய செல்வராகிய பிள்ளையார்; அன்னவன் . . தீர்ப்பது என்று - அவனுடைய வலப்பாகத்து வெப்புநோயினைத் திருவாலவாயில் இறைவனது திருநீறே நிலைபெற்ற மந்திரமும் மருந்துமாகித் தீர்ப்பதாகும்" என்று கருதத்திக்கொண்டு; பன்னிய . பகர் - கூறிய வேதங்களின் கருத்தைப் போற்றி எடுத்துச் சொல்லுகின்ற, திருப்பதிகம் பாடி - "மந்திரமாவது நீறு" என்று தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடியருளிச் செய்து, ௭௬௯

2663 (இ - ள்) திருவளர்...தடவ - திருவளரும் திருநீற்றினைக் கொண்டு பிள்ளையார் தமது திருக்கையினாலே அரசனது உடலில் தடவியிட; தென்னன்...அப்பால் - பாண்டியன் ஒப்பில்லாத வெப்பு நோயினின்றும் நீங்கியதனால் அவ் வலப்பக்கம் தண்ணீர்ப் பொய்கைபோலக் குளிர்ந்தது, மருவிய . அழலெழ - பொருந்திய இடதுபக்கம் மேலும் மிகுந்த அழலின் தன்மை எழுந்ததனால்; மண்டு ..பொங்க - செறிந்த தீயினைப்போல இருபக்கத்து வெப்பம் சேர்ந்து இடங்கொள்ள மாட்டாதென்று பொங்கவே, ௭௭௦

2664. (இ - ள்) உறியுடை...எய்தி - உறிதூக்கிய கையினையுடையார்களும் பாயினை உடையாக வுடையார்களும் ஆகிய அமணர்கள் நடுக்கமடைந்து; செறி... தீய - செறிந்த மயிற்பீலிக் கற்றை தீந்துபோக; தென்னன...கன்றி - அரசனது வெப்பு நோயின் சூடு தம்மைத் தாக்குதலாலே மாசுகொண்ட உடலும் மேலும் கருகி வெதும்பியவர்களாய்; அருகுவிட்டு ஏற நிற்பார் - அரசனது அருகினின்றும் அகன்று தூரச்சென்று நிற்பவர்களாகிய அவ்வமணர்; அறிவுடையாரை...நின்றார் - அறிவில்லாத நெறியின் நின்றவராயினும் அறிவுடையார்களைப் போன்றனர். ௭௭௧

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2662. (வி - ரை) **நோக்கம் கண்டு** - நோக்கமாவது "சிரபுரத்தவரைப் பார்த்தான்" (2661) என்று முன் பாட்டிற் கூறிய பார்வையின் உட்குறிப்பு.

**தென்னவன்** - அமமையார் - அமைச்சனார் - பிள்ளையார் சார்பு பற்றிக் கூறுமிடங்களில் **தென்னவன்** (2604 - 2652 - 2656), **செழியன்** (2502 - 2631), **கொற்றவன்** (2593), **மீனவன்** (2619) என்ப பெரும்பான்மை இக்கருத்துப்பட்ட பெயர்களாலும், அமணரது சார்பு பற்றிக் கூறும்போது **மன்னன்** (2511 - 2534 - 2578 - 2579 - 2580 - 2585 - 2612 - 2620 - 2645), **கைதவன்** (2647) என்ற கருத்துப் பட்ட பெயராலும் கூறும் குறிப்புக் காண்க; அமணர் அரசனைப் பெரும்பான்மை **மன்னன்** என்ற ஒரே நிலைபற்றி உட்கொண்டு வசமாக்கி அவனது அரசாணையைத் தமவயமாக்கப் பயன்படுத்திச் சீவித்து வந்தனராதலின் அக்கருத்தே அவர்க்கு முன்னின்றது. அமமையார், அமைச்சர், பிள்ளையார் இவர்க்கு அவ்வாறன்றி அவனது நலங்களும் சிறந்தபண்புகளும் ஓங்க எண்ணிய கருத்து முற்பட நின்றது. இவர்கள் சார்பில் "மன்புரக்கும் மெய்ம்முறை" (2601), "மன்னவனின் மெய்மை நீர்" (2623), "மன்னவன் முன் வென்றருளி" (2631) என்று வருமிடங்களில் அவனது அரசாணை நிலை வழுவாமற் காக்கும் கருத்து முன் நிற்பதும் காண்க.

"**அன்னவன்...தீர்ப்பது**" என்று - இது பதிகக் கருத்து. **ஆலவாய் அண்ணல் நீறே** - "ஆலவாயான் திருநீறே" என்ற பதிக மகுடம் காண்க; ஏகாரம் தேற்றம்; பிரிநிலையுமாம்.

**மன்னும் மந்திரமும் ஆகி** - மன்னுதல் - அழிவுறாது - நிலை திரியாது-பொருந்துதல்; "மந்திர மாவது நீறு" என்ற பதிகத் தொடக்கம் அதன் கருத்தையும் உட்கோளையும் குறித்தது; **நோய் தீர்த்தல் வழியாகத் தெய்வ உண்மை நிலை நாட்டுக** (2657) என்று மன்னன் சொல்ல, அவ்வாதத்தினை ஏற்றுக்கொண்டு அமணர் "மந்திரித்துத் தெய்வ முயற்சியால்" என முந்திக் கொண்டாராதலின், அவ்வாறே பிள்ளையாரும் "மந்திர மாவது நீறு" என மந்திரத்தை வைத்துத் தொடங்கினார். அவ்வாறு தொடங்கினும் நோய் வினைகளின் தீர்வு மணி மந்திரம் மருந்து என மூவகைப்படுதலின் அம் மூன்றும் கொண்டது இத்திருநீறு என்பது கருத்தென்று விளக்குவார் **ஆலவாய் அண்ணல் நீறு** என்று மணியினையும், **மருந்துமாய்** என்று மருந்தினையும் உடன் சேர்த்துக் கூறியருளினார்.

**அன்னவன் வலப்பால் வெப்பை அண்ணல் நீறே தீர்ப்பது** - என்று கூட்டுக. இப்பதிகம் அரசனது உடலில் உற்ற வெப்பினைத் திருநீறு கருவியாக மந்திரித்துத் தீர்த்தலை உட்கொண்டதென்பது "தேற்றித் தென்னனுடலுற்ற தீப்பிணி யாயின தீரச், சாற்றிய பாடல்கள் பத்தும்" என்ற பதிகத் திருக்கடைக்காப்பின் அகச்சான்றினாலு மறியப்படும்; "அண்ணல் நீரே - தீர்ப்பீர் என்று" என்ற பாடமுமுண்டு; அது பிழையென் றொதுக்குக; "புத்தரொ டமணை வாதி லழிவிக்கு மண்ணல் திருநீறு செம்மை திடமே" என்று திருமறைக் காட்டில் அரசுகள் கேட்கப் பிள்ளையார் அருளிய "வேயுறு தோளி"ப் பதிகத்தினுள் திருநீற்றினையே இவ்வாதினில் வெற்றி தரும் பொருளாக முடித்து அருளியதை நினைவு கூர்க.

**பன்னிய மறைகள் ஏத்திப் பகர்** - வேத சிரசாகிய உபநிடதங்களின் கருத்துக்களால் திருநீற்றினைப் போற்றியருளிய என்பது "வேதத்திலுள்ளது நீறு" என்பது முதலிய பதிகப் பகுதிகளால் விளங்கும்; பஸ்மஜாபாலம் முதலிய உபநிடதங்கள் திருநீற்றைப் பஸ்மம் - ரட்சை முதலாகிய வசனங்களாற் போற்றுதல் காண்க.

**பதிகம் பாடித் - தடவ** - என்று வரும்பாட்டுடன் முடிக்க; **பதிகம்பாடி** -

பதிகத்து முதல் ஆறு திருப்பாட்டுக்களைப் பாடி என்பது கருதப்படும்; இவை வலப் பால் வெப்பைத் தீர்க்கவும், பதிகத்து ஏனைய (7 - 11) ஐந்து பாட்டுக்கள் பின்னர் இடப் பால் வெப்பைத் தீர்க்கவும், அருளப் பெற்றன என்பது, முதலாறு பாட்டுக்களில் "திருவாலவாயான் றிருநீறே" என்று போற்றி அதற்கேற்றவாறு தகர இகர மோனையும், மேல் ஐந்து பாட்டுக்களில் "ஆலவாயான் திருநீறு" என்று போற்றி அதற் கேற்றவாறு அகரமோனையும் வர அமைத்தருளி இப்பதிகம் இருகூறாக நிற்கும் அமைதி கொண்டும் கருதப்படும்; இருபாகத்துக்கும் பதிகமொன்றே யாதலும், இடப் பாகத்துக் கும் "நீறு காட்டிப் பெருமறை துதிக்குமாற்றால் போற்றி" (2668) என்பதும், சரித நிகழ்ச்சியும் எண்ணுக கருதத் தக்கன. 764

2663. (வி - ரை) திருவளர் நீறுகொண்டு திருக்கையால் தடவ - திருவளர் - திருவை வளாக்கின்ற; திரு - சைவ மெய்த் திரு; திருவாகிய என்றலுமாம்; ஈண்டுத் திரு - அருளாகிய திரு என்க, நீறு பராசத்தியின் உருவென்ப படுமாதலின்; "பராவண மாவது நீறு" (8) என்றதும், "நீற்றுப் பதிகம் நிகழ்த்தக் காலே, மாற்றுப் பரையின் வரலா றருகும்" என்றதும் கருதுக. கொண்டு - மூன்றாவதன் சொல்லுருபு; திருக் கையால் தடவ - அமணர்கள் பீலி கொண்டு தடவியது போலன்றிப், பிள்ளையார் தமது திருக்கை அரசனது உடலிற் பொருந்தத் தீண்டித் தடவினர்; இது ஞான ஆசாரியனது பரிச தீக்கைப் பேற்றை அருளியபடியாகும்;

பொருவரு வெப்பு - அரசனது தீவினை காரணமாக அமணர் செயல் பற்றுக் கோடாகக் கொண்டு பிள்ளையாரது ஆணையின் வழியே போந்து தீயின் உருவம் மாறி வெப்பாக வந்து பற்றியதாகலின் ஒப்பற்ற தென்றார்.

நீங்கிக் குளிர்ந்தது - நீங்கி - நீங்கினமையால்; அப்பால் - அந்தப் பக்கம்; பால் - பகுதி - பக்கம்.

பொய்கையின் - இன் - ஒப்புப் பொருளில் வந்த ஐந்தனுருபு; பொய்கை - தண்ணிய நீர்நிலை; "மூசு வண்டறை பொய்கையும் போன்றதே" என இக்கருத்தே கொண்டு நீற்றறையைக் குளிர்ந்த நிலையினை அரசுகள் அருளியது காண்க;

மருவிய இடப்பால் மிக்க அழல் எழ - மருவிய-முன்னரே வெப்புப் பொருந்திய என்க; அப்பக்கம் அதன் மேலும் மிக்க வெப்பு எழுந்தமையால் என்பதாம்; மருவிய - முன் அமணரது தீவுச் செயல் பொருந்திய என்று குறிப்புமாம், அவர்கள் அப்பக்கத் தில் முன் உள்ள வெப்பினைத் தீர்க்கமாட்டாமையே யன்றி, வலப்பால் வெப்பும் ஆங் குக் கூடி மிகுவதனைக் காக்கமாட்டாமையுமாகிய இருவகைத் தோல்வியும் பெற்றனர் என்பது குறிப்பு.

இருபுடை வெப்பும் கூடி இடங்கொளா தென்ன - இருபுடை வெப்பும் - முன் இடப் பக்கத்தில் இருந்த வெப்புடன் வலப்பக்கத்து வெப்பும்; கூடி - கூடி யதனால். இடம் கொளாது என - இருபுடை வெப்பும் ஒரு பக்கத்தில் இருக்க இடமின்மை என்னும்படி; இடம் - இடத்தில் - என்று இரட்டுற மொழிதலுமாம்; புடை - பக்கம்.

பொங்குதல் - மேலும் அதிகரித்தல். பிள்ளையார் திருநீறு கொண்டு தடவும் பதிகப் பாட்டுத்தோறும் வலப்பாகத்தின் வெப்புப் படிப்படியாய் வந்து அளவு அதிகமாதல், 765

2664. (வி - ரை) உறியுடைக்கையர் - உறி தூக்கிய கையினை யுடையவர்; கை யில் சிறிய உறியில் குண்டிகை நீரைத் தூக்கி வருதல் அமணகுருமார் வழக்கு; பாயுடுத் தலும் அவ்வாறே அவர் வழக்குக்களுள் ஒன்று; உடுக்கை-உடை; பாயின் உடுக்கை- பாயாகிய உடை. உடைக்கையர் - உடுக்கையர் என இருமுறையும் கையர் என்ற

குறிப்புமுண்டாக கூறியது முன்பாட்டிற் கூறிய இருவகைத் தோல்வி குறித்தது; கையர் - கீழ் மக்கள் என்ற குறிப்புமுண்ட நின்றது; இவர்கள் இடப்பாகத்தில் நின்றவர்கள்.

மயிற் பீலி தீய - தம் கையில் கொண்டு அரசனுடலைத் தடவி நின்ற மயிற் பீலிக் கற்றை; தீய - கருக, வெப்பு மிகுதியின் சூடு தாங்கலாற்றாது மயிற் பீலி தீந்துபோக எனக.

தென்னன் வெப்புறு தீ - இவ்வொன்றே மயிற்பீலி தீவதற்கும், தம்மை எறிவதற்கும் காரணமாதலின் முன்னும் பின்னும் கூட்டி உரைக்கும்படி இடையில் வைக்கப்பட்டது.

எறிய மாசுடலும் கன்றி - எறிய - எறிதலால், கன்றுதல் - கருதுதல் - வெதும்புதல், மாசுடலும் கன்றி - இடற்றைக் கருமையுடன் செறிந்த செயற்கை மாசும் கூடிக் கருகிய உடல், வெப்புத் தீயினுறை மேலும் கருகிற்று எனக. கன்றி - கன்றுதலால்; நடுக்கமெய்தி - "கண் திகைப்பிப்பது நீறு" என்ற பதிகம் காண்க;

அருகு விட்டு ஏற நிற்பார் - அருகு - மந்திரித்து நோய் நீக்க அணுகச் சென்ற அணியதாகிய இடம், ஏற - அகல தூரத்தே - சேய்மையில்.

நிற்பார் - நின்றார் - ஒத்தார் - என்று கூட்டி முடிக்க.

அறிவுடையாரை ஒத்தார் - அறிவுடையாரல்லாராயினும் அறிவுடையார் போன்றனர் என்பது; அறிவுடைமை போல்வதாவது அறிவுடையோர் போன்று செயல் செய்தல், மண்டு மன்னனை அணுகி அருகு நிற்றலை விட்டுச் சிறிது அகன்று நிற்றல், "அகலா தணுகாது தீக்காய்வார் போலக், இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்" (குறள்) என்றபடி மிக நீங்குவதும் மிகச் செறிவதும் செய்யாது தீக்காய்வார் போல மன்னர்ச் சேர்ந்தொழுகுதல் அறிவுடையார் செயல், அதுபோல இங்கு அமணர் மிக அருகில் நிற்பதை விட்டு மிக அகலாமல் சற்றுத் தூரத்தில் நின்றாராதலின் அறிவுடையாரை ஒத்தனர்; "புத்திதா னுடையை போல விருந்தனை" (சித்தி - க - சஉ)

அறிவிலா - நின்றார் - ஆறுதல் அச்செயலாற் பயன் கொள்ளமாட்டா தழிந்தன ராதலின் அறிவிலா நெறியில் நின்றார் என்றார். அறிவிலா நெறி - அமண நெறி

இங்கு இவ்வாறன்றி, இந்நோய் எம்மால் தீராததற்கு அரிதென விவேகம் வந்து அகன்ற அறிவுடையோர் போல என்றுரைப்பர் ஆறுமுகத் தம்பிரானார். நெருப்புச் சுடுமென்பதை யறிந்து விலகிக் கொண்டமையால் அறிவுடையாரை நிகர்த்தனர் என்பது இராமநாதச் செட்டியார் உரைக் குறிப்பு. பிள்ளையார் பெரியார்; அவரே தீர்க்கட்டும் என்று ஒதுங்கி நிற்பது அறிவுடைமையாதலின் அவ்வாறு செய்வார் போல; "கல்லார் தவரு ணிற்கலார் கற்றார்முற், சொல்லா நிருக்கப் பெறின்" (குறள்) என்றதற்கேற்ப ஒதுங்கி ஏற நின்றனர் என்பது சதாசிவ செட்டியார் குறிப்பு.

அறிவிலா நெறியில் நின்றமையாவது அறியமாட்டாது தமது புரை நெறியினையே பற்றிப் பின்னரும் மூண்டு நின்ற தன்மை. 766

2665. பலர்தொழும் புகலி மன்னர் ஒருபுடை வெப்பைப் பாறி
மலர்தலை யுலகின் மிக்கார் வந்ததி சயித்துச் சூழ
இலகுவேற் றென்னன் மேனி வலமிட மெய்தி நீடும்
உலகினிற் றண்மை வெம்மை யோதுங்கிளே லோத்த தன்றே. ௭௬௭

(இ - ள்) பலர்தொழும்... பாறி - பலராலும் தொழப்படும் சீகாழித் தலைவராகிய பிள்ளையார் அரசனது ஒரு பக்கத்து (வலப்பக்கத்து) வெப்பினைப் போக்க; மலர்தலை... சூழ - மலர்தலையுடைய உலகின் அறிவினுள் மிக்கோர்கள் அதிசயித்து வந்து சூழ;

இலகு...எய்தி - விளங்கும் வேலேந்திய பாண்டியனது உடல் வலத்தின் வெப்பும் இடத்திற் பொருந்தியமையால; நீடும...அன்றே - நீண்ட உலகில் தட்பமும் வெப்பமும் ஒன்றுபட ஒதுங்கினாற்போல அப்பொழுது இருந்தது;

(வி - ரை) பலர் தொழும் - "பலர் புகழ் ஞாயிறு" (முருகு); பாற்ற - அழிக்க; எய்தி - எய்தியமையால, வலம் - வலத்தின் வெப்பம்;

வலமிடம் - தண்மை வெம்மை ஒதுங்கினால் ஒத்து - வலமும் இடமுமாகத் தண்மையும் வெப்பமும் வந்து முறையே ஒதுங்கியது போல;

மிக்கார் - அறிவின் மிக்கார் என வருவித்துரைக்க 767

2666. மன்னவன் மொழிவா "னென்னே! மதித்தவிக் கால மொன்றில்
வெந்நர கொருபா லாகும், வீட்டின்ப மொருபா லாகும்;
துன்னுநஞ் சொருபா லாகுஞ்; சுவையமு தொருபா லாகும்;
எனவடி வொன்றி லுற்றே னிருதிறத் தியல்பு" மென்பான், ௭௬௮

2667. "வெந்தொழி லருகர்! தோற்றீர்; ரென்னைவிட் டகல நீங்கும்;
வந்தெனை யுய்யக் கொண்ட மறைக்குல வள்ள லாரே!
இந்தவெப் படைய நீங்க வெனக்கருள் புரிவீ" ரென்று
சிந்தையாற் றொழுது சொன்னான் செல்கதிக் கணிய னானான். ௭௬௯

2666. (இ - ள்) மன்னவன் மொழிவான் - அரசன் சொல்வானாகி; "என்னே... காலமொன்றில் - என்ன அதிசயம்! குறிக்கொண்ட இவ்வொரே காலத்தில்; வெந்நரகு...ஆகும் - கொடிய நரகம் ஒரு பக்கத்தில் உளதாகும் - முத்தியின்பம் மற்றொரு பக்கத்தில் உளதாகும்; துன்னும...அமுது ஒருபாலாகும் - மிக்க விடத்தின் நுகர்ச்சி ஒரு பக்கத்தில் உளது ஆகும - சுவையமுதின் நுகர்ச்சி மற்ற ஒரு பக்கத்தில் உளதாகும்; என வடிவு, என்பான - என் உடல் ஒன்றினிடமாகவே இவ்வாறு மாறுபட்ட இருவேறு தன்மைகளினியல்பையும் அடையப் பெற்றேன் என்பானாகி;

2667. (இ - ள்) வெந்தொழில ..நீங்கும - வெவ்விய தொழிலையுடைய அமணர்களே! நீங்கள் தோற்றுவிட்டீர்கள்; என்னை விட்டு அகல நீங்குங்கள்; வந்துஎனை .புரிவீர் என்று - இங்கு வந்து என்னை உய்யும்படி ஆட்கொண்டருளிய மறைக்குலத்து வந்த வள்ளலாரே! இந்த வெப்பு நோய் முழுதும் நீங்கும்படி எனக்கு அருள் புரிவீராக என்று, சிந்தையால ..அணியனானான - மனத்தினாலே வணங்கி இவ்வாறு சொன்னான செல்லத்தக்க நற்கதிக்கு அணியவனாகிய பாண்டியன். ௭௬௯

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2666. (வி - ரை) மதித்த இக் காலம் ஒன்றில் - அனுபவமாகத் தெரிந்த இந்த ஒரே காலத்தில்; ஒன்றிலே - ஒன்றின் கணமேயே; தேற்றேகாரம் தொக்கது; இதனால் அனுபவத்தின் காலம் கூறப்பட்டது. இன்பவீடு என்க. "பரனை நினைந்திமமூன்றும் விட்டதே பேரின்ப வீடு". இதனால் அனுபவிக்கும் நிலை குறிக்கப் பட்டது.

துன்னும்...அமுது ஒருபால் ஆகும் - துன்னும் நஞ்சு - கொடுமை எல்லாம் கூடிச் செறிந்த நஞ்சின் நுகர்ச்சி; சுவை அமுது - நறுசுவைகளெல்லாம் செறிந்த அமுத நுகர்ச்சி; நஞ்சு - அமுதம் - என்பன அவ்வவ் நுகர்ச்சிகளுக்காகி வந்தன. இதனால் அனுபவத் துன்ப வின்பங்கள் குறிக்கப்பட்டன.

**பால் ஆதும்** - என்ற நான்கிடத்தும் ஏழனுருபு விரிக்க; **ஆதும்** - உளது. **ஆகின்றது** - நிகழ்கின்றது.

**என் வடிவு ஒன்றில்** - **வடிவு** - உடல் என்ற பொருளில் வந்தது; **ஒன்றில்** - ஒன்றினிலேயே; தேற்றேகாரம் தொக்கது ஒரு பொருளே மாறுபட்ட வெவ்வேறு இரண்டு இயல்புகள் பொருந்துதல் கூடாது, ஆனால் என் வடிவு ஒன்றே இங்ஙனம் மாறுபட்ட வெவ்வேறாகிய இயல்புகளைப் பொருந்தப் பெற்றேன் என்பது; **ஒன்றினால் உற்றேன்** என்று மூன்றனுருபு விரித்து இவ்வோருடம்பானே வெவ்வேறுடம்புகளான பொருந்துவனவற்றைப் பெற்றேன் என்றலுமாம்; **இருதிறம்** - இரு வேறு திறம்.

**என்பான்** - முற்றெச்சம்; என்பானாகி; **என்பான் - சொன்னான்** என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. 768

2667. (வி - ரை) **வெந்தொழில்** - மயக்கம் செய்ததும், தீத்தொழில் செய்ததும், வஞ்சத்திலும் பொய்ம்மையிலும் பகுத்த முயன்றதும் ஆகிய வெவ்விய தொழில்கள். வெந்தொழிலுக்கு அருகர் (அணிமையர்) என்றதும் குறிப்பு.

**தோற்றீர்** - முன் 2664-ல் கூறியபடி; நீக்காமை - காவாமை என்ற இருவகையாலும் தோல்வியடைந்து விட்டீர்கள் என வாதத்தின் முடிவு கூறியபடி; வெற்றி தோல்விகளின் தன்மை முன் 2659-ல் வந்தவாற்றை தோல்வியினை அரசன் நிச்சயித்தான் என்க.

**என்னை விட்டகல நீங்கும்** - தோல்வியுற்றார்க்கு அரசன் இங்கு விதித்த தண்டம்; அறிவு கொண்டு தேறி இவ்வரச நீதியினுள் அமைந்து நீங்கியிருப்பார்களாயின அழிவுறாது உய்ந்திருப்பர் அவ்வமணர்; அங்ஙனம் செய்யாது மேலும் மேலும் வாதங்களில் ஒட்டித் தமது அழிவினைத் தாமே தேடிக்கொள்வது கண்டு கொள்க.

**வந்து - உய்யக்கொண்ட** - **வந்து** - நான் விரும்பி வேண்டாமை மாத்திரையேயன்றி வெறுத்தகற்ற எண்ணிய போதும் அருள் கொண்டு இங்கு வந்தருளி; **உய்யக்கொண்ட** - கொடிய வினைப்பயனை ஓட்டி ஒறுத்துக் கழிப்பித்து உய்யும்படி செய்தருளி ஆளாகக் கொண்ட, **வள்ளலாரே** - வள்ளன்மையாவது என்று அருட்பெருக்கும் அருட்செயலின் அளவின்மையுமாம். **அடைய** - முழுதும், “கோயிலடைய விளக்கேற்றி” (1879), தேவரீரைத் தஞ்சமாக அடைந்ததனால் என்றலுமாம்.

**சிந்தையாற்றொழுது** - நோய் மிகுதியால் எழுந்தும் கைக்கூப்பியும் உடம்பால் தொழுதற்கு வலியின்மையால் மனத்தால் தொழுதபடியே

**செல்கதிக்கு அணியன் ஆனேன்** - **செல்கதி** - செல்லத்தக்க கதி, சிவநெறிப் பேறு; **அணியன்** - சமீபத்தவன், மேற்கூறியபடி சொன்னதனால் அணியன் ஆனேன் என்றும் உரைக்க நின்ற நயம் காண்க, கதிக்கு அணியனாயினமை, “செய்தவப் பயன்வந் தெய்தும் செவ்விமுன் னுறுத லாலே” (2647) என முன் வரும் குறிப்பிட்டமை காண்க, ஆண்டு அச் செவ்வி - பருவம் - மட்டும் வந்தது. இங்கு அது ஓரளவில் கைகூடிற்று என்று குறிக்க அணியன் என்றார், முழுதும் கதிகூடப் பெற்றமை மேற்பாட்டிற் கூறுதல் காண்க. **செல்கதி** - “செல்கதிப் பயன் காண்பவர் போற்சிந்தை கூரா” (2045). 769

2668. திருமுகங் கருணை காட்டத் திருக்கையா னீறு காட்டி
பெருமறை துதிக்கு மாற்றாற் பிள்ளையார் போற்றிப் பின்னும்
ஒருமுறை தடவ வங்கண் ணொழிந்தவெப் பகன்று பாக
மருவுதீப் பிணியு நீங்கி வழுதியு முழுது முய்ந்தான். ௭௭௦

(இ - ள்) திருமுகம்...காட்டி - திருமுகப் பொலிவு உள்ளே நிறைந்த கருணையினைப் புறத்துக் காட்டியிடத் திருக்கையினாலே திருநீற்றினைக் காட்டி; பெருமறை ..போற்றி - பெரிய மறைகள் துதிக்கும் வகையாலே பிள்ளையார் துதித்து; பின்னும் ஒரு முறை தடவ - பின்னரும் ஒரு முறை பாண்டியனுடம்பில் தடவியருள; வெப்பு அங்கண் ஒழிந்து அகன்று - வெப்புநோய் அப்பொழுதே நீங்கி உடம்பை விட்டு முழுதும் அகன்றதனாலே, பாகம் நீங்கி - இடப் பாகத்தில் முன் பொருந்திய தீப்பிணியும் நீங்கிப் பாண்டியனும் முழுவதும் உய்தியடைந்தான்.

(வி - ரை) திருமுகம் கருணை காட்ட - அருள் புரிவீர் என்று சிந்தையாற் றொழுது சொன்ன அரசனுக்கு அவன் வேண்டியவாறே தாம் தந்து அருளும் நிலைமை மேற்கொண்ட திருவுள்ளக் கருணையைத் திருமுகப்பொலிவினாற் காட்டினார்.

திருக்கையால் நீறு காட்டி - முகம் கருணை காட்டுதற்கு கை அக கருணை - அருள் - வடிவான திருநீற்றினைக் காட்டிற்று என்ற குறிப்புக் காண்க. அருள்வடிவு - சிவசத்தி; நீறு சிவசத்தியின் வடிவம்; நீறு காட்டித் - தடவ - என்று கூட்டுக. நீறுகொண்டு தடவ என்பது கருத்து; 2663 பார்க்க.

பெருமறை...போற்றி - "பன்னிய மறைகளேத்திப் பகர்திருப் பதிகம் பாடி" (2662) என்று வலப்பக்கத்து நோய் தீர்க்கப் பாடியவாறே அத்திருப்பதிகத்தை அக்கருத்துடன் திருநீற்றைப் போற்றிப் பாடி நிறைவாக்கி என்பதாம்.

பின்னும் ஒருமுறை தடவ - பின்னும் - முன்னர் வலப்பக்கத்தின் நோய் நீக்க ஒருமுறை தடவியதன்றிப் பின்னும் என்க, தடவுதல் - தீண்டிப் பூசுதல்; கருணை காட்டுதல் - பாவனையும், போற்றுதல் - மந்திரமும், தடவுதல் - கிரியையும் என மூன்றும் கண்டுகொள்க.

வெப்பு அங்கண் ஒழிந்து அகன்று - என்க, அங்கண் - இடமும் காலமும் குறித்தது; அங்கணின்றும் ஒழிந்து; ஒழிந்து - நீறு தடவிய இடப்பக்கத்தினின்றும் நீங்குதலும், அகன்று - உடம்பில் எங்குமில்லாது அகலுதலுக்கும் வந்தனவாதலின் கூறியது கூறலன்மையறிக; அடைய நீங்க என்று அரசன் முன் வேண்டியதனை (2667) வேண்டியவாறே அருளிய வகை காட்டியபடி.

பாகம் மருவு தீப்பிணியும் - வலப்பக்கத்தின்றும் இடப்பாகத்தில் வந்து கூடிய மிக்க வெப்பேயன்றி, முன்னர்ப் பொருந்தி அமணரால் தீர்க்கப்படாது நின்ற பிணியும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை; இனிப் பாகம்-மலபரிபாகம் - நீங்கும் பக்குவம் - என்று கொண்டு, மலபரிபாகமும் இருவினை ஒப்பும் வரப்பெற்று, வல்வினையும் மூலமலமும் உடைய கொடிய பிறவிப் பிணியும் நீங்கி என்று உரைக்கும் குறிப்பும் காண்க. பின்னர்ச் "சிரபுரத் தலைவர் தீண்டிப், பொன்னவில் கொன்றையார்தந் திருநீறு பூசப் பெற்று, முன்னைவல் வினையு நீங்கி முதல்வனை யறியுந் தன்மை, துன்னினன் வினைக ளொத்துத் துலையென நிற்ற லாலே" (2717) என்பதும், முன்னர், "தீயவிப் பிணியே யன்றிப் பிறவியுந் தீரு மென்றார்" (2618) என்றதும் எண்ணுக கருதத்தக்கன.

வழுதியும் முழுதும் உய்ந்தான் - வழுதி - முன்னர் வழுவிற்பட்டவன் என்ற குறிப்புப்பட இப்பெயரால் கூறிய நயம் காண்க. முழுதும் - நோயும் அதன் மூலமும் ஆகிய முழுவதும், மூலநோயாகிய பிறவிப் பிணியும் என்றதும் குறிப்பு. "பிறவா மேன்மையுற்றனன்" (2669) என மேற்கூறுதல் காண்க.

அகன்று நீங்கி—அகன்றுபோக—என்பனவும் பாடங்கள். 770

VII திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் திருநீற்றுப்பதிகம் - பண் - காந்தாரம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திரு வாலவா யான்திரு நீறே. (1)

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திரு வாலவா யான்திரு நீறே. (2)

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திரு வாலவா யான்திரு நீறே. (3)

காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திரு வாலவா யான்திரு நீறே. (4)

பூச வினியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச வினியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு வந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திரு வாலவா யான்திரு நீறே. (5)

அருத்தம தாவது நீறு வவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திரு வாலவா யான்திரு நீறே (6)

எயிலது வட்டது நீறு விருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தாலவா யான்திரு நீறே (7)

இராவணன் மேலது நீறு வெண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி யாலவா யான்திரு நீறே. (8)

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல வுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மாலவா யான்திரு நீறே. (9)

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆலவா யான்றிரு நீறே. (10)

ஆற்ற லடல்விடை யேறும் ஆலவா யான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னனுட லுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:**—திருஆலவாயான் திருநீறே மந்திரமும் மருந்துமாகித் தென்னவனது தீப்பிணியாயின தீர்க்கும் அது வேதங்களால் போற்றப்பட்டது என்று தேற்றித் தென்னனுட லுற்ற தீப்பிணி யாயின தீரச் சாற்றப்பட்டது. 2662-ம், பதிகம் திருக்கடைக்காப்பும் பார்க்க.

**பதிகப்பாட்டுக் குறிப்பு**—(1) திருநீறே மந்திரமாவதும் மற்றும் கூறும் தன்மைகளும் உள்ளதாவதுமாம்; **தந்திரம்** - "மந்திரமுந் தந்திரமு மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள" (தாண்); பிணி நீக்குதும் மூவகைச் சாதனங்களுள் ஒன்று; **செந்துவர் வாயுமை பங்கன்** - இறைவர் மீனாட்சிசுந்தரராய் வீற்றிருக்கும் தன்மை; **மந்திரம்** - சிபஞ்சாக்கர முதலாகிய எல்லா மந்திரமும்; **நீறு** - நீற்றப்படுவதனால் நீறு எனப்படும். **மந்திரம்** - வேதம்; **தந்திரம்** - சிவாகமங்கள் என்று கொண்டு இவற்றுள் விதித்தன வெல்லாம் என்றுரைத்தலுமாம்;—(2) **போதம்** - சிவ ஞானம் (2742); **வேதத்திலுள்ளது நீறு**-சிவபெருமானுக்குப் போலவே திருநீற்றுக்கும் வேதங்களுள் நமஸ்காரம் சொல்லப்பட்டுள்ளது; பஸ்மஜாபாலம், காலாக்கினி ருத்திரம் முதலிய உபநிடதங்கள் திருநீற்றைப்பற்றிப் பேசுவன. "விபூதி யில்லாத நெற்றியைக் கொளுத்துக" என்பது முதலாகிய வசனங்களால் வேதங்களும், 'திருவெண்ணீறணியாத திருவிலூரும் ..அவையெல்லா மூரல்ல அடவி காடே" (அரசுகள் - தாண்) என்பனவாதி வசனங்களால் தமிழ் வேதங்களும் போற்றும்; **வெந்துயர்** - கொடியதாகிய பிறவித் துன்பம்; சிறப்புடைமை விரிக்க; அதனையுள்ளிட்ட எல்லாத் துன்பங்களும் என்க; **புன்மை** - உடற்புன்மையும் உயிர்ப் புன்மையாகிய ஆணவமலமும்; திருநீறு அணிதல்-தீயிற் குளித்தல் (ஆக்னேய ஸ்நானம்) என்பர்; உயிர்களின் மலங்கழுவுதலால் இது க்ஷாரம் எனப் பெயர் பெறும்; **உண்மை** - உண்மை நூல்கள்;—(3) **முனிவர்** - இறைவரை இடையறாது நினைப்பிற் கொள்வோர்; **சத்தியம்** - சத்து எனப்படும் அழிவில்லாத பொருள், திருநீற்றினை மேல் எவ்விதமாகவும் அழிக்கலாற்றாமை காண்க; **சித்தி** - அணிமா முதலிய எட்டுச் சித்திகள் - 1711 உரை பார்க்க;—(4) **கவின்** - அழகு, முன் சுந்தரமாவது என்றது தனது அழகும், இங்குக் கவினைத்தருவது தான் சார்ந்த பொருளை அழகு செய்வதும் ஆம், **மாணம்** - மாண்பு, **தகைவது** - தகைவு - அது; **தகை** - மேம்பாடு; **துகைவது** - நீங்காமற் கட்டுவது என்றலுமாம்; **மதி** - உலக அறிவு; **சேணம்** - சேண் - மேலுலகம், **அம்** - அழகிய இன்பம்;—(5) **பெருந்தவத்தோர்** — முத்தியை விரும்பும் தவசிகள்: **ஆசை கெடுப்பது** - பற்றறுத்தலாகிய முத்தி சாதனம்; **அந்தம்** - இறுதி; எல்லாப் பொருள்களும் இறுதியில் நீறாய் முடிவதனால் அந்தம் என்றார்; **தேசம்** - உலகோர்; உயர்ந்தோர்; ஆகுபெயர்;—(6) **அருத்தம்** - செல்வம், **அவலம்** - துன்பம், **பொருந்தும்** - நன்மைகள் எல்லாம் பொருந்து

மிடம்; சாதனம், **புண்ணியம்** - சிவபுண்ணியம்; **புண்ணியர்** - சிவபுண்ணியமுடையவர், சிவபெருமான் என்றலுமாம், "புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்" (தாண்) ;—(7) **எயில்** - மதில்; இங்கு மும்மதில்களையுடைய முப்புரம் குறித்தது; **அட்டது** - சுட்டது, **இருமை** - இம்மையும் மறுமையும் வரும் இன்பம், **துயில்** - தூக்கம்; இறப்பு என்றலுமாம், துயில் மறக்கு நிலையாதலின், அதனைத் தடுப்பது சிவனை மறக்காமற் செய்வது என்பதாம், **அயில்** - கூர்மை, **ஐ** - சாரியை;—(8) **இராவணன் மேலது** - இராவணன் சிறந்த சிவனடியானதலால் அவன் பூசும் நீற்றினைப் பற்றிக் கூறினார். **பராவணம்** - பரை - சிவசத்தியின் வண்ணம் - திருநீறு சிவசத்தியின் வடிவம் என்பது நூற்றுணிபு; **பரா** - பராசத்தி - வடமொழி ஆகார ஈறு; ஸ்திரீலிங்கமாகிய ஆகார ஈற்றுப் பெண்பாற் சொல். தமிழில் பரை என வரும். "நீற்றுப் பதிகம் நிகழ்த்துங் காலை, மாற்றுப் பரையின் வரலாறுகும்" (பாயிரம்)—(9) **மாலொடு அயன்** - சிறப்புப்பற்றி ஒரு உருவை மாலுடன் சேர்த்தினார், திருநீறு இறைவரது வடிவாதலின் அரியயனாலும் அறியப்பட்டதென்றார், **உடம்பிடர்** - உடம்பின்கண் வரும் இடர் என்றும், உடம்பாகிய (பிறவி) இடர் என்றும் உரைக்க நின்றது; **ஆல்** - விடம்; **ஆல் அமுது உண்ட** - ஆலத்தை அமுதாக உண்ட எனக. "ஆலத்தினலமிர் தாக்கிய கோன்" (திருக்கோவை), "ஆலமே யமுத மாக வுண்டு" (2638)—(10) **குண்டிகைக் கையர்** - மண்டரித்த நீர்நிறைந்த சிறு கரகத்தை உறியில் தூக்கிக் கையில் ஏந்திச்செல்லும் சமண குருமார் வழக்குச் சுட்டியது, **கண் திகைப்பிப்பது** - காணமாட்டாது கண் திகைக்கும்படி செய்வது; திருநீற்றின் வலிமையினால் வலப்பாகத்து வெப்பு நீங்கியதும் இடப்பாகத்து வெப்பு நீங்கி வருவதும் கண்ட அமணர் நடுங்கிக் கண் திகைத்த வரலாறும் குறிப்பு; "உறியுடைக் கையர் பாயி னுடுக்கையர் நடுக்க மெய்தி" (2664); சரித அகச்சான்று; **எண்திசைப் பட்ட பொருளார்** - எட்டுத்திக்குக் காவலர்; இவர்கள் இந்திரன், தீக்கடவுள் முதலியோர், **பொருளார்** - தலைவர்; **பொருள்** - தலைமை; **அண்டத்தவர்** - எல்லாப் புவனங்களிலும் உள்ள எல்லா வுயிர்களும். **அண்டம்** - புவனம்,—(11) **ஆற்றல்** - வல்லமை, **அடல்** - வெற்றி; "அரண முரணேறு" (தேவா) அடைந்தாரைக் காக்கும் ஆற்றலும் அடையலரை அடும் வெற்றியும் எனக; **ஆலவாயான் திருநீற்றைப் போற்றி** - "ஆலவாயான் றிருநீறே" என்று பாசுரந்தோறும் துதித்தமை காண்க, துதிக்கப்பட்டது திருநீறேயாயினும் அது தனித்துப் போற்றப்படாமல், அதனையுடைய ஆலவாயானுடன் சேர்த்துப் போற்றப்பட்டதனால் அவனையும் போற்றியதாயிற்று; "நீறே நீரப தென்று மறைகளேத்தப் பகர்" (2662) "பெருமறை துதிக்குமாற்றால் பிள்ளையார் போற்றி" (2668) என்றும் சரிதவரலாறுபற்றி இருமுறை இதனை விளக்குதல் காண்க, **தேற்றி** - பெருமையை உலகறியச் செய்தல், அம்மையாரையும் அமைச்சரையும் முன்னாத (2629) தேற்றியவாறே என்ற குறிப்புமாம்; "நீங்கள் தேறிய தெய்வத் தன்மை யென்னிடைத் தெரிப்பீர் என்ற" (2657) அரசனையும் அவ்வாறே நோய் நீக்கிய வகையால் சிவபெருமானது திருநீறே பொருளாவது எனத் தெரிவித்தது - தேற்றி - என்றலும் குறிப்பு; **தீப்பிணி** - தீயபிணி, தீயினால் விளைந்த பிணி என்ற சரிதக் குறிப்புமாம்; **பிணியாயின** - வலமிடமாகிய இருபக்கத்துப் பிணியும் தீர இவ்வொரு பதிகம் இருபகுதியாக அருளப்பட்டமையின் பிணி ஆயின என்று பன்மையாற் கூறினார்; **தீயும் பிணியும்** என்று உம்மைத்தொகையாகக் கொண்டு, "வெந்தழல் வெம்மைபோயப் பெருந்தழற் பொதி வெதுப்பெனப் பெயர்பெற்ற" தாகிய அமணரிட்ட தீயின் விளைவும், அதன் மூலமாகிய மயக்கந்தரும் ஆணவமாகிய மூலநோய்ப் பிணியும் தீர என்றலுமாம்;

"பிணியே யன்றிப பிறவியும் தீரும்" (2618) "மயக்கம்" (2657) என்றவை காண்க. பிணியாயின தீரச் சாற்றிய பாடல்கள் - இப்பதிகம் பாண்டியன சுரந்தீர்க்கப்பாடிய தென்ற வரலாற்றுக்குச் சிறந்த அகச்சான்று; உடல் உற்ற - பிள்ளையாரது ஆணையால் வந்துற்ற என்ற குறிப்பும் காண்க. "மருவு தீப்பிணியும் நீங்கி வழுதியு முழுது முய்ந்தான்" (2664); பதிகத்துள் "மந்திரமாவது" (1) "வெந்துய ரதீர்ப்பது" (2), "அவலமறுப்பது" - "வருத்தந் தணிப்பது" (6); "எலவுடம்பிடர் தீர்க்குமின்பந் தருவது நீறு" (9) என்பன முதலியவையும் சரித வரலாற்றுக் குறிப்புப்பட நிற்பன காண்க; இப்பதிகப்பாட்டுக் குறிப்புக்கள் பல க. சதாசிவச் செட்டியார் அவர்கள் உரைக் குறிப்புக்களைத் தழுவி எழுதப்பட்டன.

2669. கோற்றவன் றேவி யாருங் குலச்சிறை யாருந் தீங்கு
சேற்றவர் செய்ய பாத தாமரை சென்னி சேர்த்துப்
"பெற்றனம் பெருமை; யின்று பிறந்தனம்; பிறவா மேன்மை
யுற்றனன் மன்ன" னென்றே யுளங்களித் துவகை மிக்கார். ௭௭௧

(இ - ள்) கொற்றவன்...சேர்த்து - அரசனது மாதேவியாரும் குலச்சிறையாரும், தீங்கினை அழித்த பிள்ளையாரது சிவந்த திருவடித் தாமரைகளைத் தமது முடியிற் சேர்த்து வணங்கி; "பெற்றனம்...மன்னன்" என்றே - நாங்கள் பெருமை பெற்றோம்; இன்றை நாளே உறுதிபெறப் பிறந்தவர்களாயினோம்; அரசன் இனிப் பிறவியில்வாராத மேன்மை யடைந்தனன் என்றுகூறி; உளம்...மிக்கார் - உள்ளம் களிப்படைந்து மிகவும் மகிழ்ந்தனர்.

(வி - ரை) தீங்கு செற்றவர் - வெப்பு நோயாகிய தீங்கும், அதன் மூலமாகிய அமண் சார்வு என்னும் தீங்கும், அதன் மூலமாகிய அரசனது முன்செய் தீவினையாகிய தீங்கும், ஒருங்கே அழித்துப் போக்கியவர்.

பாததாமரை சென்னி சேர்த்தி - திருவடிமேல் முடிபொருந்த வீழ்ந்து வணங்கி.

பெருமை பெற்றனம் எனக், வினைமுற்று முன்வந்தது விரைவுக் குறிப்பு. இன்று பெற்றனம் - இன்று பிறந்தனம் என இன்று என்பதனை முன்னும் பின்னும் கூட்டி உரைக்க இடையில் வைத்தார்.

இன்று பிறத்தலாவது பிறவிப்பயனை இன்றுதான் பெற்றோம் என்பது, "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" (தேவா) என்றபடி பிறவிப்பயனாகிய, அரசன் பணியும், அடியார் பணியும், அரன் பணியும் செய்ய இயலாமல் கழிந்த முன்னை வாழ்நாட்கள் பிறவா நாட்களாகிக் கழிந்தன என்பது கருத்து.

(யாங்கள்) பிறந்தனம் - மன்னன் பிறவா மேன்மை பெற்றனன் - என்ற கவி நயமும் காண்க. பிறவாமை மேன்மை - வீடுபேறு; பிறந்தனம் - "நன்மையல்லாது செய்ய, வூனமவர் தடையின யாமு முயிர்துறந் தொழிவ தென்றார்" (2594) என்றாதலின் அவ்வாறொன்றும் வாராது மீளப் பிழைத்தவர்களானோம் என்ற கருத்தும் காண்க.

உளம் களித்து உவகை மிக்கார் - உளம் களித்தல் - உள்ள நிகழ்ச்சி; உவகை மிகுதல் அதனை வெளிப்படுத்தும் மெய்ப்பாடு பொருந்துதல். 771

2670. மீனவன் றன்மே லுள்ள வெப்பெலா முடனே மாற,
வூனமே ரின்ப மெய்தி யுச்சிமே லங்கை கூப்பி

"மானமொன் றில்லா முன்பு வன்பிணி நீங்க வந்த
ஞானசம் பந்தர் பாத நண்ணிநா னுய்ந்தே" னென்றான். ௭௭௨

(இ - ள்) மீனவன் - பாண்டியன் - தன்மேல் உள்ள... அங்கை கூப்பி - தன்மேல் உள்ள வெப்பு முழுதும் உடனே தீர்ந்துபோக அதனால் உண்டாகிய பெரிய இன்பத்தையடைந்து தலையின்மேல் அங்கைகளைக் குவித்துக்கொண்டு; மானமொன்றில்லார்...உய்ந்தேன் என்றான் - மானம் ஒன்றும் இல்லாத அமணர்கள் முன்னே வலிய நோய் நீங்கும்படி வந்தருளிய திருஞானசம்பந்தருடைய திருவடிகளைச் சேர்ந்து நான் உய்ந்தேன் " என்று சொல்லித் துதித்தான்.

(வி - ரை) இது பிணி நீங்கியுய்ந்தபோது அரசன் நிலையும் செயலும் கூறிற்று; அதுபொழுது அமண்மையார் நிலையும் அமைச்சர் நிலையும் முன்பாட்டிற் கூறினார்; அரசனது நலத்தினும் நாட்டின் நலத்தினும் கருத்துக்கொண்டு இறைவர்பால் வரங்கிடந்து அருமைப்பட்ட அவ்விருவரது மகிழ்ச்சி, நலம்பெற்ற அரசனது மகிழ்ச்சியினும் மிக்கு முற்பட்டதாதலின் அவை முன்னாகக் கூறப்பட்டன, நோயின்வாய்ப்பட்ட சேயினைவிட அதன் நலங்கண்ட தாயின் மகிழ்ச்சி முற்படுவதை உலகியலிற் கண்டுகொள்க, மீனவன் தன்மேலுள்ள வெப்பெலாம் மாற - என்புழித் தன்மேல் என்றது மிகுதிக்குறிப்புக் கொண்டது; தனது நலத்தைத் தான் பின்னரே அறிந்து மகிழ்ந்தான் என்பது.

வெப்பெலாம் - வலம் இடம் வந்ததுவும், இடத்திருந்ததுமாகிய எல்லாம்; அதன் மூல காரணமாகிய மயக்க வெப்பமும், அதன் காரணமாகிய முன்னை வல்வினை வெப்பமும் என்ற எல்லாம் எனக்; தூல சூக்கும காரணம் என்ற மூன்றும் என்பது குறிப்பு; முழுதும் (2168); உடனே - ஒருங்கே, பிள்ளையார் பின்னும் ஒருமுறை திருநீற்றைப் போற்றித் திருக்கையாற் றடவிய உடனே. அக்கணமே என்பதுமாம்.

ஆன - மாறுதலால் உளதாயின; பேரின்பம் - பெரிய இன்பம்; பேரின்பம் ஆன என்று மாற்றிப் பேரின்பம் எனப்படும் வீடுபேறு என்ற குறிப்புமாம்; இனி நின்றசீர் நெடுமாறனாராக ஆகிச் சிவனமுந்த நிலை பெற்றுப் பிறவி நீங்கிப் பேரின்பம் அடையும் சரிதக்குறிப்புக் காண்க; இதுப் பேரின்பம் போறலின் பேரின்பம் என்றார் என்னை? நோய் நீங்கவே இன்பானுபவமாதல் இல்லை; இன்ப அநுபவத் திற்கு நோய் தடை செய்வதாதலின் அதன் நீக்கம் இன்ப நுகர்ச்சிக்குத் துணை செய்தல் பற்றி நோய் நீங்கியதும் இன்பம் எய்தியதாக உபசரித்து வழங்கப்படும். இனி வைகைக் கரையில் மெய்ஞ்ஞானோபதேசம் பெற்றுப் பேரின்பம் பெறுவது நிச்சயமாதலின் அது துணிவுபற்றிப் பேரின்பம் எய்தி என இறந்தகாலத்தாற் கூறினார் எனினுமாம்.

விடய நுகர்ச்சியில் புத்தியின்கண் வந்தவற்றை அழுந்தியறியுந் தன்வேதனைக் காட்சியின்பமே சிற்றின்பம், அருண்ஞானத்தால் தன்வேதனைக் காட்சியில் சிவத்துவ விளக்கத்தை அழுந்தியறிதலே பேரின்பம் என்பது பாடியத்தும் விளக்கப்பட்டுள்ளது.

உச்சிமேல் அங்கை கூப்பி - முன்னர் நோய் மிகுதியினாலே மெய்ம்முயற்சியின் வலிமையின்மையாற் "சிந்தையாற் றொழுதமை" (2667) போலன்றிச், சிரமேற் கைகூப்பினான் என்பது கருத்து.

மானம் ஒன்று இல்லார் - ஒன்று - ஒன்றும் - ஒரு சிறிதும்; முற்றும்மை தொக்கது; மானமில்லாமையாவது தீவினையஞ்சாமையாகிய தறுகண்மை; இல்லார் முன்பு - மானமிலா அமணர் காண அவர் முன்னே, வாதினில் ஏற்று நின்ற அவர்கள் முன்பு என்பதாம்; "உரிஞ்சாய வாழ்க்கையமண....இருஞ்சாக்கியர்க ளொடுத் துரைப்ப" (தேவா - மயிலை—10) என்புழிப்போல.

வன்பிணி - வல்வினைப் பயனாற்போந்து பற்றிய - வேறெவ்வாற்றானும் போக்கலரிதாகிய - நோய், பிணி - பிணித்து உணர்வுசோர வீழ்த்திய நிலைக்குறிப்பு.

வந்த - தான் வேண்டாமலே கருணையினால் தாமே எத்துணைத் தடைகளையும் இடையூறுகளையும் பொருட்படுத்தாது எழுந்தருளி வந்த

ஞானசம்பந்தர் - ஞான வெற்றிக் குறிப்புப்படக் கூறியது.

நண்ணி - உய்ந்தேன் - மானமில்லாரை விட்டு இவரை நண்ணுதலால் உய்தி பெற்றேன் என்பது.

வன்பிணி நீக்கவந்த—என்பதும் பாடம். 772

வேறு

2671. கந்து சீறு மால்யானை மீன வன்க ருத்துநேர்
வந்து வாய்மை கூற, மற்று மாசு மேனி நீசர்தாம்
முந்தை மந்தி ரத்து விஞ்சை முற்றும் மெஞ்ச வஞ்சியே
சிந்தை செய்து சைவ ருந்தி றந்தெ ரிந்து கூறுவார், ௭௭௩

2672. "சைவ மைந்தர் சொல்லின் வென்றி சந்த வின்சொன் மாலைபாற்
கைத வன்றன் வெப்பொ ழிந்த தன்மை கண்ட றிந்தனம்;
மெய்தெ ரிந்த தாக்க வாதின் வெல்லல் ஆவ தன்று;இவ
றெய்து தீயி னீரில் வெல்வ" தென்று தம்மி லெண்ணினார். ௭௭௪

2671. (இ - ள்) கந்து ..கூற - கட்டுத்தறியைச் சீறிவரும் மதமுடைய யானை போலப் பாண்டியன் கருத்துக் கட்டுநீங்கி நேர்பட வருதலால், உண்மை நிலையினைக் கூறவே; மற்று...நீசர் - மற்ற அழுக்குப் படிந்த உடலுடைய நீசர்களாகிய அமணர்கள்; தாம் முந்தை...அஞ்சியே - தாம் முற்படக் கைக்கொண்ட மந்திரத்தின் விஞ்சைகள் முழுதும் வலியிலவாகி ஒழியக் கண்டு அச்சம் பொருந்தி; சிந்தை...கூறுவார் - சிந்தித்துத் தாம் வெற்றியடையும் திறத்தினை எண்ணிச் சொல்வாராகி, ௭௭௩

2672. (இ - ள்) சைவ மைந்தர் சொல்லின் வென்றி - சைவ மைந்தராகிய பிள்ளையாரது சொற்களின் வெற்றிப் பாட்டினை; சந்த . கண்டு - அவருடைய இனிய சொன்மாலைப் பதிகத்தினால் பாண்டியனது வெப்பு முழுதும் ஒழிந்துபோயின தன்மையைக் கண்டதனால், அறிந்தனம் - அறிந்தோம்; மெய்...அன்று - ஆதலால் உண்மை தெரிந்த தாக்க வாதத்தில் நாம் வெற்றிபெறுவது இயல்வதன்று; எய்து... எண்ணினர் - பொருந்திய தீயினிலும் நீரினிலும் வெற்றிபெற முயல்வோமாக என்று தங்களுக்குள் எண்ணினார்கள். ௭௭௪

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2671. (வி - ரை) கருத்து நேர்வந்து மீனவன் வாய்மை கூற என்க. வந்து - வந்தமையால்; வாய்மையாவது பிள்ளையாரது திருவடிகளையடைந்து நான் உய்ந்தேன் என்றது (2670) கருத்து நேர்வருதல் - முன்னே பொருள் மாறுபட்டிருந்து கிடந்த மயக்கம் நீங்கி உண்மை நெறியில் நிற்றல்; முன்னர்க் கோணி நின்றது நேராகி. நேர்மை - திறம்புதலில்லாத உண்மை; மால் - பெரிய என்றலுமாம்.

கந்து சீறும் - மால்யானை - மீனவன் - இதுவரைக் கட்டுண்டிருந்த நிலையை முனிந்து விடுபட்ட அரசனது நிலையும் கொள்ளப்படும். இப்பொருளுக்கு யானை - யானை போன்ற என உவமவுருபு விரிக்க.

யானை மீனவன் - யானைப் படையையுடைய பாண்டியன் என்றலுமாம். யானை போல என்றது மெய்யும் வினையும் பற்றிவந்த உவமம். கந்துசீறுதல் - முன்தன்னைக் கட்டுப்படுத்தியிருந்த தறியினை முறித்து நீங்கித் தன் வயத்தனாகுதல்.

மற்று - மாறுபட்ட ; உண்மை தெரிந்தும் நேர்மை திறம்பிய ; நீர் என்றது இக்கருத்துக் கொண்டது.

முந்தை மந்திரத்து விஞ்சை - முன்னர்க் கைக்கொண்ட மந்திரமும் அதுவாயிலாகக்கொண்ட விஞ்சையும் ; "விஞ்சை மந்திரத் தொழில் விளைத்தால்" (2586) ; "தங்கள் மந்திரத்தாற் செந்தீ - திருமடஞ் சேரச்செய்தார்" (2595).

முற்றும் எஞ்ச - முழுதும் செயலற்றுத் தவிர்ந்துபோக ; ஒழிய ; எஞ்சுதல் - குறைவுபட்டொழிதல்.

கைவரும் திறம் - வெற்றி கைகூடும் உபாயம் ; தேடுவார் - என்பது பாடமாயின். தேடுதல் - ஆராய்தல் என்க.

வந்தவாய்மை—என்பதும் பாடம். 773

2672. (வி - ரை) மாலையால் வெப்பொழிந்த தன்மை கண்டு சொல்லின் வென்றி அறிந்தனம் - என்க. பதிகத்தினால் வெப்புத்தீர்ந்த செய்கை காட்சியளவையால் அறிந்தோம் ; ஆதலின் அதுகொண்டு பிள்ளையாரது சொல்லே வெற்றி பெறுவது என்பது தெளிய அறிந்தோம். மன்னன் என்றது கைதவன் என்றது அரசன் தங்கள் சார்பை விட்டகன்றமை கண்டு தம் மனத்துள் எழுந்த மனக்கசப்பை உணர்த்திய குறிப்பு.

மெய் தெரிந்த தர்க்கவாதம் வெல்லலாவதன்று - உண்மை தெரிகின்ற தர்க்க மூலமாக நிகழும் வாதம் நம்மால் வெல்லத்தக்கதன்று ; மெய் - சமய உண்மையும் தெய்வத்தன்மை நிலையும் ; தர்க்க வாதம் - சொல்லினால் வாதித்து நிலைநாட்டுதல்.

வேறுஎய்து தீயில் நீரில் வெல்வது - வேறு - இதனின் வேறாகிய உபாயமாகிய ; வேறாக ; எய்து - பொருந்தும் ஆறாவது வரும் ;

தீயில் நீரில் வெல்வதென்றது - தீயும் நீரும் சடப்பொருள்களானமையால் அவற்றின் சடசத்தியைத் தமது மந்திரங்களின் - அதிதெய்வங்களின் - சிற்சத்தியால் கட்டுப்படுத்தலாம் என்பது அவர் கொண்ட கருத்து ; தீயில் நீரில் - தீ ஒன்றிலே வெற்றி பெறுவதில் ஐயப்பட்டாராதலின் நீரையும் அப்போதே உடன் எண்ணினார் ; என்னை? முன்னர்ப் பிள்ளையார்மாட்டுத் தாம் விஞ்சை மந்திரத்தொழில் விளைத்து ஏவிய தீ ஏவியபடி செல்லாமை கண்டாராதலின் ஐயம் கொள்ள நேர்ந்தது. ஆயின் அவ்வாறு அறிந்த பின்னரும் தீயினை எண்ணவந்ததென்னையோ? எனின், இங்குப் பிள்ளையார்மாட்டுச் செலுத்தப் பெறாது தம் அளவில் மந்திர சக்தியுள் சடசக்தி அடங்குதலைக் காட்டும் அளவுக்கு வேண்டப்படுதலால் அமையும் என்ற கருத்தாலும், முன்னர்த் தமது ஏவலுக்குள் அமையாது நின்ற தீ பிள்ளையார் பணித்தபடி அமைந்து வெப்பு என்ற உருவுடன் பாண்டியனை அடைந்தது என்ற உண்மை அறியப்பெறாமையாலும் என்க ; "போன கங்குலிற் புகுந்ததன் விளைவுகொல்?" (2612) என்றது விளைப்பயனோ? என்ற ஐயப்பாடேயன்றிப் பிள்ளையாரது செயலென்ற அறிவின்மை காண்க ; அவ்வாறு அறிந்தும் அறிவுபெற்றமையாது மேற்செல்லும் அமணரது மாணமின்மை கண்டுகொள்க.

வெல்வது - வெற்றிபெற முயலத் தக்கது ;

வெப்பொழிந்த தன்மை கண்டறிந்தபின்—என்பதும் பாடம். 774

2673. பிள்ளை யாரு "முங்கள் வாய்மை பேசு மின்க" ளென்றலுந்,
தள்ளு நீர்மை யார்கள் "வேறு தர்க்க வாதி னுத்தரங்
கொள்ளும் வெற்றி யன்றியே குறித்த கோள்கை யுண்மைதான்
உள்ள வாறு கட்பு லத்தி லுய்ப்ப" தென்ன வொட்டினார். ௭௭௫

(இ - ள்) பிள்ளையாரும...என்றலும் - பிள்ளையாரும அமணாகளை நோக்கி உங்கள் சமயவுண்மைகளைப் பேசுங்கள் என்று கூறலும், (அதுகேட்டு); தள்ளு நீர்மையார்கள் - தள்ளபபடும் தனமையுடையவாகளாகிய அவவமணாகள்; வேறு...அன்றியே - வேறு தர்கக உருவமாகிய கடா விடைகளால் வரும வெற்றியையன்றி; குறிதத... உய்பபது - "அவவவா குறிக்கொணட கொளகைகளின உணமைத தன்மை உள்ள படியினைக் கணமுன்னே நிறுததிக காட்டுதல ஈணடு செயயததககது" என்று ஒட்டினார்கள.

(வி - ரை) பிள்ளையாரும் உங்கள் வாய்மை பேசுமின்கள் என்றது - முன்னா அமணர்கள் பிள்ளையாரைப பலராயச சூழநது சினந்து வாதினில் வெல்ல எணணித் தாம் கோலும் நூல் எடுத்தோதித் தலைநிமிாபபக கூரைததாாகள (2654); அப்போது "நுமபொருள் எல்லை உள்ளவாறுபேசுக" எனறு பிளளையாா அருளினா (2655); பிள்ளையாாபாற கொண்ட பரிவினால அவவாதம் நிகழாமல அம்மையாா தடுதது, "அரசனது நோய நீக்கியபின் இவவமணா வல்லராகில் பேசுக" என்று குறுக்கிட்டுத் தடுக்க, அரசன் ஆணையின்படி நோயதீாததலையே இகலிய வாதமாகக்கொணடு தெய்வத தன்மையும் வெறறியும் துணியபபட்டன; ஆதலின், அவ்வாறு முன்பு தாமே அழைகக வும் இடையில தடுக்கபபட்ட சமயநூல் வாதத்தினைத தொடாந்து பேசுக என்று பிள்ளையார் அமணரை அழைததருளினர் என்க; அவாகளது சமயம் முழுதும் மெய்ச் சமயமாகிய சைவததின் முன் நிற்கமாட்டாமையை உலகுக்கறிவிதது உணமை நிலையை உபதேசிககும் பரம குருநாதராதலின், உலகம உண்மையறிந்து உய்திபெறும் பொருட்டு இவவாறு அழைததருளினா எனக; சிலசில சிறு உண்மைகளையே கோட்பாடாகக கொணடு சிறுதெயவஙகளை வணஙகும சிறுசமயஙகள், முழு உண்மை களுக்கு நிலைக்களமாய் முழுமுதற கடவுளும சஙகாரகாரணனுமாய உள்ள சிவ பெருமானையே கடவுளாகக கொணடதாய் விளஙகும சைவ சமயத்தொடு மாறுபட்டு உலகை மயக்கினது அக்காலநிலை; அதனால பொய மிகுத்து மறைவழக்கமருகிப் பூதிசாதன விளக்கம் போற்றல்பெறாது சைவநெறி குன்றியது (1916); இதனை நீக்கிச் சமயஙகளானவறறின தரஙகளை உளளபடி அறிவிதது அளவுபடுத்தி நிறுவ வேண்டியது ஞானசாரியாரது கடமையாயிற்று. திருவருட் குறிப்பினை வினவி விடைபெற்ற பின்னரே பிள்ளையாா இதனை மேற்கொணடனா; 2636, 2637 பார்க்க. இக்காரணங்களால் அமணரை அவரது சமய உணமை பேசுக என்று பிள்ளையார் அழைத்தனரேயன்றி இகலினாலன்று, "இகலில ரெனினும்" (2752); "இது வாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி, நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண நின்றதியா தொருசமய மதுசமயம்" (சிதசி. 8 - 13) என்றபடி உலகில் ஒன்றோ டொன்றொவ்வாமல உள்ள பற்பல சமயஙகளின் கொள்கைகளையும் தன்னகத்தே கொண்டு அதனால் ஒன்றோடும் மாறுகொள்ளாமல் அவ்வவற்றுக்கும் படிமுறை காட்டி நிற்பது சைவ சமயம்; ஆதலின் அது எச்சமயததினையும் வெறுப்பதோ மாறுகொள் வதோ அழிப்பதோ இல்லை; ஆயின் பரபகக நிராகரணமும், சமயவாதமும், ஈண்டு வருவதுபோல் அழிவும் சைவத்துட் கேட்கப்படுதல் என்னையோ? எனின், தற்காப்பின்

பொருட்டும் உண்மை தெரிந்தபொருட்டுமாம் என்க. இங்குப் பிள்ளையார் சமணரைச் சமயநூல் வாதம் பேசுக என்றது சைவத்துக்கு இடையூறு விளைத்த அவர்களையும், அவரது பொய்களில் மயங்கினின்ற உலகத்தையும் தேற்றி உண்மை தெளிவித்து உய்யக் கொள்ளும் கருணையினாலேயாம் என்க; பின்னர் அமணர் கழுவேறி அழிந்த வரலாறு அரசன் நிகழ்த்திய அரச நீதிமுறையின்பாற்படும். பிள்ளையார் ஈண்டுச் சமய வாதத்திற்கு அழைத்ததற்கும் அரசன் நீதிமுறை விதித்த அதற்கும் எவ்விதத் தொடர்புமில்லை; பிள்ளையார் அழைத்த சமயநூல வாதத்தை மறுத்துக் காட்சி வாதத்தில் ஒட்டிப் புகுந்து, தோல்வியுற்றாற் கழுவேறுவேம் என்று இசைந்து, தம் செயலினாலும் வாக்கினாலும் தாமே தமக்கு அழிவைத் தேடிக்கொண்டதும், அரசன் நீதிமுறை செய்ததும் பின்னர் விரிக்கப்படும்; ஆண்டுக் கண்டுகொள்க; இதற்கு மேற் கூறியவாறன்றி, "அவர்கள் எண்ணத்தை உணர்ந்த பிள்ளையாரும்" என்றுரைத்து அவ்வாறுணர்ந்தமையால் சமய வாதத்துக்கு அவர்களை அவர் நினைத்தபடியே பிள்ளையாரும் அழைத்தனர் என்றுரைகூறுவாருமுண்டு; அது பொருந்தாமை கண்டுகொள்க. அமணர்கள் சமயவாதம் வெல்லலாவதன்று; காட்சிவாதமே செய்யத்தக்கது என்று எண்ணிய போது பிள்ளையார் சமய உண்மைகள் பேசுக என்றது அவர் எண்ணத்துக்கு மாறுபட்டமையாலும் அது பொருந்தாமை யறிக.

**தள்ளும் நீர்மையார்கள்** - சுரவாதத்தினை இகலிச் செய்து தோற்றமையாலும் முன்னர்ச் செய்த பொய்-வஞ்சம் இவற்றாலும் ஒதுக்கித் தள்ளத்தக்கவர்கள்; இதற்கு இவ்வாறன்றித் தள்ளப்படும் பொய் வஞ்சனை முதலிய குணங்களையுடையவர்கள் எனவுரைப்பாருமுண்டு. தள்ளும் - தாகவாதத்தைத் தள்ளிய என்றலுமாம்.

**வேறு...அன்றியே** - வேறு - மேற்சொல்வதற்கு வேறாக - தனியாக - எனக; கட்புலத்தில் உய்ப்பதே சமய வாய்மையை விளக்குவதாகும் என்பது கருத்து; **தர்க்கவாதின் உத்தரம் கொள்ளும் வென்றி** - வாதஞ்செய்து கடாவிடைகளால் சமய உண்மைகளை நிலைநாட்டும் வெற்றி; **அன்றியே** - அஃது இல்லாமலே; வேண்டாமலே.

**குறித்த கொள்கை உண்மைதான் கட்புலத்தில் உய்ப்பது** - கொள்கையின் உண்மையை வாதிப்பதாயின் காதினால் கேட்பதன்றிக் கண்ணால் காண இயலாது; அவ்வாறன்றிக் கண்ணால் காணும்படி காட்டிச் செலுத்துதல் வேண்டப்படுவது; **குறித்த** - அவ்வவர் குறிக்கொண்ட; குறிக்கோளாகக் கொண்ட; **உள்ளவாறு** - யாவரும் ஒப்பும் முறையில்.

**ஒட்டினார்** - சூளுறவு சொன்னார்; பந்தயம் கூறினார்.

**குறிப்பு** :—இவர்கள்போலன்றிப் புத்தர் மந்திரவாதம் வேண்டாது சாத்திர வாதமே வேண்டி எதிர்த்தது குறிக்க; (புரா. 911 = 2811) 775

2674. என்று வாது கூற லும்பி ருந்த தென்னர் மன்னனுங்
"கன்றி யென்னு டம்பொ டுங்க வெப்பு நோய்க வர்ந்தபோ
தொன்று மங்கொ ழித்தி லீர்க ; ளென்ன வாது மக்"கெனச்
சென்று பின்னு முன்னு நின்று சில்லி வாயர் சொல்லுவார், எஎசு

2675. "என்ன வாது செய்வ" தென்று ரைத்த தேவி னுவெனுச்
சொன்ன வாச கந்தொ டங்கி "யேடு கொண்டு சூழ்ச்சியான
மன்னு தம்பொ ருட்க ருத்தின் வாய்மை தீட்டி மாட்டினால்
வெந்தே ருப்பின் வேவு றாமை வெற்றி யாவ" தெனறனர். எஎஎ

2674. (இ - ள்) என்று வாது கூறலும் - அமணர் முன்சொல்லியபடி ஒட்டி வாதத்தினைக் கூறுதலும்; இருந்த...உமக்கு என - நோய் நீங்கியிருந்த பாண்டியனும் அவர்களை நோக்கி "எனது உடம்பு முழுதும் வெதும்பி வெப்புநோய் என்னை முழுதும் உள்ளாக்கியபோது, அதற்கு ஒருசிறிதும தவிர்க்ககில்லீராகித் தோல்வியுற்றீர்கள்; ஆதலின் இப்போது இனி, உமக்கு என்ன வாது இருக்கின்றது!" என்று சொல்ல; சென்று...சொல்லுவார்-அரசனுக்குப் பின்னும் முன்னுமாகச் சென்று அணுகி நின்று கொண்டு ஓட்டை வாயர்களாகிய அமணர்கள் சொல்வாராகி, ௭௭௬

2675. (இ - ள்) என்ன...தொடங்கி-நீங்கள் செய்வதற்கு என்ன வாது உள்ளது என்று தோல்வியுற்று உமக்கு வாதமொன்றுமில்லை என்ற குறிப்புப்படச் சொன்னதையே தம்மை என்ன வாது என்று வினவினதாக எடுத்துக்கொண்டு முன் தாம் சொன்ன வாசகத்தினையே தொடர்ந்து கொண்டு; "ஏடுகொண்டு...வெற்றியாவது" என்றனர் - ஏட்டினைக் கொண்டு அறிவார் சூழ்ந்து நிலைபெறும் தத்தமது சமய உண்மைப் பொருட் கருத்தின் உண்மைகளை எழுதி மாட்டினால் வெவ்விய நெருப்பின்கண் வேகா திருப்பதுவே வெற்றியாவது என்று கூறினர். ௭௭௭

இந்த இரண்டு பாக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2674. (வி - ரை) என்று - முன்பாட்டிற் கூறியபடி சொல்லி; வாதுகூறல் - வாதத்துக்கு அறைகூவுதல்.

இருந்த - முன்னர் வெப்பு நோயுடன் வலிகெட்டுக் கிடந்த நிலை நீங்கி எழுந்து அமர்ந்திருந்த; அவ்வாறு இருந்தமையால் - என - என்ற குறிப்புமாம்.

மன்னனும் - உம்மை சிறப்பு; மன்னனும்...என - பிள்ளையார் அமணர்களை உங்கள் வாய்மை பேசுமின்கள் என்று அருள, அதனைத் தொடர்ந்து அவர்கள் வாதத்தில் முற்பட்டனர்; ஆயினும் அரசன் அதனை உடம்படாது மறுத்து எனது நோயினை ஒழிக்கமாட்டாது தோல்வியுற்ற உமக்களுக்கு இனி வாது செய்ய என்ன நிலையுள்ளது; ஒன்றுமில்லையே! என்று தடுத்துக் கூறியபடி; "நீங்கள் தேறிய தெய்வத்தன்மை என்னிடைத் தெரிப்பீர்" (2657) என்றும், "இகலித்தீரும்; தீர்த்தார் வாதில் வென்றவர்" (2659) என்றும் தான் அரசாணையிட, அதனை ஒட்டியே மந்திரவாதம் நிகழ, அதில் தோற்றீர் (2667) என அரசநீதி முடிபுகொள்ள, ஆணையும் நிகழ்ந்துவிட்டமையால், ஒருமுறை தீர்வுபெற்ற நியாயத்தில் வாதத்துக்கிடமில்லை என்று அரசாங்க நீதிமுறையில் கூறியபடியாம்.

இனி, "குறித்த கொள்கை - கட்புலத்திலுய்ப்பதென்ன ஒட்டுதல்" எதன் பொருட்டு? முன்னரே அவ்வாறு எனது நோயினைப் பற்றிக் கட்புலத்தில் உய்த்த போது உமது கொள்கை உண்மை நிலைபெறுதொழிந்தமை கண்டோமே என்றபடியுமாம்.

ஒடுங்க - ஒடுங்கும்படி. "உணர்வும் ஆவியு மொழிவதற் கொருபுடை யொதுங்க" (2610); ஒன்றும் - ஒரு சிறிதும்; ஒருபக்கமும் என்றலுமாம்.

ஒழித்தல் - நோய் தவிர்த்தல் குறித்தது.

என்ன வாது? -வினு ஒன்றுமில்லை என எதிர்மறை குறித்தது.

சென்று பின்னும் முன்னும் நின்று - சென்று - வெப்புத் தீக்கதுவ அருகுவிட்டேற நின்றார்க (2664) ளாதலின் அருகு சென்று; பின்னும் முன்னும் சூழ்ந்து கொண்டு.

சில்லிவாய் - ஓட்டைவாய்; உண்மைப்பொருள் தங்குதலின்றி ஒழுகிவிடும் - ஒழுகும் - வாய்.

சொல்லுவார் - முற்றெச்சம்; சொல்லுவார் - என்றனர் என வரும் பாட்டுடன் முடிக்க. 776

2675. (வி - ரை) என்ன...என்று - என்ன வாது என்று வாதமில்லை எனக் கூறிய எதிர்மறை வினாவினையே, அறியா வினாவாக எடுத்துக்கொண்டு. பின்னரும் இவ்வாறே, "நீங்கள் தோற்றிலீர்போலும்" (2691) என்னுமிடத்து அரசன் நகையுட்கொண்டு செப்பிய இகழ்ச்சி மொழியைத் தேரார் (2692) சொன்ன சொல்லின் சொல்லே பயனாகக்கொண்டு மேற்சொல்லி அமணர் வாது துணிதல் காண்க.

சொன்ன வாசகம் - தாங்கள் முன் "கட்புலத்தில் உய்ப்பது" என்ன ஓட்டிய வாசகம் (2673); கட்புலத்தில் உய்ப்பது இவ்வகையாய் என்பது தொடராது கூறியமை காண்க.

சூழ்ச்சி - அறிவாற் சூழ்ந்து தெரிந்துகொள்ளும் முடிவு;

சூழ்ச்சியால் மன்னுதல் - அவ்வாறு சூழ்ந்து நிலைபெறுத்தல்; சூழ்ச்சி - இங்கு நற்பொருளில் வந்தது.

ஏடு கொண்டு தீட்டி - ஏடு - ஓலை; ஏட்டினை இடமாகக் கொண்டு எழுதி; கொண்டு - இடமாகக் கொண்டு அதன்கண் தீட்டி எனக; தீட்டுதல் - நன்கு எழுதுதல்.

மாட்டுதல் - தீயினுள் வடுருவ உய்த்தல்

வேவுறாமை வேற்றியாவது - வேவாதிருத்தலே வெற்றியைக் கட்புலத்தில் காண உய்ப்பதாம் என்றபடி. 777

2676. என்ற போது மன்ன னொன்றி யம்பு முன்பு பிள்ளையார்
"நன்று நீரு ரைத்த வாறு; நாடு தீயி லேடுதான்
வென்றி டிற்பொ ருட்க ருத்து மெய்ம்மை யாவ தென்றிரேல்
வன்ற னிக்கை யானை மன்னன் முன்பு வம்மி" னென்றனர். ௭௭அ

(இ - ள்) என்றபோது, முன்பு - முன் கூறியவாறு அமணர்கள் சொல்லிய போது அதற்கு விடையாக அரசன் ஒன்று சொல்லுவதன் முன்பே; பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையார்; நன்று ..ஆறு - நீர் சொல்லியவழி நன்று; நாடுதீயில்... என்றிரேல் - நாடும் தீயினில் ஏடுதான் வேவாமை காட்டி வென்றிடில் அதில் எழுதிய பொருட்கருத்து வாய்மையுள்ளதாகும் என்று சொல்வீர்களாகில்; வன்தனி...வம்மின் - வலிய ஒற்றைக் கையினையுடைய யானை மன்னன் முன்பு அவ்வாறே வாதம் செய்து முடிபுகொள்ள முன்வாருங்கள் என்றருளினார். ௭௭அ

(வி - ரை) மன்னன் ஒன்று இயம்புமுன்பு - பிள்ளையார் - என்றனர் - வாதம் விரும்பி அறைகூவினோர்களை அதனைச் செய்யவிடாது தடுத்தல் நேர்மையன்றென்பதும், அவ்வாறு செய்யின் வாதில வெற்றிபெறமாட்டாமை குறிக்குமெனபதும், ஆனால் அரசன் அமணர்களது பொய்ம்மையை உணர்ந்து நீரவும் முடிதது விட்டமையின் அவர்கள் கூறும வாதத்திற்கு உடன்படமாட்டான் என்பதும், இம்மட்டோடு நிறுத்தாது சமயவாதம அல்லது மந்திரவாதத்தில் அவர்கள் இசையும் வழியெல்லாம் காட்டி அவர்களது பொய்ம்மையை நிலையிட்டுக் காட்டினாலன்றி மயக்கினின்று நீங்கி உலகம் உய்தலும சைவத்திற்கு நேர்ந்த தீமை ஒழிதலும திருநீறு ஓங்கலும் அமையா வென்பதும், இன்னபிறவும் திருவுள்ளம்கொண்டு அரசனிடம அமணர்கள் கூறியதற்கு அரசன் விடை கூறு முன்பு, பிள்ளையார் விடைகூறி அவர் கொள்கைப்படியே வாதிற்கு அவர்களை அழைத்தனர் எனக.

இயம்பு முன்பு - அரசன முடிவு சொல்வதன் முன்பே குறுக்கிட்டு, அரசன் வேறு முடிவு கூறிவிட்டானாயின் பின்னர்த் தாம் மறுததுரைததல் உலகியல்பில் மரபு வழுவாமாதலின் முன்பு கூறினர் என்க.

நன்று - ஆம் என்று நாமும் உடன்பட்டோம் என்றபடி.

நாடு தீ - தெய்வததன்மையினுள் அடஙகுமபடி நாடப்பட்ட தீ.

வென்றிடில் - வேவாதிருததலால் வெற்றி காட்டினால்.

பொருட்கருத்து - அவ்வேட்டில் எழுதிய பொருளின் கொள்கை.

வன்தனிக்கை யானை மன்னன் - "கநத சிறுமாலி யானை மன்னன்" (2671) என்று அமணா கணட கருததையே தொடர்நது பிள்ளையாரும் கண்டனர் என்பது; தம்மைச் சிறி விலகிய நிலையில அவாகளும், தம்பால் வந்தடைநத நிலையில இவரும் கூறியபடி; தனிக்கை - ஒன்றாகிய துதிககை.

மன்னன் முன்பு - அரசன் அவை காணுமபடி; மன்னன் - அவன் (2677) அவைககளம்.

வம்மின் - வாததநினை மேறகொணடு அவவாறே முன்வாருஙகள். 778

வேறு

2677. அப்ப டிக்கெதி ரமணரு மணைந்துறு மளவில்
ஒப்பில் வண்புகழ்ச் சண்பையா காவல ருரையாற
செப்ப ருந்திறல் மன்னனு "திருந்தவை முன்னர்
வெப்பு றுந்தழ லமைக்"கென வினைஞரை விடுத்தான். எஎகூ

(இ - ள்) அபபடிக்கு...அளவில் - அவவாறே எதிா ஏறறு அமணர்களும் முன் வநது பொருந்தும்போது; ஒபபில்...உரையால் - ஒபபற்ற உணமையினையும் புகழினையும் உடைய சீகாழித தலைவராகிய பிள்ளையாரது சொலலினாலே; செப்பரும்...விடுத தான் - சொல்லுதறகரிய வலிமையுடைய மனனனும் "திருநதும் அரசசபையின் முன்னே வெபபுடைய தழலினை அமைகக" எனறு ஏவி அதறகுரிய ஏவலாட்களை விடுததனன்.

(வி - ரை) அப்படிக்கு...அளவில் - மேலும அரசன வேறு எவவாறேனும் சொல்லிவிடாமுன பிள்ளையாா சொலவழியே போதுமென வமைந்து அமணர் முன வந்தனர்.

ஒப்பில் வண்புகழ்...உரையால் - அரசன மறுபபவும் தாம் உடன்பட்டமையால் ஒப்பில் என்றார்; வண்மையாவது அமணாமாட்டும உலகினமாட்டும் வைதத கருணையால் வரையாது அருள் வழஙகுதல்; புகழ் - இவற்றான வருவது; சண்பையர் காவலநுரையால் - மன்னனும் - வினைஞரை விடுத்தான் - பிள்ளையார் அவ்வாறு கூறிவிட்டமையால் முன்னர் மறுதத அரசனும இசைந்து தீயமைக்க ஏவினன். மன்னனும் - உமக்கு என்ன வாது உளது என்று மறுதத அவனும் என இறந்தது தழுவிய எச்சவும்மை; சிறபபும்மையுமாம்.

திருந்து அவை முன்னர் அமைக்க - திருந்து - தன்போலவே அன்று சைவ வுண்மை தெரிந்து திருந்திய அவை; உலகம கண்டு திருந்துதறகு இடனாய் நிறகும் அரசவை என்றலுமாம; பெரும பொருள்களை நிச்சயிததல் அரசனது அவையின் முன் செய்யப்படுதல் வழக்கு; "மேய விவவுரை கொண்டு விரும்புமாம - ஆய சீரந பாயனாரசவை" (8).

**வெப்புறும் தழல்** - தழல் வெம்மையுடையதென்பது இயல்பு; ஆயினும் இங்கு வெப்புறும் என்றது ஈண்டுத் தெய்வவுண்மைவாதத்தினை காட்டும் கருவியாக வருதலின் அதற்கேற்றபடி உண்மை கண்டவிடத்து அடங்கியும், காணாதவிடத்து அடங்காது தன் தொழில்செய்து காட்டுதற்குரிய வெப்பம்பொருந்தியும் உள்ள தழல் என்று குறிப்புத் தருதலால் இயைபின்மை நீக்குதலோடு பிறிதினியைபு நீக்கிய விசேடணமுமாம்; "காயும் வெவ்வழற் கடவுளும் படரொளி காட்ட" என மேற்கூறும் குறிப்பும் காண்க.

**வினைஞர்** - தீ அமைத்தற்குரிய தொழில் செய்வோர்; ஏவலாளர். 779

2678. ஏய மாந்தரு மிந்தனங் குறைத்துட னடுக்கித்
தீய மைத்தலுஞ் சிகைவிடு புகையெழுந் தொழிந்து
காயும் வெவ்வழற் கடவுளும் படரொளி காட்ட
ஆயு முத்தமிழ் விரகரு மணையவந் தருளி, ௭௮௦

2679. "சேங்க ணேற்றவ ரேபொரு" ளென்றுதாந் தெரித்த
பொங்கி சைத்திருப் பதிகநன் முறையினைப் போற்றி
"யெங்க ணாதனே பரம்பொரு" ளெனத்தொழு தெடுத்தே
யங்கை யான்முடி மிசைக்கொண்டு காப்புநா ணவிழ்த்தார். ௭௮௧

2678. (இ - ள்) ஏய...அமைத்தலும் - ஏவப்பெற்ற மாந்தர்களும் விறகை வெட்டி உடனே அடுக்கித் தீயினை அமைத்தலும்; சிகைவிடு...காட்ட - சிகைபோல விடும் புகையெழுந்து பின் அது மாறப்பெற்றுச் சுடுகின்ற வெவ்விய தீக்கடவுளும் படரும் ஒளியினைக் காட்ட; ஆயும...வந்தருளி - உயர்ந்தோர் ஆய்கின்ற முத்தமிழ் விரகராகிய பிள்ளையாரும் அத்தீயினுக்கு அருகு அணையும்படி வந்தருளி, ௭௮௦

2679. (இ - ள்) செங்கண்......போற்றி - சிவந்த கண்களைப் பொருந்திய இடபத்தையுடைய சிவபெருமானே உண்மைப்பொருளாவார் என்று உலகறிய உபதேசித்தருளிய பொங்கும் இசையுடன்கூடிய திருப்பதிகங்களை எழுதிய நல்ல திருமுறைச் சுவடியினைத் துதித்து; எங்கள் நாதனே......தொழுது - எங்கள் நாதராகிய சிவபெருமானே முழுமுதற் கடவுளாய் எல்லாவற்றுக்கும் மேலாகிய பரம்பொருளாவார் என்று தொழுது; எடுத்தே...அவிழ்த்தார் - அங்கையால் எடுத்துத் தமது திருமுடிமேற் கொண்டபின் அதனது காப்பாகிய கயிற்றினை அவிழ்த்தனர். ௭௮௧

இந்த இரண்டு பாக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2678. (வி - ரை) **ஏய** - ஏவிய - ஏவப்பட்ட - எனச் செயப்பாட்டுவினைப் பொருளில் வந்தது.

**உடன் குறைத்து அடுக்கி** - உடன் - ஏவிவிடுத்த உடனே; குறைத்தல் - துண்டங்களாக வெட்டித் தீக்கொளுவுதற்கேற்றதாக்குதல்; அடுக்கி - தீக்கொள்ளும்படி ஒழுங்குபடுத்தி வைத்து; **தீ அமைத்தலும்** - தீயைக் கொளுவிப் பற்றச் செய்தலும்.

**சிகை விடு புகை ஒழிந்து எழுந்து - ஒளி காட்ட** - முன்னர்ப் புகைவிட்டு எழுதலும் பின்னர் ஒளிகாட்டி எழுதலுமாகிய தீப்பற்றி எரியும் இயல்பு குறிக்கப்பட்டது. **சிகை விடுபுகை** - சிகைபோல மேலே விடும் புகை; சிகைபோன்றதைச் சிகை என்றது உபசாரம்; கருமையாலும் அடி மிகுத்தும் தொகுத்தும் நுனித்தும் மேல் கொழுந்து போல் எழுதலாலும் சிகைபோன்றது எனப்பட்டது; **ஒளி காட்ட** - புகை நீங்கி ஒளி

விடுதல்; தீப்பற்றிய தன்மையை ஒளியினால் காட்ட; ஒளியே எல்லாப் பொருள்களை யும் காட்டுதல இயல்பு; அதுபோல் இங்கு ஒளியானது தீபபற்றிய நிலையினைக் காட்டிற் றென்ற நயமும் காணக. அழற்கடவுள் - என்றதற்கேற்பச் சிகையும் ஒளியும் கூறி னார். அக்கடவுளைத தியானிக்கும் சுருதிமுறையும் இங்கு நினைவுகூரததபாலது.

காயும் வெவ்வழற் கடவுள் - "வெபபுறாக தழல்" என்றதறகேற்ப ஈண்டும் இவ்வாறு கூறினார்; பிள்ளையாரால் திருநோக்கம் பாவனை பரிசம் என்ற தீக்கை முறைகளைப் பெறறுத் திருநீறு பூசப்பெற்றவனாதலாலும், வினைகளொததுச் செய்தலைப் பயனெய்தும் செவவியுற்றவனாதலானும், அரசன தூய உள்ளத்து எண்ணியாங்கே அழறகடவுளும் வந்தனன எனற குறிபபும் காணததக்கது.

ஆயுமுத்தமிழ் விரகர் - ஆயும் - உயாந்தோரால் ஆயபபடும்; பிள்ளையாரது ஞானத்தமிழின் பெருமை கூறியவாறு; தமிழத திருமுறையினைத் தாமே ஆய்ந்து பின்னர் எரியினிலிடும பதிகததினை எடுக்கும் நிலையும, "எரியினி லிடவிவை கூறிய, சொற்பொரி யொருபது மறிபவர்" (சாதாரி - பதிகம - 11) எனறு அதன் ஆயததகும் தன்மையைப பிள்ளையாரே காடடியருளும் நிலயும, மறறும் பிள்ளையாரது தமிழே வெறறிபெறும நிலையும குறிபபிற பெறவைதது ஈணடு இததனமையாற கூறினா; "அசைவில்செழுந தமிழ்வழககே யயல்வழககின றுறைவெல்ல" (1922) எனறதும இங்கு நினைவுகூாக.

அணைய வந்தருளி - அவையில் தழல் அமைதத இடததிற சேரவந்தருளி. 780

2679. (வி - ரை) செங்கணேற்றவரே பொருள் என்று - பொருள் - உண் மைப் பொருள்; முழுமுதறபொருள்; சிவபெருமானே பெருளாவார்; ஏனை எவையும் பொருளல்ல எனறு துணிநது அவரையனறி வேறொருவரையும் துதியாமையை எடுத் துக்காட்டி உலகுக்கறிவுறுத்திய.

பொங்கு இசை - பண் - இசையமைதி - மிக்க; இசை - புகழ் என்றலுமாம். புகழ பொஙகுதலாவது பாடியருளிய அன்றுபோலவே என்றும் புதியதாயும் பயனுடை யதாயுமிருததல்.

திருப்பதிக நன்முறை - பதிகஙகள் எழுதிய ஏடு; சுவடி. முறை - நூல். இஙகுத் திருமுறை எனத தேவாரத தொகுதிககு வழஙகும் மரபுபபெயராய வந்தது; சைவத தெய்வத் திருமுறைகள் பனனிரண்டுமே திருமுறை என்ற பெயரால வழங்கபபடுவது சைவ ஆன்றோாகளது மரபு வழககு. ஏனை நூல்களை இபபெயரால் வழஙகுதல் பிழை வழக்கும்.மரபு வழுவுமாம். (பிள்ளையாா அருளிய திருபபதிகஙகளை அவ்வப்போது எழுதிக்கொண்டும அந்த ஏட்டினைத தாஙகிககொணடும் வந்தவா பிள்ளையாரின நல்லம்மான் சம்பந்த சரணாலயர் என்பது வரலாறு. "அருமுறைசொற்றிருப் பதிகம் எழுதுமன்பா" (புரா. கூ0அ); இவரே அததிரவாக்கினாலே "புததனநதி தலையில் இடிவீழ்க" என்று பொறாஉரை முன் விட்டவர். பின்னர்ப பிள்ளையாா திருமுன்பு புத்தவாதம் வென்று புததரைச் சைவராககியவரும் இவரே. பின் வரலாறு குறிக்க).

முறையினைப் போற்றித் தொழுது - சிவனையே பொருளாகக் கொணடமையால் மறைபோல இதுவும் பதியின் தன்மைகொண்டு வணஙகத்தக்கதாயிற்று.

காப்பு நாண் - ஏட்டினைக் கட்டிய கயிறு.

தாம்தெரிந்த—என்பதும் பாடம். 781

2680. சாற்று மெய்ப்பொரு டருந்திரு முறையினைத் தாமே
நீற்று வண்கையான் மறித்தலும் வந்துநேர்ந் துளதால்
நாற்ற டம்புயத் தண்ணலார் மருவுகள் ளாறு
போற்று மப்பதி கம்"போக மார்த்தபூண் முலையாள்" எஅஉ

(இ - ள்) சாற்றும்...மறித்தலும் - துதிக்கும் மெய்ப்பொருளினைத் தருகின்ற திருமுறையினைத் தாமே திருநீறு பொருந்திய வண்மையுடைய கையினால் மறித்து எடுத்தபோது; நாற்றடம் புயத்து...அப்பதிகம் - நான்கு பெரிய தோள்களையுடைய அண்ணலாராகிய இறைவர் எழுந்தருளிய திருக்கள்ளாற்றினைப் போற்றிய அந்தப் பதிகம்; வந்து - நேர்பட வந்து, அதனுள்; "போகமார்த்த பூண்முலையாள்"-"போக மார்த்த பூண்முலையாள்" என்று தொடங்கும் திருப்பாட்டு; நேர்ந்து உளது - நேர்ந்து உளதாயிற்று. (ஆல் - அசை). எஅஉ

(வி - ரை) சாற்றும் மெய்ப்பொருள் தரும் - சாற்றும் - வேத முதலிய நூல்களாலும் பெரியோராலும் எடுத்துச் சொல்லப்படும்; இவ்வாறன்றிச் சாற்றும் மெய்ப் பொருள் தரும் - சொல்லால் சொல்லப்படும் மெய்ப்பொருளாகத் தரும் என்றலுமாம்; பதிகம் - மெய்ப்பொருளைக் குறிக்கும் சொல்வடிவம். அதனால் தரப்படுவது அச் சொல்லால் குறிக்கப்படும் மெய்ப்பொருள் என்றலுமாம்; ஆதலின் அது ஈண்டு வாதத்தில் வேண்டிய "பொருட் கருத்தின் வாய்மை"யினைத் தரும் என்பதாம்.

திருமுறை - முத்தித் திருவுக்கு ஏதுவாகிய உண்மைகளை உரைக்கும் நூல்; இப் பெயர் ஆளுடைய பிள்ளையார் தேவாரமுதல் திருத்தொண்டர் புராணமிறுதியாகக் கோவை செய்யப்பட்ட சைவத் தெய்வத் தமிழ் மறைகளுக்கே காரண விடுகுறியாக வழங்குதல் பெரியோர் மரபு, இங்கு இம்மரபினைப் பிள்ளையார் தேவாரத்திற் பொருந்தக் காட்டி இவ்வழக்குத் தொடங்கிக் காட்டியருளினார் ஆசிரியர்; இறைவன் பாடலே திருமுறை எனப்படுமென்பது "பாடுந் திருமுறை பார்ப்பதி" (திருமந் - திருவுரை - 1067 = 4-5-23) என்ற திருமந்திரத்தாலும் அறிக; இதுகருதியப் பற்றியே தேவார முதல் திருப்புராண மிறுதியாகியவையும் இறைவர் வாக்கேயாதலால் அவையும் திருமுறை எனப்பட்டுப் பன்னிரு திருமுறைகள் என வகுக்கப்பட்டமை உமாபதி சிவாசாரியர் திருவாக்காலு மறியப்படும். இப்பெயரை ஏனைய பசுக்களின்பாடல்களுக்கு வழங்குதல் போலியேயாம்.

தாமே மறித்தலும் - தாமே - வேறொருவரையும் செய்யவிடாது தாமே; மறித்தல் - நூற்சுவடியைக் கையினால் குறுக்கிட்டுத் திறத்தல்; இதுபற்றியே திருமுறை, கந்தபுராணம் - திருவிளையாடற் புராணம் முதலியவற்றுட் கயிறு சாத்திப் பார்க்கும் வழக்கு இன்றும் வழங்கி வருகின்றது; அவ்வாறு மறித்தெடுத்தபோது வரும் பாட்டு இறைவர் திருவுள்ளத்தைக் காட்டுமென்பது கொள்கை, ஈண்டுப் பிள்ளையாரது தேவாரத் திருமுறையில் வந்தெழுந்த பதிகம், எரியினில் வேவாது நின்று, சைவத்தின் உண்மை காட்டிப் பரசமய நிராகரணமும் சைவசமய விளக்கமும் பெறுவித்து உலகை உய்விக்கும் திறம் காண்க. மெய்கண்டதேவர் திரு அவதாரத்திற்கு முன் இவ்வாறே தம் குருவின் ஆணைப்படி அவர் தந்தையார் ஆளுடைய பிள்ளையாரது தேவாரத் திருமுறையினிற் கயிறு சார்த்தத் திருவெண்காட்டுப் பதிகம் "பேயடையா" என்ற பாடல் வரவே, அதன்படி பெற்றோர்கள் திருவெண்காட்டில் போய் வரங்கிடந்து பிள்ளைப்பேறு பெற்று, அதனாற் பரசமய நிராகரணமும் சைவத் தாபனமும் தரும சிவஞான போதம் பெறறு, உலகம் ஈடேறக் காரணமாயின வரலாறு ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

"போகமார்த்த பூண்முலையாள்" பதிகத் தொடக்கம்; வந்து நேர்தல் - உதய மாகுதல்; வெளிப்படுதல்.

நால்தடம்புயத்து அண்ணலார் - சிவபெருமான் - நாயுடைநாயகர்; தோள்வலி பற்றிக் கூறினர் வெற்றி குறித்தற்கு.

நள்ளாறு போற்றும் - இரண்டனுருபு விரிக்க. நள்ளாற்றின் அண்ணலாரைப் போற்றும் என்றது "அண்ணலார் மருவு நள்ளாறு போற்றும்" என்றது "நம்பெருமான் மேயது நள்ளாறே" என்று தலத்தைப்போற்றிய வகையால் அமைந்த பதிக அமைப்புக் குறித்தது.

பதிகம் - போகமார்த்த பூண்முலையாள் - வந்து நேர்ந்துளது - என்றது அப் பதிகத்துள்ளே இத்தொடக்கமுடைய முதற்பாட்டு எழுந்தது என்ற குறிப்பாம்; பதிகம் - பதிகத்தினுள்; ஏழனுருபு தொக்கது. "வனமுலை யிணையவை குலவலின்" என்று இதனைப் போற்றுவதும், அப்பதிகத்தினுள் இவ்வொருபாட்டே முலை என்ற சத்தத்துடன் நிறப்புதும் காண்க. நேர்ந்த முதற்பாட்டின அச்சொல்லே அருட்குறிப்பினை உணர்த்தியதாம் என்பது அதனைப் போற்றிய "தளிரிள வளரொளி"ப் பதிகத்தின் பதினொரு பாட்டினும் முலை குலவலின - செறிதலின - கலவலின் - துதைதலில் - புணர்தலின்-பயிறலின் - என்று அச்சொல்லையும் பொருளையுமே பாராட்டியும், மேல் அந்த ஏடு எரியில் பழுதிலாமைக்கு அதுவே காரணமாகக் காட்டியும் அருளுதலாற் பெறப்படும்; பிராட்டியின முலையிணைகளே ஞானங்களாய அமுதமாய் உயிர்களுக்குப் போகங்களைத் தருவன என்பதும போந்த குறிப்பாம். ஒரு பாட்டுப் பதிகம் என வழங்குவதும் மரபு. அப்பதிக முழுமையும் அவ்வொரு திருவேட்டினில் பொறிக்கப் பட்டிருத்தலுமாம். "பதிகத்தினை யமர்ந்துகொண் டருளி - திருவேட்டினைக் கழற்றி" (2681), "பதிகத்தின் நாதன்" (2682) என வருவனவும் கருதத்தக்கன; பதிகம்-வந்து (அதனுள்) போகம் - முலையாள் - நேர்ந்து - அஃதுளது என்று கூட்டிக் கொள்க. 782

2681. அத்தி ருப்பதி கத்தினை யமர்ந்துகொண் டருளி
மைத்த வெங்கடு மிடற்றுநள் ளாறரை வணங்கி
மெய்த்த நற்றிரு வேட்டினைக் கழற்றிமெய்ம் மகிழ்ந்து
கைத்த லத்திடைக் கொண்டனர் கவுணியர் தலைவர். ௭௮௩

(இ - ள்) அத்திருப்பதிகத்தினை அமர்ந்து கொண்டருளி - அந்தத் திருப்பதிகத்தினை விரும்பி மேற்கொண்டருளி; மைத்த...வணங்கி - இருண்ட வெவ்விய விடம் பொருந்திய கண்டத்தினையுடைய திருநள்ளாற்றிறைவரை வணங்கி; மெய்த்த... கழற்றி-உண்மை பொருந்திய நல்ல அத் திருவேட்டினைத் திருமுறைச் சுவடியினின்றும் கழற்றி வேறெடுத்து; மெய்ம்மகிழ்ந்து...தலைவர் - மெய் மகிழ்ந்து கைத்தலத்தினிற் கவுணியர் பெருமானாராகிய பிள்ளையார் வைத்துக்கொண் டருளினர்.

(வி - ரை) அமர்ந்து கொண்டருளி - அமர்தல் - விரும்புதல்; கொண்டருளு தல் - திருவுள்ளத்தில் மேற்கொள்ளுதல்; மெய்யின் மேற்கொண்டு கையிற் கொள்ளு தல் மேற்கூறுதல் காண்க.

மைத்த - மைபோலக் கரிய; குறிப்புவினைப் பெயரெச்சம் "பனித்தசடை" (தேவா); "விரைத்த கடுக்கையந் தொங்கல்" (பேரூர்ப் புரா.) பாவிக் கேடுவிளைத்த விடத்தை அடக்கிக்கொண்டதுபோலப், பாவிக் கேடு செய்யும் அமணிருளையும் அடக்கி ஒடுக்கிக்கொள்ள வேண்டுதல் குறிப்பு.

நன்னாறர் - அத்திருப்பதிகத்திற் போற்றப்பட்ட நாதர்; "மெய்ப்பதிகத்தின் நாத னென்று" (2182) என்பது காண்க.

மெய்த்தநல் திருஏட்டினைக் கழற்றி - மெய்த்த - உண்மைப் பொருள் கொண்ட. மெய் - சத்து; அழிவிலலாமை; ஈண்டு எரியிடை அழிவில்லாமை குறிப்பு. ஏட்டினைக் கழற்றி - இவ்வாறு ஒரு ஏட்டினைச் சிதைவின்றிக் கழற்றி வேறு எடுத்தல் முன்னாளை ஓலைச்சுவடிகளின் அமைபபுக்கே யியல்வது; இற்றைநாளிற சுவடிகளைச் சிதைவுபடுத்திக் கிழித்தல்லது ஒரு இதழை வேறெடுககவும் நோக்கவும் இயலாமையும் சிந்திக்க. இரண்டன் வேறுபாடும ஏற்றிழிவுகளும் கருதுக.

மெய்ம்மகிழ்ந்து - உணமகிழ்தல் முன அமாந்து கொண்டருளி என்றதனுற் கூறப்பட்டது. மெய்ம்மகிழ்ந்து - கையிற் கொள்ளுதலால் உடல் பூரித்தமையின் மெய்ம்மகிழ்ந்து என்றார்; இது மெயபபாடு.

கொண்டனர் - வைததுககொணடனர். இதனை முறறெச்சமாக்கிக் கொணடனராகிப் - பாடித (2682) - தீயினில் இட்டார் (2683) என மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடித்துரைததுககொளளலுமாம.

கவுணியர் தலைவர் - மேல்வரும பாடி - இட்டார் - என்ற வினையெச்ச முற்றுக்களுக்கும் இதுவே எழுவாயாதலின் அததொடாபுகாடட இறுதியில் வைததார். 783

2682. "நன்மை யுய்க்குமெயப பதிகத்தி னுத"னென் றெடுத்தே
பென்னை யாளுடை யீசன்றன் நாமமே யென்றும்
மன்னு மெய்ப்பொரு ளாமெனக் காட்டிட வன்னி
தன்னி லாகெனத் "தளிரிள வளரொளி" பாடி, எஅச

2683. செய்ய தாமரை யகவித ழினுமிகச் சிவந்த
கையி லேட்டினைக் கைதவன் பேரவை காண
வெய்ய தீயினில் வெற்றரை யவர்சிநதை வேவ
வைய முய்ந்திட வநதவர் மகிழ்நதுமுன் னிட்டார். எஅரு

2682. (இ - ள்) நன்மை...எடுததே - நன்மையிற செலுததும மெயயாகிய அத்திருப்பதிகததிற் போற்றபபட்ட நாதன என்று மேலஎடுததுக்கொண்டு; என்னை... நாமமே - என்னை ஆளாக உடைய இறைவரது நாமமே; என்றும் ..காட்டிட - எப்பொழுதும் நிலைபெறும் மெயபபொருளாம என்று காட்டுமபடி; வன்னிதன்னில ஆகென - எரியினில் வேவாது நிறபதாக என்று, தளிரிள வளரொளி பாடி - "தளிரிள வளரொளி" என்று தொடங்கும திருபபதிகததைப பாடியருளி; எஅச

2683. (இ - ள்) செய்ய...ஏட்டினை - செந்தாமரை மலரின அகவிதழினும் மிக்க சிவப்பு வாய்ந்த கையிற்கொண்ட அநத ஏட்டினை; கைதவன் பேரவை காண - பாண்டியனது பெரிய அரசவை காணும்படி; வெறறரையவா சிந்தை வேவ - ஆடையில்லாத அரையினையுடைய அமணாகளது மனஙகள் வெநதழியும்படி; வையமும் உய்ந்திட வந்தவர் - உலகம் உய்யும்படி வநதவராகிய (கவுணியா தலைவா); வெய்ய தீயினில் - வெப்பமிக்க தீயினிடததில; மகிழநது முன இட்டார் - மகிழச்சியுடனே முன்னர் இட்டருளினர். எஅரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2682. (வி - ரை) திருநள்ளாற்றுப் பதிகம் எழுதிய ஏட்டினைக் கைக்கொண்டருளி, அதனில் உதயமாகித் திருவருட்குறிப்பினை உணர்த்தி நின்ற "போகமார்த்த பூண்முலையாள்...அண்ணல் பரமேட்டி" என்ற கருத்தினை உட்கொண்டு அதனைத் திருவுளங்கொண்டு துதித்து வணங்கி, எரியினிலிடும்போது பிள்ளையார் அருளிய "தளிரிள வளரொளி" என்ற பதிகத்தின் குறிப்பும் கருத்தும் உரைப்பது இத்திருப்பாட்டு.

**நன்மை...எடுத்தே** - "போகமார்த்த என்னும் பதிகத்துக்குரிய திருநள்ளாற்று நாதர் நன்மையைத் தருவார் என்று, கையிற் கொண்ட அவ்வேட்டை எடுத்து" என்பது இராமநாதச் செட்டியார் உரைக்குறிப்பு; இப்பொருளில் **நாதன் நன்மையுய்க்கும்** என்று கூட்டி உய்க்கும் என்பதனை வினைமுற்றாக்கி உரைத்தனர்.

**என்னை ஆளுடை ஈசன்றன் நாமமே என்றும் மன்னும் மெய்ப்பொருளாம்** - அவரே என்னை ஆளாக உடைய இறைவர்; அவர் நாமமே மெய்ப்பொருள்; அத்திருநாமமே இவ்வேட்டினில் எழுதியுள்ளது.

**நன்மையுய்க்கும்** - "நற்றிறமுற" (11) என்ற பதிகம் காண்க.

**மெய்ப்பொருளாம் எனக் காட்டிட வன்னிதன்னில் ஆக என** - இவ்வாறு அந்நாமமே மெய்ப்பொருள் என்பதை "மனனுதம் பொருட்கருத்தின் வாய்மை - தீயின் வேவுறாமையால் காட்டுக" என்று ஒட்டிய அமணர்க்குக் காட்ட வேண்டி இது வன்னியில் வேவாதிருத்தல் வேண்டும்; அவ்வண்ணமே ஆக என்று கருதி ஆணையிட்டு; "தளிரிள வளரொளி மருவுநள்ளாறர்தந் நாமமே - எரியிடிலிவைபழுதிலை - மெய்ம்மையே" (1) என்று பதிகப் பாட்டுத்தோறும் நள்ளாறரது (பதிகத்து நாதன்) நாமமே எரியில் இட்டால் பழுதில்லையாம்; இது மெய்ம்மை; (சத்தியமாகலான்) நிலைபெற்ற சத்துப் பொருளாகலான் - என்று ஆணையிட்டு அருளுதல் காண்க.

**பதிகத்து நாதன்** - "நள்ளாறர்" (பதிகம்); **நாமமே** - "நள்ளாறர்தந் நாமமே" (பதிகம்); **என்றும் மன்னும் மெய்ப்பொருள்** - "மெய்ம்மையே" (பதிகம்); "மனனுய தம்பொருட் கருத்து வாய்மை" (2675); **வன்னி தன்னிலாக** - "எரியினி லிடிலிவை பழுதிலை" (பதிகம்)

**"தளிரிள வளரொளி" பாடி** - தளிரிள வளரொளி என்று தொடங்கும் பதிகத்தைப் பாடி; முதற் குறிப்பால் வந்த ஆகுபெயர்; இது சரித வரலாற்றின் இப்பதிகத்துக்குப் பேராதரவாகிய அகச்சான்று; பிள்ளையார் செய்த சமண வாதம் பற்றிப் பலபடப் பிறழவுணர்ச்சி கொண்டு ஆராயும் ஆராய்ச்சியாளர் இதனையும் மேல் இதுபற்றிக் கூறுவனவற்றையும் சிந்தித்துத் தமது தவறுகளை உணர்வார்களாக. பதிகக் குறிப்புக்கள் பார்க்க.

**பாடித் - தீயினில் - இட்டார்** - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. பாடி இடுதல் என்னை? எனின்: 'அஞ்செழுத் தோதின ரேறினர் தட்டில்" (544); "அண்ணலா ரஞ்செழுத் தோதிப், பாற்ற டம்புனற் பொய்கையின் மூழ்கினார் பணியால்" (1635) என்றமையும் ஆண்டுரைத்தவையும் கருதுக ஒரு பெருவாதத்தில் ஒட்டிப் புகுகின்றாராதலின் புகும்போது சிவநாம மோதிப்புகுதல் உயர்ந்தோர் மரபும் முறையுமாம்; ஆயின் ஈண்டுத் திருவைந்தெழுத்தை ஓதாததென்னையோ? எனின், "அஞ்செழுத்தி னாமத்தான்காண்" என்றபடி சீபஞ்சாக்கரமும் சிவநாமமேயாம். இங்குப் பிள்ளையார் போற்றிப் புகுந்தது நாமமேயாம் என்றது கண்டுகொள்க. சிவநாமம் பொதுவினிற் போற்றாது நள்ளாறர் நாமம் போற்றியது உதயமான நலம்பயக்கும் பதிகத்தினாதன் என்றதனாலும் அதுவே தம்மையாளுடை ஈசன்றன் நாமமே என்றதனாலுமாம்.

இதுகுச் "சிவநாமமே என்றும் நிலையான மெய்ப்பொருளாகு மென்பதைச் சமண ருக்குக் காட்டும்படி இவை அக்கினியி லிட்டபடுமாயின் பழுது இல்லை ;| இது சத்திய மென்னும் கருத்தையுடைய தளிரிள வளரொளி எனனும் பதிகத்தைப் பாடி வளனி யிற புகுதக என்று கூற" என்பது இராமநாதச் செட்டியா ருரைக்குறிப்பு. இவ்வா றன்றி, என்றெடுத்தும் எனப பாடலகொண்டு, என்று எடுத்தும், - நாமமே என்று கூறியும் - பாடி என்று உரைகொள்வர் ஆறுமுகத் தம்பிரானர். 784

2683. (வி - ரை) செய்யதாமரை...சிவந்த - செய்யதாமரை - செந்தாமரை; செந்தாமரைப புறவிதழும் சிவபபுசிற மிக்கன ; அதன் அகவிதழ் அவற்றினும் மிகச் சிவப்புடையன.

மிகச்சிவந்த-பிள்ளையாா திருக்கைகள் அவ வகவிதழினும் மிகச் சிவந்தன ; என்று இவவாறு சிவபபு ஒன்றறகொள வேறறமாக் கூறியது உவமைநயம் ; இதுகு நிறம் ஒன்றேபறறிக் கூறினுரேனும் இனம்பறறி மென்மைப பண்பும மெயயும் உருவம்பறறி யும உவமை பொருததக கொளக ; சைவ மெய்த திருவாகிய திருநீறறினை வழஙகிய நிலையினல் பயனபறறியும உவமக் குறிகொளக.

கையில் - கையில கொண்ட. "கைததலததிடைக கொண்டனா" (2681).

கைதவன் பேரவை காண - "திருநதவை முன்னாத தழலமைக கென" அர சன ஏவினமையால் (2677) அநதப பேரவை முழுதும காணுமபடி என்க.

தீயினில் - இட்டார் எனறு கூட்டுக ; சிந்தை வேகலாவது - தீ வாதில வரும தோல்வியினல அவாகளது சிந்தை கரிநதொழிய. ஆகஎன என்பது பாவனை ; பாடி - என்பது மநதிரம் , இட்டார் என்பது கிரியை - என மூன்றும் கொள்க.

வையம் உய்ந்திட - உணமைத தெயவத்தன்மையின் நிலை கண்டுணர்ந்து, உலகம் உய்ய வந்தவர் - அவதரித்தவா ; பாண்டிநாடுய்ய அதனல் உலகுயய அந்நாட்டில் எழுந்தருளி வநதவா என்ற குறிபபுமாம்.

மகிழ்ந்து - நள்ளாறர்தம நாமமே, எரியில் பழுதபடாது மெயம்மை யிதுவென்று காட்டி உலகுககுப போகம் கொடுககும எனறுணாநதுகொணடாராதலின மகிழநத னா; அமணா இவவாறன்றிக் கவலையாம உணாவினல, நையுநெஞ்சினராகியே நடுஙகி நின்றிட்டாா (2685) எனபது காணக ; தெயவததனமை யின்றிக கறபித்துப் புனைநத பொயயும வஞ்சனையுமாதலின் அவா நடுஙகினர் எனக.

முன் - அமணா இடுவதறகு முனபு ; பொருணிலையின் வாயமை பெறறுடையா ராதலின மகிழதலும், அவரின முனனரே இடுதலும் ஆயிறறு. 785

திருநள்ளாறு

திருச்சிறறம்பலம் திருவிராகம் - பண் - சாதாரி

தளிரிள வளரொளி தனதெழி றருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை தலைவலின்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தந் நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை ; மெய்ம்மையே. (1)

சிறறிடை யரிவைதன் வனமுலை யிணையொடு செறிதரு
நறறிற முறுதமிழ் மலநகா ஞானசம பநதன
கோற்றவ னெதிரிடை யெரியினி லிடவிவை கூறிய
சோற்றெரி யொருபது மறிபவர் துயரிலர் தூயரே. (11)

திருச்சிறறம்பலம்

பதிகக் குறிப்பு :—வந்து நேர்ந்து கையிற்கொண்ட திருநள்ளாற்றுப் பதிகம் எழுதிய இத்திருவேடு திருநள்ளாறர்தம் நாமமே பாட்டுக்கள்தோறும் கொண்டுள்ளது; மலைமகள் வனமுலையிணையொடு குலவுதலால் எரியினில் இடில் இவை பழுதிலை. இது மெய்ப்பொருள். அரசன் எதிரில் இவ்வேட்டினை எரியினில் இட இதனைப் போற்றினேன் - என்பதாம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இளவளர் என்று நான்கடியினும் சொற்பொருட் பின் வருநிலையாய வைத்தும், தளிர் - குளிர் - ஈளிர் எனக் குளிர்ச்சி பொருந்த வைத்தும் கூறியது ஏட்டினையிடும் எரியினைக் குளிர எண்ணிய திண்மையுணர்வு ; நீற்றறையாகிய தீயினடுவுள் நின்ற அரசுகள் அதனை மதி - தென்றல் - பொய்கையாகிக் குளிர்ந்த திருவடிநீழலாக உணர்ந்த திண்மையினை இங்கு நினைவுகூர்க ; மலைமகள் - வனமுலை குலவலின்-நள்ளாறர் நாமம் - போகமார்த்த பூண்முலையாள் தன்னொடும் பொன்னகலம், பாகமார்த்த பைங்கண் வெள்ளேற் றண்ணல் பரமேட்டி '' என்ற அப்பதிகத்தின் வந்துநேர்ந்த முதற்பாட்டின் பகுதியிற் றோன்றிய திருவருட் குறிப்பு. குலவலின் - நாமமே - எரியிடில் - பழுதிலை - என்றதன் கருத்தை ஆசிரியர் மேல் வரும் "இட்ட ஏட்டினில்" (2684)ல் விரித்தருளுமாற்றால் அறிக ; நளிர் - குளிர்ச்சி; மெய்ம்மையே - அமணர் காட்டவேண்டுமெனக் கூறிய வாய்மை ; நாமமே வாய்மை என்றதாம். பழுதிலை என்பது மெய்ம்மை - சத்தியம் என்று ஆணை தந்ததாகக் கூறலுமாம். முலை - குலவலின் - நாமமே எரியிடில் பழுதிலை மெய்ம்மையே என்பன பதிகம் எல்லாப் பாட்டுக்களிலும் அறுதிபெறக் கூறியருளப்படுதல் காண்க;—(2) நாதம் - அருவத் திருமேனிகள் நான்கனுள் ஒன்று ; அவை சிவம் சத்தி நாதம் விந்து என்பன. மீதமது - மேம்பாடுடையது ;—(3) கலவல் - கலத்தல் ; கூடுதல் ; நட்டுறு - நடுதல் பொருந்திய ; இட்டுறு - இதற்கென்று வளர்க்கப்பட்ட ;—(4) மைச்சு - மைத்து என்பதன் போலி ; மை தீட்டிய ; மை பொருந்திய ; நச்சு அணி - நஞ்சு என்பது எதுகை நோக்கி வலிந்து நின்றது ; மெச்சு - ஏத்திப் புகழும்; —(5) குளிர் நண்ணிய என்க. நண்ணிய புனல் புகும் - வெள்ளம் பரந்தபோது அப்புனல் தானே வயல்களுட் புகுதற்கிடமாகிய எனறலுமாம ; " வயல்புகு பொன்னி '' ; விண்ணியல் எரி - தேவர்களுள் ஒருவனாகிய தீக்கடவுள். " காயும் வெவ்வழற் கடவுளும் " (2678) ;—(6) சூதுறு - சூதம் - மா ; மாங்கனி போன்ற; மெய்பற்றி வந்த உவமம் ; சூது - சூதாடுவட்டு ; உறுதல்-போலுதல் ; உவமவுருபு உருவு பற்றிய உவமம்; என்றலுமாம். மீதுறுமெரி-மேல்நோக்கி எரியும் இயல்புடைய தீ; மேம்பட்ட பொருளை வேவாமல் எடுத்துக்காட்டும் எரி என்ற குறிப்பும் காண்க ;—(7) நதுநலை-இறைவர் சிரத்திற்றங்கும் கங்கை நீர் ;—(8) மன்னிய-வளர் ஒளி - நிலைபெற்று வளரும் ஞானவொளி ; தன்னியல் - (தசமுகன்) தன்னியல்பே - ஆணவ இயலே - மிக்க ; தன் (இறைவரது) இயல்பினால் வேறு முயற்சியின்றி என்றலுமாம் ; மின்னியல் - விளக்கம் செய்யும் ;—(9) கான்முக மயில் - கானில் வாழும் மயில் ; கான் - காடு ; முல்லைநிலம். குறிஞ்சியு முல்லையுங் கலந்துள்ள திணையுமாம் ; மேன்முக எரி - " மீதுறு மெரி " (6) என்ற கருத்து ; மேன்மையைக் காட்டும் முகமுடைய என்ற குறிப்புமாம் ;—(10) அத்திரநயனி - அத்திரம் - வேல் ; வேல் போன்ற கண்ணையுடையவள் ; பொய்ம் பெயருநம் - பொய்ம்மைப் பெயர்விக்கும் - போக்கும். இது சரித வரலாற்றுக் குறிப்புடைய அகச் சான்று ;—(11) நற்றிறமுறு - சொல் - "நன்மையுய்க்கு மெய்ப்பதிகம்" (2682); கொற்றவ னெதிரிடை எரியினிலிட்டவிவை கூறிய - பதிகம் அருளிய காலம் - இடம் - வரலாறு - குறிப்பு - கருத்து முதலிய சரித நிகழ்ச்சியெல்லாம் குறிக்கும் அகச்சான்று.

குறிப்பு :—இப்பதிகம் மதுரையில் அரசன் எதிரில் வேறு தலமாகிய திருநள்ளாற்றினைப்பற்றிப் பாடிய பதிகம். முன்பிரமபுரத்தைப் பாடியதும் பின்னரும் பாலைதம்போலவும் காண்க; "நள்ளாறுடைய நசனே - ஆலவாயின்கண் வந்தமர்ந்த வாறென் கொல் சொல்லாய்" என்ற கருத்துடன் பின்னாத திருநள்ளாற்றில் அருளும் வினவுரை - திருநள்ளாறும் திருவாலவாயும் - என்ற (நட்டபாடை) பதிகத்தாலும் சரித வரலாற்றின் இப்பகுதி அகச்சான்றுடன் உறுதி பெறுதல் காண்க.

2684. இட்ட வேட்டினி லெழுதிய செந்தமிழ்ப் பதிகம்
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்
தட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையா லமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே. எகூ

(இ - ள்) இட்ட...பதிகம் - மேற்கூறியவாறு பிள்ளையார் தமது கையினால் தீயிடை இட்ட எட்டிலே எழுதப்பட்ட திருநள்ளாற்றைப் போற்றும் செந்தமிழ்த் திருப்பதிகம்; மட்டுலாம்...உடைமையால் - மணம் வீசுகின்ற கூந்தலையும் அழகிய முலைகளையுமுடைய மலைமகளாராகிய உமையம்மையாரை ஒருபாகத்திற் கொண்ட அட்டமூர்த்தியாகிய சிவபெருமானையே பொருளாகக்கொண்ட உடைமையாலே; அமர்ந்து பட்ட - பொருந்திக் கிடந்த; தீயிடை ..அன்றே - தீயினிடையே வேவா திருந்ததனுடனே பச்சையாயும் அப்பொழுதே விளங்கிற்று.

(வி - ரை) பதிகக் குறிப்பைக் காட்டி, அது திருவருட் குறிப்புடன் பொருந்தியமையால் ஏடு வேவாமைக்குரிய காரணத்தை ஆசிரியர் எடுத்துபதேசித்தபடி.

இட்ட ஏடு - பிள்ளையார் தீயினில் இட்ட ஏடு.

பதிகம் - அட்டமூர்த்தியைப் பொருளென உடைமையால் - பதிகம் - சொல்; அட்டமூர்த்தி அதனாற் குறிக்கப்படும் பொருள்; "பதிகத்தின் நாதன்"; "ஈசன்றன் நாமமே" (2682) என்றவையும் இக்கருத்து, பொருளினை உட்கொண்டமையாற் சொல்லும், அதனை மேற்கொண்டதனால் அது எழுதப்பட்ட ஏடும் அத்தன்மைப்பட்டு வேவாதிருந்தன என்பது.

அட்டமூர்த்தி - "நிலனீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்" (திருவா. தோணோ - 5) மண் - நீர் - தீ - காற்று - வான் என்ற ஐம்பூதங்களும் ஞாயிறு - மதி - உயிர் என்ற மூன்றும் ஆக எட்டும் இறைவரது திருமேனி என்ப. ("புலனாய மைந்தன" என்றதனால் வினைய ஏழும் அசித்து என்றபடி)

அட்டமூர்த்தியைப் பொருளென உடைமையால் - பச்சையாய் விளங்கியது - என்றதென்னை? எனின் கூறுதும்: முன்கூறியபடி எட்டு மூர்த்தங்களுள் எரி - தீ - யும் ஒன்று; மூர்த்தம் - மூர்த்தி - என்பது உடல்; அவ்வுடலுள் உயிராய் இருப்பவன் மூர்த்திமான்; உயிரையன்றி உடலுக்குச் செயலில்லை; உடல் தனித்தியங்காது; அரசன்முன் அமைத்த எரி உடலும், அதனுள் இட்ட ஏடு அவ்வெரியுள்ளிட்ட எட்டினையும் உடலாக்கொண்ட மூர்த்திமானாகிய உயிர். ஆதலின் உடலினுள் உயிர் பொருந்தியவாறு இவ்வேடு அமர்ந்துபட்டுப் பச்சையாய் விளங்கியது. உடல் உயிரை அழிக்கமாட்டாதன்றோ? ஆனால் ஏடு இவ்வேதன் முன்னரும் எரியாகிய உடல் அவ்வுயிரை இன்றியமையாமல் உட்கொண்டிருந்ததன்றோ? எனின், அஃதொக்கும். முன்னரும் அத்தீ உயிருடன்தானிருந்தது. இறைவனது நிறைவு யாண்டுமுள்ளதன்றோ? ஆயின் பின்னர்ப் பதிகம் எழுதிய ஏடு, அத் தீயாகிய ஒருடம்பு அளவின்மட்டிலன்றி

எட்டும் உடம்பாக உடைய மூர்த்தியை உட்கொண்டது. ஆதலின் சத்தாந் தன்மை மிகப்பெற்று எரியினில் வேவாமை மட்டுமன்றிப் பச்சையாயும் விளங்கிற்று என்க. இன்னும், அவ் வெட்டுமூர்த்தங்களுள் நீரும் ஒன்று, காற்றும் ஒன்று; எனவே தீயும் நீரும் காற்றும் உடன்கொண்ட மூர்த்தமாகிய அட்டமூர்த்தத் தொகுதிப்பொருள் உட் புகுந்தது. அஃது ஊழித்தீயினையும் ஊழிநீரினையும் ஊழிக்காற்றினையும் உள்ளடக்கி யது; அவ்வாறாயின் இத்தீயினை அவித்தல்வேண்டுமே எனின், அதனுள் தீயுமிருத்த லின் அவிந்திலது; இத்தீயினை அடக்கவல்லது அத்தீ; "நெருப்பையு மெரிக்கும்" (திருப்புகழ்); ஊழித்தீயை உள்ளடக்கிய தீயாகிய மூர்த்தம் இருக்கவே அங்கங்கும் தீயின் வடிவம் அளவுபடுத்தப்பட்டு நிகழ்வது அவ் வட்டமூர்த்தியின் செயல்; "அங்கி மிகாமைவைத் தானுடல் வைத்தான்; எங்கு மிகாமைவைத் தானுல கேழையும், தங்கிமி காமைவைத் தான்றமிழ்ச் சாத்திரம், பொங்கிமி காமைவைத் தான் பொருட் டாலுமே" (பாயிரம் - 87) என்று திருமூலர் திருமந்திரம் இதனை விளக்குதல் காண்க.

மலைமகள்பாகத்து அட்டமூர்த்தியைப் பொருள் என உடைமையால்-எரியினில ஏடு இடவேண்டியகாலை "போகமார்த்த பூண்முலையாள் தன்னொடும் பொன் அகலம்-பாகமார்த்த - பரமேட்டி" (பதிகம்) என்ற பாட்டு எழுதிய ஏடு வந்து நேர்ந்தது; அதனை எரியிலிடில் பழுதிலை என்பது திருவருட் குறிப்பென அருள்வழியே உணர்ந் தனர் பிள்ளையார்; அதனாலே அவ்வுணர்ச்சி கொண்டு "முலையாள் பாகமார்த்த பர மேட்டி" என்பதற்கு "மலைமகள் முலையிணையவை தலைவலின் - எரியிடில் பழு திலை என்று உரைகூறிய போற்றி உலகுக்குக் காட்டியருளினர்; அவ்வாறு பிள்ளையார் காட்டிய நியாயத்தினைப் பின்னும் விளக்கி முலை தலைவலின் என்பதற்கு முலைமலை மகள் பாகத் தட்டமூர்த்தியைப் பொருளென உடைமையால் என்று விரித்துரை செய்து காட்டியருளினர் ஆசிரியர். மலைமகளும் இறைவரது திருமேனி என்பது.

போகமார்த்த பூண்முலையாள் - பரமேட்டி - (திருவருட் குறிப்பு); மலைமகள் முலையிணை யவை தலைவலின் நள்ளாறர் நாமமே - (பிள்ளையார் அருளியது); மலை மகள் பாகத் தட்டமூர்த்தியைப் பொருளென உடைமை - (ஆசிரியர் உரை).

பதிகம் - தீயிடைப் பச்சையாய் விளங்கியது - பதிகம் எழுதிய ஏடு விளங்கி யது என்பது கருத்து. இந்த வாதத்தில ஒட்டிய பொருளாவது தீயினை ஏவல் கொண்டு சுடாதிருக்கப் பண்ணுதலன்று; அதனுள் இட்ட ஏடு பழுதிலாது நின்று உண்மை காட்டுதலேயாம்; தீயினை ஏவல்கொள்ளுந் தன்மை முன்னரே பிள்ளையார் "சுடர் - பையவே சென்று பாண்டியற் காகவே" என்ப பணித்தமையாற் போந்து அறிய நின்றது; அதனை உட்கொண்டுபோலும் அமணர்களும் "மன்னுதம் பொருட் கருத்து வாய்மைநீட்டி மாட்டினால், வெந்நெருப்பில வேவுறாமை வெற்றி" (2675) என்று ஒட்டினர்; "அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்" (சித்தி - 10-5) என்றபடி தீயின் வேதனை தம்மாட்டுச் சாராது செய்தல் சில சாதனைகளால் ஆகும். இது சமணர் அறிந்த கலைகளுள் ஒன்று என்பது "அதிசயமன் றிதுமுன்னை யமண்சம யச் சாதகத்தால், விதிசெய்து பிழைத்திருந்தான்" (1367) என்று பாடலிபுத்திர அமணர், நீற்றறையில் அரசுகள் பழுதுறாது பிழைத்திருந்தபோது பல்லவனுக்குச் சொன்னதனா லறியலாம்; எனவே அசேதனமாய் எரியுட்பட்டமாத்திரையிற் பழுது படுவதாய் உள்ள ஏடு வேவாமை அதனுள் எழுதிய பொருளின் வாய்மைத் தன்மை யாகிய வலிமையாலாவது என்று காண்பது அவர் கருத்து: அதனால் அவ்வலிமை ஏட்டினிற் காணவேண்டுவதாயிற்றாதலின் தீச்சுடாது குளிர்ந்ததென்று தீயின் செய லாகக்கூறாது பதிகம் - அட்டமூர்த்தியைப் பொருளென உடைமையின் தீயிடைப் பச்சையாய் விளங்கிய" தென்று, பதிகப் பொருளின் செயலாகக் கூறினார் என்க.

ஆயின் ஈண்டுத் தீயிற் பழுதுபடாது நிற்கும் வாய்மையின் வலிமையினை அவ் வேட்டினில் எங்ஙனம் கண்டுகொண்டருளினார் எனின், ஏட்டினைக் கண்டனர்; அத னுள் "பூண்முலையாள் பாகமுடைய பரமேட்டி" - என்ற சொற்றொகுதி கண்டனர்; அதனுள் அதன் பொருளாகிய நன்னாறுணையும், அவன் அருள்முலையாளொடு குலவ லின் அட்டமூர்த்தமாகிய உடம்புடையான் என்பதனையுமே கண்டனர்; அவ்வேட்டினை அவ்வாறே கருதுதல (பாவனை); அழுந்தியறிதல (தியானம்); ஆணையிடுதல (மந் திரம்) என்ற செயல்களை அவ்வண்ணமாக்கினார்; "முலையொடு குலவலின்" என் றது பாவனை; "நாமமே" "மெய்ம்மையே" என்பன தியானம்; "எரியிடிலிவை பழுதிலை" என்பது ஆணையாகிய மந்திரம். என்னை? "நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திர மென்ப" (தொல). அவ்வேட்டினை எடுத்து இவ் வாறு பதிகப் பதிகொரு பாட்டாலும் பதிகொரு முறை தியானித்தும் அபிமந்திரித் தும் அருளுருவாக்கிக் கொண்டதனால் அவ்வேடு அத்தன்மையே பெற்றதென்க. "கண்டதோரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே, றுண்டலபோ லின்றங் குளதர் மாற் - கண்டவுருத், தானதுவா யன்றுனை றனதுவாய்த் தோன்றனே, தானது வாய்க் காணுந் தவர்க்கு" (12 - 3 - அதி - வெண்பா) என்று தாபரத்தினகட் சிவ வழிபாடு செய்க என விதிக்கும் சிவஞானபோத உண்மை ஈண்டுச் சிந்தித்துணரற் பாலது; இவ்வாற்றாற் சிவம் வெளிப்பட்டமையால் அவ்வேடு சிவனுருவாகிய எரியிடை அமைந்துபட்டதெனக. "மரத்தை மறைத்தது மாமத யானை...பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே" (திருமந் - 8 - பராவத்தை - 23) என்றபடி இங்கு நன்னாறா நாமமேயாகிய பொருளியல்பே வெளிப்பட்டு, எழுத்தாகிய சொல்லும் ஏடும் தோற்றப் படாது நின்றன.

மட்டுஉலாம் குழல் - இயற்கையாகிய மணத்தையுடைய குழல்.

பட்ட தீயிடை என்று வேறு பிரித்து, வளர்க்கப்பட்ட என்றுரைப்பாருமுண்டு. அன்றே - அசையென்றொதுக்குவாருமுண்டு.

இனி, இப்பாட்டிற்கு மேற்கூறியவாறன்றி, "எரி அட்டமூர்த்தங்களுள் ஒன்று. அவ்வெரி ஆண்டவனுருவம், இவ்வுண்மையை அநுபூதியில் உணர்ந்த திருவருள் ஞானம் பெற்ற பெரியாரின் திருவாக்கைக் கொண்ட திருப்பதிகம் எங்ஙனம் அழிந்து படும்?" என்று கருத்துரை கொள்வாருமுண்டு; அருள்ஞானம் பெற்ற பெரியாரின் திருவாக்கு என்பது பிள்ளையாரது எல்லாப் பதிகங்களுக்கும் ஒக்கும்; அதனால் இப் பதிகத்திற்குச் சிறப்பியல்பு ஒன்றுமில்லை. ஈண்டு எரியில் பழுதில்லாதிருந்தது பிள்ளை யார் திருவாக்கு என்பதனாலன்று; "மலைமகள் முலையிணை குலவலின்" - "அட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையால்" - என்று பிள்ளையார்தாமும் ஆசிரியரும் உணர்த்தியருளினமை கொண்டும், இவ்வாற்றானும், பிறவாற்றானும் இக்கருத்துரை பொருந்தாமை கண்டுகொள்க.

இனி, ஈண்டு இத் திருப்பாட்டின் கீழ், விசேட ஆராய்ச்சியுரை எனப்பட்டுத், திரிபுணர்ச்சியானும் ஒருசார் புணர்ச்சியானும், உண்மைநூலின் நுட்பவுணர்ச்சி பெறாமை யானும், வேண்டப்படாதனவும், சைவசித்தாந்தத்திற்கு முரண்பாடாயினவும், மயக்க வைப்பனவுமாகிய பல பொருள்கள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அவை பொருத்த மற்ற ஆரவார சீர்மையவாகிய வெற்றுரைகளே என்று வேறு ஒதுக்கத்தக்கனவே யாயி னும், சைவநூல்களின் உண்மைத் திறத்தின் அநுபவமில்லாதாரை மயக்கவைக்குமாத லின் அவைபற்றி ஈண்டுச் சில கூறுதல் தகுதியாகும்: அவர் கூற்றுவன:—"உயிர்களைத் திருஞானத்துடன் சம்பந்தப்படுத்தும் ஒருவர் குரு எனப்படுவர் - திருஞான சம்பந்தர்

உலகுக்கு ஒரு பெருங் குருவாக வீற்றிருப்பவர். அவருக்குப் பல மொழிகளில் பல பெயர்கள் உண்டு. மொழியளவில் நிற்போர் அவரை வெவ்வேறு புருடராக உணர்கிறார்; உண்மைஞானம் கைவரப்பெற்றோர்க்கு அவர் ஒருவரே என்பது விளங்கும்;

திருஞான சம்பந்தரைச் சூழ்ந்து அவர்தம் ஏவல்வழி நிற்கும் குருமார் பலர் வீற்றிருக்கிறார்; உலகில் எங்கெங்கே திருவருள் நெறிமீது மாசு படிகிறதோ அங்கங்கே அம் மாசினைப் போக்கித் திருவருள் நெறியை விளங்கச் செய்யத் திருஞான சம்பந்தர் போதருவர்; இல்லையேல் தம்மைச் சூழ்ந்துள்ள குருமாருள் ஒருவரை அனுப்புவர்" - என்றும்,

"ஆண்டவன் ஒருவன்; அவன் அருள்நெறியும் ஒன்றே; அவ்வொன்று ஒவ்வொருபோது ஒவ்வொருவிதப் பெயர் பெறுவதாகிறது; அப்பெயர்கள் பல சமயங்களாக ஆராய்ச்சி யில்லாதவர்களாற் கொள்ளப்படுகின்றன; பலபட்ட பெயர்களை நீக்கிப் பொருளைப் பார்த்தால் ஒருமை புலப்படுமேயன்றிப் பன்மை புலப்படாது" - என்றும்,

"திருஞானசம்பந்தர் வருகைக்குக் காரணமாயிருந்தது அந்நாளிற் சமணமென்று பெயர் பெற்றிருந்த திருவருள் நெறியில் சோர்ந்த மாறுபாடேயாகும்; ஆதிநாதராகிய விருஷபதேவர் கண்ட அருள்நெறி தோன்றியவாறே இயங்கியிருப்பின் திருஞான சம்பந்தர் வருகைக்கு இடம் நேர்ந்திராது" - என்றும்,

'..ஆதிஜைனத்திடைச் சிறப்பாகத் திகம்பர ஜைனம் என்றும் சுவேதாம்பர ஜைனம் என்றும் இரண்டு பிரிவுகள் தோன்றின. திகம்பரம் இயற்கையை வெறுப்பது; பெண்ணை இழிவாகக் கருதுவது; பெண் பிறவிக்கு வீடுபேறில்லை; ஆண்பிறவி தாங்கிய பின்னரே வீடுபேறு எய்தும் .. .....இவை ஆதிஜைனத்துடன் மாறுபட்டவை; இதற்கு உடன்படாதார் சுவேதாம்பரர்கள்; ......திகம்பரர் இயற்கை நெறியினின்றும் வழுவினார்கள்; பெண்ணை இழிவாகக் கருதினார்கள்; பெண்ணை வெறுத்தல் பெருந் துறவு என்று கொண்டார்கள்; இவர்களால் இயற்கை நெறிக்கும் பெண்ணுலகுக்கும் பெருந்துன்பம் நேர்ந்தது......இது இறைநெறிக்குக் கேடு நேர்வதாகும்; இயற்கை இறையின் போர்வை அதாவது உடல்; அவ்வியற்கையை வெறுத்துத் துறப்பது இறையை வெறுத்துத் துறப்பதாகும். "உலகினி லியற்கையை யொழிந்திட், டுற்றவர்க் குற்ற சிவனுறை கின்ற வாலவா யாவது மிதுவே" (திருஞான சம்பந்தர்)" என்றும்,

"இயற்கையை உற்று நோக்கினால் அது ஆண் பெண் மயமாயிருத்தல் விளங்கும் ......இயற்கை நெறிக்கும் பெண்ணுலகுக்கும் இழுக்கு நேரும் இடங்களில் அருள்நெறி செவ்விய முறையில் இயங்காது...தென்னாட்டில் திகம்பரத்தால் இயற்கை நெறிக்கும் பெண்ணுலகுக்கும் இழிவு நேர்ந்தமையால் அவ்விழிவைப் போக்கவே திருஞான சம்பந்தர் தோன்றினார்; அவர் அருள்நெறியாகிய ஆதிஜைனத்தை அழிக்கப்போந்தா ரென்பது ஆராய்ச்சியில்லாதார் கூற்று" என்றும், "திருஞான சம்பந்தரது திருவிரும்பூளைப் பதிகத்தில் "சமண் சாக்கிய மாக்கிய வாறே" என்றதனால் சமண் சாக்கியம் ஆக்கியவன் சிவனே என்பது விளங்குகிறது; ......சமண சாக்கியம் என்பன அருள்நெறிக்கு வழங்கப்படும் பல பெயர்களுள் சேர்ந்தவை. ஆகவே சிவனால் ஆக்கப்பட்ட சமண் சாக்கியம் ஒழிந்துபடத் திருஞானசம்பந்தர் முயல்வரோ?" என்றும், "...சிவஞானம் சமணத்துக்கும் சைவத்துக்கும் பொதுவானது. சமணமும் சிவநெறி; சைவமும் சிவநெறி. சிவநெறி எனினும் அருள்நெறி ஒவ்வொருபோது ஒவ்வொரு பெயர் பெறுவது வழக்கம்" என்றும், ..."சிவாஹோரத்தி" (குத்தருத்தோச்சாரியர் அஷ்டபாகு

டம்) ; "சிவசுகம" (பூபால ஸ்தோத்திரம்) ; "சிவகதியடையலாமே" (சிந்தாமணி) ; "சிவகதிநாயகன்" (சிலப்பதிகாரம்) ; "சிவகதியின் அமர்ந்திருந்தார்" (மேருமந்தர புராணம்) ; "மூவெயிலின் முரண்முருக்கி...நெருப்புமிழ் செங்கோக்கினை...கொடுமை கூற்றைத் தாள்வலியின் விழ வுதைத்தனை ; மூன்று கணைமுனித தலைவினை...நினனுள் வேசீ யொடுக்கினை...கின்னின்று நீ விரிததனை ; ...ஆதி பகவனை அருகனை" (திருக்கலம்பகம்) என்று சமண நூல்களுள் வருவன...என்றும் ..."இயற்கையான ஆண்டவன் உடல்; ஆண்டவன் பெண்ணொடு கூடியுள்ள பெருந்தகை என்பது பொருளவே திருஞான சம்பந்தர் திருப்பதிகங்கள் பாடியுள்ளார்...உலகில் பெண் ஆண் கூட்டுறவு என்னும் பேரறம், இயற்கை-இறையின் வழியது என்பது திருஞான சம்பந்தர் உள்ளக் கிடக்கை ; ..."பொறியைம் புலததின வேட்கைநோய தீர்க்கும மருந்து..." என்றும், இவ்வாறு வருவன பலவாம்.

இவற்றின் பொருததங்களைச சிறிது ஆராயவாம் : (1) திருஞானசம்பந்தர் என்பது மூலகுரு - இறைவர் - என்ற காரணபபொருளபட மயங்கி யறியவைததது பிழை ; (2) பினனர் அப பெயர்சசொல்லையே ஆளுடைய பிள்ளையார் பெயராக வைததுப பேசியது மயஙகவைததலாம ; (3) அருளநெறிக்கு மாசு படியும்போதெல் லாம் அதனைப போககத திருஞான சமபந்தா வருவா அல்லது அவரைச் சூழ்ந்துள்ள குருமாருள ஒருவரை அனுபபுவா என்றது சைவசமய உணமையாகிய சித்தாநததிற்கு முறறும் மாறுகிய பெரும பிழை ; (4) அருளநெறிக்கு மாசு படியாது. அவ்வாறு மாசு படிதல் சைவததுள இலலை ; திருஞான சமபநதா எனபது ஆதி குருவாகிய ஞான இறைவா என்று கொணடால அவருககு நம்போல உலகில்வரும் அவதாரமிலலை பேசுதல் சைவ சமயக் கோட்பாட்டுக்கு முற்றும மாறுபாடு; வைணவ மரபில அவ்வாறு பேசுதல அமையும், அவர்கள் கடவுள் அவதாரம என்னும் பிறபபில் வருதல் அவாதம் மரபுக் கொள்கையிற பேசப்படுதலால்; ஏனைப் புததம - சிறிததுவ முதலிய சமயங்களிலும் அஃதொககும்; சைவததிறகேலாமை யுணாநதுகொள்க ; (5) திருஞான சம்பந்தர் என்ற பெயருக்கு உயிர்களைத் திருஞானததுடன சமபந்தபபடுத்துமவொருவர் குரு எனப பட்டுப் பெருங் குருவாவர் என்றது பிழை ; இப பெயர்பபொருளை ஆளுடைய பிள்ளை யார் புராணம் விளக்குகின்றது. உலகத தநதை தாயாகள் சிவஞானததை ஊட்ட உண டருளியமையாலும், கலைஞான மெயஞானஙகளை முறற உணாநதமையாலும் இப் பெயர் போநததென்பது ; 1966 - 1967 பாட்டுககளை பாாககு. இதறகு மாறுகப பொருள் கொள்ளுதல் பிழையும் மரபு வழுவுமாம , அவவாறு கொளளறகு இலககணமு மில்லை. "எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர் செய்பின ரப்படிச் செப்பு தல் மரபே" என்ப திலக்கணம ; (6) இறைவன ஒருகாலததி லொரிடத்து வருவோ னல்லன் - எஞ்ஞான்றும் எவவிடததும ஒவவொரு கணமும உடனினறு உலகினைத திருத்தி உயிர்களை மாசறுக்கின்றான் என்பது உணமைநூற றுணிபாம ; (7) ஆண்டவன் ஒருவனே என்பதொக்கும் ; ஆனால அவனருளநெறியும் ஒன்றே என்பது சாலாது ; அஃது குழறுபடையானதொரு மயக்கம் ; ஆண்டவன ஒருவனேயாயினும் உயிர்கள பல. அவை பலப்பல பக்குவமுடையன ; என ? ஒவ்வோருயிரும ஒவ்வோா திறமும பக்குவமுமுடையதாம் என்னலாம். அவ்வுயிாகளின திறமும பககுவமும நோககிப பல திறப்படுவன இறைவனருளும் முறைகளும் நெறிகளுமாம ; அருணெறி முடிவில் வீடுபேறாகிய ஒன்றையே கருதினும் உபாயஙகளும் சாதனஙகளும் மிகப பலவாம் ; அருணெறி ஒன்றே என்றும், அஃது ஒவவொருபோது ஒவவொருவிதப பெயா பெறு மென்றும், அப்பெயர்கள் பல சமயஙகளாக ஆராய்ச்சி யில்லாதவர்களால் கொள்ளப் படுகின்றன என்றும் இவ்வாறெல்லாம் பேசுதல் முழுக் குளறுபடையான மயக்கம்.

சமயங்கள் பலப்பல. அவை உயிர்களின் பக்குவபேதம் நோக்கி அவ்வவற்றை வழிப்படுத்த இறைவன் வகுத்தனவேயாம். "சமய கோடிகள் எல்லாம்" "சைவ முதலா மளவில் சமயமும் வகுத்து" என்பன பெரியார் திருவாக்கு. ஆதலின் சமயங்கள் எல்லாம் ஒன்று என்றும், புறத்தோற்றம் மட்டும் வேறுபடுவன என்றும் சொல்வன எல்லாம் பிழை. சைவம் எல்லாச் சமயங்களையும் படிமுறையின் வகுத்துத் தன்னுள் அடக்குதலால் இதனுள் எல்லாச் சமயங்களும் அடங்கும்; இஃது ஒன்றினுமடங்காது. ஏனைச் சமயங்கள் தாமறிந்து சென்ற அளவில் ஒருசில உண்மைகளை மட்டும் காட்டுவன. சைவம் முழு உண்மையினையும் காட்டும்; சமணமும், புத்தமும், இனியும் "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ் செய்தே, எரிவினாற் சொன்னா ரேனும்" அவையெல்லாமும் தன்னுள் அடங்குவது சைவம்; ஆனால் அவையெவையும் ஒவ்வோர் பகுதி மாத்திரையானன்றி முழுமையாகிய சைவமாகா. "கண்ணிலார் பலர்குழீஇக் கொண்டு வேழந்தனைத் துழாவித் தலைப்பட்டுக் கையிற் றைவந்து வேறு வேறு கூறு மிலக்கணங்களெல்லாம், கண்ணுள்ளா னொருவன் கண்டு கூறுமத னிலக்கணத்துள் ஏகதேசமாய்க் காணப்பட் டடங்குமாறுபோல, ஏனைச் சமயநூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாயவாறு பற்றி அவ்வந்நூல்களிற் கூறும் பொருளியல்புக ளெல்லாம், முற்றுணர்வுடைய முதல்வனாற் செய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொருளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்று ளடங்கும்" எனவும், "நூலெனப்படுவனவெல்லா மொருதிறனவாதலின்றி, முதனூல், வழிநூல், சார்புநூல், பூருவபக்க நூலெனப் பலவேறு வகைப்பட்டு மேன்மேல் நூல்களை நோக்கிக் கீழ்க்கீழ் நூல்கள் மென்மையுடையனவாம்; அவற்றுள் ஏனைச் சமய நூல்களெல்லாம் முதனூலாகிய வேதாகமப் பொருளை முழுவதுமுள்ளவா றுணரமாட்டாதார் அவற்றுட் சில பொருளைச் சமுத்திர கலசநியாயம்பற்றி ஆண்டாண் டெடுத்துக்கொண்டு தத்தமறிவளவுக்கேற்பத் தொகுத்தும் விரித்துஞ் செய்த நூல்களாகலான், அவையெல்லாம் பூருவபக்க நூலெனப்படும்" எனவும் சிவஞான சித்தியார் 8 - 13 - 14 பாட்டுக்களின்கீழ் எம் மாதவச் சிவஞான முனிவர் கூறியவை ஈண்டுச் சிந்திக்கற்பாலன. (8) இனி, ஆதிநாதராகிய விருஷப தேவர் கண்டது மாசற்ற அருநெறி என்றும், அந்த ஆதிஜைனத்திடை சில மாசுகள் படிந்தன என்றும், அவை இயற்கையை வெறுத்தத் துறவு பூணுதலும், பெண்ணை இழிவாகக் கருதுவதும் என்றும் பலப்பல எழுதப்பட்டன; உண்மை அருநெறியாயின் அதனில் மாசு சேராது என்பது முன்னர்க் காட்டப்பட்டது; இயற்கைநெறி என்பது பொருளற்றதொரு சொற்றொடர் வழக்காம். "உலகினி லியற்கையை ஒழிந்திட் டற்றவர்க் கற்றசிவன்" என்பதற்குக் கொண்ட பொருள் பிழை. உலகினி லியற்கையை ஒழிந்திட் டற்றவர் என்றது உலக பந்தங்களினின்று விடுபட்ட மனமுடையோர் என்றும், அற்றசிவன் - அவர்க்கு அவ்வறுதலின்கண்ணே வெளிப்பட்டருளும் இறைவன் என்றும் பொருள்கொள்ளக்கிடந்த இவர்க்கு நேராக உள்ள திருவாக்கு ஆகும். "யானெனதென றற்ற இடமே திருவடியாம்" (குமரகுருபரர்); (9) பெண் பிறவியைச் சமணர் இழித்தமையால் அதனை ஒழிக்கத் திருஞான சம்பந்தர் தோன்றினார் என்பது பொருத்தமற்ற மொழி; மகளிரிழிவு - துறவின் மேன்மை முதலியவை சைவத்திலும் பேசப்படும்; ஆண்பிறவியோ பெண்பிறவியோ இரண்டும், பிறவி என்ற அளவில் முத்திக் கிடையூறுவன; ஆணுயிரென்றும் பெண்ணுயிரென்றும் வேற்றுமை உயிரினுள் இல்லை; பிறவிகளுள் ஒன்றினை உயர்த்தியும் ஒன்றினைத் தாழ்த்தியும் கூறுதலும் சைவமன்று; பெண்ணின்பெருமை பேணத் திருஞான சம்பந்தர் தோன்றியருளினார் என்பது பெரும்பிழையேயாம். பெண்ணேயாக ஆணேயாக அன்புநெறியினையே சைவம் போற்றி எடுத்தது; பெண்ணை உயர்த்திப் போற்றிய இடமுமுண்டு;

தாழ்த்தி ஒதுக்கிய இடமுமுண்டு. இவ்வுயர்வு தாழ்வுகள் அன்பினைப் பற்றி எழுந்தனவேயன்றிப் பிறவியினிலை பற்றி எழுந்தனவல்ல; பிள்ளையார் சமண வாதத்துக்கும் பெண் இழிவோ உயர்வோ என்ற இதற்கும் சம்பந்தமில்லை; சைவத்திற்குச் சமணர் சூழ்ந்து செய்த கேடுகளைப் போக்கித் திருநீற்றை ஓங்க ஆக்கித் தாபித்தலே இவ்வாதங்களின் கருத்தாதல் காண்க; (10) சமணத்தை அழிக்கத் திருஞான சம்பந்தராவது, அரசுகளாவது வேறு எந்தச் சைவ ஆசாரியராவது முற்படவில்லை; சமணர் சைவத்துக்குச் செய்த சூழ்ச்சிகளையும் கேடுகளையும் ஒழித்தது தற்காப்புமட்டிற் செய்தனர் என்க; (11) சமண்-சாக்கியம் முதலியவையும் இறைவனால் உயிர்களின் பக்குவ பேதம்பற்றி ஆக்கப்பட்டன; ஆதலின் அவற்றை அழிக்கப் பிள்ளையார் முற்பட்டார் என்றனர்; பாம்பு-தேள்-புலி-தீ-முதலியவையும் இறைவரால் ஆக்கப்பட்டன என்ற காரணத்தால் அவற்றை எடுத்துக் குலவுவார் உண்டோ? அவற்றைக் காட்சிச்சாலையில் அவ்வவற்றளவில் வைத்து அமைவுபடுத்துதலே முறையாம். சமணம் இறைவனால் ஆக்கப்பட்டமையால் அதுவும் சைவமும் ஒன்றாகுமோ? பசுவும் பாம்பும் ஒக்க இறைவனால் படைக்கப்படினும் ஒன்றாகாதவாறு இவையும் கொள்ளப்படும்; (12) இவர்கள் சிவம் சிவகதி என்ற சத்தங்கள் சமண நூல்களுள் வருதல்காணப் பெருமுயற்சி செய்தெடுத்தனர்; இது பயனில் முயற்சி என்றொழிக. சிவம் - சிவகதி முதலியவற்றிற்கு அவர் கொள்ளும் பொருள் வேறு; சைவம் கொள்ளும் பொருள் வேறு. பொருளொற்றுமையின்றி வெறும் சொன்மாத்திரை கொண்டு மயங்குதல் முறையன்று; (13) வேத சிவாகமங்களிற் போற்றப்படும் சிவனையும் ஏனைக் கடவுளர்-சிறு தெய்வங்களையும் ஒன்றாகவைத்து எண்ணுதல் பெரும் பிழை; சைவத் தெய்வப் பரமாசாரியாரை ஏனைச் சிறுசமயங்கள்-போலிச் சமயங்கள் என்றிவற்றின் குருமார்களுடன் ஒன்றாக வைத்துப் பேசுதல் உய்தியில்லாத பெரும்பாவமும் சிவாபராதமுமாம்; "மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணி விண்ணாண்டு மண்மேல், தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே" (திருவாசகம்); "சிவனொடொக்குந் தெய்வந் தேடினு மில்லை, அவனொடொப்பாரிங் கியாவரு மில்லை" (திருமந்திரம்); (14) சமயங்களைப் புறப்புறம் - புறம் - அகப்புறம் - அகம் என நால்வகையாக வகுத்து அவற்றுள் ஆருகதம் என்னும் சமணம் சீவன் முதலாகப் பதார்த்தங்கள் ஏழு கொள்வதென்றும், இவ்வேழு வகைப் பதார்த்தங்களும் உண்டாம் - இல்லையாம் - உண்டுமில்லையாம் என்பன முதலாக எழுவகையால் கூறப்படும் அநேகாந்த வாதத்தைக் கொண்டதென்றும், வேத சிவாகமாதி உண்மை நூற்களை உடம்படாது மாறுபடுவதென்றும், கண்ட நம் பெரியோர் அதுவும், அதுபோன்ற பிறவும் உயிர்களை உண்மை காணமாட்டாது மயக்காத வண்ணம் நியாயங் காட்டி மறுத்துப் பரபக்கம் கூறிச் சைவத்தின் உண்மையை நாட்டினர்; இது பற்றியே ஆசிரியரும் "தெளியாதொருபொருளே பொய்யுமெய்யு மாமென்னும் புரை நெறியார்" என்று இதன் கருத்தினை வடித்துக் கூறியருளினர்; இவற்றையெல்லாம் விட்டுச் சைவத்தோடொப்ப ஆதிசமணம் மாசற்ற அருணெறி யென்றும், பிறவாறும் மேற்கூறியபடியெல்லாம் பிதற்றிப் போலிச் சமரசம் காண முயலும் உரையெல்லாம் பட்டப்பகலில் காக்கை வெளிதென்பது போன்ற வெளிற்றுரையேயாமென்று விடுக்க.

முன் அரசுகள் புராணம் 1560-ல் கீழும், பிறாண்டும் உரைத்தனவும், இனியும் ஆண்டாண்டுரைப்பனவும் கண்டுகொள்க.

இனி, முன்னர்ச் சுரந் தீர்த்தற்கும், பின்னர் நீரில் வெல்வதற்கும் தனிப் பதிகங்களினால் அருள்மேற்கொண்டாங்குச் செய்யாது, இங்குத் திருமுறையினை மறித்தெடுத்து வந்த ஏட்டினைப் போற்றித் தீயில் இட்ட கருத்தென்னையோ? எனின்;

அவ்வாறு செய்தருளவுற்ற திருவருட் குறிப்பு எம்மாலறியுந்தரமன்று; "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதிமாணபும், கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா" என்பது ஆணை; ஆயினும் ஒன்று கருத உள்ளதனை ஈண்டு அச்சத்துடன் குறிக்க நினைக்கின்றேன்: முன் செய்த சுரநீரதத செயல் சமயஉணமை காட்ட ஓட்டிச் செய்த வாதமன்று; அரசன் நோயின் மிகுதியால் "நீஙகள் தேறிய தெய்வத் தன்மை யென்னிடைத தெரிபபீர்" (2657); "இகலித திரும்" (2659) என்று கூறிய அளவிலன்றி அது பிளளையார் முறபட்டுச் சமய வாததகிற் றுணிந்த வாதமன்று; அது போலன்றிப் பிள்ளையார் "பேசுதிர நும்பொருள் எல்லே" என்று வாததகில் அழைக்க, அமணர் வாய்மை ஏடு நெருப்பில் வேவுறுமை வெற்றியாகும்; அது கட்புலத்திலும்ப படு என்று ஓட்டினாராக, அதன்படி துணிநது வாய்மை நிலைகாட்ட எழுநதது இவ்வாத மாதலின் தாமாத துணிந்து செய்தலினறி இறைவ ரருட்குறிப்பினையே கைக்கொண்டு செய்தல் தருமென்பது பிள்ளையாரது திருவுள்ளககிடைபோலும் என்பது கருதப் படுவதாம்; பின்னாப புனல்வாதத்தில், இவவாறு முன்னாத தீயினில் நிலைகணட வாய்மையினைப் பாணடியனுக்குத தேற்றி ஞானோபதேசம் செயது ஆட்கொள்ளும வகையாற் றிருபபாசுரம் பாடபபட்டதெனபதும் கருதப்படும்.

எய்திய செந்தமிழ்ப் பதிகம்—எனபதும பாடம். 786

2685. மைய னேஞ்சுடை யமணருந் தம்பொருள் வரைந்த
கைபி லேட்டினைக் கதுவுசெந் தீயினி லிடுவார்
'உய்யு மோவிது ?' வெனவுறுங் கவலையா முணர்வால்
நைபு நேஞ்சின ராகியே நடுங்கிநின் றிட்டார். எஅஎ

(இ - ள்) மையல்...இடுவார் - மயககததைக கொண்ட மனமுடையவாகளாகிய அமணர்களும் தமது சமய உண்மைப் பொருளை எழுதிய தமது கையிறகொணட ஏட்டினை வெப்ப மிக்குக் காய்கின்ற தீயிலே இடுவார்களாகி; "உயயுமோ இது?"... உணாவால - இது தீயினில வேவாது எஞசுமோ எனறு பொருந்திய கவலை கொணட வுணர்வினாலே; நையும்...இட்டார் - அழிகினற உள்ளததினை புடையவாகளாகியே நடுஙகிநின்று தீயினிடை இட்டனர்.

(வி - ரை) நடுங்கி நின்று இட்டார் - பிள்ளையார் மகிழ்ந்து முன் இட்டார் (2683); அதுபோலன்றி அமணர் திருவருள் வலிமை பெருமையினால் நடுக்கமுடன் இட்டார்கள்.

மையல் - மயக்கம்; பொய்யை மெய்யாக்கிககொள்ளும் மாறுபாடு; இஃது அவர்க்குச் சமயக் கோட்பாடுபற்றிய இயல்பால் வநதது; கவலை - ஈணடு ஏடு உயயுமோ - உய்திபெறுது தீர்ந்து சமயத்தை இழுக்கிவிடுமோ என்ற பயத்தால் அப்போது வந்த மனநிலை; நையும் நெஞ்சம் - நைதல்; கவலையால் சேரும் மன அழிவு; நடுக்கம் - அதனால் வரும் மெய்ப்பாடு.

தம்பொருள் - தமது சமய உண்மைப் பொருட் கருத்தின் வாய்மை (2675); வரைந்த ஏடு - கையில் ஏடு என்று தனிததனிக் கூட்டுக.

கதுவுதல் - சுட்டு அழித்தல்; அடுதல்; இங்குக் கதுவு செந்தீ எனவும், முன்னர்ப் பிள்ளையார் இட்டபோது அமர்ந்துபட்ட தீ (2684) என்றும் கூறியவை சரிதவிளைவுக் குறிப்புப்பட வைத்த அமைதி காண்க.

நடுங்கி - தமது அச்சம் - கவலைகளை மறைத்தாராயினும் மனமழிவு மிகுதலின் மெய்க்நடுக்கமாகிய புறச்செயல் வெளிப்பாடு பெற்றது என்க. 787

2686. அஞ்சு முள்ளத்த ராகியு மறிவிலா வமணர்
வெஞ்சு டர்ப்பெருந் தீயினில் விழுத்திய வேடு
பஞ்சு தீயிடைப் பட்டது படக்கண்டு பயத்தால்
நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் நின்றார். எஅஅ

(இ - ள்) அஞ்சும்... அமணர் - பயங்கொண்ட மனத்தை யுடையராயினும் அத னால் அறிவு பெறாத அமணர்கள்; வெஞ்சுடா... ஏடு - வெவ்விய சுடரினையுடைய, தீயிலே வீழ்த்திய ஏடு; பஞ்சு... படக்கண்டு - தீயினிலே பஞ்சு வீழ்ந்தால் பட் டொழிவதுபோல ஒழிந்துபட்டது கண்டு; பயத்தால்... நின்றார் - பயத்தினாலே மனம் சோர்வடைந்த பின்னும் கையில் ஏந்திய மயிற்பீலிக் கற்றையைக் கைசோர விடாதவ ராகி நின்றனர்.

(வி -ரை) அஞ்சும் .. அறிவிலா - தமது சமய உண்மைகளும் தமது புனைவு களும் வெற்றி பெறா என்று கண்டு அஞ்சினார்கள்; ஆனால் அவ்வச்சத்தினின்று தெளிய வேண்டிய அறிவினைப் பெறுதொழிந்தனர்.

விழுத்திய ஏடு - அச்சம் காரணமாக ஏட்டினை வீழும்படி செய்தனரேயன்றி ஒழுங்குபெறப் புகுதவிடமாட்டாத நிலை என்பது குறிப்பு.

பஞ்சு தீயிடைப்பட்டது பட-பட்டது - பட்டதுபோன்ற அழிந்த நிலை; பட்டது- பெயர்; ஆகுபெயராய்ப் பட்ட நிலையைக் குறித்தது; இரண்டனுருபு விரிக்க; படுதல்- பெறுதல்; அழிதல் என்றலுமாம்; இப்பொருட்குப் பட்டதுபோலப் பட என உவம வுருபு விரிக்க.

பயத்தால் நெஞ்சு சோர - ஏட்டினைத் தீயில் இடும் முன்னர் உய்யுமோ என்ற ஐயப்பாட்டின் கவலையினால அச்சம் மட்டும் இருந்தது. இப்போது அவ்வேடு உய்யாது ஒழிந்தமை கண்டுகொண்டாராதலின் பயம மிகுதியினால மனம சோர்ந்துபட்டது; பயம் - மிக்க அச்சம்; இது வேவுறுமை வெற்றியென்றும, வெந்துபட்டது வாய்மை யன்று என்றும் ஒட்டினாராதலின் தோலவி வந்தமையும் அதனால் அரசனிடம் தொடர்பு பற்றிய பயன்களெல்லாவற்றின் இழப்பும், நிலையழிவும நேர்வதனையும எண்ணியதனால் உண்டாகியது; பயம் - இதன விளைவு என்றலுமாம்.

நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் - பீலி - சமயக்குறி; மனஞ்சோர்வுபடி னும தறுகண்மையால் அதனை மறைத்துப் பீலியைக் கைவிடாது நின்றார்; உண்மை கண்டபோதும் பொய்பட்ட தமது சமயக் கொள்கையை விடாது பற்றிக்கொண்டு என்றதும் குறிப்பு. சோர்ந்திலர் - சோர்ந்திலராகி முற்றெச்சம்; முற்றாக உரைப்பினு மிழுக்காது.

நின்றார் - தோல்வியை ஒப்பித் தாழாமலும அகலாமலும் நின்றனர்.

பஞ்சுத்தீயினில்—என்பதும் பாடம். 788

2687. மான மன்னவ னவையின்முன் வளர்த்தசெந் தீயின்
ஞான முண்டவ ரிட்டவே டிசைத்தநா ழிகையில்
ஈன மின்மைகண் டியாவரும் வியப்புற வெடுத்தார்
பான்மை முன்னையிற் பசுமையும் புதுமையும் பயப்ப. எஅகூ

(இ - ள்) மானமன்னவன்... ஏடு-ஞானபோனகராகிய பிள்ளையார், பெருமையுடைய பாண்டியனது சபையின்முன் வளர்க்கப்பட்ட தீயிலே இட்ட ஏடு; இசைத்த... கண்டு- குறிப்பிட்ட நாழிகையளவில் அழிவுபெறாமல் நின்றதனைக் கண்டு; பான்மை... பயப்ப.

முன்னையினும் பசிய தன்மையும் புதிய தன்மையும் உளதாயிருக்க; யாவரும் வியப்ப எடுத்தார் - எல்லாரும் அதிசயிக்கும்படி தீயினின்றும் எடுத்தருளினார்.

(வி - ரை) மான மன்னவன் - மானம் - பெருமை; ஈண்டுக் கொள்கையின் பெருமைபெற்ற நிலை குறித்தது.

அவையின் முன் - அவையின் முன் வளர்த்த என்றும், அவையின முன்இட்ட என்றும், அவையின் முன் எடுத்தார் என்றும் தனித் தனி கூட்டி யுரைத்துக்கொள்க.

தீயின் - தீயின் இட்ட என்றும், தீயினின்று எடுத்தார் என்றும் அவ்வாறே தனித் தனி கூட்டுக.

இசைத்த நாழிகை - இத்தனை நாழிகை வரை வேவாதிருத்தல் வேண்டுமென்று குறித்துக்கொண்ட காலஎல்லை. ஈனமின்மை - அழிவுறாமை.

பசுமைப்பான்மையும் புதுமைப்பான்மையும் எனக. முன்னையினும பயததல்- அதிகரித்தல - மேம்படுதல். பசுமை-ஏட்டின்பாலும, புதுமை - அதில எழுதிய பொருளின்பாலும கொள்க. பசுமை-திண்மை , தீயிறபடும ஏனைய பொருள்களபோலனறி வறட்சி நீங்கிப் பசுமை பெற்ற நிலை; இதனால் இதறகுப பச்சைப் பதிகம் என்று பெயர் வழஙகும். "தான செயத-பச்சைப் பதிகத் துடனபதினா றாயிரம பா, விததுப பொருளை விளக்கவல பெருமான" (ஆளுடைய பிள்ளையாா திருததொகை) எனற நமபியாண்டாா நமபி திருவாககும காண்க. இதனுள பாவித்துப் பொருளை விளக்க வல என்ற கருதது ஈண்டுச் சிநதிக்கத தககது. "பசசையாய் விளஙகிய தனறே" (2684).

புதுமையாவது அவ்வேட்டில் எழுதிய பொருள் முன்னாப் பொதுவகையால் இறைவனது பொதுவியல்பு கூறிய நிலையில் அறியபபட்டது. இங்கு இவ்வரலாற்றின் தொடர்பினால் சிறப்பாகவும் அவனது சிறபபியலபுபற்றிய நிலையிலும அறிந்து வழிபடப் பெறுவது.

பயப்ப - பயனாகப பெற; பயப்ப எடுத்தார் - எனக. வியப்பாவது - அழிவின்மையோடு முன்னையினும பசுமையும் புதுமையும பயபப விளைதல்.

பான்மை - பான்மையினால்; தெயவத தனமையினால என்றலுமாம். 789

2688. எடுத்த வேட்டினை யவையின்முன் காட்டியம் முறையில்
அடுத்த வண்ணமே கோத்தலு மதிசயித் தரசன்
தொடுத்த பீலிமுன் றாக்கிய கையரை நோக்கிக்
"கடுத்து நீரிட்ட வேட்டினைக் காட்டுமி" னென்றான். ௭௯0

(இ - ள்) எடுத்த...கோததலும் - (அவ்வாறு தீயினின்றும்) எடுத்த அவ்வேட்டினை அரசனவையின் முன்னே காட்டி, (முன்பு கழறறிய) அம்முறையினாலே மீளப் பொருந்தும்படி சுவடியினுள் கோததலும்; அரசன் - பாணடியன்; அதிசயிதது - அதிசயம கொண்டு; தொடுதத...என்றான் - கறறையாகக கட்டிய மயிற்பீலியை ஏந்திய கைகளையுடைய அமணர்களைப் பார்த்துக் கோபிதது நீர் தீயில் இட்ட ஏட்டினைக் காட்டுங்கள் என்று சொன்னான்.

(வி - ரை) எடுத்த ஏடு - தீயினின்றும் வியப்புற எடுத்த ஏடு; விளக்கம் பொற்றல்பெறுதிருத்த திருநீற்றின் திறத்தினை மேல் எடுத்த என்ற குறிப்புமாம்; "எடுத்த பொற் பாதமும்" (தேவா); "எடுக்கு மாக்கதை" (புரா).

அவையின் முன் காட்டி - பேரவை காண - இட்டாராதலின் (2683) அஃது பழுதின்றி எடுக்கப்பட்டமையும் அந்த அவையோர் காணும்படி காட்டி.

அம்முறையில்-கோத்தலும் - சுவடியினின்றும் கழற்றிய அவ்வண்ணமே ஏடுகள் முன் வரிசையிற் பொருந்தும்படி கோத்தல் வேண்டும் என்பது.

பீலிமுன் தூக்கிய - நெஞ்சு சோரவும் அச்சோர்வு புலப்படாது மறைத்துப் பீலி கை சோராது ஊக்கங்கொண்டார்போலத் தூக்கிப் பிடித்த என்க; முன் - விளக்கமாக; தூக்குதல் - பலருமறியும்படி உயர்த்துதல்.

கடுத்து - கோபித்து; கடுத்து - இட்ட என்று கூட்டுக. "முகம் கோபத்தீத் துள்ளியெழு மெரிக்கண்கள் சிவந்து" (2653); கடுத்து - என்றான் என்று கூட்டி, மன்னவன் செயலைப்பற்றிக் கூறுதலுமாம்; முன்னரே "என்னவா தமக்கு" (2674) என்று கூறியதும், அரசன் அதன்மேல் ஒன்றுரைக்குமுன் பிள்ளையார் தடுத்து மேற் கூறியருளியமையும் காண்க.

காட்டுமின் - இகழ்ச்சி குறிப்புப்படக் கூறியபடி; "எய்திய நகையினோடும்" (2690) என்பது காண்க. கையர் - வஞ்சகர் என்றலுமாம்.     790

வேறு

2689. அருகர்தா மிட்ட வேடு வாங்கச்சென் றணையும் போதிற்
பெருகுதீக் கதுவ, வெந்து போந்தமை கண்ட மன்னன்,
தருபுனல் கொண்டு செந்தீத் தணிப்பித்தான்; சமண ரங்குக்
கருகிய சாம்ப ரோடுங் கரியலான் மற்றென் காண்பார்?;     ௭௯௧

2690. செய்வதொன் றறிகி லாதார் திகைப்பினாற் றிரண்ட சாம்பல்
கையினாற் பிசைந்து தூற்றிப் பார்ப்பது கண்ட மன்னன்
எய்திய நகையி னோடு "மேடின்ன மரித்துக் காணும்
பொய்யினான் மெய்யை யாக்கப் புகுந்தநீர் போமின்" என்றான்;

2691. "வெப்பெனுந் தீயில் யான்முன் வீடுபெற் றுய்ய நீங்கள்
அப்பொழு தழிந்து தோற்றீர்; ஆதலா லதுவா றாக
இப்பொழு தெரியி லிட்ட வேடுய்ந்த தில்லை யென்றாற்
றப்புர வுடையீர்! நீங்க டோற்றிலீர் போலு" மென்றான்.     ௭௯௩

2689. (இ - ள்) அருகர்தாம்...கதுவ - அமணர்கள் தாங்கள் இட்ட ஏட்டினைத் தீயினின்றும் எடுக்கச் சென்று அணுகியபோது பெருகிய தீச் சுட்டமையாலே; வெந்து போந்தமை கண்ட மன்னன் - உடல் வெந்ததனாற் புடைபெயர்ந்து சென்றதனைக் கண்ட அரசன்; தரு...தணிப்பித்தான் - கொணரச் செய்து தரும் நீரினைக் கொண்டு சிவந்த தீயினைத் தணியச் செய்தான; சமணர்...காண்பார் - சமணர்கள் அங்கே கருகிய சாம்பரும் கரியுமல்லாமல் வேறெதனைக் காண்பார்கள்?     ௭௯௧

2690. (இ - ள்) செய்வது ஒன்று அறிகிலாதார் - மேற்செய்வது ஒன்றினையும் தெரியமாட்டாதவர்களாகிய அவ்வமணர்கள்; திகைப்பினால்...மன்னன் - திகைப்பினாலே அங்குத் திரண்ட சாம்பலைக் கையினாலே பிசைந்தும் தூற்றியும் ஏட்டினைத் தேடிப் பார்ப்பதைக் கண்ட அரசன்; எய்திய நகையினோடும் - பொருந்திய புன்சிரிப்பினுடனே; ஏடு இன்னம்...என்றான் - "ஏட்டினை இன்னும் அரித்தும் பாருங்கள்; பொய்ம்மை நெறியினைத் துணையாகக் கொண்டு அதனை மெய்ப்பொருளாக விளக்கப் புகுந்த நீங்கள் அகன்று செல்லுங்கள்" என்று சொன்னான்.     ௭௯௨

2691. (இ - ள்) வெப்பெனும்...தோற்றீர் - வெப்பு நோயாகிய தீயினின்றும் நான் முன்னர்ப் பிள்ளையாரால் விடுதிபெற றுய்ந்திட நீங்கள் வாதில் அழிந்து தோல்வி யுற்றீர்கள்; ஆதலால் - ஆகையினாலே; அது ஆருக...உய்ந்ததில்லை என்றால் - அதன் வழியாகவே தொடர்ந்து இப்பொழுது தீயில் இட்ட ஏடு நிலைபெறாமல் ஒழிந்துபட்டது என்றால்; துபபுரவு...என்றான் - வல்லமை மிக்கவர்களே! நீங்கள் தோற்கவில்லை போதும் என்று சொன்னான். எகஙு

இம்மூன்று பாககளும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2689. (வி - ரை) வாங்க - மேல் எடுகக; வாங்குதல் - இட்டதொன்றனை அம்முறையே மீள எடுத்தல குறித்தது.

கதுவ வெந்து - கதுவுதலால் - வெந்தமையால் என இரண்டும் காரணப் பொருட்டாய வினையெச்சஙகள; வெந்து - தீச்சுட்டதனால் உடல் கருகிய நிலை குறித்தது.

மன்னன்...தீ தணிப்பித்தான் - நடுநிலைகோடாத மன்னனாயினமையால் அமணர் தோல்வியுற்றனராயினும் அவா வருந்தாவணணம் தீயைத தணிபபித்தனன்; இது நீதிமுறையும் கருணையும் உடன்கொண்ட செயல; தீ அமைத்த காரணமும் நிறை வெய்தி முறறுபபெறறமையும் உட்குறிபபு.

சமணர்...என்காண்பார்? - இது கவிககூற்று; வினா, வேறொன்றுமில்லை என இன்மை குறிததது; கருகிய சாம்பல் - தீபபறறிய பொருள்கள் தாமே முற்றும் எரிந்து அவியின் வெள்ளிய நீறுபட ஆகும்; இங்குப் புனல்கொணடு அவிததமையால் கருகிய சாமபலாயின. கரி - தீப்பறறி யெஞ்சிய விறகின் துணடஙகள். கருகிய - அமணர் இட்ட ஏடு தீயிடைப பஞசுபோல வெநதுபோன என்ற குறிப்புமாம்; என் - தமது ஏட்டுத துண்டமேனும், அலலது வெற்றியின் அறிகுறியான எதுவேனும் என்க. 791

2690. (வி - ரை) செய்வதோன் றறிகிலாதார் திகைப்பினால் பிசைந்து தூற்றிப் பார்ப்பது - செய்வது - மேற் செய்யபபடுவது; படுவிகுதி தொக்கு நின்ற பிறவினை. ஒன்று - ஒன்றினையும் - முறறும்மையும இரண்டனுருபும் தொக்கன; திகைப்பு - தமது நிலைககு அறிவு நோ்நது வேறு தீர்வு தெரியாதபோது உளதாகும் மனநிகழ்ச்சி.

கையினாற் பிசைந்து தூற்றிப் பார்ப்பது - இது அமணர் ஏடு காண்பது கருதிச் செய்த செயலனறு; வேறு செயல் ஒன்றும்தோனறாது, அதனை எண்ணுகின்ற காலக் கழிவுக்குப் பிறா காணச்செய்யும் பாவனையாம எனக; தீரவிலலாத கேடுவந்தபோழ்து கைகளைப் பிசைதல் அவலக்குறிப்பாகிய மெய்ப்பாடுகளுள் ஒன்றுதலும் காண்க.

எய்திய நகை - இகழ்ச்சிக் குறிப்பாகிய புன்சிரிபபு.

ஏடு இன்னம் அரித்துக் காணும் - சாம்பரைப் பிசைந்து தூற்றிப் பார்த்தலன்றி அரித்தும் காணுஙகள்; அவாகள் செய்வது வீணசெயல் என்ற குறிப்புடன் கூறிய இகழ்ச்சி மொழி. அரித்து - அரிததும்; உம்மை தொக்கது.

பொய்யினால் மெய்யை ஆக்கப் புகுந்த நீர் - பொய்யாகிய சமயக் கோட்பாடு களைக் கருவியாகக் கொண்டு உண்மைபபொருளிது என்று முடிபு காண்பது அணிந்த நீர்; மெய்ம்மை - சமய வாதத்தில் சமய உணமையை நிலைநாட்டி வெற்றி பெறுதல்.

போமின் - அகன்று சென்றுவிடுங்கள்; முன்னர் "என்னைவிட்டு அகல நீங்கும்" (2667) என்றது இடப்பாகத்தைத் தீர்க்க அணைய நின்ற இடத்தினின்று விலகி

நிற்றலைக் குறித்தது; இங்குப் போமின் என்றது இந்த இடத்திலேனும் தனது சார்பிலேனும் நில்லாது முற்றும் நீங்குதலைக் குறித்தது.

என்றான் - என்று கூறி மேலும் சொல்வான் என்றதாம்.

பார்ப்பது கண்டு—என்பதும் பாடம். 792

2691. (வி - ரை) வெப்பெனும் தீயில் யான்முன் விடுபெற் றுய்ய - எரியில் இட்ட ஏடு உய்ந்ததில்லை - வெப்பாகிய தீயினின்றும் என்னையே விடுவித்துப் பிள்ளையார் எடுத்தனர்; அப்பொழுது அதனிலும் தோற்றீர்; இப்பொழுது இத் தீயினுள் ஏடுதானும் வேகாமைக் காக்க வலியிலராகி நின்றீர்; ஒருசிறு ஏட்டினையும் தீயில் வேவாது காக்க உங்களால் இயலவில்லை. வீடு முதலியதிரு என்ற குறிப்புமாம்.

தோற்றிலீர் போலும் - துப்புரவுடையீர் - இவையிரண்டும் இகழ்ச்சிக் குறிப்புப் பட நின்றன; தோற்றிலீர் போலும் என்ற இகழ்ச்சிக் குறிப்பு வினை தோற்றீர்கள் என உடன்பாடு குறித்தது. துப்புரவு - வல்லமை; "துப்புர வில்லார் துணிவு துகளாக" (1968).

ஆதலால் அது ஆறுக - முன்னர் வெப்புத்தீயில் தோற்றமைபோல அதுவே வழியாக இப்பொழுதும்; அத்தீயின் வழியேயாக;

அது வேறுக—என்பதும் பாடம். 793

2692. தென்னவ னகையுட் கொண்டு செப்பிய மாற்றந் தேரார்;
சொன்னது பயனுக் கொண்டு சொல்லுவார் "தொடர்ந்த வாது
முன்னுற விருகாற் செய்தோ", முக்காலி லொருகால் வெற்றி
யென்னினு முடையோ மெய்ம்மை யினியொன்று காண்ப"தென்றார்.

(இ - ள்) தென்னவன்...தேரார் - பாண்டியன் இகழ்ச்சியாகிய புன்சிரிப்பை உட்கொண்டு சொல்லிய மாற்றங்களை மனத்துட் டெளிந்து மேற்கொள்ளாதவர்களாகி; சொன்னது...சொல்லுவார் - சொன்ன சொன்மாத்திரையே அதன் பொருள் என்று மேற்கொண்டு சொல்வார்களாய்; "தொடர்ந்த...காண்பது" என்றார் - "தொடர்ந்த வாதமாக முன்பு இரண்டுமுறை செய்தோம்; மூன்று முறையில் ஒரு முறையேனும் வெற்றியடைவோம்; ஆதலின் உண்மைத் திறம் இனி ஒருமுறை காணத்தக்கது" என்றார்கள்.

(வி - ரை) நகையுட்கொண்டு...தேரார் - நகையுட்கொள்ளுதல் - இகழ்ச்சிக் குறிப்புடன் கூறுதல். தேரார் - அங்ஙனம் தெரியாதார்போலப் பாவனை காட்டி; அதன் புறப்பொருளையே பொருளாகத் தொடர்ந்துகொண்டு என்பார் சொன்னது பயனுக்கொண்டு என்றார். சொன்னது - சொல்லின் புறப்பொருள்.

தொடர்ந்த வாது - முன்னுற இருகாற் செய்தோம் - மேலும் தொடர்ச்சிபெறும் பொருட்டு ஒன்றற்கொன்று தொடர்பின்றியே முன்னாகத் தனித்தனி நிகழ்ந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் ஒன்றுபடுத்தித் தொடர்ந்த வாது என்றெடுத்துப் புனைந்துகொண்டது ஒரு வஞ்சனை; "ஒன்று தவறின் மூன்று", "கங்கையும் மூன்று பிழை பொறுக்கும்" என்பது முதலிய சாமானிய உலக வழக்கினையும் தம் பக்கமாக எடுத்து முக்காலில் என்று மேலும் ஒரு வாதத்திற்குத் தோற்றுவாய் செய்துகொண்டது மற்றுமொரு சூழ்ச்சியாம்; "சூழ்ச்சி முடிக்குந் தொழிலோர்" (1387); இவ்வாறு சூழ்தல் தீவினைப்பட்ட செயலாய உலகினில் மாக்களின் இயல்பாம். அதனினும் மேலாய் சமயப்பீடை மிகக்கொண்டவர்களாகி வன்கணாளர்களாகிய சமணர்களிடம் இது மேலும் கொடிய அடர்த்த நிலையிற் காணப்படும்; மேல்வரும் பாட்டுப் பார்க்க.

அரசனை அமணர், தம் உரை ஒன்றன்பின் ஒன்றாய்ப் பலிக்காமை கண்ட பின்னும் ஒன்றன்மேலொன்றாய் நான்குமுறை மரணதண்டம் செய்வித்த தறுகண்மை அவர் சரிதத்துட் காண்க ; இவர்கள் மேலும் மேலும் இவ்வாறு யாதாமொரு காரணங் காட்டி ஒட்டிக்கொண்டே முடிவின்றிச் செல்வார் என்பதும், அரசன் மறுப்பினும் பிள்ளையார் கருணையினால் அவர்களாகச் சலிக்குமளவும் இடந் தந்தருளுவர் என்பதும் அனுபவத்தாலும் நுண்ணறிவினாலும் உணர்ந்த அமைச்சர், பின்னர், “ வேறினிச் செய்யும் இவ்வாது ஒன்றினுந் தோற்றா செய்வ தொட்டியே செய்வ” தென்பதும் (2693 - 2695) காண்க ; வாதம் செய்தால் இவ்வாறு ஒட்டிச் செய்யும் வழக்கும் அதன் முடிவில் அதன்படி தீர்வு நிகழ்த்துவதும் உண்மை. “ இந்தவூரி லிருகிலோ மென்றே யொட்டினார்...இந்த வழக்கை முடிப்பதென மொழிந்தார் ” (17) என்ற தண்டியடிகளுயனார் வரலாற்றினாலும் இவையறியப்படும்.

மூக்காலில் ஒருகால் வேறிறி யென்னினும் உடையோம் - உடையோம் என்று உறுதிபெறக் கூறியது வாதந் துணிவோர் இயல்பு. வெற்றி பெறுவது உறுதி ; அவ்வாறு பெறினும் முன் இருமுறை தோற்றமை (2697) அரசன் குறிப்பிட்டபடி தோல்வித் தானமே மிகுதியாம் ; ஆயினும் யாங்களும் மெய்ம்மை முழுமையல்லாவிடினும் ஒரு பகுதியேனும் உடையோமாகக் காண்பது பொருளாம் என்று தொடர்ந்து தமது நிலையை ஏறபித்தது சூழ்ச்சியின் மற்றுமொரு நிலை ; இது சிறிதாகக் காட்டி உள் நுழையும் சூழ்ச்சித் திறன். உடையோம்-மெய்ம்மை என்று கூட்டினுமாம். 794

2693. தோற்கவு மாசை நீங்காத் துணிவிலார் சொல்லக் கேட்“ டிம்
மாற்றமென் னுவ ” தென்று மன்னவன் மறுத்த பின்னும்,
நீற்றணி விளங்கு மேனி நிறைபுகழ்ச் சண்பை மன்னர்
“வேற்றுவா தினியேன் செய்வ ?” தென்றலு மேற்கோ ளேற்பார்,

2694. “நீடுமெய்ப் பொருளி னுண்மை நிலைபெறுந் தன்மை யெல்லாம்
ஏடுற வெழுதி மற்றவ் வேட்டினை யாமு நீரும
ஓடுநீ ராற்றி லிட்டா லொழுகுதல் செய்யா தங்கு
நாடிமுன் றங்கு மேடு நற்பொருள் பரிப்ப ” தென்றார். எகூகூ

2693. (இ - ள்) தோறகவும்...கேட்டு - ஒருமுறைக் கிருமுறையும் தோற்கவும் ஆசை விடாத டீண்மைத துணிவிலாத அமணர் இவ்வாறு சொல்லக் கேட்டு; இம் மாறறம்...பின்னும் - அரசன் இந்த மாறறம் என்ஆககக்டவது ?-இதனாற் கடவது ஒன்றுமில்லையே - என்று மறுத்தபின்பும ; நீற்றணி...என்றலும் - திருநீற்றின் அழகு விளங்கும் திருமேனியினையுடைய நிறைந்த புகழினையுடைய சீகாழித் தலைவர் இனிச் செய்யும் வேறு வாது என்ன? என்று கேட்டலும்; மேறகோள் ஏற்பார் - வாததினை மேற்கொள்வதனை ஏற்றுக்கொள்பவராகி, எகஞ

2694. (இ - ள்) வெளிப்படை. நிலையாகிய மெய்ப்பொருளினது வாய்மையானது நிலைபெறும் தன்மையெல்லாம் தொகுத்து ஏட்டிற் பொருந்த எழுதி மற்ற அந்த ஏடுகளை யாங்களும் நீரும் ஓடுகின்ற நீரினையுடைய ஆற்றில் இடுவோமாகில், நீருடனே ஒத்தொழுகிச் சென்றுவிடாது, இட்ட அவ்விடத்தைப் பற்றி முன்னர்த் தங்கும் ஏடு எதுவோ அதுவே நல்ல பொருளைப் பெற்றுடையதாகும்” என்று கூறினார்கள். எகக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2693. (வி - ரை) தோற்கவும் ஆசை நீங்கா - அனுபவத்தாலும் அறிவுபெறாத ஆணவமலத் திண்மையுடைய; மாசை என்று பிரித்து மாசினை உடைய தன்மத்தை என்பாருமுண்டு.

துணிவு - உண்மையிற் றுணிந்து ஒழுகும் தன்மை;

மன்னவன் இம்மாற்றம் என்ஆவது என்று மறுத்த பின்னும் - இது ஒன்றும் பெறாத வெற்றரை என்று அரசன் மறுத்த பின்னரும்; நீ வாதத்தின் முன்னரே "என்ன வாது உமக்கு" (2674) என்ற அரசன் இங்கு அக்கினியின் மேலும் ஒரு தோல்வி கண்டபோது முற்றிலும் மறுத்தனன் என்க;

பின்னும் - என்றலும் - பிள்ளையாரது கருணைபெருக்கைக் காட்டிய குறிப்பு உம்மை சிறப்பு.

நீற்றணி...மன்னர் - நீற்றணி விளங்கு மேனி - "புத்தரொ டமணை வாதி லழிவிக்கு மண்ணல் திருநீறு செம்மை திடமே" (தேவா) என்று திருமறைக்காட்டில் முன்னரே ஆணை திகழ்ந்ததற்கேற்ப ஈண்டுத் திருநீறே முதலில வாதத்தில் வெற்றிகொண்டதாதலின் அவ்வெற்றிக் கோலம் மேலும் விளங்குவதாம் என்பது குறிப்பு. இக்கருத்தே பற்றிப் பின்னர் வைகைக்கரையில் எடுக என்று மன்னவன் பிள்ளையாரை நோக்கிய போது "நீற்றணி திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளை யாரும்" (2712) என இக் குறிப்பே கண்டு போற்றினர். "நீறு வணைகையான் மறித்தலும்" (2680)

நிறைபுகழ் - தாமே வெற்றிகொண்டபோதும தோல்வியுற்ற பகைமீது கருணை கொண்டமை புகழின் நிறைவாகும். "உரைப்பா ருரைப்பவை யெல்லாம் இரப்பார்க் கொன்', றீவார்மே னிற்கும் புகழ்" (குறள்) என்ற கருத்து ஈண்டு வைத்துச் சிந்திக்கற்பாலது; அமணர் தோல்வியுற்ற பின்னும் இனி வேற்று வாது என்? என்று கேட்டதும், அதுவும் மன்னவன் மறுத்த பின்னும் கேட்டதும புகழின்பாலதாம். "இறைவன் பொருள்சேர் புகழ்" என்றவிடத்து இறைமைக் குணங்கள் முற்றவுமுடைய இறைவன் புகழே புகழெனப்பட்டது என்ற தன்மையின் கருத்தும் ஈண்டுக் கருதக. நிறை புகழ் - என்ற கருத்தமைந்து புகழின் எல்லை என்றபடி.

மன்னவன் மறுத்த பின்னும் - நிறைபுகழ்ச் சண்பை மன்னர் - மாறனும் மன்னவன் - பிள்ளையாரும மன்னவர் என ஒப்புக்கூறிய குறிப்பும, அதன் மேலும இரப்பார்க்கொன் றீதலை மறுத்த அம்மன்னவனிலும, ஈந்த பிள்ளையார் புகழின் நிறைவுடையார் என ஏற்றம்பெறக் கூறிய குறிப்பும காண்க. மன்னன் சொல்லுக்கு மாறாக உரைத்தலும் செய்தலும் வல்லவர் பிறிதொரு மன்னரேயாவர் என்றதும குறிப்பு.

சண்பை - சீகாழியின் ஒன்பதாவது பெயர்.

இனி வேற்று வாது செய்வது என் - என்க; "இனி ஒன்று காண்ப"தென்று (2692) பொதுப்படக் கூறினாராதலின் அது என்ன? என்றார். வேற்று வாது - சீவகன் மேற்கொள்ளும் வாதங்கள் முன்சொன்ன தன்மையில் தோல்வியுறுவனவே யன்றி வேற்று வாதம் என்ன உளது என்ற குறிப்பும போதருதல் காண்க

மேற்கோள் ஏற்பார் - மேற்கோள் - மேற்கொள்ளுதல்; ஏற்றல் - துணிந்து முற்படுதல்; ஏற்றுக் கொள்ளுதல்; ஏற்பார் - என்றார் என வரும் பாட்டுடன் முடிக்க. 795

2694. (வி - ரை) நீடு......எல்லாம் - நீடு - நிலைபெறும் - எல்லாம் - என்ற அடைகள் முன்போலன்றி இவை முற்றிய உண்மைத் தன்மைகளின் தொகுதியாம் என்றும், இவை தோற்றுப் போகா என்றும் கூறிய குறிப்பு. வேற்று வாது என்?

என்ற குறிப்பிற்கு விடையாகக் கூறிய குறிப்பும் காண்க; ஏடேற - உண்மைத்தன்மை ஏட்டினிற் பொருந்த.

ஓடு நீர் - விரைந்து செல்லும நீரினையுடைய. ஒழுகுதல் - நீர் செல்லும் வேகத்துடன் ஒன்றுபட்டு ஒழுகுதல்; பள்ளந்தாழுறுபுனலினோடு கீழ்நோக்கிச் செல்லுதல்; ஒழுகுதல் செய்யாது - ஓடிவிடாது.

ஒழுகுதல் செய்யாது - முன் தங்கும் - அமணர்கள் காணக் கருதியது நீருடன் சென்றுவிடாது இட்ட இடத்திலேயே, நீரில் இட்ட கற்போலத், தங்கிவிடுமளவேயாம்; ஆயின் இனிப் பிள்ளையார், அவரும் உலகும் காண்வரக் காட்டிய அருட்பெருமையாவது இட்ட அந்தத் தங்குமளவன்றி மேல் எதிர்த்துச் செல்லும் தன்மையாம்; ஏடு அங்குத் தங்கும் அளவே உண்மை விளக்கமாக அதனைக் கேட்ட நாட்டுமக்களும் கருதினர் என்பதும் காண்க. "ஓடுநீ ருடன்செ லாதுநிற் குமோ வோலை என்பார்" (2705) என்று மறுபிற கண்ட மாதா மைந்தர் கூறுதல் காண்க.

நற்பொருள் பரிப்பது - நன்மையாவது அழிவுறாமையும் நிலைபெறுதலும் காட்டி நன்மை பயத்தல். பரித்தல் - தாங்குதல்.

குறிப்பு:—முன்னர்த் தீயிற் செய்த வாதம் கீழ்நோக்குதலின்றி மேனோக்கியே எரியும் தீயில் உய்ந்திடல் அப்பொருளும் மேனோக்கமுடையது என்ற கருத்து. இங்கு நீரில் மேற்கொண்ட வாதம் நீர, மேலிருந்து கீழ்ச்செல்லு மியல்புடையதாதலின் அதனுடன் செல்லாது நிற்கும் தன்மையால் அப்பொருள், மேல்நோக்க மில்லாவிடினும் கீழ்நோக்க மில்லாத அளவிலேனும் நிற்பதெனற கருத்து; நோயை நீக்க இயலாது தோற்றபின்பு "தீயின நீரில் வெல்வது என்று தம்மில் எண்ணி"ய அமணர் எண்ணிய இரண்டனுள் முதலில் தீயைப்பற்றி ஒட்டியதற்கு இதுவும் ஒரு குறிப்பாகும்.

அந்த - நாடி - முன் - தங்கும் - என்றவை அவ்வாறு நிற்றலின் அருமையும் செயற்கரிய தன்மையும குறித்தன. 796

2695. என்றமண் கையர் கூற வேறுசீர்ப் புகலி வேந்தர்
"நன்றது செய்வோ" மென்றங் கருள்செய, நணுக வந்து
வென்றிவே லமைச்ச னார்தாம் "வேறினிச் செய்யு மிவ்வா
தொன்றினுந் தோற்றார் செய்வ தொட்டியே செய்வ" தென்றார். ௭௯௭

(இ - ள்) என்று அமணகையா கூற - முன்கூறிய அவ்வாறு அமண்கையாகள் சொலல; ஏறுசீர்...அருள்செய - மிக்கு ஏறுகின்ற சிறப்பையுடைய சீகாழித்தலைவர் "நன்று; அதனபடியே செய்வோம" என்று அங்கு அருளிச்செய்ய; நணுகவந்து ...என்றார் - வெற்றியுடைய வேலேந்திய அமைச்சனாராகிய குலச்சிறையார்தாம் பக்கத்தில் வந்து வேறு இனிச் செய்யப்புகும இந்த வாதம் ஒன்றிலும் தோற்பவர்கள் அதன்மேற் செயயவேண்டுவது இது என்று ஒட்டியே செய்தல் வேண்டும்" என்றார்.

(வி - ரை) ஏறுசீர் - வேந்தர் என்க; முன்னர் இரண்டு முறையினும் வெற்றி பெற்ற சிறப்பு இனியும் இவ்வாதத்தின் வெற்றியாலும் மேலேறி மிகுவதாகும் என்பது சிறப்பு. சீர் - வெற்றியின் சிறப்பு; ஏறும் - இனியும் மேன்மேல் மிகுவதாகும்; வேந்தர் - முன் "மன்னர்" (2693) என்பதற்கேற்ப அதனைத் தொடர்ந்து சொல்லிய ஈண்டும் கூறப்பட்டது காண்க.

நன்று அது செய்வோம் - நன்று - இசைவுகாட்டும் மொழி; அது - அதனையே - அதன்படியே; தேற்றேகாரம் தொக்கது.

அதன் செய - அருள் காரணமாகக் கூற.

அமைச்சனார்தாம் நணுக வந்து - என்றார் என்க; நணுக - "அகலா தணுகாது தீக்காய்வார் போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்" (குறள்) என்றபடி மன்னரை மிக அணுகாமலும் மிக அகலாமலும் நின்ற தூரத்தினின்றும் பக்கத்தில் வந்து; பிள்ளையார்பாலும் நெருங்காது தூரத்தில் நின்ற முறையினின்றும் அணுக வந்து என்றலுமாம்.

நணுக வந்து - இவ்வாறு ஒட்டியே செய்வது - என்றார் - இவ்வாறு அமைச்சர் சொல்வதற்குரிய குறிப்பு முன் உரைக்கப்பட்டது. இவ்வாதத்திற்கும் அதன் முடிபினால் அமணர் சார்பினுக்கும் எல்லை கண்டு முடிக்க வேண்டுமென்பது அரசாங்க நிலையிற் றாம் மேற்கொண்ட கடமையினால் இவ்வாறு அமைச்சர் முன்வந்து கூறினார் என்க. இதற்கும் பிள்ளையாரது திருவுளப் பாங்கான சொற்செயல்களுக்கும் எவ்விதத் தொடர்புமில்லாமை கண்டுகொள்க; "வென்றிவேல் அமைச்சனார்தாம்" என்று அமைச்சுத் தன்மைபற்றிக் கூறியது மிக்கருத்து; "கோற்றெழில் திருத்தவல்ல குலச்சிறையார்" (2747) என்றும், "மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரியார் தாம்" (2704) என்றும் பின்னர்க் கூறும் கருத்தும் காண்க.

வேறு...செய்வது - வேறு - முன் வாதங்கள் முடிந்த நிலையின் அமையாது இது வேறுமொன்று கருதி; ஒன்றினும் - "இனி ஒன்று காண்பது" (2692) என்று அமணர் கேட்டில வாது ஒன்று என்பதனை வற்புறுத்தியபடி; ஒன்றினும் - உம்மை, முன் இருமுறை தோற்றபடி இவ்வொன்றினும் என இறந்தது தழுவியது, தோற்றார் செய்வது - தோற்றவர் அதன்மேற் செயலது; உட்படும் தண்டம்; ஒட்டி-(பந்தயம்) இகலிக் கூறி இசைந்து- ஒட்டுதல் - பணயம் வைத்தல்போல ஒன்றினை இசைதல், ஒட்டியே- ஒட்டியன்றிச் செய்யத்தகாது என வினையதனை விலக்குதலின் பிரிநிலை; தேற்றமுமாம். செய்வது - வாது செய்யக்கடவது. 797

2696. அங்கது கேட்டு நின்ற வமணரு மவர்மேற் சென்று
பொங்கிய வெகுளி கூரப் பொறாமைகா ரணமே யாகத்
தங்கள்வாய் சோர்ந்து தாமே "தனிவாதி லழிந்தோ மாகில்
வெங்கழு வேற்று வானிவ் வேந்தனே" என்று சொன்னார். எகூஅ

(இ - ள்) அங்கு ..கூர - அங்கு அதனைக் கேட்டுநின்ற அமணர்களும் அவ்வமைச்சர்மேல் போயின பொங்கி எழுந்த சினம் மிக்கூடுதலால்; பொறாமை...சோர்ந்து - பொறாமை என்னும் தீக்குணம் மிக்க காரணத்தால் தங்களுடைய வாய் சோர்ந்ததனால்; தனி வாதில்...என்று - இவ்வொரு வாதத்திலும் தோற்றோமானால் இவ்வரசனே எங்களை வெவ்விய கழுவில் ஏற்றுவானாவன் என்று; தாமே சொன்னார் - தாமே சொன்னார்கள். எகூஅ

(வி - ரை) அவர்மேற் சென்று பொங்கிய வெகுளி - இவ்வாறு தமது சூழ்ச்சிகளுக்கு ஒரு முடிவான எல்லை வகுத்ததனை எண்ணி அவர்மேற் சினங் கொண்டார்கள்.

பொறாமை காரணமேயாகத் தங்கள் வாய் சோர்ந்து - மேற்கூறும் வஞ்சினமாகிய ஒட்டுதலுக்குப் பொறாமையே காரணமாயிற்றன்றி, வேறெவரும் அவரை அவ்வாறு செலுத்தினாரிலர்; பொறாமை - சைவர்களது ஆக்கத்தைக் கண்டு பொறுக்கமாட்டாது அழுக்காறு படுதல்; "அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்று இல்லை ஒழுக்கம் இலான்கண் உயர்வு" போன்று; "அழுக்காறு உடையார்க் கதுசாலும் ஒன்னார், வழுக்கியும் கேடீன் பது"; "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத், தீயுழி யுய்த்து விடும்" (குறள்)

என்பன முதுமொழி யாதலின் ஈண்டுப் பொறுமையினால் தங்கள் கேட்டினைத் தாமே தேடி வரவழைத்துக்கொண்டனர் என்பதாம். இங்ஙனமாகவும் சமணர் கழுவேறிய செயலின்காரணத்தைஅமைச்சர்பாலதாகவோ, அரசன்பாலதாகவோ, அன்றிப்பிள்ளையார் பாலதாகவோ சுமத்திப் பழிசாற்றுதல் எதனைப் பெருந்தவறு! என்பதறியலாம். இவ் வாதம் ஒட்டிச் செய்வது என்று அமைச்சர் அறுதியிட்டனரே யன்றி இன்னபடி என்று வகுத்தாரிலர். தண்டியடிகள்பால் "நாங்கள் இவ்வூரிலிருக்கிலோம்" என்று ஒட்டிய இவர்களது சகோதர சமணர்கள்போலவே இவர்களும் தாமே ஒட்டினர் என்க.

**தனி...வேந்தனே என்று சொன்னார்** - தனி வாது - இனி ஒன்று என்று வேண்டிப் பெற்ற இவ்வோர் வாதம்; தனி - ஒப்பற்ற என்றலுமாம்; **வேந்தனே ஏற்று வான்** - வேந்தன் எங்களை இவ்வாறு முறை செய்வானாக; அதற்கு நாங்கள் இசைகின் றோம் என்று ஒட்டினர். இசைவு தங்கள்பாலதாகவும் அதனை இயற்றுதல்மட்டில் அரசன் பாலதாகவும் வைத்துக் கூறியது காண்க; **தாமே** - தம் பொறுப்பாகவே. 798

2697. மற்றவர் சொன்ன வார்த்தை கேட்டலு மலய மன்னன்
"செற்றத்தா லுரைத்தீர்; நுங்கள் செய்கையு மறந்தீ" ரென்று,
"பற்றிய பொருளி னோடு படர்புனல் வைகை யாற்றிற்
பொற்புற விடுவ தற்குப் போதுவ" தென்று கூற, எகூகூ

2698. பிள்ளையார் முன்னம் பைம்பொற் பீடத்தி னிழிந்து போந்து
தெள்ளுநீர்த் தரளப் பத்திச் சிவிகைமே லேறிச் சென்றார்;
வள்ளலா ரவர்தம் பின்பு மன்னன்மா வேறிச் சென்றான்;
உள்ளவா றுணர்கி லாதா ருணர்வுமா லேறிச் சென்றார். அ00

2697. (இ - ள்) மற்றவர்...மன்னன் - மற்ற அவ்வமணர்கள் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டதும் பொதிகைமலைக்கு அரசனான பாண்டியன்; செற்றத்தால... என்று-நீங்கள் வெகுளி மிகுதியினால் இவ்வாறு சொல்லிவிட்டீர்கள்; உங்கள் செய்கைகளையும் மறந்துவிட்டீர்கள் என்று கூறி; பற்றிய...கூற - உண்மைபற்றிய பொருளை உட்கொண்ட நும்தம் ஓலைகளை ஓடும் நீரினையுடைய வைகையாற்றில் அழகு பொருந்த விடுவதற்குச் செல்லுங்கள் என்று சொல்ல, எகூகூ

2698. (இ - ள்) பிள்ளையார்...சிவிகைமேல் ஏறிச் சென்றார் - பிள்ளையார் பசும்பொன்னாலியன்ற பீடத்தினின்றும் முன்னம் எழுந்து வெளியிற் போந்து தெளிந்த நீர்மையுடைய முத்து வரிசைகளையுடைய சிவிகையின்மேல் ஏறிச்சென்றருளினர்; வள்ளலார்...மா ஏறிச் சென்றான் - வள்ளலாராகிய அவர் பின்பு அரசன் குதிரையின்மேல் ஏறிச் சென்றான்; உள்ளவாறு...மாலேறிச் சென்றார் - உண்மையினை உள்ளபடி உணர்ந்தொழுகும் ஆற்றலில்லாதவர்களாகிய அமணர்கள் தம் உணர்வினில் மயக்கத்தினை மேற்கொண்டு சென்றனர். அ00

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2697. (வி - ரை) **மலயமன்னன்** - மலயம் - பொதிகை; இங்கு அந்த மலையினையுடைய பாண்டிய நாட்டைக் குறித்தது.

**உங்கள் செய்கை** - நீங்கள் முன்னே செய்த வஞ்சச் செயல்கள்; வஞ்சனை - பொய் - சூழ்ச்சி முதலிய தீமைகளில் மனமறிந்து நின்றமையால் அவற்றின் உண்மை நிலை காணப்படுமெவ்வாறு என்றபடி; **செய்கை** - இவ்வாறு ஒட்டும் செயலால் மேல் விளைவு என்ன என்பதனை நினைக்க மறந்தீர் என்றலுமாம்.

பற்றிய பொருளின் ஏடு - செயல் ஏட்டினிடமாகவும், முடிவு அதனைப் பற்றிய எழுத்தின் பொருள்மேலதாகவும் நின்றமையால் பற்றிய பொருளின ஏடு என்றார். பற்றிய - தொடர்ச்சியாற பொருந்திய ; பொருள் எழுத்தையும், எழுத்து ஏட்டினையு மாகப் பற்றிய.

போதுவது - பெயர். போதும் செயல் இனிச செயயக்கடவது என்றதாம்.

போதுக—என்பதும் பாடம். 799

2698. (வி - ரை) முன்னம் இழிந்து போந்து - "இனி வேற்று வாதென்?" என அழைததமையாலும், "நனறது செயவோம்" (2695) என்று ஏற்றருளி யமையாலும் பிள்ளையார் தாமே முன்னா எழுந்துபோந்தருளினா.

பைம்பொற் பீடம் - பிள்ளையாருக்காக மனனன இடுவிதத பீடம். "முழுமணி யணிப பொற்பீடம" (2644) ; "தமனியப பீடம்" (2650).

தெள்ளும் நீர்த்தாளம் - நீர் - நீர்மை ; தெள்ளும் - நூல்வலலோர் தெளிந்து மேற்கொளளும். பத்தி - வரிசை.

மா ஏறி - குதிரையினமேல் ஏறி.

உள்ளவாறு - உணமைநிலை இருககும வழியினை ; இரணடனுருபு தொக்கது.

உணர்வு மால் ஏறி - உணர்வு - அறிவு; மால் ஏறி - மயக்கம் மிக்கு ; பொருளல்லாததைப பொருள் எனறும, வெறறிபபா டலலாததனை வெறறிப்பாடு என்றும கொணடமையும, தோலவி வரும குணக்குறிகளை அன்னவென் றறியாமையும் ஈண்டு மால் - (மயககம) எனறா. உள்ளவா றறிகிலாதார் - எனறதுமிது.

மேல் ஏறிச் சென்றார் - மா ஏறிச் சென்றன் - மால் ஏறிச் சென்றார் - என மூவருக்கும மூவகையான ஏறறம் கூறியது அவ்வப பொருட்குறிபபுப் பெறநினற சொல்லணி. 800

2699. தென்னவன் வெப்புத தீர்நது செழுமணிக் கோயி னீங்கிப்
பின்னுற வணைந்த போது பிள்ளையார் பெருகுஞ் செல்வம்
மன்னிய மதுரை மூதூர் மறுகில்வந் தருளக் கண்டு
துன்னிய மாதர் மைந்தர் தொழுதுவே றிணைய சொன்னார். ௨௦௧

(இ - ள்) தென்னவன்...போது - பாணடியன் வெபபு நோய் நீஙகிச் செழிய அழகிய அரணமனையினினறும் புறப்படடுத தமது பின்னே பொருந்த அணைந்தபோது; பிள்ளையார்...கண்டு - பெருகுகினற செலவம நிலையாக நிறைந்த மதுரையாகிய பழம் பதியின் வீதியில் பிளளையார் எழுந்தருளி வருதலைக கணடு; துன்னிய...சொன் னார் - வந்து நெருங்கிய மாதாகளும மைந்தாகளும் வணஙகித ததமக்குத் தோன் றியவாறே வெவ்வேறு விதம்பட இததனமையான மொழிகளைச் சொல்ல லாயினர்.

(வி - ரை) செழுமணிக் கோயில் - அரசனுடைய அரண்மனை.

தென்னவன் - பின்னுற அணைந்தபோது - பிள்ளையார் வந்தருள - என்றது அரசன் பின்னும் பிள்ளையார் முனனுமாகப போநத முறையும், அரசன் பின்அணைந்த பின்பு பிள்ளையார் வீதியில் புறப்பட்ட காலமுறையும் குறிததபடி; பின்னுற-பின்பற்ற என்றதும் குறிப்பு. இவ்வாத முடிவில் பிள்ளையார் ஈந்தருளிய திருநீற்றினை முழுவதும அணிந்து புனிதனாய் உய்ந்த வரலாறும் காண்க (2755 - 2756).

பெருகும் செல்வம் மன்னிய மதுரை மூதூர் - அகையறகண்ணம்மையாரது அருள் நோக்கமாகிய அரசசெல்வம் நிலைபெற்று நிறைந்த பழவூர். இத்தன்மை என்றும்

நிலைபெறலும் பெருகியும் நிகழவது இன்றும் கண்கூடு. "பண்டு மின்று மென்று முள்ள பொருள்" (திருப்பல்லாண்டு) என்ற தன்மை இம்மூவருக்கும் பொருந்தும்.

**வந்தருள** - ஒருசொல்; வந்து அருள என்று பிரித்து வந்து நகர மாந்தர்க்குக் காட்சி தந்து அருள என்றலுமாம்; பின்னர் "மன்னனீ றணிந்தா னென்று மற்றவன் மதுரை வாழ்வார், தனனிகின் றூர்க ளெல்லாந் தூயநீ றணிந்து கொண்டார" (2755) என்னும்படி நகர மாந்தரும் அருள்பெறும் குறிப்பு.

**துன்னிய மாதர் மைந்தர் தொழுது**-பிள்ளையார் பின் அரசனும் அரசியாரும்மந்திரியாரும் எழுச்சியாக ஒருபுறமும, அமணர் கூட்டம் எண்ணாயிரம் ஒருபக்கமுமாக மிகப் பெரிய ஆரவாரமுடைய எழுச்சியானமையாலும, தெய்வத்தன்மை விளங்கிய வாதமும் அரசன நோய் நீங்கினமையும் ஆகிய பெருஞ் செயல்கள நகர முழுதும் பரவிவிட்டமையாலும் நகர மாந்தர் இவ்வெழுச்சியினையும, இதன விளைவாகிய முடிவினையும் காணும் ஆர்வத்துடன் எழுந்துவந்து மறுகில் கூடினார்கள்; அவருள் மாதர்களே முற்படும் இயல்பு காட்ட அவர்களை முன்வைத்தார். **தொழுது** - முன்னர் வேறுச் சமயம் நம்பின நிலையில இருந்தாராதலின் தொழாதார (2642) இப்போது அதனில நம்பிக்கை நீங்கிச் சைவமாகிய முன சார்பின நம்பிக்கை கொண்டமையின ஈண்டுத் தொழுது என்றார்; இடைப்பட்ட சிறுகால அளவே கின்றமையால் சமண நம்பிக்கை விரைவில் நீங்கவும் சைவநிலை முன்பு நீண்டநாட் பொருந்தியதாதலின விரைவிற் பற்றவும ஏதுவாயிற்று; இதனை இவர் மேற்கூறுவனவற்று லறிக.

**வேறு** - தத்தமக்கேற்றவாறு வெவ்வேறாக; **இனைய** - மேல் 2706 வரை எழு பாட்டுக்களிற் கூறுமாறு. இவற்றையெல்லாம் தொடர்புபடுத்திக் காட்டுதலுமாம்.

வந்தணைய—என்பதும் பாடம். 801

2700. "மீனவன் கொண்ட வெப்பை நீக்கிநம் விழுமந் தீர்த்த
ஞானசம் பந்த ரிந்த நாயனார் காணு" மென்பார்;
"பானறுங் குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளை யார்தாம்
மானசீ தேன்ன ஞடு வாழவந் தணைந்தா" ரென்பார். ௮0௨

(இ - ள்) **மீனவன்...காணுமென்பார்** - பாண்டியன கொண்ட வெப்புநோயினைத் தீர்த்து நமது வருத்தத்தைத் தீர்த்தருளிய திருஞானசம்பந்தர் இந்த நாயனார் பாருங்கள் என்று சொல்வார்கள்; **பால் நறும்...தாம** - பாலமணங் கமழும குதலைச்சொல் எழும் பவளம்போன்ற வாயினையுடைய பிள்ளையார்தாம்; **மானசீ...என்பார்** - பெருமையாய சிறப்பினையுடைய பாண்டியனது நாடு வாழும்பொருட்டு இங்கு வந்தணைந்தனர் என்று சொல்வார்கள்.

(வி - ரை) **கொண்ட வெப்பு** - தனது தீச்சார்பினால் தானே தேடிக்கொண்ட என்ற குறிப்புக் காண்க. தீமைக் குடன்பாடு செய்து அதன பயனாக வாங்கிக்கொண்ட என்று வாணிகக் குறிப்பும் காணக.

**மீனவன் வெப்பு நீக்கி நம் விழுமம் தீர்த்த** - என்றது அரசனுக்கும் குடிகளுக்கும் உள்ள உரிமைப்பாடு குறித்தது.

**ஞானசம்பந்தர் இந்த நாயனர் காணும்** - ஞானசம்பந்தர் என்ற பெயரால் அறியப்படுகின்றவர் இநதத் தலைவர்தான் பார்த்துக்கொள்ளுங்கள் என்று அறிந்தவர் அறியாதாரைத் தேற்றியது; பெயர் அளவாற் கேட்டறிந்து திருவுருவத்தைக் காணாது நின்றோர் பலராதலால் அவர்க்கு அறிவித்தபடி; பிள்ளையார மதுரையில் அன்று முன்னாளே எழுந்தருளினர். அப்போது திருக்கோயிலுக்கு வந்தருளியபோதும் அங்குநின்

றும் திருமடத்திற் கெழுந்தருளும்போது கண்டோர் சிலரே; பின்னர் அன்றிரவு அமணரது தீச்செயலால் நோய்மூள அதன்பொருட்டுத் திருக்கோயிலுக்குச் சென்று பின் அரண்மனைக்குள் புகுந்தருளியபோது கண்டோரும் மற்றும் சிலரே; அப்போது சமணசமயம் மூண்டு மாந்தரை மயக்கிநின்ற திண்ணிய இருள்நிலை யாதலின் மாந்தர் பலராகக் காண்பதும் பெரும்பொருளாகக் கருதுவதும் நிகழா; அன்று நோய் நீக்கிய நிலை பிள்ளையாரது அருளினால் திருநீற்றினால் நிகழ்ந்தது என்றும், அதன்மேல் அனலிற் பிள்ளையார் இட்ட ஏடு அழியாது நிலைபெற்றுச் சைவ மேன்மை சாற்றியது என்றும், இவ்விரண்டினும் அமணர் ஒட்டிக்கெட்டுத் தோல்வியுற்றனர் என்றும், அரசன் அவர்களை ஒதுக்கிய பின்னும் மூன்றாவது ஒருமுறை இறுதியாக ஏட்டினை நீரில் இட்டு உண்மை காணவும் இதிலும் தோல்வியுறின் கழுவேறுதற்கும் ஒட்டிப்போந்திருக்கின்றனர் என்றும் நிகழ்ந்த இச்செய்திகள் நகரம் முழுதும் கடுவேனிலிற் கடுங்காற்றிற் பரவும் காட்டுத்தீப்போலப் பரவிவிட்டமையின் இவ்வெழுச்சிகாண மக்கள் பெருங்கூட்டமாகத் திரண்டு கூடிவிட்டனர்; இவர்கள் முன் கூறியவாறு பிள்ளையாரது பெயரும் திருவுருவமும் கண்ட சிலர் காணாத பலருக்கும் அவரையும் அவர் பெருமைகளையும் அவரால் வெல்லப்பட்ட அமணரின் இழிவையும் பிறவற்றையும் அறிவுறுத்தும் இயல்பின் எழுவன இங்குக் கூறும் மொழிகள். மேல் ஆறு பாட்டுக்களினும் வருவனவும் இவ்வாறே இந்நிகழ்ச்சிகளின் பலபல பகுதிகளை எடுத்து மக்கள் தத்தமக்குத் தோன்றிய கருத்துக்களை எடுத்துக் கூறும் தன்மையும் காண்க.

முன்னர்க் கண்டவர் சிலராதலினாலும், சமண சமயக் கோட்பாட்டிற்பட்டு நின்ற நிலை நீங்காமையாலும் "பண்ணிய தவங்கள் என்கொல் - புண்ணிய மூர்த்தி வந்து மதுரையிற் புகுத" (2642) என்றமட்டில் அமைந்த நிலையினை ஒரு பாட்டிற் கூறிய ஆசிரியர், இங்கு மாதர் மைந்தர் பலரும் துன்னிய பெருந்திரளாகக் கூடிக் கண்டு சைவ வெற்றிப்பாடும் சமணரது இழிவும் அழிவும் அறிந்துகொண்ட நிலையிற் கூறுவன பலவாதலின் அத்திறம்பட ஏழு பாட்டுக்களிற் பலபடப் புகழ்ந்து கூறும் அமைதியும் கவித்திறமும் காண்க. கூறும் பொருளும் ஏற்றம்பெற அமைத்தருளுதலும் காண்க.

மானச்சீர் - பெருஞ் சிறப்பு; "பாண்டி நாடே பழம்பதி யாகவும்", "தென்பாண்டி நாடே தெளி" என்பனவாதி திருவாக்குக்களால் பேரருட் பெரியோர்களாற் போற்றப்படுதலும், இறைவர் எவ்வுயிர்க்கும் எளிவரும் பேரருளுடன் தோற்றம்பெற விளங்குதலுமாகிய சிறப்பு; பெருமக்களாற் போற்றப்படுதல் மானம் - பெருமை எனவும், இறைவர் எளிவரும் கருணை சீர் எனவும் கொள்க. "நாமன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர் போற்றும், பாமன்னு தொன்மைப் புகழ்பூண்டது" (968) என்று இத்தன்மை பற்றியே தொடக்கத்தில் ஆசிரியர் அறிவித்தருளியது காண்க.

தென்னன் நாடு - தென்னவனும் அவன் நாடும் என்ற குறிப்புமாம். நாடு வாழ் - நாட்டினைக் கூறியது அவ்வாழ்வு தங்களுக்கு வருதலால் தாம் பெறும் நலம் பற்றி. "வாழ்ந்தன கண்கள்" (2701) என்பது முதலியவை காண்க. "மணங் கண்டு வாழ்ந்தோ மென்பார்" (171); "நலமங் கலங்கள் கூறி மனிதருந் தேவ ராவார் கண்ணிமை யாது வாழ்த்தி" (புரா - 1238) முதலியவை காண்க.

வந்து - தாமே வந்தருளி; இத்தனை சீர்கேடுகளுக்குமிடையே கருணையினால் வந்தருளி என்றதும் குறிப்பு.

802

2701. "எரியிடை வாதிற் றோற்ற திவர்க்குநம் மருக" ரென்பார்;
"புரிசடை யண்ண லீறே பொருளெனக் கண்டோ" மென்பார்;

"பெருகொளி முத்தின் பைம்பொற் சிவிகைமேற் பிள்ளை யார்தாம்
வருமழ கென்னே" யென்பார்; "வாழ்ந்தன கண்க" ளென்பார்;

(இ - ள்) "எரியிடை...அருகர்" என்பார் - தீயிற செய்த வாதத்தில் நமது அமண குருமார் தோற்றது இவாக்கு என்று சொல்வார்கள; புரிசடை...கண்டோம் என்பார் - புரிசடையினையுடைய சிவபெருமானது திருநீறே மெய்ப்பொருளாவது என்பதனைக் கண்ணூரக் கண்டோம் என்று சொல்வார்கள; பெருகு ஒளி...என்னே என்பார் - பெருகும் ஒளியினையுடைய முத்து நிரைத்த பசும்பொனாலியன்ற சிவிகையின் மேலே பிள்ளையார் தாம் வருகின்ற அழகுதான் என்னே! என்று சொல்வார்கள்; வாழ்ந்தன கணகள் என்பார் - அககாட்சியைக் கண்டு நமது கணகள் வாழ்வடைந்தன என்று சொல்வார்கள்;

(வி - ரை) தோற்றது - தோல்வியுற்ற செயல் நிகழ்ந்தது. இவர்க்கு - இவரால்-குவ்வுருபு கருததாபபொருளில் வரும் மூன்றனுருபாக வந்தது. பகைப்பொருளில் வந்த நான்கனுருபாகவே கொளளினும் அமையும.

நம் அருகர் - இதுவரை மேம்பட்டு நமக்குக் குருமாராகி நின்றவர் என்ற உரிமை பற்றி நம் என்றாகள்.

நீறே பொருள் எனக் கண்டோம் - சுரவாதத்தால் நிச்சயமாகக் காட்டப்பட்ட உண்மையாதலின இவ்வாறு கூறினா. பொருள் - மெயப்பொருள்.

அழகு என்னே - என்னே - சொல்லவொண்ணாத அற்புதம் என்றபடி;

வாழ்ந்தன கண்கள் - வாழ்வாவது கண பெற்ற பயனபெறுதல்; "மண்ணெலாமுய்ய வந்த வள்ளலார் தம்மைக் கண்டு, கண்ணினுற பயன்கொண் டாாகள கன்னிநாட் டவர்க ளெல்லாம்" (2760) என்று மேல் இக்கருததை முற்றுவித்தல காண்க. "கண்ணினலவர் நல்விழாப் பொலிவுகண் டாதல்" உறுதிபபொருள் இரண்டனு ளொன்றுமென்று காட்டும் பொருள் ஈண்டும் ஒக்கும் என்க; (அவர் - அடியார் எனக் கொள்ளலுமாம்). 808

2702. "ஏதமே விளைந்த திந்த வடிகண்மா ரியல்பா" லென்பார்;
"நாதனு மால வாயி னம்பனே காணு" மென்பார்;
"போதமா வதுவு முக்கட் புராணனை யறிவ" தென்பார்;
"வேதமும் நீறு மாகி விடும்விடு மெங்கு" மென்பார்; அ0௪

(இ - ள்) ஏதமே...இயலபாலெனபாா - இந்த அமண குருமாரின் இயல்பினாலே தீமையே விளைந்தது என்று சொல்வார்கள்; நாதனும்...காணும் என்பார் - முழுமுதற் கடவுளாவார் திருவாலவாயில் எழுந்தருளியுள்ள நம்பனே என்று கண்டுகொள்ளுங்கள் என்று சொல்வார்கள்; போதமாவதுவும...அறிவது என்பார் - முக்கண்ணுடைய பழமையாகிய சிவபெருமானையறிவதுவே ஞானமாவது என்று சொல்வாாகள்; வேதமும்... எங்குமென்பார் - வேதமும் திருநீறுமே எங்கும் நிறைவுடையனவாகிப் பரவிவிடும் என்று சொல்வார்கள்;

(வி - ரை) இயல்பால் - அவர் தத்தம் இயல்புக்கேற்றவாறு செய்த தொழில்களால்;

நாதன் - தெய்வத் தன்மையின் நிறைவுள்ள தலைவர்.

நம்பன் - நம்பி அடையத்தக்கவன் என்பது சொற்பொருள்; இது காரண இடுகுறியாய்ச் சிவபெருமானையே உணர்த்தும்; நம்பி - (நம்பப்படுபவன்) என்றதுமிக்கருத்து.

நம்பி என்ற திருப்பதிகம் (நம்பிகள்) பார்க்க. ஏனைச் சிறுதெய்வங்களை நம்பி அடைபவர்களும், அவற்றாற் சிறுசிறு பயன்கள் பெறுபவர்களும் உண்டு. ஆனால் "மற்ற தெய்வங்கள் வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையும் செய்யும்; ஆதலா லவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே" (சித்தி) ; சண்டு அருகாறங் கைகொடுத்து அமணரைக் காத்துப பயன் உதவிய அருககடவுள் அவர்களை இப்போது கட்டாற்றில் விட்டுப போவது கண்டு மாதர் மைந்தர்கள் இவ்வாறு கூறினர். "ஏர்கொணமுக் குடையுந தாமும் எழுந்துகை காறிப் போக, ஆருளோ ரோடிக் காணக் கண்டனம்" (2535) என்று சமணர்களும் நகர மாநதர்களும் முன்னாக கண்ட கருத்திறமும் கருதுக.

புராணனை அறிவது - போதமாவது எனக. போதம் - முடிந்த ஞானம்; அனுபவ ஞானம். புராணன் - பழமைககெல்லாம் பழமையானவன. அறிவதுவே என்று பிரிநிலை ஏகாரம் விரிகக.

நம்பனே நாதன் - அவனை அவ்வாறறிந்து ஒழுததலே போதம் என்றதாம். இஃது அனல வாததநின் முடிவினால் மககள அறிந்துகொண்ட முடிபு.

எங்கும் வேதமும் நீறுமாகி விடும் விடும் - விடும் விடும் என்றது துணிவுப் பொருளில் வந்த அடுக்கு; ஆகிவிடும் - விடும் பகுதிப்பொருள் விகுதி; வேதமாகி விடுதல் - வேதநெறி தழைத்தோங்குதலையும், நீறுமாகிவிடுதல் - மிகுசைவத் துறை விளங்குதலையும் குறிததன ; எங்கும் - முன் அவை குன்றிச் சமணம் மிகக இடங்களில் எல்லாம், அதுபற்றி முன 2499 - 2500-ல அமணர் நிறைந்த நிலையிற் கூறப்பட்டதும், பின 2769-ல் வேதமும நீறுமாகித தூய்மையாககப்பட்ட நிலையிற் கூறப்படுவதும் காணக. இவ்வாறு பினவரும நிகழசசியினைத தம நுண்ணறிவினால் மதுரைநகர மாதர் மைநதர் முனனறிநது கூறும் திறம கருதுக. இரண்டாவது விடும் என்றதற்கு அமணர் செய்த மயக்கம நீங்கிவிடும என்றலுமாம.

விரவிடுமெங்கும்—எனபதும பாடம. 804

2703. "அடிகண்மார் முகங்க ளெல்லா மழிந்தன பாரீர்" ரென்பார்;
"கொடியவஞ் சனைக ளெல்லாங் குலைந்தன போலு" மென்பார்;
"வடிகொளவேன் மாறன் காதல மாறின வண்ண" மென்பார்;
"விடிவதாய் முடிந்த திந்த வெஞ்சம ணிருளு" மென்பார்; அ0டு

(இ - ள்) அடிகண்மார் ..பாரீர் என்பார் - சமண முனிவர்களின் முகங்களெல்லாம வாடிவிட்டன பாருங்கள் என்று சொலவார்கள் ; கொடிய...போலுமென்பார் - கொடிய வஞ்சனையால் கட்டிய மாயாசாலங்கள் எல்லாம் அழிந்துவிட்டன போலும் என்று சொல்வார்கள் ; வடிகொள...வண்ணமென்பார் - வடித்த வேலை ஏந்திய அரசன் (அடிகள்மேல வைத்திருந்த) பற்று மாறிவிட்ட வண்ணந்தான் என்னே அதிசயம்! என்று சொல்வார்கள்; விடிவதாய...இருளும் என்பார் - இந்தக் கொடிய சமணமாகிய இருளும் நீங்க இன்று புலர்ந்து விடிவதாய் முடிவதாயிற்று என்று சொல்வார்கள் ;

(வி - ரை) அடிகண்மார் முகங்களெல்லாம் அழிந்தன பாரீர் - மறுகில கூடிய பெருந்திரட்கூட்டத்தில மாதர் மைந்தர் ஒவ்வொரு கூட்டமும் பற்றிச் சிந்தித்துப் பலபடப் பேசுகின்றார்கள். முன்னர் முதலில் பிள்ளையாரது அழகிய அருள்பொலிந்த தோற்றம் கண்ட சிலர் அதுபற்றிக் கூறினர் ; அதன்பின் சிற்சிலர் முன் நிகழ்ந்த இரண்டு வாதங்களையும் அவற்றின் முடிபுகளையும் பற்றிச் சிந்தித்துப் பேசினர்கள் ; இங்கு வேறுசிலர் அமணரின் கொடிய வஞ்சனைகளையும் அவை அழிய, அவற்றுள்ளே சிக்குண்டு கிடந்த

அரசன் காதல் மாறுபட்ட நிலையினையும் சமண்மாயம் அழியும் நிலையினையும் எண்ணி மகிழ்ந்து கூறினர் ; இந்நிலைகள் இப்பாட்டாற் கூறப்பட்டன.

முகங்களழிந்தன - முகமழிதல அகத்தின் வாடிய நிலை முகத்திற றோன்றநின்ற குறிப்பு. முன்னர் இருமுறையும் தோல்வியுற்றமையும், வேந்தன் உண்மையறிந்து தங்கள் கட்டினின்றும் நீங்கியமையும், இனிவரும் வாதிலும் உண்மையாதல் வஞ்சத் தாதல் தாம வெற்றியடையமாட்டாத நிலைமையும், அதன் பிறகு தாமும் (கழுவேறித்) தமது சமயமும் மாயவேண்டிய நிலைமையும் எண்ணி வாடினா ; அழிந்தன - அழிந்த நிலைமையின. அழிந்தன - இறநதகாலம் பினனர் வரும் அழிவு இப்போதே வநது விட்ட உறுதி காட்டிறறு.

வஞ்சனைகள் - பொய்யினாலும் வஞ்சனையினாலும் செய்த சூழ்ச்சி (செயல)கள்; மாயாசாலஙகள் ; குலைதல் - நிலையழிதல. ஈண்டும் இறநதகாலம் உறுதியும் விரை வும் குறிததது ;

மாறன் காதல் மாறின வண்ணம் - அரசன அடிகளமேல் வைதத திண்ணிய காதல் இவ்வளவு விரைவில முழுதும் மாறினவணணமதான் எனன அதிசயம எனறது. மாறன்- மாறின - சொலலணி. மாறினவனுதலின் அக்குறிபபுபபட ஈணடு மாறன் என்று கூறினா ; என்ன அதிசயம் எனபது இசையெசசம்.

விடிவதாய்...இருளும் - இருள் - அதனையுடைய இரவுக்காயிறறு ; ஆகுபெயர்; சமணை இரவிருளாகக் கூறியது உருவகம்

விடிவதாய் முடிந்தது - இருள் - விடிவது - முடிவது - இரவு இருள் நீங்கிப பொழுது புலர்ந்தது ; ஏனையிருள்போல அழிவின்றி ஒதுங்கி நிற்பதன்றி இவவிருளின் செயல அழிந்து முடிவதாயிறறு என்பார் விடிவதாயிறறு எனறொழியாது இருள் முடிந் தது என்றா. விடிவதாய் - விடியற பொழுதாய் வர எனற குறிப்புமாம். சூரியனாகிய பிள்ளையார் வர என்றது இடததுககேறப வருவித் துரைத்துககொள்க ; முடிந்தது என இறந்தகாலத்தாற் கூறியது விரைவில் நிகழும் உறுதிபறறி. 805

2704. "நெருப்பினிற் றோற்றார் தாங்க ணீரில்வெல் வர்களோ?" வென்பார்;
"இருப்புநெஞ் சுடையா ரேனும் பிள்ளையார்க் கெதிரோ?" வென்பார் ;
"பருப்பொரு ளுணர்ந்தார் தாங்கள் படுவன பாரீ" ரென்பார்;
"மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரி யார்தா" மென்பார்;

(இ - ள்) நெருப்பினில...வெல்வர்களோ என்பா-தீயினை ஒட்டிச் செயத வாதத தில் தோற்ற இவர்கள் நீரிற செயயும் இவவாததிலவெறறி பெறுவாரகளோ? என்று சொல்வார்கள் ; இருப்பு...எதிரோ என்பார் - இநத அமணாகள இரும்பு போன்ற கடிய நெஞ்சுடையவர்களாயினும் பிள்ளையாாக்கு எதிராய் நிறக வல்லரோ ? என்று சொல்வாகள் ; பருபபொருள்...பாரீா என்பார் - நுணபொருளல்லாத பருபபொரு ளினை மட்டும் உணாந்த அவ்வளவில் அடஙகிய அமணா படஇருக்கும் முடிபினைப பாருங்கள் என்று சொலவார்கள் ; மருப்புடை....மந்திரியார்தாம் - கொம்புகளைப் போலக் கூரிய நீண்ட கழுமரங்களை மந்திரியாராகிய குலச்சிறையார் செய்விததனனர் என்று சொல்வாரகள் ; அ௦௬

(வி - ரை) முன் பாட்டுக்களிற் கூறிய கருத்துக்களன்றி, அமணர்களின்பாலன வாக எழுந்தனவாய் வேறு பலருடைய கூற்றாய் அமைந்தது இப்பாட்டு.

நெருப்பினில் தோற்றார் நீரில் வெல்வர்களோ-நெருப்பும் ஒரு பூதம்; அதுபோன்று நீரும் ஒரு பூதம் ; ஆதலின் ஒன்றிற் றோற்றார் மற்றொன்றில் வெல்வரோ என்பது.

தோற்றமுறையில் நீரைத் தனபால் வேறுபடுத்திக்கவும், ஒடுக்குமுறையில் அதனைத் தன்னின் ஒடுக்கவும் வல்லது தீ; ஆதலின் அதனில் தோல்வி நீரினில் தோல்வியை உள்ளிட்டதாம் என்க. இனி, வலிய நெருப்பினில் இவர்களை வென்று தோல்விபெறச் செய்த பிள்ளையார் அதனின் கீழதாய்க் குறைந்த வலிமையுடைய நீரினில் வெல்லாது விடுவரோ? வென்றேவிடுவர்-; ஆதலின் இவர்கள் வெல்வரோ என்று பிள்ளையாரைப் பற்றி உரைப்பதும் கருத்து; ஆனால் இப்பாட்டுக் கருத்துக்கள் முழுமையும் அமண அடிகளைப்பற்றியே எழுதலின் இவ்வாறு அவர் செயல்பற்றிக் கூறினர்.

இருப்பு நெஞ்சம் - இரும்புபோற் கடிய நெஞ்சம்; அன்பு கலவாத முழு வன்கண்மையுடைய மனம்; இருப்புநெஞ் சுடையார் - அமண அடிகணமார்; வஞ்சனை சித்திரித்துக் கொலையும் சூழ்த் துணிபவர்; உடையரேனும் - உம்மை சிறப்பு. எதிரோ - எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையராவரோ; எதிர்க்க வல்லவரோ? எதிர் அல்லா என வினா எதிர்மறை குறித்தது.

பருப்பொருள் உணர்ந்தார் - பசு தர்மங்களாகிய அறங்களை விதிக்கும் நூல்களை மட்டும் கற்று, அவற்றின் நுண்பொருளாகிய உள்ளுறையை அறியாதார்; பாவ புண்ணியங்களை உணராதார். இலிங்க புராணத் திருக்குறுந்தொகையும், "கங்கை யாடிலென்" என்பன முதலாக வரும் தனித் திருக்குறுந்தொகையும், பிறவும் பார்க்க; "பூசுநீறு சாந்தமெனப் புனைந்த பிரானுக்கான பணி, யாசிலாநல் லறமாவ தறிய வருமோ உமக்"கென்று தண்டியடிகள் புராணத்துள் (6) இந்நுட்பம் விளக்கப்பட்டதும், பிறவும் காண்க. இவ்வாறன்றி நுண்பொருளாவது இயற்கையினூடு இரண்டறக் கலந்துள்ள இறையின் உண்மை என்றுரைப்பாரும் உண்டு; இயற்கை என்ற சொல்வழக்குப் பொருளற்ற தொன்றென்பது முன்னரே கூறப்பட்டது. "அறியுமச்சமய நூலினளவினி லடங்கிச் சைவ, நெறியினிற் சித்தஞ் செல்லா நிலைமை" (2501); "அந்நூற் றன்மையுன்னிய மாந்தர், இதுவே பொருளெனத் தனிநிலை யறைதலின், வேற்றோர் பனுவலேற்றோர்க் கிசையா, மாறு பாடு கூறுவரதனுற, புறச்சமயங்கள் சிறப்பில வாகி, அருளின் யாந்தரை வெருளுற மயக்கி, யலைக்கத் தேரின் நிலையிற தீரும" (சங்கற்ப நிராகரணம் - பாயிரம்)

படுவன - அழிந்துபடும நிலைகள்.

மருப்புடைக் கழுக்கோல் - மருப்பு - கொம்புகள்; குத்திக் கொல்லும்படி கூரிய மான்கொம்பு முதலாயின. மருப்புடை - மருப்பின் தன்மையை உடைய. அது போலக் கூரிய; மானகொம்பினை நுனியிற் பதித்த எனபாருமுண்டு.

கழுக்கோல் செய்தார் - தோற்றால் கழுவேறுறுவான இம்மன்னனே என்று ஒட்டினராதலானும், தோற்பது நிச்சயமாதலானும, அதனபின ஒட்டியவாறே மன்னவன ஆணையிடின எண்ணாயிரவரையும் கழுவேற்ற அத்துணைக் கழுக்கள் வேண்டப்படுமாதலானும், முன் எச்சரிக்கையாக மந்திரியார் கழுக்களைச் செய்தனர் என்க; இவ்வாறன்றி இவ்வமணரைக் கழுவேற்றி யகற்றுதலில முனைந்தனர் அமைச்சர் என்ற பொருள்படக் கூறுவனவெல்லாம் பிழை என்க. 806

2705. "ஏடுகள் வைகை தன்னி லிடுவதற் கிணைந்தா" ரென்பார்;
"ஓடுநீ ருடன்சே லாது நிற்குமோ வோலை" யென்பார்;
"நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்ல" ரென்பார்;
"நாடெலாங் காண விங்கு நண்ணுவர் காணீர்" என்பார்; ௮0௭

(இ - ள்) இனி, நகரமாந்தருள் வேறுசிலர் இனி வரும் நிகழ்ச்சியினையும் அதன் விளைவையும் பற்றித் தங்கள் எண்ணங்களைச் செலுத்திப் பேசும் கூற்றாக அமைந்தது இப்பாட்டு.

(வி - ரை) ஏடுகள்-பிள்ளையாரும் சமண அடிகண்மாரும் தனித் தனி வேறாக இடுதலின் பன்மையாற் கூறினார் ; ஏடு - இங்கு, ஓலை - இதழ் - என்ற பொருளில் வந்தது.

ஓடு நீருடன் செலாது நிற்குமோ ஓலை - தத்தம் ஏடுகளை வைகையில் இடச் செல்கின்றனர் என்று ஒருவர் கூற, அதைத் தொடர்ந்து இன்னொருவர் அவ்வாறு இடுதலில் நீருடன் செலாது தங்கிநிற்கும் ஏடு மெய்ப்பொருள் பரிபபது என்றும் அதுவே வெற்றியாமென்றும், இதில் தோலவியுற்றவர் கழுவிலேற்றி முறைசெய்யப்படுவர் என்றும் அறியப்படுதலின், அவ்வாறு எந்த ஏடுதானுக-ஓலை என்பதன் இயல்பு நீரில் மிதப்பதும் அந்நீருடன் ஒழுகிச் செல்வதுமாகும் , ஆதலின் இவ்விருவர் ஏடுகள் எதுதான் ஓடுநீருடன் செல்லாது இட்ட இடத்தில் தங்கிநிற்க வல்லதாம் என்று ஐயுற்றுக் கூறினார் ; இஃது இந்நாளிலும் உலகியற் பொருளியல்புபற்றிக் கூறும் பெரும்பான்மையோர் கூற்றுதல் காண்க

நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்லர் - இது மேலும் ஒருவர் முன்கூறிய ஐயக் கூற்றினைத் தொடர்ந்துகொண்டு நீர் கூறியது ஒக்கும் ; ஆனால் இங்கு அவ்வாறு ஓடுநீருடன் செலாது நிற்கும் எமது ஓலை என்று துணிந்து இசைந்த பிள்ளையாரது இயல்பினை நீர் அறிந்திலீர் ; அவர் ஏனையோர் பெறும் ஞானம்போலன்றி எப்பொருளும் என்றும் எங்கும் நீடிய ஞானம் பெற்றவர் என்பது முன்னர் இங்கு நிகழ்ந்த இரு நிகழ்ச்சிகளாலும், முன் வரலாற்றாலும் அறிந்தனம் ; ஆதலின் அவர் அவ்வாறு தமது ஓலையை ஓடுநீருடனே சென்றுவிடாமல் நிறுத்தி வைக்கவும் வல்லவர் என்றார். சடப்பொருளி னியல்புபற்றி உரைத்ததாக்கு இங்கு ஞானத்தின் வலிமைபற்றி உரைக்கப்பட்டது. சித்துப் பொருளாகிய ஞானமே சடப்பொருளை இயக்குதலால் இவ்வாறு கூறினர். பிள்ளையாரது பல்வேறு அருளிப்பாடுகளிலும் இவ்வாறு ஐயங்கொண்டு அபசாரப்படும் இந்நாள் மாக்கள் இவ்வுண்மை கண்டு தெளிவார்களாக.

நிறுத்தவும் வல்லர் - இங்கு அமணர் சமய உண்மை காணக் கேட்டு ஒட்டிய நிலை, ஓலை நீருடன் செல்லாது இட்ட இடத்தில் நிற்பதேயாகும். அதனையே இங்கு இந் நகர மாந்தரும் வினாவியும் விடுத்தும் பேசினர். ஆனால், இட்ட ஏடு அம்மட்டோடு நின்றுவிடாது ஓடும் நீரை எதிர்த்தும் செல்லவைத்தது பிள்ளையார் பெற்றருளிய அருண்ஞானத்தின் பெருமையாம் என்பதை இவ்விருதிறத்தவரும் அப்பொழுது அறிந்திலர் ; எதிர்பாராதவருமல்லர். அவர் இட்ட ஏடு "மருவுறு பிறவி யாற்றின் மாதவர் மனஞ்சென் றற்போல் - எதிர்ந்துநீர் கிழித்துப் போகும்" (2744) தன்மை பின் நிகழ்ச்சியின் அறிவிக்க அறிகுவர் ; ஆண்டுக் கூறிய உவமையினால் அதன் காரணமும் இயல்பும் உணர்த்தியபடியும் காண்க. ஏனையோர் மனஞ் சொற் செயல்கள் பிறவி வழியே செல்ல, மாதவர் மன முதலாயின பிறவியை எதிர்ந்து செல்வனவாதலின் அத்தகைய பிள்ளையார் இட்ட ஏடும் நீரினையெதிர்ந்து சென்றது என விளக்கிய குறிப்பும் காண்க.

நாடெலாங் காண இங்கு நண்ணுவர் காணீர் - முன் கூறியவர் பிள்ளையார் தமது நீடிய ஞானத்தால் ஓலையை ஓடுநீருடன் செலாது நிறுத்த வல்லவர் என்றார். அதனைத் தொடர்ந்து மேலும் ஒருவர் அவ்வாறு நிறுத்தி வெற்றி பெற்றவராய் நாட்டவராகிய நாம் எல்லாம் காணும்படி சிறிது நேரத்தில் இங்கு வருவர் ; அதை நீங்கள் பாருங்கள் என்றார். இங்கு நீடிய ஞானம் பெற்றாராகிய அவர் என்ற எழுவாய் வருவிக்க.

காண நண்ணுவர் - அவரது வெற்றியின் பின், இங்கு நாம் காணச் செல்லும் இவ் வமணர் ஓட்டியபடி மன்னவனால் முறை செய்யப்பெற்றாக கழுவேறப்பட்டு ஒழிவர்; ஆதலின் அவர்கள் மீள இங்கு நண்ணுமாறில்லை; இவர் ஒருவரே நாடுகாண நண்ணுவர் என்ற குறிப்பும் காண்க. இருதிறத்தாருள் இவர் நண்ணுவார் என்றமையால் அவர் நண்ணுமை அருத்தாபத்தியளவையால் தானே போதருதல் காண்க.

நாடெலாங் காண - அவரையும் அவர் ஓலையினை நிறுத்திய வெற்றியையும் யாவரும் தேற்றமாய் உணருமபடி; "நீரால் விளக்கிட்டமை நீணா டறியுமன்றே" (தேவா) "காட்டா றறிய" (1898)

காணீர் - இன்னும் சிறிதுபோதில நீங்களே கண்ணுற காணலாம் என்று உறுதி பட அவர் அறிந்துகொண்ட திலை. 807

2706 "தோற்றவர் கழுவி லேறத் துணிவதே யருகர்?" என்பார்;
"ஆற்றிய வருளின் மேன்மைப் பிள்ளையார்க் கழகி!" தென்பார்;
"நீற்றினா றென்னன் றீங்கு நீங்கிய வண்ணங் கண்டார்
போற்றுவா ரெல்லாஞ் சைவ நெறியினைப் போற்று" மென்பார்;

(இ - ள்) தோற்றவர்...அருகர் என்பார் - தோல்வியுற்றவர்கள் கழுவில் ஏற என்று அமணர்கள் துணியலாமா? என்று சொல்வார்கள்; ஆற்றிய ..அழகிது என்பார் - செய்து காட்டிய அருளின் மேன்மையினையுடைய பிள்ளையாருக்கு இஃது அழகேயாகும் என்று சொல்வார்கள்; நீற்றினால்...போற்றுவார் - திருநீற்றினாலே பாண்டியர் தீங்கினின்றும் நீங்கிய தன்மையைக் கண்டவர்கள் யாவரும் சைவத் திறத்தினைப் போற்றுவார்கள் (ஆதலால்); எல்லாம் சைவ நெறியினைப் போற்றும் என்பார் - எல்லாம் சைவ நெறியினையே போற்றுங்கள் என்று சொல்வார்கள்;

(வி - ரை) அருகர் "தோற்றவர் கழுவில் ஏற"த் துணிவதே என்க. ஏகாரம் வினா. துணிந்திருக்கக் கூடாது என்று எதிர்மறை குறித்தது. "தனிவாதில் அழிந்தோ மாகில கழுவேறுவான் வேந்தனே" (2696) என்று தோற்றவர் செய்வதனை ஒட்டியதனைக் குறித்து மாந்தர் இரங்கிக் கூறியது. தோற்றவர் - இவ்வா தொன்றினும் தோல்வியுறுபவர். முன்னமே தோல்வியுற்றவரா யிருந்து அதனால் அறிவுறாமல் இவ் வாறு துணிவதோ? என்றலுமாம்.

இப்பாட்டு இவ்வாதத்தின் முடிவாக அருகர் தோற்று கழுவிலேற ஒட்டியதனை யும், அதனையும் பிள்ளையார் ஏற்றுப் போந்தருளியதனையும், அதன் முடிவில் மாந்தர் செய்தக்கதனையும் எண்ணிய மற்றும் பல மாந்தர்களின் கூற்றாக அமைந்தது. பலபல மாந்தர் பலபலவாறாகவும் எண்ணியவற்றுள் இது முடிந்ததில் பற்றியதாதலின், தொடர்வின் முடிவில கூறப்பட்ட அமைதி காண்க.

அருளின் ஆற்றிய மேன்மைப் பிள்ளையார்க்கு இஃது அழகு - என்க; அருளின் ஆற்றிய மேன்மை - இதுவரையும செய்தருளிய செயல்கள் யாவும், இகல் - செற்றம் - முதலிய தீக்குணமொன்றும பற்றாது, அருளினை மேற்கொண்டே செய்த மேம்பாடு; அமணர்கள் தமது திருமடத்தில் தீயினை நாடியிட்டபோதும் அவர்களை முனியாது அத் தீ, முறைவழுவிய அரசனிடம் பையவே சென்று ஆக என்று ஆசிபுரிந்து அவனை வினை அனுபவிக்கச் செய்து தீரத்து ஆட்கொள்ளும் அருளும், வாதிற் புகுமுன் அதனை அஞ்சிய திருவருட் குறிப்பினை ஒருமுறைக் கிருமுறையும் வினவி யறிந்தபின்பே அச் சவையுட் புகுந்த அருளும், ஆணையும் அரசன் அமணர்க்கிடங்கொடாது மறுத்தகாலை அவனைத் தடுத்து அவர்களுக்கு வாதத்திற்கு இடந் தந்தருளிய அருளும், பிறவும்

ஈண்டுக் கருதியே மாந்தர்கள் இவ்வாறு புகழ்ந்து அருளின் ஆற்றிய மேன்மை என்றனர்.

பிள்ளையார்க்கு இஃது அழகு - என்றது அவ்வாறாயின், இறகுச் சமணர் தோற்பது நிச்சயமாதலறிந்தும் அவர்களை கழுவேறநின்ற இவ்வாதத்தில் முற்படுவது அந்த அருளுடன் பொருந்துமோ? என்று வினவினாருக்கு அற்றன்று; இஃது அதற்கு மாறன்று; அழகேயாம் என்று விடுத்தவாறு; அமணர்களை இவ்வாதத்தின் இடையில் இடங்கொடாது மறுத்தல அழகன்று; அது சைவவுண்மையினை முற்றும் காட்டாதாதலின் அரசனையும் இவ்வாதத்தில் இசைவித்தருளினர் பிள்ளையார்; கழுவேற ஒட்டி இசைந்தது அமணர் தாமே செய்துகொண்ட செயல; பின்னர் அவ்வாறே அவர்களைக் கழுவேற்றி முறைசெய்வது அரசனது ஆணைச்செயல். இவ்விரண்டிலும் பிள்ளையார்க்கு எவ்வித தொடர்புமில்லை எனபனவாதி நியாயங்களை உட்கொண்டு இவ்வாறு அறிவுடை மாந்தர் இஃது இழுக்காவதன்றி அழகேயாம என்று முடித்தனர். அழகு-அழகேயன்றிப பிறிதில்லை என்று பிரிநிலை ஏகாரம் தொக்கது.

நீற்றினால் - போற்றுவார் - திருநீற்றின் உண்மைத் திறத்தினாலே அரசன் அமணர்களால் வந்த தீங்குகள் எல்லாவற்றினின்றும நீங்கின உண்மையினைக் கண்டவர்கள் அவ் வண்ணங்களைபபற்றி எடுத்துப போற்றுவார்கள்; எல்லாம் என்பதனை முன் உரைத்தவாறன்றி ஈண்டுக் கூட்டி எலலாத தீங்கும் என்றும, எல்லா வண்ணமும் என்றும் உரைபபினு மமையும், கண்டார் - பிள்ளையாரது அருளின மேன்மையும், இஃது அவர்க்கு இழுக்காதலன்றி அழகாமாறும் கண்டு போற்றுவர் என்பதும் குறிப்பு.

எல்லாம் சைவ நெறியினைப் போற்றும் - ஆதலால் எல்லா வகையாலும் முழு உண்மையும் உடைய சைவ நெறியினைப போற்றுங்கள்; சைவநெறி - சைவநெறியின் வாய்மை; ஆதலால் என்பது சொல்லெச்சம்; எல்லாமுடைய சைவநெறி என்பது அந்நெறியிலடையப்படும் கடவுளாகிய சிவனது முழுமுதற்றன்மை. "இறைவனாவான்ஞான மெல்லா மெல்லா முதன்மையனுக கிரகமெல்லா மியல்புடையா னியம்பு, மறைகளா கமங்களி னாலறிவெல் லாநதோறும் மரபினவழி வருவோர்க்கும் வாராதோர்க்கும், முறைமையி னாலின்பத் துன்பங்கொ டுத்தலாலே முதன்மையெலா மறிந்து முயங்கி ரண்டு போகத், திறமதனால வினையறுக்குஞ் செய்தியாலே சேருமனுக் கிரகமெலாங் காணுதநாஞ் சிவற்கே" (சித்தி - 8-17) என்ற கருத்துக் காண்க.

கண்டார் போற்றுவார்—என்பது இராமநாதச் செட்டியார் கண்ட பாடம். 808

2707. இன்னன விரண்டு பாலு மீண்டின ரெடுத்துச் சொல்ல,
மின்னொளி மணிப்பொற் காம்பின் வெண்குடை மீது போதப்
பன்மணிச் சிவிகை தன்மேற் பஞ்சவ னாட்டு ளோர்க்கு
நன்னெறி காட்ட வந்தார் நான்மறை வாழ வந்தார். அ0கூ

(இ - ள்) இன்னன...சொல்ல - இத்தகைய மொழிகளைப் பிள்ளையார் செல்லும் மறுகில் இருபக்கங்களிலும் நெருங்கிய மாந்தர்கள் எடுத்துச் சொல்ல; மின்னொளி... போத - மின்போன்ற ஒளியினையுடைய அழகிய பொற்காம்பினையுடைய வெண்குடை மேலே நிழற்ற; பன்மணிச் சிவிகைமீது - பல மணிகளையுடைய முத்துச்சிவிகையின் மேல் எழுந்தருளி; பஞ்சவன்...வந்தார் - பாண்டியனது நாட்டிலுள்ளவர்களுக்கு நன்னெறியினைக் காட்டும் பொருட்டு வந்தருளினர்; நான்கு மறைகளும் வாழும் பொருட்டு வந்தருளினர்.

(வி - ரை) இரண்டுபாலும் ஈண்டினர் - அத்தெருவின் இரு பக்கங்களிலும் நெருங்கிவந்த மாந்தர்; இரண்டுபாலும் - "அன்னிய மாதர் மைந்தர்" (2699) என்ற இருபாலாருமாக என்றலுமாம்.

எடுத்துச் சொல்ல - நிகழ்ச்சியின் ஒவ்வோர் பகுதிகளைப்பற்றி முன் கூறியவாறு எடுத்துப் பேசு.

வெண்குடை - திருவரத்துறையீசர் அருளிய முத்துக்குடை. வெண்குடை அரச அடையாள அங்கங்களுள் ஒன்றாகும் குறிப்பும் ஈண்டுத் தருவது. சிவிகையும் அவ ரருளிய அக்குறிப்புத் தருவது.

பஞ்சவன் நாட்டுளோர்க்கு நன்னெறி காட்ட வந்தார் - "கன்னிநாடு அமணர் தம் மாற் கட்டழிந்து" (2511); "ஈனநியி னெறியி லழுந்திய நாடு" (2557) என்று வரு வனவாற்றால் அரசனை புயவிக்கும்வகையால் நாடுய்யச் செய்யப் பிள்ளையார் போந்தருளி னர் என்பதாம்.

சொல்ல - போத - வந்தார் - என்று வினைமுடிபு கொள்க.

நான்மறை வாழ வந்தார் - மறைகள் வாழும் பொருட்டு வந்தவராகிய - அவதரித் தவராகிய - பிள்ளையார் என்க. வந்தார் - வந்தவர்; பெயர்; வினைமுற்றாகவே கொண் டும் பிள்ளையார் என்ற எழுவாய் வருவித்தும், காட்டவும் வந்தார்; அதனால் மறை வாழ வும் வந்தார் என்றுரைப்பினு மமையும். "மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார்" (கலியர் புரா - 11) எனபுழிப்போல.

காட்ட - வாழ - காட்டும்பொருட்டு - வாழும்பொருட்டு என்க.

இன்னன - முன் 2699-ல் "வேறு இனைய சொன்னார்" என்று தொடங்கி என்பார் என இருபத்தைந்து வகையான கருத்துக்களை எடுத்துச் சொல்வார்களாகி, இவ்வாறு கூற - என்று இந்த ஒன்பது பாட்டுக்களையும் தொடர்புபடுத்தி உரைத்துக் கொள்க. 809

2708. "தென்றமிழ் விளங்க வந்த திருக்கழு மலத்தோன் வந்தான;
மன்றுளா ரளித்த ஞான வட்டில்வண் கையன் வந்தான்;
வென்றுல குய்ய மீள வைகையில் வெல்வான் வந்தான்";
என்றுபன் மணிச்சின் னங்க ளெண்டிசை நெருங்கி யேங்க, ௮௧௦

2709. பன்மணி முரசஞ் சூழ்ந்த பல்லிய மியம்பப் பின்னே
தென்னவன் தேவி யாரு முடன்செலத், திரண்டு செல்லும
புன்னெறி யமணர் வேறோ புடைவரப் புகலி வேந்தர்
மன்னிய வைகை யாற்றின் கரையிசை மருவ வந்தார். ௮௧௧

2708. (இ - ள்) தென்றமிழ...வந்தான - அழகிய தமிழ் விளங்கும்படி வந்த திருக்கழுமலத்தோராகிய பிள்ளையார் எழுந்தருளினார்; மன்றுளார...கையன் வந்தான - அம்பலவாணர் அளித்தருளிய சிவஞானப்பால் நிறைந்த பொற்கிண்ணத்தையுடைய வண்மை பொருந்திய திருக்கரத்தையுடைய பிள்ளையார் எழுந்தருளினார்; வென்று... வெல்வான் வந்தான - முன்னம் சுரவாதத்திலும் அனல்வாதத்திலும் வெற்றிபெற்று உல குய்யும்படி மீள வைகையாற்றில் செய்யப்படும் இவ்வாதத்திலும் வெல்பவராகிய பிள்ளை யார் எழுந்தருளினார்; என்று...ஏங்க - என்று இவ்வாறு பல அழகிய முத்துச் சின் னங்கள் எட்டுத் திசைகளிலும் நெருங்கி ஒலிக்கவும், ௮௧௦

(இ - ள்) பன்மணி...இயம்ப - பல அழகிய முரசங்களுடன் இணைந்த பலவகை வாத்தியங்கள் முழங்க; பின்னே...உடன் செல - தமது பின்பு அரசனும் மாதேவியாரும் சேர்ந்து வரவும; திரண்டு...புடைவர - கூட்டமாகச் செல்லும் புன்மை நெறியில் நின்ற அமணர்கள் வேறு ஒரு பக்கத்தில் வரவும; (இவ்வாறு) புகலி வேந்தர்...மருவ வந்தார் - சீகாழி வேந்தராகிய பிள்ளையார் நிலைபெற்ற வையையாற்றின் கரையின்மேல பொருந்தும்படி எழுந்தருளி வந்தார். ௮௧௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2708. (வி - ரை) தென்தமிழ் விளங்க வந்த - தென் - அழகு; அழகாவது என்றும் அழியாத இளமையோடிருத்தலும், மாறாத அழகினைச் செய்யும் ஞானமயமாகிச் சிவனடிச் சாரபு தருதலும் ஆம். "தென்தமிழ்ப் பயனாயுள்ள திருத்தொண்டத் தொகைமுன் பாட" (358); பிள்ளையார் இந்தச் சிவஞானத் தமிழ் பரவும்படியே அவதரித்தவராதல "அசைவில்செழுந் தமிழ் வழக்கே யயலவழக்கின் றுறைவெல்ல" (1922) என முதற்கண்ணே அருளப்பட்டது காண்க; "பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத், துறவியெனுந் தோற்றோணி கண்டீர்......சம்பந்தன், தனமாலை ஞானத் தமிழ்" (ஆளு. பிள் - மும்மணிக்கோவை - ௧௧.)

அளித்த ஞான வட்டில் - அளித்த சிவஞானப் பாலைக்கொண்ட பொற்கிண்ணத்தை ஏந்திய; ஞானப் பாலினையுடைய வட்டிலை ஞானவட்டில் என்றார்.

தமிழ் விளங்க - என்றும், ஞானவட்டில் வண்கை - என்றும் கூறியது தமிழின் மூலம் ஞானத்தைப் பரப்பி அஞ்ஞான இருளாகிய சமணத்தை வென்றார்; மேலும் வெல்வார் என்றபடி.

வென்று - மீள வெல்வான் வந்தான் என்று அடுத்து எடுத்துக் கூறியபடி.

வென்று...வெல்வான் வந்தான் - முன்னே வென்றுவிட்டதனோடு மீளவும் வெல்வார் என்று சின்னங்கள் பின்வரும் வெற்றியை விளம்பின; வெல்வான் - வெல்லும்பொருட்டு என்றலுமாம்.

உலகுய்ய என்பதனை உலகுய்ய வென்று என்றும, உலகுய்ய வெல்வான் என்றும் ஈரிடத்தும் கூட்டுக. உலகுய்ய - இவ்வாற்றினால பிள்ளையார்க்கு ஆகவேண்டிய நலமொன்றுமில்லை. உலகுய்ய - வந்தான் என்று கூட்டி உரைத்தலுமாம்.

பன்மணிச் சின்னங்கள் - அரத்துறைநாத ரருளிய முத்துச் சின்னம் - தாரை - காளம். இவையும அரசாங்க அடையாளம. சிவனருளிய சிவிகையும குடையும் சின்னமும் என்ற மூன்றும் உரியபடி இங்குத் தொழிற்பட்டதனை முறையே கூறியது காண்க.

ஏங்குதல் - மிக்க ஓசைபட எடுத்தியம்புதல; மரபு வழக்கு.

ஏங்க - உடன்செல - புடைவர - வந்தார் - என வரும் பாட்டுடன் முடிக்க. 810

2709. (வி - ரை) பன்மணி முரசம் சூழ்ந்த பல்லிய மியம்ப - இவை அரசன் வரும் வீதி எழுச்சியைக் குறிக்க முழங்கி வரும் அரசனது வாத்தியங்கள்; முன்கூறிய சின்னங்களினின்றும் வேறு பிரித்து அரசனையும் மாதேவியாரையும் சார முன்வைத் தோதியதும் இவை இயம்பப் பின்னே தென்னனும் தேவியாரும் வர என்றதும் இக் கருத்து.

பின்னே - பிள்ளையார் பின்பு; பணிகின்ற நிலையிற் பின்பற்றி என்ற குறிப்புமாம். வீதியில் ஒரு பக்கத்தில் பிள்ளையாரும பரிசனங்களும் அரசனும் மாதேவியாருமாகவும், மற்றொரு பக்கத்தில் வேறு கூட்டமாய அமணருமாகவும் போந்தனர்.

**தென்னனும் தேவியாரும் உடன் செல** - இருவரும் ஒருங்கு வர; அரண்மனையில் அரசனது நோய் நீங்கிய அளவும் மாதேவியாரும் மந்திரியாரும் அரசனதுநேர் உடன்பாடின்றித் தாமே முற்பட்டு நின்று காரியஞ் செய்யவேண்டியதாயிற்று. அதன் மேல் நிகழ்ந்த அனல்வாதமும், இனி நடக்கவுள்ள புனல்வாதமும் அரசன் அவையினர் முன் நடைபெற்று அரசனது நேர் அரசகாரியமாயின. இவற்றுள் மாதேவியார் உடனிருத்தல் வேண்டப்படுவ தின்றாயினும், முன்னர் அரண்மனையில் அவையின் முன் அனல்வாதத்தில் உடனிருந்தமையும், ஈண்டு வைகைக் கரைக்கு உடன் வந்தமையும், அரச காரியங்கள் அரசனும் அரசியாரும் உடனிருந்து இயற்றும் முன்னாள் அரசாங்க வழக்கின் மரபு குறித்தது. இது முன்னாளின் கல்வெட்டுக்கள் பலவற்றாலும் அறியத் தக்கது.* அவ்வாறு அரச காரியங்களில் உடனிருப்பவும் அரசன் சமணச் சார்பு கொண் டொழுகிய முன்னாட் டொடங்கிச் சைவசமயம்பற்றிய அரச காரியங்களில் இருவரும் உடன் இல்லாது வேறாய் நின்றமையால், இங்கு அதனிலும் இருவரும் உடனிருந்து செல்லுதலை விதந்து கூறினார். உடன் - உடனாக; இணைந்து; ஒருசேர.

**திரண்டு செல்லும் புன்னெறி யமணர்** - அமணருள் அரசனவையில் நின்ற சிலரேயன்றிப் புறத்து நின்ற ஏனையோரும் திரண்டு எண்ணிறந்தவர்களாகக் கூடியவர்கள் என்க.

**வேறோர் புடை வர** - வீதியில் பிள்ளையாருடன் பின்வரும் சைவத் திருக்கூட்டத்துடன் சேர்தலில்லாது வேறு ஒரு பக்கமாக அமணர் வர; அவ்வாறு சார்தலும் விதியில்லாமையால் வேறோர் புடை வந்தனர்.

**மன்னிய** - புகழாலும் சிவச்சார்பு பெற்ற புண்ணியத்தாலும் நிலைபெற்ற; மீனாட்சியம்மையார் திருமணத்தில் குண்டோதரனுக்காக இறைவரது ஆணைப்படிக் கங்கையே வைகையாறாக வந்தது என்பது திருவிளையாடற் புராணத்தா லறியலாம். இதன் கரையில் இறைவர் மண்சுமந்த திருவிளையாடல் நிகழ்ந்தது. "அணியார் வைகைத் திருக்கோட்டினின்றதோர் திறமுந் தோன்றும்" (தாண் - பூவணம்) என்று இதனைத் தமிழ்மறையும் போற்றியது.

**கரைமிசை மருவ** - கரையின் மேலே பொருந்தும்படி; மிசை மருவ - என்பது (ஓலை) மேற்சென்று பொருந்த என்ற குறிப்புமுடைத் தின்றது. 811

2710. கார்கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளி ருள்ளஞ்
சீர்கெழு கணவன் றன்பால் விரைவுறச் செல்லு மாபோல்
நீர்கெழு பெளவ நோக்கி நிரைதிரை யிரைத்துச் செல்லும்
பார்கெழு புகழின் மிக்க பண்புடை வைகை யாறு.   ௮௧௨

(இ - ள்) **கார்கெழு.. செல்லுமாபோல்** - கார்காலம் வந்தபோது விருப்பம் மிக்க மகளிரது மனம் சிறப்புடைய தமது கணவனிடம் விரைந்து செல்லுமாபோல; **பார்கெழு...ஆறு** - உலகில் புகழினால் மிக்க பண்புடைய வைகையாறு; **நீர்கெழு... செல்லும்** - நீர் மிக்க கடலை நோக்கி வரிசையாகிய அலைகளினால் ஆரவாரித்துச் செல்லும்.

---

* I பகுதி பக்கம் ௩௩௩ - மனுச் சரிதம் கண்ட கல்வெட்டு. வரிகள் 10 - 11. "திரிபுவன முழுதுடையா ளிவன்திரு வுளத்தருள் முழுதுடையாளென உடனிருப்பச் செம்பொன் வீரசிம்மாசனத்து" என வருதலும், பிறவும் காண்க.

**(வி - ரை)** இப்பாட்டு ஐயம்.* உவமை இந்த இடத்துக்கு ஏற்றதாகத் தோன்றுமையும், மகளிர் என்ற பன்மையும் கணவன் என்ற ஒருமையும் ஆக மயங்குதலும் உன்னுக; வைகை கடலுடன் சேராமையும் கருதுக. "கடல் ஒருவர்க்கு முதவாத வுவரியென, மடுத்தறியாப் புனல்வைகை" (வாதவூ. உப. பட.) என்ற திருவிளையாடற் புராணக் கருத்துக் காண்க. இப்பாட்டின் கருத்து "ஆற்றினீர் கடுகவோடும்" (2711) என்று மேற்பாட்டிற் கூறப்படுவதும் கருதுக.

**கார்கெழு பருவம்** - காரகாலம் - இதுவரை ஆற்றியிருந்த சிறப்புப்பற்றி மகளிர் என்று பன்மையிற் கூறினார் என்றும், பன்மையாகவே கொள்ளினும் "ஏவல் இளைய வா தாய்வயிறு கரிப்ப" என்பதிறபோலத் தனித்தனிக் கணவன்பால் எனறலுமாம் எனறும், ஆறுகள் எல்லாம கடலநோக்கிச செல்லும் பொதுவியல்புபற்றிக் கூறினர் என்றும் இங்கு அமைதி காணபாருமுணடு. கறபொடு பொருந்திக் கணவன்சொற் பிழையாது இல்லிருநது நலலறஞ் செயதல மகளிரது இயறகை, முலலையாதலின் அது முறகூறப்பட்டது. எனவே முல்லை என்ற சொற்குப பொருள் இருத்தலாயிற்று" (தொல் - பொருள் -அக-5 - )நச்சினாககினியா உரை; "காரு மாலையும் முல்லை" என்பது சூத்திரம்; (ஷை - 6)

**உள்ளங் கணவன்பால் விரைவுறச் செல்லுதல்** -"பினவரும் கூடலாகிய குறிஞ்சித் திணையொழுக்கம் நிகழும்பொருட்டு; புணாதலின்றி இலலறம் நிகழாமையின்" என்பா நச்சினார்க்கினியா; "விரவுற" எனபதும பாடம். "மகளிா உளளம் செலவதறகும் வைகை விரைநது செல்வதற்கும காாபபருவம் ஒபபக் காரணமாகும் குறிபபும் காண்க.

**நீர்கெழு பௌவம் நோக்கி - செல்லும்** - "பள்ளந்தா ழுறுபுனலில் கீழ்மேலாக" (திருவா) என்றபடி கீழ்நோக்கிச் செல்லும் நீர் மிக்க விரைவுடன் செலலுதல் குறிப்பு. நோக்கிச்-செல்லும்-என்றதனால் நோக்கமாகச் செல்லும் அளவேயன்றி அது கைகூடுவதில்லை என்ற குறிப்புப்போலும்.

**நிரை - திரை - இரைத்து** - நிரை - வரிசையாக; திரை - அலைகளினால்; **இரைத்தல்** - ஓசைமிகுதல; நிரை திரை இரைத்தல் - காமுறு மகளிா உள்ளம் விரைவும் அலைவும் பதைபபும் பொருந்தும பண்புககு உவமை.

**செல்லுமாபோல் - செல்லும்** - வினைபறறிய உவமம். 812

2711\. ஆற்றினீர் கடுக வோடு மருங்குற வரச ணோக்கி,
"நீற்றணி திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளை யாரும
வேற்றுரு வருகர் நீரும் விதித்தவே டிடுக" வென்றான்;
"தோற்றவர் தோலா" ரென்று முன்னுறத் துணிந்திட் டார்கள். ௮௧௩

**(இ - ள்)** ஆற்றின்நீா...கடுக ஓடும் மருஙகு உற - (முன் கூறியவாறு பிள்ளையாரும் யாவரும்) ஆற்றில் நீா வேகமாகச செலலும் இடத்தின் பக்கத்தைச் சேர; "நீற்றணி...இடுக" என்றான் - திருநீற்றின அழகு விளங்கிய நிறைமதி போன்ற பிள்ளையாரும், அதனின் வேறாகிய உருவுடைய அருகாகளாகிய நீங்களும் இசைந்தபடி அவ்வவர் ஏடுகளை இடுகள் என்று சொன்னான்; தோற்றவா...துணிந்திட்டார்கள் - "முன் தோற்றவர்கள் பின்னும் தோலாாகள்" என்று உட்கொண்டு முந்திக்கொள்வதற்கு அருகர் துணிந்தனர்.

---

*எனது "சேக்கிழார்" பக்கம் உககூ பார்க்க.

(வி - ரை) **ஆற்றின் நீர் கடுக ஓடும் மருங்கு உற** - பிள்ளையாரும் பிறரும் முன் பாட்டிற் கரைமிசை மருவ வந்தமை கூறினார். இதனுக் கரையைக் கடந்து மணல்வழி உட்சென்று ஆற்றில் நீர் வேகமாய் ஓடும் இடத்தின் பக்கம் சேர்ந்தமை கூறினார். **ஆற்றின்** - ஆற்றின் பரப்புகளுள்; **கடுக** - வேகமாக; **நீர் ஓடும் மருங்கு** - நீர் செல்லும் இடம்; **உற** - இருதிறத்தவரும் பொருந்த.

**நீற்றணி திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளையாரும்** - திருநீற்றினாலே தான் உய்ந்தமையால் அதனால் நிறைந்த திருக்கோலமே நாயனாரது பெருந் திருக்கோலமாக அரசனைக் கவர்ந்தது என்பது குறிப்பு. **நிறைமதி** - முழுமதி; **மதி** - அறிவு - ஞானம் - என்று கொண்டு அருள்ஞான நிறைவுடைய என்றலுமாம். இதுது இனிப் பாண்டியனுக்கு ஞானோபதேசம் செய்யப் புகுகின்றமையால் முழுஞானமுடையராய ஆசாரியரிலக்கணம் முழுதும் பெற்றவர் என்ற குறிப்பும்பெற வைத்தார் என்க. "நீற்றணி விளங்கு மேனி" (2693) என்றதும் ஆண்டுக் கூறியனவும் பார்க்க.

**நிறைமதி - மதி** - இரட்டுற மொழிதலால் சந்திரன் என்ற பொருளில் "கலைவளர் மதியே" (990); "மதிக்கொழுந்தை" (2626) என்றும், "நிலத்திடை வானின் நின்று நீளிருள் நீக்க வந்த, கலைசெழுந் திங்கள் போலுங் கவுணியர்" (2649) என்றும் ஆண்டு அந்நிலையின் முழுமை குறிக்க "நிறைமதி" என்றும் கூறிய கவிநயமும் உட்குறிப்பும் கண்டுகொள்க. அமுதகலைகள் நிரம்பித் தூய்மை செய்து பிறவிவெப்பத்தை மாற்றத் தண்ணொளி பரப்பித் தண்ணமை தந்து அண்டமெல்லாம் பரந்து திருநீற்றினொளி தழைத்தலின் மதியை உவமித்தார். **நீற்றணி திகழ்ந்த** என்றதனுடன் புணர்த்தி ஓதியது மிக்க கருத்து; நீற்றணி திகழ்தலின் நிறைமதி போன்றனர் என்ற குறிப்பும் காண்க. "தோற்று மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே, சாற்று மின்பமுந் தண்மையுந் தந்துபோ, யாற்ற வண்டமெ லாம்பரந் தண்ணல்வெண், ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா" (308) என்றும், "திருநீற்றுத் தொண்டர்குழா மிருதிறமுஞ் சேர்ந்த போதி, விரண்டுநில வின்கடல்க ளொன்றாகி" (1498) என்றும் கூறிய கருத்துக்கள் காண்க.

**வேற்றுரு** - நீற்றணி திகழ்தற்கு வேறாகிய உரு என்பது; வேறுபாடு உடையது என்றலுமாம்; வேறுபாடாவது "புரட்டரைக் காணு கண்வாய் பேசாதப் பேய்கள் ளோடே" (திருவிசைப்பா) என்றபடி காணத்தகாத நிலை; வேற்றுமை செய்யும் என்ற குறிப்புமாம். இவர்களது உருவே பிள்ளையாரது அருள்பெறு முன் இதற்கு செய்யு முருவாக அரசன் மயங்கிய முன்னை நிலையும் இங்குக் கண்ட மாறுபாடும் கருதுக. இதன் காரணம் 2717-ல் கூறுதல் காண்க.

**விதித்த** - ஓட்டி யிசைவுபூண்ட; **விதித்தல்** - நியமித்துக்கொள்ளுதல்.

**தோற்றவர் தோலார்** - முன்னே தோற்றவர் மேலும் தோற்கமாட்டார். இஃது உலகியல் நிலையினைவைத்து எண்ணியது. துன்பவின்பங்கள் மாறிவரும் நிலையும், சோதிடநூற் றுணிபு நிலையும், பிறவும் மனத்துட் கொண்டனர். **என்று** - என்று கருதி.

**முன்னுற** - முந்திக்கொள்ள; **துணிந்திடல்** - ஒருசொல்.

**இடு** - பகுதிப்பொருள் விகுதி. **துணிந்திட்டார்கள்** - துணிந்தார்; இதற்கு இவ்வாறன்றித் தம் கையிலிருக்கும் சமயநூல்களை யிட்டார்கள் என்று உரைத்தனர் முன்னுரைகாரர். ஏடு எழுதியிடுதல் மேல்வரும் பாட்டிற் கூறப்படுதலின் அது பொருளன்றென்க.

**திகழும்**—என்பதும் பாடம்.

2712. படுபொரு ளின்றி நெல்லிற் பதடிபோ லுள்ளி லார்மெய்
யடுபவர் பொருளை "யத்தி நாத்தி"யென் றெழுதி யாற்றிற்
கடுகிய புனலைக் கண்டு மவாவினாற் கையி லேடு
விடுதலும் விரைந்து கொண்டு வேலைமேற் படர்ந்த தன்றே. அகசு

(இ - ள்) படுபொருள் இன்றி - உள்ளே உண்மை தோன்றும் பொருள் இல்லாததால்; நெல்லிற் பதடிபோல் - நெற்பதர்போல; உள்ளிலார் - மெய்ம்மையாகிய உள்ளீடில்லாத அமணர்; மெய் அடுபவர் - மெய்ப்பொருளைப் பொய்ப்பொருள் என்று கூறுவோராய; பொருளை அத்தி நாத்தி என்று எழுதி - ஆருகதநூலுட் கூறும் பொருளின் தொகுதியை அத்தி நாத்தி என்று ஏட்டில் எழுதி; யாற்றில்...கண்டும் - ஆற்றில் விரைந்து ஓடும் நீரினைக் கண்டும்; கையில் ஏடு அவாவினால் விடுதலும் - கையிற் கொண்ட ஏட்டினைப் பேராசையினாலே விடுதலும்; விரைந்து...அன்றே - அப்பொழுதே அதனைக்கொண்டு வேலையின் முகநோக்கி விரைந்து சென்றது.

(வி - ரை) படு பொருள் - உள்ளிருந்து தோன்றுதற் காதாரமாகிய உயிர்ப் பொருள்.

இன்றி - இல்லாமையால்; பதடி - பதர்.

உள் இலார் - உள் - உட்பொருள்; உண்மை.

மெய் அடுபவர் - உண்மையை மறுப்பவராகி; வினைமுற்றெச்சம்.

மெய் அடுபவர் அத்திநாத்தி என்றெழுதி - அத்தி - உள்ளது - உண்டு; நாத்தி - இல்லாதது - இல்லை; எனவே உள்ளது என்றதனைத் தாமே உடன்மறுத்துக் கூறுபவர் என்பதாம். அத்தி நாத்தி - அமணர்களது மூலமந்திரம்.

ஆற்றிற் கடுகிய புனல் - வேலைமேற் படர்ந்தது - இந்த இரண்டு கருத்துக்களையும் முன்பாட்டில் கூறியது காண்க.

கடுகிய - கடுகிச் சென்ற; விரைந்த. கண்டும் பார்த்தும். உம்மை சிறப்பு. புனலையும் பார்த்தனர்; அது கடுகிச் சென்றதையும் பார்த்தனர்; அவ்வாறு கண்டும் அமைந்துவிடாது விடுத்தனர். முன்னர் எரியும் தீயைக் கண்டு இது நம் ஏட்டினை எரித்துவிடும் என்றறியாது இட்டுத் தோல்வியுற்றனர். அதுபோலவே இங்குப் புனலும் கடுகியது கண்டும், இது ஏட்டினை உடன்கொண்டு இழுத்துச் சென்றேவிடும் என்றறியாது என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மையாகி உரைப்பினு மமையும்; இப்பொருளில் தீ எரிந்ததுபோலப் புனல் கடுகியது கண்டும் என்க.

அவாவினால் - அவா - தகாத ஆசை; பேராசை என்ப. ஆசை வெட்கமறியாது என்பது பழமொழி. ஒரு தோல்வி கண்டபோது அதுகொண் டமைந்துவிடாது மேலும் மேலும் தோல்வியைத் தேடிக்கொள்வதனால் நாணமில்லாது முயலுதல் அவாவினால் வருவது. இக்கருத்தேபற்றிப் பின்னர் "நாணிலா வமணர் தம்மை நட்டாற்றில் விட்டுப் போக" (2714) என்பது காண்க.

கையில் ஏடு - கையிற் கொண்ட ஏடு; ஏட்டைப் புனலில் விடுதலும் என்று விரித்துக் கொள்க.

வேலைமேற் படர்ந்தது அன்றே - வேலை மேல் - வேலையை நோக்கி. வேலை - கடல்; மேல் - முகமாக.

வேலை - காரியம் என்று கொண்டு புனல் தன்னுட்பட்ட பொருள்களை ஈர்த்துச் செல்லும் இயல்புடையதாதலின் தன் வேலையைச் செய்தது என்ற தொனிக்குறிப்பும்

படக் கூறியதும் காண்க. இழுத்துச் சென்ற புனலைப் பற்றிய இக்கருத்தினையே தொடர்ந்து பின்னர் "கட்டாறறில் விட்டுப போக" என்று ஈர்த்துச் செல்லப் பட்ட ஏட்டினைப்பற்றிக் கூறுவது காணக. மெய்அடுபவர் - உடல் வருத்தும் செயல் களைத் (சுடுபாறை கிடத்தல் - மயிர பறித்தல்) தவமென்று செய்பவர்என்ற குறிப்பு மாம்.

இனி, ஈண்டு, உள்இலார் - (முன் உற்ற தோல்வியால்) உள்ளம் அழிந்தவர் என்றும், மெய்அடுபவர் - உண்மையை கொல்பவர் என்றும், கையில் ஏடு - கை - ஒழுக்கம் எனக் கொண்டு ஒழுக்க நிலையற்ற பொருள் கொண்ட ஏடு என்றும் குறிப்புக் கள் காண்பர் திரு. வ. சு செ அவர்கள்.

படர்ந்தது - படர்தல் - செல்லுதல் ; அப்புனல் என்ற எழுவாய் அவாயநிலையான் வந்தது. அன்றே - அதுபொழுதே. 814

2713. ஆறுகொண் டோடு மேட்டைத் தொடர்ந்தெதி ரணைப்பார் போலத்
தேறுமெய் யுணர்வி லாதார் கரைமிசை யோடிச் சென்றார்
பாறுமப் பொருண்மேற் கொண்ட பட்டிகை யெட்டா தங்கு
நூறுவிற் கிடைக்கு முன்னே போனது நோக்கிக் காணார். அகடு

(இ - ள்) ஆறு...போல - அவ்வாறு-அவ்-ஆறு-ஈர்த்துக்கொண்டு ஓடும் ஏட்டினைத் தொடர்ந்துபோய் எதிரே ஓடாமல் அணைப்பவர்போல ; தேறும்...சென்றார் - தெளி யும் உண்மையறிவு இல்லாத அமணர் ஆற்றின் கரையின்மேல் ஓடிச் சென்றனர் ; பாறும்...பட்டிகை - அந்த அழியும் பொருளை மேற்கொண்ட அவ்வேடு ; எட்டாது - கிட்டாது ; அங்கு...போனது - அங்குக் கீழ்நோக்கி நூறு விற்கிடை அளவு தூரத் தின் எல்லைக்குமேல் போய்விட்டது ; நோக்கிக் காணார் - அவ்வெல்லையில் கண்ணால் பார்க்கவும் மாட்டாராயினர்.

(வி - ரை) ஏடு எதிர் அணைப்பார்போல - கரைமிசை ஓடிவந்தார் - ஆற்றுடன் ஓடிய ஏட்டினை எதிர்சென்று அணைத்துக்கொண்டு வருபவர்போலக் கரையின்மேல் வந் தார்கள். திகைப்பினால் தாம் செய்வ தின்னதென் றறியாது இவ்வாறு செய்தனர்;

தேறுமெய் உணர்விலாதார் - என்ற கருத்துமது. தேறித் தெளியத்தக்க உண்மை யில் உணர்வு. தமது முன்னைய அறிவினறியும் இதுவரை நிகழ்ந்த பலவற்றாலாயினும் உண்மை அறிந்துகொள்ள மாட்டாதாரானாகிய அமணர்.

பாறுதல் - அழிதல் ; அப்பொருள் - அத்திநாத்தி என்ற மந்திரம். உண்மையின் முன் நிற்கலாற்றாமையின் அழியும் என்றார்.

மேற்கொண்ட - மேலே பொறிக்கப்பெற்ற - எழுதப்பட்ட.

பட்டிகை - ஓலை. "பட்டோலை தீட்டும படிபோற்றி" (போற்றிப்பஃ றொடை 38) ; பட்டிகை - தோணி என்று கொண்டு இங்கு ஏட்டைக் குறித்தது என்பாருமுண்டு.

நூறு விற்கிடை - விற்கிடை - ஒரு அளவை ; வில் கிடக்கும் தூரம். நூறு விற் கிடை - சிறு பொருள்கள் கண்மறையும் தூரம்.

நூறு விற்கிடைக்கு முன்னே போனது நோக்கிக் காணார் - போனது - போயிற் றதலின் அதனைக் கூர்ந்து நோக்கியும் காணுதாராயினர் ; நோக்கி - நோக்கியும் ; சிறப்பும்மை விரிக்க ; போனது - போயினமையால் அதனை ; நோக்கி - கூர்ந்து பார்த்தும்.

விற்கிடக்கை-நோக்கிச் சென்றார்—என்பனவும் பாடங்கள். 815

2714. காணவு மெய்தா வண்ணங் கடலின்மேற் செல்லு மேடு
நாணிலா வமணர் தம்மை நட்டாற்றில் விட்டுப் போகச்
சேணிடைச் சென்று நின்றார்; சிதறினார்; திகைத்தார்; மன்னன்
ஆணையின் வழுவ மாட்டா தஞ்சுவா ரணைய மீண்டார். அகசு

(இ - ள்) காணவும்...ஏடு - காணபதறகும கிடைக்காதபடி கடலின் முகமாக நோக்கிச் செல்லும் அந்த ஏடு; நாணிலா...போக - நாணம் இல்லாத அமணர்களை நட்டாற்றிலே கைவிட்டு அகன்று போயிறறுக; சேணிடை...மீண்டார் - (அவ்வமணர்) தூரத்தே சென்றார்களும், பலவாறும சிதறுண்டார்களும், திகைபபடைந்தவர்களும் ஆகி, அரசனது ஆணையில் தபபமாட்டாது அஞ்சுவாராய அவன் பக்கத்தில் மீண்டுவந்து சேர்ந்தார்கள்.

(வி - ரை) காணவும் எய்தாவண்ணம் - எதிர்சென்று அணைப்பார்போலக் கரையின்மேல் ஓடிய அமணருககு அவர்கள் கையில அணைக்கக் கிட்டாததோடு, காணவும் என்று உம்மை இறநதது தழுவிய எசசவுமமை.

கடலின் மேல் - கடலினை நோககி அதன முகமாக. கடல் உள்ள திக்கு மட்டும் குறிததது.

நாணிலா அமணர் - "தோறகவும் ஆசை நீஙகா' (2693); "அவாவினால்" (2712) என்ற கருத்துக்களைத தொடாநது முடிததவாறு; மும்முறையும் தோல்வியே பெற்று முடிந்தனர்; தங்கெஞ் சறியவே பொய்யும் வஞ்சமும் செய்ததனோடு ஒருமுறை தோல்வியுற்றமையால் அறிவு பெறறு நலம் தேடிக்கொள்ளாது மீளமீளத் தோற்று மானமுமிழந்தனர் என்றவை குறிப்பு.

நட்டாற்றில் விட்டுப் போக - "நம்பினோரை நட்டாற்றில் விடுதல்" என்பது பொய்யராகிய கீழோராந் தன்மை குறிக்கும் பழமொழி. அதுபோல இவர்கள் நம்பிய பொய்ப்பொருள் பொதிந்த ஏடு, நம்பும் உண்மைப் பொருளின்மையால் நடு ஆற்றிலே விட்டு ஓடிவிட்டது; பழமொழியில உருவகததால வநத நட்டாறு என்பது - (நடு ஆறு) இங்கு உணமை - உருவகம் இரணடு பொருளிலும் பொருந்தியது என்று நகைச் சுவைபடக் கூறியது காணக. நட்டாறு - நடுஆறு என்பது நட்டாறு என வந்தது புறனடையாறகொள்க. ஆறுநடு என்பதாம். உணமையில ஆற்றின் நடுவில் அமணரை அவர் நம்பிய ஏடு கைவிட்டுச் சென்றது என்பதாம்.

சேணிடை...திகைத்தார் - சேணிற்றல் - சிதறுதல் - திகைத்தல் - மிக நம்பி எதிர்பார்த்த நிலைக்கு முறறும் மாறாய்ச சடுதியில் நோநத பெருந்துன்பந் தரும் ஏமாற்றத்தால் வரும் நிகழ்ச்சிகள்; இதன் விளைவாக அவர்கள் ஒட்டியபடி அரசாணை தம்மைக் கழுவேற்றி அழிக்கும் என்ற எண்ணததால் இவை நிகழ்ந்தன; மேற்பாட்டில் "வெருவுற்று நடுங்கித் தம்பால ஈறுவந தெய்திற் றென்றே" (2714) என்பதனால் இவை, ஏடு கைவிட்டதனாலன்றி, அதன் விளைவுபறறிய எணணததாலாயின என்க.

சேணிடை-சென்று நின்றார் - பெருநீஙகு விளையுமிடத்தினின்ற நீங்கி நிற்பார் போல என்பது.

சிதறுதல் - தொடர்பின்றிப பல பக்கமும் சிதறுணடு ஓடுதல். திகைத்தல் ஒன்றும் தோன்றாது மனந்தடுமாறி நிற்றல். நின்றார் முதலிய மூன்றும் முற்றெச்சங்கள். அஞ்சுவார் - அச்சத்துடன் - அஞ்சுவாராய்.

அணைய - நீருடன் சென்ற ஏட்டினை அணைப்பார்போன்று கரைமிசை ஓடிய தூரத்தினின்று மன்னவனிருந்த இடத்தினை அணைய; சார - இனி அவன் செய்யும்

ஆணையினையும், அதன்படி கழுத்தற்றி நிரையினையும், கழுவேறியபின் வரும் அவ்வவ் வினைப் போக நுகர்ச்சிகளையும முறையில் அணைய என்ற குறிப்புமாம்.

மீண்டார் - தமது அன்முறைபற்றிகளினின்றும் இப்பிறவியில் மீட்சி பெற்றனர்; அவற்றை இனிச் செய்யமாட்டாராய் மீண்டனர் என்பதும் குறிப்பு. ஆணையின் - இன் நீக்கப்பொருளில் வந்த ஐந்தனுருபு. ஆணையினால் என்று மூன்றனுருபாகக் கொண்டு அரசனது ஆணை தம்மை விடாது பற்றும என்ற காரணத்தால் சேண்சென்று விடாமலும் சிதறி ஓடாமலும் அணைய மீண்டார் என்றலுமாம்.

ஆணையும் வழுவமாட்டா தஞ்சுவாரடைய—என்பதும் பாடம். 816

2715. வேறொரு செயலி லாதார் வெருவுற்று நடுங்கித் தம்பால்
ஈறுவந் தெய்திற் றென்றே மன்னவ னெதிர்வந் தெய்தி,
ஊறுடை நெஞ்சி லச்சம் வெளிப்பட வொளிப்பார் போன்று
"மாறுகொண் டவரு மிட்டால் வந்தது காணு" மென்றார். ௮௧௭

(இ - ள்) வேறொரு ...நடுங்கி - வேறு செயல ஒன்றும இலலாதவர்களாகிய அமணர்கள் வெருக்கொண்டு நடுங்கி; தம்பால்...எய்தி - தமக்கு முடிவு வந்துவிட்டதென்றே துணிந்த அரசன் முன்பு வந்து சேர்ந்து; ஊறு உடை...போன்று - புண்பட்ட தமது நெஞ்சில் பயம வெளிப்பட்டு வர அதனை மறைப்பார்போல; மாறு... என்றார் - "மாறுகொண்ட பிள்ளையாரும ஏட்டினை இட்டால அதன பின்னை வரும் முடிவினைக் காணுங்கள்" என்று சொன்னார்கள்.

(வி - ரை) வேறொரு செயல் இலாதார் - வேறு செயல் ஒன்றும என்க; செயல்- செயத்தக்கது; செய்யக்கூடியது. முற்றும்மை தொக்கது.

வெருவுற்று - வெருவுதல - சடுதியில வரும் அபாயத் தோற்றத்தால வரும் மனநிகழ்ச்சி. "வெருக்கொண்டாற போலழுவா குறிப்பயல" (1952).

என்றே - ஏகாரம் தேற்றம் எனவே துணிந்து.

தம்பால் ஈறுவந்து எய்திற்று - தம்பால் - நான்கனுருபின பொருளில் வந்தது; தமக்கு. ஈறு - முடிவுகாலம், சாங்காலம்.

ஊறு உடை நெஞ்சில் அச்சம் வெளிப்பட - ஊறு - மூன்று முறையும தோல்வியும், வாய் சோர்ந்து கழுவிலேற ஒட்டிய நிலையும, பறறிய எண்ணம்; உடை-உடைய - ஈறு கெட்ட பெயரெச்சம; ஈறு வரும என்ற எண்ணத்தால் நெஞ்சம் கெட்டதனால் இங்குப் பெயரெச்சமும ஈறு கெட்டது. ஊறு உடை - ஈறு வரும என்ற எண்ணத்தால் - ஊற்றினால் - உடைந்த எனறலுமாம.

ஒளிப்பார் போன்று - என்றார் - நெஞ்சினின்றும் வெளியே அச்சக்குறி காட்ட அதனை மறைப்பவாபோல "மாறு...காணும்" எனறார ஒளித்தலாவது தமக்கு வரும முடிவுபற்றிய எண்ணத்தையும அதன் விளைவாகிய மெய்ப்பாடுகளையும் புறத்தில தோறறாமல் இம்மொழிகளால் மறைத்தல; இம்மொழிகளால் இன்னும் வாதம முடியாதது போலவும் அதனால் முடிவு நிச்சயமிலலாததுபோலவும பேசுதல.

மாறு...வந்தது காணும் - மாறுகொள்ளுதல் - தங்களை எதிர்த்துநிற்றல். இட்டால் வந்தது காணும் - அவரும ஏட்டினை நீரில இட்டால அதுவும் ஒருவேளை ஓட்டிய படி அங்கு நில்லாது நீரினோடு சென்றுவிடுமாகில தோல்வி யிருபுறமுமாகு மாதலின் அதன் பின்பே நாங்கள் தோற்றமை நிச்சயிக்கவேண்டும எனபது குறிப்பு. இதனால் தமது தோல்வியும் அழிவும நிச்சயம் என்று மனத்தன் துணிந்துகொண்ட நிலையினையும்,

அதனால் சேர்ந்த மெய்ப்பாடுகளையும் மறைத்தமை காண்க. காணும் - அரசனையும் மந்திரியாரையும் நோக்கிச் சமணா கூறியது. காணும் - செய்யுமென்னும் வாய்ப்பாட்டு முற்று முன்னிலை ஏவற பன்மைக்கணணும் அருகி வருதல், "நீர் ஆக்கியவிக் கருவிவினைத்தாரும்" (2348) என்றாற்போலவனவற்றிற காண்க. மறைப்பார் போன்று - மறைக்க முயன்றாகளேயன்றி மறைக்கக கூடவில்லை என்பது குறிப்பு.

மாறுகோண்டிடநம்...கண்டும் என்பது பாடமாயின் பிள்ளையாரை நோக்கி அருகர்கள் உரைத்ததாக உரைத்துக்கொள்க. 817

2716. மாசுசே ரமண ரெல்லா மதியினின் மயங்கிக் கூற
ஆசிலா நெறியிற் சேர்ந்த வரசனு மவரை விட்டுத்
தேசுடைப் பிள்ளை யார்தந் திருக்குறிப் பதனை நோக்கப்
பாசுரம் பாட லுற்றார் பரசம யங்கள் பாற. அகஅ

(இ - ள்) மாசு...கூற - அழுக்கு மிகுந்த அமணர்கள் எல்லாரும் (முன் கூறியபடி) மதிமயஙகிக் கூற ; ஆசிலா...விட்டு - குறறததை நீககும நெறியில் சேர்ந்த அரசனும் அவ்வமணாகளை விட்டு ; தேசுடை...நோகக - (சிவஞான) ஒளியுடைய ஆளுடைய பிள்ளையாருடைய திருவுள்ளக குறிபபு யாதோ என்று தெரியும்படி அவரை நோக்க ; பாசுரம்...பாற - பரசமயஙகளால நோநத மயக்கம அழியும்படி திருபபாசுரததினைப் பாடியருளலுற்றனா.

(வி - ரை) மாசு சேர் - மாசு - அகத்தும் புறத்தும் மிகச்சேர்ந்த அழுக்கு. உண் மாசு - உண்மைஞான மின்மையானும், பொய - வஞ்சனை முதலிய தீக்குணஙகளுண்மையானும் மிகுவதாயிறறு ; புறமாசு - உடல் கழுவாமை வெயிலினிறறல் முதலியனவாய் செய்தககவல்லாத புறச்செயல்கள் செய்தலானும் செய்தக்க புறச்செயல்களில்லாமையானும் மிகுவதாயிறறு ; "தன்னுமுழு உடற்றுகளாற் சூழுமுணர் வினிற றுகளால், அன்னெறியிற செறிநதடைநத வமணமாசு கழுவுதறகு" (2549) என்றதும் ஆணடுரைததவையும் பாாகக. சேர் - மிகும். அவா வழக்குககளால் நாளும் மிகுவதாயிற்று என்பது.

மதியினில் மயங்கிக் கூற - மதிமயக்கம் காரணமாக அவ்வாறு கூற. மதிமயக்கம் - முன் இரண்டு பாட்டுககளாலும விரிக்கப்பட்டது ; பிள்ளையார் இடும் ஏடு நீரினிலும் வெற்றிபெறும் என்பதனை மறுகினிற கணட சாதாரண மாந்தரும் முன்னிகழ்ச்சிகளின் முடிவினால் உணர்ந்து கூறினர். 2704, 2705 பாாகக. அவ்வாறிருப்பவும் கலைஞானமுடைமையோடு முன் அனுபவததால் கண்கூடாகக காண்பதும் பெற்ற அமணர் "இட்டால் வந்தது காணும்" என்று ஐயபபாடு பெற அம்முடிவு இனிக் கண்டறியும் பொருளாகக் கூறியது அவர்கள் மதிமயஙகிய காரணத்தாலாயது என்று அரசன் உணர்ந்தான் என்பதாம்.

ஆசிலா நெறியிற் சேர்ந்த அரசனும் அவரை விட்டு-ஆசு இலா நெறி-குற்றத்தை இல்லையாகச் செய்யும் நெறி ; சிவநெறி. மாசுசேர் என்று அமணரைக் கூறியதற்கேற்ப அவரினின்றும் நீஙகி அரசன் சேர்ந்த இச் சிவநெறி அக்குற்றமேயன்றிப் பிறவியாகிய தீமையினையும் இல்லையாகச் செயவதாம் என்று இவ்வாறுரைக்கப்பட்டது ; அது ஆசுசேர் நெறியாதலின் இஃது அவ்வாறு குற்றமிலாத - குற்றமற்ற நெறி என்றுரைப்பினுமமையும். சேர்ந்த - என்றதனால் அந்நெறியினை விட்டு இந்நெறியிற் சேர்ந்த கொள்கைபற்றிய புடைபெயர்ச்சி குறிக்கப்பட்டது.

அவரை விட்டு - "அறிவிலாப் பிணங்களோ மிணக்கிற பிறப்பினொடு மிறப்பினொடும் பிணங்கிடுவர்; விடுநீ" (சித்தி - 12 - 2); இதனோடு அமணரின் சார்பும் தொடர்பும் அறவே நீக்கப்படுதலின் முடிவாக இதற்கு அவரை விட்டு என்றார்.

தேசு உடைப் பிள்ளையார் - தேசு - சிவஞானப் பேரொளி; "பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார்" (2969); தேசு - திருநீற்றினொளியுமாம்.

மாசுசேர் அமணர் - ஆசிலா நெறி - தேசுடைப் பிள்ளையார் - புறச்சமயத் தீமையும், அதனைப் போக்கும் சாதனமாகிய நெறியும், அதனை விளைத்துத்தரும் ஆசாரியரும், அவர்க்கு உள்ளே அணைந்து நின்று அருளும் சிவனருளும் கூறப்பட்ட நயம் காண்க. இவ்வாறு இங்குக் கூறியது இனி அரசன் ஞானோபதேசம் பெறும் பக்குவமுடையனாதல் குறிக்க என்க. மேல்வரும் இரண்டு பாட்டுக்களாலும் இக்கருத்தினை ஆசிரியர் விளக்குதல் காண்க.

திருக்குறிப்பு - திருவுள்ளக் குறிப்பு. நோக்குதல் - அதனை இன்னதென்றறியும் கருத்து விளங்க அவரைப் பார்த்தல்.

திருக்குறிப்பினை நோக்குதல் - "பிள்ளையாரும் அருகாநீரும் விதித்தவேடு இடுக" (2711) என்று முன்னரே ஆணை தந்த அரசன் ஈண்டுப் பிள்ளையாரது திருக்குறிப்பினை நோக்கியதென்னையோ? எனின், முன்னர் "ஏடு இடுக" என்று ஆணை தந்தது இருதிறமும் ஒட்டி இசைந்த வாதத்தினை அவர் இசைந்தவாறே நிகழ்த்துவிக்கும் முறையில் அரசன் என்ற நிலையில் நின்று செய்த செயல்; ஈண்டு அவ்வாதத்தினுள் அமணர் முந்திக்கொண்டு தமது தோல்வியை நிச்சயப்படுத்திவிட்டார் ஆதலான் அதன்மேல் பிள்ளையார் செயல் வேண்டப்படாமலே வாதத்தின் முடிவு கூறலாகும் என்ற நிலையினை அரசன் உளங்கொண்டனன்; ஆனால் "மாறுகொண் டவரு மிட்டால் வந்தது காணும்" (2724) என்று அமணர் கேட்டதனால் தனக்கு வேண்டாவிடினும் நடுநிலை நின்று அச்செயலிற் பிள்ளையாரது திருவுள்ளக் குறிப்பினைத் தெரியவேண்டினன் அரசன். அன்றியும் ஏடு நீரும் இடுக என்று கூறி விடாமல் நோக்கியது முறைப்பட்டது யாது கருத்து எனின்? தீய அமணர் சார்பு விட்டுப் பரிபக்குவமடைந்தமாணவகன் என்ற நிலையினை அடைந்தமையால் ஆசாரியரது திருக்குறிப்பினை எதிர்நோக்கி விண்ணப்பித்தபடி என்க. இது "முன்னை வல வினையு நீங்கி முதல்வனை யறியுந் தன்மை துன்னினன் விளைக் கொளாதத தலையெ நிற்ற லாலே" (2717) என அரசனது நிலையினை யிருவினை ஒப்பும் மலபரிபாகமும் வந்த தன்மைபற்றி ஆசிரியர் அறிவிப்பது காண்க; அது பற்றியே அவனுக்குப் பிள்ளையார் ஞானோபதேசம் செய்தமையும் உணரப்படும்.

பாசுரம் - திருப்பதிகம்; "வாழ்க அந்தணர்" என்ற பதிகத்திற்குச் சிறப்புப் பெயர்.

பரசமயங்கள் பாற - பாறுதல் - அழிதல்; இதற்கு அழிதல் என்றது பரசமயங்களின் தீமைகளும் மயக்கமும் ஒழிந்து மறுக்கப்படுதலேயன்றிச் சமயங்கள் அழிதல் என்பதன்று. இது முன்னரும் விளக்கப்பட்டது; மேலும் உரைக்கப்படும். 2718 முதல் 2741 வரை வரும் பாட்டுக்கள் காண்க.

பரசமயங்கள் என்று பொதுவாகக் கூறியதனால் புறப்புறம், புறம், அகப்புறம் என்ற முக்கூறு அறுவகைச் சமயங்களின் நிலைகளும் குறிக்கப்பட்டன. "ஆறுவகைச் சமயத்தி னருந்தவரும் புக்கதற்பின்" எனப் பின்னர்க் கூறுதலின் அகச் சமயத்தார் தழீஇக்கொள்ளற்குரியார் என்க. சமணத்தை முன்னரே சுரவாதம் - கனல்வாதம் - புனல்வாதம் என்ற மூன்றானும் வெற்றிகொண்டு சைவமேன்மை காட்டினர்; ஆயின் அறநெறிக்கட் சமணத்தின் பொய்மை அற்புதச் செயல்களபற்றி நெருப்பினும் நீரினும் கொண்ட வெற்றியின்மூலம் காட்டப்பட்டதன்றி, அதன் கொள்கைகளின் சிழ்மைகள்

மறுக்கப்படாது நின்றனவாதலின் அவற்றையும் ஏனைச் சமயங்களின் கொள்கைகளை யும் மறுத்துச் சுத்தாத்துவித சைவ சித்தாந்தத்தின் உண்மைத் தன்மையினை நிலைநாட்ட வேண்டியதாயிற்று; இதுவே ஆளுடைய பிள்ளையாரது திருஅவதாரத்தின் தத்துவ மாம். "பரசமய நிராகரித்து நீறாக்கும் புனைமணிப்பூண் காதலன்" (1917); அற்பு தச் செயல் நிகழ்ச்சியால் காட்டப்படும் வெற்றி வேறு; உயர்வு தாழ்வுகளை எடுத்துக் காட்டி நிலைநாட்டுதல் வேறு. இதனைப் பின்னர் "எஞ்சலின்மை இரவாத மன்றி யெம்மோ டெதிர்ந்துபொருட் பேசுவதற் கிசைவ தென்று" போதிமங்கையில், அன்ப ரது அத்திரவாக்கால் தமது தலைவன் இடிவீழ்ந்து இறந்தது கண்டபின்னரும், புத்தர் கூறிச் சாத்திர வாதத்தினை மேற்கொண்டு வந்தமையா லறிந்துகொள்க.

பாசுரம் பாடலுற்றார் பரசமயங்கள் பாற - எனவே முன் அருளிய பதிகங்களா லும் அருட்செயல்களாலும் பரசமயங்களின் கொள்கைகளின் தாழ்வான தன்மைகளைச் சாத்திர வாதம்பற்றி எடுத்துக் காட்டப்படாமல் எஞ்சிநின்றன என்பதும், அதனையே முன்வைத்து இத்திருப்பதிகம் அருளிச் செய்யப்பட்டதென்பதும் போதருதல் காண்க. திருக்குறிப்பு என்றதும்; துஇது பரபக்க நிராகரிப்பு எனப்படும். சிவாகமங்களுள்ளும், சிவஞானசித்தியார் பரபக்கத்துள்ளும், சங்கற்பநிராகரணத்துள்ளும் இதன் விரிவெல் லாங் கண்டுகொள்க. இத்திருப்பதிகத்தால் இவ்வாறு பரபக்க மறுப்பு மட்டுமேயன்றிச் சைவவுண்மைத் திறத்தினை நாட்டுதலாகிய சைவத் தாபனமும் (நீறாக்குதல்) உடன் செய்தருளினார் பிள்ளையார் என்பதும் (2718) கண்டுகொள்க.

பரசமயங்கள் - "இச்சமயங்களெல்லாம் புறப்புறச் சமயமும், புறச்சமயமும், அகப்புறச் சமயமும் ஆம். அவற்றுள் புறப்புறச் சமயம்: உலகாயதம், நால்வகைப் பௌத்தம், ஆருகதமென அறுவகைப்படும்; புறச்சமயம்: தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என அறுவகைப்படும்; அகப் புறச் சமயம்: பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவம் என அறுவகைப்படும்; (அகச்சமயம் - பாடாணவாத சைவ முதற் சிவாத்துவ சைவ மீறாக அறுவகைப்படும். அவை பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம், சிவசங்கிராந்தவாத சைவம், ஈசுவர அவிகாரவாத சைவம், சிவாத்துவித சைவம் என்பன.) இவையெல்லாம் அகம் புறம் என்று இரண்டாய் அடங்குமாறும் ஓர்ந் துணர்க.

"ஈண்டுக் கூறிய சமயத்தாருள், உலகாயதர் முதல் ஆருகதரீறாகிய அறுவரும் வேதஞ் சிவாகம மிரண்டனையும் நிந்திக்கும் நாத்திகராயினும், ஒரு நூலென்றும் பிர மாணமென்றுங் கொண்டு ஒருநெறிக்கண்ணே நிற்றலான் அவர் சமயம் புறப்புறச் சமயமென வேறுவைத் தெண்ணப்பட்டன;

"தார்க்கிகர் முதற் பாஞ்சராத்திரிகளீறாகிய அறுவரும், வேதம் பிரமாணமெனப் பொதுவகையாற் கொள்ளினும், அவருள் தார்க்கிகர் தன்னாற் பிராமாணியங் கொள் ளாமையானும், வேதப் பொருளோடு முரணிய பொருட்டன்மை கோடலானும்; மீமாஞ்சகர் கருமகாண்டமாகிய வேதமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு ஞானகாண்ட மாகிய உபநிடதங்களை இகழ்தலானும்; ஏகான்ம வாதிகள் ஞானகாண்ட மாத்தி ரைக்கே பிரமாணங்கொண்டு கருமகாண்டத்தை இகழ்தலானும்; ஏனை மூவரும் வேத வாக்கியங்களிற் றத்தம் மதத்திற்குப் பொருந்துவன மாத்திரையே எடுத்துக்கொண்டு ஏனையவற்றிற்குப் பிரமாணங் கொள்ளாமையானும், வேதப் புறமாகிய நூல்களைப் பிரமாணமெனக் கோடலானும்; இவ்வறுவருஞ் சிவாகம நிந்தகராகலானும் இவர் சமயம் புறச்சமயமென வேறுவைத் தெண்ணப்பட்டன;

"பாசுபதர் முதலிய ஐவரும், வேதஞ் சிவாகம மிரண்டற்கும் பொதுவகையாற் பிரமாணங் கொள்ளினும், அவ்விரண்டற்கும் புறமாகிய பாசுபத முதலிய நூல்கட்குச் சிறப்பு வகையாற் பிரமாணங் கோடலானும்; வேதஞ் சிவாகம மிரண்டினும் ஆகாவென விலக்கப்பட்டனவற்றை ஆசரித்தலானும்; ஐக்கியவாத சைவர் வேதஞ் சிவாகம மிரண்டற்கும் சிறப்புவகையாற் பிரமாணங்கொண்டு, அவற்றில் விலக்கியன ஒழித்து விதித்தவழி ஒழுகுவாராயினும் எல்லாப் பெருங்கேட்டிற்கும் மூலகாரணமாகிய ஆணவமலத்துண்மை கொள்ளாமையானும், அதனுண்மை சாதிக்கும் சிவாகம வாக்கியங்களை இகழ்தலானும் அவ்வறுவகைச் சமயமும் அகப்புறச்சமயமென வேறு வைத்தெண்ணப்பட்டன;

"ஏனைப் பாடாணவாத சைவர் முதலிய அறுவரும் பொருளுண்மை யெல்லாஞ் சித்தாந்த சைவரோ டொப்பக்கொள்ளும் அந்தரங்க உரிமையுடையாராயினும், அவ்வப் பொருள்கட்குக் கூறுந் தன்னியல்பு பொதுவியல்பு மாத்திரையின் முரணுதலான் அவர் அவர் சமயம் அகச்சமயமென வேறுவைத் தெண்ணப்பட்டன;

"இவ்வாறு நால்வகைச் சமயங்கட்குஞ் சித்தாந்த சைவத்தோடுள்ளதாகிய வேற்றுமைத் தாரதம்மியங் கண்டுகொள்க

"அகச்சமயமாறனுட் சிவாத்துவித சைவமாவது நிமித்தகாரணத்துக்குப் பரிணாமங் கூறுவதாகலின், அது நிமித்தகாரண பரிணாமவாதம் எனப்படும்; அங்ஙனங் கொண்ட சிவாத்துவித சைவர் கருத்துணராதார் சிவாத்துவித சைவமாவது யாதோ எனவும், "நிகழ்சிவாத் துவிதாந் தத்துக் குலவினராவளர்வர்" என்றமையின், இறுதிக்கண் எடுத்தோதப்படும் சுத்தசைவம்போலு மெனவும் மயங்குவர். சுத்தசைவம் நுட்பப்பொருளுணராமை மாத்திரையேபற்றி வேறு வைக்கப்பட்டதன்றிக் கருத்துவகையாற் சித்தாந்த சைவத்தின் வேறன்மையிற் சுத்தசைவஞ் சித்தாந்த சைவத்துளடங்குமென்றுணர்க. அற்றாகலினன்றே "நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக், குலவினரவ ளாவாக் கொள்கைய தாகி" என, ஏனைச் சமயங்களை எடுத்தோதி விலக்கிச் சுத்தசைவத்தை அங்ஙனம் விலக்காதொழிந்ததுவுமெனக்.

"இனி, இவ்வாறன்றிப் பாடாணவாதத்திற்கும் பேதவாதத்திற்கு முள்ள வேறுபாடு சிறிதாகலின் அவ்விரண்டனையும் ஒன்றாகவைத்தெண்ணிச் சுத்தசைவத்தையும் உடன்கூட்டி அகச்சமயமாறெனக் கோடலுமொன்று. இங்ஙனமாகலான் "மெய்தரு சைவ மாதி யிருமூன்றும்" என்றதுடம் பாடாணவாத முதலிய அறுவகைச் சைவங்களையுமெனக் காண்க. பாசுபதர் முதலியோர் கலைக்குமேலுள்ள தத்துவங்களை உணராமையின், அவர் "வித்தையாதி யெய்து தத்துவங்களேயவர்" எனக் கோடல் பொருந்தாமையறிக. ஐக்கியவாத சைவர் கலைக்குமேலுள்ள தத்துவங்களுண்டெனக் கொண்டாராயினும், மூலமலம் உண்டெனப் தறியாமையின் மூலமல நீங்கிய முத்தர்க்கன்றிச் சுத்த தத்துவ புவனங்களிலெய்துதல் கூடாமையின், அவர்க்கு முத்தித்தானம் மோகினிக்குமேற் சுத்தவித்தைக்குக்கீழ் விஞ்ஞானகலர்க்குரிய தானமேயாமாகலின், ஏனைப் பாடாணவாத சைவர் முதலியோரே "வித்தையாதி... தத்துவங்களேய்வர்" என்றறிக. "புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்" என்புழியும் அகச்சமயமென்றது "ஏக னனேக னிருள்கரும மாயை யிரண்டு" என்னும் ஆறுபொருளுங் கொண்ட பாடாணவாத முதலிய அறுவகைச் சைவங்களையேயாமெனவும், புறச்சமயமென்றது அங்ஙனம் பொருளுண்மைகொள்ளாத ஏனை மூவகைப் புறச்சமயங்களையும் எனவும் உணர்ந்துகொள்க" — எனவரும் சிவஞானபோத அவையடக்கத்தின் மாபாடியத்துள் மாதவச் சிவஞானமுனிவருரையும் கண்டுச் சிந்திக்க.

**பரசமயங்கள் பாற** - பாறுதல் - நூல்வழியால் மறுக்கப்படுதல்; **ஈண்டுச் சமண சமயம்** அளவையால் மறுக்கப்படுதல்பற்றி ஒருசிறிது காண்போம். சமணசமய உண்மைகள் எனக் கொள்வன : அருகனைச் சிவனாய்க் கூறுதலும் நித்தியமான இயற்கைஞான முடையனென்றலும் ; (ii) சிவன் சங்கோசவிகாச தன்மியா யிருப்பன் என்றலும் ; (iii) பொருளின் தன்மையைப் பலபடக் கூறி அஸ்தி நாஸ்தி - உண்டு இல்லை என்றலும் ; (iv) உலகம் ஒருவராற் படைக்கப்பட்டதன் றெனறலும் முதலாயின. (i) **அருக்கடவு ளியல்பு** : பாவம் வாராது அறத்தினின்றான் என்று அமணர்கள் கூறுதலின், பந்த முதலிய குற்றங்களினின்றும் விடப்பட்டு வினை முத்தர்போலச் சேர்க்கைஞான முடையனேயன்றி இயற்கையாலே அனந்தஞான முதலியவை யுடையனன்று என்பது போதரும் ; (ii) சிவன் சங்கோசவிகாச தன்மி - அதாவது எடுத்த உடலினளவு பரிணமிக்கும் தன்மையுடையனாதல ; யானையின உடலிற் பெருத்தும் எறும்பினுடலிற் குறைந்தும் நிற்றலவேண்டும; ஒருடலில ஓரவயவம குறையில் அவ்வளவில அசீவன் குறைதல் வேண்டும் ; பரகாயம புகும் யோகியின் உயிர எண்வகைச் சித்திகளுள் பிராகாமிய சித்தியினால் வேற்றுடம்பிற புகும்போது தான் புகும அவ்வச் சரீரங்களின் அளவிற்கு விரிந்தும் சுருங்கியும பரிணமித்தல் வேண்டும் ; விளக்கு ஓரிடத்திலிருந்தபடியே வீடு முழுதும் பரவினாற்போல இவ்வாறு விரியும் எனின அது விகாரமாதலின் உயிர சடமாய் அநித்தியமுமாம ; ஆதலால் அவர கொள்கை தவறு ; (iii) **அஸ்தி நாஸ்தி** - ஒரு பொருள உண்டுமாம இல்லையுமாம ; ஒளியும் இருளும்போல ஒன்றற்கொன்று மாறுபாடாகிய உண்மையும் இன்மையுமாகிய தன்மைகள் ஒருகாலத்தில் ஒரு பொருளில இருத்தல் இயலாது ; இவ்வாறு கூறுதல் காட்சி விரோதம ; சூரியனுள்ள காலத்தில் அஃது இல்லை எனற பொருள் தோன்றாமையும, பாம்புள்ள காலத்தில் பாம்பில்லை என்று பயமின்மையும் வேண்டும் ; அதனால் இல்லை என்றலும், உண்டில்லை என்றலும் பொருந்தாது ; ......இன்னும் அவர கூறும அனேகாந்தவாதத்தினுள்ளும் எழுபொருள் உளவென வகுத்துக்கூறுதலும் காண்க ; (iv) உலகம் நித்தியமாதலின் ஒருவனாற் படைக்கப்பட்டதன்று ; இயல்பாயுள்ளதாதலின எனில யாது அவயவப் பகுப்புடையதாய், பலவாய், அசேதனமாய்க் காணப்படும அது அழியும் ; அது ஒருவரால் படைக்கப்பட்ட காரியப் பொருளாம். உலகமும் அவ்வாறு அவன் அவள் அது என்ற அவயவப் பகுப்புடையது ; தோன்றிநின்றழியும தன்மையுடையது ; அசேதனமாய்ப் பலவாயுள்ளது; ஆதலின் ஒரு முதல்வனாற் காரியப்படுத்தப்பட்டது. —என்றிவ்வாறு கண்டுகொள்க. (குறிப்பு : இவை பெரும்பாலும் ஸ்ரீமத் ஆறுமுகத் தம்பிரானார் உரையிற் கண்டவாறு தழுவி எழுதப்பட்டது). 818

2717. தென்னவன் மாறன் றானுஞ் சிரபுரத் தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றை யார்தந் திருநீறு பூசப் பெற்று
முன்னைவல் வினையி னீங்கி முதல்வனை யறியுந் தன்மை
துன்னினான் வினைக ளொத்துத் துலையென நிற்ற லாலே. ௮௧௯

(இ - ள்) **தென்னவன் மாறன்தானும்** - அரசனாகிய பாண்டியன்தானும் ; **சிரபுரத் தலைவர்...பெற்று** - சீகாழித் தலைவராகிய பிள்ளையாரால் தீண்டிப் பொன்போன்ற கொன்றையினைச் சூடிய சிவபெருமானது திருநீற்றைப் பூசப்பெற்றதனால் ; **வினைகள்...நிற்றலாலே** - இருவினைகளும ஒத்துப் பொருளைச் சமன்செய்து காட்டும் துலாக்கோல்போல நிற்கப்பெற்றதனாலே ; **முன்னை...துன்னினான்** - முன்னைக் கொடிய வினையினின்றும் நீங்கியவனாய் முதல்வனை அறியும் தன்மை பொருந்தினான்.

கழுக்களில் வரிசையாக ஏற்றியிட : எண்புடை....ஏறினர்கள் - அன்புடைய ஞான முண்டாராகிய பிள்ளையார் எழுந்தருளிய திருமடத்தில் தீயினைக்கொளுவ வேண்டு மென்றே சூழ்ச்சி செய்து கொளுவிய எட்டுப் பெருங் குன்றுகளினின்றும் வந்த எண்ணாயிரம் அமண குருமார்களும் ஏறினார்கள்.

அருநி

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2751. (வி - ரை) மன்னவன் மாறன் கண்டு - மன்னவன் என்ற குறிப்பு மேல் நீதிமுறைசெய்யவுள்ளதிலை குறித்தபடி. மாறன் - "வடிகொள்வேள் மாறன் காதல் மாறின வண்ண மென்பார்" (2703) என்றபடி பொய்யின் நீங்கி உண்மைகண்டு மாறுதலடைந்தவன் என்பது தொனி; கூன்பாண்டியனுய அமணச்சார்பில் குனிந்து இருந்தவர் மாறி உண்மை கண்டு சைவசசார்பில் நிமிர்ந்து நின்றசீர்நெடுமாற ராயின மையும் குறிப்பு. கண்டு - "கொற்றவன் முதலாயுள்ளோர் காண" (2750) அமைச்சனார் காட்டக் கண்டு.

மந்திரியாரை நோக்கி - முறைசெய்க என்று கூற - முன்னர் மாறனாரை மன்னவன் என்று கூறிய நிலைக்கேற்பக் குலச்சிறையாரை மன்னரது மந்திரியாரை என்றார். அந்த அமைச்சு நிலையில் அரசரால் ஏவப்பட்ட நீதிமுறைவிதி என்பது.

துன்னிய வாதில் ஒட்டித் தோற்ற - துன்னிய - அமணர் தாமேவலிந்து மேவிட்டுக்கொண்ட. "உள்ளவாறு கட்புலத்தில் உய்ப்பது" (2673) என்றும், "வெந் நெருப்பில் வேவுறாமை வெற்றியாவது" (2671) என்றும், "தொடர்ந்தவாது, புனலிற் விருகாற் செய்தோம் முக்காலி லொருக்கால் வெற்றி, என்னினும் முடையோம், மெய்ம்மை யினியொன்று காண்பது" (2692) என்றும் வந்தனவற்றால், அமணர் மேன்மேலும் தாமே வலிந்து வாதினை அழைத்து மேற்கொண்டமை அறிக. ஒட்டி - ஒட்டுதல் வைத்து. "தனிவாதி லழிந்தோ மாகில், வெங்கழு வேற்று வானிவ் வேந்தனே" என்றது (2696). தோற்ற - தமது ஏடு நீருடனே செல்லவும் பிள்ளையார் இட்ட ஏடு எதிர்ந்து செல்லவும் கண்டமையால் தோல்வியுற்ற.

தோற்ற - வாதில் தோல்வியுற்றமையே யன்றியும் அரசன் கூறிய ஆணையாலும்; தாமே ஒட்டியபடி அமணர் வாதில் தோல்வியுற்றதொரு காரணத்தானே அவரைக் கழுவிலேற்றி முறை செய்க என ஆணைதருதற்குப் போதியதாகும், ஆயினும், அவ்வாறு அதுகொண்டே ஆணையிடாமல் மற்றொரு நியாயமும் காணநின்றான் என்றபடி.

முன்னமே ..முற்றச்செய்தார் - அநுசிதம் - செய்யத்தகாத செயல்; அஃதாவது திருமடத்தில் வஞ்சனையினால் அரசனுக்கிய தன்னை ஏமாற்றித், தீக்கொளுவி அடியார்களை எரித்துக்கொலை முயன்றது அதனைச் சொல்லவந்த தானும் பிழை என்பார் "அநுசிதம்" என்றெழுந்தார். இவ்வநுசிதமும் கொலைத்தண்டம் பெறத் தகுதியுடையது என்றபடி.

கொன்னுனைக் கழுவில் ஏற்றி முறைசெய்க என்று கூற - மேற்கூறிய இசைவாகிய ஒட்டுதலினாலும், அநுசிதத்தாலும் கழுவேற்றப்படத் தக்காராதலின் அவ்வாறே நீதிமுறைத் தண்டம் நிறைவேற்றுக என்றபடி. இஃது அரசன் செய்த அரச நீதிச் சட்டமுறைத் தீர்ப்பு. வாதில் ஒட்டியதொரு காரணத்தாலே அரசன் இவ்வாறு தீர்த்தானல்லன. இசைவுபற்றியெழும் தண்டம் அவ்வளவின் எல்லையை முடிந்த கோடியாகக்கொண்டு வாதத்தின் அளவுக்கு ஏற்ற அளவே நீதிபதி குறைத்து முறை செய்யலாம் என்பது இந்நாளிற்போலவே முன்னாளிலும் வழக்கு ஆயின் இங்கு அரசன் அவ்வாறு அமணர் கழுவேற இசைவு தந்தாலும் வாதின் தோல்வியளவுக்கேற்றவாறு,

கழுக்கொலைத் தண்டத்தைத் தவிர்த்து, நாடுகடத்துதல் முதலாகிய எவையேனும் சிறிய அளவில் தண்டங்கள் விதித்திருக்கலாமே எனின், அவ்வாறு செய்யாமையை விளக்குதற்கென்றே காரணங்காட்ட மேற்வருங்கூற்று எழுந்தது. பிள்ளையார்பாற் செய்த அநுசிதமாகிய, மக்கள் குடியிருப்பு வீட்டுக்குத் தீவைக்க முயன்றமையும், மக்களைத் தீயிட்டுக் கொல்ல முயன்றமையும், அவையும் எவ்விதக் காரணமும் பற்றாது செய்தமையும், சிவனடியார்பாற் செய்த அபசாரமாயினமையுமே கழுக்கொலைத் தண்டம் விதித்து முடித்ததன் காரணம் என விளக்கப்பட்டது.

கழுவில் ஏற்றி முறைசெய்க - இவ்வாறு கழுவேற்றிக் கொலைத்தண்டம் இயற்றுதல் முன்னாளில் வழக்கத்திலிருந்ததொரு தண்ட விசேடம். அன்றியும் தமது சமயச் சார்புக்கு இழுக்கு நேர்ந்தபோது கழுநாட்டி அதன்மேற் பாய்ந்து உயிர் மாய்த்துக் கொள்வது சமணர் சமய மரபுகளுள் ஒன்றென்பதும் அறியப்படும். "புத்தர்சமண் கழுக்கையர்" என்ற தேவாரம் இதனை உரைத்தமை காண்க. அதனாற்றான் இங்கு அமணர் அவ்வாறு ஒட்டினர் என்க; ஆதலின் அரசன் அவ்வாறே முறைசெய்க என்றதில் கருணையின்மை - வன்கண்மை முதலிய இழுக்கு ஒன்றுமில்லை; இந்நாளிலும் "நாகரிக" (ஆங்கில) நீதிச்சட்டத்தின்படி கொலைத்தண்டம் விதிக்கப்பட்ட ஒருவனைக் கழுத்தில் கயிறு சுருக்கிட்டுத் தொங்கவைத்துக் கொல்லல் முறைசெய்வது தண்ட விசேடமாதல் காண்க. அதனை அன்றென விடுத்து மேனாட்டில் குற்றவாளியைப் படுக்கவைத்துக் கழுத்தைக் கனத்த வாள்விட்டு விரைந்து துண்டமாக்குதலும், நாற்காலியில் வைத்து மின்சாரத்தை உடலில் ஏவிக் கணத்தில் கொல்லுதலும் முதலிய தண்ட விசேடங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக எழுதல் காண்க. ஈட்டி (சனியன் என்பர்) கொண்டு குத்திக் கொல்லும் முறையும் காண்க. ஆதலின் இத் தண்டமுறை பற்றிப் பரிவுகொண்டது போன்று பகைகொண்டும் ஆராய்ச்சியிற் கிளம்புவோர் இவைகளை உளங்கொளக்கடவர்; அரசன் சமயச் சார்புபற்றி இவ்வாறு முறைசெய்தானல்லன் என்பதும், பிள்ளையார்க்கேனும் சைவர்க்கேனும், சைவ சமயச் சார்புகள் எவற்றுக்கேனும் இதனுள் பொறுப்பும் சம்பந்தமும் இல்லை என்பதும், அரச நீதிமுறையொன்றே இங்கு இயற்றப்பட்டதென்பதும் தெளிந்துகொள்க.

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனொடு நேர்" (குறள்) என்றதும், அங்குக் கொடியராவார் இன்னார் என்று கூறுகையில் "தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர்...முதலாயினாரை" என்று விரித்துத் தீக்கொளுவுவாரை முதற்கண் வைத்து வகுத்ததும், "அரசன் கொடியாரைக் கொலையான் ஒறுத்தது தக்கோரைக் காத்தல்" என்று வகுத்ததும் எழுதிய பரிமேலழகர் உரை ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

இங்கு வேறு வேறு பேசுவனவெல்லாம் பிழையென்றொதுக்கிவிடுக. ஆயிரக்கணக்கான மக்களைத் தீக்கொளுவிக் கொளுத்த முயன்று சூழ்ச்சி செய்த கொலைபாதகர்கள் எண்ணாயிரவர் கொலைத்தண்டத்திற்குள்ளாவதில் பரிவுகொள்ளத்தக்க நீதித் தவறு என்னவுள்ளது என்று விடுக்க.

இனி ஒருசார் நவீன ஆராய்ச்சியாளர் இக்கழுவேற்றிய அரசதண்டம் நிகழ்ந்ததே இல்லை என்று முடிக்கவும் துணிந்தனர்; அவர் கூற்றுக்கள் சிலரை மயங்கவைக்குமாதலின் அவைபற்றி ஈண்டுச் சில பேசவேண்டியது அவசியமாகின்றது. அவர் கூறுவனவற்றின் சுருக்கம்: (1) நம்பியாண்டார் நம்பிகளுக்கு முன் இந்நிகழ்ச்சி பற்றி நூல்களுள் ஒன்றும் காணப்படவில்லை; (2) பிள்ளையார் தேவாரங்களில் இதுபற்றிய அகச்சான்று இல்லை; (3) சீன யாத்திரிகர்கள் எழுதிய தமிழ்நாட்டுக் குறிப்புகளில்

திருவிராகப் பதிக முழுமையும் ஆகிய தேவார அகச்சான்று உறுதிகூறுகின்றது; "நள்ளாறுடைய நம்பெருமான் - ஆலவாயின்க ணமாந்த வாறிது - எனகொல் சொல்லாய்" என்ற பதிகமும் பார்க்க. இனிப், புனல்வாதம் நிகழ்ந்து வைகையாற்றில் பிள்ளையார் இட்ட ஏடு எதிர் சென்றமையால் அமணர் தோல்வியுற்றுச் சிவனே பரம்பொருளாவார் என நாட்டப்பட்டமை திருப்பாசுரப் பதிகத்தால் ஐயமற விளக்கம் பெறுகின்றது. "ஆழ்க தீயது; எல்லா மரனுமமே சூழ்க" "தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக் கோலை தெண்ணீர்ப், பற்றின்றிப் பாங்கெதிர் வினவும் பண்புநோக்கில், பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே" எனவரும் திருப்பாசுரப் பகுதிகளும் "ஏடு சென் றணைதரு மேடகம்" என்ற பதிகமும் இதற்குரிய அகச்சான்றுகளாதல் தெளிக. "பருமதின் மதுரைமன் னவையெதிரே பதிகம தெழுதிலை யவையெதிரே, வருநதி யிடைமிசை வருகரனே வசையொடு மலர்கெட வருகரனே" என்ற திருவியமகமும் இதனை நாட்டியதுடன் இவ்வாதங்களில் எல்லாம் பிள்ளையாரே வெல்லவும் அமணர் தோற்கவும் நிகழ்ச்சிகள் கூடிய செய்தியும் விளங்குகின்றது

இவ்வாற்றான் சமணர் கொலைமுயன்ற தீச்செயலும், அதுவே அரசனுக்கேறிக் கொடிய நோய்பற்றிய செயலும், அமணர் பிள்ளையாரைப் பொறாமையாற் சூழ்ந்து பதறிக் கதறிய செயலும், இவை காரணமாக ஒன்றன்பின் ஒன்றாய் மூன்று பெருவாதங்களும் அவற்றால் மூன்றுமுறை அமணர்க்குத் தோல்விகளும் நிகழ்ந்த செயலும், இவையெல்லாம் பிள்ளையார் தேவார அகச்சான்றுகளால் நாட்டப்பெறுகின்றன, பொய்யினுள் மெய்ம்மையாக்கப் புகுந்து வஞ்சித்துத் தனது உரிமை உண்மைச் சமயத்தை மறக்கவும் இகழவும் இடையூறு செய்யவும் மயக்கம் செய்தும் தனக்கு இறந்துபடுமளவு தரும் நோய் விளைத்தும், உண்மை நின்ற பெருகுநிலைக் குறியாளரை அவமதித்து நிந்தித்துக் கொலையும் சூழ்ந்தும், சைவ உடைமைகளையும் உண்மை அறிவையும் ஆறலைத்துக் கவர்ந்தும், இத்துணையும் தமது சிவஞோபாய முயற்சிகளின் ஆக்கங் கருதிச் செய்ததுமன்றி, அதனோடு நில்லாமல், ஒட்டி வாதமும் செய்து தோல்வியும் பெற்றார்களாயின் அச்சமணர்களை அரசன் ஏற்றவாறு நீதிமுறைத் தண்டஞ் செய்வதில் என்ன குறை? பெருங்குற்றம் நடந்ததும், பெருவாதங்கள் நடந்தனவும் தேவாரங்களால் அறியப்படுதலின் அவற்றுக்குத் தக்க தீர்ப்பும் அரச தண்ட முறையும் நிகழ்ந்தமை எளிதில் கருதக் கிடக்கின்றது. சைவம் மீளத் தாபிக்கப்பட்டமையும் சமணம் வலியிழந்தொழிந்தமையும் கண்கூடாகக் காண்கின்றோம். ஆதலின் அரச நீதிமுறையால் சமணர் அழிக்கப்பட்டனர் என்பது தேற்றமாய் விளங்குமன்றோ? பிள்ளையார் அமணர் கழுவேறிய செய்தி கூறாமைக்குக் காரணம் பல இருத்தல் கூடும். அரசநீதிமுறை பற்றியதாய் அஃது ஒழிந்து சமயச்சார்பு பற்றியதன்றாதலின் அவர் கூறும் நியதியில்லை என்க. அன்றியும் தேவாரங்கள் முழுமையும் நமக்குக் கிடைத்தில என்பதனையும் ஈண்டு நாம் மறந்துவிடலாகாது. (3) சீன யாத்திரிகன் குறிப்பிடாமை பற்றி இந்நிகழ்ச்சி நிகழவில்லை என்பது தவறு; அவ்வாறு முடிவுகொள்ளுதல் தவறான அளவைமுறை. வெதிரேகச் சொல் என்ற அன்மைபற்றி இன்மை கூறுதல் இன்றியமையாத நியதியாகிய பொருத்தமிருந்தாலன்றிக் கூடாது, சீதமின்மை பனியின்மை என்புழிப்போல; சீன யாத்திரிகன் கூறாதனவெல்லாம் நிகழாதன என்றல் பொருந்தாது; சீன யாத்திரிகன் ஆளுடைய பிள்ளையார் ஞானமுண்டமை முதலியனவாகத் தேவார அகச்சான்றுடன் கூடிய வையெல்லாம் எழுதினனோ? ஆளுடைய அரசுகளைச் சமணர் துன்புறுத்திக் கொலைசூழ்ந்த செயல்களையும் அதன்காரணமாகப் பல்லவன் மகேந்திரன் சமண்விட்டுச் சைவம் சார்ந்ததும் பாடலிபுத்திரத்துப் பாழிகளையும் பள்ளிகளையும் இடித்துக் குணபர

வீச்சாம் எடுப்பித்தமையும் அந்நாட்டுப பிற விளக்கமாகிய உண்மைச் சரித நிகழ்ச்சிகளை யும் எழுதினரோ? சோழநாட்டில திருவாரூரில் கமலாலயக் குளக்கரையைத் தூர்த்துக் கவர்ந்த மனைகளை ஆக்கியதோடு, தண்டியடிகள் கயிறுத்தியா முதலிய அடியார்களை யும் சிவபெருமானருளையும் இழித்துக்கூறிய சமணர்களையும், பழையாறை வடதளி யிற கோயிலை மறைத்ததாக கவாதது தமது பள்ளியாக்கிய சமணர்களையும், உண்மை கண்டு ஓடத் துரத்தித் தூயமைகள செயத சோழ அரசாது செயல்களையும் நாட்டுச சரித நிகழ்ச்சிகளையும் எழுதினரோ? "வாயி ருந்தமி ழேபடித் தாளுறு, வாயிரஞ் சம ணும்மழி வாக்கினன" என்ற தேவார அகச்சான்று பற்றிய செய்தியைச் சில யாத்தி ரிகள் எழுதினரோ? இவ்வாறு யாத்திரிகள் எழுதாமைகொண்டு இவையெல்லாம் நிகழ்ந்தனவல்ல என்று முடிப்பது போலியாய முடியுமன்றோ? வழிப்போக்கராய் வந்த பிறநாட்டு அப்புறச்சமயத்தோன் தான் கண்டவற்றுட் சிலவும், கேட்டவற்றுட் சிலவு மாக, அவற்றுள்ளும் தான் கொண்டவற்றுட் சிலவுமாக இங்குமங்குமாகத் தானே குறித்துக்கொள்வானன்றி நாட்டு முழுச்சரிதமும் எழுதுவான் என்பது அறிவாளிகள் ஒப்பமுடியாத தொன்றுமென்றொழிக. (4) சமணர் தம் நூல்களுள் இத்தகாதரவில்லை என்னின், தமது தோல்விகளையும் அழிவுக்குரிய காரணங்களையும் தாமே எழுதி நிலை பெற விளம்பரப்படுத்திக்கொள்ளுதல் மனித இயற்கையன்று; இற்றைஞான்று முடி வெய்தியாகக் கருதப்படும் முதலாவது இரண்டாவது உலகப் பெரும்போர்களில் அவ் வத் திறத்தினர் அவ்வப்போது தமக்கு நேர்ந்த தோல்விகளையும் அழிவுகளையும் எவ் வெவ்வாற்றால் எழுதி வெளியாக்கினர் என்ற வரலாறுகளை அமைதிபெற நோக்கினால் இவ்வுண்மை எவர்க்கும் விளங்காமற்போகாது. (5) பின்வந்த திருவாலவாயுடையார் புராணம் முதலியவற்றுட் கூறப்படும் சரித மாறுபாடுகள் இச்செய்தியை ஐயப்படுத்து கின்றன என்பதும் போலியாராய்ச்சியாம்; இஃது ஆதாரங்களின் வன்மை மென்மை யறிந்து முடிக்க அறியாத குறையேயெனக. வேதாகம புராணங்களுள் முன்னையவற் றொடு ஒத்த அளவே புராணங்கள் ஆதாரவாம்; மாறுபட்ட வழி, மாறுபடும் பகுதிகளி னளவு புராணங்கள் மென்மையுற்றுத் தள்ளப்படும்; பதிவாக்கிய ங்களாகிய முன்னை யவே வலிமையுறறுக் கொள்ளப்படும் என்பது நூலறி மரபு. பெரியபுராணம் வேதம்; அதனொடு மாறுபடும் தலபுராணங்கள் வலிமையுறுவன அல்ல எனக. எனவே பெரிய புராணவாக்கே உறுதி என்ற விடுக. இனி, இவ்வா காட்டும மாறுபாடெனப்படுவதும் மாறு பாடன்றாமபடி கண்டுகொள்ளத் தக்கன. என்னை? கழுவரிடை (கழுவேறிடை?) என்று வழங்கும் ஒரு கிராமம் வைகைக் கரையில மதுரையின் கிழக்கில் ஒருநாழிகையளவில இப்போதும் கேட்கப்படுகின்றது. பூவணப் புராணம அங்கு இச்செயதி நடைபெற்ற தாகக் கூறுதல் இறைவரது அருள் எங்கும் வியாபகமாக விளையுந் தன்மைத்தாதலின் அவவிளைவை யாண்டும நிகழ்ச்சியிற கூறியும் கொண்டாடியும வருவது முறைதானே! முருகன் திருவவதாரமும், வள்ளி கல்யாணமும், பார்வதி கல்யாணமும், இத்தகைய பிற வும் யாண்டும கொண்டாடப்படுதல்போலக் கண்டுகொள்க. இனிக் கழுவேறிய செய்தி மதுரையிலோ, அன்றி, அதன் அணிய வேறிடத்திலோ இன்ன இடத்தில் நிகழ்த்தப்பட்டதென்று பெரியபுராணத்துட் கூறப்படாமையும் காண்க. மேலும், இவ்விழாப் பாண்டிநாடு மட்டுமேயன்றி ஏனைச் சோழநாடு முதலியவற்றிலும் கொண் டாடப்படுதலும் கண்டுகொள்க. சமணர்கள் கழுவேறினார்களோ? அன்றி ஏற்றப் பட்டார்களோ? என்பதில் புராணங்களுள் மாறுபாடு காணவுள்ளது என்னின், இரண் டும் அமையும் எனக. என்னை? அரசன் ஆணையிட்டவழி அதனை நிறைவேற்றும் சிறைச்சாலை அதிகாரி முதலிய தண்டத் தலைவர்கள் கொலையாளியைத் "தூக்குமேடைக் குப் போ" என்றால் அவன் அதற்குட்பட்டுச் சென்று மேடை ஏறுகின்றான். அவன்

ஏறினா? அல்லது ஏற்றப்பட்டானா? என்று சிந்திக்கில் இரண்டும் உண்மைதானே என்பது புலப்படும், "மதத்தி னின்மான மிககார் தாங்களே வலிய வேறி" என்ற என்ற திருவிளையாடற் புராணமுடையார் "சமணரைக் கழுவேற்றிய படலம்" என்று பெயரிட்டமை காண்க. "எல்லார்களும் எதனும் ஈசன்" என்ற கருத்துப்பற்றியும், உண்மைச் சமய சமரசம்பற்றியும் முன்னரே உரைக்கப்பட்டன; கண்டுகொள்க.

ஈண்டு, முன் எவரும் சொல்லாத பொய்ச்செய்தி யொன்றைப் பழிபடக் கற்பித் துரைத்தனர் என்று சைவாசாரியராகிய நம்பியாண்டார் நம்பிகள்பால் இல்லதுபுனைந் துரைத்த குற்றமும், "அவரை நாகள நாத"ரென்று கொண்டு அவர் கூறிய பொய்யைப் பழிபடப் பரப்பினா என்று எமது தெய்வச் சேக்கிழார்பால் அறியாமைக் குற்றமும் சுமத்தி அலாதுற்றும் இந்நவீன ஆராய்ச்சியாளர், சைவத்தோல் போர்த்த சமணரே யாவர் என்றஞ்சி விடுக. "நேர்நின்று, காக்கை வெளிதென்பா ரென்சொலார், - தாய்க்கொலை, சால்புடைத் தென்பாரு முண்டு"—இனி, சமணர்கள் தமிழர்கள் - கொல்லாமையாகிய அறம்பூண்டவர்கள் - உயர்ந்த சமயநிலைக் கொள்கை பற்றியவர்கள் என்றும், — சைவர்கள் அவர்களைப் பகைத்துச் செய்த செயல்கள் தவறு - இவர்களது அச்செயல்கள் சமயப் பூசல்பற்றியும், வடமொழியாளர் சூழ்ச்சிபற்றியும், சமய சமரச நோக்கின்றிக் குறுகிய மனப்பான்மைபற்றியும், சாதிப் பிணக்குப்பற்றியும், இன்னபிறவாறும் எழுந்தன என்றும் சில கோட்பாடுகளைச் சில காரணம்பற்றி முன்னரே மனத்துள்ளே அணிந்துகொண்டு, அகக்கோட்டம்பற்றி மேலே கண்டவாறு (வேத சிவாகமங்களின் உண்மை), காணாது போலியாராய்ச்சிகளுட் புகுந்து சிவநிந்தை, சிவனடியார் நிந்தை புரிந்தும், பெரியோரைப் பழித்தும், தாமும் கெட்டு உலகையும் மயக்கிப் பழிக்கும் பாவத்துக்கும் ஆளாகியொழிகின்றனர் இந்நாளிற் சில புதிய ஆராய்ச்சியாளர்கள். திருவருள் அவர்களுக்கு நல்லறிவு தருவதாக. உலகர் இப் போலி ஆராய்ச்சிகளில் மயங்காது நமது முன்னோர் கண்ட உண்மைகளை அனுபவம் வல்ல தேசிகர்களை அடுத்து உணர்ந்து உய்வார்களாக.

வாதில் ஒட்டித் தோற்ற செய்தி 2692 முதல் 2744 வரை பாட்டுக்களிற் கூறப்பட்டது.

முன்னமே பிள்ளையார்பால் அநுசிதம் முற்றச் செய்த - செய்தி 2577 முதல் 2689 வரை பாட்டுக்களிற் கண்டுகொள்க. முற்ற - மிகவும்; முழுதும் என்றலுமாம்.

ஏற்றி—ஏற்ற—என்பனவும் பாடங்கள். 853

2752. (வி - ரை) ஞானப்புங்கவர் - ஞானமும் தூய்மையும் உடையவர் - கொலைத் தண்டனையினைப் பாற்படும் இவ்வாசாணையை விலக்குதற்குரிய ஞானமும், அது செய்தற்குரிய மனத்தூய்மையுமுடையவராயினும் என்பது குறிப்பு.

கேட்டும் இகல் இலர் எனினும் விலக்கிடாதிருந்த - ஞானமும் மனத்தூய்மையு முடையராயின் இதனைக் கேட்டார் எவரும் இகல் இருந்தாலன்றி விலக்காதிரார் என்பது குறிப்பு.

சைவர்...செய்த தன்மையாற் சாலும் - இவ்வாறிருப்பவும் பிள்ளையார் அரசனை விலக்காமை அமணர் சிவனடியார்பாற் செய்த பெரிய அபசாரமும், அரசனது ஆணை நீதிவரம்பு கடவாமையுமேயாம் என்பது.

இத்திருப்பாட்டினை ஊன்றிக் கருத்தறிந்தாராயின் இந்நிகழ்ச்சியிற் பிள்ளையாரின் பங்கு இத்துணையென ஒருசார்புபற்றிப் பிணங்கும் நவீன ஆராய்ச்சியாளரும் நன்கு தெளிந்து நலமடைகுவர். உண்மை நிலையினை இவ்வாறு எடுத்து நிறுவிக்காட்டியது ஆசிரியரது தெய்வக் கவிநலமும் அமைச்சியல் பற்றிய நல்லறிவின் திட்பமும் நுட்ப

முன்கொண்ட திறமுமாம். இகாளிலும் நீதிமன்றங்களில் இவ்வாறு நீதிமுறையின் படி கொலைத்தண்டம் விதிக்கப்படுதலால் யாவரும் விலக்கலாகாத நிலைமையும் கருதி உணர்ந்துகொள்க.

குறிப்பு :—இப்பாட்டல் சில பிரதிகளில் இல்லை என்பாருமுளர். ஆயின் எனது பார்வையில் வந்து பரிசோதித்த பன்னிரண்டு ஏடுகளிலும் இப்பாட்டல் உண்டு; அவற்றின் விவரமும் பழமையும் பற்றி முதற்பாகம் முன்னுரை பார்க்க. திரு. வ. சு. செ. அவர்களும் தமது பிரதியில் இப்பாட்டல் உண்டு என்று எழுதுகின்றார். 854

2758. (வி - ரை) பண்புடை - பண்பாவது கோற்றொழில் திருத்தி உலகை காக்கவல்ல பண்பு (2747); அஃதாவது சிவாபராதமானது பொல்லாத பெருங் குற்றமாமென்றும், அதற்குத் தக்கன தலைபோனதுபோல இதுவே தக்க தண்டனையாமென்றும், இதுவே அது செய்தார் நரகத் துன்பநீங்கி உய்யும்வழி என்றும் அறிவிக்கும் பண்பு.

பாருளோர் அறியுமாற்றல் - உலகம் அரசநீதி வழியால் உண்மைகண்டு அறிந்து நன்னெறியொழுகி உய்யும்படி. தண்டவகை பலவற்றுள்ளும் கொலைத்தண்டமான தொழிதொழித்த வினையவை அகற்றவாளியையும் நீதிமுறை காணும் உலகரையும் திருத்தும் கருத்துடையன. கொலைத் தண்டமோ, குற்றவாளி அரசாணையாற் கொல்லப்பட்டொழிதலின் பாருளோர் மட்டும் அறிந்து பயன்பெற நிகழ்வதென்பதாம். அரசனாற் கொலைத்தண்டம் செய்விக்கப்பட்டோர்க்கும் இறைவனது நரகத்தண்டனையி னீங்குதலாகிய மறுமைப்பயனுண்டெனக.

" அரசனுஞ் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யிற், றீய தண்டலின் வைத்ததைத் தண்டத்
துறைசெய்து தீர்ப்பன், பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்;
நிரயமுஞ் சேரா; ரந்த நிரயமுன் னீர்மை யீதாம" — சித்தி - 2-32.

கண் புடைபட்டு-பக்கங்களில் உள்ள கணுக்கள் தறிக்கப்பட்டு; புடை கண்பட்டு என்க. படுதல் - தறித்தல் குறித்தது.

கழுத்தறி - கழுமரம்; நிரை - எண்ணாயிரவர் ஏறும் வகையால் இடத்தின் நிலை பற்றி வரிசையாக அமைக்கப்பட்டிருந்தன என்பது.

கண்புடை ..நிரை - இவற்றை இவ்வாறு முடிவினை முன்பே நிச்சயித்து அமைச்சர் யாவருமறிய ஒழுங்குபடுத்தி அமைத்தனர் என்பது "மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரி யாரதா மென்பார்" (2704) என்று நம் மாதவர் கண்டு கூறியவாற்றாலறியக்கிடக்கின்றது.

ஏற்ற - ஏற்றி முறை செய்யும்படி தண்டலாளர்களுக்கு ஆணையிட, இதுபற்றி முன் 2751-ன் கீழ் உரைத்தவை பார்க்க.

ஏற்ற - ஏற்றினர்கள் - ஆணையிட்ட செயல் மந்திரியார் செயலாகவும், அவ்வாணைப்படி ஏறிய செயல் அமணர் செயலாகவும் நிகழ்தலின் இவற்றுள் மாறுபாடின்மையறிக.

நண்புடை ஞானம் - உயிர்களின்மேல் வைத்த அன்புநிறைந்த ஞானம். "அன்பே சிவமாவது" என்ற அருணெறியின்றவர் பிள்ளையாராயினும் அவர்பால் இகல்கொண்டு பொறாமையினால் அமணர் பொல்லாங்கியற்றினர் என்பது இங்கு இவ்வடைமொழியின் குறிப்பு.

நாடியிட்ட - தீமைதரு ஒழித்தல் வேண்டுமென்ற கருத்துடனே முற்படச் சூழ்ந்து செய்த; நாடியிடுதலாகிய இஃது குற்றத்தின் முக்கிய அங்கம். With the intention என்பர் நவீனர். நாடுதல் - சூழ்தல்; சதியோசனை. (Conspiracy)

எண்பெருங் குன்றம் - மதுரையினைச் சுற்றிச் சூழ்ந்து நிற்கும் ஆனைமலை முதலிய எட்டு மலைகள். இவற்றில் குன்றமொன்றுக்கு ஆயிரவராக அமண குருமார் பாழிகள் வகுத்து உறைந்தனர்; ஆதலின் "எண்பெருங் குன்றத் தெண்ணாயிரவர்" என்றார். இவர்களே (குருமார்களே) அரசாணையின்படியும் தமது சமயக் கோட்பாடு பற்றியும் கழுவேறியவர்கள்; இவர்கள் சார்புகொண்ட ஏனைச் சமணர் கூட்டமாகிய பொது மக்கள் எவ்வாற்றானும் வருத்தம் செய்யப்படாமல் பின்னர்ச் சைவர்களாகி உய்ந்தனர் என்பது நாட்டு நடப்புச் சரித வரலாறு. "ஆனை மாமலை யாதி யாய இடங்களிற்பல அல்லல்சேர், ஈனர்கட்கு" (தேவா) என்று பிள்ளையார் முன்பே அருளியது கருதத் தக்கது.* 855

2754. தோற்றவர் கழுவி லேறித் தோற்றிடத் தோற்றுந் தம்பம்
ஆற்றிடை யமண ரோலை யழிவினா லார்ந்த தம்பம்
வேற்றொரு தெய்வ மின்மை விளக்கிய பதாகைத் தம்பம்
போற்றுசீர்ப் பிள்ளை யார்தம் புகழ்ச்சய தம்ப மாகும். அ௫௬

(இ - ள்) தோற்றவர்...தோற்றுந் தம்பம் - (வாதிலே) தோல்வியுற்றவர்களாகிய அமணர் (எண்ணாயிரவரும்) முன்கூறியபடி கழுவிலேறியிட, அவ்வாறு யாவருங் கண்டறியும்படி காணப்பட்ட அத் தம்பங்கள்; ஆற்றிடை...ஆர்ந்த தம்பம் - ஆற்றினிடை அமணர்கள் இட்ட ஓலை அழிந்துபோயின காரணத்தால் நிறுத்திய தம்பங்களாம்; வேற்றொரு...பதாகைத் தம்பம் - (ஓலையழிந்த காரணத்தால நிறுத்தப்பட்டன என்பது இறுதியாய்க் கண்ட புறக்காரணமாயினும் அவை அவ்வெற்றிப்பாட்டினைக் காட்டுவதோ டமையாது) சிவனையன்றி வேறுமொரு கடவுள் இல்லை என்ற உண்மையினை உலகுக்கு விளக்கி நாட்டியுயர்த்திய கொடித்தம்பங்களாகவும் விளங்கின; போற்று சீர்...செயத்தம்பமாகும் - உலகம் போற்றும் சிறப்பினையுடைய பிள்ளையாரது புகழைக் காட்டிய செயத்தம்பங்களாகவும் நின்றன.

(வி - ரை) ஏறித் தோற்றிடத் தோற்றும் தம்பம் - முன்பாட்டிற் கூறியபடி பாருளோர் அறியும்படிப் பண்புடை அமைச்சனார் அச் சமணர்களைக் கழுநிரையில் ஏற்ற ஆணையிட அவ்வாறே எண்பெருங்குன்றத்து எண்ணாயிரவரும் ஏறினார்கள். அக் கழுவில் இறந்துபட்டு நின்றார்கள். அதைப் பாருளோர் கண்டபோது இன்னின்னபடி உண்மைகளை யறிந்துகொண்டனர் என்பது இப்பாட்டு.

மன்னவன் ஆணையிட, மந்திரியார் கழுஅமைத்து ஏற்றிட, அமணர் ஏறியிட்ட தம்பங்களின் வரிசை தோற்றிற்று என்பது நிகழ்ச்சி. உலகர் கண்டனர்; பொருள் அறிந்தனர்; நல்வழி நடைபெற்றது. அங்ஙனம் கண்ட பொருளாவன, சமணரது ஓலை, ஒட்டியபடி இட்ட இடத்தில் நில்லாது ஆற்றோடு கீழ்நோக்கி ஓடிவிட்டபடியால் இத்

*எண் பெருங்குன்றமாவன .—

"பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி
அருங்குன்றம் பேராந்தை யானை - யிருங்குன்றம்
என்றெட்டு வெற்பு மெடுத்தியம்ப வல்லார்க்குச்
சென்றெட்டு மோபிறவித் தீங்கு"

என்பதொரு பழம் பாடல் :—வ. சு. செ.

தம்பங்கள் இவ்வாறு தோற்றின என்று கண்டார் சிலர்; மேலும் நுண்ணுணர்வுடையோர் அவ்வாறு ஓலை நீருடன் ஓடிவிடுதல் இயல்பாதலின் அதனால் வாதத்தில் தோல்வி மட்டும் காணப்பெறுமேயன்றித் தெய்வத்தன்மை காணப்பெறாது; அத்தன்மை தோல்வியினை மட்டும் காட்டாது, இத்தம்பங்கள், மேல் பிள்ளையார் இட்ட ஏடு மேலேறிச்சென்ற வாற்றால் இவ்வாறு தோற்றப்பட்டுச் சிவனே முதல்வன் ஏனைத் தெய்வங்கள் அவனை நோக்கத் தெய்வங்களாகா என்பதனை நாட்டின என்று கண்டனர்.

மேலும் ஊனறிக்காணும் மிக நுட்பமுடையோர் அச்சிவனருள் வெளிப்பாட்டுக்குக் காரணரான ஞானாசாரியராகிய பிள்ளையாரது புகழினை இத்தம்பங்கள் நாட்டின என்று கண்டனர் எனக. இவை இத்தம்பங்களைப் பார்த்தோர் கண்டறிந்துகொண்ட படியினை விளக்கியவாறு.

தோற்றவர் - தோற்றிட - தோற்றும் - சொற்பின் வருநிலை.

தோற்றவர் - கழுவில் ஏறித் - தோற்றிட - தோற்றும் - தோல்வியுற்றவர் அவ்வாறே அப் பாவப்பயனுடன் ஒழிந்துபடாது, அரசனால் தண்டிக்கப்பட்டுத் தூய்மை செய்யப்பட்டமையால் நிரயம் நீங்கி நன்மை பெறக் காரணமாகிய பிறவியிற் சேர்தலைப் பிறந்து உறுதி பெறும் ஈடேற்றத்துக்குக் கருவியாக என்றதொரு குறிப்பும் காண்க. தோற்றிட - நற்பிறவிபெற; கழுவினால் ஆர்ந்த - என்ற குறிப்புமிது. ஆர்தல் - நிறைதல்; நிறைவுபெறுதல்.

வேற்றொரு தெய்வம் இன்மை - சிவனையன்றி வேறு ஒரு முதற்கடவுள் இல்லை என்ற உண்மையினை. "மற்றுமோர் தெய்வந் தன்னை உண்டென நினைந்து" (திருவா). சிவனையன்றி என்பது அவாய்நிலையான் வந்தது.

பதாகை - வெற்றிக்கொடி; பதாகை நட்டு உயர்த்திய எனக. உயர்த்திய பதாகையின் பொருள் சிவனையன்றி முதற்றெய்வம் வேறில்லை என்பது. அப்பதாகையை உயர்த்தின தாமும் சிறப்பது பிள்ளையாரின் புகழ்ச் செய்த் தம்பம் என்பது பின் வரும் கருத்தின் குறிப்பு.

புகழ் செய்த—என்பதும் பாடம்    856

2755. தென்னவன் றனக்கு நீறு சிரபுரச் செல்வ ரீந்தார்,
முன்னவன் பணிந்து கொண்டு முழுவது மணிந்து நின்றான்;
"மன்னனீ றணிந்தா னென்று மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னிநின் றார்க ளெல்லாந் தூயநீ றணிந்து கொண்டார். ௮௫௬

(இ - ள்) தென்னவன் ... ஈந்தார் - பாண்டியனுக்குச் சீகாழிச் செல்வராகிய பிள்ளையார் திருநீறு ஈந்தருளினர்; முன்னவன் ... நின்றான் - முன் அவன் வணங்கி அதனை ஏற்றுக்கொண்டு தன் உடம்பில் எங்கும் விதித்தவாறு அணிந்து நின்றனன்; மன்னன் ... என்று - அரசன் திருநீற்றினை அணிந்துகொண்டனன் என்றதனால்; மற்றவன் ... அணிந்துகொண்டார் - அவனுடைய மதுரைமாநகரில் மற்று வாழ்வார்களாய நெருங்கினின்ற நகர மாந்தர்கள் எல்லாரும் தூய திருநீற்றினைத் தாமும் அணிந்து கொண்டனர்.

(வி - ரை) தென்னவன் ... ஈந்தார் - உயர்ந்தவராகிய பிள்ளையார் தாழ்ந்தோராகிய மாணவருக்குச் செய்யும் கொடையாதலின் ஈந்தார் என்றனர். முன்னர்ச் சுரம் நீக்கும்பொருட்டு அரசனது மேனியைப் பிள்ளையார் தீண்டித் திருநீறு கொண்டு தடவினர்; அதனில் வேறு; அரசன் சமணசார்பில் நின்றான்; அன்றியும் தலைதளர்ந்து நெக்குமுறுக கருத்தொழிந்து உரைமறந்து கிடந்தான், ஆதலின் நேரே பிள்ளையார்

திருநீறு ஈயவும் அரசன் வணங்கி வாங்கிப் பெறுதலும் அணிதலும் கூடாவாயின; அன்றியும் அந்தப் பக்குவமும் கூடவில்லை. ஆயின் பிள்ளையார் அவனது நிலைகண்டு தமது திருக்கையினால் நீண்டிதத் தடவித் தூயமையாக்கிப் பக்குவப்படுத்தும்படி நீறு பூசியருளினார். அதன் பயனால் (2717) திருப்பாசுரம் உபதேசிக்கப்பெற்று உண்மை யுணர்ந்தான்; உணர்ந்ததனால் இப்போது பிள்ளையார் திருநீறு ஈயவும் வணங்கிப் பெற்று முழுவது மணியவும் பெற்றான் என்க.

முன்னவன் - அரசன்; முன் - ஏனையோர்க்கு முன்பு என்றும்; முன் - திரு முன்பு என்றும் உரைக்க நின்றது.

முழுவதும் - தனது மேனி முழுதினும்; அவர் ஈந்தருளிய திருநீற்றினை முழுதும் (ஒருசிறிதும் புறம்போகாமல்) என்றலுமாம.

மன்னன் நீறு அணிந்தான் என்று - "மன்ன னெவ்வழி மன்னுயி ரவ்வழி" "மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறம் - 186) என்றபடி மன்னவன் சமண சார்பு பற்றி நின்றபோது அவனது மாந்தரும் அச்சார்பு பற்றினர் (2498); அவர்கள், ஈண்டு அரசன் உண்மையுணர்ந்து நீறணிந்து சைவச்சார்பு பற்றினன் எனக் கண்டு அது காரணமாகத் தாமும் அவ்வாறே நீறு அணிந்துகொண்டனர் என்க.

மதுரை மற்று வாழ்வார் - இவர்கள் மதுரைமாநகரத்து வாழும் குடிமக்கள். அரசனைப் பின்பற்றிச் சமணத்துப் புகுந்து, இங்கு அரசன் சைவத்துக்கு மீளக்கண்டு தாமும்மீளச் சைவம் புகுவார்கள். இவர்கள் வேறு; முன்னர் ஒட்டி வாதுசெய்து தோற்றுக் கழுவேறிய சமணர்கள் வேறு; அவர்கள் எண்பெருங் குன்றத் தெண்ணாயிரவர்கள் (குருமார்) எனப்பட்டமை காண்க. மற்று வாழ்வார் - என்றதுமிக் கருத்து.

வாழ்வார் என்றதனாற் றுழவாராய்த் தொலைந்தழிந்த அமணர்போலல்லாது பிள்ளையாரருளால வாழ்வுபெற நின்றவர்கள்.

எல்லாம் - ஒருவரும் எஞ்சாமல் எல்லா மாந்தர்களும் நீறணிந்து சைவராயினர்; உய்ந்தனர்; அரசுகள் சரிதத்தில் வரும் பல்லவனும், குடிகளும், திருத்தெளிச் சேரியில் பிள்ளையாரால் வாது செய்து தோல்வியுற்றுப் பின் தெளிந்த புத்தரும் போல.

தூய நீறு, அணிந்துகொண்டார் - தூய - தூயதாக்கும் தன்மையுடைய என்றதனால் அவர்களது பாவத்தைத் தூய்தாக்கிறது என்பது குறிப்பு. அணிந்துகொண்டார் என்றமையால் முன்னர் அணியாமை தானே பெறப்படும். மதுரை மாந்தர் எல்லாம் சமண் பற்றி ஒழுகினின்ற தன்மை "இருவாதம் பாங்கு மன்றிச் சைவமங் கெய்தாத" (2501) என்றதனாலறிக.

பணிந்து வாங்கி—மற்ற அம்மதுரை—என்பனவும் பாடங்கள். 857

2756. பூதிமெய்க் கணிந்து வேந்தன் புனிதனா யுய்ந்த போது
நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கும்;
மேதினி புனித மாக வெண்ணீற்றின் விரிந்த சோதி
மாதிரந் தூய்மை செய்ய வமணிருள் மாய்ந்த தன்றே. அடுஅ

(இ - ள்) பூதி...போது - பிள்ளையார் ஈந்தருளிய திருநீற்றினைத் தனது மெய்யினுக்கு மருந்தாக அணிந்துகொண்டு அரசன் தூயவனாகப்பெற்று உய்ந்த அப்பொழுது; நீதியும்...எங்கும் - அரச நீதிமுறையும் வேதங்களில் விதித்த நீதியேயாக நாடெங்கும் நிகழ்வதாயிற்று; மேதினி புனிதமாக - உலகம் தூய்மை பெற்றதாகும்

படி ; வெண்ணீற்றின்...செய்ய - திருவெண்ணீற்றினது விரிந்த பேரொளியானது திக்குக்களையெல்லாம் தூய்மை செய்தலால் ; அமணிருள் மாய்ந்தது அன்றே - அப்பொழுதே உயிர்களைச் சூழ்ந்திருந்த சமணமாகிய இருள் மாய்ந்தது.

(வி - ரை) பூதி - விபூதி ; சிறந்த செல்வம். "சீர்புரச் செல்வர் சந்தர்" (2758) என்றதற்கேற்பப் பூதி என்றார். தானழியாது சிறப்புடன் அழியாமையினையும் ஞானத்தையும் விளக்கவல்லது என்பது குறிப்பு.

மெய்க்கு - குவ்வுருபு ஏழனுருபின் பொருளில் வந்தது ; மெய்யின்கண் ; மெய்யாக - மெய்ம்மைத்தன்மை விளக்கும்பொருட்டு என்ற குறிப்புமாம்

அணிந்து - கவசமாகவும் மருந்தாகவும் முழுதும் பூசி ; "நீற்றினை நிறையப் பூசி" (தேவா) ; சமணத்திலிருந்து இறைவனருளிய சூலைநோயால் ஆட்கொள்ளப்பட்டு வந்தடைந்த தமது தமையனார் மருணீக்கியாருக்குத் திலகவதியம்மையார் இவ்வாறே திருவைந்தெழுத்தை ஓதி உபதேசித்துத் திருநீறு அளிப்ப, அவர் பணிந்து ஏற்று உடலார அணிந்து உய்ந்த வரலாறு முழுதும் ஈண்டு ஒப்பிட்டு நினைவுகூரத்தக்கது ; "திருவாளன் திருநீறு திலகவதியாரளிப்பப், பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்று, தூயவரா வணிந்து" (1332) ; "பூதிமெய்க் கணிந்து புனிதனா யுய்ந்த" என்ற குறிப்பும், ஈண்டுத் திருப்பாசுரம் ஞானோபதேசமாதலும் கருதுக ; அணிந்து - அணிந்ததனை

புனிதனாய் - அணிந்துகொண்டமையாலே தூய்மை பெற்றவனாகி ; "சுத்தமதாவது நீறு" (தேவா)

வேந்தன்...நிகழ்ந்ததெங்கும் - இங்குக் கூறிய வேதநீதி என்பது உலகியல் அரசநீதி ஒழுக்கத்தினை ; "உலகியல் வேதநூ லொழுக்க மென்பதும்" (2718) என்ற நிலை வேந்தன் புனிதனாகியபோது உலகியல் ஒழுக்கமும் அவ்வாறே தூயதாக நிகழும், அல்லுழி நிகழாது என்பது. வேதநூல்களுள் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் அறமென்ற பரிமேலழகருரை ஈண்டுக் கருதத் தக்கது ; ஆகியே - ஏகாரம் பிரிநிலை ; முன்னிருந்த கோள்கள் எல்லாம் நீங்கி என்பது

மேதினி...தூய்மை செய்ய - "நிலவு மெய்ந்நெறி சிவநெறியே யென்பதும்" (2718) என்ற நிலை முன்கூறியது உலகியல் ஒழுக்கம் ; ஈண்டுக் கூறியது உயிர்களைப் பற்றிய நலம்.

புனிதமாகத் - தூய்மை செய்ய - என்று கூட்டுக, "தோற்றமன்னுயிர் கட்கெலாந் தூய்மையே, சாற்று மின்பமுந் தண்மையுந் தந்துபோ, யாற்ற வண்டமெலாம்பரந் தண்ணல்வெண், ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா" (208) என்ற கருத்தை ஈண்டு வைத்துக்காண்க.

வெண்ணீற்றின் விரிந்த சோதி - மதுரையின் எல்லா மக்களும் அரசனுக்குப் பிள்ளையார் திருநீறளிக்க அவன் அணிந்தது கண்டு எல்லவர்களும் அணிந்துகொண்டமையால் "விரிந்த சோதி" என்றார். "பூதி சாதன விளக்கம் போற்றலபெற் றோங்கக் கண்டு" (1916) என்றபடி விளக்கம் சுருங்கியிருந்த நிலையினின்றும் விரிந்த என்பதும் குறிப்பு. "விரிந்தனை குவிந்தனை" (பிள் - தேவா. புறம்பயம்).

அமணிருள் - அமணர்கள் கட்டிய பொய்ம்மைகளின் செயல் இருள் எனப்பட்டது. உண்மைஞானத்தினைக் காணவொட்டாது மறைவு செய்தலின் இருள் என்றார். இருள் போல்வதனை இருள் என்றது உபசாரம். மாய்தல் - வலிகெட்டொழிதல் "தமிழொடு பழிநாடும் படிபரந்த, மாணிலா வமணென்னு மல்லிருள்போய் மாய்வதனுக்கு."

(2550) என்று முன் கூறியது காண்க. சோதிவருதல் இருள் மாய்தலுக்குக் காரண மாகும் இயல்பும் குறித்தெழுந்த உருவகம்.

அன்றே - அப்பொழுதே. மேல்வரும் பாட்டினும் இவ்வாறே கொள்க. மேல் வரும் பாட்டில் சைவத திருநெறி நடந்தமை கூறுவர்.

உயர்ந்தபோது—என்பது பாடமாயின் சமணபாற் றாழ்ந்த நிலையினின்றும உயாநத எனறும், கூன் நிமிர்நதுயாநத என்றும் உரைததுககொள்க. 858

2757. மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
ஊனமாஞ் சமணை நீக்கி யுலகெலா முய்யக் கொண்ட
ஞானசம் பந்தர் வாய்மை ஞாலததிற் பெருகி யோங்கத்
தேனலில் கொன்றை யார்தந் திருநெறி நடந்த தன்றே. அஙகூ

(இ - ள்) மீனவறகு...காட்டி - பாணடியனுககு உயிரைக் கொடுத்ததுமன்றி உணமை நெறியினையும காடடி; மிகக ..கொணட - மிகுநத கேடு விளைவிககும சமணைப் போககி உலகெலாம உய்யும்படி ஆட்கொணடருளிய, ஞானசமபநதா... ஓஙக - திருஞானசம்பந்தரது ஞானமெயந்நெறி உலகததிலே பெருகி ஓங்குதலினாலே; தேனலா......நடநததனறே - வண்டுகளை ஒலிததறகிடமாகிய கொன்றை மாலையை யணிநத சிவபெருமானது திருநெறி நடநதது அபபொழுதே.

(வி - ரை) மீனவற்கு உயிரை நல்கி - உணாவு மாவியு மொழிவதற் கொருபுடை யொதுஙகியும் (2610), கருததொழிந துரைமறந்தும் (2611) முடிதளாநதியும உயிா தரிககலாகாத நிலையில இருந்த பாணடியனுக்கு உயிர்கொடுதது, அமண சார்பாற் கேடுற்ற உயிரைத் தம்வசமாக்கி நோயததணடததாலும் நீககையாலும் தூய்மையாக்கி மீளப புததுயிராய்க கொடுதது எனற குறிபபுமாம்,

மெய்ந்நெறி காட்டி - சமணை நீக்கி - உய்யக்கொண்ட - "சார்புணர்ந்து சார்பு கெடஒழுகும்" (குறள்) நிலையினைச் செய்து.

மெய்ந்நெறி காட்டுதல் - அருட் குறிபபுடன் திருபபாசுர ஞானோபதேசததாலும திருநீறு ஈநதருளியமையாலுமாம.

மிக்க ஊனம் ஆம் - மிகப பெருங்கேடுகளை யெல்லாம் ஆககும். ஆம் - ஆகச செயயும் எனப பிறவினைபபொருளில் வநதது மிகப பெருநகேடாவன மறைக ளிந்தனையும், சிவ நிந்தனையும், அடியாா நிந்தனையுமாகிய சிவாபராதம்; இவை கழுவா யில்லாத சிவாபராதஙகளாதலான் மிக்க ஊனம் என்றார்.

உலகெலாம் உய்யக்கொண்ட - அமணீக்கி மீனவறகு உயிாநலகி நெறிகாட்டி யதனுல் உலகெலாம உய்விததததாயிறறு எனபது; அரசன் ஒருவனை நல்வழிப்படுத்தவே அவனால் உலகம் நன்னெறி நிறததபபடுதலின் அசசெயலே உலகை உய்விதத செய லாயிற்று என்க. கொண்ட - ஆட்கொணட.

உலகெலாம் - இறைவர் ஆசிரியர் பெருமானுக்கு முதலாகத தந்த "வெருளின் மெய்ம்மொழி" யெனும் ஞானவாக்காகிய ஐந்தெழுதது; இதனைத் திருஅருள் வெளிப படும் அரிய பெரிய இடங்கள்தோறும் அமைப்பது ஆசிரியரது மரபு; "உலகெலா மும்மை வுறநியாம பதிக முறைத்துமெய் புணாவரு வொருமையுடன்" (ஏயர்கோன்- புரா - 88) என்று நம்பிகளது திருப்பாண்டிககொடுமுடி நமச்சிவாயத திருப்பதிகத் தினைக குறித்தருளியதும், "அஞ்செழுத தோதி யேறினா ருய்யவுலகெலாம்" (2114) என்று பிள்ளையார் முத்தச்சிவிகையில் ஏறியபோது அருளியதும், இவ்வாறே உள்ள பிறவும் ஈண்டு நினைவு கூர்க.

**ஞானசம்பந்தர் வாய்மை** - திருஅருள்ஞான மூண்டருளியவராதலின் அந்த ஞானவாக்கினின்றும் போந்தது சிவனருளேயாகிய ஆணை என்பது குறிப்பு. "என் துரை தன் துரையாக" (இலம்பையங்கோட்டூர் - தேவா) என்ப துணைமையாதலின் பிள்ளையாரருளிய வாய்மை சிவனருளிய நன்னெறியே என்பது பொருள். இதுபற்றியே ஈண்டு **ஞானசம்பந்தர்** என்ற பெயரால் கூறியருளினார். ஞானசம்பந்தர் வாய்மை - ஓங்கக் - கொன்றையார் திருநெறி நடந்தது - என்றதும், இங்கு வாய்மை என்பது சிவநெறி குறித்ததென விளக்குதல் காண்க. வாய்மையும் திருநெறியும் ஒன்றென்பது கருத்து. "சைவ வாய்மை" (2498) என்று இவ்வரலாற்றுத் தொடக்கத்துக் கூறியதும் காண்க. வாய்மை - வாக்கின் செயலாகிய அருளிப்பாடு.

"மலைவிலா ரருளப் பொலலா தாளை புனைவா - எனவே அவ்விருவரும் தம்முள் வேற்றுமையின்மை பெற்றாம்" என்று மாதவச்சிவஞான முனிவர் சிவஞானபோத மங்கல வாழ்த்து உரையில் உரைத்த கருத்துக் காண்க.

**பெருகி ஓங்க** - உயிர்களிடத்து வகையாலும் தொகையாலும் மிகுதல்.

**வாய்மை - ஓங்கத் - திருநெறி நடந்தன்றே** - "எல்லா மரனுமமே சூழ்க; வையக முந்துயா நீங்கவே" என்ற வாய்மை ஞாலத்தில் திருநெறியினை நடைபெறச் செய்தது என்க.

**தேனவில் கொன்றையார் - தேன் - நவில் -** இறைவரது கொன்றையின் தேனை உண்டு தேன்கள் (வண்டுகள்) சிவஞானம் பெருகச் செவ்வழிப் பண்பாடும் என்ற குறிப்பினால் சிவஞானவமுதுண்டு அதனவயமேயாகி ஞானப்பாடல் பாடும் பிள்ளையார் தன்மையினை உணர்த்துதல் காண்க. **நவிலுதல்** - இங்குச் சொல்லுதல்; அறிவுறுத்துதல் என்ற பொருளில் வந்தது. "செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்த வண்டு, வேறாய வுருவாகிச் செவ்வழிநற் பண்பாடும்" (மிழலை - மேகராகக் குறிஞ்சி) என்ற பிள்ளையார் திருவாக்கு இங்குக் கருதத்தக்கது. "ஆனந்தத் தேன்சொரியும், குனிப் புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" (திருவா); **கொன்றையார்** - பிரணவக் குறிப்பும் தருதல் காண்க.

**திருநெறி நடந்தன்றே** - நடந்தது - நிகழ்ந்தது; வழக்கம் அருகியிருந்தது திரிந்த நிலைமாறினமை வழக்கத்தொடங்கிற்று.

"மன்னிய சைவ வாய்மை வைதிக வழக்க மாகு
நன்னெறி திரிந்து மாறி நவைநெறி நடந்த தன்றே" (2498)

என்று பாண்டிநாட்டு வரலாறு கூறத் தொடங்கிக்காட்டிய ஆசிரியர் ஈண்டு அவ்வரலாற்றின் நன்மை பெற முடித்துக்காட்டிய தெய்வக் கவிநலம் கண்டு களிக்க.

"பரசமய நிராகரித்து நீறு ஆக்கும்" காதலினைப் பெறத் தவங்கிடந்து வழிபட்ட சிவபாதவிருதயருக்குத் தோணியப்பர் ஈந்த வரமாகிய பிள்ளையார் திருவவதாரஞ் செய்த பயன் (2498 முதல் 2757 வரை - 600 - 859) இந்த 259 பாட்டுக்களில் கூறப்பட்டது ; இதுவே பிள்ளையாரது புராணத்துக்கும் திருத்தொண்டர் புராணத்துக்கும் உயிர்நிலையாகிய உள்ளுறை என்றுணர்மையும்

**ஞானசம்பந்தர் வாய்மை பெருகி ஓங்கத் திருநெறி நடந்தவாற்றை வரும் பாட்டாற் கூறுகின்றார்.**

**உய்யவந்த—தேனலர்—தேனவிழ்—**என்பனவும் பாடங்கள். 859

2758. மறையவர் வேள்வி செய்ய வானவர் மாரி நல்க
இறைவனன் னெறியி னோங்க விகத்தினி லவனி யின்பங்

குறைவில தெனினுங், கூற்றை யுதைத்தவர் நாமங் கூறி
நிறைகடற் பிறவித் துன்ப நீங்கிடப் பெற்ற தன்றே.    அகூO

(இ - ள்) மறையவர்...ஓங்க - வேதியர்கள் சிவ வேள்விகளைச் செய்யவும், (அது காரணமாகத்) தேவர்கள் மழையைப் பெய்விக்கவும், (அதுகாரணமாக) அரசன் நல்ல அறநெறியில் ஓங்கியிடவும், ஆக இவ்வாற்றான; அவனி - உலகம்; இகத்தினில் - இவ்வுலக வாழ்வாகிய இம்மைநிலையிலே; இன்பம் குறைவிலது - துய்க்கும் இன்பங் களில் எவ்வாற்றானும் குறைவிலாமலிருந்தது; எனினும் - அவ்வாறாயினும் (அது பிறவித் துன்பத்துக் கேதுவாதலின்றி); கூற்றை...அன்றே - இயமனை உதைத்தவராகிய சிவ பெருமானுடைய திருநாமத்தைக் கூறுதலால் நிறைந்த கடல்அலை போன்று மேலு மேலும் தொடர்ந்துவரும் பிறவியாகிய துன்பத்தினின்றும் நீங்கியிடவும் அன்றே பெற்றது (அவனி)

(வி - ரை) ஞானசம்பந்தரது வாய்மையினாலே திருநெறி நடந்த வரலாறு இவ்வா றென்று முன்பாட்டிற் கூறிய பொருளை அநுவதித்துக் கூறியது இப்பாட்டு.

மறையவர் வேள்வி செய்ய - "வாழ்க அந்தணர்" என்றருளிய "வாய்மை"யின் பயனாக உலவு மின்புறச் சந்தவேள்விகள் - சிவவேள்விகளைச் - செய்ய; வேள்வி - சிவவேள்வி; "சங்கரர்க்கு" (2719).

வானவர் மாரி நல்க - "வாழ்க...வானவர்", "வீழ்க தண்புனல்" என்றரு ளிய "வாய்மை"களின் பயனாக உலகமின்புறச் செய்யும் வேள்விகளினாலே "வேள்வி நற்பயன் வீழ்புனலாவது" (2720) என்றபடி வேள்விகளில் விளிக்கப்படும் இந்திரன் வருணன் முதலிய தேவர்கள் அவ்வம் மந்திரங்களால் வரும் சிவனது ஆணைப்படிநின்று முறைமையால் மழையைப் பருவந் தப்பாது பெய்விக்க; நல்குதல் சிவனாணையால் என்பது துணிபு: ஆணைவழி நல்குதலை வானவர் நல்க என்றது உபசாரம்.

இறைவன் நன்னெறியின் ஓங்க - இறைவன் - இங்கு அரசன் என்ற பொருள் தந்து நின்றது இது "வேந்தனு மோங்குக" என்றருளிய "வாய்மை"யின் பயனாக வந்தது. நன்னெறி - இறைவர் அருளிய வேத சிவாகமங்களின் விதித்த ஒழுக்கநெறி. நெறியின் ஓங்குதலாவது நெறியில் தானுமநின்று தனகீழ் உலகத்தையும் அந்நெறியில் நிற்பித்தலால் உலகத்தை வளரச்செய்தல். ஓங்க என்பது "ஓங்குக" என்ற பதிகத் தின்படியே என்ற குறிப்புத்தர அச்சொல்லினாலே கூறினார். "வேள்வி" என்றது போல.

அவனி, இகத்தினில் இன்பங் குறைவிலது என்று கூட்டுக. உலகத்தின் இம்மையின்பம், மழையும் விளையுளுமாகிய இவற்றான வருதலானும், இவற்றை அரச னது செங்கோல் நிலைபெறுதலானும் இகத்தினில் இன்பம் குறைவிலதாயிற்று. "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட, பெயலும் விளையுளும் தொக்கு" (குறள்). ஈண்டு இன்பம் என்றது ஐம்புல வின்பங்களாகிய உலக வின்பங்களை.

இன்பங் குறைவில தெனினும் - பிறவித் துன்ப நீங்கிடப் பெற்றது - உலக இன்பங்கள் துய்ப்பபோதும் பற்றறுமையால் பிறவியறுதலில்லை என்பது நூல்களின் துணிபு. "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்", "பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை", "அடல்வேண்டு மைந்தன் புலத்தை; விடல்வேண்டும், வேண்டிய வெல்லா மொருங்கு" (குறள்) என நீதிநூல் பேசும்; "மோக மறுத்திடினும் முத்தி கொடுப்ப தென, வாகமங்கள் சொன்ன வவர்" (களிறு - 72); "ஆசை நீத்தவர்க்கே வீடு தருவ னெனவில் வேதஞ் சாற்றிய தலைவன்" (திருவிளை. புரா-பாயி) எனப் பெருநூல்கள்

துணிவன; உண்மை இவ்வாறாக ஈண்டு இகத்தினில் இன்பம் குறைவிலாதாயினும் அதனால் பிறவி பெருகுதலின்றிப் பிறவித்துன்பம் நீங்கிடப்பெற்றதென்பார் எனினும் என்றார்.

நாமங் கூறித் - துன்ப நீங்கிடப் பெற்றது - உலக இன்பம் துய்த்தலால் இவ்வாறு நூல்கள் விதித்தவாறு பிறவி பெருகாமல் அத்துன்பம் நீங்குதற்குக் காரணம் திருநாமங் கூறுதல் என்பதாம்; . . "ஐந்து புலன்களு மார வாரந்து, மைந்தரு மொக்கலு மகிழ மனமகிழ்க, இவ்வகை யிருந்தோ மாயினு மவ்வகை, மந்திர வெழுத் தைந்தும் வாயிடை மறவாது, சிந்தை நினைவழிச் செலுத்தலி னந்த, முந்தீ யுமிழ்ந் தில; முதல்வ! வத்திறம், நின்னது பெருமை யன்றே! வென்னெனின்?, வல்லா னொருவன் கைம்முயன் றெறியினும், மாட்டா வொருவன் வாளா வெறியினும், நிலத் தின் வழாஅக் கல்லே போல, நலத்தின் வழாஅர் நின்னு நவின் றோரே" (திருவிடை - மும் - கோ - 19) என்ற பட்டினத்தடிகளது கருத்து ஈண்டு விளக்கப்பட்டது காண்க.

கூற்றையுதைத்தவர் - இயமனை உதைத்த தன்மை காட்டிய இவரே பிறவித் துன்பமாகிய மரணத் துன்பத்தை நீக்கவல்லவர் என்பார் இவ்வாற்றாற் கூறினார்.

நாமங் கூறி - அரகர என முழக்கஞ் செய்தலும் வியாளித்தலுமாம். "எல்லாம் அரனாமமே சூழ்க" என்ற "வாய்மை"ப் பயன் இது.

கடல் - இங்குக் கடலை அலை குறித்து நின்று, அலைபோல மேன்மேல் தொடர்ந்து வருதல் குறித்தது.

அவனி, - துன்ப நீங்கிடப் பெற்றது - "வையகமுந் துயர் தீர்கவே" என்ற 'வாய்மை'யின் பயனுதல் காண்க. இவ்வாறு ஞானசம்பந்தர் பரமாசாரிய ராதலின் அவர் சத்தியவலியால் எழுந்த ஞானவாய்மையாகிய அருள்வாழ்த்து அவ்வாறே பலித்தது முழுதும் பயன் தந்தமை கண்டுகொள்க.

இன்பம் குறைவிலதெனினும் நாமம்கூறி அவனி பிறவித்துன்ப நீங்கிடப்பெற்ற தன்மை பிள்ளையாரது வாய்மையின் பயன் என்பதாம். பொருள் செல்வம் புரியார் கண்ணும் உளதாதலின் அச்செல்வம் யாதுபோதும் தெய்வமும் சிறிது பேறுடைய நாடில வீழ்வார் உலக மாக்கள், ஆதலால் ஈண்டு ஞானாசிரியரது அருள் திருநோக்கம் பெற்ற பேற்றினால் மதுரை வாழ்வார் செல்வமும் பெற்று, அதனோடு நாமம் கூறிப், பிறவித் துன்ப நீக்கவும் பெற்றனர் என்க. 860

2759. 'அங்கயற் கண்ணி தன்னொ டாலவா யமர்ந்த வண்ணல்
பங்கயச் செய்ய பாதம் பணிவ"னென் றெழுந்து சென்று,
பொங்கொளிச் சிவிகை யேறிப் புகலியர் வேந்தர் போந்தார்,
மங்கையர்க் கரசி யாரு மன்னனும் போற்றி வந்தார். ௮௬௧

(இ - ள்) "அங்கயற்கண்ணி ... பணிவன்" என்று - அங்கயற்கண்ணியம்மையாருடனே திருவாலவாயில் விரும்பி வீற்றிருந்தருளிய பெருங்கருணையாளராகிய இறைவரது தாமரைபோன்ற திருவடிகளை வணங்குவேன் என்று; எழுந்து சென்று - வையையாற்றின் கரையினின்றும் எழுந்துபோய், பொங்கொளி...போந்தார் - மேன்மேற் பொங்கும் ஒளியினையுடைய முத்துச் சிவிகையின் மேற்கொண்டு சீகாழி மன்னவர் போந்தருளினர்; மங்கையர்க்கரசியாரும...வந்தார் - மங்கையர்க்கரசியம்மையாரும் செம்மாறனாராகிய அரசரும் போற்றிக்கொண்டு அவர்பின் வந்தனர்.

(வி - ரை) "அங்கயற்கண்ணி ..பணிவன்" என்று - இது பிள்ளையார் உட்கொண்டருளிக் கூறியது. அரசனிடம் வருமுன் திருமடத்தினின்றும் நேரே திரு

*வாலவாயினுட் சென்று பணிந்து "காட்டுமா", "வேதவேள்வி" என்ற பதிகங்களைப் பாடித் திருவருட் குறிப்பினைப் பெற்ற பின்பே போந்து சமணருடன் வாதம் செய்து முடித்தருளினாராதலானும், இவ்வாதங்கள் அவரருள்வழியே நின்று தம் செயல் அவர் செயலேயாக நிகழ்த்தப்பட்டனவாதலானும், இவை முடிந்தபின்பு அரசன் கோயிலுக்கேனும் திருமடத்துக்கேனும் வேறெங்கும் செல்லாது திருவாலவாயுட்சென்று அந்த இறைவரைப் பணிவேன் என்றுட்கொண்டனர். இதுவே " தம்மை மறந்து நின்னை நினைப்பவர்" (கோயினான்மணிமாலை) என்ற தன்மை பெற்ற பெரியோர் இயல்பு. " மறக்குமா றிலாதவென்னை" (தேவா) என்றபடி எப்பொழுதும் மறவாது பணிந்திருக்கும் நிலையினர் பிள்ளையார்; இவ்வாதத்தில், "புத்தரோ டமணை வாதி லழிவிக்கு மண்ணல் திருநீறு செம்மை திடமே" என்று முன் கூறியவாற்றானும், "ஆலவாய் மேவிய வையனே! அஞ்ச லென்றருள" என்றும், "ஆற்ற லடல்விடை யேறு மாலவா யான்றிரு நீற்றைப், போற்றி...ஞானசம்பந்தன், தேற்றித் தென்னனுட லுற்ற தீப் பிணியா யினதீரச், சாற்றிய பாடல்கள்" என்றும், "மலைமகள் குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலின்......எரியிடிலிவை பழுதிலை" என்றும், "மதுரைத் தொகையாக்கினும்......கரைக்கோலை தெண்ணீர்ப் பற்றின்றிப் பாங்கெதிர் வினவும் பண்பு நோக்கில்" என்றும் கூறியவாற்றாலும், "நள்ளா றுடைய நம்பெரு மானிது வென்கொல் சொல்லாய்......ஆலவாயினக் ணமாந்த வாறே" - (தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதிற் றீயினக் ணிடுமேடு பரசை யாக்கி, யென்னுள்ளத் துணை யாகி யால வாயி லமர்ந்திருந்த வாறெனகொ லெந்தாய்) என்று பின்னர்க் கூறுமாற்றானும் பிள்ளையார் எப்போதும் பணிந்தே நின்றனர் என்பதறியப்படும்; ஆயின் இங்குப்* "**பாதம் பணிவனென் றெழுந்து**" *என்றதென்னையோ? எனில்: "ஞானத்தாலங்குச் சிந்திக்கும் படியிங்குச் சிந்தித்துப் போற்றிப் - புறம்பேயு மரனகழல்கள் பூசிக்க" (சித்தி - 9-11) என்றபடி பூசித்தலும், தமது உள்ளத் துணையாகி உடனிருந்தியக்கிய இறைவரை நன்றியின் பொருட்டு நேரே பணிதலும், உலகர்க்கு வழிகாட்டலும் கருதியென்க. அற்றாயின் வைகைக்கரையி னின்றவாறே பணிதலாகுமே? எனின், அற்றன்று; "அம்முதலவன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் (திருவேடம், சிவாலயம் என்ற) இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரின் நெய்போல விளங்கி நிலைபெற்று, அல்லுழி யெல்லாம் பாலி னெய்போல வெளிப்படாது நிற்றலான்" (அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்) என்ற சிவஞானபோதம் 12-வது சூத்திரச் சிற்றுரையும் வார்த்திகமும் கருதுக.*

**எழுந்து** - *வைகைக்கரையில் அமர்ந்திருந்த இடத்தினின்றும் எழுந்து;* **சென்று** - *அவ்விடத்தினின்றும் முத்துச்சிவிகை யிருந்த இடம்வரையும் சென்று.*

**போந்தார்** - *திருவீதியினுள்ளே சிவிகையின்மேற் சென்றருளினர்.*

**வேந்தர் - மன்னன்** - *ஈண்டு மன்னவன் மாறனுக்கு மன்னராய் விளங்கிய நிலை குறிக்க* **வேந்தர்** *என்றார்.*

**மங்கையர்க்கரசியாரும்** *என அம்மையாரை முன்வைத்துக் கூறியது சிறப்புப் பற்றி. அருள் வெளிப்படும் இட"மாகும் நிலைபற்றி" அங்கயற்கண்ணி தன்னோடு" என அம்மையாரை முன்வைத்துக் கூறியவாறே ஈண்டும் கூறியது காண்க. "மங்கையர்க்கரசி" என்ற தேவாரத்தும் "அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த வாலவா யாவது மிதுவே" என்றநிலை குறிப்பித்தமையும் கருதுக.*

**அண்ணல்** - *பெருமையுடையோர். பெருமையாவது தம்மை அஞ்சலென்றருளி உடனாக இருந்து இயக்குவித்துத் தாம் விண்ணப்பித்தவாறே ஆட்கொண்டதனோடு,*

அச்செயலொன்றுமே அரசனையும் அவனுடன் அவனது நாடு முழுமையும் ஆட்கொண்ட திறம் தொடக்கத்து "அண்ணல் திருநீறு செம்மை" (தேவாரம்) என்று குறிப்புத்தர இவ்வாறு கூறினார்.

போற்றி - ஆளுடைய பிள்ளையாரைப் போற்றி.

அமர்ந்த வள்ளல்— என்பதும் பாடம்    862

2760. எண்ணரும் பெருமைத் தொண்ட ரியாவரும் மகிழ்ச்சி யெய்திப்
புண்ணியப் பிள்ளை யாரைப் புகழ்ந்தடி போற்றிப் போத,
மண்ணெலா முய்ய வந்த வள்ளலார் தம்மைக் கண்டு
கண்ணினாற் பயன்கொண் டார்கள் கன்னிநாட் டவர்க ளெல்லாம்.

(இ - ள்) எண்ணரும்...போத - எண்ணுதற்கரிய பெருமையுடைய தொண்டர்கள் எல்லாரும் மகிழ்ச்சியடைந்து சிவபுண்ணியப் பிழம்பாகிய பிள்ளையாரைப் புகழ்ந்து அவரது திருவடிகளைத் துதித்துக்கொண்டு உடன் வர; கன்னி நாட்டவர்கள் எல்லாம் - பாண்டி நாட்டவர்கள் எல்லாரும், உலகத்தை எல்லாம் உய்யும் பொருட்டே திருவவதரித்த வள்ளலாராகிய பிள்ளையாரை நேரே காணப்பெற்றமையாலே; கண்ணினாற் பயன்கொண்டார்கள் - கண்கள் படைத்த பயனையடைந்தனராயினார்கள்.

(வி - ரை) எண்ணரும் பெருமைத் தொண்டர் யாவரும் - எண்ணரும் பெருமை - அடியார்களுடைய பெருமைகள் நினைத்தற்குமரியன என்பது "தொண்டர்தம் பெருமையைச் சொல்லவு மரிதே", "தெரிவரும் பெருமைத் திருத்தொண்டர்" (1). யாவரும் - பிள்ளையாரது திருக்கூட்டத்துடன் வந்தோரும், மதுரை ஆலவாயிற் பணி செய்வோரும், அன்று உண்மையிலே கண்டு பழையபடி நீறு அணிந்துகொண்ட மதுரை வாழ்வாராம் தொண்டர்களுமாகக் கூடிய எல்லாரும்.

மண்ணெலாம் உய்ய வந்த வள்ளலார் - ஆளுடைய பிள்ளையார்; பிறவிக்கு வித்தாகத் தமக்கென்று கருமப்பகுதி ஒன்றுமில்லாதவராய், உலகத்தை உய்வித்தற்கென்றே திருவவதரித்தவர் - பிள்ளையார்.    வள்ளலார் - வரையாது கொடுத்தவர் என்பது.

கண்ணினாற் பயன்கொள்ளுதலாவது கண்பெற்ற பேறாகிய உறுதிப்பயன் பெறுதல். முன்னர் வைகைக் கரைக்கு வாதின்பொருட்டுச் சென்றருளிய பிள்ளையாரைக் கண்ட மாந்தர் "வாழ்ந்தன கண்கள்" என்றதிலே வேறு; அஃது ஆண்டுப் புனல்வாதத் தொடக்கமுன் மதுரைவீதியில் பிள்ளையாரைக் கண்ட மாந்தர் பலரும் தத்தமக்கேற்றவாறாகப் பற்பலவாறு பேச, அதனுள் அவரது அழகில் ஈடுபட்ட ஒருசிலர் பேசிய நிலை. ஈண்டுக் கூறியது உண்மை கண்டபின் அவரது அருளில் தோய்ந்து ஆட்கொள்ளப்பட்டு நீறணிந்து உய்ந்துகொண்டோர்களின் நிலை. ஆதலின் கூறியது கூறலன்மை புணர்க. முன்னர்க் கண்ட பலருள் ஒருபகுதியினரே "கண்கள் வாழ்ந்தன" என்றவர்; ஈண்டு எல்லவரும் கண்டு கண்பெற்ற பயன் பெற்றனர். எல்லாம் - என்ற கருத்துமிது.

புகழ்ந்துமுன்—புகழ்ந்துடன்—என்பனவும் பாடங்கள்.    862

2761. ஆலவா யண்ணல் கோயி லங்கண்முன் றோன்றக் கண்டு
பாலறு வாயர் மிக்க பண்பினாற் றொழுது சென்று
மாலுநான் முகனும் போற்ற மன்னினார் கோயில் வாயில்
சீலமா தவத்தோர் முன்பு சிவிகைநின் றிழிந்து புக்கார்.    அகூ

(இ - ள்) ஆலவாய...கண்டு - இறைவரது திருவாலவாய என்னும் கோயில் அவ்விடத்தில் முன்பு தோன்றிடக் கண்டு; பாலறுவாயர்...சென்று - பிள்ளையார் மிகுந்த அடிமைப பணபினாலே தொழுது சென்று; மாலும...புக்கார் - விட்டுணுவும் பிரமனும் துதிகக நிலைபெற எழுநதருளிய இறைவரது கோயிலின திருவாயிலின் முன்பு சீலமுடைய அடியாாகளின முன்பு முததுச சிவிகையினினறும இறங்கி உள்ளே புகுந்தனா.

(வி - ரை) அண்ணல் ஆலவாய்க் கோயில் என்க. ஆலவாய எனபது கோயிலின் பெயா.

**அங்கண்முன் தோன்றக் கண்டு** - வைகைக கரையினின்றும் சிலதூரம வநத பின்பே ஆலவாயக் கோயில் முன்னே கட்புலபபடும ஆதலின் அவ்வாறு தோன்ற.

**மிக்க பண்பாவது** - உறைபபுடைய அடிமைததிறம.

**மாலு நான்முகனும் போற்ற மன்னினார்**-பிரமன முதலிய தேவாகள வநது துதிதத வரலாறுகள் தலபுராணததுட் கணடுகொளக.

**வாயில்** - திருவாயிலின அணிததாகிய இட ததில.

**சீல மாதவத்தோர்** - சைவ சீலமுடைய அடியவாகள். **மாதவம்** - ஈண்டுச் சிவபூசையே தவமெனபபடும. 863

2762. தென்னவன் றானு மேங்கள் செம்பியன் மகளார் தாமும்
நன்னெறி யமைசச ஞரு ஞானசம பநதர் செய்ய
பொன்னடிக் கமலம் போற்றி யுடன்புகப் புனிதர் கோயில்
தன்னைமுன் வலங்கொண் டுள்ளாற் சண்பையர் தலைவர் புக்கார்.

(இ - ள்) தென்னவன தானும்......அமைசசனும்-பாண்டியனும எஙகளுடைய சோழ மன்னரது மகளாராகிய மஙகையாககரசியாரும உலகை நனனெறிபபடுத்தும் மந்திரியாராகிய குலசசிறை நாயனாரும்; ஞானசமபநதா...உடனபுக - திருஞானசமபநதருடைய செமமை தரும பொறபாதத தாமரைகளைப போறறி எனத துதிததுக கொணடு உடனே உட்புக; சணபையா தலைவா - சீகாழியரவர்களது தலைவராகிய பிளளையார்; புனிதர் கோயில......வலஙகொணடு - புனிதராகிய இறைவரது திருககோயிலினை முன வலமாகச் சூழநது வநது; உளளால் புககாா - உள்ளே புகுநதருளினர்.

(வி - ரை) தென்னவன் தானும்..உடன்புக - முன்னா "மஙகையர்ககரசி யாரும மனனனும போறறி வநதார்" (2759) என றது வைகையாறறினின்றும போந்து திருவீதியில வநத செயல குறிததது; ஈணடுக கூறியது திருககோயிலினுள புகும்போது பிளளையாருடனேகூடச செலலுமபோதுஉளள நிகழசசியினை. இதனை இவவாறு வேறுபிரிதது விதநது கூறியதெனனை? எனின், முனனர்த தொடககதது அந்நாளின் முன்னாளில் அமைச்சா மட்டும் உடன் வரவும அமமையார் முன்னமே சென்றிருப்பவும் ஆலயததுட் செனறருளிய பிளளையாா, திருமடததினின்று அந்நாள முற்பகல அரசன கோயிலுக்குப போதுவாா இறைவர் திருவுள்ள மறிவே னென்று "திருவாலவாயுட் புககார்" (2635). அபபோது கவலைமீக் கொணட "அம்மலர்க குழலினாரும் அமைச்சரும்" மட்டும் உடன் புகப் புக்கருளினர். அதுகாலை அரசன் அமணர் சூழ்ந்து நிற்ப உணர்வின்றி மிக்க சுரநோயுடன கிடந்தனன்; திருவருள் கைவந்தமையால் ஈண்டு அநேநாளில் பிற்பகல் அரசன் உள்நோயும் புறநோயும் நீஙகி அமணர் சூழலும் நீஙகி உடன்வரவும், பன்னாள்

அவன் "முன்பு புலப்படா வகைகொண் டுய்த்த" "ஓங்கிய சைவவாய்மை ஒழுக்கத்தினின் றான்" சிவவழிபாட்டினை, அவ்வரசனும் உடன் வரவும், உலகம் உய்ய நெறி நீங்கித் திருநெறியிற் செல்லவும் கண்ட பெருமகிழ்ச்சியுடனே அம்மையாரும் அமைச்சனாரும் உடன்வரவும், முன்னாப் பிள்ளையாரை அந்த மாநகரிடத்திராது அகல விக்க அமணர் சூழ்ச்சிப்பட்ட அரசனாருமே அவருடன் கூடச்சென்று இறை வழிபாட்டினை நிகழ்விக்கவுமாகக் கண்ட இவ்வற்புதக் காட்சியினைத் தமது திருவுளத்துக் கண்டு மகிழ்ந்த ஆசிரியர் அதனை நாமும் குறிக்கொள்ளும் வகை எடுத்துக் கூறியவாறுமாம் என்க; மன்னவன்றானும் என்ற குறிப்பும் இது.

**எங்கள் செம்பியன் மகனார்தாமும்** - எங்கள் - சைவம் பெருக்கிய உரிமைப் பாட்டின் சிறப்பு; அநபாய சோழர் மந்திரியாராயிருந்த நிலைமையில் அவர் விரும்பியபடி தாம் இப்புராணம் பாடியபடியால் அமைந்த உரிமையும், இராசராச சோழர் திருமுறைகளை வெளிப்படுத்திய நிலைமையின் அமைந்த உரிமையும், பிறவும் கருத்துட் கொண்டு கூறியவாறும் "மங்கையர்க்குத் தனியரசி யெங்கள் தெய்வம்" (மங்கையர்க்கரசியார் புராணம்) என்றும், "தங்கள் பொங்கொளிவெண் டிருநீறு பரப்பினாரை" என்றும் கூறும் கருத்துக்களை ஈண்டு வைத்துக் காண்க. எங்கள் செம்பியன் - "மன்னிய சைவத் துறையின் வழிவந்த குலவளவர்" (1900) என்று இப்புராணத் தொடக்கத்துக் கூறிய குறிப்புங் காண்க.

**மகனார் - அமைச்சனார்** - என்ற பன்மைக் குறிப்பும் தென்னவன்றானும் என்ற ஒருமைக் குறிப்பும் முன் சரித நிகழ்ச்சியாற் குறித்தவாறாம்.

**ஞானசம்பந்தர் செய்ய பொன்னடிக் கமலம் போற்றி** - போற்றி என்று துதித்துக்கொண்டு, திருக்கோயிலினுட் புகும்போதும் திருக்கோயிலினுள்ளும் சிவனையன்றி வேறு நினைத்தலும் துதித்தலும் செய்யலாகாது என்பது விதி. ஈண்டு இவ்வாறு இம் மூன்று பெருமக்களும் பிள்ளையாரைப் போற்றிப் புக்கதென்னை? எனின், அது தம் மிறைவரும் குலமுதல்வருமாகிய அவ்விறைவர் பிள்ளையாராகத் தந்தருளி யாட்கொண்ட நன்றி பற்றி எழுந்ததென்பது, மேல் (2765) விளக்கப்படுவது காண்க. செய்ய - செம்மை - சிவத் தன்மை - தூய்மையுடைய. சிவந்த என்றலுமாம். ஆலயத்துள் ஆசாரியரை வழிபடுதல் வேண்டும் என்ற விதியும் கொள்ளப்படும்.

**உள்ளால்** - உள்ளே இறைவர் திருமுன்பு. ஆல் - ஏழனுருபின் பொருளில் வந்தது. 864

2763. கைகளுந் தலைமீ தேறக் கண்ணிலா னந்த வெள்ளம்
மெய்யெலாம் பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி,
"ஐயனே யடிய னேனை 'யஞ்சல்'என் றருள வல்ல
மெய்யனே" யென்று "வீட லாலவாய்" விளம்ப லுற்றார். ௮௯௫

**(இ - ள்)** கைகளும் ..பொழிய - கைகள் இரண்டும் தலையின்மேல் ஏறிக் குவிந்திடவும் கண்கள் இரண்டினின்றும் ஆனந்தக் கண்ணீர்வெள்ளம் திருமேனி முழுவதும் பொழியவும்; வேத ..போற்றி - வேத முதல்வராகிய இறைவரைப் பணிந்து துதித்து; ஐயனே ..என்று - "ஐயனே! அடியேனையும் அஞ்சேல் என்று அருளிச் செய்து ஆட்கொள்ளவல்ல மெய்ப்பொருளாகியவரே!" என்று; வீடலாலவாய் விளம்பலுற்றார் - வீடலாலவாய் என்று தொடங்கும் திருப்பதிகத்தினை அருளிச்செய்ய லுற்றனர்.

**(வி - ரை)** கைகளும் தலைமீது ஏற - ஏற - முயற்சியானன்றித் தாமே ஏறிக் குவிய; உம்மை கண்களினின்றும் வெள்ளம் பொழிய என எதிரது தழுவிற்று.

மெய்யெலாம் கண்களின் வெள்ளம் பொழிய - என்க. வெள்ளம் பெருகி உடல்முழுதும் நனைப்ப.

வேத முதல்வர் - வேத வேள்வியை நிந்தனைசெய் துழல்வோரை வென் றழிக்கத் திருவுள்ளம் வைத்தவராதலின் ஈண்டு "வேத முதல்வர்" என்ற பெயராற் கூறினார்.

ஐயனே - பெருமையுடையவரே - அண்ணலே.

அடியனேனை அஞ்சலென் றருளவல்ல மெய்யனே! - "ஐயனே! யஞ்சல் என் றருள்செய் எனை" (தேவா) என்று பதிகம் பாடியதற்கேற்ப அஞ்சல் அளித்து அருளியவர் என்பது குறிப்பு. மெய்யன் - சத்திய சொரூபமானவர் ஆதலின் அழிக்கவும் மறைக்கவும் கூடாதவர்.

"ஐயனே...மெய்யனே" - பதிகக் கருத்தும் குறிப்புமாம். மேற்பாட்டும் பதிகக் குறிப்பும் பார்க்க.

வீடலாலவாய் - இத்தொடக்கத்தையுடைய திருப்பதிகத்தினை. 865

VIII திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் திருவிராகம் பண் - கௌசிகம்

வீட லால வாயிலாய் விழுமி யார்க ணின்கழல்
பாட லால வாயிலாய் பரவ நின்ற பண்பனே
காட லால வாயிலாய் கபாலி நீள்க டிம்மதிற்
கூட லால வாயிலாய் குலாய தென்ன கொள்கையே. (1)

பட்டி சைந்த வல்குலாள் பாவை யாளோர் பாகமா
வொட்டி சைந்த தன்றியு முச்சி யாளொ ருத்தியாக்
கொட்டி சைந்த வாடலாய் கூட லால வாயிலாய்
எட்டி சைந்த மூர்த்தியா யிருந்த வாறெ தென்னையே. (2)

குற்ற நீகு ணங்கணீ கூட லால வாயிலாய்
சுற்ற நீபி ரானுநீ தொடர்ந்தி லங்கு சோதிநீ
கற்ற நூற்க ருத்துநீ யருத்த மின்ப மென்றிவை
முற்று நீபு கழ்ந்துமுன் னுரைப்ப தென்மு கம்மனே. (3)

பொன்ற யங்கி லங்கொளிந் நலங்கு ளிர்ந்த புன்சடை
பின்ற யங்க வாடுவாய் பிஞ்ஞ காபி றப்பிலீ
கொன்றை யம்மு டியினாய் கூட லால வாயிலாய்
நின்ற யங்கி யாடலே நினைப்ப தேநி யமமே. (6)

போய நீர்வ ளங்கொளும் பொருபு னற் புகலியான்
பாய கேள்வி ஞானசம் பந்த னல்ல பண்பினால்
ஆய சொல்லின் மாலைகொண் டால வாயி லண்ணலைத்
தீய தீர வெண்ணு வார்கள் சிந்தை யாவர் தேவரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—"மானிட ருய்யவேண்டி நின்றுநீ யாடல்செய்கை நினைப்பதே நியமமாகும்" என்பது பதிகக் கருத்து என ஆசிரியர் காட்டக் கண்டுகொள்க (2764).

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) விடு-அல்-ஆல-வாய்-இலாய் - கரிய விடத்தை யுடைய பாம்பினை கட்டப்பட்ட இடத்தை வீடாக - இருப்பாகக் - கொண்டவரே! ;—விடல் - ஆல் - அ - வாயில் - ஆய் - விழுமியார்கள் - விடல் - விடுதலை - வீடு பேற்றின் பொருட்டு ; ஆல் - கல்லால் ; அ - வாயில் - அந்த இடத்தில் கல்லாலின் கீழ் ; ஆய் - ஆய்ந்த ; விழுமியார்கள் - சனகாதியர் முதலியோர் ; எனவும் பொருள் கொள்வர்—(வ. சு. செ.) (வேறு பலவாறும் பொருள் கொள்வர்.) பாடலால் - அ - வாயிலாய் - பாடுதலினாலே அந்த வாக்கினிடம் விளங்குபவரே ! ; காடு அல்(ல்) லால் அவா இலாய் - சுடுகாட்டையன்றி வேறு இருப்பிடம் விரும்பாதவரே ; நீள் - கடி - கபாலி மதிற்கூடல் ஆலவாயிலாய் - நீண்ட காவலையுடைய கபாலி மதில் சூழ்ந்த திருக்கூடலாலவாயக் கோயிலினுள் எழுந்தருளிய இறைவரே!; தலாயது என்ன கொள்கையோ - இந்த எம்முடன் உள்ளே விளங்க விரவி எழுந்தருளியிருந்து அருள்புரிந்து என்று கொண்ட தன்மைதான் என்னே ? (எம்மால் அதன் பெருமை உணர்ந்துரைக்கும் தரமன்று) ;—(2) ஒட்டு இசைந்தது - பிரித்தறியலாகா வகையால் இணைந்தும் பிணைந்தும் கூடியின்றது ; "அண்ண லிருப்ப தவளக் கரத்ததே, பெண்ணி னல்லாளும் பிரானக் கரத்ததே" (திருமந்திரம்) ; "உடையா ளுன்ற னடுவிருக்கு முடையா ணடுவு ணீயிருத்தி" (திருவா) ; "சத்திதான் சிவனை யின்றாகு சிவனுஞ்சத்தி தன்னை யின்றாம்" (சித்தி - 2-77) ; ஒட்டு - "ஒட்டிட்ட பண்பி னுருத்திர பலகணத்தார்க்கு" (பின். தேவா - மயிலை) ; "உணரப்படுவாரோ டொட்டி வாழ்தி" (அரசு) ; "ஒட்டி உளமவனு மில்லான் - உள மவனு மாட்டாது" (போதம் - 2) ; ஒட்டுதல் - பிரிப்பின்றிப் பொருந்துதல் ; ஒட்டாக இசைந்தது என்க ; குணமும் குணியும்போல. உச்சியாள் - கங்கை ; ஒருத்தியா - ஒருத்தியாகக் கொண்டு ; ஆக என்றது, ஆ என ஈறு குறைந்து நின்றது ; கொட்டு இசைந்த ஆடல் - தாள முதலிய இயங்களுக்கு இசைந்தபடி ஆடுதல் ; "இலயம்பட" (தேவா) கொட்டு-பெயர் ; நான்கனுருபு விரிக்க ; கொட்டு இசைந்த ஆடல் - கொட்டியாடல் - திரிபுரமெரித்தஞான்று ஆடிய ஆடல் ; "திரிபுர மெரி யத் தேவர் வேண்ட...இமையவ ரேத்திய கொடுகொட்டியாடல்" (சிலப் - ௬ - 40) (வ. சு. செ.) ; எட்டு இசைந்த மூர்த்தி - நிலம் முதலிய அட்டமூர்த்தமும் தனது திருமேனியாக வுடையவன் ; எண்டு எரியில் வடு வேவாமை கருதிய குறிப்பு. என்னே - உணர்வுக்கும் வாக்கிற்கும் எட்டாமை குறிப்பு ;—(3) குற்றம் நீ குணங் கள் நீ - "அவையே தானே யாயிரு வினையின்...ஆணையி னீக்க மின்றி நிற்பன்" (போதம் - 2) என்பார் இவ்வாறு கூறினார். இதன் விரிவு ஆண்டுக் காண்க. "பந் தம் வீடு தரும் பரமன்" (300) என்றவிடத் துரைத்தவையும் பார்க்க ; "பந்த மும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லான்" (சித்தி - 1-44) கருதுக. குற்றம்நீ ...சோதி நீ - குற்றம் - இறைவர் உலகெலாமாய் அவையேயாயிருக்கும் நிலை யினையும்; பிரான் - அவற்றின் வேறாய்த் தானேயா யிருக்கும் நிலையினையும், தொடர்ந்திலங்கு சோதி - அவற்றோடு உடனாகி நிற்கின்ற நிலையினையும் உணர்த்தின. கற்றநூற் கருத்து - வேத சிவாகமங்கள் ; அருந்தும் இன்பம் - இருவினைக்கீடாக உயிர் கள் போகங்களை நுகரச்செய்யுந் தன்மை - சாதனங்கள் ; புகழ்ந்து...முகம்மனே - இவ்வுண்மைகளை எப்போதும் மனத்துட்கொண்டு மறவாது ஒழுகி அன்பு செய்தலன்றி முகமனாக உரைத்தலிற் பயனில்லை - உரைக்கவும் படாதது ;—(4) முதிரும் நீர்ச்சடை முடி முதல்வன் நீ - முதிரும் - "நிலலாத நீர் சடைமேல் நிரப்பினானை" (தேவா); "பன்னக் தாழ்சடை புனல்" என்றபடி மேலிருந்து கீழ் வேகத்துடன் செல்லும்

தன்மையை மாற்றிக் கீழ்நின்று மேனோக்கிச் செல்லும்படி தாங்கியவர் என வாதத்தின் இறுதியாய்ச் செய்த அருட்குறிப்பு. முழங்கு அழல் ஏந்தி - சுடுந்தன்மையுடைய தீயினை அவ்வாறல்லாது செய்த அனல்வாதத்தின் அருட்குறிப்பு; மதுரன் - இன்பவுருவினன்- இன்பஞ் செய்பவன் ; மணாளன் - நடத்துபவன் - நாயகன் ; சதுரன் - வெற்றிப்பாடுடையவன் ; சதுமுகன் கபாலமேந்து சம்பு - மூவர்க்கு முதலாகிய முதல்வன் - சங்கார காரணனாகிய முதல் ; சம்பு - சுகத்திற்கு இருப்பிடமானவன் ; "இன்ப மாக்கலிற் சம்பு"—(காஞ்சிப்புரா)—(5) நீள்மதில் - கபாலிமதில் ; பாலறாய தொண்டுசெய்து பண்டுமின்றும்...சீலமாய சிந்தை - பிள்ளையாரது முன்னைநிலைத் தொண்டின் குறிப்பும் அதனையே தொடர்ந்து இங்குவந்து பணிசெய்து நிற்கும் குறிப்பும் உணர்த்தும் சிறந்த சரிதஅகச்சான்று ; "பண்டு திருவடி மறவாப் பான்மையோர்" (1953) ; "பவமற வென்னை முன்னா ளாண்டவப் பண்பு கூட" (புரா - 1244), "மறக்குமா றிலாத வென்னை" (தேவா) முதலிய திருவாக்குக்களைக் காண்க. பாலறாய - "ஆளுடைய பிள்ளையார்" (1966). —(6) பின் தயங்க - பின்புறம் அசைந்தாடி விளங்க ; நின்று தயங்கி ஆடல் - இங்குக் கூறும் ஆடல் சிவஞானிகள் கண்டு எப்போதும் கும்பிட்டுச் சிவானந்தத்திற் றேக்கிநிற்கும் திருக்கூத்து; உலகம் மீளப்படைத்தல் முதலாக அருளல் ஈறாக வரும் ஊழி எல்லையாக வுள்ள ஐந்தொழிற்கூத்தும், நித்தசங்காரம் என்பதாதியாகக் கூறப்படும் ஐந்தொழிற்கூத்தும் வேறு ; இங்குக் குறித்த தயங்கியாடல் வேறு. இவை வெவ்வேறு நிலையன. தயங்கியாடல் என்று சிவஞானிகள் கண்டு திளைத்திருக்க ஆடும் கூத்தைத் "தம் முணைவுறைந்தஞா னத்தெழு மானந்த வொருபெருந் தனிக் கூத்து (2558), "வவ்விய மெய் யுணர்வின் கண் வருமானந்தக் கூத்து" (3570) என்று கூறப்பட்டு ஆளுடைய பிள்ளையாரும் திருமூல நாயனாரும் கண்டுணர்ந்து திளைத்த திருக்கூத்து ; திருமூலர் திருமந்திரத்தினுள் திருக்கூத்துத் தரிசனம் (ஒன்பதாந் தந்திரம்) என்ற பகுதியில் "எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி" (9-74) என்பதாதியாகச் சிவானந்தக் கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக்கூத்து, பொற்றில்லைக்கூத்து, அற்புதக்கூத்து என்ற தலைப்புக்களிற் பேசப்படுவது ; பின்னையது இரண்டாந் தந்திரத்தினுள் "சாவ சிருட்டி" முதலாக (45) அநுக்கிரக மீறாக (114) வரும் திருமந்திரங்களுட் பேசப்படும்; —(7) கீதம் வந்த வாய்மையாற் கிளர் தருக்கினார் - கீதம் வந்த வாய்மை - அன்பு மேலீட்டினாற் றம்மை மறந்து கீதங்கள் பாடிக்கொண்டிருத்தல். "என்புருகிப் பாடு கின்றிலை" (திருவா) ; "கீதத்தை மிகப்பாடும்" (தேவா) ; "பாட்டும் பாடிப் பரவித் திரிவார்" (தேவா-ஒற்றியூர) ; "பண்ணொன்ற விசைபாடும்" (தேவா) முதலியவை காண்க "ஆடுவதும் பாடுவது மானந்த மாகநின்னைத், தேடுவது நின்னன்பர் செய்கை பராபரமே" என்றார் தாயுமானார்; தருக்காவது சிவனடிக் கீழும், சிவனடியார் திருக்கூட்டத்தின் உள்ளும் இருந்துவாழும் ஆனந்தத்தால் வருவது; "இறுமாந் திருப்பன் கொலோ வீசன் பல்கணத் தெண்ணப்பட்டுச், சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று" (தேவா) ; ஆதுமே - ஏகாரம்; ஆகாது என எதிர்மறைப் பொருட்டு ;—(8) கருத்திலா மன்னனை என்று கூட்டுக. நிறை இலங்கு நெஞ்சு-பிறிதொன்றனுக்கும் இடமின்றி(ப் பொதுநீக்கி) இறைவனையே நினைக்கும் நெஞ்சு ;—(9) தீவணம் - "எரிபோல்மேனி" (தேவா) ;—(11) போய நீர் - மிகுதியாய் வயலுள் புகும் நீர். தீய - தீர - தீயவை எல்லாம் தீரும்படி; எண்ணுவார்-எண்ணுவார்களை. சிந்தை யார்வர் என்பதும் பாடம்.

2764. "ஒன்றுவே றுணர்வு மில்லே னொழிவற நிறைந்த கோலம்
மன்றினின் மறைக ளேத்த மானுட ருய்ய வேண்டி

நின்றுநீ யாடல் செய்கை நினைப்பதே நியம மாகும்"
என்றுபூம் புகலி மன்ன ரின்றமிழ்ப் பதிகம் பாட, ௮௬௬

2765. தென்னவன் பணிந்து நின்று "திருவால வாயின் மேவும்
மன்னனே! யமணர் தங்கள் மாயையான் மயங்கி யானும்
உன்னையா னறிந்தி லேனை யுறுபிணி தீர்த்தாட் கொள்ள
இன்னருட் பிள்ளை யாரைத் தந்தனை யிறைவ!" வென்றான். ௮௬௭

2764. (இ-ள்) ஒன்று...இல்லேன் - பற்றுதற்குரிய வேறு உணர்வு ஒன்றும் இல்லேனாகி; ஒழிவற...நியமமாகும் என்று - நீக்கமின்றி எங்கும் நிறைந்த அழகிய திருச்சிற்றம்பலத்தின்கண்ணே நான்கு வேதங்களும் போற்றும்படி மக்கள் உய்யும் பொருட்டு நீ அருட்கூத்து இயற்றுவதை இடையறாது நினைப்பதுவே எனது நியமமாகும் என்ற கருத்துடன்; பூம்புகலி மன்னர்...பாட - அழகிய சீகாழியின் தலைவராகிய பிள்ளையார் இனிய தமிழ்ப்பதிகத்தினைப் பாடியருள; ௮௬௬

2765. (இ-ள்) தென்னவன் பணிந்து நின்று - பாண்டியன் பணிந்து எழுந்து நின்று; திருவாலவாயின்...அறிந்திலேனை - திருவாலவாயினுள் எழுந்தருளியுள்ள மன்னரே! அமணர்களுடைய வஞ்சனைக்குட்பட்டு மயங்கி உனது அருட்பெருமையினை ஒருசிறிதும் அறியாது கிடந்த என்னை; உறுபிணி...இறைவ! என்றான் - இறைவரே! உற்ற நோயினைத் தீர்த்து ஆட்கொள்ள, இனிய அருளுருவமாகிய ஆளுடைய பிள்ளையாரை எனக்கு அளித்தருளினீர் என்று துதித்தனன். ௮௬௭

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2764. (வி-ரை) திருவாலவாய்க் கோயிலினுட் புக்கு வணங்கிய இருவருட் பிள்ளையார் திருப்பதிகம் பாடித் துதித்த கருத்தினை இத்திருப்பாட்டினாலும், அரசன் துதித்த கருத்தினை மேல்வரும் பாட்டினாலும் கூறும் திறம் காண்க; இவ்வாறே அவ்விரு திறத்தினரும் அங்குநின்றும் நீங்கித் திருமடத்தினும் மாளிகையினும் சென்று சேர்ந்தமை முறையே இவற்றின் மேல்வரும் இரண்டு பாட்டுக்களினும் கூறுதல் காண்க.

ஒன்று...நியமமாகும் - இது திருப்பதிகக் கருத்தும் குறிப்புமாம். இத் திருப்பதிகத்தின் ஆறுவது பாட்டிற் கண்டருளிய ஆசிரியர் காட்டும் திறம். அத்திருப்பாட்டிற்கு ஆசிரியர் உரைவகுத்துக் காட்டியருளியவாறுமாம்.

வேறு உணர்வு ஒன்றும் இல்லேன் என்க, வேறு - உன்னையன்றி வேறு. உணர்வு ஒன்றும் - முற்றும்மை பிரித்துக் கூட்டுக. ஒன்று உணர்வு என்று கூட்டிப் பொருந்தும் பற்று என்றுரைக்கவும் நின்றது. "ஒன்றி யிருந்து நினைமின்கள்" (தேவா) "மறக்குமா றிலாத வென்னை" (பிள். தேவா - திருக்குருந்தி) இல்லேன் - இல்லேனாகி; முற்றெச்சம்; இல்லேன் - (ஆகி) நினைப்பதே - என்று கூட்டுக.

ஒழிவற நிறைந்த - எங்கும் நிறைவாகிய; "பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே" (தாயுமானார்); "ஒழிவற நிறைந்த யோகமே" (திருவாசகம்)

கோலமன்றில் - "அற்புதக் கோலநீடி...சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம்பலம்" (351). கோலம் - அருளுடன்கூடிய ஞான அழகு. மன்று - ஞான நிறைவு; "மெய்ஞ்ஞானமே யான வம்பலம்" (2058).

மானிட நுமியவேண்டி ஆடல் செய்கை - "மின் தயங்கியாடல்" என்ற பதிகப் பொருள்.

நினைப்பதே நியமமாகும் - நியமம் - நியதியாகிய கடன்; ஏகாரம் - பிரிநிலை; நீ செய்யும் பேரருளுக்கு அருள்ஆடலை நினைப்பதனைத் தவிர வேறு கைமாறு ஒன்று மின்று என்பது. ஈண்டுச் சமணர் வாதினில இறைவர் செய்த பேரருளின் திறங்களெல்லாம் உட்கொண்டு கூறியருளினார். நினைப்பதேன் னியமமாகும் என்று பாடங் கொள்வாருமுண்டு; "வேயுறு தோளி", "மானினேர்விழி" என்ற பதிகங்களி லும், ஏனை, "மந்திரம்", தளிரிள" "வாழ்க"என்றவற்றினும் உன்னையே முன்னிட்டு வைத்ததன்றி என் செயலாகக்கொண்ட தொன்றுமில்லை என்றபடி. 866

2765. (வி - ரை) தென்னவன் பணிந்து நின்று - நின்று - என்றமையால் நிலமிசை வீழ்ந்து பணிந்து எழுந்து என்றுரைக்க.

மன்னனே - தங்கள் பாண்டியமரபின் குலமுதல்வர் சோமசுந்தரக் கடவுள் ஆதலின் குலத்தைக் கேடுறுமற காத்தவா எனபது குறிப்பு.

மாயையால் மயங்கி - மாயை - வஞ்சனை என்னும் பொருளில் வந்தது. ஆல் - ஏதுப்பொருளில வரும் ஐந்தனுருபின் பொருளது

யாதும் - எவ்வளவேனும - ஒருசிறிதும் என உம்மை - முற்றும்மை. மேல் உன்னையான் என வருதலின், யானும் என்ற பாடம் பிழை.

உறுபிணி - உறு - முன்செய் தீவினைப்பயனால் வந்த தீயசார்பும், அதுகாரணமாக வந்த மயக்கமும், அதுகாரணமாக விளைந்த சுரநோயும் எனஇவ்வாறு பரம்பரையில் வந்துற்ற வினைவெல்லாம் கொள்ள நின்றது. பிணி - சுரநோயினையே யன்றி அதன் காரணமாய் நின்ற எல்லாம் கொள்க.

தீர்த்து ஆட்கொள்ள - ஆளலலே னென்று வாளாகிடந்த என்னை அங்கிலை நீக்கி ஆளாக என்றுகொள்ளும் பொருட்டு அதற்கு உரிய சாதனமாகிய ஞானகுருவாக; சிவஞானபோதம் எட்டாஞ் சூத்திரத்தின் கருத்து; கொள்ள - கொள்வதற்காக.

இன்னநட் பிள்ளையாரைத் தந்தனை - பிள்ளையாரைத் தந்தமையே தன் இறைவர் தனக்குச் செய்த பேரருள் என்றபடி. இன்னநாள் - தனது தீச் செயல்களுக்காக முனிந்து விடாது, அருளினாலே நோய்தந்து, பின நீக்கி, உபதேசமும் செய்து, சீறளித்து ஆட்கொண்ட அத்தனையும் எலலாம் அருளே என்பது; கூட்டுவிப்பவன் நீயே என்றபடி. முன் பலமுறையும் என் முன்னோர்களுக்கு இவ்வாறு வந்த இடர்களை நீக்கிய ஆடல்களைப்போல, இன்று இவரைத் தந்து இடர்நீக்கி யாட்கொண்டனை என்பதும் குறிப்பு. இறைவ - எனது தலைவரே.

மாய்கையான்—என்பதும் பாடம். 867

2766. சீருடைப் பிள்ளை யாருஞ் சிறப்புடை யடியா ரோடுங்
காரினிற் பொலிந்த கண்டத் திறைவர்தாள் வணங்கிக் காதல்
ஆரருள் பெற்றுப் போற்றி யங்குநின் றரிது நீங்கி
ஏரியன் மடத்தி னுள்ளா லினிதெழுந் தருளிப் புக்கார். அசுஅ

(இ - ள்) சீருடை... வணங்கி - சீரினையுடைய பிள்ளையாரும் சிறப்புடைய அடியார்களுடனே மேகம்போன்று விளங்கும் கழுத்தையுடைய இறைவரது திருவடிகளை வணங்கி; காதல்...போற்றி - அன்பினால் நிறைந்த திருவருள் பெற்றுத் துதித்து;

அங்குநின்று...புக்கார் - அங்குநின்றும் அரிதின் நீங்கி அழகிய இயலின் அமைந்த திருமடத்தின் உள்ளே இனிதாக எழுந்தருளி உள்ளே புகுந்தனர்.

(வி - ரை) சீருடை - சிறப்புடை - வெற்றிகரமாகப் பிள்ளையாரின் புகழ் பெருகிய நிலையும், அதனால் அடியார்களின் மேன்மை விளக்கும் நிலையும் குறித்தன. (வ. சு. செ.) அடியாரோடும் - வணங்கி - அடியார்களுடனே கூடி இறைவனை வணங்கப்பெறுதல் பெருமகிழ்ச்சி தரும் பேறாகும்; "அன்பரொடு மரீஇ" (12 - சூத்); "அடியரோ டிருக்கலாமே" (சித்தி - பாயி).

அரிது நீங்குதலாவது நீங்கலாற்றாது பரிவுடன் ஒருவாறு ஒருப்பட்டுப் பிரிதல்.

இனிது எழுந்தருளிப்புகுதலாவது மடத்தினின்றும் அன்று காலையிற் புறப்படும் போது அரசன் மிக்க சுரத்துடன் கிடக்க, அமணர் வாதத்தினை எதிர்நோக்கி, அமணரை நோக்கி வாது செய்யவும் வாதில் வென்றழிக்கவும் இறைவரது திருவுள்ளக் கருத்து அறிந்த நிலைகள் எல்லாம் நீங்கி இனிது புகுதல்.

காரினிற் பொலிந்த கண்டம் - விடத்தன்மை வாய்ந்த அமணர்களது கொடுமைகளை யெல்லாம் வெளியாது நீக்கி விளக்காவண்ணம் அடக்கிவைத்த அருளினைக் குறிப்பு

ஏரியல் மடம் - "திருநீற்றுத் தொண்டர் குழாம் சூழுமிடம் செங்கமலத் திருமடம்" என இதனை அழகினைப் பின் (2775) விரித்தல் காண்க. சமணர் கொளுவிய தீயினை மாற்றுவித்த அழகுபொருந்திய என்ற குறிப்புமாம். 868

2767. நீடுசீர்த் தென்னர் கோனு நேரியன் பாவை யாரும்
மாடுசென் றிறைஞ்சி நோக்கி மாளிகை தன்னிற் போகக்
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குலம்பிடுமீ விருப்பி னாலே
நாடியங் கிருந்து தங்க ணாதரைப் பாட லுற்றார்; ௮௬௯

*2768. திருவிய மகத்தி னுள்ளுந் திருநீல கண்டப் பாணர்க்
கருளிய திறமும் போற்றி யவரோடு மளவ ளாவித்
தெருளுடைத் தொண்டர் சூழத் திருத்தொண்டி னுண்மை நோக்கி
இருள்கெட மண்ணில் வந்தா ரினிதமர்ந் திருந்தா ரன்றே. ௮௭௦

2767 (இ - ள்) நீடுசீர்...போக - நீடும் சிறப்பினையுடைய பாண்டிய அரசர் பெருமானும் சோழரது மகளாராகிய மங்கையர்க்கரசியாரும் பக்கத்திற் சென்று வணங்கிக் குறைவறப்பார்களாயப் பார்வை செய்தபின் தமது மாளிகையினுள் போகவும்; கூடிய...புக்கார் - மிக்க மகிழ்ச்சி மேலும் அதிகரிக்க வழிபடும் விருப்பத்தினாலே நாட்டம்வைத்து அங்கு அமர்ந்தருளித் தமது இறைவரைப் பாடுவாராகி.

2768. (இ - ள்) திருவியமகத்தினுள்ளும்...அளவளாவி - திருநீலகண்ட யாழ்ப்பாணர்க்கு இறைவர் அருள்செய்த திறத்தினைத் திருவியமகத் திருப்பதிகத்தினுள்ளே வைத்துத் துதித்து அவருடனே அளவளாவியிருந்து; தெருளுடை...நோக்கி - அறிவின் தெளிவு மிகுந்த திருத்தொண்டர்கள் பலரும் சூழ்ந்திருக்கத் திருத்தொண்டினது அழியாத உண்மைத் திறத்தினை நோக்கி மகிழ்ந்துகொண்டு; இருள்கெட... இருள் கெடும்படி மண்ணுலகில் வந்தவதரித்த பிள்ளையார் இனிதாக அங்கு விரும்பி வீற்றிருந்தருளினார் அக்காலத்தில். ௮௭௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண் டுரைக்கின்றன.

2767. (வி - ரை) நீடுசீர்த் தென்னர் கோன் - கூன்பாண்டியரா யிருந்து நின்றசீர் நெடுமாறனாராயின தன்மைக் குறிப்பு. சீர் - திருத்தொண்டத் தொகையுள் வைத்துப் போற்றப்பட்ட பெருஞ்சிறப்பும் கொள்க. முன்பாட்டில் "சீருடைய பிள்ளையார்", "சிறப்புடை அடியார்" என்றமை காண்க.

நேரியன் பாவையார் - நேரியன் - சோழன்.

மாடு சென்று இறைஞ்சி - பிள்ளையாரது பக்கத்தில் சென்று அடிவீழ்ந்து வணங்கி; முன்னர்ப் "பணிந்துகொண்டு" (2755) என்றது ஆசிரியரிடம் மாண வன் நீறுபெறும் முறை.

நோக்கி - பலவாறும் குறைவறப் பேவுதற்பொருட்டுத் திருமடத்தினைச் சுற்றி முற்றும் பார்வையிட்டு. முன்னா அம்மையார்தாமும் அமைச்சனாரும் அரசன் பணி மேற்கொண்டு அத் திருமடத்திற் போந்தனர் (2623); ஈண்டு அரசனும் அம்மையாரும் உடன்போந்தனா என்பது குறிக்க.

நேரியன் பாவையாரும் - பாண்டிமா தேவியாரும் என்றது சோழர் மகளார் என இவ்வாறாற்ற கூறியது சைவநெறியிற பிறழாத சோழ மரபில் வந்தமையால் அரசனையும் பாண்டி நாட்டினையும் சைவத்தில் நிலைபெறுவித்தவர் என்று பிள்ளையார் "வளவர்கோன பாவை" (தேவா) என முதற்கண் கூறிய குறிப்பு. பாவையாரும்- "பாவை" என்ற பதிகஆட்சி போற்றப்பட்டது.

மாளிகை - அரச மாளிகை; போக - விடைபெற்றுச் செல்ல.

தும்பிடும் விரும்பினாலே நாடி அங்கிருந்து - பாடலுற்றார் - திருவாலவாய்த் திருக் கோயிலினுள் நேரே சென்று கும்பிட்டபின் ஆராமையால் மேலும் கும்பிட்டுக் கொண்டே யிருக்கும் மிக்க விருப்பத்தாலே திருமடத்தினின்றவாறே திருப்பதிகம் பாடி வழிபட்டனர் என்க. "நீடு பூசனை நிரம்பிய மன்பினு னிரம்பார" (1837) என்றும், "மீளமீள வில்வண்ணம் வெண்பால் சொரிமஞ் சனமாட்ட" (1241), "பரவ மேன்மே லெழும்பரிவும்" (1253) என்றும் வரும் நிலைகள் குறிக்க.

அங்கிருந்து - திருமடத்தினகண் இருந்தபடியே.

கூடிய மகிழ்ச்சி பொங்க - கூடுதல் - சரித நிகழ்ச்சியிற் கண்டவாறு திருஅருள் வெளிப்பாடு பொருந்தப்பெறுதல். மகிழ்ச்சி பொங்குதல் - திருவியமகம் என்ற பதிக யாப்பமைதி, சந்த அமைதி, பொருளமைதி முதலியவைகளால் புலப்படுதல் கண்டு கொள்க.

திருவாலவாயினைப் பற்றிப் பிள்ளையார் அருளிய பதிகங்களுள் (1) "மங்கையர்க்கரசி" என்ற பதிகம் திருநகரினை அணுகும்வழியில் திருவாலவாய்த் திருக்கோயில் கட்புலப் படும்போது திருநகரின் புறத்தே அருளப்பட்டது; (2) "நீலமாமிடற்று" என்ற பதிகம் முதலில் இறைவரைக் கண்டு திருக்கோயிலில் திருமுன்பும், (3) "காட்டுமா", (4) "வேத வேள்வி" என்ற பதிகங்கள் சுரந்தீர்த்துச் சமணை வாது வென்றருளத் திருமடத்தினின்றும் அரச மாளிகைக்குப் புறப்படும்போது இறைவரது திருவுள்ளம் நோக்கித் திருக்கோயிலில் திருமுன்பும், (5) "வீடலாலவாய்" என்பது வாது வென்ற பின் திருக்கோயிலில் திருமுன்பும் அருளப்பட்டன; (6) "மானினேர்விழி", (7) "மந்திரமாவது" என்ற இவை சுரந்தீரு முன்னர் அரசனது மாளிகையில் அரசன் முன்பு அருளப் பட்டன; (8) "வாழ்கவந்தணர்" வைகையாற்றங்கரையில் அருளப்பெற்றது; (9) "ஆலநீழல்" இங்குக் கூறியபடி திருமடத்தில் அருளப்பட்டது.—இனி, மதுரையில் இருந்தபடி வேறுப் பதிகளைப்பற்றி அருளிய பதிகங்கள் மூன்று; அவற்றுள் (10) "தளிரிள வளரொளி" என்ற திருநள்ளாற்றுப் பதிகம் அரசன்முன் அவன்

மாளிகையில் கனல் வாதத்தின் முன். (11) "போகமார்த்த" என்ற பதிக ஏட்டினை முன்னிட்டு வைத்துப் பாடியருளப்பட்டது; சீகாழியைப் பற்றிய இரண்டனுள் (12) "பிரமனூர்" என்ற பதிகம் அரசன் மாளிகையில் வாதநிகழ்ச்சிக்குமுன் "உமது பதி யாது" என்று அரசன் கேட்டதற்கு விடையாகவும், (13) "மண்ணில் நல்ல" என்ற பதிகம் தாதையார் திருமடத்திற்கு வரக்கண்டபோது அவர்சார்வு கண்டருளித் திருத்தோணியப்பரை நினைந்தும் பாடியருளப்பட்டன; என்றிவ்வாறு பதிக வரலாறுகளை மனத்துள் வைத்து அடைவு எண்ணுதல் பயன் தருவதாகும்; அதுபற்றியே ஆசிரியர் அவ்வாறாகும் அடைவு வகுத்துக்காட்டியருளினர் என்க; திருவாலவாயினைப் பற்றிய பிற பதிகங்களிலிருந்து பாடிய பதிகம் "பாடகமெல்லடி" என்ற திருநள்ளாற்றில் அருளப்பட்ட பதிகம் (2500); "வேயுறு தோளி" என்ற திருப்பதிகம் பொதுப் பதிகமாகவைத்து எண்ணப்படினும் திருவாலவாயினைத் திருவுளத்துக் கருதிவைத்துத் திருமறைக்காட்டில் அருளப்பட்ட தொடர்பு கண்டுகொள்க.

பாடலுற்றார் - பாடலுறுவாராகி - முற்றெச்சம். பாடலுறுவாராய் - போற்றி என வரும் பாட்டுடன் முடிக்க.

இறைஞ்சு நோக்கி - மாளிகை தன்னிற் போக்கி - என்றும் பாடம். 869

2768. (வி-ரை) திருஇயமகம் - இது பதிக யாப்புப்பற்றி வந்த பெயர். திரு இருக்குக் குறள் - என்பது போல; "திருக்கையே" - "திருக்கையே" என ஒருசொல் - அல்லது சொற்றொடர் - மடித்து ஒவ்வோரடியிலும் இடையில் இருமுறை வரும்படி தொடுக்கப்பட்ட யாப்பு வகை. ஒவ்வோர் அடியிலும் முதலில் ஒருசொல் - அல்லது சொற்றொடர் - அல்லது சொற்றொடர்கள் அவ்வாறு வரத்தொடுக்கும் யாப்பும் இயமகம் எனப்படும்; "மடக்குச் சந்தவியமகம்" (2174) என இதனை ஆசிரியர் குறித்தது காண்க.

திருஇயமகத்தினுள்ளும் - திருவியமகம் என்று யாப்புக் காரணமாகப் பெயர் பெற்று விளங்கும் "ஆலநீழல்" என்ற திருப்பதிகத்தினுள்ளும் என்க. இயமகம் - அச்சந்தங்கொண்ட பதிகத்துக்கு வந்தது ஆகுபெயர்.

திருநீலகண்டப் பாணர்க்கருளிய திறம் போற்றி - "தாரமுய்த்தது பாணற்கருளொடே" என்ற பதிகம் ஆறாவது திருப்பாட்டில் வரும் பகுதி குறித்தது: அருளிய திறமாவது, திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருஎருக்கத்தம்புலியூரினின்றும் சோழநாட்டுப் பல பதிகளையும் வணங்கிப் போய்த் திருவாலவாய் பணியச் சென்று கோயில் வாயிலினின்று பாணிகளை யாழிலிட்டு வாசித்தனர்; அப்போது முதல்வர் தொண்டர்க்கருளியபடி அவர்கள் அவரைத் திருமுன்பு கொண்டு புகுதச் செய்தனர்; பாணர் அங்குத் திருமுன்பிருந்து பரிவினுற் பாடினர்; அதுகேட்ட இறைவர், "பாணர் பாடுஞ் சந்தயாழ் தரையிற் சீதந் தாக்கில் வீக்கு அழியுமென்று, சுந்தரப் பலகை முன்னிடு" மென்று தொண்டர்க்கருள அவர்களும் அவ்வாறே பலகையிட, அதன் மேலிருந்து பாடினர் என்ற வரலாறு; இது பின்னர்த் திருநீலகண்ட யாழ்ப்பாணர் புராணத்து விரிக்கப்படுவது கண்டுகொள்க. அதன் பின்பு பாணனார் திருவாரூர் சென்று வணங்கத் திருவருளால் வடதிசையில் வாயில் வேறு வகுப்பப் புகுந்து வணங்கினார்; அதன் பின்பு சீகாழிக்கு வந்து பிள்ளையாரது அருள்பெற்று அவருடனே சேவித்து அணைந்தனர் என்பதும் ஈண்டுக் கண்டுகொள்க. ஈண்டு அருளிய திறம் என்றது திருஆலவாயில் அடியார்க்கருளிக் கோயிலினுள் உள்ளே திருமுன்பு வரச்செய்து பலகையிட்டருளின திறம்; திருவாரூர் வாயில் வேறு வடதிசையில் வகுத்தது திருமுன்பு வரச் செய்த திறமும் குறிக்கும்; இத்திருப்பதிகம் அருளியபோது திருமடத்தில்

யாழ்ப்பாணரும் உடனிருந்து யாழ் வாசிக்கப் பெற்றமையால் அவருக்கு முன்னர்க் கூடலிறைவர் அருளிய திறத்தினை நினைவுற்று ஈண்டு வைத்துப் பாராட்டியருளினர் என்க.

இனிப், பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணத்தினுள் விறகு விற்றது முதல் இசை வாது வென்றது வரை நான்கு படலங்களினும் பேசப்படும் பாணபத்திரனார் வேறு; இங்குக் குறித்த திருநீலகண்டப் பாணர் வேறு என்பது உணரத்தக்கது. அவர், இறைவர்பால் "மதிமலி புரிசை" என்ற திருமுகம் பெற்றுக் கழறிற்றறிவாரிடம் சென்று பெரும்பரிசில் பெற்றனராதலின் காலத்தால் மிகப் பிற்பட்டவராதல் கழறிற்றறிவார் புராணத்தினுள் 26—39 வரையில் உள்ள பாடல்களினும், 94-வது பாட்டினும் ஆசிரியர் அருளியவாற்றாலும், திருவிளையாடற் புராணம் திருமுகங்கொடுத்த படலத்தானும் அறிந்துகொள்ளத் தக்கது; இவ்விருவர்பாலும் தனித்தனி இறைவர் செய்த அருளிப்பாடுகள் வெவ்வேறாம். அவை ஒன்றேயெனக்கொண்டு மயங்கித் தமது மயக்கத்தை ஆசிரியர் பெருமான்மேலேற்றி அவர்பால் அறியாமையைச் சுமத்தி அபசாரப்படும் மாக்களும் உண்டு; ஆராய்ச்சி என்ற பேரால் செய்யப்படும் தகுதியில்லாச் செயல்கள் பலவற்றுள் இதுவுமொன்றாம் என விடுத்தொழிக. தாரம் - பண் பாடும் திறம் என்றுகொண்டுரைப்பினும், அரியபண்டம் என்று கொண்டு பொற்பலகை எனக்கொண்டுரைப்பினும், அஃதிவ்விருவர்க்கும் இறைவர் அருளுதலும் அமையுமாதலின் மாறுபாடோ மயக்கமோ கூடுதல் யாங்கனமென்க; யாழ்ப்பாணருக்குப் பலகையிட்ட வரலாற்றைப் பெயரொற்றுமைபற்றிப் பிறழ உணர்ந்த வடமொழியாளர் பாடியதை அவ்வாறே திருவிளையாடலுள் மொழிபெயர்த்தனர் என்பதும் அமையும்; பலகையிட்ட வரலாறு ஈரிடத்தும் வெவ்வேறாய் வருவதும் கருதத் தக்கது. ஈண்டு யாழ்ப்பாணர்க்குப் பலகை தந்தருளியது யாழினைத் தரையில் வைப்பின் சீதந்தாக்குமென்று பலகையிட்டருளினர் என்பதாம். இக்கருத்தால் யாழ் தரையில் வைக்காது பலகையின்மேல் வைத்து வாசிக்கும் இயலும் மரபும் காண்க. பாணபத்திரனார்க்கு இரவில் மழையில் தாமுங் கருவியும் நனைந்து, வாசிக்க இடர்ப்பட்டபோது, அதனை மாற்ற இறைவர் அருளியது வரலாறு; தாரம் - பண் பாடும் திறம் எனக்கொண்டுரைப்பின் யாழ்ப்பாணர் திருவாலவாயிலிலும், திருவாரூரிலும் தமது மரபின் முறைப்படிப் புறமுற்றத்திற் கோயில் வாயிலில் இருக்க அதனையாற்றாது திருமுன் வரச்செய்து பாட அருளிய தன்மை குறித்ததென்க. இனித், திருவிளையாடற் புராணம் புராணத்தின் பகுதியில் அமைவதாலும், திருத்தொண்டர் புராணம் திருமுறையாகிய வேதப் பகுதியில் அமைவதாலும் இவை ஒன்றொடொன்று மாறுபட்டபோது வலிமையுடையதென எடுக்கத்தக்கது வேதமேயாம் என்ற ஆதரவுகளின் ஏற்றத் தாழ்ச்சி முறையும் மனங்கொள்ளத் தக்கது என்பது முன்னரும் பலவிடத்து உரைக்கப்பட்டது. பிறவும் கண்டுகொள்க.

**அவரோடும் அளவளாவி** - என்றதனாலும் பதிகத்துட் பாணர் என்றது யாழ்ப்பாணரைக் குறிக்கும் எனக.

**தெருள்** - உண்மையுணர்வாகிய அறிவு. "முன்னின்ற தெருட்சி மருட்சியினால் முதல்வன் கருணைக் கடலமுழ் கினரே" (1336); "தெருளுமுணர் வில்லாத சிறுமையேன்" (1798).

**திருத்தொண்டின் உண்மை நோக்கி** - திருத்தொண்டர்கள் முதல்வர்பாலும் திருவேடத்தார்பாலும் செய்யும் திருத்தொண்டுகளின் திறங்களையே பேசிக் கலந்து களிப்புறுவது இயல்பு. "வாய்மைச், சால்பின்மிக் குயர்திருத் தொண்டினுண்மைத் திறந் தன்னையே தெளியநாடிக், காலமுய்த் தவர்களோ டளவளாவிக்கலந் தருளினார்"

(2421) எனவும், "திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தன, கொருப்படு சிந்தையினர்கள்" (1509) எனவும் கூறிய பொருள்களை ஈண்டுச் சிந்திக்கத்தக்கன; "சிரிப்பார் களிப்பார் தேனிப்பார், திரண்டு திரண்டுன் திருவார்த்தை, விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வேறிருந்துன் திருநாமம், தரிப்பார் பொன்னம் பலத்தாடுந் தலைவா வென்பார்" (திருவா - கோயின்மூத்த பதி - 9) என்ற கருத்துங் காண்க. திருத்தொண்டின் உண்மை - திருத்தொண்டின் திறமும் இறைவர் ஆட்கொள்ளும் தன்மையும் என்றும் அழிவுபடாது நிலைத்த தன்மை; ஈண்டு ஆலவாயப் பெருமான், அமண் இருளினுள் அகப்பட்டு வருந்திக் கிடந்த அம்மையாருக்கும் அமைச்சனார்க்கும் அருளிய வரலாறுகளும் குறிப்பு. நோக்கி - அழுந்தி உளத்தில் உணர்ந்து களித்து.

இருள் கெட மண்ணில் வந்தார் - பிள்ளையார்; "பரசமய நிராகரித்து நீறாக்குதல்" ஈண்டு இருள் கெடுத்தல் எனப்பட்டது. ஆணவ இருள் போக்கிச் சிவஞான வொளிதருதலும் குறிப்பு.

அமர்தல் - விரும்பி எழுந்தருளியிருத்தல்; அங்கே - அந்நாளில்.

## IX திருவாலவாய்

திருச்சிற்றம்பலம்  திருவியமகம்  பண் - பழம்பஞ்சுரம்

ஆல நீழ லுகந்த திருக்கையே யான பாட லுகந்த திருக்கையே
பாலி னேர்மொழி யாளொரு பங்கனே பாத மோதலர் சேர்புர பங்கனே
கோல நீறணி மேதகு பூதனே கோதி லார்மன மேவிய பூதனே
ஆல நஞ்சமு துண்ட களத்தனே யால வாயுறை யண்டர் களத்தனே. (1)

நக்க மேகுவர் நாடுமோ ரூருமே நாதன் மேனியின் மாசுண மூருமே
தக்க பூமனைச் சுற்றக் கருளொடே தார முய்த்தது பாணற் கருளொடே
மிக்க தென்னவன் தேவி கணிக்கையே மெல்ல நல்கிய தொண்டர் கணிக்கையே
அக்கி னாரமு துண்கல னோடுமே ஆல வாயர னாருமை யோடுமே (6)

ஈன ஞானிக டம்மொடு விரகனே யேறு பல்பொருள் முத்தமிழ் விரகனே
ஆன காழியுண் ஞானசம் பந்தனே ஆல வாயினின் மேயசம் பந்தனே
ஆன வானவர் வாயினு ளத்தனே அன்ப ரானவர் வாயினு ளத்தனே
நானு ரைத்தன செந்தமிழ் பத்துமே வல்ல வாகிலை நற்றமிழ் பத்துமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இறைவர் செய்தருளிய திருவருட் பேற்றின் மகிழ்ச்சி மீக்கூரப் பாடியது (2767).

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(உதாரணத்துக்காகச் சில குறிப்புக்கள் மட்டுமே ஈண்டுத் தரப்படுவன. ஏனைய முற்றும் நற்றமிழ் வல்ல நல்லோர்பாற் கேட்டுணர்க.)—(1) இருக்கை - (1) இருப்பிடம்; (2) இருக்கு (வேதம்), ஐ இரண்டனுருபு; பங்கன் - (1) பாகமுடையவன் (2) புரபங்கன் - புரத்தினைப் பங்கஞ் (சிதைவு) செய்தவன்; ஓதலர் - ஓதாதவர்; பூதன் - (1) திருவுடம்புடையவன், (2) பூதகணங்கட் கிறைவன்; (1) களத்தன் - களம் - கழுத்து; கழுத்தினை உடையவன்; (2) அண்டர்கள் அத்தன்;—(2) மாலையோ - (1) விட்டுணுவையே ஒருபாதியாய உடலிற் கொண்டது; (2) மாலை - அலர்மாலை; தார்; (1) ஆகன் - உடம்பினன்;

(2) **மான் இடம் ஆகன்** - இடக்கையில் மானை உடையவன்; **ஆகன்** - ஆயினவன்; **ஆனையே** - (1) ஆன் ஐந்தினையே ஆடுவது; (2) ஆனையினையே உரி செய்தது; **வாயிலே** - (1) வாயினிடமாக வேதம் வெளிப்படுப்பவன்; (2) **ஆலவாயிலே** - ஆலவாய்க் கோயிலே ஊர்;—(3) **கத்தன்** (1) முழவு முதலிய பல ஓசைகளை உடையவன்: (2) தம் **அகத்தன்** - அகத்தில் விளங்குபவன்; விருப்பன்; இருப்பன்; (1) **அப்பன்** - அப்பு - நீர்;—(4) (1) **இருத்தி** - செல்வம்; (2) **இருத்தி** - இருக்கின்றாய்; (1) **மிதுகண்டனே** - சிறந்த கழுத்தினையுடையவனே; (2) **கண்டனே** - புறச்சமய கண்டனஞ் செய்தவனே; **விழித்தி** - விழி செய்தாய்; **இழித்தி** - இழிவு செய்வாய்;—(5) இப்பாட்டின் முன்பாட்டுக்களிற்போல அடிதோறும், அடிகளின் பகுதிகளிலும் வெவ்வேறு பொருள்களைப்பற்றி மடக்குவாராது சண்டீச நாயனார் சரிதம் ஒன்றேபற்றி மடக்குக்கள் வந்தமை காண்க. **நின்னுருவாகத் தடவியே** - "மடுத்த கருணையால் தடவி" (1259) விடையார் திருமலர்க்கை தீண்டப்பெற்ற சிறுவனார், அங்கண்மாயை யாக்கையின்மேலளவின் றுயர்ந்த சிவமயமாய...சூழ்ந்த வொளியிற் றோன்றினார் (1260) என்ற சரிதத்திற்கு ஆதரவு;—(6) **நாடும் ஓர் ஊரும் நக்க உருவுடன் பலிக்கு ஏகுவர்**; மாசுணம் (பாம்பு), ஊரும் (தவழும்). **தார முய்த்தது பாணற் கருளோடே** - இதனையே "திருநீலகண்டப் பாணர்க்கருளிய திறமும் போற்றி" என்று ஆசிரியர் வரலாறு காட்டிப் பொருள் விரித்தருளினார். **தாரம்** - இசை; **தாரம் உய்த்தது** - இசை பாட அருளியது; **தாரம்** - அரியபண்டம் என்று கொண்டு பொற் பலகையிட்ட செய்தி குறித்ததென்பது மமையும். "கடற்பஃறாரத்த நாடு கிழவோயே" (புறம் 30); **கணியை** - (1) கணிக்கப்படுபவன்; (2) **அணியை**-எளியையாக நெருங்கியிருப்பவன்; **தேவிக்கு அ(ஃ)ணிய நல்கிய** - அணி - மங்கலநாண் என்று கொண்டு மங்கையர்க்கரசிக்கு அவரது திருமங்கிலியத்தை விளங்கவைத்தவர் என்றலுமாம். (1) **ஓடும்** - "ஓடே கலன்" - உண்கலம்; (2) **ஓடுமே** - ஓடும் மூன்றாவதன் உருபு;—(7) (1) **குட்டியே பல் உகுத்தது** - தலையில் குட்டிப் பல் உதிரச்செய்தது (வீரம்); (2) **குட்டி** - இளநாகம்; **மெய்யன்** - (1) மெய்-உடம்பு. (2) மெய் - உண்மை; **காளம்** - (1) விடம்; (2) **கங்காளம்** - எலும்புக் கூடு; "கங்காளராய"; **வீணையே** - (1) வீண் + ஐ (இரண்டனுருபு); (2) **வீணை**-இயம். —(8) இப்பாட்டு முழுமையும் 5-வது பாட்டிற்போல இராவணன் சரித வரலாறு ஒன்றேபற்றி மடக்குக்கள் வந்தமை கண்டுகொள்க;—(9) **மாலோடே** (2) **மால்** - மயக்கம் - அகந்தை; **இடக்கை** - (1) இடத்தகை,—(10) **நல்கானையே** - நல்காதவனையே **நல்குதல்** - அருள் கொடுத்தல், "நாடொறு நல்குவா னலன்" (தேவா); (2) **கானையே** - **கான்** - காடு; தவஞ்செய்யச் சேருமிடம் என்க; **கானை** - திருக்கானப்பேர் - என்றலுமாம்—(11) **விரகன்**-(1) விரவாது முனிபவன்.

2769\. பூழியன் மதுரை யுள்ளார் புறத்துளா ரமணர் சேரும்
பாழியு மருகர் மேவும் பள்ளியு மான வெல்லாங்
கீழுறப் பறித்துப் போக்கிக், களரொளித் தூய்மை செய்தே
வாழியப் பதிக ளெல்லா மங்கலம் பொலியச் செய்தார். அளக

(இ - ள்) **பூழியன்...புறத்துளார்** - பாண்டியனது மதுரையிலுள்ளார்களும் மதுரையின் புறத்துப் பல இடங்களிலும் உள்ள மாந்தர்களும்; **அமணர்...போக்கி** - சமண் குருமார் தங்கிய பாழிகளும் அவர்தம் கடவுள் இடங்கொண்ட பள்ளிகளும் ஆகிய எல்லாவற்றையும் கீழ்நிலங் காண அகழ்ந்து போக்கி; **களரொளித் தூய்மை செய்தே**-

களை நாடோறும் பணிந்து போற்றியிட ; ஆன...எத்தி - ஆக்கமுடைய சீகாழியர் தலைவராகிய பிள்ளையாரும் திருவாலவாயில் விரும்பி வீற்றிருக்கும் இறைவருடைய திருவடிகளை ஊனெலாம உருகும்படி துதித்துக்கொண்டு ; உளம் களித்து உறையும்நாளில் - மனமிக மகிழ்ந்து அங்கு எழுந்தருளியிருக்கும் நாட்களிலே, அஎஉ

2771. (இ - ள்) சிவபாதவிருதயர்தாம் - சிவபாத இருதயர் ; செய்தவத்தாற் பெற்றெடுத்த-முன்செய்த பெருந்தவப பயனாகப பெற்றெடுதத ; வைதிக...பொருளை - வைதிகர்களது சிரமணியாகியவரை, மாதவததோர்களாகிய சிவஞானிகளது பெருவாழ்வு ஆகியவரை, விடம விளங்குந் திருமிடற்றினையுடைய இறைவரது திருவருள் பெற்ற மெயபபொருளாயினரை ; எயதிய...நினைந்தார - தாம் இருந்த சீகாழிப் பதியிலே தஙகியிருந்த அந்நாட்களில் மிகவும நினைநதனர். அஎ௩

இநத இரணடு பாட்டுக்களும் தொடாநது ஒருமுடிபு கொண்டன.

2770. (வி - ரை) மீனவன் தேவியாரும் குலச்சிறையாரும் - போற்ற - சிறப்புப்பற்றி இவவிருவரும் கூறபபட்டனரேனும் இனம்பறறி நெடுமாறனாரையும் உடன் கொள்க ; மீனவன் தேவி என்று அறிவித்த குறிபபும் காண்க. அரசனும் உடனிருந்து பிள்ளையாரை வழிபட்டமை 2782 - 2785 - 2791 - 2792 - 2793 முதலியவற்றுற காண்க.

தேவியாரும் குலச்சிறையாரும் ஞானசம்பந்தர் பாதம் போற்ற, அவரும் ஆலவாயமர்ந்தார் பாதம் ஏத்தி - பிளளையாா திருவடிகளை அவர்கள தங்கட்குப் பற்றுக்கோடாகக்கொள்ளத், தாம் இறைவா திருவடியைத தமக்குப பறறுககோடாகக் கொண்டனர். அவர்கள் குருவழிபாட்டினுல் முத்தி பெறப், பிள்ளையாா சிவலிஙகத்தால் முத்தி பெற்றவர் என்ற பாகுபாடு பின்னாக காணக. தமமை யிடமாககொண்டு இறைவரே அவர்களுக்கு அருள் செய்கின்றா என்றது கருதது. "பணி செய்து நாடொறும் பரவ" (பிள். தேவா)

ஆன - உயாவாகிய. ஆககசசொல் இயலபு குறித்தது.

ஊன் அமர்ந்து உருக - ஊன் முழுமையும் உளளுருகுமபடி.

உளங்களிந்து—எனபதும் பாடம். 872

2771. (வி - ரை) செய்தவம் - முனனைச செய்த தவமும், இவ்வுலகிற செய்த தோணியப்பர் வழிபாடாகிய தவமும் ; இது "காதலனைப பெறப போறறும் தவம் புரிநதார்" (1917) என முன்கூறபபட்டது காண்க.

பெற்றெடுத்த - பெற்ற மகனாரகிய ; எடுத்த - பகுதிபபொருள் விகுதி.

வைதிக சூளாமணியை - என்றது வேதநெறி தழைக்கச்செய்தமையும், மாதவத்தோர் பெருவாழ்வை - என்றது மிகுசைவத் துறைவிளஙகச் செய்தமையும், திருமிடற்றார் அருள்பெற்ற வான்பொருளை - என்றது பூதபரம்பரை பொலியச் செய்தமையும் குறித்தன ; சூளாமணி - வாழவு - வானபொருள் - இவைபோன்றுரை என்பதாம். இவை தந்தையார் தமது அருமைப் பிள்ளையாரைப் பாராட்டிய முறையினையும் குறிப்பிதுணர்ததியபடி காண்க.

எய்திய - தாம் மேவி இருந்த ; இருந்த நாள் - பிள்ளையாரைப் பிரிந்திருந்த நாள். மிக நினைதலாவது - இடையறாது அதுவே நினைவாக இருத்தல். 873

2772. "ஆனபுகழ்த் திருநாவுக் கரசர்பா லவஞ்செய்த
மானமிலா வமணருடன் வாதுசெய்து வெல்வதற்கும்

மீனவன்ற னாடுய்ய வெண்ணீறு பெருக்குதற்கும்
போனவர்பாற் புகுந்தபடி யறிவ"னெனப் புறப்படுவார்; ௮௭௪

2773. துடியிடையா டன்னோடுந் தோணியில்வீற் றிருந்தபிரான்
அடிவணங்கி யலர்சண்பை யதனின்றும் வழிக்கொண்டு
படியின்மிசை மிக்குளவாம் பரன்கோயில் பணிந்தேத்தி
வடிநெடுவேன் மீனவன்றன் வளநாடு வந்தணைந்தார். ௮௭௫

2772. (இ - ள்) ஆனபுகழ்...வெல்வதற்கும் - ஆயின புகழினையுடைய திருநாவுக்கரசரிடம் தவறு செய்த மானமில்லாத சமணர்களுடனே வாதம் செய்து அவர்களை வெற்றி கொள்வதற்கும்; மீனவன்றன்...பெருக்குதற்கும் - பாண்டியனுடைய நாடு உய்யும்வண்ணம் திருநீற்றினைப் பெருக ஆக்குதற்கும்; போனவர்பால்...புறப்படுவார் - சென்றருளிய பிள்ளையார்பால் நிகழ்ந்த வண்ணங்களை அறிவேன் என்று சிவபாதவிருதயர் புறப்படுவாராகி; ௮௭௪

2773. (இ - ள்) துடியிடையாள்...அடிவணங்கி - துடிபோன்ற இளைய இடையினையுடைய பெரியநாயகியாருடனே திருத்தோணியில் எழுந்தருளியிருந்த பெருமானுடைய திருவடிகளை வணங்கி, அலர்சண்பை...வழிக்கொண்டு - அழகிய சீகாழியினின்றும் புறப்பட்டு வழிச்சென்று; படியின்மிசை...ஏத்தி - செல்லும் வழியிலே இந்நிலவுலகில் மேம்பட்டு விளங்கும் சிவபெருமானது திருக்கோயில்கள் பலவற்றையும் வணங்கித் துதித்துப் போய், வடி...வந்தணைந்தார் - வடித்த கூர்மையுடைய நீண்ட வேல் ஏந்திய பாண்டியனது வளப்பமுடைய நாட்டின்கண் வந்தணைந்தனர். ௮௭௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2772. (வி - ரை) ஆன புகழ் - நல்லதாயின புகழ்; ஆன - சிறப்பாயின; சிவனருளாலாயின; திருத்தொண்டின்கண் உறைப்பாயின. புகழ்த் திருநாவுக்கரசர் - "திருநாவுக் கரசென்றுல கேழினுநின் னாமம் நயப்புற மன்னுகவென்று" (1339) என இறைவனருளால் ஏழுலகும் பரவிய பெரும் புகழ் "அவர்பெருமை யாங்கணாம் புவனத்தி லறியாதா ரியாருளரே" (1797) என்றதும் காண்க.

அவம் - பெருந் தவறு, கேடு. அரசர்பால் அவஞ் செய்த - என்றதனால் பிள்ளையார்பால் மிகவும் செய்வார்கள் என்பது குறிப்பு. "கலதி யமணர் கடுவினைசெய், மாயை சால மிகவல்லா ரவமற் றெனைமுன் செய்த, தீய தொழிலும் பல" (1551) என அப்பர் கூறியருளியது காண்க.

வாது செய்து வெல்வதற்கும் - நீறு பெருக்குதற்கும் - போனவர் - இது அடியவர்பால் கேட்டறிந்த உரையளவையாலும், போயின பிள்ளையாரின் கருத்துக் கருதலளவையாலும் சிவபாதவிருதயர் அறிந்தது. "புத்தரொ டமணை வாதில் அழிவிக்கு மண்ணல் திருநீறு செம்மை திடமே" (கோளறு பதிகம் - 10) என்ற பதிகத்தினையும் அவ்வரலாற்றினையும் உடனிருந்து கேட்டார் சொல்லக் கேட்டனராம் என்க. "பரசமய நிராகரித்து நீறாக்கும்" (1917) என்று தாம் வேண்டிப் பெற்ற வரங்களை இரண்டே பிள்ளையாரது திருவவதாரக் கருத்தாவதும் காண்க. "தெண்பூ, நிகழு மலங்கற் பருளுமென ஞவமணர் சேனையுபா நிகழு மலங்கற குரைதரோ னைநிலை தெய்வங்களே (கந்தர - 9) என்றது இதே கருத்து.

நீறு பெருக்குதற்கும் - "நீறு ஆக்கும்" (1917), பெருக்குதல் - எங்கும் பரவுதலைச் செய்தல். விளக்க மிகுவித்தல் என்றலுமாம்.

புகுந்தபடி - நிகழ்ச்சிகள் சேர்ந்த வண்ணங்களை ; படியினை என இரண்டனுருபு விரிக்க.

புறப்படுவார் - செல்வாராகித் துணிந்து ; முற்றெச்சம். புறப்படுவாராயினர் என முற்றாக உரைகொள்ளுதல் பிழை ; அடி வணங்கி - வழிக்கொண்டு (2772) என்று மேற்கூறுதலும் காண்க. எழுவாய் முன் பாட்டினின்றும் வருவிக்க.

பெருகுதற்கும்—என்ற பாடம் சிறப்பின்று. 874

2773. (வி - ரை) துடி - உடுக்கை ; மேலும் கீழும் பெருத்து இடையில் சிறுத்துள்ள தன்மையால் துடியை உவமையாகக் கூறுதல் மரபு ; துடியிடை- துடி போன்ற இடை ; உவமத்தொகை. இடையிறப்பற்றி ஒருநா இருதலை இயங்க விசையால் முழக்கப்படுதல் துடிதுடித்தல் போலாதலின இப்பெயர் பெற்றதுபோலும். "தமருகத் தரையிற கையினிற கட்டிய கயிறறுல, இருதலை யொருநா வியங்க" (திருவி-கருவூர்-பூவணம் - 3).

துடியிடையாள்...அடிவணங்கி - அம்மையோடும திருத்தோணியில் எழுந்தருளிய தோணியப்பரை வழிபடும நியமமுடையா ராதலாலும, அவரருளாற பிள்ளையாரைப் பெற்றனராதலாலும அவரை வணங்கி விடைபெறறு எனக.

அலர் சண்பை - அலர்தல் - அழகினால் மிளிர்தல்; ஒளி அலர்தல்; வழிக்கொள்ளுதல் - வழிச் செல்லுதல்.

மிக்குளவாம் பரன் கோயில் - சீகாழியினின்றும புறப்பட்டவர் பாண்டி நாட்டினை அடையும் வரையும சோழ நாடாதலின் அங்குள்ள சிவனகோயில எண்ணிறந்தவற்றுள்ளும் ; ஏனைய நாடுகளினும் சோழநாட்டில் சிவத் தலங்கள் மிகுதியாதல் காணக. மிக்குளவாம் என்றதுமிக கருதது ; "செம்பொன் வார்கரை யெண்ணில சிவாலயத், தெம்பிரானை யிறைஞ்சலின" (57) ; இஙகுக் கூறியவை சோழ நாட்டுத் தலங்கள்.

பணிந்தேத்தி - சீகாழியினின்று மதுரைககுச் செல்லும் சிவபாத இருதயா நேரே அங்குச் சென்றுவிடாது இடையில உள்ள கோயிலகளை வணஙகிச் சென்றனா. இதுவே முறையும் பெரியோர் மரபுமாம.

வடி நெடுவேல் மீனவன் - வேலவனை செண்டு கொடுததது - கடல் சுவற வேல விட்டது முதலிய திருவிளையாடல்களின தொடர்புடைய மரபின் உயர்வுகுறிகக வேல் மீனவன் என்ற தன்மையாற கூறினா.

பரன்கோயில் வலங்கொண்டு—என்பதும் பாடம. 875

2774. மாமறையோர் வளம்பதிக ளிடைததங்கி வழிச்செல்வார்
தேமருவு நறும்பைந்தாரத் தென்னவன்றன் திருமதுரை
தாமணைநது திருவால வாயமர்ந்த தனிநாதன்
பூமருவுஞ் சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார். ௮௭௬

(இ - ள்) மாமறையோர்...வழிச் செல்வார் - பெருமையுடைய மறையவராகிய சிவபாதவிருதயா வளமபொருநதிய பாணடி நாட்டுப பதிகளில் தஙகிப போவாராகி ; தேமருவு...அணைநது - தேன பொருநதிய வாசனையுடைய பசிய வேப்பமாலையை யுடைய பாண்டியனது தலைநகரமாகிய திருமதுரையினை அணைந்து ; திருவாலவாய்... பணிந்தார் - திருவாலவாயில் விரும்பி வீற்றிருந்தருளும் தனி முதல்வராகிய சொக்கநாதப் பெருமானுடைய பூமருவும் அழகிய சிவந்த திருவடிகளின் கீழ்ப் புகுந்து மிகக ஆர்வத்தொடும் பணிந்தனர்.

(வி - ரை) **மாமறையோர்** - சிவபாத இருதயர். மறையோர் - பணிந்தனர் என்று கூட்டுக; இனி, இவ்வாறன்றி, மறையோர்கள் தம் - பதிகளிடைத் தங்கி என்று ஆறும்வேற்றுமைத் தொகையாகத் தொடர்புபடுத்தி உரைப்பினுமமையும், என்னை? சோழ நாட்டின் எல்லையும் இடையில் மறவர் வைப்பும் நீங்கிப் பாண்டி நாட்டினுட் சென்றபின் மதுரை சேரும்வரை திருத்தலங்கள் மிகச் சிலவேயாம்; பிள்ளையார் சென்ற வழியில் திருக்கொடுங்குன்றமொன்றே இடையில் வணங்கி மதுரை சேர்ந்த வரலாறு முன் (2527) உரைத்தது காண்க. ஆதலின் சிவபாத இருதயர் சென்ற வழியில் இடையில் மறையவர் பதிகளில் தங்கித் தங்கிச் சென்றனர் என்பதாம். சோழ நாட்டில் முன் "பரன்கோயில் பணிந்தேத்தி" என்று ஆசிரியர் கண்டு பதிகளிடைத் தங்கி என்ற குறிப்பும் காண்க.

**வழிச் செல்வார்** - வழி போவாராய்ப் - புகுந்து பணிந்தார் - என்று கூட்டி முடிக்க.

**தேமருவு நறும் பைந்தார்** - பூமிடைந்து வேப்பமாலையைக் குறித்தது. தேனுடைமை, நறுமை, பசுமை என்ற தன்மைகள் வேம்புக்குரியன.

**தாம் அணைந்து** - பரிசனங்கள் முதலியோர் ஒருவருமுடனின்றித் தாமாக என்றதும் குறிப்பு.

**தனி நாதன்** - முதற் கடவுள், ஒப்பற்ற என்றலுமாம் "தனக்குவமை யில்லாதான்" (குறள்), ஊழியில் எல்லாரையும் தம்முள் ஒடுக்கித் தாமொருவரே தனியாக இருப்பவர் என்ற குறிப்புமாம்; அவர் தாமே அணைந்தார்க்கு அவ்வாறே இவரும் தனி நின்றருளினார் என்ற நயமும் காண்க "மூளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (தேவா)

**பூமருவும் சேவடி** - தேவர் முனிவர் பரவித் தூவிய மலர்கள் இருக்கும் திருவடி.

**புக்கு** - மனம் வைத்து.

**மாமறையோர்** - பிள்ளையாரைப் பிரிந்து குறைந்தது இரண்டாண்டு அளவும், மிக நினைந்த சிவபாதவிருதயர் நேரே செல்லாது சோணாட்டுப் பாதை வழியே சென்றதும், வழியில் மிகுந்த பரன்கோயில் பணிந்து சென்றதும், பின்னர்த் திருமதுரையினை யணைந்தவுடன் பிள்ளையாரது திருமடத்தினைச் சென்றணையாது, நேரே திருவாலவாயமர்ந்த தனிநாதன் சேவடி புகும் ஆர்வத்தொடும் பணிந்தமையும், அதன் பின்னரே திருமடத்தினைக் கேட்டறிந்து அங்குச் சென்றதும் கருதுமளவில் அவர் பிள்ளையாரை மிக நினைந்து தீயராகிய அமணரிடையே அவரது நலங்களை அறியும் அவாவுடன் வந்தாராயினும், இறைவரை வழிபடும் ஆர்வமும் முறையுமே அதனின் மேலாய முதற்கண் வைத்த சீல ஒழுக்கமுடையார் என்பது போதரும்; தமது இல்வாழ்க்கைக்கு மகவு வேண்டிய அவர் அதனின் மேலாயச் சைவ ஆக்கமே கருதித் தலங்களில் தவம் புரிந்தனர் என்று கூறிய வரலாறு கண்டு நினைவுகூர்தற்பாலது; மனைவி மக்கள் முதலிய உலகச் சார்புகளையே பற்றி அவையே பொருளென மயங்கி ஒழியும் எம்போன்ற உலக மாக்கள் இவ்வுண்மை இல்லறவொழுக்கத்தினைக் கருதிக் கண்டு ஒழுகுவோமாயின் நலந்தரும். பிள்ளையார்பாற் பொருள் வேண்டிப் பெற்ற தாதையார் அவர் பிரிவாற்றாது தொடர்ந்து வந்தாரேனும் "ஆதி மாமறை விதியினா லாகும் வேள்வி, நாதனுரை முன்னாகவே புரியுகல் வேள்வி"கள் (2327) செய்வதன் பொருட்டுப் பிரிந்து சீகாழியிற் சென்றதனையும் கண்டு நினைவுகூர்க. இவ்வாறு வேதநெறி தழைத்தோங்கிய நல்லொழுக்கம் பற்றிய குறிப்பெல்லாம் பெற வைத்துக் கண்டு மாமறையோர் என்றவாற் றுக் கூறினார்.

**புக்கு ஆர்வத்தோடும் பணிந்தார்** - ஆர்வமாவது தாம் எண்ணித் தோணியப்பர் பாற் றலங்கிடந்த பரசமய நிராகரிப்பும் நீற்றினை ஆக்குதலுமாகிய சைவப் பெருக்கத் தினை நிறைவேற்றத் தமக்குத் தந்த பெருங்கருணைத் திறத்தினை நினைந்து கொண்ட தன்மையாலாயது; "இத்தனையும் எம்பரமோ வைய வைபோ வெம்பெருமான் திருக் கருணை யிருந்த வாறே" (தேவா) என்ற எண்ணமே எஞ்ஞான்றும் தோன்ற வழிபடுதல் பெரியோ ரியல்பென்க; தோணியப்பர் தந்த வரம் ஈண்டு நிறைவேறத் தந்தமையால் அவரைப்போலவே திருஆலவாயமர்ந்த தனிநாதனைக் கண்டு பணிந்தனர் என்பது; பிள்ளையாரை மிகவினைந்த தாதையார், தோணியப்பரை வணங்கிப் புறப்பட்டு, அவரையே ஈண்டு மதுரையில் மனங்கொண்டு கண்டு பணிந்து, பின் பிள்ளையாரைக் காண்கின்றனர் என்ற திறமும் கண்டுகொள்க "அங்கணரைப் பணிந்து போந்து (பின்) அரு கணைந்தார் தமை வினவ" என மேல் கூறுவது காண்க. இவ்வாறே பிள்ளையாரும் தாதையாரைக் கண்டவுடன் அவர் சார்விற் றிருத்தோணியப்பரைக் கண்டு "மண்ணி னல்ல" என்ற பதிகம் அண்டுத் திருமுடத் திருந்தபடியே அவரை வினவிப் பணிந்தமை யுங் காண்க (2728) 876

2775\. அங்கணரைப் பணிந்துபோந் தருகணைந்தார் தமைவினவ
"இங்கெம்மைக் கண்விடுத்த காழியா ரிளவேறு
தங்குமிடந் திருநீற்றுத் தொண்டர்குழாஞ் சாருமிடஞ்
செங்கமலத் திருமடமற் றிது"வென்றே தெரிந்துரைத்தார். 877

(இ - ள்) அங்கணரை...வினவ - அங்கணராகிய இறைவரைப் பணிந்து புறம் போந்து பக்கத்தில் வந்தணைந்த நகர மாந்தர்களாகிய அடியார்களை(ப் பிள்ளையாரது திருமடத்தினைப் பற்றி) வினவ; இங்கெம்மை...தங்குமிடம் - இங்கு(க் குருடரா யிருந்த) எம்மைக் கண்திறப்பித்து ஒளிநெறி காட்டிய சீகாழியவரது இளஞ்சிங்கமாகிய பிள்ளையார் தங்கும் இடமாவது; திருநீற்று.. இது என்றே தெரிந்துரைத்தார் - திரு நீற்றுத் தொண்டர் கூட்டம் சாரும் இடமாயச, செந்தாமரை போன்ற திருமடம் மற்று இதுவேயாகும் என்று தெரிந்து சொன்னார்கள்.

(வி - ரை) அங்கணர் - அழகிய கருணைநோக்க முடையவர்; பணிந்து - முன் பாட்டிற் கூறியவாறு திருவடிக்கீழ்ப் புக்கு ஆர்வத்தோடும் பணிந்து.

போந்து - வினவ - திருக்கோயிலின் புறத்தே போந்து வினவினாராக; திருக் கோயிலினுள் சிவன் பேச்சன்றி வேறுபேச்சுப் பேசலாகாதென்பது விதியாதலின் அம் மரபு பற்றிப் புறம் போந்தபின் வினவினார்.

அருகு அணைந்தார்தமை - அங்குப் பக்கத்துச் சார்ந்து அணைந்தார்களாகிய தொண்டர்களை; அருகு - திருக்கோயிலினருகு; கோயிலின் அருகு என்றதனாலும் அவர்களை நோக்கிச் சிவபாதவிருதயர் பேசும் உரிமை எண்ணத்தகக நிலையில் இருந் தமையாலும் அவர்கள் அடியார்கள் என்று கருதப்பட்டது; அல்லாரைக் காணலும் பேசலும் இணங்குதலும் தகாதென்றும் அவர்கள் அஞ்சத்தக்கவர் என்றும் பெரியோர் கொள்வர். "காணு கணவாய் பேசாதப் பேய்களோடே" (திருவிசைப்பா). "திருமுண்டந் தீட்டமாட்டாது அஞ்சுவா ரவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே" (திருவா).

**இங்கெம்மைக் கண் விடுத்த** - என்றமையால் அவர்கள் பாண்டி நாட்டவர் - மதுரை நகரத்தவர் என்றும், முன் அகக்கண் குருடாய் அமணிருளில் நின்று, பின் பிள்ளை யாரருளியவாற்றால் ஞானம் விளக்கப்பெற்று அகக்கண் பெற்றவர் என்றும் கொள்ளப்

படும். கண் விடுத்தல் - குருடாகிய கண் திறப்பித்தல், பாண்டி நாட்டு மக்களது நன்றி பாராட்டுமுணர்ச்சி குறித்தது காண்க.

**காழியார் இளவேறு** - சீகாழிப்பதியவர்களது இளஞ்சிங்கம் போன்ற தலைவர்; ஏறு - பொதுப்பெயர்; ஆண்சிங்கம் என்ற பொருளில் வந்தது; காழியார் - சீகாழி இறைவராகிய தோணியப்பர் எனக் கொண்டு அவரது சிவஞானமுண்டருளிய மதலையார் என்ற குறிப்புடனும் நின்றது.

**செங்கமலத் திருமடம்** - திருமடத்தைத் தாமரைபோன்றதென்றது "தாமரை மிசைத் தனிமுதற் குழவியென்ன" (1939) என்ற உவமையின் கருத்தைத் தொடர்ந்து கொண்டு கூறியபடி, ஆண்டுரைத்தவை பார்க்க. "மலர்மகட்கு வண்டாமரைபோன் மலர்ந்து தலகில் சீர்த்திரு வாரூர் விளங்குமால" (97) என்புழிப்போலச் சைவச்செல்வத் திருவையளிக்கும் பிள்ளையார் தங்குமிடமாதலின் திருமடத்தினைச் செங்கமலம் என்றார். செங்கமலத்தில் வாழும் இலக்குமிக்கு மிடமான திருமடம் என்றுரைத்தனர் முன் உரைகாரர், அது பொருந்தாமை காண்க.

**திருநீற்றுத் தொண்டர் குழாஞ் சாருமிடம்** - தமது முன்னைச்சார்புகள் கெடத் தமது நற்சார்பு இதுவென உணர்ந்துகொண்டு திருநீற்றுத் தொண்டர்கள் கூட்டம் கூட வந்து சார்கின்ற இடமாமென்பது. திருநீற்றினை ஆக்கம் செய்த பிள்ளையாரது செயலால் 2501ல் கூறியபடி முன்னையிருள் நீங்கித் திருநீற்றுத் தொண்டர் குழாம் பெருகப்பெருக வந்து சார்கின்றது என்று அவர்கள் கண்கூடாகக் கண்ட செய்தியறி விக்கப்பட்டவாறு.

"இது" என்றே - இது என்ற அண்மைச்சுட்டினால் இத்திருமடம் திருவாலவாயத் திருக்கோயிலுக்கு அணிமையில் இருந்ததென்று கருத இடமுண்டு. என்றே - ஏகாரம் தேற்றம்.

**தேர்ந்து உரைத்தார்** - தேர்தலாவது கண் விடுத்த தன்மை - செங்கமலமாந் தன்மை என்ற இவற்றின் சிறப்பைத் தாம் உணர்ந்து ..... திறம் தேர்ந்து - தெரிந்தமையால். ௫௭

2776\. செப்புதலு மதுகேட்டுத் திருமடத்தைச் சென்றெய்த,
"அப்பரெழுந் தருளினா" ரெனக்கேட்டா ரடிவணங்கி
யொப்பிலபுகழ்ப் பிள்ளையார் தமக்கோகை யுரைசெய்ய,
"எப்பொழுது வந்தருளிற்?" றென்றெதிரே யெழுந்தருள, ௮௭

2777\. சிவபாத விருதயர்தா முன்றொழுது சென்றணையத்,
தவமான நெறியணையுந் தாதையா ரெதிர்தொழுவார்
அவர்சார்வு கண்டருளித், திருத்தோணி யமர்ந்தருளும்
பவபாச மறுத்தவர்தம் பாதங்க ணினைவுற்றார். ௮௮

2776\. (இ - ள்) செப்புதலும்...சென்றெய்த - முன் பாட்டிற் கூறியவாறு அவர்கள் சொல்லுதலும் அதனைக் கேட்டுச் சிவபாத இருதயர் திருமடத்திற் சென்று சேர; அப்பர்..அடிவணங்கி - அங்கு அவரைக் கண்டவர்கள் அவரை அடிவணங்கிப் போய்; ஒப்பில்...உரைசெய்ய - ஒப்பற்ற புகழையுடைய பிள்ளையாருக்கு அந்த மகிழ்வாயின செய்தியைச் சொல்லவே; எப்பொழுது..எழுந்தருள - அவர் "எப்பொழுது வந்தருளிற்று?" என்று வினவிக்கொண்டு எதிரில் எழுந்தருளி வர; ௮௭௮

2777. (இ - ள்) சிவபாதவிருதயர்...சென்றணைய - சிவபாதவிருதயர் தாம் அவர் முன்னே தொழுது சென்றருள; தவமான...எதிர்தொழுவார் - தவநெறியினில் அணையும் தாதையார் எதிரில் தாமும் தொழுவாராகிய பிள்ளையார்; அவர் சார்வு... நினைவுற்றார் - அவரைக் கண்டருளிய சார்பினாலே திருத்தோணியின்கண்ணே அமர்ந்தருளியிருந்த பவபாசங்களை அறுத்தவராகிய தோணியப்பருடைய திருப்பாதங்களை நினைவுற்றனர். அ௭௯

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2776. (வி - ரை) அது கேட்டு - கேட்டதனால் திருமடத்தினை அறிந்து.

"அப்பர் எழுந்தருளினர்" என்க் கண்டோர் - பிள்ளையாரது தாதையார் எழுந்தருளினார் என்று அங்கு அவரைக் கண்ட பரிசனங்கள் இது பரிசனங்கள் மனங்கொண்டது.

அடி வணங்கி - அவரைத் தொழுதுபோய் உட்சென்று, எழுந்தருளக் கண்டோர் பிள்ளையார்க்கு அந்த ஓகையினை அடிவணங்கி உரை செய்ய என்று கூட்டி உரையபினுமமையும். ஓகை - உவகை, மகிழ்ச்சிக்கிடமான செய்தி.

"எப்பொழுது வந்தருளிற்று?" என்று - பிள்ளையார் இவ்வாறு கூறிக்கொண்டு; எதிரே எழுந்தருள - எதிர்கொண்டு வந்தருளவே; "எப்பொழுது வந்தது?" என்பது வரவேற்கும் மரபு "என்றுவந்தாய் யென்னு மெம்பெருமான்றன் றிருக்குறிப்பே" (தேவா) ஒப்பில் புகழ் - பிள்ளையாரது புகழ் ஒப்பற்ற சிறப்பினையுடையது.

எனக் கேட்டோர்—என்பதும் பாடம். 878

2777. (வி - ரை) முன் தொழுது - முன் - பிள்ளையார் திருமுன்பு; முந்தற்கண் - வேறு செய்தற்கு முன் என்றலுமாம்.

தொழுது முன் சென்று என்று கூட்டினுமமையும்.

சென்று அணைய - திருமடத்தினுள் பிள்ளையாரை அணுகச் சென்று சார.

தவமான நெறி...எதிர் தொழுவார் - தவமான நெறி-வைதிக சைவ நெறி. முன் (2773 - 2774) பாட்டுக்களில் உரைத்தவை பார்க்க; தவநெறியின்கண்ணே எப்பொழுதும் வாழ்பவர்; எதிர் தொழுதல் - அவர் தொழத் தாமும் தொழுதல்; தொழுவார் - தொழுவாராகி; முற்றெச்சம். தொழுவார் - கைதுவித்தருளி - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. "அன்பின் வந்தெதிர் கொண்டசீ ரடியார் அவர்களோ நம்பி யாரூரர் தாமோ, முன்பிறைஞ்சின ரியாவரென் றறியா முறைமையா லெதிர் வணங்கி மகிழ்ந்து" (244) என்ற இடத்திலே இங்குக் கருதற்பாலது. அங்கு இருபாலும் அடியார்கள் என்ற கருத்தால் ஒருசேர வணக்கம் உடனிகழ்ந்தது. "பரமனுக் காளா மன்பர் தந்தமிற் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்" (72) என்ற இடம்; இனித், "திருமுலைப்பால் உண்டபோதே, யேழிசைவண் டமிழ்மாலை யிவ னெம்மா னெனக்காட்டி யியம்ப வல்ல, காழிவரும் பெருந்தகை" (1443)யைக் கண்டு வணங்க வருகின்ற அரசுகளும், "வரை விலலியார் வெஞ்சூலை மடுத்தருளி நேரே முன்னாள், ஆண்டவர செழுந்தருளக் கேட்டருளி" (1446) அவரைக் காணுகைய பெருவிருப்புடன் எதிர்கொண்டு வந்த பிள்ளையாரும் சீகாழியில் திருமடத்தில் சந்தித்த இடத்தக "கண்ட கவுணியர் கன்றாங் கருத்தில் பரவுமெய்க் காதல், தொண்டர் திரு வேட நேரே தோன்றிய தென்று தொழுதே...எதிர்வந் திறைஞ்ச" (2169) என்ற இடமும் இங்குக் கருதத்தக்கது; ஆண்டு இறைவர் ஆட்கொண்டருளிய பெருமை நினைந்ததும், திருவேடத்தின் பெருமைபற்றி நினைந்ததும், ஆகிய கருத்துக்களினால்

பிள்ளையார் தொழுத நிலையும் அப்பர் இறைஞ்சிய நிலையும் நிகழ்ந்த நுட்பங்களை உய்த்துணர்ந்துகொள்க; அன்றியும் அரசுகளைப் பிள்ளையார் தமது "அப்பர்" என அழைத்தருளி மேற்கொண்ட நிலையும் கருதுக. இனி, ஈண்டுச் சிவபாதவிருதயர் தமது திருமகனார் என்ற நிலையிற் காணவருகின்றனர், அவ்வோலைச் செய்தி கேட்டுத் தந்தையார் வருகின்றனர் என்ற கருத்துடன் எதிர்கொண்ட பிள்ளையார், "எப்பொழுது வந்தருளிற்று" என்று உரைத்து அழைக்க, அவர் பிள்ளையாரைத் தொழுதபோது, பிள்ளையார், அந்தத் தந்தையாரது சார்புபற்றித் திருத்தோணியில் இருக்கும் தாதையாரையும் தாயாரையும் நினைந்து தொழுதனர்; தாதையார் தொழுதபோது உலகத் தந்தையார் என்ற நிலையில் பிள்ளையார் தொழவில்லை அவ்வாறு தொழுதிடுதல் எம்மனோராகிய உலகரது பாசநிலையா யொழிந்து "பாசமற்று இலர்" ஆகிய பிள்ளையார்போன்ற பெரியோர்நிலை யாகாது பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்ற எம்மனோர்க்குப் "பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்" என்றபடி உலகப் பொருள்களே காட்சிப்பட இறைவனை அவற்றுட் காணலரிது. ஆனால் பெரியோர் "பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்"; ஆதலின் 'பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்" என்ற நிலையுடையார் என்ற நுட்பத்தினை ஈண்டுக் கண்டுகொள்க. பவபாச மறுத்தவர் - தொழுத தாதையாரை அவ்வாறே தாதையார் என்ற நிலையிற் கருதாது அவர் சார்பில தோணித் தாயாரையும் தந்தையாரையுமே நினைவுறச் செய்தது பவபாசமறுத்த நிலை என்க. இது "மறக்குமா றிலாத என்னை" (தேவா) என்ற நிலை 879

2778. இருந்தவத்தோ ரவர்முன்னை யிணைமலர்க்கை குவித்தருளி
"யருந்தவத்தீ! ரெனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட
பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந்த தே?"யென்று
பொருந்துபுகழ்ப் புகலியின்மேற் றிருப்பதிகம் போற்றிசைத்தார்;

2779. "மண்ணினல்ல" வென்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
யுண்ணிறைந்த காதலினாற் கண்ணருவி பாய்ந்தொழுக
வண்ணலார் தமைவினவித் திருப்பதிக மருள்செய்தார்
தண்ணறுமம் பூஞ் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர். ௮௮

2778. (இ - ள்) இருந்தவத்தோரவர்...குவித்தருளி - பெருந்தவத்தை யுடையவராகிய அந்தச் சிவபாதவிருதயர் முன்னே இணையாகிய மலர்போன்ற இரண்டு கைகளையும் கூப்பியருளி; 'அருந்தவத்தீர்! இருந்ததே என்று - அரிய தவத்தையுடையவரே! என்னை அறியாப் பருவத்திலே எடுத்தாண்ட பெருந்தகையாராகிய தோணியப்பர் எமது பெரியநாயகியாருடன் மகிழ்ந்தருளி யிருந்ததே? என்ற கருத்துடன், பொருந்து...இசைத்தார் - பொருந்தும் புகழினையுடைய சீகாழியின் மேல் திருப்பதிகத்தினை போற்றிசைப்பாராகி, ௮௮௦

2779. (இ - ள்) "மண்ணினல்ல"...என்று எடுத்து - "மண்ணினல்ல" என்று தொடங்கி; மனத்தெழுந்த...பாய்ந்தொழுக - திருவுள்ளத்திலே எழுந்த பெரிய மகிழ்ச்சியோடு உள்ளே நிறைவாகிய ஆசைப் பெருக்கினாலே கண்களிலிருந்து அருவி போலக் கண்ணீர் பாய்ந்து வழிய; அண்ணலார் தமை வினவி - தோணியப்பர் இனிது இருந்தமைபற்றித் தாதையாரை வினவி; தண்ணறுமம்...தமிழ் விரகர் - குளிர்ந்த மணமுடைய அழகிய செந்தாமரை மாலையினை அணிந்த தமிழ் விரகராகிய பிள்ளையார், திருப்பதிகம் அருள்செய்தார் - திருப்பதிகத்தினை அருளிச்செய்தனர் ௮௮௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டுரைக்க நின்றன.

2778. (வி - ரை) இருந்தவத்தோர் - சிவபாதவிருதயர்; "செய்தவத்தால்" (2770); "தவமான நெறியணையும் தாதையார்" (2776) என்று பன்முறையும் அவரது தவமபற்றியே விதந்து கூறியது அவரது சிவதவத்தின் பெருஞ்சிறப்புக் குறித்தற்கு. இதுபற்றியே பிள்ளையாரும் "அருந்தவத்தீர்! என ஈண்டு அவரை விளித்தருளுவதும் கருதுக. "தாமென்று மனத்துள்ளராத் தகுதியரா யுலகத்துக், காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினான" (பிள்.தேவா பிரமபுரம்) என்ற திருவாக்கு இவரது குறிப்புப் பெற நிற்பதும் காண்க; இவரது தவம் நிறைவெய்திய பயன் இப்போது ஈண்டு மதுரையிற் பெற்றமையால் இக்கருத்தால் இங்கு விதந்து பாராட்டியபடியாம். இருந்தவத்தோர் - பிள்ளையார் என்று கொண்டுரைப் பாருமுண்டு.

அவர் முன்னே இணைமலர்க் கைகுவித்தருளி - அவர் முன்னே - கை குவித்தது அவர் முன்பு ஆயினும் குறித்தது தோணியப்பரை என்பது குறிப்பு.

"எனையறியாப் பருவத்தே எடுத்தாண்ட பெருந்தகை யெம்பெருமாட்டி யுடனிருந்ததே?" - இது பதிகக் குறிப்பும் கருத்துமாம். "போதையார் பொற்கிண்ணத் தடிசில" என்ற பதிகத்தின் இரண்டாவதுபாட்டி னறியக்கிடக்கின்றது.

"போதையார் பொற்கிண்ணத் தடிசில்" (பதிகம்) - என்றதனால் பொற்கிண்ணத்தில் ஞானமூட்டியதும், பிள்ளையாரது அறியாப் பருவமாகிய மூவாண்டு வயதும், ஞானவமு தூட்டி எடுத்தாண்டமையும், "பேதையா ளவளோடும் பெருந்தகை யிருந்ததே" (பதிகம்) என்றதனால், "பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந் ததே" என்றதும் பெறப் படுதல் காண்க.

அறியாப் பருவம் - அறிவு நிரம்பாத இளங் குழவிப் பருவம்; இறைவனை அறிந்து வழிபடாத காலம் என்றலுமாம்; மறந்த காலம் என்ற குறிப்பும் காண்க. எனை இன்னார் என்று நான் அறியாத பருவம் எனவுரைக்கவும் நின்றது.

பெருந்தகை - யான் அறியாதிருந்தும் தான் நினைந்து அறிந்து எடுத்தாண்டமை குறிக்கப் "பெருந்தகை" என்றார்.

இருந்ததே - நலம் பெற இருந்ததே என; ஏகாரம் வினா. "வினவி - அருள் செய்தார்" (3779) என மேல்வரும் பாட்டிற் கூறுதல் காண்க.

போற்றிசைத்தார் - இசைத்தாராய - அருள்செய்தார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க நின்றது, முற்றெச்சம். புகலியின்மேற் றிருப்பதிகம் போற்றி இசைத்தார் - பெருந்தகை எம்பெருமாட்டியுட னிருந்ததே எனத் தாதையாரபால இறைவர் இறைவியாரது நலம் வினவும் வகையால் பதிகம் அமைந்ததாயினும் புகலியைப் போற்றுதல் கருத்தென்பது. போற்றிசைத்தல் - ஒருசொல்லியலபிற்று.

எம்பெருமாட்டி - பாலமுது ஊட்டிய நன்றி குறிக்க எம் என்ற உரிமைப்பாட்டுடன் கூறினார். பதிக முழுமையும் அம்மையைப் போற்றியதும் குறிப்பு.

பொருந்து புகழ் - தன் மேன்மைகருதிப் புகழ் தானே வந்து பொருந்தும் என்க. ஏனைய புகழ்களைப்போலப் பொருந்தாத என்பதின்றிப் பொருந்திய - பொருத்தமாகிய - புகழ் என்க.

புகலியின் மேல் - திருவாலவாயினின்றபடி சீகாழியாகிய அத்தலத்தைப் பாடியதென்ற வரலாறு குறிக்க இவ்வாறு எடுத்தக்காட்டினார்.

2779. (வி-ரை) மண்ணினல்ல - பதிகத் தொடக்கம்.

மனத்தெழுந்த - காதல் - மனநிலை; கண் அருவி......ஒழுக - மெய்யின் நிலை; மெய்ப்பாடு; வினவி அருள் செய்தார் - வாக்கின் நிலை என்று மூன்று கரணங்களின் நிலையும் கண்டுகொள்க.

அண்ணலார் - "பெருந்தகை" என்ற பதிகக் கருத்து.

செங்கமலத்தார் அணிந்த - தாமரை அந்தணர் மரபுக்குரிய அடையாள மாலை.

தமிழ் விரகர் - "அருந் தமிழ் ஞானசம்பந்தன் செந்தமிழ்" (பதிகம் - 11) என்ற பதிகத் திருக்கடைக்காப்பின் குறிப்பு.

தண் - நறும் - பூ - செங்கமலம் - தாமரையின் தண்மை - மணம் - அழகு - நிறம் என்ற நான்கு தன்மைகளும் குறிப்பிடப்பெற்ற நயம் காண்க. ௮௦௧

திருக்கழுமலம்

திருச்சிற்றம்பலம் — பண் - கொல்லி

மண்ணினல் லவண்ணம் வாழலாம்; வைகலும்
எண்ணினல் லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே. (1)

"போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லா"தெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்,
காதையார் குழையினன், கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே. (2)

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தவெம் பிரான்றனை
யருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:— முன் 2778-ல் ஆசிரியர் எடுத்துக்காட்டியபடி கொள்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) பெண்ணினல்லாளொடும் பெருந்தகை யிருந்ததே; அதனால் வாழலாம்; குறைவிலை; உறும் - என்க.—(2) போதை - சிறிதலராத தாமரைமலரைப் போன்ற தன்மையினைக்கொண்ட; ஆதல் - தன்மை பொருந்துதல், தாமரைப் போதுபோன்ற பொன் கிண்ணம் என்க. போது தேன் தருதல் குறிப்பு. அடிசில் - பாலமுது என்ற பொருளில் வந்தது, பொல்லாதெனா-முனிவுற - சரிதக் குறிப்பு. இப்பாட்டுப் பிள்ளையாரது சரிதத்திற்கு அவர் திருவாக்கிற் பெறப்படும் சிறந்த அகச்சான்று; "யாரளித்த பாலடிசி லுண்டதுநீ யெனவெகுண்டு" (1970). ஆண்டு அடிசில் என்பதும், வேதுளா என்பதும் பதிக ஆட்சி;—(3) தொண்டு - இறைவன் அணையும் வகையாற் செய்யும் தொழிலினாலே,—(4) அயர்வு - துன்பம், அசைவு - கவலை, துதிசெய - இருந்ததேயாதலின் அசைவு ஒழி என்றபடி. நீயர் - ஒளி. பெயர் பல - சிவநாமமாகிய சிபஞ்சாக்கரம் முதலாகிய மந்திரங்கள்; சீகாழியின் பல பெயர்கள் என்றலுமாம்.—(5) அடைவு - அடைக்கலமாகிய இடம், புகலிடம்; "அடைவுதிருத்தாண்டகம்",—(6) பெருந்தகை இருந்ததே யாதலின் மற்றொரு உறு

பற்றுமில்லை; "மற்றுப்பற் றெனக்கின்றி" (தேவாரம்); பேற்று எனையாளுடைய - பெறுதல் - ஞானப்பாலுதவி மகவாகப் பெற்று;—(7) துறைவு - அணைவதும் - தன்பத்தை அனுபவித்தலும்; கறை - இருள்போதி நிழல் என்ற பொருளில் வந்தது;—(8) அரக்கனூர் - பனைமை இகழ்ச்சிக்கண் வந்தது. நீர் - நீர்மை; அருள்;—(9) நெடியவன் - விட்டுணு; ஆர்உறும் - மேலழுகு பமை; தார் - உறு - தட்டுடை - பாய உடுக்கை;—(11) தேன் - வண்டினம்.

2780. திருப்பதிகந் திருக்கடைக்காப் புச்சாத்திச் சிறப்பின்மிகு
விருப்பினு லவர்தமக்கு விருந்தளித்து மேவுநாள்
அருப்புறுமெய்க் காதல்புரி யடியவர்க டம்மோடும்
பொருப்புறுகைச் சிலையார்சேர் பதிபிறவுந் தொழப்போவார்; ௮௮௨

2781. ஆலின்கீழ் நால்வர்க்கன் றறமுரைத்த வங்கணனை
நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்
காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது புறம்போந்தார்
சீலங்கொ டென்னவனுந் தேவியரு முடன்போத. ௮௮௩

2780. (இ - ள்) திருப்பதிகம் ...சாத்தி - திருப்பதிகத்தினைத் திருக்கடைக்காப் புச் சாத்தி முடித்தருளி; சிறப்பின்மிகு...மேவுநாள் - மிக்க சிறப்பினுடன் விருப்பத்தினாலே அத் தாதையார் தமக்கு விருந்தமுதளித்துக் களித்துப் பொருந்தியிருக்கும் நாள்களிலே, அருப்புறு...போவார் - அரும்புபோலப் புதிதின் மலர்கின்ற உண்மையன்பு மிகுதியினாலே திருத்தொண்டினை இடையறாது நினைந்து செய்யும் அடியவர்களோடும், மலையினையே வில்லாகக் கையில் ஏந்திய இறைவர் எழுந்தருளிய பிற பதிகளையும் சென்று தொழுவதன்பொருட்டுப் போவாராகி, ௮௮௨

2781. (இ - ள்) ஆலின் ...அங்கணனை - கல்லாலமரத்தின் கீழே நான்கு முனிவர்களுக்கு அறங்களை உபதேசித்தருளிய அங்கணராகியவரை; நூலின்கண்...ஈந்தானை - தமிழ் நூல்களுள்ளே சிறந்த பொருளிலக்கணத்தைப் பாடி நூலறியும் சங்கப் புலவர்களுக்கு ஈந்தருளியவரை; காலம்பெற்று ..கைதொழுது - உரிய காலம் சேரப் பெற்று இனிதாக வணங்கிக் கைதொழுது, சீலம்...போத - சீலவொழுக்கத்தினை மேற்கொண்ட பாண்டியனும் அவரது தேவியாரும் தம்முடன் கூடவர; புறம் போந்தார் - புறத்திலே போந்தருளினார் (பிள்ளையார்); ௮௮௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2780 (வி - ரை) சிறப்பின் மிகு விருப்பாவது - 'அவர்சாரப் கண்டருளித் திருத்தோணி யமர்ந்தருளிய பவபாச மறுத்தவர்தம் பாதங்கள் நினைவு" நின்ற சிறப்பினாலவரும் பெருவிருப்பம்.

விருந்து - தாதையார் பழஞ்சுற்றமாய ஒக்கல் எனப்படுவாராயினும் ஈண்டுத் திருத்தோணியமர்ந்தார் பாதங்களின் நினைவு கொள்ளுந்தோறும் புதிது புதிதாய் வருவதொன்றுதலின் விருந்தென்றார். விருந்து - புதிதின் வருவோர், அதிதிகள்; இங்கு விருந்தென்றது விருந்திற்குச்செய்யு முபசாரத்தினை; "யாதுசெய வேண்டுகொல் விருந்து" (குறள்).

அருப்புறு மெய்க்காதல் - புரி - அருப்புறுதல் - அரும்புபோல அவ்வப்போது புதிதின் மலர்தல்; உறு - உவமவுருபு; அரும்பு - அருப்பு - என எதுகை நோக்கி வலித்து வந்தது. காதல் - அன்பின் செறிந்தவிளைவு; ஈண்டு அதனால் விளையும்

செயல்களுக்காயிற்று. புரிதல் - இடைவிடாது சிந்தித்தலும் சொல்லுதலும் செய்தலுமாம்.

**அடியவர்கள் தம்மோடும்** - அடியவர் - அயரா அன்புசெய்யும் மெய்ஞ்ஞானிகள். "அன்பரொடு மரீஇ" (12 சூத் - சிவஞானபோதம்).

**கையுறு பொருப்புச் சிலையார்** என மாற்றுக. பொருப்பு - சண்டு மேருமலை; சிலை - வில்; "சிலையது வெஞ்சிலையாக" (தேவா)

**பிறபதியும்**—என்பதும் பாடம். 882

2781. (வி - ரை) **ஆலின்...அங்கணனை** - ஆல் - கல்லாலமரம்; **நால்வர்** - முனிவர் நால்வர்; அவராவார் சனகர்-சனந்தனர்-சனாதனர்-சனற்குமாரர்.

**அறம்** - அறமுதலிய நான்கினையும் உணர்த்தினன்; "அழிந்த சிந்தை யந்தணாளர்க் கறம்பொரு ளின்பமவீடு, மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே" (பிள. தேவா - பழந்தக்க 7); இவை வேதங்களில் மக்களுக்கு உறுதிப் பொருள்கள் என எடுத்தோதப்பட்டன.

**நூலின்கட் பொருள் பாடி** - பொருள் - பொருள்நூல்; "செழும்பொருணூல் தருவானை" (1671); **நூலின்கண்** - தமிழ் நூல்களில் சிறந்து பேசப்படும், எழுத்துச் சொல் பொருள் யாப்பு என்ற நான்கனுள் சிறந்தது பொருள், அஃது அகம்புறமென இருவகைப்படும், அவற்றுட் சிறந்தது அகப்பொருள்; அதுதானும் ஞானயோக நுண்பொருள்-உலகவழக்குப் பொருள் என இரண்டு பொருளும் நுதலும் இயல்புடைத்து; அவற்றுட் சிறந்தது ஞானயோக நுண்பொருள்; என இவ்வெல்லாவகைப் பட்ட பொருணூல்களினும் சிறந்த ஞானயோகப் பொருணூல் பாடியளித்தனர் என்றதாம்; "மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளக்கு வாய்மைச், செம்மைப் பொருளுந் தருவார்" (974) என்று இதன் இயல்பை முன்னர் விரித்தருளியமை காண்க. இதுபற்றி வரும் இறையனாகப்பொருளுரையும் (1), திருக்கோவையா (1) ருரையும் பார்க்க. **பொருள் பாடி** - "இறையனாகப்பொருள்" என்னும் பொருளிலக்கணத்தைப் பாடி.

**நூலறிவார்** - சங்கப் புலவர்களும் பாண்டியனும் அவர்க்கு இறைவர் பாடியீந்த வரலாறு இறையனாகப்பொருள் முதற்சூத்திர உரையுட் காண்க. "நூலறிபுலவ" (முருகு)

**காலம் பெற்று** - இறைஞ்சி வழிபட்டு விடைகொள்ளுதற்குரிய பூசைக்காலம் கிடைக்கப்பெற்று.

**நூல்...பாடி** - "படிக்குநூல்கள் சிவாகமம்" (சித்தி) என்றபடி ஐந்தொடுச் சரியை யாதி உண்மைப்பொருள் காட்டும் சிவாகமங்களைப் பாடியருளி என்றும், இவற்றை மறையாகி உணர்ந்தார்க்கு ஈந்தருளினார் என்றுங் கொள்ளவுமாம்.

**புறம்** - மதுரைத் திருநகரின் புறம்; மேல்வரும் பாட்டுப் பார்க்க.

**சீலம் கொள்** - சைவவொழுக்கத்தினை மீள மேற்கொண்ட (அரசன). 883

வேறு

2782. தேனிலவு பொழின்மதுரைப் புறத்துப் போந்த
தென்னவனார் தேவியா ரமைச்சர் சிந்தை
யூனெகிழும் படியழிந்தங் கொழுகு கண்ணீர்
பாய்ந்திழிய வுணர்வின்றி வீழக் கண்டே

"யானும்மைப் பிரியாத வண்ண மிந்நாட்
டிறைவர்பதி யெனைப்பலவும் பணிவீ" ரென்று
ஞானமுணர் வாரருள, வவரும் போத,
நம்பர்திருப் பரங்குன்றை நண்ணி னாரே. அஅச

(இ - ள்) தேன.. போந்த - தேன் பொருந்திய (மலர்கள் நிறைந்த) சோலைகள் சூழ்ந்த மதுரைமாநகரின் புறத்திலே போந்த; தென்னவனார்...கண்டே - பாண்டியரும் தேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் அமைச்சராகிய குலச்சிறையாரும் தமது ஊன் உருகும்படி மனம் அழிந்து அங்கு வடியும் கண்ணீர் இடையறாது பெருகி வீழ உணர்வு மயங்கி வீழ்ந்ததனைக் கண்டே; யானும்மை ..அருள - நான் உங்களைப் பிரியாதபடி இந் நாட்டில் இறைவர் பதிகள் எனைப் பலவற்றையும் வணங்குவீர்களாக என்று சிவஞான முணர்வாராகிய பிள்ளையார் அருளிச்செய்ய; அவரும் போத - அவ்வாறே அதற்கிசைந்து அவர்களும் உடன்செல்ல; நம்பர்.. நண்ணினாரே - இறைவரது திருப்பரங்குன்றத்தினைச் சென்று சேர்ந்தருளினார்.

(வி - ரை) தேன் நிலவு பொழில் - தேன் நிலவுதல் - பூக்களில் தேன் பிலிற்றுதல், தேன் - வண்டுகள் என்றலுமாம்.

மதுரைப் புறத்துப் போந்த - முன் பாட்டிற் புறம் என்றதனை விரித்தவாறு, திருவாலவாயக் கோயிலின் புறத்தும் நகரின் புறமவரையும் உடன் சென்ற பெரியோர்களைக் குறைந்தது பதினாறடி யளவும் பின்சென்று விடைபெறுதலும், பல வளவும் முன்சென்று வரவேற்றலும் விதி. ஈண்டு, அரசனும் தேவியாரும் அமைச்சரும் ஆர்வமிகுதியினால் விடைகொள்ள நகரின் புறத்து வரையும் சென்றனர் எனக. குலச்சிறையார் நான்குநாழிகை யளவும் புறத்துச் சென்று பிள்ளையாரை வரவேற்கும் வகையால் திருக்கூட்டத்தின் முன் நிலத்தின் வீழ்ந்து பணிந்து கிடந்த வரலாறும் காண்க (2553)

தென்னவனார்-தேவியார் - அமைச்சர் - அரசாங்கச் சார்புபற்றி இவர்கள் உடன் வந்து குறைவறுத்து வர அந்நாட்டில், இனிப் பல பதிகளிலும் எழுந்தருளுவாராதலால் அக்குறிப்புப்பட அரசாங்கச் சார்புபற்றி இம்மூவரையும் கூறினார்.

ஊன் நெகிழும்படி சிந்தை அழிந்து - என்க; ஊன் நெகிழ்தல் - உடம்பெலாம் உருகுதல்; அழிந்து - அழிதலால்; அழிதல் - நைந்து வருந்துதல்; "ஊனெலா நின்றுருகப் புகுந்தாண்டான்" (திருவா).

உணர்வின்றி - உணர்வு மயங்கி; உணர்வின்றி வீழ - பிள்ளையாரது பிரிவாற்றாமையினால் ஒன்றும் தோன்றாது மயங்கி வீழ; "பிரிவாற்றா துடன்போத வொருப்படும் அவ்வளவு" (2792).

யானும்மைப் பிரியாத வண்ணம் - பிள்ளையாரைப் பிரியலாற்றாது மயங்கி வீழ்ந்தார் அவர்களாக, நீர் என்னைப் பிரியாதவண்ணம் என அவர் மேல்வைத்துக் கூறாது அந்நிலையினைத் தம்பாலதாக வைத்து நான் பிரியாதபடி என்றிவ்வாறு கூறியது பெரியோர் இன்மொழி கூறும் தகுதி மாபுபற்றி; உலக வழக்கிலும் தக்காரபால இம்மரபில் உரை வழங்குதல் காண்க. I think I have made myself clear - முதலிய நவீனர் நாகரிக வழக்கும் காண்க. பதி பிறவும் தொழத் தாம் அவர்களைப் பிரிந்து செல்லப் போந்த குறிப்பும் உடன்கொண்ட மரபுமாம்.

எனைப் பலவும் - எனை - எத்தனையும்; மிகுதி குறித்தது; உம்மை முற்றும்மை. எனைய என்றலுமாம்.

**பணிவீர்** - என்னுடன் கூடவே போந்து பணிவீர் என்றதாம்.

**ஞானமுணர்வார்** - ஞானம் - "எண்ணரிய சிவஞானத் தின்னமுதம்" (1965); "தாவில்தனிச் சிவஞானம்" (1916); உணர்வார் - உணரும் தன்மையுடையவர் என வினைப்பெயர்; ஞானமுணர்வாராதலின் இவ்வாறு பணித்தருளினர் என்பது குறிப்பு. அருளியதன் அருண்ஞானக் குறியாவது அவர்களது பிரிவாற்றாமையினை அகற்றியதும், பாண்டி நாட்டுப் பதிகளைத் தம்முடன்கூட வழிபடுமாறு பணித்து வழிகாட்டியருள்வதும், அதன்மூலம் பாண்டி நாடு முழுமையும் தாமே போந்தருளி "வேதநெறியே யாக்கி வெண்ணீற்றின் சார்வினுண மிக்கு யாந்த கதியருளுவதும்" (2790), பிறவுமாதல் கண்டுகொள்க.

**அவரும்** - தென்னவனார் முதலிய மூவர்களும்; **போத** - உடன் வர. 884

2783\. ஆறணிந்தார் தமைவணங்கி யங்குப் போற்றி
யணியாப்ப னூரணைந்து பணிந்து பாடி
நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ் சேர்ந்து
நிலவுதிருப் பதிகங்க ணிகழப் பாடிச்
சேறணிந்த வயற்பழனக் கழனிசூழ்ந்த
சிரபுரத்து வந்தருளுஞ் செல்வர் செங்கண்
ஏறணிந்த வெல்கொடியார் திருப்புத் தூரை
யினிதிறைஞ்சிச் சிலநாளங் கிருந்தா ரன்றே. ௮௮௫

(இ - ள்) **ஆறு...போற்றி** - கங்கையை (சடையில்) அணிந்த இறைவரை அப்பதியிற் போற்றி; **அணி...பாடி** - அழகிய திருஆப்பனூரினைச் சார்ந்து வணங்கிப் பாடியருளி; **நீறணிந்த...பாடி** - திருநீறு தாங்கி அழகு செய்யும் திருமேனியையுடைய செல்வராகிய இறைவரது பதிகள் பிறவற்றையும் சேர்ந்து நிலைபெற்ற திருப்பதிகங்களை நிகழும்படி பாடி; **சேறணிந்த...செல்வர்** - சேறு பொருந்திய வயல்கள் சூழ்ந்த சீகாழியில் வந் தவதரித்தருளும் செல்வராகிய பிள்ளையார்; **செங்கண்...இருந்தாரன்றே** - செங்கண்ணையுடைய இடபத்தை உடைய வெற்றி பொருந்திய கொடியினை உயர்த்திய இறைவரது திருப்புத்தூரினை இனிதாகச் சார்ந்து வணங்கிச் சில நாள்கள் அங்கு எழுந்தருளி யிருந்தனர்.

(வி - ரை) **ஆறு** - கங்கையாறு; சடையில் என்பது இடநோக்கி வருவிக்கப்பட்டது.

**அங்குப் போற்றி** - இறைவர் எங்குமுள்ளாராதலின் எங்கெங்கும் போற்றும் நிலையில் அங்கும் போற்றி.

**அணி ஆப்பனூர்** - "அணியாப்ப னூரானை" என்ற பதிகஆட்சி போற்றப்பட்டது. வைகையாற்றினது வடகரையின் அமைப்பாகிய அணியும், திருவாலவாயின் காட்சியினது அணியும், பிறவும் குறிப்பு.

**நீறு அணிந்த** - நீறு இங்குத் தாங்கியதால அழகினைப் பெற்ற.

**செல்வர்** - ஐசுவரியமுடையவர்; ஐசுவரியம் - ஈசுவரத் தன்மை.

**நிலவு திருப்பதிகங்கள் நிகழ** - நிலவுதல் - அழிவுறாதிருத்தல்; நிகழ - வழங்குமாறு.

**சேறு அணிந்த** - சேறு - ஏனைய இடங்களில் அழுக்கென் றெண்ணப்படினும் வயலில் உள்ளபோது அழகு தருவது; பயிர் விளைவுக்குக் காரணமாய உலகு புரக்கும் தன்மைக்குக் காரணமாதல் குறிப்பு.

**வந்தருளும் செல்வர்** - "நீறணிந்த செல்வா" எனப்பட்ட இறைவரது தன்மை இவரும் பெற்றவர் என ஈண்டுச் செல்வர் என்றார்.

**ஏறு அணிந்த** - ஏற்றினைக் கொடியில் அழகுபட வைத்த.

**வெல்கொடி** - என்றும் வெற்றியேயன்றிப் பிறிதில்லாதது.

**திருப்புத்தூரை...இருந்தார்** - திருப்புத்தூர் அந்நாளினும் அரசாங்கத் தொடர்புடைய பெருமைப்பட்டினமா யிருந்தமை சரிதங்களா லறியப்படும்; பாண்டி நாட்டுப் பெருந் தலங்களுள் ஒன்று; தலவிசேடம் பார்க்க.

**எய்தியிறைஞ்சிச் சிலநாள்**—எய்தியிறைஞ்சிப்பாடி—என்பனவும் பாடங்கள்.

## திருப்பரங்குன்றம்

திருச்சிற்றம்பலம் பண் - குறிஞ்சி - 1-ம் திருமுறை

நீடலர் சோதி வெண்பிறை யோடு நிறைகொன்றை
சூடல னந்திச் சுடரெரி யேந்திச் சுடுகானில்
ஆடல னஞ்சொ லணியிழை யாளை யொருபாகம்
பாடலன் மேய நன்னகர் போலும் பரங்குன்றே. (1)

மைத்தகு மேனி வாளரக் கன்றன் மகுடங்கள்
பத்தினை யிட்டோ ரிருபது தோளுஞ் செற்றானைப் பரங்குன்றைச்
சித்தம தோன்றிச் செய்கழ லுன்னிச் சிவனென்று
நித்தலு மேத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே. (8)

தடமலி பொய்கைச் சண்பைமன் ஞான சம்பந்தன்
படமலி நாக மரைக்கசைத் தான்றன் பரங்குன்றைத்
தொடைமலி பாடல் பத்தும்வல் லார்தந் துயர்போகி
விடமலி கண்ட னருள்பெறுந் தன்மை மிக்கோரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—சிவனிடமாகிய பரங்குன்றத்தைச் சிவனென்று ஏத்துவோர் மேற் றொல்வினை நில்லா.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** .—(1) **சூடலன்** - சூடலை உடையவன்; **ஆடலன்** - ஆடல் செய்பவன்; **பாகம் பாடலன்** - பாகம் வைத்துப் பாடல் புரிபவன். **பாட்டு**-முறை; வரும் பாட்டுப் பார்க்க; அதனுள் **தேன்மொழி** என்ற குறிப்புமிது;—(2) **தேன்மொழி** - தேன் போன்ற மொழியையுடையவள் - உமையம்மையார்;—(3) **பாரிடம்** - பூதகணம்;—(6) **தொடை நவில்கின்ற** - தொடுத்த அளவாலே செயல் விளைகின்ற; **தொடை** - தொடுத்த செயல்; **நவிலுதல்** - செய்தல் என்ற பொருளில் வந்தது,—(8) **சித்தமதோன்றி...ஏத்த** - சிவனை வழிபடும் கிரியையும் மந்திரத்தினையும் உபதேசித்தருளியபடி; 1 - 2 - 3 - 4 - 9 பாட்டுக்களில் அம்மையோடிருக்கும் கிரியைப் போற்றி, அத்தன்மை குறிக்கும் மகாமந்திரத்தையும் அருளியவாறு காண்க; **தொல்வினை நில்லா** - என்றதனால் பழவினையேயன்றிப் பின்னர்த் தேடிக்கொள்ளப்படும் வினையும் உடல் முகந்துகொண்ட வினையும் ஒழியும் என்பது பெறப்படும். 10-வது பாட்டும் இக்கருத்தினை வற்புறுத்தியவாறு; பரங்குன்றத்தினைச் சிவனே என்று வழிபடுக என்றதாம். அப்பெருங்குன்றம் மெய்யும் உருவும் சிவவடிவாய்த் திகழ்வதும் கருதுக. **நம்மேல் நில்லா** என்றதனால் "இன்றோரிடையூ றெனக்குண்டோ" (திருவா) என்றபடி பழவினையும் உடலூழாய்க் கழிவ

தன்றி உறுத்தல் செய்யா என்று எடுத்துக்காட்டியபடி ;—(9) மோய் ஒளி உந்தி - மாலினுடைய அழகிய உந்தித் தாமரை. உரவோன் - பிரமன் ;—(10) மீண்டு - வன்மை.

தல விசேடம் :—திருப்பரங்குன்றம் - பாண்டி நாட்டின் பாடல்பெற்ற தலங்களுள் மூன்றாவது பதி ; முருகப்பெருமானது படைவீடுகள் எனப்படும் ஆறு சிறந்த பதிகளுள் முதலாவது ; அப்பெருமான் சூரனைக் வதைத்தபின் இங்கு எழுந்தருளித் தெய்வயானையம்மையாரைத் திருமணம் செய்துகொண்டருளிய பெருமையுடைய பதி. அத்திருமணத்தில் சிவபெருமான் உமையம்மையாரோடும் எழுந்தருளியிருந்து கண்டு, தேவர்களுக்கும் வெளிப்படக் காட்சி கொடுத்த பெருமைபெற்ற பதி ; இத்திருமணக் காட்சிபற்றிய விழா இன்றும் நடைபெறுகின்றது. ஆனால் கந்தமா புராணத்திற் கூறியபடி சூரசங்காரத்தின் அடுத்து நடைபெறாது பல மாதங்களின் நடைபெறுவது பிற்காலத்தாரால் நேர்ந்த வழக்கு மாறுபாடு : அதனை மாற்றிப் புராணத்துள் விதித்த உரிய நாளில் செய்வது சிறந்த புண்ணியம். ஆளுடைய நம்பிகள் திருவாலவாயினின்றும் எழுந்தருளித் தமிழ் மூவேந்தர்களுடனே வழிபட்டு அத்தன்மையின் சிறப்பினை "முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்தாறுமோர் நான்குமோ ரொன்றினையும்" (11) என்று தமது "கோத்திட்டையும் கோவலும்" என்ற பதிகத்தினுள் வைத்துப் பாராட்டியருளி, இறைவரது திருவடிக்கீழ் ஆட்செய்யும் அருமையினைந்து "அடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே" என்று பாடியருளிய பெருமை பெற்ற பதி ; பரங்குன்றம் - எனபது கோத்திட்டை எனப் பெற்றது. பரன் எழுந்தருளியது எனவும் பரன்போன்றது எனவும் உரைக்கநின்றது. வைப்புத்தலம் என்றும் கூறுவர் ; திட்டை - மேடு-குன்று ; இங்குக்காணும் திருக்கோயில் ஏறக்குறைய 1200 ஆண்டுகளின் முன்னே மகேந்திரவர்மன் முதலாகிய பல்லவர்களது ஆட்சியில் மலையைக்குடைந்தெடுத்து நிறுவிய கற்குகைக் கோயில்களுள் ஒன்றும் ; இறைவரது திருவுருவமும் முருகப்பெருமான் தெய்வயானையம்மையை மணஞ் செய்யும் திருமணக் கோலம் அணிதிகழ அமைந்துள்ளமை கண்டு கண்டு மகிழ்ந்து உய்யப்பெறுதல் சிறப்பு. தம்மை யடைந்து "வேண்டினர் வேண்டியாங் கெய்தினர் வழிபட" இகபர வாழ்வுகளை யெல்லாம் அருளும் கலியுகக் கண்கண்ட தெய்வமாகிய முருகப்பெருமான், தமது திருமணக் கோலத்துடன் எழுந்தருளியிருந்து அனேகமாகிய மக்கட்கூட்டம் இல்வாழ்வு பெற்றின்பமடைந்திருக்க மணமபுணரும் பெருவாழ்வை நாடோறும் வகுத்தலைக்கும் பெருங்கருணை இன்றும் விளங்கக்காணும் பெருமையினால் "போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதல்" (சித்தி-1-50) என்னும் ஞானசாத்திர உண்மையினைத் தெளியக் காட்டும்பதி. இறைவரும் அவ்வாறே விளங்கும் தன்மை பதிகம் 1-2-3-4-9 பாட்டுக்களிற் பாராட்டப்பட்ட தலம்.

சுவாமி - பரங்கிரிநாதர், அம்மை - ஆவுடை நாயகி ; தீர்த்தம் - சரவணப் பொய்கை ; மலைமேல் - காசி தீர்த்தம் - சுந்த தீர்த்தம் ; பதிகம் - 2

இது திருப்பரங்குன்றம் என்ற நிலையத்தினின்றும் ½ நாழிகையளவில் அடையத்தக்கது. மதுரையினின்றும் மேற்கில் கற்சாலைவழி 4 நாழிகையில் அடைவதற்குரிதாய மற்றும் எல்லா வசதிகளும் உள்ள தலம்

## திருஆப்பனூர்

திருச்சிற்றம்பலம் பண் - குறிஞ்சி - 1ம் திருமுறை

முற்றருஞ் சடைமுடிமேல் முதிரா விளம்பிறையன
ஒற்றைப் படவரவ மதுகொண் டரைக்கணிந்தான

*செற்றமில் சீரானைத் திருவாப்ப னூரானைப்*
*பற்றும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே.* (1)

*அந்தண் புனல்வைகை யணியாப்ப னூர்மேய*
*சந்த மலர்க்கொன்றை சடைமே லுடையானை*
*நந்தி யடிபரவு நலஞான சம்பந்தன்*
*சந்த மிவைவல்லார் தடுமாற் றறுப்பாரே.* (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :—** திருஆப்பனூர் இறைவரைப் பற்றி நினைந்தெழுவார் **வினை பற்றறுப்பார்.** பதிக மகுடமும் பயனும் பார்க்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—**(1) ஒற்றை - ஒன்று ; ஒற்றை - அரவம் என்க. —(2) **குரவம்** - குராமலர் ; கோட்டம் எனலுமாம் ; "குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்" (தேவா) ; குரவங்கமழ்குழலம்மை என்ற தல அம்மை பெயர்க் குறிப்புமாம் ;—(3) **குழலார் மனங்கோள்** - குழலாரை மனம் கொள்ளச் செய்யும் ; **முன் பெரிதும் முனிந்து (பின்) உகந்தான்** என்க ;—(4) **பிணியும்** - பிணித்தலைச் செய்யும் ; பிணி - கட்டுதல் ; **துணியும் உடை** - துணித்தலினால் பெற்ற உடை. ஈண்டுத் துணித்தல் உரித்தல் என்ற பொருளில் வந்தது ; **புனலும் அணிவானை** என்று பிரித்துக் கூட்டுக ;—(5) **நகரம்** - மலர் முதலிய வாசனைப் பண்டங்கள் ; **நகரமொரு மூன்றும்** - திரிபுரங்களாகிய அரண்கள் ; **அகரம்முதலானை** - "அகர முதல வெழுத்தெல்லாம்" (குறள்) ; "அகரம் முதலி னெழுத்தாகி நின்றாய்" (நம்பி. தேவா - இந்தளம் - கேலவாயிலாததுறை - 7); எழுத்துக்களுக்கு அகரம் முதலாதல்போல உலகுக்கு முதல்வன ;—(8) **பருக்கும்** - பருகும் என்பது சந்த எதுகை நோக்கிப் பருக்கும் என நின்றது. பருகுதல் - ஆர அனுபவித்தல் ; "ஈசனைத், தின்பன் கடிப்பன் இருத்துவன் றானே" (திருமந் - 9 - அணைந்தோர் தன்மை - 332); "தினைத்தனை யுள்ளதோர் பூவினிற் றேன்" (திருவா - செத்திலாப் பத்து - 10) ;— (9) **எண்ணில் வினை** - எண் இல்லாத - அளவற்ற ; எண் - நில் - எண்ணத்தினால் விளைகின்ற என்றுரைக்கவும் நின்றது ;—(10) **செய்ய கலிங்கம்** - கல்லாடை ; துவர் தோய்த்த உடை. **கலிங்கம்** - ஆடை; **புரிந்த** - இடைவிடாது சொல்லிய - நினைந்த; "இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார்" (குறள்) ; **ஐயம்** - மயக்கம் ; அறியாமையைச் செய்யும் ஆணவத்தின் செயல் ; **பைய** - சிறிது சிறிதாகத் தமக்கியன்றவாறு; பையவேயும் என உம்மை தொக்கது ;—(11) **அணி** - அழகிய புனலுடைய வைகையினால் அழகு செய்யப்பட்ட. **சந்தம்**-மலரின் மணம் ; **நந்தி**-இறைவர். **சந்தமிவை** - சந்தம் அதனையுடைய பாடலுக்கு வந்தது. **தடுமாற்றறுப்பாரே** - பதிகப் பயனைப் பதிகக் குறிப்பினையே கூறியபடி.

**தலவிசேடம் :—திருஆப்பனூர்** - பாண்டிநாட்டுத் தேவாரம் பெற்ற பதிகளுள் இரண்டாவது பதி. "திருவாப்புடையார் கோயில்" என வழங்குகின்றது. ஒரு பாண்டிய அரசனுக்காக இறைவர் ஆப்பினிடத்தில் வெளிப்பட்டருளிய காரணத்தால் இப்பெயர் பெற்றது; "கன்றாப்பூர் நடுதறி" என்பதுபோலக் காண்க. இங்கு நடராச மூர்த்தி - சிவகாமசுந்தரியம்மையார் திருவுருவங்கள் சிலாமூர்த்தமாயும் அமைந்துள்ளன. சுவாமி-ஆப்பனூர்க்காரணர் ; அம்மை-குரவங்கமழ்குழலம்மை; பதிகம் 1.

இது மதுரை நிலையத்தினின்று வடக்கில் கற்சாலையில் ஒருநாழிகையில் வைகையின் வடகரையில் உள்ளது ; வைகைக்குப் பாலமுண்டு.

பதி பிறவும் - இவை பழமுதிர்சோலை - திருவாதவூர் முதலாயின என்பது கருதப் படும்.

## திருப்புத்தூர்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கராகம் - 1-ம் திருமுறை

வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலை
திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியா ரவர்போலும்
எங்க ளுச்சி யுறையு மிறையாரே. (1)

நல்ல கேள்வி ஞான சம்பந்தன்
செல்வர் சேட ருறையுந் திருப்புத்தூர்ச்
சொல்ல பாடல் வல்லார் தமக்கென்றும்
அல்ல றீரு மவல மடையாவே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருப்புத்தூர் உறைவார் எமது இறைவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு .—(1) வெம் கள் - வெம்மை - விருப்பம் ; விம்மு - மிக்க ; சோலை திங்களோடு திளைத்தல் - என்றது சோலை சந்திரமண்டலத்தளவும் நீண்டு வளர்ந்து சந்திரனோடு அளாவுதல் ; அவர் போலும் இறையார் - அவரே எமது இறைவர் , போலும் என்பது உடன்பாடு பற்றிய உறுதிப்பொருள் தந்தது ;— (2) வேனல் விம்மு வெறி - வேனிற் காலத்தில் பூக்கள் மிக்கலர்ந்து மணமிக்கன வாதல் குறித்தது , தேன் - ஒருவகைத் தேனவண்டு , ஊனம் இன்றி - அடியார் மேல் ஊனத்தை இல்லையாகச் செய்து , நமக்கு என்றலுமாம், ஏனமுள்ளும் எயிறும்- முள்ளம் பன்றியின் முள் , வராகத்தின் கொம்பு ,—(3) தாங்கு திங்கள் தவழ் - தாங்குதலினாலே நிலைபெற்ற மதி தவழும் வலி பெற்ற , கோன்நெறி - தலைமையுமாந்த சிறப்பு ,—(4) ஊறல் - சுரத்தல் ஊறல் வாழ்க்கை - இறைக்குக் கருணையே சுரக்கும் தன்மை குறித்தது. " கருமபி ஞூறலகண ணாயகலந் தாரக்கவன " (தேவா) ;— (5) பகை விளங்கப் படித்தார் - முன் 4-பாட்டில் " ஊறல் வாழ்க்கை யுடையார் " என்ற கருத்து. பகை - ஒட்டுந் தன்மை இறைக்குக் கருணை குறித்தது. பசகை என்பது எதுகைநோக்கி இடை குறைந்தது எனக்கொண்டு அதற்கேற்ப உரைத்தலு மொன்று. படித்தல் - பயிலுதல் , காட்டுதல் , வகை விளங்கும் வடி - வகை - மன்மதனை எரித்த தன்மை வகை எனப்பட்டது , வடி - கூரிய தன்மை குறித்தது ; ஒரு கணப்போதில் எரித்த திறம் வடி எனப்பட்டது , வடி - அத்தன்மை கொண்ட கண்ணுக்கு வந்தது - ஆகுபெயர் ,—(6) வெண்ணிறத்த - புனல் - எனக் கூட்டுக ; நீருக்கு நிறம் வெண்மை என்பது சாத்திரம். " பொன்பார் புனல் வெண்மை - (உண்மை விளக்கம் - 5) , தெண்ணிறத்த - தெளிந்த தன்மை , ஒண்ணிறத்த - ஒண்மை - ஞானம். இப்பாட்டில் நிறத்த - சொற்பின் வருநிலை ,—(8) கருக்கம் - கார்மேகம். கமழ்தல் - செழிக்கத் தங்குதல் என்ற பொருளில் வந்தது. " மஞ்சம அஙகவை பொழிந்தநீரு மாகுதிப் புகைப்பா ரும்" (834) என்றவிடத் துரைத்தவை யும் பிறவும் அறிவிக்குமாறு. கமழும் - ஆகுதிப்புகை மணக்கும் என்றலுமாம். திருக் கோள் செம்மை விழவு - இறைவரது திருவிழா. திரு - முதநித திரு. செம்மை - நன்மை. " கணணி னுலவா நல்விழாப் பொலிவுகண டாதல்" (பின். தேவா) ;

இருக்கவல்ல - வீற்றிருக்கும் அருமைப்பாடு குறித்தது ;—(9) பெருகி - கருணை மேன்மேற் பொங்கி ;—(10) ஆறு - அங்கம ; நான்கு - வேதம் ; அமர்தல் - விரும்புதல் ;—(11) சேடர் செல்வர் - சேடராகிய செல்வர் ; சேடர் - அறிவுடையோர் ; சொல்லல் - சொல்லுதலும் பாடுதலும் ; "பிதற்றாய் பிறைசூடி தன்பேரிடமே (தேவா)"

தலவிசேடம் :—திருப்புத்தூர் - பாண்டி நாட்டுப் பாடல்பெற்ற பதிகளுள் 6-வது பதி. தலவிசேடம் - III - பக். ௬அச பார்க்க. இலக்குமி பூசித்த குறிப்புத் தோன்ற ஸ்ரீதளி எனப்படும். "திருத்தளி" (தேவா-தாண) ; வயிரவர் பூசித்துச் சுவாமிக்கும் அம்மைக்குமிடையே (கந்தாபோல) கிழக்கு நோக்கி வீற்றிருக்கும் வரம்பெற்ற பதி.

2784. பற்றார்தம் புரங்கண்மலைச் சிலையாற் செற்ற
பரமனார் திருப்புத்தூர் பணிந்து போந்து
புற்றாரும் பணிபூண்ட புனித னார்தம்
பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக்
கற்றார்க டொழுதேத்துங் கானப் பேருங்
கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக்
குற்றாலங் குறும்பலாக் குமபிட் டேத்திக்
கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகி னாரே. அஅசு

(இ - ள்) பற்றார்தம்...போந்து - பகைவரது திரிபுரங்களை மலையாகிய வில்லினாலே அழித்தருளிய பரமனாரது திருப்புத்தூரினைப் பணிந்து சென்று ; புற்றாரும்...புகழ்ந்து பாடி - புற்றிலவாழும் பாம்புகளை அணிந்த புனிதராகிய இறைவரது திருப்பூவணத்தை அணைந்து வணங்கிப் புகழ்ந்து பாடியருளி , கற்றார்கள்...தமிழ் பாடி - கற்றவர்கள் தொழுது போற்றுகின்ற திருக்கானப்பேர்ப் பதியினையும் தொழுது பதிகம் பாடி ; சுழியல...குறுகினாரே - திருச்சுழியலைப் போற்றிப் பின்னாகக் குற்றாலத்தினையும் குறும்பலாவினையும் கும்பிட்டுத் துதித்துக் கூற்றுவனை உதைத்தருளிய இறைவரது திருநெல்வேலியினைச் சேர்ந்தருளினார்.

(வி - ரை) பற்றார் - பகைவர் - அன்பில்லாதவர்.

மலைச்சிலையாற் செற்ற-என்றது உபசாரம். சிலை வளைத்தமைமட்டேயன்றி அதனால் ஒரு செயலுமின்றி நகைப்பினாலே எரித்தனர்.

புற்றாரும் பணி - பணி - அரவு ; புற்றாரும் - என்பது பாம்பாகிய சாதியின் பொதுவியல்பேயன்றி இறைவர் அணிந்த அரவுகள் புற்றில வாழ்வன என்பதன்று.

கற்றார்கள் தொழுதேத்தும் - "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை" (திருவிசைப்பா) ; "தம்மை மறந்து நின்னை நினைப்பவர்" (கோயினான்மணிமாலை) என்ற தன்மை வரக் கற்றவர்.

குற்றாலம் - குறும்பலா - இவையிரண்டும் தனிப் பதிகங்கள் பெற்ற இரண்டு பதிகள்; ஒரு தலத்துள்ளனவாதலின் ஒன்றுகச் சேர்த்துக் கும்பிட்டேத்தி என்று ஒருவினையாற் கூட்டி உரைத்தார்; குற்றாலம் - கும்பிட்டும் குறும்பலா ஏத்தியும் என்று விரித்து நிரனிறையாகக் கூட்டி முடிப்பதுமாம் ; தலவிசேடம் பார்க்க. குற்றாலம் என்பது கூத்தர் கோயில் எனக் குற்றாலத்தினுள் உள்ள தனித் தளி ; குறும்பலா - அகத்திய முனிவரால் விட்டுணு உருவத்தைச் சிவனுருவாக ஆக்கப்பட்ட தலம். வரலாறு கந்த புராணத்துட் காண்க. (திருக்குற்றாலப் படலம்).

கழியல் போற்றி - என அடைமொழியின்றி வாளாகூறியது பதிகமிறந்துபட்ட நிலைக்குறிப்புபோலும். 886

## திருப்பூவணம்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி - 1-ம் திருமுறை

அறையார் புனலு மாம லரு மாடர வாரசடைமேல்
குறைமா மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமாம
முறையார் முடிசேர் தென்னர் சேரர் சோழர்கடாம் வணங்குந்
திறையா ரொளிசேர் செம்மை யோங்குந் தென்றிருப் பூவணமே. (1)

திண்ணார் புரிசை மாட மோங்குந் தென்றிருப் பூவணத்துப்
பெண்ணார் மேனி யெம்மி றையைப் பேரிய லின்றமிழால்
நண்ணா ருட்கக் காழி மல்கு ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது வானிடையே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :—**இறைவரது இடம் தென்றிருப்பூவணமே

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—**(2) **அறை** - ஓசை - சத்தம், **குறை ஆர்** - குறைதல் பொருந்திய, **முறையார் முடிசேர்** - "முடியா லுலகாண்ட மூவேந்தர்" (தேவா-சம்பி); **தென்னர் சேரர் சோழர்கள் தாம்வணங்கும்** - தமிழ் மூவேந்தர்களுக்கும் பொதுவாகிய வணக்குமிடம் என்பது நாட்டு நடபியினாலும் அறியக்கிடக்கின்றது. 2 - 5-வது பாட்டுக்களும் பார்க்க, தலவிசேடம் பார்க்க, **திறைஆர் ஒளிசேர் செம்மை** - என்ற ஒளிகள் எல்லாம் திறையளக்கும் - பணியும் - பேரொளியுடைய செவ்விதாம் தன்மை; ஒளி - ஞானவொளியினையும், செம்மை - சிவத்தன்மையினையுங் குறிப்பாலுணர்த்தின; தென் - அழகு, தெற்கு என்றலுமாம **தென்திருப் பூவணமே** - ஏகாரம் தேற்றம். **திரு** - தெய்வத் திருவுணர்த்தும் சிறப்பு, பாட்டுத் தோறும் இதுவே மகுடமாய வருவது - இத்தலச் சிறப்புணர்த்துவது, தென் திருப்பூவணமே - இடமாம என்று கூட்டுக,—(2) **மருவார்**-பொருந்ாதவர் - பகைவர், **சாலி** - நெல்வகை, **ஆலை** - கரும்பாலை, **மன்னர்** - மூவேந்தர், **காத்தளித்த சேடர் - சேடர்** - அறிவுடையார், மாதவர், இவர்களைக் காப்பது அரசர் கடன் என்பது;—(3) **வைகை......வாரி சேர நின்ற** - வைகை அணிமையில் கடலை நோக்கிச் சேர உள்ள நிலையும் அவ்வணிமையில் அதன் வடகரையில் இப்பதி உள்ளமையும் குறிப்பு. **சேரநின்ற - சேர்தல் - அடுத்தல்; சேர - நின்ற** - என்றதனால் அணிமையில் நின்றதேயன்றிச் சேர்தலில்லை என்றது குறிக்கப்பட்டது. வைகை கடலொடு சேராது இராமநாதபுரம் சில்லாவின் கோடியில் ஓர் ஏரியினகண் பாய்ந்து முடிந்துவிடுதாம். "கடல் ஒருவாகக முதவாத வுவரியென, மடுத்தறியாப் புனல்வைகை" (வாத-உப-பட) என்று இதனைச் சுவைபடக் கூறுவது திருவிளையாடற் புராணம், வைகையின் கரையில் இந்நகரம் அழகுடன் அமைவதுபற்றி மேல் 4 - 8 - 9-ம் பாட்டுக்களும் "அணியார் வைகைத் திருக்கோட்டி னின்றதோர் திறமும் தோன்றும்" என்ற திருத்தாண்டகமும் பார்க்க;—(5) **வில்லி** - வில்லையுடையவன், **வில்லியாகிய** - மகிழ்த்தான் என்று கூட்டுக,—(6) **மறையோன் - என்று உலகர் ஏத்த நின்ற** எனக; **மறையோனாகிய பிரான் -** என்றலுமாம், **நன்று தீதென் றொன்றிலாத - தன்மையென்றும் தீமை யென்றும் வரும்** பாகுபாடு தனனிடத்துப் பொருந்தாதவன; "குறறீ

குணங்கணீ" (தேவா); "மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினர்க்கு" (திருவா);—(7) கைவாழ்...ஒவர் - அம்மை யின்பச சாதனங்களேயன்றி உலகபோக இன்பங்களாலும் குறைவில்லாத செழுநகர் எனபது குறிப்பு; "பாடலோடு மாடலோங்கி" என மேல்வரும் பாட்டும் பார்க்க;—(8) கூட - அழிதலுடன் கூடவே; கோள்கைவி னுர் - 1974 பார்க்க; ஓங்கி - உயர் எனறு கூட்டுக; ஓட நீர் - ஓடத்தால் கலக்கும்படி செழித்து ஓடும் நீர்;—(10) புனலை நீத்தவர் - உடல் கழுவாதவர்; "கழுவா வுடலம்" (11-ம் திருமுறை - ஆளு. பிள் - அக் - 28); மாயம் வைத்த - அவர் தமது கன்மங்களை அனுபவிக்கும் பொருட்டு மறைப்பினைக் கொடுத்த; மாயம் - ஈண்டு மறைப்பு என்ற பொருளில் வந்தது. மாயம் வைத்தானுகியும் நின்மலன் - என்க; "கலமில வணைணாக்கு - சலமிலன்" (திருவருட்); "சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்" (சிவஞானபோதம்-10); "சார்ந்தவர்க் கல்லா லலமிலன்" (தேவா); மலைபோல் மாளிகை - பரிசு - மூவேந்தரும் வந்து வணங்கும் பரிசும், அந்நாள் உலகநிலையுயாவுடனும் விளங்கிய நகரின் பரிசும்; புரிசை - மதில்கள்; மாடமோங்கும் என மேலவரும் பாட்டும் பார்க்க. தீண்ணுர் - அருகர் புத்தராதி புறவுரையாளர்கள். உட்குதல் - அஞ்சியொழிதல்.

தலவிசேடம்:—III பக்கம் கூகஉ பார்க்க; ஒரு அடியார் சிறப்பாக நந்தவனம் வைத்து வழிபட்டமையால இப்பெயரெயதியதென்பர்.

திருக்கானப்பேர் (திருக்காளையார் கோயில்)

*திருச்சிற்றம்பலம்* பண் - கொல்லி 3-ம் திருமுறை

பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினல வழிபடுங
கடியுலாம பூம்பொழிற கானப்பே ரண்ணலின்
னடியலா லடைசர ணுடையரோ வடியரே. (1)

காட்டகத் தாடலான கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால குதிகொளுங காழியான்
நாட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன
பாட்டகத் திவைவலார்க் கில்லையாம பாவமே. (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு**.—கானப்பேர் அண்ணல் அடியே சரணுவது; அதனைக் கருதலும் தொழுதலுமே கருமம்; அதனை ஞானநீர் பெய்து மலரால வழிபடுவோர் நன்மை பெறுவர்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு**:—(1) தேவேந்திரனது ஐராவதம் என்னும் யானை சாப நீக்கத்தின் பொருட்டுத் தனது பிடியுடன் வழிபட்ட சரிதம் குறித்தது; தலவிசேடம் பார்க்க; 7 - 10 பாட்டுக்களும் பார்க்க. விதி - வழிபாட்டுக்காக உள்ள நூல் விதி; சாபநீக்கத்தின் பொருட்டு விதிக்கப்பட்ட விதி என்றலும் குறிப்பு. சரண் - அபயம் புகுமிடம்;—(2) நுண் இடை - போல்தல் - மூரண அணி;—(3) காவி - கருங்குவளை; நாவி - கத்தூரி; உ(ள்)ளும் - எனபன ஒடு என்ற மூன்றனுருபின் பொருளில் வந்தன. உம்மை எண்ணும்மைகள்; மேல்வரும் (4) பாட்டினும் இவ்வாறே கொள்க. ஞானநீர் - உரிய மந்திரம் கிரியைஞான பாவனைகளால் தூய்தாக்கப் பட்ட நீர்; அபிமந்திரித்த நீர் எனபது மரபு. நீரினை மந்திரித்துச் சாத்தும் மலரும்

பெய்து இறைவனை ஆட்டுதல் குறித்தது. மேற்பாட்டில் வருவன பாதிரியம் ஆகிய ஆசமனம் முதலாயின ;—(4) நிறையுடை - அன்பின் நிறைவுடைய, நிறைவாவது வேறொன்றற்கும் இடந்தராமை ; முழவு - பலி - பாட்டு - வழிபாட்டு அங்கங்கள் ; துறையுடையவர் - தம்பால் குறைந்தடைந்தவர் ;—(5) வண்ணமும் - உமையம்மை நீங்காதலுடன் என இறந்தது தழுவிற்று ;—(6) கள்ளமே - உள்ளமே - ஏகாரங்கள் தேற்றம் ;—(7) அலகிட - திருவலகுப் பணி செய்ய ; ஞானமாமலர் - செபித்துச் சாத்தும் பூ. வாய்மை - கொடை, பொறை, அன்பு முதலாகிய அட்டபுட்பம் என்றலுமாம் ;—(8) நாளுநாளுயர்வதோர் நன்மை - "பையப் பையப் பழுக்கு மருட்கனி" என்றபடி பக்குவ முறையில் நாடோறும் வளரும் அருணலம்; வார்வதோர் - வளருந் தன்மையேயன்றிக் குறைவுபடாத ஒப்பற்ற ;—(9) நிலை - பணிதல் ; கலையினார் - நூல்களாற் பேசப்படும் ;—(10) உறித்தலைச் சுரை - உறியாகிய சுரை, உச்சித்தலையின் மயிர் என்று பொருள் தந்தது ; கறித்தல் - உணணுதல் ;—(11) கோடு - கரை ; பாட்டகத்திவை - பாட்டுக்களுள் இவற்றை.

தலவிசேடம் :—திருக்கானப்பேர் - பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற பதிகளுள் 10-வது பதி. இது காளையார் கோயில் என விளக்கமாய் வழங்கப்படுவது. ஆளுடைய நம்பிகளும் சேரமான் பெருமாணாயனாரும் திருச்சுழியலில் வழிபட்டு எழுந்தருளியிருந்தபோது இறைவர் நம்பிகளுக்குக் "கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவாற், செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன், எங்குமிலாத் திருவேடம் காட்டி"க், "கானப்பேர் யாமிருப்பது எனக்கழறி" அகல, நம்பிகள் உணர்ந்து "தொண்டடித் தொழலும்" என்று தொடங்கும் திருப்பதிகத்தினைக், "கண்டு தொழப் பெறுவதென்று கொலோவடியேன் கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே" எனப் பாடியருளிப் போந்து வணங்கிய பதியாதலின் இப்பெயரால் வழங்குவது, காட்டானையாற் றும்படி சபிக்கப்பெற்ற ஐராவதம் போந்து விதிப்படி வழிபட்டுச் சாப நீங்கப்பெற்ற பதி யென்பது பிள்ளையாரது திருப்பதிகத்துப் போற்றப்பட்டது. நன்கு திருப்பணிகள் பலவும் செய்யப்பட்டு விளங்குகின்ற தலம் ; அத் திருப்பணிகள் காரணமாய், அவற்றைச் செய்த அன்பர் 'பத்தர் குணத்தினரா யெத்திசை யும்புகழ், மன்னியிருப்பவர்கள், வானினிழிந்திடினு மண்டல நாயகராய் வாழ்வது திண்ணமே' என்று பயனருளிய நம்பிகளது திருவாக்கின் வாய்மையை உலகம் காணுமாறு நிலவுவதும் காண்க. ஐராவதம் "விடையவேல தடமூழ்கி விதியினால் வழிபடும்" என்ற பிள்ளையாரது திருவாக்கின் வாய்மை கண்ட இன்றும் திருக்கோயிலின் தடாகத்தில் யானை மூழ்கிவரும் திறமும், தீர்த்தம் யானைமடு என வழங்குவதும், "கார்வயல்சூழ்" என்ற நம்பிகளது திருவாக்கின் வாய்மையிலே இன்றும் வயல்கள் கார்நெல்வளஞ் சிறக்க உள்ள திறமும் காணப்பெறுவன.

சோமேசுவரர் - சௌந்தரநாயகியம்மை ; சந்நிதி 1 ; காளீசுவரர் - சொர்ணவல்லியம்மை ; சந்நிதி 1 ; சுந்தரேசுவரர் - மீனாட்சியம்மை ; சந்நிதி 1 என மூன்று சந்நிதிகள் திருக்கோயிலில் உள்ளன ; தீர்த்தம் - யானைமடு, பதிகம் 2.

இது திருவாடானைக்கு மேற்கில் கற்சாலை வழி 21 நாழிகையிலும் தேவகோட்டையிலிருந்து தென்மேற்கில் மட்சாலை வழி 15 நாழிகையிலும் உள்ளது ; இவை பழைய வழிகள், இப்போது மானாமதுரை - திருச்சி இருப்புப்பாதையில் சிவகங்கை நிலயத்தினின்றும் 12 நாழிகையளவில் கற்சாலைவழி அடைவது சுருக்கம். அந்தப் பாதையில், கடராசபுரம்-நாட்டரசன்கோட்டை நிலயங்களினின்றும் இன்னும் அணிமையில் அடையலாம். ஆயின் வண்டிவசதிகள் குறைவு.

I திருக்குற்றாலம்

திருச்சிற்றம்பலம் பண் - குறிஞ்சி 1-ம் திருமுறை

வம்பார் குன்ற நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண் டியாழ்செய் குற்றாலம்
அம்பா னெய்யோ டாட லமர்ந்தா னலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர் போலு நமரங்காள் ! (1)

மாட வீதி வருபுனற் காழி யார்மன்னன்
கோட லீன்று கொழுமுனை கூம்புங் குற்றாலம்
நாட வல்ல நற்றமிழ் ஞான சம்பந்தன்
பாடல் பத்தும் பாடநம் பாவம் பறையுமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நமரங்காள் ! தண்சாரற் சோலைக் குற்றாலம் நம்பான் மேய நன்னகர் போலும் !

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வம்பு - மணம் ; யாழ் செய் - யாழ்போலப் பாடும் ; ஆடல் - திருக்கூத்தின் குறிப்புமாம் ; நம்பான் - இறைவன் ; நகர் போலும் - நகர்தானே ; நமரங்காள் - நம்மவரே ! அடியீர்காள் - சிறுதொண்டீர் - பெரியீர்காள் - தொழுவீர்காள் என இப்பதிகம் அடியார்களை நோக்கி விளிவிய அமைப்புடையது ;—(2) பொடிகள் - திருநீறு - சுண்ணம் முதலாயின ; சிறப்புப் பன்மையுமாம் ; " பொடிகள் பூசிப்பல தொண்டர் கூடிப்புலர் காலையே " (செவ்வழி - திருத்திலதைப்பதி - 1); பின் செல்ல-விழாமல்கு என்று கூட்டுக; திருவாரூர் (குறிஞ்சி) அரசுகள் பதிகம் பார்க்க ; நாள்விழு - நாட்கூறின் அமைப்பினைப் பின்பற்றிய விழா. நாள் - புதிது ஆகிய ,—(3) செல்வம் - ஈண்டுச் செழிப்பு என்ற பொருளில் வந்தது; வில்லின் - வில்லினால் ; ஒல்க எய்து என்க ;—(4) பக்கம் - பக்கங்களில் கன்றுகள் புடைத்துத் தோன்றிப் பெருகும் ; தூங்குதல் - தொங்குதல் ,—(6) மைம்மா நீலம்- மைம்மா - மிக்க கருமை குறித்தது , ஒப்புதல் - கடிதல ;—(8) அருவி புடைசூழ - பல முகங்களானும் அருவிகள் எப்பக்கங்களினும் சூழ்ந்து ஓடி வீழ ; கூதன் மாரி நுண்துளி தூங்கும் - இது குற்றாலத்தின் பருவச் சிறப்பு ; ஆனி - ஆடி மாதங்களின் சிறப்பு ; மீறை - தண்டின் ;—(9) குராமலரின் அரும்பு பாம்பின் பல்போலக் கூரிய தாய் வளைந்து உட்டுளையுடையதாய் மெல்லிதாய் வெள்ளிதாய உள்ள தன்மை குறித்தது ; மெய்யும் உருவும்பற்றி வந்த வுவமம் ; " தூமபுடை வாலெயிறு " (முருகு); தூவம்பாவை - உருவகத்தால் குராமலருக்கு வழங்கும் பெயர். குராமலர் விரிந்த போது ஆடும் பாவைபோன்று காட்டும். '' வைக லாயிரம் பாவையை வளர்ப்போய் ...குரவே " (திருவாரூர் - மும்மணிக் கோவை - 16) ;—(10) செவ்வழி - பண ; "சிவந்த வண்டு வேறாய வுருவாகிச் செவ்வழிநற் பண்பாடு மிழலை யாமே" (தேவா) ; அருந்தண் - அரிய (தட்பம்) தண்ணளியுடையவன் ; அந்தணன் என்பது போல ; —(11) கோடல் - வெண்காந்தள் ; கூம்புதல் - குவிதல். குறிப்பு - இப்பதிகப் பாட்டுக்கள் குற்றாலவள நகரின் இயற்கை வளத்தின் அழகை அருமைபடத் தன்மையணியில் வைத்துக் காட்டுவன. இப்பதிகம் குற்றால நகரைப் பற்றியது. நகரின் புறத்திருந்து அருளப்பட்டது போலும் ; " நன்னகர் போலும் " (பதிகம்). திருமுதுகுன்றம் - திருவிடைமருதூர் முதலிய பதிகளின் பதிகங்களும், அவற்றைப் பற்றி ஆசிரியர் எடுத்துக்காட்டுமாறும் (2079 — 2311) காண்க.

## II குறும்பலா (குற்றாலம்)

திருச்சிற்றம்பலம்                                         பண் - காந்தாரம் - 2-ம் திருமுறை

திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து தேவி பாகம்
பொருந்திப் பொருந்தாத வேடத்தாற் காடுறைதல் புரிந்த செல்வர்
இருந்த விடம்வினவில் ஏலங் கமழ்சோலை யினவண் டியாழ்செய்
குருந்த மணநாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்ப லாவே. (1)

கொம்பார்பூஞ் சோலைக் குறும்பலா மேவிய கொல்லேற் றண்ணல்
நம்பா னடிபரவு நான்மறையான் ஞானசம் பந்தன் சொன்ன
இன்பாய பாட லிவைபத்தும் வல்லார் விரும்பிக் கேட்பார்
தம்பால தீவினைகள் போயகலு நல்வினைக டளரா வன்றே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—இறைவரது இடம் குறும்பலாவே, இப்பதிகம் "குறும்பலா" மரம் உள்ள கோயிலைப் பற்றியது "இடம் போலும்" பதிகம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு .—(1) **பொருந்தாத** - தேவிபாகத்தோடு பொருந்தாத; **இன வண்டு** - ஆண் பெண் வண்டுகள், இனமாய் ஒத்துப்பாடும் என்றலுமாம்; **யாழ் செய்தல்** - யாழ் இசைபோலப் பாடுதல் ;—(2) **நாட்பலவும் சேர்மதியம்** - கயநோய் முதிர்ந்து இறக்கும்நிலை வருமவனாயுள்ள நாட்கள் பலவும் கூடிய பருவத்துச் சந்திரன்; **ஆட்பலவும்** - ஆளாகக்கொள்ளும் பருவங்களும், அவ்வவர் பக்குவங்களும் வெவ்வேறுதல் குறிப்பு, "ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும்.........அளவிலவே" (பாசுரம்); **மந்தி** - பெண்குரங்கு, **கடுவன்** - ஆண்குரங்கு; மந்தி பலாக்கனியைத் தோண்டு போழ்ந்து சுளைகளை எடுத்துச் சுவைத்துக் கண்டு நல்லனவற்றைக் கடுவனுக்கு உண்ணத் தர அதனைக் கடுவன் உண்டு களித்திருக்கும் என இல்லறம் பற்றிய வாழ்க்கைக் குறிப்புப்படக் கூறிய சுவையும் தன்மையணிச் சுவையும் காண்க. "மந்தி கடுவனுக் குண்பழ நாடி மலைப்புறம்" (தேவா); குறும்பலா என்ற தலமரத்தாற் போந்த சிறப்பும் உடன் கூறியபடி, இக்காட்சி இன்றும் காணவுள்ளது :—(4) **கண் திறக்க** - கண்போல மலர ;—(5) **தலை** - தலையோடாகிய; தலைநாண் மதியம் - பிறை - என்று கூட்டி யுரைத்தலுமாம், **கதிர் விரிய** - வளர்ந்து வர, **அரும்பு** - ஊற்று ;—(6) **கூற்று ஏர் சிதையக் கடிந்தார்** - மாள உதைத்தலினும் பின் உயிர் கொடுத்தலின் ஏர் சிதையக் கடிந்தார் என்றார்; ஏர் சிதைதலாவது முன் செலுத்திய "மடியா ஆணை" யாகிய வென்றி குறைதல்; **தேன்** - தேன்வண்டுகள், வண்டுகள் இசை முரன்று பாட அதனைக் கேட்ட குயில்கள் தாமும் அவ்விசை பயில்கின்றன; பாடல் வல்லானொருவன் பாடக் கேட்ட மற்றோர் இசைவல்லான் அதற்கேற்பத் தூண்டப்பட்டுத் தானும் பாடுதலை மேற்கொள்ளுதல் போன்ற இயல்புக் குறிப்பு, **கேளா** - கேட்டு ;—(7) **தோத்த** - கொத்தாகிய; **பிலயம்** - நீர்ப்பெருக்கு - (பிரளயம் - என்பது பிலயம் என மருவியதென்பர்). **மண் முழவம் ஓங்கி** - மண்ணிற் புடைத்தலால் முழவம்போல மிக்குச் சத்தித்து ;—(8) **சாந்தமென நீறு அணிந்த** - "சாந்தமும் திருநீறு" (திருவிசைப் - சாட்டிய - 2); **கைவர்** - சிவன், **மத்தகத்தில் வேங்கைப்பூங் கொத்தை ஏந்தி வணங்குதல்** - கையில் மலர்கொண்டு வணங்கும் குறிப்பு; **வேங்கை** - இறை வழிபாட்டுக்குரிய மலர்களுள் ஒன்று; "கொல்லை யிளவேங்கைக் கொத்திறுத்து... களிறேற" (சம - எழுபது - 34) ;—(9) **தூவம் முறுவல் செய்யும்** - குராமலர் பூத்தல் பாவையர் முறுவல் செய்தல்போல இருப்பது எனத் தற்குறிப்பேற்ற அணி;

" தளவு கண்டெதிர் சிரிப்பன தமக்குமுண் டென்று " (1094) ; மல்லிகையும் சண்பகமும் மலர்ந்து-சண்பகமரத்தில் மல்லிகை படர இரண்டும் ஒருங்கே பூத்தது; "குருந்த மேறிக் கொடிவிடு மாதவி " (தேவா) :—(10) முன்-பின் - காலம் குறித்தன ; கூறுண்டு ஏறுதல் - பலபடப் பிதற்றி மீக்கூர்ந்து ஆரவாரித்தல் ; காடி - புளித்த கஞ்சி ; தோடுதல் - உண்ணுதல ; நீடுயர்...செய்ய - " மந்தி, கானமுது வேயின கண்ணேறித்-தானம, சிருந்துயரக் கைநீட்டும " (ஈங் - எழு - 68) ; கைமறித்தல் - கைகொட்டி மகிழ்தல்.

தலவிசேடம் :—திருக்குற்றலம் - பாண்டி நாட்டுப பாடல்பெற்ற பதிகளுள பதின்மூன்றுவது தலம ; இதற்குக் கூத்தர் கோயில் என்றது அழகிய பழங்கோயில் ; இது தேவார திருவாசகப பாடல்பெற்ற கோயில. குறும்பலா என்ற கோயில அருவியினை அடுத்து வடகரையில் உள்ளது. அங்கு உள்ள தலமரம் குறுமபலா வாதலின் இக்கோயில் இப்பெயா பெற்றது. பலாவின பெயா அது உள்ள ஆலயத்துக்கு வந்தது. குறும்பலா என்பது பலாவின ஒருவகை. கூத்தர் கோயில் குறும்பலாவின வடக்கில நகரத்தினுள் சித்திர சபைக்குப் போகும் வழியில் உள்ளது ; " குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே " (திருவா-திருப புலமபல்), "உயிர்கொண்டு போமபொழுது, குற்றாலத்துறை கூத்தனல் லானமக் குற்றார ருளரோ ?" (திருவங்கமாலை) ; " குற்றாலத் தமாந்துறையுங் கூத்தன் கண்டாய " (தாண - கோடிகா - 3) முதலிய திருவாக்குக்கள இத்திருக்கோயிலைப பற்றியன ; ஐம்பெருமன்றங்களுள் சித்திர சபை இதனைச் சோந்தது ; இக்கோயில் பழுதுபட்டுக் கவனிப்பாரின்றி இருத்தலும், குற்றாலம் செல்வோரும், அன்பாகள பலரும இதனை யறியாமலே யிருத்தலும வருந்தத் தக்கது. இப பழந்திருக்கோயிலை இயன்ற அளவு திருப்பணி செய்து புதுக்கி அதன பழமையை வெளிப்படுத்திப பலரும வழிபடும்படி வைப்பது பெரும புண்ணியமாகும ; குறுமபலாக் கோயில திருமுற்றம எனனும் பெய ருடைய வைணவத் தலமாயிருந்தது , அவ்வைணவாகள தமமை அவ்வூரினுள் அணுக வும ஒட்டாது தடுத்துச் சிவசிந்தையும சிவனடியாா சிந்தையும செய்து வலிசெய் தமையால, அகத்திய முனிவா அவாகளது அகந்தையை அழிக்கும பொருட்டு வைணவ அடியாா வேடத்துடன சென்று கோயிலினுள விஷ்ணுமூாத்தி வடிவின சிரத்தினமேற் கைவைத்துச் சிவலிங்க வடிவாக்கினாா எனபதைக் கந்தபுராணம திருக்குற்றாலப் படலத் துக் காண்க. அதுமுதல அக்கோயில் சிவாலயமாகியது எனப. (1) கூத்தர் கோயில்- சுவாமி - கூத்தர் ; அமமை - சிவகாமியமமை ; சபை - சித்திர சபை ; தீரத்தம - சித்திரா நதி ; பதிகம - 2 , குறும்பலா - சுவாமி - குறும்பலா நாதர் , அம்மை - குழல்வாய் மொழியம்மை ; மரம - குறும்பலா ; பதிகம 1

இத்தலம் தென்காசிச் சந்திப்பு நிலையத்தினின்றும மேற்கே செவ்விய கற்சாலை வழி மூன்று நாழிகையளவில் அடையத்தக்கது; வண்டி வசதிகளும் உணவு-உறையுள் வசதிகளும உண்டு. இந்நாள் நாகரிக மக்கள வேனிலை விளையாட்டாய உலக இன்பங் கள் பற்றி வீணே கழிக்கும் வேனில் விடுமுறைக் கொண்டாட்ட இடமாகப பெரும் பாலும இதனை அறிந்து கொண்டாடுவா.

2785. புண்ணியனா் நெல்வேலி பணிந்து போற்றிப்
புரிசடையார் திருப்பதிகள் பிறவுஞ் சென்று
நண்ணியினி தமர்ந்தங்கு நயந்து பாடி,
நற்றொண்ட ருடனாளும் போற்றிச் செல்வார்,

விண்ணவரைச் செற்றுகந்தா னிலங்கை செற்ற
மிக்கபெரும் பாதகத்தை நீக்க வேண்டித்
திண்ணியபொற் சிலைத்தடக்கை யிராமன் செய்த
திருவிரா மேச்சுரத்தைச் சென்று சேர்ந்தார். அஅஎ

(இ - ள்) புண்ணியனார்...போற்றி - புண்ணியராகிய சிவபெருமானது திருநெல்வேலியினை வணங்கித் துதித்து; புரிசடையார்...பாடி - முறுக்கிய சடையினையுடைய இறைவரது திருப்பதிகள் பலவற்றையும் சென்று பொருந்தி, விரும்பி எழுந்தருளி அங்கங்கும் விரும்பிப் பாடி; நற்றொண்டருடன்...செல்வார் - நல்ல திருத்தொண்டர்களுடனே நாளும் துதித்துச் செல்வாராகிய பிள்ளையார்; விண்ணவரை...சேர்ந்தார் - தேவர்களை அழித்து மகிழ்ந்தானாகிய இராவணனது இலங்கையினை அழித்த மிகுதியாகிய பெரும் பாதகத்தினைப் போக்கிக்கொள்ளும் பொருட்டு வலிய அழகிய வில்லை ஏந்திய பெரிய கையினையுடைய இராமன் தாபித்த திருவிராமேச்சுரத்தைச் சென்று சேர்ந்தருளினார்.

(வி - ரை) புண்ணியனார் - புண்ணியங்களுக்கெல்லாம் இலக்காயுள்ளவர்; சிவபெருமான்; "புண்ணியா வுன்னடிக்கே" (தேவா); அவனடியார்களும் சிவபுண்ணியமேலீட்டினால் சிவத்தன்மை பெறுதலால் புண்ணியர் எனப்பெறுவர். "புண்ணியப் பொருளாயுள்ள பொருவிலஞ் சிறுவி ஞரை" (666) என்று கண்ணப்பரையும், "புண்ணியக்கன் றனையவர் தாம்" (1959) என்று ஆளுடைய பிள்ளையாரையும் கூறியதனையும், "புண்ணியா போற்றிசைப்ப" (திருவிசைப) என்றதையும், பிறவும் பார்க்க.

இலங்கை செற்ற மிக்க பெரும் பாதகம் - "பெரும்பாதகம்" - 1673-ல் உரைத்தவை பார்க்க. இராவணனை வதைத்த ஒன்றன் வந்ததன்றி, இலங்கை முழுதும் அழித்தமையால் மிக்க பெரும்பாதகமாயிற்று என்பது.

நீக்கவேண்டி - இராமன் செய்த திருவிராமேச்சுரம் - நீக்க - நீக்கிக்கொள்ள, இறைவர் நீக்குதற்காக வேண்டி என்றலுமாம்.

வேண்டி - வேண்டிக்கொண்டு, இராமனால் தாபிக்கப்பெற்ற கோயிலாதலின் இராமேச்சுரம் எனப்படும் என்பார் இராமன் செய்த இராமேச்சுரம் என்று பொருள் விரித்தோதினார். ஈண்டும், முன்னரும் (1673) இதனை ஆசிரியர் கூறியது பிள்ளையாரது இரண்டு பதிகங்களிலும், அரசுகளது திருநேரிசையிலும் தெரியத் தெறியே அறிவுறுத்தப்பட்டமையை வற்புறுத்தி எடுத்துக்காட்டும் பொருட்டு.

திண்ணிய பொற்சிலை - சிவனது வில்லாதலின் திண்ணிய என்றார். பொன் - அழகு; பொற் சிலை - சிவனேந்திய மேருப் போன்றதென்று குறிப்புமாம் என்றது. 887

## திருநெல்வேலி

திருச்சிற்றம்பலம் பண் - காந்தாரம் - 3-ம் திருமுறை

மருந்தவை மந்திர மறுமைநன் னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத் துன்றுபைம்பூஞ்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலியுறை செல்வர்தாமே (1)

பெருந்தண்மா மலர்மிசை யயனவ னனையவர் பேணுகல்வித்
திருந்துமா மறையவர் திருநெல்வேலியுறை செல்வர்தம்மைப்

பொருந்துநீர்த் தடமல்கு புகலியுண் ஞானசம் பந்தன்சொன்ன
அருந்தமிழ் மாலைகள் பாடியா டகெடு மருவினையே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—நன்னெஞ்சமே! திருநெல்வேலியுறை செல்வர் தாமேயாகிய அவரது நாமங்களே சிந்தை செய்; அவையே மருந்தும் மறுமை நன்னெறியுமாவன; அவர் என்றுமோர் இயல்பினர் என நினைவரியவர்; ஆடல் பேணி (பேணுபவர்) என்றினை முதலாயின தன்மைகளையுடையவர்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) அவை - முன்னறிசுட்டு; அவன் என்று மறைகளாற் சுட்டப்பட்ட இறைவரது நாமங்களாகிய அவை. அவையே மருந்தும் மறுமை நன்னெறியுமாவன; அவற்றைச் சிந்தை செய்தால் அருந்துயர் கெடும்; "மருந்து வேண்டில் இவை மந்திரங்கள் இவை......வேடங்களே" (தேவா); நாமம் - நாமங்கள்; பாலபகா அஃறிணை. பொன்மலர் - பொன்போல மலர்கின்ற; கொன்றைப் பூவின் நிறம் குறித்தது. கொன்றை பொன் சொரியச் செருந்தி செம்பொன் மலர்கின்ற ஒன்றற்கொன்று ஏற்றமான கொடை தருவனபோல என்ற குறிப்பும் காண்க; செல்வர் - இறைவர் - அழிவுபடாத முத்திச்செல்வ முடையவர். ஐசுவரியம் என்ப; —(2) ஓர் இயல்பினர் - இன்ன இயல்புடையவர்; சேடிச்சியர் - இழிந்த பெண்கள்; புராண வரலாற்றறி, ஆணவப் பிணிப்புடைய ஆன்மாக்களைக் குறிப்பிற் கூறியதுமாம்; கேதகை - தாழை;—(3) சுலவுதல் - சூழ வைத்தல்; கிறி - மாயம்;—(4) பேணி - பெயர்; பேணுபவர்; இகர உடைப்பொருள் விகுதி; விடையேறி, பிறைசூடி என்பனபோல்; கோடிகள் மதியம் தீண்டி-என்பது மாடங்களின் உயர்ச்சி குறித்தது;—(5) ஆனில் நல் ஐந்து - பஞ்சகவ்வியம் என்பர்;—(6) வேடிதரு தலையினர் - படுதலையினை ஏந்தியவர்; வேடித்தல் - சுடலையில் தீயால் பிளத்தல்; வேனல் - இனமுடைய;—(7) வேள்வியைச் சாடிய சதுரனர் - தக்கன் வேள்வியைச் சங்கரித்தவர் வீரபத்திரக் கடவுள்; அவர் செயல் அவரை அளித்து ஏவிய சிவபெருமானது வீரங்களுள் ஒன்றாகக் கூறுதல் மரபு; சதுரம் - வல்லமை, கதிர்கோள்...புரிவினர் - கதிர் - ஞானஒளி; செம்மை - சிவநெறி; புகுதல் - உணர்ந்து அருளுதலும், புரிவு - இடைவிடாது அருளுதலும் குறித்தன, திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி - நகரச்சிறப்பும் பெருமையும் குறித்தது;—(8) சிந்துபூந்துறை - நதித்துறைச் சிறப்புப் பெயர்; இன்றும் வழங்குவது;—(9) சங்கம் - கூட்டம்; திங்கள் நாள் விழ - மாதந்தோறும் நிகழும் பருவ விழாக்கள்; இவற்றின் சிறப்புக்கள் இன்றும் நிகழ்வன;—(10) கவர் - பிளப்பு; கவருறு கோடி - கொடிகள் இருபிளவாய் அமைந்த உரு; தீவர் - ஒளி;—(11) மாமறையவர் - இந்நகரின் மறையவரின் சிறப்பு. 9-வது பாட்டும் பார்க்க. அந்நாளின் சிறப்பு; நீர்த்தடம் - நீர்ச் சிறப்பு; இன்றும் காணவுள்ளது.

**தலவிசேடம் :**—திருநெல்வேலி - பாண்டி நாட்டில் தேவாரப் பாடல்பெற்ற பதிகளுள் பதினொன்றாவது தலம். வேதசருமர் என்ற அன்பர் இறைவரது திருவமுதுக்காகக் கட்டியிருந்த நெல்லை வெள்ளம் கொள்ளாதபடி வேலியிட்டபடி இறைவர் காத்தமையால் இப்பெயர் பெற்றது; 'நெல்லுக்கு வேலியிட்ட நெல்லையப்பர்' என்று வழங்குவர். மூங்கிலடியில் இறைவர் முளைத்து வெளிப்பட்ட காரணத்தால் இது வேணுவனம் எனவும் பெயர்பெறும்; திருமால், பிரமதேவர், அகத்திய முனிவர் வழிபட்ட தலம்; தாருக வனத்துக்கு இறைவர் பிச்சைக்குச் சென்றருளிய வரலாறு இதற்கு

நிகழ்ந்ததென்பர். பதிகம் 2-வது பாட்டில இக்குறிப்புப் போற்றப்படுகின்றது காண்க. பிட்சாடனர் திருவுருவம் முதற்சுற்றில தாபிதது வழிபடப்பெறுகின்றது; ஐம்பெருஞ் சபைகளுள் இது தாமிரசபை; சுவாமி - நெல்லையப்பர் - வேணுநாதர்; இரண்டும் தனிச் சந்நிதிகள்; நெல்லையப்பர் சாப்பக்கிருகத்தினை அடுத்து அரங்கநாதர் வழிபட்டுப் பள்ளிகொண்டெழுந்தருளியுள்ளார். அம்மையார்-காந்திமதியம்மை; தீர்த்தம் - தாமிரவருணி; துறை - சிந்துபூந்துறை; சிறந்த எலும்புகள் பூக்களாயின என்பது வரலாறு: சுவாமியம்மை யாலயங்கள் மிகப் பெரியனவாய் அழகிய அமைப்புடைய தனிக் கோயில்கள்; பதிகம் - 1.

திருநெல்வேலி சந்திப்பு நிலையத்தினின்றும் மேற்கே கற்சாலைவழி இக்கோயில் 1½ நாழிகையளவில் அடையத்தக்கது; நகரத்தினிடையே இருப்புப்பாதை செல்கின்றது. கோயிலுக்கு அணிமையில் மேல்புறம் திருநெல்வேலி டவுன் நிலையம் ½ நாழிகை யளவில் உள்ளது.

**திருப்பதிகள் பிறவும்** - இவை திருப்புடைமருதூர் (திருப்பிடவூர்), திரு அகத்தீச்சுரம், திருச்சுழியல், திருவுத்தரகோசமங்கை முதலாயின என்பது கருதப் படும்.

2786. செங்கண்மால் வழிபட்ட கோயி லண்ணித்
திருமுன்பு தாழ்ந்தெழுந்து தென்ன னோடும்
மங்கையர்க்கு நாயகியார் தாமு மெய்ம்மை
மந்திரியா ருஞ்சூழ மணிநீள் வாயில்
பொங்கியெழும் விருப்பினொ டுடனே புக்குப்
புடைவலங்கொண் டுள்ளணைவார் போற்றி செய்து
பங்கயச்செங் கைகுவித்துப் பணிந்து நின்று
பாடினார் மன்னவனும் பரவி யேத்த. அஅஅ

(இ - ள்) செங்கண்...அண்ணி - சிவந்த கண்களையுடைய திருமால் (இராமாவதாரத்தில்) தாபித்து வழிபட்ட திருக்கோயிலைச் சேர்ந்து, திருமுன்பு ..அணைவார் - அதன் திருமுன்பு வீழ்ந்து எழுந்து அரசனோடும் மங்கையர்க்கரசியாரும் உண்மை ஒழுக்கத்தின் சிறக்கும் மந்திரியாராகிய குலச்சிறையாரும் தம்மைப் பின்பற்றிச் சூழ்ந்து வர; உடன் - அவர்களுடனே அழகிய நீண்ட திருவாயிலினுள் மேன்மேல் எழும் விருப்பத்தினாலே புகுந்து உட்பக்கத்தில் வலமாக வந்து உள்ளே அணைவாராகி, மன்னவனும் பரவி ஏத்த - அரசனும் துதித்துப் போற்ற, போற்றி செய்து ..பாடினார் - துதி செய்து தாமரைபோன்ற கைகளைக் கூப்பி வணங்கி நின்று பாடியருளினார்.

(வி - ரை) மால் - திருமால் இராமனாய் வந்த அவதாரங் குறித்தது.

வழிபட்ட - "மதியினை மால்செய்த கோயில" (தேவா - அரசுகள்); வழிபடுதல் - தாபித்துப் பூசித்தல் என்ற பொருளில் வந்தது. "இராமன் செய்த" என முன் பாட்டிற் கூறியது காண்க.

முன்பு - திருக்கோயிலின் திருமுன்னர்.

தென்னனோடும் - சிறப்புப்பற்றி வேறுபிரித்துக் கூறினார்.

மெய்ம்மை - உண்மை ஒழுக்க நெறி.

உடனே - அரசன் - தேவியார் - மந்திரியார் இவர்களுடனே.

மன்னவனும் பரவி ஏத்த - இராமனது பெரும்பாதகத்தைத் தீர்த்ததுபோல, மன்னவன் தான் செய்த பெரும்பாதகமாகிய அமண் சார்புபற்றிச் செய்த சிவாபராதம்

களினின்றும் காக்கவேண்டுமென்ற எண்ணத்தால் பரவி ஏத்த என்ற குறிப்புப்பெற ஈண்டு மன்னவன் பரவியதைத் தனி எடுத்து விதந்து கூறினார்.

பணிந்து போற்ற— என்பதும் பாடம். 888

I திருவிராமேச்சுரம்

திருச்சிற்றம்பலம் பண் - காந்தார பஞ்சமம் - 3-ம் திருமுறை

அலைவளர் தண்மதி யோடய லேயடக் கியுமை
முலைவளர் பாக முயங்கவல் லமுதல் வன்முனி
இலைவளர் தாழைகள் விம்முகா னலிரா மேச்சுரம்
தலைவளர் கோலநன் மாலையன் றனிருந் தாட்சியே. (1)

பகலவன் மீதியங் காமைக்காத் தபதி யோன்றனை
இகலழி வித்தவ னேத்துகோ யிலிரா மேச்சுரம்
புகலியுண் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் புந்தியால்
அகலிட மெங்குநின் றேத்தவல் லார்க்கில்லை யல்லலே (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இராவணனைச் செற்று இலங்கையை அழித்த பழி போக இராமன் தாபித்து வழிபட்ட கோயில் திருவிராமேச்சுரத்தில் இறைவர் விளங்க ஆட்சி புரிந்து ஞானமும் நன்பொருளுமாகி நின்று அருள் புரிகின்றார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) முனி - உமை முலைவளர் பாக முயங்கவல்ல முதல்வனாகியும் முனிவனுமான எனக. இலைவளர் - செறிந்து நீண்ட இலைகள் நிறைந்த, தாழைகள் விம்மு - தாழை - நெய்தனிலக் கருப்பொருள், இங்கு மிக்கிருத்தல் குறிப்பு. தலைவளர் - மாலை - "தலைக்குத் தலைமாலை யணிந்ததென்னே" (நமபி), "தலைமாலை தலைக்கணிந்து" (அரசு): தலை - வீரதாரத் தலைகள் : வளர் - தமது தலைக்கு அத்தலைகளை மாலையாக என இரட்டுற மொழிந்துகொள்ள வளர் என்றார்; ஆட்சி - ஆட்சி-அரசு-புரியுமிடம், இராமநாதர் என்ற பெயர்க்குறிப்பு;—(2) தேவி - இராமனது மனைவியாகிய சீதை; தசமாமுகன் - இராவணன்; பொன்றுவித்த பழி - "மிக்க பெரும்பாதகம்" (2785) என்றவிடத்து உரைத்தவை பார்க்க; ஏ இயலும் சிலை அண்ணல் - இராமன் ஏ - அம்பு; இங்கு அகத்தியர் தந்த பாசுபதத்தைக் குறித்தது; சிலை - வில் ;—(3) வைதேகி - சீதை; மாயை - மாய மானைக் காட்டி வஞ்சித்துக் கவர்ந்த வஞ்சனை. கான் - தசரதன் ஏவியபடி இராமன் வசித்திருந்த காடு; காரரக்கன் - இராவணன்; ஊனமிலாப் புகழ் அண்ணல் - இராமன். இராமனது நற்குணத்தின் சிறப்புக் கூறியபடி, இராவண வதமானது பழியைத் தரினும் வேறு இழிவற்ற செயலும் புகழுற்றதுமாம் என்ற குறிப்பும் காண்க; ஞானம் - சரியையாதி நன்னெறி நான்கனுள் முத்திக்கேதுவாய இறுதியில் உள்ளது. "நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடா வாகலான்" (சிவஞானபோதம்); நன்பொருளும் என உம்மை விரிக்க. நன்பொருள்-வீடுபேறு; நன்மை - நலம் தரும் இடம்;—(4) உரை - மேலோர் சொல்; வேத நீதியாகிய உரை என்றலும் ஆம். உரை ..வேட்கையான் - இராவணனுடைய; ஆறனுருபு தொக்கது; வேட்கையான் - தோள் என்று கூட்டுக; வில்லி - வில்லையுடையவன்; இராமன். விரை மருவும் - இராமேச்சுரம் எனக. விரையாவது சிவமணம்;—(5) ஊறு - உடைதல்; உடை - உடைய; ஈறுகுறைந்த பெயரெச்சம், பட்ட;

வீறு - பழிப்பு; ஆணவச் செருக்கு பேறு - உடையான் - இடமாகப்பெற்று விளங்குபவன். பேறு - வீடுபேறு என்றலுமாம்;—(6) அணை - வழி என்று கூட்டுக; இணையிலி - சிவபெருமான், "தனக்குவமை யில்லாதான்" (குறள்); "ஒன்றென்ப தொன்றேகாண ஒன்றே பதி" (போதம்); என்றும் - இராமன் கோயில் செய்யு முன்பும், செய்த அன்றும், பின்னர் இன்றும் எனக. "பண்டு மின்று மென்றும்" (திருவிசைப்பா); துணையிலி - தமக்குத் துணையாக வேறொருவரையும் இல்லாதவர்; முழுமுதலவர்; பேராற்றல் முதலிய எண்குணங்களுடைமை குறிப்பு;—(7) கனி...திங்கள் - கோள்கள் ஒன்பதும்; கசி..செய்துகரதான் - இராவணன் கோள்களைத் தன் திசைவழி நிற்கப் பணித்து ஏவல்கொண்ட வரலாறுக் குறிப்பு, முனிவது செய்து - சினந்து, தீயன - தீயனவாக; அண்ணல் - இராமன்,—(8 - 9) பெரு...எடுத்தேந்தினான் - பெருவரை - கயிலைத் திருமலை; அன்று எடுத்தேந்தினான் - இராவணன்; சாய் - புகழ்; அதற்கு முன் வரத்தாற் பெற்ற பெருவலியினால் திக்கெலாம் வென்று போந்த புகழ், கெட அருவரையாலடர்த்து - அப்புகழ் கெடும்படி அந்த மலையின் கீழ்ப்பட்டு நசுங்கி அழும்படி வருத்தி; அன்று நல்கி - அடர்த்த அப்போதே அவன் பாடல்கேட்டிரங்கி வாளும் நாளும் கொடுத்து; ஒருவனுமே பலவாகி நின்றது - ஆருதல் - தனது சத்தியாகிய மாயையை விரித்து அதனால் உலகம் படைத்து அச் சத்தியை மீளத் தனக்குள் ஒடுக்குதல்; உலகப்பொருள் எல்லாவற்றினும் அவையேயாகிக் கலந்து என்றலுமாம். இதற்கு இறைவனே உயிர்களும் உலகமுமாகிறான் என்று புறச்சமயிகள் கொள்ளும் பொருள் அடாது, "நிலனீர்... எண்வகையாயப் புணர்ந்து நின்றான்"; "உலகேழெனத் திசை பத்தெனத் தானொருவனுமே, பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ" (15) (திருவா),—(10) மெய்யில் - உண்மையில்லாத; உடம்பில் என்றலுமாம் பற்று விட்டு - ஏத்தி எனக,—(11) பகலவன் - ஞாயிறு; பகலவன் ..பதிபோான் - சூரியன் கடும்பகலாயத் தன் நகரத்தின்மீது செல்லாது இராவணன் ஏவல்கொண்ட வரலாறுக் குறிப்பு பதி போனையும் என்று சிறப்புமமை தொக்கது. இகல் - போரில்; புந்தியால்...... ஏத்த - கினைந்து எங்கேனுமிருந்து துதிப்பினும் இராமேச்சுரம் சென்று வழிபட்ட பயனுறும் என்பது. அல்லல் - பழிபாவம், பிறவியுமாம் இப்பதிகத்துள் இராமன் கதையின் பல பகுதிகளும் பேசப்பட்டு ஆசிரியத்தின் உண்மையினை உறுதிப்படுத்துகின்றன; அரசுகள் பதிகமும் காண்க.

தலவிசேடம்:—திருவிராமேச்சுரம் - பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற தலங்களுள் எட்டாவது தலம். இராவணனைக் கொன்று இலங்கையினையும் அரக்கர்களையும் அழித்த மிக்க பெரும்பாதகம் நீங்கும்பொருட்டு இராமனுற் பிரதிட்டித்து வழிபடப் பெற்றமையால் இப்பெயர் பெற்றது; இராம சரித்திரப் பகுதிகளும் அப்பழி நீங்க இராமன் இங்குச் சிவலிங்கத்தாபித்து வழிபட்டமையும் தேவாரப் பதிகங்களுட் காணப் பெறும். தாபித்தற்காகச் சிவலிங்கம் கொணர்வேராகக் காசிக்குச் சென்ற அனுமான் குறித்த நேரத்தினுள் வரத் தாமதித்தமையால் சீதையம்மை மணலாற் குவித்த இலிங்கத்தை இராமன் தாபித்துப் பூசித்தனன் இவரே இராமநாதர் என வழங்கப்படும் மூர்த்தியாவர். அதன்பின் அனுமன் கொணர்ந்த இலிங்கத்தை மூலமூர்த்திக்கு வடபுறம் தாபித்து விசுவலிங்கம் எனப் பெயரிட்டு அனுமன் வருந்தாமை அவருக்கு முதற்பூசை நிகழும்படி நியமமும் இராமனுற் செய்யப்பட்டது என்ப. இப்பதி சோதிலிங்கத் தலம் 12 - ல் ஒன்று; விட்டுணுமூர்த்தி தம்மைப் பிரிந்து, குணநிதி எனனும் பெயருடைய பாண்டியனிடம் வளர்ந்த இலக்குமியை மறையவராய் வந்து மணந்து இங்குச்

சேதுமாதவர் என்ற பெயருடன் எழுந்தருளியுள்ளார். அவரை வழிபடாதார் இராம லிங்கரது வழிபாட்டின் பயன் பெறார் எனபது சேது புராணம்; இப்பதியில் உள்ள எண்ணிறந்த தீர்த்தங்களின் வரலாறும் பெருமையும் பற்றிச் சேது புராணம் பார்க்க; இராவண வதத்தின் பொருட்டு இராமன் அணைகட்டி இலங்கையை அடைந்த இட மாதலின் இது சேதுக்கரை என வழங்கப்படும்; சேது - செய்கரை; சேதுவில் இராமனது தனுவின நுனியால் கீறித் தீர்த்தம் காணப்பட்டமையால் இது "தனுக் கோடி" என்று வழங்கப்படும் (தனு - வில்); சேது - கடற்கரைத் தீர்த்தம். நகரின் வடபுறம் கந்தமாதன மலை உள்ளது. அதில் இராமனது பாதம் தீட்டப்பட்டு விளங்கு கின்றது; "ஆயன் றமர ரழியா வகைசெய்தா, யாயன் றமா ரழியாமை - யாயன், றிருததிறுன் செங்கண் விடையூர்வான மேனி, திருததிறுன் சேதுக் கரை" (48) என்ற 11-ம் திருமுறை - பரணர் அருளிய சிவபெருமான் திருவந்தாதியும் காணத் தக்கது. இராமன் கதை மச்சம் - கூர்மம் முதலிய மகாபுராணங்களினும் பேசப்படும். சுவாமி - இராமநாதர்; அம்மை - மலைவளர் காதலி; பிள்ளையாரது பழம்பஞ்சுரப் பதிகம் - 3 பார்க்க; (பர்வதவர்த்தனி என்பது வடமொழி); தீர்த்தம்-அக்கினிதீர்த்தம்- இராமதீர்த்தம் - இலட்சுமணதீர்த்தம் - தனுக்கோடி முதலியனவாய் எண்ணிறந்தன; பதிகம் 3.

இதற்கு இராமேச்சுவரம் என்ற இருப்புப்பாதை நிலயம், நகரின் உள்ளே அமைந் துள்ளது. நிலயத்தினின்றும் கடற்கரையில் 1 நாழிகை யளவில் கோயில் உள்ளது.

2787 சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த
சிவபெருமான் றனைப்பாடிப் பணிந்து போந்து,
காதலுட னந்நகரி லினிது மேவிக்
கண்ணுதலான் றிருத்தொண்ட ரானார்க் கெல்லாங்
கோதில்புகழ்ப் பாண்டிமா தேவி யார்மெய்க்
குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச் செல்ல
நாதர்தமை நாடோறும் வணங்கி யேத்தி
நளிர்வேலைக் கரையினயந் திருந்தா ரன்றே. ௮௮௬

(இ - ள்) சேதுவின்கண்...போந்து-சேதுவினிடமாகச், சிவந்த கண்களையுடைய திருமால் பூசித்த சிவபெருமானைப் பாடி வணங்கிப் புறம்போந்து; காதலுடன்... மேவி - விருப்பத்துடனே அத்திருநகரின்கண் இனிதாக அமர்ந்தெழுந்தருளியிருந்து; கண்ணுதலான்...போற்றிச் செல்ல - நுதலிற்கண்ணுடைய சிவபெருமானது திருத் தொண்டரானார்களுக்கெல்லாம் குற்றமற்ற புகழினையுடைய பாண்டிமாதேவியா ராகிய மங்கையர்க்கரசி யம்மையாரும் உண்மைநெறி நிற்கும் குலச்சிறை நாயனாரும் குறைவின்றி வேண்டுவன எல்லாம் அளித்துப் பாதுகாத்துத் துதித்துவர; நாதர்தமை ...ஏத்தி - இராமநாதராகிய இறைவரை நாடோறும் வணங்கித் துதித்துக்கொண்டு; நளிர்...அன்றே - குளிர்ந்த கடற்கரை நகரின்கண் விருப்புடன் (பிள்ளையார்) அப் பொழுது எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) சேது - அணையினை உடைய காரணமாக இராமேச்சரத்துக்கு வழங் கும் பெயர். சேது - சேதுக்கரை என்றலுமாம். "செங்கண்மால் சிலைபிடித்துச் சேனையோடும் சேதுபந் தனஞ்செய்து சென்று புக்கு" (தேவா).

காதலுடன்...அந்நகரில் இனிது மேவி, நளிர்வேலைக் கரையின் நயந்திருந்தார் என்றது - மால் பூசித்துப் பழிநீங்கிய பதியாதலால், மன்னவன் பொருட்டு அங்குச்

சில நாட்கள் தங்கியருளினர் என்பதாம்; தொண்டர்க்கு எல்லாம் பாண்டிமாதேவியார் - குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச் செல்ல என்று குறிப்புமிது.

**கோதில் புகழ்** - என்பதுபற்றி முன் உரைக்கப்பட்டது; கடைப்பிடிக்க.

**குறைவறுத்தல்** - உலகியலில் வேண்டிய உணவு உறையுள் முதலியன எல்லாம் குறைவின்றிப் பெறவித்து இனிதிருக்கச் செய்தல். **பாண்டிமாதேவியார்** - மாதேவியாராதலின் இல்லறநெறியில் மன்னனைச் சார்ந்தோர்க்குக் குறைவறுத்தல் அம்மையார் கடனாயிற்று; குலச்சிறையார் மந்திரியாராதலின் மன்னவன்பணி செய்தல் அவர் கடனாயிற்று.

**திருத்தொண்டரானார்க் கெல்லாம்** - என்றது இங்குக் குறைவறுத்துப் போற்றப் பட்டவர் சிவபெருமான் தொண்டர்கள் என்ற நிலை குறிக்கப்பட்டது. இதுவே பதி புண்ணியமாயும், இங்குப் பிள்ளையாருடன் நின்ற தன்மைக்கு ஏற்றதாயும் உள்ளமையின் என்க. அரசன் கடமையாகிய ஏனைய உலகரைப் பாதுகாக்கும் பசுபுண்ணியம் வேறாதலின் இவ்வாறு தொண்டரானார்க்கு என்று பிரித்துக் கூறினார். **ஆனார்** - பிள்ளையாரது திருவருளால் அந்நாட்டிற் சைவம் பெருக நீறிட்டுத் தொண்டராயினாரும் அடங்க என்ற குறிப்பும் தருவது. "பரமனடியா ரானார்க ளெல்லா மெய்தி யுணக வென" (1524) என்றவிடத்துரைத்தவை பார்க்க.

**தளிர்வேலைக்கரை** - கடற்காற்றுக் குளிர் வீசும் கரை.

**நயந்திருந்தார்** - மன்னவன்பொருட் டங்கிருந்து விரும்பி எழுந்தருளியதன்றியும், ஈழநாட்டுத் தலங்களைப்பாடி அந்நாட்டினரையும் வழிப்படுத்தி உய்யச்செய்யும் கருணை நோக்கமும் காரணமாம் என்பது மேல்வரும் பாட்டின் குறிப்பாதல் காண்க. ஈழநாடும் பாண்டிநாடு போலவே புறச்சமயிகளாகிய புத்தர் சார்பினால் அலைப்புண்டு வருந்தியமை திருவாதவூரடிகள் வரலாற்றினாலும் அந்நாட்டுச் சரித்திரங்களாலும் அறியக்கிடத்தல் கருதுக. 889

## II திருவிராமேச்சுரம் (சேது)

*திருச்சிற்றம்பலம்* பண் - பழம்பஞ்சுரம்

திரிதரு மாமணி நாக மாடத் திளைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக் கவெரி யேந்தி யாடு நலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்த மிலங்கு கான லிராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை சூடு சென்னி விமலர் செயுஞ்செயலே. (1)

தேவியை வவ்விய தென்னி லங்கை யரையன் றிறல்வாட்டி
ஏவிய வெஞ்சிலை யண்ண னண்ணு மிராமேச் சுரத்தாரை
நாவியன் ஞானசம் பந்த னல்ல மொழியா னவின்றேத்தும்
பாவியன் மாலைவல் லாரவர் தம்வினை யாயின பற்றறுமே (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு :**—இறைவர் எல்லியில் எரியேந்தியாடும் நலமே தெரிந்துணர் வார்கள், அஃது இராமேச்சுரமேயாரது அருட்செயல் என்று வழிபடுவர்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) **கதிக்க** - ஓசைசெய்ய, **ஆடும் நலமே** - உயிர்களது உடற்பிணி நீக்கும் அருட்கூத்தின் நன்மையினையே, **எர்கதிர் முத்தம் இலங்கு கானல்** - முத்துக்கள் ஒளிவீசிக் கரை சாரும் நெய்தனிலக் கானல், திருமறைக்காட்டினின்றும் தொடரும் இக் கடற்கரையில் முத்துக் குளிக்கும் துறைகளுள்ளமை

குறிப்பு; 1529-ம் பாட்டும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. "துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித் தொன்மயிலை" (திருத்தொண்டத்தொகை - 8) என்று தொண்டைநாட்டுக் கடற்கானலைத் தமிழ்நாவலர் பெருமான் காட்டியருளும் கருத்தும் இங்குவைத்துக் காண்க. விரிகதிர் - இனிக் கதிர்விரிய நின்ற பிறை;—(2) தெறி - பாட்டுடன் வீணை முதலியவற்றைத் தடவுதல், எறிகிளர் - வீசி மேலெறிந்து எழும்;—(3) மலைவளர் காதலி - தலஅம்மை பெயர்; தாயுமானார் பாடலில் இப்பெயர்பற்றிய பகுதி காண்க; மயக்கா - உயிர்களைத் தமது மறைப்பாகிய திரோதானசத்தியு ளகப்படுத்தி; இலைவளர் - நீண்ட இலைகள் மிகவுமுடைய தாழையின் இயல்பு குறித்தது; முன்பதிகம் (1) பார்க்க; தலைவளர் கோலநன் மாலை - முன்பதிகம் (1) பார்க்க;—(4) மாதனம் - பெருந்தனங்கள்; தேதெரி - தேசுடைய - ஒளியுடைய - எரி; தேது - தேசு; ஏதமிலார் - ஏதங்களை நீக்கவேண்டுபவர். இலார் - இல்லையாக விரும்புவோர்; போது - மாலைப்பொழுது;—(5) ஏலநறும் - ஏலம் - மணத்தின் பொதுமை குறித்தது; ஏல - பொருந்த என்றலுமாம்; இப்பொருளில ஏல(ப்) - பாடும் என்று கூட்டுக;—(6) (கணை) பிணை - பிணைத்த, தொடுத்த; இணைபிணை - பிணை - மான்; இணை - ஒத்த இரண்டு; இணைமலர் - பொருந்திய மலர்; அணைபிணை - சேரப் பிணித்த; கட்டிய;—(7) நீர் - கங்கை; ஊரினர் துஞ்சிருள் சங்காரகாலம்; "நடுநல் யாமம்" (திருவிசைப்பா);—(8) சுண்ணவெண் ணீறுபூசி - பொற்சுண்ணமாக வெண்ணீற்றினைப் பூசி. "சாந்தமென நீறணிந்த" (தேவா); பொன் திகழ் - பொன்போல விளங்கும்; பொன்னுடன் விளங்கும் என்றலுமாம்; குன்று - கயிலை;—(9) கோவலன் - திருமால்; மேவலன் - பொருந்த வல்லவன்; சே - இடபம்; வல - வல்லமையுடைய;—(10) தட்டை - தட்டுடை; பிரட்டு - பொய்; சீவரம் - துவருடை; இன் - (சோலை) இனிய; இன் - யாழ் என்று கூட்டியுரைப்பினுமமையும்;—(11) தேவி - சீதை, ஏ இயல் வெஞ்சிலை அண்ணல் - இராமன். முன்பதிகம் (2) பார்க்க.

குறிப்பு:—இப்பதிக முழுதும் எல்லி எரியேந்திக் காட்டிடமாக ஆடும் திறம் போற்றப்பட்டமையும், அம்மை யுடன்பாடக் கூடி யாடுகின்றமையும் கூறியருளிய குறிப்பினால் இஃது சேதுக் கரையில் அருளப்பட்டதென்று கருத இடமுண்டு; முன் பழிபோக்கிப் பின் னருள்செய்யும் குறிப்பும் கருதப்படும்.

2788. அந்நகரி லமர்ந்தங்க ணினிது மேவி
யாழிபுடை சூழ்ந்தொலிக்கு மீழந் தன்னின்
மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்து செங்கண்
மழவிடையார் தமைப்போற்றி வணங்கிப் பாடிச்
சென்னிமதி புனைமாட மாதோட் டத்திற்
றிருக்கேதீச் சரத்தண்ணல் செய்ய பாதம்
உன்னிமிகப் பணிந்தேத்தி யன்ப ரோடு
முலவாத கிழிபெற்றா ருவகை யுற்றார். ௮௯௦

(இ - ள்) அந்நகரில்...மேவி - அத்திருநகரில் விரும்பி எழுந்தருளி அவ்விடத்தில் இனிதாகப் பொருந்தியிருந்தபடியே; ஆழி...பாடி - கடல் நாற்பக்கமும் சூழ்ந்து சத்திக்கும் தீவாகிய ஈழநாட்டில் நிலைபெற்ற திருக்கோணமலையில் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் செங்கண்ணையுடைய இளமையாகிய இடபத்தினை உடைய இறைவரைத் துதித்து வணங்கிப் பாடியருளி; சென்னி...ஏத்தி - உச்சியில் சந்திரனைச் சூடும்படி

உயர்ந்த மாடங்களையுடைய மாதோட்டத்தில் திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளிய இறைவரது செம்மையாகிய திருவடிகளை மிகவும் நினைந்து பணிந்து துதித்து; அன்பரோடும்...உற்றார் - இறைவர்பால் முன்னாள் உலவாக்கிழி பெற்ற பிள்ளையார் அன்பர்களுடனே கூடியிருந்து மகிழ்ச்சி பொருந்தினார்.

(வி - ரை) மேவி - மேவி அங்கிருந்தபடியே ஈழநாட்டுத் தலங்களிரண்டினையும் வணங்கிப் பதிகம் பாடியருளினார் என்பார் மேவி என்றார். மேல் உன்னி என்றது மிது.

**ஆழி புடைசூழ்ந் தொலிக்கும் ஈழம் - ஈழம்** - ஈழநாடு, இப்போது இலங்கைத் தீவு எனப்படும்; தீவாதலின் ஆழிபுடை சூழ்ந்து ஒலிக்கும் என்றார். புடை - எல்லாப் பக்கங்களிலும்; எப்புடையினும் என முற்றும்மை தொக்கது.

**திருக்கோணமலை** - திரிகோணமலை எனப்படும்.

**மாதோட்டம்** - நகரம்; **திருக்கேதீச்சரம்** - கோயிலின் பெயர், மாதோட்டம் உள்நாடும், கேதீச்சரம் நகரமும் ஆம் என்பாருமுண்டு, "மாதோட்ட நன்னகருள்... பாலாவியின் கரைமேல்...திருக்கேதீச்சரத்தானை" (நம்பி. தேவா).

**அன்பரோடும் - உவகையுற்றார்** - "அன்பரொடு மரீஇ" (12 - சூத் - போதம்); அன்பர்களுடன் கூடியிருத்தல் அணைந்தோர் தன்மை, அது முத்தி யின்பத்தினை மிக்க இன்பத்தினைத் தருதல் குறிக்க உவகையுற்றார் என்றார்.

**உலவாத கிழிபெற்றார்** - உலவாக்கிழி பெற்றாராகிய பிள்ளையார். பெற்றார்-வினைப் பெயர். உலவாத கிழி பெற்ற வரலாறு திருவாவடுதுறையில் பிள்ளையார், சிவயாகத்துக்குத் தந்தையாருக்காகப் பாடி 1000 பொன் கொண்டதாய் எடுக்க எடுக்கக் குறையாத பொற்கிழியை இறைவர்பால் பெற்றனர் என்பதாம். முன் 2315 முதல் 2328 வரை உள்ள பாட்டுக்களில் விரித்துரைக்கப்பட்டது காண்க. உலவாக்கிழி பெற்றாற்போன்று அன்பர் கூட்டத்தை விரும்பியடைந்து மகிழ்ந்தனர் என்ற குறிப்பும் பெற நின்றது காண்க. **உன்னி** - இவ்வாறே திருக்காளத்திமலையி லிருந்தபடியே வடக்கு நோக்கிப் பணிந்து வடநாட்டுப் பதிகளை நினைந்து பாடியருளுதலும் காண்க. வடக்கு நோக்கி மேலும் செல்லாமையின் காரணம் பின் (2921) உரைத்தல் காண்க. அங்கு இராமேச்சுரத்திலிருந்தபடியே ஈழநாட்டுப் பதிகளிரண்டினையும் பாடியருளியது இடையே கடல் குறுக்கிட்டுச் சூழ்ந்திருத்தலால் கடலைக் கடந்து செல்லலாகாது என்ற மறையின் காரணமாக என்பது கருதப்படும். ஆழிபுடை சூழ்ந்தொலிக்கும் ஈழம் என ஆசிரியர் அறிவித்ததும் இக்குறிப்பும் பெறுதற்கு. 890

## திருக்கோணமலை (திரிகோணமலை)

திருச்சிற்றம்பலம்  பண் - புறநீர்மை - 3-ம் திருமுறை

*நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு நிமலர்நீ றணிதிரு மேனி*
*வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த வடிவினர் கொடியணி விடையர்*
*கரைகெழு சந்துங் காரகிற் பிளவு மளப்பருங் கனமணி வரன்றிக்*
*குரைகட லோதம் நித்திலங் கொழிக்குங் கோணமா மலையமர்ந் தாரே.*  (1)

*குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரைக்*
*கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான் கருத்துடை ஞானசம் பந்தன்*
*உற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்*
*சுற்றமு மாகித் தொல்வினை யடையார் தோன்றுவர் வானிடைப் பொலிந்தே.* (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—*விமலர் - மலைமகளோர் பாகமாப் புணர்ந்த வடிவினர் - கொடியணிவிடையர் என்றிவ்வாறு பலவும் போற்றப்படும் இறைவர், கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த கோணமாமலை யமர்ந்தாரே.*

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) **நிரை** - *வரிசை;* **அலம்பும்** - *இசைக்கும்;* **சந்து-அகில்-மணி** - *குறிஞ்சிக் கருப்பொருள்;* **மணி** - *நெய்தலினும் பெறப்படும்; இங்கு மலையும் கடலும் கலந்த நிலையாதல் குறிப்பு. நெய்தலுங் குறிஞ்சியும் மயங்கிய திணைமயக்கம். 1118 பார்க்க. "குரைகடல் சூழ்ந்த கோணமாமலை" என்ற கருத்துடன் பதிகத்தின் மகுட மமைந்தபடியும் காண்க. இத்தலம் கடலினுள் ஏறி விளங்கும் மலை. சந்து அகில் மணிவரன்றி என்றதனால் ஆறுகளால் அலைத்துக் கொணரப் பட்டன என்ற குறிப்பும் காண்க;*—(2) **கோடிதேனக் கதறும் குரைகடல்** - *இங்குக் கடல் அலைகள் மிகப்பெருகியவை; பரந்து செல்லும் வகையின்மையால் கரையின் கற்பாறையில் மோதி மிகச் சத்திப்பன;* **நித்திலம்** - *கடல்படு பொருள்;* **குடிதனை ... ...தோன்றும்** - *முன்னை நாளினும் இந்நாளிலும் பெரிய வாணிபத் துறைமுகப் பட்டினமாதலால் வாணிபம் அரசியல் என்ற இருவகையாலும் குடிநெருக்கமுடைய பட்டினம் என்பது;*—(3) **பனித்த இளம்-கனித்த இளம்**-*என்றவை அகரங்கெட்டுப் பனித்திளம் - கனித்திளம் என நின்றன. கனிந்த என்றது எதுகை நோக்கிக் கனித்த என நின்றது.* **துவர்** - *பவளம்.* **மதில்மேல் - குனித்த** *என்று கூட்டுக.* **மதில்** - *திரிபுரவாணரது அரணுடைய நகர்; மதில் அதனையுடைய நகருக்கு வந்தது;* **குனித்த .. ...நாகம்** - *மேருமலையாகிய வில்லினுக்கு நாணாகத் தொடுத்த ஆதிசேடனாகிய மாநாகம்.* **வில்லார்** - *வில்லினையுடையார்.* **குனித்தது** - *வளைத்த மாத்திரையேயன்றிச் செயற்படவில்லை என்பது குறிப்பு. மேருவைச் சிலையாக வளைத்து ஆக்கிக்கொண்ட வில்;*—(4) **பழித்து** - *பழித்ததுபோல;* **அவன்தேவி** - *இரதி;* **வேண்ட முன் கொடுத்த** - **முன்** - *அவள்முன்னாமட்டில் உருவாக, வரலாறு கந்தபுராணம் பார்க்க;* **தாளம்** - **பொன்** - **இப்பி** - *கடல்படு பொருள்கள்;*—(5) **தாயினும் நல்ல** - *"பானினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து" (திருவா);* **போற்றிசைப்பார் வாயின் மனத்தும் மருவி** - *இவ்விடங்களில் வெளிப்படப் பொருந்தி;* **நோயிலும் தொழிலர்பால் பிணியு நீக்கி** - *போற்றிசைப்பார்க்கு வினைவயத்தால் அனுபவிக்க வரக்கடவனவாய நோய் வந்துழியும் அத்தொழில் (போற்றும் தொழில்) உடையார்பால் அத்துன்பம் உறாத்தாது உடலூழாய்க் கழியும்படி நீக்கி;* **நுழைதரு நூலினர்** - *அவ்வழியே அறிவு புகட்டும் மறைகளை அருள்பவர்;* **ஞாலம் கோயிலும் சுனையும் கடலுடன் சூழ்ந்த** - *அத்தீவும், அதனுட் கோயிலும் அதன் சுனையும் ஆக எல்லாவற்றையும் கடல் சூழ்ந்த என அதன் அமைப்புக் கூறியவாறு; இவ்வாறு இப்பதிகத்துக் கூறிய இவையெல்லாம் பிள்ளையார் இராமேச்சரத்தில்* மேவி *எழுந்தருளியபடியே தமது தெய்வ ஞானக்கண்ணாற் கண்டு தொழுதருளியவாறு காண்க.* **கோயிலும் சுனையும் கடலுடன் சூழ்ந்த** - *என்ற திருவாக்கின் வாய்மையின் பயன்போலும் இத்திருக்கோயில் பிற்காலத்துப் புறச் சமயிகளாகிய கிறித்துவ இடச்சுக்காரர்களால் அகழ்ந்து அழிக்கப்பட்டுக் கடலினுட் கிடக்கின்றது; ஆயினும் இந்நாளில் அத்திருக்கோயில் இருந்த இடத்திற்கே வழிபாடுகள் நடைபெறுகின்றமையும் கருதுக. "வாயினும் மனத்தும் மருவிநின் றகலா மாண்பும்" என்ற குறிப்பும் கருதுக. சுனை - மலையாதலின் குறிஞ்சிக்குரிய சுனை என்று கூறினார்; இத்தலத்தை அடுத்து வெந்நீர் ஊற்றுச் சுனைகள் ஏழு இருத்தல் இன்றும் காணப்பெறும் அதிசயங்களுள் ஒன்று;*—(6-7) **திரிந்திடாவண்ணம்** - *வரம்பு கடந்து செல்லாதபடி;* **திரிதல்** - *மாறுபடுதல்.* **அவற்கு** - *மாணிக்கு;* **உதைத்த**

திட்ட அக்கூற்றவனுக்கு என்றலுமாம்; விரிந்துயர்...பொழில் - இப்பொழில்களின் நீட்டம் இன்றும் காணத் திகழ்வதாம்;—(8) எடுத்தவன் - கயிலையினைப் பெயர்த்து எடுக்க முயன்ற இராவணன்; ஆர்த்தம் - ஆபத்தம்; அன்பு. விரலால் இழித்தவர் - என்க. இழித்தல் - ஆற்றலழித்தல்;—(9) அருவாது - வெறுக்காமல்; (10) துன்று மோண்...உலவும் - முன் 6 - 7 பாட்டுக்களைப் பார்க்க.

தல விசேடம் :—திருக்கோணமலை - ஈழநாட்டுத் தலம். இது "திருக்கோணமலை" என மருவி வழங்கப்படும். மாமேருவின் சிகரங்களை அசைக்காமற் காக்கவும் அசைக்கவும் முறையே சேடனும் வாயுவும் தம்முள் இகலிட்டுச் செய்த வாதத்தில், வாயுவின் பலத்தினால் மேருச்சிகரங்களுள் மூன்று பெயர்ந்து சென்று வீழ்ந்தன என்பதும், அவையே திருக்காளத்தி, திரிசிராப்பள்ளி, திரிகோணமலை என்ற மூன்றுமாவன என்பதும், ஆதலின் இவை தட்சிண கைலாயம் எனப்பெறுவன என்பதும் வரலாறு. இந்திரன் பூசித்த தலமாமென்ப. கோணம் - வளைவு; கூரிய நுனி - முனை; சிகரத்தைக் குறித்தது. ஆளுடைய பிள்ளையாரும் நம்பிகளும் இராமேச்சரத்தி னின்றபடியே இதனையும் திருக்கேதீச்சரத்தினையும் பாடியருளிய வரலாறு புராணத்துக் காண்க. சிலகாலத்துக்கு முன் அந்நிய நாட்டினர் படையெடுப்பில் இந்நகரைக் கைப்பற்றிய இடச்சுக்காரர்கள் புறச்சமயிகளாதலின் இத்திருக்கோயில் முழுமையும் அடி காணத் தகர்த்துக் கடலுள் வீழ்த்தி இந்நகரைத் தமது படைகள் தண்டு தங்குமிடமாக்கிக் கொண்டனர், இதில் இருந்த சோமாஸ்கந்தர் - சந்திரசேகரர் முதலிய அரிய பெரிய மூர்த்திகளை மட்டும் அவர் கைப்பற்றப்படாதபடி அந்நாளில் அன்பர்கள் எடுத்துக் காத்து, அடுத்து 10 நாழிகை அளவில் உள்ள தம்பலகாம் என்ற ஊரில் போற்றி வைத்துள்ளார்கள்; உலக அதிசயங்களுள் ஒன்றாகிய "வெந்நீர்க் கிணறுகள் ஏழு" (Seven Hot Wells) இதன் அணிமையில் உள்ளன. இவையேழும் ஓரே இடத்தில் உள்ளனவாயினும் வெவ்வேறு அளவுபட்ட வெப்பநிலை யுள்ளன. இவை இராவணன் குளித்துத் தன் தாயின் கடன்தீர்க்க உண்டாக்கினன் என்று கூறுப. இந்நகர் இப்போதும் தண்டு தங்குமிடமாக (Contonment) இருக்கிறது. ஆதலால் திங்கள் - வெள்ளிக்கிழமைகளில் வழிபாடு நடைபெறுகிறது. அந்நாட்களில் அன்பர்கள் அதிகாரிகள் உத்தரவின்றியே சென்று வணங்கி வரலாம். ஏனை நாட்களில் அதிகாரிகள் உத்தரவு பெற்றுச் செல்ல வேண்டும். சுவாமி - கோணேசுரர்; அம்மை - மாதுமையாள்; பதிகம் - 1.

இத்தலம் இலங்கைத் தீவில் யாழ்ப்பாணத்துக்குத் தென்கிழக்கில் கீழ் கடற்கரையில் உள்ளது. இலங்கை இருப்புப்பாதை (Ceylon Government Railway) திருக்கோணமலை நிலயத்தினின்றும் 60 நாழிகையளவில் நல்ல கற்சாலைவழி அடையத்தக்கது. மோட்டார்பஸ் வசதி உண்டு.

## திருக்கேதீச்சரம்

திருச்சிற்றம்பலம்  பண் - நட்டராகம் - 2-ம் திருமுறை

விருது குன்றமா மேருவி னாணர வாவன லெரியம்பாப்
பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின் றுறைபதி யெந்நாளுங்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ் பொழிலணி மாதோட்டம்
கருத நின்றகே தீச்சரங் கைதொழக் கடுவினை யடையாவே.  (1)

மாடெ லாமண முரசெனக் கடலின தொலிகவர் மாதோட்டத்
தாட லேறுடை யண்ணல்கே தீச்சரத் தடிகளை யணிகாழி

காடு ளாரக்கிடைற ஞானசம் பந்தன்சொ னவின்றெழு பாமாலைப்
பாட லாயின பாடுமின பததாகள பாகதி பெறலாமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சிவபெருமான உறைகின்ற பதியாகிய மாதோட்டத்தின் திருக்கேதீச்சரததைக கைதொழ வினைகள கெடும; மேல வினைகள் அடையா.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) விரது - வெறறிச் சினனம்; பற்றி - விரும்பி வெளிப்பட எழுந்தருளி; ஊர் - மாதோட்டம் - எனக. கேதீச்சரம் - கோயிலின பெயர் ;—(2) ஈடம் - இடம எனபது முதல நீணடு வந்தது; கேடிலாத - இத திருவாககின் வாய்மையால் இடையில மணமேடிட்டு முறறும மறைந்திருந்த இததலம் சிலகால முன்பு அகழநதெடுக்கபபட்டு மீளவும புதுககித தாபிதது வழிபடப்பெறுகின்றது ;—(3) ஆதரித்து - விரும்பி அணிநது; அகம் - வீடு, மனம எனற குறிப்புமாம்; "பழங்குடி ருெறறமெழுக தருளிய" (திருவா); பிச்சைக்கு உண்ணலாவதோர் இச்சை - "பசுபோதக கவளமிடக களிததுணடு" (திருவிளை. புரா) ;—(4) பொடி - திருநீறு; நூல் - முபபுரி நூல்; பூணூல; நூல் - மறைகளாகமம என்ற குறிபபுமாம்: "ஞானநன குடையவா" எனவரும பாடடிற் கூறுதலும காண்க ;—(6) பேழை - பெருமை; மாழை - மாவடு; அழகு எனறலுமாம். போநள் - சிவபூசை யுட்கொணட சிவாகமம் 1127 பார்கக. குடிவாழ்க்கை - மாதோட்டக் - கேதீச்சரம் - பிரியார் எனறு கூடடிமுடிகக. குடிவாழ்க்கை - எனற உபசாரம; வெளிபபட நிலைபெற்று எழுநதருளுதல எனற பொருளில வந்தது ;—(8) முத்து - மணி . மலைபடு பொருளகள ,—(9) இடந்து எழுந்து ஒடி - எதிர நிரனிறை; எழுந்தோடுதல் - மேலெழுநது பறததல்; மா - பூகம் - கதலி - மருதச சாபு; இங்கு நெயதலும் குறிஞசியும் மருதமும மயஙகிய ஒழுககம; திணைமயககம ;—(10) ஆதர் - கீழ்க்கள்; ஏழைமை - சிறு புனசொல்; பாலாவி - ஆறு; நம்பிகள தேவாரமும் பாரக்க ,—(11) மணமூாகு என - இஙகு மேல கடலாதலின் சிறு முழக்கமேயுள்ள குறிபபு. இவவாறனறிக "கொடிதெனக கதறுஙு குரைகடல" (திருகோணமலை-2) எனக கீழ்கடலைக கூறிய திறமும் கருதுக. மணமூாகேண - இறைவர் அம்மையுடனிருநது அடியார்ககுச சிவமஙகலம பொலிய அருளவது குறிககக் கூறிய மஙகலக் குறிப்புமாம். பாகதி பெறலாமே எனறு பயன் கூறியதும் காணக.

தலவிசேடம் :—திருக்கேதீச்சரம் - ஈழநாடடுத தலம. கேதீச்சுரம் - கோயிலின் பெயா; மாதோட்டம் - நகரின் பெயா. மாதோட்டக் கேதீசசரம் என்பது பதிகம். நம்பிகள் பதிகமும பாாகக (சாததமஙகை அயவந்தி எனபதுபோல); இத் தலம் பாலாவி எனற ஆறறின கரையில இருநததாகப பதிகம் கூறுகின்றது. "பாலாவியின் கரைமேல்" (நமபிகள் - பதிகம); தட்சிண கைலாச மான்மியத தில் திருக்கேதீசுரமகிமை கூறபபட்டுள்ளது; ஆதிசேடன் மாமேருவினின்றும் பறித்த சிகாஙகளுள் ஒன்றினை இத்தலத்திற ருபிததனன என்றும, துவட்டா என்றும் முனிவன் இஙகு வந்து தவஞ் செய்து பேறு பெறறதனுல் இந்நகா மகா துவட்டாபுரம் என்று பெயா பெறற தென்றும் அதிற்சொல்லபபட்டுள்ளது. மகாதுவட்டாபுரம் என்பது "மாதோட்ட" வெனறு மருவி வழங்குவது போலும்; ஆறு - நகரம் - கோயில் எல்லாம் காலாந்தரத்தில் சிதைவுற்று அழிந்து மணமேடிட்டுப் போயின; இப்பால் சிலகால முன்பு அன்பர்களால அடையாளங் கண்டு கோயில் புதுக்கி மூல லிங்கமுங கண்டு தாபிதது வழிபடப்பட்டு வருகினறது. இஙகுள்ள சிர்சிலைகளில்

முதலைகள் மிகவுமுண்டு. சுவாமி - கேதீசுவரர் ; அம்மை - கௌரியம்மை ; தீர்த்தம் - பாலாவி ; பதிகம் 2.

இந்த இலங்கை கவர்ன்மெண்டு இருப்புப்பாதையில் தலைமன்னாரினின்றும் 20 நாழிகையளவில் உள்ள கோட்டைமன்னார் நிலயத்தினின்றும் மேற்கில் தெருச்சாலைவழி 6½ நாழிகையளவில் அடையத்தக்கது. இரயில் நிலயத்திலிருந்து மாட்டு வண்டிகள் கிடைக்கும். மன்னார் பட்டினத்தில் (Motor) மோட்டார் வண்டி உண்டு. திருக்கேதீச்சரம் இரயில் நிலயத்தினின்று இரண்டு நாழிகை யளவிலும் அடையலாம்.

2789. அப்பதியைத் தொழுதுவட திசைமேற் செல்வார்
அங்கையன லரித்தபிரா னமருங் கோயில்
புக்கிறைஞ்சிப் பலபதியுந் தொழுது போற்றிப்
புணரிபொரு தலைகரைவா யொழியப் போந்தே
செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து
செந்தமிழ்மா லைகள்சாத்திச், சிவனார் மன்னும்
ஒப்பரிய புனவாயில் போற்றி செய்து
வணங்கினா ருலகுய்ய ஞான முண்டார். ௮௯

(இ - ள்) அப்பதியை...செல்வார் - அந்தப் பதியினைத் தொழுது (அங்குநின்றும் நீங்கிப்) பின்பு வடதிசையின்மேற் செல்வாராகி, அங்கையனல்...இறைஞ்சி - அழகிய கையில் அனலை ஏந்திய இறைவர் விரும்பி வீற்றிருக்கும் கோயிலினுள்ளே புகுந்து வணங்கி; பல பதியும் தொழுது போற்றி - பல பதிகளையும் வணங்கிச் சென்று; புணரி...போந்தே - கடல் அலைகள் புரண்டுவரும் அவ்வேலைகளைப் பிற்படக் கடந்து சென்று; செப்பரிய...சாத்தி - சொல்லுதற்கரிய புகழையுடைய திருவாடானைப் பதியினைச் சேர்ந்து செந்தமிழ் மாலைகளைச் சாத்தி; சிவனா...உண்டார் - உலகமுய்தற்பொருட்டுச் சிவஞானமுண்டருளிய பிள்ளையார் ஒப்பற்ற திருப்புனவாயிலினைத் துதித்து வணங்கியருளினார்.

(வி - ரை) அப்பதி - முன்பாட்டில் "உன்னிமிகப் பணிந்தேத்தி" என்ற திருக்கேதீச்சரமாகிய பதி என அகரம் முன்னறிசுட்டு. பதியைத் தொழுது - என்றது இங்கு நின்றவாறே நலத்தை நோக்கித் தொழுதார் என்ற குறிப்புத்தருவது.

கோயில் - திருவிராமேச்சுரம். முன்னத்தை தொழுது என்றதனால் இருந்தவாறே மனத்தாற்றொழுது என்பதும், இங்குப் புக்கிறைஞ்சி என்றதனால் நேரே சென்று மெய்யுற வணங்கி என்பதும் குறிப்பிற் பெறவைத்த நயம் கண்டுகொள்க. இறைஞ்சி - செல்வாராகி விடைபெற்றுக்கொள்ளும் பொருட்டு வணங்கி.

புணரி பொருது அலைகரைவாய் ஒழிய - கடற்கரை எல்லைகளை நீங்க; ஒழிய - பிற்பட.

செப்பரிய புகழ் - செய்யாத்தற்கரிய முனிசாபமும் நீங்கவருளியமையும், பிறவுமாம்; தலவிசேடம் பார்க்க.

செந்தமிழ் மாலைகள் - பதிகம் ஒன்றே இப்போது உள்ளது; பல பதிகங்களிருந்து விளையவை சிதலரித்தொழிந்தன போலும். பதிகத்துப் பாடல் ஒவ்வொன்றும் தனித்தனி ஒவ்வோர் மாலையாம் என்ற மரபுபற்றி இப்பதிகப் பாடல்களை மாலைகள் என்றார் என்றலுமாம். "செந்தமிழ்" (11) என்ற பதிகக் குறிப்பும் கருதுக.

ஒப்பரிய - "பழம்பதி" எனபது முதலிய சிறப்புககளாலும், மூர்த்திவிசேடச் சிறப்பாலும், பாண்டிநாட்டின் 14 பதிகளும் இங்கு ஒருங்கே வழிபட உள்ள சிறப்பாலும், பிறவாற்றாலும் ஒப்பரிய என்றார். தலவிசேடம் பார்க்க. 891

பலபதி - இவை உப்பூர் - திருவெற்றியூர (வைப்புத் தலம்) முதலாயின என்பது கருதப்படும்.

திருவாடானை

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம் - 2-ம் திருமுறை

மாதோர் கூறுகந் தேற தேறிய, வாதி யானுறை யாடானை
போதி னாற்புனைந் தேத்து வார்தமை, வாதி யாவினை மாயுமே. (1)

வீடி னார்மலி வேங்க டத்துநின், றாட லானுறை யாடானை
நாடி ஞானசம் பந்தன் செந்தமிழ், பாட நோய்பிணி பாறுமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆதியானுறையும் திருவாடானையைப் போற்றுவாரை வினை வாதியா; அவர்களது பழவினைகளும் நோயும் பிணியும் மாயும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) போது - நாண்மலர் ;—(2) வீடும் - நீங்கும் ;—(3) நோய் மங்கும் என்க, பிணி - நோயின் மூலமாகிய பிணிப்பு ;—(4) தொழ எண்ணுவார் - தொழ எண்ணுதலே பயன் தரும், 8-வது பாட்டும் பார்க்க :—(5) கோய் - பறிக்கும் ; கை - கையிற்கொண்ட ;—(6) முன்செய்த ஊனம் - பழவினை; உள்ள - உள்ளவை - அகரவீற்றுப் பலவறிசொல் ;—(7) ஆடானைப் பதியை வலங்கொள்வார் - என்க ;—(9) அறையும் - ஒலிக்கும் ; பறையும் - நீங்கும் ;—(11) வேங்கடம் - சுடுகின்ற சுடலை ; (வேங்கடம்—என்பதும் பாடம்.) நோய்பிணி - நோயும் அதன் மூலமாகிய பிணியும் ; பிணிப்பு - ஆணவம்

குறிப்பு :—இப்பதிகம் மலர்தூவி இத்திருநகரைத் தொழவே வினைமாயும் என்ற கருத்துக் கொண்டு தலத்தினைப் பாடியது "ஆரூரைப் பத்தி மலர்தூவ" (குறிஞ்சி); "மலர்தூவி முதுகுன்றை" (ஷை) என்ற பதிகங்கள் போலக் காண்க. ஆதலின் இது தலத்தின் புறத்து அருளப்பட்டதென்று கருத இடமுண்டு. அவ்வாறாயின் "செந்தமிழ் மாலைகள் சாத்தி" (2789) என்ற குறிப்புக்கேற்ப மற்றும் பதிகமும் இருத்தல்கூடுமெனபது ஆராயத் தக்கது.

தலவிசேடம் :—திருவாடானை - பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற பதிகளுள் ஒன்பதாவது தலம். 'ஆட்டுத் தலையும் யானையுடலு மாக" என்று சபிக்கப்பெற்ற பிருகு முனிவர் அவ்வுருவத்துடனே வந்து பூசித்துச் சாப நீங்கப்பெற்ற தலமாதலின் இப்பெயர் பெற்றது. துர்வாச முனிவர் தம்மிடம் வந்தபோது வந்தனை செய்யாமையால் அவர் அவ்வாறு பிருகு முனிவரைச் சபித்தனர் என்பது வரலாறு. "அஜகஜபுரம்" என்று இதனை வடமொழியில் மொழிபெயர்த்துக்கொண்டு வழங்குவர் (அஜம் - ஆடு; கஜம் - ஆனை); இவ்வுருவம் கோயிலில் வைத்து வழிபடப்பெறுகின்றது. நீலமணியைச் சிவலிங்கமாயத் தாபித்துச் சூரியன வழிபட்டமையால சுவாமிக்கு ஆதிரத்தினேசுவரர் என்று பெயர் வழங்கும் சுவாமி - ஆடானைநாதர் (அஜகஜேஸ்வரர்) ; அம்மை - அம்பாயிரவல்லி ; தீர்த்தம் - சூரிய தீர்த்தம் ; பதிகம் 1.

இது சிவகங்கை நிலயத்தினின்றும் திருக்கானப்பேர் வழி கிழக்கில் கற்சாலைவழி 35 நாழிகையளவில் அடையத்தக்கது ; மோட்டார்பஸ் வசதி உண்டு. காரைக்குடி நிலயத்தினின்று 38 நாழிகையளவிலும் அடையலாம்.

## திருப்புனவாயில்

திருச்சிற்றம்பலம்    பண் - காந்தார பஞ்சமம் - 3-ம் திருமுறை

மின்னியல் செஞ்சடை வெண்பிறை யன்விரி நூலினன்
பன்னிய நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
அன்னமன் னந்நடை யாளொ டும்மம ருமிடம்
புன்னைநன் மாமலர் பொன்னுதி ருக்கும்புன வாயிலே. (1)

பொற்றொடி யாளுமை பங்கன்மே வும்புன வாயிலைக்
கற்றவர் தாந்தொழு தேத்தநின் றகடற் காழியான்
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் நன்மையால்
அற்றமில் பாடல்பத் தேத்தவல் லாரருள் சேர்வரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—செஞ்சடை வெண்பிறையான் முதலியனவாகப் பல தன்மைகளாலும் போற்றப்படும் இறைவர் அம்மையுடன் விரும்பி வீற்றிருக்கும் இடம் புன்னை சூழும் புனவாயிலே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) விரிநூலினன் - அறிவும் ஞானமும் விரிந்து விளங்குதற்கு ஏதுவாகிய வேத சிவாகமங்களை அருளியவன் ; மார்பில் விரியும் பூணூல் பூண்டவன் என்றலுமாம் , பன்னிய - பலவாறும் எடுத்துச் சொல்லிய ; தாம் பன்னிய - தம்மைப் பன்னிய என இருவகையும் கொள்ள நின்றது , போய்...அமரும் - பலவூர்கள் திரிந்து பின் தமது பழம்பதியாகிய இங்கு அமரும் என்று குறிப்புமபட நின்றது ; 2-வது பாட்டும் பார்க்க புன்னைகள் - செய்தற் கருப்பொருள் புன்னை - இங்குத் தலமரமாதலும் காண்க ,—(2) விண்டவர் - பகைவர், கண்டல் - தாழை ;—(8) பாரிடம் - பூதகணம் ;—(5) மதமத்தம் - ஊமத்தை ; மெலிந்து - சாபத்தால் கலை குறைந்தடைந்த ,—(6) கனல் வாயது - வடித்த கூரிய வாயினை உடையது , எரியுமிழ்வதுபோல அழிக்கும் என்றலுமாம் , நிறு செல்வம் - அழியாச் சிறப்பும் ஆனந்தமுமுடைய முத்தித் திரு ; சிவலோகன் என்று குறிப்புமிது ,—(7) பொருந்தலர் - பகைவர், பொருந்தாதவர் , அடையாதவர் ,—திருவளர் தாமரை - "திருவளர் தாமரை" (திருக்கோவை - 1) , "திருவமர் தாமரை" (திருவிருத்தம - கல்லூர் - 10) ; நரல் - சத்திக்கின்ற , சங்குகள் இயல்பாகிய நாதந் தரும் தன்மை குறித்தது ;—(10) போதி எனப் பெயராயினார் - புத்தர், பெயர்க்காரணம் குறித்தது ; வேதன் - வேதங்களைச் சொன்னவன் , வேதங்களாற் சொல்லப்பட்டவன் , உயிர்களின் மலத்தை வேதிப்பவன் என்று குறிப்புமாம் , வினைவீடும் என்று குறிப்புமிது ;—(11) கற்றவர் - மனமிறக்கக் கற்றவர். "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை" (திருவிசை) , தம்மை மறந்து அரனை நினைக்கக் கற்றவர் ; அற்றமில் - குற்றங்களை இல்லையாகச் செய்யும். தமிழாகிய பாடல் என இயையும்.

**தலவிசேடம்** :—திருப்புனவாயில் - பாண்டிநாட்டுப் பாடல் பெற்ற பதிகள் பதினான்களுள் ஏழாவது தலம். பழம்பதி - (விருத்தபுரி) என வழங்கப்படும் பெருமையுடையது. நம்பிகள் தேவாரத்துள் "பத்தர்தாம் பலர் பாடிநின் றாடும் பழம்பதி",

எனப் போற்றியருளியமை காண்க. பாண்டிநாட்டு வளப் பதின்மூன்று பழம்பதிகளின் மூர்த்திகளும் ஒருங்கே இங்கெழுந்தருளியுள்ளார்கள். அம்மூர்த்திகளுக்குத் தனித்தனி கோயில்களும் கண்டு அவ்வப்பெயரும் நீட்டித் திருப்பணி செய்து வழிபட அமைத்தல் சாலச் சிறந்த சிவதருமமாகும். "பாண்டி நாடே பழம்பதி யாகவும்" என்றது திருவாசகக் குறிப்பு. "பொருந்தி லாந்தைகள் பாட்டறாப் புனவாயிலே" (நம்பி) என்றபடி ஆந்தைகளின் கூவுதலும், "கார்க் கோழிபோய்ப் புறநேறிக் கூகூ வெனவழைக்கும் புனவாயிலே" என்றபடி கோழிகள் புறநேறிக் கூவுதலும், அப்பதிகத்திற் கூறும் வேடுவர் பூசலும், கற்குன்றும், தூறும், கடுவெளியும், கடற்கானமும், கள்ளிநீள் கவடும், பூஆறுடியும் முதலாகிய பொருள்களும் ஒழுக்கமும் இன்றும் காணப்பெற்று எந்தம் பெருமக்களது திருவாக்கின் வாய்மையைக் காட்டி நிற்பன. மூலலிங்க மூர்த்தியும் ஆவுடையாரும் மிகப் பெரிய அளவுள்ளன, இவற்றுக்குப் பரிவட்டம் சாத்தும் நிலை பற்றி "மூன்று முழமும் ஒரு சுற்று (சிவலிங்கத்துக்கு); முப்பது முழமும் ஒரு சுற்று (ஆவுடையாருக்கு)" என்று பழமொழியாய் வழங்கும். விமானமும் பெரிதாய் மிகச் சிறந்த அழகிய அமைப்புடையது. இப்போது திருப்பணியிலும் பழைய அமைதி சிதைவுறாது அவ்வாறே அமைக்கப்பெற்றிருக்கும் சிறப்பும் காணத்தக்கது; பாண்டி நாட்டுப் பதிகளுள் மிகக் கடினமான வழிகளால் சிரமப்பட்டு அடையத்தக்க பதியாய் விளங்குதல் இதன் வழிபாடு ஒன்றுமே பாண்டி நாட்டு எல்லாப் பதிகளையும் வழிபட்ட பயன்பெற உள்ள பரிசு போலும். இலக்குமியும் பிரமனும் பூசித்த தலமென்பது தீர்த்தங்களால் அறியப்படும். சுவாமி - பழம்பதி நாதர்; அம்மை - கருணைநாயகி; மரம் - புன்னை; கொன்றையுமாம் (பிள்ளையார் பதிகம் - 8); தீர்த்தம் - இலக்குமி தீர்த்தம்; பிரம தீர்த்தம். "புண்டரீ கம்மலர்ப் பொய்கை சூழ்ந்தபுன வாயில்" (பிள்ளையார் பதிகம் - 2; தாமரை இவ்விருவாக்கு முரித்தாதல் காண்க); பதிகம் 2.

இது அறந்தாங்கி நிலையத்தினின்றும் தென்கிழக்கே கற்சாலைவழி 7 நாழிகை யளவில் ஆவுடையார் கோயில் என வழங்கும் திருப்பெருந்துறையினின்றும் தெற்கே மட்சாலைவழி மீமிசல் வழியாய் 14 நாழிகையளவில் அடையத்தக்கது; தேவகோட்டை ரோட் நிலையத்தினின்றும் கற்சாலைவழி 6 நாழிகையளவில் தேவகோட்டையை அடைந்து அங்குநின்றும் தென்கிழக்கில் அனுமந்தக்குடி வழியாயில் கற்சாலை மட்சாலை வழியாய் 12 நாழிகையளவிலும் அடையலாம்.

2790. பதிநிலவு பாண்டிநா டதனின் முக்கட்
பரமனார் மகிழ்விடங்கள் பலவும் போற்றி,
விதிநிலவு வேதநூ னெறியே யாக்கி
வெண்ணீற்றின் சார்வினான் மிக்கு யர்ந்த
கதியருளிக், காழிநகர் வாழ வந்தார்
கண்ணுதலான் றிருத்தொண்டர் பலருஞ் சூழ,
மதிநிலவு குலவேந்தன் போற்றிச் செல்ல,
மந்திரியார் பதிமணமேற் குடியில் வந்தார். ௮௯௨

(இ - ள்) பதிநிலவு...போற்றி - பதிகள் பலவும் விளங்குகின்ற பாண்டிநாட்டிலே மூன்று கண்களையுடைய இறைவராகிய சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளிய இடங்கள் பலவற்றையும் துதித்து; விதிநிலவு...கதியருளி - விதிகள் பலவும் விளங்க உரைக்கின்ற வேதநூல்களின் நெறியினையே எங்கும் எவரும் பின்பற்றச் செய்து; வெண்ணீற்றின்...கதியருளி-வெள்ளிய திருநீற்றின் சார்பு பெற்றமையாலே மிகவும்

உயர்ந்த கதியினை யாவரும் பெற அருள்புரிந்து ; காழிகள்...வந்தார் - சீகாழிப்பதி வாழ அதனிடை வந்து அவதரித்த பிள்ளையார் சிவபெருமான் திருத்தொண்டர்கள் பலரும் சூழ்ந்து வரவும் சந்திரகுல மரபில் வந்த பாண்டியன் போற்றி உடன் வரவும் சென்று மந்திரியாரது பதியாகிய திருமணமேற்குடியில் வந்தணைந்தருளினர்.

(வி - ரை) பதிநிலவு - பல பெரும் நகரங்களும் விளங்கும் இறைவரும் அம்மையாருமே அரசராக இருந்து அரசியற்றிய பெருமை வாய்ந்த என்ற குறிப்புமாம். இப்பொருட்குப் பரமபதியே பதியாக (அரசராக) நிலவும் எனக.

பரமனார் மகிழ்விடங்கள் பலவும்-இவை ஓரியூர் (வைப்புத் தலம்) முதலானவை என்பது கருதப்படும். திருப்புனவாயிலினின்றும் கடற்கரையோரமாகவே சாதாரணமானதொரு மட்சாலைவழி வடகிழக்காய் மணமேற்குடி சேர்ந்து, அதன்மேலும் கடற்கரையோரமாகவே வடக்கு நோக்கி அம்மணி சத்திரம், சேதுபாவா சத்திரம், இராஜா மடம், அதிவீரராமன் பட்டினம் வழியாய் மனோறகுடி வரை செல்கின்றது. இவ்வழியாய் வடக்கிலுள்ள நாடுகளினின்றும் இராமேசுரம் வரும் யாத்திரிகர்கள் வந்து சென்றுகொண்டிருந்தார்கள். இவ்வழியே பிள்ளையாரும் பாண்டி நாட்டினின்றும் சோழ நாட்டுக்கு மீண்டும் எழுந்தருளினார் என்பது சரித ஆராய்ச்சிகளாற் கருதப்படும்.

விதிநிலவு ...ஆக்கி - விதி நிலவுதல் - "தருமம் செய்க", "சத்தியம் சொல்க" என்பன போன்ற விதிவாக்கியங்கள் விளங்குதல், வேதநூல் - வேதங்களும் அவற்றின் வழிவந்த நூல்களும்; நெறியே ஆக்குதலாவது அவ்வொழுக்கத்தில் யாவரும் ஒழுகும்படி நியமித்து ஆக்கம் செய்தல். இது வேத வேள்வியை நிந்தனை செய்துழல்வோரும் வைதிகத்தின்வழி யொழுகாதவரும் ஆகிய புறச்சமயிகளால் நேர்ந்த இடையூறுகளைப் போக்கியமையாலும், வேதநெறியினை வற்புறுத்திக் காட்டியமையாலும் ஆயிற்று.

வெண்ணீற்றின் கதி - இது சிவாகம நெறி, சைவநெறி; சிவ உயர்ந்த கதியாவது சிவநெறியேயாம். அதற்குரிய சிறந்த சாதனமாவது திருவெண்ணீறேயாம், சிவநெறியும் திருநீறும் பிரிக்கப்படாத இணைப்புடையன என்பது "கண்ணுதலான் திருநீற்றுச் சார்வினுக்கும் கவலைவரு மோவென்று கருத்திற் கொண்டார்" (2460); "தம்பெருமான் சாத்துந் திருநீற்றுச் சார்புடைய, வெம்பெருமான்" (649) முதலிய வாற்றானும், வேதங்களானும், திருநீற்றுப் பதிகத்தானும் பெறப்படும் உண்மை.

வேதநூல் நெறியே ஆக்கி நீற்றின் ..கதியருளி - "பரசமய நிராகரித்து நீறு ஆக்கும்" (1917) என்றும், "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க" (1899) என்றும் போந்த கருத்துக்கள் ஈண்டு நிறைவேறப்பெற்ற நிலையும் கண்டு கொள்க; மதுரையில் தொடங்கிய இச்செயல்களிரண்டும் ஈண்டு நாடு முழுதும் நிகழச் செய்து முற்றுப்பெற்றதனால் இவ்வாறு முடித்துக்காட்டிய திறமும் கண்டுகொள்க. 2782-ல் முன் உரைத்தவையும் பார்க்க.

தொண்டர் பலருஞ் சூழ - "கணங்களாய் வரினுந் தமியராய் வரினு மடியவர் தங்களைக் கண்டாற், குணங்கொடு பரவுங் குலச்சிறை" (ஆலவாய்-புறநீர்மை) என்பது முதலாகப், பிள்ளையார், தொடக்கத்திலே காட்டியருளியபடி தொண்டர்களைப் பணிவதில் மிக்க அன்புபூண்ட குலச்சிறையாரது பதியினுக்குத் தொண்டர் பலருடன் செலகின்றமை குறிப்பு.

**மதிநிலவு குலவேந்தன்** - பாண்டியன். பாண்டியாகள் சநதிரகுலத்தில் வந்தவர் கள் என்றும, சோழர்கள் சூரியகுலததில் வந்தவர்கள் என்றும வரலாறு கூறப்படும் ; சூரியனால் சந்திரன் ஒளிபெற்று விளங்கும். **போற்றிச் செல்ல** - சூரியகுலத்து வந்த மஙகையர்க்கரசியம்மையராலும், அவராணை பெற்ற மெய்ம்மை மந்திரியாராலுமேதான் உண்மை விளககமும் உய்தியும் பெற்றதென்பது கருதினான்போல இதைகுப் "போற்றிச் செல்ல" என்றார். மதியுடைய அரசுககும அமைச்சுக்கும் உள்ள ஒற்றுமை கலமுற குறிததபடி. மதிநிலவு என்ற குறிபபுமிது.

**மணமேற்குடி** - தலவிசேடம் (குலசசிறை நாயனார் புராணம்) III - பக். எகள பாரக்க. இதன் வடககில் அணிமையில் உள்ள வெள்ளாறு அநநாட் பாண்டிநாட்டெல்லை என்பர். 892

2791. அங்ககரி னினிதமர்வா ரருகு சூழ்ந்த
பதிகளினீ டங்கணர்தங் கோயி றாழ்நது
மன்னுதிருத் தொண்டருடன் மீண்டு சேர்ந்து
மன்னவனு மங்கையருக் கரசி யாருங்
கொன்னவில்வேற் குலச்சிறையார் தாமுங் கூடிக்
குரைகழல்கள் பணிந்துகுறை கொண்டு போற்றச்
சென்னிவளர் மதியணிநதார் பாதம் போற்றிச்
சிரபுரத்துச செல்வரினி திருநத நாளில; ௮கூ௩

2792. பொங்குபுனற் காவிரிநா டதனின் மீண்டு
போதுதற்குத திருவுள்ள மாகப் பெற்று
மங்கையருக் கரசியார் தாமுந் தென்னர்
மன்னவனு மநதிரியா தாமுங் கூட
அங்கவர்தந் திருப்பாதம் பிரிய லாற்று
துடன்போக வொருப்படமெவ் வளவு நோக்கி
"இங்குநான் மொழிநததனுக் கிசைநதீ ராகி
லீசாசிவ நெறிபோற்றி யிருபபீ" ரென்று, ௮கூ௪

2793. சாலமிகத தளர்வாரைத் தளரா வண்ணந
தகுவனமற் றவர்க்கருளிச் செய்த பின்பு,
மேலவர்தம் பணிமறுக்க வவரு மஞ்சி
மீள்வதனுக் கிசைந்துதிரு வடியில் வீழ்நது
ஞாலமுய்ய வந்தருளும் பிவளை யாரைப்
பிரியாத நண்பினொடுந் தொழுது நின்றார்;
ஆலவிட முண்டவரை யடிகள் போற்றி
யங்காட்டை யகன்றுமீண் டணையச் செல்வார்; ௮கூ௫

2794. பொன்னிவளந் தருநாடு புகுந்து மிக்க
பொருவில்சீர்த திருததொண்டர் குழாத்தி னொடும்
டன்னகப்பூ ணணிந்தவர்தங் கோயி றொறும்
பத்தருடன் பதியுள்ளோர் போற்றச் சென்று,

கன்னிமதிற் றிருக்களரும் போற்றிக் கண்டங்
கறையணிந்தார் பாதாளீச் சுரமும் பாடி
முன்னணைந்த பதிபிறவும் பணிந்து போற்றி
முள்ளிவாய்க் கரையணைந்தார் முந்நூன் மார்பர். அகூசு

2791. (இ - ள்) அந்நகரில்...சேர்ந்து - அத் திருநகரில் இனிதாக விரும்பி எழுந்தருளுவாராகிப் பக்கத்தில் சூழ்ந்துள்ள பதிகளில் நீடிய இறைவரது திருக்கோயில் களைச் சென்று வணங்கிப் பொருந்திய திருத்தொண்டர்களுடனே மீண்டு வந்து சேர்ந்து; மன்னவனும்...போற்ற - அரசனும், மங்கையர்க்கரசியம்மையாரும், கொல்லுலையில் வடித்த கூர்மையுடைய வேலேந்திய குலச்சிறையாரும் சேர்ந்து தமது சந்தனக் கும் வீரக்கழலணிந்த திருவடிகளைப் பணிந்து ஏவல் செய்து போற்ற; சிரபுரத்துச் செல்வர் - சீகாழிச் செல்வராகிய பிள்ளையார்; சென்னிவளர்...போற்றி - தலையில் வளரும் பிறையை அணிந்த இறைவரது திருவடிகளைத் தாம் போற்றி, இனிதிருந்த நாளில் - இனிதாக எழுந்தருளியிருந்த நாள்களில், அகூரு

2792. (இ - ள்) பொங்குபுனல்...பெற்று - பொங்கும் நீர்ப்பெருக்கினையுடைய காவிரி பாயும் நாடாகிய சோழநாட்டில் மீண்டு போவதற்குத் திருவுள்ளங்கொள்ளப் பெற்று; மங்கையர்க்கரசியாரும்...நோக்கி - மங்கையர்க்கரசியம்மையாரும் பாண்டிய அரசரும் மந்திரியாருங்கூட அவர் தம் திருவடிகளைப் பிரிதலாற்றாதவர்களாய் உடனே போதற்கு மனம் துணியும் அந்நிலையினை நோக்கி; இங்கு...என்று - இங்கு நான் சொல்வதனைக் கேட்டு அதன்படி ஒழுக இசைந்தீர்களேயானால் இறைவரது சிவநெறியினைப் பாதுகாத்துக்கொண்டு இருப்பீர்களாக என்று கூறி, அகூச

2793. (இ - ள்) சால மிக...பின்பு - பிரிவாற்றாது மிக அதிகமாகத் தளர்வார்களாகிய அவர்களைத் தளராதபடி தகுந்த மொழிகளை அவர்களுக்குச் சொல்லியருளிய பின்பு; மேலவர் தம்...நின்றார் - மேன்மையுடைய அவரது ஏவலை மறுக்க அஞ்சி, அவர் தம்மைப் பிரிந்து சோணாட்டில் மீண்டு செல்வதனுக்கு இசைந்து, விடைபெற்றுக்கொள்ளும் வகையால் அவரது திருவடிகளில் வீழ்ந்து, உலகமுய்யத் திருவுருவோடே வந்தவதரித்த அப்பிள்ளையாரைப் பிரியாத நண்பினுடனே தொழுது நின்றார்கள்; ஆலவிடம்...செல்வார் - (அவரும் விடை கொண்டு) ஆலகால விடத்தை அமுது செய்தருளிய இறைவரைத் துதித்து, அந்நாட்டினை நீங்கித் தமது நாட்டினை மீண்டு அணையச் செல்வாராகி; அகூரு

2794. (இ - ள்) பொன்னி...புகுந்து - காவிரி வளஞ்செய்யும் சோழநாட்டிலே புகுந்து; மிக்க...சென்று - மிகுந்த ஒப்பற்ற சிறப்புக்களையுடைய திருத்தொண்டர் கூட்டத்துடனே பாம்புகளைப் பூணாக அணிந்த இறைவரது திருக்கோயில்கள் தோறும் அன்பர்களுடனே அவ்வப்பதியிலுள்ளோர்களும் எதிர்கொண்டு போற்றச் சென்று; கன்னிமதில்...பாடி - பகைவரால் கட்டழிக்கப்படாத மதிலின் சிறப்புடைய திருக்களர் என்ற பதியினையும் துதித்துப் பின்பு, கழுத்தில் விடமணிந்த இறைவரது பாதாளீச்சுரத்தினையும் பாடிப் பணிந்து; முன் அணைந்த...மார்பர் - முன்னே வழிபடச் சென்ற பிற பதிகளையும் வணங்கித் துதித்து முந்நூலணிந்த மார்பினையுடைய பிள்ளையார் முள்ளிவாய்க்கரையினை அணைந்தருளினார். அகூசு

இந்த நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2791. (வி - ரை) அந்நகர் - மணமேற்குடி.

**அருகு சூழ்ந்த பதிகள்** - *ஆவுடையார் கோயில் என்னும் திருப்பெருந்துறை முதலாகிய தலங்கள் என்பது கருதப்படும். நீடு அங்கணர் என்ற குறிப்புப் பழமைப் பொருள்பட நிற்பதும் காண்க.*

**துரை கழல்** - *கழல் - அதனை அணிந்த திருவடிகளுக்கு வந்தது. துரை - சத்தின்ற.*

**துறைகொண்டு போற்ற** - *எல்லகளை மேற்கொண்டு துதித்து நிற்க; போற்ற - பேண என்றலுமாம்.*

**போற்றப்...போற்றி** - *அவர்கள் தமது கழல்களைப் போற்றத் தாம் இறைவரது பாதங்களைப் போற்றியிருந்தார் என்ற கவிநலமும் காண்க.*

**மீண்டு சேர்ந்து** - *திருமணமேற்குடியினின்றபடியே கோயில் சென்று சார்ந்து மீண்டும் அங்குச் சேர்ந்து.*

**நாளில் - திருவுள்ளமாகப் பெற்று** - *என மேல்வரும் பாட்டுடன் இயைத்து முடிக்க.* 893

2792. (வி - ரை) **பொருபுனல்** - *செழித்து அலைத்து மேன்மேல் வரும் நீர்;* **காவிரி நாடு** - *சோழ நாடு*

**மீண்டு போதுதற்குத் திருவுள்ளமாகப் பெற்று** - *திரும்பிப்போக மனங்கொண்டு;* **பெற்று** - *திருவருட் குறிப்புத் தரப்பெற்று என்ற குறிப்புடன் நின்றது.* **போற்றும்** - *என்பது பாடமாயின், திருவுள்ளமாகவே முன்சொன்னவாறு தம்மைப் போற்றும் மங்கையர்க்கரசியாரும் எனத் தொடர்ந்து பொருள்கொள்க*

**பெற்று - நோக்கி - என்று - அருளிச்செய்த பின்பு** - *என்று மேல்வரும் பாட்டுடன் இயைத்துக்கொள்க*

**ஒருப்படுதல்** - *இசைதல;* **அந்த - உடன் போக** *என்க.* **அந்த** - *அக் காவிரி நாட்டில்.*

**கூட** - *பிள்ளையாரைச் சூழும் அடியார் கூட்டத்துடன் கூட.*

**அவ்வளவு** - *அந்த நிலையினை;* **அவ்வளவாவது** *தங்களுடைய நாட்டினையும் அரசாங்கத்தையும் விட்டுப் பிள்ளையாரைப் பின்பற்றிச் சென்று வாழ்தலே உறுதிப்பயனும் என்று முடித்து அவ்வாறே கூடச் சென்றுவிடத் துணியும் அந்த அன்புமுற்றிய நிலை. "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள் . . தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே" (தாண்) என்ற திருவாக்கின் கருத்தாகிய நிலையினை ஈண்டு வைத்துக் காண்க; சேரமான் பெருமாணாயனார் அழைக்கச் சேரநாட்டுக்கு எழுந்தருளி அவருடனே பலநாள் தங்கிய நம்பிகள் மீளத் திருவாரூருக்கு எழுந்தருள வழிக்கொள்ளும்போது, பெருமாள் "பிரிவாற்றல் பின்செல்வார" (157); "உமது பிரிவாற்றேன் என்செய்கேன் யானென்ன" (158) உரைசெய்வதும், அதற்கு நம்பிகள் "ஒன்றுநீர் வருந்தாதே யுமதுபதி யின்கணிருந், தன்றினா முனைமுருக்கி யரசாள்வீர்" என மொழிந்து தேற்றியவழி, அருட்சேரர் "பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்" (159) எனக் கூறுவதும் (கழறிற. புரா) ஆகிய வரலாறுகள் இக்குச் சிந்திக்கத்தக்கன. "மண்ணாள்வான் மதித்துமிரேன" - "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்" (திருவா) என்பன முதலாகிய திருவாக்குக்களிற் குறித்த அன்பு நிலைகளையும் காண்க.*

**இந்த நான் மொழிந்ததனுக் கிசைந்தீராகில்** - *தமது மொழியினையே அவர்கள் மறுதவண்ணம் ஆணையாகக் கூறியபடி.* **இந்த** - *இவ்விடத்து; இந்நிலையில்.*

**நகர் சிவநெறி போற்றியிருப்பீர்** - சிவநெறி போற்றியிருத்தலே அரசாட்சியின் கடமையும், அன்பு நெறியும், தமது திருவுள்ளத்துக் கிசைந்ததுமாம் என்றபடி. போற்று தல் - காப்பாற்றுதல். முன்போல மயங்கி நெகிழவிடாது கைப்பிடியாகக்கொண்டு போற்றுவீர் என்ற குறிப்பும் காண்க. இருப்பீர் - இருப்பீராக என விதித்தற் பொருளில் வந்த முன்னிலை வினைமுற்று. 894

2793. (வி - ரை) தளர்வார் - பிரிவாற்றாமையால் பிள்ளையாரை நீங்கி இருக்கத் தக்கவும் மாட்டாது, அவராணையால உடன் செல்லவும் மாட்டாது தளர்வார்.

**தளராவண்ணம் தருவன** - ஆறுதல மொழியும் கடமைகளாகிய வேதநெறியும் ஆகிய தக்க மொழிகள்.

**மீள்வதனுக்கு** - பிள்ளையார் சோழநாட்டுக்கு மீளும் செயலுக்கு. உடன் செலாது தாம் மீளுதற்கு என்றலுமாம்.

**தொழுது நின்றார்** - விடைபெறும் நிலையில் நின்றனர்.

**ஆலவிடம் உண்டவரை அடிகள் போற்றி** - விடைபெற்றுச்செலலும் நிலையினால் பிள்ளையார் இறைவரை வணங்கி போற்ற - எனபது பாடமாயின் சோணாட்டு வின்ப பதிகளிலும் சென்று போற்றும்பொருட்டு எனக.

**மீண்டு அணைய** - சோழநாட்டில மீளச சேர.

**செல்வார் - சென்று - போற்றிப் - பாடிப் - போற்றி அணைந்தார்** என மேல வரும் பாட்டுடன முடிகக.

**ஞாலமுய்ய வந்தருளும்** - உலகமுய்யந்து நன்னெறி சேருமபடி பரசமயங்களை நிரா கரித்து நீற்று நெறியினை ஆக்கஞ் செய்யப் பாண்டிநாட்டுக்கு எழுந்தருளி வரும என்ற குறிப்புடனும நின்றது; 1553-ம பிறவும் பார்க்க.

**பிரியாத நண்பு** - உள்ளத்தால என்றும பிரியலாற்றாத அன்பின பெருக்கு

**பிரியாத அன்பினோடும்—**என்பதும பாடம். 895

2794. (வி - ரை) பொன்னி வளர்தரு நாடு புகுந்து - சோழ நாட்டினுள்ளே புகுந்து. திருமணமேற்குடியின வடக்கில 4 நாழிகை அளவில உள்ள வெள்ளாற் றினைக கடந்தால் சோழநாட்டினுள் அடையலாம வெள்ளாறு அக்காலத்தில பாண்டி நாட்டுக்கும் சோழநாட்டுக்கும எல்லையாக இருந்ததெனபது நாட்டுச சரித்திரத்தால அறியப படும். இக்காளில் மணமேற்குடி சோழநாட்டில தஞ்சாவூர் சில்லாவைச சார்ந்ததாகி யுள்ளது.

**பெருநவில் சீர்** - ஒப்பற்ற சிறப்பாவது பிள்ளையாருட னணைந்த சிறப்பும், அது காரணமாகப் பின்னாச சிவனுலகம பெற்று முத்தி பெறுதற்கும சிறப்புமாம.

**கோயில்தோறும்** - இவை சோழநாட்டின தெற்கெல்லையணிமையில உள்ளன. இவை திருவுசாத்தானம் முதலாயின எனப.

**கன்னிமதில் திருக்களர்** - இப்பதியில திருமதில விசேடச சிறப்புடையதென்ற குறிப்புப்பெற வைத்ததாம, தேவாரம பார்க்க. "நீண்ட மாவய லீண்டு மாமதில" (தேவா).

**பாதாளீச்சரம்** - பாம்பணிப பாதாள - பாமணிப பாதாள் என வழங்கும்; இராமேச்சரத்தினின்றும் கடலோரமாக வரும தனிப பாதை இதனணிமையில் தெற்கில் $1\frac{1}{2}$ நாழிகையளவில உள்ள மன்னார்குடி வரையும் நேரே வந்து சோகின்றது.

**முன் அணைந்த பதி பிறவும்** - வழியிற கிடைத்தமையால் முன அணைந்தவைதாமே என விட்டு மேற்செல்லாமல, அவற்றையும் மீளச சென்று வணங்கினார் என்க;

இது முறையும் மரபுமாம். இவை திருப்பூவனூர், திருவெண்ணியூர், திருஇரும்பூளை முதலாயின என்பது கருதப்படும்.

முள்ளிவாய்க்கரை - இஃது இப்போது ஓடம்போக்கியாறு எனவும், முள்ளியாறு எனவும் வழங்கும்; காவிரிக் கிளைநதி. கடுவாய்க்கரை, பழமண்ணிப்படிக்கரை முதலியவை காண்க. இப்பெயர் நதியின கரையில் அமைந்த ஊர்ப்பெயராதலும் கூடும். இவ்வாற்றின வடகரையில் அணிமையில் உள்ளது திருக்கொள்ளம்பூதூர்.

முன்னணைந்து—என்பதும் பாடம். 896

திருக்களர்

திருச்சிற்றம்பலம் பண் - சீகாமரம் - 2-ம் திருமுறை

நீரு லாவிய வயலவாவி சூழ்பொழி லீண்ட மாவய லீண்டு மாமதில்
தேரினார் மறுகில் விழாமல்கு திருக்களருள்
ஊரு ளாரிடு பிச்சை பேணு மொருவ னேயொளிர் செஞ்ச டைம்மதி
ஆரநின் றவனே யடைந்தார்க் கருளாயே. (1)

இந்து வந்தெழு மாட வீதி யெழில்கொள்கா ழிந்நகர்க் கவுணியன்
செந்து நேர்மொழியா ரவர்சேருந் திருக்களருள்
அந்தி யன்னதொர் மேனி யானை யமரர் தம்பெரு மானை ஞானசம்
பந்தன் சொல்லிவை பத்தும் பாடத் தவமாமே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—பொழிலும் வயலும் மதிலும் மறுகும் மாடமும் விழாவுமாக மல்கச் சிறந்த திருக்களருள் பிச்சை பேணுமொருவன் என்பதுமுதலாகப் போற்றப்படும் இறைவரே அடைந்தார்க்கருளீரே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) ஈண்டு மாமதில் - "கனகமதில்" (2473); வாவியும் பொழிலும் வயலும் மதிலும் மறுகும் தேரும் விழாவும் கூட்டி எல்லாச் சிறப்பும் உடன் கூறிய நயம் காண்க; தேர் விழா - பிள்ளையார் எழுந்தருளியது வேனிற்காலம் என்ற குறிப்புத் தருவதாம். "களிவேலைக் கரையினயக் கிருந்தா ரன்றே" (2787) என்றதமிக்குறிப்பு. ஊருளார் - உயிர்கள்; பிச்சை - பசுபோதம்; ஆர்தல் - நிறைதல். அடைந்தார்க்கருளாயே - பதிகக் கருத்தாகிய மகுடம்; "இடர்களையாய் நெடுங்கள மேயவனே" என்புழிப்போல;—(2) தாளினார் - சிவத்தவ முயற்சியுடையார்; தவம் - சிவபூசை;—(3) சேடர் - அறிவுடையவர்;—(4) அன்பு - அருள்;—(7) தாங்கும் மால்வரை - வில்லாகக் குனித்தது என்றிய;—(11) செந்து நேர்மொழி - செந்து - பெரும் பண்களுள் ஒன்று; "பண்ணினேர் மொழியாளுமை" (தேவா). நேர் - உவம உருபு; அந்தி - செவ்வான ஒளி - அந்திப்பொழுது அதனிற் காணும் செவ்வொளிக் காயிற்று. தீ என்பது குறைந்த தீ என நின்றதென்றுகொண்டு, அந்தீ - அழகிய தீபோன்ற எனறலுமாம். தீயினுக்கு அழகாவது நிறத்தால் ஒப்பாயினும் தன்மையால் மாறுபட்டு எரித்தலின்றி அருளுடைத்தாதல். "எரிபோல் மேனிப் பிரான்".

**தலவிசேடம்** :—திருக்களர் - சோழநாட்டில் காவிரித் தென்கரை 105-வது பதி; இது பாரிசாத வனம் என்றும் சொல்லப்படும். துர்வாசருக்கு இறைவர் வெளிப்பட்டுத் திருக்கூத்தக் காட்சியருளிய பதி. இங்குள்ள நடராசர் அவருக்குக்

காட்பெருளிய மூர்த்தி; பராசரர் - காளவர் முதலிய முனிவர்கள் வழிபட்ட பதி. சுப்பிரமணியர் சந்நிதி சிறப்பு. சுவாமி - களர்முளை நாதர்; அம்மை - இளங்கொம் பன்னாள்; தீர்த்தம் - தூர்வாச தீர்த்தம்; மரம் - பாரிசாதம்; பதிகம் 1.

இது திருத்துருத்திப்பூண்டி நிலையத்தினின்றும் மேற்கே மட்சாலைவழிக் களப்பாள் போகும் பாதையில் 4 நாழிகையளவில் முதலியப்பேட்டைப்பாதை சந்திப்பினின்றும் வடக்கே மட்சாலைவழி 1½ நாழிகையளவில் அடையத்தக்கது.

## திருப்பாதாளேச்சுரம்

திருச்சிற்றம்பலம் — பண் - வியாழக்குறிஞ்சி - 1-ம் திருமுறை

மின்னியல் செஞ்சடைமேல் விளங்கும்மதி மத்தமொடு நல்ல
பொன்னியல் கொன்றையினான் புனல்சூடிப் பொற்பமரும்
அன்ன மனநடையா ளொருபாகத் தமர்ந்தருளி நாளும்
பன்னிய பாடலினா னுறைகோயில் பாதாளே. (1)

பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாளைச் சேரப்
பொன்னியன் மாடமல்கு புகலிந்நகர் மன்னன்
தன்னொளி மிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன
இன்னிசை பத்தும்வல்லா ரெழில்வானத் திருப்பாரே (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:**—மின்னியல் செஞ்சடைமேல் மதிமத்தமொடு பொன்னியல் கொன்றையினான், வெள்ளைத் தோடமர் காதினல்ல குழையான் என்பன முதலாகப் பலவாற்றானும் அறியப்படும் இறைவன் உறைகோயில் பாதாளே.

**பதிகப்பாட்டுக் குறிப்பு:**—(1) மின்னியல் - மின் போன்ற, இயல் - உவம உருபு; "மின்வண்ண மெய்வண்ண வீழ்சடை" (பொன்வ அந் - 1); பாடல் - மறை; 2-4-7-8-9-10 பார்க்க;—(2) நீடலர் - மாலைபோல நீண்டு அலர்கின்ற; நிரம்பா மதி - பிறை; சுடுநீறு - சுட்டதால் - சங்காரத்தில் அழித்தலால் - விளையும் நீறு; வெள்ளைத் தோடு - சங்குத் தோடு; தோடமர் காதினல்ல குழையான் - ஒரு காதில் தோடும் காதில் குழையும் உடையான்,—(3) சாமம் போக - இரவில்; தூமொழி - மொழியவராகிய அம்மை, செறுவில் - பங்கயம் நின்றலர்தல் - நீர்வளமும் நிலவளமும் காட்டும்;—(5) தேய்பிறை - தேய்ந்து வந்தடைந்த பிறை;—(9) தமது ஆள்வினை - தமது உயிர் முயற்சி;—(10) காலையில் உண்பவர் - கண்டான கழுவாமுன் ஓடிக் காலையில் கலவைக்கஞ்சியை உண்ணும் புத்தர்;—(11) தன்னொளி - சிவவொளி; சிவஞான விளக்கம்.

**தலவிசேடம்:**—திருப்பாதாளீச்சுரம் - காவிரித் தென்கரைத் தேவாரப்பாடல் பெற்ற 104-வது பதி; "பாமணி" - "பாமப்பணி" என வழங்கப்படுகின்றது; "பாதாளே" என்பது பதிகத்துட் கண்ட பெயர் பாதாள உலகத்தினின்றும் ஆதி சேடனது தம்பியாகிய தனஞ்சயன் என்னும் அரவு பிலத்தின் வழியே வந்து பூசித்துப் பேறுபெற்ற பதியாதலின் அத்தொடர்புபற்றிப் பாதாள எனப்பட்டது என்ப. "சாப்ப புரம்" என்று மொழிபெயர்த்து வடமொழியில் வழங்குதல் காண்க. சுவாமி - சர்ப்ப ரேசர்; அம்மை - அமுதநாயகி; பதிகம் 1.

இது மன்னார்குடி நிலையத்தினின்றும் வடமேற்கே மட்சாலை வழி 1½ நாழிகை யளவில் அடையத்தக்கது; திருப்பூவனூரினின்றும் மன்னார்குடிக் கற்சாலை வழி

9 நாழிகையளவில் பாமணியாற்றின் வடகரை மட்சாலைவழி வடகிழக்கே 1½ நாழிகையில் அடைவது மற்றொரு வழி.

2795. மலைவளர்சந் தனமகிலுந் தேக்கு முந்தி
மலர்ப்பிறங்கல் வண்டிரைப்பச் சுமந்து பொங்கி
யலைபெருகி யாளியங்கா வண்ண மாறு
பெருகுதலா லத்துறையி லணையு மோடம்
நிலைபுரியு மோடக்கோ னிலையி லாமை
நீர்வாழ்நர் கரையின்க ணிறுத்திப் போகக்
கலைபயிலுங் கவுணியர்கோ னதனைக் கண்டக்
கரையின்க ணெழுந்தருளி நின்ற காலை, ௮௬௭

2796. தேவர்பிரா னமர்ந்ததிருக் கொள்ளம் பூது
ரெதிர்தோன்றத் திருவுள்ளம் பணியச் சென்று
மேவுதலா லோடங்கள் விடுவா ரின்றி
யொழிந்திடவு மிக்கதோர் விரைவாற் சண்பைக்
காவலனா ரோடத்தின கட்ட விழ்த்துக்
கண்ணுதலான் றிருத்தொண்டர் தம்மை யேற்றி
நாவலமே கோலாக வதன்மே னின்று
நம்பர்தமைக் "கொட்ட"மென நவின்று பாட, ௮௬௮

2797. உம்பருய்ய நஞ்சுண்டா ரருளா லோடம்
"சேலச்சேல்ல வுந்து"தலா லூடு சென்று
செம்பொனேர் சடையார்தங் கொள்ளம் பூதூர்
தனைச்சேர வக்கரையிற சேர்நத பின்பு,
நம்பரவர் தமைவணங்க ஞான முண்ட
பிள்ளையார் நற்றொண்ட ருடனி ழிந்து
வமபலரு நறுங்கொன்றை நயநதார் கோயில்
வாயிலின்முன் மகிழ்ச்சியொடு வநது சார்நதார். ௮௬௯

2795. (இ - ள்) மலைவளா...அலைபெருகி - மலையில் வளர்கின்ற சந்தனம், அகில, தேக்கு முதலிய மரங்களை உந்தி அலைத்துக்கொணடு, மலைபோன்ற மலர்க குவியல்களை வண்டுகள் சததிககச் சுமந்து பெருகி அலைகள் மிகுந்து; ஆள்...பெருகுதலால் - ஆள்கள் இயங்காதபடி ஆறு பெருகி வருதலால; அத்துறையில்...நிலையிலாமை - அந்தத துறையில் அணையும் ஓடத்தை நீரின் நிலைகண்டு செலுத்தும் ஓடககோல் நிலைக்கமாட்டாமையால்; நீர் வாழநர் ..போக - நீர்வாழ் சாதிகளாகிய மக்கள் கரையினிடத்தே நிறுத்திச் சென்றுவிடவே; கலைபயிலும்...காலை - கலைகள் பயிலும் கவுணியா தலைவராகிய பிள்ளையாா அதனைப பார்தது அந்தக் கரையின்கண்ணே எழுந்தருளி நின்றபோது; ௮௬௭

2796. (இ - ள்) தேவர்பிரான்...தோன்ற - தேவாபெருமானது திருக்கொள்ளம்பூதூர் எதிரிலே தோன்ற அதனைக கண்டு; திருவுள்ளம் பணியச் சென்று மேவுதலால் - அதன்கட் சென்று பணிவதற்குத் திருவுள்ளம் பொருந்துதலினாலே; ஓடங

கள்...ஒழிந்திடவும் - ஓடங்களைச் செலுத்துவோர்கள் அங்கில்லாமல்போகவும்; மிக்க தோர்...கட்டவிழ்த்து - மிகுந்ததொரு வேகத்தினாலே சீகாழித் தலைவராகிய பிள்ளையார் ஓடத்தினைக் கட்டியிருந்த கயிற்றினைக் கட்டு அவிழ்த்து; கண்ணுதலான்...ஏற்றி - நெற்றிக்கண்ணராகிய இறைவரது திருத்தொண்டர்களை அவ்வோடத்தின்மேல் ஏறச் செய்து; காவலமே...பாட - தமது நாவின் வல்லமையே கோலாகக்கொண்டு அவ் வோடத்தின்மேல்நின்று நம்பரைக் "கொட்டமே" என்று தொடங்கும் பதிகத்தைப் பாட, அகஅ

2797. (இ - ள்) உம்பருய்ய...உந்துதலால - தேவர்கள் உய்யும்படி விடத்தினை உண்டருளிய இறைவரது திருவருளினாலே அவ்வோடம் செலச் செல்லும்படி உந்தப் படுதலினாலே; ஊடு சென்று...பின்பு - செம்பொன்னை ஒத்த சடையினையுடைய இறைவரது திருக்கொள்ளம்பூதூரினைச் சேரும்படி அக்கரையிலே சேர்ந்த பின்பு; நம்பரவர்...இழிந்து - நம்பராகிய இறைவரை வணங்குதற்கு ஞானமுண்டருளிய பிள்ளையார் நல்ல திருத்தொண்டர்களுடனே ஓடத்தினின்றும் கீழே இறங்கிச் சென்று; வம்பலரும்...சார்ந்தார் - வாசனை வீசுகின்ற நறிய கொன்றையினை விரும்பி யணிந்த இறைவரது திருக்கோயிற் றிருவாயிலின் முன் மகிழ்ச்சியுடனே வந்து சார்ந் தருளினார். அகக

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன

2795. (வி - ரை) மலைவளர் - சந்து - அகில் - தேக்கு - இவை குறிஞ்சிக் கருப்பொருள்கள்; மலையில் விளைவன. இந்த ஆறு மலையினின்றும் பெருகி வருதலை யும், நீர் வெள்ளத்தின் மிகுதியினையும் குறிக்க இவற்றை உந்தி என்றார். மலை - ஆற் றின் தொடக்கம், மலர்ப் பிறங்கல் - குறிஞ்சியின் மலைகளிலும் மருத நாட்டின் வருமுன் இடையில் முல்லைக் காட்டினும் உள்ள பூக்களின் கூட்டம், இதனால் ஆறு வரும் வழியும் குறித்தபடி.

உந்தி - சுமந்து - தேக்கு முதலியவற்றை கனத்த பண்டங்களாதலின் அவற்றை உந்தி என்றும், மலர்ப்பிறங்கல் இலகுவாதலின் சுமந்து என்றும் கூறிய கவிநயமும் காண்க.

பொங்கி - இடையில் வரும் நீர்களும் கூடுதல் குறித்தது

ஆறு - இச்சரிதம் காரணமாக இப்போது ஓடம் போகி என வழங்கப்படு கிறது.

ஆள் இயங்காவண்ணம் - பெருகுதல் - இயங்கா - என்றதனால் ஊடே நடக்க இயலாமையே யன்றி ஓடத்தால் இயக்கப்பட்டு ஊடே செலுத்த இயலாமையும் குறித் தது.

நிலைபுரியும் ஓடக் கோல் நிலையிலாமை - நிலைபுரிதல் - நீரின் ஆழமும், வேக மும், செல்லும் திசையும், துறையும், பிறவும் கண்டு ஊன்றி ஓடத்தை ஒழுங்குபடச் செலுத்துதல். நிலை - இவை ஓடம் போக்கும் கலைக்கு வேண்டுவனவாகிய பகுதி யெல்லாம் குறித்தது. நிலைபுரியும் ஓடக்கோல் - இவை எல்லாவற்றையும் செய்தற் குக் கோல் ஒன்றே துணையாக உள்ளது என்றபடி, வாளின் போர் வெற்றிக்கு வாளும், வில்லின் போருக்கு வில்லும் போல, நீர்ப்பெருக்கில் ஆற்றில் ஓடம்போக்கும் நீர்ப்பொரும் போர்க்கு ஓடக்கோலே படையாம் என்பது.

நிலையிலாமை - ஓடக்கோல் நீரின் அடிப்புறத்துத் தரையில் ஊன்றுதல் பெறா தாயின் ஓடத்தை எவ்வாற்றானும் உந்துதல் இயலாமை குறித்தது.

நீர் வாழ்நர் - நீரில் ஓடம் போக்கி அதனால் வரும் ஊதியங்கொண்டு வாழும் அத் துறை மாக்கள்.

நிறுத்தி - ஓடத்தை வெள்ளம் கொண்டுசெல்லாமல் கரையில் தறிகளில் அணைத் துக் கட்டி; "கட்டவிழ்த்து" (2795) என மேற்கூறுதல் காண்க.

கலைபயிலும் - கலைகளாற் பயிலப் பெறும் புகழினையுடைய; "கலை மலிந்த சீர் நம்பி" (தேவா).

அக்கரையின் - அந்த ஆற்றின் தென்கரை; அகரம். "முள்ளிவாய்க் கரை யணைந்தார்" (2793) என்று முன்கூறிய அந்த என முன்னறிசுட்டு.

எத்துறையும்—நிலையிலாமல்—என்பனவும் பாடங்கள்; 897

2796. (வி - ரை) எதிர் தோன்ற - எதிர்க்கரையில் கட்புலப்பட.

சென்று பணியத் திருவுள்ளம் மேவுதலால் - என்க. ஒரு திருக்கோயில் கண் ணுக்குத் தோன்றியவுடன் அங்குச் சென்று அதனைப் பணியும்படி உள்ளங்கொள்ளுதல் முன்னைத் தவத்தானாகிய மனநிலை பக்குவமுடையார்க்கே நிகழ்வதாம். "காவேரித் தென்கரைபோய்க் கோயில்பல சென்றிறைஞ்சி"க் கண்டியூர் பணிந்த (கழறிற. புரா - 130, நம்பிகளும் கழறிற்றறிவார் நாயனாரும் "வடகரையிற் றிருவையா றெதிரேதோன்ற மலர்க்கரங்க ளுடலுருக வுள்ளுருக வுச்சியின்மேற் குவித்தருளிக் கடல் பரந்தெனப் பெருகும் காவிரியைக் கடந்தேறித், தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார்" (மேற் - 131); "திரு ஐயா றிறைஞ்ச மனமுருகி, மையா றின்ற இவ் வாறு கடந்து பணிவோ நாமென்ன" (மேற் - 132) என்று வரும் மனநிலைகளும், "நாணனே தோன்றுங் குன்றி னண்ணுவே மென்ன"த (745) திண்ணனார்க்கு நிகழ்ந்த மனநிலையும் ஆகியவற்றின் பரிபக்குவநிலைகளின் உள்ளுறை ஈண்டுச் சிந்திக்கத் தக்கன; இம்மூன்றிடங்களினும் உலக ஆறுகள் இறைவரைச் சாரும் ஆர்வத்தின் படிச் சாரவொட்டாது குறுக்கிடுதலும் அன்பினாறேவென்று இறைவர் சார்பு நிகழ்த லும் குறிக்க: "வேறு நாவா யோடங்கண் மீது செல்லா வகைமிகைப்ப...நிருத்தர் பாதம்பணிந் தன்பினாறு நெறியாச் செலவுரியார" (கழறி. புரா - 133) என்று இதன் உள்ளுறை விளக்கப்படுதலும் காண்க;—இவ்வாறு சிவாலயத்திலும் திருவேடத்திலும் கண்டபோதே அன்பும் ஆர்வமும் மிகுதல் பக்குவம்பற்றி நிகழுமென்பதும், அவையே பக்குவத்தின் அறிகுறியாமென்பதும், "நல்வினைக்கண், எல்லா வுலகு மெய்ப்புண் டெடுப்புண்டு, செல்காலம் பின்னரகஞ் சேராமே-நல்லநெறி, எய்துவதோர் காலந்தன் னன்பரைக்கண் டின்புறுதல், உய்யு நெறிசிறிதே யுண்டாகி" என்ற போற்றிப் பஃ றொடை (55 - 56) யானு மறிக.

ஒழிந்திடவும் மிக்கதோர் விரைவால் - உம்மை சிறப்பும்மை. இடையூறுகள் பெருகி வரும்போது மேலும் ஆர்வம் மிகுதல் பக்குவத்தின் விளைவு.

ஓடத்தின் கட்டு - நீர்ப்பெருக்கு ஈர்த்துச் செல்லாது ஓடத்தினைக் கரையிலே தறி யில் அணைத்துக் கட்டுதல் வழக்கு.

நாவலமே கோலாக - கோல் - ஊன்றி ஓடத்தைச் செலுத்தும் ஓடக்கோல்; நாவலம் - நாவின் வல்லமையாகிய சத்தி; (நா - கோலாக, வல்லமை - அக்கோலை ஊன்றி இயக்கும் சத்தியாக.)

அதன்மேல் நின்று - அவ்வோடத்தின் மேலே தாமும் ஏறி நின்று. இரட்டுற மொழிதலால் அவ்வல்லமையினை மேல் கொண்டு என்ற குறிப்புமாம்.

நம்பர் - எக்காலத்தும் நம்பியடைதற்குரியராய்க் கைவிடாது உள்ளேநின் றுதவு பவர். மேற்பாட்டிலும் நம்பரவர் (2797) என்ற கருத்தமிது. "நம்பனை உள்க"

என்று தொடங்கி "நல்குமாறுநன் நம்பனே!" என்று மகுடஞ் சூட்டிப் பதிகம் அருளிய பிள்ளையாரது திருவுளத்தின் குறிப்பினை எடுத்துக்காட்டி வற்புறுத்தியபடி. "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்" (சிவஞானபோதம் - 10 - 2 - வெண்) என்றபடி எவ்விடத்தும் கடவுளை சமயிலேனா கைவிடப்படார் எனபதாம்.

கொட்டம் - "கொட்டமே கமழும்" என்று தொடங்கும் பதிகத்தின் முதற் குறிப்பு.

நவின்று பாட - நம்பரை நவின்று கொட்டம் எனப பதிகம் பாட என்க; பொருளும் சொல்லும் குறித்தபடியாம். 898

2797. (வி - ரை) உம்பருய்ய நஞ்சுண்டார் - தம்மை அபயமாக அடைந்த அமரர் சாவாதபடி காத்துச், சாதலைச் செயயும் விடத்தின தன்மையை மாற்றிப பிழைப்பிக்கும் சத்தியாக்கியதுபோலக், கீழ்நோக்கி ஈாதலைச் செலலும் நீரின்சத்தியை மாற்றிய நிலைக் குறிபபு.

செலச் செல்லவுந்துதலால் - செலலுதறகுச செல்லும்படி உந்துதலினாலே. ஓடம் நீரினை ஊடு கீறித தானே செலலாதாதலின் அவ்வாறு அது செல்லும்படி உந்த; வெளிபபார்வைககு ஓடம ஈணடுத் தானே செல்வதுபோலத தோன்றினும் அதனை வெளித தோறறாமல் உள்நின்று உந்திச சென்றது திருவருட் சத்தியாம் என்பதாம்.

ஊடு - நீரினைக் குறுக்கிட்டு ஊடுருவிககொணடு.

சேர - சேரும்படியாக; சேருமபொருட்டு.

அக்கரையில் - பிள்ளையார் அணைந்து நின்ற இந்தத் தென்கரையினின்றும், இறைவர் கோயில் கின்ற அந்த வடகரையினகண.

வம்பலரும் - வம்பு - வாசனை; ஈண்டுப பிளளையார் எழுந்தருளியது வேனிற் காலமாகக கருதபபடுதல் முன் உரைககபபட்டது (2792 - 2787). கொன்றை மிகுதியாகப் பூத்தல் இள வேனிற காலத்திலாம "சித்திரையிற சதயமாம் திருநாளில்" திருவடியடைந்த அரசுகள "கொன்றைமாலை கொண்டடியே ஞானிட்டு" (தாண்) என்றதும காணக "கார்க் கொன்றை" கார் நறுங்கொன்றை எனபன முதலாக வருவனவற்றுள் கார் என்பது கார் காலத்தைக் குறியாது காாக்குரிய முல்லை நிலத்தை ஆகுபெயராய உணாத்தியது; கொன்றை முல்லைக் கருப்பொருள். முல்லைக்குக் காலம் கார்காலமாம. வாசனை என்ற பொருளில நறும் என்றது மிகுதி குறித்தது என்க.

கொன்றை நயந்தார் - "கொன்றைசேர சடையான்" (11); "கொன்றை பொன் சொரியும்" (5) என்ற பதிகக குறிபபு.

தமை வணங்கி—என்பதும பாடம். 899

திருக்கொள்ளம்பூதூர் - ஈரடிமேல்வைப்பு

திருச்சிற்றம்பலம் பண் - காந்தார பஞ்சமம் - 3-ம் திருமுறை

கொட்ட மேகம ழுங்கொள்ளம் பூதூா
நட்ட மாடிய நம்பனை யுள்கச
செல்ல வுந்துக சிந்தை யாாதொழ
நல்கு மாறருள் நம்பனே. (1)

கொன்றை சேர்சடை யானைகொள்ளம் பூதூரா
னன்று காழியுண் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலைகொண் டேத்தவல் லார்போய்
என்றும வானவ ரோடிருப் பாரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நம்பனை உள்கச் செல்லவுந்துக என்று சிந்தையார் தொழ நம்பனே அருள் நல்குமாறு ! என்று திருவருளைப் போற்றியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கோட்டம் - வாசனைப பண்டம் ; நம்பனே அருள் நல்குமாறு - என்க. நல்குமாறு - நல்கும வழி இது. ஆறு - ஆற்றின் கண் ; செல்ல - ஓடம் செல்ல என்ற குறிப்புமாம் ,—(3) விலையிலாட்கொண்ட வித்தகன்- உயிர்களை அநாதியே ஆளாகக் கொணடுடைய தலைவன். "தொடர்வுடைய திருவடியைத தொழுவதற்கு" (கழறி. புரா - 131) என்று இக்குறிப்பினை ஆசிரியர் விளக்குதல் காணக ; நம்பிகளைத் தடுததாட்கொணட வரலாறும் கருதுக ;—(4) கண் மலரும் - கணபோல மலர்தற்கிடமாகிய ,—(5) பொன் - பொனபோன்ற பூந்துகளும, இதழ்களும் ;—(6) ஓடம் வந்தணையும் - சரித வரலாற்று விணணபபக குறிப்பு ; விணணபபமாகக் கேளாது இயலபு குறித்த தன்மையணியில வைததுக் கூறியநிலை காண்க. "குரும்பை யாணபனை யீன்குலை ஓததூர்" முதலியவை கருதுக மேறபாட்டில் "ஆறுவந் தணையும" என்றதும் இககுறிபபு. பதிக முழுதும் பொதுவாகவும இவை சிறபபாகவும் சரித வரலாற்றின அகசசான்றுகளாதலும் காண்க ;—(9) பருவரால் உகளும் - நீரப்பெருக்குக குறிததது ; "நீரகக கழனி" (10) ; "கோட்டகக் கழனி" (2) என்பனவுமிக்குறிபபு.

குறிப்புக்கள் :—(1) இப்பதிகம் திருககொள்ளம்பூதூர் இறைவரை ஆற்றின் இடையே உய்தத தோணியின இருநதபடி பாடியருளியது ; மேற்பாட்டில் (2798) போற்றி செய்தார் என்றதனுற கருதபபடும் பதிகம் கிடைததிலது.

(2) ஈரடி மேலவைபபுஎனறது பதிக யாபபமைதி குறித்த பெயர், பதிகம் ஈரடியாலமைநத தாழிசை விருத்ததின்மேல் மகுடமவைபபாக வைத்த "செலல வுந்துக......நமபனே" என்ற இரணடடிகளை உடையது. இவ்வாறு மேல்வைபபாக வருவன இங்குபபோல ஒனறேபட வருவனவும், திருபபூநதராய் ஈரடிமேல் வைப்புப் பதிகததிறபோல வேறுபட வருவனவும் உணடு. திருவாவடுதுறைப பதிகக் குறிப்பிற் கூறியவை பார்க்க (2323).

தலவிசேடம் :—திருக்கொள்ளம்பூதூர் - காவிரித தென்கரையில் பாடல் பெறற தலஙகளுள் 113-வது பதி ; வில்வவனம் என்று கூறுப. திருக்களம்பூர் என்று வழங்குவது ; ஆளுடைய பிளளையார் ஆற்றின் வெள்ளததுள் பதிகம பாடி ஓடம் செலுத்திவந்து வழிபட்ட தலம். வரலாறு புராணத்துள் முன உரைககபபட்டது. இவ் வரலாறு பதிகதது 6 - 7 பாட்டுக்களிலும் குறிக்கப்பட்டுள்ளது. அழகிய திருப்பணி முற்றிப் பெருஞ் சாந்தியும அணிமையில் நிகழ்ந்துள்ளது. பிள்ளையார் ஓடம் செலுத்தியதுபற்றிய விழா ஆணடுதோறும கொண்டாடபபெறுகின்றது. சுவாமி - வில்வ வன நாதர் ; அம்மை - சௌந்தர நாயகி ; மரம் - வில்வம் ; பதிகம் 1.

இது கொரடாசசேரி நிலையததினின்றும் வடக்கில் கற்சாலை வழி 5½ நாழிகை யளவில் உள்ள செலலூரை அடைந்து அங்குநின்றும் மேற்கே 1 நாழிகையளவில் அடையத்தக்கது.

*2798 நீணிலைக்கோ புரமதனை யிறைஞ்சிப் புக்கு
நிகரிலாத் தொண்டருட னெருங்கச் சென்று
வாணிலவு கோயிலினை வலங்கொண் டெய்தி
மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று
"தாணுவே! யாறறின்க ணோட முய்க்குந்
தன்மையா லருடந்த தலைவா! நாகப்
பூணினாய்! களிற்றுரிவை போர்த்த முக்கட்
புனிதனே!" யெனப்பணிந்து போற்றி செய்தார். கூ00

(இ - ள்) வெளிப்படை. நீண்ட நிலைகளையுடைய திருக்கோபுரத்தினை வணங்கித் திருவாயிலினுட் புகுந்து, ஒப்பற்ற திருத்தொண்டர்களுடன் கூட நெருங்கிப்போய், ஒளி பொருந்திய திருக்கோயிலினை வலங்கொண்டு சேர்ந்து, பிறையினைச் சூடிய சடையினையுடைய பெருமான் திருமுன்பு நின்று "தாணுவே! ஆற்றினிடையே ஓடத்தினைச் செலுத்தித் தந்தருளிய தன்மையினாலே அருள் தந்த தலைவரே! நாகங்களைப் பூணாகவுடையவரே! யானையினது உரிவையினைப் போர்த்த முக்கட் புனிதரே!" என்று பணிந்து துதித்தருளினார்.

(வி - ரை) பதிகம் பாடி ஆற்றின் ஓடத்தினைச் செலுத்திக் கோயிலைச் சேர்ந்த பின்பு பிள்ளையார் அங்கு வழிபட்ட சிறப்புக் கூறுவது இத்திருப்பாட்டு.

தாணு - தாங்குபவர்; "வயிரத் தூணே" (தேவா), நிலைபெற்றவர் என்றலுமாம்.

தலைவா - சார்வாக அடைந்தாரைக் காக்கும் தன்மை தலைவர்க்குரியது. "விலையிலாட்கொண்ட விகிர்தனை" (பதிகம் - 3).

நாகப்பூண் - களிற்றுரிவை - பெரிய இடையூறுகளையும் விலக்கி ஒழித்தலும், தீமையினையே நன்மையாக்குதலுமாகிய ஆற்றல்களைக் குறித்தன. "ஆடல் பேணிய அடிகள்" (பதிகம் - 6).

களிறுரித்தல் முதலிய வீரச் செயல்கள் கருணைப் பெருக்கால் செய்யப்பட்டனவாதலின் இறைவரது தூய தன்மைக்குப் பங்கமில்லாமை கூறுவார் போர்த்த முக்கட் புனிதனே என்றார்.

போற்றி செய்தார் - ஆற்றினிடையே தோன்றுந் துணையாய் நின்ற அற்புதராதலால் இவ்வாறு நினைந்து நினைந்து கோயிலில் திருமுன்பு போற்றி செய்தனர். கடலினிடையே பதிகம் பாடிக் கல்லே மிதப்பாக மிதந்து கரையேறிப் போந்த அரசுகள் திருப்பாதிரிப் புலியூரில் புகுந்து இறைவரது திருமுன் "ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி" என்றெடுத்துத் "தோன்றாத் துணையாயிருந்தனன் றன்னடி யோங்களுக்கே" எனப் போற்றிய நிலை ஈண்டுக் கருதத் தக்கது.

போற்றி செய்தார் - திருமுன் போற்றிய இப்பதிகம் கிடைத்திலது!

பாவிப் போற்றல் — எனபதும் பாடம். 900

2799. போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையு நாளிற்
பூழியன்முன் புன்சமயத் தமணர் தம்மோ
டேற்றபெரு வாதின்க ணேரியின் வேவாப்
பதிகமுடை இறையவரை யிறைஞ்ச வேண்டி,

ஆற்றவுமங் கருள்பெற்றுப் போந்து முன்ன
மணைந்தபதி களுமிறைஞ்சி யன்பர் சூழ
நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி
நாடுடைநா யகர்கோயி லணணி னாரே. கூ0க

(இ - ள்) போற்றிசைத்து...நாளில் - போற்றி செய்து புறத்திற் போந்து அப்பதியினில் தங்கியருளிய நாளிலே; பூழியன்முன்...வேண்டி - பாண்டியனது முன்னிலையில் புல்லிய சமயத்தவராகிய அமணர்களுடனே மேற்கொண்ட பெரிய வாதத்திலே தீயினிடை வேவாது இருந்து வெற்றி தந்தருளிய திருப்பதிகத்தின் நாயகராகிய திருநள்ளாற்றின் இறைவரைச் சென்று வணங்கவேண்டி, ஆற்றவும்...போந்து - அப்பதியில் இறைவர்பால் மிக வேண்டி அருள்விடைபெற்றுப் போந்தருளி; முன்னம்...இறைஞ்சி - வழியிடையே முன்னர்ச் சென்று வணங்கிய பதிகளையும் மீண்டும் வணங்கிக்கொண்டு, அன்பர் சூழ...நண்ணினாரே - அன்பர் கூட்டம் சூழ்ந்துவரச் சென்று நாற்றிசையும் போற்றிசெய்யும் திருநள்ளாற்றினை அடைந்து நாடுடை நாயகரது திருக்கோயிலினைச் சேர்ந்தருளினார் (பிள்ளையார்).

(வி - ரை) போற்றிசைத்து - திருப்பதிகம் பாடித் துதித்து.

அங்கு உறையும்நாளில்-சில நாள்கள் அத்திருப்பதியில் (திருக்கொள்ளம்பூதூரில்) பிள்ளையார் எழுந்தருளியிருந்தனர் என்பது.

பூழியன் முன்...இறையவர் - பச்சைப் பதிகம் என்ற "போகமார்த்த பூண்முலையாள்" என்று திருநள்ளாற்றுப் பதிகத்தாற் போற்றப்படும் தலைவராகிய நாயகர்; நள்ளாற்றிறைவ ரருளின வரலாறு பற்றி 2672 முதல் 2690 வரை பாட்டுக்கள் பார்க்க.

அங்கு - திருக்கொள்ளம்பூதூர் இறைவரிடம்.

ஆற்றவும் அருள் பெறுதலாவது - பிரியலாற்றா நிலைமையால் மிக வேண்டி அரிதில் விடைபெறுதல். இங்குத் தங்கியது இறைவர் ஈண்டு ஆற்றில் ஓடம் உந்தித் தம்மை வந்து வழிபட அருளிய கருணையினை நன்றிபற்றி. இனி, அங்குத் திருநள்ளாற்றிற் செல்ல எண்ணுவது அதுவேபோல, முன்னர் ஆலவாயில் எரியினிடை வேவாது காட்டித் தம்மை அருளிய திறத்தின் நன்றிபற்றி. ஆதலின் இரண்டும் நன்றியாகிய ஒருகருத்தே பற்றி எழுதலின் இங்குநின்று நீங்க ஆற்றவும் வேண்டி அருள்பெற்றனர்.

இறைஞ்ச வேண்டி - காவலனார் பெருங்கருணை, அரசன் முன் அமணர் வாதினில் வெல்லக் கைதந்த நன்றியின்பொருட்டு மீளச் சென்று வணங்கவேண்டி.

முன் அணைந்த பதிகளும் இறைஞ்சி - இவை திருக்கொள்ளம்பூதூருக்கும் திருநள்ளாற்றுக்கும் இடையே பிள்ளையார் செல்லும் வழியில் உள்ளவை; இவை திருக்குடவாயில், திருவாஞ்சியம், திருவம்பர், திருப்புகலூர் முதலாயின என்பது கருதப்படும்.

நாற்றிசையும் பரவும் - கலி தொடர்வுற்ற மாக்கள் பலரும் எத்திசையினின்றும் போந்து வரங்கிடந்து கலிநீங்கப் பெறுதல் இன்றும் காணவுள்ள தன்மைக் குறிப்பு; திருப்புள்ளிருக்குவேளூர் ஸ்ரீ வைத்தியநாதர் கோயில்போல.

நாடுடை நாயகர் - இப்பதியின் சுவாமி பெயர். எல்லா நாடுகளிலும் வழிபாடு விளங்கும் நாயகர். சோழ நாட்டினிற்போலப், பாண்டிநாட்டினும் விளங்கி, அமணரது அனல்வாதத்தின்கட் போந்து அருளிய குறிப்பும் தருவது. 901

2800\. நீடுதிருத் தொண்டர்புடை சூழ வங்கண்
நித்திலயா னத்திடைநின் றிழிந்து சென்று
பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப்
பிறையணிந்த சென்னியார் மன்னுங் கோயில்
மாடுவலங் கொண்டுள்ளால் மகிழ்ந்து புக்கு
மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ள லாரைப்
"பாடகமேல் லடி"யெடுத்துப் பாடி நின்று
பரவினார் கண்ணருவி பாய்ந்து பாய. கூ0உ

(இ - ள்) நீடு...சென்று - நீடுகின்ற திருத்தொண்டர்கள் பக்கத்திற் சூழ்ந்துவர அவ்விடத்து முத்துச்சிவிகையினின்றும் இறங்கிப் போய்; பீடுடைய.....புக்கு - பெருமை பொருந்திய திருவாயிலினைப் பணிந்து உள்ளே புகுந்து; பிறையணிந்த......புக்கு - பிறையினைச் சூடிய சென்னியையுடைய இறைவர் நிலைபெற்று வீற்றிருக்கும் திருக்கோயிலின் உட்பக்கங்களில் வலமாக வந்து மகிழ்ச்சியுடனே உள்ளே புகுந்து; மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி - மலர்போன்ற கைகளைக் கூப்பி வணங்கி; வள்ளலாரை...பாய - வள்ளலாராகிய இறைவரைப் "பாடகமெல்லடி" என்று தொடங்கும் பதிகத்தைப் பாடியருளி நின்று கண்களினின்றும் கண்ணீர் அருவி பெருகத் துதித்தருளினார்

(வி - ரை) இத்திருப்பாட்டுப் பிள்ளையார் திருநள்ளாற்றிறைவரை வழிபட்ட சிறப்புக் கூறியது; 2798 போலக் காண்க. திருவாலவாயினில் அரச சபைமுன் உணர்முகமாகவே போந்தருளி யிருந்து துணைசெய்த பேரருட்டிறத்தினையே நினைந்த ஆராமையால் செய்த வழிபாடாதலின் இத்துணைச் சிறப்பும் விரித்தபடி; பதிகம் பார்க்க.

பாடக மெல்லடி - பதிக முதற்குறிப்பு

பரவுதல் - ஆலவாயின்கண் வந்தமாந்தருளிய அருட்பெருக்கினை ஒவ்வொரு திருப்பாட்டினும் மகுடமாகவே வைத்துப் போற்றுதல் பரவியவாறு மேற்பாட்டில் விரிக்கப்படுதல் காண்க.

பாடக மெல்லடி - "போகமார்த்த பூண்முலையாள்" என முற்பதிகத்திற் றொடங்கிப் போற்றிய வகையே, அத்திருப்பதிகம் வரைந்த ஏட்டினை முன்வைத்து மதுரையில் அரசன் முன்னர் அருளிய அத்திருப்பதிகத்திலும் "தளிரிள வளரொளி புமை" என்று தொடங்கியும், மீண்டும் இங்கும் அவ்வாறே "பாடக மெல்லடிப் பாவை" என்று தொடங்கியும் இவ்வாறு மூன்றுமுறையும் ஒன்றுபோலவே அருளிய குறிப்பு இங்கு இறைவரது அருட்சத்தியாரது வெளிப்பாடு குறித்தது: "மூலவினையவை குலவலின...இவை பழுதில" என்று காரணக் குறிப்பட அருளியதும் கருதுக.

வள்ளலாரை - சோணாட்டினின்று அமணர் வாதத்தினுள் பாண்டி நாட்டுழுல தாமே வெளிப்பட்டு வந்தருளிய வள்ளன்மை குறிப்பு; அமணர்களை நீக்கிச் சைவ விளக்கம் கண்டு பாண்டி நாட்டினின்றும் சோணாட்டுக்கு மீண்டருளிய பிள்ளையார், சோணாட்டில் அதுபற்றி நினைந்து சென்று தொழுத பதி இதுவேயாம். "நள்ளாறுடைய நம்பெருமான்! ஆலவாயின்கண் அமர்ந்தவாறு இது என்கொல்?" என்ற பதிகம் ஆளுடைய பிள்ளையாரது திருவுளக் குறிப்பினை விளக்குகின்றது, அதனை

விரித்து மேல்வரும் பாட்டில் ஆசிரியர் விளக்குதல் காண்க. "அன்புடையானை" (தேவா - 11). 902

## III - திருநள்ளாறும் திருவாலவாயும் (வினாவுரை)

திருச்சிற்றம்பலம் பண் - நட்டபாடை - 1-ம் திருமுறை

பாடக மெல்லடிப் பாவை யோடும் படுபிணக் காடிடம் பற்றி நின்று
நாடக மாடிநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல் சொல்லாய் ?
சூடக முன்கை மடந்தை மார்கள் துணைவரொ டுந்தொழு தேத்தி வாழ்த்த
ஆடக மாட நெருங்கு கூட லாலவா யின்க ணமர்ந்த வாறே ! (1)

அன்புடை யானை யரனைக் கூட லாலவாய் மேவிய தென்கொ லென்று
நன்பொனை நாதனை நள்ளாற் றானை நயம்பெறப் போற்றி நலங்கு லாவும்
பொன்புடை சூழ்தரு மாடக் காழிப் பூசுரன் ஞானசம் பந்தன் சொன்ன
இன்புடைப் பாடல்கள் பத்தும் வல்லா ரிமையவ ரேத்த விருப்பர் தாமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—2801-ல் ஆசிரியர் காட்டியருளுதல் காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பாடகம் - காலணி; சூடகம் - கைவளையணி; துணைவர் - கணவர் - நாயகர்; ஆடகம் - பொன்; ஆடகமாடம் - பொன் அணிந்த மேனிலை மாடங்கள்.—(2) நங்கள் - நங்களை; நம்மை; நாங்கள் எனறலுமாம்;—(3) புண்ணியவாணர் - உலக இன்ப ஏதுவாகிய புண்ணியம் புரிந்தோர்; மாதவர் - சிவபுண்ணியமாகிய பூசை புரிந்தோர்; தவம் - சிவபூசை; அண்ணலின் பாடல் - இறைவனது தன்மை பாடும் பாடல் - கீதம் முதலாயின; எடுக்கும் - மேலோங்கப் பாடும்;—(4) பூவின்கண் வாசம் போலவும், புனலில் பொற்பும் போலவும், சாந்தின் நாற்றம் போலவும், நாவினில் பாடல் போலவும் பிரிப்பின்றி உயிர்களுடன் கலந்து நின்ற - நம்பெருமான் என்றது குறிப்பு. வாசமும், பொற்பும், நாற்றமும், பாடலும் உடைய நள்ளாறு எனக் கூட்டியுரைத்தலுமாம். இப்பொருளில் புனலிற் பொற்பாவது நீர்ச் சிறப்பாலாவது; தேவர் முதலாயினோர் வந்து திருவாலவா யிறைவரை வழிபடு தல் குறிப்பு; புராண வரலாறுகள் பார்க்க;—(5) மாலையும்...பாட்டும் - இவை பூசைக்குரிய அங்கங்கள்; நம்பும் பெருமை - நம்பி வந்து உலகம் வழிபடும் பெருமை. நால் அம்புதங்களால் - என்க. நான்மாடக்கூடலான திருவிளையாடல் குறித்தது;—(6) போகமும் புண்ணியர் நின்னை மனத்துவைத்து நண்ணும் புணர்வு பூண்ட ஆக முடையவர் - போகங்களை நுகரும்போதும் அவற்றில் மூழ்கி மனமழிந்துபடாது உம்மையே மனத்துள் மறவாது வைத்து அவற்றுள் உடலளவாய்ச் சார்ந்து நிற்கும் பெரியோர்;—(7) பூவண மேனி இளையவர் - பூவின் வண்ணம் போன்ற மேனியினை யுடைய பெண்கள்; ஆவண வீதி - கடைவீதி;—(8) புலன்களை...செய்யும் - பொறிவழி வரும் ஐம்புலவின்பங்களை நீக்கி உள்ளத்தை அந்தக்கரணங்களுள் புந்தியின் வழிச் செலுத்தி உண்முகமான தியானத்தில் உறைத்து நிற்கும்; அலங்கல் நல்லார் - பெண்கள்;—(9) மணியொலி சங்கொலியோடு - இவை நித்தியத்திலும், மாமுரசின் ஒலி - இது நைமித்திகமாகிய திருவிழாச் சிறப்புக்களினும் நிகழ்வன. இவ் வேறுபாடு குறிக்க ஒடு உருபு கொடுத்துப் பிரித்தோதினர். இவ்விருவகை ஒலிகளும் என்றும் ஓவாது என்றது ஆண்டு முழுதினும் எல்லா மாதங்களினும் திருஆலவாயில் திருவிழா நிகழ்தல் ஒழியாதிருக்கும் தன்மை குறித்தது; மேல்வரும் பாட்டுப் பார்க்க.

The city of festivals என்பர் கவீனர்;—(10) நடுக்குற - அமணருடன் அனல்வாத நிகழ்ச்சிக் குறிப்பு. "நடுங்கி" னின்றிட்டார் (2685) என்றது காண்க. எடுக்கும் விழா - நிமித்தம்பற்றிச் செய்யப்படும் விழா; நைமித்திகம் என்ப. நன்னாள் விழா - நியதம் பற்றுச் செய்யப்படுவன; நித்தம் என்ப. பலி - இன்பு - பலியும், விழாவின் அங்கமான மகிழ்வுதரும் ஏனை அங்கங்களும். பலி - விழாவின் இன்றியமையாத பகுதி. "பலிவிழாப் பாடல்செய் பங்குனி உத்திரநாள்" (மயிலை - தேவா); எத்திசையும் அடுக்கும் பெருமை - விழாக் கண்டு சேவிக்க நாற்றிசையினின்றும் மக்கள் போதருதல் இன்றும் காணத்தகும் சிறப்பு;—(11) அன்புடையானை...போற்றி நலங்குலவும் - பதிகக் கருத்துங் குறிப்புமாம்; அரனை - நள்ளாற்றானைக் கூடல் - மேவியதென்கொலென்று - போற்றி என்று கூட்டுக. நள்ளாறுடைய நம்பெருமான்! கூடல் ஆலவாயின்கண் ஆனவாறு இது என்கொல் சொல்லாய் என இப்பதிக ஏனைப் பாட்டுக்களைக் கூட்டி முடிக்க.

தலவிசேடம்:—முன்னர் III பக் - ௬0௭ பார்க்க. சுவாமி பெயர் நாடுடை நாயகர் என்பது பதிகம் 2-வது பாட்டிற் காண்க. அதனை ஆசிரியர் 2799-ல் வைத்துக் காட்டியருளினர்.

2801. "தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதிற்
றீயின்க ணிடுமேடு பச்சை யாக்கி
யென்னுள்ளத் துணையாகி யால வாயி
லமர்ந்திருந்த வாறென்கொ லெந்தா!" யென்று
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவிப் போந்து
பண்பினிய தொண்டருட னங்கு வைகி,
மன்னுபுகழ்ப் பதிபிறவும் வணங்கச் சண்பை
வள்ளலார் நள்ளாறு வணங்கிச் செல்வார்; ௯0௩

2802. சீர்நிலவு திருத்தெளிச்சே ரியினைச் சேர்ந்து
சிவபெருமான் றனைப்பரவிச் செல்லும் போது
சார்வறியாச் சாக்கியர்தம் போதி மங்கை
சார்தலுமற் றதுவறிந்த சைவ ரெல்லாம்
ஆர்கலியின் கிளர்ச்சியெனச் சங்கு தாரை
யளவிறந்த பல்லியங்கண் முழக்கி யார்த்துப்
பாருலவு தனிக்காளஞ் சின்ன மெல்லாம்
"பரசமய கோளரிவந் தா"ரென் றூத. ௯0௪

2803. புல்லறிவிற் சாக்கியர்க ளறிந்தார் கூடிப்
புகலியர்தம் புரவலனார் புகுந்து தங்கள்
எல்லையினி லெழுந்தருளும் பொழுது தொண்ட
ரெடுத்தவார்ப் பொலியாலு மெதிர்முன் சென்று
மல்கியெழுந் திருச்சின்ன வொலிக ளாலு
மனங்கொண்ட பொறாமையினான் மருண்டு தங்கள்
கல்வியினின் மேம்பட்ட புத்த நந்தி
முதலான தேரர்க்குக் கனன்று சொன்னார். ௯0௫

2801. (இ - ள்) தென்னவர்கோன்...என்று - பாண்டியவரசன் முன்பு அமணர்கள் செய்த வாதத்திலே நெருப்பினிடை இடும் ஏட்டைப் பசசையாகச் செய்தும், எனது உள்ளத்தினுள் துணையாகியும் திருவாலவாயிலின்கண் வெளிப்பட வந்தெழுந்தருளி விரும்பியிருந்தவாறுதான என்ன அதிசயம்! எந்தையே! என்று நயம்பெறப் போற்றி கலந்துவாவி; பன்னு...வைகி - பன்முறையும் எடுத்துக் கூறும் தமிழ்த் தொடையாகிய திருப்பதிகத்தினைச் சாத்தித் துதித்துப் புறம்போந்தருளி அடிமைப் பண்பினால் இனிமை தருகின்ற திருத்தொண்டர்களுடனே கூடி அத்திருப்பதியில் தங்கியருளி; மன்னு புகழ்...செல்வார் - நிலைபெற்ற புகழினையுடைய பதிகள் பிறவற்றையும் வணங்கும் பொருட்டுச் சீகாழி வள்ளலாராகிய பிள்ளையார் திருநள்ளாற்றினை வணங்கி விடைகொண்டு செல்வாராகி; க௦௩

2802. (இ - ள்) சீர்நிலவு...போது - சிறப்புக்கள் நிலவியுள்ள திருத்தெளிச்சேரியினைச் சேர்ந்து சிவபெருமானைத் துதித்து மேலே செல்லும்போது; சார்வறியா...சார்தலும் - நற்சார்புணராத சாக்கியர்கள் தங்கும் போதிமங்கை என்ற ஊர் அணியதாக வருதலும்; மற்றது...ஊத - மற்றச் செய்தியை அறிந்த சைவர்கள் எல்லாரும், கடல் கிளர்ந்ததுபோலச் சங்கு-தாரை முதலிய அளவில்லாத பல இயங்களையும் முழக்கி ஒலித்து உலகு விளங்குமபடி எக்காளங்கள் திருச்சின்னங்கள் எல்லாவற்றையும் "பரசமய கோளரி வந்தான்" என்று ஊத; க௦௪

2803. (இ - ள்) புலலறிவில்...கூடி - புன்மையான அறிவுடைய சாக்கியர்களுள் அறிந்தவர்கள் சேர்ந்து; புகலியர்தம் . மருண்டு - சீகாழியவர்களது காவலராகிய பிள்ளையார் தமது ஊரின் எல்லையில் புகுந்து எழுந்தருளும்பொழுது திருத்தொண்டர்கள் எடுத்த சிவவொலிகளின் முழக்கத்தாலும், அவர்களின் எதிரே முன்னணியில் சென்று திரண்டு எழுந்து ஒலிக்கும் திருச்சின்னம் எக்காளம் என்ற இவற்றின் ஒலிகளாலும் தம் மனத்துள் மேற்கொண்ட பொறுமையினாலே மருட்சியடைந்து; தங்கள் சொன்னார் - தங்கள் சமயக் கல்வியினின் மேம்பட்ட புத்தநந்தி முதலாகிய புத்தர்களுக்கும் அச்செய்தியைக் கோபமுடனே சொன்னார்கள். க௦௫

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2801. (வி - ரை) "தென்னவர் கோன்..... எந்தாய்!" என்று - இது பிள்ளையாரது திருவுள்ளக் கருத்தாகிய பதிகக் குறிப்பு. பதிகமும் பதிகப் பாட்டுக் குறிப்பும் பார்க்க.

பச்சை ஆக்கி - உள்ளத்துணை ஆகி - பச்சை ஆக்கி - "நள்ளாறர் தம் நாமமே - எரியினில் இடில் இவை பழுதிலை மெய்ம்மையே" என்ற திருப்பதிக வாக்கின் மெய்ம்மையின் உள்ளே நின்று எரியில் அவ்வேடு வேவாது பச்சையாக விளங்க ஆக்கியது திருநள்ளாறரது அருளேயாம் என்றபடி. தற்போதமின்றிச் சிவனருளிய வழி நின்றநிலை. துணையாகி - ஆக்கச்சொல் இயல்பு குறித்தது.

எந்தாய் - "ஆளுடைய பிள்ளையாராய்" (1966) என்றபடி மகன்மை முறை குறித்தது.

பன்னுதல் - பலவாறும் பாராட்டிப் பேசுதல்; பதிகம் பார்க்க.

இனிய பண்புத் தொண்டர் - உடனுறைவின் பயன் தந்து இனிமை தரும் தன்மையுடையவர்கள் தொண்டர்கள்; "அன்பரொடு மரீஇ" (12 - சூ. போதம்).

வணங்கி - விடைகொண்டு நீங்கி மேற்செல்லும் வகையினால் வணங்கி.

நள்ளாறு வணங்கி - என்றதனால் பதியின் புறத்துச் சென்று பதியினை நோக்கி வணங்கி என்பதாம்.

செல்வார் - சேர்ந்து - செல்லும்போது - என மேற்பாட்டுடன் முடிக்க. 903

2802. (வி - ரை) சீர்நிலவு திருத்தெளிச்சேரி - சீர்நிலவுதலாவது சமண வாதமும் நிராகரிப்பும் அதன் மூலம் சைவ ஆக்கமும் திருவாலவாயில் நிகழ்ந்த சிறப்புப் போலப், புத்த வாதமும் நிராகரிப்பும் திருநீற்றின் ஆக்கமும் அந்தது நிகழ்தற்கு அணிமை காட்டிய சிறப்பினால் நிலைபெறுதல்.

செல்லும் என்றது மேலே செல்லுதல் குறித்தது.

சார்வு அறியா - சார்வாவது தாம் சார்தற்குரிய கற்சார்பு குறித்து நின்றது. "சார்புணர்ந்து சார்பு கெட" (குறள்)

போதிமங்கை - இது புத்தர்கள் நிறைந்த ஊராயிருந்தது. இப்போது சிவதலங்களுள் ஒன்றாயிருக்கின்றது. இது திருத்தெளிச்சேரியினின்றும் வடக்கில் காரைக்கால் தரங்கம்பாடி கற்சாலையில் ஒரு நாழிகையளவில் உள்ளது.

சார்தலும் - சென்று வழியிற் சேரக் கிடைத்தலும்

சைவர் - சிவசமபந்த ஒழுக்கத்துள்ளே நின்றது வாழ்பவர் என்றது குறிப்பு.

ஆர்கலியின் கிளர்ச்சி - கடல் பொங்கியெழும் முழக்கம்; ஆர்கலி - கடல்.

சங்கு தாரை அளவிறந்த பல்லியம் - முதலாகிய எண்ணிறந்த பல இயங்கள்; அளவிறந்த என்றது தொகைப் பெருக்கினையும், பல் என்றது வகையின் பன்மையினையும் குறித்தன.

சைவர் எல்லாம் - முழக்கி ஆர்த்து - சின்னம் எல்லாவற்றையும் - ஊத என்று முடிக்க.

முழக்குதல் - ஒலித்தல்; ஊதுதல் - பொருள் புலப்பட ஒலித்து மொழிதல்; ஆதலின் வேறுபிரித்தோதினார்.

தனிக்காளம் - சின்னம் - எல்லாம் - இவை இறைவரால் அருளப்பட்ட முத்துக்காளம், திருச்சின்னம் என்பவை. காளம் - எக்காளம்; சின்னம் - திருச்சின்னம் என்பர்; எல்லாம் - பலவும் ஒன்றுபோலவே.

பரசமய கோளரி - கோளரி - சிங்கம். கோளரி என்றதனால் பரசமயமாகிய மதயானைகளுக்கு என்று உரைகொள்க; ஏகதேச உருவகம் முன்னர் சமணரை வென்றி கொண்டதும், இனி இறுகுப் புத்தரை வென்றொழிக்க நின்றதுமாகிய நிலைகள் குறித்தது. கொள்கைகளை நிலையழிப்பவர் என்பது குறிப்பு.

சைவர் எல்லாம் - முழக்கி ஆர்த்து - ஊத - இவ்வாறு சைவர்கள் புறச்சமயத்தவரை மனம் புண்ணுறக்கவும் அன்றி வாதுக்கிழுக்கவும் கூடிய செயல்களைச் செய்தல் தகுதியாமோ? எனின், அற்றன்று, அவ்வாறு செய்யும் எண்ணம் சைவர்க்கு இல்லை என்க; புலவியோர் மேலோர்போலக் கிளம்புங்காலையில் அவர்களது மிக்கூர்ந்த அக்கிரமமாகிய செயல்களை அழித்து உலகரை அறிவுறுத்தி அவர்களை அவ்வவர்க்கேற்ற நிலையில் நிறுத்துதல் உலக நிலைபேற்றுக்கு உற்ற செயலாம், சைவத்துக்குப் புத்த சமணர்களால் விளைந்த தீச்செயல்கள் பல. அவற்றை நீக்கிச் சைவ ஆக்கத்தினைத் தேடுதல் சைவர்க்கு உற்ற செயலேயன்றித் தகாதென்று சொல்லுதல் யாங்ஙனம்? இனித் தமது ஆற்றல் உணராதாரிடத்தில் அதனை வேண்டும்போது வற்புறுத்துதலும் தக்கதே என்பர் புல்வாணர்; மேலும், எவர்க்கும் பொதுவாகிய ஊரவழியே செல்வோர்க்குத் தமதிச்சைவழிக் குற்றமற்றவைகளைச் சொல்லுதலுக்கும் தம இச்சைவழிச் செல்லுதலுக்கும் உரிமையுண்டு; இதனையே இந்நாளில் சுதந்தரம் என்பர். இனி, இவ்வுரிமை பாராட்டுமுகத்தால் இந்நாள் "நாகரிக" உலகில் எத்தனை கோரச் செயல்கள் நிகழ்கின்றன என்பதைக் கண்டுகொண்டிருப்போர் இவ்வாறு சமயச்சார்பு வருங்கால்மட்டும்

பிணங்கி வினவுதல் என்ன சால்பு என்பதும் சிந்திக்க. ஈண்டுச் சைவர் செய்த முழக் கம் நலமறியாப் புத்தரைத் தெருட்டி நல்வழிப்படுத்தும் உண்மையால் விதித்த நோக்கம் கொண்டது. இதற்குப் பயனும் அவ்வாறே விளைவதனையும் கருதுக. புத்தர்கள் நற்சார் புணர்ந்து உய்யும்படி திருவருள் விளைவாயிது என்பதும் கருதத்தக்கது. 905

2803. (வி - ரை) புல்லறிவிற் சாக்கியர்கள் - முன் "சார்வறியாச் சாக்கியர்" (2802) என்றார். அவர்கள் கொள்கைப்படி அறிவுதானும் கணபங்கமாயொழியு மாத லின் அக்குறிப்பும் பெற இவ்வாறு கூறியதும் கருதுக.

அறிந்தார் - பிள்ளையாரது எழுச்சியின் நிலையில் முன்கூறிய முழக்கங்களையும் பொருளையும் அறிந்தவர்.

எதிர்முன் சென்று - பிள்ளையார் எதிரே முன் அணியிற் சென்று; எதிர் என்றது சின்னம் காளம் முதலியவை ஒலிப்போர் தலைவர்க்குப் புறங் காட்டாது எதிர்முகமாக நின்று முழக்கும் மரபு குறித்தது; எதிர் - அவ்வாறு அறிந்தார் எதிரில் என்றுரைப் பாருமுண்டு.

திருச்சின்ன ஒலிகள் - திருச்சின்னம் எக்காளம் இவைகளில் பொருள் தரும் மொழிகளே தனித்தனி ஒலிக்கப்படுதலின் ஒலிகள் என்றார்; ஏனை இயங்களின் ஒலி அவ்வாறின்றிப் பொருளற்ற ஒலியாய்ச் சேர முழக்கப்படுதலின் அவற்றை ஒன்றாகத் திரட்டி ஆர்ப்பு ஒலியாலும் என ஒருமையிற் கூறினார். இது சாதியொருமை என் றலுமாம்.

மனங்கொண்ட பொறாமையினால் மருண்டு - மனங்கொண்ட - மனத்துள் எழுந்த. மருண்டு - மயக்கமடைந்து; பொறாமை - அழுக்காறு; "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத், தீயுழி யுய்த்து விடும்" (குறள்) என்ற பாட்டின் படிப்பினையைக் கருதுக. மருளுதல் - ஒன்றைப் பிறிதொன்றாக மயங்குதல்; "பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும், மருள்" (குறள்).

தங்கள் கல்வி - தமது சமயக் கோட்பாடுகளின் கல்வி

புத்தநந்தி - புத்தருட் சிறந்தோர் - தூறநதோர் - புனையும் பெயர் மரபு. "புத்தநந்தி யும்...முதலதாகிய பெயர்கொளர" (தேவா பண் - கொல்லி).

கனன்று சொன்னார் - சினமிக்கூறுதலினால் அமைதியாக நினைந்து உண்மையுணர மாட்டாதவராயினர் என்பது குறிப்பு "உள்ளங் கவர்ந்தெழுந் தோங்குசினம்"; மேல் "வெகுண்டு சொன்னான்" என்பதும் காண்க 905

## திருத்தெளிச்சேரி

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம் - 2 - ந் திருமுறை

பூவ லர்ந்தன கொண்டுமுப் போதும் பொற்கழல்
தேவர் வந்து வணங்கு மிகுதெளிச் சேரியீர்
மேவ ருந்தொழி லாளொடு கேழற்பின் வேடனாம்
பாவ கங்கொடு நின்றது போலு நம் பான்மையே. (1)

திக்கு லாம்பொழில் சூழ்தெளிச்சேரியெஞ் செல்வனை
மிக்க காழியுண் ஞானசம் பந்தன் விளம்பிய
தக்க பாடல்கள் பத்துமவல் லாக டட்டமுடித்
தொக்க வானவர் சூழ விருப்பவர் சொல்லிலே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—இறைவர் அம்மையுடன் வேடராய்ப் பன்றிப்பின் சென்றதும், எங்கும் பலிக்கு நடப்பதும், கங்கை சூடியதும் முதலிய பெருமைகளைத் துதித்தது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **தேவர் வந்து வணங்கும்** - 2-10-வது பாட்டுக்களும் பார்க்க. தேவர்களும் முனிவர்களும் வந்து வழிபடும் சிறப்புடைய தலம். **மேவருந் தொழிலாள்** - உமையம்மையார்; அருந்தொழிலாவது இறைவருடன் குண குணியாகக் கலந்திருந்து அருட்சத்தியாய் உலகுயிர்களைக் காத்தல்; தல அம்மை பெயர் சத்தியம்மை என்பது; **வேடனார் பாவகம்** - வேடராகிய வேடம். அருச்சனன் பொருட்டு வேடனாகச் சென்ற அருஞ்செயல் குறித்தது. "கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள், விரவு கொங்கை நற்றடம் படிந்தும்" (திருவா);—(2) **பத்திக்காக** என்க; **விளைத்தல்** - சரியையாதிகளால் பெருக்குதல். **ஐந்து பாணமும்** - "மலர் கீலம் கொல்லும்" என்ற தன்மையுடைய நீலமலர்ப் பாணத்தை உள்ளிட்ட ஐந்து பாணங்களையும் என் முற்றும்மை. எங்ஙனம் - ஐந்தும் எய்தும் அவற்றால் படாது அவனையும் காய்ந்தது எவ்வாறு? என்பது,—(3) **அம்படுத்த** - **அடுத்த** - போன்ற; உவமவுருபு கூர்மையோடு கூடிய அம்பு என்க,—(4) **கடல் முத்தம் கரைப் பெய்யும்** - இக்கரை கடற்கரை ஊர் என்பது. **வைப்பிடமின்றியே** - வைக்கத்தக்க இடம் வேறின்றி; "சேவடிகள் இரண்டும் வைப்பிடமின்றியே" (திருவா);—(5) **வேணவவே** - வேண்டும் பொருட்டு;—(6) **கைப்பிற் காய்ந்ததே எங்ஙனம்** - படையொன்றுமின்றி என்பது குறிப்பு;—(7) **கோடு** - கொம்புகள்; கிளைகள்; **சேடு** - சிறப்பு; **தோடு** - மலரிதழ்,—(8) **வித்தகப் படை** - மந்திரப் படைகள்;—(9) **கால்** - காற்று; **காலெடுத்த** - காற்றின் வேகத்தால் மேலே கிளப்பப்பட்டு ஊதிய;—(10) **மறையோர்** - வேத விதிப்படி பூசிப்போர்; **தவத்தவர்** - ஆகமப்படி சிவபூசை புரிவோர்; **செந்து** - பண்; **வெந்தல்** - மனத்தீமை யுடையோர், **வெயினிறல்** - பாறை கிடத்தல் முதலியவாற்றால் வெந்த - காய்ந்த - உடலுடையோர்; சமண புத்தர்கள். **தந் திறம் நீக்குவித்தீர் ஓர் சதிரரே** - சமணரை வென்றதும் அணிமையில் புத்தரை வெல்ல நிற்பதுமாகிய சரித நிகழ்ச்சிகளின் அகச்சான்று. **சதிரர்** - சதிரப்பாடு உடையவர்;—(11) **நடமுடித் தோக்க வானவர்** - முடிசூடிய தேவ அரசன் முதலாயினோர்.

**தலவிசேடம்** :—**திருத்தெளிச்சேரி** - காவிரித் தென்கரையிற் பாடல் பெற்ற பதிகளுள் 50-வது பதி. கோயிற்பத்து என வழங்கப்படும். மேற்குப் பார்த்த சந்நிதி; பங்குனி மாதத்தில் சூரியபூசை நிகழ்வது, தேவர் முனிவர் வந்து வழிபடும் சிறப்பு பதிகத்துக் காண்க. இதன் அணிமையில் உள்ள போதிமங்கை என்னும் புத்தர் ஊரின் பக்கம் அவர்கள் ஆளுடைய பிள்ளையாரது திருக்கூட்டம் செல்வதைத் தடுத்த போது சம்பந்த சரணாலயர் "புத்தர் சமண்கழுக் கையர்" என்ற பதிகம் ஓதின அளவில் அவர்களுடைய தலைவனான புத்தநந்தி தலையில் இடிவிழுந்து இறந்தான். பின்னர் சாரிபுத்தனைத் தலைவனாகக் கொண்டு சமய வாதத்தினை ஏற்று வந்த புத்தர்களை அடுத்துள்ள சத்திர மண்டபத்தில் பிள்ளையார் திருமுன்பு சம்பந்த சரணாலயர் வாதில் வென்று அவர்களைச் சைவர்களாக ஆக்கி உய்வித்தனர். சுவாமி - பார்ப்பதீச்சுரர்; அம்மை - சத்தியம்மை, "மேவருந் தொழிலாள்" என்பது பதிகம்; பதிகம் 1.

இது இப்போது காரைக்கோயில் பத்து, எனப்படும் புறையாறு ரோட் என்ற நிலையத்தினின்றும் வடமேற்கில் ஒரு நாழிகை யளவில் உள்ளது, காரைக்காலில் மாம்பழ ஈசுவரர் கோயில் உள்ள தெருவில் ஒரு கோடியில் உள்ளது.

**2804.** மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளை யார்முன்
வருசின்னப் பெருகொலியு மன்னுந் தொண்டர்
பொற்புடைய வார்ப்பொலியுஞ் செவியி னூடு
புடைத்தநா ராசமெனப் புக்க போது
செற்றமிகு முள்ளத்துப் புத்த நந்தி
செயிர்த்தெழுந்து தேராகுழாஞ் சூழச் சென்று
"வெற்றிபுனை சின்னங்கள் வாதி லெம்மை
வென்றன்றோ பிடிப்ப"தென வெகுண்டு சொன்னான். ௯௦௬

(இ - ள்) மற்றவர்கள்...புக்கபோது - மற்று அவர்களுடைய கொடிய சொல்லும், அப்பொழுதே பிள்ளையார் முன்பு வருகின்ற திருச்சின்னங்களின் பெருகிய ஒலியும் நிலைபெற்ற திருத்தொண்டர்களுடைய அழகிய ஆரவாரத்தினால் உண்டாகும் ஒலியும்கூடி ஒருசேர வந்து தனது காதினுள் காய்ச்சி அடித்த இரும்புச் சலாகைபோலப் புகுந்த போது; செற்றமிகும்...சென்ற - கோபம் மிகும் உள்ளத்தினை உடைய புத்தநந்தி மேலும் மிகச்சினந்து எழுந்து புத்தர் கூட்டம் தன்னைச் சூழ்ந்து வர அத்திருக்கூட்டத்தினிடையே போய்; வெற்றிபுனை ..சொன்னான - "வெற்றிக் குறிகுறியாக முழக்கப்படும் சின்னங்கள் எம்மை வாதத்தில் வென்ற பின்னரன்றோ பிடித்தல் வேண்டும்" என்று கடுமையாகக் கோபித்துச் சொன்னான்.

(வி - ரை) மற்றவர்கள் - மற்று - முன் கூறிய "சாக்கியாக ளறிந்தார்" (2803) என்ற குறிப்பில் வந்தது; தமது தலைவனாகிய அந்தப் புத்தநந்திக்கு ஆக்கந்தேடாது, இவர்களது ஏவுதலினால் சிறிது நேரத்தில் இறந்துபாடாகிய அழிவுதேடித்தருகின்றாராதலின் மற்றவர்கள் - ஆத்தரல்லாதவர் - என்ற குறிப்புமபடக் கூறினார்.

உரையும் - பெருகொலியும் - ஆர்ப்பொலியும் - (ஒருசேரப்) புக்கபோது - என்று கூட்டுக. உரை - சாக்கியர் கன்னறு சொல்லிய உரை; மேல்வரு மிரண்டும் ஒருசார்பின ஆதலின ஒலி என்ற சதத்தத்தாற கூறினார்.

பொற்புடைய ஆர்ப்பு ஒலி - பிள்ளையார் திருநாமங்களையும், சிவநாமங்களையும் முழக்கியும் பிள்ளையாரது புகழ்களை எடுத்துக் கூறி முழக்கியும் வருதலால் பொற்புடைய என்றார்; பொற்பு - மொழியாற் குறிக்கப்படும் பொருளின் செம்மை.

செவியினூடு புடைத்த நாராசமெனப் புக்கபோது - வெவ்வுரையால் செவியினூடு துன்பம் புகவும், இவ்வொலிகள் அத்துன்பினை மேலும் கொடுந்துன்பம் விளைக்கவும் இவ்வாறு ஒருங்கே இருவகையாய் நிகழ்ந்த துன்பினைக் கூறுவார் நாராசமென வாளா கூறாது புடைத்த நாராசமென இருவகைத் துன்ப ஏதுக் கூறி உவமித்தார்; வினைபற்றி வந்த உவமம். புடைத்தல் - காய்ச்சி அடித்தல்; மிகக வெப்பமும் கூர்மையுமாய்த் துன்பத்துக்கு இரண்டு காரணம் கண்டபடி; "எறிவேல் பாய்ந்த, புண்ணிலாம் பெரும்புழையிற் கனலுழைந்தா லெனச்செவியிற் புகுத லோடும்" எனக் கம்பன் இக்கருத்தைப் பற்றிய இவ்வுவமத்தையே மேற்கொண்டு விரித்தல் காண்க. "நெருப்பு நுனையுறீஇச் சுடுநா ராசஞ், செவிசெறித் தாங்கு" - (பெருங்கதை - க. 47 237 - 238)

செற்றமிகும் உள்ளம் - செயிர்த்தெழுந்து வெகுண்டு சொன்னான் - என்று மும்முறையும் விரித்தல் மூண்டெழுந்த நிலை குறித்தது. செற்றமிகுதல் அவனது உள்ளத்தின் இயல்பாகிய நிலையினையும், செயிர்த்தெழுதல் உரையாலும் ஒலிகளின் கேள்வியாலும்

சினம் உள்ளத்தில் விளைந்த நிலையினையும்; வெருண்டு சொல்லுதல் அம்முட்சி பிறர்பாற் சென்ற நிலையினையும் குறித்தன ஆதலின் கூறியது கூறலன்மை யுணர்க.

சென்று - பிள்ளையாரது திருக்கூட்டத்தின் முன்னணியில் வரும் திருச்சின்ன மொலிப்போரும் திருத்தொண்டர்களும் ஆகிய இவர்பாற் சென்று.

வெற்றி...பிடிப்பது என - எம்மோடு வாதில் வெற்றிபெறு நிலையில் பிடிக்கலாகாது என விலக்கினான் - முழக்கத்தைத் தடுத்தான் என்பது; மேற்பாட்டில் "விலக்குங் காலை" (2805) என்பது காண்க.

வென்றன்றே பிடிப்பது - வென்றல்லாமல் பிடிக்கத்தகாது என்பது எச்சம்; ஓகாரம் எதிர்மறை.

வெற்றிபுனை சின்னங்கள் - "பரசமய கோளரி" என்று புறச்சமயங்களை வென்ற வெற்றியைக் கூறும் சின்னங்கள்.

எம்மை வென்றன்றே - அமணரை முக்காலும் வென்றது பரசமயங்களை யெல்லாம் வென்றதாம்; அவ்வாறு கொள்ளாது புறச்சமயி ஒவ்வொருவனும் தன்னைத் தனித்தனி வெல்லல் வேண்டுமென்று ஆர்த்தல் மதியீனம் என்பார் புல்லறிவிற் சாக்கியர் - சார்வறியாச் சாக்கியர்கள் என்றார். 906

2805. புத்தரினம் புடைசூழப் புத்த நந்தி
பொருவில்ஞானப் புனிதர் திருமுன் பூதும
மெய்த்தவிறற் சின்னங்கள் விலக்குங் காலை
வெருண்டெழுந்த திருத்தொண்டர் வெறுத்து நோக்கி
"இத்தகைய செயற்கிவரைத் தடிதல் செய்யா
திதுபொறுக்கிற் றங்கணிலை யேறப்" பென்று
முத்துநிரைச் சிவிகையின்மேன் மணியை வந்து
முறைபணிந்து புகுந்தபடி மொழிந்து நின்றார். கூ௦எ

(இ - ள்) புத்தரினம்...காலை - புத்தர் கூட்டம் தன்னைச் சூழ்ந்து வரப் புத்தநந்தி ஒப்பற்ற ஞானத்தினை உடைய தூய பிள்ளையாரது திருமுன்பு ஊதப்பெற்ற உண்மைத் திறம் பெற்ற திருச்சின்னங்களை விலக்கிய பொழுது; வெருண்டெழுந்த...நோக்கி - சினந்து எழுந்த திருத்தொண்டர்கள் அவனுடைய செய்கையினை வெறுத்துப்பார்த்து; இத்தகைய ..என்று - இவ்வாறு செய்யும் கொடுஞ் செயலுக்கு இவர்களைத் தண்டிக்காமல் இதனைப் பொறுத்துக்கொண்டு செல்வோமாகில் தங்கள் நிலையினையே மேலும் கொண்டுபூவார்கள் என்று உட்கொண்டு; முத்து...நின்றார் - முத்துக்களின் வரிசைபட்ட உள்ள சிவிகையின்மேல் எழுந்தருளிய மணியாகிய பிள்ளையாரிடம் வந்து அவரை முறையின்றெழுது நேர்ந்த வண்ணங்களைச் சொல்லி நின்றார்கள்.

(வி - ரை) பொருவில் ஞானப் புனிதர் - பொருவில்ல ஞானமாவது சிவஞானம் (1967); புனிதர் - இகலும் பரமுமின்றிக் கருணையே உருவமானவர், இதுவே அகத்தூய்மைக் கியல்பாதலின் புனிதர் - அகத்தூய்மை குறித்தது; முன்னர் நிகழ்ந்த சமண வாதமும், இனிவரும் புத்தவாத முதலியனவும் புறச் சமயிகள்பால் கொண்ட இகல்பற்றியேனும், சைவர்கள்பால் வைத்த விருப்புப்பற்றியேனும் உள்ளனவல்ல என்பதும், உண்மைநிலை காட்டி உலகை உய்விக்கும் பொருட்டேயாம் என்பதும் உணர்த்தியவாறு.

ஊதும் - ஊதப்படும்; செயப்பாட்டுவினை செய்வினையாய் நின்றது.

**மெய்த்த விறற் சின்னங்கள்** - மெய்யனாகிய இறைவன் தந்தவை என்றும், போலியாகிய பொய்ப் புகழ்களைக் கூறாது பொருவில ஞானத் தலைவரது உண்மைப் பொருள்சேர் புகழ்ப்பற்றிய திறங்களையே கூறுபவை என்றும் உரைக்க நின்றது; கூறும் பொருள்களின் உண்மைத் திறமும், உடையாரது திறமும் கருவியின் மேல் ஏற்றப்பட்டன; **விறல்** - இவை ஊதப்பட்ட செயலாலே இனி அடுத்த நிலையில் இடி வீழ்ந்து இவற்றைத் தடுத்தவன் தலையிழக்க நேரும் நெறிபிறழாத வலிமை குறித்தது.

**இத்தகைய...என்று** - சைவத் திறம் எப்போதும் பொறுமையும் கருணையுமே மேற்கொண்டதொன் றென்பதும், ஆயின் அதன் நிலை புறச்சமயிகளால் ஆக்கிரமிக்கப் பட்டுத் தடையுண்டபோது அவ்விடையூறறினைத் தண்டமூலம் விலக்க முற்படுவதில் பின்வாங்காத வீரமுடையதொன் றெனபதும் குறித்தது.

**தங்கள் நிலை ஏற்பர்** - நீதி நெறியில் தம்மளவில்நின் றமைவுபடாது மீச்சென்று உண்மைக்கு மாறான செயல்களைத் தாம் நினைந்த நினைந்தவாறே ஆக்கிரமித்துச் செய்து செல்வார்.

**புகுந்தபடி** - நிகழ்ந்தன வற்றை நிகழ்ந்தவாறே. **புகுந்த** - தமது செல்லுகையில் இடையே தடையாக வந்து புகுந்த என்றலுமாம். 907

2806. "வருமிடத்தி லழகிதா நமக்கு வாதில
மற்றிவர் தம் பொருணிலைமை மறுத்த வண்ணம்
பொருமிடத்தி லறிகின்றோம் புத்த நந்தி
பொய்ம்மேற்கோ" ளெனப்புகலி வேந்தர் கூற
வருமுறைசொற் றிருப்பதிக மெழுது மன்ப
ராளுடைய பிள்ளையார் திருவாக் காலே
"உருமிடித்து விழப்புத்த னுத்த மாங்க
முருணவீழ" கெனப்பொறா வுரைமுன் விட்டார். கூ0அ

(இ - ள்) **வருமிடத்தில அழகு இதாம்** - வருகின்ற இடத்திலே இது மாறு கோளாவதன்றி நமக்கு அழகேயாம்; **மற்றிவர் தம்...கூற** - மாறுகொண்ட இவர் களது பொருள் நிச்சயம் மறுக்க முடியாதபடி, பொருகின்ற இடத்தில் புத்தநந்தியின் பொய்யினை மேற்கொண்டு வரும் கொள்கையின் நிலையினை உள்ளபடி காட்டுவோம் என்று புகலி காவலராகிய பிள்ளையார் சொல்ல; **அருமுறை...விட்டார்** - அரிய திருமுறைகளாகிய சொற்றிருப்பதிகங்களை எழுதும் நியதியுடைய ஆளுடைய பிள்ளை யாரது திருவாக்கின் ஆணையாலே "புத்தநந்தியினது தலையானது இடி வீழ்தலினால் உருண்டு வீழக் கடவது" என்று பொறுக்கமாட்டாத சொல்லை முன்னே சொல்லி விட்டனர்.

(வி - ரை) **வருமிடத்தில் நமக்கு இது அழகாம்** - என்க. **அழகு** - வெகுளலும் வெறுத்தலுமின்றி அழகிதாகக் கொள்ளத்தக்கதொன் றென்றதாம்; **வருமிடம்** - நாம் சென்று தேடாது, செல்லும் வழியிலே. இடையிட்ட இது, திருவருளால் வந்த தென்பதும், திருவருள் எவ்வழியானும் செலுத்துவனவெல்லாம் நன்மையே என்பதும் குறிப்பு. **அழகு** - நியதியின் அமைதி:

**மற்று இவர்தம் பொருள் நிலைமை** - மாறுபட்டு எழுந்து கூறும் இவர்கொள்ளும் பொருள் நிச்சயத்தின் தன்மை.

மறுத வண்ணம் - அவர்கள்தாமும் வேறு மாறுபட்டுப் பேசும் பேச்சின்றி ஒப்பும்படி; "வாதமா ரென்றினித் தோற்றான புத்தன்" (2822); மேலும் மெய்த் திறங்களை மறுத்து எழாதவண்ணம் என்றலுமாம்.

பொருள் மேற்கோள் - பொருள் நிலைமை - மறுத வண்ணம் - அறிகின்றோம் - என்று கூட்டுக.

அறிகின்றோம் - காண்கின்றோம் - அவர்கள் கொண்ட பொருள் நிச்சயம் பொருளன்றும்படியினை வெளிப்படுத்துமாறு கண்டு காட்டுகின்றோம் என்றதாம்.

அருமறைசொல் திருப்பதிகம் எழுதும் அன்பர் - அரிய மறையாகிய பிள்ளையார் சொல்லும் திருப்பதிகங்களை அவ்வப்போதே உடனிருந்து எழுதிக்கொண்டும் அத் திருமுறைச் சுவடியினை ஏந்திக்கொண்டும் வரும் அன்பர். இவர் சம்பந்த சரணாலயர் எனப் பெயர் பூண்டவர் என்றும் இவர் பிள்ளையாரது சுலம்மாளுவர் என்றும் கூறுவர். இவ்வாறு பிள்ளையாரது பதிகங்கள் அவ்வப்போது உடனிருந்து எழுதிவரப்பட்டன என்பதும், அத்திருமுறை பிள்ளையாருடனே எழுந்தருளச்செய்து உடன் கொண்டு வரப்பெற்றன என்பதும், முன் "திருப்பதிக நன்முறையினை" (2679) என்றவிடத்துக் குறிக்கப்பட்டன. வருமறை என்று பாடங்கொள்ளின் அருளின்வழி வரும் எனக.

பிள்ளையார் திருவாக்காலே - உரை முன் விட்டார் - திருவாக்கினையே ஆணையாகக் கொண்டு படையாக முன் விடுத்தனர். விட்டார் - அம்பு விடுதல்போல எனக. உரை - உரையாகிய "அத்திரம்" என்பதாம், பொறு உரை-புத்தர் கூறிய சைவ நிந்தையும் அடியார் நிந்தையும் மறைக் கணிந்தனையும் பொறுக்கலாற்றாமையாலே அவ்வாறு வெவ்விய உரை விடுத்தனர் என்பது கருணை கொண்ட அன்பர் கொடியவுரை விடுதற்குப் புத்தர் செய்த சிவாபசாரமே காரணம் என்றபடி.

உத்தமாங்கம் - உடம்பில் உயர்ந்த அங்கமாகிய தலை.

பிள்ளையார் திருவாக்கு - இது "புத்தர் சமண்கழுக் கையர்" (பஞ்சாக்கரப் பதிகம் - 10) என்ற திருப்பாட்டு என்ப. அதனுள் "வித்தக நீறணிவார் வினைப் பகைக்கு, அத்திர மாவன அஞ்செ ழுத்துமே" என்ற பகுதி அத்திரத்தை அடக்கி நிற்றல் காண்க. "அத்திரவாக்கு எத்தல" (28(...))

"உரும் இடிந்து விழ - உத்தமாங்கம் உருண்டு வீழ்" என - உரும் - இடி; விழ வீழ்க - விழுதலினால் தலை அறுபட்டுக் கீழே வீழ்க. சிவாபராதமானது இவ்வாறு தண்டித்தற்குத் தூய்மை செய்யற்பாலதென்பது வீரபத்திரக் கடவுள் செய்த தக்கயாக சங்காரநிகழ்ச்சிகளுள் சிவநிந்தை செய்த தக்கனது தலை அறுபட்ட வரலாற்றானும், அதனைத் "தூய்மைகள் செய்தவா" (திருவா - தோணோ - 11) என்று மணிவாசகப் பெருமானார் போற்றியருளியதனானும் காண்க. சிவனுக்கு ஏசாத்தும் பூவைச் சிதறிய பிழைக்காக யானையையும், அதனை விலக்காத குற்றத்துக்காகப் பாகர் ஐவரையும் கொன்றகின்ற எறிபத்தரை, அன்பர் என்று கண்டபோது "அன்பராம் குணத்தின் மிக்கார், பிழைபடி னன்றிக் கொல்லார், பிழைத்ததுண் டென்றுட் கொண்டு" (587) புகழ்ச்சோழர் போற்றிச் செயல் செய்ததனையும் இங்குக் கருதத்தக்கது. சமயநீதியேனும், உலகநீதியேனும் அல்லது வேறெந்த நீதியேனும் ஒன்றும் பற்றாது மண்ணாசையாகிய பேயினால் கோட்பட்டுக் கோடிக்கணக்கான மக்களையும், பிறவுயிர்களையும் கொல்லும் "நாகரிக"! உலகத்தை வாழ்வாக எண்ணும் மாக்கள் இவ்வுண்மைகளைத் தெளிந்து இவ்வரலாறுகளைப் பற்றித் தாம் செய்யும், சிவநிந்தை முதலிய பிதற்றல்களை விட்டு உய்திபெற முயல்வார்களாயின், நலம் தரும்.

அருமறைச்சோல்—என்பதும் பாடம். 908

2807. ஏறுயர்த்தார் சைவநெறி யாணை யுய்க்க,
வெதிர்விலக்கு மிடையூற்றை யெறிந்து நீக்கும்
மாறில்வலி மந்திரமா மசனி போல
வாய்மையுரைத் திருத்தொண்டர் வாக்கி னாலே
வேறுமொழிப் போரேறபான் வந்த புத்தன்
மேனியையுந் தலையினையும் வெவ்வே றாகிக்
கூறுபட நூறியிடப் புத்தர் கூட்டங்
குலைந்தோடி விழுந்துவெருக் கொண்ட தன்றே. ௯௦௯

(இ - ள்) ஏறுயர்த்தார்...உய்க்க - இடபத்தை உயர்த்த இறைவரது சைவநெறியின் வந்த திருவாணையினைச் செலுத்தியிட; எதிர்விலக்கும் ..போல - சிவபூசையில் எதிர்ப்பட்டு அப்பூசையினை விலக்கவரும் இடையூற்றினை அழித்து நீக்குகின்ற தடுக்கலாகாத வலிமையுடைய சிவாதந்திரமாகிய இடியினைப்போல; வாய்மை...வாக்கினாலே - வாய்மையுரையினை உட்கொண்டெழுந்த திருத்தொண்டர் வாக்கினாலே; வேறுமொழி . நூறியிட - வேறுபட்ட மொழிகளாற் செய்யும் போரினை மேற்கொண்டு வந்த புத்தநந்தியின் உடம்பையும் தலையையும் வெவ்வேறுபட இருகூறாக்கிச் சிதைவுபடுத்த; புத்தர் கூட்டம்...அன்றே - அப்போதே புத்தர்களது கூட்டம் சதுதியிற் பயந்து ஓடித் திகைத்திட்டு நடுங்கியது.

(வி - ரை) சைவ நெறி ஆணை - இகல முதலானவற்றாலணறிச் சைவநெறியின் விதிப்படி இட்ட ஆணை; உய்த்தல் - செலுத்துதல்; முனபாட்டிற் கூறியவை நினைவு கூர்க.

எதிர் விலக்கும் இடையூறு - சிவபூசை செய்யவொட்டாது மேலும் நடுவும் கீழுமாகிய மூவுலகங்களினின்றும் மூன்று வகையாலும் வரக்கடவனவாகிய இடையூறுகளை. ‘ நல்ல காரியத்துக்கு நானூறு இடைஞ்சல்’’ என்ற பழமொழிப்படிச் சிவபூசைக்குப் பற்பலவாற்றானும் இடையூறுகள் வருதல் இவ்வுலகிற் கண்கூடாகக் காணப்படும் உண்மை. “ பேரின்ப முதலியப பூமியி லிருந்துகாண, வெதத்தனை விகாதம்வருமென் றுசுகா சென்றநெறி ” (தாயுமா).

எறிந்து நீக்கும் - எறிதல் - எதிரத தழிவுபடுத்தல்.

மந்திரமாம் அசனி - சிவாதந்திர மகா மந்திரமாகிய இடியேறு; மாறில் வலி - எனறா எஞ்ஞான்றும் எவ்வாற்றானும் பிழைபடாத வலிமையுடைமை காட்டுதற்கு. சிவாதந்திர வலிமை பற்றி கந்தபுராணம் - பாரதம் - இராமாயணம் முதலியவற்றின் வரலாறுகளும் பார்க்க.

எதிர் விலக்கும் - மந்திரமாம் அசனிபோல - ஆகமங்களில் வகுத்த சிவபூசை முறையில் மேல்-நடு-கீழ் என்ற மூன்று பக்கங்களினின்றும் பூசைக்கு இடையூறாய் வரும் விக்கினங்களை இடியேறுபோலத் தவறாது விலக்கும் அத்திரமந்திரத்தாலே போக்கிப் பூசை தொடங்குக என்ற விதி இங்கு உவமிக்கப்பட்டது. மாறில்வலி மந்திரம் - சிவாதந்திர மந்திரம். இதற்குரிய பாவனை கிரியை மந்திரங்களை அனுபவம்வல்ல தேசிகர்பால் கேட்டுணர்க. அசனி - இடியேறு.

வாய்மையுரைத் திருத்தொண்டர் வாக்கினாலே - வாய்மையுரை - பிள்ளையார் திருவாக்காகிய “அத்திரமாவன” என்ற தேவாரம். திருத்தொண்டர் வாக்கு - அதனை

**பிள்ளையார் தமக்குச் சென்று விண்ணப்பஞ் செய** - அன்பா வாககினால் இடி வீழ்ந்து புத்தநந்தி தலையறபட்ட இடம், பிளளையாரது எழுச்சியின் முன்னணி; ஆண்டு ஊதிச் செல்லும் மெயததவிறற சின்னங்களையே முன்வநது புத்தநந்தி விலக்கினுதை லின (2805); பிள்ளையார் எழுநதருளி வரும சிவிகை, எழுச்சியின் பின்னணியில் நின்றதாதலின் இஙகுநின்றும அவவிடததுககுச சென்று விண்ணப்பித்தனா. "புத்தன் கூறும பொய்மேறகோளின் பொருணிலைமையினைப பொருமிடததி லறிகினறோம்" (2806) என்று பிளளையாா அருளினாரனறி வேறு கூறிறறிலர். ஆதலின் அன்பர் அத்திரவாககினால இடி வீழ்நது புததன் பட்ட செயல் தொண்டாகள் சென்று அவர்க்கு விண்ணபபிகக நின்றது.

"**எதிர்ந்த......ஓதுக**" என - "புத்தன மொழியினைப் பொருமிடத்தி லறிகின் றோம்" என்ற பிளளையாா, தாமும எணணாத வகையாலே இடி வீழ்நது புததனிறந்த தனைக் கேட்டபோது இது சிவசெயலால உறற விதியே என்று கொணடு சிவனை வழுததுக என்றருளினா

**எதிர்ந்த விலக்கு** - செல்லும இடைவழியில தானே வநது எதிாந்து மேறசெல் கையை விலககிய இடையூறு; விலக்கு - முன செலகையை விலககும செயல். **உற்ற விதி** - "நினையாது முனவநது நினறு" பொருநதிய சிவன விதியாகிய நியதி.

**விலக்கு நீங்க உற்ற விதி அதுவேயாம்** - மேற்கூறியபடி இவவிடத்துச சிவாகமங் களில் விதிககபபட்ட நியதியும் அதுவே எனற குறிபபுமாம.

**அர என்று எல்லாம் ஓதுக** - சிவனருள் வெளிபபட்டபோதெல்லாம சிவநாமங கூறி முழககி வாழததுதல சைவ மரபு.

**அவ்வொலி** - அவவாறு ஆணைப்படி ஓதபபட்ட அரநாம முழககமாகிய ஒலி; எல் லாம் அரவென்றோதினா எனபது இசையெச்சம்.

**வான் உற்றது** - அவ்வொலிப பரம்பரையால ஆகாயம நிறைய எழுந்து சென்றது. **இதுவேயாம்**—என்பதும் பாடம். 910

2809. அஞ்சியகன் றோடியவப் புதத ரெல்லா
மதிசயித்து மீண்டுமுட னணைநது கூடி,
"வஞ்சனையோ? விதுதான்மற் றவர்தஞ் சைவ,
வாய்மையோ?" வெனமருண்டு மனததிற கொளவார்
"எஞ்சலின்மந திரவாத மன்றி யெமமோ
டெதிர்ந்துபொருள் பேசுவதற் கிசைவ" தென்று
தஞ்செயலின் மிக்குளள சாரி புததன
றன்னையே முன்கொண்டு பின்னுஞ் சார்ந்தார். கூகக

(இ - ள்) **அஞ்சி...கூடி** - பயநது அவவிடததினினறும நீஙகி ஓடிய அந்தப புத தர்கள் எலலாரும அதிசயமடைந்து மீளவும் தமமுள் வநதணைந்து ஒன்றுகூடி; **வஞ் சனையோ...மருணடு** - அந்நிகழ்ச்சிதான வஞசனையால் விளைந்ததோ? அனறி மற்று அவர்களுடைய சைவ சமயத்தின் உண்மைத் திறத்தினால் விளைநததோ? என்று மன மருட்சியடைந்து; **மனத்திற் கொளவார்** - மனத்திலே எணணினார்களாகி; **எஞ் சலின்...என்று** - குறைவில்லாத மந்திர வாதத்தாலன்றி-மந்திரவாதத்தினிற் செல் லாது எமகளோடு எதிாத்து உணமைபபொருளிது எனறு பொருணிச்சயம் பேசி வாதம் செய்வதற்கு இசைவீர்களாக" என்று சொல்லி; **தம செயலின்...சார்ந்தார்** - தமது

சமயநிலைச் செயலில் மிக வன்மையுடைய சாரிபுத்தன் என்பவனையே தலைவனாக முன் வைத்துக்கொண்டு பின்னும் வந்து சார்ந்தார்கள்.

(வி - ரை) அதிசயித்து - "அதிசயம் கண்டாமே" (திருவா) என்றபடி நேரிற் கண்டார்களாதலின் இனைத்தென் றறியாவகை அதிசயித்தார்கள்.

வஞ்சனையோ?...வாய்மையோ? என மருண்டு - இந்நிகழ்ச்சி இந்த இரண்டனுள் ஒருகாரணத்தால் நிகழ்ந்திருத்தல் வேண்டும்; அவற்றுள் இன்னதென்று துணிய மாட்டாமையின் மருண்டனர். இரண்டனுள் எவ்வகையாயினும் இது மந்திர வாதத்தின்பாற் பட்டதேயன்றி வேறில்லை எனக் கொண்டு, அவ்வாறு மந்திர வாதம் செய்யாது பொருள் பேசி நிச்சயிக்கும் வாகின வாதம வேண்டுவோம் என நிச்சயித்து அதனை வேண்டினர் என்க. இசைவது - இசைவீராக என்று சொல்லி.

தஞ்செயல் - தம சமய நூல அறிவும் தொழிலும். ஒடி அவப்புத்தர் - அவம் - தவமல்லாதது - என்று பிரித்துரைக்கவும நின்றது; (வ. சு. செ.)

உடன் அணைந்து கூடி என்றதனால முன சிதறுண்டமை பெறப்படும்.

சாரிபுத்தன் - புத்தநாகதி இறநத பினனர் அப் புதநா தமது தலைவனாகக்கொணட புத்தனுடைய பெயா.

முன்கொண்டு பின்னும் - முனவரினும பினனடையவே-தோல்வியுறவே-செல்கின்றார் என்பது குறிபபு.

எஞ்சலில் - எஞ்சுதல் - கெடுதல; குறைதல பொயயாத - குறிதவறாத - மந்திர வாதம.

மந்திரவாதமன்றி - இபபோது நேரிற் கணடது பிழையாத மந்திரவாதம்; முன்னர்ச் சமணா பட்டதாகக கேட்டதும அவ்வாறே; ஆதலின் அதனைத் தவிர்த்துச் சமய வாதமாகிய வாகின் வாதத்தை ஏறறனா; அதனில தமமினு மிக்காரிலர் என்னும் துணிபினால் என்க. 911

2810. அத்தன்மை கேட்டருளிச சண்பை வநத
வடலேறு திருவுளளத "தழகி" தென்று
மெத்தமகிழ்ச் சிறப்போடும விரைநது சென்று,
வெணடாளச சிவிகையினின றிழிநது, வேறோர்
சததிரமண் டபததின்மிசை யேறி, நீடு
சைவருட னெழுந்தருளி யிருந்து, "சாரும
புததர்களை யழைக்க!" வெனத், திருமுன் னின்றார்
புகலிகா வலரேவல் போற்றிச் சென்றார். ௬௯௨

(இ - ள்) அததனமை...சென்று - அததனமையைக கேட்டருளிச் சீகாழியி லவதரிதத வலிமையுடைய சிஙகமபோனற பிளளையாா திருவுளளததில் இது அழகு என்று கொணடு மிக மகிழ்சசியோடும விரைவாகச சென்று; வெண்...இழிநது - வெள்ளிய முத்துச் சிவிகையினின்றும இறங்கி; வேறு ..ஏறி - பிறிது ஒரு சததிரத்தின் மண்டபத்தின்கண ஏறி; நீடு...இருந்து - நீடிய சைவர்களுடனே அமர்ந்து எழுந்தருளி வீற்றிருந்துகொணடு; சாரும்...என - முன சொனனபடி எதிர்த்து பொருள் பேசச் சார்கின்ற புததர்களை அழையுஙகள் என்று கூற; திருமுன்...சென்றார் - திருமுன்பு நின்ற தொண்டர்கள் சீகாழித தலைவரது ஏவலினைப போற்றி அவ்வாறு அழைத்தற்குச் சென்றனர்.

(வி - ரை) அந்நன்மை - அஞ்சி உடைந்து ஓடிய புத்தர்கள் மீண்டு சாரிபுத்த னைத் தலைமைகொண்டு சமய வாதத்தினை மேற்கொண்டு வந்த தன்மை.

அடல் ஏறு - மதங்கொண்ட யானைபோன்ற புறச்சமயிகளை வெல்லும் தன்மை பற்றிச் சிங்க ஏறு என்று உருவகித்தார்; ஏறு - ஆண்மைப் பொதுப் பெயராகக் கொள்ளினுமாம்.

"அழகிது" என்று - "அழகிதாம்" (2806) என முன்கூறியதற்கேற்ப மேற் கொண்டவாறு.

சத்திர மண்டபம் - வழியில் கண்டதொரு சத்திரத்தின் உள்ள மண்டபம்; வடக்கிருந்து கடற்கரையோரமாகத் தெற்கு இராமேச்சுரம் நோக்கிவரும் அவ்வழியில் யாத்திரிகர்கள் தங்குதற்குரிய பல சத்திரங்கள் முன்னாளிலிருந்தன. இக்காலில் இருப் புப் பாதைவழிப் பயணமாயினபின் அவை காவலற்றழிந்தன. இங்குப பிள்ளையார் எழுந் தருளியிருந்து அவர் முன்பு புத்தவாதம் நிகழ்த்தச் செய்து, சைவத்தாபனம் செய்தருளிய சத்திரம இடம் ஒன்றுமட்டில் கானபரம்பரை நினைவுகொண்டு காட்டப்படுகிறது.

சிவிகையினின் றிழிந்து - மண்டபத்தின்மிசை ஏறி - இழிந்து - ஏறி - என்று கவிநயமபட கூறினார். ஏறி - வெற்றிக குறிப்புப்பட நின்றது. "ஊக்க முடையா னொடுக்கம் பொருதகா, தாக்கற்குப பேருந் தகைத்து" (குறள்) என்ற குறிப்பும் காண்க.

சத்திரமண்டபத்தின்மிசை ஏறி . இருந்து - அழைக்க என - வாதம் நிகழ்த்திப் பேச ஏற்ற இடமும, பிற வாய்ப்புகளும கண்டு செயல செய்யும் வகை. 912

2811. சென்றவர்க டேரர்குழா மணைந்து "நீங்கள்
செப்பிவரும் பொருணிலைமை தெரிக்க வெங்கள்
வென்றிமழ விளங்களிறு சண்பை யாளி
வேதபா ரகன்மும்மைத் தமிழின் வேந்தன்
நன்றுமகிழ்ந் தழைக்கின்றார்; நீண்ட நீரும்
நண்ணு"மெனக் கூறுதலு நன்மை சாராத்
தன்றகைமைப் புத்தருடன் சாரி புத்தன்
சத்திரமண் டபமுன்பு சார வந்தான். ௯௧௩

(இ - ள்) சென்றவர்கள்...அணைந்து - முன் கூறியவாறு பிள்ளையாரது ஏவல் வழிச் சென்ற அவர்கள் புத்தர் கூட்டத்தை அடைந்து; நீங்கள்...நண்ணுமெனக் கூறுதலும் - நீங்கள் சொல்லிவருகின்ற பொருளின் உண்மைநிலையினைத் தெரிக்கும்படி எங்களுடைய வெற்றியுடைய இளங்களிறும், சண்பையாளியும், வேதத் தலைவரும், முத் தமிழரசரும் ஆகிய பிள்ளையார் நன்கு மகிழ்ந்து அழைக்கின்றார்; பொருந்தும்படி நீங்க ளும வாருங்கள்" என்று சொல்லுதலும்; (அது கேட்டு) நன்மை சாரா...சார வந் தான் - நன்மை நெறியினை (இதுவரை) சாராத தனனுடைய தன்மையினையே கொண்ட புத்தர்களுடனே கூடிச் சாரிபுத்தன் சத்திர மண்டபத்தின் முன்னே சார வந்தனன்.

(வி - ரை) செப்பி வரும் பொருள் நிலைமை - "எதிர்ந்து பொருள் பேசவுதற் கிசைவது" என்று சொல்லி வாதத்தினை மேற்கொண்டு வரும் உங்கள் சமய உண்மை யாகிய பொருளின் நிலைமை - தன்மை; தெரிக்க - தெரிவிக்க; சொல்ல,

**வென்றி...வேந்தன்** - வென்றி என்றதனால் இவ்வாதத்தில் வெற்றி எங்களுடையது என்றும், மழஇளங்களிறு என்றதனால் அவ்வெற்றி இன்பந் தருவதாம என்றும், **கன்னபெ ஆளி** - சமயப் பிணக்குடைய மதயானைகளை வெல்லும் தகுதியுடையவா எமது தலைவர் என்றும், வேதபாரகன் என்றதனால் நீங்கள் உடன்படாது நிந்தனை செய்துழலும் வேத ஒழுக்கங்களையே தாங்கிய மேம்பாடுடையவர் என்றும், **மும்மைத் தமிழின் வேந்தன்** - அவ் வேதவுண்மைகளையே முத்தமிழில் காட்டி உங்களை வெல்பவர் என்றும் குறிப்பித்தவாறு கண்டுகொள்க.

**நன்று மகிழ்ந் தழைக்கின்றான்** - நீங்கள் மனங் கொள்வதுபோலப் பொறாமை, இகல், அச்சம் முதலியவாறறானன்றி மிக்க மகிழ்ச்சியுடன் உங்களை வரவழைக்கின்றான் என்பது; இதனால் நீங்களும் நன்மை பெற உள்ளீர்கள் என்பது குறிப்பு (2828).

**ஈண்ட...நீங்ணும்** - ஈண்ட - என்பது விரைவுப் பொருள் தருவதோரிடைச் சொல்; "ஈண்ட நீ வருவாயோலம"; இதுவரையும் புறச் சமயிகளாகச் சேய்மையில் ஒதுங்கி நின்ற நீங்கள், இங்கு, இனி, இதன் இறுதியில் அணியாராகப் பொருந்தச் சேருங்கள் (2823 - 2824) என்பதும் குறிப்பு.

**நன்மை சாராப் புத்தருடன்** - சாரவந்தான் - நன்மை சாரா - இதுவரை நற்சார்பு இல்லாத; சார - இனி நற்சார்பு பொருந்த (2824) என்பது குறிப்பு. **சாரா** சாரிபுத்தன் சொல்லணி.

**வேதபாலகன்**—என்பதும் பாடம். 913

2812\. அங்கணைந்து மண்டபத்துப் புத்த ரோடும்
பிள்ளையா ருகணைய நின்ற போதில்,
எங்குநிகழ் திருச்சின்னந் தடுத்த புத்தன்
னிருஞ்சிரத்தைப் பொடியாக்கு மெதிரி லன்பர்
பொங்குபுகழ்ப் புகலிகா வலர்தம் பாதம்
போற்றியரு ளாற்சாரி புத்தன் றன்னை
"யுங்கடலை வனும்பொருளு முரைக்க!" வென்ன,
வுறறவா திளைமேறகொண் டுரைசெய் கின்றான், ௯௧௪

2813\. கற்பங்க ளனைத்தினிலும் பிறந்து வீந்து
கதிமாறுங் கணபங்க வியல்பு தன்னிற
பொற்புடைய தானமே தவமே தன்மை
புரிந்தநிலை யோகமே பொருந்தச் செய்து
வுற்பவிக்கு மொழிவின்றி யுரைத்த ஞானந்
தொழியாத பேரின்ப முத்தி பெற்றான
பற்பலரும் பிழைத்துய்ய வறமுன் சொன்ன
பான்மையான் யாங்கடொழும் பரம" னென்றான். ௯௧௫

தலைவன்- கடவுள்

2814\. என்றுரைத்த சாரிபுத்த னெதிர்வந் தேற்ற
விருந்தவத்துப் பெருந்தன்மை யன்பர் தாமும்
"நன்றுமது தலைவன்றான் பெற்றா னென்று
நாட்டுகின்ற முத்திதான் யாவ" தென்றா;

போருள்- முத்தி

"நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை
நேர்நின்ற ஞானமென நிகழ்ந்த வைந்தும்
ஒன்றியகந் தத்தவிவே முத்தி" யென்ன
வுரைசெய்தான் பிடகத்தி னுணர்வு மிக்கான். ௬௩௬

2812. (இ - ள்) அங்கு அணைந்து...போதில் - அவ்விடத்தில் அணைந்து சாரிபுத்தன் மண்டபத்திலே புத்தர்களுடனே கூடிய பிள்ளையாரருகில் அணைய நின்ற போதிலே; எங்கு நிகழ்...அன்பர் - எவ்விடத்தும் ஆணை செலுத்துகின்ற திருச் சின்னத்தைத் தடுத்த புத்தநந்தியின் பெரிய தலையினை அழிவுசெய்த ஒப்பற்ற அன்பராகிய சம்பந்த சரணாலயர்; பொங்கு...போற்றி - மேனமேல் பெருகும் புகழினை யுடைய சீகாழித் தலைவராகிய பிள்ளையாரது திருவடிகளைத் துதித்து; அருளால் - அவர் அருள் பெற்று (வாதத்திற் புகுவாராகி); சாரிபுத்தன்...என்ன - சாரிபுத்தன் தன்னை நோக்கி "உங்கள் தலைவனாகிய கடவுளையும் அவன் கூறும் பொருளாகிய முத்தியினையும் இன்னபடி எனப் பேசுவாயாக" என்று கூற; உற்ற...உரை செய் கின்றான் - பொருந்திய சமய வாதத்தினை மேற்கொண்டு சொல்கின்றவனாகி; ௬௩௪

2813. (இ - ள்) கற்பங்க ளெனைத்தினிலும்...தனனில - அளவிறந்தனவாகிய எல்லாக் கற்பங்களினும் அளவிறந்த யோனிகளிற் பிறந்தும் இறந்தும் அகத்தியினின் றும் மாறி வீடு பெறுகின்ற கணபங்க இயல்பு என்ற கொள்கை கூறும் புத்தசமயத்தில்; பொற்புடைய...செய்ய - அழகுடைய தானம்-தவம்-பண்பு மிகுந்த யோகம் என்னும் இவைகளைத் தான் பொருந்தும்படி செய்யவே; உற்பவிக்கும்...ஞானத்து - அதனா லுண்டாகும் நீங்குதலில்லாத நிலையினுற்ற சொன்ன ஞானத்தால்; ஒழியாத...பெற் றான் - கெடாத பேரின்பந் தரும் கந்தவீடு பெற்றவன்; பற்பலரும்...பான்மையான் - பலப்பலரும் பிறவித் துன்பத்தினின்றும் நீங்கி உய்யும் பொருட்டு அறங்களை முன்னே சொன்ன அருளுடையவன்; யாங்கள் தொழும் பரமன என்றான - அவனே நாங்கள் தொழுகின்ற கடவுளாவான் என்று சொன்னான். ௬௩௫

2814. (இ - ள்) என்றுரைத்த...தாமும் - இவ்வாறு தனது தலைவன் தன்மை பற்றி விடைகூறிய சாரிபுத்தன் முன்பு வாதத்தினை ஏற்றுநின்ற பெரிய தவத்தினையும் பெருந்தன்மையினையுமுடைய அன்பரும்; நன்றுமது...என்றார் - உமது தலைவன்தான் அடைந்தான் என்று உங்கள் சமயம் நிச்சயிக்கின்ற முத்தியினியல்புதான் யாது? என்று கேட்டார்; நின்ற உரு...உரை செய்தான - நின்ற உரு-வேதனை-குறிப்பு-செய்கை-நேரே நின்ற ஞானம் என நிகழும் ஐந்தும் கூடிய (பஞ்ச) கந்தத்தின் அழிவே முத்தி யாவதென்று சொன்னான்; பிடகத்தின் உணர்வு மிக்கான் - திரிபிடகத்தின் அறிவு மிகுந்தவனாகிய சாரிபுத்தன். ௬௩௬

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2812. (வி - ரை) அங்கு அணைந்து - சத்திர மண்டபத்தினகண் சார்ந்து.

அருகணைய நின்ற - வாதம் செய்யத் தக்கபடி அருகு சாரநின்ற. அணைய-இனி முடிவில் அவர்பால் திருநீறு பெற்று அன்பர்களாக என்ற குறிப்பும் தருவது.

எங்கு நிகழ் - எவ்விடத்தும் எக்காலத்தும் தடையின்றி ஆணை நிகழத்தக்க; சிவன தாணையினை உட்கொண்டு, "ஆணை நமதே" என்று தமது கட்டளையினையிட வல்ல பிள்ளையாரது தடுக்கலாகாப் புகழ் பரவுவதாதலினாலும், முழுமுதல்வராகிய சிவனால் தரப்பட்டதாதலினாலும் எங்கும் நிகழுந்தன்மை பெற்றது என்க.

**சிரத்தைப் பொடியாக்கும் அன்பர்** - பொடியாக்குதல் - அழித்தல் ; வேறுபடுத்தல் என்ற பொருளில் வந்தது. பொடியாக்கியது இறைவாருளினை உடகொண்ட பிள்ளையாரது அத்திருவாக்கேயாயினும் அச்செயல் அதனைக் கூறிச் செலுத்திய அன்பா செயலாகக் கூறியது உபசாரம்.

**பாதம் போற்றி அருளால்** - பிள்ளையார் தாமே சேரில சமய வாதம் செய்தல் மரபன்றுதலின் அவரருளாணை பெற்று அவர் திருமுன்பு அன்பா தொடங்கிச் செய்தனா என்க.

**தலைவனும் பொருளும் உரைக்க** - சமய வாதத்தில் பேசி வெற்றிதோல்வி காணவுள்ளனவற்றுட் சிறந்த பகுதிகள் இவ்விரண்டுமேயாம். அவை : அவ்வவர் கூறும் கடவுளிலக்கணம், முத்தியிலக்கணம் என்பவை. பொருள்-முடிபாய்க் கூறும் உறுதிப்பொருள் ; இவ்வாறு சமய வாதத்தினையும் பொருணிச்சயத்தினையும் அளவறுத்து அமைதிபடத் துணியமாட்டாது சமய சிந்தையே சமய வாதமாமெனப் புறங்கூறிப் போலிச சமரசம் பேசும் இக்கால மாக்கள் இதனைக் குறிக்கொண்டொழுகுதல் கடனாகு மென்க.

**உற்ற வாதினை மேற்கொண்டு** - தானே தேடி முனைந்துகொண்டமையால் வந்து பொருந்திய அவ்வாதத்தினை ஏற்றுக்கொண்டு - தொடாந்துகொண்டு.

**உரை செய்கின்றானாகி** - என்றான் என மேற்பாட்டுடன் முடிக்க. உரை செய்கின்றான் - முற்றெச்சம். 914

2813. (வி - ரை) **கற்பங்கள் அனைத்தினிலும்** - கற்பங்கள் எல்லாவற்றிலும். **கற்பம்** - காலக் கூறுபாட்டின பேரளவு ; 432 கோடி ஆண்டுகள் கொண்டது.

**பிறந்து வீந்து** - பிறந்தும் இறந்தும் ; வீதல் - இறத்தல்.

**கதி** - பிறப்பு வகை ; பதவி என்பாருமுண்டு. தாம செய்த நல்வினை தீவினைகட்கேற்றபடி மக்கட்கதி - தேவகதி - பிரமகதி - நரககதி - விலங்குகதி - பேயக்கதி - என்ற ஆறனுள் ஒன்றை அடையும் கதி.

**கணபங்க இயல்பு** - கணபங்கம் என்னும் கொள்கை கூறும பௌத்த சமயம்.

**கற்பங்கள்...இயல்பு தன்னில்** - எல்லாக் கற்பங்களிலும உயிர்கள் உயதற்பொருட்டுப் பிறந்தும இறந்தும் கதிமாறும கணபங்கம எனனும நியாயம் கூறும் பௌத்த சமயக் கொள்கையின்படி.

**பொற்புடைய.. செய்ய** - பொற்புடைய என்றதனைப் பின்வரும் தவம் முதலிய வற்றோடும் கூட்டுக ; ஏகாரங்கள் எண்ணிடைச் சொற்கள். **தன்மை புரி** - பிற தொடர்பு எல்லாம நீங்கிப பொருந்தும தன்மைகொண்ட.

**பொருந்தச் செய்ய** - தானம முதலாகக் கூறப்படும பத்து நற்குண நற்செயல் களில் ஈடுபட்டுச் செய்தலால்.

**செய்ய உற்பவிக்கும்** - செய்தலால் தோன்றும் ; உண்டாகும் உற்பவம்-பவம்-பிறப்பு - தோற்றம் ; உத் - உபசர்க்கம்.

**ஒழியாத பேரின்ப முத்தி** - கெடுதலில்லாத பெரிய இன்பம் உடைய முத்தி.

**முத்தி பெற்றான் - பான்மையான் - (அவனே) பரமன்** - என்க.

**அறம்** - தர்மோபதேசம் ; **அறம் சொன்ன பான்மை** - புத்த சரிதம் பார்க்க.

இப்பாட்டால "உங்கள் தலைவனும் - பொருளும் உரைக்க" என்று வினவிய இரண்டனுள் எங்கள் தலைவன் இவன் என்று தமது கொள்கையின்படி கடவுளிலக்கணம் பற்றிய விடை கூறினான்.

முன் கூறிய கோள்கைகளின் விவரமாவன :—கணபங்கமாவது - கணந்தோறும் அழிதை ; (கணம் - க்ஷணம்.) கணமாவது - நூறு தாமரை இதழ்களை அடுக்கி ஊசியினாற் குத்த அவற்றுள் எட்டு இதழ்கள் அறும் கால அளவு.

கற்பங்களனைத்தினிலும் பிறந்து வீந்து கதிமாறும் - இது புத்த சரிதம் குறித்தது. புத்தன் தன தாயின் வலது மருங்குலாற் பிறந்து பின் ஆறுநாளின்பின் அவளை உயிர் துறப்பித்து, இவ்வாறு தோன்றுவன். அதன்பின் பல உயிர்களும் பிழைத்து உய்யும் பொருட்டு அளவில்லாத எல்லாக் கற்பங்களிலும் அளவிறந்த யோனிகளிலும் புகுந்து பிறந்தும் இறந்தும் பிற உயிர்கட்கு உறுதி செய்து மேல் அக்கதி மாறி வீடு அடைவன் என்பதாம்.

கணபங்க இயல்பு - ஒருகணத்தில ஞானமும் ஞேயமுமாகிய பொருள்கள் தீப சந்தானம் போலக் கெட்டு வருதலேயன்றிக் கெட்டுக் குறைந்து வருதலும், கெட்டொழிந்து நிற்பதும, கெட்டுக்கெட்டு வருவதுமென நான்குவகையாய்க் கேடடையும் என்ற கொள்கை.

பொற்புடைய...செய்ய - முன் சொன்னபடி பிறந்த புத்தன் அளவில்லாத நல்ல தானம் முதலிய சீலங்களுடையவனும் யோகியாயுமிருக்க.

ஒழிவின்றி உரைத்த ஞானம்-திரிலட்சண பாவனை என்னும் ஞானம். அஃதாவது சர்வந் துக்கந்துக்கம் ; சாவம் நித்தியம்நித்தியம் ; சாவஞ் சூனியஞ்சூனியம் என்னும் பாவனை.

ஞானத்து - ஞானத்தினால் ; ஞானத்து (ஒழியாத பேரின்ப) முத்தி பெற்றான் - ஞானம் பெற்றமையால் குற்றம் நீங்கிப் பஞ்சகந்த அழிவாகிய முத்தியடைந்தான்.

பற்பலரும்......அறம் முன்சொன்ன பான்மையான் - முத்தி பெறுமுன் தவங் காரணமாகத் தோன்றிய ஞானத்தால் முற்றும் உணர்ந்து பிறர் உய்ய அறஞ் சொன்னான்.

பரமன் - ஆதிபுத்தருடன் புத்தர் இருபத்து நால்வர் ; இறுதியில் நின்றவன் கௌதம புத்தன். இங்குக் கூறியவன் ஆதிபுத்தன்.

இங்குக் கூறியவற்றால் துக்கம் - துக்கோற்பத்தி - துக்க நிவாரணம் - துக்க நிவாரண மார்க்கம் எனச் சத்திய சதுட்டயம் என்று பௌத்தர் கூறும் நான்கும் குறிப்பிற் பெறப்பட்டமை கண்டுகொள்க.

தவமே நன்மை - என்பதும் பாடம். 915

2814. (வி - ரை) எதிர் வந்து ஏற்ற - முன் (2812) கூறியபடி வாதத்தினை ஏற்று முன்வந்து வாதந் தொடங்கிய ; ஏற்றல் - மேற்கொள்ளுதல்.

இருந்தவத்துப் பெருந்தன்மை அன்பர் - "எதிரில அன்பர" (2812) ; சம்பந்த சரணலையர் ; இத்தன்மையாற் கூறினார், இகல், பொறாமை, சினம் முதலிய தீக்குணங் காரணமாக இவ்வாதத்தினை ஏற்றாரலர் என்பது குறித்தற்கு.

உமது தலைவன்தான் நன்று பெற்றானென்று நாட்டுகின்ற முத்திதான் யாவது - "முத்தி பெற்றான்" (2813) என முன் கூறினமையால் அதனையே தொடர்ந்து கொண்டு இரண்டாவது வினாவைத் தொடுக்கின்றார். நன்று - பெற்றான் என்க ; "ஒழியாத பேரின்பம்" (2813) என்றதனைக் குறித்தது. நன்று - நாட்டுகின்ற - என்று கூட்டி உரைத்தலுமொன்று.

ஐந்தும் ஒன்றிய கந்தத்து அவிவே முத்தி - ஐந்து கந்தங்களும் அழிவதுவே முத்தியின் இலக்கணம் என்பது பௌத்த நூன்முடிபு

**நின்ற உரு...ஐந்தும்** - புத்தர் பஞ்சஸ்கந்தம் என்னும் கந்தமைந்தாவன : உரு - வேதனை - குறிப்பு - செய்கை - ஞானம் என்பன. அறிவுள்ள பிராணிகள் இந்த ஐந்தும் சேரும் கூட்டத்தாலுண்டாவன என்பதும், இவ்வைந்தன் அழிவே முத்தி என்பதும் பௌத்தர் கொள்கை. (1) உருவக்கந்தம் - உருவங்களுக்கெல்லாம் காரணமாகிய பொருளை உணர்த்துவது; (2) வேதனைக் கந்தம் - இந்திரியங்களுக்கும் புலன்களுக்கும் உள்ள பொருத்தத்தின் உளதாகும் உணர்வு; (3) குறிக் கந்தம் - (இதனை சமஞ்ஞா ஸ்கந்தம் என்பர்) மெய் வாய் முதலிய ஐந்தும் மனமும் கூடிய ஆறு இந்திரியங்களினால் வரும் அறுவகை யுணர்வினுள் உளதாகும் பொது - சிறப்பு என்ற இருவகையாலும் பொருள்களைப் பெயர்க்குறியிட்டறிதற் கருவியாகிய ஞானம்; (4) செய்கைக் கந்தம் - (இதனை சமஸ்காரக்கந்தம் என்பர்) மனம் வாக்குக் காயம் என்னும் முக்கரணங்களால் வரும் தொழில் வேறுபாட்டால் அவற்றுக்கு உளதாகும் பகுவம்; (5) ஞானக் கந்தம் - (விஞ்ஞானம் என்பர்) துயிலேவாருடைய உணர்வானது, செய்கையும் நுகர்வுமின்றிச் சின்று மாத்திரையாய் கிடப்பதுபோல அறிவுடையார்களுக்குள் நின்று அவ்வறிவுக் காரணமாய் நிற்கும் அறிவுச் சத்தி; "உணர்வெனப் படுவ துறங்குவோ ருணர்வில், புரிவின் றுகிப் புலன்கொளா ததுவே" (மணிமேகலை - 30 - 82 - 83); இவ்வைந்தும் 28 - 15 - 6 - 52 - 89 ஆகிய தத்துவங்களை உட்கொண்டன.

"எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞானம், ஒட்டிய குறிப்போ ராறு செய்கையி ருபத் தாகக், கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்க மாகும், தொட்ட காற் பத்து மூன்றுஞ் சுகத்துநற் றுணிவு தானே" என்பது பௌத்த நூல். இவற்றின் விளக்கமாவது : "உருவம் எட்டு - அவை பூதவுரு நாலு, உபாதானவுரு நாலு; அவை வருமாறு : பிருதிவி, அப்பு, தேயு, வாயுவெனு நாலும் பூதவுரு; வலி, கந்தம், இரதம், வன்னமெனு நாலும் உபாதானவுரு, ஆக - (அ); வேதனை - மூன்று; அவை : குசலா வேதனை (சுக அறிவு), அகுசலா வேதனை (துக்க அறிவு), குசலா குசலா வேதனை (சுகதுக்க அறிவு) ஆக-(ஈ); குறிப்பு - ஆறு-சோத்திரம் துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் (மெய், வாய், கண், மூக்கு, செவி), மனம், ஆக-(சு); பாவனை - இருபது; தீக்குணம் க௦ - நற்குணம் க௦; தீக்குணங்களாவன : பொய் சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச் சொல்லல், பயனில சொல்லல் என வாக்கின் குணம் ச; களவுக்குப் போகுதல், வறிதே தொழில்செய்தல், கொலை செய்தல் எனக் காயத்தின் குணம் ஈ; கொலை நினைத்தல், காமப் பற்று, ஆசை என மனத்தின்குணம் ஈ; ஆக - க௦; நற்குணங்களாவன : மெய்யுரை, நல்வார்த்தை, இனியவை கூறல், பயன்படு சொல் என வாக்கின் குணம் ச; பள்ளியல்ம வரல், தவம் புரிதல், தானஞ் செய்தல் எனக் காயத்தின் குணம் ஈ; அருள் நினைவு, ஆசையறுத்தல், தவப் பற்று என மனத்தின் குணம் ஈ; ஆக - க௦; ஆகப் பாவனை - உ௦; இவை மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் வருவன. விஞ்ஞானம் - ஆறு : அவை : சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சித்தம் ஆக சு; ஆகப் பஞ்சகந்த போதம் - சஈ கண்டுகொள்க. "இவ்வித மைந்துஞ்சந் தானத் தெழுந்தழிகை, பந்த மெனவே பார" - பரமத திமிர பானு.

"ஓங்கிய வுருவ மோடும் வேதனை குறிப்பி னோடுந், தாங்குபா வனைவிஞ் ஞானந் தாமிவை யைந்துங் கூடிப், பாங்குறு சந்தா னத்திற் கெடுவது பந்த துக்கம்; ஆங்கவை பொன்றக் கேடா யழிவது முத்தி யின்பம்" (சிவஞான சித்தியார் - பரபக்கம் - சௌத்திராந்திகன் மதம் - 30) என்றும் : "மேவிய கருவிற் சேரு முருவம்வே

தனாகு றிப்புப், பாவனா யுடன்விஞ் ஞானம் பஞ்சகந் தங்கள் கூடி, யோவில்பல் லுணர்வுண் டாகி யொழிவது பிறவித துன்ப, மாவது பொன்றக் கேடா யொழிவது முத்தி யென்றான் " (திருவாத புரா - 464 = புத். வாதில் சருக் - 50) என்றும் வருவனவும், பிறவும் காண்க ; சௌத்திராந்தகன் முதலியநால்வகைப் புத்தர்களின் சமயக் கொள்கை விவரங்களும், அவற்றின் மறுப்புக்களும் சிவஞான சித்தியார் பரபக்கத்தன் விவரிக்கப்பட்டன ; அவற்றைக் கற்றுணர்தல் ஈண்டு வரும் பௌதத வாததை நன்குணர்தற் குதவிசெய்யும் ; கடைப்பிடிகக. புதத சரித்திரம், புதத தருமம், புத்த சங்கம் என்பவை பற்றி மணிமேகலைப் பதிப்பில் மகாமகோபாத்தியாயர் - திரு - உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் விரிவாயப் பௌத்த நூல்களையும் அவைபற்றி மேனாட்டுப் புலவாணர் எழுதியவைகளையும் ஆய்ந்து தொகுதது எழுதியுள்ளவையும் பார்க்க.

பிடகம் - பௌத்தர்களின சமயநூல் ; ஆதிபுததனுடன் இருபததநான்கு புத்தர்கள் மரபி லுபதேசக்கிரமததாற சொலலபபட்ட நூல. அவை வினய பிடகம், சூத்திர பிடகம், அவிதன்ம பிடகம் என மூவகைப்படும். இவை திரிபிடகம் - பிடகத் திரயம் எனவும் வழஙகப்படுமே. பிடகம் - கூடை. புததம - தருமம - சஙகம் என்பன முததிற மணி என்பது பௌதத வழககு. புததம் சரணங்கச்சாமி - தருமம சரணஙகச்சாமி - சஙகம் சரணங்கச்சாமி (நமோ புததாய ; நமோ தாமாய ; நமஸ்ஸங்காய என்பது மந்திரம்.) என்னும் மும்மணியைக் கூடைபோன்று தாங்குதலால் இது பிடகம் எனப்படும் என்பர். இந்நூல்களை கூடையில் சேமிததத தாஙகுதலால் போகத பெயர் என்றும் கூறுவர்.

உணர்வு - அறிவு ; பயிற்சியால் வரும் ஞானம்.

இப்பாட்டினால் உருவம் முதலியனவாய்க் கூறபபடும் ஐந்து கந்தஙகளும் பொன்றிக் கெட்டழிதலே முததி என்று சாரிபுததன் தனது சமயக கொள்கையிற் கூறுமாறு விடையிறுத்த முததியினிலக்கணம் கூறப்பட்டது. ௬16

2815. ஆங்கவன்று னுரைத்தமொழி கேட்ட வன்ப
ரதனையறு வாதஞ்செய் தவனை நோக்கித்.
"தாங்கியஞா னத்துடனுங் கந்த மைந்துந்
தாம்வீந்து கெட்டனவேற் 'றலைவன் றானும்
ஈங்குள' னென் றவனுக்கு விடய மாக
யாவையுமுன் னியற்றுதற்கு விகார மேசெய்
தோங்குவடி வமைத்துவிழ வெடுக்கும் பூசை
கொள்வாரா ? ருரைக்க!" வென, வுரைக்க லுற்றான், ௬கள

2816. "கந்தமாம் வினையுடம்பு நீங்கி யெங்கோன்
கலந்துளன்முத் தியி" லென்று; னென்னக், "காணும்
இக்திரியங் கண்முதலாங் கரணந் தானு
மில்லையே லவனுணர்ச்சி யில்லை" யென்றார்;
"முந்தையறி விலனாகி யுறங்கி னானை
நிந்தித்து மொழிந்துடன்மீ தாடி னார்க்கு
வந்தவினைப் பயன்போல வழிபட் டார்க்கும்
வருமன்றோ நன்மை?" யென மறுத்துச் சொன்னான். ௬கஅ

2815. (இ - ள்) ஆதலவன்றன...நோக்கி - அப்போது அந்தச் சாரிபுத்தன் விடையாகக் கூறிய மொழியைக் கேட்ட அன்பராகிய சம்பந்த சரணாலயர் அவன் கூறிய மொழியினைத் தாம் அநுவதித்துக்கொண்டு அவனைப் பார்த்து; தாமகிய... கெட்டனவேல் - அவன் (புத்தன்) முன் தானாகியிருந்த ஞானம் முதலாகிய ஐந்து கந்தங்களும் தாம் ஒருங்கே அழிந்து கெட்டனவானால்; தலைவன்தானும் ஈங்கு உளன் என்று - தலைவன்தானே இங்கு வீற்றிருக்கின்றான் என்று கொண்டு; அவனுக்கு... இயற்றுதற்கு - அவன் கொள்ளும்படி எல்லாவற்றையும் செய்வதற்காக; விகாரமே செய்து...உரைக்க என - விகாரம் எனனும் கோயில் எடுப்பித்து அதனுள் அவனது பெரிய வடிவத்தையும் அமைத்து விழாச் செய்யும் பூசையினை ஏற்றுக்கொள்பவர் யாவர்? சொல்க! என்று வினவ; உரைக்கலுற்றான் - அவன் சொல்லத் தொடங்கியவனாய்; ௯௧௭

2816. (இ - ள்) கந்தமாம்...என்றான் - இருவினை காரணமான பஞ்சகந்தவுடம்பு கெட எமது தலைவன் முத்தியிற் சேர்ந்திருக்கின்றான் (அதனால் கோயிலும் வடிவும் விழாவும் பூசையும் எடுத்தல் பொருந்தும்) என்று கூறினான், என்ன - அவ்வாறு கூறவே; காணும்...இலலை என்றார் - (அவ்வாறு முத்தியிற் சேர்ந்தமை உன் இறைவனுக்கு) விடயங்களை உணரும் கருவிகளாகிய கண் முதலிய கரணங்கள் இல்லாதொழிந்தால் அவனுக்கு உணர்வு உதித்தல் இல்லையாகும் என்று மறுத்தருளினார்; முரசை... போல - முற்பட்ட உணர்வு கெட்டு உறங்குகின்றவனை நிந்தனை செய்து அவனுடைய மீது மிதித்தாடின ஒருவனுக்கு அதனால் தீவினைப்பயன் வருதல்போல; வழிபட்டார்க்கும...மறுத்துச் சொன்னான் - ஐந்து கந்தமும் கெட்டு முத்தியடைந்த எம் முதல்வனை வழிபாடு செய்தவர்களுக்கும் அந்த நல்வினைப்பயன் வருமன்றோ? என்று சாரிபுத்தன் மறுத்துக் கூறினான். ௯௧௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன

2815. (வி - ரை) அநுவாதம் செய்தலாவது - ஒருவன் கூறிய பொருளை மறுக்கும் பொருட்டு "நீ இவ்வாறு கூறினை" என்று எடுத்துக் கூறி, மேலே வாங்கப் படு; இங்குத் "தாமிய... .கெட்டன" என்பது அநுவாதம், நீ இவ்வாறு சொல்லையாயின் என மேலே செல்வது. அநுவாதம் என்பது வேறொன்று கூறற் பொருட்டு அதனை எடுத்து மொழிந்து கொள்ளுதல், அநு - வழி, வாதம் - மொழிதல்; அநுவாதம் எனினும் வழி மொழிதல் எனினும் ஒக்கும்;

தலைவன் தானும் ஈங்கு உளன் என்று - அத்தலைவன்தானே ஈண்டு முன் இருக்கின்றான் என்று உட்கொண்டு - எண்ணம் வைத்து.

அவனுக்கு விடயமாக - அவன் அறிவுக்கு விடயமாகப் பெற்று ஏற்றுக்கொள்ளும் படி - ஏற்குமாறு.

யாவையும் இங்கு இயற்றுதற்கு - யாவையும் - ஊட்டுதல் - பூச்சூட்டுதல் - கேட்பித்தல் முதலிய உபசாரமாகிய எல்லாவற்றையும். இங்கு - இவ்வுலகத்தில் - செய்தற் பொருட்டு.

விகாரமே செய்து விகாரம் - புத்தர் கோயில்களின் பெயர் வழக்கு. இவ்வாறறிலாது இதற்கு வேற்றுமை - மனோவிகாரமான பாவனை-எனப் பொருள்கொண்டனர் முன் உரைகாரர்கள்.

ஓங்கு வடிவு - புத்தர் கோயில்களில் அவர் வடிவத்தை உட்கார்ந்தநிலை - நின்ற நிலை - படுத்தநிலை முதலிய பல நிலைகளிலும் பெருத்த வடிவங்களாகப் பலபடியும்

அமைத்தல் வழக்கம். இவை இலங்கையில் உள்ள புத்த விகாரங்களிற் சிறக்கக் காண லாம். வட இந்தியாவில் புதத கோயில்களிலும் குகைகளிலுமுண்டு.

ஓங்குதல் - பெரிதாய் அமைதல்.

விகாரம் செய்தல் - வடிவமைத்தல் - விழாவெடுத்தல் - பூசைபுரிதல் - இவை புத்தர் இவ்வுலகததில் இங்கே இருந்து பூசை கொள்கின்றார் என்ற எண்ணத்தாற் செய் யப்படுவன என்பதாம்.

கேட்டனவேல் - பூசை கொள்வாரார்? - பூசை புலப்பட விடயமாவதற்கு உணர்வு வேண்டும்; உணர்வு உண்டாதற்கு ஐந்து கந்தங்களின் சேர்க்கை வேண்டும்; முத்தியில் ஐந்து கந்தங்களும் அவிந்தழிகின்றன என்பாயாதலின உனது தலைவனுக்கு அந்நிலையில் உணர்வும், பூசை விடயமாவதும இல்லை. எனவே நீ "அவன இங் கிருக்கின்றான்" என்று எடுக்கும் பூசை புலபபட ஏற்றுக்கொள்பவர் யார்? என்ற வாறு. 917

2816. (வி - ரை) கந்தமாம்...என்றான் - இருவினை காரணமான கந்தவுடம்பு கெட முத்தியில் எமது தலைவன் சேரநிருககின்றான் (அதனால் விழா எடுத்தப் பூசை செய்தல் பொருந்தும்) எனறு சாரிபுததன மறுமொழி கூறினன; என்ன - என்று கூற.

"காணும் இந்திரியம் .இல்லை" என்றார் - முததியிற சேர்ந்த தலைவனுக்குக் காணுதறகுரிய கண முதலிய கரணஙகள இல்லையாதலின உணர்வுதிததலு மில்லையாம் என்று அவன் விடையினை மேலும் அனபா மறுததவாறு.

"முந்தை அறிவிலனாகி......நன்மை" என - அறிவுணர்தலின்றி உறங்குகின்ற ஒருவனை மறறொருவன் நிநதிதது மிதிபபானாயின் முனனவன் அதனை உணராவிடினும் அத் தீவினைப பயன் பினனவனுககு வரும்; அதுபோல முதல்வன முத்தியில் இதனை உணராவிடினும் அவனைப பூசை முதலியன செய்தலின் பயன் அது செய்தாருககு வரும் என்றது. இஃது அன்பருடைய அத தடையுரையினை மறுத்துப புத்தன்மேலும் கூறிய விடையாம்; முந்தையறிவு - ஆலய விஞ்ஞானம் பிரவிருத்தி விஞ்ஞானம் எனனும் இரணடனுள முன்னதன் காரணமாக வரும் நனவுணர்வாகிய முன் அறிவு.

நிந்தித்து மொழிந்து உடல்மீது ஆடினார்க்கு - வைதலும் மிதித்தலும் செய் தோர்க்கு. வினைப்பயன் - அத் தீவினைபபயன்.

வினைப்பயன் வருதல்போல - நன்மையும் வருமன்றே எனக; நன்மை - நல் வினைபபயன்; தீவினைபபயன வருதல் கணகூடாகப பெறக் காண்டலின் அதனை உவமானமாக்கிக் காணாத நல்வினைப்பயனைப பெறுவித்தான். இஃது அவன் எடுத்துக் காட்டிய உவமை; வினைபற்றி வந்தது. 918

2817. சொன்னவுரை கேட்டருளி யன்பர் தாமுந
"தொடர்ந்தவழி பாடுபல கொள்கின் றானுக்
கன்னவற்றி னுடன்பாடு மெதிர்வு மில்லை
யானபோ தவன்பெறுத லில்லை" யென்றார்;
முன்னவற்றி னுடன்பாடு மெதிர்வு மின்றி
முறுகுதுயி லுற்றானை முனிந்து கொன்றால்
இன்னுயிர்போய்க் கொலையாகி முடிந்த தன்றோ?
விப்படியா லெம்மிறைவற் கெய்து மென்றான். கககக

(இ - ள்) சொன்னவுரை...என்றார் - முன் கூறியவாறு சொன்ன சாரிபுத்தனது மறுமொழியைக் கேட்டருளி அன்பராகிய சம்பந்த சரணாலயரும், "நீ தொடர்ந்த வழிபாட்டினை ஏற்றுக்கொள்கின்ற உனது தலைவனுக்கு (உணர்ந்து கோடற்குரிய கருவிகளில்லாமையால்) அவற்றில் விருப்பும் வெறுப்பும் இல்லை; அவ்வாறாயினபோது அவன் அவ் வழிபாட்டினை ஏற்றுக்கொள்ளுதலுமில்லை" என்று கூறியருளினார்; "முன்னவற்றில்...முடிந்ததன்றோ?" - தன் முன்புள்ள விடயங்களில் விருப்பும் வெறுப்புமின்றி முற்றிய துயிலினைப் பொருந்திய ஒருவனைக் கோபித்து ஒருவன் கொன்றால் அவ்வாறு கொல்லப்பட்டவனுக்கு உயிர் போவதும் கொன்றவனுக்குக் கொலைப்பாதகமும் வந்து கொலைப்பழி மூண்டுவந்து முடிந்ததல்லவா?; இப்படியால் ...என்றான் - இவ்வாறே எமது இறைவனுக்கும் எம் வழிபாடு சென்று பொருந்தும் என்று கூறினான்.

(வி - ரை) தொடர்ந்த...பெறுதல் இல்லை - முன் அறிவின்றி உறங்கினவனைச் சிந்தித்து மிதித்த ஒருவனுக்கு வரும் வினைப்பயன் போல வழிபட்டார்க்கும் வரும் என்று கூறிய புத்தன் மொழியை மறுத்து, வழிபாட்டினை உடன்பாடாதல் அல்லது வெறுப்பாதல் வரும் உணர்வினுடன் அவன் கைக்கொண்டாலன்றிப் பயன்தருதல் சாலாது. உன் இறைவன் பஞ்சகந்தமும் அவிந்தநிலையாகிய முத்தியில் நின்றான் என்பபடுதலால் அவன் வழிபாட்டினைக் கைக்கொள்ளுமாறில்லை; அதனால் பயன்தருமாறுமில்லை என்று அன்பர் கூறியபடி.

முன்னவற்றில்...எய்தும் - இது புத்தன் அதற்குமேலும் தொடர்ந்து கூறிய மறுமொழி. பயன் வருதலுக்கு உடன்பாடும் எதிர்வும் ஆகிய உணர்வுடைய மனநிலை வேண்டற்பாலதன்று; முன் உணர்வின்றி உறங்கினவனுக்குப் புறநிகழ்ச்சிகளில் உடன்பாடும் எதிர்வுமில்லை; ஆனால் அவனைக் கொன்ற ஒருவனுக்குக் கொலைப்பாவம் வரும். அதுபோல எம் இறைவன் எமது வழிபாட்டில் உடன்பாடும் எதிர்வுமில்லானாயினும் வழிபாட்டின் பயனும் எமக்கு வரும் என்றபடி.

உடன்பாடு - விரும்புதல்; எதிர்வு - வெறுத்தல். இவ்விரண்டும் உணர்வாகிய மனநிலைகள். முற்று துயில் - மிக்க துயில். 919

2818. "'இப்படியா லெய்து'மென விசைத்து நீயிங்
கெடுத்துக்காட் டியதுயிலு மியல்பி னன்றோ
மெய்ப்படிய கரணங்க ளுயிர்தா மிங்கு
வேண்டுதியா லும்மிறைவற்; கான போது
செப்பியவக் கந்தத்தின் வினையி னாகித்
திரிவில்லா முத்தியிற்சென் றிலனு மானான்;
அப்படியக் கந்தத்து ளறிவுங் கெட்டா
லம்முத்தி யுடனின்ப மிலையா" தென்றார். ௯௨௦

(இ - ள்) இப்படியால்...போல் - இவ்வாறாக வழிபாட்டின் பயன்தருதல் எம் தலைவன்பாலும் பொருந்தும் என்று நீ இதற்கு உதாரணமாக எடுத்துக்காட்டிய (உடன்பாடும் எதிர்வுமாகிய உணர்வின்றி) உறங்குகின்றவனது தன்மைபோல, மெய்ப்படிய ...இறைவற்கு - உடம்பில் உள்ள கரணங்களும் உயிரும் ஈண்டு இச்செயலுக்கு-வழிபாடு கொண்டு பயன்படும் நிலைமைக்கு-உன் இறைவனுக்கு உளவாக வேண்டுகின்றாயன்றோ?; ஆனபோது...சென்றிலனுமானான் - அவ்வாறு உடலும் கரணமும் உயிரும் அவன்

வழிபாடுகொள்ளும் நிலையில் கொண்டவனுயினபோது சொல்லப்பட்ட அந்த ஐந்து கந்தத்தின் விளைவு இல்லாதொழியவே, கெடுதலில்லாத முத்தியிற் சேர்தலவனல்லாதவனும் ஆகின்றான்; அப்படி...என்றா - அவ்வாறு அந்தக் கந்தத்தின் அறிவும் கெடுமேயானால் அந்த முத்தியுடன இன்பம் சேராது என்று கூறினர்.

(வி - ரை) இஃது சாரிபுத்தன் மேற்பாட்டிற கூறிய உதாரணங் காட்டிய உறங்கினோன கொலைபபயன் என்ற தன்மையினை விரித்துக்காட்டி, அஃது அவன் கொண்ட இறைவனது தன்மைககுப பொருந்தாதவண்ணம அன்பர் காட்டியவாறு.

துயிலும் இயல்பினன்போல்...இறைவற்கு - உறங்கினன கொலைபபயன் போல என்றபோது கொலையினுற் பிரிக்கப்பட்ட உயிரும், அதுவின்ற உடலும், கொலைவாதனையேற்ற உட்கரணங்களும வேண்டப்படுவனவன்றே? அதுபோல வழிபாட்டின் பயன் வருதற்கும் உனது இறைவனுக்கு உயிரும் உடலும் கரணமும் அம் முத்திநிலையில உண்டென நீ கொள்ளவேண்டி வரும் என்றபடி.

ஆனபோது - வழிபாட்டின் பயன் வருதற்பொருட்டு அவவாறு உயிர் உடல் கரணங்கள் உள்ளனவாகக் கொள்ளலாயினபோது.

செப்பிய...ஆனுன்-அவ்வாறாயினபோது கந்தங்களின் முடிந்தநிலை இல்லையாகும்; அதனுல் கெடுதலிலலாத முத்தியில அவன சென்றதும இல்லையாகும எனக. விளைவு- முதிர்ந்த-முடிந்த-நிலையாகிய அவிவு என்ற பொருளில வந்தது. ஆகி - ஆகியதனுல். காரணபபொருளில் வந்த வினையெச்சம். திரிவு இல்லா முத்தி - கந்தங்களின் சேட்டையினுற கேடு அடைதல இல்லாத முத்தியின் தன்மை. "ஒழியாத" (2813); வழிபாட்டுப பயன் வரவேண்டுமானுல முதலவனுக்கு உடல் உயிர் கரணம இவைகள் வேண்டும்; அவன் கெடாத முத்தியிற செல்லுதல் வேண்டில அவை முன்னமே கெட்டொழிதல வேண்டும என அவனது கொள்கையினவரும முரணபாடும், அவன் மேற்காட்டிய எடுத்துககாட்டு - அவனது கொள்கையுடன பொருந்தாமையும எடுத்து முடித்துககாட்டியபடியாம்.

அப்படி ..அணையாது - இது மேறகாட்டிய வகையானன்றி மேலுமொரு வகையால் அவனது முத்தியியல்பினை மறுத்தவாறு. முத்தியாவது பேரின்பமுடையது என்று "ஒழியாத பேரின்ப முத்தி பெற்றான்" (2813) என்றமை; இன்பமடைதற்கு அறிவு உள்ளதாதல வேண்டும்; அறிவு உள்ளதாதற்குக கந்தங்களின செயற்பாடு வேண்டும். ஆனுல் நீ சொல்வதுபோலக கந்தத்துடனே அறிவுமகெட்டு முத்தியிற்போனானுகில் அந்த முத்தியில் பேரின்பமடைதற்கு ஏதுவில்லையே என்று முரண்பாடுகாட்டப் பட்டவாறு கண்டுகொள்க. முத்தியுடன் - அணையாது - முத்தியுள இன்பம் சாராது - கூடாது; அஃது இன்பமில்லா முத்தியாய்ப பாழ்ஆகும என்றபடி. ஞானமே ஆன்மா எனவும், அது நீரோட்டம்போலச சந்தானமாய்க் கணந்தோறும தோன்றியழியும் எனவும், அவவாறு தோன்றியழியுங்கால வரும வாசனை பற்றுதலான் அறிவு நிகழும்; அவ் வாசனை அழிவதே முத்தி என்பது பௌத்தசமயக கொள்கை; ஞானங்கூடக் கெடுதல் முத்தி என்பாருமுளர். இதனை உட்கொண்டே அன்பர் மேற்கூறியவாறு கந்தமும் அறிவும் கெட்டபோது பெறப்படுவதாகக் கூறப்பட்ட முத்தியில் இன்பம் அணைவதில்லை என்றார். "ஐந்துகந்தஞ் சந்தானத் தழிதல் பந்த துக்க, மறக்கெடுகை முத்தியின்ப மென்றறைந்தாய் கந்த, மைந்துமழிந் தான முத்தி யணைபவா யாரென்ன வணைபவர் வேறில்லை யென்று யார்க்கு முத்தியின்ப, மைந்தினுணா வினுக்கென்னி னழியாத வுணர்வுண் டாகவே யவ்விடத்து முருவாதி கந்த, மைந்துமுள வாமதுவும் பந்தமாகி யரந்தைதரு முத்தியின்ப மறிந்திலகா ணீயே" (சித்தியார்-பரபக்கம் - 133) எனவும்;

"அழிந்திடி னொத்த கந்த முத்தியென் றுரைத்தா யத்து, மழிந்திடின் முத்தி பெற்றா ராரென வினவும் போதி, லழிந்திடு மைந்தி னுண்டா முணர்வென வுரைக்கி லொத்து, மழிந்தன விலையா முத்தி யாவது மில்லை யென்றார்" (திருவாத. புரா - 464) எனவும் வருவன இக்கருத்தை விளக்குதல் காண்க.*

குறிப்பு:—ஞானமுடைய ஆன்மா இல்லையாயின் முத்தியில் இன்பமும் பயனும் இல்லை என்பது முன்கூறிய வாதத்தின் குறிப்பாகும். 920

2819. அவ்வுரைகேட் டெதிர்மாற்ற மறைவ தின்றி
யணைந்துளமை முத்தியெனு மதுவும் பாழாங்
கவ்வையினின் றவனையெதிர் நோக்கி ஞானக்
கடலமுத மனையவாக் காத லன்பர்
நூல்வரு வகை "பொய்வகையே முத்தியினிற் போனான் முன்பே
பொருள்களெல்லா முணர்ந்துரைத்துப் போனா னென்றாய்;
எவ்வகையா லவனெல்லா முணர்ந்த தீதும்
இல்லதுரைப் பாயெனினு மேற்போ" மென்றார். ௯௨௧

*இதுபற்றி மகாமகோபாத்தியாயா திரு. சாமிநாதய்யா அவர்கள் பதித்த மணிமேகலைப் பதிப்பில் (பக்கம் - ௫௫-௫௬) புத்த தருமம் என்ற பகுதியிற் கீழ்க்கண்டபடி வருவன இக்கருத்தைத் தக்கன. "...oldenburg - Page 278 - ஸம்யுக்த நிகாயம் என்ற பௌத்த நூலில் வத்ஸகோத்திரன் என்ற ஒரு துறவி கௌதம புத்தரிடம் சென்று "ஆன்மாவென்று ஒன்று உளதோ?" என்று கேட்டபொழுது புத்தர் மௌனமுற்றிருந்தனரென்றும், ஆனால் அவ்வண்ணம் ஒன்று இல்லையோ என்று பின்னும் அவன் வினவிய பொழுது அதற்கும் புத்தர் ஒன்றும் பேசாமலே இருந்தனரென்றும் கூறியிருக்கின்றார். கோசலதேசத் தரசனாகிய பரசேநஜித் என்பவன் ஸாகேத நகரத்திற்கும் ஸ்ரீவஸ்தி நகரத்திற்கும் நடுவிற் போய்க்கொண்டிருக்கையில் க்ஷேமை என்கிற ஒரு பிக்ஷுணியைச் சந்தித்துப் பணிந்து அவளிடத்திலே பௌத்த தருமத்தைப்பற்றித் தான் ஐயுற்ற பொருள்களைப் பின்வரும் வினாவிடைகளால் தெளிந்துகொண்டானென்று மேற்கூறிய ஸம்யுக்த நிகாயத்தாலேயே தெரிகின்றது. அரசன்:—"பகவதி! ததாகதன் இறந்த பின்னரும் உளனோ?", க்ஷேமை "அரசர் தலைவ! ததாகதன் இறந்த பின்னரும் இருப்பதாக ஆசாரிய புத்தன் சொல்லவில்லை", அரசன். "பகவதி! ஆனால் இறந்த பின்பு ததாகதன் இல்லையோ?"; க்ஷேமை: "அரசர் சிங்கமே! ததாகதன் இறந்தபின்னர் இல்லை என்பதையுங்கூட ஆசாரிய புத்தன் சொல்லவில்லை", அரசன்: "பகவதி! அங்ஙனமாயின், ததாகதன் இறந்தபின்னர் உளனுமாம், இலனுமாம் என்னலாமோ?"; "பகவதி! ததாகதன் இறந்தபின்னர் உளனுமல்லன், இலனுமல்லன் என்றும் கூறலாமோ?"—இவ்வினாக்களுக்கும் முன்போலவே அந்தப் பிக்ஷுணி "இவற்றைப்பற்றி ஆசாரிய புத்தன் ஒன்றும் சொல்லவில்லை" என்றனள். இவ்வினாவிடைகளுங்கூட நிர்வாணமென்பது சூனியாவஸ்தை யென்றும், ஆன்மாவென்று ஒன்றில்லையென்றும் கௌதம புத்தர் வற்புறுத்திக் கூறினாரென்று காட்டவில்லை"—

குறிப்பு:—பகவதி - என்பது பௌத்தருட் பெண்துறவிகளாகிச் சங்கத்தைச் சார்ந்த பிட்சுணிகளுக்கு வழங்கும் கௌரவ மரபுப் பெயர்; ததாகதன் - கௌதமருக்கு வழங்கும் பெயர்களுள் ஒன்று.

(இ - ள்) அவ்வுரை கேட்டு ..கவ்வையி னின்றவனை - அன்பர் சொன்ன அந்த மொழியைக் கேட்டு அதற்கு எதிராக ஒன்றும் சொல்வதற்கில்லாமல், அந்த முத்தியில் தலைவன் சேர்ந்துள்ளான் என்று சொல்லப்பட்டதும் பாழாய் முடிந்த சிறுமையுடன் வருத்தத்தோடு நின்ற சாரிபுத்தனை ; எதிர்நோக்கி - மீளவும் பார்த்து ; ஞானக் கடல்...அன்பா - ஞானமாகிய கடலில் கடைந்தெடுத்த அமுதம்போன்ற பிள்ளையாருடைய காதலன்பராகிய சம்பந்த சரணாலயர் ; பொய்வகையே...ஏறபோம் என்றார் - கந்தங்கள் அவிந்து பொய்யாய் முடிந்த வழியே முத்தியினிற் சேர்ந்தவனாகிய உனது தலைவன் அதற்கு முன்னமே எல்லாப் பொருள்களையும உணர்ந்து உலகுய்ய அறமுரைத்துப் போயினான என்று சொன்னாய் ; அவன் அவ்வாறு எல்லாவற்றையும் எவ்வகையால் முழுதொருங்கு உணர்ந்தான் ? இதுவும் இல்லதாகவே முடிந்தது : இதற்கு மறுமொழி பொருந்தக் கூறுவாயாயினும் அதனை யாம ஏற்றுக்கொள்வோம் என்றருளிச் செய்தார்.

(வி - ரை) எதிர் மாற்றம் - மறுமொழி.

அணைந்துளன்...பாழாம் கவ்வையின் - பாழ்முத்தியாய் முடிந்ததே என்ற வருத்தத்துள். கவ்வை-சிறுமையடைந்ததனால் நேர்நத வருத்தம் ; பாழாம் கவ்வை என்க. பாழாயிற்றென்று முடிநதமையால நோ்ந்த வருததம்.

ஞானக் கடலமுதம் அனையவர் - பிள்ளையார். பயன்பறறி வந்த உவமம். ஞானக் கடல் - உருவகம்.

பொய்வகையே முத்தியினிற் போனான் - கந்தமைந்தும் கெட்டு முடிந்தபோது ஆன்மா என்பது ஒன்று இல்லை எனபதவன கொள்கையாதலா லிவவாறு கூறினார் ; பொய்வகை - கந்தஙகளா கெட்டுப பொய்யாய் முடிந்த வழி. பொய்வகையே முத்தியினிற் போதலாவது - பொயயாய் அழிந்த நிலையே முததியாம் என்று கொள்க.

எவ்வகையால் அவன் எல்லாம் உணர்ந்தது ; ஈதும் இல்லது - முததியிற போமுன் அவன எல்லாமுணர்ந்தது என்ற வகைதான யாது ? கணவிஞ்ஞானமுடைய அவன் கணத்திற்றோன்றி அழியும் பொருளகளை முழுது ஒருங்குணர்தல எவவகையால் என்றபடி :

"சிலபொருளை யறிநதவறறின் றிறததே யொட்டிச்
சிந்திபப னெப்பொருளுமென்னிற சென்று
பலபொருளா யொன்றுபல பேதமாகிப்,
பயின்றவரு மாதலாற் பார்கரு மாறென்
னுலகுதனி லொருபொருளா குணரும் போதி
னுற்றுணர்த லாராய்த றெளித லுண்டாய
நிலவுமத னுணர்வு பன்மை முன்பி
னின்றிடா தென்பையெல்லா நினைப்ப தெங்கே ?" 96

" முத்திநிலை கணடறங்கள் மொழிந்தா னயின்
முதன்முழுதும் பொன்றிபபின் மொழிந்த வணண
மொததிருந்தே னெய்கூட்டி யுணடிறந்தோ னொருவ
னுலகினில்வந் திதுதீதென் றுரைத்தா லொக்குஞ்

செத்ததுபின் னென்றுரைக்கிற கதியிற் செல்லாத
தோனுரை நீர்பெருகிச் சென்று ருகு
மத்தினள வறியாதிக் கரையோரா தம்மை
யக்கரைககே செல்லவிடு மாசை யாமே" 97

எனவரும் சிவஞான சித்தியார்த் (பரபககம) திருவிருததங்கள இக்கருததை விளக்கு வன. ஈதும் இல்லது - முத்தி பாழாயினது போல உரைததலும இல்லை என்றபடி. உம்மை இறந்ததுதழுவிய எச்சவும்மை.

உரைப்பாயெனினும் - தகக ஏதுக்களாற பொருநத உரைததல் இடலாது என்பது குறிப்பு.

இப்பாட்டால் புததன் அறநூல் உரைததானென்ற நிலைபறறி வேறுமொருவகை யால் வாதம் எடுத்தவாறு.

அமுதமுண்டவர்—என்பதும் பாடம். 921

2820. "உணர்வுபொதுச் சிறப்பென்ன விரண்டின் முன்ன
துளவான மரபொ துமை யுணாக லேனைப்
புணர்சிறபபு மரங்களில்வைத தின்ன தென்ற
லிப்படியால் வரமபில்லாப் பொருள்க ளெலலாந்
தொணருமயிற கினைக்குவைசெய் திடினும வேறு
குறைததவற்றைத் தனித்தனியே யிடினும் வெந்தீத்
துணர்கதுவிச் சுடவல்ல வாறு போலத்
தொகுத்தும்விரித துநதெரிக்குந தொலலோ" னென்றான்.

(இ - ள்) உணாவு...இரணடில - உணாவானது பொதுவும சிறபபும என்று இரணடுவகைபபடும அவற்றுள ; முன்னது.. உணாதல முன்னையதாகிய பொதுவுணர் வானது ஒரு வனததில உள்ளனவற்றை மரவகை என்று பொதுவாக வுணாவது; ஏனை...என்றல் - மறறைய சிறபபு உணாவாவது அவ்வனததிலுள்ள மரஙகளை இன் னவை இன்னவை என்று பிரிதது உணாவது; இபபடியால் ..எலலாம் - இவ்வாறே எல்லாப பொருள்களினுணாவும் ஆம ; கொணருமயிற..போல - கொணடுவரும் விறகு களைக் கூட்டிக் குவிதது தீயிட்டாலும், அவ்வாறனறி வெவவேறாக வெட்டித் தனித் தனியே தீயிட்டாலும வெமமையுடைய தீயின கொழுநது அதனைச் சுட்டு நாசமாக்க வல்லவாறுபோல் ; தொகுததும...என்றான - தொகையாகக கூட்டியும, தனிததனி யாக விரிததும் பழையோனாகிய எம இறைவன தெரிவிப்பன என்று கூறினான்.

(வி-ரை) தொகுத்தும் விரித்துந் தெரிக்கும் தொல்லோன்-உணர்வுநிகழும் கந்தங் கள் அவிந்து முததியிற போகுமுன்னரே எலலாப பொருளும முழு தொருங்குணர்ந்து நூல் உரைத்தல் எவ்வாறென்றும், ஞானம கணபஙகமாதலின எலலாம உணர்ந்த தெவ்வாறென்றும் கேட்ட வினாவுககுச சாரிபுததன விடை கூறியபடி.

இப்படியால் வரம்பில்லாப் பொருள்கள் எல்லாம் - ஒரு வனத்தில் உள்ள மரஙகளைப் பிரிததுக் கூறாது தொகுதியாக வைததுக் காடு என்றல் பொதுவுணாவு; மரஙகளைத் தனித்தனியாகக் காட்டித தேககு - வேங்கை - சந்தனம் - மந்தாரம் என்று கூறி உணர்தல் சிறப்பு உணர்வு. இவ்வாறுதான எலலாப பொருள்களையும் உணரும் உணர்வென்றது - என்றான்.

விறகினைக் குவைசெய்திடினும் - தனித்தனியே இடினும் வெந்தீ சுடவல்லவாறு போல - இஃது அவன் எடுத்துக்காட்டிய உவமை. தீ உணர்வுக்கு உவமிக்கப்பட்டது. தீ விறகுக் குவியலின் இடினும் சுட்டெரிக்கின்றது; தனித்தனி யிடினும் எரிக்கின்றது. அதுபோல உணர்வு எல்லாப் பொருள்களையும் தொகுதியாய்ப் பொதுவாயும் கண்டு கூறும்; தனித்தனியாய்ச் சிறப்பாயும் கண்டு கூறும். இதுபோல் முதல்வன் பொருள்கள் எல்லாம் தொகுத்தும் விரித்தும் உணர்ந்தும் உரைத்தும் ஆம் என்று சாரிபுத்தன் எடுத்துக்காட்டியவாறு.

வரம்பில்லாப் பொருள்கள் எல்லாம் இப்படியால் - "பொருள் எல்லாம்" (2819) என முன்பாட்டிற் கேட்ட அதனை விளக்கினான். ஆல் - அசை.

இடினும் - இடினும் தீ சுடவல்லது எனக. தீ இடுதல் - கொளுவுதல்; தீத் துணர் கதுவி - தீயின் கொழுந்து முடுகி எழுந்து பற்றி.

தொல்லோன் - பழமையானவன்; தலைவன். தொன்மை - எல்லாவற்றையும் உணரும் தன்மைக் குறிப்பு.

உணர்த்தல்—என்பதும் பாடம். 922

2821. எடுத்துரைத்த புத்தனெதி ரியம்பு மன்ப
"ரெரியுணர்வுக் கெடுத்துக்காட் டாகச் சொன்னாய்;
அடுத்தவுணர் வுருவுடைய தன்று சொன்ன
வனலவடிவிற் றுமதுவு மறிதி; நுங்கோன
றொடுத்தநிகழ் காலமே யன்றி யேனைத்
தொடர்ந்தவிரு காலமுந்தொக் கறியு மாகிற்
கடுத்தவெரி நிகழ்காலத் திட்ட தல்லாற்
காணாத காலத்துக் கதுவா" தென்றார். ௬௨௧

(இ - ள்) எடுத்துரைத்த...அன்பர் - முன் கூறியவாறு எடுத்துக்காட்டி மறுமொழி கூறிய சாரிபுத்தனெதிரில் வாதம் கூறும் அன்பராகிய சம்பந்த சரணாலயர்; எரி...அறிதி - தீயின் செயலை உணர்வின் செயலுக்கு உதாரணமாகச் சொன்னாய்; ஆனால் பொருள்களை அடுத்துநின்ற உணர்வு உருவுடையதன்று. அதற்கு எடுத்துக்காட்டாக நீ சொன்ன எரியோ ஒரு வடிவுடையது. அதையும் அறிவாயாக; நும் கோன் ...அறியுமாகில் - உனது தலைவன் தொடுக்கப்பட்ட நிகழ்காலமேயல்லாது மற்றும் அதனை முன்னும் பின்னுமாகத் தொடர்ந்த இறந்தகாலம் எதிர்காலம் என்று இரு காலத்தையும் தொகுத்து ஒருங்கே அறிவானானால்; கடுத்த...கதுவாது என்றார் - அவன் அவ்வாறு உணரும் (முக்காலமுமுணரும்) உணர்வுக்கு எடுத்துக்காட்டாக நீ மொழிந்த பொருளாகிய எரிக்கும் தீயானது நிகழ்காலத்தில் இட்டபோது சுடுதலேயன்றிக் காணாத ஏனை இரண்டு காலத்தும் சுடாதாகும் என்றார்.

(வி - ரை) அனல் வடிவிற்று...எரி நிகழ்காலத் தல்லாற் கதுவாது - எரியினை உணர்வுக்கு எடுத்துக்காட்டாகக் காட்டியதற்கு இரண்டு நிலைகளால் மறுப்புக் கூறியவாறு.

அடுத்த உணர்வு உரு உடையதன்று - எரி வடிவிற்று - உணர்வு உருவம்பற்றியதன்று; தீ வடிவம்பற்றிய புலனாவது. உருவுடைய பொருள் மற்றும் அத்தன்மைத்தாகிய பொருள்களைப் பற்றும் நிலையினுக்கு, உருவுடையதனறாகிய பொருள் மற்றும் பொருள்களைப் பற்றுதற்கு உவமித்தல் பொருந்தாதென்பது இஃது இடவகையாற் பொருத்தமின்மை காட்டியபடி; முற்றும் உணர்தல் கூடாமை என்றவாறு.

உணர்வு நிகழ்காலமேயன்றி ஏனை இருகாலமும் அறியுமாகில் - அனல் நிகழ் காலத்து மட்டும் சுதுவி ஏனை இருகாலத்தும் சுதுவாது - என்றதனால் உவமை கால வகையாலும் பொருந்தாமை காட்டியபடி.

**தொடுத்த...ஆகில் - தொடுத்த** - பஞ்சகந்த விளைவுபற்றிய உணர்வு தொட்ட; **தொடர்ந்த** - முன்னும பின்னுமாகத் தொடர்ச்சியுடைய; **இருகாலம்** - இறப்பும் எதிர்வுமாகிய இரண்டுகாலங்கள்; **நோக்கு அறிதல்** - "தொகுத்தும் விரித்தும் தெரிக்கும்" (2820) என முன்பாட்டிற் கூறியபடி மூன்று காலமும் ஒருங்கு உணர்தல் கூடாமை என்றபடி.

**அறியுமாகில்** - அறியுமென்பது அவன் பக்கமாதலின் தாம் உடம்படாது ஆகில் என்றார்: **ஆகில்** - சுதுவாது என்றது உவமேயம். மூன்றுகாலமு நிகழக் கூறப்பட்ட உவமானம் அவ்வாற்று லமையமாட்டாது ஒருகாலத்துக்கே உரியதாம் என்றபடி.

**இட்டதல்லால்** - இட்டபோது சுதுவுதலல்லாமல்

**காணாத காலம்** - இறப்பும் எதிர்வுமாகிய இரண்டும் காணப்படாதவை; நிகழ் வொன்றே காணப்படும் என்பது.

காட்டாகச் சொன்னால்— என்பதும் பாடம்.    923

2822. "ஆதலினா லுன்னிறைவன் பொருள்க ளெல்லா
மறிந்ததுநும் முத்திபோ லாயிற் றன்றே;
ஏதமா மிவ்வறிவா லுரைத்த நூலும்"
என்றவனுக் கேற்குமா றருளிச் செய்ய,
வாதமா றொன்றின்றித் தோற்றான் புத்தன்;
மற்றவனை வென்றருளிப் புகலி மன்னர்
பாதத்தா மரைபணிந்தா ரன்பர்; தங்கள்
பான்மைபழி புத்தர்களும் பணிந்து வீழ்ந்தார்.    கூஉச

(இ - ள்) ஆதலினாலே, அன்றே - முன் கூறியபடி எடுத்துக்காட்டிய பொருள் செல்லாது நீ மேற்கொண்ட பொருள் வீழ்த்துப்பட்டதாதலினாலே, உனது தலைவன் எல்லாப் பொருள்களையும் முழுதொருங்குணர்ந்த செய்தியும் நீ கூறிய முத்தியிலக்கணம் பாழாக முடிந்தவாறு போல இதுவும் பாழாய் ஒழிந்தது; இவ்வறிவால் உரைத்த நூலும் ஏதமாம் - இத்தன்மைய கிரமமாத அறிவினாலே அவன் உரைத்த உனது பிடக நூலும் குற்றமாம், என்று...அருளிச்செய்ய - என்று வாத மேற்றுவந்த அந்தச் சாரி புத்தனுக்கு ஏற்கும் வகையாலே உண்மை உணர்த்தியருள; வாதம்...புத்தன் - மேலே செய்யும் வாதம் ஒன்றுமில்லாமல் சாரிபுத்தன் தோல்வியுற்றனன்; மற்றவனை... அன்பர் - அன்பராகிய சமபாத சரணலயர் மாறுபட்ட அவனை இவ்வாறு வென்று அருளிச் சீகாழி வேந்தராகிய பிள்ளையாரது திருவடித் தாமரைகளைப் பணிந்தார்; தங்கள்...வீழ்ந்தார் - தங்களுடைய சமயத்தன்மை அழிந்த புத்தர்களும் (பிள்ளையாரது திருவடிகளிற்) பணிந்து வீழ்ந்தார்கள்.

**(வி - ரை) ஆதலினால்** - உன் இறைவன் உன் சமயக் கொள்கைப்படி முழு தொருங்குணர்ந்த நிலை அளவை வகையால் நிறுவப்படாதொழிந்து மறுக்கப்பட்டது ஆதலினாலே.

**உன் இறைவன்...முத்திபோல் ஆயிற்று** - *அறிந்தான் என்ற தன்மையும், முத்தி பாழாய் ஒழிந்தவாறே பாழாயிற்று;* **போல் ஆயிற்று** - *போலப் பாழ் எனப்பட்டு ஒழிந்ததாயிற்று; "முத்தியெனு மதுவும் பாழாம்" (2819) என்று முத்தியினை பாழாயின தன்மை முன் முடிக்கப்பட்டதாதலின் அதனை உவமை காட்டி அதுபோல் என்றார்.*

**இவ்வறிவால் உரைத்த நூலும் ஏதமாம்** - **நூல்** - *பிடகம்; அறிவு முற்றொருங் குணர்வின்றி முடிந்ததால் இவ்வறிவுகொண்டு உரைத்த நூலும் குறைபாடுடையது என்பது சொல்லாமலே அமையும்; தானே போதரும் என்று முடித்தபடி. முன் (2819) வினவிய இரண்டு தன்மைகளும் சாரிபுத்தனுக்குத் தோல்வியாய ஒழிதலை முடித்துக் காட்டியவாறு;* **குற்றமாவன** - *நால்வகைப் பவுத்தா மத மறுதலைபற்றிச் சிவஞான சித்தியார் (பரபக்கம்) பார்க்க.*

**ஏற்கும் ஆறு அருளிச் செய்ய** - *பவுத்த நூலுட் கூறப்படும் ஏனையவும் இவ்வாறே அவலமாய ஒழிவன என்றும், சைவ உண்மைகள் வேத சிவாகமங்களுட் கூறப்படு வனவே உண்மைநெறி காட்டுவன என்றும் பொதுப்படக் கூறித் தெளிவுறுத்த; மேல் வரும் பாட்டுப் பார்க்க. சிறப்பு வகையால் ஆட்கொண்டு தீக்கை செய்து உபதேசித்த நிலை அதன்மேல் வரும் பாட்டிற் கூறுதல் காண்க.*

**வென்றருளி** - *வாதத்தில் வென்று.* **அருளி** - *அவன் வலிந்து வந்து சினந்து வாதத்தினை முற்பட்டு அறைகூவி அழைத்தானாயினும், தாம் இகலினாலன்றி அருட் டன்மையால் வெற்றிகொண்டனர் என்பதாம்.*

**பணிந்தார்** - *"புகலி காவலர் பாதம் போற்றி அருளாற" (2812) றொடங்கி அதன் துணையால் வென்றாராதலின் வெற்றிகொண்டபின் அதன் பொருட்டுப் "புகலி மன்னர் பாததாமரை பணிந்தார்" என்க. ஈரிடத்தும்* **புகலி காவலர்** - **புகலி மன்னர்** *என்ற தன்மையாற் கூறியது இக்குறிப்பு.*

**பான்மை** - *தாங்கள் மேற்கொண்ட சமயப் பண்பு; சமய நிலை.*

**பணிந்து வீழ்ந்தார்** - *தமது தோல்வியினைக் கண்டு ஒப்புக்கொண்டும், சைவர்களது வெற்றியினையும் உண்மையினையுங் கண்டும் பணிந்தனர்.* 924

2823. புந்தியினா லவருரைத்த பொருளின் றன்மை
பொருளன்றாம் படியன்பர் பொருந்தக் கூற;
மந்தவுணர் வுடையவரை நோக்கிச் "சைவ
மல்லாது மற்றொன்று மில்லை" யென்றே
அந்தமில்சீர் மறைகளா கமங்க ளானே
யலகில்கலைப் பொருளுணர்ந்தா ரருளிச் செய்ய,
சிந்தையினி லதுதெளிந்து புத்தர் சண்பைத்
திருமறையோர் சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்தார். கூஉ௫

**(இ - ள்) புந்தியினால்...கூற** - *புத்தியினையே பற்றுக்கோடாகக் கொண்டு அந்தப் புத்தர்கள் கூறிய பொருள்களின் தன்மைகள் உண்மைப்பொருள்க ளல்லவாகி முடியும் படியினை அன்பராகிய சம்பந்த சரணாலயா பொருந்தும்படி எடுத்துச் சொல்ல;* **மந்த வுணர்வுடையவரை...என்றே** - *மந்தமாகிய உணர்வு உடைய அந்தப் புத்தர்களைப் பார்த்து சைவத்திறமேயல்லாது மற்றொன்றும் இல்லையாம் என்றே;* **அந்தமில்...அருளிச் செய்ய** - *அழிவில்லாத சிறப்பையுடைய வேதங்களையும், ஆகமங்களையும், அவற்றின்*

வழிவரும் ஏனைய அளவற்ற கலைப் பொருள்களையும் உணர்ந்த பிள்ளையார் அருளிச் செய்ய; சிந்தையினில்...தாழ்ந்தார் - மனத்தில் அவ்வுண்மைகளைத் தெளிந்து கொண்டு புத்தர்கள் சீகாழியில் வந்த திருமறையவராகிய பிள்ளையாரது செம்மையாகிய திருவடிகளில் சென்று வணங்கினார்கள்.

(வி - ரை) பொருளின் றன்மை - (1) தலைவன் தன்மையும், அவன் காட்டிய உறுதிப்பொருள் என்னும் முத்தியின் தன்மையும்; (2) தலைவன் முற்றுமொருங் குணர்ந்த தன்மையும், அவன் உரைத்த நூலின் தன்மையும் என்ற இவைகளின் கொள்கை; "உங்கடலை வனும்பொருளும் உரைக்க" (2812) எனவும், "பொய் வகையே முத்தியினிற் போனான் முன்பே பொருளெல்லாம் உணர்ந்துரைத்துப் போனான் - என்றாய்; எவ்வகையா லவனெல்லா முணர்ந்தது?" (2819) என இந்த இரண்டு பொருள்களைப்பற்றியே வாதம் தொடங்கி நிகழ்த்தப்பட்டது.

பொருளன்றாம்படி காட்ட - அவனது தலைவனும் பொருளும் முன் 2813-2814-2816-லும், அவை பொருளல்லவாம்படி 2815-2816-2717-2818 பாட்டுகளிலும் காட்டப்பட்டன. தலைவனது உணர்வின் தன்மையும் நூலின் தன்மையும் 2820-லும் அது பொருளன்றாம்படி 2821-லும் காட்டப்பட்டன.

பொருளன்றாம்படி - உண்மைப்பொருளாகாத நிலை. படி - தன்மை-நிலை. படியினை - இரண்டனுருபு தொக்கது.

புந்தியினால் - புத்தர் கொள்கைப்படி புத்தி தத்துவமே முடிந்த நிலையாதலின் புத்தி தத்துவத்தையே பற்றுக்கோடாகக் கொண்டு.

சைவமல்லாது மற்றொன்றுமில்லை - சைவம் - சிவசம்பந்தமுடைய சமயம்; சிவத்தின் சம்பந்தம். எல்லாப் பொருள்களும் கொள்கைகளும் சைவத்தின் அங்கங்களாக அதனுள்வைத் தடங்குவன என்பது. சைவம் - சைவத்திற் கூறப்படும் தலைவனும், முத்தியும், நூலும் இவையே பொருள் என்பார் "அந்தமில்...உணர்ந்தார்" என்றார்.

அல்லாது ஒன்றுமில்லை - எதிர்மறைச் உறுதி குறித்தன. அடங்காத பொருளும் சமயங்களுமில்லை இதனை மேல்வரும் பாட்டில் "நிறைவுஞ் சரிப்பணவுஞ் சைவமேயாம் நிலைமை" (2824) என்று மேலும் விரிப்பது காண்க

இல்லை - இன்மை - உண்மைப்பொருள் பெறுந் தன்மை. "சைவ சமயமே சமயம்", "சைவத்தின் மேற்சமயம் வேறில்லை" என்ற கருத்துக்கள் இதனால் சமய நிச்சயம் பண்ணிக் காட்டியபடி.

அந்தமில்சீர்...உணர்ந்தார் - ஆளுடைய பிள்ளையார்; கலைப் பொருள் - வேத சிவாகமங்களின் வழிவரும் கலைஞான நூல்களின் பொருள் உணர்ந்தார் - முழுமையாகிய சிவஞானத்தை ஓதாதுணர்ந்தார், "முன்னிய கலைப்பொருளு மூவுலகில் வாழ்வும், பண்ணிய வொருத்தர்" (பிள். தேவா - இந்தளம் - புகலி - 1); அந்தமில் சீர் - முதல்வன் போலவே அவனருளிய வேத சிவாகமங்களும் அழிவில்லாதன என்பது.

அருளிச் செய்ய - புத்தன் கூறிய பொருள் பொருளன்றாம்படியினை வாதமுகத்தால் அன்பர் காட்டப் பின்னர்ப் பொருளாவது இது என்று பிள்ளையார் முடித்துக் கூறி அவர்களை வழிப்படுத்தியவாறு.

சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்தார் - வழிப்படுத்திய அருளிப்பாட்டினை ஏற்றுத் தாழ்ந்து வணங்கினர். தாழ்தல் - விரும்புதல் என்றலுமாம். அவ்வாறு உண்மைப் பொருளில் சேர்ந்து தாழ்ந்தாராதலின் அவர்பால் அருளோக்கம் வைத்துப் பாசநீக்கித்

தீக்கை புரிந்து உபதேசித்துப் பிள்ளையார் அவர்களைச் சைவராக்கி உய்யச்செய்த நிலை மேல்வரும் பாட்டிற் கூறப்படும். 925

2824. அன்றவர்க்குக் காழியர்கோன் கருணை நோக்க
மணைதலினு லறிவின்மை யகன்று நீங்கி
முன்றொழுது விழுந்தெழுந்து சைவ ரானார்;
முகைமலர்மா ரியின்வெள்ளம பொழிந்த தெங்கும்;
நின்றனவுஞ் சரிப்பனவுஞ் சைவ மேயாம்
நிலைமையவர்க் கருள்செய்து, சண்பை வேந்தர்
சென்றுசிவ னார்பதிகள் பணிய வேண்டித்
திருக்கடவூ ரதன்மருங்கு சேர வந்தார். ௬௨௬

(இ - ள்) அன்று...அணைதலினால் - அன்று அந்தப் புத்தர்களுக்குச் சீகாழித் தலைவராகிய பரமாசாரியரது அருட்பார்வை அணைந்தபடியினாலே; அறிவின்மை அகன்று நீங்கி - அறிவைமறைக்கும் தன்மையுடைய பாசவீட்டம் தம்மைவிட்டு நீங்கி யமையால்; (அப்புத்தர்கள்) முன்...ஆனார் - பிள்ளையார் திருமுன்பு தொழுது நிலமுற விழுந்து எழுந்து (அவரால் திருநீறு தரப்பெற்று அணிந்து) சைவராளாயினர்; முகை மலர்...எங்கும் - தேவ மலர்மழை எங்கும் பொழிந்தது; நின்றனவும...அருள் செய்து - நின்றன என்றும் வந்தியங்குவன என்றும் கூறப்படும் எல்லா உயிர்வகை களும் சைவமேயாகும் என்ற நிலைமையினை அந்தப் புத்தர்கள் அறிந்துய்யும்படி அருளிச் செய்து; சண்பை வேந்தர்...வந்தார் - சீகாழித்தலைவராகிய பிள்ளையார் சிவபெருமான் எழுந்தருளிய பதிகளைச் சென்று பணியும்பொருட்டுத் திருக்கடவூரின் பக்கத்திற் சேரும்படி எழுந்தருளி வந்தனர்.

(வி - ரை) அன்று - கருணை நோக்கம் - அணைதலினால் - முன்னர்ப் புல்லறி வினராயப் பெருமைகொண்டு கனன்று வலிந்த முறையில, திருச்சின்னம் ஊதித் தெரு விற் செலவதைத் தடைசெய்தனர் (2804); பின்னர் வாக்கின் போர் ஏற்று எதிர்ந்து வந்தனர் (2809); இவ்வாறு மாந்த உணர்வுடையவர்கள் இப்போது புண்ணியப் பேறுகிய பக்குவம் வரப் பிள்ளையாரது கருணைநோக்கம் எய்தப்பெற்றனர்; அதனால என்க. அன்று - அப்பொழுது. கருணை நோக்கம் - பக்குவம் வரும் நிலையில் ஆசாரி யன் செய்யும் தீக்கைகளுள் ஒன்று. சாட்சுஷி தீக்கை என்பார். "பார்த்த பார்வையா விரும்புணட நீரெனப் பருகும் தீர்த்தன" (திருவிளை. புரா); "வானேன் பவனி வரக்கண்டு வல்வினையேன், ஏனோரு மேதத்தலைகண் டேத்தினேன - றானென்னைப், பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லா, நீத்தான நினைவுவே றாகி னான்" (நெஞ்சுவிடு தூது - 89-90).

அறிவின்மை அகன்று நீங்கி - "சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்தார்க" ளாதலின் "பக்குவநிலை வரப்பெற்றபோது ஆசாரியரது அருட்பார்வை அணையப் பெற்றனர்; பெறவே, முன்னிருந்த "மாந்த வுணர்வு" (2823) நீங்கப்பெற்று அறிவின்மையாகிய ஆணவமலப் பிணிப்பும் சிறிது நீங்கலாயிற்று எனபார் அறிவின்மை அகன்று என்றார். அறிவின்மை - அறிவை மறைக்கும் ஆணவமலச் செயல்.

முன் தொழுது விழுந்து எழுந்து - சம்பந்த சரணாலயர் வாதத்தில் தெருட் டிய வகையால் தமது பொருள் பொருளன்றாம்படி கண்டு தமது பான்மை

அழித்தனர்; அதன்பின் சைவம் அல்லாது மற்றொன்றுமில்லை என்ற போத உபதேச மொழியாற் றெளிவுபெற்றுத் தாழ்ந்தனர்; அதனால் அருட்பார்வை பெற்றனர்; அதனால் அறியாமை நீங்கித் தொழுது வீழ்ந்தனர்; அதனால் தீக்கையும் நீறும் பெற்றுச் சைவராயினர் என்று இவ்வாறு படிமுறையால் உய்திபெறும் வகை கண்டுகொள்க; "பெயாதது மவனுக்கே பிச்சியானாள்...அன்னையையு மத்தனையு மன்றே நீத்தாள்... தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே" (தேவா) என்றவாறு உண்மை காண்க.

சைவரானார் - திருநீறு தரப்பெற்று என்பது அவாய்நிலை. "பரசமய நிராகரித்து நீறாக்கும்" (1917) என்றதும், பிறவும் நினைவுகூர்க. நீற்று நெறியே சைவநெறி என்பதும் கருதுக. பௌத்தநெறி விட்டுச் சைவராயினார் என்றமையாலே இதனை வேறு கூறிற்றிலர், சிறப்புப்பற்றிச் சைவராயினமை கூறி விடுத்தனர் "விதிவிலவு வேதநெறியே யாக்கி வெண்ணீற்றின் சார்வினான் மீத்துயர்ந்த கதியருளி" (2790) என்றது கருதுக.

நின்றனவுஞ் சரிப்பனவுஞ் சைவமேயாம் நிலைமை - முன்பாட்டிற் கூறிய உண்மைப்பொருளை விரித்து உடன்பாட்டு வகையால் உபதேசித்தருளியது. இதனாற் சைவத்தின் பொருணிச்சயம் கூறியபடி.

நின்றனவும் சரிப்பனவும் - நின்றன - எண்ணிறந்த உயிர்களின் தொகையாகி நின்றன. இவை பசுக்கூட்டம். சரிப்பன - இறைவனது படைப்புத்தொழிலிற் பட்டுப் பிறவிகொண்டு பாசநீக்கம் பெறும் வழியில் ஈடுபடுத்தப்பட்ட உயிர்த்தொகை. இவை யிரண்டாலும் "ஆருயிரத் தொகை - வானதிகழ் தளை" என இரண்டு பொருளும் பெறுவிக்கப்பட்டன.

நின்றனவும் சரிப்பனவும் சைவமேயாம் என்றதனால் உயிர்கட்கெல்லாம் அருள் வைத்துப் படைப்பு முதல் அருளுதல் வரை ஐந்தொழிலும் செய்யும் "அன்றே தொல்பதி"யும், அவனது சைவநெறித் திறமும் பெறுவிக்கப்பட்டன. சரிப்பன என்பது நின்றன என்ற கருத்தும் இது. இங்கு இவ்வாறன்றி நின்றன என்பதற்கு நிற்பன என்ற பொருளே கொண்டு அதற்கேற்ப அசரம் சரம் எனப் பொருள்கொள்வாரு முண்டு. "தாவில சராசரங்க ளெல்லாம் சிவமெருக்கும் பிள்ளையார்" (1924) என்ற கருத்தினையும், திருவோத்தூரில் பனைகள் சிவப்பேற்றினை அடையும் நிலையினையும் இங்கு வைத்துக் காண்பர். சைவம் - முன்பாட்டிற் சைவம் என்றது கொண்மையினை; இங்குச் சைவம் என்றது பொருளாகிய சிவப்பேற்றினை.

நிலைமை - நிலைபேறாந் தன்மை; மாறுபாடின்றி நிலைபெறுதல்; ஒழியாத பேரின்பம்.

சென்று சிவனார் பதிகள் பணியவேண்டி - சென்று - பிள்ளையார் திருநள்ளாறு பணிந்து பதி பிறவும் வணங்கச் செல்லும் வழியில் போதிமங்கையில் இப்புத்தர்களது தடைநிகழ, அதில் அவர்கள் தோல்வியுற்றுச் சைவர்களாகியபின், அதன்பின் அத்தடை நீங்கியபடியால் தமது வழிச்செலவை மீண்டும் தொடங்கிப் பிள்ளையார் சென்று என்க. பணிய வேண்டி - முன் கொண்டு வழிபட்ட கருத்தினையே தொடர்ந்து விரும்பி என்க.

முகைமலர்மாரியின் வெள்ளம் எங்கும் பொழிந்தது - திருவருள் வெளிப்பாட்டின் நிகழும் தெய்வப் பூமாரி, திருவருள் வெளிப்பாடாவது பிள்ளையார் அவதரித்த கருத்து நிறைவேறப்பெறுதல். அஃது பரசமய நிராகரிப்பும் நீற்றின் ஆக்கமுமாம். 926

**வேறு**

2825. அந்நகரி லடியார்க ளெதிர்கொள்ளப் புக்கருளிக்
கொன்னவிலுங் கூற்றுதைத்தார் குரைகழல்கள் பணிந்தேத்தி
மன்னியமர்ந் துறையுநாள், "வாகீச மாமுனிவர்
எந்நகரி லெழுந்தருளிற்" றென்றடியார் தமைவினவ, கூஉஎ

2826. அங்கவரு மடிபோற்றி யாண்டவர செழுந்தருளிப்
பொங்குபுனற் பூந்துருத்தி நகரின்கட் போற்றிசைத்துத்
தங்குதிருத் தொண்டுசெயு மகிழ்ச்சியினாற் சார்ந்தருளி
யெங்குநிகழ்ந் திடவிருந்த படியெல்லா மியம்பினார். கூஉஅ

2825. (இ - ள்) அந்நகரில்...புக்கருளி - அந்தத் திருப்பதியினில் அடியவர்கள் தம்மை எதிர்கொண்டு அழைக்க நகரத்தின் உள்ளே (பிள்ளையார்) புகுந்தருளி; கொன்னவிலும்...நாள் - உயிர் பிரிக்க வரும் கூற்றுவனை உதைத்தருளிய இறைவரது சத்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளைப் பணிந்து துதித்து அங்குப் பொருந்தி விரும்பி வீற்றிருக்கும் நாளிலே; வாகீச மாமுனிவர்...வினவ - வாகீசத் திருமுனிவராகிய திருநாவுக்கரசு நாயனார் எந்தத் திருநகரில் எழுந்தருளி யிருந்தது என்று அடியார்களைக் கேட்க; கூஉஎ

2826. (இ - ள்) அங்கு அவரும் அடிபோற்றி - அங்கு அவ்வடியவர்களும் பிள்ளையாரது திருவடிகளைத் துதித்து நின்று; ஆண்டவரசு...படி எல்லாம் - அரசுகள் பொங்குகின்ற நீர்வளமுடைய காவிரி சூழ்ந்த திருப்பூந்துருத்தியில் எழுந்தருளி இறைவரைத் துதித்துத் தங்கித் திருத்தொண்டு செய்யும் விருப்பத்தினால் அங்குச் சேர்ந்தருளி எங்கும் தமது பண்பு நிகழும்படியாகத் தங்கியிருந்தபடியினை எல்லாம்; இயம்பினார் - சொன்னார்கள். கூஉஅ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2825. (வி - ரை) கொல் நவிலும் கூற்றுதைத்தார் - கொல் - கொலை; முதனிலைத் தொழிற்பெயர்; கொலையினைக் கூறும; இரண்டனுருபு விரிக்க; "வீடுநாளணுகிற் றென்று மெய்கொள்வான் வந்த காலனை" (தேவா). மார்க்கண்டரது உயிரை வவ்வுதற் பொருட்டுக் கொல்லுதலைக் கூறிவந்த கூற்றுவனை உதைத்த என்றது தலசரிதம் பற்றிய குறிப்பு. குங்குலியக்கலய நாயனார் புராணமும், தலத் தேவாரங்களும் பார்க்க. கூற்று - உடலையும் உயிரையும் வேறுபடுத்திக் கூறு செய்பவன். கூறு - பகுதி. காரணக் குறிப்புப்பெற இப்பெயரால் கூறினார் (2432).

மன்னியமர்ந்துறையு நாள் - இத்திருநகரில் முன்முறை திருநாவுக்கரசர் பெருமானும் ஆளுடையபிள்ளையாரும் ஒருங்கு எழுந்தருளிக் குங்குலியக்கலய நாயனார் திருமடத்தில் திருவமுது செய்து அமர்ந்தருளியிருந்த வரலாறு இங்கு நினைவுகூர்தற்பாலது. 862 - 863-ம், 1512-ம், 2431 - 2433-ம் பார்க்க. இந்நினைவுகள் எல்லாம் பெற மன்னி என்றும், அமர்ந்து என்றும் கூறினார். அமர்தல் - விரும்புதல்.

உறையு நாள்...வினவ - முன்முறையில் இருவரும் உடனிருந்த நினைவினாலும், திருமறைக்காட்டில் அவரைத் தடுத்து நிறுத்தித் தாம் பிரிந்து சென்ற நினைவினாலும் (1554—2516) காணும் காதல் வர இவ்வாறு இங்கு வினவுதல் நிகழ்ந்ததென்க.

வாகீச மாமுனிவர் - வாகீசர் - (1555) "வாகீசர் மருதவண்ணம் வணங்கி யருள் செய்து விடைகொடுத்து மன்னுமை, காதலனா லருமையுறக் கலந்து நீங்கி" (2516)

என்ற வரலாற்று முறையாற் பிரிந்து சென்ற முன்றொடர்ச்சியின் நினைவு கூர்தற் பொருட்டு இங்கு வாகீசர் என்ற இப்பெயரால் கூறிய நயம் கண்டுகொள்க. மாமுனிவர் - "வருஞானத் தவமுனிவா வாகீசர்" (1266); "பரமுனிவன்" (1694) என்றவையும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

முனிவர் - எழுந்தருளிற்று - இறைவனையும், அத்தன்மை சார்ந்த பெரியோரையும் கூறும் மரபு வழக்கு.

அடியார்தமை வினவ - பலதிறத்திலும் பல நாட்டினின்றும் அடியார்கள் அவ்வப்போது திருக்கூட்டத்திற் சார்ந்தமையாலும், திருக்கடவூரின் அடியார் முன்னர்த் தாம் வாகீசமுனிவரைப் பிரிந்து சென்றருளிய திருமறைக்காட்டின் அணியராந்தன்மையாலும், அடியார்களுக்கு இத்தகைய பெரியார்களின் நிகழ்ச்சிகள் பற்றியே அறிவும் செயலும் தொடர்பும் செல்லுதல் முன்னாளின் இயல்பாதலாலும் அடியார்களை வினவியருளினார். அடியார் - தமது திருக்கூட்டத்திலிருந்தாரும், திருக்கடவூரிலிருந்தாரும் ஆகியவர்களுள் அறிந்தார். 927

2826. (வி - ரை) ஆண்ட அரசு எழுந்தருளி...இருந்தபடி எல்லாம் - அரசுகள் புராணம் பார்க்க. எழுந்தருளி - தமது யாத்திரையில் போந்தருளி, தங்கு - அந்நகரில் தங்கித் திருமடம் சமைத்துப் பலநாள் எழுந்தருளியிருக்கும். "தங்கித் திருத்தொண்டு செய்வார்...திருமடமங்கொன்று செய்தார்" (1654).

தொண்டு செயும் மகிழ்ச்சி - அந்நகரிலே தங்குதல் உடல் நலம், நீர்வளம் முதலிய வேறு எக்காரணங்களாலுமன்றித் திருத்தொண்டு செய்து தங்குதலிற் கண்ட மகிழ்ச்சியே என்பதாம். "அங்குறையுந் தன்மை வேண்டி" (1654)

எங்கும் நிகழ்ந்திட இருந்த - அரசுகள் அங்குத் தங்கிய நலம் எங்கும் பெருகி நிகழ்ந்திட. நலம் உலகம் போற்ற. யாவரும் அறியும்படி.

இருந்தபடி எல்லாம் - படி - நிலை; தன்மை. எல்லாம் - முன் அரசுகள் புராணத்துள் இதுபற்றி விரித்த நிலைமைகளை எல்லாம். முன் வரலாறுகளை ஆண்டு விரித்துக் கூறியருளியமையால் இங்கு எங்கு நிகழ்ந்திட இருந்த என்று சுருக்கிச் சுட்டியமட்டிலமைந்தார். 928

2827. அப்பரிசங் கவர்மொழிய வாண்டவர சிணைக்காணும்
ஒப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க வொளிபெருகு
மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கி யருள்பெற்றுச்
செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றார், கூஉக

2828. பூவிரியுந் தடஞ்சோலை புடைபரப்பப் புனல்பரக்குங்
காவிரியின் றென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தவிடம்
மேவியினி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு
நாவரச ருழைச்சண்பை நகரரசர் நண்ணுவார்; கூஉ0

2829. அந்தணர்சூ ளாமணியா ரூந்தருந்திக் கணித்தாக
வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி
"நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது
முந்தைவினைப் பய" னென்று முகமலர வகமலர்வார்; கூஉக

2830. "எதிர்சென்று பணிவ" னென வெழுகின்ற பெருவிருப்பால்
நதிதங்கு சடைமுடியார் நற்பதங்க டொழுதந்தப்
பதிநின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பால்
முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார். ௬௩௨

2827. (இ - ள்) அப்பரிசு அங்கு அவர் மொழிய - அத்தன்மைகளை அவ்வடியார்கள் கூற; ஆண்ட அரசினை...ஓங்க - ஆளுடைய அரசுகளைக் காணவேண்டுமென்கின்ற ஒப்பற்ற பெருவிருப்பம் மிகுந்து மேன்மேலும் பெருக; ஒளிபெருகு...அருள் பெற்று - அருளொளி பெருகும் மேகம்போன்ற கரிய கண்டத்தையுடைய இறைவரது திருவடிகளை வணங்கி அருள்விடை பெற்றுக்கொண்டு; செப்பரிய...செல்கின்றார் - செல்லுதற்கரிய புகழினையுடைய சீகாழிப் பிள்ளையார் செல்கின்றாராகி. ௬௨௯

2828. (இ - ள்) பூவிரியும...போய் - மலர்கள் விரிகின்ற பெரிய சோலைகள் பக்கங்களிற் பரந்து நிகழும்படி நீர் பரவி ஓடுகின்ற காவிரியினது தென்கரையின் வழியாகச் சென்று; கண்ணுதலார்...இறைஞ்சி - நுதற்கண்ணுடைய இறைவர் மகிழ்ந்து எழுந்தருளிய பதிகளை அடைந்து இனிதாக விரும்பி வணங்கிக்கொண்டு போய்; விருப்புறும்...நண்ணுவார் - விருப்பம் பொருந்திய உண்மையடியார்களுடனே திருநாவுக்கரசரிடம் சீகாழிக்கரசராகிய பிள்ளையார் நண்ணுவாராகி; ௬௩0

2829. (இ - ள்) அந்தணர் சூளாமணியார்...வந்தருளும் - மறையவர்களின் சிகாமணியாராகிய பிள்ளையார் திருப்பூந்துருத்திக்கு அணிமையாக வந்தருளுகின்ற; பெருவார்த்தை...கேட்டருளி - பெருவார்த்தையினை வாகீசமாமுனிவர் கேட்டருளி; நந்தமை...என்று - "நம்மையாளுடைய பிள்ளையாரை நாம் எதிர்கொண்டு சென்று வணங்குவது நாம் முன் பிறவிகளிற் செய்த நல்வினையின் பயனாகப் பெறத்தக்கதாம்" என்று கொண்டு; முக மலர அக மலர்வார் - முகமலர்ச்சி கொள்ள மனமலர்வாராய்; ௬௩௧

2830. (இ - ள்) எதிர் சென்று...தொழுது - எதிர் சென்று வணங்குவேன் என்று திருவுள்ளத்தில் மேன்மேல் எழுகின்ற பெருவிருப்பத்தினாலே கங்கையாறு தங்குதற்கிடமாகிய சடைமுடியினை உடையவராகிய சிவபெருமானது நல்ல திருவடிகளைத் தொழுது; அந்தப் பதிநின்றும ..வந்தணைந்தார் - அந்தப் பதியினின்று புறப்பட்டுச் சென்று பரசமயங்களின் கேட்டினைச் சிதைத்த பிள்ளையாரிடத்து முதிர்கின்ற பெருந் தவத்தோர்களாகிய அடியார்களின் முன் பொருந்த வந்து அணைந்தருளினர். ௬௩௨

இந்த நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண்டுரைக்க நின்றன.

2827. (வி - ரை) அப்பரிசு - "எழுந்தருளி...இருந்தபடி எல்லாம்" (2827) என முன்பாட்டிற் கூறியவை. இவை திருப்பழையாறை வடதளியில் சமணர் தூர்த்தது இறைவர் கோயிலை விளக்கங் கண்டதும், திருப்பைஞ்ஞீலியினருகில் இறைவர் அருளாற் றந்த பொதி சோறும் நீரும் உண்டதும், தொண்டை நன்னாட்டுப் பதிகளை வணங்கிக் கயிலை காணச் சென்றதும், அங்குநின்று மீண்டு திருவையாற்றிற் கயிலைக் காட்சி கண்டதும், அதன்பின் சோழநாட்டுப் பதிகளை வணங்கித் திருப்பூந்துருத்தியிற் சார்ந்து அங்குறையுந் தன்மை வேண்டித் திருமடம் செய்து எழுந்தருளியிருந்ததும் முதலாயின. இவை (1555 முதல் 1655 வரை) அவர்தம் புராணத்துள் விரிக்கப்பட்டன. இவையனைத்தும் பெறவைத்து இருந்தபடி எல்லாம் என்ற தெய்வக் கவிநலம் கண்டுகொள்க. இவ்விரு பெருமக்களும் திருமறைக்காட்டிற் பிரிந்தபின் நிகழ்ந்த

அரசுகள் சரித வரலாறறினை ஈணடுத தொகுததுப பிளளையாரபால குறிததுரைதத ஆசிரியர், பிள்ளையாரது சரித வரலாறறை அரசுகள்பாலும் இவ்வாறே, " புகுந்தெல்லாம், தூக்கின் றமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை, தேககுந் திருவாயாற செபபி யருள் செய்தார் " (2839) என்றகூறி யமைவுபடுத்திய கவிநலமும கணடுகொளக. இரு பெருமககளும் பிரிநதகாலையில் ஆளுடைய அரசுகள் தம்முடன வருதலை மறுததத தவிர்த்துப் பிளளையார் சென்றருளினாரதலின் மீணடு வந்து அரசுகளைக கூடியபோது இடைப்பட்ட சரித நிகழ்ச்சிகள் இவ்வாறு ஒன்றுபட் டறியபபடவேண்டிய நிலையினையும் கண்டுகொள்க. அரசுகள் புராணத்தினுள்ளும் இவ்வமைதி ஏறறபெற்றி விளஙகுதல் காண்க.

ஆண்டவரசினைக் காணும்...மிக்கோங்க - உடன் வரமுயன்றவரை மறுதது தாம்மட்டும் சென்றாராதலானும, தநதையனபு பூண்டு தாம அமணாபாற் சேறலை அருளினாராதலானும் காணும அவா மிககதென்பது.

ஒளிபெருகு.. கண்டர் - கறை ஒளிபெருகுதலாவது - அழிவு செயயும் விடம் என்ற தன்மை காட்டாது ஆககம் தரும் அளியின் தன்மை காட்டி அன்றமுத விளைவு வரை அடைநதாரை உயவிதது நிறறல ; "கருநகதிா விரிகருமேனிக காமரு குழவி" (665).

கழல் வணங்கி அருள் பெற்று - விடைகொளளும பொருட்டாலும, அரசுகளைக் காணும் பேறறினை இனிது கூடடுவிததருளும் பொருட்டாலும வணங்கி எனக.

செல்கின்றார் - பிள்ளையார் - நண்ணுவார் (2828) - வாதநுழைநம் (2829) - என்று மேல்வரும் பாட்டுககளுடன முடிகக 929

2828. (வி - ரை) புடை பரப்ப - பககஙகளில் எல்லாம பரநது விளஙகிச் செழிக்குமபடி ; பரக்கும் - பரவி ஓடுகின்ற. காவிரியின இரு கரையிலும சோலைகள் செழிததலை இன்றும காணலாம் காவிரியில நீா பெருகும்போது அநநீா மேல் உயர்ந்து இருகரையின் சோலைகளுட்பரநது சென்று அவறறைச் செழிப்பிததலகாணக.

தென்கரை போய்...இடம் - இறைஞ்சி - திருககடவூா காவிரித தெனகரையில் உள்ள பதி ; அஙகுநினறும அதுபோலவே தெனகரையில உளள பதியாகிய திருப்பூந்துருத்தியினைச சென்றடைவாராயப பிளளையாா, தெனகரையில உளள பிற பதிகளை வணஙகி மேறகுநோககிச செலகினறாா எனக.

மேவி - அமர்ந்து - இறைஞ்சி - பதிகளிற சோநது வழிபடும நிலைகள.

விருப்புறு மெய்த்தொண்டர் - பிளளையாருடன வநதாரும அஙகஙகு வநது கூடுவோரும.

நாவரசர் - நக்ராசர் - சொலலணி ; இருவரும ஒபபாக தனமையும குறிததபடி. உழை - ஏழனுருபு. இரு பெருமககளும முன கூடிபபிரிநத இதனிடையில ஒபபப பரசமய நிராகரித்த வரலாற்றுக குறிபபும காணக. 930

2829. (வி - ரை) பிளளையாரும, சணபைநக ராசரும் ஆகிய அந்தணர் சூளாமணியார் என்க

சூளாமணி - முடிமணி. சிரோ ரத்தினம் எனப. சூடா என்ற வடசொல சூளா எனத் திரிநதுநின்றது.

பெருவார்த்தை - மிக்க நன்மைதரும் சொல். அனபர் சொலலக கேட்டாராதலின் வார்த்தை எனறாா. வார்த்தை - ஈணடு அதனாற குறிககபபடும வநதருளும் செயலுககாயிற்று.

" நந்தமை...பயன் " என்று - இது நாவரசர் திருமனத்தெழுந்த கருத்து. பிள்ளையார் தாமே எழுந்தருளி வந்தருளும் பேறு கிடைக்கப்பெற்றது முன்னர்ப் பல பிறவிகளிலும் செய்த சிவநல்வினைகளின் பயனாலன்றிக் கிடைத்தலரிதென்பது. சிவனை நோக்கிச் செய்யும் நலவினையின் பயனாலே அடியார் கூட்டமும் குருவருளும் இவ்வாறே பெறலாகும் என்பது சிவாகமங்களிற் கண்ட உண்மை. முன்னர் "ஆகிய நல்வினைப் பேறென் றன்பர் குழாத்தொடு மெய்தி" (2167) என்ற இடத்தும், "கும்பிட்ட பயன்காண்பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்" (2920) என்ற இடத்தும் ஆளுடைய பிள்ளையார் திருவுள்ளத்தும் இக்கருத்தே நிகழ்வதனை ஆசிரியர் எடுத்துக்காட்டுதல் காண்க. அடியார்களைக் காணுந்தோறும் இக்கருத்து எழும் பக்குவம் நிகழப்பெறுதல் உய்யும் வகையாம். " விண்டொழிந்தன...வல்வினை " (தேவா)

நந்தமை ஆளுடையவரை-பிள்ளையாரை அரசுகள் தம்மை ஆட்கொண்டு அடிமை கொள்ளும் முதல்வராகவே கருதினார் என்பது பின்னர் அவரது சிவிகை தாங்கப்பெற்ற மகிழ்ச்சியினாலும், " ஒப்பரிய தவஞ் செய்தே னதனா லும்மடிகள், எப்பொழுது தாங்கி வரப் பெற்றுய்ந்தேன் யான " (2833) என்று கூறியருளுவதனாலும் தெற்றென அறியப்படும்.

நாம் எதிர்சென் றிறைஞ்சுவது-அவர் இப்பதியினுள் எழுந்தருளும்வரை தாழாது முன்பே எதிர்கொண்டு போய் வணங்குதல் வேண்டுமென்பது.

முந்தை வினை - முந்தை - முன் பிறவிகளிலும், இப்பிறவியில் இற்றைக்கு முன்னும் செய்த ; வினை - சிவநல் வினை. என்று - என்று கருதித் துணிந்து.

முகமலர அகமலர்வார் - அகமலர்ச்சியே முகமலர்ச்சியை விளைக்கும். விரைவு பற்றி முகமலர்ச்சியை முன் வைத்தார் ; மலர - மலருமபடி : விரைவினால் இரண்டும் உடனாக நிகழ்ந்தன என்பதும் குறிப்பு.

அகமலர்வார் - அகமலர்வாராகி ; முற்றெச்சம் அகமலர்வார் - வந்தணைந்தார் என வரும்பாட்டுடன் முடிந்தது. 931

2830. (வி - ரை) "எதிர்சென்று பணிவன்" என - எதிர் சென்று இறைஞ்சுவது முந்தை வினைப்பயன் என்று உட்கொண்டாராதலின் அவ்வாறே செயலின் நிறைவேற்றுவன் என்று.

நதி...தொழுது - பிள்ளையாரை எதிர்சென் றிறைஞ்சுதற்கு இறைவரது திருவருளின் துணை வேண்டுதலின் அது பெறும்பொருட்டுத் தொழுது. இவ்வாறே பிள்ளையாரும் அரசுகளைக் காண்பதற்குக் "கறைக்கண்டர் கழல்வணங்கி அருள்பெற்று"ப் (2827) போந்தமை காண்க. " தொழுதெழுந்தப்பதி " என்பதும் பாடம்.

அந்தப்பதிநின்றும் புறப்பட்டு - அரசுகள் பிள்ளையாரை எதிர்கொண்டு இறைஞ்சிய இடம் பூந்துருத்தி நகரின் புறத்தை நீங்கிச் சிறிது தூரமுள்ளதோரிடம் என்பது முன்னர் உரைக்கப்பட்டது. " பதியின் புறம்பணையில் வந்தணைந்தார் " (1657) என்றதும், ஆண்டுரைத்தவையும் காண்க. III - பக். சுஎக பார்க்க.

பரசமயஞ் சிதைத்தவர் - தம்மைப் பிரிந்து சென்றபின் நிகழ்ந்த சரித வரலாற்று நினைவுபட இக்குறிப்பாற் கூறினார்.

முதிர்கின்ற பெருந்தவத்தோர் - பிள்ளையாருடன் வரும் " மெய்த்தொண்டர்களின் " கூட்டம் (2828). " நஞ்சணி கண்டர் தந்திரு மகனா ருடன்வரு நற்றவக் கடலை" (2554) ; " முதிர்கின்ற " என்றதும் இக்கருத்து. முதிர்தலாவது தவம் பிள்ளையாரது சார்பினால் முதிர்ந்து விளைந்து நல்லூர்ப் பெருமணத்தில் சிவத்தினைச்

சாரும் பக்குவம் நிறைதலுக்கேதுவாதல். இதற்கு இவ்வாறன்றி அரசுகளைக் குறிப்பதாக உரைத்தனர் முன் உரைகாரர். முதிர்கின்ற என்ற கருத்தும், பிறவும் அதற்குப் பொருந்தாமை அறிக. தவத்தோருடைய முன் என ஆறனுருபு விரிக்க; அடியார் முன் என்ற கருத்து மேல்வரலாற்றில் விளங்கக் காண்க.

வந்தணைந்தார் - "வாகீசர்" என்ற எழுவாய் முன்பாட்டினின்றது. 932

2831. திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்
பெருக்கின்ற வார்வத்தாற் பிள்ளையார் தமைச்சூழ்ந்த
நெருக்கினிடை யவர்காணு வகைநிலத்துப் பணிந்துள்ளம்
உருக்கியெழு மனம்பொங்கத் தொண்டர்குழாத் துடனணைந்தார்.

(இ - ள்) திருச்சின்னம்...நெருக்கினிடை - முத்தத் திருச்சின்னம் ஊதக் கேட்டவர்களாகிய நாற்றிசையினின்றும் போந்த அன்பர்கள் பெருகுகின்ற ஆசையினாலே பிள்ளையாரைச் சூழ்ந்துகொண்டு வரும் நெருக்கத்தினிடையே; அவர் காணு.. ...பணிந்து - பிள்ளையார் காணாத வகையினிலே நிலமுறப் பணிந்து; உள்ளம். உடனணைந்தார் - உள்ளத்தை உருக்கி எழுகின்ற மனம் ஓங்கத் திருத்தொண்டர் கூட்டத்துடனே அணைந்தனர்.

(வி - ரை) திருச்சின்னம் பணிமாற - திருச்சின்னம் பிள்ளையாரது புகழ்களை எடுத்து ஊத; பணி மாறுதல் - ஊதுதல்; மரபு வழக்கு.

நாற்றிசையுள்ளோர் - சூழ்ந்த - நெருக்கினிடை - என்க. திருச்சின்னங்கள் பிள்ளையாரது புகழ்களைப் பலவாறும் எடுத்துக் கூறி ஊதின; அவ்வொலியினைக் கேட்டு அதனால் ஈர்க்கப்பட்டுப் பலரும் பல திசைகளினின்றும் வந்து கூடிப் பிள்ளையாரைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து நெருங்கிச் சூழ்ந்துகொள்ளுதல் இயல்பு.

அவர் காணு வகை - அந்நெருக்கத்தினிடையே அரசுகள் போதுவதனையும் நிலமுறப் பணிவதனையும் பிள்ளையார் காண இயலாத வகையில். அவர் - பிள்ளையார் கண்டனராகில் நிலமுறப் பணியவும், அவர் தமது திருவடி தாங்கிச் சிவிகை பொறுக்கவும் இசையாராதலின் காணுவகை பணிந்தனர் என்க.

உள்ளம் ..பொங்க - மனம் உள்ளத்தை உருக்கி அன்பினால் மேலெழுந்து, பொங்குதல் - மன எழுச்சி மேற்செல்லுதல்.

தொண்டர் குழாம் - பிள்ளையாருடன் வந்த திருக்கூட்டம். "முதிர்கின்ற பெருந்தவத்தோர்" (2830).

உடன் அணைந்தார் - "அன்பரொடு மரீஇ" (போதம் - 12 - சூத்) என்ற கருத்துக் காண்க.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை. 933

2832. வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்றாங்கிச்
சிந்தைகளிப் புறவந்தார்; திருஞான சம்பந்தர்
புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார்;

2833. "அப்பர்தா மெங்குற்றா ரிப்பொழுது?" தென் றருள்செய்ய,
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவார்

"ஒப்பரிய தவஞ்செய்தே னாதலினா லும்மடிகள்
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யா"னென்றார். கூரு

2832. (இ - ள்) வந்து அணைந்த...வந்தார் - (முன் கூறியவாறு) வந்து தொண்டர் கூட்டத்தினுள்ளே அணைந்த வாகீசப் பெருமான் வளமையுடைய சீகாழிப் பதியை வாழ்விக்கும் வேந்தராகிய பிள்ளையாரது அழகிய முத்துமணிகளாலாகிய சிவிகையினைத் தாங்கும் பெருமக்களுடனே கூடித் தாமும் தாங்கி மனமிக மகிழ்ச்சி பொருந்த வந்தருளினர்; திருஞான சம்பந்தர்...புகல்கின்றார் - திருஞான சம்பந்த நாயனார் தமது புந்தியின்கண் வேறொரு உணர்ச்சி நிகழ்ந்ததனாலே முன் சொல்வாராய்; கூச

2833. (இ - ள்) அப்பர்தாம்...அருள் செய்ய - அப்பர் பெருமான் இப்பொழுது எங்குப் பொருந்த எழுந்தருளினார்? என்று வினவி அருளிச்செய்ய; செப்பரிய...செப்புவார் - சொல்லுதற்கரிய புகழினையுடைய திருநாவுக்கரசுகள் விடை சொல்வாராகி; ஒப்பரிய...என்றார் - ஒப்பற்ற தவத்தினை முன்னே செய்தேனாதலின் (அதன் பயனாக) இப்பொழுது உமது திருவடிகளைத் தாங்கிவரும் பெரும்பேறு கைவரப் பெற்று உய்ந்தேன் யான் என்றருளிச் செய்தனர். கூரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2832. (வி - ரை) வந்து அணைந்த - முன் (2829 - 2830 - 2831) கூறியவாறு உள்ள கருத்தும் செயலுமாக வந்து அடியார் கூட்டத்துள் அணைந்த.

வாகீசர் - முன் (2825) பிள்ளையார் வினவிய பெயர்க்குறிப்பு.

புகலி வாழ் - புகலி வாழும்படி வரும்; "வளர்காழிப் பதிவாழ" (1623).

சிவிகையினைத் தாங்குவார் எனறும், சிவிகையினைத் தாங்கி என்றும் கூட்டுக; சிவிகை தாங்குவார் - "சிவிகை பொறுப்பார்"; சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவாருடன் தாங்கி - என விதந்து கூறியது (பிற்காலப் புலவர் பேசியவாறு) "அறத்தாறிதுவென வேண்டா" என்ற பொய்யாமொழியின் உண்மையினையும் மறுக்கொணா திறனுடைமை தேற்றப்படக் காட்டுதற்கென்க; மணி - இடநோக்கி முத்து என்க.

சிந்தை களிப்புற வந்தார் - சிவிகை தாங்குதல் இழிவு என ஏனையோர் எண்ணுமாறின்றி இது கிடைத்தற்கரிய தவப்பயனும் பேறெனறெண்ணியபடியால் சிந்தை மகிழ்ந்தனர்.

திருஞான சம்பந்தர்...நிகழ்ந்திட - திருஞான சம்பந்தராதலின் நிகழ எனக் காரணக் குறிப்புப்படக் கூறியவாறு மேல்வரும் இரண்டு பாட்டுக்களிலும் "திருநாவுக்கரசர்", "செவ்வாறுமொழி நாவர்" என்பனவும் இவ்வாறே காணத்தக்கன. எந்தம் பெருமக்களின் திருநாம முழுதும் சிறப்புப் பெறவைத்த குறிப்புமிது.

வேறொன்று நிகழ்ந்திட - "நாவரச ருழைச்சணைய, நகராசர் நண்ணுவார்" (2828) என்றபடி அப்பரைச் சென்று காண உள்ள நிலையன்றித் தாம் அங்கு நண்ணுது அவர் தாமே வந்து நின்ற நிலையின் அருட்குறிப்பினால், தமது செலவு மேற்செல்லாது தடைப்படுமாறு எழுகின்றதோருள்ள நிகழ்ச்சி. "செவ்விய திருவுள்ளத்தேோர் தடுமாற்றஞ் சேர நோக்கி" (1815) என்புழிப்போலக் கொள்க; வேறு ஒன்று - திருவுள்ளக்கிடை நேர்செலாது விலக்கத்தக்க வேறு; வேறு என்ற குறிப்புமிது.

முன் - வாகீசர் அறிதற்கு முன்; மெய்த்தொண்டர்க்கு முன் என்றலுமாம்.

புகல்கின்றாராகி: என்றருள் செய்ய - என வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க. புகல்கின்றார் - முற்றெச்சம்.

திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே .....களிப்புற வருவார்—என்பதும் பாடம். 984

2838. (வி - ரை) அப்பர்தாம் . அருள் செய்ய - தாம்,சென்று காண நினைந்த பதியின் திருமடத்தினுள் அப்பொழுது அவர் இல்லை என்ற தோற்றம் ஞானகாட்டத்தில் விளைந்ததாதலின் இப்பொழுது எங்குற்றார் என்றருளினர். அப்பர் - முதலிற் கண்டபோது தாமே அழைத்த பெயர்.

இப்பொழுது எங்குற்றார் - என்றபாலது எங்குற்றார் இப்பொழுது - என மொழி வைப்புமுறை சிறிது மாறியது புதியினில் வேறொன்று நிகழ்ந்ததன் காரணத்தாலாகிய விளைவு. ஆயின வேறொன்று நிகழ்ந்ததனால் அப்பர் தாம் சென்று காண நினைந்த இடத்தினில்லாமை கண்டனரேயன்றி, அவர் இங்கே சிவிகை தாங்கி வருதலைக் கண்டிலர். அதனாலே எங்குற்றார் இப்பொழுது ? என வினவியருள வேண்டியதாயிற்று. இஃதென்னையோ ? எனின், தாம் நிலத்திற் பணிவதும், சிவிகை தாங்கப்பெற்று வருவதும் பிள்ளையார் காணுவகை நிகழ்தல் வேண்டுமென்று அப்பர் பெருமான் திருவுள்ளங் கொண்டனராதலின் இவை அவர் காணுவகையே நிகழ்ந்தன ; இஃது அப்பர்பெருமானது "திருத்தொண்டினுறைப்"பின் வலிமை என்க.

செப்பரிய புகழ்த் திருநாவுக்கரசர் - செப்புவார் - செப்பரிய - செப்புவார் - சொற்பின் வருநிலை ; செப்பிய இப்பொருளினாலும் அவர் புகழ் செப்பரியதாயிற்று என்பது ; செப்பும் பொருளின் சிறப்பேயன்றி அதனைக் கூறும் சொல்லின் வளமும் வாய்க்கப்பெற்றவர் என்க. பிள்ளையாரது திருவடிகளை மனம் மொழி மெய் என்ற மூன்றாலும் நேரே தாங்குதல் ஒப்பற்ற பெருந்தவப் பயன் என்ற உண்மையினை ஆதலின் என்க காரணகாரிய முறை புலப்பட வைத்துக் கூறிய வகையினாலே சிவஞானபோதம் 2-8-9-10-11-12 சூத்திரங்களிற் போந்த உண்மைகளையெல்லாம் ஒருங்கே பெறத் தேற்றிய திறம் செப்பரிய புகழ் எனப்பட்டது.

யான் உய்ந்தேன் - என்க. வினைமுற்று முன்வந்தது விரைவுக் குறிப்பு. அடி சேர்தலே முத்தியாமெனப்படும் ஞானநூன் முடிபாதலின் ஈண்டுத் திருவடிகளைத் தாங்கி வருதலினையே உய்தி என்றார்.

ஆதலினும் மிணையடிகள்—என்பதும பாடம். 985

*2884. அவ்வார்த்தை கேட்டஞ்சி யவனியின்மேல் இழிந்தருளி
"யிவ்வாறு செய்தருளிற் றென்னா?"மென் றிறைஞ்சுதலுஞ்
செவ்வாறு மொழிநாவர் "திருஞான சம்பந்தர்க்
கேவ்வாறு செய்த்தகுவ?" தெனவெதிரே யிறைஞ்சினார். கஉக

(இ - ள்) அவ்வார்த்தை ..இழிந்தருளி - அவ்வாறு கூறியருளிய அப்பர்பெருமானது அத்திருமொழிகளைக் கேட்டு அஞ்சிப் பிள்ளையார் சிவிகையினின்றும் கீழே இறங்கியருளி ; இவ்வாறு...இறைஞ்சுதலும் - இப்படித் தேவரீர் செய்தருளினால் என்னாவது ? என்று பதைப்புடன் கூடி வணங்குதலும் , செவ்வாறு...இறைஞ்சினார் - செம்மையே மொழியும் திருநாவினையுடைய அரசுகள் "திருஞான சம்பந்தருக்கு வேறெவ்வாறு செய்தல் தக்கதாகும்" என்று வணங்கினார்.

(வி - ரை) அஞ்சி - இழிந்தருளி - அச்சமாவது அப்பர் என்ற தாம் கொண்ட பெரியார் சிவிகை தாங்கத் தாம் ஊர்ந்துவந்தது பிழை என்றதனால் ஆயது. பெரியார் பாற் பணிகொள்ளுதல் பிழை என்பதாம்.

இழிந்தருளி - அவர் சிவிகை தாமகச் சிவிகையில் எழுந்தருளியிருத்தல் தகாதாத லின், இழிந்தருளுதல் - பெரியார்முன் சிறியராயடைந்து எனற குறிப்பும் தருவது. "இழிக்தே" (1662).

இவ்வாறு...என்னும் - செயதக்கதல்லாத இச்செயலை இவ்வாறு தேவரீர் செய் யின் அதன பயன் என்னுகி விளைவது என்று பதைததுக் கூறியது. " செய்தக்க வல்ல செயக கெடும் " (குறள்) என அச்செயலைக் கொணடனர் பிள்ளையார்.

செவ்வாறு மொழிநாவர் - முன் பாட்டில் உரைததவை பார்க்க.

" திருஞானசம்பந்தர்க் கெவ்வாறு செயத்தகுவது ?" - சிவஞானம் கிட்டப்பெற்ற போது அதனை அடிசார்ந்து வணஙகுதலனறி வேறெனன செயதக்கது என்றபடி ; அச் செயலினையே " செய்தகக செய்யாமை யானும் கெடும் " (குறள்) எனக் கொண்டருளி னர். ஒரே செயலினை இவ்வாறு வேறு வேறாகக கொணடருளியது அவ்வவரும் தாழ் வெனும தனமையோடு சைவமாஞ் சமயஞ சார்ந்த நிலை குறிததது. அவ்வவர் கொண்ட நிலையின்படி இருவர் திறமும முரணபடாமை அறிந்துகொளக.

இறைஞ்சினூர் - அவா வணஙகாமுன வணஙகினா (1662).

எதிரே இறைஞ்சுதலும்—என்பதும் பாடம். 936

2835. சூழ்நதுமிடைந் தருகணையுந தொண்டரெல்லா மதுகண்டு
தாழ்நதுநில முறவணங்கி யெழுநதுதலைக் கைகுவிதது
வாழ்ந்துமனக் களிப்பினராய் "மற்றிவரை வணங்கபெற்
றூழ்ந்தபிறப் புய்ந்தோ"மென் றண்டமெலா முறவார்த்தார். ௬௩௭

(இ - ள்) சூழந்து... அதுகண்டு - சுறறி நெருஙகிப பக்கததில் அணையும் மெய்த் தொண்டர்களெல்லாம் அதனைக் கணடு ; தாழநது...களிபபினராய் - தாழ்ந்து நிலம் பொருந்த வணஙகி எழுநது கைகளைத தலையினமேற் கூப்பி வாழ்வடைந்து மனமகிழ்ச்சி யுடையவராகி ; மறறிவரை. .ஆர்த்தார - மற்று இவ்விரு பெருமககளையும் வணஙகும் பேறு நாம் பெறறோமாதலின் நாம் ஆழநதிருககும பிறவிக்கடலினின்றும் ஈடேறி யுய்யப பெறறோம " எனறு கூறி அணடஙகள் எலலாம பொருநதும்படி ஆரவாரித தனர்.

(வி - ரை) சூழ்ந்துமிடைந்து அருகணையும் தொண்டர் எலாம் - " நாறறிசை யோர் - சூழந்த நெருககினிடை " (2831) என்றபடி கூடியவரும், அரசுகளும் பிள்ளை யாரும் இவ்வாறு கூடிய செயலைக கணட திருககூட்டததினரும்.

வணங்கி - இரு பெருமக்களையும் வணஙகி.

வாழ்ந்து - பெருவாழ்வு பெறறு

ஆழ்ந்த பிறப்பு - தாம் ஆழ்ந்து கிடந்த பிறவி ; பிறப்பு - பிறவியினின்றும்.

ஆர்த்தல் - மகிழ்ச்சி மிக்கதனுல் உய்ந்தோமென்று பலவாறும் ஆரவாரித்தல்.

எழுந்துதம - எழுந்தங்கை தலை - என்பனவும பாடஙகள். 937

2836. திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர் தமைப்
பெருகார்வத் தொடுமணைந்து தழீஇக்கொள்ளப் பிள்ளையார்
மருவாரு மலரடிகள் வணங்கியுடன் வந்தணைந்தார்
பொருவாரும் புனற்சடையார் மகிழ்ந்ததிருப் பூந்துருத்தி. ௬௩௮

(இ - ள்) திருஞான சம்பந்தர்...தழீஇக்கொள்ள - திருஞான சம்பந்தர் மேன்மேற் பெருகும் ஆசையுடனே திருநாவுக்கரசரைத் தம்மை அணைந்து தழுவிக்கொள்ள ; பிள்ளையார்...வணங்கியுடன் - அரசுகள் பிள்ளையாரது மணமுடைய மலர்போன்ற திருவடிகளை வணங்கி உடனவர ; பொருவாரும்...பூந்துருத்தி - அலைகளை மோதுகின்ற கங்கை நீரைச் சடையில் வைத்த இறைவர் மகிழ்ந்த திருப்பூந்துருத்தியினில் ; வந்து அணைந்தார் - பிள்ளையார் வந்து அணைந்தனர்.

(வி - ரை) திருஞான சம்பந்தர் பெருகார்வத்தொடு மணைந்து தம்மைத் தழீஇக் கொள்ளத் திருநாவுக்கரசர் அவரது மருவாரு மலரடிகளை வணங்கி யுடனவரப் பிள்ளையார் பூந்துருத்தி வந்தணைந்தார் எனக்கொண்டு கூட்டிப் பொருள் செய்யப்பட்டது. அவரது மலரடிகள் என்புழியும், வணங்கி யுடனவர எனபுழியும், ஆறனுருபேற்ற சுட்டுப்பொருளும் வினையெச்சச் சொல்லும் அவாய்நிலையான் வந்தன.

இனித் திருநாவுக்கரசர் வணங்கி, உடன், பிள்ளையாருடன் பூந்துருத்தி வந்தணைந்தார் என்றும், வந்தணைந்தார் என்பதுமுதல் (2836), முன்னிறைஞ்சி - இறைஞ்சினர் என்பதற்கும் (2834), மகிழ்ந்தங்கிருந்தார் (2838) என்பதற்கும் அவ்விருவரும் என எழுவாய் வருவித்தும் முடித்தனர் திரு சொக்கலிங்கச் செட்டியார்.

திருஞான சம்பந்தர் - திருநாவுக்கரசர் - இவ்விரு பெருமக்களின் திருப்பெயர்களையும் இவ்வாறு மந்திரமாகக் கொண்டு கணிக்கவேண்டிய இவ்வகையில் முன் தனித்தனிக் (2833-2834) கூறிய ஆசிரியர், ஈண்டு இருவரும் கூடிய இடத்தில் சேர்த்துவைத்துக் காட்டிய கவிநலமும் உள்ளுறையும் கண்டுகொள்க. உள்ளுறையாவது அன்று இப் பெருமக்கள் முன் கூறியவாறு கூடிய கூட்டத்தின் அருட்பொலிவினை நேரே கண்ட தொண்டரெல்லாம் "மற்றிவரை வணங்கப்பெற்றுய்ந்தபிறப் புய்ந்தோம்" என்று ஆர்த்ததுபோலவே, பின்வரும் எம்போன்ற சிற்றடியாரும் கண்டுகொண்டு கணித்து உய்திபெற வைத்ததலாம். "கூடிய கூட்டத்தி னுள்ள தாயத்திக் குவலயமே" (ஆளு - திருவந் - 80) என்ற நம்பியாண்டார் நம்பிகள் கருத்துக் காண்க.

பெருகார்வத்தொடு மணைந்து தழீஇக் கொள்ள - பன்னாட் பிரிந்தபின் காண வேண்டுமென்று கருதிவந்த ஆர்வமும், ஈண்டு இவ்வாறு எதிர்பாராத இடத்தில் எதிர்பாராத வகையால் கண்டுகொண்ட ஆர்வமும் குறிக்கப் "பெருகார்வம்" என்றார். தழுவிக் கொள்ளுதல் - ஒப்பார் இருவரிடை அன்பு மிக்கபோது உளதாகும் மெய்ப்பாடு. நம்பியாரூரர் இரண்டாவது முறை தாமே கழறிற்றறிவாரை நினைந்து மலைநாட்டுக் கெழுந்தருளக் கண்டபோது "சேரர்பெருமா னெதிர்சென்று தலைநாட் கமலப் போதனைய சரணம் பணியத் தாவில்பல கலைநாட டமுத வாரூரர் தாமுந்தொழுது கலந்தனரால்" (வெள்ளா சருக் - 29) ; "சிந்தை மகிழும் சேரலனார் திருவாரூரர் செறிமிவர்க, டந்த மணிமே னிகளவேறு மெனினு மொன்றாந் தன்மையராய், முந்த வெழுங்கா தலிற்றெழுது முயங்கி" (ஷை 20) என்னும் கருத்துக்களை ஈண்டு வைத்துக் காண்க.

பிள்ளையாரது - அடிகள் என்க. தழீஇக்கொண்ட அப்பிள்ளையார் என்று சுட்டுவருவிக்க. வணங்க என்பது பாடபேதமாயின் அரசுகள் என்ற எழுவாய் வருவிக்க.

மருவாரும் மலரடிகள் - இறைவரது திருவடிகள் என்றும் உரைக்க நின்றது ; மருவாரும் - மலர் - அடி என்றது நிறம், மென்மை, உரு முதலியவற்றால்மட்டுமன்றி மணஞ் செய்தலாகிய குணத்தாலும் ஒப்புமை கூறும் குறிப்பு.

பூந்துருத்தி அணைந்தார் - என்க ; பயணிலை முன்வைத்தது ஆர்வத்தின் விரைவுக் குறிப்பு.

பூந்துருத்தி வந்தணைந்தார் - வந்து - என்றமையாலும் அரசுகள் சென்ற சிவிகை தாங்கிய திகழ்ச்சி திகழ்ந்த இடம் நகரினுக்குப் புறமாகிய இடம் என்பது பெறப்படும். "அந்தப் பதியினைறும் புறப்பட்டு" (2830) என முன் உரைத்ததனை இங்கு நினைவுகூர்க. III - பக். ௬௭௧. "புறம்பணை" என்றவிடத் துரைத்தவை பார்க்க.

உடன் - இருவரும் உடனாக. உடன் அணைந்தார் - "அன்பரொடு மரீஇ...ஆலயந்தொழும்" என்ற சிவஞான போதம் 12-ம் சூத்திரக் கருத்தைத் தருவது. "கோபுரத்தை முன்னிறைஞ்சி" (2837). 938

*2837. அன்பர்குழாந் தொடும்செல்வா ராணேற்றார் மகிழ்கோயில்
முன்பணித்தா கச்சென்று, கோபுரத்தை முன்னிறைஞ்சித்,
துன்பமிலாத திருத்தொண்ட ருடன்றொழுது, புக்கருளி
என்புருக வலங்கொண்டு பணிந்தேத்தி யிறைஞ்சினார். ௯௩௯

(இ - ள்) அன்பர் குழாத்தொடும் செல்வார் - திருத்தொண்டர்களது திருக்கூட்டத்துடனே செல்வாராகிய பிள்ளையார்; ஆனேற்றார்...இறைஞ்சி - இடப ஏற்றினையுடைய இறைவர் மகிழ்ந்தெழுந்தருளியிருக்கும் திருக்கோயில் முன்பு அருகாகச் சென்று திருக்கோபுரத்தை முன்னர்த் தொழுது; துன்பமிலா...புக்கருளி - துன்பமில்லாத திருத்தொண்டர்களுடன் தொழுதுகொண்டபடியே உட்புகுந்தருளி; என்புருக...இறைஞ்சினார் - எலும்பும் உருகும்படி கோயிலினுள் வலமாக வந்து பணிந்து துதித்து வணங்கினார்.

(வி - ரை) சென்று - முன் இறைஞ்சி - தொழுது - புக்கருளி - வலங்கொண்டு - இறைஞ்சினார் - வழிபாட்டு முறைகளை இவ்வாறு தனித்தனி வகுத்தோதியது ஆர்வ மிகுதியினை உணர்த்தற்கு.

திருக்கோயில் முன்பு - முன்பு - என்றது திருக்கோயிலின் முன்னர் - நேரே - என்று இடத்தையும், முன் இறைஞ்சி - முன் - என்றது வழிபாட்டு முறையிற் காலத்தால் முன்னர் என்று காலத்தையும் குறித்தன.

கோபுரத்தை இறைஞ்சுதல் - தூலலிங்கமாதலின் கோபுரம் கட்புலப்படு மெல்லையிலே வணங்குதல் வேண்டுமென்பது விதி.

துன்பமிலாத் திருத்தொண்டர் - துன்பமிலா - "இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை" (தேவா), "பன்னெடுங் கால மழைதான் மறுக்கினும்......முக்கட், பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீரிப் பகலிடத்தே" (தேவா); "வானந் துளங்கிலென்......உத்தமர்க்கே" (தேவா); "கண்ணுதலான் திருநீற்றுச் சார்வினோர்க்கும் கவலைவருமோ (3460); "ஈரவன்பினா யாதுங் குறைவிலார" (144); "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது" (குறள்) என்பன முதலியவை காண்க. துன்பத்தை - மலவாதனையை - இலக்காகத் துணை செய்யும் தொண்டர் என்று கொண்டு 12-ம் சூத்திர கருத்துப்பட உரைத்தலுமாம். இக்கருத்தினையே தொடர்ந்து "மையறுசீர்த் தொண்டர் குழாம்" (2838) என மேலும் கூறுதல் காண்க.

தொழுது புக்கருளி - தொழுது - தொழுதபடியே.

தொழுது புக்கு - தொழுதலும் புகுதலும் உடனிகழ; "தொழுதெழுவாள்" (குறள்).

என்புருக வலங்கொண்டு - என்புருகுதல் - இறைவர் செய்யும் பேருபகாரத்தை எண்ணுந்தோறும் மேன்மேற் பெருகும் ஆர்வத்தாலாவது.

இறைஞ்சினார் - இவ்வணக்கம் திருக்கோயிலினுள் உட்புறம் நிகழ்ந்தது. இறைவர் திருமுன் நிகழ்ந்த வணக்கம் மேல்வரும் பாட்டிலுரைக்கப்படுதல் காண்க; பிள்ளையார் புறத்து நின்றாங்கு இறைஞ்சுதற்காக இடப தேவர்கள் விலகி எழுந்தருளியுள்ளார்கள் என்ற தொருவரலாறும், இக்கோயிலில் அம்மூர்த்திகள் விலகியுள்ள நிலைபற்றி வழங்கப்படுகின்றது. தலவிசேடம் பார்க்க. 989

*2838. பொய்யிலியா ரைப்பணிந்து போற்றியே புறத்தணைவார்;
செய்யசடை யார்கோயிற் றிருவாயின் முன்னாக
மையறுசீர்த் தொண்டர்குழாம் வந்துபுடை சூழ,வுல
குய்யவரு வார்தாங்க ளுடன்மகிழ்ந்தங் கினிதிருந்தார். கூ௪0

(இ - ள்) பொய்யிலியார்...அணைவார் - பொய்யிலியப்பரை வணங்கித் துதித்துப் பின்பு புறத் திருமுற்றத்தில் அணைவாராகிய பிள்ளையார்; செய்ய சடையார்...சூழ - சிவந்த சடையினையுடைய இறைவரது திருக்கோயிற் றிருவாயின் முன்பு குற்றமற்ற சிறப்புடைய தொண்டர் கூட்டம் வந்து தம்மைச் சுற்றிச் சூழ்ந்து வர, உலகுய்ய... ...இருந்தார் - உலக முய்யும்பொருட்டு வரும் நாயனமார்களிருவரும் அடியார்கள் சூழ அவர்களுடன் மகிழ்ந்து அங்கு இனிதாக விரும்பி எழுந்தருளி யிருந்தனர்.

(வி - ரை) பொய்யிலியார் - திருப்பூந்துருத்தியில் வீற்றிருக்கும் இறைவரது பெயர்; "பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேனானே" (தாண்).

புறத்து - புறத்திருமுற்றிலின்கண், திருவாயில் முன்னாக - என்றது காண்க. இத்திருவாயில் கோயிலினுட்புறம் உள்ள திருவாயில்.

அங்கு - கோயிலினுள்ளே திருமுற்றிலின் வாயில்முன் ஒரு தனியிடத்து. மேல் வரும் 5 பாட்டுக்களினும் கூறப்பெறும் நிகழ்ச்சிகள் நிகழ்ந்த இடம் திருமுற்றம் என்பது குறிக்கப்பட்டது காண்க. இவற்றின் பின்னரே பிள்ளையார் அரசுகளது திருமடத்திற் புகுந்தருளினார் எனபது (2844-ல்) மேற்கூறப்படுதலும் காண்க.

வருவார் தங்களுடன் - என்று பாடங்கொண்டு - வருவாராகிய அடியார்கள் என்றுரைத்தலுமாம். 940

வேறு

2839. வாக்கின் றனிமன்னர் வண்புகலி வேந்தர்தமைப்
போக்கும் வரவும் வினவப், புகுந்ததெல்லாந்
தூக்கின் றமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை
தேக்குந் திருவாயாற் செப்பி யருள்செய்தார். கூ௪க

(இ - ள்) வாக்கின்...வினவ - வாக்கிற்கு ஒப்பற்ற அரசராகிய அரசுகள் வளப்பமுடைய சீகாழி அரசரை அவர் பாண்டி நாட்டுக்குச் சென்றருளியதும் அங்குநின்று மீண்டருளியதும் ஆகிய வரலாறுகளை வினவ; புகுந்ததெல்லாம் - அங்கு நிகழ்ந்த வரலாறுகளின் தொகுதியினை முழுதும்; தூக்கின்...அருள்செய்தார் - தமிழ்ப் பாட்டின் தலைவராகிய பிள்ளையார் சொல்லுதற்கரிய ஞானமறைகளைத் தேக்குகின்ற தமது திருவாக்கினாற் சொல்லியருளினார்.

(வி - ரை) மன்னர் - வேந்தர் - இருவரும் திருவருட் பெருக்கினால் ஒப்பார் தன்மை குறித்தது. தனி வாக்கின் மன்னர் எனறலுமாம்.

போக்கும் - வரவும் - போக்கு - பாண்டி நாட்டிற்கு எழுந்தருளிச் செல்லுதல்; வரவு - அங்குநின்று மீண்டருளுதல். போக்கும் வரவும்-போயின நாள்முதல் மீண்ட இந்நாள்வரை நிகழ்ந்த எல்லா நிகழ்ச்சிகளின் தொகுதி. இக்கருத்தே பற்றிப் புகுந்ததெல்லாம் என்றார். புகுந்தது எல்லா(மு)ம் என ஒருமையிற் கூறினார். போக்கு - பரசமய நிராகரிப்பாகிய அழிவும், வரவு - திருநீற்றின் ஆக்கமாகிய பொலிக்கமும் என்றும், புகுந்தது எலாம் - இடையே புகுந்த வாத முதலிய நிகழ்ச்சிகளின் தொகுதி என்றும் குறிக்கொள நின்ற திறமும் காண்க. "வாதில் வென்றதுவும்...திருநீறு வளர்த்ததுவும்" (1664) என்றது காண்க.

தூக்கின் தமிழ் விரகர் - தூக்கு - செய்யுள். முதன்மைபற்றி முத்தமிழினுள் இயற்றமிழினை விதந்தோதினார். தூக்கு - எடுப்பு - பெருமை என்றலுமாம். இசைப் பொருமை என்றலுமாம். "இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன" (நம்பி. தேவா).

சொல்லிறந்த ஞானமறை தேக்கும் திருவாய் - சொல்லிறந்த ஞானம் - சொல்லுணர்ச்சியைக் கடந்த ஞானம்; மெய்ப்பொருளை அனுபவமாக அறியுஞ் சிவஞானம். "எண்ணரிய சிவஞானத் தின்னமுதம்" (1965); ஞானமறை தேக்குதல் - ஞானத்தைப் புலப்படுத்தும் சொல் நிறைதல்; தேக்குதல் - நிரம்பி மேல் வருதல்; தேக்கும் - தடையுண்ட நீர் நிரம்பி வழிதல்போல நிரம்பி வருதல் என்ற பொருள் தரும் குறிப்புருவகம்.

நாக்கினால் - தேக்கும் என்று கூட்டியுரைக்கவும் நின்றது.

சொல்லிறந்த ஞான மறை தேக்கும் திருவாயால் செப்பி - சொல்லரிய ஞானத்தை மறையினால் வெளியிட வல்லவராதலின் அத்திருவாக்கினால் அதுபோலவே சொல்லரிய சிவனருட்டுணையால் பெற்ற அருணிகழ்ச்சிகளைச் சொன்னார் என்பது குறிப்பு. 941

2840. காழியினில் வந்த கவுணியர்தம் போரேற்றை
ஆழிமிசைக் கன்மிதப்பில் வந்தா ரடிவணங்கி
"வாழிதிருத் தோண்டேன்னும் வான்பயிர்தா னோங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீர்" எனத்தொழுதார். கூசஉ

(இ - ள்) காழியினில்...அடிவணங்கி - சீகாழியில் வந்து அவதரித்த கவுணியர் குலத்தவருடைய போரேறு போன்ற பிள்ளையாரைக் கடலின்மேலே கல்லே மிதவையாகக் கொண்டு வந்தருளிய அரசுகள் அடிபணிந்து; வாழி...எனத் தொழுதார் - வாழ்வு தரும் திருத்தொண்டு என்னும் பெரிய பயிர் ஓங்கி வளர்ந்து பயன்றரச் செய்தற்கு உரியதாகச் சூழும் பெருவேலிபோல நீர் ஆயினீர் என்று கூறித் தொழுதனர்.

(வி - ரை) காழியினில் வந்த - கன்மிதப்பில் வந்தார் - முன் பாட்டில் மன்னர் - வேந்தர் என்று தலைமைபற்றிய ஒப்புமை பெறக் கூறிய ஆசிரியர், இப்பாட்டில் வந்தருளிய தன்மைபற்றிய ஒப்புமைபெறக் கூறிய கவிநலம் கண்டுகொள்க. அரசுகள் வந்த கன்மிதப்புப் போலவே காழியும் தோணியாய் மிதக்கும் தன்மைக் குறிப்புப்படக் கூறியபடியாம்.

போரேறு - ஏறுபோல்வாரை ஏறு என்றது உபசாரம்; போரேறு என்ற இத்தன்மையாற் கூறியது வாதஞ் செய்து வென்றருளிய தன்மையும், ஈண்டு அவ்வாலாறு பற்றிக் கூறும் நிலையும் குறித்தற்கு.

**ஆழிமிசைக் கன்மிதப்பில் வந்தார்** - "ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்த பிரான்" என இச்சொல்லும் பொருளும் உமாபதிசிவம் எடுத்தாண்டு பாராட்டினர்.

**வாழி** - வாழ்வாகவுள்ள ; வாழ்வைத் தருகின்ற.

**திருத்தொண்டென்னும் .....வேலியானீர்** - வினைபற்றி வந்த தொடருவமம் ; தொண்டு - பயிர். பிள்ளையார் - பெருவேலி ; உவம உருபு தொக்கது. ஆனீர் - ஆகச் சொல் உவமஉருபுப் பொருளில் வந்தது. "ஆள்வாரிலி மாடாவேனோ" (திருவாசகம்).

**பயிர் ஓங்குதற்குச் சூழும் பெருவேலியானீர்** "ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின், நீரினு நன்றதன் காப்பு" (குறள்) என்று பயிர் ஓங்குதற்கு வேண்டப்பட்ட உழவு - எருவிடல் - களைகட்டல - நீர் பாய்ச்சல - காத்தல் என்ற ஐந்தனுள் ஏனை நான்கிற்கு மேலாகிச் சிறப்புப்பற்றி இறுதியில் வைக்கப்பட்ட வேலியாகிய காவலை உவமித்தார் - உவமேயத்திலும் அச்சிறப்பினை யாப்புறுத்தற்கு.

**வான்பயிர்** - சிவவானில் சேரும் சிவபுண்ணியமாகிய பயிர் என்பதும் குறிப்பு ; "வானோர்க் குயர்ந்த உலகம்" (குறள்)

**பெருவேலி** - தொண்டராகிய பெரும் பயிருக்கு ஏற்றவாறு பொருந்தும் பெரிய வேலி. **சூழும்** - சுற்றி வளைந்த என்றும், சூழ்ந்து - எண்ணி - அமைந்த என்றும் உரைக்க நின்றது. 942

2841. பிள்ளையார் தாமுமவர் முன்றொழுது பேரன்பின்
வெள்ள மனையபுகழ் மானியார் மேன்மையையும்
கொள்ளும் பெருமைக் குலச்சிறையார் தொண்டினையும்
உள்ளபரி செல்லா மொழிந்தங் குவந்திருந்தார். கசக

(இ - ள்) பிள்ளையார்...தொழுது - பிள்ளையாரும் அவர் முன்னே தொழுது ; பேரன்பின்...மேன்மையையும் - பெரிய அன்பின் வெள்ளம்போன்ற புகழினையுடைய மங்கையர்க்கரசி யம்மையாரது மேம்பாட்டினையும், கொள்ளும் ..தொண்டினையும் - கொள்ளும் பெருமையினையுடைய குலச்சிறை நாயனாரது திருத்தொண்டினது சிறப்பினையும் ; உள்ள பரிசெல்லாம் மொழிந்து - உள்ள தன்மையெல்லாம் சொல்லியருளி ; அங்கு உவந்திருந்தார் - அத்தன்மையில் மகிழ்ந்தருளினார்

(வி - ரை) தொழுது - பெரியோர்களது வினவுக்கு விடைகூறப் புகும்பொழுது தொழுது தொடங்குதல் உயர்ந்தோர் மரபு ; 2377 - 2556 முதலியவை பார்க்க. இனிக் கூறப்புகும் அருட்பொருளின் சிறப்பு நோக்கித் தொழுது தொடங்கியருளினார் என்றலுமாம்.

**பேரன்பின் வெள்ளம்** - மிகுதிபற்றி அன்பை வெள்ளம் என்றார். **மானியார்** - மங்கையர்க்கரசியம்மையார் ; **மேன்மை** - சிவநெறியிற் கொண்ட அன்பின் மேம்பட்ட நலங்கள் ; அரசியார் என்ற குறிப்புமாம். இவற்றை "முன்னின் றிலை விளம்பக் கொம்மை சார்ந்தவருட் கோமகள்" என்று போற்றினார் சிவப்பிரகாசர்.

**கொள்ளும் பெருமை** - எஞ்ஞான்றும் மேற்கொண்டொழுகும் பெருமைப் பண்புகள் ; **தொண்டு** - அடிமைத் திறம்.

**மேன்மை - தொண்டு** - இவற்றின் திறங்களைப் பிள்ளையாரது திருவாலவாயத் (புறநீர்மை) திருப்பதிகத்திற் கண்டுகொள்க

**உள்ள பரிசு எல்லாம்** - உள்ளவாறு காணும் தன்மைகள் யாவையும். இவை என்றும் நிலைத்த உண்மையினியல்புகள். முன்னர்ப் "புகுந்ததெல்லாம்" (2839)

என்றது நிகழ்ச்சிகள். அவற்றைச் செப்பியருளி வரலாற்றினைத் தொகுத்து முடித்த பின், இவ்வாறு அம்மையாரது பண்பும் அமைச்சனாரது பண்பும் உரைத்தருளியது அடிமைத் திறத்திறமினைகளும் அரசுகள் அறிந்து களிக்கும்பொருட்டு; இவ்வாறு அவர்களது அடிமைத்திறங் கேட்ட அளவே அரசுகள் அங்குச் சென்று தமிழ்நாடு காண்பதற்கு வாகீசர் மனங்கொண்டார் என்று முன்னர் "உரைத்தருள...தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார்" (1665) எனவும், போக்கும் வரவும் கேட்டபோது "உவந்தார்" (1664) எனவும் கூறியவை இங்கு நினைவு கூர்தற்பாலன. அவ்விருவர் பணியினைப் பற்றியே "இவர் பணியு, மங்கலம் பெறுசீ ராலவா யீசனே" (தேவா) என்று பிள்ளையார் இறைவரைச் சிறப்பித்தமை காண்க.

அங்கு - மொழிந்த அத்தன்மையினைக்கண்; அவ்விடத்து என்றுரைப்பாரு முண்டு. 943

2842. தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்
தன்ன மனையார்க்கு மமைச்சர்க்கு மன்பருளித்
துன்னுநெறி வைதிகத்தின் தூநெறியே யாக்குதலான்
மன்னுபுகழ் வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார். ௯௪௪

(இ - ள்) தென்னற்கு...நீறளித்து - பாண்டியருக்கு உயிருடனே திருநீற்றினை அளித்தருளியும்; செங்கமலத்து...அன்பருளி - செங்கமலத்திலிருக்கும் அன்னம் போன்ற மங்கையர்க்கரசியம்மையாருக்கும் அமைச்சனாருக்கும் அன்பினை அளித்தருளியும்; துன்னுநெறி...ஆக்குதலால் - தூய வைதிகச் சைவநெறியே பொருந்தும் நெறியாக ஆக்கியளித்தமையாலே; மன்னுபுகழ்..மகிழ்ந்தார் - நிலைபெற்ற புகழினையுடைய அரசுகள் கேட்டு மனம் மிக மகிழ்ந்தார்.

(வி - ரை) உயிரோடு நீறு அளித்து - வெப்பு நோயினால் உயிர்போகும் நிலையிலிருந்த பாண்டியனுக்கு நோய்நீக்கி உயிரைக் கொடுத்ததன்றி அதனோடு திருநீற்று நெறியினைச் சாரும் பேற்றினையும் அளியுடன் தந்து; திருநீற்றின் மூலம் (திருநீற்றுப் பதிகம் அருளி நீறு சாத்தி) உயிர் அளித்து என்பதும் குறிப்பு. "நீறிடா நெற்றி பாழ் என்றும், "திருவெண்ணீ றணியாத திருவி லூரும...அடவி காடே" (தேவா) என்றும், "நீறணியாத நெற்றியினைச் சுடு" (வேதம்) என்றும் கூறுபவாகலின் அவ்வாறு ஒழியாது நீற்றினால் உண்மை உயிர்வாழ்க்கை பெறுபவனாக ஆக்கி என்ற குறிப்பும் காண்க. சமண சார்பாற் சிவாபராதப்பட்டு வீழ்ந்து கிடந்த உயிரை மேல் எடுத்துப் புனிதமாக்கி அளித்தது என்ற குறிப்புமாம்.

செங்கமலத்து அன்னம் அனையார் - மங்கையர்க்கரசியம்மையார்; அன்னம் - அன்னம் போன்றவர் என்க; நடைபற்றிய உவமம். "செய்ய தாமரைமே லன்னமே யனைய சேயிழை" என்ற தேவாரப் பகுதி ஆசிரிய வசனமாக எடுத்தாளப்பட்டது. "பங்கயச் செல்வி" என்று பிள்ளையாரால் போற்றப்படும் நிலையுள்ள அம்மையாரை ஈண்டுப், பிறவியுட்படும் இலக்குமிக்கு உவமிப்பதாகக் கூறுவார் பொருள் பொருந்தா தென்க.

அன்பு அருளுதலாவது - தமது இன்னருளினை அளித்தல்; அவர்கள் வேண்டியவாறே சமணீக்கமும் சைவ ஆக்கமும் செய்தருளுதல்.

வைதிகத்தின் தூநெறி - வைதிக சைவநெறி. "வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத் துறைவிளங்க" என்றபடி வேதத்திற் காட்டிய நெறிகள் பலவற்றுள்ளும் தூய்மை செய்வது சைவநெறியே யாதலின் தூநெறி என்றார்.

தூநெறியே துன்னுநெறி ஆக்குதலால் என்க. முன்னிருந்த வினையவை துன்னுத-பொருந்தாத-நெறி என்பதாம்.

வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார் - சைவநெறியின் ஆக்கப்பாட்டிலே உலகுயிர்கள் ஓங்கி வாழ்தல் கண்டு மகிழ்வது வாகீசப் பெருமானின் மனநிலை, "தேவர் திருவடிக் கீழ் நெறியைப் பூசை"; "திருநாம மஞ்செழுத்துஞ் செப்பாராகில தீவண்ணர் திறமொருகாற் பேசாராகில அருநோயகள் கெடவெண்ணீ றணியாராகில"; "நமச்சிவாயஞ் சொல்ல வல்லோ நாவால"; "விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற் பூசி" (தேவா) என்பனவாதி அவரது எண்ணிறந்த திருவாக்குக்களால் இவ்வுண்மை இனிது விளங்கும். நிலகவதியம்மையார் திருநீற்றை யஞ்செழுத்தோதிக் கொடுக்கப்பெற்றமையால அத் துணைகொண்டே தாம் கரையேறியமை திருவுள்ளத்தில் எப்போதும் கொண்டு மகிழ்ந்தனர் அரசுகள். "சாமப்லைப் பூசித் தரையிற் கிடந்தினை முன்பரவி, யேம் பலிப் பாராகட் கிரங்கு கண்டாய" என்று அடியார்கள்பொருட்டு வேண்டுதலும், "அஞ்சும் போதினை ஞமைத் திருவெழுத, தஞ்சந் தோன்றவருளும்" என்று வேண்டுதலும் பிறவும் சிவசாதனப் பொலிவொழுக்கமாகிய சைவநெறி விளக்கத்தில் அரசுகள் கொண்ட ஆர்வத்தைக் காட்டுவன. இவ்வாறு மகிழ்தல் - விருப்பு வெறுப்புக்களாகும் ஆணவமலச் சார்பாகிய காரணத்தாலன்று பலவுயிர் ரீனத்தையும் ஒக்கப் பார்க்கும் செல்வக் கடவுட் டொண்டரா (திருவிடை - மு. கோ - 7)கிய அரசுகள், உயிர்கள் படும் துன்பங் கண்டிழி அதற்குப் பரிதலமாத்திரையே இங்கு மேற்கொண்ட மகிழ்ச்சியாம் எனக. சிவஞான மாபாடியம 12 - சூத் - 2 அதி - பா'க௯. "களைத் தலைவர் துயர்கருதித் தங்கருணை, வெள்ளத் தலைவா மிக" (திருவருட் பயன்). 944

2843. சொல்லின் பெருவேந்தர் தொண்டைவள நாடெய்தி
மல்கு புகழ்க்காஞ்சி யேகாம் பரமன்னுஞ்
செல்வர் கழல்பணிந்து சென்றதெல்லாஞ் செப்புதலும்
புலங்குநூன் மாப்பெரும்பிள்ளையார் போற்ற மனம்புரிந்தார் ௯௪௫

(இ - ள்) தொண்டைவள நாடெய்தி...சென்றதெல்லாம்-திருத்தொண்டை வளநாட்டினைச்சேர்ந்து மிகுந்தபுகழினையுடைய காஞ்சிபுரத்தில் திருவேகாம்பரத்தில் நிலைபெற வீற்றிருக்கும் செல்வராகிய திருவேகம்பரது திருவடிகளைப் பணிந்து சென்று வந்த வரலாறுகள் எல்லாவற்றையும்; சொல்லின் பெருவேந்தர் - வாக்கின் பெரிய அரசராகிய அரசுகள்; செப்புதலும் - சொல்லியருளுதலும் (அதுகேட்டு); புல..ந்...மனம் புரிந்தார் - பொருந்திய நூலுடைய மாபராகிய பிள்ளையாரும் அங்குச்சென்று துதிக்கத் திருவுள்ளங்கொண்டருளினார்.

(வி - ரை) சொல்லின் பெருவேந்தர் - "வாக்கின் றனிமன்னர்" (2839) சொல்லின் பெருவேந்ராதலின் அவர் செப்புதலும், அது பிள்ளையாரை அத்தொண்டை நாட்டு யாத்திரையில் உடனே மனம் வைக்கச் செய்தது எனபது குறிப்பு.

காஞ்சி - நகர்ப் பெயர். தொண்டை வளநாடு - நாட்டு வளமும், மன்னு புகழ் - நகரின் பெருமையும் குறித்தவாறு. இவை முன் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துட் பேசப்பட்டமையால் இங்குச் சில அடைமொழிகளால் இவ்வாறு சுட்டிக் கூறினார்; விரிவு ஆண்டுக் காண்க. வளநாடு - நாட்டின் பெரும் பகுதிக்கு முன்னாளில் வழங்கிய மரபுப் பெயருமாம். (கல்வெட்டுக்கள் பார்க்க).

**ஏகாம்பரம்** - ஏகம்பத் திருக்கோயிலின் பெயர். ஆம்பரம் - மா. மாமரத்தின் கீழ் இறைவர் வெளிப்பட்டருளுகின்றமையால் இப்பெயர் பெற்றது.

**செல்வர்** - உலக முதலாக உயிரில்லாதவற்றை யெல்லாம் தமது உடைமையாகவும் உயிர்களையெல்லாம் அடிமையாகவும் உடையவராதலின் செல்வர் எனப்பட்டார். "செல்வன் கழலேத்தும் செல்வம்"; "செல்வ மல்கிய செல்வா" முதலியவை காண்க. முத்தியாகிய பெருஞ்செல்வத்தை யுடையவர் என்றலுமாம்.

**சென்றது எலாம்** - தொண்டைநாட்டு யாத்திரையினை முடித்துத் திருக்கயிலை சென்று இங்கு மீண்டருளியிருக்கும் வரையில் உள்ள வரலாறுகளை எல்லாம்.

**கேட்புதலும் கேட்டருளியதனால்** - உடன் மனங்கொண்டனர்; இவ்வாறே முன்னர்த் திருவாரூர் நிகழ் செல்வத்தினை வாகீசர் சொல்லக் கேட்டலும் பிள்ளையார் அங்குச் சென்றருளத் துணிந்ததையும் இங்கு நினைவுகூர்க. ஆரூரும் காஞ்சியுமாகிய இரண்டும் பிறந்தவித் தலங்களாதலும், அதனால் இரண்டும் ஒப்ப அருளவா முனைத்தற்கிடமாதற் றகுதியுடையனவாதலும் கண்டுகொள்க. இரண்டும் ஒப்ப ஆளுடைய நம்பிகள் கண்பெற்ற பதிகளாவதும் இங்கு நினைவுகூர்தற்பாலது.

**போற்றித் திறம் புரிந்தார்**—என்பதும் பாடம். 945

2844. அங்கணரைப் போற்றியெழுந் தாண்ட வரசமர்ந்த
பொங்கு திருமடத்திற் புக்கங் கினிதமர்ந்து,
திங்கட் பகவணியுஞ் சென்னியார் சேவடிக்கீழ்த்
தங்கு மனத்தோடு தாம்பரவிச் செல்லுநாள்; சுகூசுசு

2845. வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்
நாக மரைக்கசைத்த நம்பர் கழல்வணங்கப்
போகும் பெருவிருப்புப் போங்கப் புகலியின்மேல்
ஏகும் பெருங்காதல் பிள்ளையா ரேற்றெழுவார், சுகூசுஎ

*2846. பூந்துருத்தி மேவும் புனிதர்தமைப் புக்கிறைஞ்சிப்
போந்து திருவாயிற் புறத்தணைந்து நாவினுக்கு
வேந்தர் திருவுள்ள மேவவிடை கொண்டருளி
யேந்தலா ரெண்ணிறந்த தொண்டருட னேகினார். சுகூசுஅ

2844. (இ - ள்) அங்கணரை...அமர்ந்து - (பிள்ளையார்) இறைவரைத் துதித்து எழுந்து ஆளுடைய அரசுகள் விரும்பி எழுந்தருளிய அன்பு பொங்கும் திருமடத்திற் சென்று சேர்ந்து அவ்விடத்திலே இனிதாக விரும்பி வீற்றிருந்தருளி; திங்கள்... ...செல்லுநாள் - திங்களின் பிளவுபோன்ற பிறையினைச் சூடிய தலையினையுடைய இறைவரது சேவடியின் கீழே தங்கும் திருவுள்ளத்துடனே தாமும் துதித்து எழுந்தருளியிருந்த காலத்திலே; கசுசு

2845. (இ - ள்) வாகீசமாமுனிவர்...போக - வாகீசப்பெருமுனிவராகிய அரசுகளுக்கு நிலைபெற்ற திருவாலவாயில் எழுந்தருளிய பாம்பினை அரையிற் கட்டிய இறைவரது திருவடிகளை வணங்குதற்காகப் போகவேண்டுமென்னும் பெரிய விருப்பம் மேன்மேல் வரவும்; புகலியின்மேல்...ஏற்றெழுவார் - பிள்ளையார் சீகாழியின்கண் சென்று சேரும் பெருகிய காதலை மேற்கொண்டும் எழுவாராகி; கசுஎ

2846. (இ - ள்) பூந்துருத்தி...புறத்தணைந்து - திருப்பூந்துருத்தியில் பொருந்தி வீற்றிருந்தருளும் இறைவரைத் திருக்கோயிலினுள் புகுந்து வணங்கிப் போந்து திருவாயிற்புறத்திலே சேர்ந்து ; நாவினுக்கு...விடைகொண்டருளி - திருநாவுக்கரசரது திருவுள்ளம் மகிழ்ச்சி பொருந்த அவர்பால் விடைபெற்றுக்கொண்டருளி ; வந்தவர்...
...ஏகினர் - பெருமையுடையவராகிய பிள்ளையார் அளவில்லாத திருத்தொண்டர்களோடும் சென்றருளினர். கஉஅ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண் டுரைக்கநின்றன.

2844. (வி - ரை) அங்கணரைப் போற்றி எழுந்து - கோயிலின் திருமுற்றத்தில் அமர்ந்து இருபாலும் அடியார் செய்திகளை வினவி மகிழ்ந்திருந்த இடத்தினின்றும், இறைவரைப் போற்றி எழுந்தனர் ; போற்றுதல் - அடியார்க்கருளிய தன்மைகளை வினவி மகிழ்ந்த நிலையில் இறைவரது திருவருளைப் பாராட்டும் முகத்தானும், திருக்கோயிலினின்றும் புறப்படும்பொழுது விடைகொள்ளும் முகத்தானும் அறிந்தலாம். இப்பொருள்களைத், திருமடத்திற் செல்லாது திருக்கோயிற்புறத் திருமுற்றத்தில் வினவிப் பேசி மகிழ்தல் என்னை? எனின், அதற்குரிய இடம் அதுவேயாதலானும், அங்கு ஆண்டவர்களும் அடியார் செய்கையின் பெருமையுமன்றி வேறு பேசலாகாது என்பவாதலானும் என்க. முன்னாத திருக்கோயிலின் வழிபடச் செல்லுங்கால் வேறு சிந்தித்தலும் வேறு பேசலுமாகாது என்பதும் கருதுக.

ஆண்ட அரசமர்ந்த பொங்கு திருமடத்திற் புக்கு - இது அரசுகள் அங்குறையுந் தன்மையினைத் திருவுள்ளங் கொண்டு தாம் செய்து அமைத்த திருமடம். இதுபற்றி அவர்தம் புராணத்துள் (1653 - 1654) உரைத்தவையும், III - பக். கூ௩௨-ல் உரைத்தவையும் பார்க்க. பொங்குதல் - அருள் பெருகுதல்.

திங்கட் பகவு - பிறை ; பகவு - பிளந்ததுற்ற பெறப்படுவது. பது - பகுதி.

சென்னியார் சேவடிக்கீழ்த் தங்கு மனத்தோடு தாம்பரவி - "திருவடிக் கீழ்நாமிருப்பதே" (தேவா) என்ற கருத்துடன் பல பதிகங்கள் அருளித் தொண்டு செய்து அரசுகள் அங்கு உறைதலை விரும்பித் திருமடமும் செய்து அமர்ந்தாராதலின், பிள்ளையார் தாமும் அத்தன்மையே பற்றித் திருவுளத்தமைத்துப் போற்றி எழுந்தருளி யிருந்தனர்.

திங்கட் கொழுந்தணியும்—என்பதும் பாடம். 946

திருப்பூந்துருத்தி - பிள்ளையார் அருளிய பதிகங்கள் கிடைத்தில!

தலவிசேடம் :—திருப்பூந்துருத்தி - காவிரியின் தென்கரை 11-வது பதி. இந்திரன், காசிபர், சோழ அரசன் முதலியவர்கள் வழிபட்ட தலம் ; திருவையாறுள்ளிட்ட "ஏழு தலங்க"ளுள் (சத்த தானம்) ஒன்று. ஆளுடைய பிள்ளையார் புறத்திலிருந்து உட்புகும்போது நேரே கண்டு கும்பிடும்படி இடபதேவர்கள் வழிவிலகிக் காட்டினர் என்பர். அரசுகள் இங்கு உறையும் தன்மைவேண்டித் திருமடம் செய்து அமர்ந்தருளிய செய்தியும், ஆளுடைய பிள்ளையார் இங்கு எழுந்தருளும்பொழுது அரசுகள் எதிர்கொண்டு சென்று அவரது சிவிகை தாங்கிவந்த செய்தியும், பின்பு இருவரும் அரசுகளது திருமடத்தில் தங்கியமர்ந்திருந்த செய்தியும், பிறவும் முன்னர் அவ்வவர் புராணங்களுள் விரிக்கப்பட்டன. சுவாமி பெயர் பொய்யிலி நாதர் ; புட்பவன நாதர் என்று கூறுவது வடமொழி வழக்கு ; பொய்யிலி - ஆதிபுராணன் - செல்வன் முதலிய பெயர்கள் அரசுகளது பதிகங்களுட் காணப்படும். அம்மையார் - அழகார்ந்த நாயகி ; பதிகம் 2.

இது தஞ்சாவூர் நிலயத்தினின்றும் வடக்கே கற்சாலைவழி 5 நாழிகையளவில் உள்ள திருக்கண்டியூரினின்றும் மேற்கே மட்சாலைவழி 2 நாழிகையளவில் உள்ளது.

2845. (வி - ரை) முனிவர்(பால்) - பெருவிருப்புப் பொங்க-என்க ; பொங்கவும் - ஏற்றும் - என்று ஈரிடத்தும் எண்ணும்மைகள் விரிக்க ; இவ்வாறன்றி பொங்க என்ற வினைஎச்சம் எழுவார் என்ற பிற வினைமுதல் வினைகொண்டு முடிந்தது என்றலுமாம். "அருளிய - புனைவா" (போதம் - கடவுள் வாழ்த்து) என்புழிப்போலக் கொள்க.

பெருவிருப்பு - பெருங்காதல் - என இருவர்பாலும், பேரன்பின் திறம் வெளிப்பட்டது என்பது.

பெருவிருப்பு - முன்னரே பிள்ளையாருடன் திருவாலவாய் செல்ல அரசுகள் மனங்கொண்ட நிலையினைப் பிள்ளையார் ஆணைதந்து மறுத்தனராதலின், அவ்விருப்பம் அரசுகளது திருவுள்ளத்தில் ஊன்றி மேலெழ நின்றது. இங்கு அம்மையார் - அமைச்சனார் - அரசனார் திறங்களையும் பாண்டிநாட்டிற் றிருநீறு வளர்த்த நிலையினையும் பிள்ளையார் திருவாக்காற் சொல்லக் கேட்ட மகிழ்ச்சி அவ்வார்வத்தை மேலும் பெருக்கிற்று என்பார் பெருவிருப்பு என்றார். இவ்விருப்பின்படி அரசுகள் பாண்டிநாடு சென்ற வரலாறுகள் அவர்தம் புராணத்துட் கூறப்பட்டன.

பெருங் காதல் - தோணியில் எழுந்தருளிய தமது அம்மையப்பரிடம் பிள்ளையார் பலநாட் பிரிவின்பின் செல்ல எண்ணியபடியால் அதனை பெருங்காதல் என்றார்.

மன்னு திருவாலவாய் - நம்பர் - "என்றலையி னுச்சியென்றுந் தாபித் திருந்தானை"; "வேதியா......என்றென், றோதியே மலாகடுவி"; "நறுமலர் நீருங்கொண்டு நாடொறு மேத்தி வாழ்த்திச் செறிவன சித்தம் வைத்து" என்பனவாதி திருவாக்குக்களால் அறியப்படுகின்றபடி அரசுகள் நிலைபெற ஆன்மார்த்த நாயகராகப் பூசித்து மனங்கொண்ட திருவாலவா யிறைவா என்பது குறிப்பு.

ஆலவாய் நாக மரைக்கசைத்த நம்பர்-நாக மரைக்கசைத்தும் மேனி முழுதும் நாகம் பூண்டும் சித்தராய் வந்து தாம அணிந்த பாம்பினை நகரத்தின் எல்லை காட்டும்படி ஏவியருளிய குறிப்பும்பெறக் கூறியபடி.

ஏற்று எழுவார் - மேற்கொண் டெழுவாராய. ஏகினர் என வரும் பாட்டுடன் முடிக்க. எழுவார் - முற்றெச்சம். எழுதல் - திருவுள்ளங்கொண்டு புறப்படுதல்.

2846. (வி - ரை) புக்கு - திருக்கோயிலுள்ளே புகுந்து ; திருக்கோயிலினுள் என வருவிக்க.

நாவினுக்கு வேந்தர் திருவுள்ளமேவ விடைகொண்டருளி - திருவுள்ள மேவ விடைகொண்டு என்றது பிள்ளையார் முன்னர்ப் பாண்டிநாட்டுக்குச் சென்றருளிய போது அவர் உடன் வருதலை மறுத்து, அவர் தம்மைப் புனனாட்டிலெழுந்தருளி யிருப்பீர் என்று ஆணையிட்டருள, அரசுகள் பிள்ளையாரை மறக்கமாட்டாது அரிதாகக் கருத்தினோர்ந்தார் என்றும், அவ்வாறு சென்றருளிய பிள்ளையார்பால் விடைகொண்டு வாகீசர் இருந்தனர் என்றும், அந்நிலையில் அவருக்கு விடைகொடுத்துப் பிள்ளையார் நீங்கியருளினர் என்றும் முன்னர்க் கண்டோம் ஆதலின் ஈண்டு அவ்வாறன்றி அவரது திருவுள்ளம் பொருந்த மனமார்ந்த விடை அவர்பாற் கொண்டருளினர் என்பதாம். விடைகொண்டு பிரிந்து செல்லினும் அவரது திருவுள்ளம் தம்பாலகலாது பொருந்த என்ற குறிப்பும் காண்க. இவ்விரு பெருமக்களும் இந்நிலவுலகில் சந்தித்தல் இஃது இறுதிமுறையாதலும் குறிப்பு.

ஏந்தலார் - பெருமையுடையோர், பிள்ளையார். முன் கூறியபடி அரசுகளை நிற்கப் பணித்து ஆணையிட்டுச் சென்ற பிள்ளையார், மீண்டு அவர்பால் தாமே எழுந்தருளித் தாம் அவ்வாறு பிரிந்து சென்றதுமுதல் அதுவரை நிகழ்ச்சிகளை அருளிச்செய்து அவரை மகிழ்வித்து அவரது திருவுள்ள மேவ விடைகொண்டனராதலின் அளப்பரிய அப்பெருமை குறிக்க ஏந்தலார் என்றார். அரசுகளால் சிவிகை தாங்கி ஏந்திவரப்பெற்றவர் என்ற குறிப்புமாம்; "அப்பரே" என அவரைப் போற்ற அவரும் "பிள்ளாய்!" என்று விளிக்க உள்ள பிள்ளையார் என்ற நிலையினால் ஏந்தப்பெற்றவர் என்ற குறிப்பும் காண்க. 948

2847. மாடுபுனற் பொன்னி யிழிந்து வடகரையில்
நீடுதிரு நெய்த்தான மையாறு நேர்ந்திறைஞ்சிப்
பாடுதமிழ் மாலைகளுஞ் சாத்திப் பரவிப்போய்
ஆடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார் ௯௪௯

(இ-ள்) மாடு...இழிந்து - அருகில் உள்ள காவிரியில் இறங்கிச் சென்று; வடகரையில்...பரவிப்போய் - ஆற்றின் வடகரையிலே நிலைபெற்றுள்ள திருநெய்த்தானப் பதியினையும், திருவையாற்றினையும் சென்று சேர்ந்து பணிந்து பெருமையுள்ள தமிழ் மாலைகளையும் கட்டளையிட்டுத் துதித்துச்சென்று, ஆடல்...அணைந்தார் - ஐந்தொழிற் கூத்தினைச் செய்யும் இறைவரது திருப்பழனத்தினைச் சென்று அணைந்தனர்.

(வி-ரை) மாடுபுனற் பொன்னி - காவிரியின் தென்கரையில் ஆற்றுக்கு மிக அருகில் திருப்பூந்துருத்தி உள்ளமையால் மாடு என்றார். மாடு - மிக அணிமை - பக்கம்.

இழிந்து - ஆற்றில் இறங்கி நடந்து வழிக்கொள்ளும் முறை குறித்தது.

நீடு - "நிலமல்கிய புகழினமிகு" என்பது தேவாரம்.

வடகரையில் இறைஞ்சி - திருநெய்த்தானம், திருவையாறு என்ற இரண்டு பதிகளும் காவிரியின் வடகரையில் அணிமையில் உள்ளன. பிள்ளையார் ஆற்றைக் கடந்தவுடன் எதிர்க்கரையில் உள்ள திருநெய்த்தானத்தை வணங்கிப் பின் அந்தக் கரைவழியே சென்று கிழக்கில் அணிமையில் உள்ள திருவையாற்றினை வணங்கினார் என்ற வழிவகை காட்டிய வைப்புமுறையும் காண்க. காவிரிக் கரையில் பதிகள் இருமருங்கும் உள்ளனவாதலால் வழிப்படுவோர் இருகரையும் கலந்தே சென்று வழிபட்டுச் செல்வது நியமம் என்பதை முன்னர் அரசுகள் புராணத்துமும் காண்க. "பொன்னி யிருகரையும் சார்ந்து" (1455) நேர்ந்து - கோப்பட்டச் சென்று சேர்ந்து. "கோப்படநின் றறைகூவும் திருப்பதிகம்" (1680) இவை ஒருமுறையில் வழிப்பட உள்ளன என்ற குறிப்பும் காண்க. இவை முன் இறைஞ்சிய பதிகளாயினும் பின்னரும் வழியில் கோப்பட்டமையால் இறைஞ்சி என்ற குறிப்புமாம்.

பாடு தமிழ்மாலை - பாடு - பெருமை, பாடுகின்ற - அன்பர்கள் பயின்று பாடி உய்தி பெறுகின்ற என்றலுமாம். "பேசற்கினிய பாடல்" (11) என்ற தேவாரக் குறிப்பு. பாடு மாலை - என்றது கையின் பணியாலாகும் மாலையன்றி வாக்கின் பணியாகிய மாலை என்பது.

ஆடல் - ஐந்தொழிற் பெருங்கூத்து; "ஆடுநரொருவர் போலும்" (நேரிசை); "ஆடி நின்றாய்" (திருவிருத்தம்). ஆடல் - அடுதல்-அழித்தல்-வெல்லுதல் என்று கொண்டு, அடைந்தாரது வினைகளை அறுக்கின்றவர், சங்கார காரணர் என்றுரைக்க

வும் நின்றது. "பாதந் தொழுவார் பாவந் தீர்ப்பார் பழன நகராரே" (1) என்ற பிள்ளையாரது தேவாரக்குறிப்புக் காண்க. இத்தலத் திருப்பதிகத்தினுள் "காலனை... ...புறந்தாளா லெண்ணு துதைத்த" (2), "பேயுறை மயான மிடமா வுடையார்" (3), "மயானத்தி லிரவிற்பூதம் பாடவாடி" (4), "மதின்மூன் றெரித்த கொல்லே றுடை யண்ணல்" (5), "நஞ்சார் சுடலைப் பொடிநீ றணிந்த நம்பான" (8), "பொடியா டகலமுடையார்" (9) என நிரந்து இக்கருத்தே பற்றிய பிள்ளையார் அருளுதலும், "பாவமே தீரநின்றா" (2), "பண்டையென் வினைக ளீர்ப்பார்" (3), "பாற்றினார் வினைகளெல்லாம்" (8) (நேரிசை), "உறுநோய சிறுபிணிகள் டாப்பார் தாமே" (2) (தாண்) என்று அரசுகள் அருளுதலும் ஈண்டு கருதத்தக்கன.

(திருப்பூந்திருத்தி) திருநெய்த்தானம், ஐயாறு, திருப்பழனம் - இவை இவ்வாறு ஒரே முறையில் சேர்ந்து வழிபட உள்ளன (ஏழு பதிகளுட் சேர்ந்தன) என்பது "பூந்துருத்தி நெய்த்தான மேயார் தாமே, யுடைவே புனல்சூழை யாற்றூர் தாமே" (பழனம் - தாண்டகம்) என்ற திருவாக்கானுமறிக. இக்குறிப்புப்பட இவற்றை இவ் வொருபாட்டில் சேரவைத்துக் கூறிய தெய்வ வருட்குறிப்பும் காண்க. 949

திருநெய்த்தானம் : 2203-ம் பாட்டின்கீழ்ப் பார்க்க.

III திருவையாறு : [இங்குப் பிள்ளையார் முன்முறை எழுந்தருளியபோது அருளிய இரண்டு பதிகங்கள் 2199 - 2201 பாட்டுக்களின் கீழ்த் தரப்பட்டன, கண்டுகொள்க.]

திருச்சிற்றம்பலம் திருவிராகம் பண் - இந்தளம்

திருத்திகழ் மலைச்சிறுமி யோடுமிகு தேசர்
உருத்திக ழெயிற்கயிலை வெற்பிலுறை தற்கே
விருப்புடைய வற்புத ரிருக்குமிட மேரார்
மருத்திகழ பொழிற்குலவு வண்டிருவை யாறே. (1)

வாசமலி யும்பொழில்கொள் வண்டிருவை யாற்றுள்
ஈசனை யெழிற்புகலி மன்னவனு மெய்ஞ் ஞானப
பூசுர னுரைத்ததமிழ் பத்துமிவை வல்லார்
நேசமலி பத்தரவர் நின்மல னடிக்கே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இறைவரது இடம் திருவையாறே.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) திருவையாறே அற்புதர் இருக்கும் இடம் என்று கூட்டுக. தேசர்-தேசு - ஒளி ;—(2) இந்திரன் பூசித்தது தலவிசேடம் ;—(3) "துடி முழ நந்திகன்" என்றபடி நந்தி முழவிரட்ட அதற்கேற்றவாறு நடஞ் செய்கின்ற பெரு மான் என்பதும், இப்பதியில் நந்திதேவர் அருள் பெற்றனர் என்பதும் குறிப்பு ;—(4) வடம் - வடவாலமரம் ; எண்ணிலா - அளவிலலாத ; பொன்னி மண்ணின்மிசை வந்தணவு - இமயத்தினின்றும் அகத்தியரது குண்டிகையில் காவிரி வந்த வரலாறு கந்தபுராணத்துட் காண்க ;—(5) நடமாடி - ஆடுபவர். ஆடி - பெயர் ;—(6) பாத முதல் - பாதமுதலாகப் பல அங்கங்களிலும் ;—(7) சுளிவு - வருத்தம் ; புலத்தல் - வெறுத்தல் என்றலுமாம். பின்னொரு தவம் - தாமும் வேறொரு தவம் ; யோகம் ;— அங்கே என்னசதி - உமை தவங்கண்ட நிலை ;—(8) துரக்க - வலிபுடைய ;—(9)

பருந்து - பருந்து என்பது பருந்து என வந்தது செய்யுள் விகாரம்; பருந்து - இக்குப் பறவைக்குப் பொதுப் பெயராய் அன்னம் என்ற பொருள் தந்து நின்றது;—(10) மாக்கம் - மாகம் என்பது எதுகை நோக்கி இடையொற்று மிக்கு வந்தது. மாகம் - விண்.

2848\. செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திறைஞ்சிப்
பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவுந்
தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்
மங்கை திருமுலைப்பா லுண்டருளும் வள்ளலார். ௩௪௦

(இ - ள்) செங்கண்...இறைஞ்சி - சிவந்த கண்ணையுடைய விடையினைக்கொண்ட இறைவரது திருப்பழனத்தைச் சேர்ந்து வணங்கி; பொங்கிய...போய் - மேலோங்கிய காதலினாலே முன்னர்த் துதித்த பதிகள் பிறவற்றிலும் சென்று சேர்ந்து தங்கிப் போய்; தனிப் பொருப்பின்...வள்ளலார் - ஒப்பற்ற பொன்மலை வல்லியாகிய அம்மையாரது திருமுலைப்பாலுண்டருளும் வள்ளலாராகிய பிள்ளையார்; சண்பை நகர் சார்ந்தார் - சீகாழித் திருநகரைச் சார எழுந்தருளினார்.

(வி - ரை) திருப்பழனம்-முன்பதியும் திருநெய்த்தானம், திருவையாறுபோல பிள்ளையார் இரண்டாம் முறை இறைஞ்சிய பதியாம்; பிள்ளையார் இப்போது சென்றருளிய வழியினைக் காட்டுதற்பொருட்டும், திருப்பூந்துருத்தியுள்ளிட்ட ஏழு தலங்களுள் வரும் சிறப்புப் பற்றியும், இவற்றை எடுத்துக் கூறி, ஏனையவற்றை "முன் போற்றும் பதி பிறவும் தங்கி" என்று சேர்த்துக் கூறியருளினார்.

பொங்கிய காதலின் என்றது முன் போற்றும் என்றும் பொங்கிய காதலிற் றங்கி என்றும் ஈரிடத்தும் கூட்டி உரைக்க நின்றது. முன் - முன் முறையில். முன் முறையிற் போற்றியது 2203 முதலிய பாட்டுக்களிற் காண்க. பொங்கிய காதலிற் றங்கி என்றதனாலே முன்முறை சென்று போற்றியிருப்பினும் பின்னர் நோக்கப்பட்டபோது அன்பு மேலும் ஓங்கிற்று என்பதாம். திருக்கோயில் வழிபாட்டின் பெருமையும் இன்றியமையாமையும் எடுத்துக்காட்டியருளியபடி.

பதி பிறவும் - இவை வடகுரங்காடுதுறை - திருப்புள்ளிருக்குவேளூர் - திருக்குடந்தை - திருப்பனந்தாள் முதலாயின என்பது கருதப்படும். இவையே குடந்தை வரையிலும் கிழக்கே வரும் சாலைவழி வந்து, அங்குநின்றும் பிரிந்து வடகிழக்குச் சீகாழியை நோக்கிச் செல்லும் பழைய சாலைவழியில் உள்ளன.

தனிப் பொருப்பின் மங்கை - உமையம்மையார்; தனிப் பொருப்பு - பொன் மலை.

சார்ந்தார் - சண்பையின் புறத்துச் சார எழுந்தருளினார். 950

திருப்பழனம் - தலவிசேடம் III - பக்கம் ௩௩௧ பார்க்க.

தேவாரமும் குறிப்புக்களும் 2197-ம் பாட்டின்கீழ்க் காண்க.

2849\. தென்னாட் டமண்மா சறுத்தார்தந் திருவேறு
அந்நாடு போற்றவிசைத்தார வந்தணையும் வார்த்தைகேட்
"டெந்நாள் பணிவ?"தென வேறெழுந்த மாமறையோர்
முன்னாக வேத முழக்க வெதிர்கொண்டார். ௩௪௧

(இ - ள்) தென்னாட்டு...கேட்டு - தென்னாடு என்னும் பாண்டி நாட்டில் சமண மாகிய குற்றங்களை அழித்தது திருநீற்றினை அந்நாடு முழுதும் அணியும்படி செய்தருளிய பிள்ளையார் வந்து அணைகின்ற வார்த்தையினைக் கேட்டு ; எந்நாள்...மறையோர் - எந்நாளில் அவரைப் பணியப் பெறுவோம் என்று ஆர்வங்கொண்டு எழுந்த பெருமறை யவர்கள் ; முன்னாக...எதிர்கொண்டார் - அவர் முன்சென்று வேதங்கள் முழங்க எதிர்கொண்டார்கள்.

(வி - ரை) தென்னாடு - பாண்டி நாடு. நாட்டு - நாட்டின்கண் ; மாசு - குற்றம்.

அமண்மாசறுத்து - பரசமய நிராகரிப்பினால் தூய்மையாக்கி.

திருநீறே...போற்றுவித்தார் - ஏகாரம் தேற்றம் ; பிரிநிலையுமாம். போற்றுவித்தல் - யாவரும் போற்றியணியும்படி செய்தல்.

"எந்நாள் பணிவ" தென - பிள்ளையார் பிரிந்து சென்றருளி (பல காலங்கள்) இரண்டாண்டுகளின் மேலாயினமையானும், முன்னர்ச் சீகாழி மறையவர்கள் திருவீழி மிழலையிற் சென்று அழைத்தபோது திருவருள் வினவிப் பின்னர் வருவதாக அவர்களைப் போக்கியமையானும் மறையோர் எக்காலத்திற் பிள்ளையாரை இங்குக் கண்டு பணியப் பெறுவோமென்று மிகவும் மேலெழுந்த ஆர்வங் கொண்டிருந்தனர் என்க.

முன்னாக - பிள்ளையாரின் முன்புசெலல ; வேதம் முழங்க-வேதங்களை முழக்கிக் கொண்டு ; "ஆரணங்கள் மதுரவொலி யெழுந்து பொங்க" (2156) என முன்னர் முத்துச்சிவிகை பெற்றபின் மீண்டருளியபோது வேத முழக்கி எதிர்கொண்டவாறே இப்போது அவரது அவதார உள்ளுறையினை நிறைவாக்கி வெற்றியுடன் சீகாழிக்குத் திரும்பும்போதும் வேத முழக்கி எதிர்கொண்டனர் எனக. இது சீகாழிக்குப் புறநகரில் நகர்க்குத் தென்புறம் திருத்தோணிபுரக் கோயில் கட்புலப்படாத அளவு தூரத்தில் (2850) நிகழ்ந்ததென்க. அத்துணை தூரமளவு வந்து மறையவர்கள் எதிர்கொண்டமை அவர்களது ஆர்வமிகுதியினைக் காட்டுவது ; குலச்சிறையார் பிள்ளையாரை எதிர் கொண்ட நிலையினையும் இங்கு நினைவுகூர்க.

அமணுசறுத்து—வேதமோழ்ந்தங்கு—எனபனவும் பாடங்கள். 951

வேறு

2850. போத நீடுமா மறையவ ரெதிர்கொளப் புகலிகா வலருந்தம்
சீத முத்தணிச் சிவிகைநின் றிழிந்தெதிர் செல்பவர் திருத்தோணி
நாதர்கோயின்முன் றோன்றிட நகைமலர்க் கரங்குவித் திறைஞ்சிப்போய்
ஓத நீரின்மே லோங்குகோ யிலின்மணிக் கோபுரஞ் சென்றுற்றார்.

(இ - ள்) போத...எதிர்கொள - ஞானமிக்க பெரிய வேதியர்கள் தம்மை எதிர் கொள்ள வர ; புகலி...செல்பவர் - சீகாழித் தலைவராகிய பிள்ளையாரும் குளிர்ந்த முத்துக்களாலியன்ற சிவிகையினின்றும் இறங்கி அவர்களெதிரே செல்பவராய் ; திருத்தோணி...போய் - (அப்போது) இறைவர் திருத்தோணியில் எழுந்தருளிய திருக்கோயில் முன்னால் தோற்றப்படப் புதிதலர்ந்த தாமரை போன்ற கைகளைக் கூப்பி வணங்கிச் சென்று ; ஓத நீரின்...உற்றார் - ஊழி வெள்ளத்தில் மேலே மிதந்த அத் திருக்கோயிலினது அழகிய கோபுரத்தைச் சென்று சேர்ந்தருளினார்.

(வி - ரை) போதம் - ஞானம் ; இறையறிவு. மறையின் உள்ளுறையாவது சிவனையறிவிக்கும் தன்மை.

பணிந்து துதி செய்து ; துங்க நீள்...ஏறி - பெரிய நீண்ட பெருந் திருத்தோணியாகிய திருக்கோயிலை அருளினாலே தொழுது மலையின்மேலேறி ; மங்கையோடு...பணிவுற்றார் - அம்மையோடும் உடனாக எழுந்தருளிய இறைவரது மலர்போன்ற பாதங்களை வணங்கியருளினாராய் ; கஉ௫௧

2852. (இ - ள்) முற்றும்...பணிந்தேத்தி - முழுமையாகிய திருமேனியெங்கும் மயிர்ப்புளகங்கள் செறிய முகிழ்த்தது உளவாகவும், முந்துறக் காணும் கண்கள் மிக்க களிப்படையவும், அதனாற் பற்றிக்கொண்ட திருவுள்ளத்தின்கண் உள்ளே அலையச் செய்து இடங்கொள்ளாது மேலெழும் ஆனந்தம் பொங்கிப் பொழியவும், வணங்கித் துதித்து ; உற்றமை...ஏத்தி - உற்றுமை சேர்வது என்று தொடங்கும் திருவியமகத் திருப்பதிகத்தினை மகிழ்ச்சியினாலே எடுத்துப் போற்றி ; வெற்றியாக...கான் என்பார் - வெற்றி ஆகும்படி பாண்டியனது சபையின்கண்ணும், நீரெதிரேறச் செல்ல வைகை ஆற்றின்கண்ணும் வரும் திருவருட் செய்கையுடையார் என்று போற்றுவாராகி, கஉ௫௨

2853. (இ - ள்) சீரின்...ஏற்றி - சிறப்பினால நிறைந்த திருப்பதிகத்தினில் திருக்கடைக்காப்புச் சேர்த்து ; வாரின...போற்றி - வாருடன் பொருந்திய அழகிய தனங்களையுடைய பெரியநாயகி யம்மையாருடனே நிலைபெற்று எழுந்தருளிய தோணியப்பரைப் போற்றி செய்து ; ஆரும்...ஏத்தி - நிறைந்த இனிய திருவருளைப் பெற்று மீண்டு அணைபவராகி அங்கைகள் கூப்பித் தொழுது துதித்து ; ஏரின்...மணிவாயில் - அழகினால நிறைந்த திருக்கோயிலை முன்னாலே பணிந்துசென்று அழகிய திருவாயிலினை வணங்கியருளினார். கஉ௫௩

2854. (இ - ள்) தந்தையாரும்...அணைந்திட - அங்குத் தந்தையாராகிய சிவபாத விருதயரும் வந்து பணிந்து உடன் அணைந்திட ; சணபையார்...போய் - சீகாழிப் பதியவர்களின் ஒப்பற்ற ஏறு போன்ற பிள்ளையார் பழமையாகிய மதிலுடன் கூடிய திருவாயிலினைத் தொழுது போய ; முகை...சென்று - முகைத்த மலர்களை அணிந்த கூந்தலையுடைய பெண்கள் அன்புடனே வாழ்த்துகின்ற உரைகள் இருபக்கமும் திரண்டெழ அழகிய திருவீதியினிடையே சென்று ; காதலித்தவர்கு...சார்ந்தார் - அன்புடன் வந்தவர்களுக்கு அருள்செய்து தமது திருமாளிகையின் திருமுன்கடையினிற் சார்ந்தருளினார். கஉ௫௪

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு பொருண்மேனின்று ஒருமுடிபுகொண்டுரைக்க நின்றன.

2851. (வி - ரை) மாநிலத்து அங்கம் எட்டுஉற வணங்கி - என்க. அட்டாங்க வணக்கம் என்பர்

அஞ்சலி - கூப்பிய கை ; ஏற - கைகள் தாமே ஏற.

போந்த காதல் - இங்குநின்றும் அருள்விடை பெற்றுப் போந்ததுமுதல் (2179) பாண்டிநாட்டில் சமணர்-புத்தர்களை வென்று பரசமய நிராகரித்துத் திருநீற்றினை ஆக்கித் திரும்பி வந்த இதுவரை பல நாடுகளிலும் பல நிலைகளிலும் உடனிருந்து கைதந்து காத்தருளிய நிலையினை நினைத்தமையால் மேன்மேற் பொங்கிய காதல்.

துங்கநீள் பெருந் தோணியாம் கோயில் - துங்கம் - பெருமை ; நீளுதல் - ஊழி வெள்ளந்தோறும் மேல் ஓங்கிச்சென்று மிதத்தலால நீளும் தன்மை ; தோணியாம் - தோணிபோலாகிய ; ஆக்கச்சொல் உவமப்பொருளில் வந்தது.

மங்கையோடு உடன் - உடன் - உடனாகி; பிரிப்பின்றி ஒன்றாகி;

ஏறி - தோணியின் விமானம் மேலாயதாக மலை என வழங்கப்படுமாதலால் ஏறி என்றார். "மாதிரனும் வரையென வீற்றிருந்தான்" (பஞ்சமம் - பிரமபுரம் - 11).

2852. (வி - ரை) முற்று மெய் எலாம் - எலாம் - என்றது செறிவையும், முற்றும் என்றது நிறைவையும் உணர்த்தின.

முந்து கண் - கண்டு தொழுதல் வேண்டுமென்ற ஆர்வங்கொண்ட மனத்தினும் முன்னர்க் கண்ட என்பது குறிப்பு. முகந்து கண் - என்பது பாடமாயின் கண்களால் முகந்து எனக;

பற்றும் உள்ளம் - காணுமிடத்தும் எப்போதும் மறவாது பற்றிக் கிடக்கும் திருவுள்ளம்; கண் களிகூரப் பற்றும் உள்ளம் என்று தொடர்ந்து கொண்டு அதன் மூலம் அறிந்து பற்றும் என்றலுமாம்.

உள் அலைத்து எழும் ஆனந்தம் பொழிந்தார் - மனத்தின் உள்ளிடம் முழுதும்பற்றி நிறைந்தெழுதலினாலே இடங்கொள்ள மாட்டாது அலைத்தலைச் செய்தலினால் அந்த ஆனந்தமே மேலே கண்வழி நீராகப் பொழிவதுபோல வழிய என்பது.

உற்றுமை சேர்வது எனும் - இது பதிகத் தொடக்கங் குறித்தது.

உவகையால் எடுத்தோதி - இத் திருவியமகப் பதிகம் மடக்கு என்னும் சொல்லணியும் பொருளணியும் விரவியாகப்பட்டு இறைவரது புகழ்களை ஒரு பாட்டு ஒரு தொடர்பான பொருள் கொள்ளாது பலபலவாறும் பாராட்டும் தன்மையில் போற்றலைச் செய்தலின் இதனை உவகை மீக்கூர்தலால் விளையும் விளைவு என்றார்.

வெற்றியாக...காரன் என்பார் - இது பதிகத் திருக்கடைக்காப்பிற் கண்ட பதிக் குறிப்பாகிய திருவுள்ளக்கிடையை ஆசிரியர் எடுத்து விளக்கிக் காட்டியபடி.

அவைமிசை எனவும், எதிர் நதிமிசை எனவும் தனித்தனிக் கூட்டுக. சமவாதத்திலும் அனல்வாதத்திலும் அரச மாளிகையில் அரசனுடைய சபையின்கண்ணும், புனல் வாதத்தில் ஓடும் நீரினில் ஏடு எதிர்சென்ற நிலையில் நதியின்மீதும் வந்து திருவருட் செயல் நிகழ்ந்தமை கருத்து.

காரன் - (அருள்) செய்பவர்; க்ரு - பகுதி, செய்தல். காரன் - அருளாகிய கையையுடையவன் என்று கொண்டு "அருட்டிருக் கைகொடுத்த தேற்றமும்" என்ற கருத்துப்பட உரைத்தலுமாம். 954

2853 (வி - ரை) சீர் - இறைவர் விடாது தொடர்ந்து செய்த பேரருளைத் அளித்தது நினைத்த சிறப்பு.

திருக்கடைக்காப்பு - முன்கூறிய கருத்தினையுடைய பாட்டு.

போற்றி - அத்திருப்பதிகத்தினாற் றுதித்து.

ஏறின் மன்னிய கோயில் - திருத்தோணியினை உட்கொண்ட பிரமபுரீசர் திருக்கோயில்; மணிவாயில் - அக்கோயிலின் முன்வாயில்; மணி - வாயிலிற் கட்டிய மணிகள் என்றலும், பதித்த மணிகள் என்றலும் ஆம். 955

2854. (வி - ரை) தாதையாரும்... அணைந்திட - பிள்ளையார் திருக்கோயிலை வழிபடுப் புறத்திற் சாரும் நிலையில் தாதையார் சிவபாத இருதயர் தாழ்ந்து பணிந்து அங்கு உடன் வந்தணைந்தனர் என்றதாம்.

ஏறு - சிங்கவேறு; ஏறு போல்பவரை ஏறு என்றது உபசாரம்.

மூதெயில் திருவாயில் - இது திருமதிலுடன் கூடிய புறத்திருவாயில். இது கோயிலின் மேலைத்திருவாயில் என்பது கருதப்படும்.

**முகைமலர்க் குழலார்கள்......மருங்கெழ** - பரசமய நிராகரிப்பும் திருநீற்றின் விளக்கமாகிய ஆக்கமும் கண்ட பேரருட் செய்கையை நிறைவாக்கிப் பிள்ளையார் மீண்டருளக் கண்ட பெண்கள் வீதியின் இருமருங்கும் நின்று மங்கலமொழிகளால் அவரை வாழ்த்தினார்கள். பிள்ளையாரது திருவவதாரத்தின்போது சீகாழிப் பதியவர் அனைவரும் தத்தமக்கு மங்கலம் நேர்ந்ததென்ற உணர்ச்சி பொருந்தப் பெற்றனர். முன்னர்ப் பிள்ளையார் அருண்ஞான அமுதுண்டு திருமாளிகைக்கு எழுந்தருளியகாலையிலும், முத்துச் சிவிகை பெற்று அந்த யாத்திரையினின்று மீண்டெழுந்தருளியபோதும் இவ்வாறே "மாடுநிறை மடவார்கள் மங்கலமா மொழிகளால் வாழ்த்தினார்" (1993) எனவும், "தெய்வமறைக் கற்பின் மாதர் மங்கலவாழ்த்து திசையிரண்டு மருங்கு மல்"கின (2158) என்றும் கூறிய நிகழ்ச்சிகளும் ஈண்டு நினைவுகூர்தற்பாலன. பிள்ளையாரது இளமை கருதியும் மாதர் தத்தம் இளங்குமரர்க் கிசைக்குமாபோல் மங்கல வாழ்த்திசைத்தல் இயல்பாகும். **முகைமலர்க் குழலார்கள்** - மங்கல மாதர்கள். **ஆதரித்தல்** - அன்பினாற் சூழ்தல்; ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலையும் காண்க (11-ம் திருமுறை).

**அணிமறுகு** - பிள்ளையாரது திருமாளிகையிருந்த திருவீதி. இது திருக்கோயிலின் மேற்கில் அடுத்துப் பின்புறமுள்ள திருவீதி என்றுகொண்டு வழங்கப்படுகின்றது. **மாளிகை** - இஃதிருந்த இடம் அத்திருவீதியின் கீழைக்கோடியில் உள்ளதென்று கூறுகின்றனர்.

**காதலித்தவர்** - முன் கூறியபடி மங்கல வாழ்த்திசைத்த பெண்களும், அன்புடன் கண்டு களிக்கக்கூடிய ஏனை மக்களும் ஆம்.

**அருள் செய்தல்** - அருண்முகமளித்து விடைகொடுத்தல்.

**திருமாளிகைக்கடை** - திருமாளிகையின் முன்கடை - முன்வாயில்.

**அங்கணைந்துடன் பணிந்திட**—என்பதும் பாடம். 956

**குறிப்பு** - முன் யாத்திரையில் சிவிகை பெற்றுத் திரும்பியபோது கூறியது போலவே ஈண்டும் இத்திருப்பாட்டுக்களால் வழிபாட்டு நிலையினை எல்லாம் விரித்துக் கூறியது அவ்வவ் யாத்திரையின் நிகழ்ந்த அருட்பெருமையினை எண்ணித் தினைத்துத் தமது இறைவரை "இத்தனையு மெம்பரமோ வைய வையோ வெம்பெருமான் றிருக் கருணை யிருந்த வாறே" (தேவா) என்றவாறு நன்றியுடன் போற்றி மகிழ்ந்த நிலை குறித்தற்கு. மறையவர் எதிர்கொண்ட நிலைகளை விரித்தல் பலநாட் பிரிந்த அவர்களது ஆர்வமிகுதி குறித்தற்கு.

### திருக்கழுமலம்

திருச்சிற்றம்பலம் திருவியமகம்

உற்றுமை சேர்வது மெய்யினையே யுணர்வது நின்னருண் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே கனல்விழி காய்வது காமனையே
யற்ற மறைப்பது முன்பணியே யமரர்கள் செய்வது முன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே பிரம புரத்தையு கந்தனையே. (1)

பருமதின் மதுரைமன் னவையெதிரே பதிகம தெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே வசையொடு மலர்கெட வருகரனே
கருதலி னிசைமுர றருமருளே கழுமல மமர்இறை தருமருளே
மருவிய தமிழ்விர கனமொழியே வல்லவர் தம்மிடர் திடமொழியே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருக்கடைக்காப்பில் பிள்ளையார் அருளியபடி ஆசிரியர் முன் (2852) காட்டக் கண்டுகொள்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நின் அருள் மெய் - நினது அருளாகிய வாய்மையினையே ; உணர்வது - தான் மறவாது உணர்ந்துகொண்டிருப்பது ; கற்றவர் காய்வது காமனையே - மனமிறக்கக் கற்றுணர்ந்த பெரியோர்களால் வெறுத்துவிடப்பட்டது பசுத்துவம் பொருந்திய வீடாகிய உடம்பு முதலிய பிரபஞ்சமே ; கா - பசுத்துவம் ; மனை - வீடு-உடம்பு-பிரபஞ்சம் ; அற்றம் - நிர்வாணம் ; அதனை முன்பணி மறைப்பதாவது - முன்னால் தொங்கவிடப்பட்ட ஐந்தலைப் பாம்பின் படம் ; பணி - பாம்பு ; இதுகு அதன் படத்துக்கு வந்தது ;—(2) சலந்தரன் - அசுரன் ; சலம் தரன் - நீரைச் சடையில் தரித்தவன் ; கைச் சிலை - கையில் ஏந்திய வில் ; கைச்சிலை - நீ வெறுக்க வில்லை ;—(3) தோடினன் - தோட்டினை உடையவன் ; கடிது ஓடினன் ; அம்பு தைத்தனன் ; வினை அது அரித்தனனே , உரைப்பொருள் - உரையின் பொருளானவன் ;—(4) மாசுணம் - பாம்பு , மாசு(ண்)ணமே - உடல் பூசுவர் என்க ; மேன் மதியே - மேலாகிய அறிவைப் புகட்டி , மத்தம் - ஊமத்தம். மத்தம்-உன்மத்தம் ;—(5) மாதவன் - திருமால் ; மாதவன் - யோகு பயிலுகின்றவன் , பகடு - யானை ; அரைக்க எய்தினனே - தலைமை தாங்கினன் , துயர்க்கு - ஏறு - நஞ்சு - இவனே நஞ்சு - அழிவு செய்யும் பொருள். துயர்க்கு நஞ்சு - துன்பத்தை அழிப்பது. நஞ்சு - நஞ்சுபோல்பவன் ,—(6) புகை தந்து அடிமேல் கையது - என்னி தம கழலே தொழுவது ; அடைமேமின் - மேகங்களில் அடையும் மின்னல் ; அம் சடையே மின் நிகர்கின்றது ; மேலே உதாரணமாகச் சிலமட்டும் குறிப்பிடப்பட்டன ;—(7-11) கற்றறி புலவாணர்பாற் கேட்டு அறியக்கடவன ,—(12) இப்பாட்டுப் பதிகக் கருத்தும் குறிப்பும் உணர்த்துவது; பதிகம் அது எழுது இலை அவை-பதிகம் எழுதிய ஏடு; இலை-ஏடு; எதிர்வருகரனே - எதிரிட்டுச் செல்லும்படி துணைசெய்த அருட்கைகளையுடையவனே; வசை-(புறச் சமயிகள் கூறும்) வசைச்சொல்; அலர்-பழிச்சொல்; அருகு - அரனே-அருகு - அருகர் குலத்தை ; அரனே - அரித்தவன் , அரித்தவன். கருதலில் - கேட்போரது கருத்தை அழிக்கத்தக்க ; இசை மரல் - இசைக்குரியோரும் ; தருமர் - தருமசீலரும் ஆகிய அந்தணர் ; மன்-வு - வாழ்கின்ற இடமாகிய (உள - இருப்பிடமாகிய), தரும் அருளே மருவும் - என்க 1 - 12 பாட்டுக்களின் குறிப்புக்கள் விரித்தவாறு. காஞ்சிபுரம் - சபாபதி முதலியார் பதிப்பிற் கண்டவை கருதல் இல் இசை தரும் மருளே - என்பதற்குப் பகுத்து அறியும் அறிவில்லாத இசையைத் தரும் வண்டுகள் மருள் பாடுதற்கிடமாகிய என்றுரைத்தலும் ஆம் மருள் - குறிஞ்சிப் பண் வகையுள் ஒன்று. "வண்டு மருள் பாடும்"

2855. நறவ மார்பொழிற் புகலியி னண்ணிய திருஞான சம்பந்தர்,
விறலி யாருட னீலகண் டப்பெரும் பாணர்க்கு மிகநல்கி
யுறையு ளாமவர் மாளிகை செலவிடுத், துள்ளணை தருமபோதில்
அறலி னேர்குழ லார்மணி விளக்கெடுத் தெதிர்கொள வணைவுற்றார்.

(இ - ள்) நறவமார்...திருஞான சம்பந்தர் - தேன் பொருந்திய பூக்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த சீகாழியில் சேர்ந்தருளிய திருஞான சம்பந்தப் பிள்ளையார் ; விறலியாருடன்...செலவிடுத்து - பாடினியாருடனே திருநீலகண்டப் பெரும்பாணனார்க்கு மிகவும் அருண்முகம் அளித்து அவர்தம் இருக்கையாகிய திருமாளிகையின்கண் போகும்படி விடைதந்து விடுத்து ; உள் அணைதரும் போதில்...அணைவுற்றார் - தமது

திருமாளிகையினுள்ளே எழுந்தருளும்போது கருமணல் போன்ற கூந்தலையுடைய பெண்கள் அழகிய விளக்குக்களை ஏந்தி எதிர்கொள்ள உள் அணைந்தனர்.

(வி - ரை) புகலியில் நண்ணிய - சீகாழிப் பதியினில் சேர்தலையே குறித்து மீண்டு இவ்வளவும் போந்தெழுந்தருளினாராதலின் அது முறறியகிலை குறிப்பார் புகலியில் நண்ணிய என்றார். "புகலியின்மே லேகும் பெருங்காதல்" (2845).

விறலியாருடன்...செல விடுத்து - தம்முடன் இதுவரை தொடர்ந்து வந்த இவ்விருவரையும் அவரது உறையுளாகிய திருமாளிகையிற் செல்ல விடுத்தபின்னரே தாம் தமது திருமாளிகையினுள் எழுந்தருளினார் என்க. இதுவே உலகியல் முறை. "காதலித்தவர்க் கருள்செய்து" என முன்பாட்டிற் கூறியது காண்க. அஃது அங்குத் திருமாளிகை வரை எதிர்கொண்டும் வாழ்த்தியும் வந்து கண்களித்த ஏனையோரைக் குறித்தது. அவரையெல்லாம் செல்ல விடுத்தபின் இறுதியாக இவ்விருவரையும் அருளியது இவர்பால அன்பு மிகுதியுடைமை குறித்தது. அதன்மேலும் அவர்கள் அங்கு இருந்த லாம நிலைமை சாலாமையின அவர்ககாக முன அமைத்திருந்த உறையுளாகிய திருமாளிகையுட் செல்ல விடுத்தலே சாலபும தகுதியுமாம். இதகுப் பாணனர் தமது திருமாளிகையில் வரலாகாதெனறு பிளளையார அவரைச செலவிடுததனா என்றெல்லாம் பலவாறு தததமக கேறறவாறு பிதற்றுவோரும் உண்டு. அவை எல்லாம் ஒழுக்கம் வழக்கு நோமை முதலிய உணமைநிலைக ளெவற்றையு மறியாதார் கூறுமென்றொதுககறபாலன. 2029 - 2030 பாட்டுககளும, 2035-ல உரைததவையும இங்கு நினைவு கூர்தற்பாலன.

அறலின் நேர் குழலார்......எதிர்கோள - பெணகள் விளககெடுதது எதிர்கொள்வது மரபு. அறல் - கருமணல்; அதன ஒழுககும குறிபபது. உருபபறறிய உவமை.

அணைவுற்றார் - உள் எழுந்தருளுவாராயினர். 957

2856. அங்க ணைநதரு மறைக்குலத் தாயர்வந் தடிவணங் கிடத்தாமுந்
துங்க நீள்பெருந் தோணியிற் றுயர்தாண் மனங்கொளத் தொழுவாராய்த்
தங்கு காதலி னங்கமர்ந் தருளுநாட் டம்பிரான் கழல்போற்றிப்
பொங்கு மின்னிசைத் திருப்பதி கம்பல பாடினார் புகழ்ந்தேத்தி.

(இ - ள்) அஙகணைந்து...வணங்கிட - அவ்விடத்தில் அணைந்து அரிய வேதியர் குலத்து வந்த தாயாராகிய பகவதியார எதிாவந்து அடி வணஙக; தாமும்......தொழுவாராய - தாமும் தூய நீண்ட பெரிய திருத்தோணியில் எழுந்தருளிய தாயாராகிய பெரியநாயகியாரது திருவடிகளை மனததிற்கொண்டு எதிர் தொழுவாராகி; தஙகு...நாள் - அஙகுத தஙகும ஆசையினாலே விரும்பி எழுந்தருளியிருந்த நாட்களிலே; தம்பிரான்...புகழ்ந்தேத்தி - தமது பெருமானுடைய திருவடிகளைத துதிதது மேன்மேற பொங்கும் இன்னிசையுடன கூடிய பல திருப்பதிகஙகளையும் புகழ்ந்து ஏத்திப் பாடியருளினார்.

(வி - ரை) அங்கணைந்து...வணங்கிட - பிள்ளையாா திருமாளிகையினுள் அணைவுற அஙகுப் பெண்கள் விளககேந்தி எதிர்கொள்ள மறைக்குலத் தாயாராகிய பகவதியார் அவ்விடத்து வந்து அணைந்து அடி வணஙகினா; தாயார் திருமாளிகையி னெல்லை கடந்து வந்து வரவேற்றல் மரபன்றாதலின் அங்கணைந்து - வந்து என்றார். இவ்வாறே

முன்னர்க் கோயிலின் வழிபாட்டினிறுதியில் திருவாயில் பணித்த நிலையில் " தாதையா ரும் அங்கு உடன்பணித் தணைந்திட " (2854) என்றது காண்க.

மறைக்குலத் தாயர் - தோணியிற் குரவரை வேறுபிரித்துக் காட்டலின் மறைக் குலம் என்றது பிறிதினியைபு நீக்கிய விசேடணம் ; முன் "மறையியார்" (1940) என்ற கருத்தும் காண்க.

தாயர் - அடி வணங்கிட - சிவஞானவமுதுண்டமையின் சிவத்துவம் விளங்கப் பெற்றமையால் பிள்ளையாரைத் தாயார் அடிவணங்குதல் அமைவுடைத்தேயாமென்க. நீக்கை முறையில் இவ்வமைதி நிலவுதல் காண்க. பிள்ளையார் ஞானகுருவாதலின் யாவராலும் வணங்கப்படத் தக்கவராதலும் காண்க.

தாமும்...தொழுவாராய் - பிள்ளையாரைத் தாயார் வணங்குதல் தகுமென்று மேல் அமைதிப்படுத்திய அந்த நியாயமே, பிள்ளையார் அவரை எதிர்வணங்கத் தகாதென்பதனை யும் அமைவுபடுத்தும். ஆதலின் தாயர் தம்மை அடிவணங்கக் கண்ட பிள்ளையார் அவ ரது சார்புபற்றித் தமது ஞான அம்மையாராகித் தோணியில் வீற்றிருக்கும் பெரியநாயகி யம்மையாரை நினைந்துகொண்டு எதிர் தொழுதருளினார் என்க. திருவாலவாயில் தந்தையார் வணங்கக் கண்டபோதும் இவ்வாறே எதிர் தொழுவார் - அவர் சார்வு கண்டருளித் திருத்தோணி வீற்றிருந்தார் பாதங்கள் நினைவுற்றார் என்றது காண்க ; (2778).

தங்கு காதல் - சிலகாலம் அப்பதியினிலே தங்கும் பெருவிருப்பம்.

திருப்பதிகம் பல - இவை இன்னவென்று கருதக்கூடவில்லை.

வணங்கிடத் தாழ்ந்து—தமிழ்ப் பதிகம்—என்பனவும் பாடங்கள். 958

2857. நீல மாவிடந் திருமிடற் றடக்கிய நிமலரை நேரெய்துங்
காலமானவை யனைத்தினும் பணிந்துடன் கலந்தவன் பர்களோடுஞ்
சால நாள்களங் குறைபவர் தையலா டழுவிடக் குழைகம்பர்
கோல மாதரக் கும்பிடு மாசைகொண் டெழுங்குறிப் பினரானார்.

(இ - ள்) நீல மாவிடம்...பணிந்து - கரிய பெரிய விடத்தினைத் திருக்கழுத்தில் அடக்கிய நிமலராகிய தோணியப்பரை நேரே சென்று கும்பிடுதற்கு உரிய காலங்களில் எல்லாம் சென்று வணங்கி ; உடன் கலந்த...உறைபவர் - உடன் கலந்தவர்களாகிய அன்பர்களோடும் கூடிப் பல நாள்கள் அந்தச் சீகாழிப் பதியிலே தங்கியருளுபவராகிய பிள்ளையார் ; தையலாள் ..குறிப்பினரானார் - காமாட்சி அம்மையார் தழுவியிடத் திரு மேனி குழைந்து காட்டிய, திருவேகம்ப நாதருடைய, திருக்கோலத்தைச் சென்று நிறைவுபெறக் கும்பிட வேண்டுமென்னும் ஆசை மேற்கொண்டு எழுகின்ற திருவுள்ளக் குறிப்பினைக் கொண்டவரானார்.

(வி - ரை) நேரெய்தும் காலமானவை யனைத்தினும் - நேரே சென்று வழிபடு தற்குரிய காலங்கள் என்று சிவாகமங்களுள் விதித்த பூசைக் காலங்களிலெல்லாம். இவற்றின் விரிவு சிவாகமங்களுட் காண்க. இவை திருப்பள்ளி எழுச்சி முதலாகத் திருவர்த்த யாமம் ஈறாக வருவன. " திருப்பள்ளி யெழுச்சி " (1333) ; " காலை " (560) ; " உச்சம் போதால் " (தேவா) ; " மயங்கு மாலை " (8456 - யாகோ. பு - 302) ; " திருவர்த்த யாமம் " (3458 - ஷை 304). காலமானவை - ஆக்கச்சொல் விதித்தவாற்றால் உரியவையாதல் குறித்தது ; காலமானவை அனைத்தினும் - பூசைக்

குரிய எல்லாக் காலங்களிலும் நோபட்டுக் கும்பிடவேண்டுமென்பது விதி. இஃது இந்நாளில் அன்பான மிகச் சிலருக்கே இயலவதாகக் காணப்படுகின்றது. "கால மெல்லாந் துதித்திறைஞ்சி" (2062) ; இவ்வாறிருப்பவும் ஒருநாளில் ஒருகாலந்தானும் சென்று ஆலய வழிபாடு செய்யாது வீணே நாள்போக்கிக் கேடுபடும் வாழ்க்கை காண மலிந்தது இந்நாளுலகத்தின் கொடுமை!

**உடன் கலந்த அன்பர்களோடும் - உறைபவர்** - "அன்பரொடு மரீஇ" (12 - சூத்) என்று ஞானநூல் ஞானிகளாகிய சிவன்முத்தரியல்பு வகுத்தது. **உடன் கலத்தலாவது** தம்மைப்போலவே அயரா அன்புசெய்யும் மெய்ஞ்ஞானிகளாதல் என்றதாம் ; "பத்தியினுன் மறவாதேத்தி முதலவனது சீபாதத்தையணைந்த சிவன்முத்தர்" என்பது அவர்களியல்பு. உலகத்துயிர்கள் உய்யுநெறி காட்டும் வகையால் பிள்ளையார் இவ்வாறொழுகிக் காட்டினார் எனக. அல்லாதார் "அஞ்ஞானத்தை யுணர்த்துவாராகலான்" என்றும், "சிவபத்தரல்லாதார் அவ்வாறன்றி (இலக்கு வாயத்தபோது மட்டும் அஞ்ஞானத்துக் கேதுவாகும் மும்மலங்களைப்போலன்றி) இலக்கு வாயாதவழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை யுபாயங்களானும் தம்மோடொப்ப விபரீதவுணர்வைச் செலுத்தியே விடுவாராகலான் அம்மலங்களினும் கொடியராகிய இவரை அவற்றினு மஞ்சிவிட் டொழிதலே அறிவுடைமைக்குச் சாலபு" (சிற்றுரை) என்றும் உரைப்பது காண்க. **உடன் கலந்த** என்பது அன்பர் செயல் குறிக்கவும், அவர்களோடு என்றது பிள்ளையார் செயல் என்பது குறிக்கவும் உடன் - ஒடு என இரண்டு உருபுகள் வந்தன. "கூடவே கும்பிடும் செய்கைநேர் நின்று" (2421) ; "ஒருப்படுசிந் தையினார்களுடனுறைவின் பயன்பெற்றார்" (1509) என்பன முதலியவை காண்க.

**அங்கு** - சீகாழித் திருப்பதியினில்.

**தையலாள் தழுவிடக் குழைகம்பர்** - அம்மையார் தவஞ்செய்து இறைவரைத் தழுவிக்கொண்ட வரலாறு திருவேகம்பத்துக்குச் சிறப்பாயுரியதுபற்றி இத்தன்மையாற் கூறினார் ; 1140 - 1141 - 1142 - 1143 பாட்டுக்களைப் பார்க்க. **கம்பர்** - திருவேகம்பநாதர், "கம்ப னெம்மான" (தேவா) **கம்பரது குழைகோலம்** என்று கூட்டுக. ஆறனுருபு விரிக்க. பிறப்புஞ் சிறப்புமான யோனிகளெல்லாம் உயிரும் யாக்கையுமுருகி ஒன்றுகி எதிர்யுயந்திட உதவுவது இத்திருக்கோலமாதலின் அதனைக் காட்டிச் சிறப்பித்தபடி (1142 பார்க்க).

**ஆர்தர** - ஆர - ஆர்வ நிறைய ; "கண்ணாரக் கண்டுமென் கையாரக் கூப்பியும், எண்ணார வெண்ணத்தா லெண்ணியும்" (அற். அ௩) என்று அம்மையார் இதனைக் காட்டியருளினார். **ஆர்தரக் கும்பிடும் ஆசை** - கும்பிடுதலே உறுதிப்பயனுதலின் அதனின் ஆசைகொள்ளுதல் வேண்டுமெனக் காட்டியபடி.

**கோலம் - ஆர்தரக் கும்பிடும்** - இக்கோலத்தைக் காணவே "கண் பெற்றவாறே" என நம்பிகள் எதிர்த்திளைப்பது காண்க. **ஆசை** - "உன்றன் முகவொளி நோக்கி முறுவ னகைகாண, அத்தா சால ஆசைப்பட்டேன்" (திருவா - ஆசைப் - 6) என்று ஆசையெல்லாமறுத்த வாதவூர் அடிகளும் பலப்பலவாறு ஆசைகொண்டருளியபடி காண்க.

**ஆசை கொண்டெழும் குறிப்பினர்** - அரசுகள் செப்பியருளிய தன்மை (1666 - 2393) யினுல் இவ்வாசை மிக்கு ஊன்றி எழுந்ததென்க. **குறிப்பு** - திருவுள்ளக் குறிக்கொண்ட நிலை.

2858. "தண்ட கத்திரு நாட்டினைச் சார்ந்துநந் தம்பிரான் மகிழ்கோயில்
கண்டு போற்றிநாம் பணிவ" தென் றன்பருக் கருள்செய்வார் காலம்
றண்ட ருக்கறி வரும்பெருந் தோணியி லிருந்தவ ரருள்பெற்றுத் [பெற்
தொண்டர் சூழ்ந்துடன் புறப்படத், தொடர்ந்தெழுந் தாதையார்க்
[குரைசெய்வார், கக௦

2859. "அப்பர்! நீரினி யிங்கொழிந் தருமறை யங்கிவேட் டன்போடுந்
துப்பு நேர்சடை யார்தமைப் பரவியே தொழுதிரு" மெனச்சொல்லி
மெய்ப்பெ ருந்தொண்டர் மீளவும் தமக்கெலாம் விடைகொடுத் தருளிப்
ஒப்பிலாதவர் தமைவழி யிடைப்பணிந் துருகுமன் பொடுசெல்வார்;[போய்

2860. செல்வ மல்கிய தில்லைமூ தூரினிற் றிருநடம் பணிந்தேத்திப்,
பல்பெ ருந்தொண்ட ரெதிர்கொளப் பரமர்தந் திருத்தினை நகர்பாடி,
மல்கு தொண்டர்க ளுடன்றிரு மாணி குழியினை யணைந்தேத்தி
மல்கு வார்சடை யார்திருப் பாதிரிப் புலியூரை வந்துற்றார். ககஉ

2858. (இ-ள்) தண்டகத் திருநாட்டினை...அருள் செய்வார் - "தண்டகத் திருநாடு" என்னும் தொண்டை நாட்டினைச் சார்ந்து சென்று நமது பெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருக்கோயில்களைக் கண்டு துதித்து நாம் வணங்குவோம் என்று அன்பர்களுக்கு அருளிச் செய்வாராய், காலம் பெற்று...அருள் பெற்று - உரிய காலத்தில் கோபட்டுத் தேவர்களுக்கும் அறிவரிதாகிய பெருந் திருத்தோணியில் வீற்றிருந்தருளும் இறையவர்பால் அருள்விடை பெற்று, தொண்டர் சூழ்ந்து உடன் புறப்பட - திருத்தொண்டர்கள் தம்முடனே சூழ்ந்துவரப் புறப்பட; தொடர்ந்து...உரை செய்வார் - தாமும் உடன் வரும்பொருட்டுத் தொடர்ந்து எழுந்த தாதையாருக்கு உரை செய்வாராய், கக௦

2859. (இ-ள்) அப்பர் என்று சொல்லி - "அப்பரே! நீர் இனி எம்முடன் வருதலை ஒழிந்து இங்கு அருமறை விதிப்படி தீயோம்பி வேள்வி செய்துகொண்டு அன்புடனே பவளம்போன்ற சடையினையுடைய இறைவரைத் துதித்துத் தங்கியிருப்பீராக!" என்று சொல்லி; மெய்ப் பெருந்தொண்டர்...கொடுத்தருளிப் போய் - பெரிய மெய்த்தொண்டர்களுள் தம்முடன் வாராது மீண்டு தங்குபவர்க்கெல்லாம் விடை கொடுத்தருளிச் சென்று; ஒப்பிலாதவர் தமை...செல்வார் - தமக்கு ஒப்பற்றவராகிய இறைவரை வழியிடையே வணங்கிக்கொண்டு உருகும் அன்புடனே மேற்செல்வாராகி, ககக

2860. (இ-ள்) செல்வம்...ஏத்தி - செல்வம் நிறைந்த தில்லையாகிய தொல் பெரும்பதியினில் இறைவரது திருக்கூத்தினைப் பணிந்து துதித்து; பல்பெரும்...பாடி - பெரிய தொண்டர்கள் பலரும் எதிர்கொள்ளச் சென்று இறைவரது திருத்தினை நகரினை இறைஞ்சிப் பாடிப் போய்; மல்கு...அணைந்தேத்தி - நிலைபெற்ற திருத்தொண்டர்களுடனே திருமாணிகுழியினை அணைந்து துதித்து; மல்கு...வந்துற்றார் - செறிந்து பொருந்திய நீண்ட சடையினையுடைய இறைவரது திருப்பாதிரிப்புலியூரினை வந்து சேர்ந்தனர். ககஉ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டுரைக்க நின்றன.

2858. (வி - ரை) தண்டகத் திருநாடு - திருத்தொண்டை நாடு; தண்டகன் - என்னும் அரசன் ஆண்டமையால் தண்டகநாடென்று பேர் வழங்கலாயிற்று. இவ்வாறே இந்நாடு அவ்வக்காலத்து ஆட்சி புரிந்த அரசர் பெயரால் அண்டீரன் ஆண்டமையால் அண்டீர நாடு எனறும், தொண்டைமான் ஆண்டமையால் தொண்டைநாடென்றும் வழங்கப்படும் என்ப. " அண்டரும் புகழ்தண் டீர ஞெனடுதண் டீரநா டாய்த், தண் டகன் பின்ன ராண்டு தண்டக நாடாயப் பின்னாத், தொணடைமா னாண்டு தொண்டை நாடெனத் துலங்கிற றன்றே, பணடயன் படைபபுத் தொட்டுப பயிலுமித் தொண்டை நாடு " என்ற விநாயக புராணம் காண்க.

" தண்டகத் திருநாட்டினை...பணிவது " என்று - இது பிள்ளையார் அடியார களுக்கு அருளியது. தொண்டை நாட்டிற் சென்று கோயில்களைப் பணிவோம் என்ற தாம். பணிவது - பணிந்து செல்வது எமது கருதது என்றபடி; எமது கருத்து என் பது குறிபபெச்சம்.

அண்டருக் கறிவரும் பெரும் தோணி - தோணியே பிரணவமாம். பிரணவப பொருள் தேவருமறிவரிது என்பது குறிப்பு. தேவர்களுட் பெரிய பிரமதேவன் பிர ணவப் பொருளறியாமையால் முருகப பெருமானால் குட்டுபபட்டுச சிறைப்படுத்தப் பெற்ற கநதபுராண வரலாறு இங்கு நினைவுகூாதறபாலது.

தோணியிலிருந்தவர் அருள் பெற்று - தொணடைநாடு செல்வதறகு அருள்விடை பெற்று.

தொடர்ந்து எழும் - தமமுடன் தொடர்நது வருதறகு ஒருபபட்டு எழுந்து போந்த.

உரை செய்வார் - முற்றெச்சம். உரை செய்வாராகி - எனச் சொல்லி என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடித்துககொள்க.

சார்ந்து நந் தம்பிரான்—என்பதும் பாடம். 960

2859. (வி - ரை) அப்பர்! ...எனச் சொல்லி - இது சிவபாதவிருதயருக்குப பிள்ளையார் சொல்லி, அவர் தம்முடன தொடர்நது செலலுதலை மறுதது விடுததது ; தாதையாரின் மூப்புக் காரணமாகவும், உயிர்பறறிய இறைவரது சார்பும் அடியார் சார் புமேயன்றி உடலபறறிய சார்புகளின தொடர்ச்சியில விருபபமின்மை காரணமாகவும பிள்ளையார் இவ்வாறு மறுத்து விடுததனர்போலும்! ; முன் யாததிரையில தந்தையார் தம்முடன் வர இசைந்தமைபறறி (  ) பாாகக. தம்முடன் தமிழ்நாடு செலவதறகு அமைந்த அரசுகளை " அப்பர்! இநதப புனனுட்டி லெழுநதருளி யிருபபீா !" எனறு (2515) பிள்ளையாா தவிர்ததருளியதும் ஈணடு நினைவு கூர்தற்பாலது. ஆனால் அஙகு அரசுகளைப பிள்ளையார் மறுததருளியது வேறு காரணம்பறறி; அநநிலைபற்றி ஆணடு ரைத்தவை பாாக்க. " அருமறை அஙகி வேட்டும்-சடையாரைத் தொழுதும் இரும " என்று தாதையார் செய்ய நின்ற உயரிய இரண்டு கடன்களையும் பிள்ளையார் சுட்டி அருளியதும், சீகாழிப் பதியவர்க்கு வேள்வியினபொருட்டே பிள்ளையார் முன்னா உல வாக்கிழியாக ஆயிரம்பொன் திருவாவடுதுறை யிறைவரிடம் பெற்றளித்தமையும் இஙகு நினைவுகூர்தறபாலன.

மீள்பவர் - தம்முடன் செல்லாது அஙகுத் தங்கும்படி விடைபெற்று மீள்ப வர்கள்.

ஒப்பிலாதவர்-சிவபெருமான். "உவமனில்லி" (தேவா) ; "தனக்குவமை யில்லா தான்" (குறள்).

வழியிடை - சீகாழியினின்று தில்லைக்குச் செல்லும் வழியிடையில் உள்ள பதிகளில், "ஆடுவா ருறைபதி கண்டுகண் டடிபோற்றி" (2043). இவ்வழி சீகாழியினின்றும் மேற்கே 8 நாழிகையளவு சென்று கொள்ளிடத்தைக் கடந்து வடக்கில் திருக்காரையூர் குமராட்சி வழியாய்த் தில்லை சேர்வது என்பதும், வழியிடைப் பணிந்து என்றது திருக்காரையூர் முதலிய பதிகள் என்பதும் கருதப்படும். இவ்வழியே ஆளுடைய அரசுகள் தில்லையினின்றும் பிள்ளையாரைக் காணச் சீகாழிக்கு எழுந்தருளிய வழி என்பது முன் (1444) உரைக்கப்பட்டது. இது முன்னாளில் வழங்கிய பழைய வழி என்பர். 961

2860. (வி - ரை) செல்வ மல்கிய தில்லை மூதூர் - "செல்வ நெடுமாடம்" (பிள் - கோயில் - குறிஞ்சி); "உலகுக் கெல்லாம் திருவுடை யந்தணர்" (அரசு - திருவிருத்).

திருநடம் பணிந்தேத்தி - இது பிள்ளையார் தில்லையிற் பணிந்து வழிபட்ட இரண்டாவது முறை. முன்முறையில் வழிபாடு விரித்தோதினாராதலினாலும், முன்னர்த் தில்லை வணங்க எண்ணியே சென்றருளியதுபோலன்றி, இப்போது தொண்டை நாடு சென்று கும்பிடக் கருதிச் செல்லும் வழியிடை வணங்குகின்றாராதலினாலும் சுருங்கக் கூறினார். முன்முறை வழிபாட்டு நிலை 2041 - 2081 வரை பாட்டுக்களிலும், மூன்றாம் முறை வழிபட்ட நிலை பின்னர் 3033=1135 முதல் 3042—1144 வரை உள்ள பாட்டுக்களிலும் காண்க.

திருத் தினைநகர் - திருமாணிகுழி - திருப்பாதிரிப் புலியூர் - இவை திருத்தில்லையினின்றும் வடக்கு நோக்கித் தொண்டை நாட்டுக்குச் செல்லும் வழியிடை உள்ளன. இவை நடுநாட்டுப் பதிகள். இவ்வாறு தொண்டைநாடு சென்று கும்பிடக் கருதி வழிக்கொண்ட பிள்ளையார் வழி இடையே நடுநாட்டினில் உள்ள பதிகளையும் வணங்கிச் செல்கின்ற நிலை இது முதற் பத்துப்பாட்டுக்களாற் கூறியருளுகின்றார் (962 - 973); வழியிடை நேர்பட்ட வழிபாட்டினைச் சுருக்கிக் கூறிச் செல்லும் நயமும் காண்க. தொண்டைநாட்டுப் பதிகளாகிய திருவக்கரை - திருஇரும்பை மாகாளம் - என்னும் இரண்டும் இடையில் நேர்பட்டமையால் வழியில் வணங்கப்பெற்றன. 962

திருத்தினை நகர் - பிள்ளையா ரருளிய தேவாரப் பதிகம் கிடைத்திலது!

### திருமாணிகுழி

திருச்சிற்றம்பலம் — பண் சாதாரி - 3-ம் திருமுறை

பொன்னியல் பொருப்பரையன் மங்கையொரு பங்கர்புனல் தங்குசடைமேல்
வன்னியொடு மத்தமலர் வைத்தவிறல் வித்தகர் மகிழ்ந்துறைவிடம்
கன்னியிள வாளைகுதி கொள்ளவிள வள்ளைபட ரள்ளல்வயல்வாய்
மன்னியிள மேதிகள் படிந்துமனை சேருதவி மாணிகுழியே. (1)

நித்தநிய மத்தொழில னாகிநெடு மாலகுற ளாகிமிகவுஞ்
சித்தம தொருக்கிவழி பாடுசெய நின்றசிவ லோகனிடமாம்
கொத்தலர் மலர்ப்பொழிலில் நீடுகுல மஞ்ஞைநட மாடலதுகண்
டொத்தவரி வண்டுக ளுலாவியிசை பாடுதவி மாணிகுழியே. (4)

உந்திவரு தண்கெடில மோடுபுனல் சூழுதவி மாணிகுழிமேல்
அந்திமதி சூடியவெம் மானையடி சேருமணி காழிநகரான்

சந்தநிறை செந்தமிழ்தெ ரிந்துணரு ஞானசம் பந்தனதுசொல
முந்தியிசை செய்துமொழி வார்களுடை யார்கநெறி வானநிலனே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பொருப்பரையன் மங்கையொரு பங்கர், நெடுமால் குறளாகி வழிபாடு செய்கின்ற சிவலோகன் என்பனவாதி தன்மைகளாலறியப்பட்ட இறைவரது இடம் திருமாணிகுழியே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வித்தகர் - அறிவுருவானவர். வித்தகர் உறைவிடம் மாணிகுழியே எனக; கன்னி...மனை சேருதவி - எனபது நிலஇயல்பு சிறப்பித்துரைத்தபடி ; தன்மையணி. தவி - பதி - ஊர் ;—(2) வசி - வசப்படுத்தும் சாகசச் செயல ; பழனமிக்கு - வேலை புடைசூழ் உலகினீடு - மருதமும நெய்தலு மயங்கிய திணைமயக்கமும நிலமும ;—(4) தலப் பெயர் போநத வரலாறும சரிதமும் கூறிய படி ; நெடுமால் குறளாகி - நீண்டவன குறகி வாமனனாகி ; வழிபாடு செய - வாமனனாய்ப பூசிகக. மாணி - பிரமசாரி ; குழி - இடம ; பதி ; தலம். பினனிரணடடிகள நாட்டுவளமுணர்ததின ;—(5) பினனிரணடடிகள நகர்வளம உணர்த்தின; —(6) மாணி - பிரமசாரியாகிய மாறககணடேயா பினனிரண்டடிகள ஆற்றுவளமுணாததின ;—(7) என் பெரிய - அளவிறநத ; எணணுதலால - தவததினுல - பெரிய ;—(10) முட்டைகள் - கீழோர் ; பயனறறவர்கள. நூழை - தென்னை ; இளநீர் - முதியவரின - முரண அணி ;—(11) வானநிலன் - வானமாகிய உலகம பணபுத்தொகை. வானமும நிலமும எனறு உம்மைததொகையாககினு மமையும்.

தலவிசேடம் :—திருமாணிகுழி-நடுநாட்டில் 17-வது பதி. தலப்பெயர்க் காரணமாகிய வரலாறு பதிகம் 4-வது பாட்டில போறறபபட்டது. சுவாமி - மாணிக்கவரதர் ; அம்மை - மாணிக்கவல்லி ; பதிகம் 1.

இது திருப்பாதிரிபபுலியூரினின்றும் கறசாலைவழி மேறகே 5 நாழிகையளவில் நின்றும் தெறகில ½ நாழிகையளவில செடிலநதியின தெனகரையில உளளது.

2861. கன்னி மாவனங சாபபெண விருநதவர் கழலிணை பணிநதங்கு
"முன்ன மாமுடக் கான்முயற் சருளசெய்த" வணணமு மொழிந்தேத்தி
மன்னு வாரபொழிற றிருவடு கூரினை வந்தெய்தி வணங்கிப்போய்ப்
பின்னு வாசடை யார்திரு வக்கரை பிளளையா ரணைவுற்றார். ௬௬௭

(இ - ள்) கன்னி...பணிநது - பெரிய கனனிவனத்தைத தமது காவலிடமாகக் கொண்டு எழுந்தருளிய இறைவரது இரணடு திருவடிகளையும் பணிநது ; அங்கு... ...ஏத்தி - அப்பதியிலே முனனுளில முடஙகிய காலோடு முயலாகச சபிக்கபபெறற மஙகண முனிவா சாபநீககம் பெற அருளிச்செய்த தனமையினையும பதிகத்தில் மொழிநது துதித்தருளிச சென்று ; மனனு...வணஙகிப போய - நீண்ட சோலைகள் பொருநதிய திருவடுகூரினைச சென்று வணஙகிப போய் ; பின்னு...அணைவுற்றார் - பிள்ளையார் பின்னுகின்ற நீணட சடையினையுடைய இறைவரது திருவக்கரை என்ற பதியினை அணைநதனர்.

(வி - ரை) கன்னி மாவனம் - அம்மையார் தவஞ் செய்து அருள் பெற்ற இடமாதலின் இது கன்னிவனம் என்ற இபபெயர் பெற்றது. இதுபோலவே காமாட்சியம்மையார் தவஞ் செய்த பதியினை "அம்பிகா வனமாந் திருவனம்" (1186) என்றது காண்க.

காப்பு - காவல் புரியும் இடம். "காப்புத் திருத்தாண்டகம்"; "கயிலாயமும் கண்ணுதலான் றன்னுடைய காப்புக்களே" (தேவா).

முன்னம்...வண்ணமும் மொழிந்து-பிள்ளையார் பதிகம் "முன்ன நின்ற முடக் கால முயற்கருள் செய்து" (1) என்றது காண்க. பதிகப் பாட்டுக் குறிப்பும் தல விசேடமும் பார்க்க.

திருவடுகூர் - திருவக்கரை - இவை பிள்ளையார் தொண்டைநாடு-காஞ்சிபுரம் செல்லும் வழியிடை உள்ளன; அவர் சென்றருளிய வழியையும் குறிப்பன. வக்கரை - தொண்டைநாட்டுப் பாடல் பெற்ற பதிகளுள் ஒன்று. இது திருவடுகூரின் வடக்கில் உள்ளது. தில்லை முதலாக முன் கூறியனவும் இப்பாட்டிற் கூறியனவும், இனி வரும் பாட்டுக்களிற் கூறுவனவும் வழியிடை வரிசைபெற அமைந்தமை காண்க. 968

திருப்பாதிரிப்புலியூர்

திருச்சிற்றம்பலம்  பண் - செவ்வழி - 2-ம் திருமுறை

முன்ன நின்ற முடக்கான் முயற்கருள் செய்துநீள்
புன்னை நின்று கமழ்பா திரிப்புலி யூருளான்
றன்னை நின்று வணங்குந் தனைத்தவ மிலிகள்
பின்னை நின்ற பிணியாக்கை யைப்பெறு வார்களே.  (1)

அந்த ணலாரகன் காழியுண் ஞானசம்
பந்த னல்லார் பயில்பா திரிப்புலி யூர்தனுட்
சந்த மாலைத் தமிழ்பத் திவைதரித் தார்கண்மேல்
வந்த தீயவ் வடையாமை யால்வினை மாயுமே  (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:—** திருப்பாதிரிப்புலியூர் இறைவரை வணங்கும் தவமில்லாதவர் பிறவியிற் புகுவர், அவரை வணங்கவே வினைமெலிந்து அணுகாது; நணுகும்; மேல் வந்த தீயவை அடையாமையால் முனைவினை மாயும்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1)** முன்ன நின்ற - முன்வந்து பூசித்த; முடக் கால் முயல் - முடங்கு காலுடன் முயலாகச் சபிக்கப்பெற்ற மங்கண முனிவன்; அருள் செய்து - சாப நீக்கஞ் செய்து. புன்னை - செயற்கருப்பொருள். வணங்கும் தனைத் தவமில்லிகள் - வணங்குதற்கு ஏனைவேனும் தவமில்லாதவர்கள். தனை - அளவு; பின்னை நின்ற பிணியாக்கையைப் பெறுவார்கள் - மேல் எடுக்கவுள்ள பிறவியிற் பட்டுச் சுழல்வார், பிணி யாக்கை - உயிரைக் கட்டுறுத்தும் உடல்; பிணியும் யாக்கையும் என்றலுமாம். "பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே" (தேவா). முயற்கருளியதுபோலத் தன்னை வணங்குவோரெவருக்கும் உடல் வரும் குறைநீங்க அருளுவர் என்பது குறிப்பு;—(2) கொள்ளி நக்க பகுவாய பேய் - எரிகொள்ளி போன்ற தீயினை உமிழும் திறந்த வாயினையுடைய பேய்கள்; "சுழலு மழல்விழிக் கொள்ளிவாயப் பேய்" (அம்மை மூத்த திருப்பதிகம் - 7); முள்ளிலவம் - இலவின் வகை;—(3) மருள் இல் நல்லார் - மயக்கமில்லாத நல்லோர்; வேதி - விளையாட்டு (தவங்காண் படலம் - கந்தபுராணம் பார்க்க);—(4) போது - மலர்; புகை - தூபம்; போதினாலே - உரிய காலங்களிலே. போது - பொழுது; காலம். நாலும் - தாழு தல்; தொங்குதல். நாலும் அவலம் - தானகாய துன்பம் என்றலுமாம்;—(5) நல்

லார் - பெண்கள்; "மைபபூசு மொண்கண் மடநல்லார்" (பின் - மயிலை); நாகம் - அரையார்த்தவன் - என்க. போகம் - சிவபோகம்;—(6) மதியம்... முத்தம் திகழ் - புதிய முத்துக்கள் வெண்மணற் பரப்பில் விளங்குதல் மதியைச் சூழ்ந்த கதிர்போல உள்ளது. புது முத்து - மதி; மணற் பரப்பு - மதிசூழ்ந்த கதிர். துதியுங் கொள்வர் விதியும் செய்வர் - துதி - ஆனந்தக் கூத்து; "இன பமே எந்நாளும் துன்ப மில்லை" (தேவா). விதியும் செய்தலாவது - வினைப் பயனை யும் மாற்றித் தாம் எண்ணியபடி வேறு வகுத்தல்;—(8) ஊக்கம் - "வீக்கமெழுந்து" இம்மலை பெயர்ப்பேன்" என்னும் முயற்சி. வினை மெலிந்து - அணுகா - நுணுகும் - வினை வலிகுன்றி மெலிந்துபடும்; ஆதலின் தாக்காது; தேய்ந்து செல்லும்; அணுகு தல் - வலிதாய்ப் பற்றுதல். நோக்குதல் - சிவானுபவத்தில் வழுவாது ஊன்றி நிற்றல்; நுணுகும் - மெலிவடையும; "இறைபணி நிற்குந தத்துவ ஞானிக்குப் பயிற்சி வயத தான் ஒரோவழி நாமுளம் (உயிருணர்வு) உண்டாதலும் உணமையின், அதுபற்றிப பிராரத்த வினையும், அதற்கு வாயிலாகிய உடமபு முதலிய மாயேயமும் மறைந்துபோய வாசனை மாத்திரையாய மெலிதாய வந்து மூளுமாயினும், அம்மூட்சிபற்றி ஒருதலையா னிகழ்வதாகிய ஆகாமியவினை மேலைக்கு விததாய் நிலைபெறறு முறுகுதலின்றித் தனக்கு வாயிலாகிய மாயேயத்தோடு கெட்டொழியும்" என்று 10-ம் சூத்திரம் "இறைபணி வழுவாது நிறக" என்ற இரண்டாமதிகரணம் "இறகுளி வாங்கும் கலம்போல" என னும உதாரண வெண்பாவின் சிறறுரையும் இங்குக கருதததக்கது; அரசுகள் தேவாரக குறிப்புககளும காண்க;—(9) தன்னந்தாள் உற்று - தமது சிற முயற்சிகளால்; தவ - பெரிய,—(11) வந்து தீயவ் வடையாமையால் - மேல ஆகாமியவினை வநது வாராமை யால். வினை - முன்வினை; மாய்தல் - 8-ம பாட்டில் காணக.

தலவிசேடம்:—திருப்பாதிரிப்புலியூர் - II [ - பக். ௬௭௭ பார்க்க.

### திருவடுகூர்

*திருச்சிற்றம்பலம்* பண் - குறிஞ்சி - 1-ம் திருமுறை

சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்,
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே. (1)

படிநோன் பவையாவர் பழியில் புகழான
கடிநா ணிகழ்சோலை கமழும் வடுகூரைப்
படியா னசிந்தை மொழியார சம்பநதன்
அடிஞா னம்வல்லா ரடிசேர் வாரகளே. (11)

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு:—வடுகூரில் ஆடும் அடிகளாகிய முதல்வர் சுடுகூ ரெரிமாலை யணி வர் என்பது முதலிய தன்மைகளா லறியபபடுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) சுடுகூ ரெரிமாலை - எரியில் வெந்த எலும்பு மாலை. எரி - எரியில் வெந்த எலும்புக்காகி வந்தது. கொடு - கொடிய; வேல் - ஆயுதப் பொது; சூலம் குறித்தது. கடுகூர் - கடிதாய் மிகுகின்ற; பசி... ...இல்லார் - பிறவியில் வாராதவர்;—(2) ஏலும் - பொருந்தும்; ஊழித் தீயி

எல்லாவற்றையும் நீருக்கும்; அழிதலால் வந்து பொருந்தும்; அப்போதும் அழியாது நிற்கும் தமக்கன்றிப் பிறர்க்கு எலாத; ஆலுதல் - அசைதல்;—(3) ஏடு - இதழ்களை யுடைய;—(4) துவர் - பவள நிறம்; பவளம். புரிசை - மாட உறுப்பு; மதில். கவர - அழிய; பவரும் - விளங்கும்;—(5) பணி ஆர் - திருப்பணிகள் செய்கின்ற;—(8) தேருநீர் - கங்கை. குழல் - கூந்தற்குழல்கள்;—(9) சந்தம் - மணம்; கந்தம் - ஒளி - புகழ்;—(10) மால் அடிவீழ - நான்முகன் உணர்கில்லா - இருவரும் ஒன்றுபோலவே அடியுமுடியும் அறிகில்லா ராயினும் மால் அறியவில்லேனென்று உணர்ந்து அடிவீழ்ந்தனர்; பிரமன் அவ்வனமன்றி உணராராயினும் உணர்ந்தேனென்று பொய் மொழிந்தானென்ற வரலாற்றுக் குறிப்புப்பட அருளியபடி. மால்விடை - திருமாலாகிய விடை; பெரிய விடை.

தலவிசேடம்:—திருவடுகூர் - நடுநாட்டில் பாடல் பெற்றனவற்றுள் 16-வது பதி. வடு பூசித்த பதி என்பது தலப் பெயர்க்காரணம்; வடு - வைரவரைக் குறித்தது. இப்போது ஆண்டார் கோயில் என வழங்கப்படும். சுவாமி - வடுகூர்நாதர்; வடுகூரடிகள் என்பது பதிகம். அம்மை - வடுவகிர்க்கண்ணியம்மை; பதிகம் 1.

இது கண்டமங்கலம் என்று வழங்கும் சின்னபாபு சமுத்திரம் நிலயத்தினின்றும் மட்சாலை வழி மேற்கே இரண்டு நாழிகையளவில் அடையத்தக்கது; திருத்துறையூரினின்றும் மட்சாலை வழி வடகிழக்கில் ஒருநாழிகை யளவிலும் அடையலாம்.

2862. வக்க ரைப்பெரு மான்றனை வணங்கியங் கமருநா ளருளாலே
செக்கர் மேனியா ரிரும்பைமா காளமுஞ் சென்றுதாழ்ந் துடன்மீண்டு
மிக்க சீர்வள ரதிகைவீ ரட்டமு மேவுவார் தமமுன்பு [ணைவுற்றார்.
தொக்க மெய்த்திருத் தொண்டர்வந் தெதிர்கொளத் தொழுதெழுந் தி

(இ - ள்) வக்கரை ...அமருநாள் - திருவக்கரையில் வீற்றிருந்தருளிய இறைவரை வணங்கி அப்பதியினில் விரும்பி எழுந்தருளியிருந்த நாட்களிலே; அருளாலே... ...மீண்டு - திருவருட் குறிப்பினாலே செவ்வானம் போன்ற சடையினையுடைய இறைவரது திருவிரும்பைமாகாளத்தையும் போய் வணங்கி உடனே திரும்பி; மிக்க...அணைவுற்றார் - மிகுந்த சிறப்புக்களை வளரச் செய்கின்ற திருவதிகை வீரட்டானத்தைச் சென்று சேர்பவராகிய பிள்ளையார் தம்முன்னாகக் கூடிய உண்மைத் திருத்தொண்டர்கள் வந்து எதிர்கொளத் தொழுது எழுந்து அங்குச் சேர்ந்துற்றனர்.

(வி - ரை) வக்கரை - அமருநாள் - என்றதனால் அப்பதியினிற் சில நாட்கள் தங்கியருளினார்கள் என்பதும், இரும்பைமாகாளமும்...உடன் மீண்டு - என்றதனால் அங்கு வழிபட்டு உடனே மீண்டருளினார் என்பதும் எச்சவும்மையினால் இடையில் திருவரசிலியை வணங்கியதுடன் என்பதும் கருதநின்றன. இவையிரண்டும் தொண்டைநாட்டுப் பதிகள். இவையே தொண்டைநாட்டில் பிள்ளையார் முதலில் "கண்டு போற்றிப் பணிந்த" (2858) பதிகளாம்; ஆனால் இவற்றினின்றும் காஞ்சிபுரம் சென்று சேர்வதற்கு இடையில் திருவதிகை - திருக்கோவலூர் - திருவண்ணாமலை முதலிய பதிகள் உள்ளபடியால் அவற்றை வணங்கிச் சென்றமை மேல் உரைக்கப்படுவது காண்க. "அதிகை வீரட்டமும் மேவுவார்" என்று மேல் தொடங்கிக் கூறுவது இக்கருத்து.

தொழுதெழுந்து - எதிர்கொண்ட தொண்டர் குழாத்தைத் தொழுது என்றும், வீரட்டமாகிய திருத்தலத்தைத் தூரத்தே தொழுது என்றும் உரைக்கநின்றது. 2405 பார்க்க.

அணைவுற்றார் - திருவதிகை நகரின்கண் சேர்ந்த திருக்கோயிலைச் சாரவும் சென்று அணைவாராயினர். 964

திருவக்கரை

திருச்சிற்றம்பலம் பண் - பஞ்சமம் - 3-ம் திருமுறை

கறையணி மாமிடற்றான் கரி காடரங் காவுடையான்
பிறையணி கொன்றையினா னொரு பாகமும் பெண்ணமர்ந்தான்
மறையவன் றன்றலையிற் பலி கொள்பவன் வக்கரையில்
உறைபவ னெங்கள்பிரா னொலி யார்கழ லுள்குதுமே. (1)

தண்புன லும்மரவுஞ் சடை மேலுடை யான்பிறைதோய்
வண்பொழில் சூழ்ந்தழகா ரிறை வன்னுறை வக்கரையைச்
சண்பையர் தந்தலைவன் றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்வல்லா ரவர் தம்வினை பற்றறுமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—இறைவன் உறையும் இடம வக்கரையே; வெண்தலையிற பலிகொணடுழல் உத்தமனாகிய அவன கழல உளகுதும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கரிகாடு - சுடுகாடு ;—(2) சந்திரசேகரன் - இப்பதியில் இறைவரது பெயர் ;—(3) வளைத்தான் - வில் வளைததேயன்றி அம்பு எய்யப்படவில்லை என்பது குறிப்பு ; இறைஞ்சியவுடன் மூவெயிலும் அனலாய் விழ வில் வளைத்தான் - அருள செய்யும் விரைவு குறிததது. "கடைநாங்கு மணியைக கை யாலமரர், நாவாயசைதத வொலியொலி மாறிய திலலையபபாற், றீயா யெரிந்து பொடியாய்க கழிந்த திரிபுரமே" (அரசு) ;—(4) வெண்பொடி-திருநீறு ;—(5) தலை மகன் - தலைவன் ;—(6) மதி - மதியும ; உமமை விரிககக ;—(7) கான் அணவும் - கானில் வாழும ; இருசகும. தேன் அணவும் - தேன்வணடு பொருந்தும். வான் அணவும் - வானததை அளாவும. ஊன் அணவும் தலை - ஊன் கமழும் ;—(8) அருள் போற்றலும் - அருளையிரந்து துதிததலும - சாமகான மிசைததலும் ; நன்கு - நாளும் வாளுமீந்த வரம ;—(9) காதலி - இரதி ; சேமமே - கணவனைப பெறுவாய். வாம னன் - மால் ;—(10) பிண்டியர் - சமணா ; தேடிய தேவர் - இவர் ஆதரிதத புதத னும் அருகனும்.

தலவிசேடம் :—திருவக்கரை - தொண்டைநாட்டின் பாடல் பெறற 20-வது பதி. வக்கிராசுரன் பூசித்த பதி யெனபது பதியின் பெயர்க காரணம். இவ்வசுரன் வாழ்ந்த இடமென்றறகுப பல அறிகுறிகள் இன்றும் நோககிற் காணபபடும் ; மூல இலிங்கமூர்ததி முகலிங்கம். முதல் யுகததிலிருந்து ஒவ்வோர யுக முடிவில் ஒவ்வோர் முகமாய்த் தோன்றலின் இபபோது மூன்று முகங்களுடன் உள்ளதென்றும், இனி நான்காவதாகிய இந்த யுகததின் முடிவில மற்றொரு முகம் தோன்றுமென்றும் சொல வர். வக்கிரனை வதைதத பழி போகும்படி காளி பூசித்த பதி என்றும் சொல்வா. காளி கோயில் தனியாய் விளககமாய் உள்ளது ; மூலலிங்கம் முகலிங்கமாகிய உருவத திருமேனி தாங்கி நிற்றலின சிவமூர்த்தம் இருபததைந்தனுள் ஒன்றாகிய சந்திரசேகரர் என்ற பெயரால் போறறபபெறுவர் ; சுவாமி பெயர பதிகததில 3-வது பாட்டிற் காண்க. சுவாமி - சந்திரசேகரர் ; அம்மை - வடிவாம்பிகை ; பதிகம் 1.

இது புதுச்சேரி ஜில்லாவிலுள்ள... இது புதுச்சேரி ஜில்லாவிலிருந்து வடகிழக்கே மட்சாலைவழி 8 நாழிகையளவில் அடையத் தக்கது. (இங்கிருந்தும் வடமேற்கில் மட்சாலைவழி 2 நாழிகையளவில் உள்ளது திருவரசிலி.)

திருவரசிலி

திருச்சிற்றம்பலம் பண் - பியந்தைக் காந்தாரம் - 2-ம் திருமுறை

பாடல் வண்டறை கொன்றை பான்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவிள மாலை மத்தமுஞ் செஞ்சடைக் குலாவி
வாடல் வெண்டலை மாலை மருவிட வல்லியந் தோண்மேல்
ஆடன் மாசுண மசைத்த வடிகளுக் கிடமர சிலியே. (1)

அல்லி நீள்வயல் சூழ்ந்த வரசிலி யடிகளைக் காழி
நல்ல ஞானசம் பந்த னற்றமிழ் பத்திவை நாளுஞ்
சொல்ல வல்லவர் தம்மைச் சூழ்ந்தம ரர்தொழு தேத்த
வல்ல வானுல கெய்தி வைகலு மகிழ்ந்திருப் பாரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆடல் மாசுண மசைத்தார் என்பது முதலான தன்மைகளாற் போற்றப்படும் இறைவராகிய அடிகளுக்கிடம் அரசிலியே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வண்டு பாடலறை என்க ; வல்லியம் - புலி ; புலித்தோல் குறித்தது ;—(2) தேன்அவன் - தேன் போன்ற இனிமையுடையவன் ; நல்...சுடர் - முழு ஞானவொளி ;—(3) கதம் மிக - ஆரவாரிக்க ; கதம் - கோபம் ; கோபம் போல்வதனைக் கோபம் என்றார்; ஒப்புமைபற்றி; "கதமிக் கெரிகதிரின் முன்னிருள்போல்" (போதம் - 10-சூத்) ; "எரி தள்ளிறுலென" (527) ; சங்கையாய்த் தீரியாமே - திரியாதவாறு ; "அனுசயபபட் டதுவிது வெனு ஞதே" (தேவா) ; "இரண்டாட்டாது" (தேவா) ;—(4) மெய் - உடம்பு ;—(5) அஞ்சும் - உவமவுருபு ; —(6) பரிய மாசுணம் - வாசுகி என்னும் மாநாகம் ;—(9) குறியமாண் - வாமனன் ; மாண் - பிரமசாரி ;—(10) குருளை - இளமை ; குருளை எய்திய மடவார் - இளம் பருவமடைந்த பெண்கள ; திரளை - சோறறுருணடை ; கவளம். பொருள் - சதது ; உண்மைப் பொருள். வணங்கும் அருளை நல்கும் - வணங்கும்படி அருள் செய்யும் ; " அவனரு ளாலே அவன்றாள் வணஙகி " (திருவா).

தலவிசேடம் :—திருவரசிலி-தொணடைநாட்டின் 31-வது பதி. இஃது ஒழிந்தியாப்பட்டு என வழங்கப்படுகின்றது. அரசமரததை இலலாக-இருப்பிடமாக-க்கொண்டு இறைவர் வீற்றிருக்கும் இடம் என்பது பெயர்க்காரணம். அடிகளுக்கு இடம் அரசிலி என்ற பதிகம் இப்பொருள் தருவது. அரசமரம கோயிலுக்கு எதிரில் உள்ளது. முதல் வழிபாடு அதற்கு நடைபெறுகின்றது. வாமதேவ முனிவர் வழிபட்ட பதி. சுவாமி - அரசிலி நாதர் ; அம்மை - பெரியநாயகி ; தீர்த்தம் - அரசடித் தீர்த்தம் ; மரம் - அரசு ; பதிகம் 1.

இது புதுச்சேரி ஜில்லாவிலிருந்து வடகிழக்கில் மட்சாலையில் 8 நாழிகையளவில் உள்ள இரும்பைமாகாளத்தினின்றும் வடமேற்கே மட்சாலைவழி 2 நாழிகையளவில் அடையத் தக்கது.

2863. ஆதி தேவரங் கமர்ந்தவீ ரட்டானஞ் சென்றணை பவர்முன்னே
பூதம் பாடநின் றருவோர் திருநடம் புலப்படும் படிகாட்ட
வேத பாரகர் பணிந்துமெய் யுணர்வுட னுருகிய விருப்போடும்
கோதி லாவிசை குலவு "குண் டைக்குறட் பூத" மென் றெடுத்தோதி ;

2864. பரவி யேத்திய திருப்பதி கத்திசை பாடினார், பணிந்தங்கு
விரவு மன்பொடு மகிழ்ந்தினி துறைபவர், விமலரை வணங்கிப்போய்,
அரவ நீர்ச்சடை யங்கணர் தாமகிழ்ந் துறைதிரு வாமாத்தூர்
சிரபு ரத்துவந் தருளிய திருமறைச் சிறுவர்சென் றணைவுற்றார். கூகூ

(இ - ள்) ஆதி ..அணைபவர் முன்னே - ஆதிதேவராகிய சிவபெருமான் அத் திரு நகரினுள் விரும்பி வீற்றிருந்தருளிய திருவீரட்டானத்தினைச் சென்று அணைபவராகிய பிள்ளையார் முன்பு ; பூதம்...காட்ட-பூதகணங்கள் பாடநின்றும் இறைவர் தமது திரு நடனத்தினைக் கட்புலப்படும்படி காட்டவே ; வேத பாரகர்...விருப்போடும் - வேதம் வல்ல பிள்ளையார் வணங்கி மெய்யுணர்வினுடனே மனமுருகிய விருப்பத்தினோடும் ; கோதிலா...எடுத்தேத்தி - குற்றமில்லாத இசையுடன் கூடிய "குண்டைக் குறட்பூதம்" என்று தொடங்கித் துதித்து ; கூஉ

2864. (இ - ள்) பரவி...பாடினார் - போற்றித் துதித்த திருப்பதிகத்தின் இசையினைப் பாடியருளினாராகி ; பணிந்தங்கு...உறைபவர் - வணங்கி அத் திருப்பதி யில் பொருந்திய அன்புடனே மகிழ்ந்து இனிதாகத் தங்குபவராகிய ; சிரபுரத்து... ...சிறுவர் - சீகாழியில் வந்து அவதரித்தருளிய திருமறைக்குலத்துப் பிள்ளையார் ; அரவு... ...திருவாமாத்தூர் - பாம்பும் நீரும் தாங்கிய சடையினையுடைய அங்கணராகிய இறை வர் மிக்க மகிழ்ச்சியுடன் எழுந்தருளிய திருவாமாத்தூரினை ; சென்று அணைவுற்றார் - போய் அணைந்தருளினர். கூகூ

இந்த இரண்டு பாட்டுக்களும் ஒருமுடிபு கொண்டன.

2863. (வி - ரை) அங்கு - அத்திருவதிகை நகரின்கண்.

வீரட்டானம் - திருக்கோயிலின் பெயர்.

அணைபவர் - முன்னே - நடம் - காட்ட - என்க. நடம் காட்ட - பிள்ளையார் திருக்கோயிலுட் சென்று காண்பதன் முன்னே அங்கணையும் வழியிடையே காணும்படி காட்ட ; "எதிர்காட்சி கொடுத்தருள" (258) ; "சென்றவர் காணு முன்னே யங்க ணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்த" (753) முதலியவை காண்க.

முன்னே நடம் புலப்படும்படி காட்டினார் - என்பது " ஆடும் வீரட்டானத்தே" என்ற பதிகத்தின் மகுடத்தாலும் கருதப்படும். "வீரட்டானத்தே" என்றதனால் அத் திருக்கோயிலுக்குப் புறத்தே இப்பதிகம் போற்றப்பட்டதென்பதும், "ஆடும்" என்றத னால் நடம் கண்ட காட்சி என்பதும் தெரிக்கப்படுதல் காண்க ; இவ்வாறு முன்பே காட்டக் கண்டது பிள்ளையாரது திருவடி மறவாத உறைப்பினால் ஆயது என்க. முன்னே - முன்பு என்றும், அவர் வந்து காண்பதற்கு முன் என்றும் உரைக்க நின்றது.

வேத பாரகர் - பாரம்-கரை ; கர் - அடைந்தவர்; வேதத்தின் கரையை அடைந் தவர்.

**மெய்யுணர்வுடன்** - ஆடற் காட்சி கண்டு நினைந்து நின்ற மெய் உணர்வு மாறாது.

**குண்டைக் குறட்பூதம்** - சிவ பூதகணங்கள் ; இது பதிகத் தொடக்கம். " கோடி கோடி குறட்சிறு பூதங்கள், பாடி யாடும் பாரிடம் பாங்கெலாம் (16).

**கோதிலாவிசை** - ஆடல் கண்டு காட்டும் வகையால் கோது (மலம்) நீக்கும் தன்மை வாய்ந்த என்பதும் குறிப்பு.

**வேதபாலகர்** - மெய்யுருகியவன்புறு-எடுத்தேத்தி-என்பனவும் பாடங்கள். 965

2864. (வி - ரை) பாடினராகி - உறைபவராகிய - மறைச்சிறுவர் என்று விரித்துக் கூட்டி முடிக்க ; பாடினர் - பாடினராகி ; முற்றெச்சம்.

**அந்த...உறைபவர்** - திருவதிகை நகரில் சில நாள்கள் அன்புடன் தங்கியருளினார் என்பது. அரவம் - ஓசையினையுடைய என்றலுமாம்.

**அங்கணர்** - பசுக்களுக்கு அருள் புரிந்தவர் என்ற தல வரலாற்றுச் சிறப்புக் குறிப்பு. சிறுவர் - உருவமும் பருவமும் குறித்தது. 966

## திருவதிகை வீரட்டானம்

திருச்சிற்றம்பலம் பண் - குறிஞ்சி - 1-ம் திருமுறை

குண்டைக் குறட்பூதங் குழும வனலேந்திக்
கெண்டைப் பிறழுதெண்ணீர்க் கெடில வடபக்கம்
வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை
விண்ட தொடையலா னாடும்வீரட் டானத்தே. (1)

எண்ணா ரெயிலெய்தா னிறைவ னனலேந்தி
மண்ணார் முழவதிர முதிரா மதிசூடிப்
பண்ணார் மறைபாடிப் பரம னதிகையுள்
விண்ணோர் பரவநின் றாடும்வீரட் டானத்தே. (4)

ஞாழல் கமழ்காழி யுள்ஞான சம்பந்தன்
வேழம் பொருதெண்ணீ ரதிகைவீரட் டானத்துச்
சூழுங் கழலானைச் சொன்ன தமிழ்மாலை
வாழுந் துணையாக நினைவார் வினையிலரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—பூதம் பாடநின் றாடுவார் திருநடம் புலப்படும்படி முன்னே காட்டக் கண்டு " ஆடும் வீரட்டானத்தே " என்று பாடியது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1)குண்டை - குறுகித் தடித்த ; குண்டைக் குறள் - மிகக் குறிய. குழுமுதல் - கூட்டமாதல் ; பூதங்கள் முன் வருதலால் அவற்றை முதலிற் கூறினார். மருள் - குறிஞ்சிப் பாடல் வகையுள் ஒன்று ; பொன் விரி - பொன் போல விரிகின்ற ;—(2) அலைத்தல் - கீழ்ப்படுத்துதல் ; உவமப் பொருளில் கூறும் மரபு ; கரும்பின் - இன் - உவமவுருபு ; இனிய என்றலுமாம் ;—(3) ஆடல்-நாகம் - அசைத்தாட-தன்னியல்பின் ஆடும் நாகம் நடனத்தால் அசைக்கப்பட்டு மேலும் மிக ஆட; படுதம் - கூத்து வகை ;—(4) எண்ணார் - எண்ணாத பகைவர் ; திரிபுரவாணர். எயில் எய்தான் - எரித்தான் ; இத்தலத்தில் நிகழ்ந்த வீரம் ;—(5) திருநின்று - செம்மைதர

நின்று ; ஒருகை - ஏரி ஏந்திய என்க ; விரியும் புனல் - முன் "ஆயிரமா முகத்தி னொடு வானிற் றோன்றும்" கங்கை ; சடையுட் பனிபோலச் சுருங்கிப் பின் நிலத்தில் வந்து விரியும் என்பதும் குறிப்பு ;—(8) வரை(யால்) அடர்த்து - என்று கூட்டுக.— (9) நிமிர்ந்தான் - கீழுமேலும் அறியாவண்ணம் நீண்டவன். வெடியார் - வெடித்த தன்மை பொருந்திய ; தலை - கபாலம் - மண்டை ஓடு ;—(10) கூறை ஒடேத் தீர்தலும் - உடைவிட் டுழலுதலும் - அமண குருமார் வழக்குகள் ;—(11) ஞாழல் - புலிநகக் கொன்றை ; வேழம் பொரு தெண்ணீர் - யானையினையும் அலைக்கும் அளவி லும் கதியிலும் வரும் நீர் ; பொருதல - அலைத்தல் ; வேழம் - நாணல் என்றலுமாம். இது கெடிலத்தின் தன்மை நவிற்சி ; வாழ்த் துணை - வாழச் செய்யும் துணை.

தலவிசேடம் :—திருவதிகை வீரட்டானம் - I-பக். ௨௭௧-ம் III-பக். ௩௦-ம் பார்க்க.

2865. சென்றணைந்துசிந் தையின்மகிழ் விருப்பொடு திகழ்திரு வாமாத்தூர்ப்
பொன்ற யங்குபூங் கொன்றையும் வன்னியும் புனைந்தவ ரடிபோற்றிக்
"குன்ற வார்சிலை" யெனுந்திருப் பதிகமெய் குலவிய இசைபாடி
நன்று மின்புறப் பணிந்துசெல் வார்திருக் கோவலூர் நகர்சேர்ந்தார்.

(இ - ள்) சென்று அணைந்து ..அடிபோற்றி - சென்று அணைந்து மனத்துள் மகிழ்ச்சிகொண்ட விருப்பத்துடனே, விளங்கும் திருஆமாத்தூரின்கண் பொன்போல விளங்கும் அழகிய கொன்றையினையும் வன்னியினையும் சூடி யெழுந்தருளிய இறைவரது திருவடிகளைத் துதித்து ; "குன்றவார் சிலை"...செல்வார் - குன்றவார்சிலை என்று தொடங்கும் திருப்பதிகத்தினை மெய்ம்மை விளங்கும் இசையுடனே பாடி மிகவும் இன்பம் பொருந்த வணங்கிச் செல்பவராகிய பிள்ளையார் திருக்கோவலூர் நகரினைச் சேர்ந்தருளினார்.

(வி - ரை) பொன் தயங்கு - தயங்கு - உவமவுருபு.

பூ - அழகிய ; கொன்றைப் பூவும் என்று கூட்டியுரைப்பினு மமையும்.

வன்னி - இத் தலமரமாதலும் குறிப்பு.

குன்றவார் சிலை எனும் - குன்றவார் சிலை என்று தொடங்கும்.

மெய்குலவிய இசை - தன்மைநவிற்சியிற் பல உண்மைகளும் புலப்படும் இயலும் இசையும் பொருந்த ; பதிகப் பாட்டுக் குறிப்புப் பார்க்க.

நன்றுமின்புற - மிகவும் இன்பம் பொருந்த. நன்றும் - மிகுதிப்பொருள் குறித்து நின்றது ; நன்மை பயக்கும் என்று குறிப்புமாம் இக்குறிப்பில் நிலையும் அழிவும் தாக்கூடிய ஏனைய இன்பங்கள் போலன்றி நன்மையே தரும் இன்பம் உயிர்களுக்குப் பொருந்தும்படி என்க.

செல்வார் - சேர்ந்தார் - என்று கூட்டுக. செல்வார் - செல்வாராகிய பிள்ளையார். வினைப்பெயர்.

திருக்கோவலூர் நகர் - நடுநாட்டின் ஒரு பகுதியாகிய முனைப்பாடி நாட்டின் உட்பிரிவுகளுள் ஒன்றாகிய சேதிநாட்டின் அரசர் வாழும் தலைநகருமாதலின் அக்குறிப்புப் பெற நகர் என்று கூறினார் ; திரு - என்றதனால் அந்த இறைவரது பதியாதலும் குறிப்பித்தபடி. மெய்ப்பொருணாயனார் புராணத்தினுள் "சேதிநன் னாட்டு நீடு திருக் கோவலூர்" (467) என்றதன்கீழ் உரைத்தவை பார்க்க ; (I - பக். ௫௭௮ - ௫௭௧).

கடைச்சங்கத்துப் புலவர் பெருமான் கபிலரால் பாடப்பட்டவனும் கடையெழு வள்ளல்களுள் ஒருவனுமாகிய மலயமான் திருமுடிக்காரி என்னும் அரசன் மலையமானாட்டிற் பெண்ணையாற்றின் கரையிற் றிருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டான் எனவரும் பதுப் பாட்டுப் பழைய வரலாறும் காண்க.

தலைவிய இசை - இப்பதிகப் பண்ணாகிய சீகாமரப் பண்ணின் சிறப்பும் குறிப்பதென்பா. 967

திருஆமாத்தூர்

திருச்சிற்றம்பலம் பண் - சீகாமரம் - 2-ம் திருமுறை

குன்ற வார்சிலை நாண ராவரி வாளி கூரெரி காற்றின் மும்மதில்
வென்றவா றெங்ஙனே விடையேறும் வேதியனே
தென்ற லார்மணி மாட மாளிகை சூளி கைக்கெதிர் நீண்ட பெண்ணைமேல்
அன்றில வந்தணையு மாமாத்தூ ரம்மானே . (1)

வாடல வெண்டலை மாலை யார்த்தும யங்கி ருள்ளெரி யேந்தி மாநட
மாடன் மேயதென்னென் றுமாத்தூ ரம்மானைக
கோட னாக மரும்பு பைம்பொழிற் கொச்சை யாரிறை ஞான சம்பந்தன்
பாடல்பத் திம்வல்லார் பரலோகஞ் சேர்வாரே (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆமாத்தூ ரம்மானே ! நீ மும்மதில் வென்றவா றெங்ஙனே ? கார்விடம் வெருவ வுண்டுகந்த வருளென ? என்றிவ்வாறு அவரது அருளிப்பாடுகளை பலவற்றையும் வினவிக் கேட்டுத் தினைத்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) குன்ற வார்சிலை...எங்ஙனே - சிலையும் வாளியும் இத்தன்மையனவாக, வென்றவாறு எங்ஙனம் கூடிற்று? என்பது ; சிலையும் வாளியும் வெற்றிதரும் நிலையில் அமைந்தில என்பது ; குன்ற வார்சிலை - கல்லாதலின் வில்லாக வளைக்கலாகாது என்பது. குன்ற - என்பது குறைவுபட என்ற தொனியும் தருகின்றது ; அரி - எரி - காற்று மூன்று கூறாக அமைந்த அமபு வலியிலது என்பது ; இப்படைகளானன்றி உனது இச்சையினாலே வென்றனை என்பது குறிப்பு இவ்வாறே பின் வருவனவெல்லாம் கண்டுகொள்க. பெண்ணை - பனை ; தென்றலார்...அணையும் - நகரத்தின் இயற்கை வருணனை - தன்மை நவிற்சி ; இவ்வாறே மேல் வருவனவும் கண்டுகொள்க ;—(2) வெருவ - வெருவும்படி ; பம்பை - நதி ; திருக்கோவலூரின் கிழக்கே அணிமையில் பெண்ணையாற்றினின்றும் பிரியும் ஆறு ;—(3) கேழல் மருப்பு - பன்றியின் கோடு ; "ஏன முளைக்கொம்பு" (தேவா). மருபும - அரவும் - கொன்றையும் - ஆமையு(மொடு)ம் என்றிவற்றை ; உம்மைகள் விரிக்க ; வாள் வரி ஆமை - ஒளி பொருந்திய வரிகளையுடைய ஆமை முதுகோடு ;—(4) பெண்ணைப் பாகம்வைத்தது யோகமிருத்தல் என்னை என்பது ; ஏல - பொருந்த ;—(5) தொண்டர் உண்டியால் வருந்த விரங்காததேன்? - தொண்டர்கள் விரதம்பூண் டிளைத்தல் நோக்கிக் கூறுதல் ; வாண் முகம் - முகம்போல் விளங்கும் ;—(6) "சோதியே சுடரே" (திருவா) ; நன்னெறி நீதி - ஞானநெறியின் முறைமை ; "நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி" என்றதும் காண்க ;—(7) மான் - மான் போன்றவா ; ஊட - கறைகயா லிருந்தமையால் ஊடல் கொள்ள ; பங்கயம்...அதிர்க்கும் - உரு

மலர்ந்த தமிழ்ப் பதிகத்தினாற் போற்றுவாராகிய பிள்ளையார்; பரவுசீர்...அருள் செய்தார் - இறைவரது புகழ்களையே பரவிவாழும் சிறப்புடைய அடியார்களது பொருந்திய அன்பினால் உளதாகும் மேம்பாடாகிய தன்மையினை உலகம் அறிந்துய்யும்படி அருளிச் செய்தார்.

(வி - ரை) கோவல் நீடிய வீரட்டம் - கோவல் - ஊர்ப் பெயர்; வீரட்டம் - கோயிலின் பெயர். இறைவரது வீரங்கள் எட்டனுள் அந்தகாசுர வதம் நிகழ்ந்த பதி. "அந்தகன் கோவல்".

ஆவின் ஐந்து - பஞ்சகவ்வியம் எனப்படுவன ஐந்தும் இறைவர் விரும்பியாடும் திருமஞ்சனப் பொருள். ஆன் பெற்ற அஞ்சு (916) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

அறையணிநல்லூரை யணைந்து - பெண்ணையாற்றின் தென்கரையில் திருக்கோவலூரும் அதற் கெதிர்ப்புறம் வடகரையில் மலையின் மேல் திருவறையணிநல்லூரும் உள்ளன. மெய்ப்பொருணாயனார் புராணப் படம் பார்க்க. மலைமிசை வலங்கொள்வார் - என மேல்வரும் பாட்டிற் கூறுதல் காண்க.

பரவு சீரடியார்கள்......மேன்மையாம் தன்மை - பதிக மகுடமும் கருத்தும் காண்க. "அறையணி நல்லூ ரங்கையா லெருழுவார்களே - பீடினா பெரியோர்கள் - பீடினு லுயர்ந்தார்கள்" என்பனமுதலாக வருவன பதிகக் கருத்தாக எடுத்துக் காட்டப்பட்டவாறு.

விளங்கிட - உலகம் விளங்க அறிய. 968

## திருக்கோவலூர்

திருச்சிற்றம்பலம் திருவிராகம் பண் - நட்டராகம் - 2-ம் திருமுறை

படைகொள் கூற்றம் வந்துமெய்ப் பாசம் விட்ட போதின்கண்
இடைகொள் வாரெ மக்கிலை யெழுக போது நெஞ்சமே
குடைகொள் வேந்தன் மூதாதை குழகன் கோவ லூாதனுள்
விடைய தேறு கொடியினான் வீரட் டானஞ் சேர்துமே. (1)

கழியொ லிலவு கானல்சூழ் காழி ஞான சம்பந்தன்
பழிக டரச் சொன்னசொற பாவ நாச மாதலால்
அழிவி லீர்கொண் டேத்துமி னாதண் கோவ லூர்தனில்
விழிகொள் பூதப் படையினான் வீரட் டானஞ் சேர்துமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—யாக்கை நிலையாமையினையும், நரை, திரை, மூப்புப், பிணி, சாக்காடு என்றிவை வந்து துன்புறுத்தும் நிலைகளையும் உலக முயற்சிகளில் மக்கள் பட்டுழலும் இழிபுகளையும் எடுத்து வற்புறுத்தி அவை தீரும் வழியாவது திருக்கோவலூரைச் சார்ந்து வழிபடுதலேயாம் என்று உபதேசித்தது. "பழிக டரச் சொன்னசொற் பாவ நாச மாதலால்" என்ற பதிகத் திருக்கடைக்காப்புக் காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) காலன் உயிர்கொள்ள வருதல் உறுதி. அப்போது காலகாலரும், அந்தகாசுரனை வதைத்தவரும் ஆகிய வீரட்டரைத் தவிர வேறு துணையில்லை என்று உபதேசித்தது; 2 - 3-ம் பாட்டுக்களில் உலக முயற்சிகளின் இழிபும், 4 முதல் 8 வரை பாட்டுக்கள் பிணிகளின் துன்பமும் முதலியவற்றை எடுத்

துக்காட்டி அவற்றினின்றும் நீங்கும் வழியை உபதேசித்தன; திருக்கடைக் காப்புப் பார்க்க. அதனுள் பழிகள் உடல்பற்றிய உலக வாதனைகளையும், பாவம் உயிரைப் பற்றிய மலவாதனைகளையும் குறித்தன. மெய்ப் பாசம் - உறுதி தவிராத காலபாசம். உடலைப் பிரிக்கும் பாசம் என்றலுமாம். இடைகோள்வார் - கூற்றனுக்கும் பாசம் பிணிக்கும் உயிருக்கும் இடையில் நின்று தடுக்கவல்லார்; வேந்தன் - உலகம் காவல் புரியும் மன்னரின் பொதுமை உணர்த்தியது போலும். "குடைகொள் வேந்தன்" - இது திருக்கோவலூர் புராணத்திற் கூறப்பட்ட தெய்விகராஜனைக் குறிக்கலாம். இவன் முற்பிறப்பில் பருவதராஜனா யிருந்தவன். இவன் வரலாற்றைத் தலபுராணத்திற் பார்க்கக் காணலாம் (வ. சு. செ.),—(2) காவலாளர் - செல்வத்தை வைத்திருந்தும் ஈயாது காக்கும் உலோபிகள். இரவல் - இரத்தல் செய்யற்க; அல்லீறு எதிர்மறை வியங்கோள். நெஞ்சமே இரவல் என்றது இரத்தலை மனத்திலும் கொள்ளாதே என்றதாம். ஆழி - வாழி என்பது ஆழி என நின்றது. "துயராழி" (5), "குறிகொளாழி" (10) என்பனவும் இக்கருத்து. யாழ் செய் - யாழ்போலப் பண் பாடும்;—(3) அள்ளற்சேறு - ஒருபொருட் பன்மொழி - மிகுதி குறித்தது. கொள்ள - ஆன்மாக்கள் உட்கொண்டு உய்யும்பொருட்டு;—(4) பணிகள் உலவு - இக்காட்டுப் பக்கம் பணிகள் மிகுதியுமுண்டு; வினையை வென்ற வேடம் - சிவவேடம். வேடம் - வெல்லுதற்குத் துணையாய் நின்றது. "தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத் தன்னுணரத் தன்னு ளிருத்தலால்" (போதம் - 12 - 3 - வெண்பா),—(5) உளங்கோள் போகம் - மனம் கொள்ளத் தக்கதாய் விதிக்கப்பட்ட சிவபோகம், உய்ந்திடார் - உய்ந்திடாராகி; வளம்......வயல்கள் - பெண்ணையாற்றின் நீர்ப்பெருக்கின் வளம் குறித்தது; விளங்கு - மறைப்பொருளாய் விளங்கும். "ஓங்குகோ வணப் பெருமை" (515) என்றதும் அணிந்துரைத்தவையும் பார்க்க,—(6) ஆடு - குறியாடு; வீடுகாட்டு நெறி - சைவநெறி. 'மிகுசைவத் துறை" (1899);—(7) விரைகோள் சீர் - திருநீற்றுப் பதிகம் பார்க்க;—(8) போது - அல்லும் பகலுமுள்ள அரும்பு; போது - அலர்தற்கு உரிய காலம் என்றலுமாம்;—(9) நீறுபட்ட - நீறுபடிந்த;—(10) குறிகோள் - குறிக்கொள்வாயாக. அவத்தம் - பிழை, அபத்தம் என்பது வடமொழி; பயனற்றது என்றலுமாம்;—(11) கானல் - [illegible]; பழிகள் தீரச் சொன்ன சொல் பாவநாசம் - பதிகப் பயன்; அழிவு - பிறப்பு இறப்பாகிய துன்பம்

தலவிசேடம்:—திருக்கோவலூர் - I 467-ம் பாட்டின் கீழும் மெய்ப்பொருணாயனார் புராணத் திறுதியிலும், III - பக். ௨௦௪-லும் உரைத்தவை பார்க்க. இப்பதி மேலூர் கீழூர் என இரண்டு பகுதியாயுள்ளது. மேலூரே திருக்கோவலூர் என வழங்கப்படுகின்றது. கோயில் கீழூரில் உள்ளது, அம்மை கோயில் தனியாயுள்ளது. மேலூரில் திரிவிக்கிரமப் பெருமாள் என்னும் விட்டுணு கோயில் உள்ளது.

## திருஅறையணிநல்லூர்

திருச்சிற்றம்பலம் — பண் - காந்தாரம் - 2-ம் திருமுறை

பீடி னாற்பெரி யோர்களும் பேதை மைகெடத் தீதிலா
வீடி னாலுயர்ந் தார்களும் வீடி லாரிள வெண்மதி
சூடி னார்மறை பாடினார் சடலை நீறணிந் தாரழல்
ஆடி னாரறை யணிநல்லூ ரங்கை யாற்றொழு வார்களே. (1)

கழியு லாங்கடற் கானல்சூழ் கழு மலமமர் தொல்பதிப்
பழியி லாமறை ஞானசம் பந்த னல்லதோர் பணபினார்
மொழியி னலறை யணிநல்லூர் முக்கண மூர்த்திதன னுடொழக்
கெழுவி னாரவர் தம்மொடுமே கேடில் வாழ்பதி பெறுவரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இறைவரது புகழ்களைப் பரவும் அடியார்களது அன்புறு மேன்மையாந் தன்மை விளங்கிட அருள்செய்தது ; 2866-ல் ஆசிரியர் காட்டியருளிய படி கண்டுகொள்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பீடு - பெருமை ; "மேன்மையாந் தன்மை" (2866) ; பேதைமை - அறியாமை ; ஆணவ மறைப்பு. தீதிலா வீடினால் - வீடு பெறுந் தன்மையால். வீடிலார் - இறப்பிலாதவர் ; இறைவன் தொழுவாரகளே - பெரியோர்களும், உயர்ந்தாகளும் ஆவர் என்று கூட்டுக. 3-வது பாட்டினையும் இவ்வாறே கூட்டுக ;—(2) கால் உற - கால் வளைதது ;—(3) பின்பினால் - பின்புறம் ; பின்னுதலினால் ; மூவர் - அயனரியரன என்ற குணமூாததிகள் ; அன்பினால் - "அன்புறு மேன்மை" (2866) ;—(4) பரவுவார் - "பரவு சீர" (2866) ;—(5) பாயினும் - பாய்ந்து உதைததாய ;—(6) உரை - முன்னையது துதி ; பின்னையது புகழ் என்ற பொருளில் வந்தன ;—(7) வீரம் ஆகிய - வீரம செய்ய எண்ணிய ; இங்குக் குறித்தது யானையுரிதத வீரம ; வாரம் - அன்பு ;—(9) தேறி யின்புறில் - நோயிலார் - தீதிலார் ; பின் செலார் - என்று கூட்டுக. அலங்காரமாம் - தவமாம். "செய் தனவே தவமாக்கும்" (திருவா) ; "ஞானகிட்டை யுடையோருககு நன்மையொடு தீமையில்லை" (சிததி - 8-32) ; சைவனார் - சிவனார் ; "ஐயாறதனிற சைவனாகியும்" (திருவா) ;—(10) வாக்கியம் - வேதநூல் விதிகள் ; குறையுடையீரேல் - குறைக் தடைந்தீராகில் ; குறைசொல்லிப புகலடைந்தால்.

தலவிசேடம் :—திருவறையணி நல்லூர் - நடுநாட்டில் பாடல்பெற்ற பதிகளுள் 12-வது பதி ; தம் வனவாசததினபோது பாணடவாகள் கணட ஐநது அறைகளால் அலஙகரிக்கப்பட்ட நல்லூர் எனற காரணததால இபபெயர் பெறறது ; அறைகண்ட நல்லூர் எனவும் வழஙகுவது ; இககோயில் திருககோவலூருககு எதிரில பெண்ணை யாறறின் வடகரையில் மலைமேல் உளளது ; மேறகுபபாாதத சந்நிதி ; * சுவாமி - அறையணிநாதர் ; அம்மை - அருணயகி ; தீாததம் - பெண்ணையாறு ; பதிகம் 1.

இது விழுபபுரம் - காட்பாடிக கிளையில் திருக்கோவலூர் நிலையத்தினின்றும் வடக்கே ½ நாழிகையளவில் பெணணையாற்றின் வடகரையில உள்ளது.

2867. சீரின் மன்னிய பதிகமுன் பாடியத் திருவறை யணிநல்லூர்
வாரின் மல்கிய கொங்கையாள் பங்கர்தம மலைமிசை வலங்கொள்வார்
பாரின் மல்கிய தொண்டர்க ளிமையவர் காடொறும் பணிந்தேத்தும
காரின் மல்கிய சோலையண் ணாமலை யன்பர்காட் டிடக்கண்டார். சுஅசுஎ

(இ - ள்) சீரின்...பாடி - சிறப்பினால் நிலைபெறற திருப்பதிகததினைப் பாடி ; அத்திருவறையணிநல்லூர்...வலஙகொள்வார் - அந்தத் திருவறையணிநல்லூரில் வாரணிந்த

* இம்மலையின் மேலிருந்து பார்த்தால் திருவண்ணாமலைச் சிகரம் தரிசிக்கலாம் ; 2867 பார்க்க.

கொள்கையினையுடைய அம்மை பங்கராகிய இறைவரது திருமலையின்மேல் வலம் வருபவராகிய பிள்ளையார்; காரின்...அண்ணாமலை - இந்த உலகில் இருந்த தொண்டர்களும் தேவர்களும் நாள்தோறும் பணிந்து துதிக்கின்ற மேகங்கள் தவழ்தற்கிடமாகிய சோலைகள் சூழ்ந்த திருவண்ணாமலையினை; அன்பர் காட்டிடக் கண்டார் - அன்பர்கள் காட்டியிடக் கண்டருளினார்.

(வி - ரை) மலைமிசை வலங்கொள்வார் - திருவறையணிநல்லூர்த் திருக்கோயில் மலையின்மேல் இருந்தவாறே மலையின்மேல் வலங்கொண்டருளினர்; வலங்கொள்வார் - வினைப்பெயர். வலங்கொள்வார் - கண்டார் - என்று கூட்டுக.

தொண்டர்கள் இமையவர் - எண்ணும்மை விரிக்க. பாரின் மல்கிய என்றதனை இரண்டிடத்திலும் கூட்டுக. பாரிடத்தும் விண்புறத்தும் பெருந் தேவர்களாகிய அரியும் அயனும் காணமாட்டாது இளைத்து நிற்க, இறைவர் அவர்கள் கண்டு வழிபட இலிங்கவடிவுடன் அங்கு முளைத்து நிற்றலின் அவ்விருவரும் அவருள்ளிட்ட ஏனைத்தேவர்களும்வந்து இங்கே பாரின் மல்கி நாடோறும் வழிபட்டு நிற்கின்றனர் என்பது. தேவரறியாத தேவதேவர் மானிடருய்யவேண்டி இங்கு முளைத்தெழுந்து காண எளியராய் நிற்றலின் பாரின் மல்கிய தொண்டர்களும் நாடொறும் அத்தேவருடன் தாமும் பணிந்தேத்துகின்றனர் என்பது; இக்கருத்தை "உரக ரருந்தவ ருவண நெடுங்கொடியோர், பரவி நெருங்கலி லுலகி றைந்தவர் பணியு மிடங்கிடையர், தரகர வெனபது கடலின் முழக்கிய தருணை வளம்பதியே" என்று சுவைபடப் போற்றினார் அருணாசல புராணக்காரர்.

காரின் மல்கிய சோலை - சோலைகளின் வளத்தினாலே மேகங்கள் வந்து தவழ்கின்றன என்றும், மேகமண்டலம் வரை சோலைகள் செழித்துயர்ந்து வளர்ந்து நின்றன என்றும் உரைக்கநின்றது. காரின் - கார்போல நிழல் செய்து என்றலுமாம்.

அன்பர் காட்டிடக் கண்டார் - இவ்வாறு இறைவரது தன்மை கூறிச் சுட்டிக் காட்டுதலே அன்பர் செய்கை என்க. இவ்வாறு முன்னர்ப் பிள்ளையார் திருமணிப்பள்ளி, திருவாலவாய் கண்டருளியதுவும், இனி திருக்காளத்தி காண்பதுவும் கண்டு கொள்க. 969

வேறு

2868\. அண்ணா மலையங் கமரர்பிரான் வடிவு போன்று தோன்றுதலுங்
கண்ணாற் பருகிக் கைதொழுது கலந்து போற்றுங் காதலினால்
"உண்ணா முலை"யா ளோடும்பதிகம் பாடித் தொண்ட ருடன்போந்து
தெண்ணீர் முடியார் திருவண்ணா மலையைச் சென்று சேர்வுற்றார். கஎ0

(இ - ள்) அண்ணாமலை...தோன்றுதலும் - திருவண்ணாமலை அவ்விடத்தினின்று காணும் காட்சி தேவதேவராகிய சிவபெருமானது திருவடிவம்போலத் தோன்றுதலும்; கண்ணாற் பருகி...பாடி - கண்களால் ஆரக்கண்டு பருகுதல்போல நுகர்ந்து கைகளால் தொழுது கலந்து, போற்றுகின்ற பெருவிருப்பினாலே "உண்ணாமுலை யுமையாளொடும்" என்று தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடியருளி; தொண்டருடன் போந்து... ...சேர்வுற்றார் - தொண்டர்களுடனே போய்த் தெளிந்த நீரினைத் தலையிற் சூடியவராகிய இறைவரது திருவண்ணாமலையினைச் சென்று சேர்ந்தருளினார்.

(வி - ரை) அண்ணாமலை...தோன்றுதலும் - அரியும் அயனும் காணவண்ணம் வானமும் நிலமுங் கடந்த பேரொளியுடைய அழற்றூணாகி நின்ற இறைவர் அத்திரு

வடிவத்திலேயே இம்மண்ணுலகத்தவர்கள் காணும் வண்ணம் இம்மலையாகக் குறிய வடிவமாகக் கொண்டருளினர் என்பது வரலாறாதலின அங்குநின்றும் கண்டபோது பிள்ளையாருக்கு அம்மலை இறைவரது வடிவேபோலக் காட்சிப்பட்டது என்றார்; ஏனை புலகத்தவர் மண்ணும கல்லும் குவிந்ததொரு குவியலாகக காண்பர்; ஆனால் ஞானி கள் இம்மலை தன்மையால் இறைவரேயாகக் காண்பர்; பிள்ளையாரோ, அதனைத தன்மையான மட்டுமன்றி வடிவத்தாலும் இறைவர் எனக கண்டருளினர். "தழலாய், மலர்ந்த பேரொளி மீமிசை சுருங்கியே வந்தோர், விலங்க லாகிய தலமெலாம் பரவியே வியப்ப" (கந்த - அடிமுடிதேடு படலம் - 94).

அந்த தோன்றுதலாவது - திருவண்ணாமலையைச் சுற்றி வலம்வரும் பேறுபெற்ற அன்பர்கள் இக்காலிலும் அதன் காட்சியைப் பல பகுதிகளில் மாதொருபாகர் - உமா மகேசுவரர் - சோமாக் கந்தர் என்று பலவாறு இறைவரது திருவடிவமாகக் காண்பர்; திருவறையணிநல்லூர் மலையினின்றும் காணபோர்க்கு அது சிவபெருமானது இலிங்கத திருமேனிபோன்று விளங்கும் நிலை காணப்படுதல்.

கண்ணுற் பருகி - காட்சி வாயிலாக நுகர்ந்து பெறற ஆரா இன்பம் வாயின்வழி உண்டு பெற்ற இன்பம்போலத் தேக்கி. "இரண்டு கண்ணுலு மம்பொற புற்றி னிடை யெழுந்த, செழுந்தண பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார்" (ஏயர் - 311); "பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு" (ஷை 308); "என பொன் மணியை யிறைவனை யீசனைத, தின்பன கடிப்பன திருததுவன" (திருமந் - 9 - 32); "கரும்புந் தேனும் கலந்ததோர காயததி, லரும்புங் கந்தமு மாகிய வானந்தம" (ஷை 328)

கலந்து - இங்குநின்று கண்ட காட்சியில் அங்குச் சென்றாறபோலவே மனவொரு மைப்பாடு பெறறு; கண்களின் செயலும் கைகளின் செயலும் முன்கூறினர்; இவற் றின்மூலம் கண்டு இயக்கிய மனம இவற்றோடு அமையாது முழுதும் அங்குக் கலந்தது என மனத்தின் றொழில் இதனுற கூறப்பட்டது.

போற்றும் காதலினுற் - பாடி - கண்ணும் கையும் மனமும் தொழிற்பட, வாக்கின் றொழிலும் பயனும் பெறக் காட்டும் பெருவிருப்பத்தினலே பதிகம் பாடினா என்பது.

உண்ணுமுலையா ளோடும் - "உண்ணாமுலை உமையாள்" என்று தொடங்கும்.

தெள் நீர் - நீரப் பெருக்கினைச் சடையிறதேக்கிச் சிறிதாக விடப்படுதலிற் றெளிந்ததுபோலும் எனபது குறிப்பு தெளிவிக்கும் நீர என்று பிறவினையாக்கி உரைத்தலு மாம்; தெளிவித்தலாவது தோயந்தாரது மலத்தைக கழுவித் தூய்மை செய்தலால அறியாமை போக்கி அறிவு விளங்கச் செய்தல; தெள்ளுதல் - தெறித்தல - இடப் பெயர்ச்சி செய்தல் என்று கொண்டு அன்பர்க்கும் நீர என்றலுமாம; "உள்ளத் துறு துய ரொன்றொழியா துள்ளவெல்லாந், தெள்ளுங் கழலுக்கே சென்றூதாய் கோத் தும்பீ" (திருவா). இப்பொருளகளில் பகீரதனுக்காக இறைவர் கங்கையைத் தாங்கி விடுத்த வரலாற்றுக் குறிப்பும் காணக.

தெண்ணீர் முடியார் - மலை - நீர்கொண்ட மேகமண்டலத்தைச் சிகரங்கள் பொருந்தும் என உயர்ச்சிபற்றிய குறிப்பும் காணக. நீர் - நீர் பொருந்திய மேகமண்டலம். ஆர்தல் - பொருந்துதல். முடி - சிகரம்; உச்சி. "மண்ணார்ந்தன அருவித் திரள்" என்றும், "விடுகொம் பொடுநீண்டித் தூமா மழை...அளிசிதற" என்றும், "மழை தவழும் பொழில்" என்று மிவ்வாறு வரும் பதிகமும் இக்குறிப்புத் தருவது காண்க.

## I திருவண்ணாமலை

திருச்சிற்றம்பலம் பண் - நட்டபாடை - 1-ம் திருமுறை

உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமானமலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரள் மழலைம்முழ வதிரு
மண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண மறுமே. (1)

வெம்புந்திய கதிரோனொளி விலகும்விரி சாரல்
அம்புந்திமூ வெயிலெய்தவ னண்ணாமலை யதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுண் ஞான
சம்பந்தன தமிழ்வல்லவ ரடிபேணுதல் தவமே (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :— பெருமானமலை அண்ணாமலையினைத் தொழுவார்களுடைய வினைமுழுதும் அறும் என்று மலையினைத் தூரத்தே கண்டு போற்றியது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) உண்ணாமுலை உமையாள் - முருகப்பெருமானும் வாய்வைத்து உண்ணாத முலை; பரம் அபரம் என்னும் ஞானங்களிரண்டுமே உருவாகக் கூறுதல் மரபு; ஒருவனாயிருந்து உலகுக்கருள நினைவுகொள்ளச், சிவமும் சத்தியும் உடனாகிய உருக்கொண்டு, பின் அருள்தரச் சத்தி வேறாகி வரும் நிலைகள் குறிப்பு. பெண் ஆகிய - சத்தி வேறாகிய, அருவிகள் திரண்டு சலசல ஓசையுடன் தரையில் வீழ்வன மழலை முழவுபோலச் சத்திக்கின்றன. முழவுபோல அதிரும் என்று உவம உருபு விரிக்க; அதிர்தல் - சத்தித்தல்; வழுவா வண்ணம் - "ஒன்றொழியா வண்ணமெல்லாம்" (திருவா); உறுதியாக என்றலுமாம் ;—(2) தேமாங்கனி ..சிதற - ஆண் குரங்குகள் கொம்புகளைக் கீழ் இழுத்துத், தொங்கும் மாங்கனியைக், கொள்வதால் பின்னர் அக்கொம்புகள் மேலேசென்று மேகங்களைக் கீற அவற்றினின்று நீர்ச் சிறுதுளிகள் சிதறி வீழ; "மலர்ப்பறிப்பத் தாழ்விடு கொம்புதைப்ப" (தேவா); தேமா - மாவின் சிறந்த ஒருவகை; தேம் - இனிமையுடைய; தூமமழை - மேகத்தாற் றாய நீராவியாய்க் கொள்ளப்பட்டதால் குறிப்பு; நீண்டி - நீண்டதலால், துறுவல் - செறிவு; சோலைகளின் திரட்சி. ஆமா - காட்டுப்பசு ;—(3) பயில் - குறிஞ்சிக் கருப்பொருள். கழை - மூங்கில்; கழை முத்தங்களைச் சூல்கொண்டு முற்றி மணிகளைத் தரை நிறையச் சொரியும்; சூலி - சூல் கொண்டு; ஆலி - நீர்த்துளி, புகழ் தொழுவாரணவே - என்று கூட்டுக ;—(5) முரவம் படும் - முரசு (பறை)போல ஒலிக்கும் ;—(7) கரி காலன...எரியாடிய - ஊழிச் சுடலை; காலனவுங் கொள்வனவும் ஆகிய கழுது - என்க; கழுது - நரி - முதலியன இருத்தல் சமத்தின் பொதுவியல்பு ,—(8) ஒளிறு - விளங்கும்; ஒளிறு - அதள் - என்க; ஒளிறு - முதலிய நீட்டல்கள் செய்யுள் இசை நிரப்புதற்கண் வந்தன ;—(9) கடல்வண்ணன் - புகழோன் - என்ற தேவர்களை நோக்க இவர்களது பெருமையும் இத்தலவரலாறும் குறித்தன; அளவா - அளந்தறியலாகாத; அழலாகிய அண்ணல் - தல வரலாறு,—(10) வெயில் நின்றுழல்வார் - சமண குருமாரின் வழக்குக்களுள் ஒன்றுபற்றிக் கூறியது; சீவரம் - புத்தர்களது மஞ்சட் போர்வை; ஆரம்பர் - வீண் ஆரவாரஞ் செய்வோர் ;—(11) வெம்பு - வெப்பு என்பது மெலிந்து வந்தது. ஒளி விலகும் - உட்புகமாட்டாது விலகிச்செல்லும்;

உந்துவனவாகிய துயில் என்க ; ஆலுவ - அசைவன ; தாம் உந்திய கொம்புகளுடன் தாமும் அசைவன.

தலவிசேடம் :—திருவண்ணுமலை - III - பக். ௫௬௪ பார்க்க.

2869. அங்க ணணைவார் பணிந்தெழுந்து போற்றி செய்தம் மலைமீது
தங்கு விருப்பில் வீற்றிருந்தார் தாட்டா மரைக டம்முடிமேற்
பொங்கு மார்வத் தோடும்புனைந்து புளக மலர்ந்த திருமேனி
யெங்கு மாகிக் கண்பொழியு மின்ப வருவி பெருக்கினார். ௯௭௧

(இ - ள்) அங்கண்...போற்றி செய்து - அங்கு (அண்ணுமலையினகண்) அணை பவராகிய பிள்ளையார் நிலமுற வணங்கி எழுந்து ; அம்மலைமீது...தாள் தாமரைகள் - அந்த மலையினமேல் தங்கும் விருப்பினுடன் எழுந்தருளியுள்ள இறைவரது திருவடிக ளாகிய தாமரைகளை ; தம் முடிமேல...புனைந்து - தமது திருமுடியின் மேலே மேன் மேல் எழுகின்ற ஆசையினுடன் சூடிக்கொண்டு ; புளகம் ..எங்குமாகி - திருமேனி முழுதும் மயிர்ப்புளகம் வரக்கொண்டு ; கண...பெருக்கினார் - கண்களிற் பொழிகின்ற ஆனந்தக்கண்ணீரை அருவிபோலப் பெருக்கினார்.

(வி - ரை) பணிந்தெழுந்து - மலையினைச் சோந்தவுடன் அதனடியில் நிலமுறப் பணிந்து எழுந்து.

அம்மலைமீது......வீற்றிருந்தார் - திரு அண்ணுமலை நாதர் - அருணாசலேசுவரர் ; தங்கு விருப்பில் வீற்றிருந்தலாவது என்றும் நீங்காது வெளிப்பட எழுந்தருளியிருத் தல்.

தாள் தாமரைகள் - முடிமேல் - புனைந்து - திருவடிகளில் தலைசாய்த்து நிலமுற வணங்கி ; அடித்தாமரை மலரைத் தலையிற் சூடி என்ற நயமும் காண்க. தாமரை அந்தணர்க்குரிய மாலையாதலும் குறிப்பு. மலையை வணங்கி மேற்சென்று இறைவரை வணங்கினார் என்க.

புளகம்...ஆகி - புளகம் - மயிர்க்கூச்செறிதல்; இம்மெய்ப்பாடு உடல்முழுதும் உளதாதல் அன்புநிறைவின் குறி.

கண் பொழியும் இன்ப அருவி - ஆனந்தக்கண்ணீர் அருவிபோலக் கண்களில் பெருக வருதல் பேரின்ப அன்பின் மிகுதியினால் உளதாவது ; மிகுதியும் இடையறாத தன்மையும்பற்றி அருவி என்றார். உபசாரம். 971

2870. ஆதி மூர்த்தி கழல்வணங்கி யங்க ணினிதி னமருநாட்
பூத நாத ரவர்தம்மைப் "பூவார் மலை"யாற் போற்றிசைத்துக்,
காத லாலத் திருமலையிற் சிலநாள் வைகிக் கமழ்கொன்றை
வேத கீதர் திருப்பதிகள் பிறவும் பணியும் விருப்புறுவார்; ௯௭௨

2871. மங்கை பாகர் திருவருளால் வணங்கிப் போந்து வடதிசையிற்
செங்கண் விடையார் பதிபலவும் பணிந்து, புகலிச் செம்மலார்
துங்க வரைகள் கான்பலவுங் கடந்து, தொண்டைத் திருநாட்டிற்
றிங்கண் முடியா ரினிதமருந் திருவோத் தூரைச் சேர்வுற்றார். ௯௭௩

2870. (இ - ள்) ஆதிமூர்த்தி ..அமரும் நாள் - ஆதிமுதல்வராகிய திருஅண்ணாமலையாரது திருவடிகளை வணங்கி அத்திருப்பதியில் இனிதாக விரும்பி எழுந்தருளியிருக்கும் நாள்களில்; பூதநாதரவர் தம்மை...போற்றிசைத்து - பூதங்களுக்கு நாயகராகிய அவரைப் "பூவார் மலர்" என்று தொடங்கும் திருப்பதிகத்தினாற் போற்றித் துதித்து; காதலால்...வைகி - ஆசையினால் அந்தத் திருமலையின்கண் சில நாட்கள் தங்கியருளி; வேத கீதர் ..விருப்புறுவார் - வேதகீதராகிய இறைவரது திருப்பதிகள் பிறவற்றையும் சென்று பணியும் விருப்பத்தை மேற்கொள்வாராகி. கஎ0

2871. (இ - ள்) மங்கை பாகர்...போந்து - அம்மையை ஒரு பாகத்திலுடைய இறைவரது திருவருளினாலே வணங்கி விடைபெற்றுச் சென்று; வடதிசையில்... ...பணிந்து - வடதிசையில் சிவந்த கண்ணுடைய விடையினையுடையவராகிய இறைவரது பதிகள் பலவற்றையும் வணங்கிப் போய்; புகலிச் செம்மலார்...கடந்து - சீகாழித் தலைவராகிய பிள்ளையார் பெரிய மலைகளையும் காடுகள் பலவற்றையும் கடந்து; தொண்டைத் திருநாட்டில...சேர்வுற்றார் - திருத்தொண்டை நன்னாட்டிலே சந்திரனைத் தலையிற் சூடிய இறைவர் இனிதாக விரும்பி எழுந்தருளியிருக்கும் திருவோத்தூரைச் சேர்ந்தருளினார். கஎக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2870. (வி - ரை) ஆதி மூர்த்தி - எல்லாவற்றுக்கும் முதல்வராகிய சிவபெருமான்; அநாதியாயுள்ளவராதலின் ஆதிமூர்த்தி என்றார்.

பூதநாதர் - சிவ பூதகணங்களின் இறைவர். பூதம் - உயிர்கள் என்றுகொண்டு உயிர்களுக்கெல்லாம் உயிர்க்குயிராகிய நாயகர் என்றலுமாம்.

பூவார் மலரால் - பூவார் மலர் என்று தொடங்கும் பதிகத்தால், இரட்டுற மொழிதலால் அழகிய மலர்களாலே என்றுரைக்கவும் நின்ற நயம் காண்க, "நீத தமிழின் தொடைமாலைத் திருப்பதிகச் 'சொன்மாலை' பாடினார்" (1476), "இந்த 'சொன்' றொடையால" (1815) என்பனபோலக் காண்க.

காதலாலத் திருமலையிற் சிலநாள் வைகி - தொண்டைநாடு சென்று அங்குக் கோயில்களைப் பணிய எண்ணி வழிக்கொண்ட பிள்ளையார் இடையிற் கண்ட பதிகளில் வணங்கிச் செல்லுதல் மரபேயன்றிச் சில நாள்கள் தங்கிவிடுதல் கூடாமையின் இங்குச் சிலநாள்கள் வைகிய செயல் காதலாலாகியது என்பதாம். "தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார்" (1577); "பணிந்து பரவிப் பணிசெய்தார்" (1578) என்ற அரசுகளது வரலாறும், திருவாதவூரடிகள் இங்குப் பலநாட் டங்கியிருந்த வரலாறுகளும் இங்கு நினைவுகூரத்தற்பாலன. தலப்பெருமையுஞ் சிந்திக்க.

வேதகீதர் - வேதமாகிய கீதத்தைச் சொன்னவர் என்றும், அதனாற் பேசப்படும் பொருளானவர் என்றும் உரைக்க நின்றது. வேதம் சுரங்களின் நிறைவு கொண்டமையால் கீதம் எனப்பட்டது.

பதிகள் பிறவும் - தொண்டைநாடும், அதனுட் கச்சி நகரும் சாருமுன் இடைப்பட்ட பதிகள்.

பணிய விரும்புவார்—என்பதும் பாடம். 972

2871. (வி - ரை) திருவருளால் வணங்கிப் போந்து - திருவருள் விடைபெற்றுப் போய்; மேல் தொண்டைநாட்டில் நடைபெறவுள்ள அற்புத அருட்செயல்கள் நிகழ்தற் பொருட்டுச் செலவு நேர்தலால் அருளால் வணங்கி என்றார். •

வடதிசையில் - பதி பலவும் பணிந்து - திருவண்ணாமலையினின்றும் தொண்டைநாட்டிற் சார்ந்து காஞ்சிபுரம் சேர்தல் பிள்ளையாரது திருவுள்ளக் குறிப்பாதலின்

அங்குநின்றும் வடதிசையிற் செல்வார் இடையிற் கண்ட பதி பலவும் பணிந்து சென்றனர் என்பது.

**வடதிசையில்** - வடகிழக்கு நோக்கிச் செல்கின்றாராதலின் வடக்கில் என்னாது வடதிசையில் என்றார்; ஆயினும் அங்குநின்று செல்லும் சாலை தொடக்கத்தில் நெடுந்தூரம் போளூர் வரை வடக்கு நோக்கியே சென்றபின்னரே ஆரணி வழியாய் வடகிழக்கில் செல்கின்றமையும் குறிக்க.

**பதி பலவும்** - இவை திருத்தெள்ளாறு, திருவெண்குன்றம், புரிசைநாட்டுப் புரிசை முதலாயின என்பது கருதப்படும்.

**துங்க வரைகள் கான் பலவும் கடந்து** - இவை செஞ்சிமலை, நெடுங்குன்றம், சவ்வாது மலைத்தொடர்பாய சிதறிய குன்றுகள் முதலாயினவும், நடுநாடும் தொண்டைநாடும் சந்திப்பான நிலப் பரப்பாகிய இடத்தில் உள்ள காடும் மலையும் கலந்த பரந்தவைகளும் ஆம். பல்குன்றம், இளங்காடு, திண்டிவனம், புலிவனம், புறவார் பனங்காட்டூர் முதலிய காரணக் குறிப்புடன் வரும் ஊர்ப்பெயர்களையும் கருதுக. **துங்க வரை** - பெரிய மலைகள். இவைகள் பலவற்றை இடமாகக்கொண்டு முன்னாளில் அரசர் தமது கோட்டைகளை அமைத்து நாடு காவல் புரிந்தநிலை நாட்டுச் சரிதங்களால் அறியப்படும். 973

II திருவண்ணாமலை

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி - 1-ம் திருமுறை

பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்
மூவார் புரங்க ளெரித்த வன்று மூவர்க் கருள் செய்தார்
தூமா மழைநின் றதிர வெருவித் தொறுவின் னிரையோடும்
ஆமாம் பிணைவந் தணையுஞ் சார லண்ணா மலையாரே. (2)

ஞானத் திரளாய் நின்ற பெருமா னல்ல வடியார்மேல்
ஊனத் திரளை நீக்கு மதுவு முண்மைப் பொருள்போலும்
ஏனத் திரளோ டினமான் கரடி யிழியு மிரவின்கண்
ஆனைத் திரள்வந் தணையுஞ் சார லண்ணா மலையாரே. (2)

அல்லா டரவ மியங்குஞ் சார லண்ணா மலையாரை
நல்லார் பரவப் படுவான் காழி ஞான சம்பந்தன்
சொல்லான் மலிந்த பாட லான பத்து மிவைகற்று
வல்லா ரெல்லாம் வானோர் வணங்க மன்னி வாழ்வாரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—குறிஞ்சித்திணை பற்றிய நிலைகள் பலவும் தமிழ்நலம்பெறச் சுவைபட எடுத்துக் கூறி இத்தகைய திருவண்ணாமலையில் எழுந்தருளிய இறைவர் அடியாரும் வானோரும் வழிபட விளக்கமாக இருந்து அடியார்க்கருளி நன்மை தரும் பெருமை உண்மைப்பொருள் என்றதாம்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) பூ - அழகு ; மண்ணுலகத்தவரும் விண்ணவரும் கூடி வணங்குதல்பற்றி முன் உரைத்தவை பார்க்க ; மூவார் - கேடில்லா வரம் பெற்ற அசுரர் ; மூவர் - முப்புரங்களில் வாழ்ந்த மூவர். தொறு - பசுக் கூட்டம் ;

மழை - மேகம்; ஆமாம்பிணை வெருவித் தொறுவின் நிரையோடும் அணையும் என்க; வெருவி - அஞ்சி; அச்சத்தால் தன் இனமல்லாவிடினும் ஒருசார் ஒப்புமை பற்றிப் பசுக் கூட்டத்துடன் கூட்டப்படவும் வரும் என்பது; பின்னிரண்டடிகள் குறிஞ்சியியல் புணர்த்தின. மேல் வருவன பலவும் இவ்வாறே காண்க; இவை தமிழ் இலக்கணம் பற்றியனவாதலால் சொல்லான் மலிந்த (11) என்பதும் காண்க (சொல் - தமிழியல்);—(2) அடக்கும் அதுவும் நன்மைப்பொருள் - அன்று தேவர்க்கருளியதன்றி இன்று காண்பார்க்கும் அருள் புலப்படநின்று நலஞ்செய்தல் குறிப்பு;—(3) உண்மைப் பொருள் - மெய்கண்ட ஞானநூல்களின் முடிந்த உண்மை இதுவேயாகும்; ஊனத் திரள் - மலம்; ஏனத்திரள் - இனமான் - ஆனைத்திரள் - இச்சாதிகள் இனமாய்த் திரளாகக் கூடிவரும் இயல்புடையன. இவை குறிஞ்சிக் கருப்பொருள்கள்; இவை மலைச்சாரலில் ஒருங்கு வாழும் வாழ்க்கைத் தன்மைபற்றிய குறிப்பு;—(4) இழைத்த - கல் உடை புனைந்த,—(5) பருவக் - குவித்த என்க; பருவி - அரித்து;—(6) குழல் ஊத - மேதி - தீரும் - இஃது இசையின் சத்தியாலாவது; ஆயர் புராணம் பார்க்க, பார்ப்பவர்க்கு உலகியலில் கண்கூடாகக் காண்பது;—(7) வரும் மேல்வினை - ஆகாமியம்; பந்தித்திருந்த பாவம் - பழவினை;—(8) திறம் - புகழ்;—(9) ஆடிப்பாடி அளக்கும் - விலை கூறுவார் செய்யும் வாணிபத் திறம்; இன்றும் வாணிப பலதுறைகளிலும் காணவுள்ளது;—(10) பிட்டர் - பிரட்டர்; கீழ்கள். சமணே - உடையின்றி, நின்றுணாறும் - சமண குருமார் வழக்கு; அட்டம் - அணையும் - அட்டமாக, குறுக்காக. 725 பார்க்க,—(11) அல் - இரவு; சொல்லான் மலிந்த - தமிழியல் நிறைந்த.

[ஆண்பனை பெண்பனையாக்கிய அற்புதம்]

2872. தேவர் முனிவர்க் கோத்தளித்தார் திருவோத் தூரிற் றிருத்தொண்டர்
தாவில் சண்பைத் தமிழ்விரகர் தாமங் கணையக் களிசிறந்து
மேவுங் கதலி தோரணங்கள் விளக்கு நிரைத்து நிறைகுடமும்
பூவும் பொரியுஞ் சுண்ணமுமுன் கொண்டு போற்றி யெதிர்கொண்டார்.

(இ - ள்) தேவர்...திருத்தொண்டர் - தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேதங்களை ஓதுவித்து அருளிச்செய்த இறைவரது திருவோத்தூரிலே வாழும் திருத்தொண்டர்கள்; தாவில...அணைய - குற்றமில்லாத சீகாழியில் வந்த தமிழ் விரகராகிய பிள்ளையார் தாம் அங்கு அணையவே, களிசிறந்து...எதிர்கொண்டார் - மிக மகிழ்ந்து பொருந்திய வாழைகளையும் தோரணங்களையும் விளக்குகளையும் வரிசைபெற நாட்டிய, பூரண கும்பங்களையும் பூவும் பொரியும் சுண்ணமும் என்ற இவற்றையும் முன்னே ஏந்திக்கொண்டு துதிசெய்து எதிர்கொண்டார்கள்.

(வி - ரை) தேவர்...திருவோத்தூரில் - திருவோத்தூர் என்ற பெயர்க் காரணக் குறிப்புப்பட வந்த விசேடணம். ஓத்து - வேதம். தலவிசேடம் பார்க்க.

களிசிறந்து...எதிர்கொண்டார் - இஃது அவர்களது அன்பின் பெருமையினை விளக்குவதாம்; நிரைத்து - வரிசைபெற நிறுவி. நிரை - வரிசை; விளக்கு நிரைத்தலாவது - விளக்குகளைத் தோரணம்போல வரிசைபெற ஏற்றுதல்; முன்கொண்டு - முன்னால் ஏந்திக்கொண்டு; பூ - பொரி - சுண்ணம் - இவற்றைத் தூவி எதிர்கொள்ளுதல் மங்கலம் செய்யும் மரபு. பொரி - நெற்பொரி. போற்றி - வாழ்த்திசைத்து.

இவ்வாறு சென்ற சென்ற தலங்கள்தோறும் எதிர்கொண்ட பெருமை தொண்டை நாட்டுக்குச் சிறப்புரிமை.

முனிவர்க்கோத்தளித்த—என்பதும் பாடம். 974

2873. சண்பை வேந்தர் தண்டரளச் சிவிகை நின்று மிழிந்தருளி
நண்பின் மிக்க சீரடியார் சூழ நம்பர் கோபுரஞ் சூழ்
விண்பின் னாக முன்னோங்கும் வியன்பொற் புரிசை வலங்கொண்டு
பண்பி னீடிப் பணிந்தெழுந்து பரமர் கோயி லுள்ளடைந்தார். ௬௭௫

(இ - ள்) சண்பை...இழிந்தருளி - சீகாழித் தலைவராகிய பிள்ளையார் குளிர்ந்த முத்துச் சிவிகையினின்றும் இறங்கியருளி, நண்பின.. சூழ-அன்புமிகுந்த சிறப்புடைய அடியார்கள் தம்மைச் சூழ்ந்துவர ; நம்பர்...வலங்கொண்டு-இறைவரது கோபுரத்தைச் சூழ்ந்த ஆகாயமும் கீழ்ப்படும் வண்ணம் முன்னே உயர்ந்து விளங்கும் பெரிய அழகிய திருமதிலைச் சுற்றி வலமாக வந்து ; பண்பின...அடைந்தார் - வணங்கவேண்டிய தன்மை பெருகிப் பணிந்து எழுந்து இறைவரது திருக்கோயிலினுள்ளே அடைந்தருளினார்.

(வி - ரை) சிவிகை நின்று மிழிந்தருளி - என்றது எதிர்கொண்ட அடியார்களது அன்பினை அங்கீகரித்துக்கொள்ளும் நிலை.

கோபுரம் சூழ் விண்பின்னாக முன் ஓங்கும் - கோபுரத்தைச் சூழ்ந்த உயர்ந்த மதில் முன்னால் ஓங்கி நின்றது ; அஃது ஆகாயத்தையும் கீழ்ப்படுத்தி ஓங்கியது.

புரிசை வலங்கொள்ளுதல் - மதிலைச் சூழ்ந்து புறத்தே வலம் வருதல்.

பண்பின் நீடுதல் - வணக்கத்திற்குரிய இடம் காலம் முறை முதலிய எல்லாத் தன்மைகளாலும் மிகுதல். 975

2874. வார ணத்தி னுரிபோர்த்த மைந்த ருமையாண் மணவாளர்
ஆர ணத்தி னுட்பொருளாய் நின்றார் தம்மு னணைந்திறைஞ்சி
நார ணற்கும் பிரமற்கும் நண்ணற் கரிய கழல்போற்றுங்
கார ணத்தின் வருமின்பக் கண்ணீர் பொழியக் கைதொழுதார். ௬௭௭

(இ - ள்) வாரணத்தின...அணைந்திறைஞ்சி - யானையின் உரியைப் போர்த்த வல்லமையுடையாரும், உமையம்மையாரின் மணவாளரும், வேதங்களினுட்பொருளாய் நின்றவரும் ஆகிய இறைவரது திருமுன்பு சேர்ந்து வணங்கி ; நாரணற்கும...காரணத்தின் வரும் - திருமாலுக்கும் பிரமதேவர்க்கும் சேர்தற்கரிய திருவடிகளைத் துதிக்கின்ற தனால் வருகின்ற ; இன்பக் கண்ணீர் பொழியக் கைதொழுதார் - இன்பமாகிய ஆனந்தக் கண்ணீர் பொழியக் கைகூப்பித் தொழுதருளினார்.

(வி - ரை) உரிபோர்த்த மைந்தர் - மைந்தர் - வல்லாளர். மைந்து-வல்லமை; இது சங்கார காரணராந் தன்மையினையும், உமையாள் மணவாளர் என்றது சிருட்டி காரணராந் தன்மையினையும், ஆரணத்தின் உட்பொருளாய் நின்றார் என்றது சிருட்டியில் வரும் உயிர்களுக்கு அவ்வவற்றின் நிறத்துக்கேற்ப ஞானங் கொடுத்து அறியாமை நீக்கி உய்வதற்கு அருள்புரியும் தன்மையினையும் உணர்த்தின.

ஆரணத்தின் உட்பொருளாய் நின்றார் - உருத்திரபசுபதி நாயனார் புராணத்திலுரைத்தவை பார்க்க. வேதம் எவ்வெப் பகுவமுடைய எல்லாவுயிர்க்கும் பொது

லாதலின் எல்லாக் கடவுளரைப்பற்றியும் எடுத்தோதிச் சிவனை உள்ளிடத்தில் வைத்துக் கூர்ந்துநோக்கி யறியுமாறு வைத்துக் கூறும் என்ற குறிப்புப்பெற வைப்பார் ஆரணத்தின் பொருளாய் என்றது உட்பொருளாய என்றார்; தேவர் முனிவர்க்கு வேதம் உதவித்த பதியாதலும் குறிப்பு.

**ஆரணத்தி னுட்பொருளாய் நின்றார்** - சங்காரமும் சிருட்டியும் பெற வைத்தமையின் ஐந்தொழிலும் பெறவைத்தபடியாம். "கூத்தீர்" என்ற பதிகக் குறிப்புக் காண்க. அவ்வாறு வரும் உயிர்களுக்கேற்றவாறு இறைவர் மறைஞானமுணர்த்த உணர்ந்து அவை வழிபட்டு உய்தி பெறுகின்றன என்றது "பூதநாத நாயன் கொண்டுகின் பொன்னடி, யேத்தா தாரிலை யெண்ணுங்கால்" எனும் பதிகத்தாற் பெறப்படுதலும் காண்க. இனி இப்பதியில் நிகழ்வுள்ள அற்புத அருட்செயல்களை, அமணர் இழித்துரைத்த மாசற்றது அறிவுறுத்தியருளிய சங்காரநிலைக் குறிப்பும் (2876 - 2880), ஆண்பனைகள் குரும்பையீனே அருளிய புனருற்பவநிலைக் குறிப்பும் (2881), பனைகளுக்கும் பாசநீக்கமும் சிவப்பேறும் அருளிச் சைவத்தின் உட்பொருளாகிய சிவனருட் குறிப்பும் (2879 - 2881) மறையாகிய திருப்பதிகத்தின் வாய்மையினால் விளைதல் காணவுள்ள குறிப்பும் இம்மூன்று தன்மைகளாற் பெறவைத்த நலமும் கண்டுகொள்க. "போக்கு வரவு புரிய" (2ம் சூத்திரம் போதம்) என்றவிடத்து மாபாடியத்தில் உரைத்தவை இங்கு நினைவுகூர்தற்பாலன. "பந்தம்வீடு தரும் பரமன்" (300) என்றவிடத்துரைத்தவையும் பார்க்க. "அந்தமாதி" (1), "போக்கு வரவு" (2) எனும் கருத்துக்கேற்ப ஈண்டும் "வாரணத்துரி போர்த்த மைந்தனூர்" எனச் சங்காரக் குறிப்பை முற்கூறியதும் கருதத் தக்கது.

**கழல்போற்றும் காரணத்தின் வரும் இன்பக்கண்ணீர்** - மாயாகாரியங்களின் தொடர்ச்சிபற்றியே மக்களுக்கு உலகிற் பெரும்பான்மை இன்பக்கண்ணீர் வரும்; அவ்வாறல்லாது இங்கு இறைவர் கழல்போற்றும் தொடர்புபற்றி வந்தது என்று வேறு பிரித்துக் கூறியபடி. அரியயனுக்கும் எட்டுதற்கரிய கழல் போற்றக்கிடைத்த எளிமையும் அருமையும்பற்றிக் கண்ணீர் வந்ததெனக் "வழுத்தியுங் காணா மலரடி யிணைகள், வழுத்துதற் கெளிதாய்" (திருவா - போற்றித் திருவகவல்), துன்பினாலும் கண்ணீர் வருமாதலின் அதனை நீக்க இன்பக் கண்ணீர் என்றார் 976

2875. தொழுது விழுந்து பணிந்தெழுந்து சொன்மாலைகளாற் றுதிசெய்து
முழுது மாளு மருள்பெற்றுப் போந்து வைகி முதல்வர்தமைப்
பொழுது தோறும் புக்கிறைஞ்சிப் போற்றி செய்து தங்கமர்வார்முன்
அழுது வணங்கி யொருதொண்ட ரமணர் திறத்தோன் றறிவிப்பார்;

2876. "அங்கை யனலேற் றவர்க்கடியே னாக்கும் பனைக ளானவெலாம்
மங்கு லுறநீண் டாண்பனையாய்க் காயா தாகக் கண்டமணர்
"இங்கு நீரிட் டாக்குவன காய்த்தற் சடைவுண் டோ?" வென்று
பொங்கு நகைசெய் திழித்துரைத்தா ரருள வேண்டு" மெனப்புகல,

2877. பரம னார்தந் திருத்தொண்டர் பண்பு நோக்கிப் பரிவெய்தி
விரவு காத லொடும்விரைந்து விமலர் கோயில் புக்கருளி
அரவு மதியும் பகைதீர வணிந்தார் தம்மை யடிவணங்கி
யிரவு போற்றித் திருப்பதிக மிசையிற் பெருக வெடுத்தருளி, ௧௭௭

2878. விரும்பு மேன்மைத் திருக்கடைக்காப் பதனில் விமல ரருளாலே
"குரும் பையாண் பனையீனு" மென்னும் வாய்மை குலவுதலால்
நெருங்கு மேற்றுப் பனையெல்லா நிறைந்த குலைக ளாய்க்குரும்பை
யரும்பு பெண்ணை யாகியிடக் கண்டோ ரெல்லா மதிசயித்தார். கூ௮௦

2875. (இ - ள்) தொழுது...போந்து வைகி - முன்கூறியவாறு கைகள் கூப்பித் தொழுது நிலமுற விழுந்து வணங்கி எழுந்து திருப்பதிகங்களாற் றுதித்து எல்லாமாய் நின்ற இறைவரது திருவருள் பெற்றுப் புறம்போந்து எழுந்தருளியிருந்து; முதல்வர்தமை...அமர்வார் முன் - முதல்வரைக் காலங்கடோறும் புகுந்து வணங்கித் துதித்து அங்கே விரும்பி யிருப்பவராகிய பிள்ளையார் திருமுன்பு; அழுது...அறிவிப்பார் - ஒரு தொண்டர் அழுது வணங்கி நின்று அமணர்களது தன்மைபற்றி ஒரு செய்தியை அறிவிப்பாராய்; கூளஎ

2876. (இ - ள்) அங்கை...காயாதாகக் கண்டு - அங்கையிலே நெருப்பினை ஏந்திய இறைவருக்காக அடியேன் பயிரிட்டு உளவாக்கிய பனைகள் எல்லாம் மேகமண்டலம் பொருந்த நீண்டு வளர்ந்தும் ஆண்பனைகளாகிக் காய்க்காதனவாதலைக் கண்டு; அமணர்...இழித்துரைத்தார் - அமணர்கள் "இங்கு நீவிர் வைத்து உண்டாக்கும் பனைகள் காய்ப்பதற்கு உபாயம் உண்டோ?" என்று மிகவும் எள்ளி நகைத்து இழிவுபடப் பேசுகின்றார்கள்; 'அருளவேண்டும்' எனப்புகல - தேவரீர் அவ்விழிவைப் போக்கப் பனைகள் காய்க்கும்படி அருள்புரிய வேண்டும் என்று சொல்ல; கூளஅ

2877. (இ - ள்) பரமனாதம்...பரிவெய்தி - இறைவரது திருத்தொண்டரது அடிமைத்திறத்தை நோக்கித் (பிள்ளையார்) திருவுள்ளத்தே இரக்கம் கொண்டு; விரவு...புக்கருளி - பொருந்திய பெருவிருப்பினோடு விரைந்து சென்று இறைவரது திருக்கோயிலிற் புகுந்தருளி; அரவு மதியும்...அடிவணங்கி - பாம்பினையும் சந்திரனையும் பகைதீரும்படி தலையிற்சூடிய இறைவரை அடிவீழ்ந்து வணங்கி; இரவுபோற்றி...எடுத்தருளி - திருவருளை இரந்து துதித்துப் 'பூத்தேர்ந் தாயன' என்னும் திருப்பதிகத்தினைப் பண்ணிசையினோற் பெருகும்படி பாடியருளத் தொடங்கி; கூளகூ

2878 (இ - ள்) விரும்பும்...குலவுதலால் - மேன்மை விரும்புகின்ற திருக்கடைக்காப்பிலே இறைவரது திருவருளினாலே "குரும்பைகளை ஆண்பனைகள் ஈனும்" என்னும் வாய்மையானது பொருந்தி விளங்குதலாலே; நெருங்கும்...ஆகியிட - நெருங்கிய அந்த ஆண்பனைகள் எல்லாம் நிறைந்த குலைகளையுடையனவாகிக் குரும்பை பொருந்தும் பெண்பனைகளாக மாறியிடவே, கண்டோர் எல்லாம் அதிசயித்தார் - கண்டவர்கள் எல்லாரும் அதிசயப்பட்டார்கள். கூ௮௦

இந்நான்கு பாட்டுக்களும் ஒருமுடிபுகொண் டுரைக்கநின்றன.

2875. (வி - ரை) தொழுது - முன்பாட்டிற் கூறியபடி கைதொழுது.

தொழுது...துதிசெய்து - வினையெச்சங்கள் வழிபாட்டின் பகுதிகளைத் தனித்தனி எடுத்துக்காட்டும் நயம் கண்டுகொள்க.

சொன்மாலைகளாற் றுதிசெய்து - இப்பதிகங்கள் கிடைத்தில.

அமர்வார் - விரும்பி வீற்றிருப்பவராகிய பிள்ளையார்.

அழுது - சமணர் இழித்துரைக்கும் சிவநிந்தையைக் கேட்கமாட்டாத அயர்த்தால் அழுது; ஆனந்தபாஷ்பம் என்று உரைப்பாருமுண்டு.

அமணர் திறத்து ஒன்று - அமணரது தீய தன்மையினால் நிகழ்ந்ததொரு செய்தி. திறத்து - திறத்தால் நிகழ்ந்த.

அறிவிப்பார் - அறிவிப்பாராகி - முற்றெச்சம். அறிவிப்பார் - புகல என மேல் வரும் பாட்டுடன் முடிக்க.

அதன் பேற்று வைகி வணங்கி — என்பதும் பாடம். 977

2876. (வி - ரை) அங்கை அனல் ஏற்றவர் - சிவபெருமான். அங்கை - அகங்கை என்பது அங்கை என வந்தது. "அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடுமே" (நன்னூல்); அழகிய கை என்றலுமாம். "அழலாட வங்கை சிவந்ததோ? வங்கை, யழகா லழல்சிவந்த வாறோ? - கழலாடப், பேயாடு கானிற் பிறங்க வனலேந்தி, நீயாடு வாயிதனைச் செப்பு" (அற். அந் - 98) என்ற அம்மை திருவாக்கு ஈண்டுச் சிந்திக்கத் தக்கது. அனலைக் கையில் ஏற்றுக்கொண்டிருப்பவ ராதலின் அழல் போன்ற அமணரது சுடுசொல்லினையும் பொறுக்கின்றார் என்ற குறிப்புப்பட இவ்வாற்றாற் கூறினார்.

ஆக்கும் பணிகள் ஆனவெல்லாம் - ஆக்குதல் - பயிரிட்டு வளர்த்து உண்டாக்குதல். ஆன - முன்னெதது உரிய வடதாயினவை.

காயாதாகக் கண்டு - காய்க்குந்தன்மை யில்லையாதலைக் கண்டு; எல்லாம் காயாதாக - பால்பகா அஃறிணையாதலின் ஒருமையினை கொண்டது. காயாவாக - என்ற பாடமுமுண்டு.

மங்குலுற நீண்டு - வளர்ச்சி பெற்று என்பது காய்க்கும் பருவத்துக்கு மேற்பட்ட நிலை குறித்து நின்றது.

'இங்கு...உண்டோ' என்று - இஃது அமணர் கூறிய இகழ்ச்சி மொழி. நீர் இட்டு ஆக்குவன - நீர் மிக முயன்று உண்டாக்கிய இவை. நீர் - முன்னிலைப்படுத்திக் கூறியபடி கூறியது.

நீரிட்டும் - தண்ணீர் வார்த்தியும் என்று கூறிய இகழ்வுக் குறிப்புமாம் "இட்ட ஞான்றிட்டதே" என்றபடி தண்ணீர் வார்த்திக் காக்கவேண்டாத பணிகளை அவ்வாறு காத்தும் என்று இழிவுக் குறிப்புமாம். அடைவு-பொருத்தம்; உபாயம், ஏது.

பொங்கு நகைசெய்து - மிகவும் எள்ளி நகைத்து.

அருள வேண்டும் - இவ் விழிமொழி தீருமபடி பணிகள் காய்க்குமாறு அருள்புரிய வேண்டும். 978

2877. (வி - ரை) பாமனூர்தம் திருத்தொண்டர் பண்புநோக்கிப் பரிவெய்தி - பண்பு - அடிமைத்திறத்தின் உயர்வு, நோக்குதல் - கருத்துட் கொள்ளுதல்; பரிவு - இரக்கம்; பண்பாவன - இறைவன் பூசைக்காக உரிய நிலையான பொருள் சேர்க்க எண்ணிய பணிகளை ஆக்குதலும், காத்தலும்; அவை காயாத தன்மை கண்டு வருந்துதலும்; புறச்சமயிகள் சிவத் திருத்தொண்டினை இகழ்ந்து கூறுவனவற்றைப் பொறுமையும்; ஆசாரியர் அருளினால் அவ்விகழ்ச்சி நீங்கிச் சைவத்திறம் போற்றப்படுதலைக் காணும் ஆவலும் முதலாயின; "பனை விதைத்தவன் பனைஎடான்" என்ற பழமொழிப்படி பனை பயன்றர நீண்டகாலம் செல்லுமாதலின் பனை விதைத்தவர் அதன் பயனைப் பெறுமவரை உயிர் வாழ்ந்திருத்தல் அரிது. அவ்வாறன்றி இத்தொண்டர் இந் நீண்டகாலம் வாழ்ந்திருந்த சிறப்புடையார் என்பதும், அழுது வணங்கி அறிவித்தமையால் சைவத்திறம் விளக்குதலில் மிகவுறைப்புடையார் என்பதும் பெறப்பட்டமை காண்க.

விரவு காதலோடும் - காதல் - பெரிய அன்பரது மனவருத்தத்தை நீக்குதலேயன்றிச் சைவ உண்மை காட்டி விளக்கச் செய்வதிலும் கொண்ட பெருவிருப்பம். (2879 - 2880 பார்க்க.)

விரைந்து விமலர் கோயில் புக்கருளி - விரைவு காதல்மிகுதி குறித்தது.

அரவுமதியும் பகைதீர அணிந்தார் - பகையுடைய உயிர்ப்பொருளிரண்டினையும் பகை தீர்த்து உடன் வாழவைத்தார் என்ற தன்மையாற் கூறினர், இக்குறிப்புடன் பிள்ளையார் வணங்கினர் எனபதும், அவ்வாறே இனி விளையும் தன்மையால் இழித்துரைத்த அமணர் இகல் நீங்கி வாழ்வர் என்பதும் குறிப்பாலுணர்த்தற்கு. அன்றியும், "இதுவாகு மதுவல்ல வெனும்பிணக்க தின்றி, நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காண நிற்ப "தாகிய சைவத்தின் உயர்ந்த நிலையினையும் காட்டுவதும் குறிப்பு ; "ஏத்தா தாரிலை யெண்ணுங்கால்" என்ற பதிகக் குறிப்பும் காண்க. பகை தீர்த்தல் போல இங்குப் பனையில் ஆண் பெண் என்ற வேறுபாடு தீர எனபதும் குறிப்பு.

இரவு போற்றி - திருவருளை இரந்து வேண்டி ; "ஈவ தொன்றெமக் கில்லையே லதுவோ வுன தின்னருள்" (பிள். தேவா - திருவாவடுதுறை) என்ற கருத்தும் ஆண்டுரைத்தவையும் இங்கு நினைவுகூர்க. இவ்வாறன்றி இரவு போற்றி - இரவினிற் றுதித்து என்றுரைத்தனர் முன்னுரைகாரர். இத்திருவருணிகழ்ச்சி இரவினில் நிகழ்ந்தது என்று கொள்வர், குண்டையூர் நெனமலையைப் பூதங்கள் இரவிற் கவர்ந்து திருவாரூரில் சேர்த்தது போல. அருளவேண்டுமென்று வேண்டிய அன்பருக்கு "அருள் நல்குமே" (4-5-6-7) என்ற பதிகக் கருத்துக் காண்க.

இசையிற் பெருக - இசை - பதிகப் பண் குறித்தது ; இசை - இறைவரது புகழ் என்று கொண்டு புகழினுற் பெருக எடுத்து என்றலுமாம். பெருகுதலாவது பதிகம் அருளிய இவ்வொரு செயலினாலே அனபர் கருத்து முடித்துக் கொடுத்ததே யன்றிச் சைவத் திறம் பெருக நிகழ்ந்து அமணர்களும் அறிவுறுக்கப்பட்டதும் பனைகளுக்கும் முத்தியளித்தமையுமாம். இசை - பிள்ளையார் புகழ் என்றலுமாம். 979

2878. (வி - ரை) மேன்மை விரும்பும் என்க ; முன் இசையிற் பெருக (2877) என்றவிடத் துரைத்தவாறு வரும் மேன்மைகளை எல்லாம் விரும்பி யருளிவைத்த ; திருக்கடைக்காப்பில் பதிகப் பயன் கூறும் மரபு குறித்தது ; "சொல் விரும்புவார் வினை வீடே" என்ற பதிகம் காண்க.

விமலர் அருளாலே 'குரும்பை யாண்பனை யீனும்' என்னும் வாய்மை தலைவுதலால் - "குரும்பை யாணபனை யீனும்" என்பது பதிகம். அது தவறுதலில்லாத - பொய்யாத - வாய்மை எனப்பட்டது ; அவ் வாய்மைத் தன்மை அருளாலே அத்திருவாக்கிற் குலவிய காரணத்தால் எனபதாம் ; "போதியோ என்னும் அன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதம்" (2986) என்பதும, "மெய்த்தனமை விளங்கு திருச் செவி" (2376) என்றதும் பிறவும் பார்க்க.

குரும்பை யாண்பனை ஈனும் என்னும் - "குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்" என்பது பதிகம் ; ஆணபனை குரும்பைக்குலை யீன் ஓத்தூர் என்றதாம்.

ஏற்றுப் பனை - ஆண்பனை ; பெண்ணை - பெண்பனை.

ஏற்றுப் பனைகள் குரும்பை யரும்பு பெண்ணையாகியிட-தாவரங்களிலும் வரும் மலட்டுத் தன்மை முதலிய குறைபாடுகளை மாற்றுதற்கு மருத்துவ முறைகளை உழவு நூலார் சிலர் காண்கின்றார்கள் ; ஆயின இங்கு அச்செயல் திருவருட் பதிகத்தினாலே உடனே பயன் விளைத்தது அற்புதமென்க; அதிசயித்தார் - அதிசயத்தைக் கட்புலப்படக் கண்டதுவேயன்றி அதன் காரணம் திருப்பதிகமே என்பதனையும் கண்டனர். 980

## திருவோத்தூர்

திருச்சிற்றம்பலம்

பண் - பழந்தக்க ராகம் - 1-ம் திருமுறை

பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி
யேத்தா தாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர் மேய வொளிமழு வாளங்கைக்
கூத்தீ ரும்ம குணங்களே. (1)

தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதா வென்று நலம்புகழ்ந்
தோதா தாருள ரோதிரு வோத்தூர்
ஆதீ ரேயரு ணல்குமே. (7)

குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுண் ஞானசம் பந்தன்சொல்
விரும்பு வார்வினை வீடே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—"அடியேன் இறைவர்க்காக ஆக்கும் பனைகளானவெல்லாம் காயாதாகக் கண்டு அமணர் இழித்துரைத்தார்; "அருள வேண்டும்" என்று இரந்த அடியவர்க்காக அவர் கருத்து முற்றும்படி "அருள் நல்குமே" என இரந்து போற்றியது (2878 - 2879).

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **பூத்தேர்ந்தாயன கொண்டு** - உரிய நல்ல பூக்களைத் தேர்ந்து காலமிடங்களுக்கும் விதிக்கும் பொருந்தும்படி பெறலாயினவற்றைக் கொண்டு; **ஏத்தாதாரில்லை என்னுங்கால்** - அவ்வாறு பக்குவத்துக்கேற்றவாறு திருவடியைப் போற்றாதவர்களில்லை என்னும் இவ்வுண்மை சிந்தித்து ஆராய்வோர்க்குப் புலப்படும். மேல் "ஓதாதாருளரோ?" (7) என்றதும் இக்கருத்து. ஏத்தாதாரில்லை ஆதலின் அது கண்டு நானும் ஏத்துகின்றேன் என்பது குறிப்பு. "செஞ்சாம உமக்கே இடமாக வைத்தேன் நினையா தொருபோது மிருந்தறியேன்" (திருவதிகை - 2) என்ற அரசுகளது திருவாக்கும் அத்திருப்பாட்டுக் குறிப்பும் (III-பக் அஎ) பார்க்க. "நின்வயின் மறைந்தோ யல்லை; யுன்னை, மாயாய மனனினை நீயே வாழி, ......மனணியுமிடையொன்றின மறைந்தோ யல்லை, யிடையிட்டு நின்னை மறைப்ப தியாதுமில்லை, மறைப்பினு மதுவு நீயே யாகி நிறைந்தோ யல்லையே, .....மனமருண்டு, புன்மையி னீன்றப் புலன்வழி படரினும், நின்வயி னின்னுமே யாகுத னின்வயி, னின்னைக்கும் நினைக்கப் பெறுதலன்றோ தான்று, நீயே யருளுதல் வேண்டும்" (கோயிற்றிருமணிமாலை - 32) என்ற பட்டினத்தடிகளது திருவாக்கு ஈண்டுச் சிந்திக்கத் தக்கது; **உம்ம குணங்களே** - இவ்வாறு யாவையும் உட்பட நிற்றல் உம்முடைய அருட்டன்மைகளாம்; குணங்களை ஏத்தாதாரில்லை என்க; **கூத்தீர்** - ஐந்தொழி லருட்கூத்தினை உடையீர்;—(2) **இடையீர் போக இளமுலை** - "ஈங்கிடை போகா இளமுலை மாதர்" (திருவா - போற்றித் திருவகவல் - 84); **ஓர் புடை** - ஒருபாகம்; **இளமுலையாள்** - இத்தலத்தின் அம்மை பெயர்;—(3) **உள்வேர்...கொள்வீர்** - வேர் நிலத்தினுள்ளே சென்று தண்ணீர் தாய் வேண்டும் பொருள் கொள்வதுபோல உண்ணின்று அறிவீர்; **உள்வேர்** - உட்

புழுக்கம் - உள்வேர்வை என்று பலவாறு உரைப்பாருமுண்டு ;—(4) தோட்டீர் - தோடுடையீர் ; அடியார்...நல்குமே - பதிகக்குறிப்பு ; மேல் 5-6-7 பாட்டுக்களிலும் இவ்வாறே காண்க ;—(6) மிக்கார் - அன்பினால் மிகுந்தவர் ; உட்குதல் - நாணுதல்; அஞ்சுதல் என்றலுமாம் ; நக்கீர் - நகக உருவினர் ;—(7) ஓதாதர்நுளரோ - "எத்தா தாரிலை" (1) என்ற கருதது ; ஆதீர் - ஆதியீர் ; முதல்வர். ஆதல் - வெளிப்படுதல் என்று கொண்டு வெளிப்பட வீற்றிருப்பீர் என்றலுமாம் ;—(8) என்றன் இம்மலை? என்ற - இம்மலை இதற்கு என்னைத் தடை செய்வதுதான் என்னை ? இதனைப் பெயர்ப்பன் என்று மிக்கெழுந்த ; "ஒன்றார்...ஊத்தூர்" என்றார் - மதில் எய்தவனது பதி இஃது என்று அறிப்பவர் ; ஒன்றார் - பகைவர் ;—(9) ஒன்றாய் எரியாய் மிக (அது கண்டு) உமை தேடியே திசையெலாம் சென்றார் போலும ; ஆனால் நீர் திருவோத்தூர் நின்றீரே ; வழிபட்டு இதனை அறிந்திலா என்பது ;—(10) காரமண்......சொல்லவை தேறன்மின் - அமணரது இழித்துரைகளைப் பொருளெனக் கொள்ளாதீர் என்ற இச் சரித வரலாற்றுக் குறிப்பும் காண்க ; கழல் சேர்மின் - அவன் முப்புரமும் ஓரம்பால் நின்றபடியே எய்தவனாதலின் அமணர்களது இழிப்புரையை இமைப்பளவில் புகழுரை யாக மாற்றுவன் என்பது ; அடுத்த மேல்வரும் பாட்டின் வாய்மையால் பனைகள் குரும்பை யீனக் கண்டு முன் இகழ்ந்த அமணர் புகழ்வதாவதும் கருதுக ;—(11) குரும்பை யாண்பனை யீன்குலை - இது இப்பதிகக் குறிப்புப்பட நின்ற வாய்மை ; இஃது அருளால் வந்து குலாவுதலால் "என துரை தனதுரையாக" (பிள் - இலம்பை யங் கோட்டூர்) என்றபடி இறைவரது ஆணையேயாக உடன் அவ்வாறே பலனளித்தது என்க. வீடே - நீங்குதலேயாம் ; வீடு - விடு-பகுதி ; விடுதல் - நீங்குதல்.

குறிப்பு :—பதிகம் முழுமையும் அடியார் பரவும் பண்பும் அவர்க்கு இறைவர் அருளும் பண்புமாக இச்சரித வரலாற்றுக் குறிப்புடன் விளங்குதலும், அருளை யிரத்தலும், சரித வரலாறு புலப்படுத்தலுமாய் மிளிர்தல் கண்டுகொள்க பதிகப் பாட்டுக்கள் செய்யுள் யாப்பினில் அடிகள் அளவொத்திராமல் நான்கு சீரும் மூன்று சீருமாய் மாறி வருதல் இறைவர் செய்யும் அருளும் உயிர்கள்மாட்டு அவ்வவர் பக்குவத்திறகேற்ப நிறற் குறிப்புத் தருதலும் காண்க. இன்னும் இத்திருப்பதிகம் பற்பல அருமைப்பாடுகளுடன் விளங்குதல் அறிந்தார்பாற் கேட்டுணர்க. மேல் 2874 - 2875-ல் கூறிய இறைவரியல் பற்றிய தன்மைகளின் உள்ளுறையும் கருதுக.

தலவிசேடம் :—திருவோத்தூர் - தொண்டைநாட்டில் 8-வது பதி ; ஒத்து - வேதம் ; ஓதப்பட்டு வழிவழி வருவது. தேவர்களுக்கும் இறைவர் வேதங்களை ஓதுவித்தருளின பதி என்றும், வேதங்களுக்கு இறைவர் திருக்கூத்துக் காட்சியளித்த பதி என்றும் இப்பதியின் பெயர் போந்த காரணம் கூறுவர். "தேவர் முனிவர்க் கோத்தளித்தார் திருவோத்தூர்" (2872) என்ற புராணமும், "ஒத்தூர் மேய வொளிமழுவாளங்கைக் கூத்தீர்" என்ற பதிகமும் இக்குறிப்புக்கள் தருவன. இறைவர்க்கு இத்தலத்தில் பனம்பழம் நிவேதனமாம். அவர் பொருட்டு ஒரு தொண்டர் ஆக்கின பனைகள் எல்லாம் ஆண்பனையாய்க் காயாதாகக் கண்ட அமணர் இழித்துரைக்க, அதனை அன்பர் ஆளுடைய பிள்ளையாருக்கு விண்ணப்பிக்க, அவர் இறைவரை வேண்டி அவற்றைப் பெண்பனை யாக்கியமையும் பிள்ளையாரது திருவாக்கிற் பிறந்த புண்ணியப் பேற்றினாலே காலாந்தரத்தில் அந்தப் பனைகள் முத்தி பெற்றமையும் ஆகிய வரலாறுகள் மேற்புராணத்துட் காண்க. இவ்வரலாற்றுக் குறியாக இத்திருக் கோயிலினுள் பனை பிரதிட்டிக்கப்பட்டுப் பூசிக்கப் பெறுகின்றது. சுவாமி - வேத

நாதர் ; அம்மை - இளமுலை நாயகி ; அம்மை பெயர் பதிகத்துக் (2) காண்க ; தீர்த்தம் - சேயாறு ; பதிகம் 1

இது காஞ்சிபுரத்துக்குத் தென்மேற்கே கற்சாலைவழி 18 நாழிகையளவில் அடையத் தக்கது ; மோட்டார்பஸ் வசதியுண்டு. அச்சிறுபாக்கம் நிலையத்தினின்றும் வடமேற்கே மட்சாலை வழி 18 நாழிகையளவிலும், திருமாகறலினின்றும் தென்மேற்கே மட்சாலைவழி 15 நாழிகையளவிலும் அடையலாம்.

*2879. சீரின் மன்னுந் திருக்கடைக்காப் பேற்றிச், சிவனா ரருள்பெற்றுப்
பாரி னீடு மாண்பனைமுன் காய்த்துப் பழுக்கும் பண்பினால்
சேரு மன்பர் தங்கருத்து நேரே முடித்துக் கொடுத்தருளி
ஆரு முவகைத் திருத்தொண்டர் போற்ற வங்க ணினிதமர்ந்தார்.

(இ - ள்) சீரின...ஏற்றி - சிறப்பினால் நிலைபெற்ற திருக்கடைக்காப்புச் சேர்த்துப் பதிகத்தினை நிறைவாக்கி ; சிவனார் கொடுத்தருளி - சிவபெருமானுடைய திருவருள் பெற்று உலகத்தில் நீடிய ஆண்பனைகள் முன்னே காய்த்துப் பழுக்கும் தன்மைவர விரும்பும் அன்பருடைய கருத்தினை நேர்பட முடித்துக் கொடுத்தருளி ; ஆரும்......அமர்ந்தார் - நிறைந்த மகிழ்ச்சியையுடைய திருத்தொண்டர் துதிக்க அத் திருக்களின்கண் இனிதாக விரும்பி வீற்றிருந்தருளினார்.

(வி - ரை) சீரின் மன்னும் திருக்கடைக்காப்பேற்றி - சீரின் மன்னுதலாவது விமலரருளாலே குரும்பை ஆண்பனையீன்குலை ஓத்தூர் என்னும் வாய்மை குலவுதல்; திருக்கடைக்காப்பு ஏற்றுதல் - பாட்டு நிரப்பிப் பதிக நிறைவாக்குதல். வாய்மை குலாவ அருளிய திருக்கடைக்காப்பு ஏற்றுவதன் முன்னே அதன் பயனாக ஏற்றுப் பனைகள் எல்லாம் குரும்பை அரும்பு பெண்ணையாகியிட எல்லாரும் கண்டு அதிசயித்தனர் என்று விரைந்து பயன் தந்தருளிய சிறப்புக் குறிப்பு.

சிவனார் அருள் பெற்று முடித்துக் கொடுத்தருளி என்க.

பண்பினால் - பண்பு வரச் செய்தமையாலே ; நேரும் - அதனை விரும்பும்.

முன் காய்த்துப் பழுக்கும் பண்பினால் - முன் - பதிகம் திருக்கடைக்காப்பு ஏற்றி நிறைவாக்கு முன் ; அத்தொண்டர்களின் முன்னே - கண் காண - என்றலுமாம். கால முறையால் முன் காய்த்துப் பின் பழுக்கும் என்ற குறிப்புமாம். முன்னர்க் குரும்பையே காணப்பட்டன ; ஆயின் அவை பின்னாக் காலத்தில் முதிர்வுபெற்றுக் காயாகிப் பின் பழுக்கும் என்ற தன்மை இன்றியமையாது நியதியாதலின் என்பதும் குறிப்பு. பழுக்கும் - தலைச்சிறப்பாகிய நிவேதனத்துக்குரிய தன்மையும் அதனை எண்ணி அன்பர் பனைகளை ஆக்கிய தன்மையும் குறிப்பு.

நேரும் அன்பர்தங் கருத்து நேரே முடித்து - நேர்தல் - விரும்புதல் ; நேரே - அவர் நேரிற் காண ; நேர்பட ; விரைவாக என்றலுமாம்.

ஆரும் உவகைத் திருத்தொண்டர் - பனைகளை ஆக்கி விண்ணப்பித்த அத் திருத்தொண்டர் ; பயன் கண்ட ஏனைத் திருத்தொண்டர்களுமாம் ; ஆரும் உவகை - கருத்து முற்றக் கண்டதனால் நிறையும் மகிழ்ச்சி.

பாரினீடும் - நீண்ட வயதுடைய ; புகழால் எக்காலும் இறவாமல் நீடிய என்ற குறிப்புமாம் ; 2881 பார்க்க.

மெய்ம்மைத் திருக்கடைக்காப்பு—பனைமுன்னம் - அப் பனைமுன்—என்பனவும் பாடங்கள்.

2880. தென்னாட் டமண்மா சறுத்தார்தஞ் செய்கை கண்டு திகைத்தமணர்
அந்நாட் டதனை விட்டகல்வார் சிலர்தங் கையிற் குண்டிகைகள்
"என்னு வனமற் றிவை" யென்று தகர்ப்பார்; "இறைவ னேறுயர்த்த
பொன்னார் மேனிப் புரிசடையா னன்றே!" யென்று போற்றினார்.

(இ - ள்) தென்னாட் டமண்மா சறுத்தார்தம்...அகல்வார் - தென்னாடாகிய பாண்டி நாட்டிலே அமணாகிய குற்றத்தை நீக்கிய பிள்ளையாரது இந்தச் செய்கையைக் கண்டு திகைப்படைந்து சமணர்கள் அந்நாட்டினை விட்டு நீங்கிப்போவார்களாகி; சிலர்...தகர்ப்பார் - சிலர் தமது கையில் ஏந்திய தமது சமயச்சார்பாகிய நீர்க்குண்டிகைகளை "இவை என்ன பயன் தருவன?" என்று உடைத்தெறிவார்களாகி; "இறைவன்...அன்றே" என்று போற்றினா - முழுமுதற் கடவுளாவார் இடபத்தை யுயர்த்தியவரும் பொன்போன்ற திருமேனியை உடையவரும் புரித்த சடையினையுடையவருமாகிய சிவபெருமானேயாவர்" என்று கூறித் துதித்தனர்.

(வி - ரை) செய்கை - வாக்கின் வாய்மையால் ஆண்பனைகளை உடனே பெண்பனைகளாக்கிய செய்கை. கண்டு - அன்பர்கள் முன்னே கண்டு போற்றினார்கள்; அது தெரிந்தபின் அமணரும் கண்டார்களாதலின் இவரது நிகழ்ச்சி பிற்கூறப்பட்டது. இவ்வாறன்றித் திருமயிலையில் நிகழவுள்ள அருட்செயலை நன்றியில் சமயத்திலுள்ளோரும் உடன் கண்ட வரலாறு பின்னாக் காணப்படும்.

திகைத்தல் - அச்சத்தால் செய்வதறியாது மயங்கி நிற்கும் மெய்ப்பாடு.

அந்நாட்டதனை - அவ்வூரை; விட்டகல்வார் - தென்னாட்டில் அமணர் கழுவேற வந்ததுபோல நேர்ந்துவிடுமோ என்றஞ்சி அவ்வூரை அகன்று நீங்குவார். நீங்குவார் - தகர்ப்பார் - போற்றினார் - என்க. நீங்குவார் பலர். அவருட் சிலர் தம் சமயத்தின் உண்மையற்ற பொய் நிலையினை உணர்ந்து தமது குண்டிகைகளைத் தகர்த்துச் சிவனைப் போற்றினார்; அவ்வாறு செய்யலாற்றாத பிறர் அகன்று நீங்கிப்போயினர். அகல்வாரும், தகர்ப்பாருமாயினர்; தகர்ப்பார் போற்றினார் என்க.

மற்று இவை என் ஆவன - மற்று - உணமைக்குப் புறம்பு என்பது குறிப்பு. என் ஆவன - என்ன பயன் தருவன; ஒருபயனுமற்றன என்பது.

இறைவன் - முழுமுதலவன்; அன்றே - தேற்றமும் பிரிநிலையுமாய் உறுதிப்பொருள் தந்து நின்றது. புரிசடையான் நன்றே - என்று பிரித்துரைப்பதுமாம்.

அமணுசறுத்தார்—என்பதும் பாடம். 982

2881. பிள்ளை யார்தந் திருவாக்கிற் பிறந்த லாலத் தாலமு,முன்
புள்ள பாசம் விட்டகல, வொழியாப் பிறவி தனையொழித்துக்
கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால்;
வள்ள லார்மற் றவரருளின் வாய்மை கூறின் வரம்பென்னும்? கூஅங

(இ - ள்) பிள்ளையார்தம்...அத்தாலமும் - பிள்ளையாரது மெய்த் திருவாக்கிலே சொல்லப்பட்டு வந்து பிறந்த காரணத்தாலே அந்தப் பனைகளும்; முன்புள்ள......அகல - பனையாய்ப் பிறப்பதற்குரித்தாய் முன்னே உள்ள வினை விட்டு நீங்க; ஒழியா...ஒழித்து - ஒழியாது தொடர்ந்து வருகின்ற பிறவிப் பிணி நீங்கப்பெற்று; கொள்ளும்...கழித்து - உடம்பு இருத்தற் கேதுவாகிய பிராரத்தவினை கொள்ளும் கால அளவு கழித்துப் பின்பு; சிவமே கூடின - சிவப் பேற்றை அடைந்தன; வள்ள

வள்ளலார்...என்னும்? - வள்ளலாராகிய பிள்ளையாருடைய அருளினது மெய்த்தன்மையினை எடுத்துக் கூறுதல் வரம்புட்படுமோ? (படாது).

(வி - ரை) திருவாக்கிற் பிறத்தலாவது திருவாக்கினால் அருளுடன் சொல்லப்படுதல்; ஆண்பனை குரும்பைக் குலையீன் என்ற அருளின் ஆணையே உபதேசமாய் வருதல்.

முன்புள்ள பாசம் விட்டகல - சஞ்சிதவினை நீங்கி; இஃது இனி வரும் பிறவிகளுக்கேதுவாய் நிற்பது. "பாரத்த பாசவையா விரும்புண்ட நீரெனப் பருகும் நிர்த்தன்" (திருவிளை. புரா - வாதவூ - உப - பட - 47); சஞ்சித வினை எரிசேர்ந்த வித்துப்போலச் சாம்பராகிவிடவும் மூலமலம வலிமையறவொழியவும், இனி வினையுள்ள பிறவிகள் இலலையாயின எனபார் "ஒழியாப் பிறவி தனையொழித்து" என்றார்.

கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்து - பிராரத்தவினை அனுபவித்தன்றிக் கழியாவாதலின் முகந்துகொண்ட வினை உள்ளளவும் உடம்பு நிற்கும் அவ்வெல்லை வரும் அளவு நீங்க எனபது; அவ்வாறு பிராரத்த வினை அனுபவித்துக் கழித்தற்கு ஆசாரியன் திருவாக்குத் துணை செய்தது. ஆண்பனைக் குலை குரும்பையீன என்ற ஆணையினால் அவ்வுடல் கொண்ட வினை அனுபவிக்கப்பட்டுக் கழிய அருளியமை காண்க.

சிவமே கூடின - சிவப்பேற்றை யடைந்தன. மேல்வரும் ஆகாமிய வினை ஏறாதபடி செய்தருளியதும் ஆணவம் வலியிழந்ததும் அத்திருவாக்கின் அருள் பதிந்தமையாலாகியது என்பதும் காண்க.

வள்ளலார் - தற்பயன் குறியாது வரம்பின்றி யருள் கொடுப்பவர் வள்ளலார் - இறைவர் என்றலுமாம்.

அவர்தனின் வாய்மை - கன்ம பலத்தினாலே ஓரறிவுயிராய்ப் பிறந்த தாவரங்களாகிய அத்தனை பனைமரங்களுக்கும் அருள் தீக்கை செய்து சன்மம புசிக்கச் செய்தும், ஆணவ மூலமலம் வலியறச் செய்தும, இறைவருக்குப் பழந் தருதலாகிய சிவபுண்ணியப்பேற்றைப் பெறச்செய்தும் காலாந்தரத்தில் இவ்வொரு பிறவியிலேயே சிவத்தைப் பெற அருளியது வாக்கினது அருளின் வாய்மையும் அவரது அருளின் வள்ளன்மையுமாம். உமாபதி சிவாசாரியார் முள்ளிச் செடிக்கும் பெற்றான் சாம்பானுக்கும் முத்தி கொடுத்தருளிய நிலைகள் ஈண்டுச் சிந்திக்கத் தக்கன. திருவாதவூரருக்கு இறைவர் உபதேசித்த வரலாறும் பொருளும் (திருவிளையாடற் புராணம் - திருவாதவூரர் புராணம்) ஈண்டுக் கருதத் தக்கன.

வரம்பு என்னும்? - அளவு என்னை? கூறும் வரம்பின்று என்றபடி. இவ்வரலாற்றினை மனங்கொண் டுணர்ந்தால் பின்னாத் திருமணத்தில் வந்தோர்களெல்லாம் கொள்ளைகொள்ள வீடுதவும் பிள்ளையாரது வள்ளன்மையின் நிலை எளிதில் விளங்கும் என்க.

பிறத்தலாலே தாலமும்—என்பதும் பாடம்.  983

2882. அங்க ணமரர் பெருமானைப் பணிந்து போந்தா டரவினுடன்
பொங்கு கங்கை முடிக்கணிந்தார் மகிழும் பதிகள் பலபோற்றி,
மங்கை பாக ரமர்ந்தருளும வயனமா கறலை வணங்கிப்போய்க்
கோங்கு மலர்நீர்க் குரங்கணின்முட் டத்தைச் சென்று குறுகினார். ௯௮௪

(இ - ள்) அங்கண...போந்து - அங்குத் தேவதேவராகிய இறைவரைப் பணிந்து சென்று; ஆடரவினுடன்...போற்றி - ஆடும் பாம்பினுடன் பொங்கியெழும் கங்கை

யினைத் திருமுடியில் அணிந்த இறைவர் மகிழ்ந்து வீற்றிருக்கும் பதிகள் பலவற்றையும் சென்று துதித்து ; மங்கை பாகர்...போய் - உமைபங்கராகிய இறைவர் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் வயல்கள் சூழ்ந்த திருமாகறலைப் போற்றிச் சென்று ; கொங்கு... ...குறுகினர் - மணம் பொருந்திய மலர்களையுடைய நீர் சூழ்ந்த திருக்குரங்கணின் முட்டத்தினருகு சென்று சார்ந்தருளினர்.

(வி - ரை) பதிகள் பல - இவை புரிசைநாட்டுப் புரிசை, திருவன்பார்த்தான் பனங்காட்டூர், விளிவலம் முதலாயின என்பது கருதப்படும்.

வயல்மாகறல் - "விங்கு விளைகழனி" (1), "மடைகொள் புனலோடு வயல்." (11) என்று பதிகத் தொடக்கத்தும் இறுதியிலும் வயலின் சிறப்புப்பற்றி வரும் குறிப்புப்படக் காட்டியவாறு ; இவ்வயலின் சிறப்பு இன்றும் காணவுள்ளது.

கொங்கு மலர் நீர் - (முட்டம் எனலும்) காக்கை வழிபட்டு மூக்கினுற் கீறிய காக்கைமடு கோயிலைச் சுற்றியுள்ள நீர்ச்சிறப்பும் தலவிசேடமும் குறிப்புப் பெற இவ்வாறுரூற் கூறினர். கொங்கு - வாசம் ; மணம். தலவிசேடம் பார்க்க. "கழுநீர் கொழுநீர்" என்ற பதிகமும் பார்க்க.

குறுகினர் - அணிமையிற் சென்றருளினர். 984

திருமாகறல்

திருச்சிற்றம்பலம் திருவிராகம் பண் - சாதாரி - 3-ம் திருமுறை

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள் பாடல்விளை யாடலரவம்
மங்குலொடு நீள்கொடிகண் மாடமலி நீடுபொழின் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர் திங்களணி செஞ்சடையினன்
செங்கணவிடை யண்ணலடி சேர்பவர்கள் தீவினைகள் தீருமுடனே. (1)

கடைகொணெடு மாடமிக வோங்குகமழ் வீதிமலி காழியவர்கோன்
அடையும்வகை யாற்பரவி யரனையடி கூடுசம் பந்தனுரையால்
மடைகொள்புன லோடுவயல் கூடுபொழில் மாகறலு ளானடியையே
யுடையதமிழ் பத்துமுணர் வாரவர்க டொல்வினைக ளொல்குமுடனே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—செஞ்சடையினன் - செங்கணவிடை யண்ணல் - என்பன முதலிய தன்மைகளாற் போற்றப்படும் மாகறலுளாராகிய இறைவரது அடிசேர்பவர்களது தீவினைகள் உடனே தீரும். பதிக முழுதும் வினைதீர்வுக் குறிப்புக் காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) விங்கு - மஞ்சள் என்பர ; மங்குலொடு நீள் - மேகம்வரை நீண்ட ; அரவம்மிகு கழனியும், கொடிகளமலி மாடமும் நீடுபொழிலும் உடைய மாகறல் என்க ;—(2) இலையின்மலி - இலைவடிவுள்ள ;—(3) துந்துமிகள் முதலாயின காலையொடு மாலையிலும் முழங்கி வழிபாடு செய்து என்பதாம் ; பாலை அன - பாலைப்போன்ற வெண்மை நிறமுடைய ;—(4) இங்கு - தங்கும் ; "இங்கு சுவையின்னமிர்தம" (சிந்தா) ;—(5) துஞ்சு நறு நீலம் - இரவில் இதழ் விரியாத நீலமலர் ; இருள் நீங்க - இரவுபோய் விடிய ; ஒளி தோன்றும் - பகலில் மலர்ந்து தனது நிறம் விளங்கும் ;—(6) படிமம் - உருவம் ; ஒல்க - சுருங்க ; —(7) வெய்ய வினை நெறிகள் செல - பிராரத்தம் அனுபவித்துக் கழிய ; வந்

துணையும் மேல் வினைகள் - ஆகாமியம்; கையகரி - கையினையுடைய யானை; கால்வரை - நடைமலை;—(8) மாசுபடு செய்கை - குற்றம் நீக்கும் செய்கை; படுதல் - அழிதல்;—(9) தாமரைகள் - முதலிய நீர்ப்பூக்கள் கூறப்பட்டன; இப்பதி சேயாற்றின் கரையில் நீர்செழிப்புடன் விளங்குதல் குறிக்கும்; வயலும் பொழிலும் கூறியதும் காண்க;—(10) கழல்களின் மேலுணர்வு - முடியின் மேலுணர்வு எனத் தனித்தனி கூட்டுக, உணர்வு - உணர்தலை; நாமுறவு - விரும்புதல், மாலும் அயனாலும் - காண முடியும் என நிரனிறை;—(11) அடையும் ..அடிகூடு சம்பந்தன் - பிள்ளையாரது திருத்தொண்டின் திறம்; பிள்ளையாரை முருகப்பெருமானவதாரம் என்போர் இதனைக் குறிக்கொள்வாராக; அடியையே உடைய தமிழ் - அடிசேர்பவர்கள்; அடியை ஏத்த; அடியையே ஏத்தி; அடியாரை; அடிசேர்பவரை என்பனவாகத் திருவடித் தொண்டே பற்றி வரும் பதிகக் குறிப்பும் கருத்துமாம். சுவாமி பெயரும் காண்க.

தலவிசேடம்:—திருமாகறல் - தொண்டைநாட்டின் 7-வது பதி. இந்திரன் வழிபட்ட தலம்; சிவலிங்கத் திருமேனி உடும்பின் வண்ணமாகிய சுயம்பு மூர்த்தி; இராசேந்திர சோழனுக்கு இறைவர் பொன்னுடும்பாகக் காட்சி கொடுத்து, அவன் துரத்தியபோது ஓடிப் புற்றில் ஒளித்து வெளிப்பட்டனர் என்பது வரலாறு. மகப்பேறு வேண்டுவோர் அங்கப் பிரதட்சணம் செய்வது தலவிசேடம். சுவாமி - அடைக்கலங்காத்த நாதர்; அகத்தீசுரர். அம்மை - புவன நாயகி, விநாயகர் - பொய்யா விநாயகர்; தீர்த்தம் - சேயாறு - அக்கினி தீர்த்தம். பதிகம் 1.

இது காஞ்சிபுரத்திலிருந்து தென்கிழக்கில் கற்சாலை வழி 10 நாழிகையளவில் சேயாற்றின் வடகரையில் உள்ளது. வழியில் வேகவதி யாற்றையும், பாலாற்றையும் கடக்க வேண்டும்; மோட்டார்பஸ் வசதி உண்டு. குரங்கணில்முட்டத்தினின்றும் தென்கிழக்கில் மட்சாலை வழி 6 நாழிகையளவிலும் அடையத்தக்கது.

2883. ஆதி முதல்வர் குரங்கணின்முட்டத்தை யணைந்து பணிந்தேத்தி,
நீதி வாழுந் திருத்தொண்டர் போற்ற நிகரில் சண்பையினில்
வேத மோடு சைவநெறி விளங்க வந்த கவுணியனார்
மாதோர் பாகர் மன்னு மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார் ௬௯

(இ-ள்) ஆதிமுதல்வர் ஏத்தி - ஆதிமுதல்வராகிய இறைவரது திருக்குரங்கணின் முட்டத்தைச் சேர்ந்து வணங்கித் துதித்து; நீதி ..போற்ற - சைவ நீதிநெறியினில் வழுவாத ஒழுக்கமுடைய திருத்தொண்டர்கள் போற்றச்சென்று; நிகரில .. ...கவுணியனார் - ஒப்பற்ற சீகாழிப்பதியிலே வேதநெறியுடனே சைவநெறி விளங்கும்படி திருவவதாரம் செய்த கவுணியனாராகிய பிள்ளையார், மாதோர் பாகர் ..அணைந்தார் - அம்மைபாகமுடைய ஏகம்பவாணர் நிலைபெற எழுந்தருளியுள்ள மதில் சூழ்ந்த காஞ்சிப் பதியின் பக்கத்தே அணைந்தருளினார்.

(வி-ரை) அணைந்து பணிந்து ஏத்தி - பதியின் அருகே அணைந்தமை இப்பாட்டிற் கூறிய ஆசிரியர், பதியினுள் புகுந்து திருக்கோயிலை அணைந்தமையும் அங்கு இறைவரை வணங்கித் துதித்தமையும் மேல்வரும் பாட்டுக்களிற் கூறுகின்றார்;

நீதி வாழ்தலாவது - சைவ விதியாகிய ஒழுக்கத்தினின்றும் பிறழாது வாழ்தல்.

போற்ற - போற்ற அங்குநின்றும் அகன்று சென்று; போற்ற - வந்த என்று கூட்டி முடித்தலுமொன்று.

**வேதமோடு சைவநெறி விளங்க வந்த** - "*வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க*" (1899) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

**மாதொர்பாகர் தாம் மன்னும்** - காஞ்சியாகிய இப்பதியில் அம்மை பூசித்துத் தழுவி வரம் பெற்ற வரலாறுகக் குறிப்புப்படக் கூறியவாறு. "*தழுவ வெளிப்பட்ட கள்ளக் கம்பனை*" (நம்பி. தேவா); "*தழுவிக் கொண்டனள்*" (1140) முதலியவை காண்க.

**மதில்சூழ் காஞ்சி** - முத்தி தருவனவாகிய ஏழு பெரும்பதிகளுள் ஒன்றாதலும், சோழ மன்னர்களின் தலைநகராதலும் குறிப்பு. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம் பார்க்க. "*தெய்வப் பதியென்று வையம் முழுதும் தொழுதேத்தும் மதில்சூழ் காஞ்சி*" (1581) என்றது காண்க.

**நீதி வழுவா**—என்பதும் பாடம். 985

## திருக்குரங்கணின் முட்டம்

*திருச்சிற்றம்பலம்* பண் - தக்கராகம் - 1-ம் திருமுறை

*விழுநீர் மழுவாட் படையண்ணல் விளங்கும்*
*கழுநீர் குவளை மலரக் கயல்பாயும்*
*கொழுநீர் வயல்சூழ்ந்த குரங்கணின் முட்டந்*
*தொழுநீர் மையர்தீ துறுதுன்ப மிலரே.* (1)

*கல்லார் மதிற்காழியுண் ஞானசம் பந்தன்*
*கொல்லார் மழுவேந்தி குரங்கணின் முட்டஞ்*
*சொல்லார் தமிழ்மாலை செவிக்கினி தாக*
*வல்லார்க் கெளிதாம் பிறவாவகை வீடே.* (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு** :—(1) **விழுநீர் மழுவாட் படை** - **விழுநீர்** - ஆகாயத்தினின்றும் இறைவரது சடையிற் பொருந்திச் சிறிதாக விழும் கங்கை. நீரும் மழுவும் வாட்படையும் உடைய; **விழுநீர்** - விழுத்தும் எனப் பிறவினையாகக் கொண்டும் **நீர்** - நீர்மை என்று கொண்டும் அழித்தற் றொழிற்றன்மையுடைய மழு என்றலுமாம்; படைகளா னன்றி நினைப்பினமாத்திரையானே (அழிவு) வீழத்தரும் தொழிலில் நிகழ்வதாம் என்ற குறிப்புப்பட **விழும்** என்றார் என்றலுமாம்; "*நினையாதார் புரமெரிய நினைந்த*", "*சூலமும் தண்டுஞ் சுமந்தாண்டு*" (ஏவப்பெருமல சுமந்தது) (தேவா); "**கழுநீர்... ...கொழுநீர்**" - "*கொங்குமலர் நீர்*" (2882) என்று ஆசிரியர் இதனை எடுத்துக் காட்டியருளினர்; 2 - 3-வது பாட்டுக்களும் பார்க்க; **தீதுறு** - தீமையால் வரும்; ஊழால் வருவனவும் துன்பஞ் செய்யாது உடனூழாய்க் கழியப் பெறுவர் என்பது;—(2) **கடை** - இடை - அயலே; அருகே; ஏழனுருபு; **மென்றுளத் தோங்கிய... ...புனல்** - இது கோயிலைச் சுற்றியுள்ள காக்கைமடுவின் குறிப்பு; **மென் - துளம்** - மெல்லிய சிறிய பொய்கை; **குடையர்** - குடைதல் - நீராடல் - பொருந்திய;—(3) **ஏலம்** - வாசனைப் பொதுமை; கொன்றை முதலிய மலர்களின் மணம் குறித்தது; ஒரு பாகம் சடையினுடன் விரவிய அம்மையாரது கூந்தலின் மலர்ச்சாந்தினது மணம் என்றலுமாம்;—(4) **வாடாவிரி** - வாடுதலின்றி எப்போதும் விரிந்துள்ள; **கொன்றையான்** - என்க. **நலபாலன...செய்த** - நன்மையான பக்குவம் நோக்கித் துன்புற

கூடாதபடி - சேராதபடி - செய்த அம்மானது; கூடாதன - இனி மலச்சார்வு கூடா வகைகள். ஆடா - ஆடுதல் - திளைத்துத் தொழுதல் என்ற பொருளில் வந்தது. "கைதொழு தாடா வருவேன" (தேவா - ஐயாறு - அரசுகள்);—(5) இறை - முன்கை; "எல்வளை யிறையூருமமே" (கலி - 7); தலத்தின் அம்மை பெயர்க் குறிப்பு. கீறிய - தோல் உரித்த; துறையார் - குறைவுடன் வந்தடைந்த;—(6) நினைந்தே - நினைந்ததன் பயனாலே; நினைந்தே - ஒழிந்தோம் என்று கூட்டுக; பலவும் பயனுள்ளன - பதமுத்திகளும் - தேவபோகம் முதலியனவும் பயனைக்கொண்ட செயல்கள்; பற்றும் - மலச் சார்புகளால் வருவன; கலவம் - தோகை; கலாபம் என்பர் வடவர்; இது ஆண்மயிலுக் குரியது என்றது குறிக்கப் பேடையோடு என்பப் பேடைக்கு அடைமொழியின்றிக் கூறிய நயம் காண்க, நிலவும் - நீங்காது நிலைபெற இடங்கொண்டு வீற்றிருக்கும்,—(7) மாடார் - பொன் போன்ற, மாடு - பொன்; ஆர் - உவமவுருபு. கொன்றை - இறைவர் பக்கமும், தோடார் குழை - அம்மைகலந்த பக்கமும் குறித்தன; 4-வது பாட்டும் பார்க்க, "தோடுடையா னொருகாதிற் றூய குழை தாழ" (தேவா), கூடார் - பகைவர்; ஆடாரரவம் - ஆடும் தன்மையுடைய அரவு; அமர்வான் எமது இறைவன் எனக; எமது இறைவன் என்பது இசையெச்சம்;—(8) உய்யா வகை - தப்பாத வகையால்; கோய் - அரும்புகள், காண்டல் - முளைத்தல்; அடாத்தல்;—(9) அசைந்து - இளைத்து,—(10) சூழ - கற்றையாகிய,—(11) கல்லார் - கற்களாலியன்ற, கோல் - "விழுசீர்" (1), ஏந்தி - ஏந்தியவரது; ஏந்தி - பெயர்.

தலவிசேடம் :—திருக்குரங்கணின்முட்டம் - தொண்டைநாட்டில் 6-வது பதி. குரங்கும் (வாலி) அணிலும் முட்டமும் (காகம்) வழிபட்ட பதி என்பது தலப்பெயர்க் காரணம். வாலி பூசித்தமையால் சுவாமி வாலீசுவரர் எனப் பெயர்பெறுதல் காண்க. கோயிலைச் சுற்றியுள்ள பொய்கை காக்கை மூக்கினுற் கீறியுண்டாக்கிய காரணத்தால் காக்கை மடு எனப் பெயர் வழங்குதல் காக்கை பூசித்ததைக் காட்டும் அறிகுறியாம், இம்மூன்றினுருவங்களும் கோயில்வாயிலில் தீட்டித் தாபித்து வழிபடப்பட்டு வருகின்றன; பூசித்த பிராணிகளின் பேரால் அவ்வத் தலங்கள் வழங்கப்படுதலைச் சிகாளத்தி - திருவானைக்கா முதலிய தலப் பெயர்களாலறிக. சுவாமி - வாலீசுவரர்; அம்மை - இறையார்வளையம்மை; அம்மை பெயர் பதிகம் 5-வது பாட்டிற் காண்க.

இது காஞ்சிபுரத்தினின்றும் தெற்கில் மட்சாலை வழி 6 நாழிகையளவில் அடையத்தக்கது.

வேறு

2884. நீடு காஞ்சி வாணரு நிலவு மெய்ம்மை யன்பரும்
மாடு சண்பை வள்ளலார் வந்த ணைந்த வொண்மையால்
கூடு கின்ற வின்பநேர் குலவு வீதி கோலினார்
காடு கொண்ட பூகம் வாழை காமர் தோர ணங்களால். ௨௮௮௪

(இ - ள்) நீடு...அன்பரும் - பெருமையால் நீடிய காஞ்சிபுர நகரத்தில் வாழும் மாந்தர்களும் மெய்ம்மைநெறியினிலைபெற்ற திருத்தொண்டர்களும், மாடு...இன்பம் - நகரின் அணிமையில் சீகாழி வள்ளலாராகிய பிள்ளையார் வந்து அணைந்த மகிழ்ச்சியினாலே பொருந்திய இன்பம் காரணமாக, காடுகொண்ட...தோரணங்களால் - காடுபோலச்

செறிந்த கமுகுகளும் வாழைகளும் அழகிய தோரணங்களும் ஆகிய இவற்றாலே ; நேர்குலாவு...கோலினார் - நேராக விளங்கிய வீதிகளை அலங்கரித்தனர்.

(வி - ரை) நீடுகாஞ்சி - " என்றுமுள்ளது காஞ்சி " (1130) என்பது முதலிய சிறப்புக்களை இங்கு நினைவுகூர்க.

காஞ்சி வாணர் - காஞ்சியில் வாழும் மாந்தர்கள் ; இவர்கள் நகர மாந்தர் ; இவர்கள் வேறாகவும் தொண்டர்கள் வேறாகவும் கணிக்கப்படுதல் மரபு. மெய்ம்மையன்பரும் என்று பின்னர்க் கூறுதல் காண்க ; 1583 - 1555—2008 முதலியவையும் மேல் வரும் பாட்டுக்களும் பார்க்க.

மெய்ம்மை நிலவும் - என்க ; மெய்ம்மை - மெய்ந்நெறி குறித்தது ; மெய்ம்மை - இறைவரது கூத்தாம் தன்மை ; சிவநெறி மாடு - நகரப்பக்கம் ; மாடு-ஞானச் செல்வமாகிய என்ற குறிப்புமாம் ; ஓகை - உவகை ; இன்பம் - இன்பத்தால் ; கோலுதல் - வரிசைப்பட அலங்கரித்தல் ; காடு - மிகுதி குறித்தது; தோரண முதலியவற்றாற் கோலினார் என்க.

குறிப்பு :—அன்பர்களின் ஆர்வமிகுதி குறிக்க இதுவரை கூறிவந்த யாப்பினை மாற்றி, ஏற்ற சந்தத்தில் அமைத்துத் தொடங்கும் கவிநலம் கருதுக. 986

2885. கோடிநிரைத்த வீதியிற் கோலவேதி கைப்புறங்
கடிகொண்மாலை மொய்த்தபந்தர் கந்தநீர்த தசும்புடன்
மடிவில்பொன் விளக்கெடுத்து மாதர்மைந்தர் மல்குவார்
படிவிளக்கு மன்பரும் பரந்தபண்பி லீண்டுவார். ௬௮௭

2886. கோதைமாத ராடலும் குலாவு தொண்டர் பாடலும்
வேதகீத நாதமும் மிக்கெழுந்து விம்மவே
காத லீடு காஞ்சிவாணர் கம்பலைத்தெ ழுந்துபோய்
மூதெ யிற்பு றத்துசென் றணைந்து முன்வ ணங்கினார். ௬௮௮

2885. (இ - ள்) கொடிநிரைத்த...புறம் - கொடிகளை வரிசைபெறக் கட்டிய வீதியில் அழகிய திண்ணையின் பக்கத்தே ; கடிகொள்...விளக்கெடுத்து - மணமுடைய மலர்மாலைகளை நெருங்கிக் கட்டிய பந்தரில் வாசனைநீர் நிறைந்த நிறைகுடங்களுடன் கெடுதலில்லாத பொன் விளக்குகளை ஏந்திக்கொண்டு, மாதர் மைந்தர் மல்குவார் - பெண்களும் ஆண்மக்களும் நிறைந்து கூடுவார்களும், படிவிளக்கும்...ஈண்டுவார் - பூமி விளக்கம் செய்யும் அன்பர்களும் பரவிய தன்மையில் வந்து நெருங்குவார்களுமாகி ; ௬௮௭

2886. (இ - ள்) கோதை மாதர் ..விம்மவே - மாலையணிந்த பெண்களுடைய ஆடலோசையும், குலாவும் தொண்டர்களது பாடலொலியும், வேதகீதங்களின் நாதமும் கூடி மிக மேலெழுந்து கிளர்ச்சி பெற, காதலீடு...போய் - பெருவிருப்பினாலே மிக்க காஞ்சி வாழும் மாந்தர்கள் ஆரவாரித்து ஒலிசெய்து எழுந்து சென்று ; மூதெயில்...வணங்கினார் - பழமையாகிய மதிலின் புறத்திலே சென்று கூடி முன்பு வணங்கினார்கள். ௬௮௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2885. (வி - ரை) நிரைத்தல் - வரிசைபெறக் கட்டி; பலவகைக் கொடிகளையும் பல பக்கங்களிலும் வரிசைபெற அமைத்தல் இந்நாளிலும் வழங்கும் அணிவகையாவதும் காண்க,

வேதிகை - திண்ணை. வேதிகைப்புறம் - பந்தர் - வீதியில் திண்ணைகளும் அதன் புறம்பு பந்தரும் அமைவன. இத்திண்ணைகள் சுதை முதலியன இட்டு அணி செய்வனவும் நிறைகுடம் முதலிய மங்கலப் பொருள்களை நிரைபெற அமைக்க உதவுவனவுமாம்.

மாலை மொய்த்த பந்தர் - பந்தர்களின்மேல் பூமாலைகளை நிறையக் கட்டுதல் அணிவகை. கடிகொள் மாலை - வாசனைப் பூக்களாலாகிய மாலைகள், மாலை மொய்த்தல் அணிவகையேயன்றி வாசனை செய்யவும் உதவும். இந்நாளில் காகிதம் துணி முதலிய வற்றாலாகிய போலிமாலைகளை அணிந்து மகிழ்தல் அறிவுடையோர் எள்ளத் தக்கனவும் பயனில்லாதனவுமாகிய போலி வழக்கங்களென்க.

கந்தநீர்த் தசும்பு - வாசனைப் பண்டம் பெய்த நீர் நிறைத்த குடங்கள், நிறை குடங்கள். தசும்பு - குடம்.

மடிவில் பொன்விளக்கு எடுத்து - மடிவில் - கெடாத - அவியாத, பொன் - அழகு என்றலுமாம். எடுத்து - ஏந்தி; விளக்கேந்தி மாதர் வருதல் - மங்கலஞ்செய் வழக்குக்களுள் ஒன்று.

மாதர் மைந்தர் - நாயகி நாயகர்களாக இணைந்து

படிவிளக்கும் அன்பர் - உலகில் அன்பு நெறியை விளக்கி மக்களை உய்விக்கும் அன்பர்கள்; திருத்தொண்டர்கள்.

ஈண்டுவார் - விம்மவே - போய் - வணங்கினர் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. ஈண்டுவார் - முற்றெச்சம்.

பரந்த பண்பில் - அங்கங்கும் பரவி நிறைந்த தன்மையில். 987

2886. (வி - ரை) மாதர் ஆடல் - எதிர்கொள்ளும் மங்கலங்களுள் ஒருவகை; தொண்டர் பாடல் - சைவத்துறையும், வேதகீத நாதம் - வேதநெறியும் கூடிய விளக்கம் காட்டியன.

கம்பலைத்து - மகிழ்ச்சி மிக்க ஆரவாரத்தின் ஒலிசெய்து. கம்பலை - முழக்கம். முன்கூறிய ஆடல்-பாடல்-கீதம் என்பவை பொருள் குறித்த ஒலிகளாதலின் வேறு பிரித்து முன்னாகக் கூறப்பட்டன.

பூதேயில் - பழங்காத்தல் குறிப்பு. நகரின் மதிற்புறம்பு வணங்குதல் எதிர் கொள்ளும் முறை.

முன் வணங்கினர் - முன் - திருக்கூட்டத்தின் முன்பு. 988

2887. சண்பை யாளு மன்னர் முன்பு தொண்டர் வந்து சார்தலும்
பண்பு நீடி யானமுன் பிழிந்தி றைஞ்சு பான்மைகண்
டெண்பெ ருக்கு மிக்கதொண்ட ரஞ்ச லித்தெ டுத்தசொன்
மண்ப ரக்க வீழ்ந்தெ ழுந்து வான முட்ட ஆர்த்தனர். ௯௮௯

(இ - ள்) சண்பையாளும்...சார்தலும் - சீகாழித் தலைவராகிய பிள்ளையார் திருமுன்பு அத்திருத்தொண்டர்கள் வந்து சார்ந்தபோது; பண்பு ..கண்டு - அடிமைப் பண்பினால் மிக்கு முத்துச் சிவிகையினின்றும் பிள்ளையார் இறங்கி வணங்கும் தன்மையினைக் கண்டு; எண் பெருக்கு...சொன்மண்பரக்க - எண்ணைப் பெருக்குகின்ற பெருந்

தொண்டர்கள் தொழுது ஆர்த்துத் துதித்த அர ஒலி உலகிற் பரவ ; வீழ்ந்தெழுந்து... ...ஆர்த்தனர் - நிலமுற விழுந்து எழுந்து வானமளாவ ஆரவாரித்தனர்.

(வி - ரை) கண்டபொழுது ..சார்தலும் - முன் கூறியபடி வணங்கித் திருக்கூட்டத்தைக் கடந்து சீகாழித் தலைவரது சிவிகையின் முன்பு அத்திருத்தொண்டர் வந்தவுடனே ; சார்தலும் - சாரப்பாவது பிள்ளையாரது திருவடி எனச் சார்தலும் என்பதும் குறிப்பு

பண்பு நீடி - இழிந்து - இறைஞ்சு - பான்மை - பண்பு - அடிமைத் திறம் ; தொண்டர் கூட்டமும் திருவேடமும் அரனெனவே கண்டு தொழற்பாலன என்ற அடிமைத் திறம்.

கண்டு - அத்திறத்தினின்று ஒழுகிப் பிள்ளையார் காட்டக் கண்டு.

எண் பெருக்கும் - எண் - எண்ணம். பெருக்குதலாவது - இவ்வாறு அடிமைப் பணியினில் உலகம் எண்ணி உய்யும் தன்மையினை வளரச் செய்தல்.

மிக்க - பெருமையினால் மிகுந்த ; அளவிறந்த என்றலுமாம்.

தொண்டர் - பிள்ளையாருடன் வந்த திருக்கூட்டத்தவர்களும் எதிர்கொண்டு வந்து வணங்கிய காஞ்சிபுரத் தொண்டர்களும்.

அஞ்சலித்து எடுத்த சொல் - அடிமைத்திறத்தின் விளைவாகிய அன்பினைக் கண்டு தாம் வணங்கி முழங்கிய அரனும் முழக்காகிய ஒலி. சொல் - என்றார் அரனுமமே சொல்லத் தக்கதென்பது குறிக்க. " எல்லா மரனுமமே சூழக " (தேவா), மண் பரக்க - உலகிற் பரவ.

வானமுட்ட ஆர்த்தல் - ஆரவாரிப்பின் ஓசையும் அரவெனும் சொல்லின் எழுந்த மிக்க ஒலியும் ஆகாயமளாவ ; மண்பரக்க வீழ்ந்து - சொல்லொலி மண்ணவர் செவிப் புலங்களில் வீழ்ந்து என்றும், எழுந்து - மேல் விண்ணில் எழுந்து என்றும் உரைத்தலுமாம்.

நீட ஐயன்முன்—எழுந்த சொல்—என்பனவும் பாடங்கள். 989

2888. சேணு யர்ந்த வாயினீடு சீர்கொள் சண்பை மன்னனார்
வாணி லாவு நீற்றணி விளங்கி டமனத் தினிற்
பூணு மன்பர் தாமுடன் புகுந்திடப்பு றத்துளோர்
காணு மாசை யிற்குவித்த கைந்நி ரையெ டுத்தனர். ௬௬0

(இ - ள்) நீடு சீர்கொள் சண்பை மன்னனார் - நீடிய சிறப்புடைய சீகாழித் தலைவராகிய பிள்ளையார் ; வாணிலாவு...புகுந்திட - ஒளிபொருந்திய திருநீற்றுக் கோலம் திருமேனியில் விளங்கிட மனத்துள்ளே சிவன்பாலன்பே பூணக்கொண்ட அடியவர்களுடனே ; சேணுயர்ந்த வாயில் - வானளவுயர்ந்த நகரத்து மதிற்புற வாயினுள்ளே புகுந்திட - புகுந்தபோது ; புறத்துளோர்...எடுத்தனர் - இவ்வளவில் நகர்ப்புறத்தினின்றும் வந்து கூடிய மக்கள் பிள்ளையாரைக் காணும் ஆசையினாலே வரிசையாகக் கைகளைத் தலைமேற் கூப்பினர்.

(வி - ரை) சேணுயர்ந்த வாயில் - இது புறத் திருமதில் வாயில். கோயில் வாயில் பின் (2891) வருதல் காண்க ; இம் மதிற்றிருவாயிலின் சிறப்பினை " ஆங்கு வள ரெயிலினுடன் விளங்கும் வாயி லப்பதியில் வாழ்பெரியோ ருள்ளம் போல, வோங்குநிலைத் தன்மையவாய......தீங்குநெறி யடையாத தடையு மாகி... " (1165) என்று முன் எடுத்துக் கூறியதை நினைவுகூர்க ; சேணுயர்ந்த என்ற குறிப்புமிது ;

சேண் - சேணில் ; வானில். வாயில் - வாயிலின்கண் ; ஏழனுருபு விரிக்க. வாயிலில் புகுந்திட என்க.

நீற்றணி மேனி மேல் விளங்கிட மனத்தினில் அன்பு பூணுதலுடையவர் என்க. "மாசிலாத மணிதிகழ் மேனிமேற், பூசு நீறுபோ லுள்ளும் புனிதர்கள்" (141), இவர்கள் பிள்ளையாரை எதிர்கொள்ள வந்த காஞ்சி வாழும் திருத்தொண்டர்கள், இவர்கள் பிள்ளையாரை உடனாக நகரின் உள்ளே அழைத்துச் சென்றவர்கள் என்பது.

புறத்துளோர் - காணுமாசையில் - புறத்துளோர் - தொண்டர் கூட்டத்தின் புறத்தே நின்றவர்களும் நகரப்புறத்தினின்றும் வந்து கூடியவர்களும்.

காணுமாசையில் - பிள்ளையார் சிவிகையினின்றிழிந்து தொண்டர் கூட்டத்திலுள் அவர்கள் சூழச் சென்றருளினராதலின் இவர்கள் அருகில் நெருங்கிக் காண மாட்டாது அந்த ஆசையினால் கைகளைக் கூப்பி வணங்கினர் என்பதாம். நிரைத்து கவித்து கை எடுத்தனர் - வரிசைபெறக் கைகளை மேலே கூப்பி வணங்கினர், எடுத்தல் - மேற் கூப்புதல். பூணும் அன்பர் - அன்பினையே பூணாகக் கொண்டவர்.

மனத்தினுற் பூணும் அன்பர் - என்று பாடங்கொண்டு மனம் காரணமாகப் பொருந்திய மெய்யன்பினையுடைய அடியார்கள் என்றும், மனத்தினாற் பொருந்திய என்றும் உரைத்தனர் முன் உரைகாரர்கள்.

வானநீடு—விளக்கிட—என்பனவும் பாடங்கள் 990

2889. வியனெ டுந்தெ ருவி னூடு மிக்க தொண்டர் ஆர்ப்பெழக்,
கயனெ டுங்கண் மாத ருங் காத லீடு மாந்தரும்
புயல்பொழிந்த தாமெனப் பூவி னோடு பொற்சுண்ணம்
இயலு மாறு வாழ்த்தெடுத் திரும ருங்கும் வீசினார். ௯௯௧

(இ - ள்) வியனெடும்...எழ - இடம் அகன்ற நீண்ட தெருவினிடையே மிகுந்த தொண்டர்களின் முழக்கம் எழ ; கயனெடுங்கண் ..மாந்தரும் - கயல்மீன் போன்ற நீண்ட கண்களையுடைய பெண்களும் காதலால் மிக்க மாந்தர்களும் மேகம் மழை பெய்ததுபோலப் பூக்களோடு பொற்சுண்ணப் பொடியினை ஏற்றவாறு வாழ்த்துக் கூறி இரண்டு பக்கங்களிலும் வீசினார்கள்.

(வி - ரை) மாதரும்...மாந்தரும் - இவர்கள், பிள்ளையார், நகரினுள் புகுந்து கம்பவாணர் திருக்கோயிலுக்குச் செல்லுமிடையில் தெருவில் இருபுறமும் வீடுகளினின்று வாழ்த்திப் பூவும் சுண்ணமும் தூவினவர்கள். முன் "மாதர் மைந்தர் மல்குவார்" (2885) எனப்பெற்றவர்கள் விளக்கு முதலிய மங்கலங்களுடன் மதிற்புறத்துச் சென்று பிள்ளையாரை எதிர்கொண்டவர்கள்.

மாதரும் காதலீடு மாந்தரும் - தம்பதிகளாக இணைந்து வாழ்த்தியும் பூத்தூவியும் தெருவின் இருபுறமும் இருந்தனர் என்பது ; காதலீடு என்ற குறிப்புமது. இஃது இல்லற நிலையின் நிகழ்வு என்க. திருப்புகலியூர் விழாவினில் ஆளுடைய நாயகியை மறையவனும் மனைவியும் உடன் வந்து வணங்கும் நிகழ்ச்சி காண்க, இவை அன்றி இவ்விருவகையினரும் அங்கங்குத் தனித்தனி வாழ்த்தினர் - பூவும் சுண்ணமும் தூவினர் என்று கொள்ளுதலுமாம்.

புயல் பொழிந்ததாமென - வினைபற்றி வந்த உவமம். மழைபோலச் செறிவும் மென்மையும் தண்மையும் பொருந்த இடையறாது பொழிதல் குறிப்பு.

**இயலுமாறு** - பிள்ளையாரது மென்மைக்கேற்குமாறு என்றும், அவ்வவர் திறத்துக் கியன்றவாறு என்றும் உரைக்கநின்றது.

**பூவும்** பொற்சுண்ணமும் கலந்து வீசுதல் மங்கலம் செய்யும் செயல்களுள் வருவன. "புரிந்த பூவொடு பொற்சுண்ணங்கழுமி" (பெருங்கதை - 2 - 39 - 46).

இருமருங்கும் - தெருவின் இருபக்கங்களினின்றும். 991

2890 இன்ன வண்ண மியாவரு மின்ப மெய்த வெய்துவார்
திருவேகம்ப வழிபாடு பின்னு வார்ச டைமுடிப் பிரான்ம கிழ்ந்த கோயில்கள்
முன்னு றப்ப ணிந்துபோய் மொய்வ ரைத் திருமகள்
மன்னு பூச னைமகிழ்ந்த மன்னர்கோயின் முன்னினார். ௬௬௨

(இ - ள்) **இன்னவண்ணம்...எய்துவார்** - மேற்கூறியவாறு இப்படி எல்லாரும் இன்பம் அடையச் சேர்வாராகிய பிள்ளையார்; பின்னுவார்...போய் - புரிந்த நீண்ட சடைமுடியினை உடைய இறைவர் மகிழ்ந்த பல கோயில்களைச் செல்லும் வழி இடையே முன்னாகப் பணிந்து சென்று; வரைத் திருமகள்...முன்னினார் - மலையரசன் திருமகளாராகிய உமையம்மையாரது நிலைபெற்ற பூசனையை என்றும் மகிழ்ந்து கொண்டு எழுந்தருளிய திருவேகம்பராகிய இறைவருடைய திருக்கோயிலின் முன் அணைந்தருளினார்.

(வி - ரை) **இன்ன வண்ணம்** - முன் ஆறு திருப்பாட்டுக்களிற் கூறியபடி (2884 - 2889); **யாவரும்** - காஞ்சிவாணரும் திருத்தொண்டர்களும்.

**இன்பமெய்த** - "வாழ்த்துவதும் வானவர்க டாம்வாழ்வான்" (திருவா) என்றபடி பிள்ளையாருக்கு மங்கலஞ் செய்து எதிர்கொண்ட சிறப்பினால் அவ்வவர்கள் தாங்களின்பமடைய.

**எய்துவார்** - எய்துவாராகிய பிள்ளையார்; **எய்துவார் - போய் - முன்னினார்** என்று கூட்டுக.

**கோயில்கள் முன்னுறப் பணிந்து போய்** - காஞ்சிமாநகரெல்லையுள் எண்ணில்லாத (கோடி) சிவாலயங்கள் உள்ளன என்பது முன் உரைக்கப்பட்டது; "இறைவர் தாமகிழ்ந் தருளிய பதிகளெண் ணிறந்தவத் திருநக ரெல்லை" (1153) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. இங்குக் கூறிய கோயில்கள் நகரத்தெனமதிற்புறத்தினின்றும் உள்ளே ஏகம்பர் திருக்கோயிலை நோக்கி வரும் வழியினிடையே உள்ளவை; இவை கச்சபேசம் முதலாயின என்பது கருதப்படும்.

**முன்னுறப் பணிந்து - போய்** - திருவேகம்பத்தை நோக்கி வரும் பிள்ளையார் இடையிற் கண்ட இறைவரது கோயில்களையும் வணங்கிச் செல்லவேண்டியது முறையாதலின் அதன்படி முன்னாக அவற்றை இறைஞ்சி.

**மொய்வரைத் திருமகள் மன்னுபூசனை மகிழ்ந்த** - மலையரசன் மகளாராய் உமையம்மையார் போந்து வந்து காஞ்சி மாவடியில் இறைவரை நிலைபெறப் பூசித்து அறம் வளர்த்து வீற்றிருக்கும் வரலாறு முன் திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்துள் விரித்தவாறு காண்க (1127 - 1148); **மொய்வரைத் திருமகள் - வரை** - மலையரசனைக் குறித்தது; வரை அரசனை வரை என்றது உபசாரம். "பொருப்பில வேந்தன்" (1131); **மன்னு பூசனை** - "மாறிலாதவிப் பூசனை யென்றுமன்ன வெம்பிரான்

மகிழ்ந்துகொண் டருளி" (1146) என்ற அம்மை வேண்ட இறைவர் "விருப்பு பூசனை மேவி வீற்றிருந்" தருளினார் (1147) என்றது காண்க.

முன்னினார் - முன்னாக - அணித்தாகச் - சென்றருளினார். 992

2891. கம்ப வாணர் கோயில்வாயில் கண்டு கைகு வித்தெடுத்
உம்ப ரோங்கு கோபுரத்தின் முன்னி றைஞ்சி யுள்ளணைந்
தம்பொன் மாளி கைப்புறத்தி லன்ப ரோடு சூழ்வந்
திம்பர் ஞால முய்யவந்த பிள்ளை யாரி றைஞ்சுவார்; ௯௯௩

வேறு

2892. செம்பொன்மலைக் கொடிதழுவக் குழைந்தருளுந் திருமேனிக்
கம்பரைவந் தெதிர்வணங்குங் கவுணியர்தங் காவலனார்
பம்புதுளிக் கண்ணருவி பாய்ந்தமயிர்ப் புளகமுறத்
தம்பெருகு மனக்காத லுந்தநில மிசைத்தாழ்ந்தார் ௯௯௪

2893. பலமுறையும் பணிந்தெழுந்து நாயகர்செங் கைமுகிழ்ப்ப
மலருமுக மலர்த்ததிரு மணிவாயால் "மறையானை"ன்
றலகுய்ய வெடுத்தருளி யுருகியசொற் பொன்புனைந்த
நிலவுமிசை முதற்றுள நிரம்பியசீர் மையினிகழ, ௯௯௫

2894. பாடினார்; பணிவுற்றார், பரிவுற்ற மனந்தக்கூத்
தாடினா ரகங்குழைந்தார்; அஞ்சலிதஞ் சென்னியின்மேற்
சூடினார்; மெய்ம்முகிழ்த்தார்; சூகர முன்னமுமாய்த்
தேடினா ரிருவருக்குந் தெரிவரியார் திருமகனார்; ௯௯௬

2895. மருவியஏ ழிசைமொழிப் பாவையொடும் பரவிப்போய்ப்
பெருகியகண் மழைபொழிப் பெருந்தகையார் பெருந்தகையார்
உருகியவன் புள்ளலைப்ப வுமைதழுவக் குழைந்தவரைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவிப்புறத் தணைந்தார் ௯௯௭

2891. (இ - ள்) கம்பவாணர் ..எடுத்து - ஏகம்பவாணராகிய இறைவரது திருக்கோயில் வாயிலினைக் கண்டு கைகளைக் கூப்பித் தலையின்மேல் தூக்கி வணங்கி; உம்பர்.. இறைஞ்சி - வானத்தின்மேல் ஓங்கும் திருக்கோபுரத்தின் முன்னே பணிந்து; உள் அணைந்து...வந்து - திருக்கோயிலினுள்ளே சென்று சூழ்கிய பொன்மாளிகையின் புறச்சுற்றிலே அன்பர்களுடனே சூழ்ந்து வலம் வந்து, இம்பர் .இறைஞ்சுவார் - இந்நிலவுலகம் உய்யும்படி திருவவதரித்த பிள்ளையார் வணங்குவாராகி, ௯௯௩

2892. (இ - ள்) செம்பொன்மலைக் கொடி ..கவுணியனார் - செவ்விய பொன் மலையரசனுக்கு மகளாராகிய கொடிபோன்ற காமாட்சியம்மையார் தழுவியிடக் குழைந்து காட்டியருளிய திருமேனியினை உடைய திருவேகாம்பரநாதரைத் திருமுன்பு வந்து எதிரே வணங்கும் கவுணியர் பெருமானாராகிய பிள்ளையார்; பம்பு...புளகம் வர - ததும்பும் துளிகளாகப் பெருகி அருவிபோலக் கண்ணீர் பாயத்தொழுகத் திருமேனியில் மயிர்ப்புளக முண்டாக; தம்பெருகு .தாழ்ந்தார் - தமது திருவுளத்தினிறைந்து பெருகுகின்ற பெருவிருப்பம் உந்த நிலத்தின்மேல் வீழ்ந்து வணங்கியவராகி, ௯௯௪

2893. (இ - ள்) பலமுறையும் பணிந்து எழுந்து - பலமுறைகளும் பணிந்து நிலமுற வீழ்ந்து வணங்கி எழுந்து; பங்கயச் செங்கை முகிழ்ப்ப - தாமரைபோன்ற கைகள் குவிய; மலரும் முகம் அளித்த - மலர்கின்ற திருமுகத்திற் றோன்றிய; மணிவாயான் - அழகிய ஒளிவிளங்கும் வாக்கினாலே; மறையான...எடுத்தருளி - "மறையானை" என்று உலகம் உய்யும்பொருட்டுத் தொடங்கியருளி; உருகிய அன்பு என்பு உருகக் - மனமுருகிய அன்பு எலும்பினையும் உருக்குவதாக; நிலவும்...திகழ - பொருந்திய பண்ணும் மூதறிவும் கூட நிரம்பிய தன்மையில் உள்ளாக, ககரு

2894. (இ - ள்) பாடினார் - பாடியருளினார்; பணிவுற்றார் - பணிந்தருளினார்; பரிவுறும்...ஆடினார் - அன்பினால் நிறைந்த ஆனந்தக் கூத்து ஆடியருளினார்; அகங் குழைந்தார் - மனங் குழைந்து உருகினார்; அஞ்சலி...கூடினார் - கைகளைக் குவித்த அஞ்சலியினைத் தலைமேற்கொண்டனர், மெய்ம்முகிழ்த்தார் - உடம்பெல்லாம் மயிர்ப் புளகம் வரப்பெற்றருளினார்; சூகரமும்...திருமகனார் - பன்றியும் அன்னமுமாக உரு வெடுத்து முறையே அடியு முடியும் தேடியவர்களாகிய இருபெருந் தேவர்க்கும் தெரிவரியராய் நிமிர்ந்த இறைவரது திருமகனாராகிய பிள்ளையார் (இத்தன்மைய ராய), ககசு

2895. (இ - ள்) மருவிய ஏழிசை பொழிய - பொருந்திய ஏழிசைகளையும் (வாக்குப்) பொழிய; மனம் பொழியும் பேரன்பால் - மனத்தினின்றும் மீக்கூர்ந்து ஊக்கும் பேரன்பினாலே; கண் பெருகிய மழை பொழிய - கண்கள் ஊற்றெடுத்துப் பெருகிய கண்ணீர் மழையினைப் பொழிய; பெரும்புகலிப் பிள்ளையார் - பெருமை தங்கிய சீகாழியில் வந்தருளிய பெருந்தகையாராகிய பிள்ளையார், உருகிய அன்பு உள் அலைப்ப - மனமுருகுதற்குக் காரணமாகிய அன்பு உள்ளத்தை அலையச் செய்ய; உமை தழுவ...பரவியே - உமையம்மையார் தழுவத் திருமேனி குழைந்து காட்டிய ஏகம்பவாணரை; பருகிய...புறத்தணைந்தார் - அனுபவித்த மெய்யுணர்ச்சியினோடும் போற்றி செய்து கோயிலின் புறத்தில் அணைந்தருளினார். ககஎ

இவ்வைந்து பாட்டுக்களும் பொருட்டொடர்பும் சொற்றொடர்பும் நோக்கி ஒரு முடிபுகொண் டுரைக்கநிற்றலின் அவ்வாறுரைக்கப்பட்டன.

2891 - 2892 பாட்டுக்கள் ஒருமுடிபும், 2893 - 2894 பாட்டுக்கள் ஒருமுடிபும் 2895 தனிமுடிபாகவும் உரைப்பினும் இழுக்கில்லை

2891. (வி - ரை) உம்பரோங்கு கோபுரம் - திருவேகம்பர் கோயிலின் தெற்குத் திருக்கோபுரம். இக்கோபுரம் மிகப் பெரியதாயும் உயரமாயும் உள்ளதுபற்றிய சிறப்புக் கூறப்பட்டது. உம்பர் - ஆகாயம்; ஏழனுருபு தொக்கது.

பொன்மாளிகை - ஏகம்பத் திருக்கோயிலின் திருமதிலின் உட்புறம் இறைவரது இருக்கையினையும் மாமரத்தையும் சுற்றி உள்ள சேர்யிலின் பகுதி.

மாளிகைப் புறம் - புறமதிலின் அடுத்து உள்ளே பெரிய சுற்று, பொன் மாளிகை - திருத்தில்லையினைப் போல இங்கும் திருக்கோயிலினுள் பல பகுதிகள் பொன்னால் வேயப்பெற்றிருந்தன என்பது அறியப்படும்.

இம்பர் ஞாலம் - இந்நிலவுலகம்; ஞாலம் உய்ய வந்தமை - முன் உரைக்கப் பட்டது (1916 - 1924).

இறைஞ்சுவார் - இறைஞ்சுவாராகித் - தாழ்ந்தார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. இவ்வாறிறைஞ்சும் இடம் இறைவரது திருமுன்பு என்பது "கம்பரைவந் தெதிர்வணங்கும்" என மேல்வரும் பாட்டிற் காண்க.

2892. (வி - ரை) செம்பொன் மலை - செம்பொன் - மிகுயர்ந்த பொன்; பொன்மலை - மேரு. மலை - இங்கு மலையரசன் என்ற பொருளில் வந்தது. மலைக்கோடி - மலையரசன் மகளாராகிய கொடிபோன்ற உமையம்மையார் முன் "மொய்வரைத் திருமகள்" (2890) என்றதும் காண்க. "பொருப்பில் வேந்தன்" (1131).

கோடி தழுவக் குழைந்தருளும் திருமேனிக் கம்பர் - கொழுகொம்பைப் பற்றிப் படரும் கொடிபோல இறைவரை அம்மை தழுவிக்கொண்டனார் என்றதும் குறிப்பு. இவ்வரலாறுபற்றித் திருக்குறிப்பு - புராணம் (1140—1143) பார்க்க. விரிவு காஞ்சிப் புராணத்துட் காண்க இத்தலத்தின் அம்மையின் சிறப்புப் பற்றி அம்மையை முன் வைத்தோதினார்.

கண்ணருவி பாய்ந்து - கண்ணீர் அருவிபோலப் பெருகி வழிந்து.

மயிர்ப் புளகம் - மயிர் கூச்செறிதல்; மயிர்கள் நேராக நிற்றல். இஃது அன்பு மிகுதி, அச்சம் முதலியவற்றால் நிகழும் மெய்ப்பாடுகளுள் ஒன்று. இங்கு அன்புப் பெருக்கினாலாயது. மயிர்ப்புளகமெழ என்ற பாடமாயின் இக்கருத்து மிக விளங்கும்.

பெருமனக் காதல் தள்ள நிலமிசைத் தாழ்ந்தார் - தள்ளத் - தாழ்ந்தார் - காதல் என்ற பொருள் உளவிருந்து உந்தித் தள்ளுதலால் நிலத்தின் வீழ்ந்ததுபோல வீழ்ந்தனர். தள்ள - என்பது குறிப்புருவகம், தமது வசமிழந்து தாழ்ந்தனர் என்பதாம்.

2893. (வி - ரை) பலமுறையும் பணிந்தெழுந்து - மூன்றுமுறை, ஐந்துமுறை முதலாகப் பதினொன்றுவரை விதித்த முறையின் மிக்கு அளவிடங்காதபடி பல முறையும் என்பது காதலின் மிகுதி விதி கடந்து செலுத்தும் நிலை குறித்தது.

செங்கைப் பங்கயம் முகிழ்ப்ப மலரும் முகம் அளித்த-பங்கயம் என்றதற்கேற்ப முகிழ்ப்ப என்றார் முகிழ்த்தல் - முகைபோலக் கூப்புதல்; கைகளைப் பங்கயமென்றது உருவம் திருவும் பற்றிய ஒப்புமை கருதி வந்தது. "பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்கும் செங்கை" (2070) என முன் கூறியதும், பிறவும் காண்க. பங்கயம் என்பதனை முகம் என்றதனோடும் கூட்டிக் கையும் முகமும் ஆகிய தாமரைகளிரண்டனுள் ஒன்று குவிய ஒன்று மலர் என்ற நயமும் அம்மையின் மதியொளியால் கைத்தாமரை முகிழ்ப்பக் கம்பரின் ஞாயிறொளியால் முகத்தாமரை மலர்ந்ததென்ற குறிப்புப்பட வந்த கவிநயமும் காண்க. இறைவராகிய ஞாயிற்றின் முன் தாமரைகள் ஒன்று முகையாக ஒன்று மலர வரும் என்ற ஞானசாத்திர உண்மைக் குறிப்புத் தொனிக்கக் கூறியபடியும் காண்க; "முகஞ்சாய் எஞ்ஞான்று முளரி யலாவுறுமொன் றலர் வான் முகையாமொன் றொன்றலரு முறைமையினுமே" (சிவப் - 17).

முகம் அளித்த திருவாயால் - முகத்தின்ற தோன்றிய திருவாக்கினாலே. மலரு முகத்தைக் கொடுத்த திருவாயின் திருக்குறிப்புடையவன் என்றலுமாம், "என்றுவந் தாயென்னு மெம்பெருமானற னிருக்குறிப்பே", "கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்"; "சிரித்த முகங்கண்டு சிந்தைகொண்டு" (தேவா) முதலியவை காண்க. இறைவரது மணிவாயின் புன்முறுவல் பெருமுகத்தை அளித்ததென்பது "மணி வாயால் - எடுத்தருளி" என்று கூட்டியும் "வாயினன் (வாயினை உடையவன்) மறை யான் என்று" என்றும் உரைக்கநின்றது.

நிலவுமிசைப் பதிகப் பண்ணாகிய இந்தளம், முதற்றாளம் - ஆதி தாளம் என வழங்குவர்; நிரம்பிய நீர்மை - "துறையாகிலை முறைமைப்படி கூடிங்கிழ மையினால்" (221) என்றவிடத்து உரைத்தவாறு உரிய தகுதிகள் எல்லாம் நிரம்பிய தன்மை; ஆண் டுரைத்தவை பார்க்க; அங்கு நோக்கதும் இந்தளப் பண்ணுத்தலும் கருதுக. 995

2894 (வி - ரை) வழிபாட்டின் உள்வாகிய மெய்ப்பாட்டின் "ஆடினார்" - "பணிவுற்றார்" முதலாகப் பகுதிகளைப் பலவற்றையும் தனித்தனி வினைமுற்றுக்களால் உணர்த்தியது இத்திருப்பாட்டின் கவிநலமாம்.

பரிவுறும் ஆனந்தக் கூத்து - அன்பு மிக்க காரணத்தினால் உளதாகும் ஆனந்தக் கூத்து. "மெய்விரவு பேரன்பு மிகுதியினா லாடுதலு மவ்வியல்பின் பாடுதலு மாயினார்" (1055).

மெய்ம்மகிழ்ந்தார் - திருமேனி முழுதும் மயிர்ப்புளகம் கொண்டனர்.

சூகரம் - பன்றி. தேடினாரிருவருக்கும் - தேடினார் வினைப்பெயர்; தேடினவர்களாகிய இருவர்; அயனும் மாலும். இப்பாட்டில் ஏனையவாகிய பாடினார் முதலியவை வினைமுற்றுக்கள். தேடினார் என்பதொன்றுமே பெயர். இவ்வாறு கூறுதல் ஆசிரியரது சிறப்பாகிய கவிநலங்களுள் ஒன்று; முன் கூறியவை பார்க்க.

திருமகனார் - உபசாரம்; பால் தர உண்டு ஞானம் பெற்றமையால் மகன்மை முறை பூண்டு "ஆளுடைய பிள்ளையார்" ஆயினவர் (1966). 996

2895. (வி - ரை) மருவிய ஏழிசை பொழிய - வாக்கு ஏழிசை நிலவும் திருப்பதிகத்தினைப் பொழிய; மணிவாயில் (2893) என்றதனால் வாக்கு என்பது வருவிக்க. பொழிதல் - ஈறின்றி எழுந்து வருதல்.

மனம்பொழியும் பேரன்பாற் பெருகிய மழை கண் பொழிய - என்க. மனத்தையிடமாகக் கொண்டு அன்பு மேன்மேல் பொங்கி எழுந்தது. அது கண்ணீர் மழை பெருகக் காரணமாயிற்று. கண்ணீர் அன்பு காரணமாக வருவதாதலின் காணலாகாத அன்பினைக் கண்ணீர் காட்டிவிடும் என்பர். "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூச றரும்" (குறள்). முன் "பம்புதுளிக் கண்ணருவி பாய" (2892) என்றது எசமபவாணரைக் கண்டவுடன் நிகழ்ந்தது; இங்குக் கூறியது பதிகம் பாடியருளிய பின் அவ்வனுபவ வுணர்ச்சிமேலீட்டினால் உளதாயது.

வாக்கு இசைபொழிய - மனம் அன்புபொழிய - கண் மழைபொழிய - என மனம் வாக்குக் காயம் என்ற மூன்றும் ஒத்த நிகழ்ச்சி கூறப்பட்டது. பொழிய - சொற்பொருட்பின் வருநிலை.

உருகிய அன்பு உள் அலைப்ப - முன்னும் "உருகிய அன்பு என்புருக்க" (2893) என்றது காண்க. கண்ணருவி பெய்தல் இரண்டு நிலையினும் கூறியதுபோலவே அதற்குக் காரணமாய நின்ற அன்பானது மனத்தின் உள்ளே நிகழ்ந்து உருக்கிக்கொண்டிருந்த அன்பின் செயலை ஈரிடத்தும் கூறினார்.

உருகிய அன்பு உள்ளலைப்ப உமை தழுவ - என்று கொண்டு அன்பினாலே அம்மை தழுவ என்று கூட்டி உரைக்கவும் நின்றது.

தழுவக் குழைந்த பரப் பருகிய மெய்யுணர்வு - "மலைக்கொடி தழுவக் குழைந்தருளும்" (2892) என முன்னரும் கூறிய கருத்து; கண்ணீருக்கும் அன்புக்கும் கூறிய குறிப்பாம். அம்மை தழுவ அதனால் சராசரமான உயிர்களனைத்து முயிரும் யாக்கையு முருகி யொன்றாகி...எத்தின (1142) என்ற தன்மையால் வழிபாட்டுநிலை இவ்வாறு அன்புப் பெருக்கத்தால் உருகும் தன்மை நிகழ்வதாம் என்று குறிக்க அவ்வாலாறு பற்றியே ஈரிடத்திலும் கூறுதல் காண்க; பருகிய - பருகுதல் போன்ற ஆர்வ நிகழ்ச்சி. பருகிய - என்பது குறிப்புருவகம். உணர்வினொடும் பரவியே - பரவிக் கொண்டவாறே.

புறத்து - திருக்கோயிலின் புறத்தில். 997

## I கச்சித் திருவேகம்பம்

திருச்சிற்றம்பலம்

பண் - இந்தளம் - 2-ம் திருமுறை

மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொ டாணாகிய பெம்மானை
யிறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதென துள்ளமே. (1)

அந்தண்பூங் கச்சியே கம்பனை யம்மானைக்
கந்தண்பூங் காழியூ ரன்கலிக் கோவையாற்
சந்தமே பாடவல் லதமிழ் ஞானசம்
பந்தன்சொற் பாடியா டக்கெடும் பாவமே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—கம்பைக் கரையேர் கொள் கச்சித் திருவேகம்பம் உடையானை யல்ல துள்காதென துள்ளமே (1 - 5 - 3), அவனைச் சேராதார் இன்பமாய நெறி சேராரே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) பெண்ணொ டாணாகிய பெம்மான் - உமை தழுவிய திருமேனிக் குறிப்பு “உளங்கொம் பந்தொ டிணங்கும் இணங்கும்” (தேவா); அல்ல துள்காது - எதிர்மறையாற் கூறியது பிறிதொன்றைச் செல்லாமை வற்புறுத்தற் பொருட்டு; 5-வது பாட்டும் பார்க்க. “கைச்சிறு மறியவனை கழலலாற் பேணாக் கருத்துடை ஞானசம்பந்தன்” (குறிஞ்சி - அச்சிறுபாக்கம்), “கொன்றையான் அடியலாற் பேணா” (திருத்தொண்டத் தொகை);—(2) சுடாடனையோ நச்சி - எனக; ஏகாரம் பிரிநிலை,—(3) சேராதார் இன்பமாய நெறி சேரார் - எதிர்மறை உறுதிப் பொருள் குறித்தது, ‘சேராதார் நன்னெறிக்கட் சேரார்’ (தாண்டகம்),—(4) மின்தேய்க்கும் முகில்கள் - முகில்கள் ஒன்றோடொன்று கூடுதலால் மின்னல் உளதாம் என்ற கலைஞானக் கருத்து, சென்று ஏய்க்கும் - ஏய்தல் - பொருந்துதல்,—(5) கடை - முன்கடை, மூன்றும் - மனம் வாக்குக் காயம், கம்பை - ஆறு, இவ்வாற்றின் கரையில் அம்மை மாவின் மூலத்தில் தவஞ்செய்து பூசித்தபோது இறைவர் வெளிப்பட்டருளினார் என்ற வரலாறு குறித்தது (1139 - 1140);—(6) தம் தொழுவாரோர் இமையார் - தம்மை வணங்குவோர் இமையவராகிய வானவர்கள் தொழுதல் - பற்றிக் கொள்ளுதல், “வாயதல் பற்றித், துன்றினர் தொல்லை வானவர் ஈட்டம்” (அரசு); உச்சி - உமையாள் வழுவாமே - உமையாள் தம் திருவடியில் முடிசாய்த்து வழுவாது வணங்க, உச்சி - கங்கை வழுவாமே - தம் உச்சியிற் கங்கை நீங்காது,—(7) மறைகள் வேதம் விரித்தோதுவார்கண்ணுள்ளார் - மறைகளாகிய வேதங்களை ஓதுவார்களிடத் திருப்பவர், கழலின் வெல்வார் - காலனை - நண்ணுவார் - காலினால் வெற்றி கொள்வாராகி இயமனிடம் வருபவர், கழல் - காலணி மணிவடம்; வீரக்கழல், “கள்ளவினை, வென்று பிறப்பறக்கச் சாதித்த வீரக்கழலும்” (போற்றிப் பஃறொடை) ஆடுகின்ற அலங்காரம் - திருக்கூத்தின் அதிசயம், அழகிய உள்ளுறை. கரிகாலன் - கரிய காலனை கரிகாலன் என்ற பெயருடைய அரசன்; கச்சி நகராண்ட அரசனையும் குறிப்பாலுணர்த்தி அவன் அன்பிற்கிரங்கி வெளிப்பட்டு எய்துபவர் என்ற வரலாறு குறிப்பதாக உரைத்தலுமொன்று (1162 = பார்க்க) இப்பொருளில் கழலின் வெல்வார் - என்பதனைத் தனி முடிபாக வைத்து வினைப்பகையைக் கழ

லாலே வெல்பவர் என்று வேறாக உரைத்துக்கொள்க ;—(8) மேவுவார் என் றலைமேலார் - திரு வேகம்பரைப் பொருந்திய அடியவர்கள் எனது தலைவர்கள். தலைமேலார் - என்னால் வணங்கப்படும் தகுதியுடையோர் ; மறையோதிய வாயான் - "மாகம்ப மறையோது மிறையானை மதிற்கச்சி, யேகம்ப மேயானை" (அரசு. தேவா - கச்சி) ;—(9) நாகம் ..பெண் - பூணும், ஏறலும், தாரும், பெண்ணும் உடையவராய் எனக ; "பாநதள பூணாரம்" என்ற திருவிசைப்பா (கருவூர் - சாட்டியக்குடி) இங்கு நினைவு கூரத்தக்கது. இருவர் - அயனும் அரியும் ; மாகம்பம் - பெரிய அழற்றூணாகிய நிலை ;—(10) வாதியா - வாதியாமே ,—(11) கந்தண்பூம் - கம் - மேகம் ; மேகம் சூழ்தலினால் குளிர்ந்த அழகிய சோலை சூழ்ந்த. கலிக்கோவை - பதிகம் ; "கலிககோவை சொல்லே" (திருப்பாசுரம் - 8).

தலவிசேடம் :—திருக்கச்சியேகம்பம் - திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத் திறுதியிற் பார்க்க. II - பக்கம் - கஙிஎ பார்க்க.

2896. புறத்தணைந்த தொண்டருடன் போந்தமைந்த திருமடத்திற்
பெறற்கரும்பே றுலகுய்யப் பெற்றருளும் பிள்ளையார்
மறப்பரிய காதலுடன் வந்தெய்தி மகிழ்ந்துறைவார்
அறப்பெருஞ்செல் வக்காமக் கோட்டமணைந் திறைஞ்சினார். கூகூஅ

(இ - ள்) புறத்தணைந்த...போந்து - தம்முடனே கூடத் திருக்கோயிற் புறத்திலே வந்தணைந்த திருத்தொண்டர்களுடனே சென்று ; அமைந்த திருமடத்தில...வந்து எய்தி - தாம் எழுந்தருளும் பேறுபெற அதற்கென்று அமைந்த திருமடத்தின்கண்ணே, பெறுதற்கரிய பேறாகிய சிவஞானத்தினை உலகுய்யத்தற்பொருட்டுப் பெற்று அவ்வாறே உலகுக்கு அருளும் பிள்ளையார் இறைவரை மறப்பிலாத பெருவிருப்பத்துடனே வந்து, சேர்ந்து ; மகிழ்ந்துறைவார் - மகிழ்ச்சியுடன் தங்கியருள்பவர், அறப் பெரும்... ...இறைஞ்சினார் - அறங்களெல்லாம் றையும் வளர்த்து உமை அம்மையார் எழுந்தருளி யிருக்கும் பெரிய செல்வம் பொருந்திய திருக்காமக் கோட்டத்தினை அணைந்து வணங்கியருளினார்.

(வி - ரை) புறத்தணைந்த தொண்டருடன் - தாம் பரவிப் புறத்தணைந்தது போலவே வழிபட்டுப் புறத்து அணைந்த எனக

அமைந்த - பிள்ளையார் எழுந்தருளுதற்கு ஏற்ற தகுதியுடன் அமைந்த. அமைத்த என்னாது அமைந்த என்றது அத் திருமடம் அவ்வாறுள்ள தகுதியுடன் முன்னமே அமைந்துள்ளது என்றதாம். "நீடு வாழ்திருப் பாடியு மனைக்கு" (1159) என்றும், "சுடர்மணிக் குகையு ளேகம்பத, தோமொழிப் பொருளை யடக்கியா னந்த முறுநாவாழிடமபல வுளவால" (காஞ்சிப் புராணம் - திருநகர - 109) என்றும் வருவன காண்க.

பெறற்கரும் பேறு - எவ்வெவரும் பெறுதற்கரியதாகிய சிவஞானப் பேறு ; உலகுய்யப் பெற்றவர் - இப்பேற்றினைத் தமக்கென்வன்றி உலகமுய்யதற்பொருட்டே பெற்றவர். அருளும் - பெற்றவாறே உலகுக் கருள்செய்யும்.

மறப்பரிய காதல் - மறத்தற் கருமையாவது எஞ்ஞான்றும் அகலவிடாது மனத்திற் கொண்டிருத்தல். "மறசகுமா றிலாத" அன்பு. பருகிய மெய்யுணர்வினொடும் புறத்தே அணைந்து திருமடத்தில் உறைபவர் அவ்வுணர்வினை மறவாதே கொண்டருளினர் என்க.

**உறைவார் - இறைஞ்சினார்** - திருமடத்தில் மகிழ்ந்து உறைகின்ற நாளில்-அணைந்து இறைஞ்சியருளினார்.

**அறப் பெருஞ்செல்வக் காமக்கோட்டமணைந்து இறைஞ்சினார் - அறம்** - அம்மையார் இறைவர்பால் வரம் பெற்று இங்கு எழுந்தருளியிருந்து அறங்களெல்லாவற்றையும் வளர்த்து உயிர்களைப் புரந்தருள்கின்றார் என்பது முன் விரிக்கப்பட்டது (1146 = 1148). பெருஞ் செல்வமாவது எல்லாவுயிர்களின் மேலும் பூண்ட கருணைச் செல்வம். சிவபெருமான் கோயிலையன்றி இவ்வாறு எந்தம் பரமாசாரியார்கள் தனியாகச் சத்தியாராலயத்தையேனும் வேறு கணபதி முருகன் முதலிய சிவபேத சத்திபேத மூர்த்திகளின் தனி ஆலயங்களையேனும் சென்று வணங்குதல் வேறெங்கும் பேசப்படாமை கருதுக. இது திருக்காமக் கோட்டத்துக்குரிய சிறப்பு. "உலகுய்யப் பேறு பெற்றவர் பிள்ளையாராதலின் உலகுய்ய எழுந்தருளியுள்ள அறப் பெருஞ்செல்வியினைச் சென்று இறைஞ்சினார் என்பது குறிப்பு. ஆளுடைய நம்பிகளும் இவ்வாறே வணங்கும் வரலாறும், அங்கு "ஊழியெல்லா முயிர்களெல்லா மொழியாத கருணையினால் நான்கிரு வறம்புரக்கும் அம்மை திருக்கோயில்" (ஏயர்கோன் - 284) என்பதும் ஈண்டு நினைவுகூர்தற்பாலன. 998

2897\. திருவேகம் பத்தமர்ந்த செழுஞ்சுடரைச் சேவடியில்
ஒருபோதுந் தப்பாதே யுள்ளுருகிப் பணிகின்றார்
மருவுதிரு வியமகமும் வளரிருக்குக் குறளுமற்றும்
பெருகுமிசைத் திருப்பதிகத் தொடைபுனைந்தார் பிள்ளையார். ௯௯௯

(இ - ள்) திருவேகம்பத் தமர்ந்த...பணிகின்றார் - திருவேகம்பத்தில் விரும்பி எழுந்தருளியுள்ள செழுமை பொருந்திய ஞானச்சுடராகிய இறைவரைத் திருவடியின் கீழ் வழிபாட்டுக்குரிய காலங்களில் ஒருபொழுதும் தவறுதல் மனமுருகிப் பணிகின்றவராகி, மருவு திருவியமகமும் பிள்ளையார் - பிள்ளையார் அணிபொருந்திய திருவியமகமும் பொருளால் வளர்கின்ற திருவிருக்குக் குறளும் இன்னும் வேறு பெருகுகின்ற இசையினையுடைய திருப்பதிக மாலையினையும் இறைவருக்குச் சாத்தியருளினார்.

(வி - ரை) **திருவேகம்பம்** - கம்பாநதிக் கரசித் திருக்கோயில்

**செழுஞ்சுடர்** - ஞானச்சுடர் விளக்கு, **சேவடியில் - பணிகின்றார் - பிள்ளையார் - புனைந்தார்** என்று முடிக்க. **பணிகின்றார்** - முற்றெச்சம்.

**ஒருபோதும்** - வழிபாட்டுக்குரிய பூசைக் காலங்கள் எல்லாவற்றிலும், "காலமெல்லாம்" (2062).

**மருவு திருவியமகமும் - மருவுதல்** - மடக்கு என்னும் சொல்லணி பொருந்துதல்; **வளர் இருக்குக் குறள்** - வளர்தலாவது சுருங்கிய சொல்லில் வளர்கின்ற பொருட் செறிவு நிற்றல், **இயமகம்** - பாட்டின் அணிவகையும், **இருக்குக் குறள்** - பாட்டின் யாப்பு வகையுமாம். குறள்போன்றமைந்த இருசீரடி அளவாதலின் அப்பெயர் பெற்றது.

**மற்றும் பெருகுமிசைத் திருப்பதிகத் தொடை** - எண்ணும்மை விரிக்க; **இசை** - பண்வகை; பெருமை - புகழ் என்று கொண்டு இசை பெருகும் என்றலுமாம்.

**தொடை** - மாலை. சொல்லும் பொருளும் பயின்று வரத் தொடுப்பதாதலின் தொடை எனப்படும்; **பதிகத் தொடை** - என்றதனால் ஒரு பதிகம் என்றுரைக்கப்பட்டது; பதிகங்கள் என்றலுமாம். ஆனால் இப்போது கிடைத்துள்ளது "வெந்த வெண்பொடி" என்ற பதிகமொன்றேயாம்!

திருவேகாம்பரத்தமர்ந்த—ஒருபொழுதும்—எனபனவும பாடலகள். 999

II திருக்கச்சியேகம்பம்

திருச்சிற்றம்பலம் திருவியமகம். பண்-பழம்பஞ்சுரம் - 3-ம் திருமுறை

*பாயு மால்விடை மேலொரு பாகனே பாவை தன்னுரு மேலொரு பாகனே*
*தூய வானவர் வேதத்து வனியே சோதி மால்எரி வேதத்து வனியே*
*யாயு நுண்பொரு ளாகியே யால நீழ லரும்பொரு ளாதியே*
*காய வினைமதன் பட்டது கம்பமே கண்ணு தற்பர மற்றிடங் கம்பமே.* (1)

*கந்த மார்பொழில் சூழ்தரு கம்பமே காதல் செய்பவர் தீர்த்திடு கம்பமே*
*புந்தி செய்து விரும்பிய புகலியே பூசு ரன்ஞான விரும்பிய புகலியே*
*யந்த மில்பொரு ளாயின கொண்டுமே யண்ணல் ஞானபொரு ளாயின கொண்டுமே*
*பந்த னின்னியல் பாடிய பத்துமே பாட வல்லவ ராயின பத்துமே.* (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—இறைவரது புகழ்களைப் பலவாற்றானும் சந்தம் பட்டத் துதித்தது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) பாகன் - (பாகு) செலுத்துபவன் பாகன் ; பங்குடையவன் ;—(2) வேதத்-துவனி - வேதவொலி. துவனி - ஒலி ; வேதத்து - வ(ன்)னியே - வேத விதிப்படி வளர்க்கப்படும் எரி ;—(3) ஆதியே - ஆதி - முதல் ; நுண் பொருள் - பிரணவம் , ஆதியே - உள்ளவரே. ஆதல் - உளதாதல் ;—(4) கம்பமே - அழிவு. கம்பம் - திருவேகம்பம். குறிப்பு :—உதாரணத்தின்பொருட்டுச் சில மட்டும் எண்ணித் தரப்பட்டன. இப்பதிக முழுதும் சிறந்த இலக்கியமாகவும் ஞான நூலாகவும் கற்று வல்ல பெரியார்களிடம் பாடமாகக்கேட் டுணரத்தக்கது. முன் திருவாலவாய்த் திருவியமகம் - திருக்கழுமலத் திருவியமகம் என்ற பாசுரங்களின் குறிப்புரைத் தலையும் பார்க்க.—(11) (1) கம்பமே - திருவேகம்பம் கம்பம் - பிறவியால் வரும் பயம் - துன்பம் - நடுக்கம் (2) புகலியே - சொல்லுக , விரும்பு இப்புகலியே - புகலி - சீகாழி (3) பொருள் - உள்ளுறை ; அன்னாலின் பொருள் - அருண ஞானம். (4) பத்து - திருப்பாட்டுக்கள் பத்து , பத்து - அன்பரியல்பு "பத்துடையீர் ஈசன பழவடியீர்" (திருவா).

III திருக்கச்சி ஏகம்பம்

திருச்சிற்றம்பலம் திருவிருக்குக்குறள் பண்-கொல்லி - 2-ம் திருமுறை

*கருவார் கச்சித், திருவே கம்பத், தொருவா வென்ன, மருவா வினையே.* (1)
*கொச்சை வேந்தன், கச்சிக் கம்பன், மெச்சுஞ் சொல்லை, நச்சும் புகழே.* (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—திருவேகம்பத்தை ஏத்த வினைகள் நலியா.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) கருவார் கச்சி - இறைவர் இதனை, முனனே அயனைப் படைத்து, அவனுக்கு வேதமோதுவித்து, இதைப் பார்த்து உலகு படைப்பாயாக என்றருளி வைத்தனர் என்ற வரலாற்றுக் குறிப்பு. " ஆதிநாண முக்கணெம்மா னயனற்னைப் படைத்து வேத, மோதுவித் தருளி னேக்கி யுலகெலாம் படை

யென் றேவும், போதிஅ பாாததிவ வாறு படையெனப புகன்று வைத்தா, னீதென லாகுமா காஞ்சி" என்ற காஞ்சிப புராணம (திருநகரப படலம - 3) பாாகக. "மாலை யோர் பாகன் படைததேதே யனறி மலரயன படைததன றதுவே" எனபது கநதபுரா ணம் (திருநகரப படலம - 80). "நாயகனுர் ஞானமுகறகுப படைகக நல்கும, அறி லயோ னிகளெல்லா மமைதது வைத்த வருமபெருமபண டாரங்கிலை யனைய வாரும்" (1170) என்றதும் இககுறிபபுத தருவதாம. இபபொருளெலலாம கநவார் கசசி என் பதனுள் வைததுக் கண்டுகொள்க. கநு - கருபபம்; "கடையுகததிற் றனிவெள்ளம் பலவிரிக்கும் கருபபமபோல" (1955) என்ற குறிபபும, இது பிருதிவித தலமாதலின் சிருட்டிககு முதலாதற குறிபபும காணக என்ன - எனறு சொலல - துதிக்க ;— (2) மதியார் - மதி தவழும மாடஙகளும சோலைகளும உடைய. நதி - கமபையாறு. விதி - ஆகம விதி விதி - நலலூழின வரும பககுவம எனறலுமாம பதி - சிவத தனமை ;—(3) கலி - "கலிக்கசசி" (தேவா) பலவகை முழககுககள் (1195 பார்க்க) பலி - பசுபோதப பலி, பலி விழா எனறலுமாம்,—(4) கச்சிப்புரம் - காஞசிபுரம; பரவா - பரவி ;—(5) படமார் - பளிஙகு மாளிகைகளது நிழலின நிறைவு (1170); படம் - கொடிபபடஙகள எனறலுமாம,—(9) அனலன் - தீததனமைய நிறைவன ;— (10) பறியாத் தேரர் - தலைமயிர பறிககும சமணரும அவ்வாறு பறியாத தேரரும் சொல்லும் எனக நெறியில் - நெறியிலலாத,—(11) சொல்லை நச்சும் புகழே - சொல்லைப புகழ விருமபி வரும.

மற்றும் பெருகுமிசைத் திருபபதிகம் = (2897)

## IV திருக்கச்சியேகம்பம்

திருச்சிற்றம்பலம்    பண் - மேகராகக் குறிஞ்சி

வெந்தவெண பொடிபபூசு மார்பின விரிநூ லொருபாற பொருந்தக்
கநதமலகு குழலியொடுங கடிபொழிற கசசி தனனுள
அந்தமில் குணத்தா ரவர்போற்ற அணங்கினொ டாடலபுரி
எந்தை மேவிய வேகமபந தொழுதேதத விடர்கெடுமே. (1)

எரினர் பொழிலசூழநத கசசி யேகமப மேயவனைக
காரினர் மணிமாட மோஙகு கழுமல நனனகருட்
பாரினா தமிழஞான சமபந்தன பரவிய பததும வல்லா
சீரினர் புகழோஙகி விணணவ ரோடுஞ் சேர்பவரே. (11)

திருசசிற்றமபலம்

பதிகக் குறிப்பு :—திருவேகமப மேதத இடா கெடும.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வெநத வெண்பொடி - திருநீறு, (3), கந்த மல்கு குழலி - கந்தம் - இயற்கை மணம. "ஏலவாா குழலா ளுமை" (நமபி); அந்தமில் குணத்தா ரவர் போற்ற - 1159 பாாகக அணங்கினொ டாடல்புரி ஏகம் பம் - ஆடல் - அருட்கூததது. ஏத்த இடர் கெடுமே - பதிகததின் மகுடம ;—(2) குருந்தும்...பொழில் - இஃது இறைவர் பூசனைககாகும நநதவனம; 240 பார்கக ;— (3) வண்ண வெண்பொடி - திருநீறு "காண வினியது நீறு கவினைத தருவது நீறு" (தேவா) ;—(4) கூடலை வெண்ணீ றணிநது - இதனை 1 - 3-லும, எணடும கூறியது

புனருற்பவத்தின் பொருட்டு இறைவராடும் நிலைக்குறிப்பு. ஆடல்புரி (1) என்றதுமிக் குறிப்பு ;—(9) கரவில் வண்கையினோர்கள் - தொண்டை நாட்டவரின் ஈகைச் சிறப்பு. கரவு - ஈயாது ஒளித்தல்.

2898. நீடுதிருப் பொழிற்காஞ்சி நெறிக்காரைக் காடிறைஞ்சிச்
சூடுமதிக் கண்ணியார் துணைமலர்ச்சே வடிபாடி
ஆடுமவ ரினிதமரு மனேகதங்கா வதம்பரவி
மாடுதிருத் தானங்கள் பணிந்தேத்தி வைகுநாள்; ௧௦௦௦

*2899. எண்டிசையும் போற்றிசைக்குந் திருப்பதிமற் றதன்புறத்துத்
தொண்டருட னினிதேகித் தொலைவில்விட முண்டிருண்ட
கண்டர்மகிழ் மேற்றளியு முதலான கலந்தேத்தி
மண்டுபெருங் காதலினால் வணங்கிமீண் டினிதிருந்தார். ௧௦௦௧

2898. (இ - ள்) நீடுதிரு...அடிபாடி - நீடுகின்ற பொழில்கள் சூழ்ந்த திருக்கச்சி நெறிக்காரைக்காடு என்னும் திருக்கோயிலைச் சென்று வணங்கிச் சூடும் பிறையாகிய கண்ணியினையுடைய இறைவரது துணையாகிய மலர்போன்ற திருவடிகளைப் பாடி ; ஆடுமவர்...பரவி - அருட்கூத்தியற்றும் இறைவர் இனிதாக எழுந்தருளியுள்ள திருக்கச்சி யனேகதங் காவதத்தினைத் துதித்து ; மாடு...வைகு நாள் - பக்கத்தில் உள்ள இறைவரது திருக்கோயில்களையும் பணிந்து துதித்து எழுந்தருளி யிருக்கும் நாளில் ; ௧௦௦௦

2899. (இ - ள்) எண்டிசையும்...இனிதேகி - எட்டுத் திசைகளிலுள்ளோர்களும் போற்றுகின்ற திருத்தலமாகிய காஞ்சிபுரத்தின் புறத்திலே திருத்தொண்டர்களுடன் கூடி இனிது சென்று ; தொலைவில்...கலந்தேத்தி - முன்னாளில் விடத்தினை உண்டு அதனாற் கருமை பெற்ற கண்டத்தையுடைய இறைவர் மகிழ்ந்து வீற்றிருக்கும் திருமேற்றளி முதலாகிய பதிகளைக் கலந்து சென்று துதித்து ; மண்டு...வணங்கி - செறிந்த பெரிய காதலினாலே வணங்கி ; மீண்டு இனிது இருந்தார் - திருக்கச்சி நகரினைக் கண் மீண்டு இனிதாக எழுந்தருளி அமர்ந்திருந்தருளினர். ௧௦௦௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2898. (வி - ரை) நீடு திருப்பொழில் - நீடுதல் - நிலைபெற்றிருத்தல் ; திருக்காஞ்சி நெறிக்காரைக்காடு என்று கூட்டுக.

சூடுமதிக் கண்ணியார் - "வளர்மதிக் கண்ணியினானை" (தேவா) ; மதியாகிய கண்ணி என்பது பிறை சூடுதல் தலையில் மாலை சூடுதல்போன் றிருந்தது என்பதாம்.

துணை - இரண்டு ; அன்பர்க்குத் துணையாகிய என்ற குறிப்பும்பட நின்றது.

ஆடுமவர் - ஆடுதல் - ஐந்தொழில் திருக்கூத் தியற்றுபவர்.

மாடு திருத்தானங்கள் - "இறைவர் தாமகிழ்ந் தருளிய பதிகளெண்ணி றந்தன வத்திரு நகரெல்லை" (1153) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. இவை வரும் வழியில் முன்னர்ப் (2890) பணிந்த கோயில்களல்லாது அத் திருநகரில் உள்ளவை. மாடு - பக்கம் ; செல்வம் என்றலுமாம் ; எண்ணிறந்த சிவத்தானங்களுடைமை கச்சிமா நகரின் சிறப்புச் செல்வமாம். இவற்றின் பிள்ளையார் பதிகங்கள் கிடைத்தில ! 1000

## திருக்கச்சிநெறிக் காரைக்காடு

திருச்சிற்றம்பலம்  பண் - பஞ்சமம் - 3-ம் திருமுறை

வாரணவு முலைமங்கை பங்கினரா யங்கையினிற்
போரணவு மழுவொன்றங் கேந்திவெண் பொடியணிவர்
காரணவு மணிமாடங் கடைநவின்ற கலிக்கச்சி
நீரணவு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே (1)

கண்ணாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டுறையும்
பெண்ணாருந் திருமேனிப் பெருமானை யடிவாழ்த்தித்
தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத் திருப்பாரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:**—வெண்பொடி யணிவர், மாணிழையரியதளர் என்றினைய பல தன்மைகளா லறிந்து போற்றப்படுபவர் கச்சி நெறிக்காரைக்காட்டாராகிய இறைவர்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு.**—(1) அணவு - பொருந்தும், சொற்பொருட் பின் வருநிலை. கடை நவின்ற - சிறந்து விளங்கும், நவிலுதல் - எடுத்துக்காட்டுதல் என்ற பொருளில் வந்தது. பொய்கை - இத்தலத்துச் சிறப்பாய் விளங்கும் இந்திர தீர்த்தம்; 2-ம் பாட்டுப் பார்க்க;—(2) அதள் - தோல், அதளர் - தோலுடையார்;—(3) கொடியிடை - கொடி போன்ற இடையினை உடைய உமையம்மையார்; கொடி யதன்மேல் ஏறு அணிந்தார் - இடபக் கொடியுடையார்;—(4) பிறைநவின்ற - பிறை விளங்கிய; மறை நவின்ற - மறைகளைச் சொல்லிய; சிறை-சிறகு; நிறை நவின்ற- நிறைந்த;—(5) துன்றாத - வளையாத; ஒன்றாதார் - பகைவர்; நின்றார் - போர் செய்யாது நின்றவாறே யிருந்தவர்.—(6) மலை வில்லின் என்க;—(7) எற்று - மோதுதல்; தொழிற்பெயர்.—(8) ஆழ்கிடங்கும் நீண்மறுகு - இக்கருத்தை ஆசிரியர் விரித்துரைத்தல் காண்க (1163);—(9) உலகின். கொள்வர் - நஞ்சு உண்டாயினும், பலி கொள்வர் என்றது பலி ஏற்பது உணவுப் பொருட்டன்று என்றதாம்;—(10) வரை ஆகம் - மலைபோன்ற திருவுடம்பு;—(11) கண் ஆரும் - அழகிய.

**தலவிசேடம்:**—திருக்கச்சிநெறிக் காரைக்காடு - தொண்டை நாட்டில் 5-வது பதி; இது கச்சிமாநகரத்தின் கீழ்க்கோடியிலிருப்பதால் கச்சி என்றதனுடன் சேர்த்துச் சொல்லப்படும். காரைமரம் அடர்ந்த காட்டிலிருப்பதாலும் அங்குச் சேர்ந்தவர்க்குச் சித்தி தருதலாலும் இப்பெயர் பெற்றது. இதற்குச் சத்தியவிரதத் தானம் என்றும் பெயருண்டு. "சத்திய விரதங் காமரத் தருவனஞ் செறிதலாலே, சித்திசேர்ந் தவர்க்கு நல்குந் திருநெறிக் காரைக் காடென், றித்திருப் பெயரி னோங்கு மெனபர்" என்பது காஞ்சிப் புராணம். இவை வரலாறுகளைத் திருநெறிக்காரைப் படலத்துட் பார்க்க. பிரம கற்பத்தில் ஆறுவது மன்வந்தரத்தில் சிபி என்ற இந்திரன் வாழ்க்கையில் வெறுப்புற்று இருவினையொப்பு வாய்ந்ததனால் தன் குருவாகிய வியாழனுடைய உபதேசப்படி இங்கு வந்து வழிபட்டு வீடுபேறு பெற்றனன். அதனால் இஃது இந்திர புரமென்றும், தீர்த்தம் இந்திர தீர்த்தம் என்றும் பெயர் பெற்றன. மதிக்கும் தாரைக் கும் பிறந்த புதன் இங்கு வழிபட்டுக் கிரகநிலை பெற்றனன். இங்குத் தன்வார நாளில் மூழ்கி வழிபட்டோர்க்கு வீடுபேறும் வேண்டும் வரங்களும் தரும்படி இறைவரை வேண்டி அவ்வாறே வரமும் பெற்றனன். இத்தீர்த்தத்தில் புதன்கிழமையில் நீர்மூழ்கி

வழிபடுதல் சிறந்ததாம். இஃது இந்நாளில் திருக்காலீசுவரன் கோயில் என வழங்கப் படுகின்றது. சுவாமி - சத்தியவிரதீசர் - காரைத் திருநாதர்; அம்மை - காமாட்சியம்மை; தீர்த்தம் - சத்தியவிரத தீர்த்தம் - இந்திர தீர்த்தம்; மரம் - காரை; பதிகம் 1.

இது காஞ்சிபுரத்தில் ஆடிசன்பேட்டைக் கடைத்தெருவிலிருந்து வடகிழக்காக ஒரு நாழிகையளவில் வேப்பங் குளத்தின் வடகிழக்கில் உள்ளது.

## திருஅனேகதங்காவதம்

இதற்குப் பிள்ளையார் பதிகம் கிடைத்திலது!

**தலவிசேடம் :—திருஅனேகதங்காவதம்** - தொண்டைநாட்டின் 4-வது பதி. **அனேகதம்** - யானை; விநாயகக் கடவுள் பூசித்த பதியாதலின் இப்பெயர் பெற்றது; வடநாட்டுப் பதியாகிய திருஅனேகதங்காவதம் எனபதனோடு மயங்காமை பொருட்டு இது திருக்கச்சி அனேகதங்காவதம் என்று வழங்கப்படும். இங்குக் குபேரன் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றனர். விநாயகர் காஞ்சியை யடைந்து இங்குத் தம் பெயர் பெற அனேகமேசசுரர் என்ற பெயரால் இலிங்கந் தாபித்து வழிபட்டுத் தம்மை உன்னினர் செயல்களை முடிக்கவும், உன்னலார் செயல்களை ஊறு செய்யவும் வரம் பெற்றதுடன் இறைவர் அருளியபடி இரணியபுரத்தின் அசுரரை வென்று அவர்களது கருவுள்ளே அவர்கள் சத்தியாகிய வல்லபையை வாங்கி மணந்து வீற்றிருந்தருளும் வரலாறுபற்றிக் காஞ்சிப் புராணம் அனேகதங்காவதப் படலம் பார்க்க. சுவாமி - **அனேகதங்காவதேசர்**; அம்மை - காமாட்சியம்மை; பதிகம் 1.

இது கச்சியில் திருவேகம்பத்தின் தென்மேற்கில் புதுத்தெருத் தெருவுக்கு மேற்கே ½ நாழிகையளவில் வயல்வெளியில் உள்ளது.

2899. (வி - ரை) **எண்திசையும் போற்றிசைக்கும் திருப்பதி** - காஞ்சிபுரம்; **அதன்புறத்து** - காஞ்சியின் புறத்தில் மேற்கில் உள்ளதாதலின் மேற்றளி எனப்படும் என்ப.

அண்டத் தலைவர்களான உருத்திரர் நூற்றுவர்களுள் சீகண்டர் முதலிய உலகு காவலர் எண்மர்கள் பூசித்த தலங்கள் 118 உள்ளன; அவற்றுள் **மேற்றளி** என்ப தொன்றும் என்பது காஞ்சிப் புராணம் திருமேற்றளிப் படலம் (4).

**தோல்லை** - உண்டு - என்று கூட்டுக. முன்னுளில் உண்டருளி; **தோல்லை** - துன்பம் என்று கொண்டு துன்பம் செய்யும் விடம் என்று கூட்டி உரைத்தலுமாம்.

**மேற்றளியு முதலான கலந்தேத்தி** - கலந்து - பல தளிகளையும் கூடிச் சார்ந்து; அமரீசத்தின் தெற்கிலும், கச்சிக்காரோணத்தின் மேல்பாலும் இந்த நூற்றுப்பதினெட்டுத் தளிகளும் உள்ளனவாக, அவற்றுள் ஒன்று திருமேற்றளியாதலின், இதனை வணங்கியேத்திய பிள்ளையார் மற்றும் அவைகளையும் கலந்தேத்தினார் என்பதாம். **முதலான** - என்ற கருத்துமிது.

**ஏத்தி** - பிள்ளையாரது பதிகம் கிடைத்திலது!

**மீண்டு** - கச்சிநகரில் மீண்டு; **இனிது இருந்தார்** - இனிதாகத் தங்கி எழுந்தருளியிருந்தார்.

**இனிதேத்தி—**என்பதும் பாடம். 1001

**திருமேற்றளி** - பிள்ளையார் பதிகம் கிடைத்திலது!

**தலவிசேடம் :—திருமேற்றளி** - தொண்டைநாட்டு 2-வது பதி ; இதனைக் கச்சிமேற்றளி எனவும் காஞ்சிமேற்றளி எனவும் வழங்குவர் ; திருமேற்றளி என்பதே ஆசிரியர் கண்ட வழக்கு (2899) ; இவ்வாறன்றித் திருஅனேகதங்காவதம், திருநெறிக் காரைக்காடு என்பவை கச்சிப் பெயருடன் கூட்டியே பதிகங்களுள் வழங்கப்பட்டது காண்க. சிவசாரூபம் பெறும் பொருட்டு விட்டுணுமூர்த்தி இங்கு வழிபட்டு ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளிப் பாடியருளிய பதிகத்தைக் கேட்ட பலத்தினால் சிவன் அருளின் வழி அதனை அடைந்தனர் என்பது காஞ்சிப் புராண வரலாறு (திருமேற்றளிப் படலம்). பதிகத்தைக் கேட்டு உருகி விட்டுணுமூர்த்தி சிவலிங்க உருவமாகி " ஓதஉருகீசுரர் " என்ற பெயருடன் இங்கு எழுந்தருளியுள்ளார் ; இஃது ஒரு சந்நிதி ; தலநாயகரது சந்நிதி வேறாக மற்றொரு சந்நிதியாக உள்ளது ; இக்கோயிலுக்கு நேர் கிழக்கில் ஆளுடைய பிள்ளையாரும், பாடல் கேட்ட மூர்த்திசமூர்த்தியும் எழுந்தருளியுள்ளார் ; ஆளுடைய பிள்ளையாரது சம்பந்தம் பற்றிக் காஞ்சியின் இப்பகுதி பிள்ளையார் பாளையம் என வழங்கப்படும். (குறிப்பு:—பிள்ளையார் திருமேற்றளியின் வழிபட்டுப் பாடியது அவர் புராணம் 1001 பாட்டிலும் அவர் பாடலைக் கேட்டுத் திருமால் உருகிச் சிவசாரூபம் அடைந்தது காஞ்சிப் புராணம் 1002-வது திருவிருத்தத்திலும் வருவது ஒரு சிறந்த பொருத்தமாதல் காணத்தக்கது.) சுவாமி - திருமேற்றளிநாதர் ; அம்மை - காமாட்சியம்மையார் ; பதிகம் 2.

இது திருவேகம்பத்திற்குத் தென்மேற்கில் கற்சாலை வழி ஒரு நாழிகை யளவில் அடையத்தக்கது.

2900. அப்பதியில் விருப்பினொடு மங்கணரைப் பணிந்தமர்வார்
**பிற பதிகளை வணங்குதல்** செப்பரிய புகழ்ப்பாலித் திருநதியின் றென்கரைபோய்
மைப்போலியுங் கண்டர்திரு மாற்பேறு மகிழ்ந்திறைஞ்சி
முப்புரஞ்செற் றவர்தம்மை மொழிமாலை சாத்தினார். க௦௦௨

(இ - ள்) அப்பதியில்...அமர்வார் - அங்குக் காஞ்சிப் பதியிலே மிக்க விருப்பத்துடனே இறைவரை வணங்கிக்கொண்டு விரும்பி எழுந்தருளியிருப்பவராகிய பிள்ளையார் ; செப்பரிய...போய் - சொல்லுதற்கரிய புகழுடன் கூடிய பாலியாற்றின் தென்கரையின் வழியே சென்று, மைப்பொலியும்.. இறைஞ்சி - விடம் விளங்கும் கண்டத்தையுடைய இறைவர் எழுந்தருளியுள்ள திருமாற்பேற்றை மகிழ்ச்சியுடன் வணங்கி ; முப்புரம்...சாத்தினார் - திரிபுரங்களை எரித்த அவ்விறைவரைச் சொன் மாலையாகிய திருப்பதிகம் அணிவித்தருளினார்.

(வி - ரை) அப்பதி - மீண்டு இனிதமர்ந்த திருக்கச்சி நகர், **அமர்வார்** - அமர்வாராகிய பிள்ளையார்.

**அங்கணர்** - காமாட்சியம்மையைப் பாகம்வைத்த தமரும் குறிப்பு. " வானிலவள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினா, லான திரு வறம்புரக்குமம்மை " யாராதலின் அத்தன்மையினை இறைவர்மேற் சார்த்திய குறிப்பு நம்பிகளுக்குக் கண் அருளுவதும் குறிப்பு.

செப்பரிய புகழ்ப் பாலித் திருநதி-பாலிநதியின் புகழும் பெருமையும் பற்றி முன் உரைத்தவை பார்க்க (1098 - 1099 - 1100).

மைப்பொலியுங் கண்டர் - இப்பதியில் சுவாமி பெயர் மணிகண்டேசர் என்பது குறிப்பு.

I திருமாற்பேறு

திருச்சிற்றம்பலம் பண் - பழந்தக்கராகம் - 1-ம் திருமுறை

ஊறி யார்தரு நஞ்சினை யுண்டுமை, நீறு சேர்திரு மேனியர்,
சேறு சேர்வயற் றென்றிரு மாற்பேற்றின், மாறி லாமணி கண்டரே. (1)

மன்னி மாலொடு சோமன் பணிசெயும், மன்னு மாற்பேற் றடிகளை,
மன்னு காழியுண் ஞானசம் பந்தன்சொல், பன்ன வேவினை பாறுமே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:**—திருமால் வழிபட்ட திருமாற்பேற்றின் மணிகண்டரே! உம்மை மேலையார்கள் விரும்புவார், அடியார்கள் விரும்புவார்; வானவர் ஏத்துவர்; உம்மைப் பரவாதாரில்லை; உம்மைப் பரவுவார் வினை பாறும்; அருள் நல்குவீர்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:**—(1) ஊறியார் தரும் - ஊறி - செறிந்து; கேடு நிறைந்து; மணிகண்டர் - இத்தலச் சுவாமி பெயர், "மையார் நஞ்சுண்டு" (3); "நீலமார் கண்ட" (4);—(2) அடியார்கள் அடைவாராம் என்று எழுவாய் தொக்கு நின்றது;— (3)பை-நச்சுப்பை;—(4) மேலையார்கள்-ஞானத்தால் மேம்பட்ட பெரியோர்கள்;—(5) ஏறவே - தாமகள் வாழவே;—(6-7) அரையனே - அரசரே;—(8) ஒல்கிடக் கெடுத்தவன் - ஒல்குதல் - வலி குறைதல்; கெடுதல்,—(9) ஒருவரால் - ஒருவராலும்; முற்றுமமை தொக்கது. பாறும் - கெடும்; அழியும்;—(10) கோள்ளேலும் - பொருளாகக் கொள்ளற்க; கொள்ளேல் என்பது ஈற்றயல் குறுகிக் கொள்ளெல் என நின்றது;—(11) மாலொடு சோமன் பணி செய - மாலும் சோமனும் வழிபட்டமை தல வரலாறு விசேடம்; மால் வழிபட்டுப் பகைவரை வெல்லச் சக்கரம் பெற்றனர் என்ற வரலாற்றை முன் "மாலி ஞர்வழி பாடுசெய் மாற் பேறு" (4) என்ற பாட்டிலும் கூறப்பட்டது. அரசுகளது திருக்குறுந்தொகையும், தலவிசேடமும் பார்க்க.

II திருமாற்பேறு

திருச்சிற்றம்பலம் பண் - வியாழக்குறிஞ்சி - 1-ம் திருமுறை

குருந்தவன் குருகவன் கூர்மை யவன
பெருந்தகை பெண்ணவ னாணு மவன
கருந்தட மலர்க்கண்ணி காதல் செய்யு
மருந்தவன் வளநகர் மாற் பேறே. (1)

அந்தமின் ஞானசம் பந்தனல்ல
செந்திசை பாடல்செய் மாற்பேற்றைச்
சந்தமின் றமிழ்கள்கொண் டேத்தவல்லார்
எந்தைதன் கழலடி யெய்துவரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:**—இறைவர் எழுந்தருளிய வளநகர் மாற்பேறே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:**—(1) குருந்து - குருகு - கூர்மை - இளமையும், மூளையும், அதன் உள்ளீடாகிய உயிர்ச் சத்தும். பெருந்தகை - பெண் - ஆண் - அவ்

விளைமையைத் தோற்றுவித்தற் காரணமான பெண்ணும் ஆணும். கூர்மை - பெருந் தகை - "சிறுமையொடு பெருமையுமாம் பேராளன்" (தேவா); மருந்து - பிறவி நோய் தீர்ப்பவனாதல் குறிப்பு ;—(2) பாறு - கழுகு ; மாறிலி - பெயர் ; ஒப்பிலாதவர் ;—(5) துறை - தொழில் - உயிர் முயற்சிகள் செல்லும் துறைகளும் செயல்களும். அவன் - பற்றுக்கோடாகி இயக்குபவன் ;—(8) பாதி - பெரியவன்.

தலவிசேடம் :—திருமாற்பேறு - III - பக்கம் ௩௫௩ பார்க்க.

2901. திருமாற்பே றுடையவர்தந் திருவருள்பெற் றெழுந்தருளிக்
திருவல்லம் கருமாலுங் கருமாவாய்க் காண்பரிய கழல்தாங்கி
வருமாற்றன் மழவிடையார் திருவல்லம் வணங்கித்தம்
பெருமாற்குத் திருப்பதிகப் பெரும்பிணையல் அணிவித்தார். ௩00௧

(இ - ள்) திருமாற்பேறு உடையவர்தம்... எழுந்தருளி - திருமாற்பேறுடைய இறைவரது திருவருள் விடைபெற்று அங்குநின்றும் எழுந்தருளிச் சென்று; கருமாலும்... வணங்கி - கரிய நிறமுடைய விட்டுணுவும் காம பன்றியுருவெடுத்துக் காண இயலாத திருவடிகளைச் சுமந்து வரும் வலிமை பெற்றுள்ள இளமையுடைய இடபத்தினையுடைய இறைவரது திருவல்லம் என்னும் பதியினை வணங்கி, தம்பெருமாற்கு... ...அணிவித்தார் - தமது பெருமானுக்குத் திருப்பதிகமாகிய பெரிய மாலையினை அணிவித் தருளினார்.

(வி - ரை) திருவருள் பெற்று - திருவருள் விடை பெற்று.

கருமாலும்... மழவிடையார் - கருமா - பன்றி; பன்றியுருவெடுத்துத் தேடிய போது இறைவரது கழல்கள் திருமாலுக்குக் காணப்பரிதாயின. ஆனால் அத்திருமால் விடையாயினபோது காண்பது மட்டுமேயன்றித் தாங்கிவரு மாற்றலும் வந்தது என்பதாம். ஆணவம் முற்பட்டபோது வெளிப்படாத இறைவர் அடிமைத்திறத்தின் முன் வெளிப்படுவர் என்பது குறிப்பு; கருமாலும் ஆற்றல் பெற்ற மழவிடை என்று கூட்டிப் பொருள் கொள்க, உம்மை உயர்வுசிறப்பு. கருமாலும் .கழல்தாங்கி - இவ்வடி முற்றுமோனை.

திருவல்லம் வணங்கி - முதலிற் பதியினை வணங்கி, "திருவல்லம் கண்டு சென்று" (11) என்ற பதிகக் குறிப்பும் காண்க.

பெரும் பிணையல் அணிவித்தார் - பிணையல் - மாலை, பிணைத்தலால் வருவது பிணையல்; பிணையல் என்றதற்கேற்ப அணிவித்தார் என்றார்.

மருவாற்றல்—என்பதும் பாடம் 1008

## திருவல்லம்

திருச்சிற்றம்பலம்  பண் - வியாழக்குறிஞ்சி - 1-ம் திருமுறை

எரித்தவன் முப்புர மெரியின்மூழ்கத், தரித்தவன் கங்கையைத் தாழ்சடைமேல்,
விரித்தவன் வேதங்கள் வேறுவேறு, தெரித்தவ னுறைவிடந் திருவல்லமே. (1)

கற்றவர் திருவல்லங் கண்டுசென்று, நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன,
குற்றமில் செந்தமிழ் கூறவல்லார், பற்றுவ ரீசன்பொற் பாதங்களே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :—** முப்புரமெரித்தவன் - விரித்தவன் வேதங்கள் வேறு வேறு தெரித்தவன் - உலகுக்குத் தாயவன் - பெய்தவன் பெருமழை உலகமுய்யச் செய்தவன் - சார்ந்தவர்க் கின்பங்க ளிழைக்கும் வண்ணம் நோக்கவன் - பெரியவன் - என்றின்னோரன்ன தன்மைகளா லறியப்படுகின்ற இறைவ னுறைவிடம் திருவல்லமே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—**(1) எரித்தவன் - தரித்தவன் - விரித்தவன் - பயனிலைகள் முன்வந்தமை திருவருளின் விரைவுக் குறிப்பு. திருமாற்பேற்றைக் கும்பிட்டு இங்குப் போந்தருளிய பிள்ளையார் அத்திருப்பதியின் "குருந்தவன" என்ற பதிகப் பண் - கட்டளை - சந்தமாதிய அமைப்புக்களுடன் இங்குப் பதிகம் அருளிய நயம் காண்க. கண்டு சென்று (11) என்றமையால் இப்பதிகம் பதியின் புறத்தே அருளியதென்பது கருதப்படும். "திருவல்லம் வணங்கி" (2901) என்று ஆசிரியர் இதனைக் குறிப்பா லுணர்த்துதலும் காண்க. வேறுவேறு தெரித்தவன் - அவ்வவர் பக்குவத்துக்கேற்ப வெவ்வேறாகச் சமயங்களையும் சமயநூல்களையும் வேதங்களினின்றே விரிக்குமாறு தெரிவித்தவன், இது சைவத்தின் சிறப்பாகிய கருத்து ;—(2) தாயவன் - தாய் போன்றவன், உலகங்களைத் தனது சத்தியாகிய மாயையினின்று தோற்றுவிப்பவன் ; எல்லாம் ஆயவன் - "அவையே (தானே)யாய" என்றது சிவஞானபோதம் 2-ம் சூத்திரம் ; சேயவன் - விளங்காதவன் ;—(3) போதகம் - யானை ;—(4) கொய்தவன் மலரடி...வணங்க வைத்து - தம்மடியவரை வானவர் வணங்கவைப்பன ; திருமகள் - அடியவரைத் திருமகள் சார்ந்து பணி கேட்பள் என்பது. பெய்தவன்... செய்தவன் - மழையாய்ப் பெய்து உலகம் காப்பவன் ;—(5) தேர்ந்தவர் தேடுவார் தேடச் செய்தே - "நிகழ்ந்தவர் நேடுவார் நேடச் செய்தே" (8) - அன்புடன் தன்னைத் தேடுகின்றவர்க்குப் பின்னும் அறிவும் ஆசையும் கொடுத்துத் தன்னைப் பற்றச் செய்பவர் ;—(6 - 7) மாமுனி-மார்க்கண்டேயர் ;—(9) காணவொண்ணாத் தெரியவன் - காணலாகாத தோற்றமுடையவன் : தெரி - தோற்றம் ;—(10) அன்றிய - பகை பூண்ட ;—(11) கற்றவர் திருவல்லங் கண்டு சென்று - கற்றவர் - அடிமைத்திறங் கற்ற பெரியோர். மறைகளைக் கற்றுத் துறைபோகியவர் ; பதிக முதற்பாட்டுப் பார்க்க. "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை" (திருவிசை); கண்டு சென்று-சொன்ன - கண்டு வழிபட்டுச் சென்றபின் பதியை எண்ணியருளிய என்பது குறிப்பு.

**தலவிசேடம் :—** திருவல்லம் - தொண்டை நாட்டின் 10-வது பதி. திருவலம் என்று வழங்குகின்றது. "தீக்காலி" என்ற அவுணன் வழிபட்டுப் பேறுபெற்ற பதி என்ற காரணத்தால் இது "தீக்காலி வல்லம்" எனவும் வழங்கப்படும் ; ("தீக்காலி" தனியாய் அடுத்து வடபுறம் உள்ளது) நவக்கோள்கள் இங்குப் பூசித்துப் பேறு பெற்றன என்பதும் வரலாறு. சுவாமி - வல்லநாதர் ; அம்மை - வல்லாம்பிகை ; கோயில் தென்பாலாற்றின் வடகரையில் - பொன்னையாறு - நிவாநதிக் கரையில் அழகாக அமைந்துள்ளது ; தீர்த்தம் - பாலாறு ; பதிகம் 1.

இது காட்டுப்பாடிக்கும் அரக்கோணத்துக்கு மிடையில் உள்ள திருவலம் என்ற நிலயத்தினின்றும் வடகிழக்கே கற்சாலை வழி ½ நாழிகையளவில் அடையத்தக்கது.

**திருஇலம்பையங் கோட்டூர்**

2902. அங்குள்ள பிறபதியி னரிக்கரியார் கழல்வணங்கிப்
பொங்குபுனற் பாலயாற்றின் புடையிலவட பாலிறைவர்
எங்குமுறை பதிபணிவா ரிலம்பையங்கோட் டூரிறைஞ்சிச்
செங்கண்விடை யுகைத்தவரைத் திருப்பதிகம் பாடினார். ௧௦௦௪

(இ - ள்) அங்குள்ள...வணங்கி - அவ்விடையின் உள்ள பிற பதிகளிலே திருமாலுக்கு மறிவரிய இறைவரது திருவடிகளை வணங்கி மேற்சென்று ; பொங்கு புனல்... ...பணிவார் - பொங்கும் நீர்ப்பெருக்கினையுடைய பாலியாற்றின் அருகாக வடபுறத்திலே இறைவர் எங்கும் எழுந்தருளிய பதிகளை வணங்குவாராகி ; இலம்பையங் கோட்டூர்...பாடினார் - திருவிலம்பையங் கோட்டூரினை வணங்கிச் சிவந்த கண்களையுடைய இடபத்தை ஊர்தியாகச் செலுத்திய இறைவரைத் திருப்பதிகம் பாடித் துதித்தருளினார்.

(வி - ரை) அங்கு உள்ள பிற பதிகள் - அங்கு - அவ்வருகாமையில் - அணிமையில் ; இவை திருக்கரபுரம், விரிஞ்சிபுரம், மகாதேவமலை, தீக்காலி (சிக்காலி), வள்ளிமலை முதலாயின என்பது கருதப்படும்.

பொங்குபுனல் பாலியாற்றின் புடையில் வடபால் - பொங்குபுனல் - பெரும்பாலும் மேலே நீர் இடையீடின்றி ஊற்றின் மூலம் காலங்களில் பொங்கி வரும் நீருடைய ; இதன் முன் (1099) உரைத்தவை பார்க்க. புடையில் வடபால் - காவிரியிற் போல ஆற்றின் கரையினையே சார்ந்து செல்லாது ஆற்றின் வடபக்கம் நாட்டினுள்ளாகப் பலவிடத்தும்.

உகைத்தல் - செலுத்துதல். "பெருந்துறைப் பெருந்தோணி பற்றி யுகைத்தலும்" (திருவா) ; "ஏறுகந் தேறிய நிமலன்" (1 - 2 - 7) என்ற பதிகக் குறிப்பு.

பிற பதிகள்—உயர்ந்தவரை—என்பனவும் பாடங்கள். 1004

திருஇலம்பையங் கோட்டூர்

திருச்சிற்றம்பலம் பண் - குறிஞ்சி - 1-ம் திருமுறை

மலையினார் பருப்பதந் துருத்திமாற் பேறு மாசிலாச் சீர்மறைக் காடுநெய்த் தானம்
நிலையினா னெனதுரை தனதுரை யாக நீறணிந் தேறுகந் தேறிய நிமலன்
கலையினார் மடப்பிணை துணையொடுந் துயிலக் கானலம் பெடைபுல்கிக் கணமயி லாலும்
இலையினார் பைம்பொழி லிலம்பையங் கோட்டூ ரிருக்கையாப் பேணியென் னெழில்கொள்வ
தியல்பே. (1)

கந்தனை மலிகனை கடலொலி யோதங் கானலங் கழிவளர் கழுமல மென்னும்
நந்தியா ருறைபதி நான்மறை நாவ னற்றமிழ்க் கின்றுணை ஞானசம் பந்தன்
எந்தையா ரவர்கழ லிலம்பையங் கோட்டூ ரிசையொடு கூடிய பத்துமவல் லார்போய்
வெந்துயர் கெடுகிட விண்ணவ ரோடு வீடுபே றினமையின் வீடெளி தாமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பருப்பதம் முதலிய பதிகளில் நிலையினான், பாலன் - விருத்தன் - பசுபதி, நீருளான் - தீயுளான், அகத்தத்துளளான், நினைப்பவர் மனத்துளான் என்றின்னோரன்ன தன்மைகளாற் போற்றப்படும் இறைவன் எனதுரை தனதுரையாகக் கொண்டு இலம்பையங் கோட்டூர் இருக்கையாப் பேணி என் எழில்கொள்வதியல்பே.

குறிப்பு :—இத்திருப்பதிகம் சைவத்திறத்தின் சிறந்த பல உண்மைகளை எடுத்துக் காட்டி நிற்கும் சிறப்பு வாய்ந்தது , இறைவரது எங்குநிறைந்த தன்மை ; பிள்ளையாரது உரையினையே தமது உரையாக இறைவர் கொண்டு வெளிப்படுத்தும் தன்மை (பிள்ளையார் வாக்கு இறைவர் வாக்கே) , பிள்ளையார் நற்றமிழுக் கின்றுணையாதல் - அன்புடை யடியாரை இறைவர் பசுபோத மிழக்கச் செய்து தாமாந்தன்மை செய்தல்; முதலியவை காண்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **மலையினூர் பருப்பதம்** - சீபர்ப்பதம். **கலைமடப் பிணை** - பெண்மான்; **துணை** - ஆண்மான். **கணமயில்** - மயிற் கூட்டம். **எழில் கொள்வது இயல்பு** - வசீகரித்தத் தம்வயமாக்குதல் அவர் தன்மை;—(2) **குவளை மதிமுகத் துலவுதல்** - முகத்தில் குவளை போன்ற கண்கள் பிறழ்தல்;—(3) **காலன்** - காலை உடையவன்; காலத்தைச் செலுத்துபவன் (காலம் - கால தத்துவம்);—(4) **சிலம்ப** - எதிரொலி செய்ய; **கலை** - கலைமான்;—(6) **அடியவர்க்கு - உண்பிலான்** - பலி திரிதல் தம்பொருட்டன்றி அடியவர்க் கருளும்பொருட்டேயாம் "அடியார் இரந்துண்டு தன்னடி வெட்டச் செய்தானே" (திருமந்.);—(9) **கிளர் மழை தாங்கினான்** - "குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன்" (திருவாய்மொழி), திருமால்; **உளமழை** - உள்ளத்தினின்று மழைபோல வெளிப்படும்; **உளம்அழை** - உள்ளத்துள் நின்று அழைப்பவன் - (Inner voice) "உள்ளத்தினுள்ளே நின்ற கருத்தாம்" (தாண - சருக்கரை) **கருத்து** - இடித்துக் கூறுதல் என்றலுமாம் (வ. சு. செ.);—(11) **நந்தியார்** - இறைவர்; **நான்மறை ஞானசம்பந்தன்** - மறையவர் குலம் குறித்தது; மறையினையே தம் வாக்கினுறற் தமிழ் பாடுவார் என்றதும் குறிப்பு; "நற்றமிழ்க் கின்றுணை" என உடனருளிய கருத்துமிது "வண்டமிழ்ச்செய் தவம்" (1921) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

**தலவிசேடம்** :—**திருவிலம்பையங் கோட்டூர்** - தொண்டை நாட்டின் 13-வது பதி. இது அரம்பை முதலியோர் வழிபட்டுப் பேறுபெற்ற பதி. அரம்பையங் கோட்டூர் என்று அசுகாரணத்தால் போந்த பெயர் மருவி இலம்பையங் கோட்டூர் என வழங்கலாயிற்று. சுவாமி - **சந்திர சேகரர்**; அம்மை - **கோடேந்துமுலையம்மை**; பதிகம் 1. அம்மை பெயருடன் சேர்த்துக் கோட்டூர் என்று வழங்கியதுபோலும்.

இது கடம்பத்தூர் நிலையத்தினின்றும் தெற்கே மட்சாலை வழி 7 நாழிகையில் அடையத் தக்கது. இவ்வழியில் திருவிற்கோலம் என்னும் கூவம் 5 நாழிகையளவில் உள்ளது. வழி கடினம், இடையில் கூவம் ஏரியில் தண்ணீர் இல்லாத காலத்தில் குறுக்கே ஏரி வழியாய்ச் சென்றால் ஒருநாழிகை யளவில் அடையலாம். **குறிப்பு** :— இவ்வூர் இப்போது சிறித்தவர்களால் மிகவும் குடியேறப்பெற்றுள்ளது. அருச்சகர் முதலியவர் கூவத்தினின்று வந்துதான் வழிபாடு நடைபெற வேண்டும். அரிய திருப்பதிகத்தினுள் அரிய பண்ணில் மிக அரிய பொருள்கள் காட்டிப் பிள்ளையார் போற்றிய இப்பதியை நாட்டுக்கோட்டை நகரத்தார் பலர் முயற்சியால் திருப்பணி செய்து 1948-ல் குடமுழுக்கு விழா நடந்தேறியது

**2903.** திருத்தொண்டர் பலர்சூழத் திருவிற்கோ லமும்பணிந்து
பொருட்பதிகத் தொடைமாலை புரமெரித்த படிபாடி
அருட்புகலி யாண்டகையார் தக்கோல மணைந்தருளி
விருப்பினுடன் றிருவூறல் மேவினார் தமைப்பணிந்தார். ௬௦௩

**திருவிற் கோலம்**

(இ - ள்) திருத்தொண்டர்...பாடி - திருத்தொண்டர்கள் பலரும் தம்மைச் சூழ்ந்து வரச் சென்று திருவிற்கோலப் பதியினையும் பணிந்து மெய்ப்பொருள் காட்டும் திருப்பதிகத் தொடைமாலையினை இறைவர் திரிபுரமெரித்த நிலைபற்றித் துதித்துப் பாடியருளி; அருட்புகலி ஆண்டகையார்...பணிந்தார் - அருளினையுடைய சீகாழி ஆண்டகையார் தக்கோலப் பதியினை அணைந்து விருப்பினுடனே அங்குத் திருவூறலிற் கோயில்கொண்டு பொருந்தி யெழுந்தருளிய இறைவரை வணங்கியருளினார்.

(வி - ரை) திருவிற்கோலம் - இது கூவம் என வழங்கப்படுகின்றது.

பொருட் பதிகத் தொடைமாலை - பொருள் - உண்மைப் பொருள். பொருட் பதிகம் - உண்மைப் பொருள் காட்டுதலை உட்கிடையாகக் கொண்ட பதிகம். இப் பதிகத்தின் உட்கிடையாவது புரமெரித்தபடியினைப் பாடுதலாம். முப்புரமெரித்தல் - உயிர்களுக்கு மும்மலஞ் சிதைத்தல் என்பர் திருமூல தேவர்.

புரமெரித்தபடி பாடி - படி - நிலைமையினை - படியினை - இரண்டனுருபு விரிக்க. புரமெரித்தல் - பதிகக் குறிப்பும் தலவிசேடமும் பார்க்க.

தக்கோலம் - பதியின் பெயர்; வழக்கில் உள்ளது.

திருவூறல் - இறைவர் திருக்கோயில் கொண்ட இடம்.

விருப்பினுடன் திருவூறல் மேவினார் - திருவூறலினை எப்பொழுதும் விளங்கப் பொருந்தியருளும் இறைவர், இங்குக் கங்காதீசுவரர் கோயிலைச் சுற்றிலும் எப்போதும் நீரூற்றுப் பெருகிட இறைவர் மகிழ்ந்து எழுந்தருளும் நிலை குறித்தது. "அமர்ந்த பிரான்" (பதிகம் 7) என்ற குறிப்பு; தலவிசேடம் பார்க்க. ஆண்டகையார் - விருப்பினுடன் - பணிந்தார் - என்று பிள்ளையார்பால் கூட்டி உரைக்கவும் நின்றது கவிநயம். 1005

திருவிற்கோலம் (கூவம் = கூகம்)

*திருச்சிற்றம்பலம்* பண் - காந்தார பஞ்சமம் - 3-ம் திருமுறை

*உருவினா ளுமையொடு மொன்றி நின்றதோர்*
*திருவினான் வளர்சடைத் திங்கள் கங்கையான்*
*வெருவிவா னவர்தொழ வெகுண்டு நோக்கிய*
*செருவினா னுறைவிடந் திருவிற் கோலமே.* (1)

*சிற்றிடை யுமையொரு பங்க னங்கையில்*
*உற்றதோ ரெரியின னொருச ரத்தினால்*
*வெற்றிகொ ளவுணர்கள் புரங்கண் மூன்றையுஞ்*
*செற்றவ னுறைவிடந் திருவிற் கோலமே.* (2)

*கோடலவெண் பிறையனைக் கூகம் மேவிய*
*சேடனைச் செழுமதிற் றிருவிற் கோலத்தை*
*நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன*
*பாடவல் லார்களுக் கில்லை பாவமே.* (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு :—** உமைபங்கன் ஒரு சரத்தினால் அவுணர்கள் புரங்கள் வெந்தறச் செற்றவன் - செருவினான் - உறைவிடம் திருவிற்கோலமே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1)** உருவினாள் - உருவத்தால் நின்றதோர்; செருவினான் - போர்க் கோலத்துடன் நின்றவர், ஈதலப் பெயர்க் குறிப்பும் தலவரலாற்றுக் குறிப்பும் காண்க. 2 - ம் 6 - ம் 9-வது பாட்டுக்களும் பிறவும் பார்க்க ;—(2) வெற்றிசேர் - அதுவரை வெற்றிகொண்டிருந்த,—(3) அத்தயன் - இனைத்தென் றறியவாராத பெருந்தன்மையுடையவர், ஐயன் - பெரியவர்; தலவிசேடம் பார்க்க,—(4) வித்தத்தவன் - வித்தை புகட்டியவன்; வித்தை - பகுதி; உளதாதற் பொருட்டு வித்திடுதல், முனிவர்க்கு அறம் முதலியவற்றை உளவாக்கியவன் ;—(5) மூவர் - அயன், அரி அரன்; கூகம் - பதியின் பெயர்;

விற்கோலம் - கோயிலின் பெயர்; "கூக மேவிய திருவிற் கோலத்தை" (11) என்பது காண்க. கூகம் என்பது கூவம் என மருவி வழங்குவது ;—(7 - 8) சிரித்த வன் - அருள்நகை ; நாளும் வாளுந் கொடுக்கும் நகை ;—(9) ஆற்றலால் உருத் தேரியலன் - தமது தற்போத முனைப்பினால் தேடி யறியவொண்ணாதவர் ;—(10) சீர் மையில் - சிறப்பில்லாத ; நீர்மை - உண்மை.

தலவிசேடம் :—திருவிற்கோலம் - தொண்டை நாட்டின் 14-வது திருப்பதி ; இது கூவம் என வழங்கப்படுகிறது. கூகம் என்பது கூவம் என மருவிற்று ; கூகம் பதியின் பெயரும், விற்கோலம் திருக்கோயிலின் பெயருமாக அறியப்படும். பதிகத் துள் "கூக மேவிய - திருவிற் கோலத்தை" என்பது காண்க. திரிபுர சங்கார காலத்தில் இங்கு இறைவர் வில்லேந்திய கோலத்துடன் வீற்றிருந்தருளியமையால் திருப்பதி விற்கோலம் எனப் பெயர்பெற்றது ; அதுபோழ்து தேரின் கூவரம் (ஏர்க் கால்) சிதைந்தமையால் கூவம் எனலாயிற்று என்பது புராணம் ; சுவாமி யம்மையா ரின் பெயர்கள் பதிகப் பாட்டுக்களும் (2 - 3 - 6 - 7 - 9) புரமெரித்த வரலாறுபற்றி எழுந்த நிலையும் கருதுக ; சுவாமி தீண்டாத திருமேனி ; அதிக மழை, மழையின்மை, போர் முதலிய செய்திகளின் நிகழ்ச்சிகள் அவ்வப்போது சுவாமியின் திருமேனியிற் காணப்படும் நிறத்தினின்றும் அறியப்படும். இதனைப் பதிகத்துள் "ஐயனல் லதிசயன்" என்று குறிப்பிடப்பட்டமை காண்க. சுவாமி - திரிபுராந்தகேசுவரர், அம்மை - திரிபுராந்த நாயகி ; பதிகம் 1. ஐயனும் அம்மையும் கூடியே திரிபுரமெரித்தருளினர் என்பது இருவர் பெயர்களாலும் பதிகம் 1 - 2 - 3 பாட்டுக்களாலும் அறிக.

இது கடம்பத்தூர் நிலையத்தினின்றும் தெற்கில் மட்சாலை வழி 5 நாழிகையளவில் அடையத் தக்கது. இதன் தென்மேற்கில் 2 நாழிகையளவில் திருவிலம்பையங்கோட் டூர் உள்ளது.

2904\. தொழுதுபல முறைபோற்றிச் சுரர்குருவுக் கிளையமுனி
வழுவில்தவம் புரிந்தேத்த மன்னினார் தமைமலர்ந்த
**திருவூறல்** பழுதில்செழுந் தமிழ்மாலைப் பதிகவிசை புனைந்தருளி
முழுதுமளித் தவரருளாற் போந்தனர்முத் தமிழ்விரகர். ௯௦௦௬

(இ - ள்) தொழுது பலமுறை போற்றி - வணங்கிப் பலமுறையும் துதித்து, சுரர் குருவுக்கு...தமை - தேவ குருவாகிய வியாழனுடைய தம்பி சம்வர்த்த முனிவர் குற்றமில்லாத தவம்செய்து போற்றியிட எழுந்தருளியிருந்த இறைவரை ; மலர்ந்த .. ...புனைந்தருளி - அன்பினால் மலர்ந்த பழுதில்லாத செழுமையுடைய தமிழ்மாலையாகிய திருப்பதிக இசையினைச் சாத்தியருளி : முழுதும...தமிழ் விரகர் - எல்லாவற்றையும் படைத்த இறைவரது திருவருள்விடை பெற்றுச் சென்றனர் முத்தமிழ் விரகராகிய பிள்ளையார்.

(வி - ரை) சுரர் குருவுக்கு இளைய முனி - வியாழனுக்குத் தம்பியாகிய சம்வர்த்த முனி. சுரர்குரு - வியாழன்.

வழுவில் தவம் புரிந்து ஏத்த மன்னினார் - சம்வர்த்த முனிவர் இங்குத் தவம் புரிந்து வழிபட்டனர் என்பது தல வரலாறு.

மலர்ந்த - அன்பினால் மனத்தினின்றும் வெளிப்பட்ட ; மாலை என்பதற்கேற்ப மலர்ந்த என்றார்.

இசை புனைதலாவது - இசையுடன் கூடிய பதிகத்தை அருளித் துதித்தல்.

**முழுதுமளித்தவர்** - உலகெலாம் படைத்தவர்; இது மாசங்காரத்தில் எல்லாவற்றை யும் தம்முள் ஒடுக்கிப் புனருற்பவத்தில் மீள உளதாக்கும் முதல்வனுதல் குறித்தது. **அளித்தவர்** - காத்தவர் என்றலுமாம்; எல்லா வரங்களையும் வீடுபேற்றையும் அருள பவர் என்றலும் பொருந்தும். **அளித்தல்** - அளியோடும் கொடுத்தல்.

**போந்தனர்** - மேற்சென் றருளினர். 1006

திருவூறல் (*தக்கோலம்*)

*திருச்சிற்றம்பலம்*                     பண் - வியாழக் குறிஞ்சி - 1-ம் திருமுறை

*மாறிலவு ணரரணம் மவை மாயவோர் வெங்கணையா லன்று*
*நீறெழ வெய்தவெங்க ணிமலனிடம் வினவிற்*
*றேறலிரும் பொழிலுந் திகழ் செங்கயல் பாய்வயலுஞ் சூழ்ந்த*
*வூறல மர்ந்தபிரா னொலி யார்கழ லுள்குதுமே.* (1)

*கோடலி ரும்புறவிற் கொடி மாடக் கொச்சையர்மன் மெச்ச*
*வோடு புனற்சடைமேற் கரந்தான் றிருவூறல்*
*நாடல ரும்புகழான் மிகு ஞானசம் பந்தன்சொன்ன நல்ல*
*பாடல்கள் பத்தும் வல்லார் பரலோகத் திருப்பாரே* (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு** :—இறைவரது இடமாகிய திருவூறலை உள்குதுமே. பதிக மகுடம் பார்க்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) அரணம் - மதிலையுடைய கோட்டை. **ஒலியார் கழல்** - சிலம்பொலிக்கும் கழலணிந்த திருவடி, இடம் வினவில் **அது திருவூறல்**. அதனை அமர்ந்த இறைவனது திருவடியையே உள்குதும் - நினைப்போம். **அமர்தல்** - விரும்பி வீற்றிருத்தல். இதனை "விருப்பினொடுந் திருவூறல் மேவினார் (2903) என் றருளினார் ஆசிரியர் ;—(2) நீலம் நயனம் போந்து அலரும் - நீலமலர்கள் கண்போல மலர்தற் கிடமாகிய ,—(3) அழகார் - திருவூறல் என்று கூட்டுக. வனம் - ஆணவ மலம் ;—(5 - 6 - 7) சண்டேசர் சரிதம் குறித்தது. தாழும் - விரும்பும் - மகிழும். "கோயிலாகத் தாழ்ந்தீரே" (தலைச்சங்கை - தேவா) ,—(8) கறுத்த - சினந்த , மறுக் குறும் - அஞ்சிய ;—(10) பொன்னியல் - துவர் நிறமுடைய புளித்தட்டை - அம ணர்களின் கவள வுணவு வகை ; உடை குறித்தது எனினுமாம். "தேன்"னென - ஒலிக் குறிப்பு. அழகார் - திருவூறல் - என்க, 3-வது பாட்டிற் பார்க்க ,—(11) **மிக்க ஓடுபுனல் சடைமேற்கரந்தான்** - இத்தலத்தின் நீர்ப்பெருக்குக் குறிப்பு.

**தலவிசேடம்** :—**திருவூறல்** (*தக்கோலம்*) - தொண்டை நாட்டின் 12-வது பதி. இது தக்கோலம் என்ற ஊர்ப்பெயரால் விளக்கமாக அறியப்பட்டு வழங்கப்படுகின்றது. **ஊறல்** - இறைவர் எழுந்தருளியுள்ள தானத்தின் பெயர், சுவாமியின் திருவடியி னின்றும் நீர் பெருகிவருவதால் இப்பெயர் பெற்றது. சுவாமி பெயர் **சலநாதேசுவரர்** என வழங்குவதும் காண்க. தேவ குருவாகிய வியாழனுடைய தம்பி சம்வர்த்த முனி வர் தவம் புரிந்து வழிபட்ட வரலாறுபற்றி ஆசிரியர் சேக்கிழார் தமது புராணத்துள் (2904) போற்றியமை காண்க. இத்திருக்கோயில் குசஸ்தலை ஆறு எனும் பழைய பாலாற்றின் (விருத்தக்ஷீர நதி என வடமொழியாக்கி யுரைப்பர்) கரையில் அமைந்துள் ளது. இதனை அடுத்து மதிலோரத்தில் கிழக்கே உள்ள கங்காதரர் சந்நிதி மேற்குப் பிர காரத்தில் இடபத்தின் வாயில் எப்போதும் நீர் பெருகிவருவது தலப் பெருமையைக்

கண்கூடாகக் காட்டுவதாம், பதிகம் 11-வது பாட்டுப் பார்க்க. சுவாமி - உமாபதீசுவரர்; அம்மை - உமையம்மை, பதிகம் 1

இது தக்கோலம் என்னும் நிலையத்தினின்றும் வடகிழக்கே மட்சாலை வழி 4 நாழிகையளவில் அடையத் தக்கது.

2905. குன்றநெடுஞ் சிலையாளர் குலவியபல் பதிபிறவும்
நின்றவிருப் புடனிறைஞ்சி, நீடுதிருத் தொண்டருடன்
பொன்றயங்கு மணிமாடப் பூந்தராய்ப் புரவலனார்
சென்றணைந்தார் பழயனூர்த் திருவாலங் காட்டருகு. கOOஎ

திருவாலங்காடு

(இ - ள்) குன்ற நெடுஞ் சிலையாளர் ..இறைஞ்சி - பொன்மலையினை வில்லாக வுடைய இறைவனார் விளங்க எழுந்தருளிய பல பிற பதிகளையும் நிலையான விருப்பத்துடனே சென்று வணங்கி, நீடு திருத்தொண்டருடன்...திருவாலங்காட்டருகு - பொன் விளங்கும் அழகிய மாடங்களையுடைய சீகாழித் தலைவராகிய பிள்ளையார் அன்பு நீடிய பெருந் தொண்டர்களுடனே பழயனூராத திருவாலங்காட்டின் அணிமையிற் சென்று அணைந்தருளினார்.

(வி - ரை) குன்றம் - மேருமலை; சிலை - வில்; திரிபுர சங்கார காலத்தில் மேருமலையினையே வில்லாக வளைத்து இறைவர் ஏந்தினார் என்பது வரலாறு.

பல்பதி பிறவும் - இவை திருவூறலினின்றும் திருவாலங்காட்டுக்குச் செல்லும் வழியில் இடையில் உள்ளனவும் அணிமையில் உள்ளனவுமாம்; இவை மணவூர், திருஎவ்வளூர் முதலாயின என்பது கருதப்படும்.

திருநீடு தொண்டர் - திரு - சிவன்பாலும் அடியார்பாலும் கொண்ட பேரன்பின் சிறப்பு; நீடுதல் - இடையறாது பெருகுதல்.

பொன் தயங்குதல் - பொன்னால் அழகு செய்யப்பட்டு விளங்குதல்.

பழயனூர்த் திருவாலங்காடு - இவை யிரண்டும் இணைத்தே வழங்கப்படும். தேவாரப் பதிகங்களும் தலவரலாறும் பார்க்க. அருகு - அணிமையில.

அருகு சென்றணைந்தார் - எனக. வினைமுற்று முன் வந்தது ஆர்வ மிகுதியால் நேர்ந்த விரைவுக் குறிப்பு. பிற்சரித நிகழ்ச்சி கருதுக. 1007

வேறு

2906. "இம்மையிலே புவியுளளோர் யாருங் காண,
வேழுலகும் போற்றிசைப்ப, வெம்மை யாளும்
அம்மைதிருத் தலையாலே நடந்து போற்றும்
அம்மையப்பர் திருவாலங் காடா" மென்று
தம்மையுடை யவர் மூதூர்மிதிக்க வஞ்சிச்,
சண்பைவருஞ் சிகாமணியார் சாரச் சென்று,
செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர்
செழும்பதியி னன்றிரவு பள்ளி சேர்ந்தார். கOOஅ

(இ - ள்) "இம்மையிலே...திருவாலங்காடாம்" என்று - இப்பிறவியிலே நிலவுலகத்தவர்கள் எல்லாரும் நேரே காணும்படி, ஏழுலகத்தினுள்ளாரும் துதிக்கும்படி, எம்மை யாட்கொண்டருளும் அம்மையாராகிய காரைக்காலம்மையார் தமது திருத்தலையினாலே நடந்துசென் றடைந்து போற்றியிருக்கின்ற அம்மையப்பர் எழுந்தருளிய பதி

இத் திருவாலங்காடாகும்" என்று உட்கொண்டு; தம்மை...அஞ்சி - தம்மை ஆளுடைய இறைவர் பழைமைபொருந்திய அவ்வூரினைக் காலால் மிதித்து உட்செல்வதற்குப் பயந்து; சண்பை வரும்...சென்று-சீகாழியில் வந்தருளிய தலைவருட் சிறந்தவராகிய பிள்ளையார் அப்பதியினருகு சாரப் போய்; செம்மை நெறி...பள்ளி சேர்ந்தார்; செம்மை நெறியினின்று சிறிதும் வழுவாத தூய ஒழுக்கமுடையவர்கள் வாழ்கின்ற அத்திருப்பதியின் பக்கத்தில் ஒரு செழிய நகரின்கண் அன்று இரவிலே தங்கிப் பள்ளி கொண்டருளினர்.

(வி - ரை) இம்மை - இப்பிறப்பு. யாரும் காண வுலகதும் போற்றிசைப்ப - தலையாலே நடந்து - அம்மை புராணம் பார்க்க (1778 - 1779).

எம்மை ஆளும் அம்மை - காரைக்காலம்மையார் இறைவர் "அம்மை" என அழைத்தருளப்பெற்ற தன்மையால் எம்மை ஆளும் தன்மையுடையார்.

அம்மையப்பர் - அம்மை, அப்பரென்று வழிபட்டவர் என்றும், உமையம்மையுடன் கூடிய அப்பர் என்றும் உரைக்க நின்றது.

திருவாலங்காடாம் என்று - இது அத்திருவாலங்காடு ஆகும் பதி என்று நினைத்து, மிதியாமைக்குக் காரணங் கூறியபடி. அம்மை தலையால் நடந்து போற்றும் பதியைக் காலால் மிதித்தல் தகாதென்பது. அரசுகள் கைத்தொண்டு செய்த திருஅதிகைப் பதியை மிதிக்க அஞ்சி ஆளுடைய நம்பிகள் அப்பதியின் புறத்துச் சித்தவடமடத்தில் துயின்றருள இறைவர் திருவடி சூட்டிய வரலாறு இங்கு நினைவு கூறத்தபாலது. 229-ம் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

சிகாமணியார் - சைவத் தலைவர். தலைவராதலின் சைவத்திறம் இத்தன்மைத்து என்று ஒழுகிக் காட்டியருளினர் என்பது குறிப்பு.

சார - அப்பதியினை அணுக; அருகில்.

செம்மை நெறி வழுவாத செழும் பதி - செம்மை நெறி - மெய்ம்மை நெறி. பதியினரது நெறி வழுவாத தன்மை பதியின்மேல் ஏற்றப்பட்டது. "மெய்ம்மை நிலை வழுவாத மேன்மைநெறி விழுக்குடிமைச் செம்மையினோர்" (1606) என இக்கருத்தை முன்னரே விளக்கியருளினா ராதலின் இங்குச் சுருக்கிக் கூறினர். மெய்ம்மை நிலையும் முன் விரிக்கப்பட்டது; கண்டுகொள்க. மெய்ம்மையே செம்மை - சத்து - எனப்படும். செம்மை சிவத்தன்மை, மேல்வரும் பாட்டும் பதிகமும் பார்க்க.

மாடோர் செழும்பதி - பக்கத்தில் உள்ள ஓர் ஊர்; செழும் பதி - பிள்ளையார் தங்கியருளியமையாலும், அங்குத் திருவாலங்காட்டிறைவர் எழுந்தருளப்பெற்றுத் திருப்பதிகமும் பாடப்பெற்றமையாலும் செழிப்புப்பெற்ற பதி என்பது குறிப்பு. இப்பதி யாது என்று தெரியக்கூடவில்லை. 1008

2907. மாலையிடை யாமத்துப் பள்ளி கொள்ளும்
மறையவனார் தம்முன்பு கனவி லாலங்
காலவனத் தமர்ந்தருளு மப்பர் "நம்மை
யயர்த்தனையோ பாடுதற்" கென் றருளிச் செய்ய
ஞாலமிரு ணீங்கவரும் புகலி வேந்தர்
நடுவிருள்யா மத்தினிடைத் தொழுதுணர்ந்து,
வேலைவிட முண்டவர்தங் கருணை போற்றி
மெய்யுருகித் திருப்பதிகம் விளம்ப லுற்றார்; ௧௦௦௯

2908. "துஞ்சவரு வா"ரென்றே யெடுத்த வோசைச்
சுருதிமுறை வழுவாமற் றொடுத்த பாடல்
எஞ்சலிலா வகைமுறையே பழைய னூரா
ரியம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி
"யஞ்சனமா கரியுரித்தா ரருளா" மென்றே
யருளும்வகை திருக்கடைக்காப் பமையச் சாத்திப்
பஞ்சுரமாம பழையதிறங் கிழமை கொள்ளப்
பாடினார் பாரெல்லா முய்ய வந்தார். ௧௦௧௦

2907. (இ - ள்) மாலையிடை யாமத்து...கனவிலே வந்து - மாலைப்பொழுது முதிய நடுயாமத்திலே பள்ளிகொண்டருளுகின்ற வேதியராகிய பிள்ளையாருடைய கனவிலே எழுந்தருளி வெளிப்பட்டு; ஆலவனத்து...அருளிச் செய்ய - திருவாலங் காட்டில் விரும்பி எழுந்தருளும் அப்பனார் "நம்மைப் பாடுதற்கு மறந்தாயோ?" என்று அருளிச் செய்யவே; ஞாலம்...உணர்ந்து - உலகம் இருணீங்கி யுய்யும் பொருட்டு அவதரித்த சீகாழித் தலைவராகிய பிள்ளையார் நள்ளிருள் யாமத்திலே தொழுதுகொண்டபடியே துயிலுணர்ந்து எழுந்து; வேலைவிடம்..விளம்பலுற்றார் - கடலில் வந்த நஞ்சினை அமுது செய்தருளிய இறைவருடைய திருக்கருணையினைப் போற்றி மெய்புருகித் திருப்பதிகம் பாடலாயினராகி, ௧௦௦௯

2908. (இ - ள்) "துஞ்ச வருவார்..பாடல் - "துஞ்ச வருவாரும்" என்றே தொடங்கிய, ஓசையுடைய வேதத்தின் முறை தவறாதபடி பாடிய பாடலில்; எஞ்ச லிலா வகை..ஏத்தி - குறைவில்லாத வகையினாலே நீதிமுறையின் வழி பழையனூர் வேளாளர்கள் தாங்கள் சொல்லிய சொல்லைத் தவறாது காத்து அருள்பெற்ற சரித்தைச் சிறப்பாகப் பாராட்டிப் போற்றி; அஞ்சனமா கரி உரித்தார்...அமையச் சாத்தி - "கரிய யானையை உரித்த இறைவரது திருவருளேயாகும் இது" என்று அவர் அருள்புரியும் தன்மையைத் திருக்கடைக்காப்பில் பொருந்த வைத்து; பஞ்சுர மாம்...வந்தார் - குறிஞ்சியாழ்ப் பண்ணமைதித் திறமும் கிழமையும் பொருந்தப் பாடியருளினார் உலகமெல்லாம் உய்யும்பொருட்டு அவதரித்த பிள்ளையார். ௧௦௧௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2907. (வி - ரை) மாலையிடை யாமம் - பகலின் இடையாமமும் உளதாதலின் மாலையிடை யென்று பிரித்தோதினார். பிறிதினியைபு நீக்கிய விசேடணம். மாலை கழிந்த இடையாமம். இடை - முன்னைநாளுக்கும் பின்னை நாளுக்கும் இடை. யாமம் - நள்ளிரவு; "கூதிர் யாம மென்மனார் புலவர்" (தொல் - பொரு - அக - 6).

ஆலவனத் தமர்ந்தருளு மப்பர் - "ஆலங்காட் டப்பர்" (புராண வரலாறு - 5) "அம்மையப்பர்" (2906); ஆலங்காட் டிறைவர் திருப்பெயர் இவ்வாறு அப்பர் எனவழங்கப்படுவது; "அவிநாசி யப்பர்" முதலியவை காண்க.

"நம்மை அயர்த்தனையோ பாடுதற்கு" என்று - அயர்த்தல் - மறத்தல்; "ஒரு நாள் அருளாலே அயர்த்தண்ணப் புகுகின்றார்", "எறியா தயர்த்தேன்" (சாக்கியர் புராணம் - 15); "அயர்த்தவாறே" (தேவா). திருவாலங்காட்டின் இறைவரை மறவாது வந்தடைந்தாராதலானும், அங்கு அம்மை தலையால் நடந்து எய்தித் திருவடிக் கீழ் என்றும் இருக்கின்ற நிலையினை மறவாது மனத்துட்கொண்டே பள்ளிகொள்கின்றா ராதலானும், என்றும் திருவடி மறவாப்பான்மையோ ராதலானும், அயர்த்தனையோ? என்றெழியாது பாடுதற்கு என்று அடுத்தக் கூறியருளினார். மறவா நிலையேயாயினும்

பாடுதல் மட்டும் மறந்தது என்றதாம், என்னை? பதியினைக் கண்ட உடன் வணங்கிப் பாடும் நிலையினார் அது செய்யாது திருமனத்துட் கொண்ட நிலையோ டமைந்தனர். தம் ருள் மிகுந்த அடையாளமையும் மனங்கொண்டருளிப் பள்ளிகொண்டனர். இனிப் பாடுதல்தான் எப்பொழுது? என்று நினைவித்தருளியபடியாம்; இதனையே "வழுவிப் போய் நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும்" என்று பதிகத்துப் போற்றியருளினார்.

ஞாலமிருள் நீங்க வரும் - இருள்-சிவனருட் டிறத்தினை மறந்து அறியாமையுட் கிடந்து பாசமயக்கோட்பட்ட உலகும் அவ்வறியாமையாகிய இருள் நீங்கிச் சிவனருள் அறியும் அறிவு பெற்று உய்யும்படி அவதரித்த. இருள் நீங்க வரும் அவர் நடு இரு ளிடைத் தொழுது உணர்ந்து என்ற நயமும் காண்க.

நடு இருள் யாமத்தினிடைத் தொழுது உணர்ந்து - நள்ளிரவு - இறைவர் கனவில் அருளிய காலம்; "துஞ்ச வருவாரும்"; "பகலு மிரவுஞ்சேர் பண்பினரும்" என்ற பதிகக் குறிப்புக்கள் காண்க. தொழுது உணர்ந்து - தொழுதுகொண்டபடியே துயிலுணர்ந்து; "தொழுவிப்பாரும்" என்பது பதிகம்; உணர்ந்து - துயி லுணர்ந்து; கனவு நீங்கி விழிப்பு நிலையில் வந்து "தொழுதெழுவாள்" (குறள்)

வேலை விடமுண்டவர்தங் கருணை போற்றி - அமரர் வேண்ட நஞ்சமுண்ட கருணையாளர். இங்கு அதனின் மேலாய வேண்டாமலே வந்து பணி கொண்டமை யால் அக் கருணைப்பெருக்கினைப் போற்றினர் என்க.

மெய்யுருகுதல் - இறைவர் தமது கருணை மிகுதியால் வலியவந்து ஆட்கொள்ளும் திறத்தினை எண்ணியெண்ணி மனமுருக அதனால் மெய்யும் உருகுதல்.

விளம்பலுற்றார் - விளம்பலுற்றாராகி; முற்றெச்சம். விளம்பலுற்றாராகிப்-பாடி னார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

நடுவிடை யாமத்தினிடை—என்பதும் பாடம். 1009

2908. (வி - ரை) "துஞ்ச வருவா"ரென்றே எடுத்த - "துஞ்ச வருவாரும்" என்றே தொடங்கிய. இது பதிகத் தொடக்கமு என்றே - ஏகாரம். துயிலுணர்ந்த பிள்ளையார் அதனையே கொண்டு "துஞ்ச வருவார்" எனத் தொடங்கிய நிலை குறித் தது; எடுத்த - தொடங்கிய.

ஓசைச் சுருதிமுறை வழுவாமல் தொடுத்த பாடல் - ஓசையையே கொண்டு கேள்வியால் வழிவழி வரும் வேதம்போல அம்முறையில் இப்பதிகமும் நடுயாமத்தில் முதலில் இறைவர் கேட்க அருளுதலும், பின்னர் அணைந்த திருத்தொண்டர் கேட்க மீண்டும் அகமலரப் பாடி அவர்களைக் கேட்பித்து அவ்வழிவழி வருதலும் கருதுக, சுருதி முறை - தெய்வத் திருமுறையாகிய தமிழ் வேதமாக என்றலும் குறிப்பு

எஞ்சலிலா வகைமுறையே...மொழிகாத்த சதை - இக்கதை முன் திருக்குறிப் புத் தொண்ட நாயனார் புராணத்துள் "நற்றிறம் புரி" (1080) என்ற பாடலின் குறிக் கப்பட்டதும், சரிதச் சுருக்கம் ஆண்டு உரைக்கப்பட்டதும் (II - கசOரு - கசOச) காண்க. எஞ்சலில்லா வகை - ஒருவரும் எஞ்சாது; குறையாது, ஒருவரொழியாமே எழுபது பேரும் என்க; குறைவு நேராதவண்ணம். முறை - நீதிமுறை. பழயனூ ரார் - பழயனூர் வேளாளர்; நீதிமன்றத்திருந்து வணிகனுயிர்க்குத் தீங்கு வராது என்று உறுதிகூறித், தீங்கு வரின் எங்கள் எல்லாருடைய உயிரும் அதற்கீடாக உள்ளது என்று தேறறியவர்கள்; பழயனூரார் - இவ்வாறு ஊரார் - நாட்டாண்மையார் - முதலிய தன்மைகளால் - போரூரார் - மணலூரார் - மாங்காட்டார் - என்பனபோன்ற

வழக்குக்கள் தொண்டை மண்டலம் 24 கோட்டங்களில் இன்றும் வழக்கிலுள்ளது அந்நாட்டின் சிறப்பு. ஆசிரியரும் அந்நாட்டினராதல் காண்க.

**இயம்பு மொழி காத்த** - தாம் வாக்கினாற் சொல்லிய உறுதிமொழியை நிறை வேற்றக் கேட்பதற்கு அவ்வணிக னிறந்துபடினும், சொல் தவறாமல் மெய்ம்மையைப் பாதுகாத்த.

**சிறப்பித்து ஏத்தி** - இக்கதை நிகழ்ச்சி வெறும் உலகியல் நீதியாயொழியாது அவர்களுக்கு இறைவரது "திருஅடியின் கீழ் மெய்ப்பேறு பெற" அருளியமையால் அது பிள்ளையாரது மெய்த்திருவாக்கில் சிறப்பித்து ஏத்தத் தக்கதாயிற்று என்பது; "அஞ்சும் பழயனூர் ஆலங்காட்டெம் அடிகளே" என்று இறைவரது சார்புபற்றி எண்ணத்தக்கதாயினமை காண்க.

**பஞ்சுரமாம் பழைய திறங் கிழமைகொள்ள** - **பஞ்சுரம்** - குறிஞ்சி யாழ்த்திறன் வகைகளுள் ஒன்று. **திறம் - கிழமை** என்பன இசைப் பாகுபாடுகள்; முன் (221 - பாட்டின் கீழ் - I பக்கம் - உ௫௦ - உ௫க) உரைத்தவை பார்க்க. **திறம்** - யாழ்வகையும் யாழ்த்திறன் வகையும் என்ற இசைநூல் வகுப்புக் காண்க. **குறிஞ்சி யாழ்** - குறிஞ்சித் திணை (ஒழுக்கத்து)க்கு உரியது. இங்கு நடு யாமமாகிய அத்திணைக்குரிய முதற் பொருளும், இறைவர் கனவில் வெளிப்பட்டு அருளுதலாகிய கூடல் என்னும் குறிஞ்சியின் உரிப்பொருளும் பொருந்தக் காண்க. இப்பதிகம் நடுயாமத்தில் அருளப் பட்டதென்பதும் காண்க; **பஞ்சுரம்** - பழம் பஞ்சுரம் (பிங்கலம்); **பழைய திறம்** - குறிஞ்சி யாழிற் பயின்றுவரும் திறம் என்றது போலும்.

**குறிப்பு** :—ஈண்டு இப்பதிகத்துக்குத் தக்கராகம் பண்ணாக வகுத்துள்ளார்கள்; தக்கராகம் பாலையாழ்த் திறன்களுள் ஒன்று; பாலைக்கு நண்பகல் பொழுதாகிய முதற் பொருளாகலானும் பிரிவொழுக்கம் - உரிப்பொருளாகலானும் இடப்பாகுபாடு ஆராய்ச் சிக் குரியதாம்; ஆயின் கனவின் வந்து அருளிய இறைவர் துயிலுணர்தலும் மறைந் தனராதலின் பிரிவு ஒழுக்கமும், இடையாமமும் நண்பகல் போலவே பகலுமிரவும் கூடும் நடுவணதாகிய பொழுதாகலானும் இவைபற்றிப் பாலை யாழும் பொருந்தக்கூறல் அமைவுபடும் போலும்; அன்றியும், நிலம் என்ற முதற்பொருள் பற்றிக் கான் (திரு வாலங்காடு) மேல்வரும் "வெற்புங் கானும் தொக்கபெரு வன்புலக் கானத்தின்" (2612) தொடர்புடையதாய முல்லையுங் குறிஞ்சியுமடுத்த இடமாகிய பாலைத் திணைக் குரித்தாகக் கூறலும் அமைவுபோலும். இவையும் ஈண்டுக் கருதத் தக்கன; பதிகத் துட் பாலைக்குரிய குறிப்புக்களும் பார்க்க (2 - 4 - 5), "கலந்து பலியிடுவே னெங்குங் காணேன், சலப்பாடே யினியொருநாட் காண்பே னென்கில" என்று கனவிழந் துரைத்தற் றுறையிற் பிரிவொழுக்க நிலை கருதப்படுமாறும் காண்க.

இங்கு இவ்வாறன்றிப், **பஞ்சுரமாம் பழையதிறம்** - பல்லுயிருந் துயர் நீங்கப் பாடி யருளிய பண்ணமைந்த திருப்பதிக விசையாலாய பழமை பொருந்திய பயனை; **கிழமை கொள்ள** - (சமண் பாட்டில் புத்தர் சமணர்கட்கு) முரிமை பொருந்தும்படி - என்றுரைத்து, "திரிவாரும், கேழல் வினைபோகக் கேட்பிப்பாரும்" என்னும் சமண் பாட்டால் அச் சமண புத்தர்கட்குத் திருப்பதிக விசையைப் போக்குமென்பதும் போதருதலின், ஈண்டிந்நூலாசிரியர் அத் திருப்பதிகப் பொருளை விரித்துக் கூறியருளி னர் என்று விளக்கமுங் காட்டினர் ஆறுமுகத் தம்பிரானார்; "பண்ணமைந்த திருப் பதிகவிசையாலாகிய பழமை பொருந்திய பயனை உரிமையாகப் பொருந்த" என்பது ஸ்ரீ. சுப்பராய நாயகரவர்களது பொழிப்புரை. இவற்றின் பொருத்தங்க ளாராயத் தக்கன. 1010

## திருவாலங்காடு

*திருச்சிற்றம்பலம்*

பண் - தக்கராகம் - 1-ம் திருமுறை

துஞ்ச வருவாருந் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரு முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே. (1)

கேடும் பிறவியு மாக்கி னாருங் கேடிலா
வீடு மாநெறி விளம்பி னாரெம் விகிர்தனார்
காடுஞ் சுடலையுங் கைக்கொண் டெல்லிக் கணப்பேயோ
டாடும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே. (2)

சாந்தங் கமழுமறுகிற் சண்பை ஞான சம்பந்
தாந்தண் பழையனூ ராலங் காட்டெம் மடிகளை
வேந்த னருளாலே விரித்த பாட லிவைவல்லார்
சேர்ந்த விடமெல்லாந் தீர்த்த மாகச் சேர்வாரே. (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு :—** ஆசிரியர் (2908) விரித்துக் காட்டியருளியவாறு கண்டு கொள்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—** (1) **துஞ்ச வருவார்** - துயிலும்போது கனவில் வருவார்; **தொழுவிப்பார்** - வேண்டிய பணி கொள்வார்; **வழுவிப்போய்...நினைவிப்பார்** - முன்னமே அறிந்துப் பாட மறந்தமையை மனத்துள் வந்து நினைவுபடுத்திப் பணி கொள்வார்; "நானேது மறியாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்" (தாண்); இவையும் மேல் "வேந்த னருளாலே விரித்த பாடலிவை" (11) என்பதும் சரித வரலாற்றின் சிறந்த அகச்சான்றுதல் காண்க; **முனைநட்பாய்... ...அஞ்சும் பழையனூர்** - "பழையனூரார் இயம்புமொழி காத்த கதை" (2908) என்றது; பழையனூரும் திருவாலங்காடும் அடுத்துள்ளன. இரண்டும் சேர்த்து ஒரு பதியாகப் போற்றப்பட்டன;—(2) **கேடு** - இறப்பு, **ஆக்குதல்** - உயிர்களுக்குப் பிறவி கொடுத்து மலம் போக்குதல்; **கேடிலா...விளம்பினார்** - பிறவி தருதல் வீடுபேறடையச் செய்தற்கு என்பது; **விளம்பினார்** - வேதாகம மாதியவற்றால் அறிவுறுத்தினார்; **காடும்.. ஆடும்** - அம்மை மூத்த திருப்பதிகங்கள் பார்க்க;—(3) **கொந்தண்** - கொந்து தண் என்பது கொந்தண் என நின்றது; அரவிற்றேன்றிக் கோடல் பூத்து-**கோடல்** - காந்தள்; காந்தட்பூ பாம்பின் படம்போல விரியும் என்ப "காந்தள் பாந்தள் காட்ட" - "கோட லரவீனும்",—(4) **பால்வெண்** - பால்போன்ற வெண்மையுடைய; **காலன்உயிர் செற்ற காலன்** - சொற்பின் வருகிலே; **காலன்** - பின்னையது காலினை உடையவன்; காலத்தின் கடவுள் என்றலுமாம்; **கருத்தனார்** என்றது கருத்துமது. **மஞ்ஞை** - மயில்; குறிஞ்சிக் கருப்பொருள்;—(5) **முல்லை** - **குருந்தம்** - முல்லைக் கருப்பொருள். **தேன்** - வண்டுவகை;—(7) **நுணங்கு மறை** - நுணணிய பொருள் கூறும் மறை; **சிறுத்தொண்டர்** - வேளாளர்; "பழையனூர்ச் சிறுத் தொண்டர்" (1080) தொண்டர் முன் சிறியராயடைபவர் என்பது சொற்பொருள் (சிறுத். புரா - 15 பார்க்க), **அணங்குதல்** - அருள் தருதல்.—(8) **பிணை** - பெட்டைமான்; **சிறுமறி** - மான்கன்று; **கலை** - ஆண்மான் இவை பெரும் கூட்டமாய் வாழ்ந்துவரு மியல்பு குறித்தது. மான் - முல்லைக் கருப்பொருள்;—(9) **பரிந்தார்** - பாடல் கேட்டு இரங்கி யருள்கொடுத்தார்,—(10) **பகலு மிரவுஞ்சேர் பண்பினார்** -

பகல் - ஒளி ; இரவு - இருள். " ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடம் " (கொடிக் கவி) ; பகல் - இன்பம் ; இரவு - துன்பம் என்றலுமாம். " சோதியு மாயிரு ளாயி னார்க்குத் துன்பமுமா யின்ப மாயினாருக்கு " (திருவாசகம்) ; நண்பு - அடிமைத்திற மாகிய அன்பு ;—(11) போழும் - மாறுபடும் சொல ; "உண்டு இல்லை" என்னும் புத்த மந்திரம். வேழம் வருமளவும் - மிதன ராசியிற் சூரியன் உள்ள அளவும் ; வெயிலே துற்றி - வெயிலினை உண்டு; சமண குருமார் வழக்குகளுள் ஒன்று ; கேழல் வினை போக-கேழல் - ஒப்பற்ற; வினைகளும் போக; எல்லாருக்கு மிறைவராதலின் அவ்வவர் களுக்கும் வினைப்பயன் கொடுத்தக் கழிப்பிப்பார். வாழ்வர் - வாழ்வுடையவர் ;—(12) வேந்த னருளாலே விரித்த பாடல் இவை - நம்மைப் பாடுதற்கு மறந்தனையோ என்று அருளியபடி பாடிய என்ற சரிதச் சான்று. வேந்தன் - இறைவர் பாட ஆணையிட்டா ராதலின் வேந்தன் என்றார். சேர்ந்தவிடமெல்லாந் தீர்த்தமாக - தீர்த்தம் - தூய்மை செய்வது ; " சென்றடு தீர்த்தங்க ளானார்தாமே " என்ற இப்பதியின் திருத்தாண் டகக் கருத்தும் காண்க.

**தலவிசேடம் :**—திருவாலங்காடு - மூவர் பதிகங்களும் அம்மையாரது மூத்த பதிகங்களும் பெற்ற தனிச் சிறப்புடைய பதி ; தலவிசேடம் III - பக. ருஎகூ - பார்க்க.

2909. நீடுமிசைத் திருப்பதிகம் பாடிப் போற்றி
நெடுங்கங்கு லிருணீங்கி நிகழ்ந்த காலை
மாடுதிருத் தொண்டர்குழா மணைந்த போது
மாலையினிற் றிருவால வனத்து மன்னி
ஆடுமவ ரருள்செய்த படியை யெல்லா
மருளிச்செய் தகமலரப் பாடி யேத்திச்,
சேடர்பயி றிருப்பதியைத் தொழுது போந்து
திருப்பாசூ ரதன்மருங்கு செல்ல லுற்றார். கoகக

2910. திருப்பாசூ ரணைந்தருளி யங்கு மற்றச்
செழும்பதியோ ரெதிர்கொள்ளச் சென்று புக்குப்
திருப் பாசூர் பொருப்பரைய னடப்பாவை யிடப்பா கத்துப்
புராதனர்வே யிடங்கொண்ட புனிதர் கோயில்
விருப்பினுடன் வலங்கொண்டு புக்குத் தாழ்ந்து
வீழ்ந்தெழுந்து மேனியெலா முகிழ்ப்ப நின்றே
அருட்கருணைத் திருவாள னமஞ் "சிந்தை
யிடையா"ரென் றிசைப்பதிக மருளிச் செய்தார். கoகஉ

2909. (இ - ள்) நீடும...போற்றி - எக்காலமும் நீடும் இசையினையுடைய திருப்பதிகத்தினைப் பாடித் துதித்த பின்பு ; நெடுங் கங்குல்...அணைந்தபோது - நீண்ட இரவு இருள் நீங்கி விடிந்தகாலையில் பக்கத்தில் திருத்தொண்டர் கூட்டம் வந்து அணைந்தபோது ; மாலையினில...அருளிச் செய்து - மாலை முதிர்ந்த இரவிலே திருவாலங்காட்டில் நிலைபெறப் பொருந்தி ஆடுகின்ற இறைவர் எழுந்தருளி அருளிச் செய்தபடியினை யெல்லாம் அவர்களுக்குச் சொல்லியருளி ; அகமலரப் பாடி ஏத்தி - அத் திருப்பதிகத்தினை மீளவும் மனமகிழப் பாடித் துதித்தப் பின்பு ; சேடர்பயில்... ...போந்து - பெருமையுடையோர்கள் வாழுகின்ற அந்தத் திருப்பதியினைத் தொழுது

மேலே சென்று; **திருப்பாசூர்...செல்லுற்றார்** - திருப்பாசூர் நகரின் அருகு செல்வாராகி; ௪௦௧௧

2910. (இ - ள்) **திருப்பாசூர்.. புக்கு** - திருப்பாசூரினைச் சேர்ந்தருளி அங்கு அந்தச் செழும்பதியவர்கள் வந்து எதிர்கொள்ள நகரினுள்ளே சென்று புகுந்து; **பொருப்பரையன்...புக்கு** - மலையரசனது மகளாராகிய உமையம்மையாரை இடப் பாகத்திலே வைத்த புராதனரும் மூங்கிலை யிடமாகக்கொண் டெழுந்தருளியுள்ள புனிதருமாகிய இறைவரது திருக்கோயிலினுள் விருப்பத்துடனே வலமாகச் சுற்றி வந்து உள்ளே புகுந்து; **தாழ்ந்து...நின்றே** இறைவரது திருமுன்பு வணங்கி நிலமுற விழுந்து எழுந்து திருமேனி முழுதும் மயிர்ப்புளகம் உண்டாக நின்றே, **அருட் கருணை...அருளிச் செய்தார்** - அருட் கருணையாகிய திருவினை உடைய இறைவரது திருநாமத்தைச் "சிந்தை யிடையார்" என்று தொடங்கி இசையுடன் கூடிய திருப் பதிகத்தினை அருளிச் செய்தனர். ௪௦௧௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2909. (வி - ரை) **நீடும். பாடிப் போற்றி** - **நீடுதல்** - எக்காலத்தும் விளங்குதல்; **இசை** - புகழ் என்றலுமாம், **பாடிப் போற்றி** - முன் கூறியவாறு பாடி முடித்துத் துதித்து.

**நெடுங் கங்குல் இருள் நீங்கி நிகழ்ந்தகாலை** - இறைவர் இடையாமத்து வந்தாராதலின் பின் உள்ள நேரம் நெடுங் கங்குல் எனப்பட்டது. அன்றியும் நல்ல கனவு கண்ட பின்னும், இறைவரைப் பாடியருளிய பின்னும் சிவ சிந்தையுடன் நினைத்திருத்தலன்றிப் பள்ளி கொள்ளலாகாது என்பது மரபாதலானும், தலைவர் கனவில் வெளிப்பட்டுவந் தருளிச்செய்த அருட்டிறங்களை எண்ணிய மிக்க ஆர்வத்தாலும் பள்ளி கொள்ளாமையால் கங்குல் நீண்டது என்று குறிப்புமாம்; **இருள்** - நடுயாம இருளும் புலரி இருளும்; **நிகழ்ந்தகாலை** - வைகறை விடியற்காலை.

**பாடு...அணைந்தபோது** - பிள்ளையாரின் திருவடி தொழுதற்குத் திருத்தொண்டர் அணைந்தனர் எனக.

**மாலையினில்** - மாலை முதிர்ந்த இரவில்; "மாலையிடை யாமத்து" (2907); பகல் இரவு என்ற நாட்கூறிரண்டில் பகலைக் காலை என்றும் இரவை மாலை என்றும் கூறும் வழக்கமுண்மையின் இங்கு **மாலை** என்பது இரவு என்ற பொருளில் வந்ததென்றலுமாம்.

**திருவாலவனத்து மன்னி ஆடுமவர்** - ஐம்பெரு மன்றங்களுள் ஒன்றாய இரத்தின சபை எனப்பெறுவதாய்ச் சிவபெருமான் நித்தியமான ஊர்த்துவ தாண்டவம் செய்தருளும் சிறப்புரிமையுடையதா யிருத்தல் குறிக்க இவ்வாறு கூறினார்

**ஆடுமவ ரருள்செய்தபடியை எல்லாம் அருளிச் செய்து** - "அருளுடையார் அளித்தருளும், செவ்வியபே ரருள்விளம்புந் திறமன்றென் றுரைசெய்யார்" (174) என்ற அம்மையார் புராணக் கருத்தோடு இது மாறுபடாதோ? எனின், படாது; என்னை? அம்மையார்க்கு நிகழ்ந்த அருள் அவர்மட்டில் அமைந்தொன்று, இங்குப் பிள்ளையாரை நினைப்பித்துப் பாடுவித்த அருள் அவர்க்கேயன்றி உலகமறிந்துய்யும் அருளுபதேசமொழிகள் வெளிப்படுத்தற்காம். ஆதலின் அதனை உலகறியச் செய்யவேண்டியது தகுதி என்பது.

**அகமலரப் பாடி ஏத்தி** - அத் திருப்பதிகத்தினையே அவர்களும் உலகமும் அறிந்துய்யும் பொருட்டு மகிழ்ந்து பாடித் துதித்து.

**சேடர் பயில்** - சேடர் - பெருமையுடையோர்; பெருமையாவது "மெய்ம்மை நெறி வழுவாத விழுக்குடிமைச் செம்மை"; சேடர் - அறிவுடையோர் எனறலுமாம்.

**திருப்பதியைத் தொழுது** - உட்புகாமையின் புறத்திருந்தபடியே பதியைத் தொழுது.

**தொழுது போற்றி**—எனபதும் பாடம். 1011

2910. (வி - ரை) **திருப்பாசூர் அணைந்தருளி** - திருப்பாசூர் மருங்கு சென்ற (2909) பிள்ளையார் அந்நகரிற் சேர்ந்து.

**புராதனர்** - "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளா"யுள்ளவர்.

**வேயிடங்கொண்ட புனிதர்** - வேய் - மூங்கில்; சுவாமி இப்பதியில் மூங்கிலடியில் முளைத்து எழுந்தருளியுள்ளார் என்பது தலவிசேடமாதலின் அதுபற்றிக் கூறியருளினார். **பாசு** - மூங்கில். அதுபற்றிப் பாசூர் என்ற ஊர்ப்பெயரும் போந்ததென்பர்.

**முகிழ்த்தல்** - மயிர்ப்புளகம் கொள்ளுதல்.

**அருட்கருணைத் திருவாளன்** - அருட்கருணை - ஒருபொருட் பன்மொழி; மிகுதி குறித்தது; **திரு** - அருட்டிரு; அழியாத முத்தித்திரு எனறலுமாம்.

**நாமம் "சிந்தை யிடையார்" என்று** - சிந்தையிடையார் - தலையின்மிசையார் - செஞ்சொல்லார் - என்மனத்துள்ளார் - மைந்தர் - மணாளர் - முதலியனவாகப் பதிகத்துக் கூறப்படுவன எல்லாம் அவரது திருநாமங்களேயாகி, அவற்றை எடுத்துச் சொல்லிப் போற்றியது பதிகக் குறிப்பு என்றவாறாயிற்று.

**இசைப் பதிகம்** - இசையுடன் கூடிய பதிகம் இசை - புகழ் என்றலுமாம்; இசைப்பா என்புழிப்போல. 1012

**திருப்பாசூர்**

திருச்சிற்றம்பலம் பண் - காந்தாரம் - 2-ம் திருமுறை

சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாளர் என்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவிச் சோலை சூழ்ந்த பாசூரே. (1)

ஞான முணர்வான் காழி ஞான சம்பந்தன்
தேனும் வண்டு மின்னிசை பாடுந் திருப்பாசூர்க்
கானம் முறைவார் கழல்சேர் பாட லிவைவல்லார்
ஊன மிலராய் உம்பர் வானத் துறைவாரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—அருட்கருணைத் திருவாளனுமஞ் "சிந்தை யிடையார்" என்பது முதலியனவாகப் போற்றியது என 2910-ல் ஆசிரியர் காட்டியருளினார்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **சிந்தை இடையார்** - சிந்தையினை இடமாகக் கொண்டுள்ளவர். இடையார் - மிசையார் - சொல்லார் - முதலியனவாக இப்பதிகப் பாட்டுக்களதோறும் வருவனவெல்லாம் இறைவரது பேரருட்டன்மைகளைப் பற்றி எடுத்துக் கூறும் வகையால் அடியார்கள் சொல்லிப் பரவு நாமங்களாம் என்றவாறு; **சிந்தையிடையார்... தலையின்மிசையார்** - "சிந்தையி னுள்ளுமென் சென்னியி னுஞ்

சேர, வந்தவர் வாழ்க'' (திருவுந்தி - 45) ; மாலை வைகும்போது - பள்ளிகொள்ளும் போதும் ; சிறப்பும்மை தொக்கது. மாலை - துன்பத்துக்குக் குறியீடாகக் கொண்டு; துன்பம் வந்தபோதும் என்றலுமாம். என் மனத்துள்ளார் - மறவாநிலை குறித்தது. திருவாலங்காட்டி லருளிய நினைவுக் குறிப்புமாம்,—(2) பெரும்பொழுது - பெயரும் பொழுது - இன்ப துன்பங்களாகிய நிலை குறித்தது. பேர்தல் - உள்ளக் கிளர்ச்சியுற்று மகிழ்தல் ; பெயர்தல் - அந்நிலை மாறுதல் ; " இடரினும் தளரினும் " (திருவாவடுதுறை) என்ற பதிகக் கருத்துக் காண்க. ஆர்தல் - உள்ளம் அமைவுபடுதல் ; துணை - அளவு குறிப்பது ; பாரின் மிசையார் - உலகத்துள்ளார்களது ;—(3) கையால்... ...கசிவார்கள் - வழிபடுநிலை ; மெய்ப்பார் துறை - உடம்பு வருந்தச் செய்வதாகிய குறைபழவினை. நெய்யாடுதல் - இங்குத் திருமஞ்சனம் என்ற பொருளில் வந்தது; அஞ்சு - ஆனைந்து ; நாகம் - நாகம் போன்ற தோற்றம் ; ஈனும் - காட்டும் ,—(4) பொங்குதல்-ஆடுதல் - இரண்டு தன்மைகளும் அரவு - புனல் இரண்டற்குமுரியன. புனல் - கங்கை ; புனல் ஆடுதலாவது அசைந்திழிந்து ஓடுதல் ; ஆடுதலுமாம். பைங்கான் - பசிய காம்பு , கான்-காடுமாம்,—(5) சேடச் செல்வர் - ஞானிகள் ; கானின்றதிர - ஒரு காலால் நின்றுதலால் உலகம் அசைவுகொள்ள. " கழலொலி யோசைச் சிலம்பொலிப்பக் காலுயர் வட்டணை யிட்டுநட்டம்" (அம்மை. மூத்த. பதிகம் - நட்டப்பாடை - 7) ; மால் - இறைவன்பாலுள்ளத்த ஆசை மயக்கம் ; " பித்துப் பத்தரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும் மெய்த்தவர் " (போதம்) ; ' மருளார் மனத்தோ டுன்மத்தனே " (திருவா - பிரா - 3) ; மையால் - உலக மயக்கம் ; இஃது ஆணவத்தாலாவது ;—(7) கண்ணினயலே கண் ஒன்று - நெற்றியில் உள்ள அன்றகண் ;—(9 நகுவாய் - விரிந்த வாயினையுடைய , இதழ் விரிந்த. ஓரார் - ஓராராகி ; ஓர்ந்து. ஓவார் - ஒழியார். செகுவாய் - செகுத்தல் ; இறந்துபடல்; இறத்தலால் வாய்த்த. பல் - உகு எனக ;—(10) தூய வெயில் - பொருள்களைத் தூய்மை செய்வது சூரியன் கதிர்கள் என்பது. வெய்ய - வெவ்வியன - கொடியனவாகிய - சொற்களை , அகரவீற்றுப் பலவறிசொல் , இரண்டனுருபு தொக்கது. காவல் - காவலுடைய மும்மதில் , ஆகுபெயர். பாவைக் குரவம் - பாவை போன்ற உருவுடைய குராமலர் ; "குரவம்பாவை" பிள். தேவா - குறநூலம் - குறிஞ்சி) ,—(11) தேன் - வண்டு வகை.

தலவிசேடம் :—திருப்பாசூர் - III பக் ௬௪௯ பார்க்க.

2911\. மன்னுதிருப் பதிகவிசை பாடிப் போற்றி,
வணங்கிப்போந் தப்பதியில் வைகி, மாடு
திருக் காளத்தி பின்னுகாதம் வெண்பாக்க முதலா யுள்ள
பிறபதிகள் பணிந்தணைவார் பெருகு மன்பால்
முன்னிறைந்த திருவாய்மஞ் சனநீ ராட்டும்
முதல்வேடர் கண்ணப்ப நாய னாரை
யுன்னியொளிர் காளத்தி மலைவ ணங்க
வுற்றபெரு வேட்கையுட னுவந்து சென்றார். ௧௦௧௧

(இ - ள்) மன்னு...வைகி - நிலைபெற்ற இசையுடைய திருப்பதிகத்தினைப் பாடித் துதித்து வணங்கிச் சென்று அந்தத் திருப்பதியில் தங்கியிருந்து ; மாடு...பணிந்தணைவார் - பக்கத்தில் இறைவர் எழுந்தருளிய திருவெண்பாக்கம் முதலாகிய பிற பதிகளையும் பணிந்து சேர்வாராகி ; பெருகும...உன்னி - பெருகும் அன்பினால் முன்னே

திருவாய் நிறைந்த நீரினாலே இறைவரைத் திருமஞ்சனநீராட்டும் முதல்வராகிய வேடர் கண்ணப்ப நாயனாரை நினைந்து; ஒளிர்...சென்றார் - விளங்கும் திருக்காளத்தி மலையை வணங்குதற்குப் பொருந்திய பெரிய விருப்பத்துடனே மகிழ்ந்து சென்றருளினார்.

(வி - ரை) அப்பதி - திருப்பாசூர். மாடு...பிற பதிகள் - மாடு - பக்கத்தில. வெண்பாக்கம் முதலாயுள்ள பதிகள் - இவை திருக்கள்ளில் முதலாயின என்பது கருதப்படும். பின்னாப் பிள்ளையார் திருக்காளத்தியினின்றும் மீண்டு எழுந்தருளித் திருவேற்காட்டிற் சென்றருளுவதை "முன்னணைந்த பதி பிறவும் கடந்து போற்றி" (2927) என்பதும், திருக்கள்ளில் அவ்வழியிடையில் உள்ளதென்பதும் கருதுக.

வெண்பாக்கம் - இது திருவுளம்பூதூர் என வழங்குகிறது. திரு "உளோம் போகீர்" என்பது அப்பதியின் பெயராகக் கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றது. இப்பெயர் ஆளுடைய நம்பிகளுக்கு இங்கு இறைவர் "ஊன்றுவதோர் கோலருளி யுளோம் போகீர் என்" றருளிய சரிதத்திற்குச் சான்றாக உள்ளதாகும்; இத்தலம் இப்பொழுது பூண்டி ஏரியின் உள் அகப்பட்டு நீரினுள் மூழ்கியுள்ளது. இங்கு இருந்த மூர்த்திகளை எடுத்து வேறிடத்தில் அமைத்து வைத்துள்ளார்கள். கோயில் நீரினுள்ளே கிடக்கின்றது! இப்பதிக்கு ஆளுடைய பிள்ளையார் பதிகம் கிடைத்திலது!. ஆசிரியர் காலத்திலே அது கிடையாதொழிந்தமையால் இப்பதியைப் பற்றி "வெண்பாக்க முதலாயுள்ள பிறபதிகள்" என்றும், "பணிந்தணைவார்" என்றும் இலேசாகப் போகிற சுட்டிச் செல்லும் கருத்துநயம் கண்டுகொள்க. முன்னரும் "பல்பதியு நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்" (1608) என்றது காண்க.

பெருந்தமன்பால்...முதல் வேடர் - என்ற அளவும் திருக்கண்ணப்ப தேவருக்குச் சிறப்பு அடைமொழிகள்; கண்ணப்ப நாயனார் என்ற திருப்பெயர் முழுதும் ஆரக் கூறியருளிய திறமும் காண்க; இவை பிள்ளையார் திருவுளத்தில் எழுந்த கருத்தினைக் காட்டுவதாம் "வாயகலச மாகவழி பாடுசெயும்" என்று எடுத்த பதிகப் பகுதியால் இக்கருத்தினைப் பிள்ளையார் முதன்மையாக உள்ளத்துக் கொண்டருளினார் என்பது விளங்கும்; முதல் வேடர் - "வேடன்" என்ற பதிகமும், மஞ்சன நீராட்டும் - "வழிபாடு செயும்" என்ற பகுதியும் விரிக்கப்பட்டன; பெருந்தமன்பால் - நீராட்டும் - என்று கூட்டுக; இரட்டுற மொழிதலால், இதனைப் பிள்ளையார்பாற் சாத்திப், பெருந்தமன்பால் - உன்னி என்றுரைக்கவும் நின்றது; முன் - முன்னாளில். திருவாய் நிறைந்த - என்க. நிறைந்த - என்பது பொன்முகலி நீரினுடன் "புண்ணியக் கங்கை நீரிற் புனிதமாந் திருவாய் நீரும்" கூடி நிறைந்த என்ற குறிப்புடன் நின்றது.

கண்ணப்ப நாயனாரை உன்னிக் - காளத்திமலை வணங்க - காளத்தி மலையினை வணங்க எழுந்த ஆசை இறைவரை வணங்குதற்கன்றிக் கண்ணப்ப நாயனாரை வணங்கவே முதற்கண் எழுந்தது. இறைவர் வணக்கம் அதனைப் பெறுவிக்கும் சாதனவகையால் மட்டும் அமைவதாம் என்பது பிள்ளையார் திருவுளமாகக் கூறிய நட்பும் சிறந்த உண்மையும் கண்டுகொள்க. பின்னர்க் "கும்பிட்ட பயன்காண்பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்" (2920) என்று இக்கருத்தே விரிக்கப்படுதலும் கண்டுகொள்க.

முன்னிறைந்த......உன்னி - என்ற அளவும் விரித்தது ஈண்டுக் கண்ணப்ப நாயனாரை ஆசிரியர் தாமும் ஒருமுறை வணங்கிக்கொண்டு உலகரையும் அவ்வழிகாட்டி

உய்விக்கும் கருணைக் கவிநயமாம். கண்ணப்ப நாயனாரை அரசுகள் புராணத்துள் துதிக்க நேர்ந்தபின் (1611) இதுவரை இடையீடு நீண்டமையான் வந்த ஆர்வமைக் குறிப்பும் காண்க.

**உவந்து சென்றார்** - பிள்ளையார் செல்லும் அந்நிலத்து வழி அந்த அனுபூதி கூர்ந்து செல்வாராகலின் உவப்புடன் செல்லலாகாதபடி கடுமையானது என்பது குறிப்பு. இதனை மேல்வரும் பாட்டில் "பெரு வன்புலக் கான்" என விரிப்பது காண்க. 1013

2912. மிக்கபெருங் காதலுடன் றொண்டர் சூழ
மென்புனனாட் டினையகன்று வெற்புங் கானுந்
தொக்கபெரு வன்புலக்கா னடைந்து போகிச்
சூலகபா லக்கரத்துச் சுடரு மேனி
முக்கண்முதற் றலைவனிட மாகி யுள்ள
முகினெருங்கு காரிகரை முன்னர்ச் சென்று
புக்கிறைஞ்சிப் போற்றிசைத்தப் பதியில் வைகிப்
பூதியரோ டணைமகிழ்ந்தார் புகலி வேந்தர். கஉகச

**(இ - ள்)** மிக்க பெரும்...அகன்று - மிகுந்த பெரிய விருப்பத்துடன் திருத்தொண்டர்கள் சூழ்ந்துவரச் சென்று மெலிதாய்ப் பாயும் நீர்வளமுடைய பாலியாற்றின் வடகரையில் உள்ள அந்நாட்டுப் பகுதியை நீங்கி, வெற்பும் கானும்...போகி - மலையும் கானமுமாகச் சேர்ந்து நெருங்கிய பெருகிய வலிய நிலம் பரந்த காட்டிடங்களை அடைந்து சென்று; சூல கபாலக் கரத்து...சென்று - சூலமும் கபாலமும் கையிலேந்தி ஒளி விளங்கும் திருமேனியினையும் மூன்று கண்களையுமுடைய முழுமுதல்வராகிய இறைவரது இடமாகி முகில்சூழ்ந்துள்ள திருக்காரிகரையினை முன்னர்ச் சென்று; புக்கிறைஞ்சி.. வேந்தர் - திருக்கோயிலுள்ளே புகுந்து இறைவரை வணங்கித் துதித்து அந்தப் பதியில் தங்கித் திருநீற்றுத் தொண்டர்களுடன் கூடி மகிழ்ந்திருந்தனர் சீகாழித் தலைவராகிய பிள்ளையார்.

**(வி - ரை) காதலுடன்... வன்புலக் கான் அடைந்து போகி** - வன்மையுடைய புலமுள்ள வெற்பும் கானமுமாயுள்ள நிலத்திற் செல்வதற்குக் காதல் காரணமாயிற்று என்பது "பிணையுங் கலையும்வன் பேய்த்தேர்க் கிரங்கிப்பெருந் தீங்கைசயால், அணையு முரம்பு நிரம்பிய வத்தமு மையமெய்யே, யிணையு மளவுமல் லாவிண்ற யோனுறை தில்லைத்தண்பூம், பணையுந் தடமுமன் றேதின்றெஞ் சேடிநின் மைந்தொடிக்கே" (திருக்கோ - 202 = ஆற்றங்கூறல்) என்ற திருக்கோவையாராகக் கருத்து ஈண்டு நினைவு கூறற்பாலது. மென்புனல் நாட்டினை அகன்று - வன்புலக் கானடைந்து - என்று காட்டிய கருத்துமிது.

**மென்புனல் நாட்டினை யகன்று** - புனல் மெலியதாய் ஓடி வளஞ்செய்யும் நாட்டின் பகுதி. நாடு - இங்குத் தொண்டைநாட்டின் ஒரு பகுதி என்ற பொருளில் வந்தது. **மென்புனல்** - புனல் கடுவேகமாய் ஓடாது இடையறாது மென்மையுடன் ஊறிப் பாயும் என்றதாம்; இது பாலாறு நீர்வளஞ் செய்யுமியல்பு. நிலமேல் நீர் ஓட்டமில்லாது மேல் மணற்பரப்பு நிலத்தின்கீழ் ஊற்றம் ஓடித் தோண்டு கால்களின் வழி இடையறாது ஊற்றமிகும் வளஞ்செய்யும் தன்மை. இதுபற்றி முன் (1099) உரைத்தவை ஈண்டு நினைவு கூறற்பாலன. தொண்டைநாடு குறிஞ்சி முதலிய ஐவகைத்

திணைகட்குமுரிய நிலங்களும் உளதாதல் திருககுறிபபுததொண்ட நாயனார் புராணத்துள் விரிககபபட்டது கண்டுகொள்க. இவ் வைவகை நிலங்களும் அந்நாட்டின் ஒவ்வோர் பகுதிகளாகி அவவத் திணைகளின் தனி நாடுகளபோல விளங்குதலின் இங்கு மென்புனனாட்டினை என்றது மருத நிலங்கொண்ட அந்நாட்டின பகுதி எனக. இக்கருத்தறியாது மென்புனனாடு காவிரிநாடு என்றே கொண்டு, அஃதீண்டு கொள்ளுதற்கியைபின்மையால மென்புனனாட்டின் கன்று என்று பாடங்கொண்டு காவிரி நாடு ஈன்ற பிள்ளையார் என உரை கண்டனர் முன உரைகாரர்; இப்பாட்டில மேல புகலி வேந்தர் என்ற எழுவாய ஈற்றில வருவதும் நோககிற்றிலர்.

வெற்புங் கானும் தொக்க பெரு வன்புலக் கான் - இது முல்லையுங் குறிஞ்சியும் கலந்து மயங்கிய பகுதி என்பது இங்கு நாட்டின் பகுதியின் அமைப்பை உற்று நோக்குவோர்க்கு இனிது விளங்கும். தனி வெற்புமல்லாது தனிக் கானுமல்லாது இரண்டும் கூடிய கடுங்கானற பகுதியாகிய நிலத்தின்றன்மை இன்றும் காணப்பெறும்; மருத நிலத்தைக் கடந்து முல்லையுங் குறிஞ்சியு மயங்கிய நிலத்திற புகுகின்றார் என்பது காண்க. உண்மைச் சரித இயல் கூறும் ஆசிரியரது கவிமாண்பு இங்குக் கண்டு களிக்கற்பாலது; முகினெருங்கு காரிகரை என்ற நாட்டுச் சிறப்பும் உடன் காண்க.

சூல கபாலக் கரத்து...காரிகரை - முன்னாச "செலகதிமுன் னளிப்பவர்தம் திருககாரிகரை" (1608) என்றதும், ஆண்டுரைத்ததவையும் பார்கக. சூலம் - "மருள் பொழியும் மலஞசிதைககும் வடிச்சூலம்" (சிறுத. புரா - 35); கபாலம் - பலிப் பாத்திரம்; இதனை ஏந்துதல் அடியவாகள் ஆனமபோதப் பலியை இட அதனை ஏற்று அவாகளைத் தமமடிபெற அருளுதல் குறித்தது; "இரந்துணடு தன்னடி யெட்டச் செயதானே" (திருமூலர் - திருமந்திரம்). "செல்கதிமுன் அளிப்பவர்" என்று முன கூறியதனை விரித்துக் காட்டியவாறு; "பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர் பலவேடச் சைவர்" (2916) எனக் கூறுதலால் அந்நாட்டின் பகுதியில் இத்தகைய வேடமுடையவர் பலர் தாந்தாங் கணடவாறு வழிபட நின்ற இறைவர் என்று குறிக்கச் சூலமும் கபாலமும் கொண்ட இத்தன்மையாற் கூறிய குறிப்பும் காண்க. சுடரும் மேனி - "எரிபோன மேனிப பிரான", "எரியலா லுருவமில்லை"; "பொனவணண மெவவணண மவவணண மேனி" என்பவாகலின் சுடரும் மேனி என்றார். சுடர் - திசைவிளக்கும் ஞானச்சுடர்; "இறைவனறன ஞெளியான ஞான சம்பந்தன்" (தேவா), "அணடமெலாங் கொணடதொரு ஞானமணி விளககு", (2550).

முக்கண் முதற் றலைவன் - சிறப்படையாளமாகிய மூன்று கணணுடைமை சிவ பெருமானது முழுமுதற்றன்மை குறிப்பது என்றபடி. "முககண னென்பது முத்தி வேளவியிற, ஞெக்க தெனனிடை யெனபதோர் கருத்தே" (11-ம் திருமுறை - திரு வொற்று - ஒருபா - 6) என்பது பட்டினத்து அடிகளார் திருவாக்கு. முதற்றலைவன் - முதலாகிய தலைவன்; அண்டத் தலைவர் எனபோ ரெல்லாருக்கும் முதலவன் என்றலுமாம்.

திருக்காரிகரை - தலவிசேடம் III - பக்கம் ௩அo பார்கக.

பூதியர் - திருநீற்றுத் தொண்டர் கூட்டம். பூதி - அனுபூதி; "சிவானுபவம் சுவானுபூதிகமாம்" என்ற சிவானந்தானுபவத்தில் எபபோதும் திளைக்கின்றவர்கள் என்றலுமாம். முன் கூறியவாறு பலதிறப்பட்ட அடியார் கூட்டமும் கொள்ள இவ்வாறு பூதியர் என்ற பொதுவிலக்கணக்கணத்தாற் கூறினார். பூதியர் என்றது பிள்ளையாருடன் வந்தார்களும் அப்பதியிலிருந்தார்களுமாகிய பலதிறத்து அடியவர்கள்; "அறு

வகை விளங்குஞ் சைவத் தளவிலா விரதஞ் சாரு, நெறிவழி நின்ற வேட நீடிய தவத்தி னரும்" (3101) பிள்ளையாரது திருமண எழுச்சியினுடன் கூடிச் சென்று திருப் பெருமணத்திற் பெருகிய சிவச் சோதியுட் கலந்தனர் (3150) எனப்பதறியப்படும் இதுவும் கயிலைச் சாரபாதலின் அவரெல்லாம் குழுமிக் காணவுள்ளார் எனபதும் குறிப்பு. 1014

2913. இறைவர்திருக் காரிகரை யிறைஞ்சி யப்பா
லெண்ணில்பெரு வரைகளிரு மருங்கு மெங்கும்
நிறையருவி நிரைபலவாய் மணியும் பொன்னும்
நிறைதுவலை புடைசிதறி நிகழ்ப வாகி
அறைகழல்வா னவர்க்கிறைவன் குலிச வேற்று
லற்றசிறை பெற்றவரை மேலெழுவ தற்குச்
சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்த போலுஞ்
சிலைநிலத்தி லெழுந்தருளிச் செல்லா நின்றார்; க௦கரு

2914. மாதவர்க ணெருங்குகுழாம் பரந்து செல்ல
மணிமுத்தின் பரிச்சின்னம் வரம்பின் றாகப்
பூதிநிறை கடலணைவ தென்னச் சண்பைப்
புரவலனா ரெழுந்தருளும் பொழுது சின்னத்
தீதிலொலி பன்முறையும் பொங்கி யெங்கும்
"திருஞான சம்பந்தன் வந்தா" னென்னும்
நாதநிறை செவியனவாய் மாக்க ளெல்லாம்
நலமருவு நினைவொன்றாய் மருங்கு நண்ண; க௦கசு

2915. கானவர்தங் குலமுலகு போற்ற வந்த
கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத் தோய
மானவரிச் சிலைவேட்டை யாடுங் கானும்,
வானமறை நிலைபெரிய மரமும் தூறும்,
ஏனையிமை யோர்தாமு மிறைஞ்சி யேத்தி
யெய்தவரும் பெருமையவா மேனணி லாத
தானமுமற் றவைகடந்து திருக்கா ளத்தி
சாரவெழுந் தருளினார் சண்பை வேந்தர். க௦கஎ

2913. (இ - ள்) இறைவர்.. அப்பால் - இறைவரது திருக்காரிகரையினை வணங்கி மேற்சென்று; எண்ணில் பெரு...நிகழ்பவாகி - அளவற்ற பெரிய மலைகளின் இருபக்கங்களிலும் எங்கும் நீர் நிறைந்த அருவிகள் பல வரிசைகளாகிய மணிகளையும் பொன்னையும் நிறைந்த நீர்த்துளிகளைப் பக்கங்களில் சிதறி நிரம்ப நிகழ்வனவாகி, அறைகழல்...சிலை நிலத்தில் - சத்திக்கின்ற கழலையணிந்த தேவ அரசனாகிய இந்திரனது வச்சிரப் படை தாக்குதலினால் அறுபட்ட சிறகுகளைப் பெற்று அவன்மேலே போருக்கு எழுதற்காகச் சிறகுகளை அடித்துப் பறக்க முயன்று உயர்ந்தனபோலும் காட்சி தரும் மலை சூழ்ந்த நாட்டின் பகுதியிலே; எழுந்தருளிச் செல்லா நின்றார் - எழுந்தருளிச் செல்கின்றாராகி; க௦கரு

2914. (இ - ள்) மாதவர்கள்...செல்ல - திருத்தொண்டர்கள் நெருங்கும் கூட்டம் பரவிச் செல்ல; மணிமுத்தின்...வரம்பின்றாக - அழகிய முத்துச் சின்னங்கள் இசைக்கும் ஓசை எல்லையில்லாமல் எழ; பூதிநிறை ..பொழுது - திருநீறு நிறைந்த கடல் அணைவதுபோலச் சீகாழித் தலைவனார் எழுந்தருளி வரும்போது; சின்னத் திருவொலி...செவியினவாய - திருச் சின்னங்களின் குற்றமில் ஒலியானது பல முறையாலும் மேன்மேல் அதிகரித்து எங்கும் "திருஞான சம்பந்தன் வந்தான்" என்று எழும் நாதம் நிறைந்த காதுகளை உடையனவாயினமையால்; மாக்களெல்லாம்... ...நண்ண - ஐயறிவுடைய விலங்குச்சாதிகளெல்லாம் (தமமியல்பாகிய தீமையின்றி) நன்மை பொருந்தும் நினைவு ஒன்றினையே கொண்டு பக்கங்களில் வந்து பொருந்த;

2915. (இ - ள்) கானவர்தம்...கானும் - வேடர் குலத்தை உலகம் போற்றும்படி அதனில் வந்தவதரித்த கண்ணப்ப நாயனாரது திருப்பாதங்களிலணிந்த செருப்புத் தோயும்படி பெரிய வரிவில் வேட்டையாடும் காடுகளும்; வானபெரிய...தூறும் - வானத்தை மறைக்கும்படி நீண்ட பெரிய மரச்சோலைகளும் தூறுகளும்; ஏனை... ...தானமும் - தேவர்களும் வணங்கித் துதிக்க வரும் பெருமையுடையனவாகிய அளவில்லாத ஏனைய தானங்களும்; மற்றவை கடந்து - அவற்றை யெல்லாம் கடந்து சென்று; திருக்காளத்தி...சணைபை வேந்தர் - திருக்காளத்தி மலையினை அணுகச் சீகாழித் தலைவராகிய பிள்ளையார் எழுந்தருளினார். கo௭

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண்டு நிரைக்கின்றன.

2913. (வி - ரை) பெருவரைக ளிருமருங்கும் - பிள்ளையார் சென்ற வழி இருபுறமும் பெருமலைகளுக்கிடைப்பட்ட மலைக்கணவாயப் பாதை என்பது.

நிறை அருவி...நிகழ்பவாகி - நிறைந்து நீர்த்திவலை சிதறி ஓடும் அருவிகள் உள்ளன; அவை வரிசையாக வுள்ளன - அவ்வரிசைகளும் பலவுள்ளன எனக; வரைகளில் அருவி நிரை பல நிகழ்பவாகி எனக. நிறைபுடை சிதறி நிகழ்தலாவது அருவிகள் மலையில் வீழும் வேகத்தால் திவலையாகச் சிதறி நுரைபோல ஓடுதல்; இது நீர் வீழ்ச்சிகளில் காணப்படும் காட்சி.

வரைகள் - இருமருங்கும் அருவி சிதறி - நிகழ்ப ஆகி - பறக்க முயன்று - உயர்ந்த போலும் - சிலை நிலம் என்று முடித்துக்கொள்க.

அறை கழல்...உயர்ந்த போலும் - முன்னொரு காலத்தில் இந்திரன் மலைகளை வச்சிரத்தால் சிறகரிந்தான்; அதற்கு முன்பு அவை சிறகு பெற்றுப் பறக்கும் தன்மை வாய்ந்திருந்தன என்பது புராண வரலாறு, அவ்வாறு சிறகிழந்து வீழ்ந்து கிடந்த மலைகள் ஈண்டு இப்போது மீளச் சிறகுபெற்றுப் பழிதீர்க்கும் பொருட்டு இந்திரன்மேல் படை எழுவதற்காகப் பறக்க முயல்வனவாகி உயர்ந்தனபோலக் காண்பன என்பது கருத்து; தற்குறிப்பேற்ற அணி; உயர்ந்த வரைகளின் இருமருங்கிலும் சிதறப் பெருகும் அருவிகளே சிறகாக உருவகம் செய்யப்பட்டன என்பது சிறகு விரித்து மேலுயர்ந்த நிலை பறக்க முயலும் நிலை காட்டிற்று. பறவைகள் பறக்க முயலும் தொடக்கம் இருபுறமும் சிறகு விரித்து அடித்து உடல் மட்டும் மேலுயர்ந்து முயலும் இயல்பும் காண்க. மிக உயர்ந்த நிலையில் தன்மையணி நயமும் கண்டுகொள்க.

குலிச ஏற்றல் - குலிசம் - வச்சிராயுதம்; இந்திரனது படை. ஏறு - தாக்குதல்; ஈண்டு அரிதல் என்ற பொருளில் வந்தது வானவர்க் கிறைவன் - இந்திரன். மேல் எழுதல் - தாக்குதற்கு மேற்செல்லுதல்.

**உயர்ந்த** - உயர்ந்தன ; உயர்தல் என்று பறவைகட்கும் மலைகளுக்கும் பொருந்தக் கூறிய சிலேடைநயமும் காண்க. இச்சிலப் பகுதியினை நேரிற் காண்பார்க்கு இவ்வணிநலம் இனிது விளங்கும். **சீலை நிலம்** - மலைப்பாங்கான நாட்டின் பகுதி.

**மணி - பொன்** - அருவிகளால் அடித்துவரப்படும் மலைபடு பண்டங்கள். **சிதறி** - வரைவின்றி உலகுக்கு உபகாரமாக ஈதல் என்றது குறிப்பு. 'கொள்ளிடம்பொன் செழுமணிக் கரைக்கரத்தால் முகந்துதர" (1041); ஈண்டு மலைவளங் கூறியபடியும் காண்க. "கரிப்பரு மருப்பின் முத்துங் கழைவிளை செழுநீர் முத்தும், பொருப்பினின் மணியும் வேடர் பொழிதரு மழையே யன்றி" (663), "மலைபடு மணியும் பொன்னும்" (679) முதலியனவாகத் திருக்கண்ணப்ப தேவர் புராணத்தினுள் வருபவை இந்நாட்டின் பகுதியைப் பற்றியனவாதலால் ஈண்டு நினைவு கூறற்பாலன. பொன் முகலியாறு என்ற பெயருங் காரணமும் காண்க.

**அற்றசிறை பெற்று** - ஈண்டுத் திருக்காளத்தியை அடுத்துத் தவங் கிடந்தமையாற் பெற்றன போல் என்ற நயமும் காண்க  1015

2914. (வி - ரை) **மாதவர்கள்** - "பூசியார்" என்றவிடத் துரைத்தவை பார்க்க. **தவம்** - சிவவேடம்-சிவபூசை-சிவனினைவு முதலியனவேயாம்.

**மணிமுத்தின் பரிச்சின்னம்** - முத்துச் சின்னங்கள். **பரிச்சின்னம்** - இறைவர் - பெரியோர் - அரசர் முதலிய தலைவர்க்குரிய சின்னங்கள், ஈண்டு அவற்றின் தொகுதியாகி யெழுந்த ஓசை குறித்தது.

**பூதி நிறை கடல்** - "திரண்டுவருந் திருநீற்றுத் தொண்டர் குழாமிருதிறமுஞ் சேர்ந்த போது, இரண்டுநில வின்கடலக ளொன்றாகி யணைந்தனபோல" (1498) என்ற கருத்துக் காண்க. இங்குத் திருநீற்றுக் கடல் என்றார், பரப்பும் ஓசையும் பற்றி; "நீற்றொளி யாளிறை தூயமையாற், புறந்த வைந்தெழுத் தோசை பொலிதலாற், பரந்த வாயிரம் பாற்கடல் போன்றது" (138) என்று இதன் உவமவுள்ளுறை முன்னர் விரிக்கப்பட்டது.

**தீதில் ஒலி** - பிள்ளையாரது திருநாம மந்திர முழக்கம் தீமையை யில்லையாகச் செய்யும் தன்மைபற்றித் தீதில் என்றார். "நாமமந் திரமுஞ் சொல்ல, வானோர் தயாவு தன்னை யகன்றிட" (2619) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

"**திருஞான சம்பந்தன் வந்தான்**" என்று - இது சின்னங்கள் இயம்பும் மரபு. 2119 - 2120 - 2121 - 2551 முதலிய பாட்டுக்கள் பார்க்க.

**நாதநிறை செவியினவாய்** - செவியினவாய் - செவியினவாதலின் என்று வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது.

**மாக்கள் எல்லாம்** - மாக்கள் - "ஐயறிவினவே மாக்க ளென்ப", "மாவு மாக்களு மையறி வினவே" (தொல் - பொ - மரபியல் - 32); **எல்லாம்** - மயிலும் பாம்பும், மானும் புலியும், ஒன்றற்கொன்று பகைமையாயுள்ளனவும், மக்களைக் கொன்று தின்னும் புலி முதலியவையும் அடங்க எல்லாம் என்றார்.

**நலமருவு நினைவு ஒன்றாய்** - பிள்ளையாரது திருநாம ஒலியாகிய நன்மை மலியும் நாதம் ஒன்றே, அவ்வாறு வேறுபடும் எல்லாவகை மாக்களுள்ளும் செவிமூலம் நிறைதலினால், தம் இயல்பாயுள்ள பகைமை நீங்கி இந்த நலமே மிகுந்ததனால் அந்நினைவு ஒன்றே கொண்டன. இவ்விளைவின் தத்துவம்பற்றி ஆனாய நாயனார் புராணத்துள் விரிக்கப்பட்டது ; கடைப்பிடிக்க. "நலிவாரு மெலிவாரு முணர்வொன்றாய் நயத்தலினால்" (959) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. ஆண்டு அத்தன்மை விளைந்

தது சிவனுமமாகிய திருவைநதெழுத்து ; "உள்ளுறையஞ் செழுத்தாக" (954); அது போல ஈணடு விளைததது பிள்ளையாரது நாம மநதிரமே என்பதும் கருதுக. 1016

2915. (வி - ரை) கானவர்தம் குலமுலகு போற்ற - "கானவர் குலம் விளங்க" (662); "வேடன" என்று பிளளையார் திருவாகககுற் பதிகத்துள் ளும, "வேடனுர்" எனறு திருவாசகததுள்ளும், பிறுணடும் பெரியோர் போறறும் பெருமை காண்க. உலகு - உயர்நதோர்.

திருப்பாதச் செருப்பு - "செருபபுறற சீரடி" (தோணோ - 3) என்று திருவாச கத்திற் போற்றும் அருமைபபாடு தோன்றக் கூறியபடி.

மான வரிச்சிலை வேட்டை - மானம் - பெருமை ; வரி - வரிந்து நரம்பு முதலி யன கட்டிய ; சிலை - வில. இதுபறறி முன "தேனலர் கொனறை யார்தந் திருச் சிலை" (681) எனறு கூறிய கருத்துககள இஙகு நினைவு கூாதறபாலன. சிலை வேட்டையாடும் கான் - கணணபப நாயனுர் புராணம் 717 - 740—791 - 792 - 810 முதலியவை பார்கக.

வான மறை நிலைபெரிய மரமும் தூறும் - "பெரிய தேககி னபபுறம சென்றுற ரேன்றும் குனறு" (743); "நெருஙகுபைந் தருககுலஙக ணீடுகாடு" (722). மரமும் - மரமடர்ந்த இடஙகளும ; தூறும் - தூறுகளுள்ள இடங்களும.

இமையோர்......பெருமையவாம் எண்ணிலாத தானம் - இவை தேவாகளும வந்து போறறும சிவததானஙகளும், முனிவா - ஞானிகளின் ஆச்சிரமஙகளுமாம ; 1088 - 1090-ம் பிறவும் பார்கக. ஏனை தானமும் - என்று கூட்டுக. சார - அருகாக.
வான் மறைய—எனபதும் பாடம். 1017

2916. "அம்பொன்மலைக் கொடிமுலைப்பால் குழைத்த ஞானத்
தமுதுண்ட பிள்ளையா ரணைந்தா" ரென்று
செம்பொன்மலை வில்லியார் திருக்கா ளத்தி
சேர்ந்ததிருத தொண்டர்குழா மடைய வீண்டிப்
பம்புசடைத திருமுனிவர் கபாலக் கையர்
பலவேடச் சைவர்குல வேடர் மற்றும்
உம்பர்தவம் புரிவாரப் பதியி லுள்ளோ
ருடன்விருமபி யெதிர்கொள்ள வுழைச்சென் றுற்றார். கஎகஅ

(இ - ள்) அம்பொனமலைக கொடி...என்று - அழகிய பொனமலையரசன் மகளா ராகிய கொடி போனற உமையமமையாரது திருமுலைபபாலில் குழைதத ஞான அமுதத தினை உணடருளிய பிளளையாா வநதணைகினறா என்று எணணி ; செம்பொன் மலை...ஈணடி - செமபொன மலையாகிய மேருமலையினை விலலாகவுடைய இறைவரது திருக்காளததியிற சேர்ந்த திருததொணடர் கூட்டம நெருஙக அடைந்து ; பமபு சடை...உடன விருமபி - நெருஙகிய சடையினையுடைய திருமுனிவாகளும், கபால மேநதும காபாலியராகிய சைவாகளும, மறறும் இவ்வாறு மாவிரதம் முதலிய பலபல வேடஙகளையுடைய சைவாகளும, வேடா குலததலாகளும், மறறும் மேலாகிய தவம் புரிவோர்களும அந்தப பதியில் உள ளவாகளுடன கூடி மகிழநது ; எதிாகொளள உழைச் சென்றுறறார் - எதிாகொள்ளப் பககத்தில சென்று சோந்தனா.

(வி - ரை) பொன்மலைக் கோடி - பார்வதியம்மையார். பொன்மலை - இமய மலை அரசன்; கோடி - கொடிபோன்ற பெண்; அரசனது மகள். பொன்மலை - ஈண்டு இமயமலை. "பொன்மலைப் புலிவென்ற கோன்" (552) என்றது காண்க.

"அம்பொன்மலை .....அணைந்தார்" என்று - அணைந்தனர் என்று உட் கொண்டு; என்று எதிர்கொள்ள வுற்றார் - எனக; பிள்ளையார் அணைந்த பெருமைக் கேற்ப எதிர்கொள்ளும் முறைமையில் உற்றனர்.

திருக்காளத்தி சேர்ந்த திருத்தொண்டர் கூட்டம் - திருமுனிவர் - கபாலக்கையர் - சைவர் - குலவேடர் - தவம்புரிவோர் - இவர்கள் திருக்காளத்தியில் தவநெறி சார்ந்த பல சார்விலுமுள்ள சைவப் பகுதியினரும் பிறரும். அப்பதியிலுள்ளோர் - தொண்டர் கூட்டத்துச் சேர்ந்த நகர மாந்தர். குலவேடர் - வேடர் குலத்தவர்; கண்ணப்ப நாயனாரின் மரபு உடையவர்கள் அத்தொடர்புபற்றி அங்கு வந்து சேர்ந்தோர்.

குல வேடர் - வேடர் குலத்தோர்; இவ்வாறன்றிக் குலமரபு பற்றியே சைவ வேடங்களைத் தாங்கியவர்கள் என்றலுமாம், இது மகர குண்டலம் முதலியவை ஆதி சைவருட் டீக்கையுடையோராகக் காருதல்போல வருவன என்றலுமாம்.

உம்பர் தவம் புரிவார் - உம்பர் - மேலாகிய; மேலாகிய தவமாவது சிவபூசை முதலாகிய சைவத் தவம். உம்பர் - மேன்மையான; உம்பர் - தேவர்கள் என்று கொண்டு, தேவர்களாவார் இங்கு வந்து மனிதர்களாயத் தவம் புரிவோர் என்றுரைத்தலுமாம் "இமையவ ரரம்பையர் பிறந்து, மாறில வேடரு மாதரு மாகவே வணங் கும" (1090) என்றது காண்க.

தொண்டர் குழாம், ஈண்டி, முனிவர் முதலியோருடன் விரும்பி - என்று கூட்டுக.

உழைச் சென்று - மலையடியின் புறத்துப் பிள்ளையார் வரும் இடத்தின் பக்கத் திற் போய். 1018

2917. திசையனைத்து நீற்றினொளி தழைப்ப மண்மேற்
 சிவலோக மணைந்ததெனச் சென்ற போது
மிசைவிளங்கு மணிமுத்தின் சிவிகை நின்றும்
 வேதபா லகரிழிந்து வணங்கி மிக்க
அசைவில்பெருந் தொண்டர்குழாந் தொழுது போற்றி
 "அர"வெனுமோ சையினண்ட நிறைப்ப வன்பால்
இசைவிளங்குந் தமிழ்விரகர் "திருக்கா ளத்தித்
 திருமலையிம் மலைகளில்யா" தென்று கேட்டார். கூ௦கக

(இ - ள்) திசையனைத்தும்...போது - எல்லாத் திசைகளிலும் திருநீற்றினொளி பரவ இவ்வுலகிலே சிவலோகம் அணைந்ததென்று சொல்லும்படி சென்றபொழுது; மிசை விளங்கும்...வணங்கி - மேலே விளங்குகின்ற அழகிய முத்துச் சிவிகையினின் றும் இறங்கி வேதபாலகராகிய பிள்ளையார் வணங்கி, மிக்க...நிறைப்ப - (எதிர் கொண்ட) மிகுந்த அசைவில்லாத பெரிய திருத்தொண்டர் கூட்டம் தொழுது துதித்து "அர! அர!" என்ற பேரொலியினாலே அண்ட முழுதும் நிறையச் செய்ய; அன் பால்...கேட்டார் - புகழினால் எங்கும் விளங்கும் தமிழ் விரகராகிய அப் பிள்ளையார்

அவர்களை நோக்கித் "திருக்காளத்தித் திருமலை இங்குத் தோன்றும் மலைகளுள்ளே யாது?" என்று அன்பினால் வினவியருளினர்.

(வி - ரை) தழைப்ப - தழைத்ததனால்; தழைப்பச் சிவலோக மணைந்ததென என்க. சிவலோகமெனக் காண்பதற்குக் காரணங் காட்டியவாறு; திருநீற்றுத் தொண்டர் குழாம் பல வேடச் சைவருடன் கூடிச்சென்ற நிலை மண்மேற் சிவலோகம் அணைந்தது போன்று காட்சியளித்தது. மண்மேல் - நிலவுலகத்தில். தத்துவங் கடந்த நிலையில் உள்ள சிவலோகம் தத்துவங்களுள் அடியில் நின்ற மண்ணின் மேலே என்றபடி.

மிசை விளங்கும் - சிவிகை - என்க; அத் திருக்கூட்டத்தின் மேல் நிலத்தில் விளங்குகின்ற சிவிகை.

வேதபாரக ரிழிந்து - பாரகர் - வேதங்களின் கரையை அடைந்தவர். பாரம் - கரை; பாரகர் - அதனை அடைந்தவர்.

அசைவில் - அசைதல் - தொண்டு நெறியினின்றும் பிறழ்தல்; அஞ்சுதல்.

ஓசையின் அண்ட நிறைத்தலாவது - ஓசை அண்டமெங்கும் பரவச் செய்தல். ஒருபுறம் எழுந்த ஓசையானது ஒவ்வலைகளின் மூலம் வானிற் பரவி உலகெங்கும் கேட்கத்தக்க நிலையையுடையதாகின்றதென்பது இப்போது பரந்து நிலவி வழங்கும் "வானொலி" (wireless - radio) யமைப்பினால் நன்குணரக்கிடக்கின்ற உண்மை. அண்டங்களில் அறநெறி பயிலாதாரும் கேட்க நிறைத்தலான ஒலி என்னுது ஓசை என்றார். அறநெறி வாராத மாக்கள் அரவொலியினை வெற்று ஓசை என்ற நிலையிலே உணர்குவாராதல் குறிப்பு. பல ஒலிகள் செறிதலின் பொருள் மயங்க ஓசைத்தன்மை யாய தென்பதுமாம்.

இசை விளங்கும் - இசை - புகழ்; இசை - பண்ணிசை என்று கொண்டு இசை யாவும் தமது வாக்கில் விளங்கவுள்ள என்றலுமாம்.

தமிழ் விரகர் - வேதபாரகர்; தமிழ்விரகர் இழிந்து, தொண்டர் குழாம் நிறைப்பக் கேட்டார் என்று முடிக்க. இத்திருமலைகளில் திருக்காளத்தி மலை யாது - எனக.

இத்திருமலைகளில் - இங்கே எதிரில் தொடர்ச்சியாகத் தோன்றும் பல சிகரங்களை யுடைய பல மலைகளுள்ளே. இத்திருமலை - இகரமாகிய அண்மைச்சுட்டு அவர் திருக் காளத்தியினருகில் அணைந்து நின்றனர் என்பதுணர்த்திற்று. மேல "தோன்றும் இந்தமலை" (2918) என்பது காண்க. இவ்வாறே முன்னர் மதுரை தோன்றுதலும் பிள்ளையார் "திருவால வாயமற் றெம்மருங்கின" தென வினவியருளியதும் (2559) நினைவுகூர்க.

வேதபாலகர் — என்று பாடங் கொள்வாருமுண்டு. 1019

2918\. வந்தணைந்த மாதவத்தோர் வணங்கித் தாழ்ந்து,
"மறைவாழ்வே! சைவசிகா மணியே! தோன்றும்
இந்தமலை காளத்தி தம்மி
லிகலிவழி பாடுசெய விறைவர் மேவும்
அந்தமில்சீர்க் காளத்தி மலையா" மென்ன,
வவனிமேற் பணிந்தெழுந்தஞ் சலிமேற் கொண்டு,
சிந்தைகளி மகிழ்ச்சிவரத் திருவி ராகம்
"வானவர்க டானவ"ரேன் றெடுத்துச் செல்வார், கoஉo

2919. திருந்தியவின் னிசைவகுப்புத் திருக்கண் ணப்பர்
திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப்
பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து
பொன்முகலிக் கரையணைந்து தொழுது போகி,
யருந்தவர்க ளெம்மருங்கு மிடைந்து செல்ல
வாளுடைய பிள்ளையா ரயன்மா றேடும்
மருந்துவெளி யேயிருந்த திருக்கா ளத்தி
மலையடிவா ரஞ்சார வந்து தாழ்ந்தார். க௦உக

2918. (இ - ள்) வந்தணைந்த ..தாழ்ந்து - எதிர்கொண்டு வந்து அணைந்தவர்களாகிய திருத்தொண்டர்கள் பிள்ளையாரை வணங்கித் தாழ்ந்து நின்று; மறை வாழ்வே! . என்ன - வேதங்களின் வாழ்வாகியவரே! சைவத் தலைவர்களுட் சிறந்தவரே! எதிரே தோன்றுகின்ற இந்தத் திருமலைதான் முன்னை நாளில் காளன் என்னும் பாம்பும் யானையும் தம்முள் மாறுகொண்டு தம்மைப் பூசை செய்யும்படி இறைவனார் எழுந்தருளியுள்ள கெடுதலில்லாத சிறப்பினையுடைய திருக்காளத்தி மலையாகும் என்று சொல்ல, அவனிமேல்...மகிழ்ச்சி வர - நிலத்தின்மேலே வீழ்ந்து வணங்கி எழுந்து கைகளைச் சிரமேற் குவித்து மனத்துள் மிகுந்த மகிழ்ச்சி வருதலாலே; திருவிராகம.. செல்வார் - "வானவர்கள் தானவர்கள்" என்று தொடங்கும் திருப்பதிகத்தைத் திருவிராக அமைப்பினில் பாடியபடி மேற்செல்வாராகி; க௦உ௦

2919. (இ - ள்) திருந்திய...பாடி - திருந்திய இனிய பண்ணமைதியின் வகுப்பினாலே திருக்கண்ணப்ப தேவரது திருத்தொண்டினைச் சிறப்பித்து விளங்கும்படி பாடியருளி; பொருந்தும...போகி - பொருந்திய பெரிய திருத்தொண்டர் கூட்டம் சூழ்ந்து துதிக்க எழுந்தருளி வந்து பொன்முகலியாற்றின் கரையினை அணைந்து தொழுது போய்; அருந்தவர்கள்...செல்ல - அருந்தவர்களாகிய திருத்தொண்டர்கள் எல்லாப் பக்கமும் நெருங்கிச் செல்ல; ஆளுடைய பிள்ளையார் ..தாழ்ந்தார் - ஆளுடைய பிள்ளையார் பிரம விட்டுணுக்கள் தேடிக் காணமுடியாத மருந்தாகிய இறைவர் வெளிப்பட எழுந்தருளியிருந்த திருக்காளத்தி மலையின் அடிவாரத்தினை அணுக வந்து நிலமுறத் தாழ்ந்து வணங்கினர். க௦உக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

2918. (வி - ரை) வந்தணைந்த மாதவத்தோர் - வந்து - எதிர்கொள்ள வந்து; மாதவத்தோர் - திருத்தொண்டர்கள்.

மறைவாழ்வே! - சைவ சிகாமணியே! - வேதநெறி தழைத்தோங்கவும் சைவநெறி விளங்கவும் அவதரித்து அவ் விருநிலைகளையும் முற்ற நிலையிட்டருளினாராதலின் இவ்வாறு போற்றி விடைகூறத் தொடங்கினார் - பெரியார்களிடம் விடை கூறுமுன் இவ்வாறு பெருமைபட விளித்துப் பின் கூறுதல் மரபு

காளனோடு...வழிபாடு செய் - காளன் - காளம் - பாம்பு. பாம்பும் யானையும் தம்முள் இகலிப் பூசை செய்த வரலாறு தலபுராணத்துட் காண்க; இகலுதல் - ஒன்றோடொன்று போரிட்டு மேற்செல்லுதல், தலவிசேடம் (II - பக். க௦௬௦) பார்க்க. காளனோடத்தி தம்மில் இகலி வழிபட்ட செயலை உவந்தேற்று இறைவர் எழுந்தருளியிருக்கும் நிலை சிவகோசரியாரும் கண்ணப்ப நாயனாரும் இகலி வழிபட்ட சரிதக் குறிப்புத் தருவது காண்க இன்மபற்றி ஈண்டு இலந்தி வழிபட்ட சரிதமும் உடன் கொள்க

அவனிமேற் பணிந்தெழுந்து அஞ்சலி மேற்கொண்டு சிந்தைகளி மகிழ்ச்சி வர - சிவன் திருமலையினைக் கண்டவுடனே வீழ்ந்து வணங்குதல் பெரியோர் மரபு.

களி மகிழ்ச்சி - பெருமகிழ்ச்சி; ஒருபொருட் பன்மொழி மிகுதி குறித்தது. வர - வருதலால். திருவிராகத்திற் பதிகம் எடுத்ததற்குக் காரணம் கூறியபடி; வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது.

திருவிராகம் - முடுகிய சந்தத்துடன் வருவது திருவிராகம் என்ப. "நடையின முடுகு விராகம்" (2175); சந்தம் மகிழ்ச்சிக்குறி காட்டுதல் குறிப்பு. இது தாள அமைப்பு; பண்அமைதி மேல் வரும்பாட்டிற் கூறுவார்.

செல்வார் - பாடி - வந்து - போகி - வந்து - என மேல் வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க. செல்வார் - செல்வாராகி; முற்றெச்சம்.

வானவர்கள் தானவர்கள் - இது பதிகத் தொடக்கம்.

திருவிராகம் - எடுத்து - திருவிராகத் தாள அமைப்பில் தொடங்கினார் என்க. எடுத்துச் செல்வார் - இப்பதிகத்தால் மலையினைத் துதித்துக்கொண்டபடியே பிள்ளையார் அதனை நோக்கி நடந்தருளிய நிலை குறித்தது. 1020

2919. (வி -ரை) திருந்திய இன்னிசை வகுப்பு - முன் பாட்டில் தாள அமைப்புக் கூறி, இப்பாட்டிலே பண்ணமைப்புப்பற்றிக் கூறியவாறு. இன்னிசை - இங்குச் சாதாரிப் பண்ணினையும், வகுப்பு - அதன் கட்டளைபேதத்தினையும் குறிப்பன.

திருக்கண்ணப்பர்......பாடி - பதிகம் "வேயனைய" என்ற நான்காவது திருப்பாட்டினுள், "வாய் கலசமாக...ஈசனடி கூடுகாளத்திமலையே" என்ற பின்னிரண்டடிகளிற் காணும் பகுதி. திருக்கண்ணப்பர் திருத்தொண்டு = திரு - என்ற அடைமொழிகள் கண்ணப்ப நாயனாரது அளவிடற்கரிய பெருமையினையும், சிறப்பித்து - திகழ - என்பவை பிள்ளையார் அதனை எடுத்துக்காட்டியருளிய பதிகத்தின் பெருமையினையும் விளக்கின.

திருக்கண்ணப்பர் - "திருக்கண்ணப்பன் செய்தவத் திறத்து" என்று தொடங்கிச் "சிவகதி பெற்றனன் திருக்கண் ணப்பனே" என்று முடித்துக்காட்டிய நக்கீரரது திருக்கண்ணப்பதேவர் திருமறம் என்ற 11-ம் திருமுறைத் திருநூலினை நினைவுபடுத்திக் காட்டியவாறு. சங்க காலத்தவராகிய நக்கீரருக்குப்பின், முதலாகத் திருக்கண்ணப்ப தேவரது திருத்தொண்டினை எடுத்துப் போற்றிக் காட்டியருளியது பிள்ளையாரது இத்திருவாக்கு என்ற தொடர்பு காட்டுதற்கு இவ்வாறருளிற் கூறியது போலும்; (திருமறம் அருளிய கல்லாடனார் சங்க காலத்தவரோ என்பது ஐயப்பாடு); திருமுருகாற்றுப் படை முதலியனவெல்லாம் சங்கப் புலவராகிய நக்கீரர் வாக்கல்ல என்று ஆராய்ச்சி செய்யும் நவீனப் புலவருமுண்டு. அவருரைப்பனவெல்லாம் தொன்றுதொட்டு வந்த பெரும்புலவருரைக்கு மாறுபட்டவை என்றொதுக்குக.

திருத்தொண்டு - வாய் கலசமாக வழிபாடுசெய்யும் என்ற பகுதி தொண்டு எனவும், அதன்வழி "மலராகு நயனம் காயகணையி னிடந்து ஈசனடி கூடுதல்" என்ற பகுதி அதனுள்ளே தலைசிறந்த திருத்தொண்டு எனவும் குறிப்பித்தவாறு. சிறப்பித்து - திகழ - என்றவையும் இக்கருத்து. திகழ - நாயனாரது சரித சாரம் இஃது என விளங்க.

பெருந்தவர் கூட்டம் - அருந்தவர்கள் - பிள்ளையாருடன் வந்தோர்களும், முன் (2916) கூறியபடி எதிர்கொள்ள வந்து கூடிய பலதிறத்தினரும் ஆகிய திருத்தொண்டர்கள்.

**தேடு மருந்து வெளியே இருந்த** - மலை - சிறந்த மருந்துப் பண்டங்கள் மலையில் உள்ளன என்பர். அவற்றுள் சிறந்தவை தேடியலையாமல் வெளியே எளிதில் கிடைப்பது அரிது. ஆனால் இங்கு அவ்வாறு அரிய மருந்து வெளியே இருந்தது என்றபடி. **மருந்து** - தீராநோயாகிய பிறவிப்பிணி தீர்க்கு மருந்தாகிய இறைவர். "மருந்தாயப் பிணிதீர்க்கு மாறு கண்டேன்", "மருந்து மாவன", "மருந்தவை", "மருந்து வேண்டில் இவை", "மந்திரமுந் தந்திரமு மருந்து மாகி" (தேவா) முதலிய திருவாக்குக்கள் காண்க. மருந்து போல்வாரை மருந்தென்றார்; வெளியே எளிதிற் காண இருந்தும் உரியவாறு கண்டுகொள்ள மாட்டாத அறியாமையுடையார் அயனும் மாலும் என்பார் தேடும் என்றார்; இலிங்க புராணத் திருக்குறுந்தொகைத் திருப்பதிகம் பார்க்க; வெளியே - ஞான அறிவாகிய வெளியிலே எளிதிற் காண.

**மருந்து வெளியே இருந்த** - மருந்தாகிய இறைவரது கண்ணில் கண்ட புண்ணுக்கு மலையில் மருந்து தேடிப் பிழிந்த மலை என்றும், அதற்குரிய கைகண்ட மருந்தாகிய தமது கண் தமதிடத்து இலகுவிற் காண இருந்தும் முன்னர் அஃதறியாது மலையிற் பல மருந்து தேடிப் பின் கண்ட மலை என்றும் நாயனாரது சரிதக் குறிப்புக்கள் பட நிற்றலும் காண்க. வெளியே - மலையில் வெளிப்பட்டு முளைத்தெழுந்து என்ற பொருளும் காண்க.

**அடிவாரம் சார** - அடிவாரம் - மலையின் அடி. வாரம் - அன்பு என்று கொண்டு மலையின் அடியினைத் தமது மீக்கூர்ந்த அன்பு முன்னே சாரத் தாம் பின்பு வந்து என்ற குறிப்புப்பட நிற்பதும் காண்க. "நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும் ...ஏறி" (752).

**தாழ்ந்தார்** - மலையினடியில் நிலம் பொருந்த வீழ்ந்து வணங்கினார்; மலையினைக் கண்டபோதே அவனிமேற் பணிதலும் (2918), அடிவாரத்தில் வீழ்ந்து வணங்குதலும், மேலே திருமலையைத் தொழுதுகொண்டே செல்லுதலும் (2920) ஆகிய இவை கைலாயமே யாகிய அம்மலையினையும், அதனில் வெளிப்பட்ட இறைவரையும் அவரை உள்ளே நிலைபெறக் கொண்டு நிற்கும் நாயனாரையும் வழிபடும் முறைமையும் மரபையும் குறித்தன. **தாழ்தல்** - விரும்புதலுமாம், நிறைந்த விருப்பத்துடன் வணங்கினார் என்க. 1021

2920. தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே
தடஞ்சிலா தலசோபா னத்தா லேறி
வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயின்
மருங்கிறைஞ்சி யுள்புகுந்து வளர்பொற் கோயில்
சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித்
தொழுதுதலை மேற்கொண்ட செங்கை போற்றி
வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல்
மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார். ௧௦௨௨

(இ - ள்) **தாழ்ந்தெழுந்து ஏறி** - வணங்கி மேல் எழுந்து காளத்தித் திருமலையினைத் தொழுதுகொண்டபடியே பெரிய மலைப்படிகளின் வழியே ஏறிச் சென்று; **வாழ்ந்து...உள்புகுந்து** - வாழ்வடைந்த வானவர்களின் கூட்டம் நெருங்கியுள்ள மணிகளையுடைய நீண்ட திருவாயிலின் பக்கத்தே முன்பு வணங்கித் திருக்கோயிலினுள்ளே புகுந்து; **வளர் பொற்கோயில் சூழ்ந்து வலங்கொண்டு** - அதனைச் சுற்றி

வலமாகச் சூழ்ந்து வந்து ; இறைவர் திருமுன்பெய்தி...வீழ்ந்தெழுவார் - இறைவரது திருமுன்னர்ச் சார்ந்து தொழுது தலையின்மேலே கூப்பிய சிவந்த திருக்கைகளுடனே துதித்து நிலமுற விழுந்து வணங்கி எழுவாராகி ; கும்பிட்ட பயன்.. வீழ்ந்தார் - அவ்வாறு இறைவரைக் கும்பிட்டதனாலாய பயனே இது எனக் காண்பவர்போல மெய்ம்மையாகிய வேடர்பெருமானும் திருக்கண்ணப்ப நாயனாரைக் கண்டு அவரது திருவடிகளில் வீழ்ந்தருளினார்.

(வி - ரை) **தாழ்ந்தெழுந்து ...வீழ்ந்தெழுவார்** - இது திருமலையை ஏறி இறைவரை வணங்கும் நிலையினைக் கூறியவகையால் வழிபாட்டு முறையினையும் உணர்த்தி நின்றது.

**தாழ்ந்தெழுந்து - எழுந்து** - என்றதனால் நிலமுற வீழ்ந்தமை குறிக்கப்பட்டது.

**திருமலையை - திருமலை** - என அடைமொழியின்றிக் கூறியது இது திருக்கயிலை என்று குறிப்பிப்பது ; "திருமலைச் சருக்கம்".

**தொழுதுகொண்டே - ஏறி** - "காளத்தி கண்டுகொண்டு" (749) என்றது காண்க. தொழுதபடியே ஏறுதலாவது மலையினில் இறைவரை நினைந்தபடியே ஏறிச் செல்லுதல். அம்மையார் கயிலைத் திருமலையின்மேலே தலையினால் நடந்தேறிய வரலாறு இங்கு நினைவுகூரத்தற்பாலது. மரபு காட்டி உலகரை வழிப்படுத்தும் நிலையில் பிள்ளையார் ஏறிச் சென்றருளினார்.

**சிலாதல சோபானம்** - மலையினை ஏறும் படிகளின் வழி. இதனை முன்னர்ப் "பேணுதற் கவங்க ளென்னும் பெருகுசோ பானம்"(752) என்றது காண்க. **சோபானம் - படிவழி.**

**வாழ்ந்திமையோர் குழாம் நெருங்கு மணிநீள்வாயில்** - இறைவரது திருமலையில் கோயில் வாயிலிற் காத்துக் கிடத்தலால் இமையோர் வாழ்ந்தனர் என்றது இமையவர்கள் பலரும் தத்தமது பதங்களையும் அமரலோக போகங்களையும் வேண்டிப் புண்ணிய வேள்விகளைச் செய்து அவ்வப் பதங்களை அனுபவிப்பதில் நேர்ந்த துன்பங்களை நீக்கக் கயிலையையடைந்து இறைவரது முன்கடைத் திருவாயில் காத்துப் பணி செய்து வரக் கிடந்து அவ்விடையூறுகள் நீங்கப்பெற்றனர் என்பது கந்தபுராண முதலிய மாபுராணங்களால் அறியக்கிடக்கும் உண்மை. "வாய்தல் பற்றித் துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம்" (திருவிருத்) முதலிய மறைத் திருவாக்குக்கள் காண்க. **வாழ்ந்து - நெருங்கு - வாயில்** - கவலைவாழ்வில் வாழ்ந்த தத்தமது உலகங்களினின்றும் வந்து இங்கு நெருங்கி வாழ்வினைப் பெற்று என்பதாம் ; நெருங்கு - வாயில் - நந்திபெருமான் உத்தரவின்றி உட்செல்ல மாட்டாதவராகி வாயிலின் நெருங்கினர் என்பதும் குறிப்பு. இவர்கள் புறத்தே நிற்பத் தொண்டர்கள் எப்போதும் வணங்கவும், தொண்டு செய்யவும், உட்புகும் உரிமையுடையோர் என்பது **உள்புகுந்து** என்பதனாற் பெறப்படும். "தொண்டர்களபின் னுமபாகுழா மலகுதிருக் காளத்தி மாமலை" (1608) என முன்னரும் இக்குறிப்புப்படக் கூறியது காண்க.

**வளர்பொற் கோயில்** - திருமாளிகை என்பர் ; **சூழ்ந்து**-கோயிலின் திருமதிலின் உள்ளே வலமாக மாளிகையைச் சுற்றி.

**வீழ்ந்தெழுவார் - வீழ்ந்தார்** - இறைவரது திருமுன் வணங்கி எழும் வழிபாடு கண்ணப்பர் திருமுன்பு முற்றுப்பெற்றது என்பது குறிக்கத், திருமுன்பு வீழ்ந்தெழுவாராகி என முற்றெச்சமாக வைத்து, அவ்வினையெச்சம் வேடர்பெருமான் முன்பு வீழ்ந்தார் என்ற வினைமுற்றுப் பெற வைத்தோதினர். இறைவரது வழிபாடு அடியார் வணக்

கதை யின்றியமையாது உடன்கொண்டு முறறுப்பெறறபால தென்பதாம். பிள்ளையார் திருமயிலைத் திருப்பதிகத்தள இவ்வுண்மை விளக்கப்படும்; கண்டுகொள்க. இது சிவஞான போதப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் விளக்கிய உண்மையுமாம.

**கும்பிட்ட பயன் காண்பார்போல்**-நூலகளுககுப் பயன் காண்பதுபோல இறை நூலகளாற பெறப்படும் பேருகிய இறைவரைப் பெறுதல என்பதறகுக் கண்ணப்பரின் வணக்கமாகிய ஒருபயன் கண்டார். இறைவரை யடையும் வீடுபேற்றுககுச் சாதன மாகியவை சரியை முதலிய நானகுமாம். இனி இவறருற பெறப்பட்ட இறைவரைப் பெறுதல்தானும தானே சாததியமாய முடிதலனறி ஒரு சாதனமாயமைநது அடியவர் பாற கூட்டுவிக்கும் எனபதுமோ ருண்மையாதல பெறவைதத நயம காணக. "சேடியார், குலம்பணி கொள்ள வெனைக்கொடுத தோன" (திருககோவை) எனபது முதலிய திருவாக்குக்கள காணக. இது பயனுககுப் பயன கூறியவாறெனக. **போல்** - உவம உருபு அதுவேயாம எனற பொருளில வநதது. "விளைததவன புமிழவார போல" (772); "பாசப பழிமுதல பறிப்பார போல" (460) எனபது முதலியவையும், ஆண்டு உரைததவையும பார்கக பயன் பறறித தோனறிச சிறப்பு நிலைககளமாகிய உவம மெனபர; **காணுதல்** - ஈண்டு அனுபவிககப்பெறுதல என்னும பொருள தந்து நினறது. இககருத்து மிக அரிதாயச சிநதிதது அனுபவிககத தககதொனறு.

**மெய்வேடர் பெருமான்** - மெய் - மெய்யே உருவாகிய. மெய் - சதது - இறைவரது தனமை; அதுவே அனபுருவம அனபே சிவமாம எனபர திருமூலர். இக் கருததினையே மேல்வரும்பாட்டில விரிததருளுதல காணக

**வீழ்ந்தார்** - வேறுஒருவரால உநதப்பட்டுத் தமவயமிழநது வீழதலபோல என்பது குறிப்பு. "தமபெருகு மனககாதல தளளநில மிசைவீழநதார" (2892) எனறு முன் இதன நிலையினை விரிததது காணக.

தடஞ்சிலைச் சோபான நிலை தன்றலேறி—எனபதும பாடம். 1022

2921\. உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை
யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும்
வெள்ளச்சேரு சடைககற்றை நெற்றிச் செங்கண்
விமலரையு முடன்கண்ட விருப்பம் பொங்கிப்
பள்ளத்தி லிழிபுனல்போற பரந்து செல்லப்
பைம்பொனமலை வல்லியபங்க தளிதத செம்பொன
வள்ளத்தில் ஞானவா ரமுத முண்டார்
மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார்; கஉ0உக

2922\. பங்கயக்கண் ணருவிநீர் பாய நின்று
பரவுமிசைத் திருப்பதிகம பாடி நின்று
தங்குபெருங் களிகாதல தகைந்து தட்பத்
தமபெருமான் கழலபோற்றுந் தன்மை நீட
அங்கரிதிற் புறம்போந்த கயன்மால போறற
வரியார்தந் திருமலைக்கீ ழணைந்தி றைஞ்சிப்
பொங்குதிருத் தொண்டாமடங் காட்ட வங்குப்
புக்கருளி யினிதமர்ந்தார் புகலி வேந்தர். கஉ0உஉ

2921. (இ - ள்) உள்ளத்தில் ..உருவினையும்-உள்ளத்தில் தெளியக்கொள்கின்ற அன்பினுடைய மெய்ம்மையாகிய உருவத்தினையும்; அவ்வன்பினுள்ளே...விமலரையும் - அந்த அன்பினுள்ளே நிலைபெற வீற்றிருக்கும் சிவந்த சடைக்கற்றையினையும நெற்றியிலே சிவந்த நெருப்புக் கண்ணையுமுடைய விமலராகிய இறைவரையும்; உடன்...பொங்கி - ஒருசேர (ஓரிடத்தே) உடனாகக் கண்டதனாலாகிய விருப்பமும் மேன்மே லதிகரித்து; பள்ளத்தில...செலல - மேலிடத்தினின்றும் பள்ளத்தில் இழிந்து விரைந்து செல்லும் நீர்போலப் பரந்து விரைந்து செல்ல, பைம்பொன்மலை வல்லி...அமுதமுண்டார் - பசும் பொன்மலையரசன் மகளாராகிய கொடிபோன்ற உமையம்மையார் அருளுடன் அளித்த செம்பொற் கிண்ணத்தில் ஞானநிறை அமுதத்தினை உண்டருளிய பிள்ளையார்; மகிழ்ந்து ..வணங்குகின்றார் - மகிழ்ந்து மேலே எழுந்த பலமுறையும வணங்குகின்றவராய்; கரு௦உக

2922. (இ - ள்) பங்கயக் கண...ஆடி - தாமரை போன்ற கண்களினின்றும் கண்ணீர் வழிந்தோட நின்று துதிக்கும் பண்ணமைந்த திருப்பதிகத்தைப் பாடி ஆனந்தக் கூத்தாடி; தங்கு பெரும...தட்ப - தமது மனத்துள்ளே தங்கிக் கிடக்கும் பெரிய களிப்பும காதலும் வலிந்து தம்மை அங்கே தடைப்படுத்தி நிறுத்த (அதனால்); தம பெருமான...நீட - தமது பெருமானது திருவடிகளைப் போற்றி நிற்கின்ற தன்மை நீடித்ததனாலே; அங்கு அரிதில . இறைஞ்சி - அங்கருநின்றும் அரிதாகப் புறத்திலே போந்து அங்கு அயனும் மாலும போற்றுதற்கரிய இறைவரது காளத்தித் திருமலையின் அடியில வந்து அணைந்து வணங்கிப் போய், பொங்கு...வேந்தர் - பெருகிய திருத்தொண்டர்கள் திருமடத்தினைக் காட்டச் சென்று புகுந்தருளிய புகலி வேந்தராகிய பிள்ளையார் இனிதாக அங்கு விரும்பி எழுந்தருளினார். கரு௦உ௪

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

2921. (வி - ரை) உள்ளத்தில் தெளிகின்ற அன்பின் மெய்ம்மை உரு - என்பது தன்னையும் மறந்து இறைவரையேயன்றி வேறொன்றனை உள்ளத்திற் றெளியக் கொள்ளாத கண்ணப்ப தேவருடைய திருவுருவத்தைக் குறித்தது.

உள்ளத்தில் தெளிகின்ற - அன்பின் - உரு - "தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப் பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார்" (753) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. முன்னர் அங்கு இதன் தன்மைக ளெல்லாம விரித்து எடுத்துக் கூறினமையின் இங்கு இவ்வாறு கூறிய அளவிலமைந்தனர். தெளிகின்ற - தெளிதலாற் பெறப்படுகின்ற; "தெள்ளத் தேறித் தெளிந்து தித் திப்பதோர், உள்ளத் தேற லமுத வொளிவெளி" (தனித் திருக்குறுந்தொகை). தெளிதல் - ஞானவகை நான்கனுள் மூன்றாவது. அவ்வாறு தெளிந்த அன்பின் உருவமேயாதல் கிட்டை கூடல் எனப்படும்; தெளிகின்ற - கலங்கலில்லாது தெளியும் என்ற குறிப்புமாம்.

அன்பின் மெய்ம்மை உரு - "பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறு, மெய்யாக் கருதிக் கிடந்தேனை" (திருவா) என்றபடி பொய்யாகிய உயிர்ப்பொருள் - உயிரில பொருள் எனப் பலவற்றிலும் சென்று பலபடியாகிய பொய்யுருவங் கொள்ளும் அன்பு, ஈண்டு உள்ளத்தில் தெளிந்த மெய்ப்பொருளினிடத்தே அமைந்து மெய்ம்மை உருவு கொண்டது. மெய்ம்மை - பிரிதினியைபு நீக்கிய விசேடணம்.

அவ்வன்பினுள்ளே மன்னும்...விமலரை - இறைவர் நிலைபெறத் தங்கி நிற்கு மிடம் அன்பேயாகும்; அன்பா ளினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த

வடிவோடு விரைந்து செல்லும் அருளுடையவர் இறைவர் என்பது, "ஆரொருவருள் குவாருள்ளத் துள்ளே யவ்வுருவாய் நிற்கின்ற வருளும் தோன்றும்" என்ற அரசுகளது திருவாக்கா லறியப்படும் உண்மை. அக்கருத்து இங்குவைத்துக் காணத்தக்கது. **மன்னும்** - நிலைபெற வீற்றிருந்தருளும்; ஏனையிடங்களில் அங்கங்குள்ள அளவுமே சிலபோது வீற்றிருப்பார். இங்குத் தெளிகின்ற அன்பின் மெய்ம்மையே உருவாயின இடத்தில் மறப்பின்மையால் நிலைபெற வீற்றிருப்பார் என்பதாம்.

**வெள்ளச் செஞ்சடைக் கற்றை நெற்றிச் செங்கண் விமலர்** - **வெள்ளம்** - நீர்மை - பேரருளுடைமையினையும்; **செஞ்சடைக் கற்றை** - பேரொளியினையும்; **நெற்றிக்கண்** - ஞான நிறைவினையும், **விமலர்** - இயல்பாகவே பாசங்களி னீங்கிய நிலையினையும் உணர்த்தியன. இவை இறைவரது எண்குணங்களுட் சிறந்தவை.

**அவ்வன்பினுள்ளே மன்னும்** - **விமலர்** - என்றது அன்புடையார்மாட்டு விளங்கினும் கோட்டமில்லாமை குறித்தது. "சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கல்லா னலமிலன்" (தேவா), "சார்ந்தாரைக் காத்தும் சலமிலன்" (போதம்).

இனி, **அன்பின் மெய்ம்மை உருவினையும் அவ்வன்பினுள்ளே மன்னும் விமலரையும் உடன்கண்ட** - என்பதற்கு அன்பின் உருவமாகிய பிழம்பு கண்ணிந்திரியத் துக்குப் புலனாவதன்று, கண்ணீர் முதலிய மெய்ப்பாடுகளால் அஃதுண்மை கருதளவையாற் றெளியப்படுவதோரியல்புடையது, கண்டு அவ்வன்பின்பிழம்பு தெளிவு காட்சிக்குட் புலனாக மெய்ம்மையுருவாகி நின்றதென்பார் "உள்ளத்தில்...உருவினையும்" என்றும், கட்புலனுக்கு விடயமாகாத அவ்வன்பினுள்ளே மன்னும் விமலரும் அவ்வன்பின் பிழம்பு காட்சிப்பட விளங்கி நிற்பதற்கேற்பத் தாமும் அவ்வன்பினும் அருட் பிழம்பாகக் கட்பொறிக்குப் புலப்பட விளக்கமுற்று நின்றருளினர் என்பார், "அவ்வன்பினுள்ளே மன்னும்......விமலரையும் உடன் கண்ட விருப்பம்" என்றும் கூறியருளினார்.*

**உடன் கண்ட விருப்பம் பொங்கி** - இறைவர் திருமுன்பு வீழ்ந்தெழுந்தபோது அங்கு இறைவர் ஒருவரையே கண்டார், மெய்வேடர் பெருமானைக் கண்டபோது அவ்விறைவரை அகப்படுத்தும் அன்பின் உருவத்தையும், அவ்வன்பின் உள்ளே மன்னும் இறைவரையும் ஆக இருவரையுங் கண்டார், ஆதலின் இங்கு விருப்பம் மேலும் பொங்கி எழுந்தது அங்குக் கும்பிட்டார்; இங்குக் கும்பிட்ட பயன் கண்டார். ஆதலின் அங்கு வீழ்ந்தெழுவாராகி அவ்வணக்கம் நிறைவுபெறாது இங்கு வீழ்ந்தாராய வணக்கத்தினை முற்றுப்பெற நிறைவுபடுத்தியருளினார்.

**பள்ளத்தில் இழிபுனல்போல்** - மேட்டு நிலத்தினின்றும் பள்ளத்தில் வரும்போது நீர் மிக்க வேகத்தால் பாய்ந்தோடும்; அதுபோல விருப்பம் இங்கு விரைந்து சென்று பரவியது. "பள்ளந்தாழுறுபுனலிற் கீழ்மேலாகப் பதைத்துருகு மவர்" (திருவா).

**மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்குகின்றார்** - அட்டாங்க பஞ்சாங்கமாக 3 முதல் 11 வரை முறையாலே விதித்தபடி செய்யப்படும் வணக்கம் நிறைந்த பின்னரும் அளவுகடந்து பல முறையும் வணங்குகின்றமைக்குக் காரணம் அன்பின் பெருக்கு என்பதை "பள்ளந்தாழுறுபுனல்போல" என்று உவமைமுகத்தால் முன் விளக்கினார்;

---

* இவை ஸ்ரீமத் - முத்துக்குமாரத் தம்பிரானார் அருளிய குறிப்பு; திரு. பண்டிதமணி - மகாமகோபாத்யாய - மு. கதிரேசன் செட்டியார் அவர்களின் கட்டுரையில் எழுதியுள்ள கருத்துக்களும் ஈண்டுக் காணத்தக்கன.

பின்னரும் வணங்கியதில் முடிவுபெறுமையின் வணங்குகின்றாராகி என எச்சப் பொருள்பட வைத்ததும், " போற்றும தன்மை நீட", "அரிதிற புறம்போந்து" என்றும் தொடர்ந்து கூறி, அவை மேற்பாட்டுடன் முடிக்க வைத்தருளினார்.

வணங்கி நின்றார்—என்ற பாடமுமுண்டு. 1023

2922. (வி - ரை) பரவும் இசைத் திருப்பதிகம் - இப்பதிகம் கிடைத்திலது!

தங்கு......நீட - தங்கு பேரும் - முன்னமே உண்ணிறைந்த பெரிய; " உணணிறைந் தெழுந்ததேனும்" (758); களிகாதல் - களிப்பும் காதலும்; தகைந்து - வலிந்து; தட்ப - தடுப்ப என்றது தட்ப என நின்றது. தடுத்தல் - நெடுநேரமாகியும் அவ்விடம் விட்டுப் பெயராதபடி நிறுத்துதல், " நெடிதுபோ தயிர்த்து நின்று " " இவாதமைப் பிரிய வொண்ணாது " (761) என்ற நிலைகள் ஈண்டு நினைவுகூர்தற் பாலன.

அரிதிற் புறம்போந்து - நீங்கமாட்டாத நிலையில் நீங்கிப் புறத்துப் போய்; புறம் - திருக்கோயிலின் புறம்.

திருமலைக் கீழ் அணைந்து இறைஞ்சி - திருமலையைத் தாழ்ந்தெழுந்து தொழுது கொண்டே ஏறி(2920)னாராதலின் அவ்வாறே இறங்கி அடிவாரத்தில் இறைஞ்சினார் என்க. முன்போலவே இங்கும் திருமலை என்றதும் குறிக்க.

மடம் காட்ட-இத்திருமடம் மலையின்கீழே அடிவாரத்தில் உள்ள பழைய திருமடங்களுள் ஒன்றாதல் வேண்டும்; இன்னதென்று வழக்கிலேனும் இப்போது அறியப்பெறவில்லை!

அமர்தல் - விரும்பியிருத்தல் என்ற குறிப்புடன் நின்றது; " அமரரா லமரப்படுவானை " (நம்பி - அதிகை). 1024

2923. யாவர்களு மறிவரிய விறைவன் றன்னை
யேழுலகு முடையானை யெண்ணி லாத
தேவர்கடம் பெருமானைத் திருக்கா ளத்தி
மலையின்மிசை வீற்றிருந்த செய்ய தேனைப்
பூவலரும் பொழில்புடைசூழ் சண்பை யாளும்
புரவலனார் காலங்க டோறும் புக்குப்
பாமலர்கொண் டடிபோற்றிப் பருகி யாரந்து
பண்பினிய திருப்பதியிற் பயிலு நாளில்; க௦உரு

2924. அங்கண்வட திசைமேலுங் குடக்கின் மேலு
மருந்தமிழின் வழக்கங்கு நிகழா தாகத்
திங்கள்புனை முடியார்தந் தானந் தோறுஞ்
சென்றுதமி ழிசைபாடுஞ் செய்கை போல
மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப
வீற்றிருந்தார் வடகயிலை வணங்கிப் பாடிச்
செங்கமல மலர்வாவித் திருக்கே தாரந்
தொழுதுதிருப் பதிகவிசை திருந்தப் பாடி, க௦உசு

2925. கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம் பாடிக்
குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கை பாடி
ஏற்றின்மிசை வருவாரிந் திரன்ற னீல
பருப்பதமும் பாடிமற் றிறைவர் தானம்
போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடிப்
புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகும்
நீற்றினணி கோலத்துத் தொண்டர் சூழ
நெடிதுமகிழ்ந் தப்பதியி னிலவு கின்றார்; ௧௦௨௭

*2926. தென்றிசையிற் கயிலையெனுந் திருக்கா ளத்தி
போற்றியினி தமர்கின்றார் திரைசூழ் வேலை
ஒன்றுதிரு வொற்றியூ ருறைவார் தம்மை
யிறைஞ்சுவது திருவுள்ளத் துன்னி யங்கண்
இன்றமிழின் விரகரருள் பெற்று மீள்வார்
"எந்தையா ரிணையடியென் மனத்த" வென்று
பொன்றாளங் கொழிக்கிழிபொன் முகலி கூடப்
புனைந்ததிருப் பதிகவிசை போற்றிப் போந்தார். ௧௦௨௮

2923 (இ - ள்) யாவர்க்கும் ..இறைவனை - யாவராலும் அறிதற்கரியவராகிய இறைவரை, ஏழுலகும் உடையானை - ஏழுலகங்களையும் தமது உடைமைப் பொருளாக வுடையவரை, எண்ணிலாத ..பெருமானை - அளவில்லாத தேவர்களது தலைவரை; திருக்காளத்தி . தேனை - திருக்காளத்தி மலையின்மேல் வீற்றிருந்தருளும் செம்மையாகிய தேனாகி உள்ளவரை; பூவலரும்...ஆர்ந்து - பூக்கள் மலர்தற்கிடமாகிய சோலைகள் பக்கத்திற் சூழ்ந்த சீகாழியின் தலைவராகிய பிள்ளையார் உரிய காலங்கள்தோறும் சென்று திருக்கோயிலினுள்ளே புகுந்து பாக்கள் பாட்டுக்களாகிய மலர்களினாலே திருவடிகளை அருச்சனை புரிந்து துதித்துப் பருகி நிறைவாக அனுபவித்து; பண்பினிய ..நாளில் - செம்மையாகிய பண்புகளால் இனிமைதருகின்ற அத்திருப்பதியிலே பயின்று வீற்றிருந்தருளும் நாள்களிலே, ௧௦௨௫

2924. (இ - ள்) அங்கண் ..நிகழ்வதாக - அவ்விடத்து வடக்கிலும் மேற்கிலும் உள்ள நாடுகளில் அரிய தமிழின் வழக்கு அங்கு நிகழாமையினாலே; திங்கள்புனை ...போல - சந்திரனைச் சூடிய முடியினையுடைய இறைவரது ஏனை எல்லாப் பதிகள்தோறும் சென்று சென்று திருப்பதிகத் தமிழிசை பாடும் செயல்போல; மங்கையுடன்...வணங்கிப் பாடி - தேவர்கள் வணங்கித் துதிக்கும்படி வீற்றிருந்தருளும் இறைவரது வடகயிலைத் திருமலையினை இங்கு நின்றபடியே வணங்கித் திருப்பதிகம் பாடியருளி; செங்கமல மலர்...திருந்தப் பாடி - செந்தாமரைப் பூக்கள் மலர்தற்கிடமாகிய பொய்கைகளையுடைய திருக்கேதாரத்தினையும் தொழுது திருப்பதிகத்தை இசையுடன் திகழும்படி பாடி, ௧௦௨௬

2925. (இ - ள்) கூற்றுதைத்தார் மகிழ்ந்த கோகரணம் பாடி - கூற்றுவனை உதைத்தருளிய இறைவர் மகிழ்ந்து வீற்றிருக்கும் திருக்கோகரணத்தினையும் பாடியருளி; ஏற்றின்...பருப்பதமும் பாடி - இடபத்தின்மேல் எழுந்தருளி வரும் இறைவரது திருஇந்திரநீல பருப்பதத்தினையும் பாடி; மற்று...பிறவும் பாடி - மற்றும் இறைவரது திருத்தானங்களையும் போற்றிய திருப்பதிகங்கள் பிறவற்றையும் பாடி

யருளி ; புகலியாதம்...நிலவுகின்றூர் - சீகாழிப் பதியவர்களின் தலைவராகிய பிள்ளையார் தூயதாகும் திருநீற்றின் விளக்கம் மிக்க கோலமுடைய திருத்தொண்டர்கள் சூழ்ந்து வர மிகவும் மகிழ்ந்து அந்தப் பதியிலே தங்கியருளினாராகி, கஉ0உஎ

2926. (இ - ள்) தென்றிசையில...அமர்கின்றூர் - தெற்குத் திசையில் உள்ள திருக்கயிலை என்று சொல்லப்படும் திருக்காளத்தியினைத் துதித்து இனிதாக அங்கு விரும்பி எழுந்தருள்பவராய ; திரைசூழ ..மீள்பவர் - அலைகள் சூழ்ந்த கடலின் கரை சார்ந்த திருவொற்றியூரின் கண்ணே எழுந்தருளும் இறைவரைச் சென்று வணங்கும் நிலையினைத் திருவுள்ளத்தே நினைந்தருளி அங்குநின்றும் இனிய தமிழின் விரகராகிய பிள்ளையார் இறைவரது திருவருள் பெற்று மீண்டு மேற்செலவாராகி ; எந்தையார் ...போந்தார் - "எந்தையார் இணையடி என்மனத் துள்ளவே" என்ற கருத்துடன், பொன்னும் முத்தும் கொழித்து ஓடிவரும் பொன்முகலி யாற்றினையுங்கூட்டப் பொருந்தக் கூறிய திருப்பதிகவிசையினுற் போற்றி மேலே சென்றருளினூர். கஉ0உஅ

இந்நான்கு திருப்பாட்டுக்களும் ஒருமுடிபுகொண் டுரைக்கநின்றன.

2923. (வி - ரை) யாவர்களும் அறிவரிய இறைவன் - இறைவன், தெள்ளி "புணருமவர் தாங்க ளுளராக வென்றும், புணருவா னிலலாப் பொருள" ஆதலால் தற்போத நிலை முடிந்தார்க்கன்றி அல்லாதார் யாவர்களும் அறிவரியான் என்றலே பொருந்துவதாம். "தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" என்பவாகலின் ஞானக்காட்டம் பெற்றபின் பிரிப்பின்றி அருட்கண்ணுற் காண்பா ஞானியர் ; "அருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்" என்றலும் காண்க.

"அடைபவர் சிவமே யாகு மதுவன்றித் தோன்று மென்ற
கடனதென் னென்னின் முன்னங் கண்டிடார் தம்மைப் பின்னுந்
தொடர்வரு மருளி னலுந் தோன்றுமா காணு ராயின்
உடையவ னடிசேர் ஞான முணர்தலின் றடைத லின்றே"—(சிவப்பிர)

"சிவாரக்க சக்திதீதித்யாஸமாத்ததீ க்ருதசித் த்ருசா
சிவம் சகத்யாதிஸ்ஸாத்தம பச்ய யாதமா கதாவிருதி :

"ஆன்மா சிவசூரியனது சக்தியாகிய ஒளியால் ஆற்றலுடையதாகச் செய்யப்பட்ட ஞானக்கண்ணால் சக்தி முதலியவற்றோடுகூடச் சிவனைக்காண்கின்றது'

என்பது ஆகமம். (இவை ஸ்ரீமத் - முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் அருளிய குறிப்பு.)

ஏழுலகும் உடையானை - எல்லா வுலகங்களையும் உயிர்களையும் அநாதியே தமது உடைய பொருள்களாக உடையவன். "எல்லாமுன் னுடைமையே எல்லாமுன் னடிமையே" என்ற கருத்து. ஏழுலகு - மேல் கீழ் நடு உலகுகள். இவற்றை உடைமையாவது தனது மாயை என்னும் சக்தியினின்றும் தோற்றுவித்தும் பின் இறுதியில் அவற்றை மாயையில் ஒடுக்கி மாயையைத் தன்னுள் ஒடுக்குதலால் தன் பொருளாக உடைமை ; இரட்டுற மொழிதலால் ஏழுலகு - எழுபிறப்புக்களுள் வரும் எவ்வகை உயிர்களும் என்றுகொண்டு உடைமையாவது அடிமையாகக் கொண்டு இயக்கி நடத்துதல் என்று உயிர்களமாட்டு வைத்து உரைத்துக்கொள்க.

எண்ணிலாத......பெருமானை - 33 கோடி என்ற எண்ணிருப்பினும் மேலும் பசு நலவினைகள் செய்து தேவராகும் உயிர்கள் அனந்தமிருத்தலின் எண்ணிலாத என்

னார். தேவர்க்கின்தம் பெருமான் - தேவதேவன்; ஏனை யுயிர்களுக்கேயன்றித் தேவர்க்கும் தலைவன் என்பதாம்.

திருக்காளத்தி...தேனை - "இமமலைப் பெருந்தேன் சூழ்ந்து" (750) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

காலங்கள் - வழிபாட்டுக்குரிய காலங்கள் திருப்பள்ளியெழுச்சி முதலாகத் திருவர்த்தயாமம் ஈறாகச் சிவாகமங்களின் விதிக்கப்பட்டன; ஒன்று முதலாக ஆறு காலங்கள் வரை வழங்குவன; சிறுபான்மை அவற்றின் மிகுதலும், குறைதலு முண்டு.

பருகி ஆர்ந்து - பருகுதலாவது மொண்டு விழுங்குதல்போல நுகர்தல். ஆர்தல் - நிறைதல். "பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு" (ஏயர். புரா - 308); "தினப்பன் கடிப்பன் இருத்துவன் றானே" (திருமந்); "பருகியு மாரேன; விழுங்கியு மொல்ல கில்லேன" (திருவா - அண்டப - 160-167).

பண்பினிய - பண்பு - செம்மைப் பண்பு; சிவந்தரும் பண்பினுலினிய.

செய்யகோனை—என்பதும் பாடம். 1025

2924. (வி - ரை) அங்கண் வடதிசை மேலும் குடக்கின் மேலும் - அங்கண் - அவ்விடத்தின். திசை - மேலும் திசையில் உள்ள நாடுகளிலும்; குடக்கு - மேற்கு; குடக்கின் மேலும் - மேற்றிசை நாடுகளிலும், வடதிசை - இங்கு இமய எல்லை வரையிலும், குடதிசை - குடகடல் எல்லை வரையிலும் உள்ள நாடு என்ற பொருளில் வந்தன.

அருந்தமிழின் வழக்கங்கு நிகழாதாக - திருக்காளத்தியின் வடக்கும் மேற்கும் உள்ள தேசங்கள் தமிழ் வழங்கு நிலங்களன்றிச், சிறப்புற்ற பல மொழிகளே பரவிய நாடுகளாதலால்; ஆயின் அந்நாடுகளின் வாழ்வோரை உய்விக்கும் நிலையின்றோமோ? எனவும், சிவனருட் பரப்பு அங்கு நிகழாதாகுமோ? எனவும், தமிழ்நில மக்களின் அளவு மட்டுமோ பிள்ளையாரது கருணை செல்லுமளவு? எனவும், வேற்று மொழிகள் வழங்கு நிலங்களாயினும் அம்மொழியின் வன்மையும் அதன்மூலம் அம்மொழியாளரை உய்வித்தலும் பிள்ளையார்பாற் கூடிலதோ? எனவும் பற்பலவாறும் ஈண்டு வினவுவாருமுளர்; அற்றன்று. பின் என்னையோ கருத்து? எனின் "அசைவில்செழுந் தமிழ்வழக்கே யயல்வழக்கின் றுறைவெல்ல" (1922); "வண்டமிழ்செய் தவங்ரமப" (1921); "இசையனைத்தின் பெருமையெலாந் தென்றிசையே வென்றேற" (1922) என்று முன்னாகக் கூறியவை இங்கு நினைவுகூர்தற்பாலன. எல்லாத் திசைகளின் பெருமைகளையும் வென்றேறிய தென்றிசையிலே, எல்லா மொழி வழக்குக்களையும் வென்ற தமிழ் மொழியிலே விளக்கம் வைத்தல் அவ் எல்லாத் திசைகளுக்கும் மொழிகளுக்கும் பயன்படுமாறாயிற்று. பக்குவ முறையின் நிலைகளையும் மறைகளையும் வகுத்து இறைவனருளுமாறே உரிய வகையால் ஈண்டுக்கொண்டு ஏனையோர் யாவரும் பயன்படுத்திக் கொள்ளத் தக்கார்கள் என்பது. தென்றிசையின் தகுதிபற்றி 40 - 46 பாட்டுக்களும், முன் உரைத்தவையும் பார்க்க.

அற்றாயின், இங்கு நின்றபடியே அத்திசையின் தலங்களை வணங்கிப் பாடியருளிய தென்னை? எனின், இப் பாவனைகளும் திருவுருக்குக்களும் வணக்கங்களும் ஒளியும் ஒலியும் ஆகிய நுண்ணிய அலைகளின்வழி அங்கங்கும் சார்ந்து திருவருள் விளக்கம் செய்து அங்கங்குள்ளார்களும் படிமுறையானே பயன்பெறக் காரணமாய வினையும் கருணைச் செயல் என்க. பிள்ளையார் திருவவதாரத்தினும், அரசுகள் இறைவரது திருவடியில் ஞானவடிவேயாகி நண்ணியபோதும் உலகம் பெற்ற இன்ப விளைவுகள் இங்கு நினைவுகூர்தற்பாலன. 1926 - 1927 - 1930 = 1623 முதலியவை பார்க்க.

**திங்கள்புனை...போல** - தானங்கள்தோறும் நேரே சென்று சென்று வணங்கிப் பாடும் வழக்கம்போலவே இங்கு நின்றபடியே மனத்துள்ளே கண்டு வணங்கிப் பாடியருளினார்; "சமாதியான் மலங்கள் வாட்டிப், பொருந்திய தேச கால வியல்பகல் பொருள்க ளெல்லாம், இருந்துணர் கின்ற ஞான வியோகத்தாற் காண லாமே" (சித்தி - அளவை - 13) என்றதனால் ஞானயோகக் காட்சியினால் ஓரிடத்து இருந்தவாறே, வினையோகத்துள்ள காலமும் இடமுமாகிய எல்லைகளின் அளவுகடந்து எல்லாம் நேரே கண்டு அறியும் நிலை கூடும் என்பது அறியப்படும். "என்னுள நின்று மொளிரியான நாடிய தமிழ்க்கிளவி" (தேவா) 'எந்தையடி வந்தணுகு சந்தமொடு" (தேவா - 11) என்ற கருத்தும் காண்க. **போல** - பயனும் வினையும் பற்றி உவமம் விரித்துக்கொள்க. "ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லை" (தேவா) என்றதமிழ்க்கருத்தினைப் பெறவைத்து வினையோகமும் புலப்பட உபதேசித்ததாம்; ஈண்டு ஞானயோகக் காட்சியால் இங்கு நின்றவாறே அவ்வத் தானங்களையும் பிள்ளையார் நேரே கண்டு அப்பதிகங்களை அருளினார் என்பது அவ்வப் பதிகங்களால் அறிந்து கொள்க. அரசுகளும் இங்குப் பணிந்த குறிப்பினால் வடகயிலையை நினைந்து சென்றமையும் காண்க. மனவசீகரப் பயிற்சியால் நெடுந்தூர முள்ள பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் காணும் நிலைகள் ஈண்டுக் கருதத்தக்கன.

**வானவர்கள் போற்றிசைப்ப** - வடகயிலை - என்பது அங்குத் தேவர்களது வழிபாடுமட்டும் நிகழ்வதேயன்றி மனிதர்கள் எண்ணி வணங்குவதல்லாமல் நேரே சென்று வணங்கும் நிலையில்லை என்றருளியபடி "கயிலை மாலவரை யாவது காசினி மருங்கு, பயிலு மானுடப் பான்மையோ ரடைவதற் கெளிதோ?" (1630) என்றதும், திருமலைச் சிறப்பிலும் (11 - 22), அரசுகளுக்குத் திருவையாற்றிற் கயிலைக் காட்சி யருளிய இடத்தும் (1640 - 1644) உரைத்தவையும் ஈண்டு நினைவுகூரத்தக்கன.

**வடகயிலை** - திருக்காளத்தியாகிய தென்றிசைக் கயிலை மனிதர்களும் தேவர்களும் உடன் வழிபடவுள்ளது. இங்குத் தேவர் வந்து வணங்குதல் "கடவுண்மால் வரையி னுச்சி யதிர்தரு மோசை யைந்துய" (750); "வானமிசை யரம்பையர் கருங்குழற் சுரும்பு" (1089) என்பனவற்றானு மறியலாம். வடகயிலை அவ்வாறன்றி வானவர்கள் மட்டும் நேரே போற்றிசைப்ப உள்ளதென்ற குறிப்புத்தர வடகயிலை என்று பிறிதினியைபு நீக்கிய அடைமொழி தந்து பிரித்துணர்த்தினார்.

**மங்கை** - உமையம்மையார்; "மங்கை தெரிய வுருவில் வைத்து கந்த" (தேவா - கயிலை)

**செங்கமல மலர்வாவி** - 'கெண்டை பாயச் சுனைநீல மொட்டலரும்", "நீர்க் கோட்டு" (தேவா) என்ற பதிகக் குறிப்புக் காண்க.

**திருந்த** - பதிகப் பாட்டுக்களிற் கண்டவாறு வழிபாடுகள் பலவற்றாலும் முட்டின்று மக்கள் திருந்தி வீடுபெறும்படி. "உலகாண்டு வீடுகதி பெறுவார்களே" (11) என்று பதிகப் பயன் அருளியதும், 2 முதல் 7 வரை பாட்டுக்களில் வழிபடும் நிலைகளை உரைத்தருளியவையும், சிறப்பாய முதற் பாட்டில் உரைத்தனவையும் கருதுக. **பண் செவ்வழி** என்ற குறிப்பும் காண்க. "செவ்வழிநற் பண்பாடும்" (தேவாரம்).

**தமிழ் பாடலுறும்**—என்பதும் பாடம். 1026

## I திருக்கயிலாயம் (திருநொடித்தான்மலை)

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

பொடிகொ ளுருவர் புலியி னதளா புரிநூ றிகழ்மார்பிற்
கடிகொள் கொன்றை கலந்த நீற்றர் கறைசேர் கண்டத்தா

இடிய குரலா லிரியு மடங்க லொடுக்கு முழைச்சாரற்
கடிய விடைமேற் கொடியொன் றுடையார் கயிலை மலையாரே. (1)

போரார் கடலிற் புனல்சூழ் காழிப் புகழார் சம்பந்தன்
காரார் மேகங் குடிகொள் சாரற் கயிலை மலையார்மேற்
றேரா துரைத்த செஞ்சொன் மாலை செப்பு மடியார்மேல்
வாரா பிணிகள் வானோ ருலகின் மருவு மனத்தாரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:**—பொடி கொளுருவர், மங்கை தெரிய வுருவில் வைத்துகந்த தேவர் பெருமானார், கஞ்சமுண்ட முக்கணவர், ஒன்றும் பலவுமாய வேடத்தொருவர் என்றின்ன பல தன்மைகளோ டறியப்படும் இறைவர் கயிலைமலையாரே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:**—(1) பொடி - திருநீறு; பொடிகொள் உருவர் - பொடி மூடிய தழல்போலும் உருவினையுடையார், கொன்றை கலந்த நீற்றர் - கறைசேர் கண்டத்தர் - பொன்மை - வெண்மை - கருமை மூன்றும் சேர்ந்து நின்றது மார்பின் இடம்; மடங்கல் - ஆளி - சிங்கம்; இடிய - இடிபோல முழங்கும்; கடிய - கடிதாக நடந்து இடிக்கும். "நடக்கிற் படிநடுங்கும் ..உருமேறோ?" (அற. கு - 100) என்ற அம்மை திருவாக்குக் காண்க. மேற்கொடி - மேல் பொறித்த; ஒன்று - ஒப்பற்றது;—(2) மங்கை...உகந்த - "மங்கையுடன் ... ..வீற்றிருந்தார்" (2924); கிளி - கிளிமொழி. சேர் - உவமவுருபு; தெரிய - விளங்குமபடி; பரிய களிற்றை அரவு விழுங்கி மழுங்க இருள் கூர்ந்த - கயிலைமலை - என்று கூட்டுக; அரவு-பெரு மலைப்பாம்பு; மலைப்பாம்புகள் யானைகளையும் விழுங்கும் தன்மையுடையன; இவை யானைகளைச் சுற்றிப் பிணித்து எலும்புகளை நொறுக்கிக் கொண்டு விழுங்குவன என்பது பிராணிகளின் சரித நூலோர் கண்டவுண்மை; "குஞ்சரங் கோளிழைக்கும் பாம்பு" (திருக்கோவை - 21), இனி விழுங்கி என்பதற்கு விடத்தினால் அவியச் செய்து என்றலுமாம். மழுங்க - கிடக்க, இருள் கூர்ந்த - மலை - மரங்களின் செறிவினா லடர்ந்த இருள் மிகுந்த மலை. கரிய - செயா?? - புராண அணி;—(3) மா - யானை; விளைவர் - உலகம் மீளச் சிருட்டிப்பதற்குக் காரணமானவர், (இறைவர் - என்பதும் பாடம்), திரங்கல் - சுருங்குதல் திரங்கல் விளைப்பது நரை (நரை - திரை); திரங்கல் முகவன் - தோல் சுருங்கிய முகமுடைய குரங்கு;—(4) முந்நீர் சூழ்ந்த நஞ்சம் - முந்நீர் - கடல், சூழ்ந்த - சுழற்றப்பட்டதால் விளைந்த; இங்கு மந்தரத்தாற் கடையப்பட்டமை குறித்தது; சூழ்ந்த - பரவி எழுந்த என்றலுமாம்; நீர் உருவம். நீர் - நீர்மை - அழகு, கல்லறை - கற்குகை, மலை முழை. உழுவை புலி;—(5) தேன்றி - இனம் பிரிந்து, தென்றி......சேர் - 'இனத்தின்றிப் பிரிந்த செங்கணேறென வெருக்கொண்டெய்தி" (520), இனம் பிரிந்த யானை திகைத்துச் சாரல் நெறி ஓடிக் கன்றும் பிடியும் அடிவாரம் சேர என்றது கழல் சேரவார் நன்று நினைந்து நாடி நன்னெறி வழியே ஓடி உரியாருடன் கூடித் திரண்டு திருஅடியின் வாரம் சேர்வார் என்று முன் இரண்டடிகளிற் கூறிய பொருளை உள்ளுறைக் குறிப்பாலுணர்த்தும் இறைச்சிப் பொருள் பயப்பது காண்க. நாடற்றரியார் - அன்பர் நாடற்றரியார் - இறைவர் என்று கொண்டு ஒருவர் - உரியார் என முடித்தலுமொன்று; முன் பொருளில் அடிவாரஞ் சேர என்றதனை கழல் சேர்வாராகவும், கரிக்கும் கூட்டுக. "தாயினே ரிரங்கும்" (கருவூர் - கோயில்-3) என்ற திருவிசைப்பாவுள்ளும் இவ்வாறு இறைச்சிப் பொருள் வருவது காண்க,—(6) போதார் - சிறுட்டியின் தொடக்கத்திலும் ஒடுக்கத்தி னிறுதியிலும் அவ்வக் காலத்து மலர்ந்து குவியும் போதுபோல என்க. பனிமல்கு

கயிலைமலை என்று கூட்டுக. முதார் - மூததோா - முனிவா. உடனும் - உடனமர்ந்து; ஒரு கணததிலே - ஒரு செயலாலே ; அறம் நான்கு - அற முதலிய நானகும் ;—(8) பகழியால் - சிலைமேல் - எரி தொடுத்தார் - என்று கூட்டுக. எரி - தீககடவுளை நுனியாக உடைய அம்பு ; ஆகுபெயா. இடிய - நொறுஙக ; இபபாட்டு இறைவாது வீரஙகளைக குறிததது ;—(9) இருவர் - அயனு மாலும ;—(10) விருது - வீண்மொழி-ஆரவாரம ; பொருது - வாதிதது ;—(11) பொரார் - அலைகளால அலைபபுணபதனைப பொா எனறுபசரித்தாா. இககாட்சாணும மூண்ட கடற்போரினையும் குறிபபாலுணர்ததி நின்றது. "கடனமீதிலே யானை செலவே நினைவா" என்பா தாயுமானுா ; மேகங் குடிகொள் சாரல் - நீாததலை யிமயச சாரலாதலின் சாரலகளில எபபோதும் மேகங கள் நிறைநதுளளன எனபது ; தோா துரைத்த - நேரே சென்று காணுது இருநத நிலையே உரைதத எனறது குறிபபு. இனித தோா - துரைதத செஞ்சொனமாலை எனக கூட்டித், தோா - தோநது ; துரைத்த - உயாவுடையதாகச செயத எனறுரைபபது மாம் ; துரை - உயாவு ; "என்னுடைய, துறைமாணட வாபாடி" (திருவா) ஆயின இது வலிநது பொருள்கோடலாம.

II திருக்கயிலாயம் (திருநொடித்தான்மலை)

*திருச்சிற்றம்பலம்* திருவிராகம் பண் - சாதாரி - 3-ம் திருமுறை

வாளவரி கோளபுலி கீளதுரி தாளினமிசை நாளுமகிழ்வர்
ஆளுமவா வேளநகர் போளயில கோளகளி றுளிவரவிற
றூளமரா நாளமதா கூளியெழ மீளிமிளிா தூளிவளாபொற
காளமுகின மூளுமிருள கீளவிரி தாளகயி லாயமலையே. (1)

அந்தண்வரை வநதபுன றநததிரை சநதனமொ டுநதியகிலுந
கந்தமலா் கொந்திெனொடு மநதிபல சிநதுகயி லாயமலைமேல
எந்தையடி வந்தணுகு சந்தமொடு செநதமிழி சைநதபுகலிப
பந்தனுரை சிநதைசெய வநதவினை நைநதுபர லோகமெளிதே. (11)

*திருச்சிற்றம்பலம*

**பதிகக் குறிப்பு** :— ஆளுமவா, அறறவாக ணறறுணைவண, எஙகளிறை எனபன முதலாகப பேசபபடும இறைவரது இடம கயிலாயமலையே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) வாளவரி கோளபுலி - வாளபோனற வரிகளை யுடைய பற்றிககொள்ளும தனமையுடைய புலி ; புல்லி எனபது புலி எனறுயிற்று. புல்லுதல் - பற்றுதல். உரிதாள் - உரிதத தோல ; வேள - விரும்பிய ; நகர் - கயிலாய மலையே எனக கூட்டுக ; காளமுகில் மூளுமிருள் - "காரார் மேகங் குடிகொள்" (முன் பதிகம் 11) ; இருள் கீள - இருள போகுமபடி ; விரிதாள - விரியும ஒளி யுடைய அடிகொண்ட ;—(2) அற்றவர்கள் - பறறற்றவர்கள ; கற்றவர்கள் - அனு பூதிமானகள் ;—(3) சங்கை - மயககம ; சங்கை - தொகுதி என்றலுமாம் ;—(4) பிடியது ஒருமழ - பிடிததுப பறறியது ஒரு மழு ;—(5) எரி அஙகையில மூணடு எழ; நடம் - கூததது ; தரும் - ஆடும் ; இடம் - மலையே எனக ;—(8) களிறின் பொருப் புடை - களிறுகள நிறைநத மலையின். ஒருத்தி - உமையமமை. வெருக்குற வெருட் டலும் - அஞ்சுவிதது அசைக்க. தருக்கு இற - செருககு ஒழிய ;—(9) புனல் - கஙகை ; பரிசை - பரிசு - தனமை ; புரிவினவர் - அருளுடையவா. புரிவு தரும் - அறிய வரும் ; கரியவன் - மால ; மறை புரியவன் - அயன் ;—(10) வண்டர் -

கீழோர் :—(11) அடி வந்தணுது - பாடியருளிய திருக்காளத்தியினின்று இங்கு ஆகாய ஒலியலைகளின் மூலம் வந்து சேரும் ; காளத்தியிலிருந்து பாடிய வரலாற்றின் அகச்சான்று.

குறிப்பு :—இப்பதிகம் முடுகிய சந்தமுடன் வழியெதுகை யாப்பின் அமைந்தது ; பொருள் முற்ற அனுபவமுடைய தமிழறிந்த பெரியோர்பால் கேட்டுணரத் தக்கது. மேற் சில குறிப்புக்களே தரப்பட்டுள்ளன.

தலவிசேடம் :—திருக்கயிலாயம் - III - பக. சுஉசு பார்க்க.

திருக்கேதாரம்

திருச்சிற்றம்பலம்    பண் - செவ்வழி - 2-ம் திருமுறை

தொண்டரஞ் சுகளி றும்மடக் கிச்சுரும் பார்மலர்
இண்டைகட் டிவழி பாடுசெய் யும்மிட மென்பரால்
வண்டுபா டமயி லாலமான் கன்றுதுள் ளவரிக்
கெண்டைபா யச்சுனை நீலமொட் டலருங்கே தாரமே. (1)

வாய்ந்தசெந் நெல்விளை கழனிமல் கும்வயற் காழியான்
ஏய்ந்தநீர்க் கோட்டிமை யோருறை கின்றகே தாரத்தை
ஆய்ந்துசொன் னவருந் தமிழ்கள்பத் தும்மிசை வல்லவர்
வேந்த ராகியுல காண்டு வீடுகதி பெறுவரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தொண்டர்கள், விண்ணோர், முனிகள், குதிரைம்முகத்தார், ஒருகாலர்கள், ஊழியுணரும் யோகிகள் முதலிய பலதிறப்பட்ட வகையினரும் வந்து வழிபட இறைவர் திருவருள் செய்யவுள்ள இடம் திருக்கேதாரமே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அஞ்சுகளிறும் - அஞ்சு - ஐந்தாகிய மதயானை போன்ற புலன்கள் ; முற்றுமமை. இண்டை கட்டும் பணிவிடையின்போது புலன்களைப் புற விடயங்களிற் போகவிடாது சிவ சிந்தனையோடு இருத்தல்வேண்டுமென்பது விதி ; "அன்பு நாரா அஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க வலர்தொடுத்தே, யென்புள் ளுருக்கு மடியார்" (வயா. புரா - 226), அடக்கி - இண்டை கட்டி எனக. அடக்கி வழிபாடு செய்யும் என்று கூட்டியுரைப்பினு மமையும் ; வண்டு...நீலமொட்டலரும் - கேதாரத்தின் உயர்ச்சியின் நீர்வளம் குறித்தது ; "ஏய்ந்த நீர்க் கோட்டு" (11) என்பதும், "மலர்வாவி" (2924) என்றதும் காண்க :—(2) பதினெட்டு - மாபுராணங்கள் ; ஆறு - வேதாகமங்கள் ;—(3) புரோதாயம் - நீராடலின் ஒரு விசேடம் : "நீராட்ட புரோதாய மாட்டப்பெற்றோம்" (அரசுகள்) (III - பக. கஉ௦-பார்க்க),—(4) குதிரைம்முகத்தார் - ஒருகாலர்கள் - இயக்கர்களின் வகையினராகிய தேவச்சாதியினர் ; ஒருகாலர் - ஒருகாலுடையவர்கள். "கொம்மைப் பிடித் தொருக்காலர்க ளிருக்கானமலர் தூவி" (நம்பி - கேதா - 3) என்று நம்பிகளும் இப்பதிப் பதிகத்தில் அருளுதல் காண்க. பயில்வ - பயில்வனவற்றை ; அகரவீற்றுப் பலவறிசொல் ;—(5) ஊழியூழி யுணர்வார்கள் - ஊழிபலவும் அறியும் உணர்வுடைய சிவயோகிகள் ; "தப்பிலா மன்றிற் றனிக்கூத்துக் கண்டபின், ஒப்பிலெழு பதுகோடி யுகமிருந் தேனே" (திருமூலர் திருமந் - பாயி - 74), உழவர்கள்போல - கிளைக்க - வினை பற்றிவந்த உவமம். கேழல் - பன்றி, தேரிய - தேரும்பொருட்டு ; தேடுதற்கு.

பூழ்தி - புழுதி பட ; கிளைக்க - தோண்ட. பன்றிகள் இரையாகிய கிழங்கு முதலிய வற்றைத் தேடி நிலத்தைக் கிளைத்தல் புலத்தைப் புழுதிபட உழவர் உழுதல் போன்றது என்க ;—(6) நீறு...சேரும் - விரதிகளின் செயல்கள் நிலத்துண்ணல், தியானத்துடன் மலையில் சேர்தல் முதலாயின ;—(7) அடக்கி - நின்றார் - என்று கூட்டுக ; அடக்கி - ஓதி என்று கூட்டினுமாம் ; உடைந்த ..சினமாமுகம் செய்யும் - உடைந்த - விரிந்து வீசும் காற்றினால் வேங்கைமரங்கள் அசைய அவற்றின் பூக்கள் கல்லறைகளின் மேல் விழுந்து கிடப்பதை வேறு புலி என்று கருதி வேங்கை சினமுகம் செய்யும் (புறநானூறு பார்க்க) ; கல்லறை - முழைகளும் கல் முற்றங்களும் ;—(8) கிரமமாக - இசை ஒழுங்குபட ; வேதம் ஓதும் கிரமம்போல என்றலுமாம் பதம்-கிரமம்-சடை- முதலியன வேதம் ஓதும் முறை மரபுப் பெயர்கள் ;—(9) நின்றார் - சிவபெருமான் ; அலமந்தவர் - அயனரி யிருவர் ; அவர் தாழ்ந்து தந்தம் முடி சாய வணங்க ; யானை மண்டையைப் பீறிச் சிங்கம் குருதியுண்ண, அவ்யானைக் கோட்டினின்று முத்துதிர்வன ; முத்துப் பிறக்குமிடங்களுள் யானைக்கோடும் ஒன்று ; “ பருக்கை யானை மத்தகத் தரிக்குலத் துகிரப்புகர், நெருக்கி வாய நித்திலந் நிரக்குநீள பொருப்பன் ” (பிள். நட்டரா - திருவாரூர் - 1) என்று இக்கருத்தைப்பற்றியே முன் அருளியது காண்க. கீழ்ந்து - பீறி - போழ்ந்து ; பிளந்து ;—(10) மீன்கவர்வார் - புத்தர் ; மாசுடம்பினர் - அமணர் ; “ கழுவர் வுடலம் ” (நமபியாண்டார்) ; அடுக்க நின்ற அரவுரைகள் - அடுத்தல் - பொருந்துதல் ; அமணர்களது அறவுரை அடாதன ; அவ்வாறன்றி அடுப்பனவாகிய அறவுரை ; இவை வேத விதிதமானவை. ஆங்குக் கேட்டவர் - என்பது சனகாதியர்களையும் குறிப்பாலுணர்த்தி நின்றது ; அவர்களுக்கு ஞானோபதேசம் புரிந்த இடம் கயிலைச்சாரல் என்பதும் கருதுக. நின்ற - மோனநிலை நின்ற ;—(11) நீர்க்கோட்டு - பனி மலியும் உச்சியினை உடைய ; ஆய்ந்து சொன்ன - நேரில் கண்ணுற காணாது மனத்தாற்கண்டு பாடிய சரிதம்பற்றிய அகச்சான்று.

தலவிசேடம் :—திருக்கேதாரம் - வடநாட்டுத் தலங்களுள் நான்காவது தலம். பிருங்கி முனிவர் தம்மை வழிபட எண்ணியபோது அவருக்காக அம்மையார் சிவபெருமானை நோக்கி விரதம் கிடந்து பூசித்து இடப்பாகம் பெற்ற பதி ; அம்மை வரங் கிடந்த கேதாரகௌரி விரதம் மிகச் சிறப்பாய்ப் பலராலும் இன்றும் நோற்கப்படுவதும் மிக்க பயன்தருவதுமாம்; இத்தலத்தில் ஓராண்டில் ஆறுமாதம் தேவர் பூசை; ஆறுமாதம் மனிதர் பூசை ; இயக்கர் முதலிய பலவகைத் தேவசாதியார்களும் தேவர் முனிவர் முதலியோர்களும் தொண்டர்களும் வழிபடும் வகைகள் பிள்ளையார் பதிகத்தினுள்ளும் நம்பிகள் பதிகத்துள்ளும் விரிக்கப்படுதல் காண்க. தேவபூசை தொடங்கும் காலமாகிய ஐப்பசிப் பூரணை அணுகிய உடன் அருச்சகர் இறைவர் திருமேனியில் வெண்ணெயைக் காப்பிட்டு மலையினின்று கீழிறங்கி வந்துவிடுவர் ; பின்னர் வரும் தேவபூசையாகும் ஆறுமாதங்களும் தலம் பனியினால் மூடப்பட்டிருக்கும் ; தலச் சிறப்புக்கள் சிவரகசியப் பேரிதிகாசத்தில் விரித்துக் கூறப்பட்டுள்ளன ; ஆண்டுக் கண்டு கொள்க. பிள்ளையாரும் நம்பிகளும் இத்தலத்தைத் திருக்காளத்தியினின்றபடியே பாடியருளினர். சுவாமி - கேதாரநாதர் ; அம்மை - கேதாரகௌரியம்மை ; பதிகம் 2.

இங்குச் செல்லும் வழி மிக்க கடினம் ; இன்னும் செவ்வனே உணரப்பட்டிலது. ஆளுடைய அரசுகள் புராணமும் பார்க்க.

கௌரிகுண்டினின்றும் பீமகுண்டர் ராமபாடல் முதலியவற்றின் வழி போக வேண்டுமென்பர் ; அரித்துவாரத்தினின்றும் 200 நாழிகையளவில் இமயமலைச்சரிவில்

உள்ளதென்பர்; இருடிகேசம் (ரிஷிகேஷ்) நிலையத்தினின்றும் 146 நாழிகையளவிலும் அடையலாகும் என்பர்.

2925. (வி - ரை) கோகரணம் பாடி - பதிகம் "கோகரணமே" என்ற பதியினைப் பற்றியது என்பது குறிப்பு.

பருப்பதத்தின் கொள்கை - இப்பதியின் தன்மைகளையும் வழிமொழிகளையும் பற்றிய பதிகக் குறிப்புப்பெறக் கொள்கை என்றார்; நம்பிகள் பதிகமும், 1614-ல் தலவிசேடமும் (III - பக். ௯அக) பார்க்க.

மற்றிறைவர் தானம் போற்றிய சொன்மலர் மாலை பிறவும் பாடி - இவை இன்னவென்றறியக்கூடவில்லை; வடநாட்டில் உள்ள வாரணாசி முதலிய பதிகளையும் குடக்கில் உள்ள ஏனைப் பதிகளையும் பாடிய பதிகங்கள் போலும்; இவை கிடைத்தில!

நீற்றினணி கோலத்துந் தொண்டர் "திசையனைத்தும் நீற்றினொளி தழைப்ப" (2917); இவர்களைப்பற்றி முன் (2916) உரைத்தவை பார்க்க. புனிதமாகும் - ஆகும் - செய்யும், ஆக்கும் எனப் பிறவினைப் பொருளில் வந்தது.

நெடிது - மிகவும், நீண்டகாலம் என்றலுமாம்.

நிலவுகின்றார் - நிலவுதல் - தங்கியிருத்தல் ஆளுடைய அரசகளும் இம்மலையிற் றிருப்பணியாயின செய்து தங்கியருளினா (1612) எனபதும் இங்கு நினைவுகூர்க. நிலவுகின்றாராய்ப் போற்றி - உன்னி - மீள்வார் - போந்தார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. நிலவுகின்றார் - முற்றெச்சம்.

பாடி மகிழ்ந்திறைவர் தானம்—என்பதும் பாடம். 1027

திருக்கோகரணம்

திருச்சிற்றம்பலம்

திருவிராகம் பண் - சாதாரி - 3-ம் திருமுறை

என்றுமரி யானயல வாக்கியலி சைப்பொருள்க ளாகியெனதுள்
நன்றுமொளி யானொளிசி றந்தபொன்மு டிக்கடவு ணண்ணுமிடமாம்
ஒன்றியம னத்தடியா கூடியிமை யோர்பரவு நீடரவமார்
குன்றுகணெ ருங்கிவிரி தண்டலைமி டைந்துவளர் கோகரணமே. (1)

கோடலர வீனுமவிரி சாரன்முனெ ருங்கிவளர் கோகரணமே
ஈடமினி தாகவுறை வானடிகள் பேணியணி காழிநகரான்
நாடியத மிழ்க்கிளவி யினனிசைசெய ஞானசம் பந்தன்மொழிகள்
பாடவல பத்தரவ ரெத்திசையு மாள்வர்பர லோகமெளிதே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—என துள் நன்றும ஒளியான-ஒளிசிறந்த பொன்முடிக் கடவுளாகிய சிவன் நண்ணுமிடம் கோகரணமே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அயலவர்க்கு என்றும் அரியான் என்க. அரியான் - அறிதற்கரியவன். இயலிசை ஒளியான் - இயலும் இசையுமாகிய தமிழின் வரும் பொருள்களாகி எனதுள்ளே நின்று நனகு காட்டியருளும் ஞானவொளியானவன்; ஒளி...கடவுள் - பேரொளிப் பிழம்பாகிய திருமேனியுடையவர்; பேரொளியாகக் கோடிசூரியப் பிரகாசமுடையவராகத் தியானித்தல்வேண்டுமென்பது சிவாகமங்களின் விதி. "உலறு இமைகதுனு சேணவிளங்கவிரொளி" (முருகு); நீடரவமார் குன்றுக ணெருங்கிவிரி தண்டலை மிடைந்துவளர் - காட்சிச் சிறப்பினை உள்ளபடி தன்மையணி

யிற் கூறியருளியது ; மேல்வரும் பாட்டுக்களும் பார்க்க ;—(2) மாதருட னுடைவர்கள்......தூஉய் - காசியிற்போலவே இப்பதியிலும் யாவராயினும் அன்பர்கள் தாமே இறைவரைத் தீண்டி வழிபட உள்ள நிலை காண்க ; சமயங்களை வகுத்தவன் - உயிர்கள் அவ்வவற்றின் பக்குவபேதங்கட்கேற்ப உணர்ந்து வரும்படி பலவேறு சமயங்களையும் இறைவரே வகுத்தருளினர் என்பது ; இவை புறச்சமய முதலிய எல்லாம். மேல் ஆறு சமயங்கள் (6) என்றது அகச்சமயங்கள் ; “ கடவுள், பாலரை யுணர்த்து மேலவர் போலக், கேட்போ ரளவைக் கோட்படு பொருளால், அருளிய கலைக ளலகில வாலவை, பலபல சமயப் பான்மைத் தன்றே, அஃதால, அந்நூற் றன்மை யுன்னிய மாந்தர், இதுவே பொருளென் றதனிலை யுறைதலின், வேறொரு பனுவ லேற்றோர்க் கிசையா, மாறுபடு கூறுவ ரதனால், புறச்சம யங்கள் சிறப்பில வாகி, அருளில மாந்தரை வெருளுற மயக்கி, யலகைத் தேரி னிலையிற் றீரும், ஈங்கிவை நிற்க நீங்காச் சமயம், மூவிரு தகுதி மேவிய தாமும், ஒன்றோ டொன்று சென்றுறு நிலையில், ஆறு மாறு வீறுடைத்து” (சங்கற். நிரா - பாயி) எனவரும் உமாபதி சிவாசாரியார் திருவாக்கும், பிறவும் காண்க ; துறைத்துறை ..சாரன்மலி - குன்றுகள் நெருங்கிய அந்நாட்டு சீர்வளம். மதகைத் துறைத்தல் - மதகுகளுட் புகாவாறு பெருகுதல் ;—(4) இலை......படை - திரிசூலம் ; அலைத்தலை தொகுத்த புனல் - பெருகி வந்ததனைச் சிறுகவைத்த கங்கை. “பரந்தெழுந்த புனற்கங்கை பனிபோ லாக” (தேவா) ; தொகுத்தல் - சுருக்குதல் ; அரிகள்...விளையாடி நிகழ் - சிங்கம் - யானை - காட்டுப் பன்றி - பிடிகள் - இவை, இடத்தின் தெய்வத் தன்மையாற் பகைமையின்றிக் கூடி விளையாடுவன என்க ; “ பெரு நலங்கிளர் நாடு மெண்ணில ” (1616) என்றது இந்நாட்டினை உள்ளிட்டது ;—(5) படைத்தலை......நல்கு - அந்நாட்டுக் குடிச் சிறப்பு ; வேடர்களும் மறவர்களும் வழிபட உள்ள சிறப்பு. கண்ணப்ப நாயனார் - திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணங்கள் பார்க்க ; பழிதீர நல்கும் - கொலைவேடர் மறவர் முதலிய அவர்களுக்கும் வரங்கொடுத்து உய்யச்செய்யும் ;—(6) ஆறு சமயங்களும்......கூறும் - இங்கு அகச்சமயத்தவர்கள் பலரும் கூடி வழிபடும் சிறப்பு ;—(7) நல்ல......அருளும் - பெண்களின் வழிபாட்டுச் சிறப்பும், கொடுநோய்களும் தீர்த்து அஞ்சல் தரும் சிறப்பும் ; புகல் - அபயம் ; ஆகமம் மிக - இங்குச் சிவாகம விதிப்படி சிறந்த வழிபாடு நடத்தல் குறிப்பு ; இன்றும் காணத்தக்கது ;—(8) புரைத்தலை......புகைசெய் - மறைமுனிவர் வேள்விச் சிறப்பு ; புரை - குற்றம் ; தலை - குற்றங்களின் மூலம் ; காரணம் ;—(9) வில்லிகம் - விலவிதனைத் திறம் ; அரக்கன் - இராவணன் ; உயிர் செற்றவன் - இராமன் ; வேத முதலோன் - பிரமன் ; எல்லையில்...புலர்த்தி வளர் - கடலும் மலையும் புணர்ந்த நாட்டுவளங் கூறியது ; “ நெய்தலுங் குறிஞ்சியும் புணர்கிலம ” (1118) ; இஃது இந்நாட்டின் இயல் ;—(10) பாசம் தறுத்தவன்...மன்னன் - அருச்சுனன் ; கூச...நல்க - வேடனுய் வந்து அருச்சுனற்கருளிய வரலாறு ; பாசமதறுத்த - “ வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலுநற் பூசனையால், நஞ்சமுது செய்தருளு நம்பியென வேநினையும், பஞ்சவரிற் பார்த்தனுக்கு ” (கோளிலி - தேவா) ;—(11) ஈடம் - இடம் ; எதுகையின்பொருட்டு முதனீண்டது. நாடிய - நேரே சென்று கண்ணுறக் காணுது மனத்தாற் கண்டு கூறிய. காளத்தியிலிருந்தபடி பாடியருளிய சரித வரலாற்றின் அகச்சான்று. திசை - ஆள்வர் பரலோக மெளிது - திருக்கேதாரம் (11) பார்க்க.

தலவிசேடம் :—திருக்கோகரணம் - இஃதொன்றே துளுவநாட்டில் உள்ள தலம். ஆளுடைய பிள்ளையாராலும் ஆளுடைய அரசுகளாலும் பாடப்பெற்றது. மேல்

கடற்கரையில் உள்ளது பெருஞ் சிறப்பு. அதுபற்றிக் "கடல் வட்டமும்" (9) எனப் பிள்ளையாரும், "மாகடல் சூழ" என்று அரசுகளும் அருளியமை பதிகங்களுட் காண்க. கடல்வளமேயன்றி காட்டு நீர்வளமும் மலைவளமும், காட்டுவளமும் என நானில வளங்களும் மயங்க உள்ளது சிறப்பு; பிள்ளையார் பதிகம் காண்க. அரசுகள் கயிலை சென்றருளிய வழியில் நடந்து கடந்தருளிய நாடுகளுள் இப்பதியினை உள்ளிட்டது துளுவநாடும் ஒன்றுமென்பது "பெருக லங்கினர் நாடு மெண்ணில பிற்பட" (1616) என்றதனாற் கருத உள்ளது. இங்குச் செல்கின்றபோது இப்பதியின் திருத் தாண்டகப் பதிகத்தை "மாகட லசூழ் கோகரண மன்னி னானே" என்று பாடியருளினார் என்பதும் கருதப்படும். தனது இலங்கையில் தாபிக்கும் பொருட்டு இலிங்கமூர்த்தியை இராவணன் சிவபெருமானிடம் பெற்றுக் கொண்டுதான என்றும், தேவர்களது வேண்டுகோளின்படி விநாயகக் கடவுள் அதனை வாங்கிக் கீழே வைத்தருளிவிட்டனர் என்றும், பின்னர் இராவணன் அதனைப் பெயர்த்தெடுத்துப் போக எண்ணிக், கயிலை பெயர்த்தசைத்த தனது முழு வன்மையினையும் கொண்டு எடுக்க முயன்றும் இயலாது இறைவர் வேரூன்றியிருந்தனர் என்றும், அப்போது அத்திருமேனி பசுவின் காதுபோன்று உளவளைந்து (கோ - பசு, கர்ணம் - காது) குழைந்தமையால் இப்பதிக்குக் கோகர்ணம் எனவும் இறைவருக்கு மகாபலேசுவரர் எனவும் பெயர்கள் போந்தன என்றும் தலவரலாறுகள் கேட்கப்படுவன. சுவாமியின் திருவுருவம் சிறிய அளவில் முந்திரிவிதை போன்ற திருவடிவுடையது. இங்குச் சிவாகமங்களின்படி வழிபாடுகள் நடைபெறுதலாகிய சிறப்பும் அன்பர்கள் யாவரும் நேரே இறைவரது திருமேனியைத் தீண்டி வழிபடவுள்ள சிறப்பும் பிள்ளையாரது பதிகத்துப் போற்றப்பட்டன; "மாதரொடு மடவார்கள் வந்தடி யிறைஞ்சிநிறை மாமலர்கடூஉய்" (2); "ஆறுசம யங்களும விரும்பியடி பேணியர னாகமமிகக் கூறுமனம" (6); சுவாமி - மகாபலேசுவரர்; அம்மை - கோகரண நாயகி, கோயிலும் ஊரும் - மகாபலேசுவரம் எனப்பெறுவன; பதிகம் 2.

இது (M. S. M Ry) அரக்கோணம், ரேணுகண்டா, குண்டக்கல், கடக், ஹூப்ளி சந்திப்பு (Junction)களின் வழியாய் லோண்டா சந்திப்புச் சேர்ந்து, அங்குநின்றும் வடக்கிற் செல்லும் புகை இருப்புப்பாதையில் வார்த்தார் என்ற நிலையத்தினின்றும் மேற்கில் கற்சாலைவழி 32 நாழிகையளவில் பல நிலையங்களில் இடையீடிட்டு அடையத்தக்கது, மோட்டார்பஸ் வசதி உண்டு; கடற்கரையில் உள்ள பதி, (2) ஜோலார்பேட்டை, டௌன்பேட்டை, பெங்களூர் பிரூர் (Birur), ஹரிஹர் சந்திப்புகளின் வழி ஹூப்ளி சேர்ந்து பின்னர் முன்போலவே சென்று சேருவதும் மற்றொரு வழி. இவ்வழியில் இருப்புப்பாதைப் பயணம் சிறிது குறைவதாம். ஹூப்ளியிலிருந்தும் மோட்டார்பஸ் மூலம் 100 மைலிலும் அடையலாம்.

## திருப்பருப்பதம்

திருச்சிற்றம்பலம் — பண் - வியாழக்குறிஞ்சி - 1-ம் திருமுறை

சுடுமணி யுமிழ்நாகஞ் சூழ்தர வரைக்கசைத்தான
இடுமணி யெழிலானை யேறல னெருமேற
விடமணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே. (1)

வெண்செநெல் விளைகழனி விழவொலி கழுமலத்தான்
பண்செலப் பலபாட லிசைமுரல் பருப்பதத்தை

*கன்சொலி னுறபரவு ஞானசம் பந்தனல்ல*
*ஒண்சொலி னிவைமாலை யுருவெணத் தவமாமே.* (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு :**—*நாகம் அரைக்கசைத்தான், எருதேறி, விடமணி மிடறுடையான், புலித்தோலுடையான் என்றின்ன தன்மைகளாலறியப்படும் இறைவன் எழுந்தருளியுள்ள நெடுங்கோட்டுப் பருப்பதம் பரவுதுமே.*

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) **சுடுநாகம்** - மணியுமிழ் நாகம் என்று தனித்தனி கூட்டுக ; **இடுமணி** - *யானைகளின் பக்கங்களில் இடும் இரட்டை மணிகள்.* "*படுமணி யிரட்டு மருங்கில*" (முருகு) ; **யானை ஏறலன் எருதேறி** - "*கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேறாதே, இடபமுகந் தேறிய வாறு*" (திருவா) ; "*அயிராவணமேறா தானே றேறி*" (தேவா) ; **ஏறி** - பெயர் ; *ஏறியவர்.* **நெடுங்கோட்டுப் பருப்பதம்** - **நெடுங்கோடு** - *நீண்ட உயரமாகிய மலை. மலையின் மேலே 40 நாழிகை யளவு ஏறிச்சென்று சேரவேண்டிய நிலை குறித்தது.* **நெடுங்கோட்டுப் படுமணி** - *மலைபடு மணிகளாகிய முத்து இரத்தினம் முதலியவை என்றலும் அமையும் ;*—(2) **திரைய** - *திரையுண்டாக ; திரை - தோலின் சுருங்குதல்.* **உள்கும்** - *நினைக்கும் ;* **உள்கும்** - *தமக்குள் வரும் நாள்களை எண்ணலுறும் ;* **தோற்றம்** - *யோனிபேதம் ;*—(3) **துனி** - *நோய் ;* **தோன்றி** - *பிறவியில் வந்து ;* **ஓர்...ஆதல்** - *ஓர்ந்து செய்யும் நல்வினையினால் வரும் பயனைப் பெறவேண்டுமானால் ;* **இரண்டுற மனம் வையேல்** - *இரண்டாவதாக ஒன்று உண்டு என்று எண்ணாதீர்கள் ; '* ஒன்றியிருந்து நினைமின்கள் " *(தேவா) என்ற கருத்து என்றலுமாம் ;*—(5) **துறை பல சுனை** - *பெருமலை யாதலின் பல சுனைகளையும் பிற நீர்நிலைகளையும் உடையது ;* **வானவர் மகிழ்ந்தேத்த** - *வானமளாவ வுயர்ந்த பெருமலை யாதலின் இங்கும் தேவ பூசை பேசப்படும் ; திருநந்தி தேவர் வரம்பெற்று இம்மலையுருவாய் இறைவரைத் தாங்கி நிற்பதால் வானவர் ஏத்த என்றலுமாம் ;* **பறைபடு** - *பறைபோல முழங்கும் ;*—(6) **சீர்கெழு ..மனம் வையேல்** - *3-ம் பாட்டுப் பார்க்க ;*—(7) **புகை** - *தூபம் ;* **விரை** - *சாந்தமும் சுகந்த மலர்களும் ;* "*விரையிரண்டாந் தளராத விலேபனமுந் தயங்குசுகந் தமுமென்ன*" (பேரூர்ப் புராணம் - மருதவரை - 32) ; **கமலம்** - *தாமரை ; மறையவர்க்குரிய திருவடையாள மாலை ; இறைவர் மறையவர் என்ற குறிப்பு. தாமரை சிவபெருமானது அருச்சனைக்குச் சிறப்பாய்க் கொள்ளப்படும் ;*—(8) **நெடுங் கிணறு** - *நீர்ப்புக்கள் பலவும் பலதுறையும் ஆழ்ந்து செல்வதாலும் இறைக்க இறைக்க மேலும் ஊறுவதாலும் கிணறு எனப்பட்டது ;* "*ஆழ முகந்த வென்னை*". **மனத்தினை... .. ..அடையாமை** - **வலித்து** - *வற்புறுத்தி உலகச் சார்பினின்றும் இறைவன்பால் திருப்பி ;*—(9) **அடையாமல் - பரவுதுமே** *என்று முடிக்க ;*—(10) **சடம் கொண்ட** - *ஞானமின்றிப் பருப்பொருள் கொண்ட ;* **சடம்** - *சித்து அல்லாதது ;* **மடங்கொண்ட விரும்பியர்** - *அறியாமையால் பொய் பலவும் விருப்பம் கொண்டவர்கள் ;* **பேய்த்தேர்ப் பின்......செல்வார்** - **பேய்த்தேர்ப் பின்** - (*குறித்து*) *நீர்பெறப் போதலாகிய வீண்செயல் போல ;* **செல்வார்** - *செல்பவர்களே ; விளிவேற்றுமை.* **போதுமின்** - *அதனைவிட்டு இங்குப் போதுங்கள் ;* **படம்** - *உரிவை ;*—(11) **வெண் செந்நெல்** - *நெல்லின் சிறந்த வகை ;* **இசை முரல்** - *தேவகானங்களும் தேன்வண்டுகளின் இசைகளும்.* **உரு எண** - *குறித்த பொருளை உருவெளிப்படும்படி அழுந்தி அறிய ;* **தவம்** - *சிவபூசை* - **தவப்பயன்.**

**தலவிசேடம் :—திருப்பருப்பதம்** - இது வடநாட்டுப் பதிகளுள் 1-வது பதி; ஸ்ரீபர்வதம், ஸ்ரீசைலம், மல்லிகார்ச்சுனம் என வழங்கும். அர்ச்சுனம் - மருது; மருது - தலை-இடை-புடை என மூன்றுமென்றும் அவற்றுள் இது தலைமருது (மல்லிகார்ச்சுனம்) என்றும் கூறுவர். ஏனையிரண்டாவன திருவிடைமருதூரும் (சோழநாடு), திருப்புடைமருதூரும் (பாண்டிநாடு) ஆம் என்பர். திருப்புடைமருதூரே திருப்பிடவூர் - தேவார வைப்புத்தலமாம் என்பர். சிலாத முனிவரது திருமகனாராகிய திருநந்திதேவர் இறைவரைத் தாங்கி நிற்பதற்காக வரங்கிடந்து தவமியற்றி மலையுருவம் பெற்று நிற்கும் தலமென்பது கந்தபுராணம்.

"பருப்பதப் பெயர்ச் சிலாதனற் பாலகன் பரமன்
இருப்ப தோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப்
பொருப்ப தாகியே யீசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான்"

(கந்தபு - வழிநடைப் - 5), இதன் அளவிறந்த மேன்மைகளைச் சிவரகசியப் பேரிதிகாசத்தினுட் காண்க. இதனைச் சென்று சேரும் வழியின் அருமைபற்றிச் "செல்லலுற வரிய சிவன் சீபர்ப்பத மலையே" என்று நம்பிகள் பதிகத்துள் விதந்து பாராட்டியருளினர். "பைங்கணவெள் ளேற்றேறி" என்ற அரசுகள் திருவாக்குப் புராண வரலாறு குறித்தது. நந்திபெருமான் தவஞ்செய்து வரம்பெற்ற வரலாற்றின் அண்மையின் "நந்தியால்" என்ற இதனை அடுத்த பெருநகரத்தின் பெயரானும் விளங்கிநிற்கும். சுவாமி - பருப்பத நாயகர்; அம்மை - பருப்பத நாயகி, பதிகம் 2.

இது கானூல் சில்லாவைச் சேர்ந்த நந்தியால் (Ry) நிலையத்தினின்றும் வடகிழக்கில் 60 நாழிகையளவில் அடையத்தக்கது; அதனில் ஏறக்குறைய 40 நாழிகையளவும் மலையேற்றமாகிய வழி. இடையிடை இளைப்பாறும் இடங்களும் வசதிகளும் உண்டு

திருஇந்திரநீலபருப்பதம்

திருச்சிற்றம்பலம் **பண் - இந்தளம் - 2-ம் திருமுறை**

குலவு பாரிடம் போற்ற வீற்றிருந், திலகு மான்மழு வேந்து மங்கையன்,
நிலவு மிந்திர நீல பர்ப்பதத், துலவி னானடி யுள்க நல்குமே. (1)

கந்த மாம்பொழில் சூழ்ந்த காழியான், இந்தி ரன்றொழு நீல பர்ப்பதத்
தந்த மில்லியை யேத்து ஞானசம், பந்தன் பாடல்கொண் டேத்தி வாழ்மினே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :—**இறைவர் இந்திரநீல பர்ப்பதத்துள் எழுந்தருளியுள்ளார். அவரது திருவடிகளை உள்க அவர் நன்மை நல்குவர். அவரை ஏத்தியுய்மின்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—**(1) குலவு - சூழ்ந்து பரவும். **நல்கும்** - நலங்களைத் தரும் உலவினான் தன் அடியை உள்கும் பேற்றினை அடியவர்க்கு நல்கும் என்றலுமாம்;—(2) **ஏத்துவார் நம்பன்** - ஏத்துவார்க்கு நம்பன் (**நம்பன்** - நம்பி அடையத் தக்கவன்; அடையப்படுபவன்),—(3) குணமதாக வாழ்த்துவோம்; அதனால் வினைநாசமாம்; நன்மை வரும். பாச நீக்கமும் சிவப்பேறும் பெறுதற்குரிய சாதனங் கூறியபடி;—(6) **எண்ணிலார்** நினையாதார்;—(9) **பாலியாது எழுவாரை** - எண்ணாது செல்பவர்களை; **கோலியா** - கோபித்து;—(10) **எட்டனை** - எள்ளளவும்;

இழிவு சிறப்பும்மை தொக்கது ;—(11) இந்திரன் தொழும் நீலப் பர்ப்பதம் - தல வரலாறும் பெயர்க்காரணமும் கூறியபடி.

**தலவிசேடம் :—திருஇந்திரநீல பருப்பதம்** - வடநாட்டில் 2-வது பதி. இந்திரன் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது ; மேகங்கள் மேலே கவிந்து சூழ்ந்திருப்பதால் நீலபர்ப்பதம் எனப்பெயர் பெற்றது போலும். இக்காரணம்பற்றிக் கோயமுத்தூர்ச் சிலையில் "நீலகிரி" எனவொரு பெயர்சிறந்த மலையிருப்பதும் காண்க. இந்திரன் பூசித்தமை பதிகத்துத் திருக்கடைக்காப்பினுட் காண்க. சுவாமி - நீலாசலநாதர் ; அம்மை - நீலாம்பிகை ; பதிகம் 1.

இது நார்க்கட்டியங்கஜ - பிக்னதொரி (B. N. W. Ry.) இருப்புப்பாதையில் பிக்னதொரி நிலையத்தினின்றும் 130 நாழிகையளவில் உள்ளது. பாதை கடினம்.

**மற்று இறைவர் தானம்:—**

இதனால் குடக்கில் (மேல்கடற்றிசை) உள்ள கோகர்ச்சுரமும், வடக்கில் உள்ள விசுவேசம் (காசி), சோமேசம், பீமேசம் முதலாகிய சோதிலிங்கப் பதிகளும், பிரயாகை, மதுரை, (மாதுரா), காஞ்சி, அவந்திகை முதலிய முத்தித் தலங்களும், பிறவும் கருதப்படும். இவற்றின் பதிகங்கள் கிடைத்தில ! "போற்றிய சொன்மலர் மாலை பிறவும் பாடி" என்றதனால் பிள்ளையார் திருப்பதிகங்கள் பாடியருளினர் என்பது விளங்கும்.

2926. (வி - ரை) திரைசூழ்...உன்னி-திருவெண்பாக்கம் முதலிய பதிகளை வணங்கி யணைந்தபோது, கண்ணப்ப நாயனாரை உன்னிக் காளத்தியை அணையும் வேட்கை (2911) யுடன் எழுந்தருளினார் ; அதுபோலவே இங்குத் திருக்காளத்தினின்றும் திருவொற்றியூருறைவாரை இறைஞ்ச உன்னி எழுந்தனார் ; அங்கு நோக்கிச் செல்வார் வழியிடைப்பட்ட பதிகளையும் வணங்கிச் சென்றருளுவார் , தொண்டைநாட்டில் இறைவர் கோயில்கள் கண்டு போற்றி வருதல் (2857) கருத்துட்கொண்டு பிள்ளையார் சீகாழியினின்றும் எழுந்தருளினாராதலின் அந்நாட்டின் சிறந்த பதியாகிய ஒற்றியூரினை நினைந்தனர் என்க. இது, பின்னர்த் திருமயிலையின் அற்புத நிகழ்ச்சி தொடர்ந்து உளதாகும் பொருட்டு இறைவரருளாற் பிள்ளையாரது திருவுள்ளத்தில் எழுந்ததுமாம் என்க.

அங்கண் - மீள்வார் - அங்குநின்று மீண்டு எழுந்தருளி வருகின்றவராகிய பிள்ளையார். மீளுதல் - சென்ற வழியே திரும்புதல்

அருள் பெற்று - இறைவர்பால் விடைபெற்று.

"எந்தையார் இணையடி என்மனத் துள்ள" என்று - இது திருமலையினின்றும் மீண்டருளிப் புறப்படும்போது இறைவரது திருவடியினைத் தமது திருமனத்துட் கொண்டு துதித்து மேல் எழுந்தருளிச் செல்லும் நிலை ; பதிகக் குறிப்பு. மனத்து - மனத்தில் உள்ளன : அகரவீற்றுப் பன்மைப்பெயர். என்று - என்று பதிகத்தாற் றுதித்து. "எந்தையார்...மனத்துள்ளவே" பதிக முதற்பாட்டின் ஈற்றடி. இவ்வாறே முன்னர்த் திருவாரூரினின்றும் புறப்படும்போது "அவன் தாரூர் தொழுதுய்யலாம் ; மனமே மறவாது தொழுக" என்று பாடிப் புறப்பட்டமையும் காண்க (2416). கச்சியினின்றும் "அவனென் னெண்ணத்தானே" என்று அரசுகள் அருளிப் புறப்பட்டதும் (1593) கருதுக.

பொன்முகலி கூடப் புனைந்த திருப்பதிகம் - பதிகத்துள் "முகலியின் கரையினிற் - காளத்தி" என்று முகலி ஆற்றினையும் சேர்த்தே மலையினைத் துதித்ததை எடுத்துக் காட்டியபடி.

போந்தார் - மேலே சென்றருளினார். 

## III திருக்காளத்தி

*திருச்சிற்றம்பலம்*  பண் - கொல்லி - 3-ம் திருமுறை

*சந்தமா ரகிலொடு சாதிதேக் கமமரம்*
*உந்துமா முகலியின் கரையினி லுமையொடும்*
*மந்தமார் பொழில்வளா மல்குவண் காளத்தி*
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே. (1)

*அட்டமா சித்திக ளணைதரு காளத்தி*
*வட்டவார் சடையனை வயலணி காழியான்*
*சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்*
*இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே.* (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு :—** *காளத்தியினின்றும் நீங்கிச் சென்றாலும் எந்தையார் இணையடி என் மனத்து நீங்காதுள்ளன என்று துதித்து விடைபெற்றுச் சென்றது.*

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சந்தம்** - *மணம்,* **ஆர்** - *சந்தனம்.* **சந்தம்** *என்றதனை அகிலொடு கூட்டுக,* **சந்தம்** - *சந்தனம்,* **ஆர்** - *பொருந்திய என்றுமாம.* **தேக்கு** - இதனை *"நீண்ட தேக்கினப்புறஞ் சென்றற் றோன்றும் குன்றினுக் கயலே யோடுங் குளிர்சந்த பொன்முகலி" (743) என்று மலையினை மறைக்கும் அளவு வளமுடையனவாகிச் செறிந்தன என்று கூறியதனை நினைவுகூர்க; சாதி - உயர்வு குறித்தது.* **உந்துதல்** - *பெருவெள்ளத்தில் அலைத்து வருதல்;* **உமை** - *ஞானப் பூங்கோதையம்மை. இம்மலை திருக்கயிலையே என்ற குறிப்புப்பெற இப்பதிகத்துள் இப்பெயரால்* போற்றியருளினார். **உமையொடும் எந்தையார்** - *"வரையென மாதினொடும் வீற்றிருந்தான்" என்று திருத்தொண்டையைப் போற்றியவாறு நினைக்க, (தென்)கயிலாயப் பதியாகிய இவ்விறைவரே அந்த வரத்து ஞானவமுது அளித்த எந்தையார் என்றதும் குறிப்பு.* **மனத்து உள்ளவே** - *கண்ணுறக் காணும் இந்நிலையினின்று நீங்கினும் மனத்துள் நீங்காதுள்ளன என்றது. இக்குறிப்பு இப்பதிகம் விடைகொண்டு புறப்படும்போது அருளியதென்பதற்கு அகச்சான்று.—(2)* **சாலமா பீலி** - *மயிற்பீலியின் மிகுதி; மயில் குறிஞ்சிக் கருப்பொருள்; மயில்கள் வாழுமிடங்களில் ஆயிரக்கணக்காகக் காணப்படுவன.* **காலம்** - *வெள்ள காலம்; பருவம் பொய்யாது வருதலும் குறிப்பு; உரிய காலம் என்பதுமாம்* **நினையுமா நினைவதே** - *அவரை நினைவதே நினைவு எனப்படும்.* **ஆ** - *ஆறு; ஈறு குறைந்து நின்றது;—(3)* **வீங்கு** - *மேன்மேற் பெருகும்;—* (10) **வாங்கிடும்** - *போக்கும்,—(11)* **அட்டமா சித்திகள் அணைதரு** - *தலவிசேடக் குறிப்பு.* **சிட்டம்** - *நல் ஒழுக்க விதி.*

**தலவிசேடம் :— திருக்காளத்தி** - *கண்ணப்பர் புராணத்திறுதியில் உரைக்கப்பட்டது.*

2927. *மன்னுபுகழ்த் திருத்தொண்டர் குழாத்தி னோடு*
*மறைவாழ வந்தவர்தா மலையுங் காணும்*
முன்னணைந்த பதிபிறவுங் கடந்து போந்து
*முதல்வனா ருறைபதிகள் பலவும் போற்றிப்*

பன்மணிகள் பொன்வரன்றி யகிலுஞ் சந்தும்
பொருதலைக்கும் பாலிவட கரையி னீடு
சென்னிமதி யணிந்தவர்தந் திருவேற் காடு
சென்றணைந்தார் திருஞான முண்ட செல்வர். க0உகூ

(இ - ள்) மன்னுபுகழ்...போந்து - நிலைபெற்ற புகழையுடைய திருத்தொண்டர் கூட்டத்தோடும் கூடி வேதங்களின் நெறி வாழும்படி அவதரித்த பிள்ளையாரும் மலைகளையும், காடுகளையும், முன்னாச் சென்று வணங்கிய பதிகளையும், பிறவற்றையும் கடந்து சென்று; முதல்வனார்...போற்றி - இறைவர் எழுந்தருளிய பதிகள் பலவற்றையும் வணங்கித் துதித்துப் போய்; பன்மணிகள்...வடகரையில் நீடு - பல மணிகளையும் பொன்னையும் வாரிக்கொண்டும் அகில் சந்தனம் முதலிய மரங்களை மோதி அலைத்தும் ஓடுகின்ற பாலியாற்றின் வடகரையில் நிலைபெற்ற; சென்னிமதி...செல்வர் - தலையிலே மதியை அணிந்த இறைவரது திருவேற்காட்டினைத் திருப்பெருகு சிவஞானவமுதுண்ட செல்வராகிய பிள்ளையார் சென்றணைந்தருளினர்.

(வி - ரை) மலையும்......கடந்து - மலையுங் காடுகளுமாகப் பரந்த அந்நாட்டின் பகுதியிலே முன்னர் வந்தருளிய (பதிகள்முதலியவற்றின்) வழியே திரும்பச் சென்று. பிள்ளையார் அங்குநின்றும் மீண்டருளிய வழியினைக் கூறியபடி; 2912 முதல் 2915 வரை பாட்டுக்களில் உரைத்தவை பார்க்க.

பதிகள் பலவும் போற்றி - முன் அணைந்தவையும் பிறவுமாகிய நகரங்களுள் இறைவனார் விளங்க எழுந்தருளிய பதிகள் பலவற்றிலும் வணங்கித் துதித்து; இவை திருக்காரிகரை, திருக்கள்ளில், திருநின்றவூர்? (பூசலார் நாயனார் பதி), வடதிருமுல்லைவாயில் முதலாயின எனப்படும் கருதப்படும். அவற்றுள் திருநின்றவூருக்குப் பதிகம் இல்லை. ஆனால் பூசலார் நாயனார் மனக்கோயில் அமைத்த காலம் "காடவர் கோமான் கச்சிக் கற்றளி யெடுத்து முற்ற, மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வருத்தல் செய்த" காலமாரும்; திருநின்றவூரில் பூசலார் நாடனார் காலத்துக்கு முன் சிவபெருமான் கோயில் இருந்ததோ என்பது ஐயப்பாடு என்றும், அதுபற்றியே பூசலார், "கங்கை, மடுப்பொதி வேணி யையர் மகிழ்ந்துறை வதற்கோர் கோயில் எடுப்பதுமனத்துட் கொண்டார" (பூசல் - புரா - 4) என்றும், அக் காடவர்கோமான் கி. பி. 685-720 வரை ஆண்ட இராஜசிம்மன் என்றும், பூசலார் நிகழ்ச்சியின் பின்னரே திருநின்றவூரில் அந்நினைவின் பொருட்டுச் சிவாலயம் ஒன்று நியமிக்கப்பட்டது என்றும், ஆதலின் பிள்ளையார் இங்குப் போற்றியிருத்தல் இயலாதென்றும் சண்டேச சரித ஆராய்ச்சியாளர் கொள்வர்.

பொன்வரன்றி - பொருது அலைக்கும் - மணியும் பொன்னும் கனமுள்ள பண்டங்களாதலின் நீரின் அடியில் மணலோடு ஈர்த்துச் செல்லுதலும், அகிலும் சந்தும் ஆழாது மேலமிதக்கும் பெரும் பண்டங்களாதலின் நீரின் வேகத்தால் மோதப்பட்டு அலைத்துச் செல்லுதலும் ஆகிய இயல்புகள் வரன்றி-பொருது-அலைக்கும் என்றவாற்றால் கூறியகவி நயம் காண்க.

பாலி - இது பழைய பாலாறு என்றும், கூவம்ஆறு என்றும் வழங்கப்படும்.

நீடு - திருவேற்காடு - என்று கூட்டுக. நீடுதல் - பழமையாய் நிலைபெறுதல். தல விசேடம் பார்க்க.

திருஞானம் - சிவஞானமாதலின் திரு என்ற அடைமொழி பற்றியே குறித்தனர், திருவிற் சிறந்தது சிவமேயாதலின். ஞானம் - ஞானஅமுது.

2928. திருவேற்கா டமர்ந்தசெழுஞ் சுடர்பொற் கோயில்
சென்றணைந்து பணிந்துதிருப் பதிகம் பாடி,
வருவேற்று மனத்தவுணர் புரங்கள் செற்றார்
வலிதாயம் வந்தெய்தி வணங்கிப் போற்றி
உருவேற்றா ரமர்ந்துறையு மோத வேலை
யொற்றியூர் கைதொழச்சென் றுற்ற போது
பெருவேட்கை தருவாழ்வு பெற்ற தொண்டர்
பெரும்பதியோ ரெதிர்கொள்ளப் பேணி வந்தார். ௧௦௩௦

(இ - ள்) திருவேற்காடு...பாடி - திருவேற்காட்டிலே விரும்பி வீற்றிருந்தருளும் செழுஞ்சுடராகிய இறைவரது அழகிய திருக்கோயிலினைக் கணமே சென்று சேர்ந்து வணங்கித் திருப்பதிகம் பாடியருளி, வருவேற்று மனத்து அவுணர்...போற்றி - எதிர்த்து வரும் வேறுபட்ட மனமுடைய பகைவராகிய அவுணர்களுடைய முப்புரங்களையும் எரித்த இறைவரது திருவலிதாயத்தில் வந்து சேர்ந்து வணங்கித் துதித்து; உருவேற்றார் ... போது - உருவுடைய இடபவேற்றினை உடைய இறைவர் விரும்பி வீற்றிருந்தருளும் குளிர்ந்த கடற்கரையில் உள்ள திருவொற்றியூரைத் தொழுவதற்குச் சென்றபோது, பெருவேட்கை ... வந்தார் - மிக்க பெரிய விருப்பம் தருகின்ற வாழ்வு பெற்ற தொண்டர்களும், அந்தப் பதியிலுள்ளவர்களும் பிள்ளையாரை எதிர்கொள்ளும் பொருட்டு அன்புடனே வந்தனர்.

(வி - ரை) செழுஞ்சுடர் - "சோதியே சுடரே சூழொளி விளக்கே" (திருவா) என்றபடி ஒளியுருவமாகி உள்ளே உயிரறிவை விளக்கவைக்கும் சுடர். செழுமையாவது உயிர்க்குச் செழுமைதரு மியல்பு.

வரு - வேற்று மனத்து - அவுணர் - வருதல் - தீமை பூண்டு வேத சிவாகம விதிகளுக்கு மாறுபட்டு வருதல். வேற்று மனம் - மாறுபட்டுப் பகைமைபூண்ட மனம்; அவுணர் - திரிபுராசுரர்கள்.

ஓதவேலை - ஓதம் - குளிர்ச்சியுடைய, வேலை - வேலைக்கரையில் உள்ள.

பாடி - போற்றி - சென்றுற்றபோது - வினையெச்சங்களுக்குச் செல்வர் என்ற வினைமுதல் முன் பாட்டினின்றும் வருவிக்க.

செல்வர் - பாடிப் போற்றிச் சென்றபோது தொண்டர் - பதியோர் பேணி வந்தார் - என்று, வினையெச்சங்கள் பிறவினைமுதல் வினைகொண்டு முடிந்தன.

பேணி - பேணுதலாவது அன்புபூண்டு செய்கை செய்தல். பெருவேட்கை தரு வாழ்வு பெற்ற தொண்டரும் பதியோரும் எனக் எண்ணும்மைகள் தொக்கன. வாழ்வு பெற்ற தொண்டர் - வாழ்வு பெற்ற - என்றதனை இரண்டிடத்தும் கூட்டுக. பிள்ளையாரை எதிர்கொள்ளும் வேட்கை தருதல் முன்னைத் தவத்தினால் வரும் வாழ்வு என்பது. 1030

2929. மிக்கதிருத் தொண்டர்தொழ வணையத் தாமும்
தொழுதிழிந்து "விடையவ"னென் றெடுத்துப் பாடி
மைக்குலவு கண்டத்தார் மகிழ்ந்த கோயில்
மன்னுதிருக் கோபுரத்து வந்து தாழ்ந்து

தக்கதிருக் கடைக்காப்புச் சாற்றித் தேவர்
தம்பெருமான் திருவாயி லூடு சென்று
புக்கருளி வலங்கொண்டு புனிதர் முன்பு
போற்றெடுத்துப் படியின்மேற் பொருந்த வீழ்ந்தார். க௦௩க

(இ - ள்.) மிக்க...பாடி - பெருகிய திருத்தொண்டர்கள் தொழுதுகொண்டு வந்தணையவே பிள்ளையார் தாமும் எதிர் தொழுது சிவிகையினின்றும் இறங்கி "விடையவன்" என்று தொடங்கும் பதிகத்தினைப் பாடியருளி; மைக்குலவு...தாழ்ந்து - அவ்வாறு பாடிக்கொண் டருளியபடியே விடம் விளங்கும் கழுத்தினையுடைய இறைவர் மகிழ்ந்து வீற்றிருக்கும் திருக்கோயிலின் முன் உள்ள நிலைபெற்ற திருக்கோபுரத்தின் முன்னே வந்து நிலமுற வணங்கி; தக்க...சாற்றி - தகுந்த திருக்கடைக்காப்பினையும் சொல்லியருளி; தேவர்தம் பெருமான் வீழ்ந்தார் - தேவதேவரது கோயில் திருவாயிலின் வழியே சென்று உள்ளே புகுந்தருளி வலமாகச் சுற்றி வந்து தூயவராகிய இறைவர் திருமுன்பு துதித்து நிலம்பொருந்த வீழ்ந்து வணங்கினார்.

(வி - ரை.) தொழுது அணைய - தொழுதிழிந்து - தொழுது - தொழுதுகொண்டு; உடனிகழ்ச்சி குறித்தது; "தொழுதெழுவான்" (குறள்) என்புழிப்போல; தொழுவதின் ஆர்வமும் விரைவும் குறித்தது.

"விடையவன்" என்று எடுத்துப் பாடி - "விடையவன்" என்பது பதிகத் தொடக்கம்; எடுத்தல் - தொடங்குதல்; இப்பதிகம் பதியின் புறத்தே தொண்டர்கள் தம்மை எதிர்கொள்ளக் கண்டபோது பிள்ளையார் அருளியது "உறையும் இடம் ஒற்றியூரே" என்ற பதிகத்தின் மகுடமும், "உறை ஒற்றியூரைச் சொன்ன" என்ற திருக்கடைக்காப்பும் இதற்கு அகச்சான்றாகும். திருவாரூரில் தொண்டர்கள் எதிர்கொண்டபோதும் இவ்வாறே "வந்திறைஞ்சுமெய்த் தொண்டர்தம் குழாந்தெதிர் வணங்கிச்......சண்பையர் தலைவர்", "அந்த மாயுல காதியாம் பதிகமங் கெடுத்தே", "எந்தை தானெனை யென்று கொலுங்கொலென் றிசைத்தார்" (2405) என்றதும், பிறவும் காண்க. இரண்டு பதிகளிலும் இங்ஙனம் புறம்பிடங்கொண் டெழுந்தருளியுள்ளமையும், பின்னர்வரும் ஆளுடைய நம்பிகளது வரலாறுகளும் இங்கு நினைவுகொள்ளற்பாலன.

திருக்கோபுரத்து...சாற்றி - பதியின் புறத்தே எதிர்கொள்ள வந்த தொண்டர்களைத் தொழுது தொடங்கிய பதிகத்தினை அருளிக்கொண்டவாறே திருவீதி கடந்து போந்து திருக்கோபுரத்தின் முன் திருக்கடைக்காப்புச் சாற்றிப் பதிக நிறைவாக்கியருளினார். இச்சிறப்பு இத்திருப்பதிக்கும் திருப்பதிகத்துக்கும் உரியது.

புனிதர் முன்பு போற்றெடுத்து - இங்குப் பாடியருளிய "சொற்றிகழும் திருப்பதிகம்" (2930) கிடைத்திலது!

படியின்மேல் பொருந்த - நிலத்தில் திருமேனி பொருந்தும்படி. வீழ்ந்தார் - விதிப்படி அட்டாங்கமாக வணங்கினார்; "செல்வர்" என்ற எழுவாய் முன் (2927) பாட்டினின்றும் வருவிக்க. 1031

## திருவொற்றியூர்

திருச்சிற்றம்பலம் — பண் - பஞ்சமம் - 3-ம் திருமுறை

விடையவன் விண்ணுமண்ணுந் தொழ நின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோ லுடை கோவணம் பலகரந்தைச்

சடையவன் சாமவேதன் சசி தங்கிய சங்கவெண்டோ
டுடையவ னூனமில்லி யுறை யும்மிட மொற்றியூரே. (1)

ஒணபிறை மல்குசென்னி யிறை வன்னுறை யொற்றியூரைச்
சணபையா் தந்தலைவன் தமிழ ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்பத்தும் பா விப்பணிந் தேத்தவல்லார்
விண்புனை மேலுலகம் விரும் பெய்துவர் வீடெளிதே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—விடையவன் - சங்கவெண்டோ டுடையவன் என்பன முதலாகிய பெருமைகளா லறியப்படும் இறைவா் நீங்காது "உறையும் இடம் ஒற்றியூரே" யாகும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) சாமவேதன் - சாமவேத விருப்புடையவா; சசி - கடல; சசி தங்கிய சங்கவெண்தோடு - கடற்சங்கினாலாய தோடு; "சங்கக் குழையார் செவியா" (தேவா), ஊனமில்லி - குறைபாடு எதுவுமில்லாதவா;—(2) பாணி செய்ய - தாளமிட; பறைக் கண் - பறைபோல அகன்ற கண்; "பறை போய் விழிகட்பேய" (அமனம)—(3) விளிதரும் - உருவ நாசமுடைய; அழிவுடைய;—(4) பறைத்து - அழித்து; உரவுநீர் - ஆறு;—(5) விலகினார் - வேதநெறி - சைவநெறிகளினின்றும் தவறியவர்களது, விதியா லருள்செய்து - கன்மபலனை அனுபவிக்கச் செய்தலால் தீர்த்தருளி; அலகினால் வீசி - திருவலகு பணி மாறி;—(6) கமை - பொறுமை - போஅருள (க்ஷமை - வடமொழி); சுமை - கற்றைச் சடை; அமை - மூங்கில; ஒடு - போல - உவம உருபு, அம்மையாரது தோளுக்கு உவமம். இலங்க - இலங்க விளங்கும்;—(7) நன்றியால் - இறைவா் உயிர்களபால் செய்யாமற் செய்த உதவிக்கு நன்றி மறவாது; வரையே சிலையா - ஆரமுலம் பொன்றிருநல - முமமதிலும் எய்த பெம்மான் - பொன்றினார் வார்சடைப் பொடிநீ றணிந்து - உலகுக்கொரு நன்மையாலே - உறையுமிடம் - என்று கொண்டு கூட்டி உரைத்துக்கொள்க,—(8) பெற்றி - தோன்றும் தன்மை; சுற்றியான் - உடை புடுத்தவன்; சுத்தி சூலம் - சுத்தியும் சூலமும், சுத்தி - இப்பி வடிவாகத் தலையோட்டாலமைக்க திருநீற்றுக்கலம், "சுத்திய பொக்கணம் - (திருக்கோவை - 292), "சுத்தி தரித்துறை யுருத்திர" - (பின். தேவா - ஏருக்கத்தம் புலியூர் - 10); சூலம் - கண்ணுதல் மேல் விளங்க - சூலம் நெற்றியின்மேல் உயர் விளங்க, ஒற்றியான் - அழுத்தினவர்,—(9) திரு - அழகு, தேர்வு - உயிருணர்வு; —(10) ஆகம செல்வனார் - சிவாகமங்களை வகுத்தவர்; ஆகமநெறி நின்று அடையப்படும் வீடுசெ செல்வமுடையவா கூகையம் மாக்கள் - கூகை இரவிற் றிரிதல் போல இருளாகிய அறியாமையிலே திளைத்தாடுகின்றவர்கள். மாக்கள் - என்ற குறிப்புமிது; ஒகை - மகிழ்ச்சி

தலவிசேடம்:—திருவொற்றியூர் - III - பக்கம் ௩௪௧ பார்க்க.

*2930. பொற்றிரள்கள் போற்புரிந்த சடையார் தம்பால்
பொங்கியெழுங் காதன்மிகப் பொழிந்து விம்மிப்
பற்றியெழு மயிர்ப்புளக மெங்கு மாகிப்
பரந்திழியுங் கண்ணருவி பாய நின்று

சொற்றிகழுந் திருப்பதிகம் பாடி யேத்தித்
தொழுதுபுறத் தணைந்தருளித் தொண்ட ரோடும்
ஒற்றிநகர் காதலித்தங் கினிது றைந்தா
ருலகுய்ய உலவாத ஞான முண்டார். கoகஉ

(இ - ள்) பொற்றிரள்கள... விம்மி - பொன்னினது திரட்சிகள்போல முறுக்கிய சடையினை உடைய இறைவர்பால பொங்கி மேல் எழுகின்ற பெருவிருப்பம் மிகவும் மேலோங்கி விம்மி; பற்றி எழும...நின்று - திருமேனியைப் பற்றி மேல எழுகின்ற மயிர்ப்புளகம் திருமேனியெங்கும் நிரம்பப் பரந்து வழியும் கண்ணீர்ப் பெருக்குப் பாயத் தொழுது நின்று; சொல திகழும்...ஏத்தி - சொற்பொருள் மிக விளங்கும் திருப்பதிகத் தினைப் பாடித் துதித்து; தொழுது...ஞானம் உண்டார் - தொழுது புறத்திலே அணைந்தருளித் திருத்தொண்டர்களுடனே கூடி உலக முய்தற்பொருட்டுக் கெடுத லில்லாத சிவஞானவமுத முண்டருளிய பிள்ளையார் திருவொற்றியூரினை விரும்பி அங்கே இனிதாக எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) பொற்றிரள்கள்போற் புரிந்த - பொன்னின் திரள்கள் போலப் புரியாகிய - முறுக்கி நின்ற. புரிதல் - முறுக்குதல்; "பொன்றிரண் டன்ன புரி சடை புரள" - (பிள். தேவா - அச்சிறு பாக).

எங்கும் ஆகி - திருமேனி முற்றும் பரவி. சொற்றிகழுந் திருப்பதிகம் - இப் பதிகம் கிடைத்திலது! இஃது இறைவர் திருமுன்பு பாடியருளியது.

ஒற்றிநகர் காதலித்து அங்கு இனிது உறைந்தார் - மேலவரும் திருமயிலைப் பூம் பாவை பற்றிய அற்புத நிகழ்ச்சியின் பொருட்டு உண்மலர்ந்த திருவருட் குறிப்பினாலே அந்நகரின்கட் காதலும், அதனால் அங்கு இனிதுறைதலும் எழுந்தன எனக; உலகுய்ய உலவாத ஞானமுண்டார் - என்றது மிககுறிப்பு.

உலகுய்ய உலவாத ஞானம் உண்டார் - ஞானப் பாடலினாலே அழியாமை செய் யும் திறமும் மேல திருமயிலை நிகழ்ச்சியிற் காணக. அத்திருப்பதிகத்தின் குறிப்புக் கூறும் வகையால் ஆசிரியர் அத "மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன" - உண்மை யினைத் (உறுதிப் பொருளை) தெருட்டிச் சைவசுதாபனம் செய்யும் நிலைபற்றியது என எடுத்துககாட்டுதலும் காண்க. உலவாத - அரவினால உலந்த பெண் உலந்தே ஒழியாது பின்னர் உயிர்பெற்றமையும், அழியாத நிலைமை பெற்றுச் சிவத்தை மேவின மையும் காட்டும் குறிப்புடன் நின்றது.

ஞானம் பெற்றார்—என்பதும் பாடம். 1032

வேறு

2931. இன்ன தன்மையிற் பிள்ளையா ரிருந்தன; ரிப்பா்ற
பன்னு தொல்புகழ்த் திருமயி லாபுரிப் பதியின்
மன்னு சீர்ப்பெரு வணிகர்தந் தோன்றலார் திறத்து
முன்ன மெய்திய தொன்றினை நிகழ்ந்தவா மொழிவாம். கoகக

(இ - ள்) இன்ன...இருந்தனர் - இவ்வாறாகிய தன்மையிலே பிள்ளையார் எழுந் தருளி யிருந்தனர்; இப்பால...பதியின் - இவ்விடத்துப் புகழ்ந்து பேசப்பட்ட பழைமையாகிய புகழினையுடைய திருமயிலாபுரிப் பதியில்; மன்னுசீர்...திறத்து - நிலைபெற்ற சிறப்பினையுடைய பெருவணிகர் குடியில் வந்த பெருமையினையுடையவரது

திறத்திலே ; முன்னம்...மொழிவாம் - முன்னே பொருந்தியதொரு வரலாற்றினை நிகழ்ந்தபடி சொல்லப் புகுகின்றோம்.

(வி - ரை) இன்ன...இருந்தனர்-இதுவரை பிள்ளையார்பாலினமைத்து கூறிவந்த வரலாற்றினை முடித்துக் காட்டியபடி.

இப்பால் - இனி, இங்குச் சொல்லும் சரிதம் கேட்போரது சிந்தையினைத் திருமயிலை வரலாறு தொடங்கும் வகையால் அங்குச் செலுத்தி உடன்கொண்டு போவார் ஆசிரியர் இப்பால் என்று பிரித்துக் கூறி எடுத்துக்கொண்டார் , அதுவந் தொண்டைகாட்டினைப் பற்றியதாதலானும், படிப்போரது சிந்தை இங்கும் அகலாது செல்வதாலும் "இப்பால்" என அணிமைச் சுட்டின்றற் கூறினார். " இங்கிவ யிவனிந் செய்தி யிருந்தன னிப்பா னீடும " (1754) ; " இவ்வகை யிவர்க ளாக விருந்தன ராக விப்பால " (2497) என்பன முதலியவை காண்க

பன்னு தொல்புகழ் - அம்மை மயிலுருவுடன் பூசித்த பழஞ் சரிதப் புகழும், அன்ன பிறவும் ஆகும்.

பெரு வணிகர்தம் தோன்றலார் - வணிகர்மரபிற் பெரும்பிரிவு மூன்றனுள் பெருவணிகர் என்னும் மரபில் வந்தவர் , " குடிமுதல் வணிகர் " (405) ; " பெருவணிகர் குடிதுவன்றி " (1717) என்றவையும் ஆண்டுரைத்தவையும் பார்க்க (I - சகஅ ; III - பக அகஅ) பெரிய வாணிகத்துறை நின்றவர் எனப் பொதுவகையா னுரைப்பாரு முண்டு. தோன்றலார் - அம் மரபில் வந்தவர், தோன்றியவர்.

வணிகர்தந் தோன்றலார் திறத்து முன்னம் எய்தியது - வணிகரது அன்பின் திறமே பின் விளையும் வரலாற்று நிகழ்ச்சிக்குக் காரணமாயினமையின் இவ்வாறு கூறினார் ; முன்னம் - பிள்ளையார் திருவொற்றியூர் சார்வதன் முன்.

ஒன்று - ஒரு வரலாறு , பிள்ளையார் சார்பினாலே முன்னம் பல இடங்களிலும் பலபல வரலாறுகள் நிகழ்ந்தனவாக இங்கு மயிலையில் வணிகர் திறத்து நிகழ்ந்த தொன்று.

நிகழ்ந்தவா - ஆறு என்பது ஈறுகெட்டு ஆ என நின்றது. நிகழ்ந்த ஆறே - படியாக - என்க.

மொழிவாம்-இனிச் சொல்லத் தொடங்கும் வரலாற்றின் பெருமையுட் கேட்போர் மனம் பதிய இவ்வாறு கூறுதல் ஆசிரியர் மரபு " மொழிவே னுய்ந்தேன " (173); " நிகழ்ந்ததனை மொழிகின்றேன " (1952) முதலியவை காண்க.

திறத்து - சார்பு பற்றியதாக என்றலுமாம

சீர்ப்புகழ் வணிகர் — என்பதும் பாடம் 1033

2932\. அருநிதித்திறம் பெருக்குதற் கருங்கலம் பலவும்
பொருந்த டற்செலப் போக்கியப் பொருட்குவை நிரம்ப
வரும் ரக்கல மணைப்பட்டப் பணைக்கரை நிரைக்கும்
இருநிதிப்பெருஞ் செல்வத்தி னெல்லையில் வளத்தார். க0௩௪

2933\. தம்மை யுள்ளவா றறிந்தபின் சங்கரற் கடிமை
சிவநேசர் மெய்ம்மை யேசெயும் விருப்புடன் மிக்கமேதா ரன்பாற்
பொய்ம்மை நீக்கிமெய்ப் பொருளிது வெனக்கொளு முள்ளச்
செம்மை யேபுரி மனத்தினர் சிவநேச ரென்பார். க0௩௫

2932. (இ-ள்) அருநிதித் திறம்...போக்கி - அரிய நிதிகளின் வகைகளைப் பெருகச் செய்தற்காக அரிய மரக்கலங்கள் பலவற்றையும் அலைபொரும் கடலின்மேற் சென்று திகழும்படி வாணிபத்துறையினிற் செலுத்தி; அப்பொருட்குவை...நிரைக்கும் - அவ்வாணிபத்தால் ஈட்டிய பொருட்கூட்டங்களை நிரம்பத் தம் மனையின்கண் சேரும்படி கொணரும் மரக்கலங்களின் குவைகள் வரிசைபெறக் குவிக்கும் பெரிய நிதி முதலிய பெருஞ் செல்வங்களின் எல்லையற்ற வளங்களையுடையவராய்; ௧௦௩௪

2933. (இ - ள்) தம்மை உள்ளவாறு அறிந்தபின் - தம்மை உள்ளபடியே அறிந்துகொண்டமையாலே அதன்பின்; சங்கரற்கு ..அன்பால - சங்கரராகிய சிவபெருமானிடத்தில் அடிமைத்திறத்தை மெய்ந்நெறி பிறழாது செய்யும் விருப்பத்துடன் கூடிய அன்பினாலே; பொய்ம்மை...மனத்தினார் - பொய்யினைக் கடிந்து மெய்ப்பொருளிதுவேயாம் என்று தெளிந்துகொண்ட உள்ளத்தின்கண்ணே செம்மைநெறியினையே இடைவிடாது எண்ணிக்கொண் டொழுகும் மனத்தினை உடையவர்; சிவநேசர் என்பார் - சிவநேசர் என்று சொல்லப்படுபவர். ௧௦௩௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டுரைக்க நின்றன. இவற்றுள்ளே முன்பாட்டினாலே உலகியற் சிறப்பினைக் கூறி, மேற்பாட்டினால் அன்பியற் சிறப்பினைக் கூறும் திறம் காண்க.

2932. (வி - ரை) நிதித் திறம் - நிதிகளும் வாணிபத்தில் நிதியாக்கும் பண்டங்களும்; அயல்நாட்டின் பண்டங்கள் இங்கு வந்து வாணிபத்தின் மூலம் நிதியாக்கப்படுவனவும் நிதியேயாம். நிதிகள் - பொன்-வெள்ளி-மணிகள் முதலியன; இங்கு நின்று ஏறிச் செல்லும் நிதிகளும் ஆம் (1749).

அருங்கலம் - நீண்ட தூரம் பெருங்கடலில் போய் வருதற்கேற்றவாறு அரிதின் அமைக்கப்பட்டவை.

பொருகடல் - பேரலைகளும் மற்றும் அபாயங்களும் நிறைந்ததாதலின் பொருகடல் எனப்பட்டது. அவற்றுடன் பொருது வெற்றிபெற்றாலன்றிக் கடல் கடந்து குறித்த நாட்டிற் சேறலும் மீளுதலும் இயலா. இந்நாளில் கடலே போர்க்களமாகத் திறப்பதும் குறிக்க.

அப்பொருட் குவை - நிரம்ப வரும் மரக்கலம் - அகரச்சுட்டு நின்ற அந்த என்னும் பொருட்டது வரும் - கொணரும்; அம்மரக்கலம் - என அகரச்சுட்டு ஈண்டும் சேர்க்க; பொருந்துவ பண்டம் கொண்டுசென்ற அவையே நிதித் திறங்களைக் கொண்டுவரும். நிதிகளையேயன்றி இங்கு வாணிபத்துக்குரிய அயல்நாட்டுப் பண்டங்களையும் கொண்டுவருதலின் நிதித்திறம் என்றும், பொருட்குவை என்றும் கூறினார்.

பணைக்கரை மனைப்பட - நிரைக்கும் - என்க. பணை - பெரிய; கரை - கடற்கரையில். நிறைத்தல் - கடற்கரையில் வரிசைபெற அமைத்தல்; இஃது சுங்கம் முதலிய அரசாங்க அமைதிகளினுட்பட்டுக் கண்காணிக்கப்படுதற் பொருட்டு வேண்டப்படும். இவ்வமைதிகளின் முன்னைநாள் நிலைகளைப் பட்டினப்பாலை முதலிய பழந்தமிழ் நூல்களுட் காண்க.

மனைப்பட - கரையினின்றும் மனையிற் கொண்டு சேர்த்தற்காக. மனையிற் சேர்க்கும் அளவும் கரையின் வரிசைபட வைத்தல் குறிப்பு. மரக்கலப் பண்டம் மனைப்பட என்றதனால் மனையும் அதற்கேற்றபடி மிகப்பெரிய அளவு கொண்டதென்பதும் குறிப்பித்தபடி. எல்லையில் வளத்தார் - என்றதுமிக் குறிப்பு.

பொன்னணி மாளிகைப் புகலி வேந்தர்தாள்
சென்னியிற் பொருந்தமுன் சென்று வீழ்ந்தனர். கககO

(இ - ள்) இன்னணம்...தாதையார் - முன் கூறிய இவவாற்றால் விளங்கிய அழகினைக் கொண்ட சாயலையுடைய பூம்பாவையாரைத் தன்முன்னே வெளிப்படக் கண்ணுற்றக் கண்ட தாதையாராகிய சிவநேசர்; பொன்னணி...வீழ்ந்தனர் - பொன்னாலணியப்பட்ட மாளிகைகளையுடைய சீகாழித் தலைவரது திருவடிகள் தமது சிரத்திற் பொருந்தும்படி முன்சென்று வீழ்ந்து வணங்கினர்.

(வி - ரை) இன்னணம் - முன் 14 பாட்டுக்களில் விரித்தோதியவாறு.

ஏர்கொள் சாயலாள் - பூம்பாவையார். ஏர் - அருளின் அழகமைப்பு; சாயல் - மென்மை. ஐம்பொறிகட்கும விடயமாம் புலன்களானதன மென்மையும் கொள்ளப்படும் (சிந் - உரை).

தாதையார் - சிவநேசர்; முன் ஈன்றெடுத்த அம்மரபுபற்றிக் கூறியது. முன் - தாதையார் என்று கூட்டியுரைக்க நின்றதும் குறிப்பாம். இப் புனருற்பவத்தில் உற்பவிப்பித்த தாதையார் பிள்ளையாராவர் என்பது பின்னர் (3012) வரும் வரலாறு.

புகலி வேந்தர் - முன்பாட்டிற் கூறிய குறிப்புக்கள் காண்க.

தாள் சென்னியிற் பொருந்த - தாடலைபோலத் திருஅடியில் முடி ஒன்றுபட்டுப் பொருந்தும்படி.

வீழ்ந்தனர் - அடியற்ற மரமபோலத் தன்முயற்சியின்றி வீழ்ந்தனா 1110

3009. அணங்கினு மேம்படு மன்ன மன்னவள்
பணம்புரி யரவரைப் பரமர் முன்பணிந்
திணங்கிய முகின்மதிற் சண்பை யேந்தலை
வணங்கியே நின்றனள் மண்ணு ளோர்தொழ. கககக

(இ - ள்) அணங்கினும...அன்னவள் - திருமகளினும் மேம்பாடுடையவராய அன்னம போன்றவருமாகிய பூம்பாவையார்; பணம...பணிந்து - படத்தைப் பொருந்திய ஐந்தலைப் பாமபினை அரையிற சாத்திய கபாலீசரது முன்னிலையிற பணிந்து; மண்ணுளோர் தொழ - அதனைக் கண்ட உலகத்தவர் தொழும்படியாக; இணங்கிய .. நின்றனள் - முகில் பொருந்திய மதிலையுடைய சீகாழித் தலைவராகிய பிள்ளையாரை வணங்கியே நின்றனர்.

(வி - ரை) அணங்கு - திருமகள்; இலக்குமி. மேம்பாடாவது சிவஞானச் சிருட்டியி னுட்பட்டுச் சிவத்தைச் சாருந்தன்மை பெறுவதனால் அழியாநிலை பெற்றிற்றல்.

அன்னம் அன்னவள் - அன்னம் - ஈண்டு அதன் நடையினைக் குறித்துநின்றது. அன்னநடை போன்ற நடையினை உடையவா.

பணம்...பணிந்து - பரமரது கருணை வெள்ளத்தான் மீண்டு வருதலின் அவரை முன்னர்ப் பணிந்தனா; அறியும் இறைவரை முன் வணங்கிப் பின் குருவை வணங்கும் ஓர் முறைபற்றி முன் வணங்கியதுமாம். திருக்கோயில் வாயிலின்முன்.

பணம்புரி அரவு அரைப் பரமர் - அரவின் விடம நீங்க அருளிய குறிப்புத் தோன்ற அரவினை இடையிற் கட்டிவைக்கும் இத்திறம்பற்றிக் கூறினர். முன் உற்பவத்தில் எப்போதும் வணங்கப்பெறற கபாலீசரை எலும்புருவாய்க் கிடந்த ஐந்தாண்டு

களும் பணிதலின்றிக் கழிந்தமையால் அவ்வாறு வழிபாடின்றிக் கழிந்தகாலத்திற் கேற்ற அறிய ஆராமையால் முன்னர்க் கபாலீசரைப் பணிந்தனர். முன் பணிந்து - திருமதிற் புற வாய்தலில் (2978) இறைவரது அபிமுகத்தினில் வைக்கப்பட்ட குடத்தினின்றும் எழுந்து நின்றமையால் அங்குப் பரமர் முன்பு நின்றவாறே (கோயிலினுட் புகாமல்) பணிந்தனர் என்க.

கன்னை - சீகாழிப் பதியின் ஒன்பதாவது திருநாமம்; ஏந்தல் - பெருமை - மேம்பாடுடையவர்.

கன்னை ஏந்தலை வணங்கியே நின்றனள் - பிள்ளையாரது கருணை மெய்த் திருவாக்கினாலே விடம் நீங்கி உய்ந்தமை தெரிந்தவர் பாவையார் ஆதலின் அவரை வணங்கினர். அன்றியும் பிள்ளையாரிடத்துத் தம் தந்தையார் கொண்ட ஆர்வமும் வழிபாடும் அறிந்தவராவர். இனித், தம்மைப் பிள்ளையாருக்கு உரியவராகத் தமது தந்தையார் கொடுத்த (2951) செய்தியறிந்தவராதலின் அவருக்குத் தாம் உரியவர் என்ற நிலையினையும் புந்தியுட் கொண்டவர்; ஆதலின் அவரை வணங்கி நின்றனர். ஆளுடைய அரசுகளால் "தீவிடம் நீக்க வுய்ந்த திருமறை யவர் தம் சேயும்" (அப்பூதியாரது மூத்த திருமகனார்) விடம் நீங்கி எழுந்தவுடன் இவ்வாறே அவரது "செய்ய பூவடி வணங்கி"ய நிலை (1818) ஈண்டு நினைவு கூர்தற்பாலது. இங்குப் பாவையார்போல முன் கூறியவாறு பற்றிய முன்தொடர்புகள் இல்லாமையால், பிள்ளையாரருளால் முயலகனோய் நீங்கப் பெற்ற கொல்லிமழவன் மகள் நோய் நீங்கி எழுந்தவுடன் தனது தாதை புடையடைந்து நின்று பின்னரே தாதையும் தானும் கூட வணங்கினர். "தனனி யுறுபிணி விட்டு நீங்கக் கதுமெனப் பாயலைச் சின்றெழுந்து ... பொருவில் தாதை புடையணைந்தாள்" (2217).

மண்ணுளோர் தொழ - இவ்வருள்நிகழ்ச்சியினைக் கண்ட உலகர் யாவரும் தொழும்படி. தொழ - நின்றனள் என்க. பின்னே வரும் உலகோர்களும் விழாக் கொண்டாடித் தொழுது உய்யும்படி என்ற குறிப்பும், இன்றும் ஈண்டு இவ்விழா மிகப் பெருஞ் சிறப்பாய்க் கொண்டாடி வழிபடப் பெறுதலும் காண்க  1111

3010. சீர்கெழு சிவநேசர் தம்மை முன்னமே
காகெழு சோலைசூழ் காழி மன்னவர்
"ஏர்கெழு சிறப்பினும் மகளைக் கொண்டினிப்
பார்கெழு மனையினிற் படர்மி" னென்றலும்,  ௧௧௧௦

3011. பெருகிய வருள்பெறும் வணிகர் பிள்ளையார்
மருவுதா மரையடி வணங்கிப் போற்றிநின்
"றருமையா லடியனேன் பெற்ற பாவையைத்
திருமணம் புணர்ந்தருள் செய்யு" மென்றலும்,  ௧௧௧௧

3012. மற்றவர் தமக்குவண் புகலி வாணர் "நீர்
பெற்றபெண் விடத்தினால் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காண்வர
உற்பவிப் பித்தலா லுரைத கா" தென,  ௧௧௧௨

3013. வணிகருஞ் சுற்றமு மயங்கிப் பிள்ளையார்
அணிமல ரடியிலவீழ்ந் தரற்ற வாங்கவர்

தணிவினீள் பெருந்துயர் தணிய வேதநூற்
றுணிவினை யருள்செய்தார் தூய வாய்மையார். ககக௫

3010. (இ - ள்) (பொழிப்பு) சிறப்பு மிகுந்த சிவநேசரை நோக்கி முன்னமே, மேகங்கள் தவழும் சோலைகள் சூழ்ந்த சீகாழித் தலைவராகிய பிள்ளையார், "இனி, அழகினால் மிகுந்த சிறப்புடைய உமது மகளை உலகில் ஓங்கி விளங்கும் மனையிற் கொண்டு சென்று சேர்வீர்" என்றருளிச்செய்யவும், ககக௨

3011. (இ - ள்) (பொழிப்பு) பெருக்கமுற்ற திருவருளைப் பெறும் வணிகராகிய சிவநேசர் பிள்ளையாரது பொருந்திய தாமரைபோன்ற திருவடிகளில் வணங்கி எழுந்து துதித்து நின்று "அடியேன் அருமையினால் பெற்றெடுத்த இந்தப் பூம்பாவையைத் தேவரீர் திருமணம் புணர்ந்தருளிச்செய்ய வேண்டும்" என்று வேண்டலும், ககக௩

3012. (இ - ள்) (பொழிப்பு) மற்று அவ்வாறுரைத்த வணிகரை நோக்கி வண்மை பொருந்திய சீகாழி வாழ்வுடையாராகிய பிள்ளையார் "நீர் பெற்ற பெண் விடத்தினால் இறந்துவிட்ட பின்னே, கற்றையாகிய நீண்ட சடையினையுடைய கபாலீசரது கருணை விளங்க மீள உற்பவிக்கச் செய்தமையினாலே நீர் சொல்லும் இவ்வுரை பொருந்தாது" என்று சொல்லியருள, ககக௪

3013. (இ - ள்) (பொழிப்பு) வணிகராகிய சிவநேசரும் சுற்றத்தாரும் அது கேட்டு மயங்கிப் பிள்ளையாரது அழகிய மலரடிகளில் வீழ்ந்து பலவும் சொல்லிக் குறையிரந்து அழுதரற்றக் கண்டு, அப்போது அவர்களுடைய ஆற்றொணாத நீண்ட பெருந் துன்பம் தணியும்படி வேதநூல்களின் விதியாகிய துணிபுகளை எடுத்து உரைத்துப் (பிள்ளையார்) அவர்களைத் தேற்றி யருளிச்செய்தனர், தூய்மையுடைய வாய்மையே உருவமாகி விளங்குபவராதலின் ககக௫

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண் டுரைக்கின்றன.

3010. (வி - ரை) சீர்கெழு சிவநேசர் - சிறப்பு மிகுதலாவது - முன் கூறிய அவரது வாழ்க்கை வரலாறுகளும், இனிப் பிள்ளையாரை வேண்டி நிற்கவுள்ள நிலையும், ஒன்றனமேலொன்றாகச் சிறந்து சிவவாழ்க்கைச் சிறப்பில் மேன்மேல் மிகும் நிலையும், இறைவரது திருவருளும் குருவருளும் உலகில் விளங்குதலால் உலகமுய்தற்கு நிலைகளமாக நின்ற நிலையுமாம்.

முன்னமே - பாவையார் பரமரையும் தம்மையும் வணங்கி நிற்பதற்கு முன்னர்ச் சிவநேசர் தம்மை அடிவணங்கிய (3009) போதே.

ஏர்கெழு சிறப்பில் - ஏர் - உடற்கூற்றின் அழகும், சிறப்பு - சிவனருள் பெருக வந்து நின்ற உயிரின் சிறப்புமாம்.

நும் மகள்-உடல்பற்றிய அளவில் முன் உடலின் வளர்ச்சியும் தொடர்பும் கொள்ளுதலால இவ்வாறு சிவநேசர்பால் உரிமைப்படுத்திக் கூறியருளினார். சிவநேசரது மனநிலைபற்றிக் கூறியருளியதுமாம்; இனிப், பின்னர் "நான் - உற்பவித்தலால்" (3012) என்று தம்மைப் பிதாவாக வைத்துக் கூறியது, "போதியோ என்னும், அன்ன மெய்த்திரு வாகவெனு மமுதம், துன்ன வந்தவந் துருவமாய்த் தொகுத்துக் குடத்துள்" (2986) என்றபடி தமது திரு அருள்நோக்கும் திருவாக்குமாகிய அமுதத்தைப் பெய்து உயிரினைப் புகுத்தியருளிய செயலால் உயிரினைப்பற்றிக் கூறியருளியதாம்; மேற்காண்க.

பார்கெழு மனையினிற் கொண்டு படர்மின் - எலும்புநிறை குடமாகக் கொண்டு வந்த நீர், மகளாக அழைத்துக்கொண்டு செல்லுமின். பார்கெழு - உலகில் விளங்கிய; முன் விளங்கிய விளக்கமன்றி, இனிப் பாவையார் உலகிலெல்லாம் சிவனருள் விளக்கமும் உலகிற் பெருகின்ற மேல்விளக்க. "உலகறிய" (2978) என்று முன் அருளிய குறிப்பும் காண்க. இல் - ஏழனுருபு.

மன்னவா - என்றலும் (3010) - வணிகர் - என்றலும் (3011) - வாணர் - உரைத்தபின் (3012) - அவர் - வாய்மையால் - அருள் செய்தார் (3013) என்று இந் நான்கு பாட்டுக்களையும் சொல்லும் விடையுமாகத் தொடர்ந்து முடித்துக்கொள்க.

குறிப்பு :—இச்செய்யுள் சில பிரதிகளில் காணப்படவில்லை.    1112

3011. (வி - ரை) பெருகிய அருள் பெறும் - முன்னர் வடிவுதான் காணாரா யும் சீகாழி வள்ளலார்பாற் கொண்ட அழுந்திய அன்பின் உறைப்பினாலே காணாத காலத்தேயும் அவரருளைப் பெற்று அவர் நேரே எழுந்தருளிவரக் கண்டு வணங்கும் அருள் பெற்றார், கண்ட பின்னர்ப் பாவையாரை மீள உருப்பெறப்பெறும் பேறாகிய அவரருள் பெற்றனர்; தாம் முன்னர்த் தம் அளவிலே துணிந்தவாறு பாவையாரை ஏற்றுப்பெற்று அவர்பாற் சேர்க்கப்பெறும் அருளும், அவரை அவர் மகளாராகக் கொண்டு ஏற்கும் அருளும்பெற்றார், கபாலீசப் பெருமானது பெருங்கருணை தம்மாலின் விளங்கும் அருளினையும் பெற்றார். இனி மேல் துறவு பூண்டு பிள்ளையார் எடுத்து உபதேசிக்க உள்ள அருளும், பாவையார் சிவபதம் மேவப்பெறுகின்றதும் அருளாம் பெற்றனர்; இக்குறிப்புக்கள் எல்லாம் உட்கொண்டு பெருகிய அருள் பெறும் என்ற கவிநலம் காண்க.

அருமையால் - "அரிய நீர்மையி லருந்தவம் புரிந்தா ரடியார்க, ளுரிய வாச்சனை யுலப்பில செய்தவந் நலத்தால்" (2938) என்ற அருமைப் பணிகளின் பயனாக.

அடியனேன் - முன் (2936 - 2951) கூறியவாறு தம்மைப் பிள்ளையாருக்கு அடிமையாகக் கொடுத்து நின்றொழுகிய நிலைபற்றிக் கூறியவாறு. இவ்வாறு அடிமைத் திறம்பற்றியே வைத்துத் தம்மைச் சிறியராகக் கொண்டு நினைத்தும் பேசியும் ஒழுகியும் வருதல் பெரியோர் செயல்; தம்மைத் தாமே பெரியராகக்கொண்டு ஒழுகல் சிறியோர் செயலாம். "காதலடி யார்தம்மைக் கைப்பற்றி யிட்டான், மேதகைய ரவர் முன்பு மிகச்சிறிய ராயடைந்தார், ஆதலினாற் சிறந்தமைந்தார் தொண்டுபூண்டா ரவரினியோ மேல்" (3674 = 15) என்று பெரியார் தன்மையின் உண்மையினைக் காட்டுதலும்; "தற்றவர்க டன்னிற் கடந்தவா ரில்லையெனும், பெற்றிமையன் மாநிலத்து மிக்க பெருமிதம்வந், தற்றுலகிற் றன்னையே சால மதித்துள்ளான்" (613) (எறிபத்தர் புராணம் - 6) என்றும், "மேனிகழ்ந் திகழுமப் பாழ் பிலக்கை யென்று, பயமின் றொழுகப் பட்டிமை பயிற்றி, மின்னின் றனையதன் செல்வத்தை விரும்பித் தன்னையொரு வனாக வுன்னும், வினையோர் வாழும் வாழ்க்கை" (திருவிளை - நூல்-7) என்றும் வரும் திருவாக்குக்கள் சிறியோர் தன்மையினைக் காட்டுதலும் காண்க. "பணியுமா மென்றும் பெருமை, சிறுமை, அணியுமாந் தன்னை வியந்து" (குறள்) என்பது பொய்யா மொழி. இந்நாளில் மக்கட் கூட்டம் அரசியல், சமூக இயல், சமய இயல், செல்வ இயல் என்ற பல துறைகளிலும் பட்டு அறிவு மயங்கிப் பலபல பெயர்களைத் தாமே புனைந்துகொண்டு மேற்கூறிய இரு தன்மைகளுள் முன்னையதை விட்டு, அகங்காரித் தெழுந்து பின்னையதில் வீழ்ந்து சாமாறே விரைகின்ற நிலை வருந்தத்தக்கது; உலகம் உண்மை கண்டு ஒழுகி உய்யத் திருவருள் துணை செய்வதாக.

பாவை - பூம்பாவை என்பது பாவை எனப்பட்டது ; பாவை போன்றாள் என்றுரைத்தலுமாம்.

மணம் புணர்தல் - என்பது மரபு வழக்கு ; மணம் செய்தல். மணம் புணர்ந்து - மணஞ்செய்து ஏற்று ; அருள் செய்தல் - கன்னியை ஏற்றுக்கொள்வதனால் தமது குடி ஈடேற அருளுதல் ; "எமமுடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்றோம்" (3067) என்பதும் பிறவும் காண்க. மணம்புணர்ந் தருள்செய்யும் எனச் சேர்த்து ஒரு சொல் னீர்மைத்தா யுரைத்தலுமாம். 1113

3012. (வி - ரை) புகலி வாணர் - முன் புகலி வேந்தர் (3008), புகலி வேந்தர் (3007), புகலிகாவலர் (2981) என்ற கருத்தைத் தொடர்ந்து கூறினர்.

நீர் பெற்ற விடத்தினால் வீந்த பின்னை - "அடியனேன் பெற்ற பாவை" (3011) என்று சிவநேசர் கூறியதனை மறுத்துப் பிள்ளையார், நீர் பெற்று வளர்த்த பூம்பாவை அரவின் விடத்தினால் வீந்து இறந்துபட்டனள் ; இங்குத் தோன்றி நிற்பவள் வேறு என்று எடுத்துவிளக்கி உண்மை கூறியபடி.

யான்...உரை தகாது - உற்பவிப்பித்தல் - மீளத் தோன்றும்படி செய்வித்தல் ; பிறவினையாற் கூறியது, இது தமது செயலன்றி இறைவரது செயலேயாம ; தாம் அவரது சிவஞான நிறைவுக்குள் ஒடுங்கிநின்று வேண்டிய அளவிலமைந்து துணையாவ தன்றித் தமது செயல் பிறிதின்று என்றறிவித்தபடியாம. "பரிவுறு பணபினாற் பரவி" (2976) என்றது காண்க. கற்றைவார் சடையவர் கருணை காண்வர என்றது இக்கருத்தைப் புலப்படுத்துவதாம். "தம்மை மறந்து நின்னை நினைப்பவர்" என்றபடி சிவஞான நிறைவே தமதறிவாகப் பெற்று நிற்பவர் பிள்ளையாராதலின் பாவையார் குடமுடைந்து எழுந்து அழகினுக்கணியாய் நின்றது கண்டு கண்ணுதல் கருணைவெள்ளத்தினையே கண்டாரன்றித் தமது செயலையாவது பாவையாரது நிறைவினையாவது கண்டாரிலர் ; ஆயின் ஈண்டு, "யான்...உற்பவிப்பித்தலால்" என்றது "திரு மணமபுணர்ந் தருள்செய்யு" மெனச் சிவநேசர் உலகியல்நிலை பற்றி வேண்டிய விருப்பத்திற்கு அவ்வாறே உலகியல்நிலைபற்றி உரைத்தவாறும். இவ்வாறே ஆளுடைய நம்பிகள் "கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே" (தேவா - குறிஞ்சி - புக்கொளியூர் அவிநாசி - 4) என்று விண்ணப்பித்து முதலையுண்ட மகனை முதலை வாயினின்றும அழைத்துப் பிதாவின்கையிற் கொடுத்த நிலையும், அதுபற்றி "ஆவதென முன்னொருவலர் பெருமான, பணடொரு முதலை யுண்டமைந் தனைவா, வழைத்தன னென்றுய ; பிழைப்பில தருஉம், தந்திட வேண்டு மென்றன ரன்றே" (சங். நிரா - சிவசமவாதி நிராகரணம) என்று உமாபதி சிவாசாரியார் அருளிய விளக்கமும் ஈண்டுச் சிந்திக்கற்பாலன ; "தகவந் திறப்பிமமினே" என்ற அரசுகள் திருவாக்கும ஈண்டுக் கருதத்தக்கது.

உற்பவிப்பித்தலால் உரை தகாதேன - உரை - மணம் புணர்ந்தருளும் என்ற உரை ; தகாது சொல்லத் தகாதது ; உற்பவிப்பித்தலால் - என்றது உரை தகாதது என்பதற்குரிய காரணம் ; உற்பவிப்பித்தலால் - பிறக்கச் செய்தலால் - பிதாவின முறை ஆகவேண்டும. தான் பெற்ற மகளை மணமபுரிதல் தருமநூல் விரோதமாகிய கூடாவொழுக்கம் ; தூர்த்தர் செயலாம் ; ஆதலின் இவ்வுரை தகாதது என்பது.

சபிண்டர் - சகோத்திரர் இவர்களுக்குள் மணம் விலக்கும் வேத ஒழுக்க நூல்களின் கருத்துமிதுவே ; "வேதநூற் றுணிவினை" (3013) என்று மேல்வரும் பாட்டிற் கூறுவதும் காண்க. வேத நூல்களின் இக்கருத்தறியாத தூர்த்த மாக்கள் இக

காலில் இவ்வொழுக்கத்திற்கு மாறாக ஒழுகுவதன்றி விதி செய்தலும் துணிந்துள்ளார். என்னே! காலக் கொடுமை!

உரை தகாதென்றலால் எண்ணுதலும் தகாதென்பது பெறப்படும்; உறப்விப்பித்தலால் உரை தகாதென்றமையால் மற்றக் காரணத்தால் இக்காரியம் எண்ணுதலும் தகாதென்றது குறிப்பாம். அக்காரணமாவன பிள்ளையார் திறத்தில் அவரை உலகநிலை பற்றி உழலும் ஏனை ஆன்மாக்களுள் ஒருவராக்கவைத்து எண்ணுதலும், மணஞ் செய்து வாழ்வு பெற உள்ள நிலையில் வீழ்தற்குரியார் என்று நினைத்தலும் முதலியன. பின்னர்ப் பிள்ளையாரது திருமணத்தின் வரலாற்றில் திருமணத்தைப் பிள்ளையார் இசையாது நிற்பதும், தாதையாரும் மறையோரும் வேண்டியவாறிசைந்து மணம் நிகழ்ந்தகாலையில் "இந்தவில் லொழுக்கம் வந்து சூழ்ந்ததே யிவடன் னோடும், அந்தமில் சிவன்றாள் சேர்வ னென்னுமா தரவு பொங்க" என்று மணப் பந்தலிலேயே எண்ணியாங்குச் சிவன்றாள் சேரும் நிலையும் உன்னுக.

காண்வருதல் - விளக்கமாக விளங்குதல்; கைவருதல் என்றலுமாம்.

உற்பவித்தீதலால்—உற்பவித்திடுதலால்—என்பனவும் பாடங்கள். 1114

3013. (வி - ரை) வணிகரும்...அரற்ற - நெடுநாளாகப் பிள்ளையாருக்கென்று அளித்து வைத்திருந்த பாவையாரை அவர் ஏற்காது நின்றமையின் அவ ரருளப்பெறுமைக்கு ஏங்கி அரற்றினர்.

துயர் தணிய வேதநூற் றுணிவினை அருள் செய்தார் - நூல்விதி புணர்ந்து உண்மை தெளிந்தோர் உலகிற் றுயரப்படமாட்டார் என்பது. இங்கு வேதநூற் றுணிபாவன முன் பாட்டில் உரைத்தனவும் பிறவுமாம். பிறவாவன மரபுகேலாமையும்; தமது சிவஞானவாழ்வாகிய பெருநிலையினுக்கு கேலாமையும்; பரசமய நிராகரித்து நீறு ஆக்கும்பொருட்டுத் தரப்பட்டுத் தாம் வந்தமையேயன்றி உலக வாழ்விறப்பட் டுழலும் பொருட்டன்றென்ற நிலைக் கேலாமையும் முதலாயினவாம்; வேதியா ஏனை வருணங்களிலும் மணங்கொள்ளலாமென்பது ஒரு சிறப்பு விதி, அதனை நிலைவேறு அதனை அவ்வவா நினைத்த நினைத்தபடியெல்லாம் அலைவதற்குப் பற்றுக்கோடாகக் கொள்ளுதல் சாலாது. பிள்ளையார்போலன்றி, இரண்டு மணங்கள் செய்யநின்ற ஆளுடைய நம்பிகளும் திருநாட்டியத்தான்குடியில் கோட்புலியார், சிவநேசரைப்போலவே, தம் பெண் மக்க ளிருவரையும் ஈந்து ஏற்றுக்கொள்ள வேண்டியபோது அவ்வாறு ஏற்காமல் "இவர் எனக்குத் தூய மக்களாவார்" என்று சொல்லி ஏற்று அவ்வாறே ஒழுகும் வரலாறும் ஈண்டு நினைவு கூரற்பாலது.

தூய வாய்மையா (ராதலின்) - அருள் செய்தார் - என்று காரணப் பொருள் கொண்டு கூட்டுக.

வாய்மையார் - வாய்மையே தமது செவி - வாய்மையே தமது வாக்கு - அதுவே தமது நோக்கு என்றபடி வாய்மையே தமது முழுவடிவுமாய் அமைந்தவர் பிள்ளையார் என்பதாம். "மெய்த்தன்மை விளங்குதிருச் செவி"; "குருமணியாண் பிள்ளையீனு மென்னும் வாய்மை"; "போதியோ வென்னும் அன்ன மெய்த்திரு வாக்கு". தூய - தூய்மைப்படுத்தும் என்றலுமாம்

வேத நூல் - வேதங்களும், அவற்றின்வழி வரும் மிருதி முதலிய நீதி ஒழுக்க நூல்களும். அவற்றின் துணிபாவன சிவாகம சித்தாந்த உண்மை. 1115

3014. தேர்ந்த நீதியின் முறை கேட்ட சாக்கினோ
வெள்ளமும் வணிகரும் வேட்கை நீத்திடப்,

பள்ளநீர்ச் செலவெனப் பரமர் கோயிலின்
உள்ளெழுந் தருளினா ருடைய பிள்ளையார். கககசு

(இ - ள்) தெள்ளு நீதியின் முறை...நீத்திட - தெளிந்த நீதியுடன் ஒழுக்க முறைகளைக் கேட்ட சிறப்புடைய சுற்றத்தாராகிய பெருங் கூட்டமும் சிவநேசரும் தாம் விருப்பங்கொண்ட நிலையினை நீங்கிட; பள்ளநீர்ச் செலவென - (மேட்டு இடத்தினின்றும்) பள்ளத்திற் பாயும் நீரின் வேகம்போன்ற விரைவுடன்; பரமர்...பிள்ளையார் - கோபுரப் புறவாயதலினின்றும் இறைவரது திருக்கோயிலினுள்ளே ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளினார்.

(வி - ரை) தெள்ளும் நீதியின் முறை - தெள்ளுதல் - தெளிதல்; பிள்ளையார் தெளிவித்த என்றும், மயங்கின அறிவைத் தெளியச் செய்த என்றும் உரைக்க நின்றது.

சீர்க்கிளை வெள்ளம் - கிளை - சுற்றம்; ஒரு மரத்தின் கிளைபோலப் பொருந்துபவர். வெள்ளம் - மிகுதியுணர்த்திற்று. "சுற்ற நீடிய கிளையெலாம்" (2951), "கரையில் சுற்றமும்" (2957); "உற்றபெருஞ் சுற்றமும்" (2960) என்றவை காண்க. சீர்க்கிளை - கிளையின் சிறப்பாவது வாழ்விலும் தாழ்விலும் மனம் ஒன்றுபட்டு அமைந்தொழுகுதல்; சிவநேசரது திறத்தில் அவர் மனக்கருத்தினையும் ஒழுக்கத்தினையும் தாம் கலந்து பிணக்கமின்றி ஒத்து ஒழுகினாராதலின் ஈண்டுக் கிளை என்ற பெயரால் கூறினார்; ஒரு மரத்தின் கிளைகள் அம்மரத்தின் மூலம் தாம் வாழ்வுபெற்று அது தழைக்கத் தழைந்து, வாடத் தாமும் வாடிநிற்கும் தன்மைபோல என்பது; என்னை? இங்குக் குறித்த பொருள் பெண்ணை மணம் புரிவிக்கும் நிலைபற்றியதாதலின் அது கிளைஞர்க்குரிய செயலாய் நிற்றலால் அதனில் தாம் வேறு ஒன்றும் எண்ணாது சிவநேசரது திறமே ஒன்றி நிகழ்ந்தனர் என்பதாம்; வெள்ளம் - என்றார் அனேகராகிய அவருள் ஒருவரும் பிணக்கமின்றி நின்ற நிலை குறித்தற்கு.

வேட்கை - பிள்ளையார்பால் பூம்பாவையாரை மணத்தினாற் சேர்வித்தலாகிய விருப்பம்.

நீத்திட - விட்டு நீங்கினராக அதன்பின்; அவர்களைத் தேற்றியருளிய பின்.

பள்ள நீர்ச் செலவென - மேட்டினின்றும் பள்ளத்திற் செல்லும் நீர் மிக்க வேகத்திற் செல்வதுபோல; வினைபற்றி எழுந்த உவமம். "பள்ளந்தாழுறுபுனலிற் கீழ்மேலாகப் பதைத்துருகு மவர்" (திருவா - சதகம் - 21). இதுவரை கோபுரப் புறவாய்தலின் நின்ற பிள்ளையார் செய்தவை கறைவார் சடையவர் கருணை காணவரச் செய்தவையே யாயினும் அவை உலகம்பற்றிய நிலையினவாதலின் மேட்டு நிலத்தின் நீர்போல நின்றன. இனிப் பரமர் கோயிலுள் சென்றருளுதல் இறைவரும் தாமுமே யாக உள்ள நிலைபற்றியனவாதலின் அவை பள்ளத்திற் செலலும் நீர்போல ஆயின என்க. இதனால் பிள்ளையார் இவ்வுலகில் வாழ்ந்த காலமெல்லாம் அவரது அருளிச் செயல்கள் உலகின்பாலும் இறைவர்பாலும் எவ்வெத் தன்மையில் நிகழ்ந்தன என்பது தெளியப்படும்.

உள்ளெழுந் தருளினார் - முன் வணங்கிப் போந்து இந்நிகழ்ச்சியின் பொருட்டு எலும்புக்குட மிருந்த புறவாய்தலின் வந்த பிள்ளையார் மீள உள்ளே சென்றருளினார், இஃது அருள்பெற்று அதன்வழியே இந்நிகழ்ச்சியுட் புகுந்த பிள்ளையார் அதன் நிறைவின் பின் இறைவரை வணங்கி அவர் அருளைப் போற்றி விடைகொள்ளும் நிலையாம் என்க. திருவாலவாய் வரலாற்றிலும் இவ்வாறே சமணர் வாத நிகழ்ச்சியினுள் திரு

மடத்தினின்றும் திருவாலவா யிறைவரை வணங்கி அருட்குறிப்பாகிய திருவுள்ள மறிந்து அருள் பெற்றுப் போந்து, இறுதியில் சமண வாத நிறைவாகிய பின், வைகைக் கரையினின்றும் நேரே திருவாலவாயினுட் சென்றருளிப் போற்றி விடைகொண்டு போந்தருளிய செய்தியும் ஈண்டு நினைவு கூர்தற்பாலது (2635 - 2739-ம் 2759 - 2764-ம் பார்க்க). அங்கு அமைச்சனார் செயல்கள் வாய்ப்பவும் அமண் பிணி நீங்கவும் மேற்கொண்ட நிலைபோலவே, இங்கும், "சித்த மின்புற சிவநேசர் தஞ் செயல் வாய்ப்பவும், பொய்த்த வச்சமண் சாக்கியர் புறத்துறை யழியவும், வைத்த வப்பெருங் கருணை" நோக்காகிய நிலையினையே மேற்கொண்டமையும் காண்க. 1116

3015 பான்மையால் வணிகரும் "பாவை தன்மணம்
ஏனையோர்க் கிசைகிலேன்" என்று கொண்டுபோய்
வானமா கன்னிமா டத்து வைத்தனர்
தேனமர் கோதையுஞ் சிவத்தை மேவினாள். ககஎ

(இ - ள்) பான்மையால்...என்று - நியதியின் முறைமையினாலே சிவநேசரும் "பூம்பாவையாரை ஏனையோர் எவர்க்கும் மணம் பண்ணுவித்தற்கு நான் உடன்படமாட்டேன்" என்று துணிந்து, கொண்டுபோய்...வைத்தனர் - வானளவுயர்ந்த அவரது கன்னிமாடத்தில் வைத்து ஆங்கு வாழச்செய்தனர், தேனமர் ...மேவினாள் - வண்டு வாழும் மலர்மாலை யணிந்த பாவையாரும் சிவத்தினை அடைந்தனர்.

(வி - ரை) பான்மை - முன்னை ஊழ்வினையாகிய நியதியின் தன்மை; "அன்ப ரின்புற மாதவத்தி னளித்தபூங் கலசத்தில், பொன்பி றங்குநீள் புகலிகா வலர்க்கிது பொருந்தா, தென்ப துட்கொண்ட பான்மை" (2954) என்று முன் விளக்கிய பான்மை.

பாவை ..இசைகிலேன் என்று - பாவையாரையும் தம்மையும் பிள்ளையாருக்குக் கொடுத்துவிட்டமையால் (2951) பாவையார் பிள்ளையாரது உடைமையாயினர், அந்நிலையினில் ஒருவர்க்கு ஒப்புவித்த பொருளையே பின்னும் வேறு ஒருவர்க்கு ஆக்குதல் முறையன்று என்பது ஒன்று, சிவநேசர் கருத்துப் பிள்ளையாரையன்றிப் புறத்துச் செல்லாமை மற்றொன்றும். கொடுப்போர் - கொள்வோர் என்றிருபாலின் ஈண்டுக் கொள்வோராகிய பிள்ளையார்பால் இசைவு நிகழாமையின் சிவநேசர் சொல்லிய மகட்கொடை ஒருபா லிசைவாகவே நின்றது; உலகவியலின் இவ்விசைவு முற்றுப்பே றடையாதென்று அரசநீதி வருக்கும்; ஆதலின் சிவநேசர் முன்னைநிலையை மாற்றி வேறு செய்யும் உரிமையுடையார் என்று உலகியனீதி கூறும்; அந்நிலையினின்று இங்குச் சிவநேசர் எண்ணி, "உலகவியல் இவ்வாறு வரினும் நான் எனது முன்னே கண்ட நிலையினின்றும் மாறுபடேன்" என்றனர்; "மானமிகு தருமத்தின் வழி நின்ற வாய்மையினில், ஊனமில் சீர்ப் பெருவணிகர் குடி" (1717) என்ற இயல்பும் ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

இவ்வாறுயர்ந்த நிலை ஒழுக்கங்களின் மேம்பாடும், இக்கால் மணநிலைகள் பற்றி மாக்கள் கொண்டொழுகும் கீழ்மைநெறி ஒழுக்கங்களின் மிகத் தாழ்ந்த குறைபாடும் கண்டு, இவற்றின் உயர்வுதாழ்வுகள் உணர்ந்துகொள்ளத் தக்கன.

கொண்டுபோய்......வைத்தனர் - கொண்டு போதல் - அழைத்துக்கொண்டு செல்லுதல்; வைத்தல் - அமர்த்தியிருக்கச் செய்தல்; "மகளைக் கொண்டு... ...மனையிற் படர்மின்" (3010) என்றருளினர் பிள்ளையார்; ஆனால், உயிரைப் பிள்ளையார்பால் ஒப்புவித்த நிலையினையே பின்னரும் மேற்கொண்டு ஏனையோர்க்குப் பாவை

மணம் இசைகிலா ராயினமையின், உயிரில்லாத பண்டம்போலக் கொண்டுபோய் - வைத்தனர் என்ற குறிப்பும் காண்க. ஆயின் அவ்வுயிர் என்ன நிலைமை பெற்றதென்னின் ? அதுபற்றியே மேல் இப்பாட்டில் சிவத்தை மேவினாள் என்றருளுதல் காண்க ; மாதர்கள் கன்னிமாடத்திருந்து சிவத்தை எண்ணியே வாழும் நிலை முன்னாளில் சைவத்தில் வழக்கிலிருந்தது. இதுபற்றி நம்பிகள் சரிதத்தில் சங்கிலியார் வரலாறு கருதுக ; இந்நிலை இந்நாளில் கிறித்தவர் முதலிய புறச் சமயிகளிடம் வழங்குதலும் காண்க. உடல் பற்றிய குறித்த நாயகனிடம் சேராத போது அவ்வுயிர் ஆன்ம நாயகனிடம் சேர்தல் முறை என்ற குறிப்பும் காண்க. காரைக்காலம்மையார் உடலின் ஊனை உதறி இறைவரிடம் போந்த வரலாறும் ஈண்டுக் கருதத் தக்கது.

சிவத்தை மேவினாள் - சிவம் - நித்திய மங்கலமாம் பெருவாழ்வாகிய சிவத் தன்மை. இங்குப் பெற்றெடுத்த தந்தையார் இசைந்தும் மற்றொருபால் இசையாமையின மணவிசைவினாலும் மணம்பெற்ற நிலை நிகழாதொழிந்தது ; ஆதலின், மண நிகழா நிலைமையினும், "எந்தையுமெம் மனையுமவர்க் கெனைக்கொடுக்க விசைந்தார்கள், அந்தமுறை யாலவர்க்கே யுரியதுநா னாதலினால், இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்பன்" (1297) என்று திலகவதியார் துணிந்து பின் ஒழுகிய நிலையின் தன்மை இங்குக் கூடாதாயிற்று ; இனி, அக்காரணம் பற்றியே, மண நிகழாமற் றடையுண்ட நிலையினும், "அயலோர்தவ முயல்வார்பிற ரன்றேமண மழியுஞ், செயலாணிகழ் புத்தூர்வரு சிவவேதியன் மகளும், உயர்நாவலர் தனிநாதனை யொழியாதுணர் வழியிற், பெயராது" (223) என்றபடி மணப்பந்தரில் ஆளுடைய நம்பிகளை மணமகனாகக் கொள்ளப்பெற்றும் மணம் நிகழாமற் றடுக்கப்பட்டும் நின்ற சடங்கவி சிவாசாரியாரின் மகளாரின் நிலையும் இங்கு ஒருபாலிசையாமையாகிய அக்காரணம் பற்றியே பூம்பாவையார்பாற் கூடாதாயிற்று. ஆதலின் பாவையார் பிள்ளையாரை நாயகராக உணரும் நிலையின்றி, எல்லாவுயிர்க்கும் எப்பிறவியினும் உயிர்க்குயிராய் நின்றருளும் ஆன்ம நாயகராகிய சிவத்தையே நினைந்திருந்து அவரையே மேவினார் என்க ; மேல் "எவ்வுயிர்க்குங் காவலனார்" (3016) எனனும் குறிப்பும் காண்க. சிவத்தை மேவுதலைப் புரிவிக்கும் குருநாதராகவே பிள்ளையாரைக் கொண்டு வழிபட்டு நின்றமை கருதிக்கொள்ளப்படும். 1117

வேறு

3016. தேவர்பிரா னமர்ந்தருளுந் திருக்கபா லீச்சரத்து
மேவியஞா னத்தலைவர் விரிஞ்சன்முத லெவ்வுயிர்க்குங்
காவலனார் பெருங்கருணை கைதந்த படிபோற்றிப்
பாவலர்செந் தமிழ்பாடிப் பன்முறையும் பணிந்தெழுவார்; ௧௧௧௮

3017. தொழுதுபுறம் போந்தருளித் தொண்டர்குழாம் புடைசூழப்
பழுதில்புகழ்த் திருமயிலைப் பதியிலமர்ந் தருளுநாள்
முழுதுலகுந் தருமிறைவர் முதற்றானம் பலவிறைஞ்ச
அழுதுலகை வாழ்வித்தா ரப்பதியின் மருங்ககல்வார்; ௧௧௧௯

3018. திருத்தொண்ட ரங்குள்ளார் விடைகொள்ளச் சிவநேசர்
வருத்தமகன் றிடமதுர மொழியருளி விடைகொடுத்து,
நிருத்தருறை பிறபதிகள் வணங்கிப்போய் நிறைகாதல்
அருத்தியொடுந் திருவான்மி யூர்பணிய வணைவுற்றார். ௧௧௨௦

3016. (இ - ள்) தேவர் பிரான்...ஞானத் தலைவர் - தேவதேவராகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் திருக்கபாலீச்சரத்திலுள் எழுந்தருளிய ஞானத் தலைவராகிய பிள்ளையார்; விரிஞ்சன்...போற்றி - பிரமதேவனை முதலிய எல்லாவுயிர்களுக்கும் காவலாளராகிய இறைவருடைய பெருங்கருணை கைகொடுத்தருளிய படியினைத் துதித்து; பாவலர்...பணிந்தெழுவார் - பாசுரமாகிய மலர்ந்த செந்தமிழினைப் பாடிப் பலமுறையும் பணிந்தெழுவாராய், ௧௧௧௮

3017. (இ - ள்) தொழுது அமர்ந்தருளு நாள் - வணங்கிப் புறத்தே போந்து எழுந்தருளித் திருத்தொண்டர் கூட்டம் பக்கத்திற் சூழ்ந்து வரக் குறைவில்லாத புகழினையுடைய அந்தத் திருமயிலாபுரியில் விரும்பி எழுந்தருளியிருக்கும் நாளிலே; முழுதுலகும்...இறைஞ்ச - எல்லாவுலகங்களையும் தந்து புரந்தருளும் இறைவர் எழுந்தருளும் முதன்மையுடைய பதிகள் பலவற்றையும் சென்று வணங்கும் பொருட்டு; அழுதலகை...அகல்வார் - அழுதமையினாலே உலகை வாழ்வித்தாராகிய பிள்ளையார் அத்திருப்பதியின் பக்கத்தினின்றும் நீங்கிச் செல்வாராகி, ௧௧௧௯

3018 (இ - ள்) திருத்தொண்டர் விடைகொள்ள - அங்குள்ளார்களாகிய திருத்தொண்டர்கள் விடைபெற்றுக்கொள்ள; சிவநேசர்...கொடுத்து - சிவநேசர் வருத்தம் நீங்கும்படி அவருக்கு இனிய மொழிகளைச் சொல்லி விடைகொடுத்தருளி; நிருத்தர்...போய - சிவபெருமான் எழுந்தருளிய பிற பதிகளையும் வணங்கிச் சென்று; நிறைகாதல்...அணைவுற்றார் - நிறைந்த காதலால் விளைந்த அன்பினோடும் திருவான்மியூரினைப் பணிவதற்கு அணைவுற்றருளினார். ௧௧௨0

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3016. (வி - ரை) தேவர்பிரான் - "தேவதேவனை" (2975) என்ற திருப்பாட்டின் உட்கிடையினைத் தொடர்ந்து வழிபாடு நிறைவேறுதல் கண்டுக் கூறியபடியாம். மேவிய - உள்ளெழுந்தருளி மேவிய (3015)

ஞானத் தலைவர் - "ஞானசம்பந்தன்" (2976) என்றும், "ஞானபோனகர்" (2987) என்றும் முன்கூறிய குறிப்புக்களைத் தொடர்ந்து கண்டு இப்பெயரால் தலைமை பற்றிக் கூறிய நிலையும் கண்டுகொள்க

விரிஞ்சன் முதல் ..காவலனார் - தோற்றம்-நிலை-இறுதி செய்யும் கடவுளர்களும் அந்த முத்தொழிலுட்படும் உயிர்களுக்கும் தாமே முதல்வராய்க் காவல் புரிபவர் என்றது, அண்டை வரலாற்றில் பூம்பாவையார் முன்னர்த் தோன்றி நின்ற நிலையில் இறந்து பட்டுப், பின்னரும் திருவருளாலே தோன்றி நின்ற தன்மைக்கட்கெல்லாம் தலைவராக நிற்கும் நிலையில் வைத்து இறைவரது முழுமுதற்றன்மை கண்டு கொள்வதன் பொருட்டாம்.

கைதந்தபடி - கைகொடுத்துத் தமது திருவுள்ளத்தை முற்றுவித்தபடியினை.

போற்றித் - தமிழ் பாடி - இப்பதிகம் கிடைத்திலது! முதலில் பாடிய பதிகமும் (2976) இறுதியிற் பாடிய இப்பதிகமும் ஒன்றுபோலவே மறைந்தமை இறைநாட்டைசவுலகின் தவக்குறைவாம்.

பன்முறையும் பணிந்தெழுவார் - வரலாற்றிற் புரிந்த பெருங்கருணையின் பொருட்டும், தலயாத்திரையிற் கலந்த தம் வழிபாட்டின் பொருட்டுமாகப் பன்முறையும் பணிந்தருளி.

பணிந்தெழுவார் (3016) - அமர்ந்தருளு நாள் - இறைஞ்ச - அகல்வார் (3017) - விடைகொடுத்து - வணங்கிப் போய - அணைவுற்றார் (3018) என்று இம்மூன்று பாட்டுக்களையும் முடித்துக்கொள்க.

படிவேண்டும்—என்பதும்

3017. (வி - ரை) அமர்ந்தருளும் - விரும்பி வீற்றிருந்தருளும்.

உலகு முழுதும் தரும் - என்க. எல்லா வுலகும் படைத்தல் முதலிய எல்லா வகையாலும் புரக்கும்; தருதல் - புரத்தல் என்ற பொருளில் வந்தது; புரத்தலாவது படைத்தல் காத்தல் அழித்தல் என்ற மூவகையாலும் காத்து அருள்புரிதல்.

முதற்றனம் - முதன்மையுள்ள பதிகள். முதன்மையாவது முதல்வன் விளங்க வீற்றிருத்தல்.

உலகை அழுது வாழ்வித்தார் - தாம் அழுதமையால் உலகின் பொருட்டு ஞானம் பெற்று அதனால் உலகத்தை வாழ்வித்த பிள்ளையார் "வேதநெறி தழைத்தோங்க... ...அழுத" (1899) என்று தொடக்கத்துக் கூறிய கருத்து. "அழுதுலகை வாழ வித்த கவுணிய குலாதித்த" (திருப்புகழ்)

மருங்கு - மருங்குனின்றும். ஐந்தன் உருபு விரிக்க. 1119

3018. (வி - ரை) அங்குள்ளார் - திருமயிலையிற் சிவநேசருடன் வந்து கூடிய பெருந் தொண்டர்களும் (2970), திருவொற்றியூரினின்றும் பிள்ளையாருடன் தொடர்ந்து வந்தார்களும் ஆகிய அங்கே உள்ள திருக்கூட்டத்தினர்; அங்கு நீங்கிப் பிள்ளையார் எழுந்தருளும்போது இவர்கள் அங்குநின்ற வண்ணமே பிள்ளையார்பால் விடைகொண்டு தங்கிவிட்டவர்.

சிவநேசர்...விடைகொடுத்து - சிவநேசர் பிள்ளையாரைப் பிரிதலாற்றாது பின் றொடர அவரது வருத்தம் நீங்க இன்னுரை கூறி அவருக்குப் பிள்ளையார் தாமே விடை கொடுத்தருளி நிற்கப் பணித்தருளினர் என்பது விடை கொடுத்து என்றதன் குறிப்பு; திருத்தொண்டர் விடைகொள்ள என்றதும் கருதுக. வருத்தம் - வடிவுதான் காணு ராயும் பலகாலம் நினைந்து வழிபட்டு வந்த தியானப் பொருளாகிய பிள்ளையார் நேரே கைவரக் கிடைக்கப் பெற்றபின் அவரைப் பிரிபலாற்றாத வருத்தம். மங்கையர்க்கரசியார் - குலச்சிறையார் - நெடுமாறனர் இவர்கள் பிள்ளையாரது பிரிவாற்றாது தொடர்ந்தழுது அடி வீழ்ந்தரற்றிய நிலையும் அவர்க்கு இனியவை கூறி நிற்கப்பணித்துப் பிள்ளையார் ஆணை தந்து விடைகொடுத்த நிலையும் ஈண்டு நினைவு கூர்தற்பாலன (2792-2798).

நிருத்தர் - ஐந்தொழி லருட்கூத்தியற்றும் இறைவர்.

பிற பதிகள் - திருமயிலையினின்றும் திருவான்மியூர் செல்லும் வழியில் அருகில் உள்ள பதிகள். மயிலையிலிருந்து வான்மியூர் வழியில் அருகிலுள்ளவை - (1) புலியூர், (புலியூர்கோட்டத் தலைநகர்), கோடம்பாக்கம் வடபழனியாண்டவர் கோயிலுக்கருகில், பழைய சிவாலயம்; கல்வெட்டுக்களுண்டு; (2) வெளிச்சேரி; பழைய ஆலயம்; மூலவர் தூபி கருங்கல்லாலாயது; கல்வெட்டுக்கள் உள, (கிண்டி கவர்னர்வீட்டு வேலிக் கெதிரிலுள்ளது).

நிறைகாதல் அருத்தி - அருத்தி - அன்பு; அன்பு காதலாய் விளைந்து நிறைந்த நிலை. 1120

3019. திருவான்மி யூர்மன்னுந் திருத்தொண்டர் சிறப்பெதிர
வருவார்மங் கலவணிகண் மறுகுநிரைத் தெதிர்கொள்ள,
அருகாக விழிந்தருளி யவர்வணங்கத் தொழுதன்பு
தருவார்தங் கோயின்மணித் தடநெடுங்கோ புரஞ்சார்ந்தார். கக௨க

திருவான்மியூர்

(இ - ள்) திருவான்மியூர்...அருகாக - திருவான்மியூரின் நிலைபெற்று வாழும் திருத்தொண்டர்கள் சிறப்பாக எதிர்கொள்ள வருவார்களாகி மங்கலம் பொருந்திய

அணிவகைகளைத் தெருவில் வரிசையாக அமைத்து எதிர்கொண்டு தமது அருகே வந்த போது; இழிந்தருளி - சிவிகையினின்றும் இறங்கியருளி; அவர் வணங்கத் தொழுது - அவர்கள் தம்மை வணங்கத் தாமும் அவர்களைத் தொழுது; அன்பு... ...சார்ந்தார் - அன்புதந்து ஆட்கொள்ளும் இறைவரது திருக்கோயிலின் அழகிய பெரிய நீண்ட திருக்கோபுரத்தைச் சார்ந்தருளினர்.

(வி - ரை) சிறப்பு எதிர வருவார் - சிறப்புடன் எதிர்கொள்ள வருவாராகி; பின்னையார் வரும் சிறப்பினை என்றலுமாம். எதிர - எதிர்சென்று ஏற்க; வருவார் - வருவாராகி; முற்றெச்சம் வருவார் - எதிர்கொள்ள - என்று கூட்டுக.

இழிந்தருளி - சிவிகையினின்றும் இழிந்து எனக, சிவிகையினின்றும் என்பது இசையெச்சம்.

அன்பு தருவார் - அன்பினைக் கொடுத்துத் தம்மை வணங்கச்செய்து ஆட்கொள்ளுவது இறைவரது தன்மை.

மணித் தடநெடுங் கோபுரம் - அடைமொழிகள் கோபுரத்தின் மேன்மை குறித்தன. "மிக்குயர்ந்த" என மேற்கூறுதல் காண்க. கோபுரம் - கோபுரத்தை. 1121

3020. மிக்குயர்ந்த கோபுரத்தை வணங்கிவியன் றிருமுன்றில்
புக்கருளிக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கொக்கிறகு மதிக்கொழுந்துங் குளிர்புனலு மொளிர்கின்ற
செக்கர்நிகர் சடைமுடியார் சேவடியின் கீழ்த்தாழ்ந்தார். ககஉஉ

(இ - ள்) மிக்குயர்ந்த...உள்ளணைந்து - மிகவும் உயர்ந்த கோபுரத்தைப் பணிந்து பெரிய திருமுன்றிலினுள்ளே புகுந்தருளிக் கோயிலின் பக்கத்தினைச் சூழ்ந்து வலமாக வந்து உள்ளே அணைந்து; கொக்கிறகும்...தாழ்ந்தார் - கொக்கிறகும் பிறைச் சந்திரனும் குளிர்ந்த கங்கையும் விளங்குகின்ற அந்திமாலையின் செக்கர் போன்ற சடையினையுடைய இறைவரது திருவடிகளின் கீழே விழுந்து வணங்கினார்.

(வி - ரை) உயர்ந்த - முன் பாட்டிற் கூறிய அடைமொழிகளின் தொகுதியாகிய உயர்வு. உயர்வு - உருவினாலும் திருவினாலும் உள்ள மேம்பாடு.

வியன் திருமுன்றில் - கோயிலினுள்ளே இருக்கும் இடமகன்ற திருமுற்றம்.

கொக்கிறகு...சடை முடியார் - கொக்கிறகு - இறைவர் உகந்து சூடும் இனமலர், மதிக்கொழுந்து - பிறையின் வளர்ச்சி தொடங்குதலால் கொழுந்தென்றார்; குளிர் புனல் - கங்கைநீர், செக்கர் - அந்திமாலையிற் காணும் செவ்வானம்; "மாலையின் றாங்குருவே போலுஞ் சடைக்கற்றை" (அற் அந் - 65) 1122

3021. தாழ்ந்துபல முறைபணிந்து தம்பிரான் முன்னின்று
வாழ்ந்துகளி வரப்பிறவி மருந்தான பெருந்தகையைச்
சூழ்ந்தவிசைத் திருப்பதிகச் சொன்மாலை வினவுரையால்
வீழ்ந்தபெருங் காதலுடன் சாத்திமிக வின்புற்றார். ககஉக

(இ - ள்) தாழ்ந்து...முன்னின்று - நிலமுற வீழ்ந்து பலமுறையும் பணிந்து எழுந்து இறைவர் திருமுன்பு நின்று; வாழ்ந்து களிவர - வாழ்வு பெற்று மகிழ்ச்சி பொருந்த; பிறவி...சொன்மாலை - பிறவி நோய்க்கு மருந்தாகிய பெருந்தகைமையுடைய இறைவரை உட்கொண்ட பண்ணமைந்த திருப்பதிகமாகிய சொன்மாலையை;

வினவுரையால்...இன்புற்றார் - வினவும் உரையுமாக வரும் அமைப்புடனே அழுந்திய பெருவிருப்பினுடன் அணிந்து மிக இன்பமுற்றருளினார்.

(வி - ரை) பிறவி மருந்தான பெருந்தகை - இப்பதியில் இறைவர் மருந்தீசர் என்ற திருப்பெயரோடு எழுந்தருளியிருப்பதனால் அக்குறிப்புப் பெற மருந்தென்பது பிறவிநோய் தீர்க்கும் மருந்தென்று காட்டியருளியவாறு; "மூலநோய் தீர்க்கு முதல்வன கண்டாய்", "மந்திரமுந் தந்திரமு மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்" (தேவா). தலவிசேடமும், பதிகப் பாட்டுக் குறிப்புகளும் பார்க்க.

வாழ்ந்து களிவர - திருப்பதிகம் பயின்றெழுகுவோ ரெல்லாம் வாழ்ந்து மகிழ்ச்சி யடைய என்ற குறிப்புமாம்.

சூழ்ந்த - பெருந்தகையைச் சூழ்ந்த என்றும், இசை சூழ்ந்த என்றும் இருவழியும் கூட்டியுரைக்க நின்றது, பெருந்தகை-சிவபெருமான்; ஆணவத் தழுந்திப் பிழை செய்வது உயிர்களின் செயல்; அதனைப்பொறுத்துக் கணந்தோறும் அருள்செய்வதே இறைவரியல்பு என்ற குறிப்பு; மருந்தாகி நிற்கும் நிலையினை விரித்தவாறு. "பித்தனைப் பேதையேனைப் பேயே னாயேனைப் பிழைத்தனகள் பொறுத்தனையும் பொறுத்தா யன்றே, யித்தனையு மெம்பரமோ?" (தேவா). பெருந்தகையைச் சூழ்தலாவது அவரது அத்தன்மையினையே உட்கிடையாகக் கொண்டு போற்றுதல்; பதிகக் குறிப்புப் பார்க்க. இசை சூழ்தலாவது பண்ணமைதி பாட்டினியல்பிலே பற்றியமைந்து கிடத்தல்.

வினவுரையால் - வினவும் உரையுமாக அமைந்த பதிக யாப்பமைதி; பதிகப் பாட்டுக் குறிப்புப் பார்க்க.

வீழ்ந்த - வீழ்தல் - அழுந்திய விருப்பம்; விழைவு. "தாம்வீழ்வார்" (குறள்), உலகியற் பொருள்களில் வீழ்ந்து உழலும் விருப்பினை இறைவன்பாலே வீழ்த்தினால் உயிர் உய்தி பெறுமென்பது இச்சொல்லாற்றற் குறிப்பு; "தந்தையாந் தனையாநந் தணமேல் வைத்த தயாவைநூ றாயிரங் கூறிட், டத்திலொங் கொருகூ றுனக்கணவைத் தவருக் கமருல களிக்குநின் பெருமை" (திருவிசைப்பா - 6. கங்கைகொண்ட சோளேச்சரம்).

சாத்தி - சொன்மாலை என்றதற்கேற்பச் சாத்தி என்றார். 1123

3022. பரவிவரு மானந்த நிறைந்ததுளி கண்பனிப்ப
விரவுமயிர்ப் புளகங்கண் மிசைவிளங்கப் புறத்தணைவுற்
றரவநெடுந் திரைவேலை யணிவான்மி யூரதனுட்
சிரபுரத்துப் புரவலனார் சிலநாளங் கினிதமர்ந்தார். கக௨௪

(இ - ள்) பரவி வரும்...மிசை விளங்க - பரந்து வருகின்ற ஆனந்தக் கண்ணீர் கண்களினின்றும் துளித்துப் பெருகவும், பொருந்தும் மயிர்ப்புளகங்கள் திருமேனி யெங்கும் விளங்கவும் பெற்று நின்று; புறத்து அணைவுற்று - திருக்கோயிலின் புறத்திலே அணைந்தருளி; சிரபுரத்துப் புரவலனார் - சீகாழித் தலைவராகிய பிள்ளையார்; அரவநெடும்...திருவான்மியூரதனுள் - ஓசையினையுடைய நீண்ட அலைகளைக்கொண்ட கடற்கரையில் அமைந்த அழகிய திருவான்மியூரினகண்; சிலநாளங் கினிதமர்ந்தார் - சில நாள்கள் அங்கு இனிதாக விரும்பி எழுந்தருளி யிருந்தனர்.

(வி - ரை) பரவி வரும் - முன்பாட்டில் இன்புற்றார் என்ற அந்நிலை உள்ளத்திற் பரவுதலினால் வருகின்ற; பரவி - பரவுதலினால் - துதித்தமையால் - என்றுரைக்கவும் நின்றது.

ஆனந்த நிறைந்த துளி - ஆனந்தம் நிறைந்ததனால் வரும் கண்ணீர்த் துளிகள். நிறைந்த - நிறைந்ததனால். கண் பனிப்ப - பனித்தல் - துளித்தல்.

மிசை விளங்க - மிசை - திருமேனிமேல். ஆனந்தம் உளளேயும், புளகங்கள் மிசையிலும் விளங்கின என்பது.

அரவம் - கடலின் எழும் மாருதவோசை ; நெடுந்திரை - அலைகள் நீண்டும் ஒன்றன்மே லொன்றாமாக இடையறாது பரம்பரையாக வரும் நிலை குறித்தது "திரை யுலாம் கழி" என்ற பதிகமும் காண்க.

அணி - கடற்கரையின் அருகு அழகின அமைந்த கடற்கரைப் பட்டினங்களுக்குச் சிறப்பாயுரிய அணிநலம்பற்றி அப்பதத நாயனார் புராணமும், பிறவும் பார்க்க.

சிலநாளங் கினிதமர்ந்தார் - "கனிவேலைக் கரையினயந் திருந்தா ரன்றே" (2787) என்ற திருஇராமேசுரத்திற் பிள்ளையார் தங்கியிருந்த நிலைபற்றிய குறிப்புக்களை ஈண்டும் காணத்தக்கன. தரங்கம்பாடி - குமரிமுனை - முதலிய இடங்களுக்கு இக்காலி லும் மக்கள் உடற்சுகம்பற்றிச் செல்லும் நிலையும் கருதத்தக்கன. ஆயின் ஈண்டுப் பிள்ளையார் இனிதமர்ந்தது அவ்வாறு உலகிய வின்பங்கருதி யன்றென்பது "திருவான்மி யூரதனுள" என்பதனாற் குறிக்கப்பட்டது. 'நாதர்தமை நாடோறும் வணங்கி யேத்தி" (2787) என முன்னரும் இக்குறிப்புப்பெற வோதுதல் காண்க. இக்கருத்தினை வற்புறுத்த "மெய்த ருமபுகழ்த் திருமயி லாபுரி விரைசூழ், மொய்த யங்குதண் பொழிற்றிரு வான்மியூர் முதலாப், பைத ருமபணி யணிந்தவர் பதியெனைப் பல வால், நெய்த லெய்தழன் செய்தவந் நிறைதவஞ் சிறந்தோ " (1117) என முன்னர் இறைவரது விளக்கம்பற்றியே ஈண்டு நிலைச்சிறப்புக் கூறியவாறும் கருதுக. "பழுதில் புகழ்த் திருமயிலைப் பதியிலமர்ந் தருளுநாள்" (3017) என முன் கூறியது மிக கருதத். திருப்பதிகத்துக் "கரையுலாங் கடலிற்பொலி சங்கம்வெள் ளிப்பிவன், திரையுலாங் கழிமீ னுகளும் திருவான்மியூர்" (1) என்றும், பின்னரும், வரும் திருவுளக் குறிப்பும் கண்டுகொள்க. பதிகத்துள் "கடலின்புறந், தேனையங்கிய பைம்பொழில்சூழ்" (3). "தடம்பொழி லின்னிழற் கானல்வாய்த், தெண்டி ரைக்கட லோதமலகும" (7), "பொருது வார்கட லெண்டிசை யுந்தரு வாரியால், திரித ருமபுகழ் செல்வமல்கும்" (9) என்ற பதிகக் கருத்துக்கள் காண்க.

சிரபுரத்துப் புரவலனார் - சிரபுரம் - சீகாழியின் ஏழாவது திருப்பெயர். 1124

3023. அங்கணமர் வாருலகா ளுடையாரை யருந்தமிழின்
பொங்குமிசைப் பதிகங்கள் பலபோற்றிப் போந்தருளிக்
திருவிடைச்சுரம் கங்கையணி மணிமுடியார் பதிபலவுங் கலந்திறைஞ்சிச்,
செங்கணவிடைக் கொடியார்த மிடைச்சுரத்தைச் சேர்வுற்றார்.

(இ - ள்) அங்கணமர்வார். போந்தருளி - அப்பதியில் எழுந்தருளியிருப்பவராகிய பிள்ளையார் உலகங்களுக்கெல்லாம் தலைவராகிய இறைவரை அரிய தமிழிலே மேன் மேல் வளரும் பண் இசை நிரம்பிய திருப்பதிகங்கள் பலவற்றாற் றுதிசெய்து அங்கு நின்றும் போந்தருளி ; கங்கை...இறைஞ்சி - கங்கைநதியினை அணிந்த அழகிய சடை முடியினையுடைய இறைவரது பதிகள் பலவற்றையும் அங்கங்கும் சென்று கலந்து வணங்கி ; செங்கணவிடை...சேர்வுற்றார் - சிவந்த கண்களையுடைய இறைவரது திரு விடைச்சுரத்தைச் சேர்ந்தருளினார் (பிள்ளையார்).

(வி - ரை) உலகர்ளுடையார் - சிவபெருமான்; முழுமுதன்மை யுடையார்; அந்தமாதி என்று ஞானநூல் பேசும் தன்மையினை உடையவர். "உலகாளுடையீர" (1); "ஆதியெம் பெருமான்" (11) என்ற பதிகக குறிப்புக்களும் காண்க.

பதிகங்கள் பல - இவற்றுள் "விரையார் கொன்றையினய்" என்னும் கௌசிகப பணணமைந்த ஒரு பதிகம மட்டும் கிடைத்துளது; ஏனையவை கிடைத்தில!

பதி பல - இவை குன்றத்தூா, திருநெடுங்குன்றம, திருககச்சூ ராலககோயில் முத லாயின என்பது கருதபபடும். திருநாவுககரசர் புராணதது 331-ம் பாட்டில் குறித் தவற்றுள் திருவேற்காடும் திருவலிதாயமும் நீககிக கீழவருவனவற்றைச சேர்த் துக்கொள்க. மாடன்பாக்கம், பலலவபுரம, திருசசுரம் (திருசூலம என வழங்குவது), திருச்சிலப்பேறூர் (குன்றத்தூர் போகும் வழியில் பேரூா tollgate), கோவூா, மாங காடு, சோமஙகலம, மணிமஙகலம், படூர், பூஞ்சேரி, திருககசசூர், வயலூா, வீராபுரம். (ஒவ்வொரு ஊரிலும் பழைய கோயிலும கல்வெட்டுககளும உணடு).

கலந்திறைஞ்சி - திருவொற்றியூரினின்றும் திருமயிலைக்கும, அங்குநின்றும திரு வான்மியூருககும கடற்கரை வழியே அலைவீதியினை அடுதது எழுநதருளிய பிள்ளையாா, திருவானமியூரினின்றும் போந்தருளுபவர் கடற்கரையினை விட்டு நாட்டினுள்ளே சென்று பலபுறமும் கலநதுபோய் வழிபட்டனர் எனபதாம்.

செங்கண்விடைக் கொடியார் - "விடையுயர்கொடியா" (5) என்ற பதிகக குறிப்பு; "கொடியா" எனச் சிலேடைவகையால கொடியுடையவர் எனவும், கொடி யவர் எனவும் இருபொருள்பட நின்ற பதிகததுபபோலவே கொடியார் என்ற நயம காண்க; தலைவனை நயநத தலைவியின் கூற்றாகிய உட்குறிப்பினையுடைய பதிகக கருத் துப் பார்க்க. "இரங்கல் நறு நெய்தல்" என்ற திணைப் பொருளும காணக.

பிள்ளையார் என்ற எழுவாய் முனபாட்டினின்றும வருவிக்க. 1125

I திருவான்மியூர்

திருச்சிற்றம்பலம் வினாவுரை பண் - இந்தளம்

கரையு லாங்கட லிற்பொலி சஙகமவெள் ளிப்பிவன்
றிரையு லாங்கழி மீனுக ளுநதிரு வானமியூர்
உரையு லாமபொரு ளாயுல காளுடை யீர்சொலீர்
வரையு லாமட மாதுட னாகிய மாண்பதே. (1)

மாதோர் கூறுடை நற்றவ னைத்திரு வான்மியூர்
ஆதி யெமபெரு மானருள் செயய வினாவுரை
ஓதி யனதெழு காழியுண் ஞானசம் பந்தன்சொல்
நீதி யானினை வாாகெடு வானுல காளவரே. (11)

திருச்சிறறம்பலம

பதிகக் குறிப்பு:—அடியார் சிந்தை செய்து பரவும் திருவான்மியூர் ஆதியெம பெருமான்! மாதுடனாகிய மாண்பு முதலாகிய உமது முதன்மைத தன்மைகளின நிலை களை எங்களுக்கு உரைத்தருளிச் செய்வீர் என்று இறைவர்பால் வினவியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கடல் திரையுலாம் - "அரவ நெடுநதிரை வேலையணி" (8022); உரையுலாம் பொருளாய் உலகாளுடையீர் - சொலலுவாா

சொற்களுக்கெல்லாம் பொருளாய் நிற்பவர். இறைவன் எல்லாப் பொருளுள்ளும் கலந்து நிற்றலின் சொல்லாற் சொல்லும் பொருள் எவையாயினும் அவை அவனையே சாரும் என்ற கருத்து. உலகாளுடையீர் - உலகினை ஆளுதல் என்றது - பிறவிப் பிணி நீக்கியருளும் ஐந்தொழில் இயற்றும் முதல்வனாதல் குறித்தது. "உலகாளுடையாரை" (3023) என்றும், "பிறவி மருந்தான பெருந்தகையை" (3021) என்றும் இக்கருத்தை ஊன்றிக் கருதும்படி ஆசிரியர் காட்டியருளுதல் காண்க. இப்பதியில் இறைவர் மருந்தீசர் என்ற திருநாமத்தால் வழங்கப்படுதலும் குறிக்க. மாதுடனாகிய மாண்பு - (1), ஆனை யுரிபோர்த்த தன்வாட்ட லுகந்தது - (3), நஞ்சுண்டு வானவர்க்கின்னருள் வைத்த வியல்பு (4), பிறை செஞ்சடை வைத்தது (5), மூ எயில் எரியூட்டிய மொய்ம்பு (6), இருக்கு நால்வருக்கு உரைசெய்தது (7), இலப்பலி யேற்றது (9) என்று இப்பதிக முழுமையும் உரைபெறக் கேட்ட வினாவாகக் கூறியவை இறைவர் உயிர்களை ஆளுடைய முதல்வராகிய நிலையினைப் பற்றி நிற்றல் காண்க. வரை - மலை. மாண்பு சொலீர் - மாண்பின் நிலையினை உரையீர் என்று வினவியபடி. இவ்வாறு உரை (விடை) வேண்டிச், சொல்லீர் என்று கேட்கும் நிலையில் அமைந்த யாப்பினால் இது வினாவுரை (11) எனப்பட்டது. "வினாவுரையால்" (3021);—(2) சந்தும் அகிலும் புனலும் கொண்டு என்று உம்மைகள் தொக்கன இவை புறப் பூசையும், தம் சிந்தை செய்து என்பது அகப்பூசையும் குறித்தன. அடியார் பரவுதல் - மருந்தாதலிற் பிறவிநோய் தீர்தற்பொருட்டு அடியார் பரவும் குறிப்பு. அந்தியின் ஒளியின் நிறம் - அந்தி - மாலைச் செவ்வானம், அந்தி - அம்-தீ - அந்தியென நின்றதெனக் கொண்டு அழகிய தீயின் ஒளிநிறம் என்றலுமாம்; வண்ணம் - "பொன்வண்ணம் மெய்வண்ணம் மவ்வண்ண மேனி";—(3) கால் - காற்று, நயங்குதல் - நலம் காட்டுதல்; நயம் - நலம்;—(4) செஞ்சொலாளர்கள் - கற்ற பெரும்புலவாணர்; சிவச்சொற் பயிலும் பெரியோர்; நாட்டு வளம்பற்றிக் கிளிச்சொற் பயிலும் மடவார் என்றலுமாம் துஞ்சு அஞ்சு இருள் - உலகமெல்லாம் துஞ்சிய - இறந்த - அஞ்சத்தக்க - வலிய ஊழி; உடம்படு மெய்பெறுதல் புறனடையாற் கொள்க, வஞ்சம் என்று கொண்டு வஞ்சிக்கும் - மயக்கும் - என்றுரைத்தலுமாம்;—(5) துன்னோனத் தீரியும் சரிதைத் தொழில் - "உமக்கு ஆட்செய்ய வஞ்சுதுமே" (கோத்திட்டை) என்ற நம்பிகள் பதிகக்கருத்துக் காண்க;—(6) ஓத்து - வேதம் ஓதுதல். சூது - மாங்கனி; சூதாடும் வட்டில் என்றலுமாம், உலாவிய - போன்ற, உவமவுருபு மொய்ம்பு - வலிமை; மூதெயில் - பழமையுடைய மும்மதில்கள்;—(7) கானல் - கடற்கழிக் கானல்; தொண்டு - தொண்டர்கள், இரைத்து - துதிசெய்து; இருக்கு - அறமுதல் நான்கு உறுதிப் பொருள் கொண்ட வேதப் பொதுமை குறித்து நின்றது,—(8) நக்கு - தருக்கு;—(9) வாரியால் நீர்தரும் புகழ் செல்வ மல்கும் - கடலடு பொருள்களின் வாணிபத் துறையினால் வரும் புகழ் - கீர்த்தி - முதலியவை. சுருதியார் இருவர் - பிரமன்-மால்;—(10) மை - இருள்-நிழல்; வண்டினம் தவத்தொழிலார்போல இசை மிழற்றும் என்க. தவத்தொழிலார் - வேதம் பயிலும் முனிவர். வண்டினமும் - தொழிலாரும் இசைக்கும் இசைசேர் என்றலுமாம், மெய்யினில் தவமியற்றும் அடையாளமாகிய நீறு பூசிய என்க. தவப் பொடி - தவத்தின் கோலமாகிய நீறு; பொடி - நீறு; "பூதியாகிய புனிதநீ றாடி ...மாதவஞ் செய" (1143 பார்க்க); மேல் "நற்றவனை" (11) என்பதும் காண்க கைதவம் - கீழ்மை; பொய்யுமாம்;—(11) மாதோர் கூறுடை நற்றவனை - அருள் செய்ய - முன்பாட்டுக்களில் "சொலீர்" என்றதன் பொருள் கூறியபடி; வினவுரை - பதிகப் பெயர்.

II திருவான்மியூர்

திருச்சிற்றம்பலம் பண் - கௌசிகம்

*விரையார் கொன்றையினாய் விட முண்ட மிடற்றினனே*
*உரையார் பல்புகழா யுமை நங்கையொர் பங்குடையாய்*
*திரையார் தெண்கடல்சூழ் திரு வான்மி யூருறையும்*
*அரையா வுன்னையல்லா லடை யாதென தாதரவே.* (1)

*கன்று ருங்கமுகின் வயல சூழ்தரு காழிதனில்*
*நன்று னபுகழால மிகு ஞானசம பந்தனுரை*
*சென்றா தமமிடா தீர் திரு வானமி யூரதன்மேற்*
*குன்று தேததவல்லார் கொடு வலவினை போயறுமே.* (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—*திருவான்மியூருறையும் அரைசே! உன்னையல்லா லடையாது எனது ஆதரவே.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—*திரையார் தேண்கடல் சூழ் - "அரவ நெடுந்திரை வேலை"* (3024) ; *அரையா - அரசே ; "உன்னையல்லா லடை யாதென தாதரவே" என்பது பாட்டுதோறும வரும மகுடம் ;* ஆதரவு - அன்பு ; அல்லாலடையாது - *எதிர்மறைகள உறுதி குறிததன* ;—(2) இடியார் - இடிபோனற முழககமுடைய ; மணிமுடியாய் - *முடியிறகுமே மணிபோன்றவரே* ;—(3) செய் - வயல்கள் ;—(4) புரி நூல் - *புரிதத முந்நூல்* ; நூலுடையவனே. தேன்பால் - *தென்றிசையில* ;—(6) நீதீ - ஓதீ - சேதீ - ஆதீ - *நான்கும பெயர்கள் ; விளியுருபேற்று நீண்டன.* சேதீ - சேதிததவரே ; (7 - 8) ஆனாய் - *எல்லாமானாய ; உரிமையானவரே* ; இடம்ப - பசு பதியே - *என்றலுமாம்.*—(11) இடர் தீர் - *மருந்தாய்ப பிறவிபபிணி தீர்க்கும்.*

தல விசேடம் :—திருவான்மியூர் - III-*பக்கம - நோக்க பார்க்க.*

3024. *சென்னியிள மதியணிந்தார் மருவுதிரு விடைச்சுரததுது*
*மன்னுதிருத் தொண்டர்குழா மெதிர்கொள்ள வந்தருளி*
*நன்னெடுங்கோ புரமிறைஞ்சி யுள்புகுந்து நற்கோயில்*
*தன்னைவலங் கொண்டணைந்தார் தம்பிரான் றிருமுன்பு.* கசஉசு

(இ - ள்) *சென்னி...வந்தருளி - சிரததிலே* இளம்பிறையினைச் சூடிய இறைவா *எழுந்தருளிய திருவிடைச்சுரததில் நிலையாக வாழும திருத்தொண்டர் கூட்டம் எதிர் கொள்ள வந்தருளி ; நனனெடுங கோபுரம...திருமுன்பு - நனமை தருகினற நீணட கோபுரததினை வணஙகித திருககோயிலினுளளே புகுந்து நனமை செய்யும் அததிருக கோயிலினை வலமாகச சூழ்நது வந்து தமது பெருமான திருமுன்பு வநதணைந்தருளினா (பிள்ளையார).*

(வி - ரை) நன்னெடும் கோபுரம் - நற்கோயில் - கோபுரம் *தூலலிஙகம எனப பட்டுத தூரததே காட்சியளிதது அழைதது வழிபடச் செய்து உய்தி தருதலால்* நன்னெடும் *என்றார்.* நற்கோயில் - *வநதடைநதாாகளெல்லாம் நன்மை தருவாா எழுந தருளிய இடமாகிய திருககோயில்.*

திருமுன்பு அணைந்தார் - *எனக. முன்பு ; சந்நிதி. சந்நிதியை அடைந்தார் என இரண்டாவதனுருபு விரிக்க.*

3025. கண்டபொழு தேகலந்த காதலாற் கைதலைமேற்
கொண்டுநில முறவிழுந்து குலவுபெரு மகிழ்ச்சியுடன்
மண்டியபே ரன்புருகி மயிர்முகிழ்ப்ப வணங்கியெழுந்
தண்டர்பிரான் றிருமேனி வண்ணங்கண் டதிசயித்தார். ௧௧௨௭

(இ-ள்) கண்டபொழுதே கலந்த காதலால் - தம்பிரானைத் திருமுன்பு சேர்ந்து அவரைக் கண்ட அப்பொழுதே மனம் புகுந்து கலந்தெழுந்த பெருவிருப்பத்தினாலே, கைதலைமேல்...எழுந்து - கைகளைத் தலைமேலே கொண்டு நிலம் பொருந்த விழுந்து நிறைந்த பெரிய மகிழ்ச்சியுடனே பொங்கிய பேரன்பினாலே உள்ளுருகி உரோமம் புளகம் கொள்ள வணங்கி எழுந்து; அண்டர் பிரான்...அதிசயித்தார் - தேவதேவராகிய இறைவரது திருமேனியின் அழகிய வண்ணத்தைக் கண்டு அதிசயமடைந்தருளினார்.

(வி-ரை) கண்டபொழுதே கலந்த காதல் - கண்ணுறக் காணாது நினைந்து எழுந்தபோது காதல் உள்ளத்தினுள் நின்றது, கண்டபோது அது மிக்கு அவரிடத்துச் சென்று கலந்தது என்க. பொழுதே - ஏகாரம் தேற்றம்.

கை...எழுந்து - கைகூப்பியவாறே நிலமுற விழுந்த அந்நிலையில் மகிழ்ச்சியும் அன்பும் பெருக மயிர் முகிழ்த்தல், மனமுருகிக் கண்ணீர் பாய்தல் முதலிய மெய்ப்பாடுகள் நிகழ்ந்தன, நிகழப் பன்முறையும் பணிந்து பின் எழுந்து என்க.

திருமேனி வண்ணம் கண்டு அதிசயித்தார் - திருமேனியின் வண்ணமாவது ஒளியும் நிறமும் வடிவமும் அழகும் ஏனைய உள்ளம் கவரும் மாண்புகளுமாகிய தொகுதி. அதிசயம் - உள்ளம் கவர்ந்தெழுகின்ற, இன்னதென்று பிரித்துணரலாகாத, இன்பமயமாகிய மெய்ப்பாடு. கண்டு அதிசயித்தார் - "அதிசயம் கண்டாமே" (திருவா); இதன் நிலை பதிகத்துட் காண்க, மேற்பாட்டில் விரிக்கப்படுதலும் காண்க. அதிசயிப்பார் - என்பதும் பாடம். 1127

3026. "இருந்தவிடைச் சுரமேவு மிவ்வண்ண மென்னே!"யெனு
மருந்தமிழின் றிருப்பதிகத் தமிழ்மாலை கொடுபாடித்
திருந்துமனங் கரைந்துருகத் திருக்கடைக்காப் புச்சாத்திப்
பெருந்தனிவாழ் வினைப்பெற்றார் பேருலகின் பேறானார். ௧௧௨௮

(இ-ள்) "இருந்த...என்னே?" என்று - "சாரல் விளங்க இருந்த திருவிடைச்சுரத்தில் மேவிய இப்பெருமானது வண்ணந்தான் என்ன அதிசயம்!" என்று; அருந்தமிழின்...சாத்தி - அருந்தமிழாலாகிய இனிய திருப்பதிகத் தமிழ்மாலையினைப் பாடித் திருந்தும் மனம் கரைந்து உருகத் திருக்கடைக்காப்புச் சாத்தியருளி; பெருந்தனி...பேறானார் - பெரிய ஒப்பற்ற சிவானந்தப் பெருவாழ்வினைப் பெற்றுத் திளைத்தனராய் பெரிய உலகவரின் பேறாக வந்தவதரித்த பிள்ளையார்.

(வி-ரை) இருந்த - விளங்க இருந்த, திருவிடைச்சுரம் எழில்திகழ் சாரலில் அணிபெற இருந்த அமைப்பு; பதிகம் பார்க்க.

இடைச்சுர மேவிய இவர்வண்ண மென்னே! - பதிகத்தின் மகுடம். பதிகக் கருத்தும் குறிப்பும் எடுத்துக் காட்டியபடி.

அருந் தமிழ் - தமிழ் மாலை - தமிழ் - முன்னையது மொழியின் சிறப்புக்கும் பின்னையது பொருளின் உயர்வுக்கும் வந்தன. (தமிழ்)இன் - இனிய.

**திருந்து மனம்** - *முன்னைத் தவத்தாற் றிருந்திய மனம் ; சரிதைகள் பரவி நிற்ற லால் திருந்திய மெனறலுமாம்.*

**திருந்துமனங் கரைந்துருகத் திருக்கடைக்காப்புச் சாத்தி** - *" அண்ணல் சரிதை கள் பரவினின் றுருகுசம் பந்தன் " என்ற பதிகப் (11) பகுதியின் குறிப்புரைத்தவாறு. வண்ணங்கண் டதிசயித்து, " இவர் காட்டகத்தாகக் கனலெரி யாடுவர் ", " ஆற்றையு மேற்றதோர் அவிர்சடை யுடையர் " என்பனவாதியாக அவரது அடிநிழல் பரவி நின்றேத்து மனமுடை யடியவர்க் கெளியருமாகும் தன்மைகளை எல்லாம் அவ்வண் ணத்தினுள்ளே கண்டு கூண்டு மனங் கரைந்துருகிப் பதிக நிறைவாக்கி யருளினார் என்பதாம்.*

**பெருந் தனிவாழ்வினைப் பெறுதலாவது** *அவ்வாறு வண்ணங் கண்டு சரிதைகள் பரவிநின்று மனங் கரைந்துருகப்பெற்ற நிலையில் சிவானந்தப் பெருவாழ்விலே திளைத்து அதுவே மயமாக நிற்றல்.*

**பேருலகின் பேறுனர்** - *பிள்ளையார் தாம் எஞ்ஞான்றும் அவ்வாழ்விலே நிற்பவ ராயினும் இவ்வுலகின் வந்து இவ்வாறு பதிகடோறும் சென்று சென்று திளைத்தருளி நிற்றல் உலகத்தார் கண்டுய்யும் பேறுகும் என்பது ; பேருலகு - இப்பேறு பெறும் நிலையில் வந்த உலகு.*

**கரைந்துருகி—திருப்பதிகத்தலர்மாலை**—*என்பனவும் பாடங்கள்.* 1128

3027. *நிறைந்தார்ர வேட் கையினு னின்றிறைஞ்சிப் புறம்போந்தங்*
*குறைந்தருளிப் பணிகின்று ருமைபாக ரருள்பெற்றுச்*
*சிறந்ததிருத் தொண்டருட னெழுந்தருளிச்,* **செந்துருத்தி**
**அறைந்தளிகள் பயில்சாரற் றிருக்கழுக்குன் றினையணைந்தார்.** ௧௧௨௬

(இ - ள்) *நிறைந்த ஆரா...பணிகின்றார் - சிவானந்தப் பெருவாழ்வினால் நிறைந்து அடங்காத பெரு விருப்பத்தினாலே நெடுநேரம் நின்று வணங்கிப் புறத்துப் போந்தருளி அப்பதியில் தங்கியருளிப் பணிகின்ற பிள்ளையார் ; உமைபாக ரருள்பெற்று...எழுந் தருளி - உமையம்மையாரை ஒருபாகத்துடைய இறைவரது திருவருள்விடை பெற்றுக் கொண்டு சிறப்புடைய திருத்தொண்டர்களுடனே எழுந்தருளிச் சென்று ; செந் துருத்தி...அணைந்தார் - செந்துருத்தி என்னும் பண்ணைப் பாடி வண்டுகள் பயில்கின்ற சாரலையுடைய திருக்கழுக்குன்றத்தினை அணைந்தருளினார்.*

(**வி - ரை**) **நிறைந்து** - *முன் கூறியபடி தாம் பெற்ற சிவானந்தப் பெருவாழ்வி னால் நிறைவு பெற்றமையினால்.*

**ஆரா வேட்கையினால் நின்று இறைஞ்சி** - **ஆர்தல்** - *நிறைவுறுதலினால் அடங்கு தல். இங்கு ஆரா என்பது அளவில்லாது பெருகுதலினால் அடங்காத என்ற பொருள் தந்தது. திருக்கடைக்காப்புச் சாத்திப் பதிக நிறைவாக்கிய பின்னும் நெடுநேரம் நின்று இறைஞ்சுதலின் காரணம் கூறியபடி.*

**நின்றிறைஞ்சி** - *இறைவரது திருமேனி வண்ணத்தைக் கண்டுகொண்டு அதனில் ஈடுபட்டு நின்று என்க. " சரிதைகள் பரவிநின்று உருகுசம் பந்தன் " (11) என்ற பதிகம் இதற்கு அகச்சான்றாகும்.*

**அங்கு உறைந்தருளிப் பணிகின்றார்** - *பலநாள் அங்குத் தங்கிப் பணிவதனை மேற் கொண்ட பிள்ளையார்.* **அருள் பெற்று** - *விடைபெற்று.*

அளிகள் சேர்ந்துருத்தி அறைந்து பயில் - செந்துருத்தி என்பது குறிஞ்சியாழ்த் திறத்தின் பண் வகைகளுள் ஒன்று; இது செந்திறம் எனவும்படும்; செந்துருத்தி என்றும் சில பதிப்புக்களிற் காணப்படுகின்றது. இப்பண்ணில் ஆளுடைய நம்பிகளருளிய "மீளாவடிமை" என்னும் திருவாரூர்ப் பதிகம் ஒன்றுதான் நமக்குக் கிடைத்துளது! பிள்ளையார் திருப்பதிகங்களுள் இப்பண்ணில் பதிகம் கிடைத்திலது! இத்தலத்துப் பிள்ளையாரது "தோடுடையான்" என்ற திருப்பதிகம் குறிஞ்சிப் பண்ணில் அமைந்துள்ள நிலையும் காண்க; அளிகள் அறைந்து பயில் என்றது வண்டுகளது இரீங்காரத்தில் இயல்பாகவே அவ்வந் நிலத்திற்கேற்றவாறு சில பண்கள் அமைவன அவ்வாறன்றி இங்குச் செந்துருத்திப் பண் அமைவதாம் என்க. "சேற்று செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்த வண்டு, வேற்றுயர் வுருவாகிச் செவ்வழிநற் பண்பாடு மிழலை யாமே" (தேவா) முதலியவை காண்க "கூடல் குறிஞ்சி" என்பவாதலின் இங்கு இன்னிசையால் தமிழ்ப்பாட்டும் பிள்ளையார் எழுந்தருளுவது கண்டு வண்டுகள் ஏற்றவாறு எதிர்கொள்ளும் குறிப்புடன் அதற்கேற்ற செந்துருத்தி அறைந்தன என்ற குறிப்பும் காண்க. குன்றமாதலின் குறிஞ்சிக்குரிமையுமாம் 1129

## திருவிடைச்சுரம்

திருச்சிற்றம்பலம் **பண் - குறிஞ்சி - 1-ம் திருமுறை**

வரிவள ரவிரொளி யரவரை தாழ வார்சடை முடிமிசை வளர்மதி சூடிக்
கரிவளர் தருகழல் கால்வல னேந்திக் கனலெரி யாடுவர் காடரங் காக
விரிவளர் தருபொழில் இளமயி லால வெண்ணிறத் தருவிகள் திண்ணென வீழும்
எரிவள ரினமணி புனமணி சார லிடைச்சுர மேவிய இவர்வண மென்னே (1)

மடைச்சுர மறிவன வாளையுங் கயலு மருவிய வயறனில் வருபுனற் காழிச்
சடைச்சுரத் துறைவதோர் பிறையுடை யண்ணல் சரிதைகள் பரவிநின் றுருகுசம் பந்தன்
புடைச்சுரத் தருவரைப் பூக்கமழ் சாரற் புணர்மட நடையவர் புடையிடை யார்ந்த
இடைச்சுர மேத்திய இசையொடு பாட லிவைசொல வல்லவர் பிணியிலர் தாமே (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—"அரிசார லிருந்த விடைச்சுர மேவிய விவர்வண மென்னே!" என்று இறைவரது வண்ணங் கண்டு அதிசயித்து அவர் சரிதைகளைப் பரவி நின்றுருகித் துதியது (3025 - 3026)

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அரையில் அரவு தாழவும் முடியில் மதி சூடியும் கால்வலன் கழல் ஏந்தியும் காடு அரங்காக எரியாடுவர், இவ்வாறு இடைச்சுரமேவிய இவர் வண்ணம் இருந்தவாறு என்னே! அதிசயம்! என்றவாறு. இவ்வாறே ஏனைய எல்லாப் பாட்டுக்களிலும் கண்டுகொள்க. வரி - வரிகளையுடைய; அவிர் ஒளி - அரவின் ஒளி, உடல் ஒளியும் மணிகளின் ஒளியுமாம், கரி - கழல் வலனேந்தி - கரி - கரியாக - சான்றாக. "கள்ளவினை, யென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும்" (போற்றிப் பஃறொடை - 68), ஆலுதல் - அசைதல், மயில் ஆலுதலுக்கு வழங்கும் மரபுச்சொல்; என்னே! - அதிசயக் குறிப்பு விடை;—(2) ஆற்றை - கங்கையை, உம்மை - உயர்வு சிறப்பு; ஆயிரமா முகத்தினொடு ஆர்த்துப் பாய்ந்திழிந்த ஆற்றையும்; ஏற்றது - உட்கொண்டு அடக்கியது, கொடுமை - வலிமை என்ற பொருளில் வந்தது. ஓர்த்தல் - எண்ணுதல், செருச்செய - போரிடுதல்போலத் துள்ள; "போர்த்தொழில் புரியும்" (திருவிடை - மும். கோ - 7); மந்தி - பெண்குரங்கு;

ஏற்றையொடு - தன் ஏறுகிய (கலைவ) ஆண்குரங்குடன்; உழிதரும் - (வானரயின் செருச் செய்கை கண்டு அஞ்சி மந்தி ஏற்றினொடு) அலையும்; சீர்ச்சிறப்பும் மலைவளமும் கூறிய நிலை; ஏனையவும் இவ்வாறே கண்டுகொள்க;—(3) காதலர் - விரும்பி ஆடுவார்; நிலமை - நிலத்தின் தன்மை; நானம் - கத்தூரி - மான்மதம்; மஞ்ஞை - ஏனம் - பன்றி - குறிஞ்சிக் கருப்பொருள்கள்;—(4) கடம் - யானைத்தோல்; தேன் அட்டும் - தேனை உண்ணும்;—(5) கொடியார் - கொடியினையுடையவர்; நிழல் - ஒளி; செழும்புன லனையன - செம்புனலின் ஒழுக்குப் போன்று செறிந்த திரண்ட செவ்வாழையின் குலை;—(6) பெரியவர் - சிவ ஞானிகள்; தூவம் - குரா மரம்;—(7) வேல் - இங்குச் சூலம் குறித்தது; நூலர் - வேதாகம ஞானநூல் ஓதுவர்; நூல்களால் ஓதப்படுபவர்; புரிநூலினை அணிந்தவர் என்றலுமாம். கவர்தலை அரவு - ஐந்தாகப் பிரிந்த தலையுடைய அரவு. ஆரணங்கு - உமையம்மை;—(8) கொன்றையந் திருமலர் - சிறப்பாகிய திருவடையாள மாலையாதல் குறிப்பு;—(9) ஒன்று - கபால ஓடு; பழியிலர் - பலஇல்லம் பலி ஏற்பினும் அதனாற் பழிப்பிலர்; முழவதிர - முழவு போல முழங்க; இலவங்கம் - ஏலம் - ஏலம்; குறிஞ்சிக் கருப்பொருள்;—(10) ஓரா அருமைய (ராயினும்) - அடியவர்க் கணியருமாவர் என்க. அணியரும் - அயனரிக்கும் அரியராவதுடன், அடியவர்க்கு அணியரும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை;—(11) மடை - மதகுகள். சடைச்சுரம் - சடைக் காடு; சுரம் - காடு, அண்ணல் சரிதைகள் பரவிநின் றுருகு சம்பந்தன் - "திருந்துமனம் கரைந்துருக" (3026) என ஆசிரியர் இந்நிலையினை விளக்குதல் காண்க.

தலவிசேடம்:—திருவிடைச்சுரம் - தொண்டை நாட்டின் 27-வது பதி; மலைகள் விரவிய இடையிலே கற்சுரமாகிய நாட்டின் பகுதியில் உள்ளதனால் இப்பெயர் பெற்றது; இன்றும் இவ்வாறு விளங்குதல் காணப்பெறும். இதன் கற்சுரத்தில் மலைகளினின்றும் யானை-காட்டுப்பன்றி முதலிய கொடுவிலங்குகள் திரிவனவும் காணப்பெறும்; பதிகம் பார்க்க. சனற்குமார முனிவர் வழிபட்டுப் பேறுபெற்ற பதி. மூலலிங்க மூர்த்தியின் வடிவு ஒளிவண்ணமுடைய மரகதத் திருமேனி; முன் உள்ள பொருள்களின் சாயை இலிங்கத் திருமேனியில் எதிரொளி காட்டக் காணலாம். இவரது வண்ணங் கண்டதிசயித்துருகி ஆளுடைய பிள்ளையார் "இவர்வண்ணமென்னே" என்று பதிகமருளிய வரலாறு புராணத்தும் பதிகத்தும் காண்க. சுவாமி - இடைச்சுர நாதர்; அம்மை - இமய மடக்கொடி; பதிகம் 1.

இது, செங்கற்பட்டு நிலையத்தினின்றும் திருக்கழுக்குன்றம் செல்லும் கற்சாலையில் 3 நாழிகையளவில் வடக்கில் திருப்போரூர் மட்சாலை வழி 2 நாழிகையில் வடக்கில் திரும்பிச் சென்று ½ நாழிகையளவில் அடையத் தக்கது. சிரமமான பாதை; பகல் வேளையிற் சென்றடைவது நலம்.

3028. சென்றணையும் பொழுதின்கட் டிருத்தொண்ட ரெதிர்கொள்ளப்
திருக்கழுக் பொன்றிகழு மணிச்சிவிகை யிழிந்தருளி யுடன்போந்து
குன்றம் மன்றலவிரி நறுஞ்சோலைத் திருமலையை வலங்கொண்டு
மின்றயங்குஞ் சடையாரை விருப்பினுடன் பணிகின்றார்; ககங0

3029. திருக்கழுக்குன் றதனமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைப்
பெருக்கவளர் காதலினாற் பணிந்தெழுந்து பேராத
கருத்தினுடன் "காதல்செயுங் கோயில்கழுக் குன்"றென்று
திருப்பதிகம் புனைந்தருளிச் சிந்தைநிறை மகிழ்வுற்றார். ககங௧

3028. (இ - ள்) சென்றணையும்...எதிர்கொள்ள - (திருக்கழுக்குன்றினிற்) சென்று அணைகின்றபோது அப்பதியின் திருத்தொண்டர்கள் வந்து எதிர்கொள்ளவே; பொன் திகழும்...உடன் போந்து - பொன் விளங்கும் முத்துச் சிவிகையினின்றும் கீழே இறங்கியருளி அவர்களுடனே சேர்ந்து; மன்றல் விரி...வலம் கொண்டு - மணம் விரிந்து கமழும் நறிய மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த அத் திருமலையை வலமாகச் சுற்றி வந்து; மின் தயங்கும்...பணிகின்றார் - மின்போன்று விளங்கும் சடையினையுடைய இறைவரை விருப்பத்தோடு பணிகின்றாராகி; ககங0

3029. (இ - ள்) திருக்கழுக்குன்றத்து...எழுந்து - (அந்தத்) திருக்கழுக்குன்றத்தின் மேல் விரும்பி விளங்க வீற்றிருந்தருளும் ஒப்பற்ற செம்பொற் குன்றம் போன்ற வேதநாயகராகிய இறைவரைப் பெருகி வளர்கின்ற மிக்க விருப்பத்தினாலே வணங்கி எழுந்து; போற்ற...புனைந்தருளி - பெயராது ஊன்றிவைத்த கருத்தினோடு "காதல் செய்யுங் கோயில் கழுக்குன்று" என்ற கருத்தும் மகுடமுமுடைய திருப்பதிகத்தினைச் சாத்தியருளி, சிந்தை நிறை மகிழ்வுற்றார் - மனம் நிறைந்த மகிழ்ச்சியை அடைந்தருளினார். ககஙக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3028. (வி - ரை) திருத்தொண்டர் - திருக்கழுக்குன்றினில் வாழும் திருத்தொண்டர்கள்.

பொன் திகழும் - பொன் வேலைப்பாட்டினால் விளங்கும், மணி - முத்து.

உடன் போந்து-உடன் என்றது 'உடனுறைவினிடம்' என்புழிப்போல ஒன்றாகாமல் வேறுமாகாமல் உடனாகிய மனக்கலப்பாற் கலந்து என்ற பொருளில் வந்தது. தொண்டர்கள் வணங்கியதும் பிள்ளையார் வணங்கியதும் இருதிறத்தவரும் ஒன்றாகி மேலே அணைவதும் ஆகிய எல்லாம் உடன் என்றதொரு சொல்லாற் பெறவைத்த கவிநயம் கண்டுகொள்க. இது சைவத் திறத்தின் சிறப்பு.

மன்றல் விரி.. திருமலையை வலங்கொண்டு - இங்கு மலையைச் சுற்றி வழிபட்டுப் பின் மலையின்மேலேறி இறைவரை வணங்குதல் முறை இன்றும் நிகழ்வதாம். மலைச் சுற்றுத் திருவீதியில் இயல்பாயமைந்த மரங்களடர்ந்த சோலைகள் மணங்கமழ்வுள்ள நிலையும் இன்றும் கண்டு மகிழத்தக்கது.

மின் தயங்கும் சடையார் - மின் தயங்கும் - உவமத் தொகை; தயங்குதல் - விளங்குதல்; பொதுத் தன்மை சடை மின்போல விளங்குதல் "பொலிந்திலங்கு மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமய வீழ்சடை" (பொன்வண்ண அந் - 1) என்பதாதி திருவாக்குக்களாலறிக. இத்தலத்துள் இறைவரை மின்விளங்கும் இடி வழிபடுகின்ற (தலச்சிறப்பு) குறிப்பும் காண்க.

பணிகின்றார் - முற்றெச்சம் பணிகின்றாராகிய - பணிந்து எழுந்து என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. பணிகின்றாராகிய பிள்ளையார் என்று வினைப்பெயராகி யுரைப்பினுமமையும் 1130

3029 (வி - ரை) திருக்கழுக்குன்றத்து ..தனிக் குன்றை - குன்றத்தின் மேல் குன்று என்றது கவிநயம்; இறைவரைச் செங்கனகத் தனிக்குன்று என்றது இது வேறு தன்மையுடையதொன்று எனப் பிரித்துக் காட்டுவது; ஒளியும் வண்ணமும் பற்றிக் குன்றென்று உருவகித்தார்

பெருக்க வளர் காதலினால் - போற்ற கருத்தினுடன் - மிக வளரும் காதலாற் பணிந்தருளினார்; அங்குநின்றும் அகலாத கருத்து முண்டது; அவ்வாறு காதல் மிகச்

செய்பவராகி அங்கு வீற்றிருப்பவர் அவ்விறைவர் என்பது குறிப்பு. காதல் செய் - வந்தடைந்தார்க்குத் தம்பாற் காதலைச் செய்கின்ற என்று பதிகப்பொருள் விரித்தவாறு. "முன்புசெய் தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான, அன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம் பொங்கி... ..உள்ளத் தெழுபெருவேட்கை யோடும்" - (752); "அண்ணலைப் பிரிய மாட்டா தளவிலா தரவு நீட" (759), "மேவினார் பிரிய மாட்டா விமலனார்" (818) என்று உள்ள கருத்துக்கள் இங்கு வைத்துக் காணத்தக்கன. காதல் செய் - காதலை விளைத்து நிற்கும்; இதற்கு இவ்வாறன்றி இறைவர் விரும்பும் கழுக்குன்று என்றுரைப்பாருமுண்டு.

**காதல் செயும் கோயில் கழுக்குன்று** - பதிகத்துள் எல்லாப் பாட்டுக்களிலும் வரும் மகுடமும் பதிகக் கருத்துமாம். இக்காதல் பிள்ளையார் கருத்தினில் மிகுந்து அகலாது நின்றதென்றும், அது அவ்விறைவரது திருவருளால் விளைந்ததென்றும் கொள்க; பதிகம் பார்க்க. செய் என்ற பதிகச் சொற்குச் செய்யும் என்று ஆசிரியர் பொருள் விரித்தலும் குறிக்க.

**சிந்தை நிறை மகிழ்வுற்றார்** - பெருக்க வளர் காதலின்றப் பணிந்து போற்றக் கருத்தினுடன் பதிகம் புனைந்தருளிய தன்மையினாலே மனமகிழ்ச்சி நிறையப் பெற்றனர். 1131

## திருக்கழுக்குன்றம்

திருச்சிற்றம்பலம் பண் - குறிஞ்சி - 1-ம் திருமுறை

தோடுடையா னொருகாதிற் றூயகுழை தாழ
ஏடுடை யான்றலை கலனாக விரந்துண்ணும்
நாடுடையா னள்ளிரு ளேம நடமாடும்
காடுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே. (1)

கண்ணுதலான் காதல்செய் கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞானசம் பந்தன் றமிழ்மாலை
பண்ணியல்பாற் பாடிய பத்தும் மிவைவல்லார்
புண்ணியராய் விண்ணவ ரோடும் பொலிவாரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—கண்ணுதலான் காதல் செயுங் கோயில் கழுக்குன்றே (11).

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **தோடுடையான்.... குழை தாழ** - ஒருகாதில் - என்பது இருபாலும் சேர்க்க நின்றது; "ஒருபாற் றோடு மொருபாற் குழையு, மிருபாற் பட்ட மேனி யெந்தை" (கோயினான் - 37); **ஏடு - எடு** - பகுதி முதனீண்டு வந்த தொழிற்பெயர்; எடுத்தல்; தாங்குதல்; **ஏடுடையான்** - ஏடுடைய மலரான - பிரமன் என்றலுமாம்.—(2) **கேண** - கேண்மை கொள்ள; விரும்பிப் பூண;—(4) **துணையல்** - பூமாலை; **யாழ் செய்** - யாழிசைபோல முரலும். **பிணையல்** - "இளங்கொம்ப னாளோ டிணைந்தும் பிணைந்தும்" (தேவா); பிரிக்க வியலாது சேர்தல். **கணையல்** - கணையினால் அழித்தல்;—(5) **மை - விடம்**;—(6 - 7) **சிறுத்தொண்டர்** - அடியார் முன் தம்மைச் சிறியராய் வைத்து அடைந்து ஒழுகும் தொண்டர். **உள்ளமெல்லாம் உள்கி நின்றங்கே உடனுடும், கள்ளம் வல்லான்** - "நினைவோரை நினைவானை - நினையாரை நினையா தானை" (தாண); "சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்" (போதம்); **கள்ளம் வல்லான்** - தலச்சுவாமி பெயர்களுள் ஒன்று;—(8) **அரக்கர்தங் கோனை ஆதல் செய்தான**; **அரக்கர்தங் கோனை**

அருவரையின் கோதல் செய்தான - என இருவழியும் கூட்டி உரைக்க நின்றது; ஆதல் - தலத்திறகிரங்கி யாரும் கொடுத்த ஆக்கம் தந்தது;—(10) உலகேலாம் சாய நின்றான் - உலகமெல்லா மழிந்த வழியிலும் அவற்றைச் சங்கரித்துத் தான் அழியாது நிற்பவன்; "ஒடுங்கி"; "சங்கார காரணனாயுள்ள முதல்வனையே முதலாகவுடைத்து இவ்வுலகம்" (சிவஞான போதம் - சூத். 1);—(11) கண்ணுதலான் காதல்செய் கோயில் கழுக்குன்றை - பதிகக் குறிப்பை முடித்துக் காட்டியவாறு.

தலவிசேடம்:—திருக்கழுக்குன்றம் - III - ருருசு பக்கம் பார்க்க. மலையின் மேலிருந்து வலமாக இறங்குதற்குப் படிவழி தனியாக உள்ளது. மலையின்மேல் சொக்க நாயகி கோயில் தனியாகக் குகை போன்ற இடத்தில் அமைந்து உள்ளது. அடிவாரம் கோயிலினுள் உள்ளது. சங்கு தீர்த்தம். மலை வலம் வருவது 2¾ நாழிகை யளவுள்ளது, அந்தகக் கவி வீரராகவ முதலியார் பாடிய தலபுராணம் உண்டு.

3030. இன்புறுறங் கமர்ந்தருளி யீறிலபெருந் தொண்டருடன்
திருஅச்சிறு மின்பெற்ற வேணியினா ரருள்பெற்றுப் போந்தருளி,
பாக்கம் என்புற்ற மணிமார்ப ரெல்லையிலா வாட்சிபுரிந்
தன்புற்று மகிழ்ந்ததிரு வச்சிறுபாக் கத்தணைந்தார். ககஅஉ

(இ - ள்) இன்புற்று அங்கு அமர்ந்தருளி - இன்புற்று அப்பதியில் விரும்பி எழுந்தருளியிருந்து; ஈறில...போந்தருளி - எல்லையில்லாத பெருந் தொண்டர்களுடனே, மின்போன்ற சடையினையுடையவராகிய இறைவரது திருவருள் விடைபெற்று அங்கு நின்றும் போந்தருளி, என்புற்ற...அணைந்தார் - எலும்புமாலைகளை யணிந்த அழகிய மார்பினையுடைய சிவபெருமான் எல்லையில்லாதபடி ஆட்சி புரிந்து அன்பு பொருந்தி மகிழ்ந்து எழுந்தருளிய திருஅச்சிறுபாக்கத்தினை அணைந்தருளினார்.

(வி - ரை) மின் பெற்ற வேணியினார் - முன்னரும் "மின்தயங்கு சடையார்" (3028) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. அருள் - அருள் பொருந்திய விடை.

என்புற்ற மணி மார்பர் - எலும்பு மாலை பூண்ட மார்பினையுடைய இறைவர்.

எல்லையிலா ஆட்சி புரிந்து - ஆட்சிநாதர் என்பது இப்பதியிற் சுவாமி பெயர்; எல்லையிலா ஆட்சி - உயிர்களின் மேல் இறைவரது ஆட்சி இன்னகாலத்திற் றொடங்கிற்றென்பதும் இன்னகாலின் முடியுமென்பதும் இன்றி எல்லாக் காலத்தும் பெத்தமுத்தி யிரண்டிலும் எல்லையளவு இன்றியிருத்தல் குறித்து எல்லையிலா ஆட்சி புரிந்து என்றார். "மீளா அடிமை" (தேவா), "என்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ?" (தாயுமானார்).

அன்புற்றங்கு அமர்ந்த - அன்பு - அருள். அச்சிறுபாக்கத்தில் இறைவர் திரிபுர சங்காரகால முதல் எழுந்தருளியிருத்தல் வரலாறுதலாலும், திரிபுர சங்காரமானது உயிர்களின் மும்மலஞ் சிதைந்து ஆளும் கருத்தினை உடன்கொண்டமையாலும், தோழமை நின்றவாறு ஆட்சிக்குறிப் பாதலாலும் எல்லையிலா ஆட்சி புரிந்து அன்புற்றங் கமர்ந்த என்றார். 1182

3031. ஆதிமுதல் வரைவணங்கி "யாட்சிகொண்டா" ரெனமொழியுங்
கோதிறிருப் பதிகவிசை குலாவியபா டலிற்போற்றி,
மாதவத்து முனிவருடன் வணங்கிமகிழ்ந் தின்புற்றுத்
தீதகற்றுஞ் செய்கையினா ரினிதுள்ளங் கமர்ந்தருளி, ககஅங

3032. ஏறணிந்த வெல்கொடியா ரினிதமர்ந்த பதிபிறவும்
நீறணிந்த திருத்தொண்ட ரெதிர்கொள்ள நேர்ந்திறைஞ்சி
வேறுபல நதிகானங் கடந்தருளி, விரிசடையில்
ஆறணிந்தார் மகிழ்ந்ததிரு வரசிலியை வந்தடைந்தார். ககஙூச

3031 (இ - ள்) ஆதி முதல்வரை வணங்கி - ஆதி முதல்வராகிய இறைவரை வணங்கி; "ஆட்சி கொண்டார்" என...போற்றி - "ஆட்சி கொண்டார்" என்று கூறும் மகுடத்தையுடைய குற்றமில்ல திருப்பதிகத்தினைப் பண் பொருந்தி விளங்கும் திருப்பாடல்களினாற் றுதித்து; மாதவத்து...இன்புற்று - மாதவமுடைய முனிவர்க ளுடனே பணிந்து மகிழ்ச்சியடைந்து இன்புற்று; தீதகற்றும...அமர்ந்தருளி - தீமையை நீக்குதலே தமது செய்கையாக வந்தருளிய பிள்ளையார் சிலநாட்கள் அங்கே விருப்பமுடன் எழுந்தருளி யிருந்து; ககஙூஉ

3032. (இ - ள்) ஏறணிந்த...இறைஞ்சி - இடபத்தைப் பொறித்த வெற்றி பொருந்திய கொடியினையுடைய இறைவனார் இனிதாக எழுந்தருளிய பதிகள் பிற வற்றையும் திருநீறணிந்த திருத்தொண்டர்கள் அங்கங்கும் வந்து எதிர்கொள்ளச் சென்று வணங்கி; வேறு ..கடந்தருளி - மற்றும் பல நதிகளையும் கானங்களையும் கடந்து சென்றருளி; விரிசடையில்.. அடைந்தார் - விரிந்த சடையில் கங்கை யாற்றினை அணிந்த இறைவர் மகிழ்ந்து எழுந்தருளியுள்ள திருவரசிலிப் பதியினை வந் தடைந்தருளினார். ககஙூச

இந்த இரண்டு பாட்டுக்களும் ஒருமுடிபு கொண்டன.

3031. (வி - ரை) ஆதி முதல்வர் - ஆதி - "அந்தமாதி" என்றபடி எல்லா வுலகும் தம்மிடத்தின் ஒடுங்கி மீளத் தோற்றுதற்கு நிலைக்களமாக நின்றவர்; முதல்வர் - முதன்மை-இறைமை-யுடையவர்.

"ஆட்சிகொண்டார்" என மொழியும் - "ஆட்சி கொண்டாரே" எனப் பாட் டுத் தோறும் கடைமுடியும் பதிகத்தின் மகுடத்தைக் குறித்தது. கோதில் - கோது - குற்றம்; உயிர்களுக்குள்ள மலமாசினை இல்லையாக்கச் செய்யும். இசை - பதிகப்பண் ணாகிய குறிஞ்சிப் பண்ணின் இசை. துலாவிய பாடல் - குறிஞ்சிப்பண்ணின் கட்டளை பேதங்கள் பலவற்றினும் அதன் இசைத்தன்மை பெரிதும் விளங்கும் முதற்பெருங் கட் டளையின் பாடல்; பதிகம் பார்க்க. குறிஞ்சிப் பண்ணில் இப்போது ஐந்து கட்டளை களையுடைய பதிகங்கள் கிடைத்துள்ளன.

மாதவத்து முனிவர் - சிவனடியார்கள்; திருத்தொண்டர்கள். சிவபூசையே மாதவமெனப்படும். "தவமுயல்வோர் மலர்பறிப்ப" (தேவா).

தீதகற்றும் செய்கையினார் - மக்களை மயக்கினின்ற பரசமயங்களை நிராகரிக்கவும், திருநீற்றினை ஆக்கங் காணவுமே அவதரித்து அச்செயல்களையே செய்தருளும் பிள்ளை யார்; "தீதகற்ற வந்தருளும் திருஞான சம்பந்தர்" (3151) என்று இப்புராண நிறைவிற் கூறியருளுதல் காண்க.

அமர்ந்தருளி - இறைஞ்சி - கடந்தருளி - அடைந்தார் - என மேல்வரும் பாட டுடன் முடிக்க.



3032. (வி - ரை) ஏறு - இடபக்குறி - இலச்சினை - உருவம்.

பதி பிற - இவை பெரும்பேறு, திருநறுங்குன்றம், உலகூர், உலகாபுரம், கரதாடு, கிடங்கில், கிளியனூர், தேவனூர், திண்டீச்சுரம், பேராவூர், மரக்காணம், முன்னூர் முதலாயின என்பது கருதப்படும்; ஒவ்வொன்றிலும் பழைய கோயில்களும் கல்வெட்டுக

களும் உண்டு. அச்சிறுபாக்கத்தினின்றும் தென்மேற்கில் திண்டிவனம் (திண்டீச்சரம்) கற்சாலை வழியாய் 17 நாழிகையளவில் அடையத்தக்கது. அங்குநின்றும் தென்கிழக்கில் புதுச்சேரி செல்லும் கற்சாலையில் 15 நாழிகையளவில் உள்ளது அரசிலி. இவ்வழியன்றித் திண்டிவனத்தினின்றும் கிழக்கில் பிரமதேசம் மரக்காணம் சென்று தெற்கில் திரும்பிப் புதுச்சேரி செல்லும் ஒரு கற்சாலை வழியுமுண்டு. இந்த வழியே திருநற்குன்றம், பெருமுக்கல் மலை, பேராவூர் என்றிவற்றை அடையலாம். பிள்ளையார் சென்ற வழி பின்கூறியது போலும் என்பது கருதப்படும். ஆயின் முன்கூறிய வழியாலும் இவற்றை அடைந்து செல்லலாம். தொண்டருடன் - என்றதும் பாடம்.

வேறு பல நதி கானம் கடந்தருளி - நதிகளும் கானங்களும் என்க. வேறு - என்பது இறைவர் விளங்கும் பதிகள் அமையாதன என்று குறிப்புப்பெற நின்றது. இவை வராக நதியின் கால்களும் பெருமுக்கல்மலைப் பிரதேசத்தினின்றும் வரும் காட்டாறுகளும், காவேரி ஏரி - மரக்காணம் ஏரி இவற்றில் சேரும் சம்பந்தமுடையனவுமாகிய நதிகளும், அந்த மலையிலப் பரப்பில் அமைந்த சிறு கானங்களுமாம். 1134

திருஅச்சிறுபாக்கம்

திருச்சிற்றம்பலம்

பண் - குறிஞ்சி - 1-ம் திருமுறை

பொன்றிரண் டன்ன புரிசடை புரளப் பொருகடல் பவளமொ டழனிறம் புரையக்
குன்றிரண் டன்ன தோளுடை யகலங் குழாய்வெண் ணூலொடு கொழும்பொடி யணி
மின்றிரண் டன்ன நுண்ணிடை யரிவை மெல்லிய லாளையோர் பாகமாப் பேணி [வா
யன்றிரண் டுருவ மாயவெம் மடிக ளச்சிறு பாக்கமா ட்சிகொண் டாரே. (1)

மைச்செறி குவளை தவளைவாய் நிறைய மதுமலர்ப் பொய்கையிற் புதுமலர் கிழியப்
பச்சிற வெறிவயல் வெறிகமழ் காழிப் பதியவ ரதிபதி கவுணியர் பெருமான்
கைச்சிறு மறியவன் கழலலாற் பேணாக் கருத்துடை ஞானசம் பந்தன தமிழ்கொண்
டச்சிறு பாக்கத் தடிகளை யேத்து மன்புடை யடியவ ரருவினை யிலரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :— இறைவர் திருஅச்சிறுபாக்கத்து எல்லையிலா ஆட்சி புரிந்த தன்புற்று மகிழ்ந்து எழுந்தருளியுள்ளார் (3030 பார்க்க).

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பவளமொடு அழல்நிறம் புரைய - பவளமும் அழலும் தமது நிறத்தினை ஒக்க; கொழும் பொடி - திருநீறு, ஓர் பாகமாப் பேணி அன்றிரண் டுருவமாய - சங்காரத்தில் உலகங்களை யெல்லாம் தம்முள் அடக்கி ஒன்றாய் நின்ற சிவம், புனருற்பவத்தின் பொருட்டுச் சத்தியைச் சங்கற்பித்துப் பின் சிவம் சத்தி என இரண்டுருவாகிய என்ற சிருட்டித் தொடக்கத்தை கூறியவாறு ; இதுக் திரிபுரமெரித்த தோற்றத்தை நின்ற வரலாற்றின்ற சங்காரமும், எல்லையிலா ஆட்சி புரிந்து அன்புற்று மகிழ்ந்திருந்தமையால் மறுசிருட்டியும் குறிப்பிற் பெறவைத்துக் கூறியருளியமை கண்டுகொள்க; ஆட்சி கொண்டார் - தலத்தின் இறைவர் பெயராகும்; —(2) ஊன் நயந்துருக - உருகியபோது என்றும், உருகும்படி என்றும் உரைக்க நின்றது, உச்சிமேல் உறைபவர் - பிரமரந்திர மெனும் 1000 இதழ்த் தாமரையில் வீற்றிருப்பவர். "என்னிடைக் கமல மூன்றினுட் டோன்றி யெழுஞ்செழுஞ் சுடரினை" (சேந்தனார் திருவிசைப்பா - திருவீழி - 4); "என்றலையி னுச்சி யென்றும் தாபித் திருந்தானை" (தேவா - அரசு - தாண் - திருவால - 10); ஒன்று - விடை ;—(3) பிறவியிற் சேரார் - "ஒன்றென்ற தொன்றேகாண்" (போதம்) என்ற பதிப்பு

பொருள ; பசுக்களாகிய ஏனை யுயிர்கள்போலப பிறவியிற சோாதவர் ; இயல்பாகவே பாசஙகளி னீஙகியவராதலின எனபது பிணியிலர் கேடிலர் - கேடு - சாக்காடு ; இறபபு. பிணி - பாசம்-பிணிபபு. பிணியிலராதலின பிறவியிற சேரார - கேடும் இலா எனறு பிணியிலா எனபதனை முனனும் பினனும கூட்டுக. தம்மை அடைந்தார்க்குப பிணியும கேடும இலலையாகச செய்பவா எனறு கொள்ளலுமாம ; ஆர்நுள் மாலை ஆடுவர் - இருள் - உலகம சஙகரிககபபட்ட ஊழி ; ஆடுதல் - புனருற்பவஙகுறிதது ஆடல ; அன்றிரண் டுருவமாய (1) என்ற கருதது ;—(4) மைம்மலர்க் கோதை - கோதை - மாலை ; மை - கரிய வண்டுகளைக் குறிததது ; மலர் - ஈணடுத் திருவடையாளமாகிய கொனறை ; மைம்மலர் - காருககுரிய முலலை நிலத்து மலர் என்றலுமாம். "கொனறையந தார்" (7 பாட்டும) பாாக்க. "கணணி காாநறுங கொனறை" ; தமிழ்ச் சொலும் வடசொலுந் தாணிழற் சேர - இவவிரு மொழிகளபற்றிய பிணங்கிய பூசலிடுவோா இததிருவாககினைக கருதிப பிணககொழிவாராக !

"மாரியுங கோடையும வாாபனி தூஙகின, ஏரியு நினறங கிளைக்கின்ற காலதது,
ஆரிய முநதமி ழும்முடனே சொலலிக, காரிகை யாாககுக கருணைசெய் தானே"

என்ற திருமூலா திருமந்திரமும் காணக ; புனருறபவததினபோது இருமொழிப் பொருளும ஞானசததி கிரியாசததிகளாகிய இரணடு தாமரைகளினினறும தோற்றுவிப பாா எனபாா தாணிழற் சேர எனறா ; தாணிழலினினறும சேர - வெளிவர எனக ; காரிகையார்ககு எனற திருமநதிரமு மிககருததது ; இதனால ஒடுங்கும காலத்து இவையிரண்டும அததிருவடிகளுள ஒடுஙகும எனபதும பொருளாம். அம்மலர்க் கொன்றை-மொழிகள் தோறறுதறகுக காரணமாய் நின்ற குடிலை என்னும் பிரணவத்தின உருவாய்ப பொருநதும அந்த எனறு அகரம் முன்னறி சுட்டு ; இககருததுக் காட்ட இபபாட்டினை மைமமலாக கோதை மாாபினா என்று தொடஙகியதுமென்க ; தலவிருட்சம கொனறையாதற் சிறபபுரிமையும காணக ;—(5) விண்ணுலகம் - முன உலாவிக குறைவுபட்டடைந்த என்றும், பினனர் உலாவுதல பெறும என்றும உரைககினறது; ஏத்து அரவங்கள் - துதி செயயும ஒலி ;—(6) நீழல் - ஒளி ; ஆடரவாட ஆடும் - "புடைசூழநத புலியதணமே லரவாட வாடி" (திருததொணடத தொகை - 9) ,—(7) கொன்றை . . . .வன்னி - இறைவா பூசனைககாகும் இலை-மலர்களைக கூறுதல காண்க. கொன்றை - கூவிளம (விலவம), மலா (தாமரை), மல்லிகை - எருககு - முருககு - மகிழ - வன்னி - இவறறைத திருநநதனவனஙகளில வைதது வளர்ததுப பயனபடுததல சிறநத சிவபுணணியமாம ; கூவிள மலர் எனறலும பொருநதும். இளவன்னி வனனித தளிா ; "நீரோடு கூவிளமும" (பின்) எனற தேவாரமும், "வனனி கொனறை" (240) எனற திருபபாட்டும், பிறவும இங்கு நினைவுகூாதறபாலன. நலம் பகர்தல் - இவறறைப புனைநத வழிபாட்டின பயனை விளக்கிநிற்றல ; அழகாதல் எனறலுமாம ;—(8) பச்சமும் வலியும் - பச்சம் - அனபுவைததுச செயத தவம் ; வலி அதனாற பெறற வரததின வலிமை. அச்சமும் அருளும் - முன்னே அச்சமும பினனே அருளும. அச்சம் - தலை தோள நெரிய வைததமையாலும் ; அருள் - நாளும வாளும கொடுததமையாலுமாம் ;—(9) தங்கள் ஆற்றலால் - தாம காணபேம் என்ற தமது பசு போதததால் ; காணாாய - காணபபடமாட்டாதவராகிய ; ஆறற காணும்வகை முன கூறியருளினர். அவை நோற்றல - வேட்டல் - நுகர்புகர் சாநதமோ டேநதிய மாலைக கூறறுடைமை எனறிவை ; இன்னவாறு செய்யாராயின் எயதலாகாததோர் இயல்பினை உடையார் எனக. ஓர் - தனிதத ; ஒரும் எனறலுமாம ; இவ்வியல்பினராதலின மாலும நானமுகனும தம்மாற்றலாற் காணாாயினர் என்பது ;—(10) ஓதியும் கேட்டும் உணர்வினை யிலாதார் - கல்வி கேள்வி என்ற

இரண்டுணர்வு மில்லாதவர்கள் ; உள்கலாகாதது ஓர் இயல்பு - நினைக்கவும் எட்டாத இயல்பு. கமல மாமதிபோல் - ஆய - கமலம்போன்ற அழகும் மதிபோன்ற தண்மையும் உடையா ; ஆதியும் ஈறும் ஆய - "அந்தமாதி" ;—(11) மை - நீலநிறம் ; போர்வைகயிற் றவளைவாய் நிறையக் குவளைமலர் கிழிய - எனக. பைந்த றா - புதிய தேன ; இறால்போல எறி. இறால் - தேன் கூடு கைச்சிறு மறியவன் கழலலாற் பேணுக் கருத்துடை ஞானசம்பந்தன் - "கொன்றையா னடியலாற் பேணு, வெம்பிரான சம்பந்தன்" (திருத்தொண்டத் தொகைக்குரிய அகச்சான்று).

தலவிசேடம் —திருஅச்சிறுபாக்கம் - தொண்டை நாட்டின் 29-வது பதி ; பாண்டிய நாட்டு அரசன் ஒருவன் தனது நாட்டில் தலந்தோறும் தாபித்தலின் பொருட்டுக் கங்கையினின்றும் மணல் முதலியவற்றைக் கொணர்ந்த வண்டிகள் இத்தலத்தின் அருகில் மேற்செல்லாது தடைபட்டு நின்றன என்றும், அவற்றை மேலே செலுத்த அச்சுக்கள் முறிந்துவிட்டன என்றும், அதன்மேல் அசரீரியினால் அவன் உண்மை யுணர்த்தப்பெற்று இப்பதியிற் றிருப்பணி செய்து போந்தனன் என்றும் வரலாறுகள் கேட்கப்படும். அச்சு முறிந்த இடம் வண்டிக்குப்பம் என்று இன்றும் வழங்குகின்றது. வண்டிகளின் அச்சுமுறிந்த காரணத்தால் இத்தலம் இப்பெயர் பெற்றதென்பர். கோபுர வாயிலுக்கு நேராகப் பாண்டியன் தாபித்த இலிங்கமும் (உமையாட்சீநாதர்) அம்மை - மெல்லியலாளும் இருக்கின்றனர். திரிபுர சம்மாரத்தின்போது இறைவர் ஏறிய பூமிததேர் அச்சு முறிந்த சரிதம் காரணமாகக் கூறுவாருமுண்டு. "தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலு, மச்சு முறிந்ததென் றுந்தீபற" (திருவாசகம்) திருமூலட்டான மூர்த்திகள் இரண்டு சந்நிதிகள் உண்டு. கௌதமர், கண்ணுவர் பூசித்ததென்பர். பதிகம் முதற்பாட்டில் "அன்றிரண் டுருவ மாயவெம் மடிகள்" என்பது இக்குறிப்பென்பாரு முண்டு. சுவாமி - ஆட்சிநாதர் (பதிகம் பார்க்க) - பாக்கபுரேசர் ; அம்மை - சுந்தரநாயகி ; தீர்த்தம் - தேவதீர்த்தம் ; வடக்குச் சுற்றில் தலமரம் - கொன்றை, பதிகம் 1. சங்க தீர்த்தம் (கிணறு) கோயிலுக்கு வடகீழ் சிறு தூரத்தில் சங்கு தீர்த்தம் என்னும் மற்றொரு தாமரைக் குளம் ;

இது அச்சிறுபாக்கம் (S. I. R.) நிலையத்தினின்றும் மேற்கில் ½ நாழிகை யளவில் உள்ளது.

3083. அரசிலியி லமர்ந்தருளு மங்கணர சைப்பணிந்து
பரசி,யெழு திருப்புறவார் பனங்காட்டூர் முதலாய
விரைசெய்மலர்க் கொன்றையினார் மேவுபதி பலவணங்கித்
திரைசெய்நெடுங் கடலுடுத்த திருத்தில்லை நகரணைந்தார். ககஅரு

(இ - ள்) அரசிலியில...பரசி - திருவரசிலியினகண் விரும்பி எழுந்தருளும் அங்கண்மையுடைய அரசராகிய இறைவரைப் பணிந்து துதித்து ; திருப்புறவார் பனங்காட்டூர்...வணங்கி - திருப்புறவார் பனங்காட்டூர் முதலாக மணமுடைய கொன்றை மலரை அணிந்த இறைவர் எழுந்தருளிய பதிகள் பலவற்றையும் வணங்கிச் சென்று, திரைசெய ..அணைந்தார் - அலைகளையுடைய நீண்ட கடல் சூழ்ந்த திருத்தில்லை நகரினை அணைந்தருளினார்.

(வி - ரை) அங்கண் அரசு - அங்கண்மை - அளியுடைய அருட்டன்மை. பரசுதல் - பரவுதல் ; போற்றுதல். எழு - மேன்மையுடன் ஓங்கும் சிறப்புடைய.

பதி பல - இவை திருத்தில்லைநகா சாருமளவும் இடையிலுள்ள பற்பல பதிகள். இவை திருவக்கரை - திருவடுகூா - திருவிரும்பை மாகாளம் - திருவாமாத்தூர் - திருவதிகை - திருச்சோபுரம முதலாயின எனபது கருதபபடும். இவறறுட் பல முன்னா இவ் யாததிரை தொடஙகிவரும் வழியிற் றெழுபபட்டன (2861 பார்க்க). பதிகஙகள் ஆணடுத் தரப்பட்டன.

திருத்தில்லை நகர் அணைந்தார் - நகர் அணைந்தார் - நகரை நோக்கிச் சென்றருளினா எனக. திருஎல்லை சேய்ததாகிய இடம நகா எனபபட்டது.

கடலுடுத்த - கடல அணிமையாக அமைநத.

அரசிலியை—என்பதும் பாடம். 1135

திருப்புறவார் பனங்காட்டூர்

திருச்சிறறமபலம் பண் - சீகாமரம் - 2-ம் திருமுறை

விண்ண மாந்தன முமம திலகளை வீழ வெஙகணை யாலெய் தாய்விரி
பண்ணமர்ந தொலிசோ புறவார் பனங்காட்டூர்ப
பெண்ண மர்ந்தொரு பாக மாகிய பிஞஞ காபிறை சோ நுதலிடைக
கண்ணமர்ந தவனே கலநதார்க் கருளாயே. (1)

மையி ஞாமணி போன்மி டறறனை மாசில வெணபொடிப பூசு மார்பனைப
பையதேன பொழிலசூழ புறவாா பனஙகாட்டூர்
ஐய னைப்புக ழான காழியு ளாயந்த நானமறை ஞான சமபநதன்
செயயுள பாடவல்லாா சிவலோகஞ சோவாரே. (11)

திருச்சிற்றம்பலம

பதிகக் குறிப்பு :—திருப்புறவார் பனஙகாட்டூரப பிஞஞகனே - சங்கரனே - அடைநதாாக்கருளாயே என்று அடியார்களின் பொருட்டு இறைவரை வேணடியது; "எம்பலிப பாாகட் கிரஙகு கணடாய்" (அரசுகள்).

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) விண் அமர்ந்தன - வானிற் பறக்கும் தனமையுடையனவாகிய; கலந்தார் - சிததததை உனபால வைதது அனபாற கூடியவாகள்; —(2) காதயல் - குழை துள்ள எனக; துள்ளுதல - அசைதல;—(4) சாய்ந்து - முடிசாயநது தாவி;—(5) சேருச் சேய - செருச செயதல்போலத் துளள;—(7) விரல் - காட்டி - விரியும் - காநதள பெணகளின மெலவிரலபோல அலா எனக;—(8) "எம்பெருமான்" என்பவர்க்கு - எமது பெருமானே எனறு துதிககும அனபாகளுக்கு;—(9) எந்து இளம் - ஏநதும் என்பது எதுகை நோககி எந்து என நின்றது. இளமை - மிகக கரிதாகுமுன இருககும நிறம் குறித்தது; கந்தம் - புகழ்;—(10) நீணம்ஆர் முருகு - சேய்மையிலும வீசும் மணமுடைய தேன்; நீளம எனபது நீணம் என நின்றது; "நீணுலகெலாம" (தேவா) எனுறபோல; ?; "தேனபூ மணஙகணடு" (திருமந.) நக - இகழ. தலைஊண் - தலைஓட்டில் பிசசை புக; உரியவன் - தன்மையுடையவன்.

தலவிசேடம் :—திருப்புறவார் பனங்காட்டூர் - நடுநாட்டுள 20-வது பதி. இப்போது பனையபுரம் எனறு வழங்குவது. புறாவின பொருட்டு அதன எடை அளவு தனது தசையினை அரிநதிட்ட சிபிச சககரவர்த்திக்கு அருள செயத பதி; சிபிச சக்கரவர்ததி தம் கணணைப பறிததிட்டதும் புறாவின எடை சமமாகி இறைவர் வெளிப்பட்டதனால சுவாமிக்கு நேத்திரோத் தாரகேசுவரர் என்று பெயர். சூரியனை முன்னிட்ட கணக்குப்படி வரும் ஆண்டுதோறும் ஆண்டு தொடஙகி முதல் ஏழு நாட்

களும் உதயத்தில் சூரியபூசை நிகழ்வது இன்றும் காணலாம்; அந்நாட்களில் முதலில் சூரியனது கதிர்கள் முன்னர்ச் சுவாமிமேலும், பின்னர் அம்மையாரின்மேலும் நீண்டு வழிபடுதல் நேரே காணத்தக்கது; அந்நாட்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. சுவாமி - பனங்காட்டீசுவரர்; அம்மை - புறவம்மை; மரம் - பனை; பதிகம் 1. புறவின் பொருட்டுத் தசையரிந்த சிபிக்கு அருளியமையாலும் பனை தலமரமாதலாலும் இப்பதிக்கு இப்பெயர் போந்தது.

இது விழுப்புரத்தை யடுத்த முண்டியம்பாக்கம் நிலயத்தினின்றும் வடகிழக்கில் மட்சாலைவழி 2 நாழிகையளவில் திண்டிவனம் பாதையில் 1 நாழிகை சென்று பின்பு கிழக்கே 1 நாழிகையில் அடையத்தக்கது. விழுப்புரத்தினின்றும் வடக்கில் 5½ நாழிகையில் உள்ளது.

3034. எல்லையில்ஞா னத்தலைவ ரெழுந்தருள வெதிர்கொள்வார்
தில்லையில்வா ழந்தணாமெய்த் திருத்தொண்டர் சிறப்பினொடு
மல்கியெதிர் பணிந்திறைஞ்ச மணிமுத்தின் சிவிகையிழிந்
தலகுபெருங் காதலுட னஞ்சலிகொண் டணைகின்றார்; ௧௧௩௪

3035. திருவெல்லை யினைப்பணிந்து சென்றணைவார் சேணிசும்பை
தில்லை மருவிவிளங் கொளிதழைக்கும் வடதிசைவா யிலைவணங்கி
3-ம்முறை உருகுபெருங் காதலுட னுட்புகுந்து மறையினொலி
பெருகிவளர் மணிமாடப் பெருந்திருவீ தியையணைந்தார். ௧௧௩௫

3034. (இ - ள்) எல்லையில...எழுந்தருள - அளவுபடாத சிவஞானத் தலைவராகிய பிள்ளையார் எழுந்தருள (அது தெரிந்து), எதிர்கொள்வார்...பணிந்திறைஞ்ச - அவரை எதிர்கொள்வார்களாகிய தில்லைவாழந்தணர்களும் திருத்தொண்டர்களும் சிறப்புக்களுடனே நெருங்கிக் கூடிப்போந்து பணிந்து வணங்க; மணிமுத்தின்...அணைகின்றார் - அழகிய முத்துச் சிவிகையினின்றும் இறங்கிப் பெருங் காதலுடனே அஞ்சலி செய்துகொண்டு பிள்ளையார் அணைகின்றவராகிய; ௧௧௩௪

3035. (இ - ள்) திருவெல்லையினை...அணைவார் - திருவெல்லையினைப் பணிந்து மேற்சென்றணைவாராகி, சேண்...வணங்கி - நீண்ட ஆகாயத்தைப் பொருந்தி விளங்கும் ஒளி பெருகுகின்ற வடதிசைத் திருவாயிலினை வணங்கி; உருகு...அணைந்தார் - மனமுருகும் பெருங் காதலுடனே திருநகரத்தின் உள்ளே புகுந்து வேதங்களின் ஒலி பெருகி வளர்தற்கிடமாகிய அழகிய மாடங்கள் நிறைந்த பெருந் திருவீதியினை அணைந்தருளினார். ௧௧௩௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3034. (வி - ரை) எல்லையில் - திருவெல்லையில் என்ற குறிப்புமாம். எதிர் கொள்வார் - எதிர்கொள்வார்களாகி - முற்றெச்சம்; எதிர்கொள்வார் - மல்கி - இறைஞ்ச என்று கூட்டுக.

தில்லைவாழந்தணர் - மெய்த்திருத் தொண்டர் - எண்ணும்மைகள் விரிக்க. இறைவருடனே மூவாயிரவர்களாதலின் தில்லைவாழந்தணர் முன் வைக்கப்பட்டனர்; முன்னரும் "தில்லைவா ழந்தண ரனபாக ருடனீண்டி" (2052) என்றது காண்க.

சிறப்பினொடு - சிறப்பு - எதிர்கொள்ளுதற்குரிய நிறைகுட முதலிய மங்கலப் பொருள்கள் (2058).

**பணிந்திறைஞ்ச-அஞ்சலிகொண்டு** - முன்னர் (2053) விரித்துக் கூறினாராதலின் இங்குச் சுருக்கிக் காட்டியருளினார்.

**அஞ்சலி கொண்டு** - கரங்களைக் கூப்பி வணங்கிய நிலையினை மேற்கொண்டு.

**அணைகின்றார்** - பிள்ளையார் என்ற எழுவாய் தொக்கு நின்றது. அணைவாராகி - முற்றெச்சம்; அணைகின்றார் - பணிந்து - அணைவார் - வணங்கி - புகுந்து - அணைந்தார் என மேல்வரும் பாட்டினுடன் முடிக்க.

**மணிமுத்தின் சிவிகை** - மணி - அழகு; மணிகளுட் சிறந்த என்றலுமாம்.

3035. (வி - ரை) திருஎல்லை - வடக்குத் திருஎல்லை. இது தில்லையின் வடக்கில் 4 நாழிகையளவில் உள்ள நிவா நதிக்கரையில் உள்ள திருவடையாளம். தெற்குத் திருவெல்லை கொள்ளிடக் கரையும், மேற்குத் திருவெல்லை வாய்க்காலும், கிழக்குத் திருவெல்லை கடற்கரையும் போல.

**சேண் விசும்பை . வடதிசை வாயிலை வணங்கி** - தில்லைத் திருநகருக்கு நான்கு திசையிலும் திருவாயில்கள் உள்ளமையாலும் பிள்ளையார் இப்போது வடக்கினின்றும் போந்தருளுகின்றமையாலும் வடக்கு வாயிலை வணங்கி உட்சென்றருளினார் இது நகரத் திருமதில் வடக்கு வாயில். சீகாழியினின்றும் முதன்முறை போந்தருளியபோது தென்றிசையிலிருந்து வந்தருளினாராதலின் "தில்லைசூழ் நெடுமதிற்றென் றிருவாயி லேரணித்தாக" (2051) என்றது காண்க.

இது பிள்ளையார் திருத்தில்லையை வழிபட்ட மூன்றாவது முறை; தொண்டை நாடு வணங்கச் சென்ற இந்த யாத்திரைத் தொடக்கத்தில் திருத்தில்லையினை வழிபட்டுப் போந்தருளியது இரண்டாவது முறையாகும் (2680).

**சேண்** - நீண்ட தூரத்துள்ள; **ஒளி தழைத்தல்** - சிவவொளி பெருக வீசுதல். இத்திருவாயில் ஆளுடைய நம்பிகள் முதன்முறை திருத்தில்லைக்குள் எழுந்தருளும் திருவாயில் என்பது "வாயிலைக் கணங்கி னுத்த ரத்திசை வாயினுண் ணெய்தி" (243) என்பதனாலறியப்படும். **உட்புகுந்து** - தில்லைத் திருநகரத்தினுள்ளே புகுந்து.

**மாடப் பெருந் திருவீதி** - தேர்வீதி; மாடவீதி. இங்குக் குறித்தது வடக்கு மாடவீதி.

**மறையின்னொலி பெருகி வளர்** - தில்லைவாழ் அந்தணர்களின் திருமாளிகைகள் பெருகி வளர்தல் அவர்களது மனைகள்தோறும் வேதம் பயிலும் ஒலி பெருகி வளர் கின்றதென்பது. வளர் - என்றது மேன்மேலும் மறைச்சிறுவர் பயில வளர்தலும் குறித்தது.

நெடுமாடம்—என்பதும் பாடம். 1137

3036. நலமலியுந் திருவீதி பணிந்தெழுந்து நற்றவர்தங்
குலநிறைந்த திருவாயில் குவித்தமலர்ச் செங்கையொடு
தலமுறமுன் றாழ்ந்தெய்தித் தமனியமா ளிகைமருங்கு
வலமுறவந் தோங்கியபே ரம்பலத்தை வணங்கினார். கககூஅ

(இ - ள்) நலமலியும்...எழுந்து - நன்மை மிகவும் செய்கின்ற திருவீதியினை நில முறப் பணிந்து எழுந்து; நற்றவர்தம்...தாழ்ந்தெய்தி - நற்றவர்களது கூட்டம் நிறைந்த திருவாயிலினைச் செங்கைகளைச் சிரமேற் கூப்பிக்கொண்டு நிலம் பொருந்த முன்னே தாழ்ந்து வணங்கிச் சென்று சேர்ந்து; தமனிய...வணங்கினார் - பொன் மாளிகையாகிய திருவம்பலத்தின் பக்கத்தே வலமாக வந்து உயர்ந்த பேரம்பலத்தை வணங்கினார்.

(வி - ரை) நலமலியும் திருவீதி - நலமாவது மாதவப்பயன்; மலிதல்-செய்து தருதல்; மிகுதியும் உளவாகுதல். "மாதவங்கள், கலகு திருவீதி நான்கும் தொழுது" (2063).

நற்றவர்தம் குலம் நிறைந்த திருவாயில் - நற்றவர் - அடியார்கள்; குலம் - கூட்டம்; நிறைதல் - நெருங்குதல்.

குவித்த செங்கையோடு தாழ்ந்து - கைகளைச் சிரமேற் குப்பியவாறே தாழ்ந்து. தமனிய மாளிகை பொன்னம்பலம்; பொன் மன்றம்.

ஓங்கிய பேரம்பலம் - மிகவுயர்ந்த பேரம்பலம் எனும் மன்று, பொன்னம்பலத்தினை அடுத்துத் தனியே உள்ள பெருமன்றம்.

திருஎல்லை - (மதில்) வாயில் - திருவீதி - திருவாயில் - பேரம்பலம் என்ற இவற்றையெல்லாம் முறையே தனித்தனி வணங்கிய பின்னரே பொன்னம்பலத்தைச் சார்தலும் வழிபடலுமாம் என்ற குறிப்பும் காண்க. 1138

3037. வணங்கிமிக மனமகிழ்ந்து, மாலயனுந் தொழும்பூத
கணங்கணமிடை திருவாயில் பணிந்தெழுந்து, கண்களிப்ப
அணங்குதனி கண்டருள வம்பலத்தே யாடுகின்ற
குணங்கடந்த தனிக்கூத்தர் பெருங்கூத்துக் கும்பிடுவார், ௧௧௩௯

3038. தொண்டர்மனம் பிரியாத திருப்படியைத் தொழுதிறைஞ்சி
மண்டுபெருங் காதலினால் நோக்கிமுக மலர்ந்தெழுவார்
அண்டமெலா நிறைந்தெழுந்த வானந்தத் துள்ளலைந்து
கண்டபே ரின்பத்தின் கரையிலா நிலையணைந்தார். ௧௧௪0

3037. (இ-ள்) வணங்கி...எழுந்து - (திருப்பேரம்பலத்தை) வணங்கி மனம் மிக மகிழ்ந்து மாலும் அயனும் தொழுகின்ற சிவ பூதகணங்கள் நெருங்கிய திருவணுக்கன் திருவாயிலைப் பணிந்து எழுந்து, கண்களிப்ப - கண்கள் களிகூர; அணங்கு...ஆடு கின்ற - சிவகாமியம்மையார் தனியே கண்டருளும்படி திருவம்பலத்தில் ஆடல் புரிகின்ற; குணங்கடந்த...கும்பிடுவார் - குணங்களைக் கடந்த மெய்ஞ்ஞான வெளியில் தனிக் கூத்தராது பெரிய திருக்கூத்தினைக் கும்பிடுவாராய்; ௧௧௩௯

3038. (இ - ள்) தொண்டர் மனம்...தொழுது இறைஞ்சி - திருத்தொண்டர்களுடைய மனத்தினின்றும் பிரிதலில்லாது விளங்கும் திருக்களிற்றுப்படியினைத் தொழுது வணங்கி; மண்டு...மலர்ந்தெழுவார் - செறிவுடைய பெருங் காதலினாலே நோக்கி முகம் மலர்ச்சி பெற்று எழுவாராகிய பிள்ளையார், அண்டமெலாம்... ...அலைந்து - அண்டங்களெங்கும் நிறைந்து எழுகின்ற சிவானந்தப் பெருக்கினுள்ளே அலைந்து; கண்ட... அணைந்தார் - அனுபவத்துட் கண்ட பேரின்பத்தினின்ற கரையற்ற நிலையினை அணைந்தருளினார். ௧௧௪0

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3037. (வி - ரை) மால் அயனும் தொழும் பூதகணங்கள் - பூதகணங்கள் பிரம விட்டுணுக்களாலும் தொழப்படும் தன்மை வாய்ந்தவைகள். தேவர்கள் பசு வர்க்கத்துட்பட்டுப் பிறவியில் வருவோர். சிவபூதகணங்கள் அவ்வாறன்றிச் சிவத்தவம் விளங்கப்பெற்ற முத்தான்மாக்கள்; அன்றியும் தம்மை வழிபடுவோர்களைச் சிவன்பால் வழிப்படுத்தி உய்யச் செய்யும் கருணையும் ஆற்றலும் உடையவர்கள்; இவர்களால் விடுக்கப்பட்டபோதன்றித் தேவர்கள் திருவாயிலிற் புகும் உரிமையிலர்; ஆதலின்

இவர்களைத் தொழுது திருவாயிற்புறம் காத்திருக்கின்றனர் என்பதுமாம். திருமலைச் சிறப்பிலுரைத்ததனைப் பார்க்க.

அணங்கு கண்களிப்பக் கண்டருள எனக. அணங்கு - சிவகாமியம்மையார்; தனி - ஐயனது பெருங்கூத்தை அம்மையாரையன்றி ஏனை உயிர்வருக்கங்கள் எவையும் காணும் வலியிலர். ஆதலின் தாம் தனியே கண்டு அதன் பயனை உயிர்களுக்கு அருள்கின்றார். "பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென, நோயுண் மருந்து தாயுண்டாங்கு" (குமரகுருபரர்); ஊழியில் உலகங்கள் யாவையும் இறைவனுள் ஒடுங்கும்; அவை புனருற்பவமாதற் பொருட்டு இறைவர் ஆடுவர்; அக்கூத்திற் சத்தியைச் சங்கற்பித்து ஆடுதலாற் சத்தி தோன்றும். அதன் பின்னே சத்தியினின்றும் ஏனைய எல்லாம் தோன்றுவதன் முன் சத்தி தனியே அக்கூத்தினைக் கண்டருளுவர்; அதன் பயனாகவே உலகம் தோன்றும் எனக.

கண்களிப்பக் கும்பிடுவார் - என்று கூட்டியுரைத்தலுமொன்று.

அம்பலம் - சிற்றம்பலம்; சிதாகாயம்; ஞானாகாயம். இது பேரம்பலத்தின் வேறாய்ப் பொன்னம்பலம் எனப்படும்.

குணங்கடந்த தனிக்கூத்தர் - குணங்கள் தோற்ற அவற்றினின்றும் உலக தத்துவங்கள் தோன்றும்; குணங்கள் உருப்பட்டுத் தோன்றுமுன்னிலைக் கப்பாற்பட்டு இறைவரது கூத்து விளங்கும் எனக "பூதமுங் கரணம் பொறிகளும் புலனும் பொருந்திய குணங்களோர் மூன்றும், நாதமுங் கடந்த வெளியிலே" (பட்டினத்தார் - திருவிசைப்பா).

பெருங்கூத்து - பயனாற் பெரியது; "யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு"ம் தன்மையதாதலின் பெருங்கூத்து; "தானுடத் தசையாடும்" என்பவாதலின் ஐயன் ஆட உலகெல்லாம் ஆடி யியங்குகின்றன.

தனி கண்டருள - தனிக்கூத்தர் - பெருங்கூத்தர் - அடைமொழிகளின் சிறப்பினை உன்னுக.

தனிக் கூத்தர் - தனி - தனக்குவமை யில்லாத; வேறெவரும் சிருட்டிப்படாது தாமே தனியாய் நின்ற நிலையின் கூத்து; "தானே தனிமன்றிற் றனனத் தனிநித்தம்" (திருமூலர்).

கும்பிடுவார் - கும்பிடுவாராகி; முற்றெச்சம். கும்பிடுவார் - மலர்ந்தெழுவார் - உள் அலைந்து - நிலையணைந்தார் என வரும் பாட்டுடன் முடிக்க. 1139

3038. (வி - ரை) தொண்டர் மனம் பிரியாத திருப்படி - திருக்களிற்றுப்படி. இஃது திருவைந்தெழுத்தின் உருவமாகியது; இதன் தலையில் இறைவர் விளங்குகின்றார். திருவைந்தெழுத்துத் தொண்டர்களால் எப்பொழுதும் இடையறாது தியானிக்கற்பாலது என்ற நிலையில் இத் திருப்படிகள் விளங்குவன. "செய்தவம் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான் றிருக்களிற் றுப்படி மருங்கு" (251); "தாழ்ந்தார் திருக்களிற்றுப் படிக்கீழ்" (2071).

நோக்கி - ஊன்றிய - அழுந்திய - பார்வை செய்து; "ஒன்றி யிருந்து நினைமின்கள்" (தேவா - அரசு).

அண்டமெலாம் நிறைந்தெழுந்த ஆனந்தம் - புவனகோடிகள் எல்லாவற்றினும் நிறைவாகிய சிவனது ஆனந்தமாகிய அருள் நிறைவு. "அண்டப் பரப்பெங்கு மண்டிப் பரந்தபே ரானந்த வெள்ளம் வாழ" (அமுதாம் - பிள்) என்று எமது மாதவச் சிவஞான முனிவர் இதனை உரை செய்தமை காண்க. இது சிதாகாய நிறைவு,

"அண்டங்க ளோரேழு மம்பொற் பதியாக" (திருமந் - 9 - 101) என்பது முதலி யவை பார்க்க.

ஆனந்தத்துள் அலைந்து - ஆனந்தமாகிய பெருவெள்ளத்திலுள் அகப்பட்டு அலைந்து; ஏகதேச உருவகம். அலைந்து - அலைதலால். சிவானந்த நிறைவிலே தாம் ஒன்றுபட்டுத் தம்மை வேறு காணாராய் அதுவேயாகி நின்றமையால் என்க.

கண்ட பேரின்பத்தின் கரையில்லா நிலை - கண்ட - அநுபவத்திற் கண்ட; "அதிசயம் கண்டாமே"; "அந்தமிலா வானந்தம் அணிகொடில்லை கண்டேனே" முதலிய திருவாசகத் திருவாக்குக்கள் காண்க. கரையில்லா நிலை - எல்லை காண முடியாத; இன்னபடி என்று அளக்கலாகாத. "அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்,...சுகத்தைச் சொல்லெனிற் சொல்லுமா றெங்ஙனே" (திருமந்திரம்); இந் நிலைகள் முன் (2057 - 2062) உரைக்கப்பட்டமை காண்க. ஆளுடைய பிள்ளையார் தில்லையில் திருநடங் கும்பிட்ட மூன்றாவது முறை இது. முதன் முறையில் திருவம்பலத்தின் இயல்பும், அவர் தரிசித்த ஆனந்த ஒருபெருந் தனிக்கூத்தி னியல்பும், அதனை அவர் கண்டு கும்பிட்டவாறும் விளக்கியருளிய ஆசிரியர், இவ்வானந்த நடனதரிசனத்தை முடிந்த பயனாய் முடித்துக் காட்டிய திறம் கண்டு களிக்கற்பாலது. 1140

3039\. அந்நிலைமை யடைந்துதிளைத் தாங்கெய்தாக் காலத்தின்
மன்னுதிரு வம்பலத்தை வலங்கொண்டு போந்தருளிப்
பொன்னணிமா ளிகைவீதிப் புறத்தணைந்து போதுதொறும்
இன்னிசைவண் டமிழ்பாடிக் கும்பிட்டங் கினிதிருந்தார். ககசக

(இ - ள்) அந்நிலைமை அடைந்து திளைத்து - முன்பாட்டிற் கூறிய அந்நிலைமை யினை அடைந்து அவ்வநுபவத்தில் மூழ்கியிருந்து; ஆங்கு...போந்தருளி - அங்கு எய்தாத காலத்திலே, நிலைபெற்ற திருச்சிற்றம்பலத்தினை வலமாக வந்து புறத்திற் சென்றருளி, பொன்னணி...புறத்தணைந்து - பொன்னாலணியப்பட்ட மாளிகைகளை யுடைய திருவீதியின் புறத்திற் சேர்ந்து; போதுதொறும்...இனிதிருந்தார் - காலந் தோறும் இனிய இசையுடன்கூடிய வண்மையுடைய தமிழ்ப்பதிகங்களைப் பாடியருளிக் கும்பிட்டுக்கொண்டு அங்கு இனிதாக எழுந்தருளி யிருந்தனர்.

(வி - ரை) அந்நிலைமை அடைந்து திளைத்து - அகரம், முன்பாட்டிற் கூறிய அந்த என முன்னறிசுட்டு. அக்கரங்களுள் அகரம்போல நிறைந்த சிவானந்த நிலைமையினில் நிறைந்தாராகும் நிலை என்று குறிப்புப்பெற அந்நிலைமை - அகரத்தின் நிலை - என்றுரைத் தலுமாம்.

எய்தாக் காலம் - வழிபாட்டுக்குரியதல்லாத காலம். திருக்கதவம் திருக்காப்பிடு கின்ற உச்சி - திருவர்த்தயாமம் முதலிய காலங்களின் பின் உள்ள காலம் "காலமெல் லாந் துதித்திறைஞ்சி" (2062); மேல் போதுதோறும் என்பதும் காண்க

மாளிகை வீதி - தில்லைவாழந்தணர்களின் மாளிகைகள் நிறைந்த திருவீதி; மாடவீதி. "குன்றனைய மாளிகைக டொறுங்குலவும் வேதிகைகள்" (1064).

இன்னிசை வண்தமிழ் - இப்பதிகங்கள் கிடைத்தில!

கும்பிட்டு அங்கு இனிதிருந்தார் - கும்பிடுதலே பிறவிப் பயனாம் என்பதை உலகுக்கு அறிவுறுத்தி உபதேசித்தருளிய ஞான ஆசாரியராதலின் அவ்வாழ்வு பெற்றமையின் இனிது இருந்தார் என்க. "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே...வழிபடு மதனாலே" (திருவலஞ்சுழி) என்றருளிய பிள்ளையாரது திருவாக்கு ஈண்டுச் சிந்திக்கற் பாலது.

அங்கு - அத்திருப்பதியின் புறத்து அமரக்கூடிய இடத்திலே என்க. "அங்கண், அல்குந் திறமஞ்சு வார்சண்பை யாண்டகையார்" (2063); "திருவேட் களஞ் சென்று...வைகி யருளுமிட மங்காக" (2064) என்று முன் கூறியவைகளை நினைவு கூர்க.

மன்னு திருவம்பலம் - "மெய்ஞ்ஞானமே யான வம்பலம்" (2058) என்றபடி ஞான நிறைவாதலின் யாண்டும் பரவி நிறைந்ததாயுள்ளது.

புறத்தமர்ந்து—என்பதும் பாடம். 1141

3040. திருந்தியசீர்த் தாதையார் சிவபாத விருதயரும்
பொருந்துதிரு வளர்புகலிப் பூசுரரு மாதவரும்
"பெருந்திருமா லயன்போற்றும் பெரும்பற்றப் புலியூரில்
இருந்தமிழா கரரணைந்தா" ரெனக்கேட்டு வந்தணைந்தார். ௧௧௪௨

(இ - ள்) திருந்தியசீ...மாதவரும் - உலகம் திருந்துதற்குக் காரணராகிய சிறப் பினையுடைய தாதையாராகிய சிவபாதவிருதயரும், பொருந்தும் சைவத்திரு வளர்தற் கிடமாகிய சீகாழியின்கண் வாழும் மறையவர்களும் சிவனடியார்களும்; "பெருந் திரு...அணைந்தார்" எனக் கேட்டு - "பெரிய திருவினையுடைய திருமாலும் பிரமதேவ னும் போற்றுகின்ற பெரும்பற்றப்புலியூரின்கண்ணே பெரிய தமிழாகரராகிய பிள்ளையார் வந்தணைந்தனர்" என்று கேட்டு; வந்தணைந்தார் - தாம் அங்கு வந்து சார்ந்தனர்.

(வி - ரை) திருந்திய சீர் - திருந்திய-உலகம் திருந்திய என்க. உலகம் திருந்துத லாவது பரசமயங்கள் ஆக்கிரமித்து மேலெழுந்து கேடு செய்யாது நிராகரிக்கப்பட்டு அவ்வவற்றின் நிலையில் அமைந்து நிற்றலும், சைவம் ஓங்கித் திருநீற்றினொளி விளங்கி உண்மை நிலையில் நிற்றலுமாம்; சிவபாதவிருதயர் மனையறத்தி லின்பமுறுதல் ஒன் றும், பரசமய நிராகரித்து நீறு ஆக்குதலால் உலகம் திருந்துதல் ஒன்றுமாக இரண்டு பயன்களைக் குறித்து மகவு வேண்டித் தவம் செய்தனர்; அவ்வாறே பிள்ளையாரை மகவாகப் பெற்றனர். மகப் பெற்றமையினாலே "தாதையார்" எனப் பெற்றனர். "ஈறில் பெருந்தவ முன்செய்த 'தாதை' யெனப்பெற்றார்" (1983); இவ்விரண்ட னுள் உலகந் திருந்துதலாகிய பெரும் பயனையே முற்பட நினைந்தனர் என்பது "மனை யறத்தி லின்பமுறு மகப்பெறுவான விரும்புவார், அனையநிலை தலைநின்றே...முன் பர சமய நிராகரித்து நீறாக்கும், - காதலினை" (1917) என்றதனா லறியலாம்; ஈண்டுப் பிள்ளையாரது, பாண்டிநாடு தொண்டைநாட்டு யாத்திரைகளின் நிறைவினோடு அப் பெரும்பயனும் நிறைவெய்தி உலகமும் தமிழ்நாடு முழுமையும் திருந்தமுற்று விளங் கின; இனிப் பிள்ளையாரது திருமணமும் இறைவன்றிருவடியிற் புக்கொன்றி யுடனுத லுமே எஞ்சி நிற்பன. இவையே இனித் தாதையாருக்குப் பிள்ளையார் மனையறத்தி லின்பமுறு மகவு எனப்பெற்ற நிலையிற் செய்ய நிற்பன; ஆதலின் இக்கருத்துக்களை யெல்லாம் உள்ளடக்கியே, வாளா கூறாது, திருந்திய சீர் என்றும், தாதையார் என றும் அடைமொழிகள் தந்து கூறியருளிய நயம் காண்க. புகலிப் பூசுரரும் என ஏனையோரை வேறுபிரித்துப் பின்வைத்ததும் இக்குறிப்பு.

பொருந்து திருவளர் புகலி - பொருந்து திரு - சைவ மெய்த்திரு; வளர் - வளர் தற்கேதுவாய் நிற்கும். திருவளர் - பூசுரர் - என்றும், வளர் மாதவரும் - என்றும் கூட்டியுரைக்கவும் நின்றது. பொருந்து திரு-என்றார் ஏனைத் திருவெல்லாம் பொருந்தா தொழிவன என்றுணர்தற்கு. பொருந்து திருவளர் என்றது, இனி, இவர்கள் எல்லா

ரும் பிள்ளையாரது திருமணத்தில் இறைவனடி பொருந்தும் திருவினை யெய்துத லிலக்குரிய தன்மைகளை வளர்க்கும் என்ற குறிப்பும் தோற்றுதல் காண்க.

மாதவர் - சிவனடியார்கள். சிவபூசையே தவம் எனப்படும். மாதவமாவது சைவத்தின் நால்வகை நெறிகளிலும் சிறந்த உறைப்புடன் ஒழுகுதல். "ஆறுவகைச் சமயத்தி லருந்தவரும்" (3150) "அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா விரதஞ் சாரு, நெறிவழி நின்ற வேடங் கீடிய தவத்தி னுள்ளோர்" (3101) என்பவை முதலியன காண்க. சிறப்புப்பற்றி "மாதவர்" பின்வைத் தோதப்பெற்றனர்.

பெருந்திருமா லயன் போற்றும் - "வரங்கிடந் தானறிலா யம்பல முன்றிலம் மாயவனே" (திருக்கோவையார்).

பெரும்பற்றப் புலியூர் - முனிவர்-தேவர் முதலிய எல்லாருக்கும் பெரும்பற்றாக உள்ள ஊர் என்பது; "பற்று நின்றுரைப் பற்று பாவமே" (பிள்ளையார்).

தமிழாகரர் - ஆகரம் - இடம்.

கேட்டு வந்தணைந்தார் - தொண்டை நாடு சென்று வணங்கித் திருமயிலருளித் தில்லையில் எய்திய பிள்ளையார், சீகாழியில் அண்மையில் எழுந்தருளுவார் என்பது தெரிந்தாரேனும், அதுவரையும் பிள்ளையாரைக் காணாது தரிக்கலாற்றாது எதிர்கொண்டு போந்தனர் என்க. இவர்களது, பிள்ளையாரைப் பிரியலாற்றாத நிலை முன்னர்த் திருவீழிமிழலையிற் சென்று கண்டு அவரைச் சீகாழிக்கு வருமபடி வேண்டியமையாலும், தாதையார் பிள்ளையாரைக் காணத் திருவாலவாயினிற் சென்றமையாலும் அறியப்படும் தாமும் திருத்தில்லை சென்று வணங்கிப் பிள்ளையாருடன் அம்பலக்கூத்தரை வணங்கும் (3041 பார்க்க) ஆசையும் துணை செய்ததென்க. "கோயே யுன்றன் கூத்துக் காணக் கூடுவ தென்றுகொலோ" (1), "அத்தா வுன்ற னாடல் காண வணைவது மென்று கொலோ" (3) (கண்டராதித்தர் - கோயில்), "எம்பிரானை யென்றுகொல் காண்பதுவே" (திருவாலியமுதனார்); "அப்பா காண வாசைப் பட்டேன் கண்டாயம்மானே" (திருவா) என்பன முதலிய திருவாக்குக்கள் உண்மையடியார்களின் உண்மை நிலையை விளக்குதல் காண்க. 1112

3041. ஆங்கவரைக் கண்டுசிறப் பளித்தருளி யவரோடுந்
தாங்கரிய காதலினாற் றம்பெருமான் கழல்வணங்க
ஓங்குதிருத் தில்லைவா ழந்தணரு முடனுக்கத்
தேங்கமழுங் கொன்றைச்சடை யார்திருச்சிற்றம் பலம்பணிந்தார்.

(இ - ள்) ஆங்கு...அளித்தருளி - அவ்வாறு வந்தணைந்த அவர்களைக் கண்டு அவர்களுக்கு மலர்ந்த முகத்துடன் இனிய மொழிகள் கூறி; அவரோடும்...வணங்க - அவர்களுடனே கூடத் தரிக்கலாற்றாத பெருவிருப்பத்தினாலே தமது பெருமானது கழல்களை வணங்குதற்கு; ஓங்கு.. உடனுக்க - திருமிக்க தில்லைவாழந்தணர்களும் உடனுக்க வரச் சென்று; தேங்கமழ...பணிந்தார் - தேன் மணம் கமழும் கொன்றை மலர் மாலை சூடிய சடையினையுடைய இறைவரது திருச்சிற்றம்பலத்தினைப் பணிந்தனர்.

(வி - ரை) ஆங்கு அவரை - ஆங்கு - அவ்வாறு வந்த அவர்களை; அவ்விடத்து என்றுமாம்.

சிறப்பு அருளி - சிறப்பாவது அவர்களை முகமன்கூறி வரவேற்று நலம் அருளுதல் என்ற பொருளில் வந்தது.

அவரோடும் - வணங்க - தில்லைவா ழந்தணரும் - உடனாக - அவர்களுடன் கூடிச் சென்று வணங்குதற்குத் தில்லைவாழந்தணரும் உடன் ஆகி வர - ஒன்றாகக்கூடி வரக் - கூடிப் பணிந்தார் என்க. கூடி என ஒருசொல் வருவித்துரைக்க.

தாங்கரிய காதலினால் - புகலியந்தணர்களும அடியவரும் உடனாகத் திருமன்று பணியப்பெற்றதனால பெருவிருப்பு மிக்கதெனபது.

திருஓங்கு என்க ; திரு - வைதிக சைவத் திரு.

திருச்சிற்றம்பலம் - ஞானாகாயமாகிய பொன்னம்பலம். 1143

3042. தேன்புகலி யந்தணருந் தில்லைவா ழந்தணரும்
அன்புநெறி பெருகுவித்த வாண்டகையா ரடிபோற்றிப்
பொன்புரிசெஞ் சடைக்கூத்த ரருள்பெற்றுப் போந்தருளி
யின்புறுதோ ணியிலமர்ந்தார் தமைவணங்க வெழுந்தருள, கககச

3043. நற்றவர்தங் குழாத்தோடு நம்பர்திரு நடஞ்செய்யும்
பொற்பதியின் றிருவெல்லை பணிந்தருளிப் புறம்போந்து
பெற்றமுயர்த் தவரமர்ந்த பிறபதியும் புக்கிறைஞ்சிக்
கற்றவர்கள் பரவுதிருக் கழுமலமே சென்றடைவார், கககரு

3044. பல்பதிகள் கடந்தருளிப் பன்னிரண்டு பேர்படைத்த
தொல்லைவளப் பூந்தராய் தூரத்தே தோன்றுதலும்
மல்குதிரு மணிமுத்தின் சிவிகையிழிந் தெதிர்வணங்கிச்
செல்வமிகு பதியதன்மேற் றிருப்பதிக மருள்செய்வார், கககசு

3045. மன்னுமிசை மொழி"வண்டார் குழலரிவை" யென்றேத்து
மின்னுசுடர் மாளிகை"விண் டாங்குவபோல் வேணுபுரம்"
என்னுமிசைச் சொன்மாலை யெடுத்தியம்பி எழுந்தருளிப்
புன்னைமண கமழ்புறவப் புறம்பணையில் வந்தணைந்தார். கககஎ

3042. (இ - ள்) தென்புகலி...போற்றி - அழகிய சீகாழிமறையோரும் தில்லை வாழந்தணர்களும அன்புநெறியைப பெருகச்செய்த இறைவரது திருவடிகளைப் போற்றி; பொன்புரி...போந்தருளி - பொன்போன்ற புரிந்த சடையினையுடைய கூத்தப்பெருமானது திருவருள விடைபெற்றுப போந்தருளி ; இன்புறு...எழுந்தருள - இன்பஞ் செய்யும் திருத்தோணியில் விரும்பி வீற்றிருந்த இறைவரை வணங்குதற்கு எழுந்தருளுவதன் பொருட்டு ; கககச

3043. (இ - ள்) நற்றவர்தம்...புறம்போந்து - நல்ல தவமுடைய அடியார் கூட்டத்துடனே கூடி, இறைவர் திருநடனம் செய்தருளுகின்ற அந்த அழகிய பதியின திருவெல்லையினைப் பணிந்தருளிப புறத்திற் போய் ; பெற்றம்...இறைஞ்சி - விடைக் கொடியினை உயர்த்திப பிடித்த இறைவர் விரும்பி எழுந்தருளிய பிற பதிகளையும் சென்று வணங்கி ; கற்றவர்கள்...அடைவார் - கற்ற பெரியோர்கள் துதிக்கின்ற சீகாழிப் பதியினையே சென்று சேர்வாராகி ; கககரு

3044. (இ - ள்) பல்பதிகள் கடந்தருளி - பல பதிகளையும் கடந்து சென்றருளி ; பன்னிரண்டு...எதிர் வணங்கி - பன்னிரண்டு பெயர்களையுடைய பழைமையாகிய வளம் பொருந்திய சீகாழிப் பதியானது தூரத்திலே காட்சிப்படுதலும் பொருந்திய திருமுத்துச் சிவிகையினின்றும் இறங்கி வணங்கி ; செல்வமிகு...செய்வார் - சிவச்

செல்வம் நிறைந்த அந்தச் சீகாழிப் பதியின் மேலே திருப்பதிகத்தினை அருளிச் செய்வாராகி ; ௧௧௪௧

3045. (இ - ள்) மன்னும்...எடுத்து - நிலைபெறற இசையினையுடைய "வண்டார் குழல்" என்னும் முதலினையுடைய திருப்பதிகத்தினைத் தொடங்கி ; மின்னு சுடர்......இயம்பி - ஒளிவீசும் சுடர்களைக் கொண்ட மாளிகைகள் "விண் தாங்குவனபோலவுள்ளன" என்ற கருத்துடைய இசையுடன் கூடிய திருப்பதிகத்தினை எடுத்துத் துதித்தருளி ; எழுந்தருளி - மேற்சென்றருளி ; புன்னை...அணைந்தார் - புன்னை மரங்களின் மணமானது கமழ்கின்றிடமாகிய சீகாழியின் புறம்பணையின் வந்து அடைந்தனர். ௧௧௪௭

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3042. (வி - ரை) அன்புநெறி பெருகுவித்த ஆண்டகையார் - கூத்தப் பெருமான் ; இறைவர். "கிரிதன்னைக் கீண்ட வாண்டகை" (திருவி).

தென்புகலி - தென் - அழகு. தில்லைக்குத் தென்றிசையிலுள்ள என்பாரு முண்டு.

அந்தணரும - அந்தணரும - தாமுமாயக் கூடி எனக. தாமுமாயக் கூடி என்பது இசையெச்சம். அன்பு நெறி - சிவநெறி ; "அன்பே சிவம்" (திருமந்)

பெருகுவித்தல் - விளக்கம் குன்றியதனை நீக்கி யாவரும் போற்றும்படி செய்தல்.

இன்புறு தோணி - இன்பத்தைத் தரச் செய்யும். உறும் - உறவிக்கும் ;

தில்லைவாழந்தணர் முன் - என்று பாடங்கொண்டு, முன் கூறியவாறன்றி, அன்புநெறி பெருகுவித்த ஆண்டகையார் என்றதற்கு அன்பின் வழியை விருத்தி செய்த பிள்ளையாரது என்றுரைப்பாரு முண்டு.

பெருக்குவித்த—என்பதும் பாடம். 1144

3043 (வி - ரை) நற்றவர் - திருத்தொண்டர்கள்.

திருவேல்லை - தென்புறத்துத் திருவெல்லை இது கொள்ளிடத் திருநதி வடகரையின் வடக்கிலுள்ளது (256 - 2044 - 2045 பார்க்க)

பிற பதி - இவை திருத்தில்லைக்கும் சீகாழிக்கும் இடையில் உள்ளவை ; 2048 பார்க்க. திருநாவுக்கரசபிரான் தில்லையினின்றும் சீகாழியை நோக்கிச் சென்றருளபவர் திருநாரையூர் பணிந்து சென்று வழிக்கொண்டு சென்றமை முன் (1444) கூறப்பட்டது காண்க. திருநாரையூர் சென்று வராது நேரே தில்லையினின்றும் சீகாழிக் கெழுந்தருளுவதாயின் இடையில் திருமயேந்திரப்பள்ளி, திருநலூர்ப் பெருமணம், திருக்குருகாவூர் முதலாயின என்பது கருதப்படும்.

கற்றவர்கள் பரவும் திருக்கழுமலமே - "கற்றவர்கள் பணிந்தேத்துங் கழுமலத்து ளீசன்" (பிள் - மேகரா - 11) ; ஏகாரம் தேற்றம்

புறம்போந்து - திருவெல்லையினைக் கடந்து அப்புறம் மேற்சென்றருளி; தில்லைப் பதியின் புறம். 1145

3044. (வி - ரை) பல் பதிகள் - இடையில் உள்ள ஊர்கள். முன் பாட்டில் கூறியவை இறைவர் எழுந்தருளிய தலங்கள்.

பன்னிரண்டு பேர் படைத்த தொல்லைவளப் பூந்தராய் - இங்குச் சீகாழிப் பதியின் தொன்மையும் வளமும்பற்றி எடுத்துக் கூறினார் ; பிள்ளையார் இங்கு அருளும் இரண்டு பதிகங்களிலும் "விண்டாங்குவ போலும்மிகு வேணுபுரம் அதுவே" என்றும், "வளங்கொள் காழி சேர்வீரே" என்றும், பதியினைப் பற்றியவையாகவே துதிக்கப்படுதல்

லாலும் என்க ; இனிப் பிள்ளையார் அருளியனவாய்க் கிடைத்துள்ள சீகாழிப் பதி பற்றிய பதிகங்களுள் இவை இறுதியானவை என்பது கருதி இவ்வாறு துதித்து மகிழ்ந் தனர் ஆசிரியர் என்பது. "பதியதன்மேற் றிருப்பதிகம் அருள்செய்தார்" என்று இக்குறிப்புக் காட்ட அருளியதும் காண்க.

**தூரத்தே தோன்றுதலும்...சிவிகை இழிந்து எதிர் வணங்கி** - இறைவரது திரு நகரம் கட்புலப்பட்டவுடனே சிவிகையினின்றும் இறங்கி நிலமுறத் தாழ்ந்து வணங்கு தல் முறையாம். **செல்வம்** - சிவநெறிச் செல்வம்.

**பதி அதன்மேல்** - திருப்பதியினைத் துதித்தல் பதிகக் கருத்தும் குறிப்புமாம்; "**வேணுபுர மதுவே**" என்ற பதிக மகுடம் காண்க.

முன்னாப் பல முறைகளிலும் (ஐந்து யாத்திரைகளிலும்) பிள்ளையார் பிறபதிகளி னின்றும் சீகாழியின்கண் மீண்டு எழுந்தருளியுள்ளாராயினும் இம்முறையில் அத் திருப்பதி தூரத்தே தோன்றியபோதே சிவிகையினின்று மிழிந்து எதிர் வணங்கி **அதன்மேற்** றிருப்பதிகச் சொன்மாலை எடுத்தியம்பி மேற்சென்றருளுகின்றார் (3045); அஃதன்றியும், அதன் புறம்பணையின் மருங்கு அணைந்து பதியினுட் புகும்போது மலர் தூபதீபங்களுடன் தொழுது ஒரு பதிகம் "காழி சேர்மின்" எனப் பாடி அதனுள்ளே புகுந்தருள்கின்றார் (3046); இனித் திருமணஞ் செய்தருள அப்பதியினின்றும் புறப் படும்போது "வளம்பதி வணங்கி"ச் சென்றருள்கின்றா (3095); இவற்றின் குறிப்பு பிள்ளையார் இனி இவ்வுலக நிலையில் இப்பதியினுள் மீண்டும் எழுந்தருளுகின்றதில்லை எனபதனைக் காட்டும் திருவருட் குறிப்பாகும். இதுவே பிள்ளையார் சீகாழியில் எழுந் தருளும் இறுதி முறையாதலும் காண்க. "நம்பொருணம் மக்க ளென்று நச்சி யிச்சை செய்துநீ, அம்பர மடைந்து சால வல்லலுய்ப் பதன்முனம்........நம்பனமேவு நன்னகர் நலங்கொள் காழி சேர்மினே" என்றது பதிகக் கருத்தும் அருட்குறிப்புமாம். "பன்னிரண்டு பேர் படைத்த" என்ற பதியின் சிறப்புப்பற்றிக் கூறிய குறிப்பி னுடன், இம்முறை எழுந்தருளும்நிலை கூறும் இந்நான்கு பாட்டுக்களினுள் திருக்கழு மலம் (3043), பூந்தராய் (3044), வேணுபுரம்—புறவம் (3045) எனவும் மேல்வரும் பாட்டில காழி எனவும் ஐந்து திருப்பெயர்களாற் கூறியருளும் குறிப்பும் காண்க.

3045. (வி-ரை) **வண்டார் குழலி** - பதிகத் தொடக்கம். சீகாழிப் பதிகங் களுள் அம்மையை முன்வைத்துப் போற்றும் நிலைபற்றி எடுத்தவாறு; "தோடுடைய செவியன" முதலியவை காண்க.

**மாளிகை விண் தாங்குவபோலும்** - பதிக முதற்பாட்டின் கருத்தும் குறிப்பும் குறித்தவாறு.

**மாடம் விண் தாங்குவபோலும்** - விண்ணளவோங்கிய மாடங்கள் தூரத்தே கண் ணுக்குப் புலப்படத் தோன்றியபோது நிகழ்ந்த திருவுள்ளக் குறிப்பு; **தாங்குதல்** - காப்பாற்றுதல் எனக்கொண்டு, விண்ணுயர்ந்த திருத்தோணியேயன்றி வேணுபுரத்தின் மாடங்களுமே விண்ணைத் தாங்குவபோல உயர்ந்தன என்பதுமாம்; வேணுபுரம் என்ற பெயர்க்குறிப்பும் அது; வேணுவின் வழி வந்தும், வேணுவின் மறைந்து கரந் துறைந்தும் இந்திரன் புகலடைந்து நிற்க, அவனைக் காத்துப் பின் விண்ணுலக ஆட்சி யினை மீளப்பெற அருளிய வரலாறு காண்க. மண்ணவர்க்குரிய ஆக்கமொழி மேல் வரும் பதிகத்தில் உரைப்பதனால் இப்பதிகத்தினுள் விண்ணவர்க்குரிய ஆக்கக்குறிப்பு பெறக் கூறியவாறு; இக்காரணம் பற்றியே ஆசிரியர் இவ்வருணனையை விதந்தெடுத் துக் காட்டியருளினர் என்க.

புறம்பணை - நகரின் புறத்து வயல்கள்; புன்னைமணங் கமழ் புறவம் - செய்தனிலச் சார்புபற்றிக் கூறியவாறு. இதுபற்றியே திருக்கழுமல மும்மணிக்கோவையினுள் பட்டினத்துப் பெருமானார் செய்தற்றிணைக்குரிய இரங்கற்றுறையில் வைத்துப் பற்பல பாட்டுக்களும் அருளியவாறு கண்டுகொள்க.

எழுந்தருளி - தூரத்தே தோன்றிய இடத்தினின்றும் மேற்சென்று நகரணிமைக்குச் செல்ல. 1147

3046. வாழிவளர் புறம்பணையின் மருங்கணைந்து, வரிவண்டு
சூழுமலர் நறுந்தீப தூபங்க ளுடன்றொழுது
"காழிநகர் சேர்மி"னெனக் கடைமுடிந்த திருப்பதிகம்
ஏழிசையி னுடன்பாடி யெயின்மூதூ ருட்புகுந்தார். ௧௧௪௮

(இ - ள்) வாழிவளர்...மருங்கணைந்து - வாழ்வாக வளரும் அத்திருப்பதியின் புறம்பணையில் நகரின் அணிமையில் சேர்ந்து; வரிவண்டு ..தொழுது - வரிவண்டுகள் மொய்க்கும் மலர்களாலும், நறுமணமுடைய தூப தீபங்களாலும் வழிபட்டுத் தொழுது; "காழிநகர் சேர்மின்" பாடி - "காழி நகரினைச் சேர்மின்கள், மக்களே!" என்று இறுதிச் சீர்களாலமைந்த மகுடமுள்ள திருப்பதிகத்தினை ஏழிசைகளுடனே பாடியருளியவாறே, எயின்...புகுந்தார் - மதிலையுடைய அந்தப் பழைய திருநகரத்தினுள்ளே புகுந்தருளினார்.

(வி - ரை) வாழிவளர் - உலகிய வாழ்வாக ஊழியிலுமழியாது வளர்கின்ற.

புறம்பணையின் மருங்கு - நகரப்புறத்தின் பக்கம்.

வரிவண்டு சூழுமலர் - வரிகளையுடைய வண்டு, வரிப்பாட்டு இசைக்கும் வண்டுகள் என்றலுமாம். வண்டு சூழு மலர் என்றது புதியன அலர்கின்ற நாண்மலர் என்றதாம், அதுவே வழிபாட்டுக்குரித்தாமாதலின்.

நறும் தீபம் - தீபத்திற்கு நறுமையாவது நறுமணம் கமழும் நெய்யினால் இடப்பட்டு விளங்குதல், மணமெண்ணெய் முதலிய சந்தக் கலப்புள்ள நீராறமுள்ள பண்டங்களால் இடப்பெறும் இந்நாட் பைசவ விளக்குக்கள் இறைவழிபாட்டுக்காகா என்பது தெளிக. நறுமையை மலர்க்கும் கூட்டுக.

மலர் - தீப - தூபங்களுடன் தொழுதலாவது - திருக்கோயில் கோசுர மலர்களால் அருச்சித்துத் தூப தீபங்களேந்தி வழிபடுதல். இறைவனைப் போலவே அவர் எழுந்தருளிய திருப்பதியும் வழிபடற்பாலது என்பது விதி, 2086, 2398 பார்க்க.

"காழிநகர் சேர்மின்" எனக் கடை முடிந்த - "காழி சேர்மினே" என்பது பதிகப் பாட்டுக்களின் இறுதிச் சீர்களாகிய மகுடம்; இதுவே பதிகக் குறிப்பும் கருத்துமாம். கடை முடிந்த - கருத்துடன் கொண்டு - ஈற்றினைக்கொண்டு முடிந்த என்றலுமாம்; கடை - குறிப்பு - குறிக்கோள் என்றலுமாம்; கடை முடிந்த என்றதனால் இனிச் சீகாழியின்பேரில் பிள்ளையார் அருளும் பதிகம் எதுவும் நாம் பெறுவதில்லை என்றும், இதுவே நாம் பெற்ற அளவில் சீகாழியைப்பற்றிப் பிள்ளையாரது கடையாக முடிந்த திருப்பதிகமாம் என்றும் குறிப்புப்பெறக் கூறிய தெய்வக் கவிநயமும் காண்க.

ஏழிசை - திருவிராகமாகிய நட்டராகப் பண் கட்டளை.

எயின் மூதூர் - 1092 பார்க்க. 1148

3047. சேணுயர்ந்த திருத்தோணி வீற்றிருந்த சிவபெருமான்
தாளிணைந்த வாதரவின் றலைப்பாடு தனையுன்னி

நீணிலைக்கோ புரமணைந்து நேரிறைஞ்சிப் புக்கருளி
வாணிலவு பெருங்கோயில் வலங்கொண்டு முன்பணிந்தார். கககசக

(இ - ள்) சேணுயர்ந்த...உன்னி - ஆகாயதநிலுயர்ந்த திருத்தோணியிலே வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடிகளை நினைந்த அன்பின் மேம்பாட்டினை எண்ணிக்கொண்டவராய்; நீள்...புக்கருளி - நீண்ட நிலைகளையுடைய கோபுரத்தினை அணைந்து எதிரில் நிலமுற வணங்கி எழுந்து உள்ளே புகுந்தருளி; வாணிலவு...பணிந்தார் - ஒளி விளஙகுகின்ற பெருந் திருககோயிலினை வலமாக வந்து வணஙகி அங்கு அதன் முன்பு பணிநதருளினர்.

(வி - ரை) சேணுயர்ந்த......தனை உன்னி - சேண் - விசும்பு; ஆகாயம். வானுலகம் உயர்வுபெறக் காரணமாயிருந்த என்ற குறிப்புப்பட உரைத்தலுமாம்.

தாள் நினைந்த ஆதரவின் தலைப்பாடு - ஆதரவு - அன்பு; தலைப்பாடு - பெருஞ் சிறப்பு; கிடைத்தற்கரிய பெரும்பேறு. உன்னி-நினைநது நினைநது மனமுருகி; உன்னி-உன்னியவாறே; படியே. "பாததனினை மனமவைததெழு பநதன்" (11) என்ற பதிகக குறிப்புக் காண்க.

நேர் இறைஞ்சி - திருககோபுரததின முன் எதிரே நிலமுறப பணிந்து.

வாள் நிலவு பெருங்கோயில் - இது புறத் திருமதிலின் உட்சுறறில் அமைநத சீகாழிக் கோயிலின முழுமை. வாள் - ஒளி; ஞானஒளி.

முன் பணிந்தார் - முன் - பிரமபுரீசா திருமுன்பு. 1149

வேணுபுரம் (சீகாழி)

திருச்சிற்றம்பலம் பண் - நட்டபாடை - 1-ம் திருமுறை

வண்டார்குழ லரிவையொடு பிரியாவகை பாகம்
பெண்டான்மிக வானன்பிறைச் சென்னிப்பெரு மானூர்
தண்டாமரை மலராளுறை தவளந்நெடு மாடம்
விண்டாங்குவ போலும்மிகு வேணுபுர மதுவே. (1)

வேதத்தொலி யானும்மிகு வேணுபுரந் தன்னைப்
பாதத்தினின் மனமவைத்தெழு பந்தன்றன பாடல்
ஏதத்தினை யில்லாவிவை பத்தும்மிசை வல்லார்
கேதத்தினை யில்லாசிவ கெதியைப்பெறு வாரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பெருமானூர் "மாடம் விண்டாங்குவபோல" விளஙகும் வேணுபுரமதுவேயாம (3045)

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அரிவை - பெரியநாயகியம்மை; பெண்தான் மிக ஆனான் - சிருட்டிக கிரமத்தில சத்தியுடன் கூடி அருள்மிக எழுந்தருளினன; ஆனான் - ஆக்கச்சொல் பொருளின் தன்மை குறித்தது. மலராள் - "தவளநெடு" என்ற குறிப்பினால் கலைமகளைக் குறிததது; "கலையாரூடு சுருதித்தொகை கற்றோர்மிகு கூட்டம், விலையாயின சொற்றேர்தரு" (8); "காவியனு மங்கையொடு" (தேவா); மாடம் விண்டாங்குவ போலும் - இதன் அரும் பொருட்குறிப்பை ஆசிரியா எடுததுக் காட்டியருளினர் (3045); முன் உரைத்தவை பார்க்க. அதுவே பெருமான் ஊர் என்க;—(2) படைப்புந் நிலை யிறுதிப் பயன் - முன்னர்ப் "பெண்டான்மிக வானன" (1) என்றதனைத் தொடர்ந்து கூறியது; நிலை - நிறுத்துதல் - திதி; இறுதி - சங்காரம்; கிறி - பலவகை விளையாடல்; புடைப் பாலையின் கழகின்றெடு - மலர்

நாற்றம் - கமுகம்பாளைகள் விரிந்து அலரும் பருவத்தில் மிக்க மணம் வீசுவன. புடைப் பாளை - பாளை பக்கத்தில் புடைத்தல் கமுகுகளினியல்பு; தன்மை நவிற்சி; விடைத்தே - மிகுந்தே;—(3) கடம் - யானையின் மதம்; அவர் - அவ்யானையை அபிசார யாகத்தில் பெற்று ஏவிய இருடிகள்; படம் - பாம்பின் படம், விடம் தாங்கிய கண் - விடம்போன்ற கூரிய பார்வையுடைய கண்; அரவக்குழை - அரவம் போன்றமைந்த காதணி;—(4) மயிலாடிட மேகம் முழவதிர - ஆடிட - ஆடும்படி; முழவுபோல அதிர என்க;—(5) மந்தி மேனோக்கி நின்றிறங்கும் - குரங்குகள் கீழிறங்கும்போது கீழே நோக்காது மேலே பார்த்தவாறே இறங்கும் இயல்புபற்றிய தன்மை நவிற்சியணி;—(8) விலையாயின சொல் - விலை என்பது இங்கு உயர்ந்த பொருள் அமைதி என்ற பொருளில் வந்தது;—(10) வணங்காமைத் தேரியான் - தன்மை மேலீட்டினால் அவர்கள் வணங்கலாகாதவாறு தம்மை மறைத்து நின்றவர்; தூசு - புடவை;—(11) பாதத்தினின் மனம் வைத்தெழ - "தாணிழலை யாதரவின் றலைப் பாடு தலையுளனி" (3047) என்று ஆசிரியர் இதனை விளக்கி எடுத்துக்காட்டியது காண்க; ஏதம் - குற்றம், மலவாதனை. இல்லா - இல்லையாகச் செய்கின்ற; கேதம் - தீமை.

காழி

திருச்சிற்றம்பலம்   திருவிராகம்   பண் - நட்டராகம்

நம்பொருணம் மக்களென்று நச்சி யிச்சை செய்துநீர்
அம்பரம் மடைந்து சால வல்ல லுய்ப்ப தன்முனம்
உம்பர்நாத னுத்தம னொளிமி குத்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள் காழி சேர்மினே   (1)

தக்கனார் தலையரிந்த சங்க ரன்ற னற்றரை
அக்கினோ டரவசைத்த அந்தி வண்ணர் காழியை
ஒக்கஞான சம்பந்த னுரைத்த பாடல் வல்லவார்
மிக்கவின்ப மெய்திவீற் றிருந்து வாழ்தல் மெய்ம்மையே.   (11)

_திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—மலர் தூய்ப் பதிகங்களுடன் நகரினைத் தொழுது, "காழிசேர்மினே" எனக் கடைமுடித்து உபதேசித்தருளிய பதிகம், உலக வாழ்வு கடைமுடிந்து "சாவதன்முன் இசைந்து" காழி சேர்மின் என்ற கருத்தும் காண்க. பின்னையார் இவ்வுலகிலவதரித்தருளிய காரணநிலை முடிவெய்தும் நிலை கூடக், காழிசேர்ந்து, இனிப் போதநிலை முடிந்தவழி இறைவனை அடைந்து ஒன்றி உடனாகும் தருணம் அணிமையாதற் குறிப்பும் காணத்தக்கது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) நம் பொருள் ....நீர் - சீகாழி நகரின் தொடர்பே கொண்டு தம்பால் வந்த தாதையாரையும் பூசுரரையும் மாதவர்களையும், அவர்கள்மூலம் ஏனை உலகவரையும் நோக்கி உபதேசித்தருளியது; நச்சி - விரும்பி; நம் பொருள் - நம் மக்கள் - பொருட் சார்பு - உடற் சார்பு; இச்சை செய்தல்; பற்று வைத்தல்; அம்பரம் - கடல்; அம்பரமடைந்து - ஆசைக்கடலுள் அழுந்தி; அம்பரம் - துயிலிடம் என்று கொண்டு, இச்சைப் பெருக்கினுள் மயங்கி என்றலுமாம். சால - மிகவும்; அல்லல் உய்ப்பதன் முனம் - மிக்க துன்பம் அடைந்து கெடுவதன்முன்; முனம் - சேர்மின் - என்று கூட்டி முடிக்க. அல்லலுய்த்தபின் சேர்

தல் நம்வசமில்லை; ஆதலின் அதன்முன் சேர்மின் என்றது; இக்கருத்தைப் பலவாற்றானும் ஐயடிகள் காடவர்கோனாயனார் க்ஷேத்திர வெண்பாவினும், பட்டினத்துச் சுவாமிகள் தமது அருள்நூல்களினும் இடித்துக் கூறுதல் காண்க. "நல்லச்சிற்றம்பலமே நண்ணாமுன்"; "பொதியமுதத பாழ்க்கோட்டஞ் சேராமுன்"; "ஐயாறு வாயாறு பாடாமுன" (க்ஷேத்திர வெண்பா); உத்தமன் - எல்லாம் நன்மையே செய்பவன்; நம்பன் - நமபி அடைதற்குரியவன்; நன்னகர் - நலங்கோள் - நகரின் நன்மையும், அடைந்தால் அது தரும நற்பயனும் குறித்தன; சேர்மினே - ஏகாரம் தேற்றம்;—(2) ஏவம் - எவ்வம் - குற்றம்; எதனை நோக்கி முதனிண்டது. இசைந்து - மனவொருமையுற்று; தீபமாலை தூபமும் செறிந்த கையராகிச் - சேர்மின் - பதியினையே அருச்சித்து வழிபட்டுப் பின் உள்ளே அடைமின; பிள்ளையார் இவ்வாறே செய்துகாட்டியருளினமை முன் 'சூழுமலர் நறுந்தீப தூபங்க ளுடனெழுது" (3047) என்று ஆசிரியர் காட்டியருளினமை காண்க; மன்னும் - அழியிலுமழியாது நிலைபெறும்;—(3) சோறு..துவண்டு - செலவு நீங்கிய நல்குரவு நிலை; துவளுதல் - ஏறுசுற்றம் - நெருங்கிய சுற்றமும்; சிறப்புமமை தொக்கது. எள்குதல் - இகழ்தல்; தூரமாய் - எள்க - என்று கூட்டுக. தூரமாதல் - அணுகாது விலகிப்போதல்;—(4) நச்சி......கேட்பதன் முனம் - ஒரு பொருளை விரும்பி ஒருவர் வாசலின் நடந்து செல்ல, அவர் உம்மை விரும்பாது நாளை உச்சிப்போதில வா என்று சொல்லக் கேட்கவரு முன்னே; நடந்து செல்ல - என்றதனால வறுமையும், நாளை உச்சி வம் எனும் உரை - என்றதனால் அவர் ஈயாது நாள கழித்தலும குறிக்கப்பட்டன; "நசசிவந்த நல்கூர் மாந்தர் தம், விச்சையிற படைத்த வெவவேறு காட்சியி, னகமலர நீவார போல முகமலர, இனிது மொழிந்தாங குதவுத லின்றி, நாளு நாளு நாள்பல குறித்தவர், தாளினிற் றலுந் தவிர்த்து" (திருவிடை - மும் - 7); பேணுவார் இச்சை செய்யும் - பேணுவாரை இசசித்தருளும்;—(5) கண்கள்...உப்த்தழிப்பதன் முன் - காண்பு - காணும தன்மை; மேனி கன்றி - உடல தளர்ந்து; உண்கிலாமை - உணவு உட்கொள்ள முடியாத நிலைமை; இதனால் நரை, திரை, மூப்பு, பிணி என்ற நிலைகள் வருமுனனமே என்றதாம்;—(6) அவத்தம் - வீணே. பிணக்கு - பிறவியில் வரும் துன்பச சூழல்கள்;—(7) பொய்ம் மிகுத்த வாயர் - வாக்கினால் வரும் குற்றம்; பொறாமை - மனத்தின குற்றம்; ஐ மிகுத்த கண்டர் - உடலின நிலை; ஐ - கோழை,—(8) காலினோடு...இகழ்ந்துரைப்பதன் முனம் - உடல் தளர்ந்தும காமம் விடா நிலைமையில பெண்கள இகழ்வதாகும நிலை குறித்தது. மதித்தவர்கள் - தற்போததால அறியப் புகுந்தவர்கள்;(10) நிலை வெறுத்த...புதல்வர்கள் - "இதைக் கிழம் இன்னும் இறவாமல் இருக்குதே" என்று வெறுப்புடன் முன்னமே நேசமிலலாத மக்கள்; மூலை வெறுத்த பேர் - பால் குடித்தலை விட்ட புதல்வர்கள் முதலாக;—(11) தக்கனார் தலையரிந்த சங்கரன் - முதன்மைபற்றி வீரபத்திரர் செயலை இறைவர்மேல் வேற்றப்பட்டது. அந்தி - மாலையின் செவ்வானம; அம்-தீ - அழகிய தீ என்பது அந்தி என நின்றதென்றலுமாம்.

3048. முன்னிறைஞ்சித் திருவருளின் முழுநோக்கம் பெற்றேறிப்
பொன்னிமயப் பாவையுடன் புணர்ந்திருந்த புராதனரைச்
சென்னிமிசைக் குவித்தகரங் கொடுவிழுந்து நிலைத்தெழுந்து
மன்னுபெரு வாழ்வெய்தி மனங்களிப்ப வணங்குவார்; கசஙிO

3049. பரவுதிருப் பதிகங்கள் பலவுமிசை யினிற்பாடி
விரவியகண் ணருவிநீர் வெள்ளத்திற் குளித்தருளி
அரவணிந்தா ரருள்பெருகப் புறம்பெய்தி யன்பருடன்
சிரபுரத்துப் பெருந்தகையார் தந்திருமா ளிகைசார்ந்தார். ௧௧௫௧

3048. (இ - ள்) முன்னிறைஞ்சி...ஏறி - திருக்கோயிலினுள் பிரமபுரீசர் திருமுன்பு வணங்கி அவரது திருவருளின் முழுநோக்கமும் பெற்றுத் திருத்தோணியாகிய மலையின்மேல் ஏறிச் சென்று; பொன்னிமயப் பாவையுடன் புராதனரை - பொன்மலையென்னும் இமயமலையரசனுடைய மகளாராம் பெரியநாயகியாருடன் கூடி எழுந்தருளியிருந்த பழமையாராகிய தோணியப்பரை; சென்னிமிசை...எழுந்து - தலையின்மேலே கூப்பிய கைகளோடு நிலமுற விழுந்து இன்புற்று எழுந்து; மன்னு பெரு...வணங்குவார் - நிலைபெற்ற பெருவாழ்வினை யடைந்து மனமகிழ வணங்குவாராகிய பிள்ளையார்; ௧௧௫௦

3049 (இ - ள்) பரவு ..பாடி - துதிக்கின்ற திருப்பதிகங்கள் பலவற்றையும் பண்ணுடன் பொருந்தப் பாடியருளி, விரவிய...குளித்தருளி - பொருந்திய கண்ணீர் வெள்ளத்திலே முழுதும் தோய்ந்தருளி; அரவணிந்தார்...புறம்பெய்தி - பாம்புகளை அணிந்த இறைவரது திருவருள் பெருகப்பெற்றுப் புறத்தே போந்து, அன்பருடன்... ...சேர்ந்தார் - அன்பர்களுடனே சீகாழிப் பெருந்தகையாராகிய பிள்ளையார் தமது திருமாளிகையின்கண் சேர்ந்தருளினார். ௧௧௫௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3048 (வி - ரை) முன் இறைஞ்சி - பெருங்கோயிலின் முன்னர்ப் பிரமபுரீசர் திருமுன்பு வீழ்ந்து வணங்கி.

திருவருளின் முழுநோக்கம் - பிரமபுரீசரின் முழுமையாகிய அருணோக்கமும்.

ஏறி - மேற்சென்று திருமலை என்னும் திருத்தோணியின் மேல் ஏறிச் சென்று, இதற்கு இவ்வாறன்றி அதனாலாய ஆனந்த வாழ்வின் மேம்பட்டு என்றுரைத்தனர் முன்னுரைகாரர்.

பொன் இமயப் பாவை - பார்வதி; இறைவி பெரியநாயகியம்மையாரைக் குறித்தது; இமயத்தின் ஓர் பகுதியைப் பொன்மலை என்று வழங்குதல் மரபு.

புராதனர் - மிகப் பழமையானவர், "[illegible]" (தேவா) என்ற குறிப்பின்படி மாலும் மழுவும் சேர்வதன் முன் காலத்திலேயே இங்கு வெளிப்பட்டருளியவர், பன்னிருமுறையின் முன்னர் விளங்குபவர், என்ற தன்மைகளெல்லாம் நினைவுகூர்க.

திளைத்து - ஆனந்தத்தில் அழுந்தி. வணங்குவார் - வினையாலணையும் பெயர்.

பெருவாழ்வு - சிவபெருமானை வணங்கிச் சிவமயமேயாகிய ஆனந்தத்தில் அழுந்தி நிற்றலே பெருவாழ்வு என்பது உண்மைநூற் றுணிபு.

வணங்குவார் - பாடி என மேற்பாட்டுடன் கூட்டி முடிக்க. 1150

3049. (வி - ரை) பதிகங்கள் பலவும் - இப்பதிகங்கள் கிடைத்தில!

கண் அருவிநீர் வெள்ளத்திற் குளித்தலாவது - கண்ணீர் அருவிபோலப் பாய அதனால் திருமேனி முழுதும் நனைதல்.

அருள் பெருக - அருள் பெருகப் பெற்றமையினாலே.

அன்பருடன் - தம்முடன் வந்த திருக்கூட்டத்துடனே. 1151

3050. மாளிகையி னுள்ளணைந்து மறையவர்கட் கருள்புரிந்து
தாள்பணியும் பெருங்கிளைக்குத் தகுதியினாற் றலையளிசெய்
தாளுடைய தம்பெருமா னடியவர்க ளுடனமர்ந்து
நீளவரும் பேரின்ப மிகப்பெருக நிகழுநாள்; ௧௧௫௨

3051. காழிநா டுடையபிரான் கழல்வணங்கி மகிழ்வெய்த
ஆழியினு மிகப்பெருகு மாசையுடன் றிருமுருகர்
வாழிதிரு நீலநக்கர் முதற்றொண்டர் மற்றனையோர்
சூழுநெடுஞ் சுற்றமுடன் றோணிபுரந் தொழுதணைந்தார். ௧௧௫௩

3050. (இ - ள்) மாளிகையின்...அருள்புரிந்து - தமது திருமாளிகையினுள்ளே எழுந்தருளித், தம்மைக் காணவந்த மறையவர்களுக்கெல்லாம் அருள்விடை கொடுத்து; தாள் பணியும்...தலையளி செய்து - தமது திருவடிகளை வணங்கி நின்ற பெரிய தமராளாகிய சுற்றத்தார்களுக்குத் தகுதிக்கேற்றவாறு தலையாகிய கருணையினைச் செய்து விடைகொடுத்தருளி; ஆளுடைய...அமர்ந்து - தம்மை ஆளுடைய பெருமானது அடியவர்களுடனே விரும்பி எழுந்தருளியிருந்து; நீளவரும்...நிகழுநாள் - நீண்டு பெருக வரும் பேரின்பமானது மேன்மேலும் மிகப் பெருகும்படி நிகழ்ந்துவரும் நாள்களிலே; ௧௧௫௨

3051. (இ - ள்) காழிநாடு...மகிழ்வெய்த - காழி நாட்டின் தலைவராகிய பிள்ளையாரது திருவடிகளை வணங்கி மகிழ்வடையக் கருதி; ஆழியினும்...ஆசையுடன் - கடலினும் மிகவும் பெருகுகின்ற ஆசையுடனே; திருமுருகர்...தொழுதணைந்தார் - திருமுருக நாயனார் வாழ்வு தரும் திருநீலநக்க நாயனார் முதலாகிய தொண்டர்களும் மற்றும் ஏனையோர்களும் தம்மைச் சூழ்ந்த நீண்ட சுற்றத்தாருடனே போந்து திருத்தோணிபுரத்தினைத் தொழுது பிள்ளையார்பால் வந்தணைந்தார்கள். ௧௧௫௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3050. (வி - ரை) மறையவர்கள் - இவர்கள் பிள்ளையார் தில்லையில் எழுந்தருளியமை கேட்டு அங்குச் சென்று வணங்கித் தொடர்ந்து உடன் வந்த "புகலிப் பூசுரரு மாதவரும" (3041), மற்றும் சீகாழியில் பிள்ளையாருடன் கூடிக் கும்பிட்ட மறையவர்களுமாம். இவர்களே முதலில் விடை கொடுத்தருளத் தக்கார்கள்.

தாள் பணியும் பெருங்கிளை - இவர்கள் சீகாழி, திருநனிபள்ளி முதலிய பதிகளினின்றும் போந்து பிள்ளையாரைச் சூழ்ந்து வணங்கி யருள்பெற்ற சுற்றத்தார்கள்; பிள்ளையாரது தாள் பணியப்பெற்றதனால் பெருங்கிளை என்றார்; தலையளி செய்து - பெருங்கருணை நோக்கம் வைத்து.

ஆளுடைய ..அமர்ந்து - அருள் புரிந்து - விடை கொடுக்கப்பெற்ற மறையவர்களும், தலையளி செய்து - விடை கொடுக்கப்பெற்ற பெருங்கிளையும் போலன்றி அடியவர்களை எஞ்ஞான்றும் உடனிருக்கும் பேற்றி வாய்ந்த பெரியவர்கள் என்ற உண்மையினைக் கைக்கொண்டு ஒழுகி உலகுக் கறிவுறுத்தியருளினார் பிள்ளையார். ஆதலின் உடன் அமர்ந்து என்றார். "அன்பரொடு மரீஇ" (போதம் - 12 - சூத்) என்பது ஞானசாத்திரம். அதனாலாகிய இன்பம் உலகிறந்த சிவானந்தமேயாம் என்பார் நீள வரும் பேரின்ப மிகப் பெருக என்று மேற்கூறினார்; அமர்தல் - விரும்புதல்.

நீளவரும் பேரின்பம் மிகப் பெருக - நீள வருதல் - எல்லையில்லாது வளர்ந்து வருதல்; மிகப் பெருகுதல் - வகையினால் மேன்மேலும் பெருகுதல். அடியவர்களுடனிருக்கும் சிவானந்தப் பெருவாழ்வின் இயல்புபற்றி முன் (2421) உரைத்தவை பார்க்க.

நிகழும் நாள் - அணைந்தார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 1152

3051. (வி - ரை) கழல் வணங்கி மகிழ்வெய்த - கழல் வணங்கப்பெறுதலே மகிழ்ச்சிக்கு ஏதுவாம் என்பது.

ஆழியினும் மிகப் பெருகும் ஆசை - கடலினும் பெரியதாய் வளரும் ஆசை என்றது இவைதென்று அளக்கலாகாத தன்மை குறித்தப் பண்புபற்றி வந்த உவமம். "பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின், நன்மை கடலிற் பெரிது" (குறள்) என்றபடி பிள்ளையார் உலகுக்குச் செய்யும் பரசமய நிராகரிப்பும் திருநீற்றி னாக்கமுமாகிய உதவிகள் பயனறூக்கா செய்தமையின் அவற்றின் நன்மை கடலினும் பெரிதாம்; அதுபற்றி அவர் கழல் வணங்கி மகிழ அடியார் அவர்பாற் கொண்ட ஆசையும் கடலினும் பெரிதாயிற்று என்க.

திருமுருகர், வாழி திருநீலநக்கர், முதற்றெண்டர் - அறுபான்மும்மை மெய்யடியார் களுள் வருதலால் இவர்கள் முதன்மையாக எடுத்துரைக்கப் பெற்றார்கள். வாழி-பிள்ளை யாரது திருமணச் சடங்குகள் செய்து வாழ்த்தப் பெறும் வாழ்வு குறிக்கப்பட்டது; 3137 பார்க்க.

சூழ நெடுஞ் சுற்றமுடன் - இவர்களும் பிள்ளையார் திருமணத்துடன் சேவித்து முன் செல்லும் சிறப்புப் பெறுபவர்கள்; "பாங்கிலவு கிளைசூழ" (3148).

தோணிபுரம் தொழுது - தோணிபுரத்தினையும் தோணிபுரேசரையும் முதலில் தொழுது பின்னர்ப் பிள்ளையார்பால் அணைந்தனர் இஃது அடியார் மரபு. முன் 2774, 2775-லும், பிறாண்டும் உரைத்தவை பார்க்க.

ஆழியினும் மிகப்பெருகும் ஆசையுடன் - எல்லையில்லாது பொங்கித் ததும்பும் சிவானந்த விளைவாகிய சிவபோகத்துட் புகும் நிலை அணித்தாகும் முற்குறிப்புப் பெற மிக்க ஆசையும் பெருகிற்று என்றலுமாம். முன் "பேரின்பம்" (3050) என்றதும் காண்க.

3052. வந்தவரை எதிர்கொண்டு மனமகிழ்ந்து சண்பையர்கோன்
அந்தமில்சீ ரடியார்க ளவரோடு மினிதமர்ந்து
சுந்தரவா ரணங்கினுடன் றோணியில்வீற் றிருந்தாரைச
செந்தமிழின் பந்தத்தாற் றிருப்பதிகம் பலபாடி, ககடுச

3053. பெருமகிழ்ச்சி யுடன்செல்லப்; பெருந்தவத்தாற் பெற்றவரும்
மருவுபெருங் கிளையான மறையவரு முடன்கூடித்
"திருவளர்ஞா னத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்
பருவமிது" வென்றெண்ணி யறிவிக்கப் பாங்கணைந்தார். ககடுடு

3052. (இ - ள்) வந்தவரை...இனிதமர்ந்து - முன் கூறியபடி வந்தவர்களாகிய திருமுருகர் முதலாகிய தொண்டர்களையும், ஏனையோர்களையும் எதிர்வரவேற்றுத் திரு வுள்ள மிக மகிழ்ந்து சீகாழித் தலைவராகிய பிள்ளையார் அளவில்லாத சிறப்புடைய அந்த அடியவர்களுடனே இனிதாக விரும்பியிருந்தருளி, சுந்தர...வீற்றிருந்தாரை - அழகின் நிலைக்களமாகிய பெரியநாயகியாருடனே திருத்தோணியில் வீற்றிருந்த தோணி யப்பரை; செந்தமிழின்...பலபாடி - செந்தமிழ் யாப்பினாலே பல திருப்பதிகங்களை யும் பாடியருளி; ககடுச

3053. (இ - ள்) பெருமகிழ்ச்சியுடன் செல்ல - பெரிய மகிழ்வுடனே இவ்வாறு நிகழா நிற்க; பெருந்தவத்தால்...உடன் கூடி - பெரிய தவஞ் செய்ததன் பயனுகப்

பிள்ளையாரைப் பெற்றெடுத்த தாதையாராகிய சிவபாதவிருதயரும் பொருந்திய பெருங் கிளைஞர்களாகிய மறையவர்களும உடன் கூடி ; திருவளர்...என்றெண்ணி - முத்தித் திரு வளர்தற்கேதுவாகிய ஞானத்தின் தலைவராம் பிள்ளையார் திருமணஞ் செய்தருளு வதற்கேற்ற பருவமிதுவாகும் என்று எண்ணி ; அறிவிக்கப் பாங்கு அணைந்தார் - தமது அவ்வெண்ணத்தைப் பிள்ளையாருக்கு அறிவிக்கும் பொருட்டு அவர்பால் அணைந் தார்கள். ககடுரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3052. (வி - ரை) வந்தவரை - திருமுருகர் முதற்றொண்டர்களை.

அடியார்கள் என்றது அவர்களையும் முன்னர்க் கூறிய "தம்பெருமா னடியவாக" ளையும் (3050). அவரோடும் இனிதமர்ந்து - முன் உரைத்ததவை பார்க்க.

சுந்தர ஆர் அணங்கு - சுந்தரம் - என்றது அழகுக்கெல்லா மிருப்பிடமானவர் என்றது ; ஆர் அணங்கு - பெரியநாயகி யம்மையார் ; ஆர்தல் - பெருமையெல்லாம் நிறைதல்.

அணங்கினுடன் தோணியில் வீற்றிருந்தவர் - "தோடுடைய செவியன்" (தேவா) என்று குறிக்கப்பட்டு அம்மையப்பராகி வெளிவந்து தமக்கு ஞான அமுதூட்டியருளிய தோணியப்பர் என்பதாம். பந்தம் - யாப்பு-தொடை.

திருப்பதிகம் பலபாடி - இப்பதிகங்கள் கிடைத்தில ! ; பந்தத்தால் என்றதனுல் அத் தொடக்கமுடைய பதிகம் குறிப்பதாகக் கூறுவாருமுண்டு ; அது முன்னாக (2006) குறிக்கப்பட்டமையாலும், "பதிகம் பல" என்பதனுலும், அவ்வுரை பொருந் தாது.

பாடிச் - செல்ல என்று வரும் பாட்டுடன் முடிக்க. 1154

3053. (வி - ரை) செல்ல - நாட்கள் இவ்வண்ணமாக நிகழ்ந்துசெல்ல.

பெற்றவர் - மகவாகப் பெற்ற சிவபாதவிருதயர். பெருந்தவம் - முன் "தவம் புரிந்தார்" (1917) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

கிளையான மறையவர் - அவர் தமமையும் பகவதியாரையும் ஆக இரு மரபும பற்றிய கிளைஞர். இருமரபும் குறிக்கப் பெறும் என்குர.

திருவளர் ஞானம் - முத்தி தரும் சிவஞானம. வளர் என்றது அனறேடமை யாது இன்றும் என்றும வளரச் செய்யும் தனமை குறித்தது.

திருமணம்...பருவமிது - திருமணப் பருவம ; இஃது ஆண்பாலாகக்குப் பதினு ருட்டைப் பருவத்தில் நிகழுமெனபது தமிழ மரபு. இறையனுரகப்பொருளுரை - தொல்காப்பியம் முதலியவை பார்க்க.

அறிவிக்க - தமது அவ்வெண்ணத்தைப் பிள்ளையார்பால் அறிவிக்குமபொருட்டு.

பாங்கு - அவர்பாலில்.

அறிவித்தும் பாங்கு—என்பதும் பாடம. 1155

3054. நாட்டமறை முறையொழுக்க ஞானபோ னகருக்குங்
கூட்டவேது மனங்கொள்வார் "சோதில்மறை நெறிச்சடங்கு
காட்டவரும் வேள்விபல புரிவதற்கோர் கன்னிதனை
வேட்டருள வேண்டு"மென விண்ணப்பஞ் செய்தார்கள். ககடுசு

(இ - ள்) நாட்டு மறை...மனங்கொள்வார் - உலகியல் நிலையில் வைதிக ஒழுக் கத்தினை ஞானசம்பந்தப் பிள்ளையாருக்கும் இசைவித்தலை மனங் கொள்வார்களாகி ;

கோதில...விண்ணப்பஞ் செய்தார்கள் - "குற்றமற்ற வேதநெறியின்கண் கூறப்படும் சடங்குகளுடன் கூடிய வேள்விகளைச் செய்வதற்கு உரிமை பெறும்பொருட்டு ஒரு கன்னிகையைத் தேவரீர் திருமணஞ் செய்தருள வேண்டு"மென்று விண்ணப்பம் செய்தார்கள்.

(வி - ரை) நாட்டு மறை முறை ஒழுக்கம் - அந்தணர் முதலிய மூவருணத்தாரும் பிரமசரியத்தின் பின் இருகுத்த க்லையில் ஒழுகுக என்று வேதநெறி விதித்த ஒழுக்கம்.

ஞானபோனகருக்கும் கூட்டுவது - அவ்வொழுக்கம் ஏனையோராகிய சாமானிய உலகினருக்கேயன்றி முற்றிய சிவஞானமுடைய பிள்ளையாரிடத்தும் பொருந்தாது எனப்துணர்ந்ததற்குச் சிறப்புமமை கொடுத்தோதினர்.

மறைநெறிச் சடங்கு காட்ட வரும் வேள்வி பல புரிவதற்கு ஒரு கன்னிதனை வேட்டு - பிரமசாரிக்குச் சமிதா தானமேயன்றி ஔபாசனத்தில் அதிகாரமின்மையால், இல்லொழுக்கத்தில் ஔபாசன முதலிய நித்தியங்களும், சிருத முதலிய நைமித்திகங்களும் செய்யவேண்டுதலின் அதற்காக ஒரு கன்னியை மணந்து என்றார்; சடங்கு காட்ட வரும் வேள்வி - மறை விதித்திட்ட சடங்குகளுடனே செய்யப்படுவன வேள்வி என்றதாம். காட்ட - செய்ய; காட்ட - என்றது, நீர் வேள்வி செய்வது உமக்காக வன்றி உலகினர்க்கு நிகழ்த்திக் காட்டும் ஆசாரியத் தன்மைக்காக என்றதும் குறிப்பு.

மறையொழுக்கம் - கூட்டுவது மணங்கொள்வார் - என்றது மறைகளில் விதித்த ஆச்சிரமங்களுள் இல்வாழ்க்கையாகிய ஆச்சிரமத்தில் பிள்ளையாரைப் பொருத்துவதே அவர்கள் கருதினார்கள் என்க. அதனில் இன்றியமையாத சிறந்த பகுதி "மனையறத்தினின்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்" (1917) என்று சிவபாதவிருதயர் தாம் கருதிய எண்ணம்கட் பேறேயாம், ஆனால் அதனை அவ்வாறு கூறுது பிள்ளையாரது திருவுள்ளத்துக்கு இசையுமாறு "வேள்வி புரிவதற்கு கன்னியை வேட்க" என வேண்டினார் மறையோர்; பிள்ளையார் இசையாது கூறியருளிய பின்னும் அவர் மாறாத வண்ணம் அவர்கள் இதனையே மற்றுமொரு வகையால் மேலும் கூறுதல் (3056) காண்க.

மணங் கொள்வார்—என்பதும் பாடம். 1156

3055. மற்றவர்த மொழிகேட்டு மாதவத்தின் கொழுந்தனையார்
சுற்றமுறு பெருமபாசத் தொடர்ச்சிவிடு நிலைமையராய்ப்
பெற்றமுயர்த் தவரருண்முன் பெற்றதனு லிசையாது,
"முற்றியதா யினுங்கூடா" தென்றவா மொழிந்தருள; ககருஎ

3056. அருமறையோ ரவர்பின்னுங் கைதொழுதங் கறிவிப்பார்
"இருநிலத்து மறைவழக்க மெடுத்தீர்நீ ராதலினால்
வருமுறையா லறுதொழிலின் வைதிகமா நெறியொழுகத்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யு"மென; ககருஅ

3057. மறைவாழ வந்தணர்தம் வாய்மையொழுக் கம்பெருகும்
துறைவாழச் சுற்றத்தார் தமக்கருளி யுடன்படவும்
பிறைவாழுந் திருமுடிமிசைப் பெரும்புனலோ டரவணிந்த
கறைவாழுங் கண்டத்தார் தமைத்தொழுது மனங்கொளித்தார். ககருகூ

3055. (இ - ள்) மற்றவர்தம்...கொழுந்தனையார் - மற்று அவர்களுடைய மொழி களைக் கேட்டுப் பெருந்தவத்தின் கொழுந்து போல்வாராகிய பிள்ளையார்; சுற்ற முறு...நிலைமையராய் - சுற்றங்கள் பொருந்திய பெரிய பாசத் தொடக்கினை விட்டு நீங்கும் நிலையினை உடையராகி; பெற்றமுயர்த்தவர் ..இசையாது - இடபக் கொடி யினை உயர்த்திய சிவபெருமானது திருவடி ஞானமாகிய உயர்ந்த சிவஞானத்தை முன் னரே பெற்றாராதலின் அவர்களது மொழிகளுக்கு இசையாமல்; முற்றியதாயி னும்...மொழிதருள - நீவிர் சொல்வது பொருந்திய மொழிதானாயினும் அந்நிலை என்பால் கூடாதாகும் என்று மொழிந்தருள, கககுள

3056. (இ - ள்) அருமறையோரவர்...அறிவிப்பார் - அந்த அரிய மறையவர் கள் பின்னும் கைகூப்பித் தொழுது அங்குப் பிள்ளையார்பால் அறிவிப்பாராய்; இரு நிலத்தின்...ஆதலினால் - பெரிய நிலவுலகிலே வைதிக வழக்கினை நீர் உயர்த்தியருளினீ ராதலினால்; வருமுறையால...செய்யுமென - அவ்வழிவரும் முறையினாலே மறைய வர்க்குரிய அறதொழில்களுடன் கூடிய வைதிகமாகிய பெருநெறியில் ஒழுகுகின்ற திருமணத்தினைச் செய்தருளுதற்குத் திருவுள்ளம் இசைந்தருளல் வேண்டும் என்று கூற; கககுஅ

3057. (இ - ள்) மறைவாழ - வேதங்கள் வாழ்வடையவும்; அந்தணர்தம்... ...துறைவாழ - அந்தணர்களுடைய வைதிக வாய்மையின் வரும் ஒழுக்கம் பெருகும் துறை வாழ்வடையவும்; சுற்றத்தார்...உடன்படலும் - அச் சுற்றத்தார்களுக்கு அரு ளிச்செய்து அவர்களது விண்ணப்பத்திற்குப் பிள்ளையார் உடன்பாடு செய்தருளுதலும்; பிறை வாழும்...மனங்களித்தார் - பிறைச்சந்திரன் வாழ்கின்ற திருமுடியிலே பெரு நீர்க் கங்கையினோடு பாம்பினையும் அணிந்த திருநீலகண்டராகிய சிவபெருமானை வணங்கி அச் சுற்றத்தார்கள் மனமகிழ்ந்தார்கள். கககுக

இம்மூன்று பாட்டுகளும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3055. (வி - ரை) மாதவத்தின் கொழுந்து - மாதவம் - சிவனை நோக்கிச் செய்யும் பெருந்தவம். கொழுந்து - உச்சியின் விளைந்த பயன்; மென்மையும் தண்மையும் அழகும் பயனுமாகி வரும் தாவரப் பகுதி; மாதவமாகிய பயிரின் உச்சி யின் வரும் நிலைக்குப் பண்புபற்றி உவமமாக வந்தது; சிவனை நோக்கிச் செய்யும் பூசையே தவம் எனப்படும்; இங்கு மாதவம் - சிவபாதவிருதயர் செய்த பெருந்தவத் தின் பயனாக விளங்குபவர் என்றும், கொழுந்து - மழ இளங்கோலம் குறித்ததென்றும் கொள்வாருமுண்டு.

சுற்றமுறு...நிலைமையராய் - சுற்றங்கள் வந்து சூழும் பெரிய பாசத்தின் தொடர்பு தம்மை அணுகாமல் விட்டு நீங்கும் தன்மையை மேற்கொண்டவராகி; "சுற்ற மென்னும் தொல்பசுக் குழாங்கள், பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்" (திருவா- போற்றித் திருவகவல் - 48-49); தொடர்ச்சி விடு நிலை - இதுவரையும் சுற்றம் என்னும் பாசம் உடன் சூழ இருப்பினும் அதனிற் பற்றாது வாழ்ந்த நிலையினாராம் பிள்ளையார்; ஆயின் இப்போது மேற்கொண்ட நிலையாவது அவர்களாற் சுற்றப்படும் நிலையினை அறவே விட்டு நீங்குதல் என்க. விடும் என்ற குறிப்புமிது.

பெற்றம் - உயர்த்தவர் அருள்...முன் பெற்றதனால் இசையாது - இசையாது - உடன்படாமல்; அருள் முன் பெற்றதனால் - அருள் - சிவஞானம்; முன் பெற்றத னால் இசையாது என்றது "புகலமிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம, வறத்துறைக ளவையடைந்தும் ஆரணங்கள் படித்தும்...வேதசிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென் றாற்சைவத், திறத்தடைவர்; இதிற்சரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவ

ணடியைச் சேர்வர்" (சித்தி - 8) என்றவாறு பதினொரும்படியில் உள்ள முடிந்த சிவஞானமாகிய திருவருண்ஞான முழுமையும் முன்னமே பெற்றமையால், சாமானியருக்கு விதித்த மறைவழிநிற்கும் ஆசிரம முதலிய நிலைகளில்வந்து பொருந்தவேண்டிய இயைபில்லையாதலாலும், சிவஞானானந்த நிறைவானது இவையெல்லாம் கடந்த காலானு சத்திநிபாத நிலையாதலாலும் முன் அருள்பெற்றமையால் இசைவுபடாமல் என்றதாம். இதற்குப் பிறரெல்லாம் தத்தமக்கு வேண்டியவாறே வெவ்வேறு பொருள்பட உரைத்தனர்; மேல்வரும் "முற்றியதாயினும் கூடாது" என்பதற்கும் அவ்வாறே பொருந்தாதுரைத்தனர். உண்மை ஆராய்ந்து தெளிந்துகொள்ளத் தக்கது.

"முற்றியதாயினும் கூடாது" என்று - இசையாது - என்றது பிள்ளையாரது திருவுள்ள நிகழ்ச்சி; கூடாது - என்றது அவர் அந்தணர்களுக்குத் தமது திருவாக்கால் கூறிய விடை. முற்றியதாயினும் - நீங்கள் கூறிய மொழிகள் வேதத்தை ஒட்டியவையாயும், மறைகள் முற்றுணர்வுடைய முதல்வனால் மொழிந்தனவாயும் உள்ளன; அவ்வாறாயினும் என்றபடி; இஃது உடன்பட்டு மறுத்தல் என்ற நிலை; நீவிர் கூறியது மறுக்கலாகாதபடி முடிந்த மொழிகளே; ஆயினும் அவை என்பாலிற் கூடாது; என்னை? சாமானியர்களாகிய ஏனையோர்க்கு விதித்த ஒழுக்கம் சத்திநிபாத நிலையினராகிய சிவஞானிகள்பாற் கூடாது என்றபடி; இவ்வாறு மறுத்த பிள்ளையார் பின்னர் (3057) "உடன்பட்ட"து என்னை? எனின், அஃது ஆண்டு விளக்கப்படும்.

முற்றியதாயினும் கூடாது - நீவிர் குறித்த திருமணம் பின்னர் நிறைவேறுமாயினும் அது நீர் மனங்கொள்ளுமாறு உலகியல் நிலையில் வேள்வி வேட்டற்கும் இல்லற வொழுக்கம் நிகழ்த்தற்கும் துணையாகப் பொருந்தாது என்ற உட்குறிப்புத் தொனிப்பதும் காண்க. 1157

3056. (வி - ரை) கைதொழுது அந்த அறிவிப்பார் - கைதொழுதல் - பிள்ளையார் மொழிந்தருளிய வதனில் இசைந்து அமைந்துபடாது மேலும் தமதுரையே உரைக்கப் புகுகின்றாராதலின் பணிவுடன் தொடங்குகின்ற நிலை. அந்த - பிள்ளையார் "கூடாது" என மொழிந்தருளிய அந்நிலையில்.

எடுத்தீர் - குன்றியிருந்த வேதநெறியினை மேலெடுத்தீர், "வேதநெறி தழைத்தோங்க", "வேத வேள்வியை நிந்தனை செய்துழல் ஆதமில்லி யமணொடு", "மறைவழக்க மிலாத மாபாவிகள்" என்பன முதலியவை காண்க.

எடுத்தீர் - ஆதலினால் - வைதிகநெறி யொழுகும் திருமணம் செய்தருளும் என்றது, வேதநெறிக்குப் புறச்சமயத்தாரால் நேர்ந்த குற்றங்களைக் களைந்தீர்; ஆதலினாலே அந்நெறி மேலே ஒழுகுதல் இவ்வாறு என விதித்த அறுதொழிலும் நிகழும்படியினையும் காட்டியருளுதல் வேண்டும்; அவற்றுள் வேட்டல் - வேட்பித்தல் என்பன இல்வாழ்க்கையின் மனைவியோடன்றி நிகழ்த்தலாகாமையின் அதன்பொருட்டுத் திருமணம் செய்தருளுதல் வேண்டும் என்றபடி.

வருமுறையால் - களை களைந்தீர், அதனோடு வைதிகப்பயிர் விளைதற்குரிய ஆக்கப்பாடான செயலையும் செய்தல்வேண்டும் என்று வரும் முறையினாலே.

அறுதொழில் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

அறுதொழிலின் வைதிக மாநெறி யொழுகும் திருமணம் - இக்கருத்தினையே தொடர்ந்து மேல் "மறைவாழ...துறைவாழ" (3057) என வரும்பாட்டிற் பிள்ளையார் அருளுதல் காண்க. 1158

3057. (வி - ரை) மறை வாழ - அந்தணர்தம் வாய்மை ஒழுக்கம் பெருகும் துறை வாழ - உடன்படலும் - முன்னர்க் "கூடாது" என்று மறுத்த பிள்ளையார் இங்கு உடன்படுதலுக்குக் காரணமென்னை? எனின், இஃது என்றவாறு; அஃதாவது முன்னர் மறையவர்கள் பிள்ளையார்தாம் வேள்வி பல செய்வதனுக்கு ஓர் கன்னிதனை வேட்க என்று பிள்ளையாரது தனித் தன்மையில் வைத்து எடுத்துக் கேட்டனர்; அதற்குத் தாம் ஞானப் பெருநிலையில் நின்றமையால் தம்பொருட்டு வேள்வி வேட்கும் உரிமையும் கடமையு மிலராதலின் மறுத்தனர்; இங்கு அதனை விட்டு, நாங்கள் கேட்பது உம்பொருட்டன்று; மறைவழக்கமெடுத்தீராதலின் அந்த ஆசாரியத் தன்மையினின்று நீர் எடுத்த மறை வழக்கத்தினை வைதிக மாநெறி ஒழுகும் அறத்தொழிலின் நிலையீது என நடந்துகாட்டி வேதநெறியினை வேரூன்றி வளர வைக்க வேண்டும் என்று கேட்டனர்; ஆதலின் எமக்காகவன்றி, மறை வாழவும், மறையவரது அறத்தொழிலின் ஒழுக்கமாகிய துறை வாழவும் யாம் இதனை மேற்கொள்வோம் என்று பிள்ளையார் உடன்பட்டவாறு என்க.

மறை வாழ......துறை வாழ - வாழ்தலாவது - அந்நெறி மக்களிடை தழைத்தோங்குதல்; "வேதநெறி தழைத்தோங்க" (1899).

வாய்மை ஒழுக்கம் - சத்திய சீலம் என்பர்; வேத வாய்மையில் விதித்த நெறி.

உடன்படலும் - வேள்வி பல புரிவதற்குத் தமக்கெனவன்றி அறத்தொழிலின் வைதிக நெறி ஒழுக்கம் வாழ மணம் செய்ய உடன்பட்டருளிய பிள்ளையார், பின்னர் திருமணத்தில் "இந்தவிசை யொழுக்கம் வந்து சூழ்ந்ததே! யிவடன்னோடு, மந்தமில சிவனருள் சேர்வன" என்னுமாதரவு பொங்க இறைவருடன் அணையவேண்டிச் செயல் புரிந்த (3140) நிலை யென்னையோ? எனின், அஃது ஆண்டு விளக்கப்படும்; கண்டு கொள்க.

கண்டார் தமைத்தொழுது மனங் களித்தார் - பிள்ளையார் உடன்பட்டருளியதற்கு அவரைத் தொழாது இறைவரைத் தொழுதனர்; இவ்வாறு உடன்பட்டருளியது இறைவர் திருவருட் செயலேயாம் என்ற கருத்துப்பற்றி. மேல்வரும் பாட்டுப் பார்க்க. பிள்ளையாரும் பின்னர்க் "குலமணம் புரிவித்தார் தமக்கோயில்" (3141) என்று கருதியது காண்க.

பிறை - புனல் - அரவு - கறை - இவை ஒன்றற்கொன்று மாறுபட்ட தன்மையுடையன; எனவே இங்குச் சுற்றத்தார் வேண்டியதும், பிள்ளையார் முன்னர் மறுத்தும் பின்னர் இசைதலும், பின்னர் வரலாற்று நிகழ்ச்சியும் இவ்வாறே அமைவன என்பது குறிப்பு.

வாழும் - வாழும் - அவ்வாறு மாறுபடினும் அவை உயிர்களின் வாழ்விற்குக் காரணமாவன என்பது குறிப்பு. 1159

3058. திருஞான சம்பந்தர் திருவுள்ளஞ் செய்ததற்குச்
தருவாய்மை மறையவருந் தாதையருந் தாங்கரிய
பெருவாழ்வு பெற்றாராய்ப் "பிஞ்ஞகனை ருரு"ளென்றே
உருகாதின் றினபமுறு முளமகிழ்ச்சி பெய்துவார்; கககசுO

3059. "ஏதமில்சீர் மறையவரி லேற்றகுலத் தோடிசைவால்
காதர்திருப் பெருமணத்து நம்பாண்டார் நம்பிபெறுங்
காதலியைக் காழிநா டுடையபிரான் கைப்பிடிக்கப்
போதுமவர் பெருந்தன்மை" யெனப்பொருந்த வெண்ணினர்.

3058. (இ - ள்) *திருஞான சம்பந்தர்...செய்ததற்கு* - திருஞான சம்பந்தர் இவ்வாறு திருமணம் உடன்பட்டுத் திருவுள்ளஞ் செய்ததற்காக; *பெருவாய்மை...பெறுநராய்* - பெரிய வாய்மை மறையவர்களும் தாதையாராகிய சிவபாதவிருதயரும் அளவிட்டுத் தரித்தற்கரிய பெரிய வாழ்வினைப் பெற்றவர்களாகி; *பின்னுநன்றா...எய்துவார்* - இஃது இறைவரது திருவருளேயாம் என்றே துணிந்து மனமுருகி இன்பம் பொருந்திய மனமகிழ்ச்சி யடைவாராகி; ௧௧௬௦

3059. (இ - ள்) *ஏதமில சீர்...இசைவால* - குற்றமற்ற மறையவர் மரபிலே பொருந்திய குலம் முதலியவற்றினோடு இசைவாகியதனால; *நாதர்...பெருந்தன்மை* - இறைவரது திருப்பெருமணநல்லூரில் வாழும் நம்பாண்டார் நம்பி பெற்ற அருமகளார் சீகாழித் தலைவராகிய பிள்ளையார் திருமணம் செய்தருளுவதற்கு அவரது பெருந்தன்மை தகுதியுடையதேயாம் என்று பொருத்தமுற எண்ணினார்கள். ௧௧௬௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3058. (வி - ரை) *திருஞான சம்பந்தர் திருவுள்ளஞ் செய்ததற்கு* - உலகிறந்த சிவஞான முணரப்பெற்றவரா யிருந்தும் உலகியல்வழி ஒழுக இயைவாறு இசைவு தந்தமைக்கு என்பார் திருஞான சம்பந்தர் என்ற பெயராற் கூறினார். மேலும் (3060) இவ்வாறே காண்க. திருஞான சம்பந்தர் ஆயினும் என்க.

*வாய்மை* - மறைக்கு அடைமொழி, இறைவர் வாக்கு ஆதலின் மறையவர்க்காக்கி யுரைப்பினுமாம்.

*தாங்கரிய பெருவாழ்வு* - தரித்தற்கரிய - அடங்காத - மட்டற்ற பெரிய வாழ்வு.

*பின்னுநன்றா அருள் என்றே உருகா நின்று* - இஃது இறைவர் தம்பாற் செய்த பேருளேயாம் என்றே துணிந்து கொண்டதனால் மனமுருகினார்; முன் "கண்டுத் தார் தமைத்தொழுது" (3057) என்றதனை விரித்தபடி; தொழுத பின்னர் மேலும் எண்ணி எண்ணி மனமுருகினார் என்றதுமாம்.

*எய்துவார்* - எண்ணினார் என மேல்வரும் பாட்டுடன் முடிக. ௧௧௬௦

3059. (வி - ரை) *ஏதமில்சீர் மறையவர்* - இருக்கு மறையவர் என்று வேதியர் மரபினை, ஏதமில்சீர் என்றது மறையவர்களுள் சிலர் பார்ப்பனர் சாபங்களால ஈடுண்டு ஒதுக்கவும்பட்டமையால், அதுபற்றியும் "இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅ திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி,......மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து இருபிறப் பாளர்" (திருமுருகு) என்றவை முதலிய இப்பெருமொழிகளால் இவ்வாறு அடைமொழிகளால் விதந்தோதினார். ஏதமில் என்ற எதிர்மறையானும், சீர் என்ற உடன்பாட்டானும் கூறியபடி. மேல் பெருந்தன்மை - பெரிய தகுதி என்பதும் கருதுக.

*ஏற்ற தலம்* - மணத்திற்குரிய கோத்திரம் பிரவரம் முதலிய உட்பிரிவுகள்; "தரு மறைக் கோத்திரத்திற் றலைகுலம்" (1 .3)

*பெருமணம்* - திருநல்லூர்ப்பெருமணம் என்ற பதி; பெருமணத்துள் வாழ்கின்ற.

*நம்பாண்டார் நம்பி* - பிள்ளையாரது தேவியாரின் பிதா; இவர் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி வேறு. நம்பி - சிவபூசைக் குரிமை காட்டிய பெயர்.

*பெறும் காதலி* - பெற்ற மகளார்; காதலி - காதற் குரித்தாகிய மகள்.

*கைப்பிடிக்க* - திருமணஞ் செய்தருள, பாணிக்கிரகணம் என்பது வடமொழி வழக்கு; அதற்கு நேர் தமிழ்வழக்காற் கூறினார்.

அவர் பெருந்தன்மை போதும் - என்க ; போதும் - தகுதியாகும் ; அமையும். எண்ணினார் - எண்ணித் துணிந்தார்கள் ; "எண்ணித் துணிக கருமம்" (குறள்). 1161

3060. திருஞான சம்பந்தர் சீர்பெருக மணம்புணரும்
பெருவாழ்வு திருத்தொண்டர் மறையவர்கண் மிகப்பேண
வருவாரும் பெருஞ்சுற்ற மகிழ்சிறப்ப, மகட்பேசத்
தருவார்தண் பணைநலலூர் சார்கின்றார் தாதையார். ௧௧௬௨

3061. மிக்கதிருத் தொண்டர்களும் வேதியரு முடனேகத்
திக்குநிகழ் திருநல்லூர்ப் பெருமணத்தைச் சென்றெய்தத்,
தக்கபுகழ் நம்பாண்டார் நம்பிதா மதுகேட்டுச்
செக்கர்முடிச் சடையார்தந் திருப்பாதந் தொழுதெழுவார். ௧௧௬௩

3062. ஒப்பரிய பேருவகை யோங்கியெழு முள்ளத்தால்
அப்புநிறை குடம்விளக்கு மறுகெல்லா மணிபெருக்கிச்
செப்பரிய வார்வமிகு பெருஞ்சுற்றத் தொடுஞ்சென்றே
"யெப்பொருளு மெய்தினே" னெனத்தொழுதங் கெதிர்கொண்டார்.

3060. (இ - ள்) திருஞான சம்பந்தர்...பெருவாழ்வு - திருஞான சம்பந்தப் பிள்ளையார் சிறப்புப் பெருகும் திருமணம் புணரும் பெருவாழ்வினைப் பற்றி ; திருத் தொண்டர்...மகிழ் சிறப்ப - திருத்தொண்டர்களும் மறையவர்களும் மிகப் பேணவும், வருவார்களாகிய பெருஞ் சுற்றமும் மகிழ்ச்சி மிகப் பெறவும் ; மகட்பேச - மகட் கொடையினைப் பற்றிப் பேசும்பொருட்டு ; தருவார் தண்பணை நல்லூர் சார்கின்றார் தாதையார் - தருக்கள் நிறைந்த குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த - திருப்பெருமண நல்லூரினைச் சார்கின்றாராகிய தாதையார் ; ௧௧௬௨

3061. (இ - ள்) மிக்க...உடன் ஏக - மிகுந்த திருத்தொண்டர்களும் மறையவர்களும் உடன் செல்ல ; திக்கு நிகழ்...எய்த - எல்லாத் திக்குக்களினும் நிகழ்கின்ற திருநல்லூர்ப்பெருமணத்தினைச் சென்று சேர ; தக்கபுகழ்...தொழுதெழுவார் - தகுந்த புகழினையுடைய நம்பாண்டார் நம்பிகளும் அவரது வரவினைக் கேட்டுச் செவ் வானத்தை ஒத்த சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவடிகளைத் தொழுது எழுவாராகி ; ௧௧௬௩

3062. (இ - ள்) ஒப்பரிய...உள்ளத்தால் - ஒப்பில்லாத பெருமகிழ்ச்சி ஓங்கி மேலெழும் மனத்தினோடு ; அப்பு நிறை...அணிபெருக்கி - நன்னீர் நிறைந்த குடமும் விளக்கும் வைத்து வீதியை யெங்கும் மிக அலங்கரித்து, செப்பரிய...சென்றே - சொல்லுதற்கரிய ஆசை மிகுகின்ற பெருஞ் சுற்றத்தாருடன் சென்றே ; எப்பொரு ளும்...எதிர்கொண்டார் - "உறுதிப்பொருள்க ளெல்லாவற்றையும் நான் அடைந்தவ னாயினேன்" என்று கூறித் தொழுது அங்கு அவர்களை எதிர்கொண்டனர். ௧௧௬௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3060. (வி - ரை) திருஞான சம்பந்தர் - இப்பெயரால் கூறிய குறிப்பு முன் (3058) உரைக்கப்பட்டது.

சீர் பெருக - உலகம் சிறப்பினால் மேன்மேலும் ஓங்கி வளர ; இது பின்னர்த் திருமண நிகழ்ச்சியின் விளைவுகளிற் காண்க.

பெருவாழ்வு - அதனை எவரும் தாந்தாம் பெற்ற பெருவாழ்வாகக் கொண்டனர் என்பது.

திருத்தொண்டர் - முதன்மையிற் கூறப்பட்டது சிறப்பு நோக்கி.

மிகப் பேண வருவார் (ஆகிய) பெருஞ் சுற்றமும் - என்று கூட்டி உரைத்தலுமாம்.

மகிழ் சிறப்புச் சார்கின்றார் - என்று கூட்டி முடிக்க.

தருஆர் தண்பணை நல்லூர் - தரு - பயன மரங்கள் ; விளைவும் தண்மையும் குறித்தது, இனி நிகழும் திருமணத்தின் பயனும விளைவும ஆகியவற்றுக்கு இருப்பிடமாதற் குறிப்புப்பற்றி ; இவை பெண்மையின தன்மை குறிப்பது எனபாருமுண்டு.

தருவார் - மகட்பேச இசைந்து மகளைத் தருவாராகிய நம்பாண்டாரது ஊர் என்ற முற்குறிப்பும காண்க. தருவார் - மேலாகிய வீடு தருவாகிய சிவலோகத் தியாக ருடைய என்ற குறிப்பும காணக.

சார்கின்றார் - சாாகின்றாராகிய ; வினைப்பெயா. பண்பு குறித்து நின்றது.

மகிழ் சிறப்புத் தருவார் - தாதையார் என்று கூட்டி சுற்றத்தாருக்கு மகிழ சிறப்புத் தரும் பொருட்டு (தருவாராகிய) தாதையாா சார்கின்றா என்றுகூட்டி உரைத்தனா முன்னுரைகாரா

மிகப் பேணி—மகிழ்வெய்த—எனபனவும பாடங்கள் 1162

3061 (வி - ரை) மிக்க...ஏக - மிக்க திருத்தொண்டர்கள் - முன பாட்டிற் கூறியது காணக ; மிக்க - சிறப்பினுள் மிகக, தொகையாலும் மிகுந்த என்றலுமாம்.

திக்கு நிகழ் - திக்குகளிலும் பெருமை நிலவும் என்றது முதலிற் திருவிளை வரையாது வழங்கும் "சிவலோகத் தியாகப் பெருமான" விளங்க எழுந்தருளும இடமாதற் குறிப்பு. திருநல்லூர்ப் பெருமணம் - பதியின பெயா.

தக்கபுகழ் - "போதமலா பெருந்தனமை' (3059) என்றபடி இவாகள் சென்று மகட்பேசத் தருந்த பண்புடைய புகழ் கேட்டு - முன்னறிவிப்பாக வருவாா சொலக் கேட்டு. நமபாண்டாரும மிகப பெரிய சுற்றமுடையாா எனபது ; (3064)

சேக்கர்...தொழுதெழுவார் - இஃது சிவபெருமா னருளேயாம என்று துணிந்து அவரைத் தொழுது பினனரே மேற்காரியம செயயும பணியினின்றா. பிள்ளையார் திருமண மிசைந்தபோது மறையவரும தாதையாரும இது சிவனருள் என்று தொழுதமை காணக. இவவாழவு பெறத் தாம தகுதியற்றவராயினும சிவபெருமான கருணையினல அருளியவாறும எனபது குறிப்பு ; மேல, "எப்பொருளும எய்தினேன" (3062) என்றும், "அனபே றநதணாபா லருளுடைமை யாம" (3064) என்றும் கூறுதல காணக ; இவவாறு தமமை எணணுதல பெரியோரியல்பு. "பூதி யணிசாத னத்தவர்முன போற்றப போதே னுயிடினும, நாத னடியாா கருணையினா லருளிச செயவர் நானென்று" (சிறத. புரா - 45) என்ற கருத்துக காணக. 3065-ம பார்கக.

எழுவார் - பெருக்கிச் - சென்றே - எதிர்கொண்டார் என வரும பாட்டுடன் முடிகக. 1163

3062. (வி - ரை) அப்புநிறை குடம்......அணி பெருக்கி - நிறை குடமும் விளக்கும வைத்து வீதியலங்கரித்து எதிர்கொளளுதல திருத்தொண்டர்களையும் அருளுடைய பிள்ளையாரது தொடர்பு மேற்கொண்டு வரும மறையவர்களையும் எதிரேற்கும் முறையாகும். "போதமலா பெருந்தனமை" (3059) என்ற குறிப்பின் உண்மை நன்கும் மேலும் வைத்துக் காணக.

மறுகெல்லாம் - வீதியெங்கும் ; அப்பு - வாச நன்னீர். நிறை குடமும் விளக்கும் வைத்து என்க. அணி - வாழை - தோரணம் முதலிய பிற அலங்காரங்கள்.

பெருஞ் சுற்றம் - பெருமையாவது அணிமையிற் சிவனடி சாரப் பெறும் பேறு வாய்ப்புள்ளமை குறிப்பு. பின்னரும் "பாரிலவு கிளை" (3148) என்பார்.

எப்பொருளும் எய்தினேன் - உம்மை - முற்றும்மை. எப்பொருளும் என்றது பதமுத்தியும் பரமுத்தியும் படிமுறையால் நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதி என நூன்முடிபு கூறும் உறுதிப்பொருள்கள் எல்லாமும். உண்மையாகவே ஈண்டு எல்லாவற்றுள்ளும் சிறந்த வீடுபேறு எய்தி முடிந்தது காண்க.

எய்தினேன் - தெளிவுப்பொருட்டு. "வாராக் காலத்து வினைச்சொற் கிளவி, சிறப்பினு நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்றும், இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை" (தொல். சொல். வினையி - சஅ) என்பதிலக்கணம் ; எய்தினவனாயினேன் ; எனது பிறவி பயன்பெற்றது என்பது.

தொழுது - பிள்ளையார் சார்பினரும் திருத்தொண்டரும் ஆதலின் தொழுதல் முறை என்க. அந்த - நல்லூர் சார்கின்ற அவ்விடத்து.

விளக்கால்—என்பதும் பாடம். 1164

3063. எதிர்கொண்டு மணிமாடத் தினிலெய்தி யின்பமுறு
மதுரமொழி பலமொழிந்து வான்முறையாற் சிறப்பளிப்புச்
சதுர்முகனின் மேலாய சண்பைவரு மறையவரும்
முதிருணர்வின் மாதவரு மணைந்ததிற மொழிகின்றார் ; ககசுடு

3064. "ஞானபோ னகருக்கு நற்றவத்தி னொழுக்கத்தால்
ஊனமில்சீ லத்தும்பான் மகட்பேச வந்த"தென
"ஆனபே றந்தணர்பா லருளுடைமை யா"மென்று
வானளவு நிறைந்தபெரு மனமகிழ்ச்சி யொடுமொழிவார், ககசுசு

3065. "உம்முடைய பெருந்தவத்தா லுலகனைத்து மீன்றளித்த
அம்மைதிரு முலைப்பாலிற் குழைத்தவா ரமுதுண்டார்க்
கும்முடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்றோம் ;
வம்மி"னென வுரைசெய்து மனமகிழ்ந்து செலவிடுத்தார். ககசுஎ

3063. (இ - ள்) எதிர்கொண்டு...சிறப்பளிப்ப - எதிரேற்று அழைத்துக் கொண்டு சென்று மணிமாடத்தின்கண் சேர்ந்து இன்பம் பொருந்து மதுரமொழிகள் பலவற்றையும் சொல்லி முறைமைப்படி உபசரித்து விருந்து முதலாகிய சிறப்புகளையும் நம்பாண்டார் நம்பியார் செய்ய ; சதுர்முகனின்...மறையவரும் - பிரமதேவனின் மேம்பட்ட சீகாழி மறையவராகிய சிவபாதவிருதயரும் ; முதிருணர்வின் மாதவரும் - கல்வி கேள்விகளால் முதிர்ந்த வுணர்வினையுடைய திருத்தொண்டர்களும் ஏனை வேதியர்களும் ; அணைந்த திறம் மொழிகின்றார் - தாங்கள் வந்து அணைந்த திறத்தினை மொழிகின்றார்களாகி ; ககசுடு

3064. (இ - ள்) "ஞானபோனகருக்கு...வந்தது" என - ஞானவமுதுண்டருளிய பிள்ளையாருக்கு நல்ல தவம் பொருந்திய இனிய ஒழுக்கத்தினாலே குற்றமற்ற சீலத்தினையுடைய உமது மகளை மணம் பேச நாங்கள் வந்துள்ளோம்" என்று எடுத்துச் சொல்ல ; "ஆனபேறு...அருளுடைமையாம்" என்று - "இவ்வாறு வரப்பெறுத

லான பேறு அந்தணராகிய நீங்கள் என்மேல் வைத்த அருளுடைமையின்பாலதேயாகு மன்றி எனது தகுதிப்பற்றிய தன்று" என்று; வானளவு...மொழிவார் - ஆகாயம் போல நிறைந்த பெரிய மனமகிழ்ச்சியுடனே சிவபாதவிருதயரை நோக்கி நம்பாண்டார் நம்பியார் சொல்வாராகி; ௧௧௬௩

3065. (இ - ள்) "எம்முடைய. வமயின" என - "உம்முடைய பெரிய தவத்தினாலே, உலகங்களெல்லாம் பெற்றெடுத்த அம்மையாகிய உமையம்மையாரது திருமுலைப்பாலிற் குழைத்த சிவஞான நிறைவாகிய அமுதத்தினை உண்டருளிய பிள்ளையாருக்கு எம்முடைய குலக்கொழுந்தாகிய காதலியாரை யாங்கள் உய்யும்பொருட்டு மணத்தால் தருகின்றோம் நாருங்கள்" என்று, உரை செய்து மனமகிழ்ந்து - வாக்கினால் எடுத்துக் கூறி மனத்தினுள் மகிழ்ச்சி பொருந்தி; செலவிட்டார் - அவர்களைச் சீகாழியிற் செல்லும்படி விடுத்தனர். ௧௧௬௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3063. (வி - ரை) மணிமாடம் - பிள்ளையாரது தேவியாராகும் அம்மை அவதரித்து வளரும் இடமென்று குறிக்க இவ்வாறு கூறினார், மணி உதித்து வளரும் மாடம் என்ற குறிப்புமாம்.

இன்பமுறு மதுரமொழி - இன்மொழி கூறல் என்ற நிலைபற்றித் திருவள்ளுவர் உரைத்தவை எல்லாம் ஈண்டுக் கருதத் தக்கன

வான்முறையாற் சிறப்பளிப்ப - வான்முறையாவது திருத்தொண்டரை எதிருபசரிக்கும் நிலையும், விருந்தோம்பல் நிலையும், பிறரை எதிர்கொள்ளும் நிலையும்பற்றிய முறைகளின் நிரல். சிறப்பு - உபசாரம் - விருந்து முதலாயின

சதுர்முகனின் மேலாய - மறையவர் - எனக; இதுகுச் சிவபாதவிருதயரைக் குறித்தது. வேதமோதுதல், வேத நியமத் தலைநிற்றல் முதலிய மேம்பாடுபற்றிக் கூறியது; மேலாய - சதுர்முகன் வேதமோதிப் பலவுயிர்களையும் படைத்தும் செத்துச் செத்து மீளமீளப் பிறவிக்குள்ளாகின்றான், சிவபாதவிருதயர் தவஞ் செய்து பிள்ளையார் ஒருவரையே பெற்றுப் பிறவியில்லாப் வீட்டுநிலை பெறுகின்றனர் என்ற மேம்பாட்டுக் குறிப்பு; "உம்முடைய பெருந்தவத்தால்" (3065) என்று நம்பாண்டார் பின்னர்க் கூறும் குறிப்பும் காண்க. வந்த காழி மறையவர் என்றலுமாம்

முதிருணர்வின் மாதவர் - இவர்கள் வேத மறையவரும் திருத்தொண்டர்களுமாம். முதிருணர்வின் - என்றது முதிர்ந்த அறிவுடையவர்களையே மகட்பேசும் இக்காரியத்தில் செலுத்துதல் மரபாம். "குலமுத லறிவின் மிக்கார்" (154); "மேலோரைச் செலவிட்டார்" (1288), 'முதியோர" (882).

முதிருணர்வாவது கல்வி-கேள்விகளாலும், உலகியலனுபவத்தாலும், இயற்கையறிவாலும் வருவது.

அணைந்த திறம் - கருதிவந்த செயலினை, இரண்டனுருபு தொக்கது.

மொழிகின்றார் - என - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டுக. 1165

3064 (வி - ரை) ஞானபோனகருக்கு - மணத்திறத்தில் மகட்பேசத் தொடங்குகின்றாராதலின் முதலில் மணமகனது தன்மைபற்றி இவ்வாறு எடுத்துக் கூறியபடி. நாடு முழுமையும் விளக்கமாயறியப்பட்டிருந்த இப்பெயர்பற்றிக் கூறியமாத்திரையே மணமகனது ஊர் - பெயர் - மரபு - குலம் - குடி - தன்மை - குணம் முதலியவாய் இப்பேச்சினில் விளக்க வேண்டுவனவாய் உள்ள எல்லாம் விளங்கவைத்தனர் என்க; யாதும் அடைமொழியின்றிக் கூறிய திறமும் இக்கருத்தது.

நற்றவத்து - உம்பால் - மகட்பேச - இனி, மகட்பேச்சின் பிறத்து அடுத்து வருவது மணமகளின் நிறமாதலின் அதனைச் சிவபாதவிருதயரும் பிறரும் தாங்கள் அறிந்து துணிந்துகொண்டவாறு இவ்வாற்றாற் கூறியபடி; உமது தகுதியும் உமது மகளாரின் தகுதியும் அறிந்தபடியே மகட்பேச வந்தோம் என்பது குறிப்பு. (3059) பார்க்க. "குணம் பேசிக் குலம்பேசி" (1289) என்றவாறெல்லாம் மகட்கொடை துணிதற்கு முன்னர்ப் பேசி யறியவேண்டியவை எவையுமில்லை என்று இருதிறமும் நிலை கூறியபடி காண்க.

ஆனபேறு...ஆளுடைமையாம் - என்றே - என்பால் மகட்பேச வரலான பேறு நான் பெறுதற்கு அந்தணர்களாகிய நும்பால் நின்ற அருளுடைமையேயன்றி எனது தகுதி காரணமன்று என்றபடி. ஆனபேறு - பிள்ளையார் திருமணஞ் செய்தற்குத் திருவுள்ளம் பற்றிய பேறுனது; அந்தணீர்......என்று - மறையவர்கள்பால் திருவருளுடைமையினாலாம் என்பது திரு. ராம. சொ. ஐயா அவர்கள் குறிப்பு.

வானளவு நிறைந்த - ஏனைய எல்லாப் பூதங்களினும் நிறைந்து அவற்றுக்கு இடங் கொடுத்து ஓங்கிநிற்கும் வானம்போலத் தம்முள் எங்கும் நிறைந்து நிமிர்ந்த மனமகிழ்ச்சி. அளவு - உவமஉருபு. ஆகாயம் வரை உயர்ந்த என்றலுமாம்.

மொழிவார் - உரை செய்து - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

மகட்பேசி—என்பதும் பாடம். 1166

3065. (வி - ரை) உம்முடைய பெருந்தவத்தால்...வம்மின் - என்றது நம்பாண்டார் தம்பால் மகட்பேசிய சிவபாதவிருதயரை நோக்கிக் கூறியது; பெருந்தவத்தால் அமுதுண்டார்க்கு என்று கூட்டுக.

உம்முடைய...அமுதுண்டாருக்கு - உலகறிந்த பெருமையுடையாராதலின் பெயர் மாத்திரையால் "ஞானபோனகருக்கு" (3064) என அவர் கூறியவாறே நம்பாண்டாரும் அப்பெருமைகளைத் தாம் உணர்ந்துகொண்டபடியை விரித்துரைத்தவாறு.

ஆரமுது - சிவஞானம்; ஆர்தல் - எல்லா வுயிர்களினும் நிறைந்து பயன் தருதல்.

எம்முடைய...தருகின்றேம் - மகட்கொடை செய்வோர் மகளைப்பெறும் வீட்டாருக்கு உய்திபெறும் ஒரு கும்பம் உததாரணம்-நிலைநாட்டுதல் - ஆகிய உதவி செய்கிறார்கள் என்பது அறநூல் விதி; இங்கு அவ்வாறன்றி நம்பாண்டார் தமது மகட்கொடையினால் தாமும் தமரும் உய்வதாகக் கொண்டு கூறுதல் நோக்கத்தக்கது; உண்மையில் இந்த மகட்கொடையின் பயனாக அவரும் தமரும் உலகமெல்லாமும் திருமணத்தில் உய்யப் பெற்று வீடுபெறும் நிலை எண்ணிக் கருதத்தக்கதாம். தருகின்றேம் - தம்மையும் தமது மனைவியாரையும் தமர்களையும் உளப்படுத்திக் கூறிய உளப்பாட்டுப் பன்மை.

வம்மின் - மணநிகழ்வதற் குரியவற்றைச் செய்து வாருங்கள்.

செலவிடுத்தார் - இசைவு தந்து சீகாழிக்குச் சென்று உரியவாறு வரும்படி விடைகொடுத் தனுப்பினார். 1167

3066. பேருவகை யாலிசைவு பெற்றவர்தா மீண்டணைந்து
காருலவு மலர்ச்சோலைக் கழுமலத்தை வந்தெய்திச்
சீருடைய பிள்ளையார்க் கவர்சேர்ந்த படிசெப்பிப்
பார்குலவுந் திருமணத்தின் பான்மையினைத் தொடங்குவார்; கககூஅ

3067. திருமணஞ்செய் கலியாணத் திருநாளுந் திகழ்சிறப்பின்
மருவியவோ ரையுங்கணித மங்கலநூ லவர்வகுப்பப்

பெருந்திருமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி
அருள்புரிந்த நன்னாளி லணிமுளைப்பா லிகைவிதைத்தார். ௧௧௬௬

3066. (இ - ள்) பேருவகையால...மீண்டணைந்து - மிக்க மகிழ்ச்சியினால் நம்பாண்டாரின் இசைவினைப் பெற்ற சிவபாதவிருதயர் முதலியோர்கள் மீண்டு சென்று; கார் உலவு.. எய்தி - மேகங்கள் தவழ்கின்ற மலர்ச்சோலைகள் சூழ்ந்த சீகாழிப் பதியினில் வந்து சேர்ந்து; சீருடைய செப்பி - சிறப்புப் பொருந்திய பிள்ளையாரிடம் நம்பாண்டார் இசைவு தந்தபடியினை விரித்துக் கூறி; பார்குலவு .தொடங்குவார் - உலகம் விளங்கும் திருமணத்தின் பகுதிகளைச் செய்யத் தொடங்குவார்களாகி; ௧௧௬௭

3067. (இ - ள்) திருமணஞ் செய...வகுப்ப - திருமணஞ் செய்கின்ற கலியாணத் திருநாளினையும் விளங்கும் சிறப்பினுடன் கூடிய ஓரையினையும் கணித மங்கல நூலுணர்ந்த பெரியோர்கள் வகுத்துக் கூற; பெருகு ..போக்கி - பெருகும் மணத் திருநாளோலையினைப் பெரிய சிறப்பினோடு மணமகள் வீட்டாருக்கும் ஏனைச் சுற்றத்தார் முதலியோர்க்கும் போக்கி; அருள் புரிந்த ..விதைத்தார் - திருவருள் புரிந்து கொடுத்த நல்ல நாளிலே அழகிய பாலிகைகளில் அழகிய முளையை விதைத்தார்கள்

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

3066 (வி - ரை) பேருவகையால் இசைவு என்றும், இசைவு பேருவகையாற் பெற்றவர்கள் என்றும் கூட்டியுரைக்க நின்றது; பேருவகையால் இசைவால் - "ஒப்பரிய பேருவகை யெய்தி" (3062), "அளவிலாத பெருமகிழ்ச்சி" (3064); "யாமுய்யத் தருகின்றோம்" (3065) என்பனவற்றால் முன் உரைக்கப்பட்டது

கழுமலம் - சீகாழியின் 12 வது திருப்பெயர்.

கார் உலவு மலர்ச்சோலை - மேகங்கள் தவழும் மலர்ச்சோலை என்றும், மேக மண்டலங்கள் வரை உயர்ந்து அங்கு உலவும் சோலை என்றும் உரைக்க நின்றது.

பார்குலவு திருமணம் - பார்குலவு - உலகம் விளங்குதற்கு ஏதுவாம் நிலைமை பின் நிகழ்ச்சியிற் காண்க. பார்குலவு - உலகில் என்றும் விளங்கக் கொண்டாடும் என்றலுமாம்.

திருமணத்தின் பான்மை - பான்மை - உரிய செயல்களின் பகுதிகள்

தொடங்குவார் - போக்கி விதைத்தார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க நாளோலையினை நம்பாண்டார் நம்பி ஏற்றும் சிறப்பு மேல் (3069) உரைப்பார்.

இசைவு பெற்றவர் - சிவபாதவிருதயரும் மறையவரும் திருத்தொண்டர்களும்.

பான்மையினை தொடங்குவார்—என்பதும் பாடம் 1168

3067 (வி - ரை) திருமணஞ் சேர் கலியாணத் திருநாள் - கலியாணம் - நன்மை - சுபம் - மேன்மை என்ற பொருண்மை குறித்து நின்றது; இது வடமொழி வழக்கு தமிழிற்போலக் கல்யாணம் என்ற சொல் வடமொழியில் மணம் என்ற பொருள் தருவதில்லை என்ப; திருநாள் - நல்லநாள்

திகழ் சிறப்பின் மருவிய ஓரை - அந்நாளின் நல்ல பகுதி, ஓரை - இலக்கினம் என்பர். 2½ நாழிகைகொண்ட கூறு; ஆங்கிலத்து Hour = மணி என்பது இப்பகுதியினின்றும் போந்தது போலும், ஓர்ந்து பெறுவதனால் ஓரை என வந்ததென்பாருமுளர்; அது பொருந்தாது.

கணித மங்கல நூலவர் - சோதிடர்; கணிதம் - கணக்குச்செய்து கோள்களின் நிலையும் பயனும் முதலியவற்றைக் காண்போர்; நூல் - சோதிட நூல். மங்

கல நூலவர் - மறையின் ஆறு அங்கங்களுள் ஒன்றாதலின் இப்பெயராற் கூறினர். கணித நூலவர் - என்றலே அமையுமாயினும் இங்கு மங்கல நல்வினைபற்றித் தொழிற் பட வருதலான் மங்கல நூல் என்றார். இனி இச்சோதிடர் வினை உலகினர் பக்கல் வரும் நன்மைகளுக்கு வகுக்கும் நாளும் ஓரையும் மங்கலமென்ற பெயராற் சொல்லி னும் அஃது உபசாரமாத்திரையானன்றி உண்மையிற் பொருந்தா ; என்னை ? அந்த மங்கலமெனப்படுவன வெல்லாம் ஒருகாலத்து அழிவுபட்டு அமங்கலங்களாக முடிவ தொருதலையாதலின் எனக ; ஆயின இங்குக் கணித மங்கல நூலவர் வகுத்த நாளும் ஓரையும் அத் திருமணத்தைச் சார்ந்த எல்லாருக்கும் நித்திய மங்கலமாகிய அழிவில் லாத சிவத்திருமண மங்கல நிலையைப் பயப்பித்தன. அதகுறிப்புப்பட மங்கலச்சொற் புணர்த்திக் கூறினர் என்றலுமாம். இராமனது முடிசூட்டுக்காக வகுத்த நாளே அவன் முடிதுறந்து காட்டுக்குப் போகும் நாளாக ஆயினமையால் அதனை வகுத்த கணிதாகளைக் "கணித மாக்கள்" என்றும், அந்நாளினை "முடிபுனை கடிகை நாள்" என்றும் கூறிய கம்பனது குறிப்பு இங்கு வைத்துக் காணத்தக்கது.

பெருகு மணநாளோலை - மணத்தின் நன்னாளும் ஓரையும் குறித்தெழுதிய வோலை ; "நாளோலை விட்டார்" (156) ; ஓலை ஏந்திக......குறுகினர் ; எதிரே வந்து......கொண்டார் (157) என்றதும் பிறவும் காண்க.*

போக்கி - மணமகள் வீட்டாருக்கு உரியவாறு நாளோலை ஏந்திக்கொண்டு சேர்த் தலும், ஏனைய சுற்றத்தார்பால் போக்கிச் சேர்க்கலும் ஆம்.

அருள் புரிந்த நன்னாள் - அருள் புரிந்த - கணித மங்கல நூலவர் வகுத்துத் தந்த. திருமணச் சார்புகொண்ட யாவரும் சிவனடி சார்ந்து வீடுபெற்றுய்யும் நன்னா ளாக இஃது ஆகிவிடும்படி முன்னரே இறைவர் கருணை செய்தளித்த என்ற குறிப்பும் காண்க. "திருமணஞ்செய் திருநாளுக் கெழுநாளா நன்னாள்" என்றபடி முன் ஏழா நாளில் பாலிகைகளில் முளை தெளித்தல் மரபு. இஃது நூல்விதியாதலின அருள்புரிந்த என்றார் என்றலுமாம். பாலிகைக்குரிய விதையை விதைத்தார் என்க. இவை முளைத்த பின்னர் பாலிகைகளில் முளைபூரித்தல் திருமணநாளுக் கெழுநாளா நன்னா ளில நிகழுமென்பது பின்னர்க் கூறப்படும் (3070). இவ்வாறு நாட்குறித்துத் திரு மணத்துக்குரிய பகுதிகளைத் தொடங்குதல் முன்னாளில நமது பெரியோர் வழக்கும், நூல் விதியுமாம். 1169

3068. செல்வமலி திருப்புகலிச் செழுந்திருவீ திகளெல்லாம்
மல்குநிறை குடமவிளக்கு மகரதோ ரணநிரைத்தே
எல்லையிலா வொளிமுத்து மாலைகளெங் கணுநாற்றி
அல்குபெருந் திருவோங்க வணிசிறக்க வலங்கரித்தார். கக௭0

(இ - ள்) செல்வமலி...நிரைத்தே - செல்வம் மலிகின்ற சீகாழிப் பதியின் செழிப்புடைய திருவீதிகள் எல்லாவற்றையும் பொருந்திய நிறைகுடங்களையும் விளக்கு களையும் மகர தோரணங்களையும் வரிசையாக அமைத்தே ; எல்லையிலா...நாற்றி - அளவுபடாத ஒளியினையுடைய முத்துமாலைகளை எங்கும் தொங்கவைத்து ; அல்கு பெரும்...அலங்கரித்தார் - மிக்க பெரிய திரு ஓங்கும்படி அழகு விளங்க அலங்காரம் செய்தார்கள்.

---

*இதுபற்றியும் மணச் செயல்கள் பற்றியும் எனது சேக்கிழார் 73-78 பக்கங் கள் பார்க்க.

(வி - ரை) செல்வம் - அருட்செல்வமும் பொருட்செல்வமும்.

செழுந் திருவீதிகளெல்லாம் - நிரைத்தே - நாற்றி - அலங்கரித்தார் - என்று கூட்டுக. செழும் திரு - செழுமை - மாடங்களின் செல்வச் சிறப்பும் மங்குலை நிறைந்த மங்கலமும். திரு - மறைவளர் திரு; முன்னமே அணி நிறைந்த திருவீதிகளைத் திருமணத்தின் பொருட்டு மேலும் நிறைகுடம் விளக்கு முதலியவற்றால் அலங்கரித்தனர் என்க. நிரைத்தே - வரிசை பெற அமைத்தே; நிரை - வரிசை.

எல்லையிலா ஒளி முத்துமாலைகள் - நாற்றி - முத்துக்களின் ஒளியின் சிறப்புப் பற்றி முன்னர் விறன்மிண்ட நாயனார் புராணத்தில் உரைத்தவையும், "சோதி முத்து - நீற்றொளி" (2114) என்றவிடத் துரைத்தவையும், பிறவும் பார்க்க. ஈண்டு முத்துமாலைகள் நாற்றியது - (முத்து விட்டது) வீடுபேற்றின் குறிப்பு பிள்ளையாரைத் திருமணக்கோலம் செய்தல் முற்றும் முத்துக்களாலே அமையும் நிலை பின்னர்க் காண்க. அஃது பெருந்திரு ஓங்க - என்றதும் அக்குறிப்பு பெருந்திரு - திரு எல்லாவற்றுக்கும் மேலாகிய சிவபோகமாகிய முத்தித் திருவின் தன்மை.

திருவோங்க அணி சிறக்க - உள்ளுறை முத்தித் திருவின் தன்மையும், புறத் தோற்றம் உலகிலே அணியுமாம்.

நிறைந்த—என்பதும் பாடம். 1170

குறிப்பு - இப்பாட்டின் கீழ் 3074 "எங்கணும்" என்னும் பாடல் சில பதிப்புக்களில் உள்ளது.

3069. அருந்தவத்தோ ரந்தணர்க ளயலுள்ளோர் தாமுய்யப்
பொருந்துதிரு நாளோலை பொருவிறந்தார் கொண்டணையத்
திருந்துபுகழ் நம்பாண்டார் நம்பிசிறப் பெதிர்கொண்டு
வருந்தவத்தான் மகட்கொடுப்பார் வதுவைவினை தொடங்குவார்,

3070. மன்னுபெருஞ் சுற்றத்தா ரெல்லாரும் வந்தீண்டி
நன்னிலைமைத் திருநாளுக் கெழுநாளா நன்னாளிற்
பன்மணிமங் கலமுரசம் பல்லியங்க ணிறைந்தார்ப்பப்
பொன்மணிப்பா லிகைமீது புனிதமுளை பூரித்தார். ககஎஉ

3069. (இ - ள்) அருந்தவத்தோர்...அயலுள்ளோர் - அரிய தவத்தாராகிய தொண்டர்களும் அந்தணர்களும் மற்றும் அயலில் உள்ளவர்களுமாகக் கூடிய; பொருவிறந்தார் - ஒப்பற்ற பெரியோர்கள்; தாமுய்ய - தாம் உய்யும்படி; பொருந்து திருநாளோலை கொண்டணைய - பொருந்தும் திருமண நாளோலையினை எடுத்துக் கொண்டு வந்து அணைந்தார்களாக; திருந்து புகழ்...எதிர்கொண்டு - திருந்தும் புகழினையுடைய நம்பாண்டார் நம்பி அச்சிறப்பினை முறைமையின் எதிர் ஏற்றுக் கொண்டு; வருந்தவத்தான்...தொடங்குவார் - முன்னைத் தொடர்பினால் வரும் தவத்தின் பயனாலே தம் மகளாரைப் பிள்ளையாருக்கு மணமகளாகக் கொடுப்பாராகித், திருமணத்திற்குரிய செயல்களைச் செய்யத் தொடங்குவாராக, ககஎக

3070. (இ - ள்) மன்னுபெரும்...வந்தீண்டி - நிலைபெற்ற பெரிய சுற்றத்தார்கள் எல்லாரும் (சீகாழியின்கண்) வந்து கூடி; நன்னிலைமை...நன்னாளில் - திருமணமாகிய நன்னிலை பெறும் திருநாளுக்கு ஏழு நாட்களின் முன்னுள்ள நல்ல நாளிலே; பன்மணி...ஆர்ப்ப - பல அழகிய மங்கல முரசம் பலவகை இயங்களும் நிறைந்து

முழுகை; பொன்...பூரித்தார் - பொன்னிட்ட அழகிய பாலிகைகளின்மீது தூய முளையை நிறைத்துத் தெளித்தார்கள். கக௭௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3069. (வி - ரை) அருந் தவத்தோர்களும் அந்தணர்களும் அயலுள்ளோர்களும் ஆகிய பொருவிறந்தோர் - என்க, தவத்தோர் - சிவத்தொண்டு செய்வோர்; அயல் - தொண்டரும் அந்தணருமல்லாத பிறர்.

தாழ்ப்பய - நாளோலை கொண்டுவரும் தாங்களும் அதனைப் பெறும் நம்பாண்டாரும் சுற்றமும் உய்ய என்க. யாழ்ப்பயத் தருகின்றேம் - (3065) என்றதற்கேற்ப நம்பாண்டார் இவர்கள் நாளோலை கொணர்ந்ததைத் தாம் உய்திபெறக் கொண்டு வருதலாக மதித்து ஏற்றனர் என்றலுமாம்.

திருந்து புகழ்-முன்னைப் புகழ் இம் மகட்கொடையினால் மேல் திருந்தும் என்க.

சிறப்பு - நாளோலை கொணரும் மங்கல நிகழ்ச்சி; எதிர்கொண்டு - எதிரேற்றுக்கொண்டு; 156 பார்க்க. வரும் தவமாவது முன்னைத் தொடர்பால் வரும் தவம்.

தொடங்குவார் - இது நல்லூரில் மணமகள் திருமனையினிகழ்ச்சி; மேலவரும் பாட்டிற் கூறுதல் சீகாழியில் மணமகனாகிய பிள்ளையாரது திருமாளிகையின் நிகழ்ச்சி நம்பாண்டார் அங்கு வதுவைவினை தொடங்குவாராக, ஈண்டுச் சுற்றத்தார் ஈண்டிப் பூரித்தார் என இருபாலும் தொடர்புபடுத்தி முடிக்க. மணத்தொடர்பு பற்றிச் செய்யுள் வினைமுடிபும் தொடர்ந்து வருதல் கவிநயம் 1171

3070. (வி - ரை) வந்து ஈண்டி - சீகாழியில் வந்து நிறைந்து.

நன்னிலைமைத் திருநாள் - மணஞ்செய்ய நாள்; மணத்தைச் சார்ந்தார்கள் எல்லாரும் நன்னிலையாகிய சிவானந்த பரிபூரண நிலையினை அடையும் திருநாள் என்றதும் குறிப்பு.

எழுநாள் - முன் ஏழாவது நாள்; பூரித்தல் - முன் (3067) கூறியபடி விதைத்து முளைத்த முளைகளை எடுத்துப் பாலிகைப் பாண்டிலகளில் மணணிட்டுத் தெளித்து நீர் வார்த்தல். இது திருமணத் திருநாளின் எழாநாளிற் செய்வது மரபும் விதியுமாம்.

பன்மணி......ஆர்ப்ப - இச்சடங்கு மங்கல முழக்குக்களுடன் நிகழ்த்தப்படுவதொன்றாம். இந்நாளில் நிகழும் ஒருநாள் அரைநாட் கலியாண முறைகளுடன் இதனையும் ஒத்துக் காண்க; பாலிகை விதைத்தல், முளை பூரித்தல் இவை மணச் சடங்கின் சிறந்த அங்கமாவன. கோயிற் சிறப்புக்களிலும் திருமுளை (அங்குரார்ப்பணம்) என்பது சிறந்த அங்கமாகும் என்பது ஆகமவிதி; இது சிறுடிநிலை குறிக்கும். திருமணங்களில் இந்த முளைகளின் செழுமை, வளர்ச்சி, செறிவு முதலியவற்றின் அளவே அவ்வம் மணங்களின் சிறப்பும் பயனு மாவன என்ற றிகுறியாகக் காணும் வழக்குமுண்டு. புனித முளை என்றது சிவமணமாய் நிகழ்தற் குறிப்பு. பூரித்தல் - நிறைத்தல்.

3071. சேணுயரு மாடங்க டிருப்பெருகு மண்டபங்கள்
நீணிலைய மாளிகைக ணிகரிலணி பெறவிளக்கிக்
காணவருங் கைவண்ணங் கவின்றோங்கும் படியெழுதி
வாணிலவு மணிக்கடைக்கண் மங்கலக்கோ லம்புனைந்து, கக௭௩

3072. நீடுநிலைத் தோரணங்க ணீண்மறுகு தொறுநிரைத்து
மாடுயரும் கொடிமாலை மணிமாலை யிடைப்போக்கிச்
சேடுயரும் வேதிகைகள் செழுஞ்சாந்து கொடுநீவிப்
பீடுகெழு மணிமுத்தின் பெரும்பந்தர் பலபுனைந்தார். கக௭௪

3071. (இ - ள்) சேணுயரும்...மாளிகைகள் - வானத்திலுயரும் மாடங்களையும், செல்வம் பெருகும் மண்டபங்களையும், நீண்ட நிலைகளையுடைய மாளிகைகளையும்; நிகரில்...விளக்கி - ஒப்பற்ற அழகு பெறும்படி விளக்கஞ் செய்து; காணவரும்... ...எழுதி - காட்சி பொருந்தவரும் ஓவியத் திறம் அழகு மிகும்படிச் சித்திரித்து உருவங்களை அங்கங்கும் எழுதி, வாணிலவு...புனைந்து - ஒளி பொருந்திய அழகிய மணிகளழுத்திய முற்றங்கடை வாயிலில் மங்கலக் கோலங்களைச் செய்து; ௧௧௫

3072. (இ - ள்) நீடுநிலை...நிரைத்து - நீண்ட நிலையுள்ள தோரணங்களை நீண்ட வீதிகடோறும் வரிசைபெற அமைத்து; மாடுயரும்..போக்கி - பக்கங்களில் உயரமாகிய பசிய கொடிமாலைகளையும், மணிமாலைகளையும் இடையிடையே புக அமைத்து; சேடுயரும்...நீவி - ஒளி விளங்கும் திண்ணைகளைச் செழுமையுடைய சுண்ணச் சாந்தினாலே மெழுகி, பீடுகெழு...புனைந்தார் - பெருமை விளங்கிய மணி முத்துக்கள் நிறைந்த பெரும் பந்தர்கள் பலவற்றையும் அமைத்தனர். ௧௧௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3071. (வி - ரை) சேணுயரும் - திருப் பெருகும் - நீணிலைய - இவை முறையே மாடங்கள் - மண்டபங்கள் - மாளிகைகள் என்ற இவற்றின் இயல்புகளை விளக்கி நின்றன; சேண்-விசும்பு, "மாடம், விண்டாங்குவபோலும்" (தேவா) என்றபடி விண்ணவர்களை உயர்த்தும் என்றதும் குறிப்பு. திரு - அருட் செல்வமும் பொருட் செல்வமும்; நீள் நிலைய - நீண்ட நிலைகளையுடைய; நிலைகள் - நிலவுகளும் மேன் மாடிகளும்.

விளக்கி - விளக்கம் செய்தலாவது புதிதாக விளங்கச் செய்தல்.

காணவரும்...எழுதி - ஓவியங்களைக் கைத்தொழிலின் விளங்க எழுதுவித்தல் முன்னாளில் மங்கல அணிவகைகளுள் ஒன்று. ஓவியக் கைத்தொழில் தமிழ் மக்களிடைப் பல்லாயிர ஆண்டுகளின் முன்னரே திறம்பட அமைந்து சிறந்து விளங்கியது; "யாழு மெழுதி யெழினுதலெழுதி யிருளினெண்பூச, ஆழு மெழுதியோர் தொண்டையுங் கீட்டியென் னுளமிறவி, சேழு மெழுதாவகைசிந்தைக் கொள்புள் நாளமாம், பேழு மெழுதிற்றோ கொம்பருண் டேறக்கொண்டு போதுக்கே" (திருக்கோவை - 78), "கனவி யனநடைக்குப, படிச்சந்த மாக்கும் படமுள வோ நும் பரிசகத்தே" (ஷை - 78); "கழிகின்ற வென்னையு நின்றநின் காமயி றனையுமயான, எழிலென்ற காடியெழுதி" (ஷை-76) "அவ்வயவ மெழுத வரிச்சன வில்லக்கல" (ரூதநிலம்); "படிச்சந்த மாகப்பண்ணப்படும் படங்கள் உளவே நும்மது சித்திரசாலையின்கண்? - படிச் சந்தமென்பது ஒன்றன் வடிவையுடைத்தாய அதுவென்றே கருதப்படுமியல்பையுடையது"; "முன்னம், மொருக னெழுதிவிட டோனமற்றழுதா தோடித, தெருவம் புகுவார் இகைப்பார் "......" மணியாதத, தவென மனமறக்கொண்டு தோழியரு தாறுமாய்க், காம னுருவம் வரவெழுதிக - காமன், கருப்புச் சிலையு மலரம்பும் தேரு, மொருபாட் டுடனெழுதும் போழ்தில..." (ஞானவுலா) முதலியவை காண்க. தமிழரிடை முன்னாளில் இவ்வா றுயர்நிலையிலிருந்த ஓவியக் கலைஞானம் அருகி இந்நாளிற் பிறர்பாற் புதிதிற் கற்கத் தொடங்கும் கலையாய் நிற்கின்றது காலக்கொடுமை!

காண வரும் - ஓவியங்களின் அழகினையும் கைத்திறத்தினையும் உண்மை நோக்கினையும் அதிசயித்துப் பிறர் காணவரும். காண்வரும் என்பதும் பாடம், கைவண்ணம் - சித்திரத் தொழிற் கைத்திற மேம்பாடு; எழுதி - ஓவியங்களையும் பற்பல சித்திரங்களையும் என்று செயப்படுபொருள் வருவித்துரைக்க. எழுதுதல் - தீட்டுதல்; மரபுவழக்கு.

**மணிக்கடை** - மணிகளிழைத்த முன்கடைவாயில் முகப்பு. **கண்** - எழுனுருபு. **நிகரிலொளி—கைவினைஞர்**—என்பனவும் பாடங்கள். 1173

3072. (வி - ரை) **நீடுநிலை** - மேல் உயர நீண்ட நிலையினையுடைய ; **நீண் மறுகு** - மறுகுகள் வளைவின்றி ஒழுங்குபெற நீண்டு செல்லுதல் நகரச் சிறப்பு அமைதிகளுள் ஒன்று.

**கொடிமாலை மணிமாலை** - கொடிமாலை - கொடிகளையும் மலர் மாலைகளையும் ; கொடிகள் போன்ற மாலைகளை என்றலுமாம் ; **மணிமாலை** - பலவண்ண மணிகளைக் கோத்த மாலைகள். **இடைபோக்கி**-இடையிடையே புகுத்தி.

**சேடு** - ஒளி ; **சாந்து** - வெண்சுண்ணம் ; செஞ்சாந்து முதலியவை. **நீவுதல்**- ஒழுங்குபெறப் பூசுதல்.

**பீடு...பந்தர்கள்** - **பீடு** - பெருமை ; மணிகளுள் முத்துக்கள் சிறந்தன என்பது. "முத்து மாலைகள்" (3068) ; முன்கூறியது முன் எழாநாள் அணிச்சிறப்பு ; இங்குக் கூறுவன அறைநாண் முதலாகத் திருமணநாளின் முன்னாள்வரை செய்யும் மணவணிச் சிறப்பு ; மேல்வரும் பாட்டும் பார்க்க.

**முத்தின் பெரும்பந்தர் பல** - மறுகுகளில் அங்கங்கும் அமைக்கும் பற்பல முத்துப் பந்தர்கள் ; இறைவர்பால் முத்துப்பந்தர் பெற்ற பெருமானாதலின் அக்குறிப்புப் பெறவும் ; "அப்பந்தர் மீதணையத் திருமன்றி, லண்டர்பிரா னெடுத்ததிரு வடிநீழ லெனவமர்ந்தார்" (2293) என்றபடி, இனி இறைவரது திருவடிநீழலில் மீளாநிலைமையினை இத்திருமணத்தில் சார்ந்தாரெல்லாருடனே அடையப் புகுகின்றார் பிள்ளையார் என்ற குறிப்புப் பெறவும் ; வீடுபேறு குறிக்கும் முத்துப்பந்தர் பலவற்றையும் அமைத்தனர் ; **பல** - உடன் வீடு பெறுவார் பலராதலின் பலவும் அமைத்தனர் என்பதும் குறிப்பு.

**பீடுகெழு - பெரும்** - என்ற அடைகளின் குறிப்பும் காண்க. 1174

3073. மன்றல்வினைத் திருமுளைநா டொடங்கிவரு நாளேல்லாம்
முன்றிறொறும் வீதிதொறு முகநெடுவா யிலகடொறும்
நின்றெரிரு மணிவிளக்கு நிறைவாசப் பொற்குடங்கள்
துன்றுசுடர்த் தாமங்க டூபங்க டுதைவித்தார். ௧௧௭௫

(இ - ள்) **மன்றல்வினை...நாளெல்லாம்** - கல்யாணச் செயல்களுள்ளே திருமுளை பூரித்தநாள் தொடங்கி வருகின்ற நாட்களிலெல்லாம் ; **முன்றில்தொறும்...வாயில்கடொறும்** - வீதிகள்தோறும், மாடங்களின் முன்றில்கள்தோறும், நீண்ட முன்வாயில்கள்தோறும் ; **நின்றெரிரும...துதைவித்தார்** - நிலைநின்று விளக்கம் செய்யும் மணிவிளக்குக்களும், மணமுடைய தூய நீர்நிறைந்த பொற்குடங்களும் நெருங்கிய ஒளியுடைய மாலைகளும் தூபங்களுமாகிய இவையிற்றை நெருங்க வைத்தார்கள்.

(வி - ரை) **மன்றல் வினைத் திருமுளை நாள்** - கலியாணச் செயல்கள் திருமுளை பூரித்த எழாநாளாகிய நன்னாளிலிருந்து தொடங்குகின்றன என்பதாம் (3070).

**வருநாள் எல்லாம்** - பின்னர்த் தொடர்ந்து வருகின்ற ஆறுநாட்களிலும்.

**வீதிதோறும் முன்றில்தோறும்** என்க ; **முன்றில்** - இல்முன் என்பது முன்றில் என வந்தது. **முகநெடு வாயில்** - முதல் வாசல் ; முகப்பு வாயில்.

**நின்றெரிரும்** - கெடாது நின்று விளங்கும். **மணிவிளக்கு** - சூரியவொளியினாலும் ஏனைப் பெருவிளக்குக்களின் சார்பினாலும் எதிரொளி வீசும்படி பெருமணிகளையே விளக்குக்களாக அமைத்தலுமுண்டு.

துதைவித்தல் - நிறைவித்தல் ; நெருங்க அமைத்தல். 1175

3074. எங்கணுமெய்த் திருத்தொண்டர் மறையவர்க ளேனையோர்
மங்கலநீண் மணவினைநாள் கேட்டுமிக மகிழ்வெய்திப்
பொங்குதிருப் புகலிநக ரிடைநாளும் புகுந்தீண்ட
அங்கணைந்த வர்க்கெல்லாம் பெருஞ்சிறப்பு மிகவளித்தார்.

(இ - ள்) எங்கணும்...கேட்டு - எங்கெங்கும் உண்மைத் திருத்தொண்டர்களும், வேதியர்களும், மற்றவர்களும் மங்கலம் பெருகும் கல்யாணச் செயல்கள் நிகழும் நாளைக் கேட்டு ; மிக மகிழ்வெய்தி ..புகுந்தீண்ட - மிகுந்த மகிழ்ச்சி பொருந்தித் திருப் பொங்குகின்ற சீகாழிப் பெரும்பதியிலே நாள்தோறும் வந்து நெருங்க ; அங்கண்... ...மிக அளித்தார் - அவ்வாறு அங்கு வந்து அணைந்தவர்களுக்கெல்லாம் பெரிய சிறப்புக்களை மிகவும் செய்து அளித்தார்கள்.

(வி - ரை) எங்கணும் - சீகாழியின் புறத்திலே எங்கெங்குமின்றும்.

மெய்த் திருத்தொண்டர்கள் - சிறப்புப்பற்றித் தொண்டர்களை முன்வைத்தார் ; மெய் - திரு - என்ற குறிப்புமது.

மங்கல நீள் - இத்திருமணத்தின் மங்கலம் மணம் என்ற அகிலவுலகுடைமையாது நீளும் தன்மை குறித்தது பிறசரிதக் குறிப்பு

திருப்பொங்கு புகலி எனக ; திரு - முத்தித் திரு.

நாடோறும் புகுந்தீண்ட - ஒவ்வொரு நாளும் புதிதாக வந்து கூட ; பின்னையாது திருமணத்தை வெளியூரவர் பலரும் தமது சிறப்பாக உடகொண்டு கலந்து களித்தனர்.

பெருஞ் சிறப்பு மிக அளித்தலாவது விருந்து உறையுள் முதலிய உபசரிப்புக்களை மிகவும் செய்தல.

புகுந்தீண்டி—அங்கணைந்தவர்க்கெல்லாம்—என்பனவும் பாடங்கள். 1176

3075. மங்கலதூ ரியநாத மறுகுதொறு நிறையும்பப்
பொங்கியநான் மறையோசை கடலோசை மிசைப்பொலியத்
தங்குநறுங் குறையகிலின் நறுமூதச் செழும்புகையினுடன்
செங்கனலா குதிப்புகையுந் தெய்வவிரை மணம்பெருக; ௧௧௭௭

3076. எண்டிசையி னுள்ளோரு மீண்டுவந்த தொடுநெருங்கப்
பண்டநிறை சாலைகளும் பலவேறு விதம்பொலிய
மண்டுபெரு நிதிக்குவைகண் மலைபிறங்க லெனமலிய
வுண்டிவினைப் பெருந்தழனி யோவாத வொலியோங்க ; ௧௧௭௮

3077. மாமறைநூல் விதிச்சடங்கின் வருந்தமுறை நெறிமரபின்
தூமணங்க லுபகாரணஞ் சமைப்பவர்தந் தொழிறுவன்றத்
தாமரையோ னனையபெருந் தவமறையோர் தாமெடுத்த
பூமருவு பொற்கலசப் புண்ணியநீர் பொலிவெய்த; ௧௧௭௯

3078. குங்குமத்தின் கொழுஞ்சேற்றின் கூட்டமைப்போ ரிணங்குழுமப்
பொங்குவிரைப் புதுக்கலவைப் புகையெடுப்போர் தொகைவிரவத்
துங்கநறுங் கறபூரச் சுண்ணமிடிப் போர்நெருங்க
வெங்குமலர்ப் பிணைபுனைவோ ரீட்டங்கண் மிகப்பெருக, ௧௧௮௦

3079. இனையபல வேறுதொழி லெம்மருங்கு நிரைத்தியற்று
மனைவளரு மறுகெல்லா மணவணிசெய் மறைமூதூர்
நினைவரிய பெருவளங்க ணெருங்குதலா னிதிக்கோமான்
றனையிறைவர் தாமேவச் சமைத்ததுபோ லமைந்துளதால். ௧௧௮௧

3075. (இ - ள்) மங்கல தூரியம்...இயம்ப - மங்கலம் பொருந்திய பெரு வாத்தியங்களின் நாதம் வீதிகளதோறும் நின்று ஒலிக்க; பொங்கிய...பொலிய - மேன்மேல் ஓங்கி எழுந்த நான்மறைகளின் முழக்கானது கடலோசையினும் பெருகி விளங்க; தங்கு...மணம் பெருக - தங்கும் நறுமணமுள்ள அகில் துண்டங்களின் மிக்க செழும் புகையினோடு செந்தீயுடன் கூடிய வேள்விப் புகையும் கூடித் தெய்விக மணமாக வாசனை பெருகவும்; ௧௧௭௭

3076. (இ - ள்) எண்டிசையின்...நெருங்க - எட்டுத் திசைகளில் உள்ள மக்களும் அங்கங்கு உள்ள வளப்பொருள்களோடு நெருங்க; பண்ட நிறை...பொலிய - பண்டங்கள் நிறையச் சேமிக்கும் சாலைகளும் பலவேறு விதமாக விளங்க; மண்டு பெரு...மலிய - நெருங்கும் பெருநிதியின் குவியல்கள் மலை விளங்குதல்போல மலிய, உண்டிவினை...ஓங்க - உணவுத் தொழிலின்கண் னின்றெழும் ஓசைகள் இடையறாத சத்தமாகப் பெருக; ௧௧௭௮

3077. (இ - ள்) மாமறை நூல்...அவன்ற - பெருமறை நூல்களின் விதித்த சடங்குகளின் பொருட்டு வகுத்த முறைவழி மரபினாலே தூய மணத்திற்குரிய நல்ல வேள்விப் பொருள்களை அமைத்து ஒழுங்குபடுத்துவோர்களது தொழில் நெருங்க, தாமரையோன்...பொலிவெய்த - பிரமதேவனைப் போன்ற பெருந்தவ மறையவர்கள் தாங்கள் எடுத்த பூக்கள் பொருந்திய பொற்குடங்களில் நிறைத்த புண்ணிய நீர் விளங்க, ௧௧௭௯

3078. (இ - ள்) குங்குமத்தின்..குழும் - குங்குமப்பூவின் கொழுவிய சேறுகிய சந்தனக் குழம்பினை அமைப்பவர்களுடைய இனங்கள் கூட; பொங்குவிரை...தொகை விரவ - மிக்க மணமுடைய புதிய வாசனைப்பண்டங்கள் கூட்டிய கலவையின் தூபப் புகை எடுப்பவர்களின் கூட்டம் பொருந்த; துங்க நறும்...நெருங்க - உயர்வுடைய நறுமணமுள்ள கற்பூரச் சுண்ணத்தை யிடிப்போர்கள் நெருங்க; எங்கும..பெருக - எவ்விடத்தும் மலர்களாலாகிய பிணையல் முதலிய பலவேறு மாலைகளைத் தொடுப்பவர்களின் கூட்டங்கள் மிகப் பெருக; ௧௧௮0

3079. (இ - ள்) இனைய பல...மறைமூதூர் - இவ்வாறாகிய பலவகைப்பட்ட வெவ்வேறு தொழில்களை எல்லாப் பக்கத்தும் ஒழுங்குபட்டச் செய்கின்ற மனைகள் வளரும் வீதிகளிளெல்லாம் மணவணியை விளங்கக் காட்டும் மறையவர்கள் வாழும் அவ்வூர்; நினைவரிய...நெருங்குதலால் - நினைத்தற்குமரிய பெரிய வளங்கள் நெருங்கிய அதனாலே; நிதிக் கோமான...அமைந்துளதால் - குபேரனை இறைவர் ஏவியதனால் அவனே வகுத்ததுபோல அமைந்துள்ளதாம். ௧௧௮௧

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3075. (வி - ரை) தூரியம் - இயம்ப - என்பது மரபு வழக்கு.

இயம்ப - முழங்க; தூரியம் - பெரு வாத்தியங்கள்; தூரியம் மங்கலத்தை இயம்ப என்ற குறிப்பும் காண்க. இயம்புதல் - வெளிப்படுத்தல்.

மறையோசை - ஓசை என்றது பலரும் கூடிச் சொல்ல மிகப் பேரொலியாக எழுதலால் சொற்பொருட் பிரிந்திசையாமையின்; கடலோசை மிக - என்ற குறிப்புக் காண்க; கடலோசையின் மிகும்படி.

பொங்கிய நான்மறை - பொங்குதல் - உரத்த சுரத்தின் எழுதல். பிள்ளையார் திருவவதாரத்தின் பயனாகத் தழைத்தோங்கிய என்றலும் குறிப்பு.

குறை அகில் - குறைத்த - துண்டமாகிய - அகிற் கட்டைகள்; தழைந்த செழும் - தழைத்தல் - அளவாற் பெருமையும், செழுமை - மணத்தால் மிகுதியும் குறித்தன. செங்கனல் ஆகுதிப் புகை - வேள்விகளில் எழுகின்ற புகை.

தெய்வ விரைமணம் பெருக - அகிற்புகையிலுடன் ஆகுதிப்புகையும் கூடி மணம் மிக. இரண்டு புகைகளும் ஒன்று சேர மந்திரங்களுடன் கூடிய ஆகுதிப்புகையின் தெய்வத் தன்மை அகிற்புகைக்கும் வந்தது என்பது. பௌதிகம்பற்றிய அகிற்புகையும் அத்தன்மை மாறி ஆகுதிப்புகையின் சேர்க்கையால் தெய்வத் தன்மை வாய்த்தது என்க. இக்கருத்தைத் "தெருண்ட மேலவர் சிறியவர் சேரினும் மவர்தம், மருண்ட சிந்தையை மாற்றுவ ரெனுமிது வழக்கே" என்று குறித்த கம்பன் பாட்டும் காண்க.

விரை மணம் - புகை யிரண்டாதலின் ஒருபொருள் பற்றிய இரண்டடைமொழிகள் தந்தோதினார். இவற்றை நிரல் நிறையாகக் கொள்க; மணம் - கூடுதல் என்ற குறிப்புடன் வருதலில் தெய்வத் தன்மையினை அகிற்புகைக்குக் கூட்டிய ஆகுதிப் புகைக்கு ஏற்குமாறு காண்க. 1177

3076. (வி - ரை) எண்டிசையின் நெருங்க - அவ்வத் திசையிலுள்ளார்கள் தத்தமது திசையில் உள்ள தனி வளங்களாகிய பொருள்களைக் கொண்டு வந்தனர். இது முன்னாளின் வழங்கிய நல்வழக்கு; இக்காலத்தில் அருகிவருகின்றது; திண்ணனார் விற்பிடிக்கும் விழாவிற்குச் சிலையுடை வேடர் மலைபடு மணியும் பொன்னும் முதலிய வளங்களைக் கொண்டு திசைதோறு நெருங்கவந்தார் என்ற செய்தியும், அதுபோல் பலவும் பிறவும் இங்கு நினைவுகூரத்தக்கன.

ஈண்டு வளம் - அங்கங்கும் சிறப்பாயுள்ள வளங்கள்

பண்ட நிறை சாலைகள் - பலவேறு விதம் - பலவேறு வகைப் பண்டங்களுக்கும் பலவேறு தனித்தனிச் சாலைகள் வேண்டப்படுவனவாதலின் பலவேறு விதம் என்றார்.

நிதிக்குவைகள் மலைப்பிறங்கல் என - வெவ்வேறு நிதிக் குவியல்கள் பெருந்திரட்சியாகக் குவிதல் மலைபோன்றன என்க, "செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்புமென்ன" (74), இக்காலத்திற்போல் நாணயம் என்ற பெயரால் நாணயமில்லாத காகிதங்களை நாணயமாக வழங்காத முன்னாளில் பொன்னும் வெள்ளியும் மணிகளுமே நிதிகளாக வழங்கின. அவற்றை அளந்து குவியல் செய்து சேமிப்பதும் வழக்கு.*

மலைப் பிறங்கல் - மலையின் உயர்ச்சி, மலிதல் - பலவாறு காணப்படுதல்

உண்டிவினைப் பெருந்துழனி ஓவாத ஒலி - உண்டிவினைப் பெருந்துழனியாவது மணவினைகளில் பல வகையினரும் பலநேரமும் உண்டிகொள்ளுதலே பெரும்பகுதியாதலின் அவ்வாற்றான் எழும் சத்தம் பெருந்துழனி எனப்பட்டது; ஒலி என்றது கொண்மின் என்றும், படை என்றும், உண்க என்றும், போதும் என்றும், வேண்டும்

* 50 ஆண்டுகளின் முன் வெள்ளி நாணயங்களை நிறைத்து அளந்து ஒரு அறையில் தானியங்களின் இராசிக் குவியல்போலக் குவித்து வழங்கிய ஒரு செல்வனையும், அவன் அவ்வாறு குவித்த பண அறையினையும் நான் நேரில் அறிவேன்.

என்றும் - இவ்வாறு பல சத்தங்களும் பொருள்பற்றியனவாதல் குறிப்பு; ஓவாத ஒலி - நீக்கமில்லாது எந்நேரமும் பெருகும்; முன்பின் பல பந்திகளாக உணவு கொள்ளுதல் குறிப்பு. உண்டிவினை செய்வார் உரையாடாதும் ஒலியெழாதும் புசிப்பா ராதலின அவர்க்கு அட்டிற் றொழிலாளரைப் படைபடை யென வருமொலியேயா மெனக் என்றும், போசனஞ்செய்யும்போது பேசாது உண்ணவேண்டு மென்பது நூன் முறையாதலின் ஈண்டு உண்டாகிய ஒலி அமுது படைப்போரின் வேண்டுகோள் முத லியவற்றா லுண்டாகிய ஒலி எனக்கொள்க என்றும் உரைத்தனர் முன் உரைகாரா கள். ஒருபேச் சிடையின்றி நின்று உண்பது சமணருள வழக்கென்பது பிள்ளையார் திருவாக்கா னறியப்படும். 1178

3077. (வி - ரை) மாமறைநூல்......உபகரணம் - இவை மண வேள்விக் காகும் தருப்பை - சமித்து - சிருக்கு - சிருவம் - முதலிய பொருள்களும் ஓமப் பண்டங்களுமாம். சமைத்தல் - ஏற்றவாறு அமைவுபடுத்துதல்; துவன்ற - நிறைய.

தாமரையோன் - பிரமதேவன்; அனைய - மறைகளில் வல்லமை பொருந்த தன்மையராம; வினைபற்றிய உவமை.

எடுத்த - ஏந்திய. பூமருவு - பூ - நிறைகுட நீரினுள் இடும் புதிய மலர்கள்; புண்ணிய நீர் - கங்கை - காவிரி முதலிய புண்ணிய தீர்த்தங்கள். 1179

3078. (வி - ரை) குங்குமத்தின்...கூட்டு - குங்குமப்பூவினைப் பனிநீர் பெய்து பச்சைக்கருப்பூரம், கோரோசனை, புழுகு, கத்தூரி இவை கூட்டிக் குழம்பாக அரைத்த சந்தனம்

பொங்கு விரைப் புதுக் கலவைப் புகை எடுப்போர் - மணமுடைய அகில் தேவதாரு சந்தனம் குங்கிலியம் முதலிய பண்டங்களைப் புதிதின் அமைத்து விதிப்படி கூட்டிய தசாங்கம் எனனும தூள், இங்குக் கலவை எனப்பட்டது. எடுப்போர் - புகைக் கலயங்களில் ஏந்துவோர்.

கற்பூரச் சுண்ணம் - இது திருமஞ்சனத்துக்காகும் பொற்சுண்ணம் எனப்படும். இடிப்போர் - இதனுள் உரிய பண்டங்களை இடித்துக் கூட்டுதல் வழக்கு. "ஆடப் பொற்சுண்ண மிடித்து நாமே" (திருவா); நெருங்க - இத்தொழில் செய்வோர் பலர் கூடிநெருங்கி வினை செய்தல் குறிப்பு; கர்ப்பூரம் - பச்சைக் கற்பூரம்.

மலர்ப்பிணை புனைவோர் - பிணை - பிணையல், தாமம், கண்ணி, இண்டை முத லிய பல வேறுவகை மாலைகளையும் குறித்தது. ஈட்டங்கள் பெருக - பலவேறு இடத்துப் பலபலராக இத்தொழில் செய்யவேண்டுதல் குறிப்பு. எங்கும் என்றதுமிது.

செழுஞ்சேற்றின்—எனபதும் பாடம். 1180

3079. (வி - ரை) மறுகெல்லாம் மண அணிசெய் மறைமுதூர் - பிள்ளையா ரது திருமண முயற்சிகளும தொழில்களும் அவரது திருமாளிகையின் மட்டுமன்றிச், சுற்றத்தார் மட்டுமன்றி, நகரெங்கும் இயன்றன; பிள்ளையாரது திருவவதாரச் சிறப் புப்பற்றிக் கூறியவை ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

நினைவரிய...அமைந்துளதால் - நினைவரிய - நினைத்தற்குமரிய எனச் சிறப்பும்மை விரிக்க. நெருங்குதலால் - மூதூர் - அமைந்துளது என்று கூட்டுக. பெருவளங்கள் நெருங்குதலாலே இது உலக மக்களாற் செய்தற்கரிது; நிதிக்கோமான் சமைக்கவே அமையும்; அவனும சிவபெருமானுடைய ஏவலின்றிச் செய்யானாதலின் இறைவர் ஏவ அவன் சமைத்ததுபோலும் என அமைந்தது எனபதாம். தமது ஞானப் பிள்ளையா ரது திருமணமாதலானும், தமதுலகு பெறுவிக்கும் சிவமணமாதலானும் இவ்வமைப்புக் களை இறைவரே ஏவி அமைப்பித்தனர் எனபது குறிப்பு. "இருநிதிக் கிழவன் முனே-

மொழிவழி யேவல்கேட்ப" (465); "சம்ப ந்தருளின லளகை வேந்தன, றன்பெரு நிதியக் கார்த்தந் தரணிமேல நெருங்க......மனைபெருஞ் செல்வ மாக்கி வைத்தனன்" (844) என்றவற்றை இங்கு நினைவுகூர்க.

மனை வளரும் மறுகு எல்லாம் - எவ்வெவ்வகை மக்கள் வாழும் எவ்வெவ் வீதிகள் யாவையும்.

நிறைந்துளதால்—எனபதும் பாடம். 1181

வேறு

3080. மாறி லாநிறை வளந்தரு புகலியின் மணமீக்
கூறு நாளின்முன் னாளினில் வேதியர் குழாமும
நீறு சேர்திருத் தொண்டரு நிகரிலா தவருக்
காறு சூடினா ரருட்டிருக் காப்புநா ணணிவார், ௧௧௮௨

3081. வேத வாய்மையின் விதியுளி வினையினால் விளங்க
ஓத நீருல கியன்முறை யொழுக்கமும பெருகக்
காத லினிடிருத தொண்டர்கண மறையவர் களினொ
மாதர் மைந்தர்பொற காப்புநா ணகர்வலஞ் செய்தார். ௧௧௮௩

3080 (இ - ள்) மாறிலா...புகலியின - ஒப்பற்ற நிறைந்த வளம் தருகின்ற சீகாழிப் பதியில்; மண மீக்கூறு நாளின முன்னாளினில - திருமணத்தினை மேற்கொள்ளும் திருநாளின் முன்னாளிலே; வேதியர் குழாமும நீறுசேர் திருத்தொண்டரும் - மறையோர் கூட்டமும் திருநீறு அணிந்த திருத்தொண்டர்களும் கூடி; நிகரிலாதவருக்கு...அணிவார் - ஒப்பற்றவராகிய பிள்ளையாருக்குக் கங்கையைத் தலையிற் சூடிய இறைவரது அருள் பொருந்திய திருக்காப்பு நாணினை அணிவார்களாகி, ௧௧௮௨

3081. (இ - ள்) வேத வாய்மையின... விளங்க - வேத வாய்மையிற் கூறும் விதிகள் இச்செயலால் விளங்கவும், ஓத.. பெருக - கடல் சூழ்ந்த உலக நடையின்முறையான வொழுக்கங்களும் பெருகவும்; காதல . வலஞ் செய்தார் - ஆசைமிக்க திருத்தொண்டர்களும் மறையோர்களும் அழகிய மகளிர்களும ஆடவரும் கூடிப் பொன்னாலாகிய காப்பு நாணினை நகர்வலஞ் செய்வித்தார்கள் ௧௧௮௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3080. (வி - ரை) மாறிலா வளம் தரு - நிறைவளம் தரு - எனக. மாறிலா வளமாவது சராசரங்க ளெல்லாம சிவம்பெருக்கத் தரும் தன்மை, நிறைவளமாவது திருமணத்தின் பொருட்டு வந்த எண்டிசையிலுள்ளோரும் கொண்டாடக் கண்டு வளமும், சீகாழியின் இயல்பாயுள்ள உலகியல் வளமும் ஆம், தருதல் - பெறுதற்கிடமாதல்.

மணமீக்கூறு நாள் - மணஞ்செய் திருநாள்; மீக்கூறும் - மேற்கொள்ளும்.

முன்னாளினில் - காப்பு நாண் அணிவார் - திருமண நாளின் முன்னாளில் காப்பு நாண் அணிதல் மரபு; மணவினைச் சடங்குகள் காப்புநா ணணிதலுடன் தொடங்குகின்றன; காப்புநாண் கட்டுதல் மணமகன், மணமகள் இருவர்பாலிலும் நிகழ்வது. "கற்பகப் பூங்கொம பனனார் தமமையும காப்புச் சேர்த்துப், பொற்புறு சடங்கு முன்னாப் புரிவுடன் செய்த வேலை" (120); இவவாறு உரியபடி காப்புச் சேர்த்த பின்னர் அதனைப் பின்னாச் சடங்குடன் அவிழ்க்கின்ற அளவும் சிவனது காவல் சிறக்கு

பெற்றுள்ளார் என்றும், சிவமுஞ் சத்தியுமாகவே அவ்விருவரும் பாவிக்கப் பெறுவர் என்றும் உலகியலின் தொடக்குக்கள் ஒன்றும் அவரைச் சாரா என்றும் கொள்வது மரபு. காப்பு - காவல்பெறு நிலை; "கணவன் ழுதலான் றன்னுடைய காப்புக்களே" (தேவா); மேல் அருட்டிருக் காப்புநாண் - எனபதும் காணக.

வேதியர் குழாமும் - திருத்தொண்டரும் - வேதியர் - பிள்ளையாரது உலகியல் நிலைச் சுற்றம்; திருத்தொண்டர் - சிவசசாரபு பறறிய அவரது சுற்றம்; "சுற்றம் மாசிலா வீச னன்பா" (திருவிளை. புரா); முன்னவா உலகத்துடன விடும் சுற்றமும், பின்னவர் என்றும் விடாத சுற்றமுமாம் என்பது "பெருங்கிளைக்குத் தகுதியினுற் றலையளிசெய்து...அடியவர்களுடனமர்ந்து" (3050) என முன் குறித்ததும், பிறவும் காணக. நீறுசேர் - வேதியர்களும் நீறு சேர்வோராயினும் தொண்டர்க்கு நீறு சிறப்புரிமை என்பார் நீறுசேர திருத்தொண்டர் என்றூர். திரு - என்றது சிவச் சார்பு.

நிகரிலாதவர் - பிள்ளையார். "தாவில்தனிச் சிவஞான" நிறைவு பெற்றூராதலின், சிவத்தன்மை பெற்றனா; ஆதலின ஓர் உவமனில்லியாகிய சிவம் போன்றூர்.

அணிவார் நகர்வலஞ் செய்தார் என வருமபாட்டுடன் முடிக்க. அணிவார் - அணிவாராய்; முற்றெச்சம். காப்புநாண் - கௌதுகபந்தனம் என்பர். 1182

3081. (வி - ரை) விதியுளி - விதித்த நெறிகளின் வழக்கு.

வேத வாய்மையின் - வேதங்களின் சத்தியவாக்காக விதித்த.

வினையினுல் விளங்க - இவர்கள் இயற்றும் சடங்குகளால் விளக்கம் பெற.

உலகியன்முறை யொழுக்கமும் பெருக - வேதங்களின் விதிமுறை என்பது மட்டுமேயன்றி உலகியலிலும் அவை முறைப்பட்டு வரும் சில ஒழுக்கமுமாம் என்பது. "உலகியல் வேதநூ லொழுக்கம்" (2718); சிவஞானப் பிள்ளையாரது திருமணத்துக்கு இச்சடங்குகளினுலாய பயன் ஒன்றுமில்லை எனவும், இவை இவை ஈண்டு வேண்டப்படுவனவல்ல வெனவும் குறிப்பார், வேதவிதியுளி வினையினுல விளங்கவும் உலகியல முறை ஒழுக்கம் பெருகவும் இதனைச் செய்தார என்றூர். "சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிது மணுகாமை அறிந்தாராயினும் ஆன்றோராசாரம் பாதுகாத்தற் பொருட்டும், மாணுக்கர் கறிவுறுத்தற் பொருட்டும் முற்றகண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றூர்" என்று மெய்கண்டதேவர் தாம் அருளிய சிவஞானபோத நூலின் மங்கல வாழ்த்துக் கூறியதனைப்பற்றி எமது மாதவச் சிவஞான முனிவர் (சிற்றுரை) விளக்கஞ் செய்தமை ஈண்டு நினைவுகூர்தற்பாலது.

மறை வழக்கம் விளங்கி ஓங்க அவதரித்த பிள்ளையார் அந்த வேத ஒழுக்கம் நிலை பெறற் பொருட்டே திருமணஞ் செய்தருள உடன்பட்டருளினு ராதலின் (3056 - 3057) தமது மணத்தில மறை விதியுளி வினையினுல விளங்கவும் உலகியல முறை ஒழுக்கம் பெறவும் மறைச் சடங்குகளுக் குடன்படவேண்டியதாயிற்று; இன்றேல் உலகம் மயங்கி மறைவிதிச் சடங்குகளை விட்டு உலகியல ஒழுக்கங் குன்றக் காரணமாகும் என்க.

கவினூர் மாதர் மைந்தர்கள் - மங்கல முறையில் சதிபதிகளாக வருவோர்.

காப்புநாண் நகர்வலஞ் செய்தார் - இஃது இச்சடங்கின மரபு. செய்தார் - செய்வித்தார; விவவிகுதி தொக்குநின்ற பிறவினை. 1183

3082. நகர்வ லஞ்செய்து புகுந்தபின் னவமணி யணிந்த
புகரில சித்திர விதானமண் டபத்தினிற் பொலியப்

பகரும் வைதிக விதிச்சமா வர்த்தனப் பான்மை
திகழ முற்றிய செம்மலார் திருமுன்பு சேர்ந்தார். கக௮௪

(இ - ள்) நகர்...பின் - முன் கூறியவாறு காவலம் செய்வித்துத் திருமாளிகையிற் புகுந்த பின்பு; நவமணி...பொலிய - நவமணிகளால் அணியப்பட்ட குற்றமற்ற சித்திரங்களால் விதானமமைக்கப்பட்ட மண்டபத்திலே விளங்கும்படி; பகரும்...சேர்ந்தார் - நூல்களால் எடுத்துச் சொல்லப்படும் வைதிக விதிகளின்படி சமாவர்த்தனமாகிய தன்மையினை விளங்கும்படி முற்றிய பிள்ளையாரது திருமுன்பு வந்து சேர்ந்தார்கள்.

(வி - ரை) புகுந்தபின் - திருமுன்பு சேர்ந்தார் எனக. புகுந்த - திருமாளிகையினுள்ளே புகுந்த.

நவமணி அணிந்த - சித்திர விதானம் - நவமணி அணிந்த - நவமணிகளாலும் அணி செய்யப்பட்ட; அலங்கரிக்கப்பட்ட. விதானத்தின் அமைந்த சித்திரங்கள் நவமணிகளால் அணி செய்யப்பட்டன எனக. விதானம் - மேற்கட்டி முதலியவை; இவற்றிற் சித்திரங்கள் - ஓவியங்கள் - தீட்டுதலும், அவற்றை மணிகளால் அணிதலும் அந்நாள் வழக்கு. பொலிய (விற்றிருந்த) செம்மலார் திருமுன்பு எனக

வைதிக விதிச் சமாவர்த்தனப் பான்மை திகழ முற்றிய - சமாவர்த்தனமாவது வேதாத்தியயனம் நிறைவு செய்து முடித்துப் பிரமசரிய விரதநிலை முடித்தபின் இருக்கும் நிலை புகுமுன் செய்யும் அதி வைதிகச் சடங்கு; ஒவ்வோர் ஆச்சிரமத்திலும் தங்குதல் ஒருநிலை எனப்படும்; ஆயுள் முழுதும் நிலைமாறாது ஒரேநிலையில் தங்குதல் நைட்டிகம் எனப்பெறும்; நிலைத்து நிட்டாபரராய் இருக்கும் தன்மை; நிட்டையுடன் பொருந்தியது நைட்டிகம். ஒன்றியோர் ஒரு ஆச்சிரமத்தினின்றும் அடுத்ததிற் புகும்போது முன்னதற்கு (பூர்த்தி செய்யும்) நிறைவாகும் கிரியைகளைச் செய்து பின்னதனைத் தொடங்குதல் வேண்டும் என்பது வைதிக விதி. சமாவர்த்தனம் - மணமாவதற்குக் காரணமாகின்ற உரிமை.

சமாவர்த்தனப் பான்மை - முற்றிய - இங்குப் பிள்ளையார்பால் மூன்றாண்டளவில் முற்றிய சிவஞான விளக்கநிலை பெற்றதலின் ஆச்சிரமம் பற்றிய விதிகளும் சடங்குகளும் வெறும் உபசாரவளவில் மட்டும் அமைவன என்பார் பான்மை-முற்றிய என்றார். பிள்ளையாரது உபநயன நிகழ்ச்சியின் வரலாற்றினை ஈண்டு நினைவுகூர்க; முற்றிய - தாமாகவே இயல்பால் முற்றியிருந்த.

சேர்ந்தார் - தொண்டர்கள் முதலியோர் (3081)　1184

3083. செம்பொ னின்பரி கலத்தினிற் செங்கெல்வெண் பருப்பின்
வம்ப ணிந்தநீண் மாலைசூழ் மருங்குற வமைத்த
அம்பொன் வாசநீர்ப் பொற்குட மாசிலை தருப்பை
பம்பு நீள்சுடர் மணிவிளக் கொளிதரும் பரப்பில், கக௮௫

3084. நாத மங்கல முழக்கொடு நற்றவ முனிவர்
வேத கீதமும் விம்மிட விரைகமழ் வாசப்
போது சாந்தணி பூந்துகில் புனைந்தபுண் ணியம்போல்
மீது பூஞ்சய னத்திருந் தவர்முன்பு மேவி, கக௮௬

3085. ஆர்வ மிக்கெழு மன்பினுன் மலரய னனைய
சீர்ம றைத்தொழிற் சடங்குசெய் திருந்துநூன் முனிவர்
பார்வ ழிப்பட வருமிரு வினைகளின் பந்தச்
சார்போ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த, ககஅஎ

3086. கண்ட மாந்தர்கள் கடிமணங் காணவந் தணைவார்
கொண்ட வல்வினை யாப்பவிழ் கொள்கைய வான
தொண்டர் சிந்தையும் வதனமு மலர்ந்தன; சுருதி
மண்டு மாமறைக் குலமெழுந் தார்த்தன மகிழ்ந்தே. ககஅஅ

3083. (இ - ள்) செம்பொனின்...பரப்பின - செம்பொற் றட்டிலே செந்நெல்லாலாகிய வெண்பரப்பின் மேல் : வம்பணிந்த...தருப்பை - வாசனை பொருந்திய நீண்ட மாலைகள் இருமருங்கும் சூழ அமைக்கப்பட்ட அழகிய வாசனையுடைய நீர் நிறைந்த பொற்குடமும் அரசிலையும் தருப்பையும் ; பம்பு...பரப்பில் - பரவிய நீண்ட ஒளியுடைய அழகிய விளக்கும் விளங்கிய பரப்பினிலே ; ககஅரு

3084. (இ - ள்) காத...விம்மிட - இயங்களின் நாதத்தாலாகிய மங்கல முழக்குடனே நல்ல தவமுனிவர்களது வேதகீத ஒலியும் நிறைய ; விரைகமழ ..மேவி - மணங் கமழும் வாசமுடைய மலர்களும், சாந்தும், அணிகளும், அழகிய துகிலும் புனைந்த புண்ணியத்தினைப்போல அழகிய மலரமளியின்மேல் எழுந்தருளியிருந்த பிள்ளையாரது திருமுன்பு சேர்ந்து ; ககஅசு

3085. (இ - ள்) ஆர்வம்.. அன்பினுல் - ஆசை மிகக் எழுகின்ற அன்பினாலே ; மலரயன்...முனிவர் - தாமரையில் இருக்கும் பிரமதேவனைப் போன்ற சிறந்த மறைவிதித் தொழில் புரியும் சடங்குகளைச் செய்கின்ற திருந்தும் நூல்வல்ல முனிவர்களாகிய வேதியர் ; பார்வழிப்பட...சாத்த - உலகில் பிறவி எடுக்க வரும் இருவினைகளின் பந்தச் சார்பினை நீக்குபவராகிய பிள்ளையாரது திருக்கையிலே காப்புநாணினை அணிய ; ககஅஎ

3086. (இ - ள்) கண்ட மாந்தர்கள் - (காப்புநாணைச் சாத்தியதனைக்) கண்ட மக்களும் ; கடிமணம...அணைவார் - கடிமணத்தினைக் காணும்பொருட்டு வந்து அணைபவர்களும் ; கொண்ட...தொண்டர் - பற்றிய வலிய வினைக்கட்டினை அவிழ்த்து நீக்கும் கொள்கையினை உடையவர்களாகிய தொண்டர்களும் ஆகிய இவர்களது சிந்தையும் முகங்களும் மலர்ச்சியடைந்தன ; சுருதி...ஆர்த்தன - சுருதிகள் நிறைந்த பெருமறைக்குலங்கள் மேலோங்கி முழங்கின ; மகிழ்ந்தே - மகிழ்ச்சி பெற்றே. ககஅஅ

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3083. (வி - ரை) இப்பாட்டாற் காப்புநாண் சாத்துதலும், சாத்துதற்குரிய சடங்குகளுக்கு வேண்டிய பொருள்களும், அவற்றின் அமைதியும் கூறுகின்றார்.

பொற் பரிகலத்தில் நெல் பரப்புதலும், அதன்மேல் மாலை சூழ்ந்த அழகிய நிறைகுடத்தினை அரசிலை தருப்பையுடன் உரியபடி அமைத்து வைத்தலும் மணிவிளக்குகள் பரவ விளங்கவைத்தலும், வேதமோதுதலும் முதலிய இவை இதற்குரிய செயல்களாம்.

பரிகலம் - பாசனம்; தட்டு. செந்நெல் வெண் பரப்பு - செந்நெல்லே இங்கு ஏற்கும் மரபும் தகுதியும் பற்றி முன் அரிவாட்டாய நாயனார் புராணத்தும், பிறாண்டும் உரைத்தவை நினைவு கூர்தற்பாலன. செந்நெல் வெண்பரப்புச் செய்து அதன்மேல் நிறைகுடம் தாபித்தல் மரபு ; கலசத்துக்கு நெற்பரப்பு ஆதனம் என்ப.

பொற் பரிகலம் - கற்பரப்புச் செய்யும் இடம்.

வம்பு - வாசனை ; வம்பணிந்த ....தருப்பை - கற்பரப்பின் மேல் தாபிக்கும் நிறைகுடம் வைக்கும் முறை.

விளக்கு ஒளிர்தரும் பரப்பு - விளக்குகள் ஒளிசெய்து விளங்கும் பரவிய இடம் - திருமுற்றம். பம்பு - பரவிய. 1185

3084. (வி - ரை) நாத மங்கல முழக்கொடு - வேதகீதமும் விம்மிட - மங்கல இயங்களின் முழக்கமும் வேத ஒலியும் மிக்குக்கூடி எழுதல் மறையவர்களுள் மங்கலங்களின் நிகழும் மரபு.

விரைகமழ்......புண்ணியம்போல் - சிவபுண்ணியமே ஒருருவெடுத்து மாலையும் சாந்தும் அணிகலன்களும் தாங்கிப் புனைந்து எழுந்தருளியிருத்தல்போல ; புண்ணியம் போல இருந்தவராகிய பிள்ளையாரின் முன்பு எனக. விரை - நன்மணம் என்ற பொருளில் வந்தது. விரைகமழ் வாசம் - நன்மணம் மிகும் வாசனை. விரையும் போதும் என்றுகொண்டு விரித்து, விரை புழுகு - கானம் முதலியவை என்றுரைத்தலுமாம்.

பூஞ்சயனம் - பூம்பள்ளி ; மலராசனம் ; பூஞ்சயனத்து மீது எனக ; இருந்தவர் - பிள்ளையார். பூஞ்சயனத்திருந்தவர் - என்றதனால் அதிகாலை குறிக்கப்பட்டது; மேல் சூரியனுதயம் கூறுதல் காண்க.

மேவி - முனிவர் - சாத்த - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

புண்ணியம் - சண்டீச சிவபுண்ணியம் குறித்தது ; "புண்ணிய முதலே" (1991). விம்முதல் - மிக்கெழுதல். 1186

3085. (வி - ரை) ஆர்வம் - ஆசை ; அன்பு - ஆசைக்குக் காரணம் ; ஆர்வமாய் முதிர்ந்த அன்பு.

மலரயன் - பிரமதேவன், அனைய - மறைச் சடங்கு செய்யும் தொழிற்றிறம் பற்றி வந்த உவமம் ; வினைபற்றி எழுந்தது. தெய்வயானை யம்மையார் திருமணத்திலும், மீனாட்சியம்மையார் திருமணத்திலும் பிரமதேவன் மணவேள்விச் சடங்கு செய்த வரலாறுகள் நினைவு கூர்தற்பாலன. சீர் மணத்தொழிற் சடங்கு செய் - வேதவிதிகளை.

திருந்து நூல் - வேதங்களும் அவற்றின்வழி வரும் சூத்திரங்களும் திருந்து - உலகம் திருந்துதற்கேதுவாகிய முனிவர் - மறைவல்லவர் ; மறையோர்.

பார்வழிப்பட - உலகின வழியிற்பட, பிறவியிற் சேர வரும் இருவினை - பிறவிக்குக் காரணம இருவினை. பந்தச் சார்பு - கட்டுகின்ற தன்மையுடைய தொடக்கு.

ஒழிப்பவர் - உலகு உயிர்களின்மேல அடாது நீக்குபவர் பிள்ளையார். பின்னர்த் திருமண நிகழ்ச்சியில் "ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக" (3146) என்றருள்வதும், "வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்புகாணாது முழ்கி, யுருவெனுந் துயரக் கூட்டி லுணர்வின்றி மயங்கு வார்கள்...பிறவி நீங்க"ச் (3147) சிவசோதியினுட் புகுந்து வீடு பெறுவதும் குறிப்பு. பார்வழிப்பட - இவ்வாறன்றிப், பார் - உலகம், வழிப்பட - நல்வழிப்படும் பொருட்டு ; சார்பு ஒழிப்பவர் என்று கூட்டி உரைத்தலுமாம். காப்பு நாண் சாத்தக் கண்டவரின் யாப்பு (நாண்) அவிழ்ந்தது என்பது முரண் அணிநயம் (வ. சு. செ.)

சார்பு ஒழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த - ஏனை மணச் சடங்குகளில் காப்புநாண் சாத்துதலாகிய சடங்கு மணத்துக்கேதுவாகிய வினைப்பிறவிக்கு வித்தாக விளையும் ; ஆயின் இங்குப் பிள்ளையார் திருக்கையிற் காப்புநாண் சாத்த நிகழும் மணம் அவர்க்கு வினைத் தொடர்பை விளையாமைமட்டுமன்றி, அந்த மணத்தில் அணைந்த உலகுயிர் அனைத்திற்கும் வினைச் சார்பினை ஒழித்தற் கேதுவாயிற்று என்ற குறிப்புப்பெற

இங்கு இத்தன்மையாற் கூறினார். பிள்ளையாரது திருவவதார உள்ளுறையும், மேல் வரும் பாட்டின் குறிப்பும் கருதுக. காப்புநாண் சாத்துதல் - நாணினால் கட்டும் தொழி லாதலின் அஃது ஈண்டு அவ்வாறன்றி உண்மையிற் கட்டு அவிழ்க்கும் தன்மைய தாயிற்று என்ற குறிப்பும் காண்க. 1187

3086. (வி - ரை) மாந்தர்களும், அணைவாரும், தொண்டர்களும் ஆகிய இவர் களுடைய என்ற உம்மைகளும் ஆக்கச்சொல்லும் ஆறனுருபும் விரிக்க.

கண்ட மாந்தர்கள் - காப்புநாண் சாத்தும் சடங்கினைக் கண்ட மக்கள்.

மணங் காண வந்தணைவார் - காப்புநாண் சாத்துதலைக் கண்டவர்களின் வேறாகித் திருமணத்தினைக் காண எண்ணி வருவோர்கள். கடிமணம் - கடி - செல்வம்; திரு. காணபோரது பிறவிப் பந்தச் சார்பினைக் கடியும் மணம் என்றதும் குறிப்பு

கொண்ட - பற்றிக்கொண்டு பிறவிக்கேதுவாகிய.

யாப்பு - பாசப் பிணிப்பு. அவிழ் கொள்கைய - பாசம் வலிகெட்டுப் போத லன்றிக் கெடுதலில்லை யாதலின் யாப்பு அறும் என்னாது, அவிழ் கொள்கை என்றார்; அவிழ்தல் - இறுகப் பிணிக்கும் தன்மை நீங்குதல்; கொள்கைய - அகரவீற்றுப் பலவறிசொல்; ஆன - ஆக்கச் சொல் மணம் காணப்பெற்ற காரணத்தாலாகிய விளைவு குறித்தது; கொள்கை - நிலைமை; கொள்ளுதல் - மேற்கொள்ளுதல் - பெறுதல்.

சிந்தையும் வதனமும் மலர்ந்தன - சிந்தை மலர்தல் முகமலர்ச்சிக்குக் காரணமாம் என்பது. வதனம் - முகம்.

சுருதி - மறைக் குலம் - ஆர்த்தன - சுருதிகள் நிறைந்த மறைக்குலம் என்றும், சுருதியும் அவற்றின் வழி வருவனவாகிய சூத்திரம் முதலியனவும் என்றும் உரைக்க நின்றது. ஆர்த்தல் - முழங்க எடுத்து ஓதப்படுதல் குறித்தது. குலம் - வழி வரும் தொகுதி என்றதாம்.

மகிழ்ந்தே - மலர்ந்தன என்றும், மகிழ்ந்தே ஆர்த்தன என்றும் ஈரிடத்தும் கூட்டியுரைக்க இறுதியில்வைத்தோதினார்.

வல்வினைப் பாசப்பவிழ்—என்பதும் பாடம். 1188

3087. நிரந்த கங்குலி னிதிமழை விதிமுறை பெவர்க்கும்
புரந்த ஞானசம் பந்தர்தாம் புன்னெறிச் சமய
அரந்தை வலவிரு ளகலவந் தவதரித் தாற்போற்
பரந்த பேரிருள் துரந்துவந் தெழுந்தனன் பகலோன். ககஅக

(இ - ள்) நிரந்த...புரந்த - பரவிய இரவிலே மறைவிதி முறைப்படி நிதி மழை யாக எல்லாருக்கும் பொழிந்து அருளிய; ஞானசம்பந்தா தாம்...போல் - திருஞான சம்பந்த நாயனார் முன்னாப் புன்னெறிகளாகிய புறச்சமயங்களின் துன்பந் தரும் வலிய இருள் நீங்க வந்து அவதரித்ததுபோல; பரந்த...பகலோன் - பரவிய பெரிய இருளை நீக்கி வந்து சூரியன் எழுந்தனன்.

(வி - ரை) இப்பாட்டு முதல் ஏழு திருப்பாட்டுக்கள் சூரியனும், திசைகளும், ஐம்பூதங்களும், பிள்ளையாரது திருமணச் சிறப்பினுட் கலந்து மேற்கொண்ட நிலைகளை முறையே எடுத்துரைக்கின்றன; இவற்றை அவ்வகையே ஒரு தொடர்புபடுத்தி உரைக்கலாமாயினும், தனித்தனி அவ்வவற்றின் செயல்கள்பற்றி வெவ்வேறு வினைகள் தந்து ஆசிரியர் முடித்தருளியமையால் அவ்வாறே தனித்தனி முடிபாக உரைக்கப்பட்டன; ஆயினும் தொடர்ந்த கருத்துப்பற்றி உய்த்துணர்ந்துகொள்க; திசை

கள் (3088) என்றதனாலும் செஞ்சுடரினால் விளக்கம்பெறுதலானும் உயிர்களும் மதியமும் அடக்கிப், பகலோன், மதியம், உயிர், வையம் (நிலம்), புனரி (நீர்), வன்னி (நெருப்பு), மருதத்து (காற்று), விசும்பு (ஆகாயம்) என எண்வகையாய்ப் புணர்ந்து இறைவன் நின்ற திருமேனி நிலைகளும் கொண்ட சிறப்புக்காட்சி உணர்த்தப்பட்டதென்ற குறிப்பும் காண்க. "நிலனீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்" (திருவா) என்ற மணிவாசகம் ஈண்டு நினைவு கூர்தற்பாலது; ஈண்டு ஒடுக்க முறையில்வைத்துக் கோதியது பிள்ளையார் உடனின்றவர்களுடனே இறைவரது திருவருள் நிலையினுள்ளே புக்கொன்றிடுதலைக் குறிப்புணர்த்தியதும் காண்க.

நீரந்த கங்குலின் - நீரந்த - தொடர்ந்து வந்த இரவில், காப்புநாண் அணிந்த பகலைத் தொடர்ந்த இரவு; அன்றிரவு.

விதிமுறை நீதிமழை - எவர்க்கும் புரந்து - சுருதிகளின் விதிப்படி தானங்களை மழைபோலச் சொரிந்து இயற்றிய, இவை திருமணத்தின் பொருட்டுப் புறப்படுமுன் இயற்றவேண்டிய விதிமுறைகளாம் என்ப இதற்கு இவ்வாறன்றிப் பரந்த சமண இருளினிடத்து வேத விதிகளை மழைபோலப் பெய்தீர்த்தருளிய என்ற பொருள்பட உரைத்தனர் முன் உரைகாரர்கள். புன்னெறிச் சமய அருந்தை வல்லிருள் அகல என மேலும் வருதலால் அதன் பொருத்தம் ஆராயத்தக்கது.

அவதரித்தார்போல் - பகலோன் எழுந்தனன் - என்று கூட்டுக; வினைபற்றிய உவமம். முன்னாளில் (பதினொருணிகளின் முன்) பிள்ளையார் அவதரித்ததுபோல அன்று பகலோன் எழுந்தனன். பிள்ளையார் புன்னெறிச் சமய வல்லிருள் அகல வந்து அவதரித்தருளினார்; அன்று பகலோன் பரந்த பேரிருள் துரந்து வந்தெழுந்தனன் "சேம வுதயப் பரிதியிற் றிகழ்பிரானை" (1939) என இக்கருத்தினை முன்னர் ஒரு வகையால் உவமானமாகக் குறிப்பிட்ட பரிதி, ஈண்டு உவமேயமாக வைக்கப்பட்ட நிலைக் குறிப்பும் கருதுக. பரந்த பேரிருள் - உலகிற் பரவிய பெரிய புறவிருள். 1189

3088. அஞ்சிறைச் சுரும்பறைந் தெழுசண்பையாண் டகையார்
தஞ்சிவத் திருமணஞ்செயத் தவஞ்செய்நா ளென்று
மஞ்சனத் தொழில் புரிந்தென மாசிருள் கழுவிச்
செஞ்சுடர்க் கதிர்ப் பேரணி யணிந்தன திசைகள். கக௯0

3088 (இ - ள்) அஞ்சிறைச் சுரும்பு...ண்டு - அழகிய சிறகுகளை உடைய வண்டுகள் இசைபாடும் பொழில்கள் சூழ்ந்த சீகாழியின் ஆண்டகையாராகிய பிள்ளையார் தம் சிவத் திருமணம் செய்தற்கிடமாகத் தவஞ்செய்யப்பெற்ற நாள் இது என்று உட்கொண்டு; மஞ்சனத் தொழில் புரிந்தென - திருமஞ்சனத் தொழிலினைச் செய்தல் போல; மாசு இருள்...திசைகள் - மாசு இருளைக் கழுவிப் போக்கிப் பகலோனது செஞ்சுடராகிய கதிர்களின் பேரணியினைத் திசைகள் அணிந்துகொண்டன.

(வி - ரை) இச்செய்யுள் தற்குறிப்பேற்ற அணி கொண்டது.

சிவத் திருமணம் செயத் தவஞ்செய் நாள் என்று - சிவத் திருமணம் - சிவபெருமானாகிய நாயகனைக் கூடும் மணம். தவஞ்செய் நாள் - அந்நாளானது தனக்கு இதுவரை இல்லாத பிள்ளையாரது சிவத்திருமணம் நிகழ்த் தவம் செய்து அப்பேறு பெற்றது.

மஞ்சனத் தொழில் - புறத்தூய்மை செய்யும்படி குளித்தல்; (இருள்) கழுவி என்றது காண்க; "கழுவா வுடலங் கழுவின வாகிய கற்பகமே" (ஆளு. பிள் - திருவந்தாதி).

மாசு இருள் - இருளாகிய மாசு = (அழுக்கு) ; திசைகளுக்கு மாசாவது கறுகுலின் இருளே என்பது.

திசைகள் - இதனுள் உயிர்களையும் மதி (சந்திரன்) யினையும் அடக்கிக் கூற நிற்ப தால், உயிர்களுக்கு உண்மாசு (மலம்) என்றும், மதிக்குப் புறஇருள் என்றும் பெற வைத்த மாசு - இருள் என்று கூறிய குறிப்பும் காண்க.

செஞ்சுடர்க் கதிர்ப் பேரணி - செஞ்சுடர் - சூரியன் ; கதிராகிய அணி. செஞ் சுடர் - உதய சூரியனது கதிர்கள் செம்பொன்னிறம் காட்டி ஒளி தருதலின் பேர் அணி என்றார். அணிந்தன - அணியாகப் பூண்டுகொண்டன. 1190

3089. பரம்பு தம்வயி னெங்கணு முள்ளபல் வளங்கள்
நிரம்ப முன்கொணர்ந் தெண்டிசை யவர்நெருங் குதலால்
தரங்க டந்தவர் தந்திருக் கலலியா ணத்தின்
வரம்பி றன்பயன் காட்டுவ தொத்தது வையம். ககசுக

(இ - ள்) பரம்பு ...கொணர்ந்து - பெருகிய தம்மிடத்திலே எவ்வெவ்விடங்களி லும் உள்ள பல வளங்களையும் மிகுதிப்பட முன்னே கொண்டுவந்து ; எண்டிசையவர் நெருங்குதலால் - எட்டுத் திக்குக்களில் உள்ள மாந்தர்களும் நெருங்கி வந்து கூடிய வதனாலே ; தரம்...திருக்கல்லியாணத்தின் - ஒப்பில்லாதவராகிய பிள்ளையாரது திருக் கல்லியாணத்திலே ; வரம்பில்...வையம் - அளவில்லாத தனது பயனை நிலம் எடுத் துக் காட்டுவது போன்றது.

(வி - ரை) இப்பாட்டினால் ஐம்பூதங்களினும், வையம் (நிலம்) மேற்கொண்ட சிறப்புக் கூறப்பட்டது. வையம் - நிலம்.

எண்திசையவர் தம்வயின் எங்கணும் உள்ள பல்வளங்கள் - எட்டுத் திசையில் உள்ளாரும் யாண்டு யாண்டு தத்தம் சிறப்பாகிய வளம் பொருள்களுள்ளனவோ அவ்வவற்றைத் தேர்ந்து கொணர்ந்தனர் என்பதாம்.

திசையவர் - கொணர்ந்து - நெருங்குதலால் - வையம் காட்டுவதொத்தது - என்றது எல்லாத் திசைகளின் வளங்களும் இங்கு வந்து சேர்ந்தவதனால் நிலம் பெற்ற பயனை எடுத்துக்காட்டுவது போலும் என்றதாம்; (Exhibition). பயன் - பயன்படு பொருள்கள் - வளங்கள் ; நிலம் தான் இப்பொருள்களைப் பெற்ற பயனாவது (புவன போகங்கள்) பிள்ளையாரது திருக்கல்லியாணத்தினிற் சிறப்பிக்கும் இதுவேயாம் என்ற குறிப்பும்பட்த் தன் பயன் காட்டுவது என்றார்.

வரம்பில் தன் பயன் - புவனபோகங்கள் எனப்படும் நிலமும் பயனுமாவன எண் ணிறந்த வகையாம் என்பது.

முன் கொணர்ந்து - முன் - பிள்ளையாரது மணவெழுச்சியின் முன்பு காணக் கொணர்ந்து என்று இடமும், முன்னாளிலே எனக் காலமும் குறித்தது.

தரம் கடந்தவர் - அளவிடலாகாத தன்மையுடையவர் ; சிவஞான நிறைவு அள வுட்படாதது என்பது. 1191

3090. நங்கள் வாழ்வென வருந்திரு ஞானசம் பந்தர்
மங்க லத்திரு மணவெழுச் சியின்முழக் கென்னத்
துங்க வெண்டிரைச் சுரிவளை யார்ப்பொடு சூழ்ந்து
பொங்கு பேரொலி முழக்குட னெழுந்தது புணரி. ககசுஉ

(இ - ள்) நங்கள்.. முழக்கென்ன - அடியோங்களாய் வந்தணையும் நமது வாழ்வே உருவெடுத்து வந்தாற்போல வரும் திருஞான சம்பந்தரது மங்கலமாகிய திருமண

எழுச்சியில் எழுகின்ற மங்கல இயங்களின் முழக்கம்போல; துங்க ...சூழ்ந்து - பெரிய வெள்ளிய அலைகளோடு சுரிவளைகளின் சத்தத்துடனே சூழ்ந்து; பொங்கு...புணரி - மேன்மேல் எழும் பெரிய ஒலியாகிய முழக்கத்துடனே கடல் எழுந்தது.

(வி - ரை) இப்பாட்டினால் ஐம்பூதங்களுள் நீர் என்ற பூதம் பெருங் கடலாகிய உருவுடன் மணத்தினை மேற்கொண்ட சிறப்புக் கூறப்பட்டது.

**நங்கள் வாழ்வென** - இறப்பு நிகழ்வெதிராகிய முக்காலத்திலும் அணைவுற வந்தெழுமறிவு தொடங்கிய அடியார்களாகிய நம் எல்லாருடைய வாழ்வெல்லாம் திரண்டு ஒரு உருப்பெற்றாற் போல; "எங்களை வாழ" (3128) என்பதும் காண்க.

**மங்கலத் திருமண எழுச்சி - மங்கலம்** - இந்தச் சிவத்தன்மை குறித்தது. "**சிவத் திருமணம்**" (3088) என்றதும், அது முதல் ஆறு பாட்டுக்களிலும் மணத்தின் பெருமையினை ஓரோர் அடைமொழிகளால் விளக்குதலும், இவை சுத்தமாகிய பகம் எனப்படும் அறுகுணங்களையும் குறிப்பால் உணர்த்துகின்றதலும் காண்க. **திருக்கல்யாணம்** (3089), **மாமண விழா** (3091); திருமணம் (3092); **மெய்த் திருமணம்** (3093)

**மண எழுச்சி** - மணம் எழுந்து செல்லும் நிகழ்ச்சி, மணமகனும் சுற்றமும் பிறரும் விதிமுறையிற் சூழ்வாராக மங்கல முழக்கொடு சென்று மணமகளிருக்கும் மனைக்குச் செல்லும் சடங்கு எழுச்சி எனப்படும். "அருங்கடி மணமலர் செய்த" (169), "வள்ளலார் மணமலரா மருங்கணையா முன்" (886)

**எழுச்சியின் முழக்கு** - எழுச்சியின் பொருட்டு இசைக்கும் மங்கல இயங்களின் முழக்கம்.

**திரை ஆர்ப்பு - வளை ஆர்ப்பு** - என்று தனித்தனிக் கூட்டுக. வளை - சங்கு, இங்குச் சங்குகளில் வாழும் உயிர்களின் ஓசை வளை ஆர்ப்பு எனப்பட்டது. சங்கு - மங்கல முழக்குக்களுள் ஒன்று. "விருப்பிற்போடு வெண்சங்க மூதாவூரும்" (தேவா), "சங்க மிழைப்ப" (திருவா), "தாரியுஞ் சங்க மேங்க" (திருவிளை - திருமண - 185)

**வெண்டிரை - ஆர்ப்பு** - மண முரசமொடார்ப்ப என்பதும் "மாமி லாமண முர சென்கக் கடலின் தொலிகவா" (தேவா - திருக்கேதீச்சரம் - 11) என்ற திருவாக்கானுமறிக. **சுரிசங்கு** - சுரிந்த தலையுடைய சங்கு

**சூழ்ந்து** - வளைந்து; சீகாழிக் கண்மையில் செய்தலினையும் கடற்கரையும் உள்ளமை குறிப்பு.

**பொங்கு பேரொலி** - பெரிய ஒலி மேன்மேலும் ஓங்கியது என்பதாம், ஒலி - என்றார் மண எழுச்சியின் முழக்கு என ஒரு மங்கலப் பொருள் குறித்தெழுதலால்

**முழக்குடன் எழுந்தது புணரி** - பிள்ளையாரது திருமணச் சிறப்பினை மேற்கொண்டு ஒலித்துப் பயன்பெறக் கருதியது போலும் என்றது குறிப்பு

**புணரி** - எல்லா நீரும் வந்து கூடுதற்கு - சேர்தற்கு - இடமாவது, கடல் புணரி - இங்கு நீர் என்ற பூதக்கூட்டங் குறித்து நின்று சீகாழியின் திருமண எழுச்சியில் ஒலித்த கடலின் மேலதாய் நின்றது. புணரி கூறியதும் மேலும் வருவனவும் காண்க.
1192

3091\. அளக்க ரேழுமொன் றாமெனும் பெருமையவ் வுலகும்
விளக்கு மாமண விழாவுடன் விரைந்துசெல் வண்போற்
றுளக்கில் வேதிய ராகுதி தொடங்கிடா முன்னம்
வளர்க்கும் வேதியில் வலஞ்சுழித் தெழுந்தது வன்னி. கககூ

(இ - ள்) அளக்கர்...பெருமை - ஏழு கடல்களும் ஒன்றாய்க் கூடி எழுந்தன என்னும் பெருமைகொண்டு; எவ்வுலகும்...விழாவுடன் - எல்லாவுலகங்களையும் விளக்கஞ் செய்யும் திருமண எழுச்சியாகிய விழாவுடனே; விரைந்து செல்வனபோல் - தாமும் கூடிப் பயன்பெறும் பொருட்டு விரைவாகச் செல்ல ஒருப்பட்டெழுவனபோன்று, துளக்கில்...முன்னம் - அசைதலில்லாத ஒழுக்கத்தையுடைய வேதியர்கள் ஆகுதிகளைத் தொடங்குதற்கு முன்னமே; வளர்க்கும்...வன்னி - முத்தீ வளர்தற்கிடமாகிய வேதிகைகளில் தீயானது வலஞ்சுழித்து எழுந்தது.

(வி - ரை) இப்பாட்டினால் ஐம்பூதங்களுள் தீயானது திருமண எழுச்சியில் மேற்கொண்ட சிறப்புக் கூறப்பட்டது.

**அளக்கர்** - கடல். அளக்கர் ஏழு-உப்புக்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், கட்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், நன்னீர்க்கடல் என்பவை, சப்தசாகரம் என்பது வடமொழி.

**அளக்கர்...பெருமை** - ஏழு கடல்களும் ஒன்றுகூடி அலைபுரண்டு பெருகிச் சென்றாற் போன்ற பெருமை, வினையும் உருவும்பற்றி வந்த உவமம்; இல்பொருளுவமை. **ஏழும்** - உம்மை முற்றும்மை.

**எவ்வுலகும் விளக்கும் மாமண விழா** - விளக்கும் - மெய்ப்பொருளிது வென்று காட்டி விளக்கஞ் செய்யும்; பிறசரித விளைவுக் குறிப்பு. **விழா** - மண எழுச்சி.

**விழாவுடன் விரைந்து செல்வனபோல்** - எழுச்சியுடன் கூடித் தொடர்ந்து தாமும் செல்ல எண்ணி எழுவனபோல. **செல்வன** - செல்ல ஒருப்பட்டு எழுவன; வேதியர் பலரும் அவ்வவர் வேதியில் தனித்தனி இயற்றும் வேள்வித்தீ பலவாதலின் **செல்வன** என்று பன்மையாற் கூறினர். **எழுந்தது வன்னி** - வேட்போரின் தொகையாலும் வேட்கும் இடங்களாலும் தீப் பலவாயினும் தீ என்ற பொருட்டன்மையால் ஒன்றேயாதலின் வன்னி எழுந்தது என்று ஒருமையாற் கூறினர். அங்கங்கும் வன்னி எழுந்தது எனக.

**ஆகுதி** - நெய் - சமிதை முதலியவற்றால் உரிய மந்திர பாவனைகளுடன் செய்யப்படும் ஓமம்.

**வளர்க்கும் வேதி** - தீ வளர்க்கும் வேதிகை - (திண்ணை); தீ வளர்க்கும் என்பது மரபு. என்றும் அவியாது காத்து வளர்க்கப்படுதலும், மேலோங்கி வளரச் செய்தலும், அறங்கள் வளர்த்தற் பயனுதலும் குறிப்பு.

**ஆகுதி தொடங்கிடா முன்னம் வலஞ்சுழித் தெழுந்தது** - என்றும் அவியாது வளர்க்கப்படுதலின் ஆகுதி தொடங்கும் முன்பே தீத் தன்னியல்பான எழுந்தது, "ஆங்கு வேதியி லுறுதசெந் தீவலஞ் சுழிவுற், றோங்கி முன்னையி னொருபடித் தனிமேயொளிர" (1858) என்ற வரலாறும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. தீ வலஞ்சுழித்தெழுதல், நன்மணத்துடன் எழுதல், முதலியவை நன்மையின் அறிகுறி என்பர். ஆகுதியானன்றி மந்திரத்தினால் வரும் தீ என்பதும் கருதுக.

**துளக்கில் வேதியர்** - துளக்கம் - நிலைபிறழ்தல் - அசைதல் - பிறழ்தல்; இங்கு ஒழுக்கத்திற் பிறழாமையும் சிந்தை நிலையழியாமையும் முதலியவை குறித்தது. "விலங்கலமர் புயன்மறந்து மீன்சனிபுக் கூன்சலிக்குங் காலந் தானும், கலங்கலிலா மனப்பெருவண் மையுடைய மெய்யர்வாழ் கழுமலமே" (தேவா) என்று இவர் தன்மைகளைப் பிள்ளையார் அருளியமை காண்க.

**செல்வன போல்** - "புகைவிடும் வேள்விச் செந்தீ யில்லுடன் கொண்டு போவார்" (3100) என்று பின்னாக கூறும் நிலைக்கு முயல்வனபோல என்ற குறிப்பும் காண்க.

**மாமணி**—என்பதும் பாடம். 1193

3092. சந்த மென்மலர்த் தாதணி நீறுமெய் தரித்துக்
கந்த மேவுவண் டொழுங்கெனுங் கண்டிகை பூண்டு
சிந்தை தூயவன் பர்களுடன் திருமணம் போத
மந்த சாரியின் மணங்கொணர்ந் தெழுந்தது மருந்து. ௧௧௯௪

(இ - ள்) சந்தம்...தரித்து - அழகிய மெல்லிய பூந்தாதுக்களாகிய திருநீற்றை மெய்யிற் றரித்துக்கொண்டு; கந்தம்...பூண்டு - கூட்டமாகப் பொருந்தும் வண்டுகளின் வரிசையாகிய உருத்திராக்க மணிக் கண்டிகைகளைப் பூண்டு; சிந்தை தூய அன்பர்களுடன் - மனந் தூயராகிய அன்பர்களுடனே கூடி, திருமணம்...மருந்து - திருமண எழுச்சியிற் கலந்து செல்ல மெல்லிய வேகத்திலே பூமணங்களை ஏந்திக்கொண்டு மருந்து எழுந்தது.

(வி - ரை) இப்பாட்டினால் ஐம்பூதங்களுள் நான்காவது வாயு என்ற பூதம் மணமேற்கொண்ட சிறப்புக் கூறப்பட்டது.

**சந்த மென்மலர் ..தரித்து** - சந்தம் - இதுக்க கூட்டம் என்ற பொருளில் வந்தது. சந்தம் - அழகு என்றலும் மணம் என்றலுமாம். மலர்த் தாது - பூந்தாதுகள்; **தாது அணி நீறு** - பூந்தாதுக்களாகிய திருநீறு; உருவகம். மேல் வண்டொழுங்கெனும் கண்டிகை என்றதும் இவ்வாறே உருவகம். **தரித்து** - நீறு தரித்தல் என்பது மரபு; சிலேடை வகையால் **தரித்தல்** - தாங்குதல் என்ற பொருளிற் கொண்டு வாயு இங்குப் பூந்தாதுக்களைத் தாங்கி வந்தது எனக. மெய் - உண்மை-உடல் என்ற இருபொருளும் கொள்க. அடியார் நீறு தரித்தலுக்கு உண்மை என்றும், வாயு துகள் தாங்குதலுக்குத் தன் உடலில் என்றும் கொள்ளத் தக்கது.

**நீறு தரித்தும் - கண்டிகை பூண்டும் - மணம் கொணர்ந்தும் மருந்து எழுந்தது** - என்று கூட்டுக; தற்குறிப்பேற்றம். மண எழுச்சியில் அன்பர் கூட்டத்துடன் செல்வதற்கு அதற்குரிய திருவேடத்துடனன்றிச் செல்லலாகாதென்ற முறை கருதியது போலப் பூந்தாதுக்களாகிய திருநீறும் வண்டொழுங்காகிய கண்டிகையும் தரித்தும் பூண்டும் எழுந்தது என்பதாம். அன்பர் கூட்டத்துடன் செல்வோர் திருநீறும் கண்டிகையும் கொண்ட திருவேடம் பூண்டே செல்லுதல் வேண்டும் என்ற நியதியை எடுத்து வற்புறுத்திக் காட்டிய நயமும் கண்டுகொள்க. இறைவரது திருவிழாக்களிலும் திருக்கோயில் வழிபாடுகளிலும் திருநீறும் கண்டிகையும் கொண்ட வேடந்தாலும் கொள்ளாது புகுந்து தன்புறுத்தும் இந்நாளையார்கள் இதனை உணர்ந்து நன்னெறி ஒழுகுவாராயின் நலமாகும்; "ஆதியினமே, லுற்ற திருநீறஞ் சிவாலயமு முள்ளத்துச் செற்ற புலையாபாற செல்லாதே - நற்றவஞ்சேர், வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத, மூடருடன் கூடி முயங்காதே - நீடு, வழித்துப் பிறப்ப தறியாதாரைப், பழித்துத் திரி(ப)வரைப்பா ராதே" (நெஞ்சுவிடு தூது) என்றதும் பிறவும் காண்க.

ஈண்டு ஐம்பூதங்களும் மேற்கொண்ட சிறப்பினையும் இவ்வாறு மண எழுச்சியிற் சாரும் தகுதியும் பயனும்பற்றித் தற்குறிப்பேற்ற அணிநயம்பெறக் கூறியது மிக் கருத்தது.

**கந்தம்...பூண்டு - கந்தம் - கூட்டம்; கந்தம் மேவும் வண்டு - மணம் கண்டு வருகின்ற வண்டுகள் என்றலுமாம். "ஈட்டிய தேனபூ மணங் கண்டு" (திருமுக்)**;

பூக்கள் அலர்கின்ற பருவத்தில் வரும் அவற்றின் மணத்தினால் அப்பருவமறிந்து வந்து ஊதி அலர்த்தித் தேன் உண்பது வண்டுகளினியல்பாம்.

வண்டு ஒழுங்கு எனும் கண்டிகை - வண்டுகள் கோவைபோல ஒழுங்காகச் சாரும் நிலையும், செவ்விய கரிய வண்டுகள் பலவும் ஒழுங்குபட நிற்றல் கண்டிகைபோலத் தோற்றும் நிலையும் குறித்தது.

சிந்தை தூய அன்பர்களுடன் - மனத்தூய்மை யுடையார் அன்பர்களாதலின் கூட்டத்துடன் சாரவதற்குப் புறத்தூய்மையேனும் கொண்டு போதுவோம் என்பது போல என்ற கருத்து. சிந்தை தூயவர்களாதலின் எனக் காரணக் குறிப்புப்படக் கூறினார். அன்பர் இயல்பு கூறியவாறுமாம். திருமணம் போத - திருமணம் காண எழுச்சியிற் கூடிச் செல்ல.

மந்த சாரி - மெல்லிய வேகம் - கதி; கடுங் காற்றாய் வீசுதல் அவசகுனமாம்.

மணம் கொணர்ந்து - பூமணங்களைக் கையுறைபோல ஏந்திக்கொண்டு என்ற குறிப்பும் காண்க; தமிழ் மணம் என்றலுமாம். "பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின், கொங்கணைந்து குளிர்சார லிடைவளர்ந்த கொழுந்தென்றல்" (ஏயர் - புரா - 270). 1194

3093. எண்டி சைத்திறத் தியாவரும் புகலிவந் தெய்தி
மண்டு மெய்த்திரு மணவெழுச் சியினணி வாய்ப்பக்
கொண்ட வெண்ணிறக் குரூஉச்சுடர்க் கொண்டலக ளென்னும்
வேண்டு கிற்கொடி நிரைத்தது போன்றது விசும்பு. ககக௯ரு

(இ - ள்) எண்திசை...வாய்ப்ப - எட்டுத் திக்குக்களின் பகுதிகளில் வாழும் எல்லாத் திறத்தினரும் சீகாழியில் வந்து சேர்ந்து நெருங்கி எழுந்த அத்திருமண எழுச்சியின்கண் அழகு பொருந்தும்படி; கொண்ட...விசும்பு - மேற்கொண்டு தூக்கியெடுத்த வெள்ளிய நிறத்தையுடைய ஒளிபொருந்திய பெரு வெண்மேகங்களாகிய வெண்துகிலினாலாகிய கொடிகளை வரிசைபெற அமைத்ததுபோன்று இருந்தது வானம்.

(வி - ரை) எண்திசைத் திறத்து யாவரும் - எண்திசையிலும் எத்திறத்திலும் யாவரும் எனக். மண்டுதல் - நெருங்குதல்.

மண எழுச்சியின் அணி வாய்ப்ப - எழுச்சியிலே அதற்கேற்றவாறு அழகு பொருந்தும்படி; வாய்த்தலாவது முன் கூறிய சிறப்புக்களை எல்லாம் தொகுத்து முடித்துக் காட்டுதல்போலப் பொருந்துதல்.

கொண்ட வெண்ணிறக் - குருஉச் சுடர்க் - கொண்டல்கள் - "ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும் பெய்யு மா மழை" (தேவா - நமபி - புனகூர்). கொண்ட - நீரை மேற்கொண்ட; சுடர்க் குருஉக் கொண்டல்-எனக. குரு என்பது குருஉ எனச் செய்யு ளோசையின்ப நோக்கி அளபெடுத்து நின்றது. குரு - பருமை; நிறமுமாம். சுடர் - ஒளி; வெள்ளைமேகத்தி னியல்பாலும், அவற்றில் உண்டாகும் மின்னல்களினாலும் வரும் ஒளி.

வெண்ணிறக் கொண்டல்கள் என்னும் வெண்துகிற் கொடி என்க; வெண் மேகங்கள் என்னும் வெண்கொடி; உருவகம். நிறத்தானும் செறிவானும் புடை பெயர்ச்சியானும் மேகங்கள் துகிற் கொடிபோலாயின என்பது; வெண்கொடி மங்கலப் பொருள்; வெற்றிக் கொடியுமாம். "விதானமும் வெண்கொடியும்" (தேவா); வெண்கொடிகள் தூக்கி மணஎழுச்சியில் கலந்து விசும்பு பயன்பெற்றது போன்றது

என்பதாம். நிரைத்தது - வரிசையாக உயர்த்தியது; கார்மேகமாயின கன்மைக்குறியாகா; ஆதலின் வெண்மேகமும் அதுபற்றியே வெண்கொடியும் கூறினார்.

எண்டிசைத் தலத்து—மண்டுமத்திரு—என்பனவும் பாடங்கள்　1195

3094. ஏல விங்கல மியாவையு மெழுச்சிமுன் காட்டுங்
காலை செய்வினை முற்றிய கவுணியர் பெருமான்
மூலமாகிய தோணிமேன் முதல்வரை வணங்கிச்
சீல மார்திரு வருளினுன் மணத்தின்மேற் செல்வார்,　கககசு

3095. காழி மாநகர் வேதியர் குழாத்தொடுங் கலந்து
சூழு மன்பர்க ளேனையோர் துதைந்துமுன் செல்ல
வாழி மாமறை முழங்கிட, வளம்பதி வணங்கி,
நீழல் வெண்குடை நித்திலச் சிவிகைமேற் கொண்டார்.　கககஎ

3994. (இ - ள்) ஏல ...காலை - பொருந்தும்படி இங்கலங்கள் யாவையும் மண வெழுச்சியின் முன்னே காட்டுகின்ற காலையில், செய்வினை ..பெருமான் - செய்யும் கடப்பாட்டினை முடித்தருளிய கவுணியர்பெருமானாகிய பிள்ளையார்; மூலமாகிய ....வணங்கி - மூலமாகிய திருத்தோணியின் மேல் இறைவரைச் சென்று வணங்கி; சீலமார்...செல்வார் - செம்மை பொருந்திய திருவருள் பெற்றவராயத் திருமணத்தினை மேற்கொண்டு செல்வாராகி;　கககசு

3095. (இ - ள்) காழிமாநகர்.. செல்ல - சீகாழிப் பெரும்பதியின் மறையவர் கூட்டத்துடன் கலந்து சுற்றிச் சூழ்ந்த அன்பர்களும் ஏனையோர்களும் நெருங்கி முன்னே செல்லச் சென்று; வாழி மாமறை முழங்கிட - வாழ்வு தரும் பெருமறைகள் முழங்க, வளம் பதி வணங்கி - வளமுடைய சீகாழித் திருப்பதியினை வணங்கி; நீழல்.. மேற்கொண்டார் - ஒளி பெருகிய வெண் குடையினையுடைய முத்துச்சிவிகையின் மேலே எழுந்தருளி யமர்ந்தருளினார்.　கககஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3094. (வி - ரை) ஏலுதல் - பொருந்துதல், இங்கலம் யாவையும் - பகலோன் (3087) முதலாக விசும்பு (3093) ஈறாக முன்கூறிய இவற்றின் சிறப்பும் நன்மைக் குறிகளும் ஆகிய அனைத்தும்.

எழுச்சி முன் காட்டுங்காலை - மண எழுச்சியின் முன்னே அமைந்து காட்டியகாலையில்; காலை - காலைப்பொழுது

செய்வினை முற்றிய - காலைக் கடப்பாடுகளையும், மண எழுச்சியின் முன்னாச் செய்யப்படுவனவற்றையும் முடித்த; செய்வினை - இவ்வுலகில் வந்தவதரித்துச் செய்ய வேண்டுவனவாய இறைவர் திருவருள் கொண்ட பரசமய நிராகரிப்பும் திருநீற்றின் ஆக்கமுமாகிய இரண்டும் என்ற குறிப்பும் காண்க.

மூலமாகிய தோணி என்றும், மூலமாகிய முதல்வர் என்றும் தனித்தனி கூட்டி உரைக்கின்றது; மூலம் ஆகிய தோணி என்புழி மூலம் - மறைமுதலாகிய பிரணவம் எனக; வேதங்களே தோணி உருவுடன் இறைவரை உட்கொண்டு தாங்கி நின்றன என்பதாம்; "சுருதி தொடாந்த பெருந்தோணி" (1971); "தொலைவிலாதமா மறைக டரண்ட பெருந்திருத் தோணி" (1997). மூலமாகிய முதல்வர் - என்புழி எப்பொருட்கும் மூல முதல்வராகிய சிவபெருமான் எனக; "எப்பொருளு

மாக்குவா னீசனே" ; மூலமெனபது நிமித்தகாரணராகி நின்று உலகுயிர்களைத் தம் முள் ஒடுக்கியும் மீளத் தோற்றுவித்தும் ஐந்தொழில் புரியும் முழுமுதற்றன்மை. "நின் னுவார் பிறரின்றி நீயே யானாய்" என்பது முதலியவை காண்க.

**முதல்வரை வணங்கி** - பதியினின்றும் புறப்படும்போதெல்லாம் வணங்கி யருள் விடை பெற்றுச் செல்லும் பொதுவகையானன்றி, அன்று, அதுவே இறுதிமுறையாக இனி மீண்டு வாரா நெறிச்செல்லும் நிலையாதலின் சிறப்பு வகையாலும் வணங்கி என்க. மூலமாகிய என்ற குறிப்புமது; யாது யாண்டுத் தோன்றியது அஃது ஆண்டு ஒடுங்கும் என்ற முறையின் குறிப்பு. பின்னர் **வளம்பதி வணங்கி** (3095) என்பதுமிது.

**சீலம்** - செம்மை. **திருவருளினால்** - திருஅருட் குறிப்பினாலே அருள்விடை பெற்று.

**மணத்தின்மேற் செல்வார்** - மேற்செல்லுதல் - கருதிச் செல்லுதல்; மேற் கொண்டு போதல் **செல்வார்** - முற்றெச்சம்; மேற்செல்வார் - வணங்கி - மேற் கொண்டார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. மேல (மேலாகிய) மணத்திற் செல வார் என மாற்றியுரைப்பதுமாம் (வ. சு. செ.)

**இன்னணம்**—என்பதும் பாடம். 1196

3095 (வி - ரை) **வேதியர் குழாத்தோடும்** - சுற்றத்தார்களாதலின் வேதியர் கள் அணுக்கமாய நெருங்கிச் செல்லும் உரிமையுடைய சிறப்புப்பற்றி முன் கூறப்பட் டனர். **ஓடு** - உருபு வேதியர்களுடன் சார்ந்தி ஓதியதும் இதுபற்றி.

**குழாத்தோடும் கலந்து - அன்பர்கள் ஏனையோர்** - அவ்வாறாயினும் பிள்ளையார் திறத்து அன்பர்களும் ஏனையோரும் அன்பினுரிமையாற் கலந்து சென்றனர் என்க. **ஏனையோர்** - உடற் சுற்றம்பற்றிய வேதியர்களுமாகாது, உயிர்ச்சுற்றம்பற்றிய அன்பர் களுமாகாது நின்ற மறையோர்; இவர்கள் பணியாளர்களும் பிறரும் ஆவர். பின்னர் " வேறுதிரு வருளினால் வீடுபெற வந்தோரும்" (3150) என்பது காண்க.

**வளம்பதி வணங்கி** - அப்பதியினை நீங்கிச் செல்வது இதுவே இறுதிமுறையாத லின் அக்குறிப்புப் பெறப் பதியினை வணங்கிச் சென்றருளினர். முன்னர், இம்முறை யில் தில்லையினின்றும் போந்தருளியபோது, சீகாழிப் பதி தூரத்தே தோன்றுதலும் சிவிகையினின்றும் இழிந்து, பதியினை எதிர்வணங்கிப் பதியின்மேற் றிருப்பதிகம் " வண்டார் குழலரிவை " என்று (3045) பாடியருளியதும், அதன்மேல் புறம்பணை யில் வந்தபோது பதியினைத் தூபதீபங்களுடன் றொழுது " காழிநகர் சேர்மின் " எனக் கடைமுடிந்த திருப்பதிகம் அருளிப் பதியினுட் புகுந்தருளியதும் (3046) ஆண் டுரைத்தவையும் இங்கு நினைவு கூர்தற்பாலன.

**முதல்வரை வணங்கி - பதி வணங்கி**-முதல்வரைப்போலவே அவர் எழுந்தருளிய பதியும் வணங்கத்தக்க தென்பார் இந்த இரண்டு பாட்டாலும் தனித்தனி எடுத்துக் கூறியதுடன் அவை இரண்டும் ஒரே வழிபாட்டின் இரு பகுதிகளாவன என்பார் இரண்டு பாட்டும் ஒருமுடிப்புப்படுத்தி ஓதினர்.

**நீழல் வெண்சுடர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார்** - " சோதி முத்தின " என்றும், " வெண்ணீற் றொளி " என்றும் சிவிகையினை முதலில் ஏறியபோது உரைத் தவை ஈண்டு நீழல் - வெண்சுடர் எனக் கூறி முடித்துக் காட்டப்பட்டன; அங்குத் தொடங்கிய சிவிகை ஏறும் நிலை இங்கு இதனுடன் நிறைவெய்துதும் குறிப்பினைக் காட்டுதல் கண்டுகொள்க. பிள்ளையார் முத்தச் சிவிகையினை மேற்கொள்ளுதல் இதுவே இறுதிமுறை என்பதும் காண்க. **சிவிகை** - சிவிகையினை என இரண்ட னுருபு விரிக்க. **மேற்கொள்ளுதல்** - மேல் எழுந்தருளி வீற்றிருத்தல். **நீழல்** - திருவடி

சீழலும், கூடி - பின் வரலாற்றில் வரும் சோதியும் குறிப்பிற்பெற நின்றமையும் காண்க. 1197

3096. ஆன வாகன மேறுவார் யாருமேற் கொள்ளக்
கான மாகிய தொங்கல்பிச் சங்குடை கவரி
மேனெ ருங்கிட விசும்பினு நிலத்தினு மெழுந்த
வான துந்துபி முழக்குடன் மங்கல வியங்கள். ககூஅ

(இ - ள்) ஆன...மேற்கொள்ள - அவரவர்க்காயின வாகனங்களை ஏறிச்செல்வார் அவ்வவற்றினை ஏறி மேற்கொள்ள; கானமாகிய...மேனெருங்கிட - காடுபோன்ற தொங்கல்களும், பீலிக் குஞ்சங்களும், குடைகளும், கவரிகளும் மேலே நெருங்கவும்; விசும்பினும் நிலத்தினும் - ஆகாயத்தினும் நிலத்தினுமாக முறையே; வான துந்துபி ...இயங்கள் - தேவதுந்துபி முழக்கத்துடனே மங்கல வாத்தியங்களின் ஒலியும்; எழுந்த - ஒருங்கே எழுந்தன.

(வி - ரை) ஆன வாகனம் - அவரவர்க்காயின ஊர்திகள். ஆன - பக்கத்தி லிருக்கவேண்டியவர்கள், விருத்தர், பாலர், பணிமொழியார் முதலியோர்களும், மற்றும் நடந்து செல்ல இயலாதோரும், பண்டங்களைப் பெயர்த்துக்கொண்டு செல்வோரும், திருவினால் சிவிகை பரி முதலாயின ஊர்தி வகைமேற்கொண்டு செல்வோரும் முதலாக அவ்வவர்க்காயின என்க. யான வாகனம் என்பது பாடமாயின் யானம் - சிவிகை என்று கொள்க. "உயர்ந்த வாகன யானங்கள் மிசைக்கொண்டார் குழைய ராளுர்" (166); முன்னை நாளில் உயர்குலப் பெண்கள் சிவிகையிற் செல்லும் வழக்குப்பற்றி "மாமணிச் சிவிகை தன்னில் மடநடை மயிலன் னாரை..... ஏற்றி" (1757) என்றும், "அன்னமென் னடையி னொரு மணிமணிச் சிவிகை யேறி" (2623) என்றும் வரும் காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசி யம்மையார் வரலாறுகளும் பிறவும் பார்க்க.

ஏறுவார் யாரும் - முன் கூறியவாறு ஏறும் மரபும் வழக்கும் அவசியமும் நிலையு முடையோர் யாவரும்.

கானமாகிய - காடுபோல; "கவரிக்கானம்" (3199); நிலத்தில் தண்டு வேரூன்றி மேலே தழைத்து விரிந்து செறிந்துள்ள தாவரங்கள் கானம் எனப்படும்; இங்குத் தொங்கல் - கவரி முதலியவை மாந்தரால் தாங்கி உயர்த்தப்பட்டு மேலே விரிந்து நெருங்குதலின் கானம் போன்றன என்பதாம். கானம் போன்றதனைக் கானமென்றது உபசாரம்.

தொங்கல்...கவரி - மேலுயர்த்திப் பிடிக்கும் உபசாரக் கருவிகள்; இந்நாளில் இவற்றின் எடுத்துக்காட்டுக்களைப் பெரிய ஆலயங்களிலும் பெருந் திருமடங்களில் மட்டும் ஏகதேசத்திற் காணலாம்; மேல் நெருங்கிட - மேலே உயர்த்திப் பிடித்தலால் மேனிலத்தில் நெருக்கமாகக் காணப்பட.

விசும்பில் துந்துபி முழக்கும் நிலத்தில் இயங்களும் என்று நிரனிறையாக்குக.

துந்துபி - தேவதுந்துபி; தேவர்கள் இத்தெய்வச் சிவமணங் காண மேலே நெருங்கிப் போந்து தொடர்ந்து துந்துபி முழக்கி ஆரவாரித்தனர்; மேல் 3102 - 3108 - 3156 - 3168 பார்க்க.

இயங்கள் - இயங்களின் முழக்கு ஒலிக்காகி வந்தது.

V—187

முழக்குடன் இயங்கள் - எழுந்த என்று கூட்டுக. எழுந்த - எழுந்தன ; வினை முற்று ; சிறப்புப்பற்றித் தந்தியை முன்னா வைத்து உடன் உருபையுங் கூட்டி யுரைத்தார். 1198

வேறு

*3097. சங்கொடு தாரை சின்னந் தனிப்பெருங் காளந் தாளம்
திருமண எழுச்சி வங்கிய மேனை மற்று மலர்துளைக் கருவி யெல்லாம்
பொங்கிய வொலியி னோங்கப் பூசுரர் வேத கீதம்
எங்கணு மெழுந்து மல்கத் திருமண மெழுந்த தன்றே. ௧௧௯௯

(இ - ள்) சங்கொடு...ஓங்கி - சங்கினோடும், தாரையும், சின்னமும், ஒப்பற்ற பெரிய எக்காளமும், தாளமும், குழலும் அதுபோன்ற ஏனைய நாதம் மலர்கின்ற துளைக் கருவிகள் எல்லாமும், மேலெழுந்த ஒலியினால் ஓங்கி ; பூசுரர்...மல்க - மறையவர்களது வேதகீதங்களின் ஒலியினோடும் பொருந்தி எங்கும் எழுந்து பெருக ; திருமணம் அன்றே எழுந்தது - திருமணமானது அன்றே எழுச்சி பெற்றுச் சென்றது.

(வி - ரை) தாரை - சின்னம் - தனிப்பெருங் காளம் - தாளம் - இவை பிள்ளையாருக்கு இறைவர் அளித்தருளியவை ; பெருங்காளம் - உருவினாலும் ஓசையினாலும் பெரியதென்பது ; தனி - இறைவர் தந்தருளியமையால் ஒப்பற்ற தன்மை ; தனி - என்பதனைத் தாரை - சின்னம் என்பவற்றுடனும் கூட்டுக.

சங்கொடு - சங்கு, மங்கல இயங்களுள்ளே சிறந்தமைபற்றியும், ஏனையவைபோல மனிதர் செயற்கையானன்றி இயல்பாகவே உளதாகும் சிறப்புப்பற்றியும், பிரணவநாதம் நீங்காதொலித்தற் சிறப்புடைமையும் பிரணவ வடிவுடைமையும் பற்றியும் முன்வைக்கப் பட்டது; ஆனால் தாரை சின்னம்போல இறைவராற் றரப்படாமையின் ஒடுவுருபு தந்து பிரித்தோதினார். "சங்கொலிப் பித்திடு மின்சிறு காலை" (தேவா) ; "இயம்பின சங்கம்" (திருவா) என்றபடி இங்கு மண எழுச்சியின் காலத்துக்குரியதாதலின் முன் வைத்ததுமாம்.

வங்கியம்..... துளைக்கருவி யெல்லாம் - வங்கியம் - குழல் ; ஆயர் புராணத்தின் "இன்னிசை வங்கியம்" (948) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. துளைக் கருவிகளுள் முதன்மைபற்றி இதனை முன்வைத்தோதினார். ஏனை என்றதுமிக் குறிப்பு "குழலினிது" (குறள்) என்ற சிறப்பும் காண்க. முன்பாட்டில் இயங்கள் என்றது தோற்கருவிகள்.

ஒலியின் ஓங்கி - மல்க - எழுந்தது - எனக ; ஒலியின் - ஒலியினால் ; ஒலி - என்றார் மங்கலமாகிய பொருள் குறித்தலின் ; வேத கீதத்துடன் சேர்த்துக் கூறியதும் இக்கருத்து. இன் - போல என்று கொண்டு இயங்களின் ஒலிபோல மறை முழங்கின என்றலுமாம். "வாச்சியமத்தள பேரிகைபோல் மறைவாழ்த்த .....திருத்தணி மாமலை மேவிய பெருமாளே" திருப்புகழ். (வ. சு. செ.)

திருமணம் எழுந்தது - மரபு வழக்கு ; மணம் - மணத்தின் பொருட்டு மணமகன் தன் சுற்றத்தாருடன் மணமகளின் மனைக்குச் செல்லும் எழுச்சி ; "அருங்கடி மணம்வந் தெய்த" (169) ; அன்றே - அப்பொழுதே ; திருமண நாளன்றே என்றலுமாம்.

வேதநாதம்—என்பதும் பாடம். 1199

3098. கோதையர் குழல்சூழ் வண்டின் குழாத்தொலி யொருபாற், கோல
வேதியர் வேத வாய்மை மிகுமொலி யொருபான் மிக்க
ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி யொருபா, லேத்தும்
நாதமங் கலங்கள் கீத நயப்பொலி யொருபா லாக ; கஉ00

3099. விண்ணினை விழுங்க மிக்க வெண்டுகிற் பதாகை வெள்ளங்
கண்வெறி படைப்ப மிக்க கதிர்விரி கவரிக் கானம்
மண்ணிய மணிப்பூ ணீடு மரிசன மலிந்த பொற்பின்
எண்ணிலா வண்ணத் தூசின் பொதிப்பரப் பெங்கு நண்ண, கஉ0க

3100. சிகையொடு மான்றோ ருங்குங் கிடையுமா சானுஞ் செல்வார்,
புகைவிடும் வேள்விச் செந்தீ யில்லுடன் கொண்டு போவார்,
தகைவிலா விருப்பின் மிக்க பதிகங்கள் விளம்பிச் சார்வார்,
வகையறு பகையுஞ் செற்ற மாதவ ரியல்பின் மல்க, கஉ0உ

3101. அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா விரதஞ் சாரும்
நெறிவழி நின்ற வேடந் நீடிய தவத்தி னுள்ளோர்,
மறுவறு மனத்தி லன்பின் வழியினால் வந்த யோகக்
குறிநிலை பெற்ற தொண்டர் குழாங்குழா மாகி யேக, கஉ0௩

3102. விஞ்சைய ரியக்கர் சித்தர் கின்னரர் மிடைந்த தேவர்
அஞ்சன நாட்ட வீட்டத் தரமடைய ருடனு யுள்ளோர்
தஞ்சுடர் விமான மேறித் தழைத்தவா தரவி னோடு
மஞ்சுறை விசும்பின் மீது மணவணி காணச் சென்றார். கஉ0ச

3098. (இ-ள்) கோதையர்...ஒருபால் - பெண்களுடைய கூந்தலைச் சூழ்ந்த வண்டுக் கூட்டங்களின் ஒலி ஒருபக்கத்திலும், கோல...ஒருபால் - கோலத்துடன் கூடிய மறையவர்கள் ஓதும் வேத வாய்மை மிகும் ஒலி ஒருபக்கத்திலும்; மிக்க...ஒருபால் - குற்றமில்லாத மிக்க வீணையும் யாழுமாகிய இவற்றின் ஒலி ஒருபக்கத்திலும்; ஏத்தும்...ஒருபாலாக - துதிக்கின்ற நாதத்துடன் கூடிய மங்கலங்களைக் கீதமாகப் பாடும் இனிய ஒலி ஒருபக்கத்திலுமாகச் சத்திக்க, கஉ00

3099. (இ-ள்) மிக்க...வெள்ளம் - மிகுந்த வெண்துகிற்கொடிகளின் கூட்டம்; விண்ணினை விழுங்க - ஆகாயவெளியை மறைக்கவும்; மிக்க கதிர்...கானம் - மிகுந்த ஒளி விரியும் சாமரைகளின் கூட்டம் கண்வெறி செய்யவும், மண்ணிய மணிப்பூண் - விளக்கம் செய்த மணிகளையுடைய அணிகளும், ஈடும்...பொதிப்பரப்பு - நீடுகின்ற மஞ்சனிற மிகுந்த அழகிய அளவில்லாத வண்ணங்களையுடைய அணிப்பொதிகளின் கூட்டமும்; எங்கும் நண்ண - எங்கும் பொருந்த, கஉ0க

3100. (இ-ள்) சிகையொடு...செல்வார் - பஞ்ச சிகைகொண்ட கோலத்துடன் கருமான்தோலைப் பூணூலில் தரித்த வேதம் ஓதும் சிறுவர்களும் உபாத்தியாயருமாகக் கூடிச் செல்லவும்; புகைவிடும்...கொண்டுபோவார் - ஓமப்புகை விடுகின்ற வேள்விச் செந்தீயினைத் தத்தம் மனைவியர்களுடனே கொண்டு மறையவர் போகவும்; தகைவிலா...சார்வார் - தடுக்கலாகாத விருப்பத்துடனே பெருமையாற் சிறந்த திருப்

பதிகங்களை ஓதிக்கொண்டு ஓதுபவர் செல்லவும்; வகையறு...மல்க - ஆறு வகையான பகைகளையும் அறுத்த மாதவர்கள் தத்தம் இயல்புடனே நெருங்கவும்; கஉ0உ

3101. (இ - ள்) அறுவகை...தவத்தினுள்ளோர் - சைவத் திறத்தில் ஆறு வகையாக விளங்கும் உட்சமயங்களில் எண்ணிறந்த விரதங்களைச் சார்ந்த ஒழுக்க வழிகளிலே நின்ற உரிய வேடங்களால் நீடிய தவத்தில் நின்றோர்களும்; மறுவறு... ...தொண்டர் - குற்றமற்ற மனத்தினுடன் அன்பின் வழியினாலே வந்த சிவயோகக் குறியின்கண் நிலைபெற்ற தொண்டர்களும்; குழாம்...ஏக - கூட்டங் கூட்டமாகச் செல்லவும் (நிலத்தின்கண் இவ்வாறாக நிகழ); கஉ0௩

3102. (இ - ள்) விஞ்சையர்...தேவர் - வித்தியாதரர்களும், இயக்கர்களும், சித்தர்களும், கின்னரர்களும், நெருங்கிய தேவர்களும்; அஞ்சன...உடனுயுள்ளோர் - மைதீட்டிய கண்களையுடைய கூட்டமாகிய அரம்பையர் என்னும் தேவமாதர்களுடனுக வுள்ளவர்களும்; தம்சுடர்...சென்றார் - தங்கள் தங்களுடைய ஒளி பொருந்திய ஆகாய விமானங்களில் ஏறிக்கொண்டு மேன்மேல் மிகுந்த ஆசையுடனே மேகங்கள் தவழும் ஆகாயத்தின் வழியாகத் திருமண அழகினைக் காணும்பொருட்டுச் சென்றனர். கஉ0௪

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3098. (வி - ரை) குழல் சூழ் - குழலின் அணிந்த மலர்களிற் சூழும்; குழலின் இயற்கை மணத்தினால் வந்து சூழும் என்ற குறிப்புமாம்.

கோலவேதியர் - மறையவராகக் குரியதாய விதித்த கோலத்தின் விளங்கும் வேதியர்கள்; கோலம் - அழகு என்றலுமாம்.

வேத வாய்மை - வேதத்தைச் சொல்லுதலால்; வாய்மை - வாய்மொழியும் நிலை என்ற பொருளில் வந்தது. வாய்மை - உண்மைத் தன்மை என்று கொண்டு வேத வாய்மைகளைச் சொல்லும் என்றலுமாம். வாயமை வேதஒலி என்றலுமாம்.

விபஞ்சி வீணை யாழ் - விபஞ்சி - இசைக்கு உயிர் கொடுக்கக்கூடியதான; குறிஞ்சியாழ்த் திறத்துள் ஒன்று என்றலுமாம்—விபஞ்சி - விபஞ்சி வேறு, வீணை வேறு; வீணைகள் மூவகைய: (1) சுரவித்தை - ஒரு தந்தி உடையது - கலைமகளுக்கு உரியது. (2) வீணை - ஐந்து தந்தி உடையது - நாமகளுக்கு உரியது. (3) விபஞ்சி - எழு தந்தி உடையது - மலைமகளுக்கு உரியது. (இவை வ. சு. செ. குறிப்பு.) வீணையும் யாழும் என்று எண்ணும்மை விரிக்க.

ஏத்தும் நாதமங்கலங்கள் கீத நயப்பு - ஏத்துதல் - பலவாறு இறைவரது புகழ்களையும் பிள்ளையாரது புகழ்களையும் எடுத்துத் துதித்தல். நாதம் - உரிய இசைப் பகுதி; மங்கலங்கள் கீதம் - மங்கலங்களை இசைக்கும் கீதம்; நயப்பு - விருப்பந் தரும் இனிமை.

வண்டின் குழாத்தொலி - வண்டுகள் தம்மியற்கையாலே பண் பாடும் தன்மை பற்றி அவற்றின் ஒலி முதற்கண் வைக்கப்பட்டது; "செந்துருத்தி, யறைந்தளிகள் பயில்சாரற் றிருக்கழுக்குன்று" (3027); "சிவந்தவண்டு, வேறாய உருவாகிச் செவ்வழிநற் பண்பாடு மிழலை" (தேவா).

வேத வாய்மை - இயல்பாகவே சுர அமைப்புடன் இறைவனால் அருளப்பட்டு அவ்வாறே பயின்றுவருதலின் இது அடுத்து வைக்கப்பட்டது.

விபஞ்சி வீணை யாழ் - வீணையும் யாழும் இசைக்கு உயிர்கொடுக்கும் தன்மை யாவது ஏனைய இசைக்கருவிகள் (சுரம்) இசைமட்டுமே இசைக்க, இவை இசைப் பாட்டினைப் பாடும் தன்மை; ஒலி என்ற கருத்துமிது. "குழலினிது யாழினிது" (குறள்); இத்தன்மையில் மேம்பட்டது குழல். இக்கருத்தையும் மேன்மையினையும்

விளக்குவன இறைவர் தம் கையில் வீணையினையும், அவர் தேவியாகிய விட்டுணு குழலினையும் கொண்டு வரலாறுகள். "எம்மிறை நல்வீணை வாசிக்குமே"; "அரியலாற் றேவியில்லை யையனை யாற னார்க்கே"; "ஆயன்வாய்த் தீங்குழலும்" (11 - திருமூலற - கபிலர் - சிவபெருமான திருவந்தாதி - 28).

இப்பாட்டினால் எழுச்சியில் எழுந்த ஒலி வகைகளும் மேல் அணிவகைகளும் கூறப்படுவன. அதனமேல வரும் பாட்டினால (3100) வைதிகரிலே ஒழுக்கத்தினராகளாயும், அதனமேல் வரும் பாட்டினால (3101) ஆகமநிலே ஒழுக்கத்தினாகளாயும் உடன் சென்றவர்களும், அதனமேல் தேவச்சாதியார்களும் கூறப்படும முறையில இவை தொடர்ந்து வருதல் கண்டுகொள்க. இவற்றுள் (3098—3101) முதனான்கு பாட்டுகள் மண்ணுலகில் நிலத்தின்கண் நிகழ்ச்சிகளும, ஐந்தாவதில விண்ணவர்து வானில் நிகழ்ச்சிகளும கூறப்படுவதும காண்க

(நிலத்தில) ஆர்க (3098), விழுங்க, படைப்ப, கண்ண (3099) - மல்க (3100) - எக (3101) - (வானில) சென்றா (3102) என்று இவ்வைந்து பாட்டுகளையும் தொடர்புபடுத்திக்கொள்க. 1200

3099. (வி - ரை) விழுங்குதல் - மறைத்தல ; பதாகை - கொடி ; வெள்ளம் - மிகுதி ; விண்ணினை விழுங்குதல் ஆகாயவெளியை மறைக்கும்படி மிகுந்து செறிதல் ; வெண்துகிற் கொடி - வெள்ளைத் துணிகளாலான கொடிகள். வெள்ளைக் கொடிகள் இந்நாளிலும் போர் முகத்துச் சமாதானக் குறிகளாக வழங்குதல் காண்க.

வெண்மை - சாந்தம், உண்மை முதலிய சத்துவ குணங்களின அறிகுறி. வெள்ளம் - விழுங்க என்று கூட்டுக.

கவரிக்கானம் - கவரி - சாமரைகள் ; கானம் - காடுபோல்வதனைக் காடு என்ற உபசாரம். கதிர்விரிதலாவது கவரிகள் வீசுந்தோறும் ஒளி விரிந்து காட்டுதல்.

கண்வெறி படைத்தல் - அசைவினாலும் விரியும சுழலவினாலும பார்ப்போர் கண்கள் சுழன்று மயக்கமடைதல. கானம் - வெறிபடைப்ப என்று கூட்டுக

மன்னிய மணிப்பூண் - மணிகளை மன்னுதல் - கடைதல் விளக்குதல் முதலிய செயல்களால மணிகளை ஒளிமிகச் செய்தல ; "மாமணிச் சோதியான் - உறவு கோனட் டுணர்வு கயிற்றினன், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே" (தேவா).

பூணும் - தூசின் போதிப்பரப்பு நண்ண எனக. எண் உம்மைகள் விரிக்க. மணத்தின எழுச்சியில ஆடையாபரணங்கள மிகவும கொண்டு செலலும வழக்குக் குறித்தது.

அரிசனம்...தூசின்போதி - அரிசனம் - மஞ்சள் , அரிசனம் மலிந்த போதின் - தூசு - மஞ்சல தோய்த்த துணிகளும் மஞ்சட்பட்டு வகைகளும். மஞ்சல் நிறம் - சுபக்குறி காட்டுதற கெடுத்தது.

எண்ணிலா வண்ணம் - மஞ்சல முதன்மையாகப பல வண்ணங்களும் கலந்த அழகு. தூசின் போதிப்பரப்பு - துணி மூட்டைகளின மிகுதி. 1201

3100. (வி - ரை) சிகையொடு...ஆசானும - வேதமோதும் சிறுவரும் அவர்களை ஓதுவிக்கும் ஆசானும் கூடி ஒரு தொகுதியாக; கிடை - ஓது கிடை ; மறை பயில இடத்திற்றங்கிக் கிடத்தலின கிடை எனப்படும். இங்குக் கிடை அவ்வாறு தங்கிக் கிடந்து பயிலும மாணவர் கூட்டத்துக்கு வந்தது ; "ஓது கிடைசூழ் சிறுவர்களு முதவும் பெருமை யாசானும்" (1208).

**புகைவிடும்...கொண்டுபோவார் - வேள்விச் செந்தீ** - இஃது அம்மறையவர் வளர்க்கும் நித்தியாக்கினி; மறையவருள் இல்வாழ்வார் நித்தியமும் தீவளர்த்து வேட்கக் கடவர் என்பது வேதவிதி ஆதலின் அத்தீயினைத் தாம் மனைவியருடன் செல்லுமிடங்களிலும் தவிராது வளர்த்தற்பொருட்டுக் கொண்டுசெல்லக் கடவர்; **இல்லுடன்** - இவ்வேள்வி மனையாளோடன்றிச் செய்யப்படாமை குறிப்பு. **புகைவிடும்** - மண வேளையிற் றொடங்கிய நித்தியாக்கினி சாங்காறும் அவியாது காக்கப்படுவது என்பது குறிப்பு; தீயினை அவியாதபடி என்பது பொருள்.

**தகைவிலா விருப்பின்** - தடுக்கலாகாத பெருவிருப்பினாலே; **பதிகங்கள்** - பிள்ளையாரது திருப்பதிகங்களை; அவற்றின் பெருமையும், இறைவரருளிய மறையேபோன்று "மெய்த்திருவாக்" காகும் வாய்மையும் நேரிற் கண்டுணர்ந்தோர்களாதலின் வேதம் பயிலும் இம்மறையவர்கள் தடுக்கமுடியாத பெருவிருப்புக் கொண்டு ஓதினர்; **தகைதல்** - தடுத்தல்; விலக்குதல். **மிக்க** - மிகுந்த அருட்பெருமையுடைய.

**வகை அறு பகை** - பகை ஆறுவன - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்பன; இவை வெளித்தோற்றாது உண்ணின்றே மக்களை வீழ்த்தலின் **பகை** என்றார்; வகை என்றது உட்பகை, புறப்பகை என்ற இரண்டனுள் வலிமையுடையது உட்பகை என்றதும் குறிப்பு; உம்மை முற்றும்மை. **செற்றமையால் மாதவர் என்று** காரணக் குறிப்புப்பட வந்த அடைமொழி; **மாதவர்** - மேம்பட்ட அந்தணர்களைக் குறித்தது; **இயல்பின்** - தத்தமக்கியல்பாகிய சிறப்பினாலே. 1202

3101. **(வி-ரை) அறுவகை விளங்கும் சைவம்**-இவை நால்வகைச் சமயப் பாகுபாட்டில் சைவத்துள் அகச்சமயம் என வகுக்கப்பட்ட பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்தவாதம், ஈசுவரவவிகாரவாதம், சிவாத்துவிதம் என்பன.

நால்வகைச் சமயத்தவருள், ஏனை மூவருள் உலகாயதரும் நால்வகைப் பௌத்தரும் ஆருகதரும் என்ற அறுவகை புறப்புறச் சமயத்தவரும்; தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என்ற அறுவகைப் புறச்சமயத்தவரும் ஈண்டுப் பிள்ளையார் திருமணங் காண வருதற்கியைபில்லை; இனிப், பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வயிரவம், ஐக்கியவாதம் என்ற சமயத்தினர் சிற்சில வகைகளாற் சைவரோடொப்பினும், தத்தம் நெறிகளானும் முடிபுகளானும் மாறுபாடுடையார்.*

*அவரெல்லாம் சித்தாந்த சைவரோடொப்ப "ஏக னனேக னிருள்கரும மாயையிரண்டு" (திருவருட்பயன் - 6 - 2) என்ற ஆறு பதார்த்தங்களுங் கொள்ளாமையானும், அவ்வறுவகைப் பதார்த்தங்களின் இயல்பைக் கொளுத்தினுங் கொள்ள மாட்டாராகலானும் "புறச்சமயத் தவாக்கிருளாய" (சிவப் - பாயிர - 7) என்றபடி அவரையும் நீக்கி அறுவகை அகச்சமயத்தவரே ஈண்டுக் கருதப்பட்டனர்.

*இனி இவ் வகச்சமயத்தோராகிய பாடாணவாத சைவர் முதலியோர் சித்தாந்த சைவத்தோடொப்ப ஏகன் முதலிய ஆறுபதார்த்தங் கொண்டமையின் அவ்வாறாக் கூறும் பொதுவியல்பு சிறப்பியல்பு கூறும் ஆகமங்களின் தாத்பரியம் இதுவேயென்று எடுத்துக்காட்டிச் சித்தாந்த சைவப் பொருளுண்மையைக் கொளுத்தின் றெழக் கொள்ள வல்லுவராதலின் அவர் ஈண்டு வருதற்கியைபுடையார்; "அகச்சமயத் தவாக் கொளியாய்" (சிவப் - பாயிர - 7) என்பது காண்க. அதனால் இனி, இவர்

* சிவஞான மாபாடியம் - 2-1 பார்க்க.

கள் பிள்ளையாரால், "ஞானமெய்ந் நெறிதான யார்க்கு நமச்சிவாய சொலாம" என்ற பேஞ்சாக்கர உபதேசம் செய்யப்பெற்று, "ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக" என்று சோதிவாயிலினைக் காட்டப்பெற்றபோது "போதெளி"யினை அடைய வல்லுந ராயினமையும் கருதுக; இதனைக் காட்டாக்கால் ஒருமே யறியமாட்டாமையின் இவர் வேறு கூறப்பட்டார்.

அளவிலா விரதஞ் சாரும் நெறிவழிநின்ற வேடம் நீடிய தவம் - என்ற குறிப்பு மேற்கூறிய கருத்துக்களுடன் வைத்துக் கருசத்தக்கது மானக்கஞ்சாறனார் புராணத் துள் (887 - 891) வரும் மாவிரதியரும், சிறுத்தொண்டனார் புராணத்துள் வரும் வயிரவரும் (ஷெ. புரா - 26 - 35), சிவத்திருவேடத்தாராகக் கொள்ளப்பட்டமையும், "பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர் பலவேடச் சைவர்" (2917) என்றமை யும், பிறவும் காண்க, இக்கருத்துப்பற்றியே பின்னரும் "ஆறு வகைச் சமயத்தி லருந்தவரும் (3150) என்பதும் கருதுக; *"சுத்த சைவர் இந்நூல் கேட்ட தனை யானே தாற்பரியம் இனிதுணர்ந்து சித்தாந்தப் பொருள் கைக்கொள்வரென்பது பெறப்பட்டது; அதத்தனை யணிமைய ராகலா னன்றே சித்தாந்த சைவத்தைச் சார வைத்தார் என்பது." என்ற இனி இவர்களை அடுத்து "மறுவறு...தொண்டர்" என்பதும் காண்க.

மறுவறும் தொண்டர் - இவர்கள் சித்தாந்த சைவர் மறுவறு மனத்தின் அன்பின் வழி என்றது ஞானம்; யோகம் - சிவயோகம், நற்நிலை - கிரியை; தொண்டு - சரியை வகை; என இவ்வாறு சைவ நன்னெறிகளாகிய "நலஞ் சிறந்த ஞானயோகக் கிரியாசரியை யெல்லாம்" (திருமூலர் - புரா - 8) குறிக்கப்பட்டன. இந்நான்கும் சித்தாந்த சைவத்துள் "சங்கரனை யடையும், நன்மார்க்க நாலவைதாம் ஞான யோக நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்" (சித்தி - 8 - 18) இவற்றினியல்புகளை யெல்லாம் ஞானநூல்களுட் கண்டுகொள்க; (சித்தி - 8-18-25) யோகம் - புறச்சமயங்களுள் வரும் யோகம் வேறு; நற்நிலை - ஒரு குறியினைக் கண் சிவனை நிறுத்துப் பூசித்தலாற் குறிநிலை எனப்படும் "குறியொடு நிலை கூடப்பினானை ரூப ரத்தை" (தேவா), 'கோள மதனி னுணர்ந்தணைந்து குறித்த பூசை கொள்கின்றா' (1241); தொண்டு - சரியைநெறி பலவும் கொள்க.

குழாம் குழாமாகி - கூறிய இரண்டு நிலையினர் (அகம், புறம் - சித்தாந்தம்)களைக் குறிக்க அடுக்கிக் கூறினார் இங்ஙன் இவ்வாறன்றி வேறுவகையாய பொருளுரைப்பர் முன் உரைகாரர்கள், நானகும ஒரு பொருள்மேல வருதலிற் சோதனைக் கூறினார்.

முன்பாட்டால் வைதிகநெறி ஒழுக்கத்தினரையும், இப்பாட்டால் ஆகமநெறி யொழுக்கத்தினரையும் கூறிய நிலையும் சிறப்புப்பற்றிய வைப்பு முறையும் கண்டு கொள்க. இதனுடன் மண்ணுலகினுள்ளாரை முடித்துக் காட்டி, இனி, மேலவரும் பாட்டில விண்ணுலகவரைக் கூறுதலும் கண்டுகொள்க. 1203

3102. (வி - ரை) விஞ்சையர், இயக்கர், கின்னரர் - இவர்கள் இசைவல்ல தேவச் சாதியர்

சித்தர் - வேண்டியவாறு சரிக்கும் வல்லமை பெற்றவர்கள். "வித்தகச் சித்தர் கணமே" (தாயுமா).

அரம்பையர் உடனுயர்ந்தோர் - தேவப் பெண்களுடன் கூடிய தேவர்கள்; அரம்பையர் - தேவப்பெண்கள் என்ற பொருளில் வந்தது.

*பாடியம் - 2 - 1 பார்க்க.

சுடர் விமானம் - ஒளியுடைய ஆகாய விமானங்கள்.

மஞ்சுறை விசும்பு - மேகமண்டலம் அளவும் உயர்ந்த ஆகாயம். தேவர்களின் விமானங்கள் செலலும் உயரம் குறித்தது.

ஆதரவு - ஆசை ; தழைத்தல் - பெருகுதல் ; மண அணி காண - மண அணிகள் தேவருலகத்தும் காணவொண்ணாதபடி அற்புதமாயிருத்தல் குறிப்பு ; நிலவுலகத்தில மண எழுச்சியிற கலந்துசென்ற பேறுபெற்ற மக்கட் கூட்டம் முழுதும் பின்னர்ப் பிள்ளையார் அருளால் முத்திபெற்று மீளாநெறி யடையவுள்ளாராக ; இத்தேவக் கூட்டம் அப்பேறு பெறும் தகுதியில்லாதவராகி மணவணி காண்பதில்மட்டும் அமைவு படுவர் என்பது காண என்றதன் குறிப்பு. பின்னர், "ஆரதேக கண்டு நணுகப் பெறு, விண்ணவரு முனிவர்களும் விரிஞ்சனே முதலோரும், எண்ணில்வ ரேசறவு நீரவெடுத் தேத்தினார்" (3153) என்பது காண்க ; தேவர்கள் தமது அனுபவநாள் எல்லையில் புவனியில் வந்து பிறந்து சிவதருமங்கள் புரிந்த பின்னரே நாளடைவில முத்தியடையத்தக்கார் என்பது நூற்றுணிபு, "புவனியிற் போயபபிற வாமையி னாளும போக்குகின்றோமவ மேயிந்தப் பூமி, சிவனுய்யக் கொள்கின்ற வாறு" (திருவா). 1204

3103. மற்றிவர் மிடைந்து செல்லும் மங்கல வனப்பின் காட்சி
முற்றவித் தலத்தி னுள்ளோர் மொய்த்துடன் படரும் போதில்
அற்புத நிகழ்ச்சி யெய்த வணைதலான் மணமேற் செல்லும்
பொற்பமை மணத்தின் சாயை போன்றுமுன் பொலியச் செல்ல ;

*3104. தவவர சாள வுய்க்குந் தனிக்குடை நிழற்றச் சாரும்
பவமறுத் தாள வல்லார் பாதமுள் ளத்துக் கொண்டு
புவனங்கள் வாழ வந்த பூந்தராய் வேந்தர் போந்து
சிவனமர்ந் துறையு நல்லூர்த் திருப்பெரு மணத்தைச் சேர்ந்தார்.

3103. (இ - ள்) மற்றிவர்...காட்சி - மற்று இத்தேவச்சாதியர் முதலினோர் நெருங்கி மேற்செல்லும் மங்கலமாகிய அழகின் காட்சியானது ; முற்ற...அணைதலான - இந்நிலவுலகத்துள்ளோர் யாவரும் நெருங்கிக்கூடித் திருமண எழுச்சியிற் செல்லும் காலத்தில அற்புதமாகிய தன்மை பொருந்த மேலே உடன் அணைதலினாலே ; மணமேல்...சாயைபோன்று - மண எழுச்சியின்மேலே செல்கின்ற அழகு பொருந்தியதொரு மண எழுச்சியினது சாயையினைப் போல ; முன்பொலியச் செல்ல - முன்னே விளங்குமபடி போக ; ௧௨௦௫

3104. (இ - ள்) தவஅரசு...நிழற்ற - தவ அரசாங்கத்தை ஆட்சிபுரிதற்குப் பிடித்தல்போல ஒப்பற்ற முத்துக்குடைமேல் நிழற்ற ; சாரும்...கொண்டு - சார்கின்ற பிறவியை அறுத்து ஆட்கொள்ள வல்ல இறைவரது திருவடிகளைத் தமது திருவுள்ளத்துக் கொண்டவராய ; புவனங்கள்...போந்து - புவனங்களெல்லாம் வாழ்வடையும் பொருட்டு வந்தவதரித்த சீகாழி வேந்தராகிய பிள்ளையார் சென்றருளி ; சிவன்......சேர்ந்தார் - சிவபெருமான விரும்பி எழுந்தருளிய திருநல்லூர்ப் பெருமணத்தினைச் சேர்ந்தருளினார். ௧௨௦௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3103. (வி - ரை) மற்று...காட்சி - இவர் முன்பாட்டிற்கூறிய தேவச்சாதியர்; மிடைந்து - தம்முள் நெருங்கியும், கீழே நிலத்தில் செல்லும் திருமண எழுச்சியினை அணுகியும்.

இந்நிலத்தினுள்ளோர் - இந்நிலவுலகத்தி லுள்ளவர்கள் ; மக்கள்.

படரும்போதில் - அணைதலால் - என்று கூட்டுக. மக்கட் கூட்டம் நிலத்தில் அணையும்போதே அதனைக் காண மேலே தொடர்ந்து அணுகிச் சேர்வதனாலே.

அற்புத நிகழ்ச்சியை - அணைதலால் - சாயைபோன்றது என்றது, கீழே நிலத்திலும் மணங்காணச் செல்லும் அழகிய கூட்டம் ; மேலே ஆகாயத்திலும் இவர்களைத் தொடர்ந்து அணுகிச் செல்லும் அழகிய கூட்டம் ; ஒன்று போலவேகூடி உடன் அசைந்து செல்லுதலாலும், கீழும் மேலுமாக அணிமையில் செல்லுதலாலும், ஒன்று போன்றிருத்தலாலும் அது இதன் சாயைபோன்றிருந்தது என்றலுமாம்.

சாயை - பிரதிவிம்பம் ; இதற்குப் பின்னர் வரலாற்றினும், மணமிறச் சென்ற மக்கட்கூட்டம் மணத்தில் மெய்ப்பொருளைப்பற்றுவாராதலும், ஏனை விண்ணவர் கூட்டம் கண்டமட்டில் அமைந்து வேறு ஒன்றும் பெறாது பின்னின்றாராவதாலும் சாயையே போல்வதும் காண்க.

மணவர் சாயை போன்றது விண்ணவர் மேற்செல்லும் கூட்டம் என்றதனால் விண்ணவரினும் மணவரது சிறப்புக் குறித்தவாறும், அவர் துணையுடையினராதல் குறித்தவாறும் கண்டுகொள்க. மற்றிவர் - மற்று - என்ற குறிப்புமிது.

மற்றவர்—என்பதும் பாடம். 1205

3104. (வி - ரை) தவஅரசு ஆள உய்க்கும் தனிக்குடை - தனிக்குடை - "வெண்கொற்றக் குடையும் நவமணி முடியும் சிங்காதனமும் மன்னவர்க்கே யுரிய சிறப்படையாளங்கள்." அவற்றுள் சிறப்புப்பற்றிக் குடையினைச் சொல்லவே இனம் பற்றி ஏனையிரண்டும் கொள்ளப்படும். "பிரபஞ்ச மெல்லாவற்றுக்கும் மூலகாரணமாகிய ஒரு பெரு வெண்கொற்றக்குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ்சுடர் முடியும், எவற்றினையும் அடக்கிக்க உயிர்க்குயிராய நின்று செலுத்துமியல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும் பிறர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமைபற்றிப் பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலான் அரனென்னும் திருப்பெயருடைய முதல்வனாகிய இறைவனை மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வ முழுதூந் தனதேயாகக்கொண்டு அநுபவிக்கும் சுதந்தரமுடைமையும் சித்தெனப்படும் சாதியொப்புமையும்பற்றி ஆன்மாவை மன்னவகுமாரனாகவும்..." உருவகஞ்செய்து எடுத்துக்காட்டும் "தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த" (8 - சூ.) என்ற சிவஞானபோதம் ஈண்டு நினைவுகூர்தற்பாலது, தனிக்குடை - என்ற குறிப்புமது. "தானே தனிமன்றுட னென்னத் தனிநிற்றம்" (திருமந்), "தாந்த முணர்வின்றி" (போதம் - 5 - சூத்) என்றபடி தனியாகிய இறைவரால் அருளப்பட்ட குடை என்றும், தனியினது குடை என்றும் உரைக்க நின்றது.

இனி எண்ணரிய சிவஞானம் தந்து இறைவர் பிள்ளையாருக்குத் தாம் செய்யும் தன்மைகளை இவருக்கு ஆக்கியிட்டபடியினாலே இவருக்குச் சார்ந்தார் எல்லார்க்கும் பிள்ளையார் முத்திதரும் தன்மையும் குறிக்கொள்க.

தவ அரசாளவுய்க்கும் - தவம் - முற்செய் தவங்காரணத்தினாலே ; அரசாள உய்க்கும் - தவத்தினால் உணர்த்தி அவ்வான்மாக்களை எல்லாம் தத்தமதுரிமையின்படி பேரானந்தப் பெருக்காகிய சிவலோக வாழ்வுபெற்று மீளாநெறி யடையும்படி செலுத்

தும்; "தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த" - என்றபடி பிள்ளையார் குருவாக எழுந்தருளி இங்குத் திருமணங்காண முன்னைத் தவத்தினால் அணைந்தோர்க் கெல்லாம் "ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம்" என்று பதிகம் பாடி உணர்த்தியருளும் நிலையும் கருதுக. புவனங்கள் வாழவந்த என்ற கருத்துமிது.

**சாரும் பவமறுத் தாள வல்லார் பாத முள்ளத்துக்கொண்டு - சேர்ந்தார்-என்க.** ஆசாரியன் பக்குவப்பட்டடைந்த மாணவனுக்குத் தீக்கை செய்து நெறி அருளும் முன்பு இறைவரை நினைந்து "இறைவரே! இம்மாணவகனை பக்குவ நோக்கித் தீக்கை செய்து நன்னெறி செலுத்த அருள்புரிவீராக!" என்று விண்ணப்பித்து மேற்செல் லும் சிவாகமவிதி காண்க.

சிவன் - இறைவரது திருநாமங்களுள் பவன் - சிவன் என்பன சிறந்தவை என்பது. 1206

3105. பெருமணக் கோயி லுள்ளார் மங்கலம் பெருகு மாற்றால்
வருமணத் திறத்தின் முன்னர் வழியெதிர் கொள்ளச் சென்று
திருமணம் புணர வெய்துஞ் சிரபுரச் செம்ம லார்தாம்
இருண்மறைத் திலங்கு கண்டத் திறைவர்தங் கோயில் புக்கார்.

(இ - ள்) பெருமணக் கோயில்...எதிர்கொள்ள - திருநல்லூர்ப் பெருமணத் தின் கோயிலில் உள்ள அடியார்கள் மங்கலம் சிறந்து பெருகும்படி இனி நிகழ உள்ள திருமணத்தின் முன்னர் வழியில்வந்து எதிர்கொள்ள, திருமணம்...செம்மலார்தாம் - திருமணம் செய்தருளும்பொருட்டு வரும் சீகாழிப் பெருந்தகையாராகிய பிள்ளையார்; சென்று - சென்றருளி; இருள்மறைத்து...புக்கார் - கரியவிடத்தினைத் தன்னுட் கரந்து விளங்கும் கண்டத்தினையுடைய இறைவரது திருக்கோயிலினுட் புகுந் தருளினர்.

(வி -ரை) இப்பாட்டினால் திருமணத்தின்பொருட்டு வருகின்ற பிள்ளையாரை அத்தொடர்புபற்றிச் சுற்றத்தார் முதலியோர் எதிர்கொண்டு மணமனைக்கு அழைத்துச் செல்லுதல் உலகியல்பு; ஆனால் இங்கு அவ்வாறு அவர்கள் அத்தொடர்புபற்றி எதிர் கொண்டு அழைக்குமுன்பே திருக்கோயிலின் அடியவர்கள் உரிய சிறப்புக்களுடன் சென்று எதிர்கொண்டு பிள்ளையாரை வரவேற்று அழைத்துச்செல்ல அவர்களுடன் பிள்ளையார் நேரே திருக்கோயிலுக்கு எழுந்தருளினர் என்பது கூறப்பட்டது. இது பின்வரும் நிகழ்ச்சியின் முற்குறிப்பாக உள்ளமையும் காண்க; பிள்ளையார் புற உலகத் தோற்றத்தில் திருமணஞ் செய்தருள எழுந்தருளினரேனும் உண்மையில் திருப்பெரு மணத்தில் இறைவருடன் பகுதி ஒன்றி உடனாகும் சிவபோகத் திருமணத்தின் பொருட்டே வந்தாராகும் என்பது குறிப்பு; உலகியலில் மணத்தின்பொருட்டுச் செல் வோர் மணவினைசெய் இடத்துக்கு நேரே செல்லாது இறைவர் திருக்கோயிலுக்குச் செல் வோரைக் காணல் அரிதாதல் கருதுக. "மணத்தின் முன்னர் அடியார் எதிர் கொள்ள மணம்புணர எய்தும் செம்மலார் கோயில்புக்கார்" என்ற குறிப்புமிது.

**வரும் மணத்திறத்தின் முன்னர்** - மணம்பற்றி அத்தொடர்பால் அழைத்துச் சென்று மணமனை புகுமுன்பு; வரும் - குறித்து எழுந்தருளிவந்த.

**இருள் மறைத்து இலங்குகண்டத்து இறைவர் - இருள் - இருள்போன்ற கரிய விடத்துக்கு ஆயிற்று; ஆகுபெயர்; இருள் - இருளமலம் எனனும் ஆணவம் என்ற**

குறிப்புடனும் நின்றது; இனி, இத்திருமணத்திற் பிள்ளையாரின்மூலம் வந்த சார்வார்களது ஆணவமாகிய மூலமலத்தையெல்லாம் சத்திகெட்டு ஒடுங்கும்படி செய்து முத்திதரும் சிவ விளங்குகின்றதும் இறைவர் என்ற குறிப்பும் காண்க.

மங்கலம் பெருந்தமாற்றல் - எதிர்கொள்ள - என்க. இறைவரது குடை முதலிய மங்கலப் பொருள்களை பெருக வந்தபோய வழியில் எதிர்கொள்ள என்க. இனி, மங்கலமாவது சிவம்; பிள்ளையார் வந்த மங்கலமாகிய மணமே பெருகிய சிவ மங்கலமாக இனி நிகழும் வழியாலே என்ற குறிப்பும் காண்க; உலகில் மங்கலமாக எண்ணப்படும் மணம் முதலியவை யெல்லாம் ஒருகாலத்து அழிந்துபட்டு அமங்கலமாய் முடிவாதல் உறுதியாதலின், அவற்றை மங்கலம் என்பது பொய் உபசாரமேயன்றி உண்மையன்று; அவை உடலோடொழிவன, சிவபெருமானாகிய உயிர் நாயகனை ஆன்மாக்கள் அடைவதாகிய மணமே அழியாத மங்கலம், உலக மணம்போலன்றி அனுபவிக்குந்தோறும் பெருகும் பேரானந்தம் விளைக்கும் மங்கலம் என்ற முற்குறிப் பெல்லாம் ஈண்டுக் கண்டுகொள்க.

இருள் மணந்து - என்பது பாடமாயின், மணந்து - கூடி என்க. 1207

3106\. நாதரைப் பணிந்து போற்றி நற்பொருட் பதிகம் பாடிக்
காதன்மெய் யருண்முன் பெற்றுக் கவுணியர் தலைவர் போந்து
வேதியர் "வதுவைக் கோலம் புனைந்திட வேண்டு" மெனப்
பூதநா யகர்தங் கோயிற் புறத்தொரு மடத்திற் புக்கார். ௧௨௦௮

(இ - ள்) நாதரை...போந்து - இறைவரை வணங்கித் துதித்து நல்ல பொருளினையுடைய திருப்பதிகத்தைப் பாடிப், பெருவிருப்பத்தினை விளைக்கின்ற (இறைவரது) மெய்யருளினை முன்னே பெற்றவராய்க் கவுணியர் தலைவராகிய பிள்ளையார் வெளிப் போந்து; வேதியர் ..என்ன - "திருமணக் கோலத்தினைப் புனைந்தருள வேண்டும்" என்று மறையவர்கள் வேண்டிக்கொள்ள அதனைக் கேட்டு, பூதநாயகர்...புக்கார் - பூதநாயகராகிய இறைவரது திருக்கோயிலின் புறத்தயலே ஒரு திருமடத்தினுள்ளே புகுந்தருளினார்.

(வி - ரை) நற்பொருட் பதிகம் பாடி - இப்பதிகம் கிடைத்திலது!

காதல் மெய்யருள் - காதல் - காதலை விளைக்கும், காதல்கொண்ட என்றலுமாம். மெய்யருள் - இறைவரது, என்றும் மாறாத அருள் மெய் - (இறைவர்) மெய்யினது அருள் என்றலுமாம்; காதல் - "காதலாகிக் கசிந்து" என மேல்வரும் திருப்பதிகத்தின் முற்குறிப்பு.

வேதியர் என்ன என்க. வதுவைக் கோலம் - மணமகனாராக எழுந்தருளும் மணக் கோலம்; இது மேல்வரும் பத்துப் பாட்டுக்களால் விரிக்கப்படுதல் காண்க.

பூதநாயகர் - உயிர்களின் நாயகர், பூதம் - உயிர்கள் "பூதபாம் பரைபொலிய" (1899); உயிர்க்குயிராய் உள்ளிருந்து இயக்கும் நாயகர்; இங்கு இனி, வரும் அடியார்களை ஆட்கொண்டு தமது சிவானந்தப் பெரும்பேறு அளித்தருளும் குறிப்புடன் கூறிய படி; பூதம் - சிவ பூதகணங்கள் என்றலுமாம்.

ஒருமடம் - பிள்ளையார் எழுந்தருளி வதுவைக் கோலம் புனைந்தருளுந்தற் கிடமாதலாகிய பேறு பெறுதலின் மடம் எனப்பெறுவது; இஃது இன்ன இடம் என்று இப்போது அறியக் கூடவில்லை! இது கோயிலின் அருகில் அமைந்திருத்தல் வேண்டு

மென்பது கருதப்படும். நம்பாண்டார் நம்பிகளது திருமனையும் அவ்வாறே பிள்ளையாரது பெருந் திருமணம் நிகழ்ந்த இடமாமபேறு பெறறது. அஃது இருந்த இடந்தானும் இந் நாள் அறியக்கூடவில்லை! இவறறைக் கனபரம்பரை வழக்குபபற்றியேனும் அறிந்து நினைவுக குறியாகக காத்துவைததல் சிவபுண்ணியமாகும். 1208

திருமணக் கோலம் - (பாதாதிகேசம்) அடிமுதல் முடிவரை :

3107. பொற்குட நிறைநத வாசப் புனிதமஞ் சனநீ ராட்டி,
விற்பொலி வெணபட் டாடை மேதக விளங்கச் சாத்தி,
நறறிரு வுத்த ரீய நறுந்துகில் சாததி, நானப்
பற்பல கலவைச் சாந்தம் பான்மையி னணிந்த பின்னர், ௧௨0௯

3108. திருவடி மலர்மேற் பூத்த செழுநகைச் சோதி யென்ன
மருவிய தரளக் கோவை மணிச்சரி யணையச் சாத்தி,
விரிசுடர்ப் பரட்டின் மீது விளங்குபொற் சரட்டிற் கோத்த
பெருகொளி முத்தின் றாமம பிறங்கிய தோங்கல் சாத்தி, ௧௨௧0

3109. தண்சுடர்ப் பரிய முத்துத் தமனிய நாணிற் கோத்த
கண்கவர் கோவைப பத்திக கதிர்ககடி சூத்தி ரத்தை
வெண்சுடர்த் தரள மாலை விரிசுடர்க் கொடுககின் மீது
வண்டிரு வரையி னீடு வனப்பொளி வளரச் சாத்தி, ௧௨௧௧

3110. ஒளிகதிர்த் தரளக் கோவை யுதரபந் தனத்தின் மீது
தளிரொளி துளும்பு முத்தின் சன்னவீ ரத்தைச் சாத்தி,
குளிர்நில வெறிக்கு முத்தின் பூணநூற் கோவை சாததி,
நளிர்கதிர் முத்து மாலை நகுசுட ராரஞ் சாததி, ௧௨௧௨

3111. வாள்விடு வயிரக் கட்டு மணிவிர லாழி சாத்தித்,
தாளுறு தடக்கை முத்தின் றண்டையுஞ் சரியுஞ் சாத்தி,
நீளொளி முழங்கைப் பொட்டு நிரைசுடர் வடமுஞ் சாததித்,
தோள்வளைத் தரளப் பைம்பூண் சுந்தரத தோண்மேற் சாத்தி,

3112. திருக்கழுத் தாரந தெய்வக் கண்டிகை மாலை சேரப்
பருத்தமுத் தொழுங்கு கோதத படரொளி வடமுஞ் சாத்திப்,
பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திருவார் காதில்
வருக்கவெண் டரளக் கொத்தின் வடிக்குழை விளங்கச் சாத்தி,

3113. நீற்றொளி தழைத்துப் பொங்கி நிறைதிரு நெற்றி மீது
மேற்பட விரிநத சோதி வெண்சுட ரொழுந்த தென்னப்
பாற்படு முத்தின் பாரப் பனிச்சுடர்த் திரளை சாத்தி,
ஏற்பவைத் தணிந்த முத்தி னெழில்வளர் மகுடஞ் சேர்த்தார்;

3114. இவ்வகை நம்மை யாளு மேர்வளர் தெய்வக் கோலங்
கைவினை மறையோர் செய்யக், கடிகொள்சேங் கமலத் தாதின்

செவ்விசீ டாம மார்பர் திருவடை யாள மாலை
எவ்வுல கோரு மேத்தத் தொழுததா மெடுத்துப் பூண்டார்; ௧௨௧௬

3115. அழகினுக் கணியாம் வெண்ணீ றஞ்செழுத் தோதிச் சாத்திப்,
பழகிய வன்பர் சூழப் படரொளி மறுகி லெய்தி
மழவிடை மேலோர் தம்மை மனங்கொள வணங்கி வந்து
முழவொலி பெருப்ப முத்தின் சிவிகைமேற் கொண்ட போது, ௧௨௧௭

3116. எழுந்தன சங்க நாத; மியம்பின வியங்க ளெங்கும்;
பொழிந்தன விசும்பில் விண்ணோர் கற்பகப் புதுப்பூ மாரி;
தொழுந்தகை முனிவர் தொண்டர் சுருதியின் வாழ்த்துப் பொங்கி
வழிந்தன திசைகண் மீது; மலர்ந்தன வுலக மெல்லாம். ௧௨௧௮

3107 (இ - ள்) பொற்குடம்...ஆட்டி - பொன்னின் குடத்தில் நிறைந்த மணமுடைய தூய திருமஞ்சனநீரினாலே பிள்ளையாரை நீராட்டுவித்து; விறலொலி... ...சாத்தி - ஒளி விளங்கும் வெண்பட்டாடையினை மேன்மை பெற விளங்கும்படி சாத்தி; நற்றிரு...சாத்தி - நல்ல திருவுத்தரீயமாகிய நறுந் துகிலினைச் சாத்தி - நானம்...பின்னர் - மணம் கமழும் கத்தூரியுடன் பல பொருள்களைக் கூட்டியமைத்த சாந்தத்தினைப் பண்புபெற அணிவித்த பின்பு, ௧௨௦௯

3108. (இ - ள்) திருஅடி.. சாத்தி - திருவடி மலர்கள் மேலே பூத்த செவ்விய விளக்கத்தின் ஒளிபோலப் பொருந்திய முத்துக் கோவைகளையுடைய இரத்தின வளையை அழகு அணையும்படி சாத்தி; விரிசுடர்...சாத்தி - விரியும் ஒளியுடைய பரடுகளின்மேல் விளங்கிய பொற்கம்பியில் கோத்த பெருகும் ஒளியுடைய முத்துமாலை வடத்தில் விளங்கிய குஞ்சம் சாத்தி, ௧௨௧௦

3109 (இ - ள்) தணசுடர்...கடி சூத்திரத்தை - குளிர்ந்த ஒளி வீசுகின்ற பரு முத்துக்களைப் பொற்கயிற்றிலே கோத்த, கூடாரது கண்ணைக் கவரத்தக்க, கோவை வரிசைகளையுடைய, ஒளியுடைய அரைஞாணை; வெண்சுடர்...மீது - வெள்ளிய ஒளி வீசும் முத்து மாலை விரிந்த சுடாவிடும் கச்சத்தின் மேலே; வண்...வளரச் சாத்தி - வளம் பொருந்திய திருவரையினிடத்து மிகுந்த அழகுடனே ஒளி விளங்க அணிந்து, ௧௨௧௧

3110. (இ - ள்) ஒளி...மீது - ஒளியுடைய கதிர்களை வீசும் முத்துக்கோவை களாலாகிய அரைப்பட்டிகையின் மேல், தளிரொளி...சன்னவீரத்தைச் சாத்தி - தளிர்க்கும் ஒளி ததும்பும் சன்னவீரத்தை அணிந்து; குளிர் நிலவு...கோவை சாத்தி - குளிர்ந்த ஒளிவீசும் முத்துக் கோவையாலாகிய பூணூலினை அணிந்து; குளிர் கதிர்...ஆரம் சாத்தி - குளிர்ந்த கதிர்களையுடைய முத்து மாலையாகிய ஒளி விளக்க முடைய ஆரத்தை அணிந்து; ௧௨௧௨

3111. (இ - ள்) வாளவிடு.. ஆழி சாத்தி - ஒளி விடுகின்ற வயிரக் கட்டுடைய அழகிய விரல்மோதிரத்தை அணிந்து; தாளுறு...சரியும் சாத்தி - முழந்தாள் வரையும் நீண்ட வலிய கையில் முத்தினாலாகிய தண்டையையும் கைச்சரியினையும் அணிந்து; நீள் ஒளி...வடமும் சாத்தி - நீண்ட ஒளியுடைய முழங்கைப் பொட்டுடனே வரிசையின் ஒளிவீசும் மணி வடங்களையும் அணிந்து; தோள் வளை...தோண்மேற் சாத்தி - தோள் வளையாகிய முத்தாலாகிய அழகிய அணியினை அழகிய தோளின்மேல் அணிந்து; ௧௨௧௩

3112. (இ - ள்) தெய்வக கண்டிகை மாலே சேர - தெய்வத் தன்மையுடைய உருத்திராக்கக் கண்டிகை மாலேயுடன் சேரும்படி ; திருக்கழுத்தாரம் - திருக்கழுத்தில் அணியும் ஆரமாக ; பருத்த...வடமும சாத்தி - பருமுத்துக்களை ஒழுங்குபடக் கோத்த படரும் ஒளியினையுடைய வடத்தினையும் சாத்தி ; பெருக்கிய...காதில் - மிக்க அழகோடும் உரிய இலக்கணமமைந்த திருப் பொருந்திய காதுகளில் ; வருக்க வெண்...விளங்கச் சாத்தி - நல்ல தன்மைச் சாதியான வெள்ளிய முத்துக் கொத்துக்களாலாய வடித்தமைத்த மகரகுண்டலத்தை விளக்கமாகச் சாத்தி ; கஉகச

3113. (இ - ள்) நீற்றொளி.. மீது - திருநீற்றின் தெய்வவொளி தழைத்துப் பொங்கி நிறைந்த திருநெற்றியின்மேல ; மேற்பட...என்ன - அதன்மேலே விரிந்த சோதியினது வெள்ளிய சுடர் மேலெழுந்தது போல ; பாற்படு...சாத்தி - நற்பான்மை படுகின்ற முத்தினாலாய குளிர்ந்த ஒளிவிடுகின்ற திரணையினை அணிந்து ; ஏற்ப வைத்து...சோத்தார் - பொருந்தும்படி வைத்து அழகுபடுத்திய முத்தினாலாகிய அழகு மிகுந்த மகுடத்தைச் சேர்த்தார்கள் ; கஉகரு

3114. (இ - ள்) இவ்வகை...செய்ய - இவ்வகையாக நம்மை ஆட்கொண்டருளும் அழகு மிகுந்த தெய்வத்தன்மை வாய்ந்த மணக்கோலத்தை அத்தொழில் கைவல்ல வேதியர்கள் செய்ய ; கடிகொள்...மாற்பர் - மணமுடைய செந்தாமரைத் தாதுக்களையுடைய புதிதின் அலர்ந்த நீண்ட மாலே மார்பராகிய பிள்ளையார் ; திரு அடையாள மாலே...பூண்டார் - திரு அடையாள மாலேயாகிய உருத்திராக்க மாலேயினை எல்லா உலகத்தவர்களும் துதிக்கும்படி தொழுது தாமே எடுத்து அணிந்துகொண்டனர் ; கஉகசு

3115. (இ - ள்) அழகினுக்கு...சாத்தி - அழகுக்கு அணிசெய்வதாய விளங்கும் திருவெண்ணீற்றினைத் திருவைந்தெழுத்தை ஓதி அணிந்து ; பழகிய...எய்தி - பழகிய அன்பர்கள் சூழ்ந்து வர வீசும் ஒளியினையுடைய தெருவிலே வந்து ; மழவிடை... ...வந்து - இளமையுடைய இடபத்தினை யுடையவராகிய சிவபெருமானை மனமார வணங்கி வந்து ; முழவொலி...போது - முழவுகள் முழங்க முத்துச் சிவிகையின்மேல எழுந்தருளிபோது ; கஉகஎ

3116. (இ - ள்) வெளிப்படை; சங்கநாதங்கள் எழுந்தன; இயங்கள் எங்கும் எழுந்தன ; விண்ணவர்கள் சொரியும் புதிய கற்பக மலர்மழை ஆகாயத்தில பொழிந்தன , செழுந்தகைமையுடைய முனிவர்களும தொண்டர்களும எடுத்தோதும வேத வாழ்த்தொலிகள் மேன்மேல் எழுந்து எல்லாத் திசைகளின் மேலும வழிந்தன ; உலகம எல்லாம் மலர்ச்சியடைந்தன. கஉகஅ

இப்பத்துப் பாட்டுக்களும தொடர்ந்து ஒரு முடிபுபடுத்தி உரைக்கின்றன.

3107. (வி - ரை) பொற்குடம்..... நீராட்டி - பொற்குடம் - பொன்னுலாகிய குடம் ; வாசப் புனித மஞ்சனம் - நீராட்டுதற்கென்று அமைத்த தூயதாய்ப் புதிய மலர்களும் வாசனைப் பண்டங்களுமிட்ட நன்னீர் ; நீராட்டி - இது திருமணக் கோலங்கொள்வதன் முன் செய்யப்படுவது. முன்னாக "காலே செய்வினை முற்றிய" (3094) என்றவிடத் துரைத்தது நித்திய நெறியில் செய்வது ; "மஞ்சன சாலே புக்கான" (160), "தூநீப பாசனம" (161).

வெண் பட்டாடை - வெண்மை - புகழ்-தூய்மை-முதலியவற்றின் குறி.

உத்தரீய நறுந்துகில் - மேலாடை ; இஃது இல்வாழ்க்கை நிலேயினர்க்குரியது ; பிரமசாரியர் ஒற்றையாடை பூண்பர்.

**நானம்** - கத்தூரி; **பற்பல** - புழுகு - குங்குமப்பூ முதலியவை; **கலவைச் சாந்தம்** - இவை கலந்து கூட்டி அமைத்த சந்தனக் குழம்பு; **பான்மை** - அணியும் முறை. 1209

3108. (வி - ரை) இதுமுதல் ஆறு பாட்டுக்களாலும் அடிமுதல் முடிவரை செய்த கோலம் கூறப்பட்டது. இதனைப் பாதாதிகேசமென்பது வடமொழி வழக்கு; பிள்ளையாரது திருமணக் கோலத்தினை முழுதும் அவர்தம் திருவடி தொழுது அத்துணைகொண்டு கண்டு தரிசித்து உய்யும் காரணம் நமக்கருள்வதும் ஆசிரியரது திருவுளக் குறிப்பு. பிள்ளையாரது திருவடிச் சார்பே முத்திசாதனமாவதும் குறிப்பு. இதுபோலவே முடிமுதல் அடிவரை சிறப்பித்து எழுதிக்காட்டும் மரபும் உண்டு; அது கேசாதிபாதம் என்பர். அம்மரபு கண்ணப்பநாயனார் புராணத்திலும் (705—711), ஆனாயநாயனார் புராணத்திலும் (940—943) ஆசிரியர் காட்டியருளியமை ஈண்டு நினைவுகூர்தற்பாலது; இதுபற்றி 712-ம் பாட்டின்கீழ் முன் உரைத்தவை பார்க்க (II-பக. ௬௦௬). பாதாதிகேசம் என்ற கோயில் - திருவாலியமுதனார் - திருவிசைப்பாவிலும் இம்மரபு காட்டப்படுதல் காண்க. "யானெனதென் றற்ற விடமே திருவடியா, மோனபரா னந்த முடியாக - ஞானந், திருவுருவா விச்சை செயலறிவு கண்ணு, வருளதுவே செங்கை யலரா - விருவினைச், சங்கிரம நிரகுர தனிச்சுடரே" (34 - 36 கண்ணிகள்) என்று, அடிமுதல் முடிவரையும்; "மின்னுருவாய், தோயாத நவரதனச் சூழ்மணியால் செய்தண்பம் பொன் வாயாத கிரண மணிமுடியும..." (37) என்பதுமுதல் "பாதத் தணிந்த பரிபுரமுஞ் - சோதி, யிளம்பரிதி நூறு யிரங்கோடி யென்ன, வளர்ந்தருதெய் வீக வடிவும்" (57) என்பது வரையும் முடிமுதல் அடிவரையுமாக இவ்விரு மரபும் வைத்துக் கண்டு காட்டி முருகப்பெருமானை அடியவர்கள் கண்டு வழிபட அருளிய குமரகுருபர அடிகளாரின் அருள்வாக்கும் கருதுக. ஈண்டு அடிமுதல் முடிவரை கூறியது ஒடுக்கமுறைக் குறிப்பாவதும் காண்க.

கண்ணப்ப நாயனார் - ஆனாய நாயனார் - ஆளுடைய பிள்ளையார் என்ற இம்மூவரையும் இவ்வாறு எழுதிக்காட்டியது இம்மூவரும் அவ்வக்கோலங்களுடனே நேரே இறைவனடி சேர்ந்தனரென்பதும் குறிப்பு.

இனித், திருவடிமுதல் திருமுடிவரை அணியும் அணிகள் யாவையும் முத்துக்களாலாகிய அணிகளேயாதலும் குறிக்கற்பாலது. முத்து - விடுபடுவது என்பது காரணமாகப் போந்த பெயர்; முத்தி என்பதும் அக்காரணம் பற்றியே வந்தது. இங்கு யாவர்க்கும் முத்தி தரும் குருமூர்த்திகளாக மணமாகிய பிள்ளையார் சிறப்பாதலின் அக்குறிப்புப் பெற அணிவகையும் நிரற்றல் காண்க. இதுபற்றியே பின்னர் "நம்மை யாளும் வா வளர்தெய்வக் கோலம்" (3114) என்பதும் காண்க. இதுபற்றி விறன்மிண்ட நாயனார் புராணத்துள் (492-ம் பாட்டின் கீழ்) உரைத்தவையும் பார்க்க (I-பக. ௬௪௫).

**திருவடிமலர்...சோதி என்ன** - திருவடியாகிய மலர் பூத்தலின் மேலே அலர்ந்து விரியும் வெண்சோதிபோலச் - சரி அணிய என்பது மலர் அலர்தலால் அவ்வகைச் சோதி (ஒளி) அதற்கேற்றவாறு மேலே அலர்ந்து வீசுதல் போல; இங்குத் திருவடி மலரின் அலர்ந்த சோதியே அவர் அணிந்த சரி என்க. **செழுநகை** - நகைபோன்ற ஒளிப் பிரபை.

**சரி** - வளை; **மணிச்சரி** - முத்துக் கோவையினையுடைய இரத்தின வளை.

**பரடு** - கணைக்காலின் பகுதி; "பரடுயர் நீள்கணைக் காலோர் பெண்பேய்,"

தொங்கல் - குஞ்சம்; முத்தின்...தொங்கல் - முத்து மாலைகளைக் குஞ்சமாகத் திரட்டிய கோவை.

செழுந்தகை—மணிச்சிலம்பணைய—என்பனவும் பாடங்கள். 1210

3109. (வி - ரை) பரிய முத்து-பருமுத்துக்கள்.பரிய முத்து...கடி சூத்திரம் - கடி சூத்திரம் - அரைஞாண்; இங்குக் கூறிய துடையின்மேல் அணியும் அணியாகிய அரைஞாண்; இது பொற்கயிற்றில் பருமுத்துக்களைக் கோத்தது.

வெண்சுடர்...கொடுக்கின் மீது - கொடுக்கு - பின் கச்சம்; தாளமாலை விரி சுடர்க் கொடுக்கு - உடையின் கரையில் முத்துப் பந்திகள் இழைக்கப்பட்டு விளங்கும் பின் கச்சம்; அந்தக் கரை கச்சமாக அமையும்படி உடை சாத்துதல் வழக்கு; கடி சூத்திரத்தைக் கொடுக்கின்மீது சாத்தி என்று கூட்டுக. 1211

3110. (வி - ரை) உதர பந்தனம் - அரையிற் கட்டும் பட்டிகை; Belt என்பர் நவீனர். ஆயின் இது அரையின்மேல் வயிற்றினும் பொருந்த நாபிப்பிரதேசத்திற் கட்டப்படுவது; "அகட சக்கர விண்மணி" (கந்தபுராணம்).

சன்ன வீரம் - வெற்றிமாலை; வீரசங்கிலி என்றும் வழங்குவர். கழுத்தினின்று உதிவரை தொங்கும்படி மேல் அகன்று திரண்ட வடிவாய் அமைக்கப்படும்; 708 பார்க்க. முத்துமாலை முதலியவற்றுனமைந்த சன்னவீரத்தை அரசர் முதலாயினோர் அணிவது வழக்கு. உதர பந்தனத்தின் மேலே விளங்கச் சன்னவீரத்தை அணிந்து என்க "சன்ன வீரம் திருமார்பில் வில்லிலக" - (ஞானவுலா).

ஒளி கதிர் - தளிர் ஒளி - தளிர் நிலவு - நளிர் கதிர் - இவை நன்முத்துக்களின் ஒளியில் சிறப்பாயமையும் தன்மைகள். தளிர்-தண்மை; நளிர்-தளிர்க்கும்; துளும்பும் - ததும்புகின்றதுபோல விளங்கும்.

முத்தின் பூணுநூற் கோவை - பூணூல்போல அணியும் முத்துக் கோவை வடம்.

நகுசுடர் ஆரம் - கதிர் விரிதல் நகுதல்போல உள்ளதெனப்பது குறிப்பு; நகுதல் - மகிழ்ச்சிக் குறி; "நகைக்கும் பதத்தில்" (1073).

ஒளிர் கதிர்—எனபதும் பாடம். 1212

3111. (வி - ரை) வாள்...ஆழி - ஆழி - விரலாழி; மோதிரம். முத்தினை வயிரத்துடன் வைத்துக் கட்டிய மோதிரம் என்க. மணி - என்றதனால் அரதன முதலிய ஏனை மணிகளும் கொள்ளலாம்.

தாள் உறு தடக்கை - முழங்கால் வரையும் கைகள் நீண்டிருத்தல் உடற்கூற்றமைப்பின் உயர்ந்த தன்மை என்றும், இது கொடையிற் சிறந்தநிலை காட்டும் என்றும் கூறுவர்.

தடக்கை - பெரிய வலிய கைகள்; இங்கு வலிமையும் வண்மையுமாவன உலகை வாழ்விக்க அருளும் கைவண்மை; திருமருகலில் வணிகப் பெண்ணை வாழ்வித்தமை, மங்கையர்க்கரசியம்மையாரையும் குலச்சிறையாரையும் எடுத்து மன்னவர்க்கு நீறு நல்கியமை முதலியவையும், இனி இங்கு மணத்தில் வந்தோர் யாவருக்கும் முத்திநெறி காட்டுகின்றமையும் என்ற குறிப்பெல்லாமும் வைத்துக் கண்டுகொள்க. கரி-முன்கையில் அணியப்படும் வளை. "துயர்தீர்த்த கருணைவெள்ளப், புயலார் தருகையி னுனென னத் தோன்றிடும் புண்ணியமே" (ஆளு. பிள் - திருவங் - 49).

முழங்கைப் பொட்டு - முழங்கையில் அணியும் ஒருவகை அணி; கரமாலை என்னும் உருத்திராக்க மாலை அணியும் வழக்குக் காண்க. பொட்டு - பொட்டாக விளங்க; வடம் - முத்து வடம்.

தோள்வளைத் தாளைப் பைம்பூண் - தோள் வளையாக அமைத்த முத்தணி.

சுந்தரத் தோள் - ஆண்மக்களுக்குத் தோள் அழகு மிகுதல் நல்லியல்புகளுள் ஒன்று; மணமகனது தோள் கண்டு அன்பு மிகுதல் அகப்பொருள் நூல்களுள் விதந்து பேசப்படும். "தமி முரகரன் றன்பொற் சுடர்வரைத்தோள், கூடுதற் கேசறற கொம்பினை" (ஆளு. பிள் - அக் - 45); "தோள்வலி கூறுவோர்க்கே", "தோள் கண்டார் தோளே கண்டார்" என்று இக்கருத்தை வலியுறுத்திய கம்பன் பாட்டுக் களும் "தோள்வலி" என்பது பற்றிய சங்கோத்தர விருத்தியும் காண்க.

தன்னுடையு நாணும்—என்பதும் பாடம்.    1213

3112. (வி - ரை) திருக்கழுத்தாரம்......வடமும் சாத்தி - தெய்வக் கண்டிகை சேரத் திருக்கழுத்தாரமாக முத்து வடமும் சாத்தி என்று கூட்டுக; தெய்வக் கண் டிகை மாலை - உருத்திராக்க மாலை; முத்து மாலையின் மேம்பட்ட சிறப்புத் தோன்றத் தெய்வக் கண்டிகை என்று அடைமொழி புணர்த்தியோதினார். கண்டிகை மாலை சேர வடமும் சாத்தி - என்றதனாலும் அதன் உயர்வு காட்டப்பட்டது. இதற்கு இவ்வாறன்றித் தெய்வத் தன்மை பொருந்திய இரத்தின கண்டிகை மாலை என்றுரைத் தனர் முன்னுரைகாரர். "திருவடி மலர்மேற்பூத்த - சோதி" (3108) என்றும், "நீற் றொளி தழைத்துப் பொங்கி நிறைதிரு நெற்றி மீது, மேற்பட விரிந்த சோதி வெண் சுடர்" (3113) என்றும், "அழகினுக் கணியாம் வெண்ணீறு" (3115) என்றும் கூறுமாற்றால் சிவசாதனங்கள் முத்தினும் உயர்ந்தவை என்ற உண்மை காட்டப்படுத்த கேற்ப ஈண்டு இவ்வாறுரைத்தல் பொருத்தமுடைத்து காண்க.

இனித், "திருவடை யான மாலை" (3114) என்று மேலும் வருமாலோ? எனின், இங்குக் கூறிய "கண்டிகை" எப்பொழுதும் நித்தியமாகப் பிள்ளையார் தரித்ததென்றும், பின்வருவது திருமணக் கோலச் சிறப்பணியாகத் தரித்ததென்றும் கொள்க, "நீற் றொளி தழைத்துப் பொங்கி நிறைதிரு நெற்றி" (3113) என்று கூறிய பின்னர், மேலும், "அழகினுக் கணியாம் வெண்ணீ றிருசெழுந்த தோங்கச் சாத்தி" என்று இக் கருத்தேபற்றி மற்றொரு சிவசாதனமாகிய திருநீற்றினைக் கூறுதலும் காண்க.

பருத்தமுத் தொழுங்கு கோத்த - கண்டிகை மாலையுடன் சேர வைத்தலால் பரு முத்து வடம் என்றார், கழுத்தில் அணியும் உருத்திராக்க வடம் பருமணிகளால் அமை யும் விதிக்குறிப்புங் கண்டுகொள்க.

பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திருவார் காது - "அணைவுறவந் தெழு மறிவு தொடங்கிய அடியார்"களின் விண்ணப்பங்கள் எல்லாம் கேட்டு அருள் தரும் இடம் திருச்செவியே யாதலின் இவ்வாறு சிறப்பித்தார், "மெய்த்தன்மை விளங்கு திருச் செவியிற் சார மேவுதலும் திருவுள்ளக் கருணை மேன்மேல், வைத்து" (2376) என்றதும், அவ்வாறு வந்த பிறவும் காண்க. காதுகள் பிரணவ வடிவாக அமைந்தமை "பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திருவார்" என்றதன் குறிப்பு; "தம் பாடல் பரமர்பால், செல்லுமுறை பெறுவதற்குச் திருச்செவியைச் சிறப்பித்து" (1978) என்று, பிள்ளையார் தமது திருமுறையைத் "தோடுடைய செவியன்" என்று தொடங்கியமை பற்றி ஆசிரியர் கருத்தைக் கூறி எடுத்துக் காட்டியருளியதும் காண்க. சிவஞான நிறைவினுலார்ந்த திருமேனி யாதலின் பிள்ளையாரது காதுகளும் சிவன் திருச்செவியின் தன்மை பெற்றன என்க.

வருக்கவெண் தாளக் கோத்தின் வடிக்குழை - நல்ல வருக்கமாகத் தெரிந்த சிறு கன்முத்துக்கள் ஆறுசேரக் கட்டிய குழை ; இது ஞானதேசிகர்க்குரிய அணி. வடிதல் - கீழ்த் தாழ்ந்து தொங்குதல்.

சென்னி பிறங்கிய—என்ற பாடம் சிறப்பிலது. 1214

3113. (வி - ரை) நீற்றொளி......எழுந்தது என்ன - திருநீற்றின் ஒளி முன்னரே தழைத்துப் பொங்கித் திருநெற்றியினின்றும் விளங்கிற்று ; அதன்மேல் வெள்ளிதாகிய முத்துத் திரணை சாத்திய நிலை அத் திருநீற்றின் ஒளி மேலே விரிந்து எழுந்ததுபோன்றிருந்தது. என்ன - உவமவுருபு ; முன்னர்த் திருவடி மலர்மேற் பூத்த செழுநகைச் சோதி என்ன " (3108) என்ற கருத்தும் காண்க. அடிமுதல் முடிவரை அணிகலம் கூறுகின்றாராதலின் திருவடியில் பூத்த சோதி திருமுடியின் மேற்பட விரிந்த சோதியாக விளங்கிற்றென்ற நயமும் கண்டுகொள்க.

நீற்றொளி - மேற்பட விரிந்ததென்ன, முத்துத் திரணை விளங்கிற்று என ஈண்டு நீற்றொளியை முத்தின் சோதிக்கு உவமித்தார் ; முன், முத்துச் சிவிகையின் ஒளி நீற்றொளி போன்றதென்ற கருத்துடன் "நீற்றொளி போற்றிகின்று" (2114) என்றார்.

நீற்றொளி தழைத்துப் பொங்கி நிறை திருநெற்றி - பிள்ளையார் அவதரித்தபோது "வேறுபல காப்புமிகை யென்றவை விரும்பார், நீறுதிரு நெற்றியி னிறுத்திநிறை வித்தார" (1941) என்ற அந்நாண்முதலின்றளவும் இடையறாது நீறு தழைத்துப் பொங்கி நிறைந்த திருநெற்றி என்ற குறிப்பும் காண்க ; தழைத்தல் - முன்னை நிலையின் அமைந்ததுவே வேர்கொண்டது போலத் தொடர்ந்து மிகுதல் ; முன் நிறுத்தி நிறைவித்த நீறு பின்னர் முறையே தழைத்துப் பொங்கி நிறைந்ததாம்.

திரணை - மகுடத்தின் கீழே சுருண்ட பெரிய விளிம்புபோலும் அமைப்பு.

மகுடம் - ஈண்டு, முத்து வடங்கள் பலவற்றைப் பாகைபோல முறுக்கிப் பின் குஞ்சத்துடன் சேர்க்கும் அமைப்புக் குறித்தது ; முத்துக்கிரீடம் என்றுமாம்.

ஏற்ப வைத்து - திரணையுடன் பொருந்தும்படி சார்த்தி. 1215

3114. (வி - ரை) இவ்வகை-திருவடிமுதல் திருமுடிவரை முன் சொன்னபடி.

நம்மை ஆளும் ஏர் வளர் தெய்வக்கோலம் - பரமாசாரிய மூர்த்திகளாய் முத்திநெறி காட்டி உபதேசித்து " ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக " (3146) என்று ஆட்கொள்ளும் குருமூர்த்தமாகிய திருக்கோலம் என்பதாம்.

கைவினை மறையோர் - இவ்வகைக் - கோலம் செய்ய - என்று கூட்டுக. கைவினையாவது மணக்கோலம் செய்தலில் பழகிக் கைதேர்ந்த நிலை ; இதுவரை மறையவர் செய்த கோலம். இனிக் கூறுவது பிள்ளையார் தாமே புனைந்துகொண்டது.

கடிகொள்...நீள் தாம மார்பர் - செந்தாமரை மாலை அந்தணர்க்குரியது ; இது மரபுபற்றிக் கூறியது.

திருவடையாள மாலை - உருத்திராக்கக் கண்டிகை. இது சிவனுடைய அடையாளம் என்பதும், ஒரு பெண் அணியும் தாலி அவளது நாயகனுக்குரிய நிலை காட்டுதல்போல இதனைப் பூண்போர் இவ்வடையாளத்தினால் ஆன்ம நாயகனாகிய சிவனது உடைமையாதலை அறிவிப்பதாகிய அடையாளம் என்பதும் குறிப்பு. இங்கு இவ்வாறன்றித், தாம மார்பர் என்றது மரபியல் குறித்ததென்றும், திருஅடையாள மாலை என்பது அந்தணர்க்குரிய அடையாள மாலையாகிய தாமரை மாலை குறித்ததென்றும் உரைப்பாருமுண்டு.

தொழுது - வேதியர் கைவினையால் செய்த மணக்கோலத்தின்மேற் றாமே புனைந்ததனால் இறைவரை வணங்கி என்க. தொழுதது, இங்கு இது உலக உபசார

மங்கலமா யொழியாது தெய்வ மங்கலக் கோலமாய் விழுந்தபொருட்டு என்பது குறிப்பு. தெய்வக் கண்டிகையாதலின் செழுந்தார் என்பதுமாம்.

தாம் எடுத்துப் பூண்டார் - தாமே; பிறர் செய்யாது தருதிப்பறித் தாமே பூண்டனர் 1216

3115. (வி - ரை) அழகினுக்கு அணியாம் வெண்ணீறு - அழகு தரும் அணிகளுக்கெல்லாம் அழகு தருவது திருநீறு என்பது. திருநீறு உடன் அமையாதபோது வேறெவ்வணிகளும் வறிய அசுத்த மாயா பண்டங்களா யொழிந்து துன்பத்துக்கே ஏதுவாவன என்பது உண்மை. "நீற்றழகா" என்பது இறைவர் திருப்பெயர்; "திருமுண்டம் தீட்ட மாட்டா, தஞ்சவா ரவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே" (திருவா); "திருநீ றிடாவுருத் தீண்டே னென்னும்" (திருவிசைப்பா).

நீறு அஞ்செழுத்தோதிச் சாத்தி - சிவநாமஞ் சொல்லியே திருநீறணிதல் வேண்டுமென்பது விதியும் மரபுமாம். பழகிய அன்பர் - பழந் தொண்டர்கள்.

மனங்கொள - மனத்தால; மனமார; பொருந்த.

முழவொலி எடுப்ப - இயங்களெல்லாம் கூடிய பேரோசையா யோங்க; முழவு பேரோசை செய்ய என்றலுமாம்.

சிவிகை மேற்கொண்டபோது - எழுந்தன - இயம்பின என்பனவாதியாக மேற் பாட்டின் வரும் வினைமுற்றுக்களுடன் முடித்துக்கொள்க. 1217

3116. (வி - ரை) எழுந்தன - இயம்பின - முதலாகப் பயனிலைகளாகிய வினைமுற்றுக்களை முன்வைத்தது தீவிரமாய் எழுந்த ஆவமேலீடு குறித்தது.

சங்கநாதம் எழுந்தன - பற்பல சங்கங்கள் கூடி ஒலித்தன. "இயம்பின சங்கம்" (திருவாசகம்), இதனை முதலில் வைத்தது சிறப்புணர்த்தற்கு. "சங்கொடு தாரை" (3095) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

இயம்பின - என்றது இயங்கள் கீத முதலியவற்றைப் பொருள்பட இசைத்தல் குறித்தது. மரபு வழக்குமாம்.

மாரி - பொழிந்தன எனக. விண் தூர்த்து பூமாரி என்று உருபு விரிக்க; பலவிடத்தும், தேவர்கள் பலரும் பொழிதலாற் பன்மையிற் கூறினார். மாரி - மாரிகள்.

தொழுந்தகை முனிவர் தொண்டர் - பிறரால் தொழப்படும் தன்மை வாய்ந்த பெருமுனிவர்களும் திருத்தொண்டர்களும்.

சுருதியின் வாழ்த்து - மறை மொழிகளால் வாழ்த்திய வாழ்த்தொலி; வாழ்த்து அவ்வொலிக்கு வந்தது; வாழ்த்து-பலவேறு வாழ்த்துக்களின் பலவேறொலி.

உலகமெல்லாம் மலர்ந்தன - எனக. திசைகளின் விளக்கம் முதலாக (3088) முன் கூறியவற்றையெல்லாம் இங்கு நினைவுகூர்க. "உலகெலாம்" என்று இப்புராணத்துக்கு இறைவர் தந்த முதலினை இங்கு வைத்தது இதன் சிறப்புக் குறித்தது; திருஅரத்துறை இறைவர் தந்த முத்துச்சிவிகையில் ஏறியபோது தொடக்கத்தில் "ஒதி யேறினுருய்ய உலகெலாம்" (2114) என்றருளினார்; அன்று நீற்றொளி போற்றி அஞ்செழுத்தோதி ஏறினார்; அதற்கேற்பவே அச்சிவிகை ஏறும் நிலையின் இறுதி முறையாகிய இன்றும் நீற்றினை அஞ்செழுத்தோதி ஏறியபோது (3115) "உலகமெல்லாம் மலர்ந்தன" என்று முடித்துக்காட்டிய தெய்வக் கவிநலம் காண்க.

எழுந்தன முதலிய வினைமுற்றுக்களாற் கூறி முடித்தது ஐவகைக் கலாசோதனை முடிபு நிலையாகிய சிவபர முத்திப்பேறு வரும் நிலைக்குறிப்பு; எழுதல் முதலிய ஐந்தும் ஐந்தொழிற் குறிப்புப்பட நிற்றலும் காண்க. 1218

3117. படர்பெருந் தொங்கல் பிச்சம் பைங்கதிர்ப் பீலிப் பந்தர்
அடர்புனை செம்பொற் பாண்டி லணிதுகிற் சதுக்க மல்கக்
கடலின்மீ தெழுந்து நிற்குங் கதிர்நிறை மதியம் போல
வடநிரை யணிந்த முத்தின் மணிக்குடை நிழற்ற வந்தார். கஉகக

(இ - ள்) படர் பெரும்...பந்தர் - பரவிய பெரிய குஞ்சங்களும், பிச்சங்களும், பசிய நிறமுடைய மயிற்பீலியால் அமைந்த கூட்டங்களும்; அடர்புனை...சதுக்கம் - நெருங்க அலங்கரித்த சிவந்த பொன்தகட்டா லியன்ற வட்ட அமைப்புக்களையுடைய அழகிய துணிகளாலமைந்த மேற்கட்டிகளும; மல்க - நெருங்க; கடலின் மீது... ...குடை நிழற்ற - கடலின்மேல வந்து எழுந்து நிற்கும கலைகள் நிறைந்த சந்திரன் போல முத்து வடங்களின வரிசைகளா லலங்கரிக்கப்பட்ட முத்துக் குடை மேலே நிழல் செய்ய; வந்தார் - (பிள்ளையார்) எழுந்தருளி வந்தனர்.

(வி - ரை) தொங்கல் - குஞ்சம; பிச்சம் - வெண்குடை. பைங்கதிர்ப் பீலி- பசிய நிறம் விளங்கும மயிற்பீலி; பந்தர் - பந்தர்போன்று பரந்த தொகுதி.

அடர்புனை...சதுக்கம் - சதுர வடிவில் அமைந்த துணிகளாலமைந்த மேற்கட்டிகள்; அத்துணிகள் வட்டமாகிய பொற்றகடுகளால் உள்ளால அடரப் புனைந்து அணி செய்யப்பெற்றன; இந்த மேற்கட்டிகள் எழுச்சியின் கூடவே ஏந்தி வரப்பெற்றன. இவை நிலையாகவே தெருக்களில் சிறப்பின் பொருட்டு அமைக்கப்படுவனவும் உண்டு.

கடலின் மீது...குடை நிழற்ற - பெரிய முத்து வெண்குடை பரந்து நெருங்கியன வாகிய முன் சொன்னவற்றுக்கெல்லாம் மேல எழுந்து பிள்ளையாரது சிவிகையின்மேல் பரந்து நின்று நிழல் செய்தல் பரந்த கடலினிடையே மேல் எழுந்து விளங்கும் வெள்ளிய ஒளியுடைய முழு மதிபோல இருந்தது என்க. தொங்கல் - பீலி - சதுக்கம் முதலியவற்றின் நெருங்கிய பரப்புக் கடல்போலவும், முத்து வெண்குடை அவற்றிற்கெல்லாம் மேல் எழுந்து விளங்கும் முழுமதி போலவும் கொள்வது உவமம்; வினையும் உருபும்பற்றி வந்தது மீது எழுந்து - ஏனையவை நிலத்தில் செலலும் மக்கள் ஏந்த அவ்வுயரத்தி னளவில் பரவிச் சென்றன; முத்துக்குடை மக்களால் பொறுக்கப்பட்ட சிவிகையின் மேல் அவ்வுயரத்தில் வருதல் கருதது; வடநிரை - முத்து வடங்களின் வரிசை.

மணிக்குடை-முத்துக்குடை; இஃது திருவரத்துறை இறைவரா லருளப்பட்டது.

வந்தார் - எழுச்சியில் எழுந்தருளி வந்தார்; பிள்ளையார் என்ற எழுவாய் தொக்கு நின்றது. 1219

*3118. சீரணி தெருவி னூடு திருமணஞ் செல்ல, முத்தின்
ஏரணி காளஞ் சின்ன மிலங்கொளித் தாரை யெல்லாம்
பேரொலி பெருக முன்னே பிடித்தன "மறைக ளோடு
தாரணி யுய்ய ஞான சம்பந்தன் வந்தா" னென்று. கஉஉ0

(இ - ள்) சீரணி...செல்ல - சிறப்புப் பொருந்திய அணியுடைய தெருவினிடையே திருமணம் இவ்வாறு எழுந்து செல்ல; முத்தின்...எல்லாம் - முத்தினாலாய அழகு சிறந்த எக்காளமும், திருச்சின்னமும், விளங்கும் ஒளியுடைய தாரையும் ஆகிய இவைகளெல்லாம்; "மறைகளோடு...வந்தான்" என்று - வேதங்களுடனே உலகம் உய்யும் பொருட்டுத் திருஞான சம்பந்தன் வந்தான்" என்று எடுத்துக் கூறி; பேரொலி... ...பிடித்தன - பெருஞ் சத்தம் முன்னே பெருகும்படி பிடித்தன.

(வி - ரை) சீரணி தெரு - திருமணத்தின் பொருட்டுச் சிறப்பும் அலங்காரமும் செய்யப்பெற்ற தெரு.

திருமணம் - திருமணத்தின் பொருட்டு மணமகனாரது எழுச்சி.

முத்தின்...தாரை - இவையும் திருநெல்வாயில் இறைவரா லருளப்பட்டவை. இச்சிறப்புப்பற்றிக் குடையினையும் இவற்றினையும் இறுதியில் வைத்தார். இவை எழுச்சியின் ஏனையவற்றுக்கு முன்னே செல்வனவாயினும் இக்கருத்துப்பற்றிப் பின் கூறப்பட்டன என்பது குறிக்க முன்னே பிடித்தன என்றார்; பிடித்தன - பிடித்து ஏந்தப்பட்டன; மரபு வழக்கு.

பேரொலி பெருக - இவற்றின் எழும் ஒலி பெருஞ் சத்தமாம்; ஆர்வமேலீட்டி னாலும், எல்லாம் ஒருங்கே பிடித்தேந்தப்பட்டமையாலும் இயல்பாகிய அப்பேரொலி மேலும் பெருகிற்று; ஒலி என்றார் திருநாமங்களையும் மெய்க்கீர்த்திகளையும் பொருள் பொருந்தச் சொல்லி ஒலித்தலால்.

மறைகளோடு......வந்தான் - மறைகள் உய்ய என்றும், தாரணி உய்ய என்றும் கூட்டுக. "வேதநெறி தழைத்தோங்க" என்றவிடத்தும், பிறாண்டும் உரைத்தவை இங்கு நினைவுகூர்தற்பாலன. வந்தான் - எழுந்தருளி வருகின்றார் என்ற அறிவிப்புக் குறிப்பு; காலவழுவமைதி. இவை பிள்ளையாரது திருநாமங்களை இவ்வாறு எடுத்துப் பிடித்தல் துதித்து எழுந்த வகையுமாம் என்பது மேற்பாட்டிற் காண்க.　1220

3119. மண்ணினுக் கிடுக்கண் டீர வந்தவர் திருநா மங்கள்
எண்ணில பலவு மேத்திச் சின்னங்க ளெழுந்த போதவ்,
வண்ணலார் வதுவை செய்ய வலங்கரித் தணையப் பெற்ற
புண்ணிய மறையோர் மாட மங்கலம் பொலிந்து பொங்க,　௧௨௨௧

3120. முற்றமெய்ஞ் ஞானம் பெற்ற மூர்த்தியார் செங்கை பற்ற
நற்பெருந் தவத்தி னீரமை நலம்படைத் தெழுந்த தெய்வக்
கற்பகப் பூங்கோம் பன்னா ரம்மையுங் காப்புச் சேர்த்துப்
பொற்புறு சடங்கு முன்னர்ப் புரிவுடன் செய்த வேலை,　௧௨௨௨

3121. செம்பொன்செய் வாசிச் சூட்டுத் திருமணிப் புனைபூண் செல்வப்
பைம்பொனின் மாலை வேய்ந்த பவளமென் கொடியோப் பாரை
நம்பன்ற னருளே வாழ்த்தி நலமெழில் விளங்கச் சூட்டி
அம்பொன்செய் தீப மென்ன வழகலங் கரித்து வைத்தார்.　௧௨௨௩

3119. (இ - ள்) மண்ணினுக்கு...ஏத்தி - நிலவுலகின் வாழ்வாரது துன்பம் தீர வந்து அவதரித்த பிள்ளையாரது திருநாமங்கள் அளவில்லாத பலவற்றையும் எடுத்து ஏத்தித் துதித்து; சின்னங்கள் எழுந்தபோதில் - திருச்சின்னங்கள் கூறி எழுந்த அந் நேரத்திலே; அவ் அண்ணலார்...பொங்க - அந்தப் பெருமையுடையோராகிய பிள்ளையார் திருமணஞ் செய்தற்காக அலங்கரித்து அணையும் பேறு பெற்ற புண்ணிய மறையவர் நம்பாண்டாரது திருமாளிகையிலே மங்கலங்கள் மிகுந்து மேல் ஓங்க,　௧௨௨௧

3120. (இ - ள்) முற்ற மெய்ஞ்ஞானம்...பற்ற - முற்றிய மெய்ஞ்ஞானத்தைப் பெற்ற பிள்ளையாரது சிவந்த திருக்கையினைப் பிடிக்க; நற்பெரும...எழுந்த - நல்ல பெரிய தவத்தின் தன்மையாலாகிய நலங்களையெல்லாம் கொண்டு எழுந்த; தெய்வ......காப்புச் சேர்த்து - தெய்வக் கற்பகப் பூங்கொம்பு போன்ற அம்மையாரையும்

காப்புப் பூட்டி ; பொற்பு...வேலை - அழகிய சங்கற்ப முதலிய சடங்குகளை முன்னர் விருப்பத்துடனே செய்தபொழுது, ௧௨௨௨

3121. (இ - ள்) செம்பொன் செய்...கொடி ஒப்பாரை - செம்பொன்னாலாகிய தலையணி மாலையினையும், அழகிய இரத்தினங்கள் இழைத்த வேலைப்பாடுடைய அணிகளையும், செல்வம் பொருந்திய பசும்பொன் வரிமாலைகளையும் வரிசைபெறச் சூட்டிய பவளத்தின் மெல்லிய கொடிபோன்ற அம்மையாரை ; நம்பன்றன...சூட்டி - இறைவரது அருளினையே வாழ்த்தி நலை அழகு விளங்க அலங்கரித்து ; அம்பொன் செய்... ...வைத்தார - அழகிய பொன்னாலாகிய விளக்குப்போல அழகினையே அலங்கரித்தது போல அலங்கரித்து வைத்தார்கள். ௧௨௨௩

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண் டுரைக்கின்றன.

3119. (வி - ரை) மண்ணினுக்கு இடுக்கண் தீர வந்தவர் - தம்பொருட்டன்றி உலகம் துன்பம் நீங்கும்பொருட்டே வந்து அவதரித்த பிள்ளையார்.

திருநாமங்கள் எண்ணில பல - மண்ணினுக்கு இடுக்கண் தீர வந்த தன்மை பற்றி அப் பொருள்பட வரும் திருப்பெயர்கள் ; இவை பரசமய கோளரி முதலாயின.

சின்னங்கள் - முன்பாட்டில் கூறிய முத்துச் சின்னம் முதலியவை இறைவரருளியவை ; இங்குக் கூறியவை எழுச்சியில் உலகினர் பிடித்தவை. இறைவனருளியவை பிடித்து ஏந்திய பொருளாகிய தாரை. உய்ய வந்தான் என்ற கருத்தையே தொடர்ந்து மண்ணுலகவர் இடர் நீங்கிய தன்மைபற்றிக் கீர்த்திகளைக் குறித்த நாமங்களால் சின்னங்கள் ஏத்தின.

எழுந்தபோதில் - எடுத்துக் கூறி மேற்சென்றபோது; திருச்சின்னங்கள் ஒலித்து எழுதல் பெரியாரின் வருகைக் குறிப்பாக இந்நாளினும் பெருமடங்கள் முதலிய தாபனங்களில் வழங்குதல் காண்க.

எழுந்தபோது - மாடம் - மங்கலம் - பொங்க - என்று கூட்டுக. மணமகனார் வருதலின் அதற்கேற்ப மங்கலம் பொலிய அலங்கரித்தனர்.

அவ்வண்ணலார் - பிள்ளையார். அகரம் - முன்னறிசுட்டு ; வதுவை செய்ய - திருமணம் நிகழ்த்துமிடமாக.

புண்ணிய மறையோர் மாடம் - நம்பாண்டாரின் திருமனை ; புண்ணிய மறையோர் - பிள்ளையாருக்கு மகட் கொடுக்கப்பெற்றமை முன் செய்த தவமாகிய புண்ணியப் பயன் என்பது. அணையப் பெற்ற - அணையும் பேறு பெற்ற என்ற கருத்தும் அது. புண்ணியம் - பதி புண்ணியமாகி முத்தி சாதனமாகிய சிவ புண்ணியம் ; இப்புண்ணியப் பயனாகத் திருமணத்தில் நம்பாண்டார் நம்பி அன்றே முத்தியடைதலும் காண்க.

மங்கலம்-மங்கலக் கோலங்களாகிய அமைப்பு ; சிவத் திருமங்கல நிறைவுமாம்.

பொழிந்து பொங்க - பொழிதல் - நிறைந்து சிந்துதல் ; பொங்குதல் - மேன் வளர்ந்து மிகுதல். 1221

3120. (வி - ரை) முற்றும்...மூர்த்தியார் - பிள்ளையார்.

முற்றும் மெய்ஞ்ஞானம் - நிறைவாகிய சிவஞானம். முற்றுதல் - எல்லாக் கலைஞானங்களுமுட்பட முழுது நிறைவாகுதல். "உணர்வரிய மெய்ஞ்ஞானம்" (1968) ; "எண்ணரிய சிவஞானம்" (1966) ; பெற்ற - சிவஞானங் குழைத்த பாலமுதூட்டப் பெற்றதனால் அடைந்த. மூர்த்தியார் - பெருமையுடையார்.

செங்கை பற்ற - கை பற்றுதல் - மணம் செய்தல். பாணிக் கிரகணம் என்பது வடமொழி.

நற்பெருந்...பூங்கொம்பன்னார் - நற்பெருந் தவம் - "நற்றவக் கொழுந்தன்னார்" (3135); நலம் - முன்னை நிலையில் செய்த நல்ல பெரிய தவத்தின் பயனாக இவ் வம்மையார் பிள்ளையாரது தேவியாராகப் பேறு பெற்றனர் என்பது குறிப்பு; இஃது அன்று சிவப்பேறு பெறும் நிலைபெற நின்றமையால் இவ்வாறு சிறப்பித்தார். தவத்தின் நீர்மை நலம் - என்றமையும் காண்க. "நற்றவக் கன்னியார் கை" (3134).

தெய்வக் கற்பகப் பூங்கொம்பன்னார் - கற்பகம் - வேண்டியதெல்லாம் தருவதாய்த் தேவலோகத்தில் உள்ளதென்பர்; ஆனால் அது முத்தி தரவல்லதன்று; முத்தியும் தரவல்லதொரு கற்பகமுண்டாயின் அதன் பூங்கொம்பு போல்வார் என்பது தெய்வக் கற்பகம் என்றதன் குறிப்பு. இங்குத் தெய்வம் என்றது தெய்வத்தன்மை குறித்தது; சண்பைப் பிள்ளையார் இனிச் செய்யும் முத்தி தானத்தில் தேவியாருக்கும் பங்குண்டாமாதல் குறிப்பாலுணர்த்தியபடி.

நற்பெருந் தவத்தின்...கொம்பன்னார் - மேல் "பவளமென் கொடியொப்பார்" (3121); "அம்பொனசெய் தீபம்" (ஷை); "நற்றவக் கன்னியார்" (3134); "நற்றவக் கொழுந்தன்னார்" (3135); "வெள்ளை மேகமோ டிசையு மின்னுக் கொடியென" (ஷை); "குனிசிலைப் புருவ மென்பூங் கொம்பனார்" (3136); "பூவையன்னாள்" (3144); "காதலி" (3151) முதலியவை காண்க. இவைகள் தாயாரைப் போற்றும் நிலையில் அமைந்தமை கருதுக, கந்தபுராணத்துள் நாரத முனிவர் வள்ளிநாயகியாரைப் பற்றி முருகப்பெருமானிடம் அறிவிக்குங்காலையில் "தாய தாகும்" என்று கூறிச்செல்லும் நிலை இங்குக் கருதற்பாலது.

காப்புச் சேர்த்துப் பொற்புறு சடங்கு - முன்னர்ச் செய்த - காப்பணிதல் மணமகளுக்கும் உரிய சடங்குடன் செய்தல் மரபு; முன்னர் - மணமகன் மணமனைக்கு வருமுன்னரே, புரிவுடன் - இடைவிடாது முயன்ற எண்ணத்துடனே.

செய்த வேலை - செய்தபோதினை அந்நல் தொடர்ச்சியாக - அலங்கரித்து வைத்தார் - என வரும்பாட்டுடன் முடிக்க.

பொலிவுடன்—பரிவுடன்—போதுடன்—என்பனவும் பாடங்கள். 1222

3121. (வி - ரை) செம்பொன் செய்...வேய்ந்த - இவ்வளவும் வரும் அடைகள் பவள மென்கொடி யொப்பார் என்ற பெயரை விசேடித்து நின்றன.

வாசிச் சூட்டு - நுதலணி மாலை; இது சுட்டி என்றும், நெற்றிப் பிறை என்றும் வழங்கப்படும்; மணமகளை இது சூட்டி அணி செய்தல் சிறப்பும் வழக்குமாம்.

திருமணிப்பூண் புனை - எனக; இவை இரத்தினம் இழைத்த அணிகலங்கள்.

பைம்பொனின் மாலை - பொன்னரி மாலை; பொன்னாரங்கள். வேய்தல் - மிகுதியும் வரிசைபெறச் சூட்டுதல்.

பவள மென்கொடி - மேனி நிறம் - மென்மை - அவயவப் பிரிவு - கைபுனையாத இயற்கை வளம் - சீர்மை - முதலியவற்றால் உருப்பற்றி வந்த உவமம்.

நம்பன்றன் அருளே வாழ்த்தி - மணவணி முதலிய உலகியல் நலங்கள் நிகழும் போது இறைவரது நினைவு வருதல் முற்செய் தவப்பயன்.

நல்லெழில் விளங்கச் சூட்டி - இயல்பாகிய நல்ல அழகினை மறைக்காதபடி அது மேலும் விளக்கமுறும்படி அணிகளைப் புனைந்து; சூட்டுதல் - அணிகலன் - பூமாலை முதலியவற்றைப் புனைதல்.

அம்பொன் செய்...வைத்தார் - அழகுக் கழகுசெய்தல்போல் இயல்பால் அழகுடையாரை மேலும் அலங்கரித்தனர் என்பதாம்.

அம்பொன்செய் தீபம் என்ன - தீபம் - தானே ஒளிதரும் பொருள்; அதனைப் பொன்னு லமைத்ததுபோல; பொன்னு லமையினும் விளக்கே ஒளிதருவதுபோல இங்கு அம்மையாரின் அழகே பொற்பணிகளை விளக்கியதென்பதாம். 1223

3122. மாமறை மைந்த ரெல்லா மணத்தெதிர் சென்று மன்னும்
தூமலர்ச் செம்பொற் சுண்ணந் தொகுநவ மணியும் வீசத்
தாமரை மலரோன் போல்வா ரரசிலை தருப்பை தோய்ந்த
காமர்பொற் கலச நன்னீ ரிருக்குடன் கலந்து வீச, கஉஉச

3123. விண்ணவர் மலரின் மாரி விசும்பொளி தழைப்ப வீச,
மண்ணக நிறைந்த கந்த மந்தமா ருதமும் வீசக்,
கண்ணொளி விளக்க மிக்க காமர்தோ ரணங்க ளூடு,
புண்ணிய விளைவு போல்வார் பூம்பந்தர் முன்பு சார்ந்தார். கஉஉரு

3122. (இ - ள்) மாமறை...சென்று - பெருமையுடைய வேதிய மைந்தர்கள எல்லாரும் திருமண எழுச்சியின் எதிரே சென்று; மன்னும்...மணியும் வீச - பொருந்திய தூய மலர்களுடனே செம்பொற் சுண்ணத்தினையும் தொகுத்த நவமணிகளையும் வீச; தாமரை...கலந்து வீச - தாமரைமலரில் இருக்கும் பிரமதேவன் போன்ற வேதியர்கள் அரசிலையும் தருப்பையும் தோய்ந்த அழகிய பொற்கலச நன்னீரினை வேதமந்திரங்களைச் சொல்லி வீசித் தெளிக்க; கஉஉச

3123. (இ - ள்) விண்ணவர்...தழைப்ப வீச - விண்ணுலகத்தவர்கள் தேவப் பூமாரியினை வானத்தில் ஒளி மிகும்படி வீச; மண்ணகம்...மாருதமும் வீச - நிலவுலகம் நிறைந்த மணத்தையுடைய தென்றற் காற்றினையும் வீச; கண்ணொளி...முன்பு சார்ந்தார் - நெருங்கிய ஒளி மிகுந்த அழகிய தோரணங்களினிடையே சென்று புண்ணியத்தின் பயன் போல்வாராகிய பிள்ளையார் பூம்பந்தரின் முன்பு சார்ந்தருளினர்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3122. (வி - ரை) மாமறை மைந்தர் - மா - பெருமை பொருந்திய என்பது மறைக்கு அடைமொழி. மைந்தர் - சிறுவர்கள்; குமாரப் பருவத்தினர்.

மணத்து எதிர் சென்று - மணம் - திருமண எழுச்சியாய் மணமகன் வரும் கூட்டம் மணம் எனப்பட்டது.

தூமலர்ச் செம்பொற் சுண்ணம் - புதிய நன்மலர்கள் கலந்த பொற்சுண்ணத்தூள்; தொகு நவமணியும் - கலந்த வகைகளைக் கொண்ட நவமணிகள்; உம்மை உயர்வு சிறப்பு.

தாமரை மலரோன் போல்வார் - பிரமனைப் போன்ற மறையவர்கள் - வைதிகர்கள். முன்னர் மைந்தர்கள் என்றது சிறுவர்; இவர்கள் வயது முதிர்ந்து வைதிக ஒழுக்கில் நிற்போர்.

அரசிலை தருப்பை தோய்ந்த - கலச நன்னீர் - கலசத்தில் தூய நீரினுடன் அரசிலையும் தருப்பையும் இட்டுவைத்தல் மரபு. நீர் இருக்குடன் கலந்து வீசுதலாவது - வேத மந்திரங்களைச் சொல்லி அரசிலையினு லிறைத்தல்; இருக்கு - இங்கு வேதப் பொதுமை குறித்து நின்றது.

இப்பாட்டினால் நிலத்தினிற் காணும் வகையால் மறையோர் மணமனையில் எதிர்கொண்ட சிறப்புக் கூறினார்; மேல்வரும் பாட்டினால் கண காணு வகையில் விசும்பில் விண்ணவர் எதிர்கொண்டமையும் தென்றல் எதிர்கொண்ட வகையும் கூறுவார். 1224

3123. (வி - ரை) விசும்பு ஒளி தழைப்ப - வானில் ஒளி மிகும்படி; மாரி - வீச என்க; மலர் - மந்தாரம் முதலிய தேவ தருக்களின் மலர்கள்.

விசும்போளி தழைப்ப - எனபதனை மந்தமாருதத்துடனும் கூட்டுக. மந்தமாருதமும் விசும்பு ஒளி தழைப்ப வீச என்க. மந்தமாருதம் - தென்றற் காற்று. உம்மை - விண்ணவர் வீசியதன்றி என இறந்தது தழுவிய எச்சவும்மை; மந்தமாருதம் - வீசுதல் - தென்றற் காற்று மெலலிதாய அசைதல்; கந்தம் - மலர்களின் மணத்தைத் தாங்கிக்கொண்ட நிலை.

கண் - கண்ணுதலால்; நெருங்குதலால் கண்ணுதல் - நெருங்குதல்.

கண்ணுத(லால்) காமர் தோரணங்கள் ஒளி விளக்கம் மிக்க எனக. பலப்பல வகைகளால் அழகிய தோரணங்கள் நெருங்குதலால் நிறம் பலகொண்ட ஒளி மிகுந்தது என்பது. தோரணங்களூடு - தோரணங்களினிடையே சென்று.

புண்ணிய விளைவு போல்வார் - பிள்ளையார்; புண்ணியம் - சிவ புண்ணியம். விளைவு - பயன்; இனி முத்தி பெறும் பக்குவமுடைய கூட்டத்தினர்களினிடையே எழுந்தருளுகின்றாராதலின் அவர்கள் செய்த சிவ புண்ணியங்களின் விளைவு என்றார்.

பூம்பந்தர் - மணமனையின் முன்பு மணமகன் வருந்தறகமைக்கும் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட பந்தர்.

மிக்கார் - என்பது பாடமாயின், மிக்கு - ஆர் - நிறைந்த, காமர் - அழகுடைய என்று உரைத்துக்கொள்க 1225

3124. பொன்னணி சங்கின் வெள்ளம் பொலிவுடன் முழங்கி யார்ப்ப
மன்னிய தாளப் பத்தி வளர்மணிச் சிவிகை நின்றும்
பன்மலர் நறும்பொற் சுண்ணம் பரந்தபா வாடை மீது
முன்னிழிந் தருளி வந்தார் மூவுல குய்ய வந்தார். கஉஉசு

(இ - ள்) பொன்னணி...ஆர்ப்ப - பொன் அணிந்த சங்குகளின் கூட்டம் அழகுடனே முழக்கம் செய்து பேரொலி எடுக்க; மன்னிய...நின்றும் - நிலைபெறப் பொருந்திய முத்து வரிசைகள் பெருக ஒளிசெய்து விளங்கிய சிவிகையினின்றும்; பன்மலர்...மீது - பல மலர்களும் மணம் கமழும் பொற்சுண்ணமும் பரவியிருந்த பாவாடையின்மேல்; முன்...வந்தார் - முன்னே இறங்கி எழுந்தருளி வந்தார் மூவுலகமும் உய்யும்பொருட்டு வந்தார்.

(வி - ரை) சங்கின் வெள்ளம் பொலிவுடன் முழங்கி - அநேக சங்கங்கள் அழகுடன் ஒன்றுபோலச் சேர்ந்து மங்கல முழக்கம் செய்ய; மணமகனார் வந்து மணமனை புகுதல் பெரு மங்கல நிகழ்ச்சியாதலின் அதகுறிக்கச் சங்கங்கள் பலவும் கூடி மங்கல முழக்கம் செய்தன. இவ்வாறு பெரும் நிகழ்ச்சிகளிற் பல இயங்களும் ஒன்றுகூடிப் பேரொலி செய்தல் இக்காலத்திலும் வழங்குகின்றது; சகல வாத்தியம் செய்தல் என்பர்.

**மன்னிய...சிவிகை நீன்றும்** - மன்னிய - இதுவரையும் பிள்ளையார் அச்சிவிகையில் ஊர்ந்து செல்ல நிலைபெற்றிருந்து இப்போது அதினின்றும் நீங்கிப் பாவாடைமீது எழுந்தருளிப்போந்து, இனி இறைவரைச் சாரந்தருளுவதனால் மேல அதனை ஊர்வதில்லையாகும் என்ற குறிப்புப்பட மன்னிய என்று இறந்தகாலத்தாற் கூறினர். முன் இழிந்தருளி என்ற சொல்லாற்றற் குறிப்பும் அது.

**பன்மலர்...பாவாடை மீது - வந்தார்** - பாவாடை - பாவுதல் - ஒழுங்குபெறப் பரப்புதல்; பாவிய - பரப்பிய - ஆடை; சிறப்புக்களிற் பெரியோர்கள் நிலத்தில் நடக்காது பாவாடைமீது நடந்து வரும்படி ஆடை பரப்பி அமைத்தல் மரபு; இஃது இந்நாளிலும் காணலாம். இங்குப் பாவாடைமீது மலரும் நறுந் துகளும் இட்டுவைத்தது மேலும் சிறப்புச் செய்ததன்றிப் பிள்ளையாரது திருவடிகளில் நிலத்தின் வன்மை உறுத்தாதபடி செய்யுமுறையும், வழிபாட்டு முறையுமாம்.

**முன் இழிந்தருளி வந்தார்** - பாவாடைமீது முன் இறங்கி எழுந்தருளி வந்தனர்.

**மூவுலகுய்ய வந்தார் - வந்தார்** - வந்தவராகிய பிள்ளையார்; வினைப்பெயர். பிறசரித விளைவு நோக்கி இக்குறிப்புற வைத்தது தெய்வக் கவிநலம். இரண்டும் வினைமுற்றாகக் கொண்டு எழுவாய் வருவித்துரைத்தலுமாம். 1226

3125. மறைக்குல மனையின் வாழ்க்கை மங்கல மகளி ரெல்லாம்
நிறைத்தநீர்ப் பொற்கு டங்க ணிரைமணி விளக்குத் தூபம்
நறைக்குல மலர்சூழ் மாலை நறுஞ்சுடர் முளைப்பொற் பாண்டில்
உறைப்பொலி கலவை யேந்தி உடனெதி ரேற்று நின்றார். கஉஉஎ

(இ - ள்) **மறைக்குல...எல்லாம்** - மறையவர் குலத்தினராய் இல்வாழ்க்கை நிலையின் வாழும் மங்கலம் பொருந்திய பெண்கள் எல்லாம்; **நிறைத்த நீர்...ஏந்தி** - நிறைத்த நீரினையுடைய பொற்குடங்களையும், வரிசையாகிய அழகிய விளக்குகளையும், தூபங்களையும், தேன் பொருந்திய நல்ல மலர்களாலான மாலைகளையும், நல்ல ஒளி பொருந்திய முளைப் பாலிகைகளை வைத்த பொற்றட்டுகளையும், உறைத்தலினால் அழகு பொருந்திய கலவைச் சாந்தினையும் ஏந்திக்கொண்டு; **உடன்...நின்றார்** - ஒருங்குடனாக மணமகனாராகிய பிள்ளையாரை நல்வர வெதிர்கொண்டு நின்றார்கள்.

(வி - ரை) மங்கல மகளிர் எல்லாம் - ஏந்தி - உடன் எதிர் ஏற்று நின்றார் - எனக. இது சுமங்கலிகளான மறையோர் மகளிர் மணமகனை மணமனையில் எதிர் வரவேற்ற நிலை கூறியது; மறைக்குல மைந்தர்களும் மறையவரும் மனையின் முன்பு பந்தரின் முன் சென்று வரவேற்ற நிலை முன் 3122-ல் கூறப்பட்டது. அதன்பின் பூம்பந்தரிற் சார்ந்து பாவாடைமீது மணமனையில் வந்தபோது மங்கல மகளிர் நிறைகுடம் முதலிய மங்கலப் பொருள்களை ஏந்தி வரவேற்பது மரபு வழக்குமாம்.

**நிறை குடம் - விளக்கு - தூபம் - மலர்மாலை - முளைப் பாண்டில் - கலவை** - இவற்றைப் பெண்கள் ஏந்தி வருதல் வழக்கு; இவை மங்கலப் பொருள்கள்.

**நறைக்குல மலர்சூழ் மாலை** - நறை - தேன்; குலமலர் - நல்லவகை மலர்கள்; சாதி - மல்லிகை - முல்லை முதலியன. சூழ்மாலை - மலர்களைச் சுற்றிவைத்துக் கட்டிய இண்டை பிணையல் முதலிய மாலைகள்.

**நறுஞ்சுடர் முளைப் பொற்பாண்டில் - சுடர்முளை - முளைப் பாலிகைகள்; மணத் திருநாளுக்கு முன் ஏழாநாளில் முளை பூரித்தாராதலின் (3071) முளைகள் வளம்பெற வோங்கி வளர்ந்து விளங்கின; இவற்றின வளமும் விளக்கமும் நற்குறிகளாக என்**

னப்படுதலின் நறும் - சுடர் முளை என்ற அடைகொடுத்துச் சிறப்பித்து ஓதினார். பொற்பாண்டில் - பொற்றட்டு. நறுசுடர் - என்பதும் பாடம். நறு - மகிழும்.

உறைப்போலி கலவை - புனுகு, கத்தூரி முதலிய வாசனைப் பண்டங்களை நன்கு உரைத்துக் கூட்டிய கலவைச் சாந்து. போலி - நயமும் மணமும் நிறமுமுடைய.

உடன் - ஒழுங்குபட ; மணமகனார் வந்தவுடனே என்றலுமாம் ; மைந்தர்கள் வர வேற்ற நிலையினுடனே மகளிரும் ஏற்றவாறு என்ற குறிப்புமாம். 1227

3126. ஆங்குமுன் னிட்ட செம்பொ னணிமணிப் பீடந் தன்னில்
ஓங்கிய ஞான வெள்ள முண்ணிறைந் தெழுவ தென்னத்
தாங்கிய முத்தின் பைம்பூண் டண்ணில வெறிப்ப வேறிப்
பாங்கொளி பரப்பி நின்றார் பரசம யங்கள் வீழ்த்தார். கஉஉஅ

(இ - ள்) ஆங்கு...தன்னில் - அவ்விடத்தில் முன்னரே இட்டுவைத்த செம்பொன்னாலியன்ற அழகிய மணிகளை அழுத்திய பீடத்தில், ஓங்கிய ..ஏறி - எல்லாவற்றுக்கும் மேலோங்கிய சிவஞானப் பெருக்கானது உள்ளே நிறைந்து மேல் எழுந்து பொழிவதுபோல அணியாகப் பூண்டருளிய முத்து நல் அணிகள் குளிர்ந்த ஒளியினை வீச ஏறி ; பாங்கொளி பரப்பி நின்றார் - பக்கங்களில் ஒளிபரப்பி நின்றருளினார் ; பரசமயங்கள் வீழ்த்தார் - பரசமயங்களை வென்றழித்தவராகிய பிள்ளையார்.

(வி - ரை) ஆங்கு...பீடம் - இப்பீடம் மணமனை வாயிலின் முன்னாப் பந்தரின் கீழ், மணமகனாரை நிறுத்தி நீர்சுற்றிச் செய்யும் நீராஞ்சனம் முதலிய மங்கல வினைகள் செய்வதற்காக இடப்படுவது ; திருமணவறையினுள் இடும் தவிசு வேறு ; 3129 பார்க்க.

ஏறி - நின்றார் - இப்பீடத்தில் மணமகனாரை நிறுத்தி மங்கலம் செய்தல் மரபு.

ஓங்கிய ..எழுவதென்ன - உள்ளே நிறைந்ததாகிய சிவஞானப் பெருக்குப் பொங்கி மேல் எழுவதுபோல என்பது. திருவடி முதல் திருமுடி வரை முத்தணிகளாலணியப் பெற்ற பிள்ளையாரது திருக்கோலம் இருந்த்து என்க.

தாங்கிய முத்தின் பைம்பூண் தண்ணிலா எறிப்ப - திருமேனி முழுதும் முத்துக்களாலான அணி புனைந்த நிலைமையினை எண்டு முடித்துக் காட்டியவாறு ; 3108 முதல் 3113 வரை பார்க்க.

ஞான வெள்ளம் உண்ணிறைந் தெழுதல் - உவமானம் ; முத்தின் பூண்கள் தண்ணிலா வெறித்தல் உவமேயம். வினையும் மெய்யும் பற்றி வந்த உவமத் தற்குறிப்பேற்றவணி. ஞானம் - அறிவொளியாதலின் சத்துவத் தன்மை பற்றி வெண்ணிறமுடையதாகக் கூறுதல் மரபு.

ஓங்கிய ஞான வெள்ளம் - ஓங்குதல் - ஏனைய எல்லாவற்றினும் சிறத்தல் ; வெள்ளம் - நீர்ப் பெருக்கின் குறிப்பினால் மிகுதியுணர்த்திற்று. "உண்ணிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால்" (1972) என்று முதற் பதிகம் எடுத்த நிலை கூறியது இங்கு நினைவு கூரத்தற்பாலது. ஈண்டு, இனி, அந்தச் சிவஞான வெள்ளமே பஞ்சாக்கரப் பதிகத்துடன் இறுதியாகப் பதிக நிறைவாகும் குறிப்புப் பெற அக்கருத்தையே பற்றிக் கூறிய தெய்வக் கவிநயமும் கண்டுகொள்க.

பாங்கு ஒளி பரப்பி நின்றார் - உள்ளொளியாகும் சிவஞான நிறைவாகிய ஒளியேயன்றிப் புறவொளியாகிய முத்தணி நிலவும்கூடி எம்மருங்கும் உள்ளும் புறம்புமாக ஒளி பரப்பி என்க ; நின்றார் - அங்குப் பீடத்தின் நின்ற தன்மையன்றி என்றும் உள்ள நிலைபேறும் குறித்தது.

**பரசமயங்கள் வீழ்ந்தார்** - பரசமயமாகிய வல்லிருள் போக்கிய பின்னரே ஞான வொளி எழுந்து விளங்குமாதலின் பரசமயங்கள் வீழ்ந்தார் - ஒளி பரப்பி நின்றா என்றார். இவை யிரண்டுமே பிள்ளையாரது திருவவதார உள்ளுறையாம் என்பது குறிப்பு; திருவவதார உள்ளுறை நிறைவெய்திய வாதலின பிள்ளையார் இனித் திருமணத்திற சிவனடி யெய்துவார் என்பதும் குறிப்பு. 1228

3127. எதிர்வர வேற்ற சாய லிளமயி லனைய மாதர்
மதுரமங் கலமுன் னான வாழ்த்தொலி யெடுப்ப வந்து
கதிர்மணிக் கரக வாசக் கமழ்புன லொழுக்கிக் காதல்
விதிமுறை வலங்கொண் டெய்தி மேவுநல் வினைகள் செய்தார்.

(இ - ள்) எதிர் வரவேற்ற...மாதர் - வர வெதிரேற்ற சாயலினாலே இளமயில் போன்ற பெண்கள்; மதுர...வந்து - இனிமையான மங்கல மொழிகளை முன்னாகக் கொண்டு பாடிய வாழ்த்தொலி எங்கும் நிறைய வந்து; கதிர்மணி...ஒழுக்கி - ஒளி பொருந்திய அழகிய கமண்டலத்தில் உள்ள மணம் பொருந்திய நீரினைத் திருமுன்னே வார்த்து; காதல்...செய்தார் - மிக்க விருப்பத்துடன் விதி முறையின்படி வலமாகச் சுற்றிப் பொருந்திய நல்ல சடங்குகளைச் செய்தனர்.

(வி - ரை) மாதர் - "மங்கல மகளிர்" (3125); மங்கல முன்னான வாழ்த்து - மங்கல மொழியை முன் வைத்துப் பாடும் வாழ்த்துரைக் கீதம்; மங்கல மொழிகள் முதலிய வாழ்த்துக்களும் என்றலுமாம்; மதுரம் - இனனிசை.

**கரகம்** - மூக்குடைய சிறிய தண்ணீர்ப் பாத்திரம்; **ஒழுக்குதல்** - மெல்லிதாய் இடையறாது விழும்படி வார்த்தல்.

**வலங்கொண்டு** - வலமாகச் சுற்றுதல். நீராஞ்சனம் என்ற நல்வினை என்றும், இது திருட்டிதோடம் நீங்கும்படி செய்யும் ஆலத்தி என்றும் உரைப்பர் ஆறுமுகத் தம்பிரானார். (திருட்டி = கண்ணேறு) 1229

3128. மங்கலம் பொலிய வேந்தி மாதரார் முன்பு செல்லக்
கங்கையின் கொழுந்து செம்பொ னிமவரை கலந்த தென்ன
அங்கவர் செம்பொன் மாடத் தாதிபூ மியினுட் புக்கார்
எங்களை வாழ முன்னா ளேடுவை கையினி லிட்டார். கஉகூ0

(இ - ள்) மங்கலம்...செல்ல - மங்கலப் பொருள்களை ஏந்திக்கொண்டு (பார்ப்பனப்) பெண்கள் முன்னே செல்ல; கங்கையின்...என்ன - கங்கையின் கொழுந்துபோன்ற வெள்ள ஒழுக்கு சிவந்த பொன்மலை என்னும் இமயமலையினைக் கலந்ததுபோல; அங்கவர்...புக்கார் - அங்கு நம்பாண்டார் நம்பிகளது அழகிய பொன்மாடத்தின்கண் ஆதி பூமி என்னும் மணவறையினுள்ளே புகுந்தருளினார்; எங்களை...இட்டார் - எங்களை வாழ்வித்தற்பொருட்டு முன்னாள் ஏட்டினை வைகையினில் இட்டருளிய பிள்ளையார்.

(வி - ரை) மங்கலம் - நிறைகுடம், விளக்கு, முளைப்பாண்டில் முதலிய மங்கலப் பொருள்கள்; அட்டமங்கலம் எனப்படும்.

**கங்கையின் கொழுந்து** - பெரிதாய் விரைவாய்ப் பேரோசையுடன் வருதலின்றி மென்மையாய்ச் சிறிய அளவில் மெல்ல முன்னேறிச் செல்லுதலின் கொழுந்தென்றார்; உருவகம். கங்கை வெண்மை நிறமுடையதாதலும் குறிப்பு. "புனல் வெண்மை" (உண்மை விளக்கம்) என்ற பொதுவியல்போ டன்றிக் கங்கை நீருக்குச் சிறப்பாகிய

வெண்மைநிறமு முண்டு; "கங்கையுந் தெண்ணீர் யமுனையுமே கூடிய, கோப்பொத்த தாலுமை பாகமெங் கொற்றவற்கே" (பொன்வண்ணத்தந்தாதி - 90) என்ற திருவாக்கில் வெண்ணீறிட்டு வெள்ளியதாய் விளங்கும் திருமேனியைக் கங்கைக்கு உவமித்தது காண்க. இங்குப் பிள்ளையார் திருமேனியும் முழுதும் முத்தணி புனைந்து நீறிட்டு வெண்ணிறமாய் விளங்குதலும் குறிப்பு; "வெள்ளை மேகம்" (3135) என்ப பின்னர்க் கூறுதலும் காண்க.

செம்பொன் இமவரை - பொன்மலை என்னும் இமயமலை; பொன்மலை இமயத்தின் ஒரு பகுதி. பொன்மாடத் தாதிபூமி - "பொன்னின் வெண்டிருநீறு புனைந்தென" (11).

கங்கையின் கொழுந்து பிள்ளையாருக்கும், பொன் இமவரை - ஆதிபூமிக்கும், பிள்ளையார் சென்று சேர்தல் கங்கை கொழுந்து மெல்ல இமயத்திற் படர்தலுக்கும், மெய்யும் வினையும்பற்றி எழுந்த உவமம். கலந்தது - மெல்லச் சேரும் நிலை குறித்தது.

அங்கவர் - அங்கு அந் நம்பாண்டார் நம்பிகளுடைய; ஆறனுருபு விரிக்க.

எங்களை வாழ...இட்டார் - "வாழ்க அந்தணர்" என்ற திருப்பாசுரத் திருப்பதிகத்தினை எழுதிய ஏட்டினை வைகையாற்றில் இட்டுப் புனல் வாதம் வென்ற வரலாறு குறித்தது. எங்களை வாழ என்றது அதனில் "ஆழ்க தீயது; எல்லா மரனாமமே சூழ்க; வையகமும் துயர் தீர்கவே" என்ற பகுதியினால் பூதபரம்பரையில் பின்வரும் எங்களை வாழ்வித்த நிலை குறித்தது. ஆழ்க - சூழ்க - தீர்க என்ற வியங்கோள் வினைமுற்றுக்கள் "இயலு மிடம்பா லெங்கு மென்ப" ஆதலின் எதிர்காலத்து வரும் எங்களையும் ஏற்றும் தன்மையுடையன; ஆதலின் அன்று ஏட்டருளியமையால் இன்று யாங்களும் வாழ்கின்றேம்; இனிவரும் பரம்பரையும் வாழும் என்பதாம். வாழ - வாழ்விக்கும் பொருட்டு; ஏட்டமையால் புனல்வாத வெற்றியும், அதனால் அமணச் சார்பு அழிவும், அதனால் சைவத் திருநீற்றினாக்கமும் பெறப்பட்டமையும் எங்களுக்கு வாழ்வருளியதாம் என்ற குறிப்பும் காண்க. வாழ - வாழ்விக்க.

எங்களை வாழ முன்னாள் - இட்டார் என்று "ஆதி பூமியினுட் புக்க" பிள்ளையார், அவ்வாறே திருமணச் சடங்கினூடே ஆதிபூமியாகிய சிவன்திருக்கோயிலுக்குச் சென்று அன்று அங்கு வந்தார்க்கெல்லாம் பேரானந்தப் பெருவாழ்வாகிய முத்தியருளுவாராகப் பின்வரும் எங்களுக்கு அவர் அருள் செய்தவாறென்னை? என்பார்க்கு எங்களை வாழ முன்னாள் ஆற்றில் ஏட்டமையால் அருள் புரிந்து வாழ்வருளினார் என்பதாம்; இது பற்றியே ஈண்டு இவ்வாறாகக் கூறியருளினார் ஆசிரியர். முன்னாள் - முன்-முன்னமே. நினைந்த என்ற குறிப்புமாம். "எங்களையு நினைந்தருளிற்று" (3280 - ஐயா - புரா - 126) என்புழிப்போலக் கொள்க. ஆதிபூமி - சிவனகர் என்ற குறிப்புமாம். 1280

3129\. அகில்நறுந் தூபம் விம்ம அணிகிளர் மணியால் வேய்ந்த
துகில்புனை விதான நீழற் றூமலர்த் தவிசின் மீது
நகிலணி முத்த மாலை நகைமுக மடவார் வாழ்த்த
இகலில்சீர் மறையோர் சூழ வினிதினங் கிருந்த வேலை, ௧௨௮௧

3130\. திருமகட் கொடுக்கப் பெற்ற செழுமறை முனிவர் தாமும்
அருமையால் முன்செய் மெய்ம்மை யருந்தவ மனைவி யாரும்
பெருமகிழ்ச் சியினாற் பாதம் விளக்குவார் பிள்ளை யார்முன்
உரிமையால் வெண்பொற் றாரி ருடனெடுத் தேந்தி வந்தார். ௧௨௮௨

3129. (இ - ள்) அகில்...விம்ம - அகிலின் மணமிக்க புகை மிகக் கமழ; அணிகிளர்...கீழல் - அழகு விளங்கும் மணிகளாற் புனையப்பட்ட சுறம் பட்டினுலாகிய மேற்கட்டியின் கீழே; தூ...மீது - தூய மலர்க ளிடப்பெற்ற ஆசனத்தின் மீது; நகிலணி...வாழ்த்த - கொங்கைகளின் மேல் முத்துமாலைகளை யணிந்த மலர்ச்சி பொருந்திய முகத்தினையுடைய பெண்கள் வாழ்த்த; இகலில்...சூழ - கோப முதலாகிய பகைகள் இல்லாத, சிறப்பினையுடைய வேதியர்கள் சூழ; இனிதின்...வேலை - இனிதாக அங்கு எழுந்தருளியிருந்தபோது; கஉ௩க

3130. (இ - ள்) திருமகள்...தாமும் - தமது திருமகளாரை மணமகளாராகக் கொடுக்கும் பேறு பெற்ற செழிய மறைமுனிவராகிய நம்பாண்டார் நம்பிகளும்; அருமையால்...மனைவியாரும் - அரிய நீர்மையாலே முன்னே செய்த மெய்ம்மையாகிய அரிய தவப்பேறுடைய மனைவியாரும்; பெருமகிழ்ச்சியினுல் பாதம் விளக்குவார - பெரிய மகிழ்ச்சியுடனே பிள்ளையாரது பாதங்களை விளக்குவாராகி; பிள்ளையார முன...வந்தார - பிள்ளையாரது திருமுன்பு அவ்வுரிமையுடைமையினாலே வெள்ளிய ஆன்பாலினையும தூய நீரினையும் உடனாக எடுத்து ஏந்திக்கொண்டு வந்தார்கள். கஉ௩உ

இந்த இரண்டு பாட்டுக்களும தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3129. (வி - ரை) விம்முதல் - மிகுந்து மேல் எழுதல்; "தூபம்" (3125).

மணியால் வேய்ந்த துகில்புனை விதானம் - விதானம் - மேற்கட்டி; துகில் புனை - பட்டினுல் இயன்ற; துகில் - இங்குப் பட்டுத் துணியைக் குறித்தது. மணியால் வேய்ந்த - என்றது மணிகளைச் சித்திரம்படத் தைத்து வைத்தும் தொங்க வைத்தும் அணி செய்த.

தூமலர்த் தவிசு - மண அறையினில் பிள்ளையார் மணமகனுராக எழுந்தருள இட்ட பூஞ் சிங்காதனம.

நகில்...மடவார் - நகில் - கொங்கை; முத்தமாலை - ஈண்டு இடத்துக்கும் காலத்துக்கும் ஏற்ப பெண்களும் தம் இயல்பாகவே முத்து மாலைகள் அணிந்தது குறிப்பு. முத்துமாலை களணிதல் அந்நாள் வழக்குமாம.

இகலில் சீர் - மனக் கோட்டம. பொறாமை, வெறுப்பு முதலிய அறுவகைப் பகைகளை அறுத்த சிறப்புடைய; "அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற் றைம் புலனு மடக்கி" (தேவா); "களவுபொய் காமங் கோப முதலிய குற்றங் காய்ந்தார" (1784); "செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வவே தியர்க ளானுர" (357).

அங்கு - ஆதிபூமியில் தூமல ராதனத்தின் மீது. மணமகனுராகிய பிள்ளையார தூமலர்த் தவிசின எழுந்தருளிய வேலை, சுற்றிலும் அகிற்றூபம் கமழ நிறைந்தது, மணி யணி விதானம் மேல் விளங்கிற்று; முன்பு மடவார் வாழ்த்தினா; சூழ இருந்த மறையோர் மறைமொழிகளால் ஏத்தினர் எனக.

நகைமுக மடவார் - உள்ள மகிழ்ச்சியின நிறைவினுலே முகமலர்ச்சி காட்டிறு.

இருந்த வேலை - ஏந்தி வந்தார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க; மண மகனுர் வந்து ஆதனத்தமர்ந்த உடனே முதலிற் செய்யும் சடங்காதலின இருத்தலும் வருதலும் கூறும் இந்த இரண்டு பாட்டுக்களும் ஒருமுடிபு கொள்ளவைத்த கவிநயம் கண்டு கொள்க. 1231

3130. (வி - ரை) திருமகள்...முனிவர்தாமும் - மறைமுனிவர்-நம்பாண்டார்: முனிவர்கள் - மனனசீலர்கள். முனிவர்கள் பெறும் முத்திப் பயனை இவர் தம் மகளைப் பிள்ளையாருக்குக் கொடுத்ததனுல் அணிமையில் அடைய நின்றமையால் மகட் கொடுக்

கப் பெற்ற மறைமுனிவர் என்றார். மறை முனிவர் - "மறை முனிவர்" (1959) என்று மணமகனாரது தந்தையாராகிய சிவபாதவிருதயரை முன் கூறினார்; அதற் கேற்ப இங்கு மணமகளாரின் தந்தையாராகிய நம்பாண்டாரைக் கூறினார். நான்முகச் செழுமறை என்று அடைமொழி கொடுத்துச் சிறப்பித்தது இவரது மகட்கொடையி னாலே சிவபாதவிருதயரும் ஏனை எல்லாரும் முத்தியாகிய உறுதிப்பொருளை அடைய நின்ற குறிப்புத் தருதற்கு.

அருமையால்...மனைவியாரும் - முன்செய் அருந்தவம் என்றது முன்னைய அரிய பெரிய தவத்தாலன்றிப் பிள்ளையாருக்குத் தேவியாராகும் மகளாரைப் பெறுதல் இயலா தென்பது; இவர் தவம் செய்து இம்மகப் பெறாவிடின் நம்பாண்டாருக்கு மகட் கொடைப் பேறு வாய்த்திராதென்பார் இவ்வாறு சிறப்பித்தார். இவர் மகப் பெற்றா ராயினும் மகட்கொடையின் உரிமை தந்தையாராலே சிறப்பின் உரியதாதலின் அது குறிக்க அவரை முன்வைத்துக் கூறினார்.

பெரு மகிழ்ச்சியினாற் பாதம் விளக்குவார் - பெருமகிழ்ச்சி - பிள்ளையாரது திருப் பாதங்களைத் தீண்டவும் விளக்கவும் போற்றவும் பேறு பெற்றமைபற்றிப் பெரிதும் மகிழ்ந்தனர் என்பது; பாதம்-தம் உள்ளத்தே பதிய வைத்துக்கொண்டமை குறிப்பு. விளக்குவார் - நின்மலத் திருமேனியாதலின் அப்பாதங்களை விளக்குதல் வேண்டப் படுவதன்று; ஆனால் இவர்கள் தாம் பாசநீங்கி விளக்கமுறும் பொருட்டுப் பிள்ளையா ரது பாதங்களை விளக்கினார் என்பது "புந்தியார் ளிளிர்த் யானம் புரிசடை யாரென னுனணி" (3131) என மேற்கூறியவதனால் விளங்கும்.

மணமகனாரைச் சிவபெருமானாராகவே பாவித்து அவரது பாதங்களை மகளைப் பெற்றோர் ஆன்பால் கொண்டு விளக்குதல் மணச் சடங்குகளுள் ஒன்று; "விடையி ழிந்தழி மேலைவிண் ணுட்டவர், மடமின் னொடு வந்து பராபரன், அடிகண் மீதினி லானபொழி பாலொடு, கடிதி னுட்டினன் கைதொழு தேகினன்" (கந்தபுராணம் - திருக்கல்யாணப் படலம் - 39) என்றும், "எதிர் புகுந்திடு மிந்திரா ணிதன, புதிய தோரப்பப் பொழிந்த தீயபால, நிதியின கொள்கல கிரபபி வந்துவேள், பதயு கங்களிற் பரிவொ டாட்டினள்" (கந்தபு - தெய்வயானை திருமணம் - 206) என்றும், "ஆட் டித் தீமபய னலரும் கண்ணியுஞ், சூட்டி மெல்லடி தொழுது பலசுடர், கூட்டி வைத்ததோர் கொள்கலத்தினைக், காட்டி மும்முறை கடவுட் சுற்றினன்" (ஷை-207) என்றும் இறைவர் அமர்ந்து இச்சடங்கினை அங்கங்கும் உலகுக்கு வகுத்துக் காட்டியரு ளிய நிலைகள் காண்க. மணச் சடங்குகளில் காப்புநாண் சேர்ப்பது முதலாக மணமக் களைச் சத்தியும் சிவமுமாகவே கருதுதல் வேண்டுமென்பதும், மணமக்களும் தம்மை அவ்வாறே பாவித்தொழுகல் வேண்டுமென்பதும், சைவர்கள் செய்யும் மணச்சடங்கு களும் முடிவிற் சிவத்தன்மை பெறுதலையே குறிக்கோளாக உடையன என்பதும் உண்மை நூற் கருத்துக்களாமென்ப. பிள்ளையார் திறத்தில் இவை சிறப்பாய்ப் பொருந்துவனவாம். அவரது திருவடிகள் சிவத்தன்மை பெற்று உண்மையில் அன்று வந்தடைந்தோர்க்கெல்லாம் முத்திக்கு வழிகாட்டியமை காணப்பெறும்.

இனி, விளக்குவார் - இத் திருப்பாதங்களே முத்திக்கு வழி காட்டுவனவாய்ப் பற்றத்தக்கன என்று உலகுக்கு விளங்கச் செய்வாராகி என்றதும் தொனித்தல் காண்க.

"என்று மடியவ ருள்ளத் திருப்பன; விவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன; நல்லசநத

தொன்றும் புலவர்கள் யாப்புக் குரியன; வொண்கலியைப்
பொன்றுங் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே"

என்பது முதலாக நம்பியாண்டார் நம்பிகள பின்னர்க காட்டியருளுமாறு நம்பாண்டார் நம்பிகள் முன்னரே காட்டுவாராகி என்பது.

உரிமையால் - மகட்கொடுக்கும் உரிமை பெறறோம் என்ற சிறப்புரிமையின் பெருமிததோடு. உரிமை வேறு - கடமை வேறு. இஙகுக் கடமை எனறதனோடு அமையாத உரிமை பாராட்டி என்பது குறிபபு.

வெண்பால் - ஆனபொழி புதிய பால , தூநீர் - தூயதாய், மலர்களும் வாசனைப பண்டஙகளும பெய்து உள்ள நீர்.

உடன் - ஒருஙகு ; வழிபாட்டுக்குரிய மலர்-சந்தனம் - முதலியவற்றுடன் என்ற குறிப்புமாம். 1232

3131. வந்துமுன் னெய்தித் தாமுன் செய்தமா தவத்தி னன்மை
நந்துநம் பாண்டார் நம்பி ஞானபோ னகர்பொற் பாதங்
கந்தவார் குழலி னார்பொற் கரகநீ ரெடுத்து வார்ப்பப்
புந்தியா னினைதி யானம் "புரிசடை யா"னேன் றுன்னி, ௧௨௩௩

3132. விருப்பினால் விளக்கி மிக்க புனிதநீர் தலைமேற் கொண்டு
பொருப்புறு மாடத் துள்ளும புறத்துளுந் தெளித்த பின்னர்
உருப்பொலி யுதரத் துள்ளும் பூரித்தா; ருவகை பொங்கி
அருப்புறு கிளைஞர் மேலுந் தெளித்தன ரார்வத் தோடும். ௧௨௩௪

3131. (இ - ள்) வந்து முன் எய்தி - வந்து பிள்ளையார் முன்பு சேர்ந்து ; தாம்...நமபி - தாம் முன்னே செய்த பெருந்தவத்தினால் பெற்ற நன்மை பெருகுகின்ற நம்பாணடார் நம்பிகள ; கநதவார்...வார்பப - மணஙகமழும நீணட கூந்தலையுடைய மனைவியார் பொற கமணடலததின நீரினை எடுதது வார்பப ; புந்தியால்...உன்னி - மனததினால் நினைககும தியானததில "புரிதத சடையினையுடைய சிவபெருமானே இவர்" என்று அழுந்திய நினைவு கொண்டு ; ஞானபோனகர் பொற்பாதம் - ஞான அமுதுண்ட பிள்ளையாரது திருபபாதஙகளை ; ௧௨௩௩

3132. (இ - ள்) விருபபினால் விளககி - விருபபத்துடனே விளக்கி ; மிக்க... ...மேற்கொண்டு - மிகுந்த தூய நீரினைத் தலையின்மேலே தெளித்துக்கொண்டு ; பொருப்பு உறு...பின்னர் - மலை போன்ற திருமாளிகையினுள்ளும் புறத்திலும் தெளித்த பின்பு ; உருப்பொலி...பொஙகி - அழகு மிகுந்த வயிற்றினிடமாகக கொள்ளும்படி மிகுந்த ஆசை பொஙகி உட்கொணடனா ; அருப்புறு...ஆர்வததோடும - மயிர்ப் புளகாஙகிதம் கொளளும் சுற்றத்தார் மேலும் பெருகும் ஆசையுடனே தெளித்தனர். ௧௨௩௪

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3131. (வி - ரை) தாம் முன்.....நந்தும் - தாம் முன்னைநாள் செய்த பெருந தவம் இப்பொழுது மகட் கொடுக்கும பேறு பெறுதலானும், இனி, அணிமையில தாமும் ஏனை எலலவருமாகச் சிவானந்தப் பெருமுத்தியைத தலைககூட நிற்றலானும் தவத்தின் நன்மை நந்தும் என்றார். நந்தும் - பெருகும். பிள்ளையாரது பாதம் விளக்கப் பெற்றதனால் மணச் சடங்கும் நிகழ்ந்தது ; குரு பாதபூசை வழிபாடுமாயிறறு.

இனி, அதன் பலனாக முத்திப்பேறும் ஆவதாம். ஆதலான் முன்னைத் தவத்தின் நன்மை நந்தும் என்றார். முன்னைப் பெருந்தவத்தா னன்றி இவை நிகழா ஆதலின் "முன் செய் மாதவம்" என்றார்; நன்மை - நற்பயன்.

பொற்பாதம் - நம்பி - விளக்கி என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

கந்தவார் குழலினார் - நம்பாண்டார் நம்பிகளது மனைவியார். கந்தம் - உத்தம சாதிப் பெண்களின் கூந்தல் இயல்பாகவே நன்மண முடைய தென்பவாதலின் இன்னமணம் என்னாது வாளா கந்தவார் குழல் என்றார்; இவ்வாறு பொதுப்படக் கூறினும் இங்கு நீர் வார்த்து மணமகனார் பாதத்தை விளக்கும் உரிமையுடையவர் மனைவியாரே யாதலின் அதுபற்றி அவ்வா றுரைக்கப்பட்டது.

புந்தியால்...உன்னி - இச் சடங்குக்குரிய பாவனை கூறப்பட்டது. மணமகனைச் சிவனாகப் பாவித்து மணச் சடங்குகள் செய்தல் வேண்டுமென்பது விதி. தியானம் - அழுந்தியறிதல்; தியானத்தின்கண் - உன்னி என்று கூட்டுக.

பொற்கரக நீர் - பொன்னாலாகிய கமண்டல நீர், கரகம் - மூக்குடைய சிறு பாத்திரம், சிறு தாரையாக இடையறாது விழும்படி அமைக்கப்படுவது.

குழலினார் நீர் வார்ப்ப - மணமகன் பாதத்தைப் பாலுகொண்டு நீர் வார்த்து விளக்குதல் மணமகளைப் பெற்ற தாயார் செய்வது மரபு. ஈண்டு மணமகனார் என்றதனோடு அமையாது வழிபடு குருவாகவும் கொண்டமையால் நம்பாண்டார் மனைவியார் கரகநீர் வார்க்க இச்சடங்கினைத் தாமே செய்தனர் "எம்முடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்றோம்; வம்மின" (3065) என முன்கூறியது காண்க.

உன்னி - விளக்கி - பூரித்தார், தெளித்தனர் - என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 1233

3132. (வி - ரை) மிக்க புனித நீர் - ஞானபோனக ராதலின் பிள்ளையாரது பாதம் விளக்கிய நீர் மிகுந்த தூய்மையுடையது என்பதாம். அந்த நீர் என்க

தலைமேற் கொண்டு - தலையின்மேற் றெளித்துக்கொண்டு; உயிர் வாழும் மாட மாகிய உடலின் உத்தமாங்கமாகிய தலையின்மேல் முதலில் தெளித்துப் பின்னர் அவ்வுடல் வாழ்தற்கிடமாகிய மாடத்தின் உள்ளும் புறம்பும் தெளித்தனர்.

உருப்பொலி...பூரித்தார் - உடலின்மேற் றெளித்தல் புறங் கூறினார், மாடத்தின் உள்ளே தெளித்தல்போல உடலின் உள்ளே நிறைத்தல் ஈண்டுக் கூறினார். பூரித்தல் - நிறைத்தல்; உருப் பொலிதல் - அழகுடைத்தாதல். உடம்புக்கு அழகாவது தூய பண்டங்களால் நிறைவாதல்.

உவகை பொங்கி - பிள்ளையாரது திருப்பாதம் விளக்கிய தூயநீரினைப் பெற்ற பேற்றினைக் கருதி மிக மகிழ்ந்தனர்; உவகை பொங்கித் - தெளித்தனர் என மேலும் உரைக்க நின்றது.

கிளைஞர் - சுற்றத்தார், உபலக்கணையால் உயிர்ச் சுற்றமாகிய தொண்டர்களையும் குறித்து நின்றது.

அருப்பு - அரும்பு என்பது அருப்பு என வலிந்து நின்றது. அரும்புதல் - மயிர் முகிழ்த்தல், பெருமகிழ்ச்சியும் அன்பும் காரணமாக மயிர்முகிழ்த்தல் உளதாம். 1234

3133. பெருகொளி ஞான முண்ட பிள்ளையார் மலர்க்கை தன்னில்
மருவுமங் கலநீர் வாசக் கரகமுன் னேந்தி வார்ப்பார்
தருமுறைக் கோத்தி ரத்தின் றங்குலஞ் செப்பி "யென்றன்
அருநிதிப் பாவை யாரைப் பிள்ளையார்க் களித்தே" னென்றார்.

(இ - ள்) பெருகொளி...தன்னில - பெருகும ஒளியினையுடைய பிள்ளையாரது தாமரை மலர்போன்ற கையில ; மருவும...வார்ப்பார் - பொருந்திய மணமுடைய நீர் நிறைந்த கமண்டலத்தினை முன ஏந்தி அதன மங்கல நீரினை வார்ப்பாராகி ; தரு முறை...செப்பி - தரும முறையிலே தமது கோத்திரத்திலே தமது உரிய பிரவர முத லிய குலப பெயரினையும எடுத்துச சொலலி ; "என்றன...அளித்தேன" என்றார் - "எனது அரிய நிதியாகிய பாவைபோன்ற மகளாரைப் பிள்ளையாருக்கு அளித்தேன்" என்று (விதிப்படி மும்முறை) சொன்னார்.

(வி - ரை) பெருந்து ஒளி ஞானம் - சிவஞானம் ; "ஐந்துமா றடக்கி யுள்ளா ருருமபெருஞ் சோதி யாலும" (780) ; வலிய அகவிருளாகிய மூலமலத்தையும போக்கும வலிமையுடைமையால பெருகு ஒளி என்றார் ; தனக்கு மேறபட்ட ஒளி யிலலாமையும் குறிப்பு.

கையில் - நீர் வார்ப்பார் - அளித்தேன் - என்றார் - என்க ; கன்னியைக் கொடுத்தேன் என்று சொல்லி, நீர் வார்த்து மணமகனகையிற கொடுத்தல மரபு ; கன்யா தத்தம எனபது வடமொழி வழக்கு. "நீ ரெடுத்தவ னங்கையிற பெய்தான்" (திருவிளை - விருத் - குமா - 8) ; "நேசமோ டளித்தே னென்று...வாசநல் லுதக முயத்தான" (கந்தபு - திருக்கல - 70).

தருமுறைக் கோத்திரத்தில் தங்குலம் செப்பி - தருமுறை - வழிவழி ; அந்தணா மரபின பரமபரை. கோத்திரம் - மரபின உட்பிரிவு ; குலம் - கோத்திரத்தின் உட் பிரிவு ; பிரவரம் எனபர். இதனுடன சூத்திரம, வேதசாகை முதலியனவும சொல வா. "மற்ற வன்குடி கோத்திரஞ் சூத்திர மரபும், முற்றறிந்து" (விருத்தகு-பட - 11). செப்பி - எல்லாருமறிய எடுத்துச சொலலி.

என்றன் அருநிதிப் பாவையார் - மகளார் ; அருநிதிப் பாவையார் - தாம் அரு நிதியாகக் கொண்டு போற்றிய பாவைபோலவார் ; பாவை போலவாரைப் பாவை என்றதுபசாரம. "பந் தணைவிரற பாவை" (தேவா).

அருநிதிப் பாவையார் - அருநிதியாகிய அணிகளை அணிந்த என்ற குறிப்புமாம ; சாலங்கிருத கன்னிகாதானம் எனபது வடமொழி வழக்கு. "தேயு நுண்ணிடைக் கன்னியைச் செம்பொனாற புனைந்துக, காயு மாரழல் முன்னரக் காளைக்குக் கொடுத் தான்" (திருவிளை. புரா - விருத்த - பட - 12).

பாவையார் - இவர் பெயர் ஸ்தோத்திர பூர்ணம்பிகை என்று திருநல்லூரப் பெருமணத்தில் வழங்கப்படுகின்றது.

பிள்ளையார் என்றதனால் அவரது கோத்திரம முதலிய முறையும உணர்த்தியவா றுயிற்று. 1235

3134. நற்றவக் கன்னி யார்கை ஞானசம் பந்தர் செங்கை
பற்றுதற் குரிய பண்பிற் பழுதினற் பொழுது நண்ணப்
பெற்றவ ருடன்பி றந்தார், பெருமணப் பிணைய னாரைச்
சுற்ற முன் சூழ்ந்து போற்றக் கொண்டுமுன் றுன்னி னார்கள்.

(இ - ள்) நற்றவக் கன்னியார் கை ..நண்ண - நல்ல தவத்தையுடைய கன்னியா ரது கையினைத் திருஞான சம்பந்தர் தமது செங்கையால் பிடித்தற்கு உரிய பண்புடைய குற்றமற்ற நல்ல வேளை வந்து பொருந்த ; பெற்றவருடன் பிறந்தார் - கன்னிகை யைப் பெற்ற தாய் தந்தையரும், உடன்பிறந்த சகோதரர்களும ; பெருமணப் பிணை அன்னாரை...துன்னினார்கள் - பெருமை தங்கும் மணப்பெண்ணாகிய மான்போன்ற

கன்னிகையாரைச் சுற்றத்தார்கள் முன் சூழ்ந்து போற்ற அழைத்துக்கொண்டு மண மகனாராகிய பிள்ளையார் முன்னே கொண்டுவந்து சேர்ந்தனர்.

(வி - ரை) நற்றவக் கன்னியார் - முன் "நற்பெருந் தவத்தி னீன்ற நலம் படைத் தெழுந்த" (3120) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

கன்னியார் கை ஞானசம்பந்தர் செங்கை பற்றுதற்குரிய பண்பிற் பழுதினற் பொழுது - "பாணிக்கிரகண முகூர்த்தம்" என்பது வடமொழி வழக்கு, "இறைவளைச் செங்கை பற்ற" (3138), "அணிமலர்க் கைப்பிடித்து" (3139); "காதலியைக் கைப்பற்றிக் கொண்டு" (3150) என்று இதனை மேலும் கூறுதல் காண்க; திரு மங்கலயதாரணம் என்னும் தாலியணிதலாகிய சடங்கு பின்னாளில் தொடங்கியதென் றும், "காரணம்" எனப்படும் வேள்விச் சடங்குடனே கூட்டக் கொண்டதற்குரிய மரபி னோ கொடுப்பக் கொள்ளும் நிலை, மாலைசூட்டலும் (பாணிக்கிரகணம்) கைப்பிடித்த லும் பொரியட்டி எரிவலம் வருதலுமாகிய இவற்றுடன் நிறைவாகுமென்றும் கூறுவா மச்சபுராணத்தில் முதலில் மங்கலநாணணிதல் சொல்லப்பட்டதென்றும் கூறுவர். "கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்த வாற்றான், முற்றமங் கலநாண் சாத்தி முழுதுல கீன்றாள் செங்கை, பற்றினன் பற்றி லார்க்கு வீட்டருள் பரம யோகி" (திருவிளை. புரா - திருமண - 185) என்றும், "செங்கமலத்தாற் றிருந்தயி றறுறி, மங்கையி னீந்திட வாண்டகை கொண்டே, மங்கல நாணை மகிழ்ந்தன மாத்து, நங்கை முடிக்கொரு நறுந்தொடை சூழ்ந்தான்" (கந்த - தெய்வ. திருமணம் - 247) என்றும், இவ்வாறு வருவன பிற்காலத்தில் "ஐயர் யாத்தனர் கரணம் என்ப" என்ற நிலையில் கற்பியல்வழி நிற்கும் பொருட்டு உலகை வழிப்படுத்தியவை. வள்ளியம்மை திருமணத் தில் "குறவர் கோமான், கந்தவேள் பாணி தன்னிற் கன்னிகை கரத்தை நல்கி, நந்தவ மாகி வந்த நங்கையை நயப்பா யென்று, தந்தனன் கொள்க வென்று தண்புனற் றாரை யுய்த்தான்" (வள்ளி திருமண - 199), "நாரதன்...அங்கியோடு, மற்றுள கலனுந் தந்து வதுவையின் சடங்கு நாடி, அாரம தடையா வண்ணம் மருமறை விதியாற் செய் தான்" (200) என்றும் வருவனவற்றுள் தாரையுய்த்தலும் அங்கி வேள்வியுடன் வேதச் சடங்குமே பேசப்பட்டவை. வள்ளியம்மையார் திருமணம் களவியலின் பின் நிகழ்ந்த கற்பியல் நெறி ஒழுக்கங் காட்டுவது போலும். இச் சடங்குகளும், கற்பியல் மண ஒழுக்க முறைகளும் காலந்தோறும் தேயந்தோறும் வருணந்தோறும் மாறுபட்டும் நிகழ்வன என்பது தொல்காப்பியத்துள் நச்சினார்க்கினியருரைத்தவாற்றானும் பிறவாற்றா னும் விளங்கும்; இதுபற்றிய ஆராய்ச்சிகள் பெரிதும் மாறுபாடுடையனவும் பூராயத்தும் இடமாய் விளைதலின் முன்கூறிய குறிப்புக்களை மனங்கொண்டு ஆய்ந்தும் அமைதியும் கொள்ளத்தக்கன என்பது.

கை பற்றுதற்குரிய பண்பிற் பழுதி னற்பொழுது நண்ண - இந்நாளில் மங்கலநா ணணிதலுக்கு நல்லவேளை பார்ப்பதுபோல, முன் கூறியவாற்றால் காணும் அந்நெறி முறையில் கைப்பிடித்தலுக்கு (பாணிக்கிரகணத்துக்கு) நல்லவேளை பார்த்தல் வழக்கு, பழுதில் நற்பொழுது - சோதிட நூல்வழி வேளையில் வரும் குற்றங்கள் இல்லாகிய நல்ல நேரம்; நன்முகூர்த்தம் என்ப. "அருக்கன்முதற் கோள்களைத்து மழகியவுச் சங்களிலே, பெருக்கவலி யுடனிற்கப் பேணியநல் லோரையெழ" (1920) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. பழுதில் - உயிர்களின் பழுதாகிய மலக் குற்றத்தை இல்லையாகச் செய்தற்குக் காரணமாகிய என்று பிறசரித விளைவுபற்றிய குறிப்பும் காண உரைத்தலுமாம்; கை பற்றுதற்குரிய பண்பில் என்றது திருமணத்தின் நிலை பற்றியும், பழுதில் என்றது உயிர்களின் நன்மைபற்றியும் உரைத்தலுமாம்.

**பெற்றவர்...துன்னினார்கள்** - குறித்த நல்வேளையில் மணமகளைப் பெற்றவரும் உடன் பிறந்தாரும் அழைத்து மணவறையினுள் மணமகனாரது வலப்பக்கத்தில் அமர வைத்தல் மரபு; உரிமைபற்றி இச்செயல் பெற்றவர் - உடன் பிறந்தார்களின்மேல் நின்றது; உடன் பிறந்தார் என்றதனால் நம்பி பிள்ளையாரின் தேவியாருக்கு உடன் பிறந்தார் உளராயினர் என்பது கருதப்படும்.

**பெருமணம்** - வந்தணைந்தார்க்கெல்லாம் முத்திப்பேறு தரும் பெருமை குறித்தது; தலப்பெயராக குறிப்புமாம்.

**சுற்ற முன் சூழ்ந்து** - பெற்றவர் உடன்பிறந்தார்களே யன்றி மணமகளாரின் சுற்றத்தார் முன்சூழ்ந்து போற்ற அணைந்தனர்.

**முன் துன்னினார்கள்** - **முன்** - மணவறையாகிய ஆதிபூமியின் முன்பு.

**பிணை** - பெண்மான். 1236

3135. ஏகமாஞ் சிவமெய்ஞ் ஞான மிசைந்தவர் வலப்பா லெய்தி
நாகமா பணப்பே ரல்கு னற்றவக் கொழுந்த னாரை
மாகமார் சோதி மல்க மன்னிவீற் றிருந்த வெள்ளை
மேகமோ டிசையு மின்னுக் கொடியென விளங்க வைத்தார்.

(இ - ள்) ஏகமாம் எய்தி - ஒன்றாகும் மெய்யாகிய சிவஞானத்தைப் பெற்ற பிள்ளையாரது வலப்பக்கத்தில் பொருந்த வந்து; நாகமார்...கொழுந்தனாரை - நாகத்தின் படம்போன்ற அல்குலையுடைய நல்ல தவத்தின் கொழுந்து போல்வாராகிய அம்மையாரை; மாகமார் ..கொடியென - ஆகாயத்தின் நிறைந்த ஒளிபொருந்த நிலைபெற்று வீற்றிருந்த வெள்ளை மேகத்தினுடன் பொருந்தும் மின்னற்கொடி போல; விளங்க வைத்தார் - விளங்கும்படி அமரச் செய்தார்கள்.

(வி - ரை) ஏகமாம் மெய்ச் சிவஞானம் - என்க. மெய்ச் சிவஞானம் - என்றும் மெய்யாகிய - சத்தாகிய - அழியாத - நிலைபிறழாத - சிவஞானம்; "தங்கழல் பேணும் ஒருநெறியில் வருஞானம்" (1963), "எண்ணரிய சிவஞானம்" (1966); "தாவில் தனிச் சிவஞானம்" (1967) என்று தொடக்கத்திற் கூறியவற்றை இங்கு நினைவுகூர்க. அந்த ஞானத்தின் பயன் ஈண்டு நிறைவுபெறும் நிலையாதலின் அத்தன்மையினை முடித்துக் காட்டியவாறு; இனிப், பிள்ளையார் பெற்ற ஞானத்தின் நிலைபற்றிப் பேசுகின்ற முடிந்த இடம் இதுவேயாதலும் காண்க.

ஏகமாம் மெய்ச் சிவஞானம் - ஏகம்ஆம் - என்புழி ஆம் என்னும் ஆக்கச்சொல் உண்மை குறித்து நின்றது. "நிர்க்குணனாய் நின்மலனாய்" (போதம் - 9-2 - உதா) என்புழிப்போல; "எட்டுடு நெய்யென வுயிருக் குயிராயெங்கும் ஏகமாம் பசுபதி தாளேந்துஞ் செய்யுள்" என்றவிடத்திற்போல ஏகமாஞ் சிவமெனவே, மாற்றுமற சொற்கிடக்கை முறையே கொண்டு சிவனது மெய்ஞ்ஞானம் - சிவனையறிந் தனுபவித் தற்குரிய மெய்ஞ்ஞானம் - பெற்றவர் என்றுரைத்தலும் பொருந்தும்.

**ஞானமிசைந்தவர்** - ஞானமே திருவுருவமாகப் பெற்றவர்; ஞானம் மிசைந்தவர் என்று பிரித்துச் சிவஞானத் தின்னமுதத்தை உண்டவர் என்றலுமாம்; மிசைதல் - உண்ணுதல்.

**வலப்பால் எய்தி - விளங்க வைத்தார்** - என்று கூட்டுக; மண வேள்விச் சடங்கு நிறைவேறி எரிவலம் வருமவரை மணமகள் மணமகனுக்கு வலப்பக்கத் திருக்க வைத்தலும், அதன்பின் இடப்பக்கத்து இருத்தலும் மரபு. பெண் கோன்பிருந்து தவஞ் செய்து உரிய மணமகனைப் பெறுகின்றாள் என்பது நூல்களின் உட்கிடையாதலின்

காட்சியாதலின் அதனைக் கண்டோர் வாழ்த்துவது மரபு. இங்குக் கண்டவர்கள் அக் காட்சியிலே ஈடுபட்டு இமையிமைத்தல் கண்ணிமையாது வாழ்த்தினார்கள் என்றது அதன் மேன்மை குறித்தது.

**கண்ணிமையாது வாழ்த்தி மனிதரும் தேவரானார்** - கண்ணிமையாத தன்மை தேவர்களுக்குத்தான் உண்டு; அத்தன்மை இங்கு மனிதரும் பெற்றமையால் அவ்வளவில் தேவரானார் என்றார். மனிதர் - தேவர் என்றவை பிறப்பு வகை குறித்து நின்றன. கண் இமையாது வாழ்த்தியதனால் தாம்தாம் உயர்வு பெற்றனர் என்பது குறிப்பு. இறைவரை வாழ்த்துகின்றோர் தாமதாம உயர்ச்சியாகிய வாழ்வு பெறுதற் பொருட்டே வாழ்த்துவர் என்பதனறி அதனால் இறைவருக்கு ஓர் வாழ்வு தருவாரல்லர். "வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால், தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டி" (திருவா) என்றபடி இங்குக் கண்டோர் தாம்தாம் வாழ்வடைந்தார்கள் என்பதைக் காட்சிப்படக் கண்ணிமையாது வாழ்த்தி என்று காரணங் காட்டிச் சுவைபடக் கூறியவாறு காண்க. இவ்வாறு காணப்பெற்று வாழ்த்தியதனால் அவர்கள் எல்லாம் அழியாத சிவனுலக வாழ்வுபெறும் சரித விளைவுக் குறிப்பும் காண்க.

**நனிமிக்கக்கண்ட** - நனிமிக - ஒருபொருட் பன்மொழி; ஊன்றிக் கண்ட காட்சி மிகுதி குறித்தது. வேதநூல் கொம்பனாருமாக இருவரையும் ஆர்வமிகக் கண்டாராதலின் இருசொல் புணர்த்தி ஓதினார் என்றலுமாம்.

**நல்ல மங்கலங்கள்** - உலகில் அழியும் தன்மையுடைய ஏனையோர்க்குக் கூறும் மங்கல வாழ்த்துக்கள் உபசாரமாத்திரையாய் நின்று ஒருகாலத்து ஒழிவன. ஆனால் இங்குப் பிள்ளையாரையும் தேவியாரையும் வாழ்த்திக் கூறிய மங்கலங்கள் அவ்வாறன்றி என்றும் அழிவுறாத நித்திய சிவமங்கலமாய் நிறைவுறுதலின் நல்ல என்று பிறிதினியைபு நீக்கிய அடை தந்து அருளினார். 1238

3137 பத்தியிற் குயிற்றும் பைம்பொற் பவளக்காற் பந்தர் நாப்பண்
சித்திர விதானத் தின்கீழ்ச் செழுந்திரு நீல நக்கர்
முத்தமிழ் விரகர் முன்பு முதன்மறை முறையி னோடு
மெய்த்தரும் பெருமான் பாத மேவுமுள் ளத்தாற் செய்ய, கஉகூ

3138. மறையொலி பொங்கி யோங்க, மங்கல வாழ்த்து மல்க,
நிறைவளைச் செங்கை பற்ற நேரிழை யவர்மு னந்தப்
பொறையணி முந்நூன் மார்பர் புகரிலவண் பொரிகை யட்டி
இறைவரை யேத்தும் வேலை யெரிவலங் கொள்ள வேண்டி, கஉ௪௦

3139. அருப்புமென் முலையி னார்தம் மணிமலர்க் கைப்பி டித்தங்
கொருப்படு முடைய பிள்ளை யார்திரு வுள்ளந் தன்னில்
"விருப்புறு மங்கி யாவார் விடையுயர்த் தவரே" யென்று
திருப்பெரு மணத்தை மேவுஞ் சிந்தையிற் றெளிந்து செல்வார்,

3140. மந்திர முறையா லுய்த்த வெரிவல மாக மாதர்
தந்திருக் கையைப் பற்றுந் தாமரைச் செங்கை யாளர்
"இந்தவில் லொழுக்கம் வந்து சூழ்ந்ததே! யிவடன் னோடும்
அந்தமில் சிவன்றாள் சேர்வ" னென்னுமா தரவு பொங்க, கஉ௪உ

3141. மலர்பெருங் கிளையுந் தொண்டர் கூட்டமு மல்கிச் சூழ
அலகின்மெய்ஞ் ஞானத் தெல்லை யடைவுறுங் குறிப்பா லங்கண்
உலகினெம் மருங்கு நீங்க வுடனணைந் தருள வேண்டிக்
குலமணம் புரிவித் தார்தங் கோயிலை நோக்கி வந்தார். கஉசங

3137. (இ - ள்) பத்தியில் ... நாற்பணை - வரிசை பெற அணி செய்யப்பட்ட பசும்பொன் இழைத்த பவளக் கால்களையுடைய பந்தரின் நடுவிலே; சித்திர விதானத்தின் கீழ் - சித்திரித்த மேற்கட்டியின் கீழே, செழுந்திரு நீலநக்கர் - செழுமை பொருந்திய திருநீலநக்க நாயனார் (ஆசிரியராக இருந்து), முத்தமிழ் விரகர் முன்பு - முத்தமிழ் விரகராகிய பிள்ளையாரது திருமுன்பிலே; முதன் மறை...செய்ய - முதன்மையாகிய மறைநூல் விதிச் சடங்குகளை அம்முறையின்படியே மெய்ப்பொருளாகிய நம் பெருமானாரது திருவடிகளைப் பொருந்தும் உள்ளத்துடனே செய்ய, கஉஙக

3138. (இ - ள்) மறையொலி மலக - வேத ஒலிகள் மேன்மேலும் பெருகி ஓங்கவும் மங்கல வாழ்த்தொலிகள் மிகுந்து பெருகவும்; நிறைவளை...நேரிழையவர் முன் - நிறைந்த வளையல்களை அணிந்த அம்மையாரது செங்கையினைப் பிள்ளையார் பற்றும்பொருட்டு நேரிய அணிகளை அணிந்த அந்த அம்மையாரின் முன்னே; பொறை...வேலை - பொறையினை அணிகலனாகப் பூண்ட முந்நூலணிந்த மார்பினராகிய திருநீலநக்க நாயனார் குற்றமில்லாத வெள்ளிய நற்பொரியைக் கையில் எடுத்து வேள்வித் தீயில் ஆசிரியராகப் பெய்து சிவபெருமானைத் துதிக்கும்பொழுது, எரிவலங்கொள்ள வேண்டி - எரியை வலமாக வருவதற்காக எண்ணி; கஉச0

3139. (இ - ள்) அரும்பு ...பிள்ளையார் - அரும்புபோன்ற மெல்லிய தனங்களையுடைய அம்மையாரது அழகிய மலர்போன்ற கையினைப் பிடித்துக்கொண்டு அங்கு ஒருப்பட்ட பிள்ளையார்; திருவுள்ளந்தன்னில் ..தெளிந்து - தமது திருவுள்ளத்தினுள் "விரும்பும் பொருந்தும் புகலியர்வாழ் இடப் பொருளை யளித்திய சிவபெருமானேயாவார்" என்று திருநல்லூர்ப் பெருமணத்தினைப் பொருந்திய மனத்திலே தெளிந்தமையினாலே, செல்வார் - செல்வாராய், கஉசக

3140. (இ - ள்) மாதிர முறையால் செங்கையாளர் - மந்திர முறையினாலே உண்டாக்கி வளர்க்கப்பட்ட எரியினை வலம் வரும்பொருட்டு அம்மையாரது திருக்கையினைப் பிடிக்கும் தாமரைமலர் போன்ற செவ்விய கையினையுடைய பிள்ளையார்; இந்த...பொங்க - "அந்தோ! இந்த இல்வாழ்வாகிய ஒழுக்கத்தில் வந்து சூழ்ந்துகொண்டதே! இவளுடனே அழிவில்லாத சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்வேன்" என்னும் பேராசை மேன்மேலும் அதிகரிக்க, கஉசஉ

3141. (இ - ள்) மலர்பெரும்...சூழ - மலர்ச்சி பொருந்திய பெருங் கிளைஞரும் திருத்தொண்டர் கூட்டமும் ஆகிய இவர்களுடனே கூட. அலகில்...குறிப்பால் - அளவில்லாத மெய்ஞ்ஞானத்தின் எல்லையினை யடையவேண்டும் என்ற உட்குறிப்பினாலே, அங்கண்...நீங்க - அவ்விடத்து உலகின் எப்பக்கங்களும் தம்மைச் சார்ந்து நீங்க, உடன் அணைந்தருள வேண்டி - இவர்களுடனே அணைந்தருள விரும்பி, குலமணம்...வந்தார் - மறையவர் குலத்துக்குரிய மணத்தினைச் செய்வித்தருளிய இறைவரது திருப்பெருமணம் என்னும் திருக்கோயிலினை நோக்கி எழுந்தருளி வந்தனர். கஉசங

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3137. (வி - ரை) பத்தியின் - பத்தி - வரிசை; பத்தியில் - அன்பு மிகுதியினாலே என்ற குறிப்புமாம், "மொய்த்தசீர் பத்தி யின்பால" (72) என்றவிடத்திற் போல.

துயிற்றுதல் - கைவினைத் திறத்தினுற கோலஞ் செய்தல்.

பைம்பொற் பவளக் கால் - பசும்பொன்னு விழைத்தலுடன் பவளக்காலினையு முடைய; "சீரார் பவளங்கால்" (திருவா).

செழுந் திருநீலநக்கர் - செய்ய - என்று கூட்டுக. செழுமை - ஞானமறையினும் வல்ல தன்மை குறித்தது; "ஞால மிக்கஞான மறைப்பொருள் விளக்கிய நலத்தார்" (1831) என்றது காண்க. நீலநக்கர் - வேள்வியாசிரியராக அமர்ந்து செய்ய என்க; புரோகிதர் என்பர்; புர: - ஹித: - புரோஹித: — புர: - முன்னிலையில், ஹித: - இதஞ் செய்பவர். வடமொழி. செழுந்திரு - முத்தித்திருவையுடையும் என்றலுமாம்.

முத்தமிழ் விரகர் முன்பு - மண வேள்வியில் செய்யப்படும் சடங்கு மணமகனை முன்வைத்துச் செய்வது மரபு; அதுபோலப் பின்னர்ப் பொரிகை அட்டி எரியிடும் சடங்கு மணமகள் முன்னாகச் செய்யப்படுவது மரபாகும் என்று காட்டப்படுதலும் காண்க (3138).

முதன் மறை - முதன்மையுடைய வேதநூல் விதிச் சடங்குகள்; முதல் - முதல்வன் என்று கொண்டு முதல்வனருளிய என்றலுமாம். மறை - மறை விதிவழி செய்யும் சடங்குகளுக்கு ஆகி வந்தது. முறையினோடு - விதித்த முறைமைப்படி; முறையாக.

மெய்த்த நம் பெருமான் பாதம் மேவு முள்ளத்தால் - மெய்த்த - மெய்ப்பொருளாகிய; சிவன் ஒருவரே சத் ஆவார் என்பது வேதம். மெய்த்த - உள்ளம் என்று கூட்டி உள்ளபடியே அழுந்திய நினைவு என்றுரைத்தலுமாம்.

பாதம் மேவும் உள்ளத்தால் - இறைவரது திருவடிகளையே தியானித்த மனத்தினோடு; செழுந் திருநீலநக்கர் என்றபடி அவர் மிகத்தூயராயும் மறைவல்லராயும் சீலமுடையவராயும் இருப்பினும் சிவபோதத்தாலே காரியம் செய்யப்புகின் முக்குணங்களின் வசப்படுதலின் முறை பிறழ நேரிடுமாதலின், இறைவன் திருவடியைப் பொருந்திய மனத்தோடு செய்தின "பானுணாவி னுலுணரும் மெய்த்தவரை மேவாவினை" என்றபடி அவர் இடையூறின்றி இனிது முடித்தலைப்பர் என்று சிவனை எண்ணிச் செய்தனர் என்பதாம்.

இனி, பாதம் மேவும் உள்ளத்தராய் என்றது, இவ்வுயர்ந்த பணி செய்தால் இறைவன் திருவடிப் பேற்றினை அடையலாம் என்ற எண்ணத்தாலே செய்ய என்றலுமாம்; அவ்வாறே அடையப்பெற்றமையும் காண்க.

இனிப், பிள்ளையார் இறைவரது கழல்களல்லாது வேறொன்றினையும் பேணாத் தன்மையுடையவராதலின் அவரது வேள்விச் சடங்குகளை அத்தன்மையிலே நின்று தாமும் சிவனடி பேணிச் செய்தலவேண்டும் நியதிபற்றிப் பாதமேவு முள்ளத்தாற் செய்ய என்ற குறிப்புமாம்; சிவனியமங்களும் பூசை முதலியனவும் செய்யும்போது தமது கருவி கரணங்களை உரிய மந்திர நியாச பாவனை கிரியைகளாற் சிவாகாரமாக ஆக்கிக்கொண்டு செய்க எனனும் சிவாகம விதிகள் இங்கு நினைவு கூர்தற்பாலன. பிள்ளையாரது திருமணச் சடங்கு செய்தற்குத் தம்மைத் தகுதியுடையவராக ஆக்கிக் கொள்வது கருத்து.

இனி, இச்சடங்குகள் இங்குப் பிள்ளையாரை முன்னிலைப்படுத்திச் செய்யினும் அவை இறைவரது பாதங்களையே மேவும் என்ற உள்ளத்தோடு செய்ய என்ற குறிப்புமாம்.

இனி, இச்சடங்குகள் இறைவரது திருப்பாதத்தை அடையும் சிவப்பேறனை இத் திருமணத்தில் விரவியவர்களெல்லாம் பொருந்தவிப்பனவாகுக; சிவ நிறைவாகிய நித்திய மங்கலம் பொருந்துக என்ற கருத்துடன் செய்ய என்ற பிரசரித விளைவுபற்றிய குறிப்பும் பாவனையும் பொருந்த உரைத்தலுமாம். திருநீலகக்கர் இத்தகைய உறைப்புடைய சத்பாவனை செய்யும் நிலை வாய்ந்த பெரியோர் என்பது அவர்தம் புராணத்தால் அறிக. இவை பெரும்பான்மை திரு. க. சதாசிவ செட்டியார் அவர்களது குறிப்புக்களைத் தழுவி எழுதப்பட்டன. 1239

3138. (வி - ரை) மறையொலி பொங்கி ஓங்க - இவ்வொலி மறையவர்களும் இளைஞரும் செய்தது; மங்கல வாழ்த்து - மறையவர் மகளிரும் ஏனையோரும் செய்தது.

நிறைவளைச் செங்கை பற்ற - செங்கை - அம்மையாரது கையினை; பற்ற - பற்றும் பொருட்டு; பற்றும் நிலை கூடும்பொருட்டு; காரணப்பொருளில் வந்தது. பற்ற - பொரி - அட்டி - ஏத்தும் - வேலை - என்று கூட்டிக்கொள்க.

நேரிழை யவர்முன் - பொரிகை அட்டி - ஏத்தும் வேலை - வெண்பொரியை வேள்வித் தீயினிலிட்டு ஆகுதி செய்து உரிய மந்திர பாவனைகளுடன் இறைவரை ஏத்தும் இச்சடங்கு மணமகள் முன்பு கைப்பற்றுதல் (= பாணிக்கிரகணம்) என்னும் அந்நிலை கூடுதல் குறித்துச் செய்யப்படுவது

அந்தப் போறை அணி முந்நூல் மார்பர் - திருநீலகக்கர்

புகரில் வெண்பொரி - புதிய செந்நெல்லைப் புதிய தூய மட்பாண்டத்தில் புனித வதிகளாகிய பெண்களால் தூய்மையாக இல்லத்தில் பொரிக்கப்படல் வேண்டும் என்பது முதலிய விதிகளின்படி அமைத்த பொரியாதலின் புகரில் என்றார். புகர் - குற்றம்; பொரி - அமுதுக்கு மேலாக ஆகுதிக்குச் சிறந்த சாதனம் என்பர்.

கை அட்டி - பொரியினைக் கருவிகளினாலன்றிக் கையினால் மேலளித்து எரியில் விடுவது விதி, அட்டுதல் - அளவுபட வீழ்த்தி யிடுதல்.

இறைவரை ஏத்தும் - இச்சடங்கினை ஏற்று அதற்குரிய பயனுதவிய கைப்பற்றற்குத் தகுதியுடையவராக தன்மையினை அருளும்படி துதிக்கும், இது அந்த உரிய மந்திரங்களின் கருத்து

எரிவலங் கொள்ள வேண்டிக் - கைப்பிடித்து - ஏற்படும் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டுக

எரிவலங் கொள்ளுதல் - எரியிற் பொரியை அட்டி, மணமகன் மணமகளைக் கைப்பிடித்து வேள்வித் தீயினை ஏழுமுறை வலம் வருதல் மணச் சடங்குகளுட் சிறந்த பகுதி; இதனுடன் மணம் நிறைவாகுதல் மரபு.

செங்கை பற்றி நேரிழை யவர்முன் வந்த என்று பாடம் கண்டு போறையணி முந்நூன் மார்பர் என்றது பிள்ளையாரைச் சுட்டியதாக உரைத்து, அதற்கேற்றவாறு உரை முடிபுகொண்டது இராமநாத செட்டியார் குறிப்பு.

போறையணி - போறை - சாந்தம், பொறையினையே அணிகலமாக மேற்கொண்டொழுகுதல் முனிவர்களின் தன்மை. 1240

3139. (வி - ரை) அரும்பு - அரும்பு போன்ற; அரும்பு என்பது அரும்பு என நின்றது அரும்புபோன்ற முலை என்றது மணமகளின் பன்னிரண்டு வயதாகிய இளம்பருவம் குறித்தது; "பொடிக்கின்ற திலமுலை" (திருக்கோவை) என்ற கருத்துக் காண்க. அரும்பு மென்முலையினார் - மணமகளாராகிய அம்மையார்.

ஏற்படும் - எண்ணத்திட் கொண்டு அதற்கேற்ப முயலும்.

**ஒருப்படும் - உள்ளந்தன்னில் - தெளிந்து** - என்று கூட்டுக; இதுவரையில் தாம் இசைந்திருந்து செய்த மணவேள்விச் சடங்கினையே பற்றி எரிவலங்கொள்ளு தலையும் மேற்கொண்டு எண்ணி ஒருப்பட்டு அதற்காகத் தேவியாரது கையினைப் பற்றிய பிள்ளையாரது திருவுள்ளத்தில் அந்நிலையில்-அக்கணத்தில் - திருவருளால் ஒரு கருத்துத் தோன்றித் தெளிதல் நிகழ்ந்தது என்பதாம். அக் கருத்தாவது "இங்கு எரிவலம் வர ஒருப்பட்டு எழுந்து கைப்பற்றியது மந்திர வேள்வித் தீயாகி யிங்கு முன் காணப்பட்ட எரி; ஆனால் அதற்கேற்ப விருப்புறும் எரியாவார் சிவபெருமானே யாவர் என்றதாம்; மேல்வரும் பாட்டுப் பார்க்க.

**விருப்புறும் அங்கி ஆவார் விடையுயர்த்தவரே** - "எரியலா லுருவ மில்லை யேறலா லேற லில்லை" (தேவா) என்றபடி. அங்கி - எரி - இறைவரது திருமேனி (மண் - நீர் - தீ - கால் - வான் - ஞாயிறு - மதி - உயிர்); "நிலநீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்" (திருவா) என்றவாறு மண் முதலிய எட்டும் அட்டமூர்த்தம் எனப்பட்டு இறைவரது திருமேனிகளாம். ஆனால் அவற்றுள் எரி சிறந்தது; என்னை? மண்ணும் நீரும் தாழ்ந்தவை; காற்றும் விசும்பும் கண்ணாற் காணப்படாதவை; ஞாயிறு-மதி இவற் றுள் இறைவரது உருவம் உள்ளுறையாய் நிலவுவதன்றி வெளிப்படக் காணப்படுத லில்லை; எரியிலே சிறப்புறக் காணப்படும். அக்கினி சொரூபன் உருத்திரன்; அவரே சங்காரகர்த்தாவும் மீளச் சிருட்டிகர்த்தாவுமாவர்.

**விருப்புறு** - இனி, இங்கு எரி இறைவரது திருமேனியேயாவது. இறைவர் இத் திருமேனியினுள்ளே பாலில் நெய்போல விளங்காது மறைந்து நிற்பர்; விரும்பி வெளிப்பட நிற்குமிடம் குருவடிவும் சிவாலயமும் திருவேடமும் ஆகிய இவைகளே யாம் என்ற உண்மைநூற் கருத்தின் குறிப்பும் காண்க; தாம் விரும்பும் என்றும், உலக முய்வதனையே விரும்பும் என்றும் உரைக்கவும் நின்றது.

**திருப்பெருமணந்தை மேவும் சிந்தையிற் றெளிந்து** - திருப்பெருமணத் திருக் கோயிலினை மேவுஞ் செயலைத் தெளிந்து என்பது; **மேவும்** - மேவும் செயல்; செயல் என்பது சொல்லெச்சம். **தெளிந்து** - தமது திருவுள்ளத்தில் தெளிவு கொள் ளப்பெற்று: இது திருவருட்குறிப்பினு லாகியது.

**திருப்பெருமணத்தை மேவும்** - இறைவர் எங்குமுள்ளவர்; எரியினிற் காண வேண்டில் இங்குத்த தியானம் மந்திரம் கிரியை மூலமாக வரச்செய்து வளர்க்கப்பட்ட மணவேள்வித் தீயினிடத்திலும் உள்ளார்; எனின் பிள்ளையார் "அங்கியாவார் விடை யுயர்த்தவரே" என்று திருப்பெருமணக் கோயிலுக்குச் சென்றதென்னையோ? எனின், பகுப்பின்றிச் சட சித்துக்கள் எங்கணும் பரமேசுரனெனக் காணடல் மெய்யுணர்வுடை யார்க்குப் பொருத்தமுடைத்தாயினும் அவ்விறைவன் குரு இலிங்கம் சங்கமம் என்ற மூன்றிடங்களில் பிரகாசமாய் விளங்கி நின்றே மற்று அல்லாத இடத்து அப்பிரகாச மாய் நிற்றலால் திருக்கோயிலினுள்ள திருமேனியைப் பற்றி வழிபடல் சிறப்புடைத் தாம். "அகண்டமுந் தைவமே, (யாயினும்) அதுதுவிதி! அனபிறஞெழு" (போதம் - 12-4) (சடசித்துக்கண் முழுவதும் அத் தேவனது வடிவேயாயினும் அவற்றுள் அன்பு விளையுமிடத்தில் வழிபடுவாயாக; அவ் வத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடை யோய்! - மாபாடியம்) என்று ஆணையிட்டமை கருதுக; பசுவின் உடல் முழுதிலும் பால் நிறைவுற்றிருப்பினும் முலையினிடத்து விம்மி ஒழுகுவதுபோலத் திருக்கோயிலு ளிருக்குந் திருமேனியின் அன்றி வெளிப்பட அருளுமாறில்லை யாதலின் அடிப்பட்டுப் அன்பு மற்றிடத்து விளையாது என்ற உண்மை காண்க.

இனி, ஈண்டு மந்திரமுறையா லுய்த்த வேள்வித் தீயில் இறைவன் அக்கினியில் வெளிப்பட்டது உண்மையே யாயினும், விறகில் உள்ள தீயானது கடைந்தபோது விளங்குவதாய் அல்லுழி விளங்குவதன்று; அதுபோல, அதுவேதானுய்க் காணும் ஆற்றலில்லாதவர்க்குத் தம்மால் அறியப்பட்டதொரு மந்திர சாந்நித்திய மில்லாதவழி ஆண்டு விளங்காதுநின்று அம் மந்திர சாந்நித்யத்தால் விளங்கித் தோன்றும் பொருளாம். அவ்வாறன்றி அதுவேதானுய்க் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு எப்போதும் அப்படியே விளங்கித் தோன்றுவான் இறைவன்

இங்குப் பிள்ளையார் அவ்வாறு உண்மை முனைத்தவ முடையாரன்றோ? எனின், அஃதுண்மையே! பிள்ளையார் உலகில் வந்து செய்தருளியவை யெல்லாம் அத்தவ வலிமை பெறாத உலகினர்பொருட்டே யன்றித் தம்பொருட்டன்று என்பது நினைவு கூர்தற்பாலது. அன்றியும், இங்கு வளர்த்த வேள்வித் தீயானது இத்திருமணத்தின் பொருட்டுச் சங்கற்பித்து ஆவாகன முறையால் "வெளிப்பட வருக" என்று அழைத்துக் கொள்ளப்பட்டும், பின்னர் உத்தியாபன முறையால் "மறைந்து நிற்க" என ஒடுக்கம் செய்து எழுந்தருளச் செய்யப்பட்டும் நிகழ்வது; திருக்கோயிலில் அவ்வாறன்றி நித்திய சாந்நித்ய விளக்கமாய் இறை வெளிப்பட வீற்றிருத்தலும் கருதுக. பிள்ளையார் இப்போது மேற்கொண்ட செயல் ஈண்டுச் சங்கற்பித்த மணவினைவாதலன்று; நித்திய மங்கலமாக சிவ நிறைவின்உள் அனைவரையும் புகச் செய்து தாமும் எழுந்தருளும் செயலாதலின் அதற்கேற்ற இடம் மணத்தின் பொருட்டு வளர்த்த தீயினன்றித் திருப்பெருமணக் கோயிலேயாம் என்பதுமாம்.

அன்றியும், "எண்ணிறந்த கடவுளருக் கிடும்உணவு கொண்டேகும், வண்ண எரி வாயின்கண் வைத்ததென" (796) என்றபடி இங்கு மந்திர முறையால் உய்த்த வேள்வித் தீயானது தன்பால் உய்த்த ஆகுதிகளை உரிய தெய்வங்களிடம் கொண்டு செலுத்தும் வழியாவதன்றி மற்றில்லை என்பதும், இது பிள்ளையார் பணியில் நிற்கும் தகுதியுடையதென்பதும் கருதுக. "சுடர், பைய வேசென்று பாண்டியற் காகவே" என்ற பதிகக் குறிப்பினையும் இங்குவைத்து நினைவுகூர்க.

இக்குறிப்புக்களெல்லாம் பெற, மேல்வரும் பாட்டுக்களில் "மந்திர முறையா லுய்த்த வெரிவல மாகக் கைபற்றும் செங்கை யாளர்" (3140), "ஞானத்தலைவரை யடைவுறுங் குறிப்பால், நிறையும் கூட்டமும் சூழ - உடன் அணைந்தருள வேண்டிக் கோயிலை நோக்கி வந்தார்" (3141) என்று வருவனவும், பிறவும் காண்க.

தெளிந்து - இத்தெளிவு முன் ஆரும் பெறாத அறிவினால் ஆயது எனக. தெளிந்த வழிச் செயல் நிகழ்ந்தமையும் காண்க.

சேல்வார் - செல்வாராகிக - கோயிலை நோக்கி வந்தார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க (3141). 1241

3140. (வி - ரை) மந்திர முறையால் உய்த்த எரி - என்றதனால் திருக்கோயிலினுள் விளங்கும் திருமேனி அவ்வாறன்றி நித்தியமாகிய எரி என்றது குறிப்பு.

வலமாக - கையைப் பற்றும் - மணவினைச் சடங்கின் பொருட்டு வலம் வருதற்காகக் கைப்பற்றிய. மாதர் - மணமகளாராகிய அம்மையார்.

திருக்கை - பிள்ளையாரால் பற்றப்பட்டு அவரது உரிமைத் தேவியாராக ஆகும் நிலையினைத் தந்த பெருமை குறிக்கத் திருக்கை என்றார்.

"இந்த...சேர்வன்" என்னும் ஆதரவு - இந்த - சிவஞான நெறியினுக்கு மாறுபட்டுத் தாழ்ந்த இதை என்றது குறிப்பு. பிள்ளையாரது வாழ்வு எல்லாவற்றுக்கும்

மேலாகிய சிவஞான ஒழுக்கமாம்; இங்கு நிகழ்வுறும் மணம் என்பது இல்லறத்தின் பாற்பட்டு ஆச்சிரம நிலைகளுள் ஒன்றாய் வருவது. "புகலு மாச்சிரம வறத்துறைக ளவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும் அருங்கலைகள் பல தெரிந்தும்...வேத சிரப பொருளை மிகத் தெளிந்தும் சென்றாற் சைவத் திறத்தடைவர்: இதிற் சரியை கிரியா யோகம் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" (சித்தியார் - 8-11) என்பது ஞானநூல் முடிபு. பிள்ளையார் மேற்கூறியவற்றுள் இறுதியிற் கூறிய சிவ ஞானத்தின் நிறைவு பெற்றுச் சிவனடி மறவாப் பான்மையினர்; உலகுக்காக வந்தவத ரித்தவர்; ஆதலின் ஏனையோர் போலப் பினனேகநிச் சென்று பிறவிக்கேதுவாகிய இல்லற ஆச்சிரமம் புக ஒருப்படுவரோ?; மணம் முற்றினால் இல்லறம் வரும்; அது வரின் மக்கட்பேறு வேண்டப்படும்; அது கூடின் உலகின் எல்லாப் பாசங்களும் கூடும்; ஏடணைகள் என்ற மூன்றும் சூழும்; இவ்வாறு மாயாகாரியக் கூட்டமாகிய ஒழுக்கங்கள் தம்மைச் சூழத் தகாதனவாதலின் தகாத இந்த என்பதாம்.

**வந்து சூழ்ந்ததே** - இல்லொழுக்கச் சூழலின் தொடக்கமாகிய மணம் இன்னும் நிறைவு பெறவில்லை யாயினும் சூழ்ந்தது என்று இறந்தகாலத்தாற் கூறியது விரைவும் உறுதியும் பற்றி.

**சூழ்ந்ததே!** - சுற்றமுறு பெரும்பாசத் தொடர்ச்சிவிடு நிலைமையராய்ப் பிள்ளை யார் திருமணத்திற் கிசையாது மறுப்பப், பின்னும் கேட்ட சுற்றத்தார்க்கு மறை வாழ வும், அந்தணர் ஒழுக்கம் பெருகவும், உலக நிலையில் மறைவழாது குல ஒழுக்கத்தினை நடத்திக் காட்டவும் திருவுள்ளங் கொண்டு இசைந்தாராதலின், அவ்வாறு வைதிக ஒழுக்க நெறியினை நடத்திக் காட்ட இந்த மணமிசைந்தாலும் அஃது அதனோ டமைந்துவிடாது முன் கூறியவாறு உலக மாயச் சூழலாகச் சூழ்ந்து விடுமன்றே! என்பது.

**இவள்தன்னோடும் சிவன்றாள் சேர்வன்** - இவள் - கைப்பிடிக்கும் முதன்மை யான சடங்கு நிறைவேறிவிட்டபடியால் ஒருவகையால் மனைவியாகிய நிலை பெற்ற இவள்; மற்றொரு முக்கியமான முடிவாக நிறைவுறும் சடங்காகிய (சத்தபதி) எரிவலம் வருதல் நிகழாமையின் ஒருவகையால் மணநிறைவு பெறாவிடினும் உரிமைப்பாட்டினாலே இவளுடனே என்றபடி.

**சிவன் தாள் சேர்வன்** - "ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" (சித்தி) என்ற படி சிவஞானம் பெற்ற பயனை அடைவேன்; இவ்வுலகில் வந்த காரியங்களாகிய பரசமய நிராகரிப்பும் திருநீற்றி னாக்கமும் நிகழ்ந்து நிறைவாகிவிட்டமையால் இவ் வாறு எண்ணியருளினார் என்பது. "பவமற என்னை முன்னா ளாண்டவப் பண்பு கூட" (3142) என்றும், "உன் பாதமெய்க் நீழல் சேரும் பருவமீது" (3143) என்றும் மேல் வருவன காண்க. **ஆதரவு** - அன்பின் முதிர்ந்த உள்ளக் கிளர்ச்சியாகிய ஆசை.

**இவள்தன்னோடும்** - பெண் பிறவிக்கு வீடில்லை என்று கூறும் சமணர் கொள்கையி னால் உலகுக்கு நேர்ந்த துன்பத்தை ஒழிக்கவே பிள்ளையார் உலகிற் போந்தனர் என் றும், அவ்வாற்றால் அவர் பெண்ணை வெறுத்துத் தாம்மட்டும் சிவனருள் சேர ஒருப்பட மாட்டார் என்றும், பிறவாறும் நுணுகி விசேட ஆராய்ச்சி செய்வாருமுண்டு; அவை யெல்லாம் பிள்ளையாரது சரிதத்தொடு பொருந்தாமை யறிக; "இம் மண்ணில வந் தோர் ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக" (3146) என்பதனால் பெண் ஆண் என்ற பாகுபாடு எதுவுமின்றிப் பகுவ நிலை ஒன்றே கருத்தாகக் கூறுதல் சிந்திக்க. இந்த "இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே" என்றதனையும் மறந்துவிடலாகாது.

3141. (வி - ரை) **மலர்...சூழ** - அடைவுறும் குறிப்பால் - என்று கூட்டுக; சுற்றத்தாரும் தொண்டர்களும் ஆகிய இவர்களெல்லாருடனே கூட எல்லையினைச்

சேர்தல் வேண்டுமென்ற திருவுளக் குறிப்பினாலே என்க; மலர்தல் - மன மகிழ்தல்.

அலகில் மெய்ஞ்ஞானத் தெல்லை அடைவுறும் - அளவுபடாத மெய்ஞ்ஞான மாவது சிவஞானம்; அதன் எல்லையாவது அதன்மேல் விளங்கும் சிவானந்த நிறைவு. சிவனுலகம். "உலகுய்ய நடமாடும் எல்லையினைத் தலைப்பட்டார்" (1075); "நல சில கலையின்பொருட் கெல்லையாடுங் கழலே" (1220) என்றவை காண்க. குறிப்பால்-திருவருட் குறிப்பினாலே தோன்றிய தமதுள்ளக் குறிப்புக் காரணமாக.

உலகின் எம்மருங்கும் நீங்க உடனணைந் தருள-தாம் ஒரு பற்றுமின்றிச் சீவன் முத்தநிலையிலிருந்தாரேனும் உலகத் தீமை நீக்கி நன்னெறி காட்டி உய்வித்தற் பொருட்டுத் திருவருளால் வந்தாராதலின் அந்த அளவில் கொண்ட உலகத் தொடர்புகள் எல்லாமும் நீங்கிச் சிவனடியே மறவாத நிலையில் சிவனுடன் அணைய விரும்பி கிளையும் - கூட்டமும் - சூழ - நீங்க - உடனணைந்தருள வேண்டி என்று கூட்டியுரைத்தலுமாம்.

குலமணம் புரிவித்தார் - அந்தணரது மறையொழுக்கத்தை உலகிற் காட்டும் பொருட்டு அக் குலத்துக்கேற்ற மண ஒழுக்கத்தை மேற்கொள்ளும் இசைவு வரக் கூட்டுவித்தருளிய இறைவர் என்பது; தம் செயல் என்ப தொன்றுமின்றி எல்லாம் இறைவர் செயலேயாகக் காண்பது பிள்ளையாரது நிலையாதலின் தாம் மண இசைவு கொண்டதனை இறைவர் தந்த செயலையாகக் கொண்டனர் என்க, "அவனே தானே யாகிய வந்நெறி, ஏக னாகி யிறைபணி நிற்க" (போதம்) என்ற ஞான நூற் றுணிபினவழிக் கண்டுகொள்க. 2148

8142. சிவனமாந் தருளுஞ் செல்வத் திருப்பெரு மணத்தை யெய்தித்
தவநெறி வளர்க்க வந்தார் தலைப்படுஞ் சார்பு நோக்கிப்
"பவமற வென்னை முன்னா ளாண்டவப் பண்பு கூட
நவமலர்ப் பாதங் கூட்டு" மென்னுநன் னுணர்வு நண்ண, ௧௪௪

3143. காதலமெய்ப் பதிகங் "கல்லூர்ப் பெருமண" மெடுத்துக் கண்டோர்
தீதுறு பிறவிப் பாசந் தீர்த்தல்செம் பொருளாகக் கொண்டு
"நாதனே! நல்லூர் மேவும் பெருமண நம்ப னே!உன்
பாதமெய்ந் நீழல் சேரும் பருவமீ" தென்று பாட, ௧௪௯

3144. தேவர்கள் தேவர் தாமுந் திருவருள் புரிந்து "நீயும்
பூவையன் னாளு மிங்குன் புணர்ச்சியின் மணத்தில் வந்தார்
யாவரு மெம்பாற் சோதி யிதனுள்வந் தெய்து" மென்று
மூவுல கொளியால் விம்ம முழுச்சுடர்த் தாணு வாகி, ௧௪௬

3145. கோயிலுட் படமே லோங்குங் கொள்கைபாற் பெருகுஞ் சோதி
வாயிலை வகுத்துக் காட்ட, மன்னுசீர்ப் புகலி மன்னர்
பாயின வொளியா னீடு பரஞ்சுடர்த் தொழுது போற்றி
மாயிரு ஞால முய்ய வழியினை யருளிச் செய்வார், ௧௪௭

3146. "ஞானமெய்ந் நெறிதான் யார்க்கு நமச்சிவா யச்சொ லா"மென்
றானசீர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை யங்கண்
வானமு நிலனுங் கேட்க வருள்செய்"திம் மணத்தில் வந்தோர்
ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக!" வென்ன, ௧௪௮

3147. வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்புகா ணாத ழுந்தி
யுருவெனுந் துயரக் கூட்டி னுணர்வின்றி மயங்கு வார்கள்
திருமணத் துடன்சே வித்து முன்செலுஞ் சிறப்பி னாலே
மருவிய பிறவி நீங்க மன்னுசோ தியினுட் புக்கார். கஉசகூ

3142. (இ - ள்) சிவனமர்ந் தருளும...எயதி - சிவபெருமான் விருமபி வீற் றிருந்து உயிர்கட் கருள்புரியும் செல்வ நிறைநத திருபபெருமணக கோயிலினுள சென்று சேர்ந்து; தவநெறி...நோககி - தவநெறியினை வளர்ப்பதறகென்றே திரு வவதரிததவராகிய பிளளையாா உலகக காட்சி நீஙகிய முததி நிலையிலே சார்வதற்குக காரணமாகிய திருவருட் குறிபபினைக கணடு; பவமற...கூட - பிறவியில வாராது என்னை முனனைநாளில் தமது திருவடியில ஆளாகக கொண்ட அததன்மைககுப பொருந்த; நவமலர்...நண்ண - புதிதின் அலர்நத தாமரைமலர் போனற திருவடியை அடைவிக்கும் என்னும மெயயுணர்வானது திருவுள்ளததில பொருநத; கஉசஉ

3143. (இ - ள்) காதல்...எடுதது - பெருவிருப்பு மேறகொணட மெயத திரு வாக்காகிய திருப்பதிகத்தினைக "கல்லூாப பெருமணம" என்று தொடஙகி; கண் டோா...கொண்டு - அஙகு அத திருமணததைக கணடவர்களது தீஙகுடைய பிறவிக கேதுவாகிய மலமாயை கனமஙகளைத தீாபபதனைச செமமைப பொருளாகத திருவுளம பற்றி; "நாதனே...ஈது" என்று பாட - "இறைவரே! திருநல்லூரில் பொருநதிய திருப்பெருமணக் கோயிலின்கண் எழுந்தருளிய நம்பரே! உமது திருவடிகளாகிய மெய்ம்மை பொருநதிய நீழலினை அடையும் பருவம் இதுவேயாம்" எனறு பாடி யருள, கஉசங

3144. (இ - ள்) தேவர்கள்...புரிந்து - தேவாகளுக்கெல்லாம் தலைவராகிய இறைவரும் திருவருள் செய்து; "நீயும்...எய்தும்" என்று - "நீயும் பூவைபோன றவளாகிய உனது மனைவியும், இஙகு உனது புணணியத திருமணததில் வநதவர்கள் எலலாரும் எம்மிடததில் இந்தச் சோதியினுள்ளாக வநது அடையுஙகள்" என்று கட டளை யிட்டருளி; மூவுலகு...தாணுவாகி - மூன்றுலகஙகளும தம ஒளியினாலே மேவிட்டு விளஙகும்படி முழுமையாகிய சுடர்விட்டெழும் சோதிலிஙகமாக நிமிாநது எழுந்து; கஉசச

3145. (இ - ள்) கோயிலுட்பட...காட்ட - திருக்கோயில் தன்னகததுட்பட மேலே விரிந்து பெருகி எழும் அந்தச் சோதியினுள்ளே ஒரு திருவாயிலினையும வகுத துக் காட்டியருள; மன்னுசீர்...போற்றி - நிலைபெறற சிறபபினையுடைய சீகாழித தலைவராகிய பிள்ளையார், பரவிய பேரொளியினுலே நீண்டு விளஙகும் பரஞ்சுடராகிய இறைவரைத தொழுது துதிதது; மாயிரு...செய்வார் - மிகப் பெரிய உலகததின்கண உள்ள ஆன்மாக்கள் உய்யும் வழியினை அருளிச்செய்வாராகி; கஉசரு

3146. (இ - ள்) "ஞான...சொலாம்" என்று-மெய்யினையுடைய ஞானநெறி தான் எல்லாருக்கும் "நமச்சிவாய" என்னும் திருவைந்தெழுததாகிய மொழியேயாகும என்று; ஆனசீர்...அருள் செய்து - ஆககம் பொருந்திய சிறப்பினையுடைய நமச் சிவாயத் திருப்பதிகத்தினை அவ்விடத்திலே விண்ணவரும் மண்ணவரும் கேட்கும்படி அருளிச்செய்து; "இம்மணததில்...புகுக" என்ன - "இந்த மணததில் வந்தவர்கள் எல்லாரும் இழிவுபடுத்தும் பிறவி நீஙக இதனுள புகுவீர்களாக" என்று ஆணையிட் டருள, கஉசகூ

3147. (இ - ள்) வருமுறை ..மயங்குவார்கள் - முறையாக இடையறாது வரும் பிறவியாகிய பெரு வெள்ளத்திலே எல்லை காணாது அழுந்தி உடம்பு என்னும் துன்பம் நிறைந்த கூட்டினுள் இருந்து உணர்வில்லாமல் மயங்குவாராகளாகிய அம் மக்கள்; திருமணத்துடன்...சிறப்பினாலே - பிள்ளையாரது திருமணத்துடனே சேவித்துக் கொண்டு முன்னுற செல்லப்பெற்ற சிறப்பினால்; மருவிய...புக்கார் - பொருந்திய பிறவி நீங்கும்படி நிலைபெற்ற அந்தப் பேரொளியினுள்ளே புகுந்தனர். ௧௨௪௭

இந்த ஆறு திருப்பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3142. (வி - ரை) வந்தார் - எய்தி - நோக்கி - நண்ணு (1244) - எடுத்துக் - கொண்டு - பாட (1245) - தேவர் - அருள் புரிந்து - என்று - ஆகி (1246) - காட்ட - மன்னர் - போற்றி - அருளிச் செய்வார் (1247) - அருள் செய்து - என்ன (1248) - மயங்குவார்கள் - புக்கார் (1249) என்று இந்த ஆறு திருப்பாட்டுக்களையும் கூட்டி முடித்துக்கொள்க.

திருப்பெருமணம் - கோயிலின் திருப்பெயர். நல்லூர்ப் பெருமணம் - நல்லூரில் உள்ள பெருமணம் என்ற கோயில்; சாத்தை அய்வந்தி-கருவூர் ஆனிலை என்பன போலாம்; நல்லூர் - ஊர்ப் பெயர்.

தவநெறி வளர்க்க வந்தார் - பிள்ளையார், அவரது திருவவதார உள்ளுறையாவிது என்றவாறு; தவநெறி - சிவநெறி; இதனால் மணஞ் செய்துகொண்டு உலகில் வாழ்தல் அவர் வந்த காரியமன்று என்பது குறிப்பு.

தலைப்படும் சார்வு நோக்கி - அவ்வுள்ளுறை முற்றுப்பெற்று முத்தி நிலையினைக் கூடும் பருவம் சார்ந்ததனை உள்ளுற உணர்வினில் சிவனுணர்த்தக் கண்டு; நோக்குதல் - உள்ளுறக் கருத்தில் ஊன்றிக் காணுதல்; தலைப்படுதல் - சேர்தல்; "தலைப்பட்டார் தீரத் துறந்தார்" (குறள்), "தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே" (தேவா). சார்வு - சாரும் இடமும் காலமும்; "சார்புணர்ந்து" (குறள்).

பவமறக் கூட - பவம் - பிறவி முன்னாள் ஆண்ட - முன்னை நிலையில் ஆட்கொண்டருளிய, பிரமதீர்த்தக் கரையில் மூன்றாம் வயதில் ஆண்டருளிய என்று உரைப்பாருமுளர் அப்பண்பு - அந்த நிலை; கூட - பொருந்த; இதனால் பிள்ளையாரது முன்னை நிலையின் தன்மை விளங்குவதும், முருகப் பெருமானே பிள்ளையாராய் வந்தார் என்பார் கூற்றுச் சிறிதும் பொருந்தா தொழிவதும் கண்டுகொள்க. முன்னாளாண்ட அப் பண்பின் நிலை - "பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர்" (1953); என்றவிடத்தும், பிறாண்டும் உரைக்கப்பட்டது காண்க. "மறக்குமா றிலாத வென்னை" (தேவா) என்ற பிள்ளையார் திருவாக்கும் நினைவுகூர்க; அப்பண்பு கூட - இடையில் இவ்வுலகில் வந்து அவதரித்தது முதல் இதுகாறும் நின்ற இப்பண்பு நீங்க; வேறொன்றும் காணாது சிவனையே நினைந்து ஒன்றியிருக்கும் பண்பே வந்து பொருந்த என்க. கூட - கூடும்படி; பவமற - மையல் செய்திம் மண்ணின் மேற் "பிறக்கு மாறு காட்டினாய் பிணிப்படு முடம்புவிட், டிறக்கு மாறு காட்டினாய்க் கிழுக்கு கின்ற தென்னையே!" (தேவா)

நவமலர்ப் பாதம் - நவம் - புதிது; அநுபவிக்குந்தோறும் புதிது புதிதாயிருக்கும் தன்மை; இது சிவானந்தத்தின் பண்பு

கூடக் - கூட்டும் - கூடும்படி கூட்டும் என்பது கூட்டினாலன்றிக் கூடலரிது என்பதாம்.

நல்லுணர்வு நண்ண - சார்வு நோக்கியதனால் இவ்வுணர்வு நண்ணிற் றென்பது; நல்லுணர்வு - நன்மைகட் கெல்லாம் பெருநன்மையாகிய வீடுபேறு பற்றிய உணர்வு.

முன்னை நாளில் ஆட்கொண்டு பிறவியில் வாராது அருளிய பண்புபோல, அதனின் மேலாய் இனிப் பிறவியில் என்றும் வாராத நிலை பொருந்த என்பது கூட - என்றும், நவமலர்ப் பாதம் என்றும் வரும் சொல்லாற்றற் குறிப்பு. இதன் முன்னும் அப்பாதத் தையே சீவன் முத்தி நிலையிற் கூடியிருந்தா ராயினும் அது திருமேனி தாங்கிப் பிறர்க் கருள உலகில் நின்ற நிலை. இனி அப்பண்பு கூடப் - பாதங் கூட்டும் என்றதனால் அந் நிலையினின்றும் மாறாத சிவாநுபவமே மருவிக்கொண் டிருக்கும் பண்பு குறிக்கப்பட்டது.

நல்க—என்பதும் பாடம். 1244

3143. (வி - ரை) காதல் மெய்ப் பதிகம் - காதல் மிக மேற்கொண்டு எடுத்து என்க; விருப்பம் இறைவர் நவமலர்ப் பாதங் கூட்டும் என்ற நல்லுணர்வு பெற்றமை யால் மிகுந்து வந்தது; மெய்ப் பதிகம் - மெய் - சத்து; இறைவரது திருவாக்காகிக் குறித்த பயனைத் தரும் தன்மை. கல்லூர்ப் பெருமணம் - இது பதிகத் தொடக்கம்.

கண்டோர் - திருமணத்தைக் கண்டு தெரிசித்தோர்; இறைவரது அருட்கண் ணின் குறிப்பினாற் காணப்பட்டோர் என்ற குறிப்புமாம்.

தீதுறு பிறவிப் பாசம் - தீதுறு - பாசம் என்றும் கூட்ட நின்றது; தீதுறு பிறவி - பிறவியானது தீமையிற் செலுத்தி மேலும் மேலும் பிறவிகளிற் செலுத்துதல் குறிப்பு. "மையன மானுடமாய் மயங்கும்" என்றது காண்க.

கண்டோர் பாசந் தீர்த்தல் செம்பொருளாக் கொண்டு - செம்பொருள் - செம்மை யாகிய - செப்பமாகிய - பொருள்; உட்கருத்து. தாம் சிவன்றாள் சேர்தலாகிய கருத்து முற்பட்டெழுந்ததாயினும், தாம் தமது தேவியுடனும் கிளைஞர் தொண்டர் இவர்கள் சூழ உடன் அணைதல் அதனுடன் உள்ளுற எழுந்த கருத்து; தம்மைப் பவ மற முன்னே ஆண்டமையினாலும், சிவஞானம் பெற்றமையினாலும், பாசமற்றிலராத லின் தம் பொருட்டுத் தீதுறு பிறவிப் பாசம் தீர்த்தல் பொருளாகக் கொண்டு திருப் பதிகம் விண்ணப்பித்தல் அத்துணை வேண்டப்படாது, மணங் கண்ட ஏனையோர் பொருட்டுத் தீதுறு பிறவிப் பாசம் தீர்த்தலே மிகவும் வேண்டப்படுவதாயிற்று; "சொல்லூர்ப் பெருமணம் சூடலரே தொண்டர்"; "எமைப் போகக்கருளீரே"; 'நல்லூர்ப் பெருமணத் தானை, யுறும்பொருளாற் சொன்னவொண் டமிழ்" என்ற பதிகக் கருத்துக்கள் காண்க.

நாதனே...நம்பனே! - நாதன் - இறைவன். இறைமைத் தன்மையினால் ஆட் கொள்ளுதல் கடன் என்பது; "தம்மை யடைந்தார் வினைதீர்ப்ப தன்றோ தலையா யவர்தங் கடனாவதுதான" (தேவா); நல்லூர் மேவும் பெருமண நம்பனே! - "நல லூர்ப் பெருமண மேயநம் பானே" என்ற பதிகப் பொருளும் சொல்லும் போற்றப்பட் டது காண்க. நம்பன் - நம்பி அடையத் தக்கவர்.

உன்பாத மெய்ந்நீழல் சேரும் பருவம் ஈது - பாதம் அடைந்தாரது பிறவி வெப் பத்தை மாற்றுதலின் நீழல் என்றுபசரிக்கப்படும். மெய் - நித்தியமாவது; சத்தாகி என்றும் அழிவில்லாதது; பருவம் ஈது - பக்குவ முதிர்ச்சி பெற்ற உரிய காலம் இது; பதிகக் கருத்தும் குறிப்பும் காண்க. திருமணங் காண வந்த அத்துணை மக்க ளுக்கும் ஒருசேரத் திருவடி நீழல் சேரும் பருவம் கூடுமோ? எனில், கூடும் என்க; "பயில்வித் தெல்லாம், காரிட மதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனில" (சித்தி - 1-9); இங்குச் சிவஞான குருமூர்த்திகளின் பாவனை - பார்வை - அருண்மொழி - முதலிய தீக்கைகளாற் பாசம் நீங்கப்பெற்று முத்தி பெறும் பக்குவமுடைய உயிர்களே திருமணங் காண வந்து கூடினர் என்க. இக்குறிப்புப் பின்னர்த் "தெள்ளுநீ றுலகத் துப் பெற்றிலார் தெருமந்தார்" (3152) என்று மேலும் வற்புறுத்தப்பெறுதல் காண்க.

"இனையும் தொண்டர் கூட்டமும் மல்கிச் சூழ - அடைவுறும் குறிப்பால்" (3141) என்றபடி பிள்ளையார் இவ்வாறுள்ள பக்குவம் அவர் அனைவர்க்கும் கூடிய நிலையினைத் திருவருட் குறிப்பினாலறிந் தருளினர் எனக.

பருவம் - "காலமுங் கடவுளேவலாற் றுணைக்காரணங் காண்" (சித்தி - 1) என்றபடி இறைவனாணையின் வழியே உயிர்கள் வீடு பெறுதற்கு உரிய கால தத்துவமும் அணையாதல்பற்றிய குறிப்பு. அதற்குரிய கடவுளேவல் மேற்பாட்டிற் கூறுவார்.

பாட - அருள் புரிந்து என்று மேற்பாட்டுடன் கூட்டுக. அருள் புரிந்த வகையாலும் பிள்ளையார் ஏனையோரது பிறவிப் பாச நீக்கங் கருதி விண்ணப்பித்துப் பாடினர் என்பது தெளியப்படும்.

பதமிதுவென்று பாட—என்பதும் பாடம். 1245

3144. (வி - ரை) திருவருள் புரிந்து - முன்பாட்டிற் கூறியபடி பிள்ளையார் செய்த முத்தி விண்ணப்பத்திற்குத் திருவருள் செய்து.

'நீயும்...எய்தும்" என்று - இஃது இறைவர் அவ்விண்ணப்பத்தின்படி கைகூடுமாறு அருளிய திருவாக்கு; "எம்மைப்போகச் செய்யீரே" என்று வேண்டிய பிள்ளையாரது வேண்டுதலை இறைவர் ஏற்றுக்கொண்டு "எமது பாதநீழல் சேருமபடி தருமபரிசு இது" என்றபடியாம்.

பூவையன்னாள் - பிள்ளையாரது தேவியார். பூவை - நாகணவாய்ப் புள்; இது பேச்சு, அழகு, இயல் முதலியவற்றால் பெண்களுக்கு உவமிக்கப்படும்.

இங்கு உன்...யாவரும் - வந்தார் - வரும் பேறு பெற்றார்; புண்ணிய மணம் - உலகில் ஏனையோர்களது மணம்போலப் பாசத் தொடக்குக் கேதுவாகாது சிவபுண்ணியப் பயன் பயக்கும் மணம். யாவரும் - மேல் திருநீலநக்கர் முதலாக (3148) வீடு பெற வந்தாரும் (3150) என்றவரை விரித்த எல்லாரும் என்று முடித்த நிலை காண்க; உம்மை முற்றும்மை.

சோதி யிதனுள் வந்து - எம்பால் எய்தும் என்று கூட்டுக. சோதியிதனுள் - யாம் இனி இங்குக் காட்டும் இந்தச் சோதியின் உள்ளே; சோதியின் வாயிலின் மூலமாக. எம்பால் எய்தும் என்றது விண்ணப்பித்தபடி பாதமெய்ந் நீழலில் வந்தடைக என்றதாம். எய்தும் - எய்துவீராக; முன்னிலைப் பன்மையேவல்.

என்று - என்று அசரீரிவாக்கினால் அருளிச் செய்து.

மூவுலகு - மேல்-நடு-கீழ் என்ற மூன்றுலகங்களும், முற்றும்மை தொக்கது.

ஒளியால் விம்முதல் - சிவஞான வொளியின் பெரிய பிழம்பினாலே ஒளிபெற்று மேலோங்கி விளங்குதல்.

முழுச்சுடர்த் தாணு - முற்றிய சுடர் விளங்கும் தூண்; "சோதியே சுடரே சூழொளி விளக்கே" (திருவா); தாணு - நிலைபெற்ற தாங்கும் தூண்போல்பவர்; "மாசொன் றிலலாப் பொற்றூண் காண்" (தேவா) 1246

3145. (வி - ரை) கோயிலுட்பட...சோதி - முன்கூறிய முழுச்சுடர்த் தாணுவானது கோயில் தன்னுட்பட ஓங்கியபடியாக விளங்கும் சோதியாய் நின்றதென்க.

வாயிலை வகுத்துக் காட்ட - ஒளி பெருகும் சோதியளவில் அமைந்துபட்டால் யாவரும் அதனுட் புக அஞ்சி ஒதுங்குவராதலின் சோதியின் உள்ளே புகும் வாயிலையும் இறைவரே வகுத்துக்காட்டி யருளினர். எங்கும் எல்லாம் சிவஞான நிறைவேயாயினும் இறைவர் வேத முதலியவற்றால் நெறி வகுத்துக் காட்டி யருளினல்லது உயிர்கள் உணராது நன்னெறி செல்லுதல் இயலாதவாறுபோல, ஈண்டு இறைவரே சோதி

யாகிய தம்பால் பக்குவான்மாக்கள் வந்தடையும் வாயிலினையும் வகுத்துக் காட்டி யருளினர்.

புகலி மன்னர் - உய்ய வழியினை அருளிச் செய்வார் - வாயில் வகுத்துக் காட்டப்படினும் அதுவே வாயில் என அறிதலும், அதில் செல்லும் வழியும் தகுதியும் அறிதலும் காரணகுரு கைகாட்டி னல்லது கூடாதாதலின் புகலி மன்னர் அதனுட் புகும் வழியினைக் காட்டி உபதேசித் தருளுவாராகி என்க. இது மேல்வரும் "காதலாகிக் கசிந்து" என்ற திருப்பதிகத்தின் கருத்தும் உட்குறிப்பும் பொருளுமாம்.

கோயிலுட்பட மேலோங்கும் கொள்கையால் - சோதி வாயில் - கோயில் வாயில் வேறு - சோதிவாயில் வேறு. கோயில் முழுதும் சோதியினுட்பட்டு வெளிக் காணப்படாதாயிற்று ; இப்போது காணப்பட்டது சோதிவாயில் ஒன்றுதான். கோயில் வாயிலானது சாதனவகை யளவில் நிற்பது. "ஆலயந் தானும் அரனெனத் தொழுமே" (போதம். 12) ; இச் சோதிவாயில் அவ்வாறன்றிச் சாத்தியப் பொருளாகிய அரனே யாக நிற்பது. கோயில் வாயிலினுட் புகும் வழிகள் வேதாகம புராணங்களுட் பேசப்படும். ஆனால் அரனேயாகிய பேரொளிச் சோதி வாயிலினுட் புகும் வழியினை முன்னர் உயிர்கள் அறியாவாதலின் எடுத்து அருளிச் செய்வாராயினர் பிள்ளையார் என்க. இவ்விரண்டும் வெவ்வேறென்பது "பெருங்கூத்தர் கொள்ளநீ டியசோதிக் குறி நிலை யவ் வழிகரப்ப, வள்ளலார் தமபழய மணக்கோயில் தோன்றுதலும், தெள்ளுநீருலகத்துப் பெறற்கரிய திருமணத்தார்" (3152) என்று பின்னர் எடுத்துக் கூறுமாற்றால் இனிது விளங்கும்.

பாயின ஒளி ; மூவுலகும் தனது ஒளியால் விம்ம முழுச்சுடராத் தானுவாகிப் பரந்த பெருஞ் சிவவொளி ; பாயின - பரவின.

பரம் சுடர் - எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட சுடர்.

பரஞ்சுடர்த் தொழுது போற்றி - ஞாலம் உய்ய வழியினை யருளிச்செய்வார் - பக்குவ ஆன்மாக்களுக்குத் தீக்கை செய்து முத்திக்கு வழிகாட்டும் ஆசாரியர் முதலில் சிவனைத் தியானித்துத் துதித்து, இறைவரே! பக்குவமுடைய இம்மாணவனுக்குத் தீக்கை செய்து வழிப்படுத்த எனக்கு அருள செய்வீராக என்று போற்றிய பின்னரே அதனிற்றுணிக என்ற சிவாகம விதி இங்கு நினைவு கூரத்தற்பாலது.

மாயிரு ஞாலம் - மா - இரு - ஒருபொருட் பன்மொழி ; மிகப் பெரிய என்க. யகர வுடம்படுமெய் புறனடையாற் கொள்க. " மாயிரு ஞாலமெல் லாம் " (தேவா) என்புழிப்போல. மாயிருண் ஞாலம் என்பது பாடமாயின் பெரிய வலிமையுடைய இருண்மலம் என்னும் மூலமலமாகிய ஆணவமலத்தாற் கட்டுண்ட உலகத்துயிர்கள் என்க. முத்தியினும் அறாது வலியிழந்து நிற்கும் மூலமலத்தின் வலிமை குறித்தபடி, மாய் இருள் - முத்தியில் வலிகெட்டு மாயும் இருள் என்றலுமாம்.

வழி - வாயிலை இறைவர் காட்ட அதனுட் புகும் வழியினைப் பிள்ளையார் அருளினர் என்பது. வழியாவது புகும் தகுதி நிலைகள். பின்னர் " நெறி " (3146) என்பது காண்க. வழி பதிகத்துட் காண்க.

அருளிச் செய்வார் - பாவனை - பார்வை - உபதேசச் சொல் என்ற தீக்கை வகைகளை எல்லாம் அருள்வாராகி என்க ; முற்றெச்சம். அருளிச் செயவார் - அருள் செய்து - என்ன - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 1247

3146. (வி - ரை) "ஞான மெய்...சொலாம்" என்று - இது பதிகக் கருத்தும் குறிப்புமாம். ஞான மெய்ந்நெறி - சிவஞானத்தினாலன்றி அடையவொண்ணாத வீட்டு

நெறி; "ஞாலமுய்ய வழியினை அருளிச் செய்வார்" (1247) என்றமையால் இங்குக் கூறிய மெய்ந்நெறி உயிர்கள் உய்யும் வழி என்பதாயிற்று.

மெய் - மெய்ப்பொருள்; சத்து; அழிவில்லாதது; இறைவர். மெய்ந்நெறி - மெய்யினை அடைதற்குரிய வழி. தான் - என்றது இதுவேயன்றிப் பிறிதில்லை என்ற பொருள் தந்தது.

யார்க்கும் - எல்லாச் சமயத்தார்க்கும்; எல்லாப் பக்குவபேத முடையவர்க்கும்; எக்காலத்தும் எவ்விடத்தும் உள்ளவர்க்கும்; எல்லா ஞானநூல்களினும் முடிந்த நிச்சயம் என்பது.

நமச்சிவாயச் சொல்லே மெய்ஞ்ஞான நெறியாம் என்க. உயிர் பாசத்தினீங்கி சிவத்தையடைவது என்பது திருவைந்தெழுத்தின் உள்ளீடாகும்; ஆதலின் சோதி வாயிலினூடு புகுந்து இறைவனை அடையும் இந்நிலையில் பஞ்சாக்கரத்தின் உள்ளீடு சிந்தித் துணரற்பாலதென்பது பதிகக் கருத்து. திருவருட் சிறப்பினாலும், ஞானாசாரியரது அருணோக்கம் பாவனைகளின் அருட்சிறப்பினாலும் இதுவே சிகாராதியாகிய பஞ்சாக்கரப்பயன் தந்தது என்பது.

ஆசறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக
ஓசைகொ ளதனி னம்மே லொழித்தரு ளோங்கு மீள
வாசியை யருளு மாய மற்றது பரமு வுற்றால்
ஈசனி லேக மாகு மிந்திரு வெழுத்தி னீடே —(சிவப - 92)

அந்தமா திகளி லாத வஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே. —(ஷை - 90)

என்பன முதலியவை காண்க. இதுபற்றி முன்னர் (1391-ல் கீழும், பிறாண்டும்) உரைத்தவை யெல்லாம் ஈண்டுக் காண்க (III-பக். சகூஉ - ககூரு).

மெய்ஞ்ஞான நெறி - சொல் ஆம் - ஞானத்தாலன்றி வீட்டுநெறி யடைதல் இயலாதென்பதும், அந்த ஞானமாவது திருவைந்தெழுத்தாகிய ஒருசொல்லின் உள்ளீட்டினை உணர்ந்து நிற்றலேயாம் என்பதும் கருத்து.

என்று - நமச்சிவாயத் திருப்பதிகத்தை - அருள்செய்து - பஞ்சாக்கர உபதேசத்தால் ஞான நெறியினை உணரச்செய்து என்க. "தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்டு, அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே" என்ற சிவஞான போதம் எட்டாஞ் சூத்திரக் கருத்து முழுதும் ஈண்டுவைத்துக் கண்டுகொள்க. அங்குத் தவத்தினில் என்றதற்கேற்ப, ஈண்டு, முன்னைத் தவம் செய்து பக்குவமுற்ற உயிர்களே இங்குத் திருமணத்திற் சார்ந்த மக்கள் என்பதும், அவர்கள் அவ்வாறு பக்குவ முதிர்ந்து வீடுபெறத் தகுதியான பருவமடைந்தவர் என்பதை இறைவனுணர்ந்த உணர்ந்தமையாலே பிள்ளையார் "பாதமெய்யக நீழல்சேரும் பருவமீது" என்று பாட அதன்படி இறைவ ராணை தந்தனர் என்பதும் அறியத் தக்கன. "மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாவாகலான்" என்று மெய்கண்டதேவர் "ஞான மெய்ந்நெறி......சொல்லாம்" என்றதனையே அச்சூத்திரத்தின் கீழ் விரிவு செய்தருளினர் என்பதும் கண்டுகொள்க; ஞான நெறி - "நன்மை யெனப்படுவன வெல்லாவற்றினுஞ் சிறந்த நன்மையாவது வீடு பேறென்பது; அதனைத் தலைப்படுதற் கேதுவாய்ச் சிறந்த நெறியாகலின் ஞானம் நன்னெறி யெனப்பட்டது. வீட்டிற்கு நெறியென அவ்வச் சமயத்தாரால் கூறப்படுவன வனைத்துந் தன்கண்ணே வந்து கூடுகின்ற பெருநெறி யாகலானும் அது நன்னெறி

எனப்பட்டது. நன்னெறி சன்மார்க்கம் என்பன ஒருபொருட் கிளவி......" (சிற்றுரை - போதம் - 8 - முதலதிகரணம்).

வானமும் நிலனும் கேட்க அருள் செய்து - விண்ணவரும் மண்ணவரும் கேட்க என்றது உச்சமாகிய நிடாதசுரத்தில் அருளினார் என்ற குறிப்பு. அங்கு நின்ற எல்லாரும் பக்குவமுற்று வீட்டையும் பக்குவமுடையோராதலின் எல்லாரும் கேட்க அருளினார். மாணவகன் மட்டும் கேட்கவும் ஏனையோர் கேட்க இயலாமலும் உள்ள வகையில் மந்திரம் அந்தரங்கத்தில் உபதேசிக்கக் கடவது என்னும் விதி ஈண்டுச் செல்லாமையறிக. வானிலுள்ளோர் ஒலியலைகளின் பரம்பரைமூலம் கேட்கலுற்றனர் என்பது இந்நாளின் "வானொலிக் கேள்வி" (Radio) என்று காணப்படும் கலைஞானப் பகுதியினால் விளங்கும். அவ்வாறு கேட்பினும் இங்குக் கேட்ட நிலத்தவர்போல விண்ணவர் பயன் பெறுதலென்னை? எனின், பசுபுண்ணிய மிகுதியினால் மேலுலகத் திருக்கப்பெறினும், வானவர் அவ் வினைகழிவில் புவனியில் வந்து பிறந்து சிவபுண்ணியஞ் செய்து ஞானம் பெற்ற பின்னரே காலாந்தரத்தில் வீடுபெறுந் தகுதி வாய்க்கப்பெறுவர் என்பது ஞான நூல் முடிபு. அப் பருவம் இன்னும் வாய்க்கப்பெறாமையின் அவர்களும் இங்குத் திருமணங் கண்ட நிலத்தவர்போல வீடுபேறு பெற்றாரிலர் என்பது "தூரத்தே கண்டு, நணுகப்பெறா விண்ணவரு முனிவர்களும் விரிஞ்சனே முதலோரும், எண்ணிலவரே சுறவு நீரவெடுத் தேத்தினார்" (3153) என்று பின்னர் ஆசிரியர் காட்டியருளுமாற்றால் அறிக. "இம்மணத்தில் வந்தோர்" என்ற குறிப்புமது. இங்கு வானுலகரும் மணங் காண வரினும் அவரெல்லாம் "மஞ்சுறை விசும்பின் மீது மணவணி காணச் சென்றார்" (3102); "மணமேற் செல்லும் பொற்பமை மணத்தின் சாயை போன்றமுன் பொலியச் சென்றார்" (3103); "தூரத்தே கண்டு நணுகப் பெறா" (3153) என்று வருவனவற்றால் நிலத்தவர்போல "மணத்தில் வந்தோர்"ராகார் என்பதாம்.

ஈனமாம் பிறவி தீர - "தீதுறு பிறவிப் பாசம் தீர்த்தல்செம் பொருளாகக் கொண்டு" (3143) பாடியதற்கேற்ப இங்கு இறைவராணையின் வழிப் பதிகம் பாடியருளி அங்குற்ற ஏனவரையும் வீடு பேற்றுக்குத் தகுதி பெற்றாராக ஆக்கியமை குறிப்பு. "ஈனமாம் பிறவி" மேற்பாட்டில் விரிக்கப்படுவது.

இம்மணத்தில் வந்தோர் யாவரும் புகுக - "இங்கு உன புண்ணிய மணத்தில் வந்தோர் யாவரும்" (3144) என்று இறைவர் அருளியமையாலே ஒருவரும் ஒழியாது எல்லாரும் என்றருளினர். வந்தோர் யாவரும் - "மாதொடும் புகுறும் போதுவந்தார், ஆரக் கொழிந்தனர் பெற்றதல் லால்வ வரும்பதமே" (ஆளுடைய பிள் - திருவந் - 60) என்ற நம்பியாண்டார் நம்பிகள் திருவாக்கு இதற்காதரவாதல் காண்க.

"புகுக" என்ன - இஃது "யாவரும் வந்தெய்தும்" (3144) என்று இறைவர் தந்த ஆணையின்படியே பிள்ளையார் தம்மால் தகுதியாக்கப்பட்ட மக்களுக்கு ஆணை தந்தமையாம்.

என்ன - (அது கேட்டுப்) புக்கார் - என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

3147. (வி - ரை) வருமுறை...அழுந்தி - வருமுறை - ஒரு பிறவியிற் செய்யும் வினை மேலும் பல பிறவிகளை விளைக்க, அவற்றுட் செய்தவை மேன்மேலும் பற்பல ஆயிரம் பிறவிகளுக்கு ஏதுவாக இவ்வாறு பரம்பரையில் முறையாக வரும். வெள்ளம்- எல்லையில்லாது வருதல் கருதது. திருமணத்துடன் சேவித்து முன்செல்லுதலைப் புணை என்றமையால் பிறவி வெள்ளம் என்றது ஏகதேசவுருவகம். "பெரும்பிறவிப் பவ்வத் தெவ்வத் தடத்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றி" (திருவா); "இவ்வரும்

பிறவிப் பெளவநீர் நீந்தும் ஏழை யேற்கு" (திருவிசை) முதலிய திருவாக்குகள் காண்க. அழுந்தி-வரம்பு காணாமையின் அவவெள்ளத்துள்ளே ஆழ்ந்து கிடந்து. வரம்பாவது கரையேறும நிலை; அழுந்துதலாவது அதனைப் பெரிதெனை மயங்குதல.

உருவெனும் துயரக் கூட்டில் - உரு - உடம்பு; துயரக் கூடு - துன்பத்துக்கே ஏதுவாயுள்ள கூடு. கூட்டில் அடைபட்ட பறவை எவ்வாறு வெளியேறமாட்டாது தடைபட்டு அதனுள்ளே வியாபரித்து அடங்கிக் கிடக்குமோ அதுபோல வியாபக நிலைக்குரிய உயிர் உடம்பாகிய கூட்டினுள்ளே தடையுண்டு அடங்கிக் கிடக்கும் என்பது.

உணர்வின்றி மயங்குவார்கள் - உணர்வு - நல்லுணர்வு; துன்பக் கூட்டினின்றும் விடுதி பெறவேண்டுமென்ற அறிவுணர்ச்சி. மயங்குவார்கள் - பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருளுடையோர் மயக்கமாவது ஒன்றை அஃதல்லாத பிறிதொன்றாக எண்ணுதல. இம்மயக்கமான து ஈண்டுப பஞ்சாக்கர உபதேசத்தாலும் மெஞ்ஞான தேசிகரது அருட்பார்வை முதலிய தீக்கையாலும் நீக்கப்பெற்றது என்க. "ஈனமாம் பிறவி"யின் தன்மையினை விரித்தவாறு.

திருமணத்துடன்......சிறப்பினாலே - அம்மயக்கம் நீங்கிய காரணம் கூறியபடி; சேவித்து முன்செலும் சிறப்பு - "ஏக னாகி இறைபணி நிற்க...மலமாயை தன்னொடு வல்வினை யின்றே" (போதம் - 10) என்ற ஞானநூற் கருத்து இங்கு நினைவுகூரத்தபாலது; சேவித்து முன் செல்லும் சிறப்பு - இறை பணியேயாகும் என்க, பின்னையார் சிவஞான நிறைவுடையராகலான.

மருவிய பிறவி நீங்க - இது பாசநீக்க முணர்த்திற்று. "பாச மொருவத, தண்ணிழ லாமபதி விதி யெண்ணு மஞ்செழுத்தே" (போதம் - 9) என்றபடி விதிப்படி தீக்கைசெய்து உபதேசஞ் செய்யப்பெற்ற சாதனத்தாலும், முன்னைப் பக்குவ முதிர்ச்சியாலும் மூலமல வலி நீங்கப்பெற்றமையால பிறவி நீங்கும் பயனபெற்றனர். மருவிய பிறவி - இப்பிறவி. இவ்வுடம்பான முகந்துகொண்ட வினைப்பயனை அனுபவிக்கின்ற, இனி வருவதாய எஞ்சினர, பிறவிகள எல்லாம தீக்கையால ஒழிந்தன.

மன்னு சோதியினுட் புக்கார் - மன்னு சோதி - நிலைபெற்ற - அழியாத - சிவசோதி; இறைவரது "முழுச்சுடாச் சோதி" (3144).

திருமணத்துடன்...புக்கார் - முறைசெய் தவத்தினாலே குருவின் அருளுபதேசம் பெறுதல் வரும; அதனாலே அவ்வுபதேசப் பொருளாகிய மந்திரப் பொருளை எண்ணி வழிபடுதல் வரும்; அதனாலே மும்மை மலங்களும் வலி நீங்கும்; அதனாலே அயரா அன்பின் அரன் கழலின் நீங்காது நிற்கும் பேறு வரும் ஆதலால், இந்நிலையெல்லாம் இடையீடின்றி ஒருங்கே நிகழ்தற்கு முன்னைத் தவத்தினாலே விளைந்த பக்குவமுதிர்ச்சியும் ஆசாரியரது அருண்ஞான ஆற்றலுமே காரணமாயின என்க.

நீங்கி—என்பதும் பாடம்.　1249

திருநல்லூர்ப்பெருமணம்

திருச்சிற்றம்பலம்　பண் - அந்தாளிக் குறிஞ்சி - 3-ம் திருமுறை

கல்லூர்ப் பெருமணம் வேண்டா; கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாயத்தில?;
சொல்லூர்ப் பெருமணம் சூடல ரேதொண்டர்!;
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே.　(1)

தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை
உக்கிருந் தொல்க வுயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே. (8)

நறும்பொழிற் காழியுண் ஞான சம்பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
யுறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவலமி லாரே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :—** கண்டோர் தீதுற பிறவிப் பாசம் தீர்த்தல் இதன் செம் பொருளாம். "நல்லூர் மேவும் நம்பானே! உனது பாத மெய்ந்நீழல் சேரும் பருவம் இது" என்ற உட்குறிப்புடன் பெருமணத்தானை உறும்பொருளால் "எமைப் போக்கு அருள்வீராக" என்று விண்ணப்பித்தது (3143).

**பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1)** கல்லூர்ப் பெருமணம் வேண்டாம் - கல் - அம்மி; கல்லூர் - அம்மி மிதிக்கும் சடங்கினையுடைய; பெருமணம் - உலக நிலையிற் கொண்டாடப்படும் கல்யாணம் செய்யும் இல்லற நிலை; வேண்டா - எமக்கு வேண்டுவதின்று. கழுமலம்.. ...மெய்யாயித்தில? - கழுமலம் (சீகாழி) முதலாகப் பெருமணம் எனலும் இப்பதி வரை வழிபட்டுப் பாடிய பதிகப்பாட்டுக்க ளுண்மையே யன்றோ? (அவற்றுள் எதனிலும் என பொருட்டு உலகத் தொடர்பாகிய விண்ணப்பங்கள் செய்யவில்லை யன்றோ?); சோல்லூர்...தோண்டர் - தொண்டர்கள் மணம் என்று வழங்கும் உலகச் சூழலாகிய தொடர்ச்சியினுள் அகப்பட மாட்டார்களே; நம்பான் - "நம்பனே" (3143);—(2) தருமண லோதம்...மணஞ் சேயும் - மணலில் கடல்நீரால் அலைக்கப்பட்ட முத்துக்களையே பருமணலாகக் கொண்டு சிறுமியர்கள் சிறு விளையாட்டாகிய மணச் சடங்குகளைக் காட்டி விளையாடுத்தற் கிடமாகிய; உலகினர் நிகழ்த்தி உண்மை எனக் கொண்டு அகப்படுகின்ற மணவினைகளும் இவ்வாறு விளையாட்டுக்களே யன்றிப் பிறிதன்று; மணலில், மணம் விளையாடும் சிறுமியர்க்கு வரும் இன்பத்தளவே உலகினர் மணவினை யின்பமாம்; நித்திலம் பருமணலாக வரும் பொய்த் தோற்றத்தின் அளவுமாம்; மணலே முத்தாகக் கொள்வது வினையிடங்கள், முத்து மணலாகக் கொள்வது பெருமணத்தின் சிறப்பு; மயக்கநிலையில் இரண்டு மொன்றே; —(3) நன்பு-நலம்; இன்புறும் - விரும்பி வீற்றிருக்கும்; இன்புறுதற்குக் காரணம் அடியவர் நலமெய்துதல்; தோண்டு சேய்வாரே யாதலின் துன்புறுவா ரல்லர் என்க; "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" (தேவா). துன்பு-பிறவித் துன்பம்; பிறசரித விளைவுக் குறிப்பு;—(4) வல்லியம்-புலி; வேழத்துரி-போர்ப்பது எனக; கோவணம் - அணிவது என்க; நல்லியலார் - வீடு பெறும் நலவியல்பின் பக்குவ முடைய மாந்தர்; சரிதக் குறிப்பு. வாழ்க்கை - உறைவிடம்;—(5) நாறு மணம்; வேறு - தனியாக; சிறப்பாக;—(6) சிட்டப்பட்டார்க்கு - சிட்டம் - நல்லொழுக்கம்; வீட்டுநெறி நிற்கும் தவவொழுக்கம். வேட்டுவப் பட்டம் கட்டும் சேன்னியான் - "வேடுவனுகி வேண்டுருக் கொண்டு" (திருவாசகம்) என்றபடி வேடனுகிய கோலத்திற்குரிய தலைக்கோல முடையான். சேங்கண் - வேடர்க்குரிய பண்பு; "செங்கண் வேடனு யென்னொடும் வந்து" (தேவா - நம்பி); "வேடர்தங் கரிய செங்கண் வில்லியார்" (741); நட்டக் கோட்டு ஆட்டு அறு - நட்டம் - கூத்து; நடம் என்பது

எதுகை நோக்கி நட்டம் என வந்தது; நட்டமாகிய கொட்டுடன் கூடிய ஆட்டு என்க. இட்டப்பட்டா லொத்திரால் - வேண்டுதல் வேண்டாமை யிலாராதலின் ஒத்திர் - போன்றீர் - என்றார்;—(7) மேகத்த - மேகம்போன்ற தன்மையுடைய; கரிய நிறமும் கொடையும் பண்பும். வெண்ணீற்றுமை - இத்தலத்தின் அம்மை பெயர்; வந்து கூடி வீடு பெற்றார்க்கெல்லாம் அம்மையார் திருவெண்ணீறு அருளினர் என்பதும் அத்திருக்கோல முடையவர் என்பதும் தல வரலாறு; "பராவண மாவது நீறு" (தேவா). வெண்ணீறுகந்தீர் (5) என்று இறைவரை முன் கூறியருளிய கருத்தும் காண்க. பந்தித்த - அரையிற் கயிறாகக் கட்டிய, "நாக வரையினர்" (தேவா - அரசுகள் - புகலூர்). போகத்தன் யோகத்தையே புரிந்தான் - அடியார்களுக்குப் போகத்தையும் மோட்சத்தினையும் அருள்பவன், "பந்தமும் வீடும் பரப்புகின்றீர்" (தேவா). யோகம் - கூடுதல்; ஈண்டுச் சிவனொடு கூடுதலாகிய வீடுபேறு குறித்தது. இதுவரை போகம் கொடுத்துவந்த இறைவர் இங்குச் சிவனடி சார்தலாகிய வீடு பேற்றினையே அருள்பவரானார் என்பது சரிதக் குறிப்பு. புரிந்தான் - உயிர்கள் யோகம் சாரும்படி நினைந்தருளினர், இறந்தகாலம் விரைவுக் குறிப்பு;—(8) தக்கிருந்தீர் - தகுதியின் வீற்றிருந்தருளினீர், உக்கு - உள்ளடக்கி; ஒல்க - வலி குறைய; நக்கு - இகழ்ச்சிக் குறிப்புடன் சிரித்து; அன்று...உயர் வரை - இருந்தீர் - (நீரே) இன்று பெருமணம் புக்கிருந்தீர் - கொடித்தான் மலை என்னும் திருக்கயிலையில் இருக்கும் நீரே இங்கு நொடித்தல் என்னும் பாச நீக்கம் செய்து கதியருளும்படி இன்று பெருமணத்தில் வீற்றிருக்கின்றீர் என்பது. இன்று எமக்கு உய்தி தரும்பொருட்டு எமது விண்ணப்பத்திற் கிரங்கி, இதுவும் மேல (இரட்டுற மொழிதலால்) இன்று எமைப் போகக்கருளீர் என்பதும் முதற் விண்ணப்பக் குறிப்பு; இன்று இருந்தீர் என்றதனால் "நவமலாப் பாதம் கூட்டு மென்னுநல் லுணர்வு" (3142) நண்ணிநின்றமை குறித்தபடி. "அவனருளாலே அவன்றாள் வணங்கி" (திருவா); எமை - திருமணம் செய்யப்பெற்றமையால் தமது தேவியாரையும் மணங்காண வந்த பக்குவான்மாக்களை அனைவரையும் உள்ளடக்கிய உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. எமை - எமக்கு, வேற்றுமை மயக்கம். போதுக - போ - புக - புகுக, திருவடி நீழலுட் புகுதல், வீடு பேறு; "சோதியினுட் புகார" (3147); "உடன் புகார" (3148); "புக கொடுக்கின்றார" (3149), "புக்கொன்றி யுடனுற்றார" (3151) என்று ஆசிரியர் இக் கருத்தை ஏற்றவாறு விரித்தருளியமை காண்க;—(9) பூலும் - பொய் பொருத்தும்; இயல்பு - அடி கண்டிலேனென்று பொய்மொழி கூறிய உண்மை இயல்பு; வரலாற்றுக் குறிப்பு. மறைநாலும் தம்பாட்டு - நான்மறையும் தம் வாய்மொழி; வேதநெறி வீட்டுநெறியின் வழியாதல் குறிப்பு, உலகுக்கு மறை வழக்கம் காட்ட எடுத்த மணமே வீட்டுநெறியாய் வீடுபயத்தல் குறிப்பு; "வேதத்தை விட்ட அறமில்லை...வேதத்தை யோதியே வீடுபெற்றாரே" (திருமந்); பெருமணம் தங் கோயில்போலும் என்க; அவ்வாறு வீடு தருதற்கிடம் இது என்பது குறிப்பு,—(10) ஆதர் - கீழ்கள்; பிணக்குறுவீர் வம்மின் - "பரசமய நிராகரி"ப்பின் முடிந்த நிலை, தாள் தொழ வீடெளி தாமே - திருநீற்றின் ஆக்கமாகிய சைவத் தாபனத்தின் முடிந்த முடிவு. இவையிரண்டுமே பிள்ளையாரின் அவதார உள்ளுறைகளாதலின் ஈண்டு நிறைவாயின தன்மையினை முடித்துக் காட்டியருளியவாறு; பிள்ளையாரருளினால் உலகர் வந்து வீடுபெற்ற நின்ற சரிதக் குறிப்பு. வேதன - வேதன் - வேத காரணர்; வேதனுடைய - அகரம் ஆறனுருபு. எளிதாம் - எளிதின் அடையப்படு பொருள்;—(11) பெறும் பதம் - உறும் பொருளால் சொன்ன - பெறத்தக்க பதமாகிய சிவனைச் சாரும் உட்கருத்துடன் அரு

சிறிய. உறும் பொருள் - இதனை ஆசிரியர் "பிறவிப் பாசம் தீர்த்தல் செம்பொருளாக் கொண்டு" (3143) என்று உரை விரித்துக்காட்டி யருளினார்; வல்லார்க்குப் பழிபாவம் அறும்; அவர் அவலமிலார் என்க. பழியும் அதன் காரணமான பாவமும்; இவை வினைப்பயன். வினைகள் நீங்கப் பிறவித் துன்ப நீக்கம் குறித்தது. முன் "வீடெளி தாம்" (10) என்றார். அதன் காரணம், ஈண்டும் மூலமலங்களும் அற்றுச் சிவானந்தம் பெறுதல் என மேல் அருளும் பதிகப் பயன் "பந்தபாச மறுக்க வல்லார்" என்று கூறும் வகையாலும் கூறியமை கண்டு பயன்கொள்க.

தலவிசேடம் :—திருநல்லூர்ப்பெருமணம் - சோழ நாட்டில் காவிரியின் வட கரையில் 5-வது பதி; ஒரு சமயத்தில் பிரமதேவர் ஏனைத் தேவர்களுடன் சீகாழிக்கு வருகையில் இதன் பெருமையினை அறிந்து "நல்லூர்" என்றமையால் இப்பெயர் பெற்றதென்பது தல வரலாறு. நல்லூர்-பதியின் பெயரும், பெருமணம்-கோயிலின் பெயருமாம்; "போகத்தன் யோகத்தையே புரிந்தான்" என்றதனால் இத்திருக்கோயிலின் பெயர்க் கருத்துக் குறிப்புப் பெறவும், பிள்ளையார் திருமணச் சரித விளைவு இக் கருத்தை மேலும் விளக்கவுமுள்ள பெருமையுடைய பதி; இங்கு ஆளுடைய பிள்ளையார் தமது திருமணத்தில் மணங் காண வந்தோரும் தேவியாரும் தாமும் சிவசோதியிற் புகுந்து திருவடியடைந்த சரிதப் பெருமை புராணத்துட் காண்க; ஆளுடைய பிள்ளையார் நமச்சிவாயத் திருப்பதிகத்தினைக் கட்டளையிட்டருளி அது கேட்ட அனைவரையும் ஒருங்கே வீடுபெறும் தகுதியுடையவர்களாக ஆக்கிய பெருமையுடைய பதி; பிள்ளை யாரது தேவியாரது பதியாதலின் ஆச்சாள்புரம் (ஆச்சாபுரம்) என வழங்கப் பெறுகின்றது. இது கொள்ளிடம் நிலயத்தினின்றும் கிழக்கே மட்சாலைவழி 3 நாழிகை யளவில் அடையத் தக்கது. "ஆச்சா" மரம் உள்ள தலம் என்றும் கூறுவர்.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தாருக்குச் சொந்தமாக நன்கு பரி பாலிக்கப்பட்டு வருகின்றது. வைகாசி மூலத்தில் திருஞான சம்பந்தர் திருமண விழாச் சிறப்பும், திருஞான சம்பந்தர் தேவியாருடனுள்ள திருக்கோல மூர்த்திகள் காண்பதும் இத்தலத்துக்குரிய தனிச் சிறப்புக்களாகும்.

சுவாமி - சிவலோகத் தியாகர்; அம்மை - திருவெண்ணீற்றுமையம்மை - (பதிகம் 7 பார்க்க); தீர்த்தம் (திருக்கோயிலின் முன்பு) - பஞ்சாக்கர தீர்த்தம்; எட்டுத் திக்குக்களினும் இருடிகள் கண்ட எட்டுத் தீர்த்தங்கள் உண்டு; தலப் பதிகம் 1-ம், பொதுப் பதிகம் 1-ம் ஆம்.

## நமச்சிவாயத் திருப்பதிகம் (பொது)

திருச்சிற்றம்பலம் பண் - கௌசிகம் - 3-ம் திருமுறை

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே. (1)

இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயன னாம நமச்சி வாயவே. (4)

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே. (5)

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேற்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாம நமச்சி வாயவே. (6)

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரத னாம நமச்சி வாயவே. (7)

நந்தி நாம நமச்சிவா யவெனுஞ்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மாயிரு ஞாலமுய்ய வழியினை அருளிச் செய்வார், ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் சிவனுமாகிய நமச்சிவாயச் சொல்லேயாகும் என்று ஆசிரியர் காட்டியருளியபடி (3145 - 3146).

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) காதலாகி...ஓதுவார் - திருவைந்தெழுத்தை ஓதிப் பயன் பெற விரும்புவோர் மன மொழி மெய்கள் என்ற மூன்றானும் நிற்கும்நிலை கூறப்பட்டது. காதலாகி - மனநிலை; கசிந்து கண்ணீர் மல்குதல் - மெய்யின்நிலை; ஓதுவார் - வாக்கினநிலை. நன்னெறி - சிவநெறி; "நன்னெறி யாவது" (தேவா); சிவநெறியாவன சரியையிற் றொடங்கிச் சிவஞானமீறாக வருவன. உய்த்தல் - துணையாய் நின்று செலுத்துதல், "நற்றுணை யாவது" (தேவா). வேத நான்கினு மெய்ப்பொருள் - வேதங்களின் இருதயமாக உள்ளது சிவநாமம். மெய்ப்பொருள் - மெய் - தன்னியல்புணர்த்திய அடைமொழி; செஞ்ஞாயிறு - மெய்யடியார் என்புழிப்போல. நாதன் - இறைவன். இறைமைக் குணங்கள் எட்டினையும் உடைய முதல்வன்; நாதனாதலின் ஆட்கொள்ளும் கடப்பாடுடையவன் என்பது. நாமம் - திருவைந்தெழுத்தாவது நாதனுடைய நாமமேயாம்; "ஆலைப் படுகரும்பின் சாறு போல அண்ணிக்கு மஞ்செழுத்தின் நாமத் தானைக் காண்"; "சிவனெனு நாமந் தனக்கே யுடைய"; நமச்சிவாயவே - இதனால் ஓதுமுறையும் பயனும் பெயரும் வந்த வழியும் கூறப்பட்டன. காதலாகி என்றதனால் நாமங் கேட்ட அளவால் அன்பு பெருகிக் காதலாய் விளைதல் குறிக்கப்பட்டது; "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்" (தேவா) என்ற திருவாக்கின் கருத்து முழுமையும் ஈண்டு வைத்துக் கண்டுகொள்க. கசிந்து - மனமுருகுதல்; தொடக்கம். கண்ணீர் மல்குதல் - கசிதலின் விளைவாகிய மெய்ப்பாடு; நாமங் கேட்டலால் கசிதலும் கண்ணீர் மல்குதலும் என்னை? எனின், தலைவனது பெருமையும் தனது சிறுமையும், அவனது பேரருளும், அவன் எளியனாய் வந்து "ஈர்த்தீர்த் தென்னையுருக்கி" என்றபடி வலிய ஆட்கொள்ளும் தண்ணளியும், தன்னைக் கட்டி நின்ற பாசவிருளின் வலிமையும், அதனை நீக்கி அவன் அளித்த பேரின்பமும் ஆகிய

இவையெல்லாம் திருவைந்தெழுத்தின் உள்ளீடாய் நிற்கும் தன்மைகளை அறிந்து நினைந்து நினைந்து எண்ணுதலால் வருவதெனக. ஓதுவார் - மானதம் மந்தம் உரை என்ற மூன்றினில் ஒன்றில் வைத்து என்பதாம். "விதியெண்ணு மஞ்செழுத்தே" (போதம் - 9) ;—(2) நம்புவாரவர் - மருந்தினிடத்தும மருத்துவனிடத்தும் நம பிக்கை யிலலையேல் நோய நீக்கம எளிதன்று என்னும் உண்மைக் குறிப்பு ; மேல "நம்பன்" எனபதும் காணக. வம்பு நாண்மலர் வார்மது - புதிதின் அலரும் பருவமே மலர்களில் மணமும் தேனும காண வருவன ;—(3) உள் நெக்கு எனக ; ஆர்வம் - பேரன்பு ; அக்கு மாலை - உருத்திராக்க மாலை ; செபமாலை ; செபமாலை கொண்டே மந்திரம எண்ணறபால தெனபது விதி. எண்ணுவார் - மந்திரத்தின உள்ளீடாகிய உருவத்தை வெளிப்பட மனத்திற் றோன்றக காணுதல் ; உரு வெளிப்பாடு என்பர் ; இஃது அழுந்த எண்ணுதலால வருவது. தக்க - வீடு பெறுதற்குத் தக்க ; நக்கன் - சிவன் ; திகம்பரன் ; எல்லாப் பொருள்களிலு மிருந்தும் ஒன்றிலும பற்றாத ஞானச சோதி ;—(4) இயமன் தூதரு மஞ்சுவார் - பிறப்பு இறப்பிலலை என்ற பயன் குறித்தது ; இயமன் தூதுவர் - மரண வேதனை. அஞ்சுதல் - தாக்காது ஒதுங்குதல் ; இன்சொலால் - அனபினாலே ; நியமம் - தவறாமை ;—(5) கொல்வாரேனும் .. ...நீங்குவர் - எல்லாப பாவங்களையும் எரிக்கும தனமை. மேன மூன்று பாட்டுக்களும இக்கருத்தை வலியுறுத்துவன ; இப்பாட்டினுல் தீவினைகள ஈட்டப்படும நிலைகளும, மேல்வரும பாட்டில அவை பாவமாக மாறி வலிக்கும நிலையும, அதன் மேற்பாட்டில் அவை பாவப பயனாக மாறிப பெரு நரகவேதனைக குள்ளாக்கும் நிலையும குறிக்கப்பட்டன ; "விண்ணுற வடுக்கிய விறகின்" (தேவா) என்ற திருப்பாட்டின் கருத்தும் காணக. கொல்வாரேனும் - எல்லாத தீமைகளிலும பெரிது உயிர்க்கொலை செய்தலாதலின் அதனை எடுத்துக்கூற ஏனைய எல்லாம அடங்கும் ; தீமை செய்தல்போலவே நன்மை செய்யாமையும் பாவமாதலின குணம் பல நன்மைக ளில்லாரேனும் என்றார் ; "மனவாக் காயத், திதமுயிர்க் குறுதிசெயதல அகிதமற் றதுசெய் யாமை" (சித்தி - 2-13). எல்லாத் தீங்கையும் - தீமை செய்தல - நனமை செய்யாமை என மனம் வாக்குக் காயம்பற்றி வருவனவாம். எல்லாத் தீங்குகளின பயனாக வரும் துன்பங்களையும ; தீங்கு - தீமைகளின பயன் ; ஐகாரம நீக்கப்பொருளின வந்தது ; உம்மை - முற்றும்மை. நல்லார் - சிவஞானிகள ; நல்லார - என்பர் எனக ;—(6) மந்தரம் - மேரு ; மிக்க உயர்ச்சி குறித்து நின்றது ; "விண்ணுற வடுக்கிய" (தேவா) என்ற கருத்து. பந்தனையவர் - பாசபந்தப பட்டவர் ; வினை சிந்தும் ..செல்வமும் மல்கும் - பாசநீக்கமும் சிவப்பேறும ; துன்ப நீக்கம - இன்ப ஆக்கம. செல்வம் - சிவச் செல்வம் ; முத்தித் திரு. நந்தி - இறைவர் பெயர் ; வினைகளை நந்தச செய்பவன. நந்துதல் - அழிதல ; குறைதல ;—(7) நாடினர் - நரகம் புகும தீநெறியிற் சென்று அப்பயன் நுகர்தலே நிச்சயமாகி நின்றவர் ; உரைசெய் வாயினர் - வாக்களவிலாயினும் என்பது ; வாக்கின் செயல ஏனை மனம் காயங்களின செயலை முன்னும பின்னும முறைப்படி அவாவி நிற்கும என்பது. உருத்திரர் - உருத்திர ருலகத்தினகண் ; ஏழனுருபு தொக்கது. வரதன் - வரங் கொடுப்பவன் ;—(8) அடுக்கல் - மலை ; மலங்கி - துன்பமடைந்து ; வாய்மொழி செய்தல் - சொல்லுதல் ; நலங்கொள் - நலம் கொள்வதற்குக் காரணமாகிய ;—(9) போதன்-தாமரைப போதில இருப்பவன்-பிரமன் ; போது - மலர் ; போதன கண்ணன் - தாமரைக் கண்ணன ; பாதம் - முடி - எதிர் நிரனிறையாக முடியையும் பாதங்களையும் என்க ; இரண்டனுருபுகள தொக்கன. அலந்து - வருந்தி ;—(10) கஞ்சி மண்டையர் - மண்டையோட்டில கஞ்சி உண்பவர் - புத்தர்கள ; கையில் உண் கையர் - கையில் பிச்சையேற்றுணணும

கீழ்கள்; சமணர். கையர் - கீழ்மக்கள்; சொற்சிலேடை. வித்தை - வித்தை; அவ்வித்தைகள் யாவும் பயனில்லாய் முடிந்து வேண்ட என்பது குறிப்பு ;—(11) சந்தை - சந்தசு என்பர் சந்தம் - வேதங்களுக்குரிய இசைப்பாகுபாடு; இத்திருப் பதிகங்களும் இறைவர் சொன்ன வேதங்களேயாம் என்று முடித்துக்காட்டியவாறு. "அருநெறிய மறைவல்ல முனி . திருநெறிய தமிழ்" என்று முதற்பதிகத்தில் தொடங்கிக் காட்டியருளியதற்கேற்ப எண்டுக் கடைசித் திருப்பதிகத்தின் முடித்துக்காட்டியருளினர். முன் கூறியவாறே சந்தையாந் தமிழ் என்று கூட்டியுரைத்தலும் கருதுக. திருவைந்தெழுத்தே மறைகளின் தாற்பரியமும் திருப்பதிகங்களின் தாற்பரியமுமாம்; பந்தபாசம் - பந்தமும் அதன் மூலமாகிய மலங்களும், அறுத்தல் - வலியில்லாமற் செய்தல். இது பதிகப் பயனும் சைவத் திறத்தின் உறுதிப் பயனுமாம்.

வேறு

3148. சீர்பெருகு நீலநக்கர் திருமுருகர் முதற்றொண்டர்
ஏர்கெழுவு சிவபாத விருதயர்நம் பாண்டாரே
ஆர்திருமெய்ப் பெரும்பாணர் மற்றெனையோ ரணைந்துளோர்
பார்நிலவு கிளைசூழப் பனிமலரோ டணைபுக்கார். கஉரு0

(இ - ள்) சீர்பெருகு தொண்டர் - சிறப்புப் பெருகும் திருநீலநக்க நாயனார், திருமுருக நாயனார் முதலாகிய திருத்தொண்டர்களும், ஏர்கெழுவு நம்பாண்டார் - தவவொழுக்கத்தின் பொலிவு மிகுந்த சிவபாதவிருதயரும் நம்பாண்டார் நம்பியும்; சீர் ஆர்திரு மெய்ப் பெரும்பாணர் - சிறப்பு நிறைந்த உண்மையொழுக்க முடைய திருநீலகண்டப் பெரும்பாணரும்; மற்று எனையோர் அணைந்துளோர் - மற்றும் எனையவர்களும் வந்து அணைந்தவர்களும், பார் நிலவு...உடனபுக்கார் - உலகில் நிலவிய சுற்றத்தார்கள் சூழ்ந்து வரத் தத்தம் மனைவியார்களோடு உடனுகப் புகுந்தனர்.

(வி - ரை) முதற்றொண்டர் - திருத்தொண்டத்தொகையிற் போற்றப்பட்ட திருத்தொண்டர்கள். இவர்களை முதலிற் கூறியது சிறப்புப்பற்றி பதினோராந் திருமுறை நூல்களைக் கோவைப்படுத்திய நம்பியாண்டார் நம்பிகள், நாயன்மார்களுள் இசை வல்ல காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான் பெருமாணாயனார் என்றிவர் பாடியருளிய நூல்களை அதனுள் முற்கண் வைத்துக் கோவை செய்தமை இதற்குக் கருதற்பாலது.

திருநாவுக்கரசு நாயனாரும், சிறுத்தொண்ட நாயனாரும், குங்குலியக்கலய நாயனாரும், இதன் முன்பே இறைவர் திருவடி சேர்ந்தருளினர் என்பது கருதப்படும்

சிவபாதவிருதயர் - நம்பாண்டார் - மணமகனாரையும் மணமகளாரையும் விடாது பற்றும் சிறப்புரிமையும் அணுக்கராந் தன்மையும் பற்றித் தொண்டர்களை அடுத்து இவர்கள் வைக்கப்பட்டார்.

மற்று எனையோர் அணைந்துளோர் - இவர்கள் வேற்றிடங்களினின்றும் திருமணங் காணவந் தணைந்தவர்கள்.

பார் நிலவு கிளை சூழ - கிளைஞர் என்ற தொடர்பு இவ்வுலகில் இப்பிறவி மட்டில் நிலவுவதா யொழிவது; இக்கிளை நீத்துச் சிவனுலகம் புகுமளவில் அத் தொடர்பு நிலவுவதன்று; பனிமலர் என்ற தொடர்பும் அவ்வாறேயாம்; ஆயினும், இந்தத் திருமணச் "சிறப்பினிலே" (3147) அத்தொடர்புநிலைபற்றியேயும் மணங்காணவந்த மக்கள் சோதியினுள் புகுந்தனர் என்பது; பார்நிலவியொழியும

தன்மையாயினும் என்க. இங்கில், அச் சுற்றம் - பன்னி என்ற சார்புபற்றி அவ்வவரும் முன்செய்த வினைபயனாலாயது என்க. இயற்பகையார், இளையான்குடிமாறர், அமர்நீதியார், சிறுத்தொண்டர் முதலியோர்கள் மனைவி மக்களுடன் கூட இறைவருலகம் புகுந்த வரலாறுகள் இங்கு நினைவு கூர்தற்பாலன. பார் நிலவு - பாரமட்டிலளவுபடும். அன்றியும், கிளைஞர் - மனைவியர் - முதலாகிய தொடர்புடையோர் எவ்வளவு இணைப்பிரியாத அன்புடையராயினும் (இறந்து பிறக்கும் இயல்புடைய) உலக இயல் மரணத்திலும் ஒரு சேரப் பிரியாது உடன் சாதல் என்பது இல்லை. ஈண்டு மீளாத நெறியாகி நித்தியானந்த உலகிற் சேரும் பெருநிலையில் இவர்கள் பிரியாது சேர்ந்த தன்மை இத் திருமணச் சிறப்பினாலும் பிள்ளையாரது திருவடிச் சார்பினாலும் ஆகியது என்று எடுத்துக்காட்டுவார் பார் நிலவு கிளைசூழப்பன்னியரோடு என்றார் என்றலுமாம்.

பன்னியரோடு - என்றவிடத்தும், முன் ' இவள்தன்னோடும் " (3140) என்ற விடத்திற்போலச் சமணரை மறுத்துப் பெண்பிறவியின் ஏற்றங் காட்டவந்த நிலை என்று இதற்கு விசேடங் காண்பாருமுண்டு ; அது சாலாமை முன் உரைக்கப்பட்டது. சமணர் கொள்கைக்கும் ஈண்டுக் கூறும் கருத்துக்கும் ஒரு பொருத்தமுமின்று. " இந்நிலவொழுக்கம் வந்து சூழ்ந்ததே " என்றதில் சூழத்தகாத - சூழலாகாத என்ற குறிப்பும், ஈண்டுப் " பார்நிலவு கிளை - பன்னியரோடு " என்றதில் சிவனுலகம் புகும் நிலையிற் பற்றத் தகாத என்ற குறிப்பும் போதருதலானும், சைவ நெறியில் ஆண் பெண் என்ற பாகுபாடு தவிர்த்து அநந்த வுயிர் செய்யும் கன்ம விசேடமே கருத வருதலானும் இவ்வுரைகள் எல்லாம் பொருந்தாமை யறிக.

பார் நிலவு என்றதனால் கிளை என்றும் பன்னியர் என்றும் வரும் தொடர்பு பற்றிய உணர்வு இவ்வுலகினோடு ஒழிவன என்பதாம். வினைப் பாசந் துணிவித்த உணர்வினராய் (3149) என்று மேற்கூறுதல் இவர் எல்லாருக்கும் பொருந்துவதாம் என்க. அதனை இறுதியில் வைத்துக் கூறிய கருத்தமது. அதன் மேல் (3150) பாட்டில் வருபவர்கள் உலகப் பற்றற்ற நிலையிற் கூடியவர்கள் என்பது.

மற்றனையோர் — என்பதும் பாடம். 1250

3149\. அணிமுத்தின் சிவிகைமுத லணிதாங்கிச் சென்றோர்கள்
மணிமுத்த மாலைபுனை மடவார்மங் கலம்பெருகும்
பணிமுற்று மெடுத்தார்கள் பரிசனங்கள் வினைப்பாசந்
துணிவித்த வுணர்வினராய்த் தொழுதுடன்புக் கொடுங்கினார்.

(இ - ள்) அணிமுத்தின...சென்றோர்கள் - அழகிய முத்துச் சிவிகை முதலாக முத்துச் சின்னங்கள் முதலியவற்றைத் தாங்கிச் சென்றவர்களும் ; மணி...மடவார் - மணிமுத்து மாலைகளை உரியவாறு அலங்கரிக்கும் பணி செய்த பெண்களும் ; மங்கலம்...எடுத்தார்கள் - மங்கலம் பெருகவரும் பணிகளை யெல்லாம் எடுத்தேந்தி வந்தவர்களும் ; பரிசனங்கள் - மற்றும் பணி செய்பவர்களும் ; வினைப் பாசம்...ஒடுங்கினர் - வினையால் வரும் பிறவிக்கேதுவாகிய பாசங்களை யெல்லாம் அறுத்த உணர்வுடையவர்களாய்த் தொழுதவாறே உடன்புகுந்து சோதிப் பொருளுள்ளே ஒடுக்கம் பெற்றனர்.

(வி - ரை) முன் பாட்டில் மணங் காணவந்த தொண்டர்களையும், மணத்தின் இன்றியமையாத மண மக்களின் பெற்றோர்களையும், கிளைஞர் - பன்னிகளையும் கூறினர்.

இப்பாட்டினால் மணத்தில் வெவ்வேறுவகைப் பணி செய்யப்பெற்றமையால் அந்நிலையில் உடனிருக்கப்பெற்ற மாதர்களைக் கூறினார்.

மேல்வரும் பாட்டில் தவநிலையினாலும், வழிபாட்டு நிலையினாலும், மற்றும் தெரியலாகாவகையில் சிவனது அருள்நிலையினாலும் மணத்தில்வந் தணைந்தார்களைக் கூறுவார்.

**அணிதாங்கிச் சென்றோர்** - மாலைபுனை மடவார் - **பணி முற்றும் எடுத்தார்** - **பரிசனம்** - என்று அவ்வவர் செய்த பணிகள் பற்றி உடம்பொடு புணர்த்திக் கூறியவாற்றால் அவ்வவரும் அவ்வப் பணிகள் காரணமாக வரும் தொடர்பினால் மணத்திற் சார்ந்து அப்புண்ணிய மேலீட்டினால் சோதியிற் புகப்பெற்றனர் என்பது குறிப்பு.

**அணிதாங்கி** என்றதனால் அணி என்பது சண்டு முத்துச் சின்னங்களும் முத்துக்குடை - முத்துப் பந்தர் முதலியனவும் ஏனை விருதுகளும் என்ற பொருளில் வந்தது. **அணிதல்** - முத்தினா லணியப்படுதல்.

**முத்தமாலை புனை மடவார்** - **புனை** - அலங்கரிக்கும் பணி செய்த என்றதாம்; முத்துமாலைக ளணிந்த பெண்கள் என்றுரைத்தனர் முன்னுரைகாரர்கள். சண்டுப் பெண்கள், அலங்கரிக்கும் பணி செய்தனர், மணமகளாரை அணிபுனைதலும் ஏனை மணவணி செய்தலும் அவர்களுக்குரியது என்பதாம் 3121 - 3127, 3128 - 3129 முதலியவை பார்க்க.

**மங்கலம் பெருகும் பணி முற்றும் எடுத்தார்கள்** - இவை அட்டமங்கலம் எனப்படும் விளக்கு, நிறைகுடம், கண்ணாடி, கவரி, கோட்டி, முரசு, பதாகை, இணைக்கயல் என்பவையும், சிவபெருமானுக்குச் சிறப்பாக ஆகமங்களுள் எடுத்தோதும் பிறவுமாகிய எல்லாம்; **முற்றும்** என்றதன் குறிப்புமது

**பரிசனங்கள்** - அட்டிற்றொழில் முதலாக ஏனை எல்லாவகைப் பணிகளையும் செய்யும் ஏவலாட்கள், "அமுது சமைத்தளிக்கும் பரிசனம்" (3329 = ஏயர் - புரா - 175) "திருமடத்தி லமுதாக்குவார்" (2465)

**வினைப்பாசம் துணிவித்த உணர்வினார்** - வினையின் காரணமாய் வரும் பிறவியும், அதனால் வரும் பற்றுக்களும், அவற்றிற்கெல்லாம் மூலகாரணமாகிய பாசம் என்னும் மூலமலம் (ஆணவம்) ஆகிய எல்லாவற்றையும் அறவே ஒழித்துவிட்ட உணர்வு ஒன்றே கொண்டவர்களாகி, இது முன்கூறிய அனைவரோடும் கூட்டுகின்றது

**தொழுது** - பிள்ளையாரையும் இறைவரையும் தொழுதுகொண்டவரே; பாசந் துணிவித்தபோது இறைவர் சார்பொன்றே நிகழ, "மெய்ஞ்ஞானந் தானுவிரோ டுத்துவிதம்" சார்ந்து என்க **தொழுது** - தொழுதமையால் என்று காரணப்பொருள்பட வுரைத்து இதுவரை பிள்ளையாருக்கும் தேவியாருக்கும் ஏவற்பணி செய்து வழிபட்ட காரணத்தினால் உடன்புக்கனர் என்றலுமாம்

**உடன் புக்கு** - சிவாத்துவிதானந்த நிலையில் உடனாகச் சோதியினுள்ளே புகுந்து. **ஒடுங்கினார்** - மாசங்காரத்தில் உயிர்கள் சங்கார காரணனாகிய சிவனுள்ளே மாயை பற்றுக்கோடாக ஒடுங்குவன என்பது ஞானநூல் முடிபு. "ஒடுங்கி" என்பது இறைவருக்குப் பெயராய் வருவதும் காண்க (போதம் - 1). 1251

3150. ஆறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவருங்
கூறுமறை முனிவர்களுங் கும்பிடவந் தணைந்தாரும்
வேறுதிரு வருளினால் வீடுபெற வந்தாரும்
ஈறில்பெருஞ் சோதியினு ளெல்லாரும் புக்கதற்பின், கஉ௫உ

3151\. காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலங் கொண்டருளித்
தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனானார். கஉ௫

3150\. (இ - ள்) ஆறுவகை...அருந் தவரும் - சைவ நெறியின் அகச் சமயங்களாகிய அறுவகைச் சமயநெறியினும் நின்ற அருந் தவத்தோர்களும்; அடியவரும் - திருத்தொண்டர்களும்; கூறுமறை முனிவர்களும் - வேதவிதி யொழுகும் முனி புங்கவர்களும்; கும்பிட வந் தணைந்தாரும் - கும்பிடும் கருத்துடன் வந்து கூடியவர்களும்; வேறு...வந்தாரும் - முன் சொன்னவாறுள்ள எக்காரணமும் அறிய முடியாதவாறு திருவருள் வசத்தாலே வீடு பெறுதற்கு வந்தணைந்தவர்களும், ஈறில்... ...புக்கதற்பின் - ஈறு இல்லாத பெரிய சிவ சோதியினுள்ளே அனைவரும் புகுந்த பின்னர், கஉ௬உ

3151\. (இ - ள்) காதலியை...வலங்கொண்டருளி - தேவியாரைக் கைப்பிடித்துக் கொண்டவாறே அப்பெருஞ் சோதியினை வலமாக வந்தருளி; தீதகற்ற வந்தருளும் திருஞான சம்பந்தர் - உலகில் தீமையைப் போக்கிச் சைவம் விளங்கவென்றே வந்தருளிய திருஞான சம்பந்தப் பிள்ளையார்; நாதன்...புகுவார் - இறைவராது அழகியதாகிய வளர்ந்தெழுகின்ற சிவ சோதியினை அணைந்து அதனுள்ளே புகுவாராய், போத நிலை...உடனானார் - போதம் தமுவுமிலை முடிந்தமையினாலே உள்புகுந்து ஒன்றாகச் சேர்ந்து சிவானந்தாத்துவிதமாகிய உடனாந் தன்மையிற் பரமுத்திநிலையைத் தலைக்கூடியருளினார். கஉ௬௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3150\. (வி - ரை) ஆறுவகைச் சமயத்தி லருந்தவர்-இவர்கள் அகச்சமயத்தினர் என்று சைவ சோபான முறையில் வகுக்கப்படுவர் இவர்களியல்பு முன் "அறுவகை... தவத்தி னுள்ளோர்" (3101) என்ற இடத்தில் விரிக்கப்பட்டது "எத்தவத்தோர்க்கு மிலக்காய் நின்ற வெம்பெருமான்"-பிள் - தேவா - புகலி - விழி - நட்டபாடை (10).

அடியவரும் - இவர்களியல்பும் முன் (3201) "மறுவறு...தொண்டர்" என்று உரைக்கப்பட்டமை காண்க.

கூறு மறை முனிவர்கள் - மறை முனிவர்கள் - மறையவர்களுள்ளே சிறந்த வைதிக நெறி ஒழுகும் நாலவகை ஆச்சிரமங்களில் நின்ற பெரியோர்கள்.

கும்பிட வந்து அணைந்தார் - இங்கு முன்கூறிய மூவகைப் பாகுபாட்டினுள் அமையாது கும்பிடுதற் கென்றெண்ணி மணச் சிறப்பில் வந்து கூடி அணைந்தவர்கள்; இவர்கள் பிள்ளையாரது மண எழுச்சியில் சீகாழியினின்றும் உடன்கூடிப் போந்தவர்களும், வழி இடையிலும் திருநல்லூரிலுமாக வந்து கூடியவர்களுமாம். முன்சொன்ன மூவகையினரும் கும்பிட வந்தவர்களேயாவர்; அவர்களோடு அவ்வகையுட் பாகுபாடு பெறுதவர் என்பார் இவவகையை இறுதியில்வைத் தருளினார்.

வேறு திருவருளினால் வீடுபெற வந்தோர் - வேறு - முன் இரண்டு பாட்டுக்களினும், இப்பாட்டினில் முன்னரும் கூறிய வகைகளில் அல்லாது வேறாகியவர்கள். இவர்கள் அங்கு வந்து சேர்தற்குரிய காரணம் வேறு ஒன்றும் வெளிப்படையாகக் காண்பதற்கில்லை; ஆயினும் அவர்களும் வந்தணைந்து முன்கூறிய ஏனையோர்களுடன் சோதியினுட் புகுந்து வீடு பெற்றனர். ஆதலின் இறைவர் திருவருளே அவர்களை வரச் செய்து வீடு பெறுவித்தது என்பார் திருவருளினால் வீடுபெற வந்தோர் என்றார்.

**ஈறில் பெருஞ்சோதி** - "ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ் சோதி" என்பது திருவாசகம் (திருவெம்பாவை); இதனையே "அந்தமில் சிவனார்" (3140) என்று முன் கூறியருளியது காண்க; அனந்தேசர் முதலாகிய பதமுத்திகளின் அதிபரன்றி முழுமுதலாகிய பரசிவம், தொடக்கமும் நிலையும் இறுதியுமில்லாமலும், தனக்கு மேற்பட்ட சோதியுள்ள பொருள் வேறொன்றில்லாமலும் உள்ளது; இந்த அறிவொளிப் பிழம்பு; ஏகதேசத்தில் தாமும் சோதிகளேயாயினும் பதமுத்திக் கடவுளர்கள் காலாந்தரத்தில் முழுமுதலாகிய சிவத்துள் ஒடுங்குதலின் ஈறுடையவர்களேயாவர். இதுபற்றிக் "காரணபங் கயமைந்தின் கடவுளர்தம் பதங்கடந்து, பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்த" (சித்தத்தைச் - சிவன்பாலே வைத்தார் - புராணம் - 1) என்பது காண்க.

**எல்லாரும்** - முற்றும்மை. அங்கு நின்றவர் அனைவரும் மேலும் தூரத்தே நின்றும் தேடிக்கொண்டு வந்தவர்களுமாகிய எல்லாரும் உடன் சாரலாகாத காரணத்தால் ஒதுங்கி நின்ற ஒரு பெண்ணும் அழைக்கப்பெற்றுச் சோதியினுட் புகுந்தனள் என்று தல வரலாறு பேசும்.　1252

3151. (வி - ரை) **காதலி** - தேவியார் - மனைவியார். பாச சம்பந்தமான காதலின் சார்பு பற்றிய காரணத்தாலே காதலி என உலகியலில் வழங்கும் காரணப்பெயர் ஈண்டு இடுகுறியளவாய் நின்றது, இங்குக் காதல் எனும் பாசப் பற்றுப் பிள்ளையார்பால் விளைநிலம் இல்லாமையால் என்க; மறைவழக்கர் உலகியலில் நின்று நிலவுதல் காட்டும்வழி நாடகம்போல இங்கு இத்திருமணம் நிகழ்ந்தது என்பது முன் உரைத்தவாற்றால் அறியவுள்ளது (3140);

**திருவருள் ஆணைவழிப் பிள்ளையார் காதலியைக் கைப்பற்றிக் கொண்டு** - இவ்வுலகை விட்டு நீங்கிற்றேயன்றிப் பெண்ணுடன் வாழ்தலை வெறுத்து நீங்கிற்றிலர் என்று இங்கு விசேட ஆராய்ச்சி செய்வாருமுண்டு. அத்தகைய உலகியல் ஆராய்ச்சிகள் எழுவதற்கு இங்கு இடமேயில்லை யாதலின் பெண்ணுடன் உலகர் வாழ்ந்து இல்லறத்தில் நின்று தாம் எடுத்த பிறவியில் ஊழ்வினையாகிய கருமப் பகுதிகளை அனுபவித்துக் கழிவு செய்து சிவபுண்ணிய மேலீட்டினாலே இறைவனை யடையுமாறு உலகியலியல்பு; இவையெல்லாம் பாசமுடைய யான்மாக்கள்பால் செல்லுமேயன்றிப் பாசம் அற்ற இறைவராகிய பிள்ளையாரிடத்தும், இப்புராணத்துள் வரும் பெரியோர்பாலும் செல்லத்தக்கனவல்ல. பிள்ளையார் பெண்ணை வெறுத்தாரில்லை என்பதுண்மை, ஆயின் விரும்பினாருமல்லர் என்பதும் கண்கூடு. உலகர்க்கு மனைவியுடன் வாழும் இல்லறவாழ்வு இறைவனூல்களுள் விதிக்கப்பட்டது. அது மக்கட்குப் பாசநீக்கம் செய்தற்பொருட்டு வேண்டப்படுவன என்பதனைப் பிள்ளையார் முன்னர்த் திருமருகலில் வணிகப் பெண்ணுக்கு, "கானிலத்தி லின்புற்று வாழுமவண்ணம்...மணம் புணரும் பெருவாழ்வு வகுத்துவிட்ட" அருளிப்பாட்டினாலும் அறியலாம் (2381), பார்வதியம்மையார் திருமணம், தெய்வயானையம்மையார் திருமணம் என்பனவற்றின் உண்மைபோல இங்கும் உலகினாக்கருளும் அளவுமட்டுமே கருத்துட் கொள்ளத்தக்கது, அன்றி மேற்செல்வதெல்லாம் பொருந்தாவெனக. இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே என்றதனால் உலகியலில் வரும் இல்லறத்தைப் பிள்ளையார் சார்தலை வெறுத்தொதுக்கினர் என்றது அறியப்படும்.

**வலங்கொண்டருளி** - திருமணத்தில் எரிவலங்கொள்ளும் சடங்கு காட்டவேண்டி எழுந்த பிள்ளையார் "விருப்புறு மங்கி யாவார் விடையுயர்த்தவரே யென்று" (3139) கோயிலை நோக்கி வந்தாராதலின் இங்குப் பெரிய சோதியாய் நின்ற இறைவரை வரி

புருவததினை வலங்கொண டருளினர்; அச் சடஙகினை நிறைவேற்றிக் காட்டியருளிய படியும், இறைவரை வலஙகொண்டு ஏத்திச் சோதியினுள்ளே புகும் விதியின்படியும் காண்க. இதனாலும் இததிருமணம் உலகியல் நிலையினின்று ஆயபபடுவதொன்றனறு என்பது.

**தீதகற்ற வந்தருளும் திருஞான சம்பந்தர் - தீதகற்றல்** - "பரசமய நிராகரித்தல்"; பரசமய நிராகரிப்புமி திருநீற்றின ஆக்கமும் ஆகிய இரணடுமே பிள்ளையாரின திருவவதார உளளுறையாவன (1917 - 1921 - 1924 முதலியவை பார்க்க); இஙகுத் தீதகற்றுதல் ஒன்றுமே கூறபபட்டதென்னை? எனின், நோய நீஙகினவழிச் சுகம இயல்பிலே பின்பறறி வரும் என்னுமுறைபபடி சைவத திருநீறறு நெறிக்குப பரசமயங்களால் நேர்ந்த இடையூறுகள அகறறபபட்டபோது நீற்றின் விளககம இயல்பின் விளைவதாம் எனக. சைவநெறி எனபது இறைவரது மெய்ஞ்ஞான நெறியாதலின அஃது அழிககலாகாப பொருளாம். விளககினைக குடததை யிட்டு மறைத்தல்போலச் சைவநெறி விளங்காமை மாததிரையே பரசமயஙக ளியறறிய தீஙகு; மறைவுபடுததிய குடததை அகறறியபோது விளககுத தானே விளங்குதல் போலவும், மேகம நீங்கிய போது சூரியன் ஒளி விரிதல் போலவும் காண்க; ஆயின முனனா இரண்டினையும் கூறியது உலகினருககு விளககமும், மனவெழுசசியும், ஊக்கமும் விளைத்தறபொருட்டுத தூண்டியறிவுறுத்தல குறிகக என்க.

**தீதகற்ற வந்தருளும் - வருதல்** - திருவவதரித்தல்; ஏனை மக்கள் வருதல்போலக் கரும வயததாலன்று எனபது வறபுறுததபபட்டது.

**திருஞான சம்பந்தர்** - எனற பெயராற் கூறியவாற்றானும் அந்நிலை விளக்கபபட்டது. முழுதும சிவஞானமே நிறைவாயின மூர்ததிக்கு உலகியலில் ஒருபற்றும் பற்றுமையும் உணாத்தபபட்டமை காண்க. ஈணடுச் சரித நிறைவாதலின் அத்திருப பெயராகிய "நாம மந்திர"த்தைக கூறித் துதிதது அருச்சிதது நிறைவாககிய குறிபபுமாம். "ஞானசம் பந்த ரெனு நாமமந் திரமும சொல்ல" (2619).

**நாதனெழில் வளர்சோதி - நாதன் - இறைவா - முழுமுதல்வா**; தனககேயுரிய இறைமைக குணததால் இவ்வாறு இவர்களை ஆட்கொணடு திருவடிக்கீழக கொள்ள இவவொளியுருவெடுததார் என்பது; "நாதனே" (3143); "நாதனுமம" (தேவா). **எழில் வளர் சோதி** - எழில் - காட்சியானும் பயனாலும் வரும அழகு, "செந்தீயின உருவாளன்" எனபதன்றிச சுடுதல் முதலிய செயலானனறு என்க; "தண்ணிழலாம் பதி", "திருவடி நீழல்" எனபன காணக. **வளர்** - வளர்கினற என்றும் அழிதலில்லாத; "ஈறில் பெருஞ்சோதி" (3150).

**நண்ணி** - சோதியினை அணுகி; அணைந்து; **அதனுள்** - சோதி வாயிலினுள்ளே.

**புகுவார்** - புகுவாராகி; புகும செயலை மேற்கொணடு; முற்றெச்சம். **புகுவார்** புக்கொன்றி உடனானார் என்று கூட்டுக.

**போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி உடன் ஆனார் - போதநிலை முடிந்தவழி** என்றது காணபான - காட்சி - காட்சிபபொருள் என்ற மூனறுணாவுள் முனனையவிரண்டும் தோன்றாமல் ஞேயமொன்றே தோன்றநிற்கும் நிலையில் நிறகும் என்பதாம், திருவடி மறவாது அதனுளளே அடங்கித் தானற்று நிற்கும் நிலை; சிவானந்த நிறைவு. **ஒன்றி** - இரண்டறறு; **உடன் ஆதல்** - ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றுமிரணடுமின்றாகாமல் பிரிவறியாது நிற்கும் நிலை. முன் கூறியவா எல்லாரும் **புக்கார்** - புக்கொடுங்கினர் - என்ற ஆசிரியா, இஙகுப் பிள்ளையார் **போதநிலை முடிந்த வழிப் புக்கொன்றி உடனானார்** என்றதென்னை? எனின, பிள்ளையார் முன்னை நிலையில் (பணடு

திருவடி மறவாப் பான்மையோராய் முத்த நிலையில் இருந்தவர்; அப்போது அவருக்குப் போதநிலை - அஃதாவது சிவனையன்றி வேறு நிலைகளும், யானறிந்தேன் அறிகின்றேன் என்பது முதலாகிய நிலைகளும், ஏனை உலக பதார்த்தங்களும், உலகமும் போதப்படா - உணர்ச்சிக்கு வாரா; அதன்பின் வினையாலன்றித் திருவருளால் வந்தபோது மூவாண்டு வரை ஒரோகால் முன்னைநிலை நினைவுக்கு வந்தபோது வெருக்கொண்டாற் போலக் குறிப்பு அயலாய் அழுதருளினார். மூவாண்டில் ஞானமுண்டருளிய பின் தாம், பரமே பார்த்திருந்தபடி முன்னையிற்போலவே சீவன்முத்த நிலையிற் சரித்தனர். ஆனால் உலகரின் பொருட்டுத் திருவருளால் வந்தமையின் உலகமும் உலக நிலைகளும் புலப்பட்டன; ஆயினும் வாசனைமலமும் அற்ற பெருமானாதலின் அவ்வுலகத் தோற்றங்கள் பிள்ளையார்பாற் சாராது வினைக்கு முதலாகாதபடி யொழிந்தன. "ஐயனேயஞ்ச லென்றருள் செயவெனை"; "ஈவதொன்றெமக் கில்லையேல்" முதலிய விண்ணப்பங்க ளெல்லாம் பிள்ளையாருக்கு உலக பந்தம் விளையாது பிறபொருட்டே நிகழ்ந்தொழிந்தன. "உடையாய் தகுமோ விவளுண் மெலிவே", "மங்கையை வாட மயல்செய்வ தோவிவர் மாண்பே", "அட்டிட்டல் காணதே போதியோ பூம்பாவாய்", "எமைத்தீண்டப்பெறா திருநீல கண்டம்", "காசு நல்குவீர்", "கதவந் திருக்காப்புக் கொளும்" என்பன முதலாக வந்தனவெல்லாம் பிறர் துன்பங் கண்டிரங்கிய நிலையில் உலகின் பொருட்டு எழுந்தனவேயன்றித் தம்பொருட்டன் முதலின் பற்றுக்களாக விளையாதொழிந்தன. இப்போது இவ்வாறு தாம் வந்தருளிய உள்ளுறை நிறைவாகியதனால், அவ்வாறு உலகமும், அதன்பொருட்டுத் தாமும் இறைவரும் பிரித்து அறியவரும் நிலையும் இன்றாதல் குறிக்கப் போதநிலை முடிந்தவழி என்றார். போதம் - சீவபோதம் என்பாருமுண்டு.

புக்கு ஒன்றுதல் - முன்னைய திருவடி மறவாத ஒன்றுபட்ட நிலையடைதல், இடையில் உலகர் பொருட்டுப் பூதமுதல் நாதம் வரையில் தோன்றிய உலகத் தோற்றமாகிய பிரித்தறியு முணர்வு தோன்றுதொழிய முன்போலவே உள்ள நிலையடைந்தனர் என்க. இது பிள்ளையார் சோதியிற் புகுந்து பெற்ற நிலைகளும், ஏனையோர் பெற்ற நிலைகளும் உள்ள வேறுபாடு. எல்லாரும் புக்கதறபின் தாமும் தேவியாரும் புக்கது பிள்ளையாரது திருவருளின் பெருமையினை மேலும் விளக்குவதாகும்.

காதலி - இவ்வம்மையார் பெயர் சொக்கியார் என்பது கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றதென்றும் கூறுவர்.

வலஞ் செய்தருளி—என்பதும் பாடம் 1253

3152. பிள்ளையா ரெழுந்தருளிப் புக்கதற்பின் பெருங்கூத்தர்
கொள்ளுநீ டியசோதிக் குறிநிலையவ் வழிகரப்ப
வள்ளலார் தம்பழைய மணக்கோயி றோன்றுதலுந்
தெள்ளுநீ ருலகத்துப் பெற்றிலார் தெருமந்தார். ௧௨௫௪

(இ - ள்) பிள்ளையார்...பின் - பிள்ளையார் சென்றருளி உட்புகுந் தடைந்திய பின்னர்; பெருங்கூத்தர்...கரப்ப - பேரானந்தக் கூத்தராகிய இறைவர் இவ்வாறு மணத்தில் வந்தோரையும் பிள்ளையாரையும் முத்தியில் உடன்கொள்ளும் அளவும் நீடியிருந்த சோதிக் குறிநிலையும், அதனை உட்புகக் காட்டிய அந்த வழியாகிய வாயிலினையும் மறையும்படி செய்ய; வள்ளலார்.. தோன்றுதலும் - சிவலோகத் தியாகேசரது பழைய பெருமணக் கோயில் தோற்றப்படுதலும்; தெள்ளுநீர்...தெருமந்தார் -

தெளிந்த நீருடைய உலகத்தில் இந்தப் பேற்றினைப் பெறாதவர்கள் மயங்கி வருந்தினார்கள்.

(வி - ரை) எழுந்தருளி - சோதி கண்டு, தாம் நின்று, நமச்சிவாயத் திருப்பதிகம் பாடிய நிலையினின்றும் சோதியை நண்ணி. கொள்ள - தமக்குள் சேர்த்து ஒடுக்கிக் கொள்ள.

சோதிக் குறிநிலை அவ்வழி - சோதியாகிய இறைவரது குறிநிலையும், அதனுள் புகுவான்மாக்கள் யாவரும் வந்தடையும்படி காட்டிய அவ்வழியும். வழி - வாயில்; சோதியின்கண் தோன்றும் குறிநிலையாகிய வழி என்றலுமாம்.

கூத்தர்...காப்ப - கூத்தர் - இறைவர்; "முத்தி, நான்ற மலாபபததே நாடு" என்றபடி இங்கு முத்தி தந்தருளியது இறைவரது தூக்கிய திருவடியே எனப்படும் திருவடி தூக்கலே கூத்தாகும், ஆதலின் ஈண்டுப் பெருங்கூத்தர் என்றார்.

வள்ளலார்-இங்கு, இச்சரித நிகழ்ச்சியினாலே - சிவலோக பதவியினைத் திறந்து யாவரும் கொள்ளும்படி அள்ளியிட்டதனால் இவருக்கு சிவலோகத் தியாகர் எனப் பெயர் வழங்கும். சிவலோகத்தினை வரையாது கொடுப்பவர்

பழைய மணக்கோயில் - பழைய - சோதியும் வாயிலும் காட்டுதற்கு முன் இருந்த; மணக்கோயில் - பெருமணம் எனனும் கோயில்.

தெள்ளும் நீர் உலகத்து - தெள்ளும் நீர் - தெளியும் நீர்க்கடல் சூழ்ந்த எனக. தெள்ளு நீர் - இதன் உண்மை தெளிந்துகொள்ளும் நீர்மை - பண்பு - உடைய என்றலுமாம். பெற்றிலார் - முன் கூறியபடி பெறும் பேறிலலாத உலகவர்.

தெருமந்தார் - தெருமருதல் - ஒன்றும் தோன்றாமல் மயங்கி வருந்துதல்.

கொள்ளநீடிய—பேறில்லார்—என்பனவும் பாடங்கள். 1254

3153. கண்ணுதலார் திருமேனி யுடன்கூடக் கவுணியனார்
நண்ணியது தூரத்தே கண்டுநணு கப்பெறா
விண்ணவரு முனிவர்களும விரிஞ்சனே முதலோரும்
எண்ணிலவ ரேசறவு தீரவெடுத் தேத்தினார். கஉருரு

(இ - ள்) கண்ணுதலார்...நண்ணியது - இறைவரது திருமேனியுடன்கூடக் கவுணியர் பெருமானார் சென்று சேர்ந்ததனை; தூரத்தே கண்டு - தாம் தாம் நின்ற தூரமாகிய இடத்தினின்றபடியே கண்டும்; நணுகப் பெறா - வந்து அடையும் பேறு பெறமாட்டாத; விண்ணவரும்...எண்ணிலவர் - தேவர்களும் முனிவர்களும் பிரமதேவனே முதலாகிய பெருந்தேவர்களும் ஆகிய எண்ணிலாதவர்கள் தங்கள் துக்கம் தீரும்படி எடுத்துத் துதித்தார்கள்.

(வி - ரை) கண்ணுதலார் - நுதற்கண்ணை யுடையவர். நுதற்கண் அக்கிகண்ணுதலானும், ஈண்டு "விருப்புறு மங்கி யவார்" (3139) என்று பிள்ளையார் திருவுள்ளங்கொண் டருளியதற்கேறப அங்கி யுருவாகிய பேரொளிச் சோதியாக இறைவர் நின்றருளியமையாலும், அவ்வாறு நின்று அருள் நோக்கம் செய்து வந்தோர் அனைவரையும் வீடுபேறு அருளி ஒடுக்கிக் கொண்டமையாலும் இக்குறிப்பெல்லாம் பெற இவ்வாற்றாற் கூறினார். திருமேனி - சிவஞானச் சோதியாகிய திருமேனி.

உடன்கூட - "அத்துவி தானந்த வகண்டபரி பூரணத்தில் நித்தியமாய் வாழ்ந்து" இரண்டற நிற்க; "போதநிலை...உடனானார்" (3151) என்ற நிலையில் நிற்க,

**தூரத்தே கண்டு நணுகப் பெறு** - தூரத்தேயிருந்து கண்டமையால் பக்கத்தில் வந்து அடையும் பேறு பெறாத; வந்து அடையும் பக்குவமின்மையால் தூரத்தில் நின்றனர். கண்டு - கண்டாராயினும் என்க; காணப்பெற்றாராயினும் நணுகப் பெற்றாரிலர் என்பது. தூரத்தே என்றது கன்மபரிபாகம் இல்லாமையால் அகல நின்றார் என்பது குறிப்பு. தூரம் - விசும்பு; "விசும்பினமீது" (3102) - (3103);

மண எழுச்சியுடன் கூடி மணங்காண வந்தோர் கூட்டத்தினராய் முன் (3097 - 3102) கூறப்பட்டவர்களுள் சோதியினுட் புகுந்தோர்களையெல்லாம் வகைப்படுத்தி முன்னர்க் (3148 - 3150) கூறினார் அவ்வாறு அவர்கள் உடனுகிய பின் சோதி வாயில் காந்ததனைக் கூறினார் அதன்பின் அப்பேறு பெறாத உலகினரை (3152) முன் பாட்டாற் கூறி இப்பாட்டினால் தூரத்தே கண்டு நின்றும் பேறு பெறாத விண்ணவர் முதலியோரைக் கூறும் கவிநயமும் அமைதியும் கண்டுகொள்க.

**ஏசறவு** - துக்கம், விருப்பம் என்றலுமாம். "திருவேசறவு" என்ற திருவாசகப் பகுதியின் கருத்துக் காண்க "தாருற்ற வேசறவைத் தோழியாமுன் பேசுவார்" (11-ம் திருமுறை - ஆளு - திருவுலா - 138) ஏசறவு தீர - விருப்பம் நிறைய; ஆசை தீர என்றலுமாம்.

முதலானோர் எண்ணியவ ரேசறவு—என்பனவும் பாடங்கள் 1255

3154\. அருந்தமிழா கரர்சரிதை யடியேனுக் கவர்பாதந்
தரும்பரிசா லறிந்தபடி துதிசெய்தேன்; ருரணிமேற்
பெருங்கொடையுந் திண்ணனவும் பேருணர்வுந் திருத்தொண்டால்
வருந்தகைமைக் கலிக்காம னாசெய்கை யுழுத்துவேன். ௬௨௫

(இ - ள்) அருந்தமிழாகரர்...துதி செய்தேன் - அரிய தமிழாகரராகிய ஆளுடைய பிள்ளையாரது திருச்சரிதத்தினை அடியேனுக்கு அவருடைய திருவடிகள் அறிவித்துத் தந்தருளிய பணியினளவு அறிந்தவாறே துதிசெய்து கூறினேன், பெருங் கொடையும்...வழுத்துவேன் - இனிப் பெரிய கொடையும், உறுதிப்பாடாகிய வலிமையும், பேருணர்வும் திருத்தொண்டு செய்த காரணத்தால் பெற்ற பண்புடைய வயார்கோன் கலிக்காம நாயனார் செய்த திருத்தொண்டின் திறங்களைத் துதிக்கத் தொடங்குவேன்

(வி - ரை) இதனால் ஆசிரியர் தமது நியமப்படி இதுவரை கூறிவந்த சரிதத்தை முடித்துக்காட்டி, இனி மேல்வரும் சரித்த் தொகுத் தோற்றுவாய் செய்தருளுகின்றார்

**அருந் தமிழாகரர்** - ஆகரம் - உறைவிடம், பிறப்பிடம் என்றலுமாம். தமிழாகரர் - தமிழுக்குறைவிட மானவர், அருந்தமிழ் - பிறவிப்பிணி தீர்க்கவல்ல தன்மைக்கும் சிறப்பு அருமைப்பாட்டினைத் தனதுரிமையாகக் கொண்ட தமிழ் "அருந்தமிழின் புனை" (1981) என்றவிடத்தும், பிறாண்டும் உரைத்தவை எல்லாம் இங்கு நினைவு கூர்தற் பாலன. அருந் தமிழாகரர் என்றதொரு தன்மையினாலே முன் கூறியபடி பிள்ளையாரது சரித முழுமையும் குறிப்பிற் பெறவைத்த தெய்வக் கவிநலம் காண்க. என்னை? பிள்ளையாரது தமிழ் அவர் சிவஞானம் பெற்றமையால் போந்த "ஞானத்தமிழ்" என்றும் அடைந்தோரது பிறவி நீக்கும் தன்மை வாய்ந்ததென்றும் பேசப்படுவது; "என்னை தனதுரையாக" (தேவா) என்றபடி அஃது இறைவர் திருவாக்காகிய வேத சிவாகமங்களோ டொப்பாகிச, சைவத்தின் முடிந்த பயன்களாகப் பேசப்படும் பாச நீக்கமும் சிவப் பேறுமாகிய இருபெரும் பயன்களையும் தர வல்லவாய் விளங்குவதற் கேற்பப் பரசமய நிராகரிப்பும் திருநீறறி ஞக்கமும் அருளியது; பிள்ளையாரது சரிதத்தினுள் வரும் வரலாறுகள் எல்லாம் இவ்வகையினுள் அடங்குதல் காண்க.

அடியேனுக்கு - அறிவித்தாலன்றி அறியும் ஆற்றலில்லாத அடியேனுக்கு என்பது; தொடக்கத்திற் "பாதமலர் தலைக்கொண்டு" (1899) என்றபடியே, ஈண்டு முடிவிலும், அவரது திருவடிகளைத் தலைமேற் சூடிய புண்ணியத் துணை காரணமாக என்று காரணக் குறிப்புப் பெற அடியேனுக்கு என்று ஓதினார்.

அவர் பாதம் தரும் பரிசால் - "பாதமலர் தலைக்கொண்டு" என்று மேற்கொண்ட அத் திருப்பாதம் என அகரச்சுட்டு வருவிக்க. பாதமே அறியாமையை நீக்கி அடியார்க்கு ஞானத்தை அருளுவது என்றலுமாம்; "உறுகாத தாங்கிய மதனுடைநோன்றாள்" (முருகு)

தரும் பரிசால் அறிந்தபடி - தருதல் - அறியத் தருதல்; அறியும்படி செய்தல். தரும் பரிசால் - முற்றும் அறிதல் எனது ஆற்றலுக்கு மேற்பட்டதாதலின் எனது குறைவுடைய சிறு பண்புக்கேற்ப அறிவிக்க அறிந்தவாறே; அறிந்த பொருளை அறிந்த அளவில.

துதி செய்தேன் - வழுத்துவேன் - துதி செய்தேன் என்ற இறந்தகாலத்தினாலே இதுவரை கூறிய சரிதம் என்றும், வழுத்துவேன் என்ற எதிர்காலத்தினால் இனிக் கூறும் சரிதம் என்றும் உணர்த்தியவாறு. இப்புராணத்துள் சரிதம் கூறுதல் என்பது துதி செய்தலே யன்றி மற்றில்லை என்றபடி.

தாரணிமேல்...வருந்தகைமை - என்று தோற்றுவாய் செய்த தன்மையினாலே ஏயர்கோன் கலிக்காம நாயனாரது சரிதக் குறிப்பு உணர்த்தியவாறு, சரித நிகழ்ச்சிகள் காண்க. இவ்வாறே பிள்ளையாரது சரிதத் தோற்றுவாயினுள் "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப், பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத" (1899) என்று அவர்தம் பெருஞ்சரித உள்ளுறை யெல்லாம் காணவைத்த திறமும் கண்டுகொள்க.

திண்ணனவும் - உறுதிப்பாடு பெற்ற மனவலிமையும் தோள்வலிமையும் குறித்தது.

திருத்தொண்டால் வரும் - திருத்தொண்டின் காரணமாகப் பெறவரும். இவர், "திருப்புன்கூர்க் கதிகமாயின திருப்பணி யனேகமுஞ் செய்" தமையும், இருபத்துநான்கு வேலி நிலம் தந்தமையும், "எம்பிரா னெந்தை தந்தை தந்தையெம் கூட்ட மெல்லாந், தம்பிரா னீரே யென்று வழிவழிச் சார்ந்து வாழு, மிம்பரின் மிக்க வாழ்க்கை" (ஏயர் - புரா - 392 - 3546) என்று கூறும் திருத்தொண்டின் வைத்த பெருமிதமும், பிறவும் காண்க.

செய்கை - வரலாறு; உடைவாளினால் வயிற்றினைக் கீறிக்கொண்ட செயலும் குறிப்பு.

தண்ணளியும்—என்பதும் பாடம். 1256

## திருஞானசம்பந்த நாயனார் புராணம் முற்றும்

*திருஞான சம்பந்த நாயனார் திருவடி வாழ்க!*

*திருச்சிற்றம்பலம்*

---

**சரிதச் சுருக்கம் :** [1 முதல் 100 பாட்டுவரையில் உள்ள சரிதச் சுருக்கம் முன் 21 சஞ்சிகையிற் றரப்பட்டது; ஆண்டுக் காண்க. (IV - பக் - ௧௨௦ - ௪௨௨)]

## முதலாவது தலயாத்திரை

திருக்கோலக்காவில் இறைவரை வணங்கி "மடையில் வாளை" என்னும் திருப்பதிகத்தைத் தொடங்கிக் கையினால் தாளமொத்தத் துதித்துப் பிள்ளையார் பாடும்போது இறைவரருளால் "திருவைந்தெழுத்து" எழுதப்பட்ட செம்பொற் றாளங்கள் அவரது கையில் வந்தன. அது கண்டு அவற்றை முடிமேல் வைத்துத் தொழுது மகிழ்ந்து பதிகத்தை நிறைவித்தருளினர். அத்திருத்தாளம் ஓங்கிய நாதத்தளவிலும் சிறந்திருந்தமை கண்டு தும்புரு நாரதர் முதலாயினோரும் துதித்தனர். பிள்ளையார் கையில் திருத்தாளத்தினுடன் நடந்து வரும்போது தாதையார் அவரை எடுத்துத் தோளின் மேல் தரித்துக்கொள்ளச் சீகாழிக்கு எழுந்தருளித் தோணியப்பரை வணங்கி முன் பாடிய தக்கராகப் பண்ணில், அந்தக் கட்டளையில் "பூவார் கொன்றை" என்று தொடங்கும் பதிகத்தைப் பாடித் திருத்தாளத்தினால் ஒத்தறுத்துத் துதித்துத் திருமாளிகை சென்று பதியவர்க்குத் தமது காட்சி கொடுத்து வீற்றிருந்தருளினர்.

## இரண்டாவது தலயாத்திரை

அந்நாளில் பிள்ளையாரது திருத்தாயார் பகவதியம்மையார் பிறந்த பதியாகிய திருநனிபள்ளியினின்றும் மறையவர்கள் சீகாழிக்கு வந்து பிள்ளையாரை வணங்கினர், பிள்ளையார் திருஞானம் பெற்ற பெருவார்த்தை கேட்டு ஏனைப் பதிகளினின்றும் மறையவரும் பிறரும் வந்து பிள்ளையாரை வணங்கி மகிழ்ந்தனர். அப்போது திருநனிபள்ளி மறையவர் தங்கள் பதியில் வந்து இறைவரை வணங்கவேண்டுமென்று பிள்ளையாரிடம் விண்ணப்பிக்க, அதற்கிணங்கித் தோணியப்பரை வணங்கிக்கொண்டு தாதையார் தோளின்மேலாகத் திருநனிபள்ளி நோக்கிச் சென்றருளினர்; அங்கு எதிரே தோன்ற, "அப்பதி யாது?" என்று தாதையாரைக் கேட்க, அதுவே திருநனிபள்ளி என்று அவர் கூறக் கேட்டருளி, அவரது பியலின்மேலிருந்தவாறே "காரைகள் கூகை முல்லை" என்ற பதிகத்தால் "எந்தை இடம் நனிபள்ளி இதுவே, இதனை நினைப்பவர் வினைகள் கெடுவதற்கு ஆணை நமதேயாம்" என்று பாடியருளினர். அப்பதிக்கு இனி வரும் முத்து-பனை - சோலை முதலிய சொல்லாற்றலருளியதால் அந்நகரின் நிலம், பாலையு நெய்தலும் முல்லையுமாக ஆயிற்று, அப்பதியில் மறையவர்கள் அடிபோற்றப் பிள்ளையார் எழுந்தருளி யிருந்தனர். அந்நாளில் திருத்தலைச்சங்காட்டினின்றும் அந்தணர்களும் தொண்டர்களும் வந்து அடிபணிந்து பிள்ளையாரைத் தங்கள் பதியில் கண்ண வேண்டுமென்று வேண்டிக்கொள்ள அங்குச் சென்றருளி இறைவரை வணங்கிப் பதிகம் பாடியருளினர், அங்கு நின்றும் திருவலம்புரம் புக்கு வணங்கித் திருச்சாய்க்காடு சென்று போற்றுவார் "மண்புகார்" என்ற பதிகம் பாடி வணங்கியருளினர். அங்கிருந்து திருவெண்காட்டினை அடைந்து "முக்குளம்" தன்னையும் போற்றிப் பதிகம் பாடிப் போந்து, தென் திருமுல்லைவாயிலை வணங்கிக்கொண்டு சீகாழியினைச் சேர்ந்தருளிப் பெருமானைப் போற்றி யிருந்தனர்

## மூன்றாவது தலயாத்திரை

அந்நாள்களில் திருமயேந்திரப்பள்ளி, திருக்குருகாவூர், திருமுல்லைவாயில் உள்ளிட்டு அம்மருங்கு உள்ள பதிகளிற் சென்று இறைவரைப் போற்றித் திருப்பதிகம் பாடி மீண்டு சீகாழியில் எழுந்தருளி யிருந்தனர்.

அப்போது திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரும், இசைவடிவான அவரது தேவியார் மதங்கசூளாமணியாரும் சீகாழியில் வந்தணைந்தனர். பிள்ளையார் அவர்களை எதிர் கொள்ள, அவர்கள் பிள்ளையாரைத் தொழுதெழுந்து துதித்தனர். பிள்ளையார் அவர்களை நோக்கி "ஐயர் நீர் இங்கு வந்த உறுதிபுடையோமாயினோம்" என்று மதுரமொழியருளி, அவர்களைத் திருக்கோயிற்புறமுன்றிலிற் கொண்டு புக்கு "உங்கள் இறைவருக்கு இங்கு யாழிசை இயற்றுக!" என்று அருள, அவர்களும் யாழ் வீக்கி விண்ணவர்களும் போற்ற இசை விரித்தனர். பிள்ளையார் அவர்கள் தங்குதற்கு இடம் அமைத்து நல்விருந்தும் சிறக்க அளித்தருளினர். யாழ்ப்பாணர் பிள்ளையாரைத் தொழுது 'தேவரீர் அருளும் திருப்பதிகங்களை யாழில் இட்டு அடியேன் தேவரீருடன் பிரிவின்றிச் சேவித்திருக்க அருள் புரியவேண்டு" மென்று விண்ணப்பித்தனர். அதற்குப் பிள்ளையார் இசைந்தருளவே அவ்வாறே அகலா நண்புடன் அன்றுபோலவே என்றும் உடனாக இருக்கலாயினர்.

**திருநீலகண்ட யாழ்ப்பாணர்**

## நான்காவது தலயாத்திரை

அக்காலத்திலே திருத்தில்லைக்குச் சென்று கூத்தப் பெருமானை வணங்கவேண்டும் என்னும் அருட்குறிப்புப் பிள்ளையாரது திருவுள்ளத்தில் எழுந்தது. அதனைத் தந்தையாருக்கு அறிவிப்ப, அவரும் உடன் செல்ல விரும்பத், திருத்தோணியப்பரைத் தொழுது அருள்விடை பெற்றுப் புறப்பட்டு வழிக்கொண்டருளினர். இடையில் கண்ட பதிகளைப் போற்றிப் பழனமும் படுகரும் கடந்து கொள்ளிடக் கரையினையடைந்தனர்; கொள்ளிடம், புனலும் கடல் மணியும் பவளமும் முதலியவற்றால் அடிபணிந்து எதிர்கொள்ள, அதனைக் கடந்தேறிச் சென்று தில்லை சூழ் திருவெல்லை பணிந்தனர்; இருபுறமும் பொய்கைகள் மலர்முகங் காட்டின; மலர்ச்சோலைகளும் புறம்பணை நறும்பூகமும் களித்துச் செழித்தன. வேள்விப் புகையினால் வானம் நீல நுண்துகில் விதானித்தது போன்றது; இவ்வாறு சென்று கழனியம்பணை நீங்கி, நந்தனவனங்களைப் பணிந்து தென்றிசை வாயிலை அணைந்தருளினர்; தில்லைவாழந்தணர்களும் திருத்தொண்டர்களும் எதிர்கொண்டு திருநகரினுட்கொண்டு புகுந்தனர், தென்றிசை வாயில் புகுந்து, திருவீதி பணிந்து, கோபுரத்தைப் பணிந்து எழுந்து போற்றித், திருமாளிகையை வலங்கொண்டு, பேரம்பலம் தொழுது, திருவணுக்கன் திருவாயிலையடைந்து, கைகளைச் சிரமேற் கொண்டு கண்களிப்ப உருகுமனபுடன் புகுந்தனர்; தமக்கருளப் பெற்ற மெய்ஞ்ஞானமேயான அம்பலமும் உணர்நிறைந்த ஞானத்தெழும் ஆனந்தத்தனிக் கூத்தும் கண்டு கும்பிட்டு, "உணர்வினுள் நேர்பெற வரும் சிவபோகத்தை உருவின்கண்ணே ஐம்பொறியளவினும் எளிவர அருளினை!" எனப் போற்றினர். சிவனுரிமைத் தொழிற் சிறப்பினால் தில்லைவாழந்தணர்களை முன்வைத்துக் "கற்றாங்கெரியோம்பி" என்ற பதிகம் பாடித் தொழுது, காலமெல்லாங் கும்பிட்டப் பின்பு புறம் போந்தருளி, மாதவங்கள் நல்கும் திருவீதி நான்குந் தொழுது, அங்குத் தங்குதற்கு அஞ்சித், திருவேட்களத்திற் சென்று அங்கே தங்கியருளிக், காலந்தோறும் திருவம்பலத்தை வந்து பணிந்தனர்; திருக்கழிப்பாலை சென்று வணங்கிப் பதிகம் பாடினர்; தில்லைவாழந்தணர்கள் அம்பலக் கூத்தனுக்கு ஆளாகும் பேற்றினை எண்ணி அதிசயித்தவாறே ஒருநாள் திருவேட்களத்தினின்று தில்லையினை அணையும்போது தில்லை மூவாயிரவரும் சிவகணங்களாகத் தோன்றியிடக் கண்டு அதனைத் திருநீலகண்டப் பாணனாருக்குங் காட்டியருளினர். பிள்ளையார் தில்லைவாழந்தணர்களை இறைஞ்சா

**திருத்தில்லை**

முன்பு அவர்கள் தம்மை யிறைஞ்சத் தாமும் எதிர் இறைஞ்சி உடனேயச் சென்று திருவம்பலத்தினை வணங்கி, "ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர்" எனும் பதிகம் பாடி அதனுள் தாம் கண்ட அந்நிலையினை வைத்துத் துதித்து விடைபெற்று எழுந்தருளினர்.

**நிவா நதிக் கரையிலுள்ள ஏனைய பதிகள்**

திருநீலகண்டப் பாணனார் நிவாநதிக் கரையில் உள்ள தமது பதியாகிய திருவெருக்கத்தம்புலியூர் முதலாகிய பதிகளிற் சென்று வணங்கவேண்டுமென்று விண்ணப்பிக்க, அதற்கிசைந்து, தாதையாரும் பரிசனங்களும் பாணனாரும் மதங்கசூளாமணியாரும் உடன் சூழச் சென்றருளினார். நிவாநதிக் கரை வழியே சென்று திருவெருக்கத்தம்புலியூரினைச் சாரச் செல்லும்பொழுது, பாணனார் வணங்கி, "இப்பதி அடியேன் பதி" என்று கூறப், பிள்ளையார் "ஐயரே! நீர் அவதரித்திட இப்பதி அளவில்லாத மாதவம் முன்பு செய்தவாறு" என்று சிறப்புரைத்து அங்குச் சார்ந்து திருப்பதிகம் பாடி வணங்கிய பின் திருமுதுகுன்றத்தினை நோக்கிச் சென்றணைவாராயினர்.

**திருமுதுகுன்றம்**

"முதுகுன்றை அடைவோம்" என்ற பதிகம் பாடிப் போய் அக்குன்றினை வலங்கொள்வார், திருவிருக்குக்குறட் பதிகம் பாடிச் சென்று, இறைவர் திருமுன்பு "மூரல்சிரித்த" என்னும் பதிகம் பாடி வணங்கி, அப்பதியில் எழுந்தருளியிருந்தனர். பின்பு அங்குநின்றும் திருப்பெண்ணாகடத்தை அணைந்து இறைஞ்சித் "தோங்கு நீங்குவீர் தூங்கானைமாடந் தொழுமின்களே" என்ற பதிகம் பாடித், திருவரத்துறை சேர்வாராயினர். செல்லும்போது ஒரோர்கால் தாதையார் தோளின்மேல் இருப்பார்; பின்னர்ச் சிலபோது அவர் தமக்கருகே செல்ல நடந்து சென்றருளுவார். இவ்வாறு விருப்புடன் சென்றருளும்போது பிள்ளையாரது பாததாமரைகள் பையப்பைய நொந்தன; பாசமில்லாதவராதலின் ஆலய வழிபாட்டினை ஏனையோர் போலப் பாசநீக்கத்தின் பொருட்டன்றிச், சங்கரன்பால் ஆசை மிக்கதனாலே மேற்கொண்டெழுந்தனர் பிள்ளையார்.

**திருவரத்துறை**

மாறன்பாடி என்னும் பதியில் வரும்போது வழிவரும் இளைப்பினாலே உடன் வருவோர் வருந்துதலைக் கண்டு பிள்ளையார் திருவுளத்தெழுந்தோறும் அங்கு அந்த அங்கே தங்கியருளினார்; ஞாயிறு மேல்கடல் வீழ, அன்றிரவு பிள்ளையார் பரிசனங்களுடன் அப்பதியில் தங்கியருளினார்.

திருவரத்துறை யிறைவர், பிள்ளையாரது வழி வருத்தத்தினை மாற்றத் திருவுளங்கொண்டு அன்றிரவிலே, அப்பதியின் மறையவர், பதி வாழ்வார், தொண்டர்கள், கோயில் பரிசனங்கள் முதலிய அனைவருக்கும் கனவில் தோன்றித், "திருஞானசம்பந்தன் நம்மிடத்து வந்தணைகின்றான்; நாம் வைத்தளித்துள்ள முத்துச் சிவிகை, முத்துச் சின்னங்கள், முத்துக் குடையாகிய இவற்றை அவனிடம் சென்று கொடுங்கள்" என்றருளிச்செய்தனர். அவர்களெல்லாரும் ஒருங்கு கூடிக் கோயில்வாயி லடைந்து காலையில் கோயில் திருக்காப்பு நீக்க, அப்பொருள்கள் அங்கு இருக்கக் கண்டு மகிழ்ந்து, திருவருளை வழுத்தி, ஆரவாரத்துடன் அவற்றை ஏந்திப் பிள்ளையார்பால் எதிர்கொண்டு வருவாராயினர். இங்குப் பிள்ளையாருக்கும் அவ்வாறே "அவற்றை ஏற்றுக்கொண்டு உய்க்க" என்று கனவில் இறைவர் அருள, உணர்ந்தெழுந்து, அதனைத் தந்தையார்க்கும் தொண்டர்க்கும் அருள்செய்தனர். இருள் நீங்கி வைகறைப் போதாகவே திருநீறணிந்து திருவைந்தெழுத்தோதி எழுந்தனர் சூரியனும் எழுந்து போந்தனன். அப்போது அரகர முழக்குடன் அவ் வருட்பொருள்களை ஏந்திக்கொண்டு திருவரத்துறை அடியவர்கள் வந்து பிள்ளையார்பால் வைத்து வணங்கித் துதித்து, இறைவரருளிய பரிசு முற

றும் உரைத்து நின்றனர்; அதுகண்டு பிள்ளையார் இறைவரது பேரருளை உன்னி மனமுருகி, "எந்தை யீசன்" என்றெடுத்தத் திருப்பதிகம் பாடித் துதித்தருளிச் சோதி முத்துச் சிவிகையினை வலம் வந்து, பார்மீது வீழ்ந்து வணங்கித், திருநீற்றொளி தோன்ற அதன் ஒளியினைப் போற்றி நின்று, இறைவர் திருவருளாதலினால் திருவைந் தெழுத்தினை ஓதிக்கொண்டு அதன்மேல் ஏறியருளினர்; தொண்டர்கள் அரகர முழக்கம் செய்து ஆரவாரித்தனர்; வேதங்கள் முழங்கின; வானம் மலர்மழை பெய்தது. பாற்கடலில் எழுந்த மதிபோலப் பிள்ளையார் முத்துச் சிவிகையின்மீது விளங்கக் கண்ட தொண்டர்கள் முதலிய அனைவரும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர். இறைவன் அருளிய காளம், தாரை, சின்னம் முதலியவை "திருஞான சம்பந்தன் வந்தான்", "முத்தமிழ் விரகன் வந்தான்", "பாலறாவாயன் வந்தான்" என்று பிள்ளையாரது பல பெருமைகளையும் எடுத்து இயம்பின. இவ்வாறு பிள்ளையார் திரு வரத்துறையினை அணைந்து, திருவாயிலுக்கு நெடுந் தூரத்திலே சிவிகையினின்றும் இழிந்து, திருக்கோயிலுட்சென்று, திருமுன்பு வந்து கைகுவித்து வீழ்ந்தெழுந்து, அன பினிற் றிளைத்து இறைவரது பேரருளினைப் போற்றியருளி, அப்பதியில் சிலநா ளமர்ந்தனர். அங்கு அமர்ந்த நாளில் திருநெல்வெண்ணெய் முதலிய பதிகளிற் சென்று வணங்கி மீண்டு அணைந்திருந்தனர்.

அந்நாளில் திருத்தோணியப்பர் பெரியநாயகியாருடனே பிள்ளையாரது உணர்வி னில் வெளிப்பட மனம் உருகிச் சீகாழிக்கு எழுந்தருளத் திருவுள்ளங் கொண்டு, திரு வரத்துறை இறைவரை வணங்கி அருள்விடை பெற்றுச் சிவிகையினை மேற்கொண்டு புறப்பட்டருளினார் மறையவரும் தொண்டரும் ஆரவாரித்தனர்; திருச்சின்னங்கள் ஒலித்தன. இவ்வாறு செல்லும் வழியில் அங்கங்கும் தோரண முதலிய அலங்காரத் துடன் அவ்வப் பதியோர் எதிர்கொள்ளப் பதிகளை வணங்கித், திருப்பழுவூரில் எழுந் தருளி வணங்கி, அங்கு அந்தணர்களான மலையாளர் ஏத்தும் பரிசு போற்றிப் பாடிப் போந்து, திருவிசயமங்கை, திருப்புறம்பயம் முதலிய பதிகளை வணங்கித் திருச்சேய்ஞ லூரினை யணைந்தருளினர். அப்பதியில் வாழ்வார்கள் நகரினை அலங்கரித்து வந்து எதிர்கொள்ளச் சண்டீசப் பிள்ளையார் அவதரித்தருளும் பதி என்று உட்கொண்டு ஆளுடைய பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி வணங்கி, அப்பதியவர்களுடன் திரு நகரினுட் சென்று திருக்கோயிலினில் இறைவரை முறைப்படி வணங்கிப் பாடிய திருப் பதிகத்தில் சண்டீசப்பிள்ளையார் பாதகப் பயன்பெறும் பரிசினை வைத்துப் பாடித்துதித்து அப்பதியில், சிலநா ளமர்ந்தருளினர். அங்குநின்றும், திருப்பனந்தாள், திருப்பந்தணை நல்லூர், திருஓமாம்புலியூர், திருவாழ்கொளி புத்தூர், திருக்கடம்பூர், திருநாரையூர், திருக்கருப்பறியலூர் முதலிய பதிகளை வணங்கிக்கொண்டு, சீகாழியினைச் சார வந்தணைந் தருளினர். அச்செய்தியினைக் கேட்ட சீகாழி மறையவர்களும் தொண்டர்களும் நக ரலங்காரம் செய்து, நிறைகுடங்களை ஏந்தி எதிர்கொண்டு வந்து பிள்ளையாரைச் செழு முத்தின் சிவிகையின்மேற் கண்டு சென்று சூழ்ந்து ஆர்த்தனர்; மிக்க ஓசைபடத் துதித்தனர்; ஆடைகளை விசும்பில் வீசினர், பிள்ளையாரும் சிவிகைநின்று மிழிந்து எதி சென்று வணங்கி அவர்களுடன் கூடி மகிழ்ந்து புகுந்து திருக்கோயிலுக்குச் சென்று தோணியப்பரை வணங்கிப் பாடித் தொழுது புறம் போந்தருளினர். அப்போது திருநீல கண்ட யாழ்ப்பாணர் பின்னே வர, அவரை அவரது மாளிகையிற் போக அருளி விடை கொடுத்துத், தம் திருமாளிகையினைச் சார்ந்தார். மறையவர்மகளிர் விளக்கு நிறைகுடம் முதலிய மங்கலங்களை ஏந்தி எதிர்வர, முன்னே வந்து ஈன்ற தாயார் பகவதி யம்மையார் திருநீறு சாத்தி இறைஞ்ச முறைமையாலே அவர்க் கருள்புரிந்து திரு

மடத்தினுள் புகுந்து எழுந்தருளியிருந்து நாடோறும் தோணியப்பரைத் தொழுது பதிகம் பாடியருளினர்.

**சீகாழி - உபநயனச் சடங்கு**

அந்நாள்களிலே, உபநயனப் பருவம் எய்த, உலகங்கடந்த சிவஞான முணர்ப் பெற்ற பிள்ளையார், பழமையாகிய வேதநூற் சடங்குகளை மறையவர்கள் செய்ய மான்றோலுடன் பூணூலையும் தாங்கியருளினர்; ஒருபிறப்பும் சாராத பிள்ளையாரை இவ்வாறு உலகியல்பிற்கொண்டு உபநயன முறைமையில் இருபிறப்பாளர் என்ற நிலைமையில் வைத்து, மறைச் சடங்குகளைக் காட்டி நான்கு மறைகளையும் தந்தோமென்று மறையவர்கள் மந்திரங்களை எடுத்து ஓதுவித்தனர். பிள்ளையார் அவர்கள் முன்னே எண்ணிறந்த புனித வேதங்களைத் தாமே எடுத்து ஓதினர். அதுகண்டு மறையவர்கள் வியந்து, பிள்ளையாரை, ஆயிரங்கோடி சூரியர்கள் ஒன்றாய் உதயமானாற் போலக் கருதி, தமது கண்முன் நிற்கும் ஞானப் பொருளாகக் கொண்டு, தாம் முன் வல்ல மறைகளில் உள்ள ஐயங்களை அவர்பாற் கேட்டுத் தெளிந்து வாழ்வடைந்தனர். பிள்ளையார் மந்திரங்கள் எல்லாவற்றையும் அம் மறையவர்களுக்கு அருளிச்செய்து, மற்றும் அவற்றின் வைதிகநூற் சடங்கின் வந்த மனமயக்கந் தெளியும்படி தேற்றி அருளிச்செய்து, "மந்திரங்களெல்லாம் தோன்று முதலாவன இறைவரது திருவைந்தெழுத்தேயாம்" என்று பஞ்சாக்கரத் திருப்பதிகத்தினை அருளிச் செய்தனர், அவர்கள் கேட்டுப் பெருவாழ்வடைந்து மகிழ்ந்தனர். பிள்ளையார் தோணியப்பரை வணங்கி யிருந்தருளினர்.

**திருநாவுக்கரசர் கூட்டம்-[**

அந்நாள்களிலே பிள்ளையாரைக் கண்டு வணங்குதற்காகத் திருநாவுக்கரசு நாயனார் சீகாழிக்கு எழுந்தருளப், பிள்ளையாரும் "ஆகிய நல்வினைப் பேறு" என்று மகிழ்ந்து தொண்டர் கூட்டத்துடன் எதிர்கொள்ளச் சென்றருளினர். அந்தம் இல்லாத திருவேடத்து அரசும் எதிர் வந்தணையக் கண்ட பிள்ளையார், தொண்டர் திருவேடம் நேரே தோன்றியதென்று தொழுதனர். அரசுகளும் எதிர்வந் திறைஞ்சப், பிள்ளையார் அவருக்கு மதுரமொழியருள்செய்து, திருக்கோயிலுக்கு அவரை உடன்கொண்டு போந்து திருத்தோணியிற் சேர்ந்து உடன் கும்பிட்டுத், திருமாளிகையிற் சேர்ந்து, திருத்தொண்டருடன் அவருக்குத் திருஅமுது செய்வித்தனர். இருவரும் அன்பு நண்பும் பெருகிய காதலுடன் இறைவரைக் கும்பிட்டு உடன் மகிழ்வெய்தி உறைந்தனர். அவ்வாறு சிலநாள் செல்ல ஏனைய பதிகளிலும் சென்று வணங்கவேண்டிப் பிள்ளையாரது இசைவு பெற்று அரசுகள், பின்னுக எய்த இறைஞ்சிப், பிரியாத நண்பொடும் போந்தருளினர். அவர்பால் விடைகொண்டு பிள்ளையார் மீண்டருளித் தோணியப்பரை இறைஞ்சி யிருந்தருளிய நாட்களில் செந்தமிழ்மாலை விகற்பங்களான திருமொழி மாற்று, மாலை மாற்று, வழிமொழி, திருவியமகம், ஏகபாதம், திரு இருக்குக்குறள், திருவெழுகூற்றிருக்கை, ஈரடி, ஈரடி மேல்வைப்பு, நாலடி மேல்வைப்பு, திருவிராகம், திருச்சக்கரமாற்று முதலிய சந்த விகற்பப் பதிகங்களை, மூல இலக்கியமாக, எல்லாப் பொருள்களோடும் முற்றச், சீகாழி நாதரைப் பாடியருளினர். அவற்றைத் திருநீலகண்டப் பாணரும், இசை வடிவான மதங்க சூளாமணியாரும் ஏழிசைபற்றி யாழ்க்கருவியிலும் கண்டத்திலுமாகப் பாடினர். இவ்வாறு தோணியப்பரைப் பதிகங்கள் பாடிச் சீகாழியிற் பிள்ளையார் தங்கி யிருந்தருளினர்.

அந்நாள்களிலே, தமிழ்நாட்டிலெங்கும் உள்ள திருப்பதிகள் யாவையும் சென்று கும்பிட்டு இங்கு எய்தவேண்டுமென்னும் திருவுள்ளத்தெழுந்த கருத்தினைப் பிள்ளையார் தந்தையாருக்கு அருள்செய்தனர்; தாதையாரும் "பிரிவாற்றாமையாலும், யாகம் செய்யப் பொருள் வேண்டியமையாலும் சிலநாள் உடன் எய்துவன்" என்று கூறத்,

திருத்தொண்டர்கள் மறையவாகள் உடன் வருவார்கள் கூடவரத் திருத்தோணி யப்பரிடம் விடைபெறறுத் தாதையாரும் யாழ்ப்பாணரும் உடன் வரப் புறப்பட் டருளினர். சின்னங்க ளார்க்கவும், இயங்கள் முழங்கவும், மங்கல வாழ்த்தொலி எடுப்பவும் அங்கங்கும் அடியார்கள் நகரலங்கரித் தெதிர்கொள்ளப் பதிகள்தோறும் சென் றருள்வாராயினர்.

திருக்கண்ணார் கோயிலை வணங்கிக்கொண்டு, காவிரியின் வடகரையில் வடமேற் குத திசைநோக்கி வருவாராயத, திருப்புள்ளிருக்கு வேளூரை இறைஞ்சிச் சம்பாதி - சடாயு - என்ற புள்வேந்த ரிருவர் வழிபட்ட பெருமை பதிகத்துட் சாரப் பாடியருளி னா; அங்குநின்றும் திருநின்றியூரையும், திருப்புன்கூரையும், ஏனைய தலங்களையும் வணங்கிப், பின்பு பழமண்ணிப்படிக்கரை, திருக்குறக்கை, திருஅன்னியூர், திருப்பந்தணை நல்லூர், திருமணஞ்சேரி, திருஎதிர்கொள்பாடி யிவற்றைப் பணிந்தனா; காவிரிக் கரை யில் திருவேள்விக்குடியில் பகலில திருமணவாளக் கோலத்தினையும், இரவிற் றிருத்தியி லிருக்கையும் சோதத்துப் பதிகம் பாடியருளினர்; பின்னர்த் திருக்கோடிகா, திருக் கஞ்சனூா, திருமாந்துறை, திருமங்கலக்குடி, திருவியலூா முதலிய பதிகளை வணங்கித் திருந்துதேவன்குடி சேர்ந்து, "இவா வேடம மருந்தும் மந்திரமும் மற்றும் ஆவன" என்று பாடி வணங்கினர்; அதன்பின் அம்மருங்குள்ள தலங்களை வணங்கித் திரு வினனம்பரை யணைந்து "இடைமடக்கான திருமுகக்கால" என்னும் பதிகம் பாடிச் சென்று, வடகுரங்காடுதுறை சேர்ந்து அங்கு வாலியாா வழிபட்டதைப்பற்றிப் பாடி னர். அதன்மேல மற்றும பதிகளை வணங்கித், திருப்பழனம் பணிந்து, திருவையாற்றினை அடைவாராயினர்; திருவையாறறிற றொண்டாகள் நகரத்தினை முற்றும் அலங்கரித் துச் சிறப்பினொடும் எதிர்கொள்ளச் சிவிகையினின்றும் இறங்கி, நகரத்தினை வணங்கி "ஐம்புல னிலைகலங்கும்போது அஞ்சலென்பாாதம் ஐயாறு" என்ற கருத்துடைய திருப்பதிகத்தினைப் பாடிச் சென்று திருக்கோயிலினுட் புகுந்து வணங்கிக், "கோடல கோங்கம்" என்ற பதிகம் பாடித் துதித்து, அப்பதியில் அமாந்தருளினா. அங்கிருந்த வாறே திருப்பெரும்புலியூா முதலான பதிகளிற் சென்று வணங்கி மீண்டருளியிருந்த நாளில, மேற்குத் திசையாகச் செல்ல மனங்கொண்டு அருள்விடை பெற்றுப் போந்து, திருநெய்த்தானம பணிந்து, திருமழபாடியினை வணங்கிச் சிலநாள் அங்கு எழுந்தருளி யிருந்தனா. அதன்பின, திருக்கானூா, திருஅன்பிலாலந்துறை, வடகரைத் திருமாந் துறை முதலிய பதிகளை வணங்கித் திருப்பதிகங்கள் பாடிப் பணிந்து, திருப்பாச்சிலாச் சிராமம் பணிவதற்குப் பிள்ளையாா நணுணுவாராயினர்.

அந்நகரில் கொல்லி மழவன் மகளுக்கு நோந்த முயலகனோய் எவ்வாற்றானும் தீராமையால், அவன், வழிவழியாகச் சிவனடிச் சார்புபற்றியே வரும் குலத்துப் பான்மை யினு னுதவினால, அக்கன்னியைக் கொண்டுவந்து திருக்கோயிலில இறைவா திருமுனபே இட்டு வைத்தான. அக்காலை பிள்ளையாா எழுந்தருளுகின்ற திருச்சின்னங்களின் ஓசை கேட்டு, உடனே அக் கன்னியை விட்டு விரைந்து சென்று நகரினை அலங்கரிக்கப்பணணிச் சென்று, பிள்ளையாரை எதிர்கொண்டுபோயச் சிவிகையின்முன் வீழ்ந்து வணங்கினன்.

**முயலகனோய் தீர்த்தது**

பிள்ளையார் "எழுக" என்று அருள்செய்ய எழுந்து அவரை அழைத்துக்கொண்டு திருக் கோயிலுக்கு வந்தனன். பிள்ளையார் விதிப்படி கோயிலை வலங்கொண்டு திருமுனபு சார, அங்கு உணாவின்றிக் கிடந்த கன்னியைப் பார்த்து "இது என்னை?" என்றரு ளவே, மழவன் அவள் வரலாற்றை உள்ளபடி கூறினன். அதனைக்கேட்ட பிள்ளையார் அருள் கூர்ந்து அந்நிலையினின்றே பரமரைப் பணிந்து "துணிவளா திங்கள்" என்ற பதிகம் தொடங்கி "மணிவளா கண்டரோ மங்கையை வாட மயல்செய்வ தோவிவர்

மாண்பு?" என்று அந்நோய் நீங்கும்படி பாடியருளினார்; பதிகம் நிறைவித்துப் பிள்ளையார் போற்றி நிற்கவே நோய் நீங்கியது; கன்னியும் கதுமென வெழுந்து தாதை பக்கம் அடைந்தாள். மழவன் கன்னியுடன் பிள்ளையார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்; பிள்ளையார் இறைவரைப் பணிந்தனர். அங்குச் சிலநாள் அமர்ந்தருளிய பிள்ளையார் பிற பதிகளையும் போற்றித் திருப்பைஞ்ஞீலியையும், திருவீங்கோய்மலையையும், மற்றும் பதிகளையும் வணங்கிக் கொங்கு நாட்டின் குடபுலஞ் சென்றணைந்து பல பதிகளையும் பணிந்தனர்.

கொங்கு நாட்டில் காவிரித் தென்கரையில் திருக்கொடிமாடச் செங்குன்றூரினில் அடியவர்கள் எதிர்கொள்ள அணைந்து, இறைவரை வணங்கிப் பதிகம் பாடித் துதித்து அந்நகரில் இனிதமர்ந்தருளினர்; அதற்கப்பாலின் மேற்றிசையினுள்ள சிவதலங்களையும் சென்று வணங்கித் திருநணா (பவானி)வினையும் இறைஞ்சி மீண்டுவந்து முன்னர்த் தங்கிய இடமாகிய கொடிமாடச் செங்குன்றூரில் பிள்ளையார் எழுந்தருளியிருந்தார்; அந்நாளில் பனிப் பருவம் வந்தது. மொய்ப்பனிகூர் குளிர் வாடை முழுதுலவும் பொழுதாகவே ஆயிற்று; மலைகளும் பனியால் மூடப்பட்டுக் குளிர்க் குடைந்து வெண்படாம் போர்த்தனபோல விளங்கின. அப்போது பிள்ளையாரது பரிசனங்கள் பல நாளும் அந்நாட்டிற் பயின்றதனாலே பனித்த குளிர் முன்னுறை பிணியாகிய சுரம் வந்து அவர்களை நடுக்குவதுபோல் மூண்டது. அதனை அவர்கள் பிள்ளையாருக்கு அறிவித்து வணங்கினர். பிள்ளையார் இறைவரது திருவருளைத் தொழுது "இந்த இந்நிலத்தினியல்பெனினும் நமக்கு எய்தப்பெறாது" என்ற குறிப்புடன் இறைவரைத் திருப்பதிகம் பாடுவாராகி "அவ்வினைக் கிவ்வினை" என்று தொடங்கிச் "செய்வினை வந்து எமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்" என்று துதித்து ஆணையிட்டருளினார்; அவ்வாணையினால் அந்தப் பதியில் வாழ்பவர்க்கேயன்றி அந்நாடு முழுமையும் அன்று முதலாக என்றும் அந்நோய் அடராது நீங்கிற்று. சிலநாட்களின் பின் அங்கு நின்றும் நீங்கிப் பல பதிகளையும் தொழுது திருப்பாண்டிக் கொடுமுடியினைச் சென்று வணங்கிப் "பாண்டிக் கொடுமுடியாரே" என்று பதிகம் பாடிக் கீழ்த்திசை நோக்கிச் சென்று, செல்வக் கருவூர்த் திருவானிலைக் கோயிலிற் சென்று வணங்கித், திருவெஞ்சமாக்கூடலினையும் பணிந்து, பல பதிகளையும் தொழுது, கொங்கு நாட்டினின்றும் போய்க் காவிரியின் தென்கரைத் திருவாட்போக்கியை வணங்கி, குன்றும் கானும் பல பதியும் எல்லாம் விரும்பிப் பணிந்து, திருப்பராய்த்துறை, திருச்செந்துறை, திருக்கற்குடி, திருச்சிராப்பள்ளி முதலிய பதிகளை வணங்கிக்கொண்டு திருவானைக்காவில் அணைந்தனர். அங்கு வெண்ணாவலின் கீழ் முளைத்த இறைவரை வணங்கி, அயிராவதமும் கோச்செங்கட்சோழரும் செய்த பணிகளைப் பதிகத்துள் வைத்துப் போற்றி, ஆனைக்கா - மயேந்திரம் - கயிலை - திருவாரூர் நான்கும் போற்றிய கூடற் சதுக்கம் என்னும் பதிகத்தினையும் பாடி அங்குச் சிலநாள் எழுந்தருளியிருந்தனர். அதன்பின் திருத்தவத்துறை, திருப்பாற்றுறை, திருவெறும்பியூர்மலை முதலியவற்றைத் தொழுது, திருநெடுங்களம் சேர்ந்து வணங்கி, "அடியார்க்கு நேசனுஞ் செல்வனைச் சிலர்க்கும் இடும்பைகளைத் தீர்த்தருள செய்வாய்" என்ற கருத்துடைய பதிகத்தினைப் பாடியருளித், திருக்காட்டுப்பள்ளியினை வணங்கியபின், தொண்டர்கள் சிறப்புடன் எதிர்கொள்ளச் சென்று திருப்பூந்துருத்தியிற் சென்று, பொய்யிலியாரை வணங்கி, திருக்கண்டியூர் வீரட்டம் வணங்கி, அங்குத் தொண்டர்களை நோக்கி இறைவரது திருவருளை வினவிய கருத்துடைய திருப்பதிகம் பாடியருளினர். அதன்பின் திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருவெண்ணி, திருச்சக்கரப்பள்ளி, திருஆலந்துறை, திருப்பாலைத்துறை வணங்கிப் பின் திருநல்லூர்

சார்ந்து வணங்கி அங்கமர்ந்தருளினார். அங்கு நின்றவாறே திருக்கருகாவூர், திரு அவளிவணல்லூர், திருப்பருதி நியமம், திரு ஆவூர்ப் பசுபதீச்சரம் வணங்கித் திரு நல்லூரில் மீண்டும் வந்தணைந்தருளினர். அங்குநின்றும் அடியவர்கள் எதிர்கொள்ளச் சென்று திருவலஞ்சுழியை அணைந்து பெருகுமாதரவுடன் வணங்கி அத்திருப்பதியின்கண் அமர்ந்தருளி மிக்க காதலோடும் நாடோறும் பாவித் தங்கியிருந்தனர்.

அந்நாட்களில் வேனிற் பருவம் வந்தது. சூரியன் மிதுன ஓரையுட் சேர்ந்த தன்மையினாலே கடலும் சுருங்க வெப்பமாகிய கதிர் பரப்பியதனாலே வேனில் முதிர்ந்தது; பிள்ளையார் அக்காலத்தில் திருவலஞ்சுழியினின்றும் பழை

**முத்துப் பந்தர்**

யாறையைச் சேர்வதற்காக நடந்தருளித் திருவாறை மேற்றளியிற் சேர்ந்து வணங்கிக்கொண்டு திருப்பட்டீச்சரத்தைப் பணியச் சென்றனா. அப்போது வெயில் வெப்பந் தணிப்பதற்காக அவரது முடியின்மீது சிவபூதங்கள் குளிர்முத்துப் பந்தரை எடுத்துப் "பட்டீசர் எம்மைவிடுத் தருள்செய்தார்" என்றியம்பின. அப்போதே பந்தரின் மணிக்காம்பினைப் பரிசனங்கள் கைக்கொண்டார்கள். தேவர்கள் பூமழை பொழிய அதுவே பூம்பந்தரும் போன்று விளங்கிற்று. பிள்ளையார் இறைவரது திருவடி நீழலிற்போல அப்பந்தரின் கீழ் எழுந்தருளித் திருப்பட்டீச்சரத்தை அணைந்து பேரன்பு பெருக இறைவரை வணங்கித் துதித்தனர். அங்குநின்றும் திருஇரும்பூளையினைச் சென்று வணங்கி அருமறைப் பொருள் விரியும்படி திருப்பதிகம் பாடியருளினர். அங்குநின்றும் திருவரதைப் பெரும்பாழி, திருச்சேறை, திருநாலூர், திருக்குடவாயில், திருநறையூர், தென்திருப்புத்தூர், திருச்சிவபுரம் முதலிய பதிகளை வணங்கிக்கொண்டு திருக்குடமூக்கினை நண்ணினார். அடியார்கள் அவரை எதிர்கொள்ள உட்சென்று திருக்குடமூக்கிலும், திருக்கீழ்க் கோட்டத்திலும், திருக்குடந்தைக் காரோணத்திலும் இறைவரை வணங்கி மாமகத் தீர்த்தத்தினையும் போற்றிப் பரவினார். பின்பு நாளும் பரவுவார் பிணிதீர்க்கு நலஞ்சிறந்த திருநாகேச்சரத்தை வணங்கி யின்புற்றங் கமர்ந்தருளினார். அதன்பின்பு மேலே செல்வார்க்குத் திருவிடைமருதூர் எதிர் தோன்றக் கண்டு "இடைமருதீதோ" என்று பாடிச் சென்று வணங்கிப் பாடித் திளைத்து அங்குறையு நாளில், காவிரிக்கரை வழியே போய் திருக்குரங்காடுதுறை பணிந்து திருவாவடுதுறையைச் சார்ந்து, புகுந்து, இறைவரைப் பணிந்து பாடி, யின்புற்று அங்கு

**பொன் உலவாக்கிழி**

அமர்ந்தருளினார். அந்நாளில் வேள்வி செய்வதற்காகிய காலம் வரவே, அதனைத் தாதையார் பிள்ளையாருக்கு அறிவித்தனர்; பிள்ளையார் முந்தைநாளில் சொல்லியமை நினைந்து, "அந்தமில் பொருளாவன எந்தையார் அடித்தலங்களே யன்றோ?" என்று துணிந்து, திருக்கோயிலுக்குச் சென்று இறைவர் திருமுன்பு நின்று "இடரினும் தளரினும் எனதுறு நோய் தொடரினும்" ... "இருநிதி வேண்டினார்க் கீவதொன்று மறிலேன்; உன்னடி யல்லதொன் றறியேன்" என்று பேரருள் வினவிய கருத்துடைய திருப்பதிகம், "இதுவோ வெமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையேல், அதுவோவுன தின்னருள்" என்ற மகுடமுடையதாகப் பாடியருளினார். இறைவரருளினாலே சிவபூதம் பசும்பொன் ஆயிரங்கொண்ட பொற்கிழியினைப் பீடத்தின்மேல்வைத்து முன் அணைந்து நின்று, "இக்கிழி பொன் உலவாக் கிழி; உமக்கு இறைவர் அருளியது" என்றுரைத்தது. பிள்ளையார் அதுகேட்டுத் தொழுது, அக்கிழியினை எடுத்துத் தாதையார்கைக் கொடுத்து "இதனாலே இறைவரை வழிபடும் நல்வேள்வியை நீரும் சீகாழி மறையவர் அனைவரும் செய்யவும், இது குறைவில்லாது மிகுந்து வளரும்" என்றருளிச்செய்து அவரைச் சீகாழிக்குச் செல்ல விடுத்தபின் இறைவரைத் தொழுது அங்கு எழுந்தருளியிருந்தனர். அதன்பின், திருக்கோழம்பம், வைகன்மாடக்கோயில், திருநல்லம், திருஅழுந்தூர் மாடக்கோயில், திருத்துருத்தி, மூவலூர் பணிந்து சென்று

திருமயிலாடுதுறையில் அடியவர்கள் எதிர்கொள்ளப் புகுந்தருளி வணங்கி மகிழ்ந்தெழுந்தருளியிருந்தனர். அதன்பின் திருச்செம்பொன்பள்ளி, திருவிளநகர், திருப்பறியல் வீரட்டம் பணிந்து, கடற்கரையினை நணுகிச் சென்று திருவேட்டக்குடி வணங்கித் திருத்தருமபுரத்தினைப் பிள்ளையார் அணைந்தருளினார். அப்பதி திருநீலகண்டப் பாணனாரது திருத்தாயார் பிறப்பிடமாம், ஆதலினால் அவரது சுற்றத்தார்கள் எதிர்கொண்டு வந்து பிள்ளையாரையும் பாணனாரையும் வணங்கி வரவேற்றனர். பிள்ளையாரது திருப்பதிகங்களை யாழிலிட்டும் பாடியும் பணிசெய்யப்பெற்ற பேற்றினைப் பாணனார் கிளைஞர்க்கு அருளிச்செய்ய, அவர்கள் அதுகேட்டு அப்பதிகங்களின் இசை நீர் யாழில் அமைத்தியற்றுவதனாலே உலகமெல்லாம் வளர இசை நிகழ்வதாயிற்று என்று அவரைப் பாராட்டும்வகையாலுரைத்தனர். அதுகேட்டுப் பாணனார் உள்ளம்

**யாழ்முரி**

நடுங்கிச் சென்று பிள்ளையாரை வணங்கி "எல்லையற்ற பெருமையுடைய திருப்பதிகத்திசை அளவிலுட்படாத பெருமையினை இவர்களேயன்றி உலகிலெல்லாரும் அறியும்படி பாடியருளவேண்டும்" என்று விண்ணப்பிக்கப் பிள்ளையாரும் திருப்பதிகத் தன்மையினை உலகினர் கண்டத்திலும் கருவியினிலும் இசைநூல் கூறும் முயற்சிகளால் அடங்காத வகை காட்ட நாட்டுவாராகி, "மாதர் மடப்பிடி" என்ற திருப்பதிகத்தினைப் பாடி இறைவரை வணங்கியருளினார். அப்பதிகத்தினைப் பாணனார் முன்புபோல யாழிலிட்டு நடத்தப் புகுந்தனர். அஃது அவரது யாழினளவில் அடங்காமை கண்டு, பாணனார், பிள்ளையாரடிகளில் வீழ்ந்து வணங்கி, "இப்பெரியோரது பதிகத்திசையினை யாழிலேற்றுவேன் என்று தொடங்கிய இக்கருவியினை யான் தொடுதலினாலன்றோ?" என்று, அதனை உடைப்பதற்கு ஓங்கினார். அதுகண்டு பிள்ளையார் அவரைத் தடுத்து யாழினை வாங்கிக்கொண்டு, "ஐயரே! நீர் இந்த யாழினை முரிப்பது என்னை? அம்மையப்பரது அருள் நம்பால் ஓங்கக் கருவியினிலடங்குமோ? நமது இயல்புக்குத் தக்கபடி, வந்தவாறே உலகினரறியக் கருவியினளவுபட்டமட்டில் வாசித்தலே வழக்காகும்; சிந்தையினாலும் அளவுபடாத அவ்விசைப் பெருமை செயலளவில் பொருந்துமோ! நீர் இந்த யாழினைக்கொண்டே வந்தவாறே பாடி வாசிப்பீராக!" என்று அருளிச்செய்து யாழினைக் கொடுத்தருள, அவரும் வணங்கி அதனைக் கைக்கொண்டு அவரது கிளைஞர்களுடனே பிள்ளையாரது திருவடிகளைத் தொழுதனர். சின்னாள் அங்குத் தங்கிப், பின், பிறபதிகளையும் வணங்கிக்கொண்டு பிள்ளையார் திருநள்ளாற்றில் எழுந்தருள, அடியார்கள் எதிர்கொண்டு வணங்கிச் சூழச் சென்று திருக்கோயிலை அணைந்து முறையாலே வணங்கிப் "போகமார்த்த பூண்முலையாள்" என்ற திருப்பதிகம் பாடித் துதித்தருளிப், பாணனாரை அதனை யாழிலிடப் பணித்தருள, அவரும் அவ்வாறே யாழிலிட்டு வாசிக்க, யாவரும் மகிழ்ந்தனர். அங்கு நின்றும் பல பதிகளையும் வணங்கிக்கொண்டு, திருச்சாத்தமங்கை

**திருநீலநக்கரும் பாணனாரும்**

யினைச் சார, திருநீலநக்க நாயனார் அதுகேட்டு நகரை அலங்கரித்து மங்கலங்களுடன் எதிர்கொண்டனர். பிள்ளையார் அங்கு அயவந்தித் திருக்கோயிலினுட் சென்று வணங்கித் திருநீலநக்கரது திருமனையில் எழுந்தருளி அவர் விருந்தமுது அளிக்க அங்குத் தொண்டர்களுடன் அமர்ந்தருளினார். அன்றிரவு பிள்ளையார் அருளின்படி பாணனாருக்கும் விறலியாருக்கும் நீலநக்கனார் தமது மனையில் நடுமனை வேதியின் பாங்கர் இடங்கொடுக்க, அவர்களும் அங்குப் பள்ளிகொண்டருளினர். அங்கு வேதியில் செந்தீ வலஞ்சுழித்தெழுந்தது. பின்பு இறைவரது திருப்பதிகத்தில் திருநீலநக்கரது சீர்களை வைத்துப் பாடியருளி, அவருக்கு விடையருளி அவரது நண்பினை மகிழ்ந்துகொண்டு பிறபதிகளையும் வணங்கச் சென்றருளினர். பின்பு திருநாகைக்காரோணம், திருக்கீழ்வேளூர் பணிந்து பிள்ளையார்

எழுந்தருளும் செய்திகேட்டுச் சிறுத்தொண்ட நாயனார் ஓடிச்சென்று வணங்கி வேண்டி அவரைத் தமது பதியாகிய திருச்செங்காட்டங்குடியினுட் கொண்டு புகுந்தனர். பிள்ளையார் மகிழ்ந்து அங்கு எய்திக் கணபதீச்சரத்தில் இறைவரைப் பணிந்து சிறுத்தொண்டரது திருத்தொண்டின் சிறப்பினைப் பதிகத்துள் வைத்துப்பாடி அவரது திருமனையில் எழுந்தருளி வீற்றிருந்தருளிப் பின்பு திருமருகலிற் சென்று வணங்கியமர்ந்தருளினர்.

**திருமருகல் விடந் தீர்த்தது**

அந்நாளில் வழிப்போக்கனாகி ஒரு கன்னியையும் உடனே அழைத்துக்கொண்டு செல்வானாகிய ஒரு வணிகன் அங்கு ஒரு மடத்தில் இரவு துயில் கொண்டான். அப்போது அவனை ஒரு அரவம் தீண்டிற்று; விடம் தலைக்கேற ஆவி நீங்கும் தன்மை கூடிற்று; அந்தக் கன்னி தளர்ந்து சோர்ந்து புலம்பி அவனைத் தீண்டமாட்டாளாய் அணுக வீழ்ந்து அரற்றினாள். காருட வித்தை, இடிபாவனை முதலியவற்றின் வல்ல மந்திரவாதிகள் வந்து செய்த எல்லாக் கொள்கையினாலும் தீக்கவும் குறையாதாயிற்று. அந்நீண்ட இரவு புலரும் காலையில் அக்கன்னி மிக அயர்ந்து புலம்புவாள், "தாய் தந்தையர்களையும் நீத்து உன்னையே அடைவாக உடன்போந்தேன்; என்னைவிட்டு நீங்கினாய்; நான் என்ன செய்வேன்; இவ்விடுக்கண் தீர்க்கும் துணையாவார் யாரும் இல்லை" என்று அயர்ந்து அரற்றி, மதியினாலே இறைவரது கோயில் வாயிற்றிசை நோக்கிக் கைதொழுதாள்; "அடியவராகிய தேவர் கூட்டம் முழுதும் உய்யும்படி விடத்தை உண்டவரே!; வெந்து பொடியான மன்மதனது உயிரை அவன் தேவி வேண்ட மீட்டும் அளித்த இறைவரே! உம்மை வந்தடைந்த மார்க்கண்டருக்காக இயமனை உதைத்தருளிய பாதத்தையுடையவரே! இத்திருமருகலில் எழுந்தருளி யுள்ளவரே! இந்த விட வேகம் நீங்கும்படியும் நான் துன்பக்கடலினின்று கரையேறும்படியும் அருள்புரிய வேண்டும்" என்றென்றே எடுத்துக்கூறி அரற்றி அழுதனள். இந்த ஓசை, அக்காலை கும்பிடுதற்கு எழுந்தருளி வந்த பிள்ளையாரது மெய்த்தன்மை விளங்கும் திருச்செவியிற் சார மேவுதலும் திருவுள்ளக்கருணை மென்மேலும் வைத்து அவள் இருக்குமிடத்தில் அடியார்களுடன் எழுந்தருளினார். சிவபெருமானருள் போற்றி அழுகின்ற அவளைப் பார்த்துப் "பயப்படேல்! நீ! உன் துன்பத்தினையும் நும்பரிசும் சொல்!" என்றருளினர். அவள் பிள்ளையாரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து சொல்கின்றாள்; "வைப்பூரில் இருப்போன் தாமன் எனனும் வணிகன் எனது தந்தை; இவன் அவனது மருகன்; அவனுக்கு நாங்கள் எழுபேர் பெண்மக்கள். எங்களில் மூத்தவளை இவனுக்கு மணம் செய்வேன் என்று சொல்லிய என் தந்தை அச்சொல் தவறிப், பெருக்கப் பணம்பெற்று வேறொருவனுக்கு ஈந்துவிட்டான். அப்படியே ஒவ்வொருவராக என்னை ஒழிய எல்லாரையும் ஈந்துவிட்டான்; அதனால் தளர்ந்து மனமழியும் இவன் பொருட்டுத் தகவுசெய்து தாய் தந்தையரை மறைத்து இவனையே சார்ந்து போந்தேன்; மற்று இவனும் அரவுதீண்ட மாண்டான்; நடுக்கடலிற் கலங்கவிழப்பெற்றார்போலக் கிடக்கின்றேன். சுற்றத்தார் என வந்து தோன்றி என்பால் துயரமெல்லாம் நீங்க அருள்செய்தீர்" என்று சொன்னாள். பிள்ளையார் அவளுக்கு அருளும்பொருட்டுத் திருமருகற் பெருமானை விடம் நீங்கும்படி "உடையானே! இவள் இவ்வாறு உண்மெலிதல் உமக்குத் தகுமோ? என்று "சடையா யெனுமால்" என்னும் திருப்பதிகம் பாடியருளினர். உடனே வணிகன் விடம் நீங்கி எழுந்து நின்றான். தொண்டர் கூட்டம் ஆரவாரம் முழக்கி ஆர்த்தது; அக்கன்னியும் வணிகனும் உச்சியின்மேற் கை கூப்பிப் பிள்ளையாரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். பிள்ளையார் அவர்களுக்கு

மணம் புணரும் பெருவாழ்வு வருந்தவைத்து விடைகொடுத்தருளி அங்கு எழுந்தருளி யிருந்தனர்.

அந்நாளில் சிறுத்தொண்ட நாயனார் வந்து வேண்டிக்கொள்ள அதற்கிசைந்து விடைகொள்ளும்போது, இறைவர் திருச்செங்காட்டங்குடியில் மேவும் கோலத்தை ஆங்குக் காட்டியருள, இரண்டு பதிகளையும் சேர்த்து, "அங்கமும் வேதமும" என்ற பதிகம் பாடியருளிச் சிறுத்தொண்டருடன் திருச்செங்காட்டங்குடியிற் சென்று சிலநாளமர்ந்து, மீண்டும் திருமருகலில் எழுந்தருளிச், சிலநாள்களின்பின் திருப்புகலூர் சென்று வணங்கித் திருமுருக நாயனாரது திருமடத்தில் எழுந்தருளியிருந்தனர்.

அந்நாட்களில் திருவாரூரிற் சேவித்து வழிபடுவாராயத் திருநாவுக்கரசர்பெருமான திருப்புகலூர் தொழ எண்ணி அதனமருங்கு வந்தருளினர் அந்த நல்ல திருவார்த்தை கேட்டபோதே பிள்ளையார் அன்புமிக்க காதலுடனே அடியார்களுடன்கூட அவரை எதிர்கொள்ளப் புகலூர்ப் புறம்பணை கடந்து போந்தருளினர். அரசுகளும் எதிர்வந்தணைய, இருவரும் தங்களின் அன்பின் முறைமையாலே தாழ்ந்து வணங்கித் தனித்தனியே நலவரவின் வாய்மை கேட்டுச் சொல்லியும் மகிழ்ந்தனர்.

திருநாவுக்கரசர் கூட்டம் II

அரசுகள் திருவாரூர் தொழுது வந்தருளியமையால், பிள்ளையார் அவரை நோக்கித் "திருவாரூரின் எத் தன்மையாலே தொழுதுய்ந்தது?" என்று வினவ, அவர் "முத்து விதானம" என்ற திருப்பதிகத்தினாலே அங்குத் திருவாதிரைத் திருவிழாவின் செல்வ நிகழ்ச்சிகளைச் சொல்லியருளினார் அந்த வாய்மை கேட்ட அப்பொழுதே காதலினால் "திருவாரூர் சென்று போற்றி மீண்டும் வந்து உம்முடன் மேவுவன்" என்று அரசுகளிடம் உரைத்து, அவரும் இசைந்தருள, உடனே எழுந்தருளினார். அரசுகள், தமது காதல் பிள்ளையாரின் பின்னே தொடரத், தாம் புகலூர் தொழச் சென்றணைந்து போற்றியிருந்தருளினார். பிள்ளையார், விற்குடி வீரட்டானம் சேர்ந்து போற்றினார். பின் "ஆரூர் அடைவோமே" என்று பாடித் திருவாரூர்ப் புறத்தணைந்தனர். ஆங்குத் திருவாரூர் நகர் ஒரு பொன்னுலகம்போலத் தோன்ற "கருக்கொள் சோலைசூழ் நீடுமாட மாளிகைக் கொடி, மருங்கண் மண்டலத் தணவு மந்த ணாரூ ரெனபதே" என்று பதிகம் அருளித் திருநகரின் எல்லை சேர்ந்தனர். காதல் வெள்ளம் கரையின்றிப் பெருகச் சிவிகையினின்றும் இறங்கிக் கைகளினிறைந்த மலர்தூவித் தொழுது திருவிருக்குக்குறள் பாடிப் பணிந்தனர். அப்பொழுது அணியாரூர் மிகப்பொலிந்து விளங்கியது தியாகேசப் பெருமான் திருவருளினாலே அடியவர்களும் பரிசனங்களும் பிள்ளையாரை எதிர்கொள்ள நகரின் புறத்தணைந்து தொழுதனர். அவர்கள் முன்னே பிள்ளையார் "அந்த மாயுல காதி"யாம பதிகம் தொழுதனர். அவர்கள் முன்னே பிள்ளையார் "அந்த மாயுல காதி"யாம பதிகம் எடுத்துத் திருவாரூர் "எந்தைதான் எனை யென்றுகொ லோ ?" என்று பாடியருளிச்சென்று திருக்கோயிலினை அணைந்து திருத்தேவாசிரியனைத் தொழுது திருமாளிகை வலங்கொண்டு உட்புகுந்து இறைவர் திருமுன்பு பெருங்காதலினாலே நிலமுறப் பலமுறையும் பணிந்து வீழ்ந்தெழுந்து திருப்பதிகம் பாடித் திளைத்துப் புறம் போந்து திருமடத்தணைந்தனர் திருவாரூர் அப்நெறியினைப் பணிந்து புற்றிடங்கொண்ட பெருமானையும் காலந்தோறும் தொழுது எழுந்தருளியிருந்தனர். அந்நாட்களில் திருக்கோளிலி முதலாகிய பதிகளைச் சென்று தொழுது மீண்டும் திருஆரூரில் எழுந்தருளியிருந்தனர் அக்காலத்தில் திருநாவுக்கரசரை நயந்து திருப்புகலூரில் எழுந்தருளும் திருவுளக்கருத்துவரத், திருவாரூரின் புறம்புபோந்து அந்நகரினை நோக்கி நின்று, "நெஞ்சமே அஞ்சாதே நீ! சிவன் தாரூர்தொழுவாய் நீ மறவாது தொழு : உய்யுமாறறிதி" என்ற கருத்துடன் "பவனமாய்ச் சோடையாய்" என்ற திருப்பதிகம் அருளித்

திருவாரூரினைப் பணிந்து அரிதுபோந்தருளினர். இடையில் திருப்பனையூர் முதலாகிய பதிகளை வணங்கித் திருப்புகலூரினைச்சாரத் திருநாவுக்கரசரும் திருமுருகரும் மற்றும் திருத்தொண்டர்களும் வந்து பணிந்து எதிர்கொண்டனர். பிள்ளையார் அவர்களுடன் திருக்கோயிலினிற் சென்று வணங்கி முருக நாயனாரது திருமடத்திற்புக்கு அங்கு அவரே யாவையும் குறைவறுத்திட அமர்ந்தருளினர். அக்காலத்தில் திருநீலநக்க நாயனாரும் சிறுத்தொண்ட நாயனாரும் அங்கு வந்து அணைந்தனர். சிலமெய்த்தொண்டர்களுடனே பிள்ளையார் இறைவரைக் கும்பிடும் செய்கை நோக்கின்று, சிறப்புடைய உயர் திருத்தொண்டின் உண்மைத் திறந்தினையே தெளியநாடி நாள்கள் செல்ல அவர்களுடனே கலந்தருளி வீற்றிருந்தருளினர்.

**தொண்டர்கள் உடனுறைவு**

அந்நாளில் "குறிகலந்த விசை" எனனும பதிகம்பாடி அப்பதியின் பெருமையினை எடுத்துப் பாராட்டியருளினர். அங்கு நின்றும் பிறபதிகளையும் சென்று வணங்கத் திருவுளங்கொள்ளச், சிறுத்தொண்ட நாயனாரும திருநீலநக்க நாயனாரும் அவ்வவர் பதிகளுக்குச் செல்லவும் முருகநாயனார் அங்குத் தங்கவும் உடன்படப், பிள்ளையார் புகலூரினைத் தொழுது மேற் செல்லலாயினர். தமது சிவிகை பின்வரத் திருநாவுக்கரசரது பக்கத்தில் அவரை நீங்காது உடனுகப் பிள்ளையார் வழிக்கொள்ளலாயினர். அப்பொழுது "இறைவர் உமக்கு அளித்த இந்த முத்துச் சிவிகையில் எழுந்தருளுவீர்" என்று அரசுகள் பிள்ளையாருக்கு உரைத்தருளப், பிள்ளையார் "இறைவர் திருவருளுமிவ்வாறுயின, நீர் தொண்டர்களோடும் முன்னே சென்றெய்துக அங்கு யான்பின் பற்றித் தொடர்ந்து வரப் போவது" என்றருளினர். அரசுகளும் "நீர் அருள் செய்தது நன்று; அவ்வாறே செய்குவன்" என்று அருளி, அது முதலாக உடன் செல்லு நாள்களிலெல்லாம் அவ்வியல்பினிற் சென்றருளுவாராகி, முன்னுறச் சென்று திருவம்பர் அணைந்தனர். பிள்ளையாரும் புகலூரினை வணங்கிச் சென்று அரசுகள் அணைந்த நிலையினை வினவக் கேட்டுத் தாமும் அங்கு இறைவரை வணங்கி யமர்ந்தருளினர். பிள்ளையார் "புலங்கு பொன்னிறம்" என்ற பதிகம் பாடி அதனுள் அங்குக் கோச்செங்கட் சோழர் செய்த திருப்பணியைச் சிறப்பித்துப் பாடி யருளினர். அங்கு நின்றும் திருக்கடவூர் தொழச் செல்லக் குங்குலியக்கலய நாயனாருடன் அடியவர்கள் எதிர்கொண்டனர். அப்பதியினுட் புகுந்து காலனை யுதைத்து வீரஞ் செய்த இறைவரைச் "சடையுடையான" என்ற பதிகம் பாடித் துதித்து, அரசுகளுடனே குங்குலியக்கலய நாயனாரது திருமடத்தில் எழுந்தருளி அவர் அமைத்த விருந்தினை மிக விரும்பி யிருந்தருளினர். அதன்பின் திருவாக்கூர், திருப்பாம்புரம் முதலிய பதிகளை வணங்கிக்கொண்டு திருவீழிமிழலையின் பக்கத்திற் செல்வாராயினர். முன்னுக எதிர்கொண்ட அரசுகளாற் பிள்ளையாரது வருகையினை அறிந்துகொண்ட அப்பதியின் அடியவர்கள் கூடி நகரை அலங்கரித்துப் பிள்ளையாரை எதிர்கொள்ள உட்செல்வார் "அரையார விரிகோவணவாடை" என்ற பதிகம் பாடிச் சென்று இருபெரு மக்களுங் கூடி இறைவரை வணங்கிய பின் திருமதிலின் புறத்து ஒரு திருமடத்தில் திருநாவுக்கரசரும் அடியவர்களும் தங்கியருளப் பிள்ளையார் கோபுரத்தைச் சார்ந்த வடபுறத்தில் ஒரு மடத்தி லமர்ந்தருளினர்.

**திருவீழிமிழலை**

அந்நாளில் பிள்ளையாரைக் காணும் பெருவிருப்பத்தினாலே சீகாழியினின்றும் மறையவர்கள் திருவீழிமிழலையில் வந்து வீழி மறையவர்கள் விருப்பினோடும் எதிர்கொள்ளப் புகுந்து இறைவரை வணங்கிப் பிள்ளையாரது திரு

மடத்தில் சேர்ந்து பிள்ளையாரது பாதம் பணிந்து தங்களுடனே தோணிபுரத்துக்கு எழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பித்தார்கள். அதற்குப் பிள்ளையார் "இன்று கழித்துத் திருவீழிமிழலை யிறைவரது அருள் பெற்றுப் போவது" என்றருளி, அவர்களுக்கு அருள் முகமளித்தனர். அன்றிரவு திருத்தோணியப்பர் தாமே பிள்ளையாரது கனவில் தோன்றித் "தோணியில் நாம் அங்கிருந்த வண்ணம் திருவீழிமிழலையில் விண்ணிழி விமானத்துக் காட்டுகின்றோம்; பேணும்படியால் அறிவாயாக" என்றருளி எழுந்தருளப், பிள்ளையார் உணர்ந்து எழுந்து அதிசயித்துத், திருக்கோயிலிற் சென்று திருத்தோணியப்பரையே அங்கு விண்ணிழி விமானத்துட் கண்டு, "மைம்மரு பூங்குழல்" என்று தொடங்கிப் "புகலியும் திருவீழிமிழலையும்" என்ற பதிகம் "தோணி மேவும் கோலம் வீழி விண்ணிழி கோயிலில் திகழ்ந்தபடி இது என் கொல்?" என்ற கருத்துடன் பாடித் துதித்து மகிழ்ந்தனர். இத்தன்மையினைச் சீகாழி மறையவர்களிடம் அருள் செய்வாராகித் "தோணியப்பர் பொருந்த எழுந்தருளிய தானங்களெங்குஞ்சென்று போற்றிவரும் காதலைக் கண்டு அங்கமர்ந்த வண்ணம் இங்கு அமர்ந்தருளிய தாகும்" என்று அருளி, அவர்களைச் சீகாழிக்குச் செல்ல விடுத்தருளி, அரசுகளோடும் இறைவரைப் பணிந்து அங்கு இனிதுறைந்தருளினர்.

**திருப்புகலியும் திருவீழி மிழலையும்**

அந்நாளில் உலகில் பன்னெடுங் காலம் மழை பெய்யாது, நதிகள் தப்பி உணவின்மையால் உயிர்கள் கண் சாம்பி வருந்தின; விண்ணவர்க்கும் பூசை தப்பின; மிக்க பெரும்பசி உலகில் விரவிற்று. இரு பெருமக்களும் அது கண்டு, "சிவனடியார்களுக்கும் கவலை வருமோ?" என்று கருத்திற் கொண்டு, இறைவரைப் பரவித் துயில்கொண்டருளினர். அன்றிரவு வீழிமிழலை யிறைவர் "உலகியல்பு நிகழ்ச்சியிற் றோன்றும் பசிநோய் உம்மை அடையாது; ஆயினும் உம்மை யடைந்த சிவநெறி நின்றோரின் வாட்டம் நீக்குதற்கு உமக்கு நித்தம் ஓரோர் காசு இந்தக் காலம் தீரும் வரை கிழக்கும் மேற்கும் பீடங்களில் அளிப்போம்" என்றருளினர். இருவரும் உணர்ந்து இறைவரது திருவருளைப் பரவிச் சென்று கோயிலை வலஞ் செய்யும்போது பிள்ளையார் அதிமுன்னதாகப் பீடிகை மேற் காசு கண்டு தொழுது எடுத்துப் போற்றினர். அடியார்கள் நாளும் உணவு என்று பறைநிகழ்வித்துச், சொல்லார்ந்த சாற்றி, அடியார்களை இருபொழுதும் இனிதின் அமுதுண்ணும்படி யருளினர். அவ்வாறே மேற்குப் பீடத்தில் காசு பெற்ற அரசுகளது திருமடத்திலும் நிகழ்ந்து வந்தது. ஆறெல் அங்கு அடியவர்கள் காட்டுப் பிறகே திருவமுது செய்யக் கண்டு, பிள்ளையார், தமது திருமடத்தில் அமுதாக்குவாரை நோக்கி, அடியார்களுக்கு அமுதூட்டக் காலம் தாழ்க்கின்றதென்னை? என வினவியருள, அவர்களால், தமது காசு வாசிபடுவதனால் காலம் தாழ்க்கின்றமையும் அரசுகள் பெறும் காசு வாசிபடாமையும் அறிந்தனர். அரசுகள் கைத்தொண்டாற் பெறுங்காசாதலின் வாசியின்மையாம் என்று கண்டு, இறைவரை "வாசி தீரவே" என்ற பதிகம் பாடியருள, அற்றைநாட் டொடங்கி வாசியில்லாக் காசு பெற்று உணவளித்தனர். பின்னர் உலகில் மழை பெய்து தன்பம் நீங்கச் செழிப்படையுங் காலம் எய்திற்று. இறைவரைப் போற்றிப் பலநாள் இருந்தபின் இருபெரு மக்களும் இறைவர்பால் விடை பெற்றுப் பிற பதிகளை வணங்க அங்கு நின்றும் எழுந்தருளினர். திருவாஞ்சியம், திருத்தலையாலங்காடு, திருப்பெருவேளூர், திருச்சாத்தமங்குடி, திருக்கரவீரம், திருவிளமர், திருவாரூர், திருக்காறாயில், திருத்தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம், திருத்தேங்கூர், திருக்கொள்ளிக்காடு, திருக்கோட்டூர், திருவெண்டுறை, திருத்தண்டலை நீணெறி, திருக்களர் முதலிய பதிகளை வணங்கிக்கொண்டு திருமறைக்காட்டின் மருங்கு சேர்ந்தருளினர்.

**படிக்காசு**

இவ் விருபெருமக்களும் சேர எழுந்தருளும் பெருமை பேற்றினைக் கேட்ட திருமறைக்காட்டின் அடியவர்கள் நகரினை அணிசெய்து எதிர்கொண்டு

**திருமறைக்காடு**

வணங்கி மகிழ்ந்தனர். அவர்களுடன் இருபெரு மக்களும் மகிழ்ந்து போந்து திருக்கோயிலினை முறையால் வணங்கி உட்புகுந்து, முன்னாளில் வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்ட அது முதல் இதுவரை அம்மறைகளோதும் பண்புடைய யடியார் அணைந்து காப்பு நீக்காமையால், அடைத்தவாறே நிற்கின்ற திருவாயிலின் முன் போந்தருளினர். பிள்ளையார் அரசு

**திருக்கதவம் திறத்தலும் அடைத்தலும்**

களை நோக்கி, "அப்பரே! எவ்வாற்றானும் நேர் வாயிலாகிய இதனைத் திறந்து புகுந்து இறைவரை வணங்குதற்கு நீர் பாடியருளும்" என்று கூற, "நீது உமதருளாகில் அவ்வாறே பாடுவேன்" என்று அவரும் "பண்ணினேர் மொழி" என்ற பதிகம் பாடிப் பத்துப்பாட்டும் நிரம்பியும் கதவம் திறவாதாகத், திருக்கடைக்காப்பில் அரிதின் வேண்டவே கதவம் திறந்தது. அடியவர்கள் அர ஓசை முழக்கி ஆர்த்தனர். அவ் வழியே சென்று இருபெருமக்களும் உட்புகுந்து இறைவரை இறைஞ்சித் திருவருளைப் போற்றி இன்ப வெள்ளத்துள் மூழ்கித் திருப்பதிகங்கள் பாடிப் புறம் போந்தபின், அரசுகள் பிள்ளையாரை நோக்கி "கதவம் அடைக்கப் பாடுக" என்ன, அவ்வாறே பிள்ளையார் "சதுரம் மறை" என்ற பதிகம் பாட, எடுத்த திருப்பாட்டிலே கதவம் திருக்காப்பு நிரம்பிற்று. அது கண்ட அடியவர்கள் ஆர்த்துத் திருவருளையும் இருபெருமக்களையும் போற்றி வாழ்ந்தனர். அன்று முதல் அத்திருவாயிலின் வழியே அடியவர்கள் சென்று வணங்கும் வழக்கம் நிகழ்ந்தது. வேதங்கள் செய்த பணியைத் தாம் செய்து இறைவரை நேரே காணும் பெருமையை வகுத்து வைத்த இருவரையும் போற்றி உலகம் வாழ்ந்தது.

இவ்வாறு இறைவர் செய்த பேரருளினையும், தாம் அரிதிற் பாடித் திறப்பித்தமையும் பிள்ளையார் எளிதில் அடைத்தமையும் உன்னி உன்னித் திருமடத்தில் ஒருமருங்கு அரசுகள் துயிலும்போது, இறைவர் சைவ வேடத்தால் கனவில் வந்து, "வாய்மூரில் இருப்போம்; தொடர வா" என்றருளிப் போனார்; அது உணர்ந்து அப்போதே கைகூப்பித் தொழுது எழுந்து கடிது பின் தொடர்ந்தனர். அவர் எய்துவார்போன்று எய்தாது முன் செல்லச் செல்ல, அரசுகளும் ஆர்வத்தோடும் அவர்பின் போயினார். "அப்பர் எங்குற்றார்?" என்று கேட்டு, அறிந்து, பிள்ளையாரும் அப்பொழுதே தொடர்ந்து திருவாய்மூரினை அணைய வந்தனர். முன் சென்ற இறையவர் அற்புதப் பொற்கோயில் ஒன்று காட்டி அதனுள் மறைந்தருள அவ்வெல்லையில் பிள்ளையாரும் வந்தணைந்தனர் இறைவர் அவருக்கு விண்ணின்மேல் விடை மேலே காட்சி தரக் கண்டு "தளிரிள வளர்" என்ற பதிகம் பாடி, அரசுகளுக்கும் காட்டிய பின், இருவரும் திருவாய்மூர் சென்று தொழுது, அங்கு வைகினர். பின், திருமறைக்காட்டிற் சேர்ந்து தொழுதினிதிருந்தனர்.

அந்நாளிலே பாண்டி நாட்டிலே சமண சமயம் மிக்குச் சைவ விளக்கம் குன்றியது; அரசனும் முன் செய் தீவினைப் பயத்தினாலே சமணத்திற் சார்ந்து ஒழுகினன். சைவ நன்னெறி திரிந்து மாறி நவை நெறி நடந்தது. தமிழ்நாட்

**பாண்டிநாட்டு நிலை - விண்ணப்பம்**

டுப் பதிகள் எல்லாம் சமணர் பாழிகளும் பள்ளிகளுமாயின; எங்கும் சமணரேயாகி மொய்த்தனர். பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரும், மந்திரியாராகிய குலச்சிறையாரும் என்றிவ்விருவர் பாங்குமின்றிச் சைவம் அங்கு எய்தாதாயிற்று. இவர்களும் தம் நாட்டிற்கு வந்த கேட்டினை எண்ணி மனமழிந்து தாம் சைவ ஒழுக்கத்தினின்ற நிலையினைப்

பாண்டியன்முன்பு புலப்படாவகை கொண்டு செலுத்தினார்கள். அப்போது பிள்ளையார் திருமறைக்காட்டில் எழுந்தருளிய செய்தியினை இவர்கள் பாண்டிநாட்டின் கலவிளைப் பயத்தினூற கேட்டுத் தாங்கள் கைதொழும் சுருதியினாலே பரிசனங்களைப் பிள்ளையார்பால் அனுப்பி, அவரிடம் தமது நாட்டின் நிலையினை விண்ணப்பிக்கும்படி ஏவினார்கள். அவர்களும் திருமறைக்காடு சேர்ந்து பிள்ளையாரது திருமடத்தில் வந்து, வாயில் காவலர்க்குச் சொல்லி, விடைபெற்றுப், பிள்ளையார் திருமுன்பு பணிந்து அவ்வாறே விண்ணப்பித்தார்கள். உடனிருந்த தொண்டர்களும் அவ்வாறே விண்ணப்பிக்கப், பிள்ளையார் அவர்களுக்கு அருள்முகமளித்த பின், அரசுகளுடன் கூடிச் சென்று இறைவரைப் பணிந்து பெரிய திருக்கோபுரத்துள்ளிருந்து அவ்வரலாறுகளை அரசுகளிடம் கூறிப், பாண்டிநாட்டுக்கு எழுந்தருளத் துணிந்தனர். அப்போது வாகீசர் "பிள்ளாய்! அந்த அமணர்கள் பெருவஞ்சனையுடைய தீயோர், கோள்களும் தீயன; செல்ல உடன்படுவதொண்ணாது" என்று மறுக்கப், பிள்ளையார் "இறைவரை நாம் தொழக் கோள்கள் தீயவையாகா; நன்மையே பயக்கும், இறைவரது திருநீறு புத்தரோடும் அமணர்களை வாதில் அழிவிக்கும், இது திடம்" என்று "வேயுறு தோளி" எனும் கோளறு திருப்பதிகத்தினை அருளிச்செய்ய, அதுகேட்டு அரசுகளும் இசைந்து உடன்வருதற்கெழுந்தனர். பிள்ளையார் அவரைத் தடுத்து, அங்கிருக்கும்படி வேண்டி, இறைவரைத் தொழுது விடைபெற்று எழுந்தருளினர். அரசுகளும் விடைகொண்டு மீண்டு அங்கெழுந்தருளியிருந்தனர். பிள்ளையார் அரசுகளிடம் விடைபெற்றுத் திருவைந்தெழுத்தோதி இறைவர் திருவடி நினைந்து திருநீறு அணிந்து சிவிகையிலெழுந்தருளினர். அதுகண்ட அடியவர்களெல்லாம் சிவநாம முழக்கம் ஆர்த்தனர்.

நாற்றிசையிலுள்ளோரும் போற்ற மங்கலங்களுடன் அங்கங்கும் அடியார் எதிர்கொள்ள வழியிடையே உள்ள பதிகளை வணங்கிக்கொண்டு செல்வாராகித், திருவகத்தியான் பள்ளி, திருக்கோடிக்குழகர், திருக்கடிக்குளம், திருஇடும்பாவனம், திருவுசாத்தானம் முதலிய பதிகளை இறைஞ்சித் தமிழ்பாடித் தங்கிப், பிள்ளையார் போந்தருளினர். கழிநெய்தல் கடந்து, சோழநாட்டின் தென்மேல்பால் திசைநோக்கிச் செறிபாங்கிய மருதநிலத்தின் வழியே சென்று, எங்கெங்கும் கமலத் தடங்களும் மலர்ப்படுகைகளும் முதலிய இவை கடந்து, அந்தணர்கள் ஓதுகிடைகளையும் யாகசாலைகளையும் தொண்டர் குழாங்களையுமுடைய நல்ல பதிகளையும் கடந்து, இவ்வாறு நீர்நாட்டினை நீங்கி, அடுத்த முல்லைநிலம் கடந்து, மறவர் வைப்பாகிய நிலமும் கடந்துபோய்ச், சீர்நாடு தென்பாண்டிநாட்டினை அணைவாராகித், திருக்கொடுங்குன்றத்தினை அணைந்து பணிந்துபோய்க், குன்றும் கானும் நாடும் கடந்து, மதுரையினை அணைந்தனர்.

இவ்வாறு பிள்ளையார் எழுந்தருளும்போது, பாண்டிநாட்டின் அமணர்களுக்கு அழிவுகாட்டும் தீக்குறிகளும் துன்னிமித்தங்களும் நிகழ்ந்தன. அவர்களது பாழி, பள்ளி, அசோகு, உணவு மண்டபம் முதலியவற்றின்மேல் கூகை ஆந்தை முதலான தீயபுட்கள் பூசலிட்டுக் கேடுகாட்டின. பீலியும் தடுக்கும் பாயும் வழுவி வீழ்ந்தன; கால்கள் தடுமாறின; கண்கள் இடந்துடித்தன. சந்தியார் தம்முள்ளுமே கலாம் விளைத்தனர்; அமணர் தம்முள் மாறுகொண்டு பொறாமை முதலிய அறவினைகளை விடுத்தனர்; தீக்குணம் தலைநின்றார்கள். இவையேயன்றி இவர்களுக்குப் பகை விளைக்கும் தீக் கனவுகளும் நிகழ்ந்தன. இவற்றை ஒருவர்க்கொருவர் சொல்லி, மதுரைப் புறத்தன்னோர்களும் மதுரையில் வந்துசேர்ந்து அங்குள்ளாருடன் கூடி மயங்கித் தாந்தாங் கண்ட திறங்களைப் பேசிக்கொண்டனர். அசோகமரம் வேரோடு பறிந்து கீழே உள்ள அருகத்தேவன்மேல் வீழவும், பின் அத்தெய்வம் முக்குடையும் தானும் எழுந்து

கையுதறி ஓடிப்போகவும், குண்டிகையை உடைத்து ஓர் குரத்தி ஓடவும், பண்டிதர் கழுதைமேற் படரவும், அவர் பின் இயக்கியார் ஊளையிட்டுப் புலம்பியோடவும், சிவனடியார்கள் மதுரையில் வரவும், அரசன் தழல் மூழ்கி எழவும், விடை இளங்கன்று ஒன்று வந்து அமணர்தம் கூட்டத்தை உழறிடவும், ஒருபுகலுமின்றி யாவரும் சிதறி ஓடி நிழலில்லாத மரங்களேறி நின்றிடவும் என்றிவ்வண்ணம் அவ்வவர் கண்ட கனாக்களைக் கூறினர். 'இவை சமண அடிகளுக்குத் தீங்கு விளைப்பது திடமே' என்று மனம் வருந்தி உணவுங் கொள்ளாது அழுங்கினார்கள். அமணர் அந்நிலையினை அடைய, பாண்டிமா தேவியார் மங்கையர்க்கரசியாருக்கும், மெய்வகை அமைச்சனார் குலச்சிறையாருக்கும் மேன்மேல் நன்னிமித்தங்கள் விளங்கின ; அதுகண்டு மகிழ்ந்திருந்த போது, பிள்ளையார் எழுந்தருளும் நல்ல வார்த்தையினை வந்தவர்கள் கூறக்கேட்டனர். மிகவும் மகிழ்ச்சி கூர, வந்து அடிவணங்கி நின்ற அமைச்சனாரை நோக்கி மங்கையர்க்கரசியார், "பிள்ளையார் திருமுன் சென்று நலவரவேற்று எதிர்கொள்ளும்" என்றார். அவரும் இச்செயல் அரசனுக்கு முற்றியேயாம் என்று உட்கொண்டு மதுரையின் புறத்து நெடுந்தூரம் சென்று வரவேற்று நின்றனர். ஆலவாயமர்ந்த பெருமானைக் கும்பிடவேண்டுமென்று அரசனுக்கும் கூறி அம்மையாரும் பரிசனங்களுடன் ஆலவாயுடையார் திருக்கோயிலுக்குச் சென்று தாமும் வரவேற்று நின்றனர்.

முத்துச்சிவிகையின் மேலே சேவித்து வரும் முழுமதிபோல முத்துக்குடை நிழல் செய்யவும், திருநீற்றுத்தொண்டர் குழாம் பெருகிவரவும், அந்தணர்கள் மறை வாழ்த்தொலி பொங்கவும், செந்தமிழ் மாருதம் எப்பக்கமும் சேவிப்பவும், அமண் எனும் பாவப் பெருஞ்சேனை உடைந்தோட வரும் புண்ணியத்தின் படையெழுச்சி போல, அமண் மாசு கழுவ வரும் கங்கைபோல, அமணிருள் போய் மாயவதற்கு ஞானமணி விளக்கு எழுந்து வருவதுபோலச் சைவநெறி தழைத்தோங்கு நலம்பலவும் காட்டித் திருச்சின்னங்களெல்லாம் பரசமயகோளரி வந்தானென்று பணிமாறப் பிள்ளையார் எழுந்தருளி வருகின்றார். அவ்வோசை செவியுறுதலுங் கேட்டவுடன் மந்திரியார் மிகமகிழ்ந்து கைகூப்பி விரைவிற்சென்று, அத்திருவெழுச்சியின் முன்வரும் தொண்டர் பெருங்கூட்டத்தின் முன்னே நீணிலத்திடைத் தாழ்ந்து பணிந்து கிடந்தனர். அத்தொண்டர்கள் அணைந்து வணங்கவும், குலச்சிறையார் நிலத்தினின்றெழாது கிடந்த நிலைகண்டு, சிவிகையின் மேல்வரும் பிள்ளையார்பால் அறிவித்தனர். அது கேட்ட பிள்ளையார் சிவிகையினின்றும் விரைந் திழிந்து சென்றருளி அவரை யணைந்து கைமலர்கள் பற்றியே மேலெடுப்ப, அவரும் கைதொழுது நின்றனர். பிள்ளையார் மதுரவாக்களிப்பாராய்ச் "சோழர் மகளாராகிய மங்கையர்க்கரசியாருக்கும் திருந்திய சிந்தையீராகிய உமக்கும் இறைவரது திருவருள் பெருக நன்கு நிகழ்கின்றதா ?" என்று வினவியருளினர். அதற்கு மந்திரியார், "சென்ற காலத்திலும் பழுதிலோம், இனி எதிர்காலத்திலும் சிறப்புப்பெறுவோம் என்பது இன்று தேவரீர் எழுந்தருளப்பெற்ற பெரும் பேற்றினாலாகியபடி என்றும் திருவருள் உடையோம். நன்மையற்ற நெறியில் அழுந்திக்கிடக்கும் இந்நாடும் நற்றமிழ் வேந்தனும் உய்திபெற்றுத் திருநீற்றினொளியில் விளங்கும் மேன்மையும் படைத்தனம்" என்பாராகி, மேலும், "தேவரீர் எழுந்தருளும் பேறு கேட்டு எமது வாழ்வு எழுந்தருளிற்று என்றே அங்கு எதிர்சென்று அடிபணிவீர்" என்று மங்கையர்க்கரசியார் அடியேனை ஏவியருளினர் என்று கூறி மீளவும் அடிவணங்கினர். அவருக்கு அருளிப், பிள்ளையார் மேற்செல்லும்பொழுது மதில்புடைசூழும் மதுரை எதிர்தோன்றவே, "இங்கு இறைவரது திருவாலவாய் மற்றெம் மருங்கில் உள்ளது?" என்று பிள்ளையார் தொண்டரை வினவ, அவர் கைகளாற்காட்டி 'வானளக்கவோங்கிய கோபுரந் தோன்றுவது திருவாலவாய்' என்று காட்டிடக்கண்டு, அப்பொழுது அவ

விடத்தே நிலமிசைப் பணிந்து "மங்கையர்க்கரசி" என்று தொடங்கி இருவர் பணியும் சிறப்பித்த திருப்பதிகம்பாடி வணங்கி, மேற்சென்று, மந்திரியாருடனே திருவாலவாய் மருங்கு அணைந்து, கோபுரம்இறைஞ்சி, முறையே மாளிகையை வலங்கொண்டு, திருக்கோயிலினுட் புகுந்தருளினார்; ஆலவாயுடைய பெருமானைக் கண்களின் பயன்பெறக் கண்டு பலமுறை நிலமுறப் பணிந்து இறைஞ்சினார்; "நீலமாமிடற்று" என்ற திருப்பதிகம்பாடித் துதித்துத் திருமுன்றிலணைந்தனர் பிள்ளையார் உள்ளே புகும்பொழுது எதிர் செல்லாது ஒரு பக்கத்தில் ஒதுங்கி நின்ற மங்கையர்க்கரசியார், அப்பொழுது முன்புவந்து கண்ணீர் மல்க அடிவணங்கக் கைகூப்பி நிற்க, அவரைச் சோழனார் திருமகளார் என்று மந்திரியார் அறிவிக்கப், பிள்ளையார் பெருமகிழ்ச்சியுடன் அவரெதிர் அணைந்தருளினார் அம்மையார் பிள்ளையாரின் திருவடிகளில் பொருந்த வீழ்ந்து வணங்கினார். பிள்ளையார் அவரை அருட்பெருஞ் சிறப்பொடும் எடுத்தருள, அம்மையார் தமது கருத்து முற்றியதென மகிழ்ந்தே, கண்ணீர் மல்க வாய்குழறி, "யானும் என்பதியும் செய்த தவமென்னோ!" என்று கூறி வணங்கி நின்றனர். பிள்ளையாரும், "பரசமயச் சூழலினிடையே திருத்தொண்டின் நெறியில் வாழும் பெருமையுடைய உம்மைக் காணவந்தனம்" என்றருள, மந்திரியாரும் திறங்களெல்லாம் மொழிந்தனர். பிள்ளையார் அம்மையாருக்கு அருள்செய்து விடைகொடுத்து மெய்த்தொண்டர்களுடனே எழுந்தருளும்போது, திருவாலவாயிற் பணி செய்யும் தொண்டர்கள் முன்புவந்து "அமணிருள் கெடத் தேவரீர் எழுந்தருளுதற்கு எல்லையில்லாத தவம் செய்தோம்" என்று கூறி இறைஞ்சினர் அவர்களுக்கு அருண்முகமளித்தபின் புறத்தில் அணைந்து குலச்சிறையார் திருமடங் காட்ட அதில் தொண்டர்களுடனே இனிதமர்ந்தருளினார். அம்மையார் அருளினாலே குலச்சிறையார் விருந்தளிப்பப், பிள்ளையார் அங்கிருந்தனர்.

இவ்வாறு பிள்ளையாரும் அடியார்களும் பகல் வரக்கண்ட அமணர்கள் அவ்விரவிலே, இருளுக்கு இருள்போலக் கூடினர். தொண்டர்கள் எடுத்த இசைக்கும் பதிகத்திசையினையும் கேட்டுக் கலங்கிப் பொறாமைகொண்டு, அரசனிடம் சென்று அறிவிக்கும் சூழ்ச்சி துணிந்து, அரண்மனைக்குச் சென்று, வாயில்காவலர்க்கு அறிவித்து, விடுவிக்கப்பெற்று, அரசன் முன்பு பதைப்புடன் சென்றனர். அவர்கள் துன்பம் புலர்ந்தமை யறிந்து அரசன் "நீவிர் கூடிவந்ததென்னே?" என்ன, அவர்கள் "அது சொல்லுதற் கடுத்ததன்று" என்றனர். "ஆயின் நுமக்கு அடுத்தது கூறுவீர்?" என்று அரசன் மேல் வினவ, "வென்றி அரசனே! உனது மதுரையிற் சைவவேதியர் வருதலால் நாங்கள் கண்டு முட்டு" என்றனர். அது கேட்ட அரசன், "யானும் கேட்டு முட்டு" என்று கூறியபின்னும், "என் அரசு நன்று!" என்று சினந்து "அச்சிவனடியார் யாவர்? இங்கு அவர்கள் அணைந்ததென்?" என்றான் அதற்கு அவர்கள் "சோழநாட்டில் சீகாழியில் சூலபாணியின் அருள்பெற்றவனென்று மறைச்சிறுவன் தொண்டர் கூட்டத்துடனே முத்துச் சிவிகையின்மேல் ஏறி வந்தணைந்தனன் எங்களை வாதினில் வெல்ல" என்று கூறித் தாமறிந்தனவற்றையெல்லாம் கூறினர், பிள்ளையாரது திருநாமம் தன் செவிப் புக்கபோது அரசன் கோபித்து "அம்மைந்தன் இம்மருங்கு அணைந்தானாகில் நாம் செய்யக்கடவது என்னை?" என்ன, அவர்கள் "வந்த மறையவனை வலிசெய்து போக்கும் கருத்தன்றி, அவன் உறையும் மடத்தில் தீப்படும்படி விஞ்சை மந்திரத் தொழில் விளைத்தால் இந்நகரில் இராது சென்றுவிடும்" என்றார்கள். "செய்யலாவது ஒன்று இதுவேயானால் அதனையே விரைந்து செய்யச் செல்லுங்கள்" என்றுகூறி அவர்களைப் போக்கி, யாவரிடமும் பேசாது, கவலையுடனே அரசன் பள்ளிக்கட்டிலிற் சேர்ந்தான். அப்போது பாண்டிமாதேவியார் அங்குச்சேர்ந்து, உரையாடா திருந்த மன்னவனை

நோக்கி " என் உயிர் நாதரே! மனமகிழ்ச்சியின்றி முகம் புலர்ந்திருந்தீர்; உமக்கு நேர்ந்ததென்ன?" என்று கேட்க, அரசன "சோழநாட்டிற சீகாழிப் பதியான ஒருவன் சங்கரனருளபெற்று இங்கு அடிகள்மாரை வாதினில வெல்ல என்று வந்தனன; அடிகளமாரகள் கணடுமுட்டு; யானும கேட்டுமுட்டு; இதுவே நிகழ்ச்சி" என்றான். அம்மையார் உமது நிலை இதுவாகில், "நீடிய தெய்வததனமைபற்றி அவர்கள வாது செய்தால் வென்றவர் பககஞ் சார்ந்து பொருந்துவதே உறுதியாகும்; வருந்த வேண்டா" என்று கூறிப், பிள்ளையார் தம்மை ஆட்கொளள வநதருளியமைபறறி மகிழ்ந்து இதனை மந்திரியாருக்குமுரைத் திருந்தனர். மந்திரியார் வணங்கிப் "பிள்ளையார எழுநதருளும் பேறு பெறறோம்; ஆயின இனி இவ்வமணர்களாகிய வஞ்சகர் செயயும் வஞ்சனை என்னையோ? அறியோம்" எனறுகூற, அமமையார் அஞ்சி "இவ்வஞ்சகப புலையர் ஈனமே புரிய வல்லார்; ஞானசம்பநதர்பாலின் நன்மையலலாதவை செயது ஏதேனும ஊனம்வந்தடைந்தால நாமு முயிர்துறந தொழிவதே கடனாகும்" எனறுரைத்தனர்.

இவர்கள் நிலை யிஃது; இனி, அவ்வமணர் நிலை யாதோ? எனனில, அரசனிடம விடைபெற்றுச் சென்ற அவர்கள், பிளளையாரது திருமடததிலே தஙகள மநதிரததாற செநதீயினைச் சேருமபடி செலுததினா. ஆதிமநதிரமாகிய திருவைநதெழுத்தினை ஓதுவார்கள் நோககும திசையிலும மற்றை மநதிரஙகளின விதிவநது கூடவலலதாமோ? ஆதலின் தாம புனைந்த மந்திர சாதனைகள சாதியாதொழிநத நிலைகணடு, அமணர்கள தளர்நது வந்துகூடி, இதனை அரசன் அறிநதால் நமமேனமை சருதாது விடுதது நமா சீவனததையும் ஒழிக்கும எனறு எண்ணி, மநதிரம வாயக்காதபோது இதுவே செயயலாவது எனத துணிந்து திருமடப்புறஞ் சேர்நது தாம் எண்ணியபடியே புரிநதனா; அததீத்தொழில வெளிபபடுதலும பதைப்புடனே பரிசனஙகள அதனைச் சிதைத்துப பிள்ளையார்பால் அறிவித்தனர்; பிள்ளையார் "மாதவாகள துயிலும் இததிருமடபபுறம்பு இப்பாவிகள் பழுது செய்வதோ?" என்று இரககங்கொண டருளினர், பின்னா "என பொருட்டு அவர்கள் செய்த தீங்காயினும் சிவனடியார்பாற பொருந்துமோ?" எனறு அச்சமும் முனிவும் பொருநத அரசனது நீதிமுறை வழுவியமையே இதன காரணம என்று திருவுளங கொணடருளினர்; "வெயய தீங்கு இது வேநதன மேலதேயாம" எனற விதிமுறை சருதி "செய்யனே" என்ற பதிகம சட்டளையிட்டுச "சைவா வாழும் மடத்தில அமணர் இட்ட தீப பையவேசென்று பாணடியற் காகவே" எனறு பணிததருளினர். மஙகையாககரசியாரது மஙகலநாண பாதுகாககவும அரசனைத தீணடித திருநீறுபூசி உய்விககவும் திருவுளஙகொணடு தீயினைப பையவேசெனறு ஆக என்றருளினர். அததழல சென்று பாணடியனைப பொருநதுமாறு மேவித தழல பொதி வெபபு நோய் எனப பெயர்பெறறது.

இரவு நீங்கிப பொழுது விடிநதது; இரவில் அமணா செயத தீமையினை அரசியாருமம அமைச்சனாரும கேட்டு இததீயவா நாட்டில் பிள்ளையாரை வரவழைத்த நாம் மாயவதே கடன்என மயஙகிப்பின, திருமடபபுற மருங்கு தீதின்மை, தெரிந்து, தெளிநது, "இததீஙகு கடைக்கால் வருவதெபபடியோ?" என எண்ணியிருநதனா; அபபொழுது, அரசனது மெய்காவலர் வந்து "அரசனுக்கு வெபபுநோய் அடுத்தது" எனறறிவிககப பதைப்புடனே அரசனிடம வந்தணைந்தனர். அரசனது வெபபுநோய் உடல்முழுதும தீபபோலக் கனன்றெழுந்தது; மாளிகையிற் புறத்து நின்றார்களுப் புலர்ந்து தீநதுபோம்படி போய் வெப்பமிக்கு உடல் திரஙகிற்று; உணர்வும் உயிரும் ஒழியுமபடி ஒருபுறம் ஒதுங்கின; அணைய வந்தவர்களும் தூரத்தி லகன்றனர்; வாழைக குருததும தளிர்களும் இடையே கொணரினும் அவை சருககொண்டு பொடியாயின; மருத்துவா

நூல்களின் வகுத்த தொழிலெல்லாம் செய்யவும் நோய் மேன்மேல் எழுந்து உயிரையும் உருக்குவதாகவே கருத்தொழிந்து அரசன் பேச்சும் மறந்தனன். இச்செய்தி தெரிந்த அமணர்கள் மனமழிந்து இது முன் இரவின் செய்தியின் விளைவுதானோ? என்று கூறி மானமின்றி அரசனிடம் வந்து அணைந்து தங்கள் மந்திர முறைகளினால் தீர்வு முயன்றனர். மாதேவியாரும் அமைச்சனாரும் "இஃது அமணர் செய்த தீத்தொழிலின் விளைவேயாகும்; இவர்கள் தீர்க்கப்புகின் தீராது முதிர்வதேயாகும்" என்றுகொண்டு மன்னனெதிர் பணிந்து இச்செய்திகளைக் கூறி, "இதற்குத் தீர்வு பிள்ளையாரது அருளேயாம்; சிவஞானம் பெற்ற திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் விரும்பி நோக்கினால் இந்தத் தீப்பிணியேயன்றிப் பிறவியும் தீரும்" என்றார்கள். அரசனது செவியில் அவர்கள் இவ்வாறு கூறிய, "திருஞானசம்பந்தர்" என்ற நாமமந்திரத்தினையும் சொன்னபோது, அரசன் சிறிது அயர்வு நீங்கி, அவர்களைப் பார்த்துச் "சைவ நெறிமறைச் சிறுவர் வந்தால் இந்நோய் நீங்குமாகில் அறியேன்; இப்பிணியைத் தீர்த்து வென்றவர் பக்கம் சேருவன், அதற்கு உபாயம் உண்டாகில் அழையுங்கள்' என்றான். அது கேட்டவுடன் அம்மையாரும் அமைச்சனாரும் "சிறையை நீக்கிய வெள்ளம்போன்ற காதல் வெள்ளத்தோடும் அம்மையார் சிவிகைமீதும், அமைச்சனார் குதிரையினுமாக ஏறிப் பிள்ளையாரது திருமடத்தினைச் சார்ந்து, வாயில் காவலர்க்கு அறிவித்துப், பிள்ளையார் ஆணையால் விடுக்கப்பெற்று உட்சென்றனர்; ஞானத்தின் திருவுருவை, மறைகளின் துணையை, வானின்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைச், சிவன் சீர்பாடும் கானத்தின் எழுபிறப்பினைக் கண்களிப்பக் கண்டார்கள்.

"ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்"

கண்டபோதே அமண் தீயோர் செய்த கொடுந்தொழில் நினைந்து, கண்ணீர் அருவி பாயக் கைகள் கூப்பிப் பெருமூச்செறிந்து வாய்குழறி உடல் நடுங்கி நின்று மதி மயங்கி நிலத்தின் வீழ்ந்து பிள்ளையாரது சரணகமலங்களைப் பற்றிக்கொண்டு, கவலைக் கடலின் ஓர் கரை பற்றினாற்போன்று, மெய்யன்பினால் விடாதொழிந்து கிடந்தனர். அவ்விருவரையும் பிள்ளையார் திருக்கையினால் எழுந்தருளித் தேற்றியிடவும் தெளியாதாராக அவர்களை நோக்கித் "திருவுடையீர்! உங்கள்பால் தீங்குளதோ?" என்று கேட்டருளினர். அவர்கள் நிகழ்ந்தனவற்றை யெல்லாம் சொல்லி, 'அமணர்கள் ஆற்றிய தீமைத் தீப்பிணியினால் மயங்கும் மன்னவன் முன்னே அவர்களை வென்றருளினால் அவனுயிரும் எமதுயிரும் உய்யும்" என்றனர். அவர்களுக்கு உறுதிகூறி "ஆக்கமும் அழிவும் எல்லாம் அவர் செயலேயாகும், அமணர்களாகிய பாவிகளை நோக்க நேரும் தீமை நீங்கவும் வெல்லவும் இறைவரது திருவுளமறியேன்" என்று புறப்படத் திருவால வாயினுட் புகுந்தனர். "எரியுருவாகிய இறைவரே! நோக்கவும் விதியிலாத அமணர்களை நோக்கி நான் "வாது செய்யத் திருவுளமே" என்று "காட்டுமா" என்று திருப்பதிகம் பாடித் திருவுளம் நோக்கிப், பின்னும் "வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே" என்று "வேத வேள்வியை" என்று திருப்பதிகம் பாடி, "திருஆலவாயினில் ஆதியே! அடியேன் இன்று ஞாலம் நின்புகழே மிகவேண்டும்" என்று இறைஞ்சி இறைவரது அருள்பெற்று மகிழ்ச்சியுடனே போந்து சிவிகையின் மேற்கொண்டு போந்தருளினர். தொண்டர்கள் எடுத்த அரவோசை

முழக்கம் எங்கும் நிறைந்தது; திருநீற்றின் சோதிபோல முத்துக்குடை நிழற்றச்
சின்னங்கள் ஒலிக்க எழுச்சிபெற்றுச் செல்லக், காட்சிபெற்ற மதுரைநகர மாந்தர்
வேற்றுச் சமயத்தவராயினும் "பாண்டியன்பொருட்டு இந்தப் புண்ணியமூர்த்தி வந்து
மதுரையிற் புகுவதற்குப் பண்ணிய முன்னைத் தவம்தா னென்னே!" என்றனர்.
பாண்டிமாதேவியார் சிவிகையின் பின்னே வரவும், அமைச்சனார் முன்பு திருத்தொண
டர் கூட்டத்தினுட் செல்லவுமாக, இவ்வாறு சென்று பிள்ளையார் அரசனது அரண்
மனைவாயிலினைச் சேர்ந்தனர்; மந்திரியார் முன்சென்று அரசனுக்குப் பிள்ளையாரது வர
வினைக் கூற, முன்னைத் துன்பம மேலுஞ் சிறிது நீங்கி, அரசன், "முடியின் பக்கத்து அவ
ருக்கு மணிப்பீடம் இடுக" என்று கூறும் வல்லமைபெற்று, மேலும், அவரை அழைத்து
வரும்படி அமைச்சரை ஏவினன். அதுசமயம் அமணர்கள் அரசனை நோக்கி, "நமது
தனிச் சமயத்தினைக் காக்கும் பண்பு இதுவோ? அரசரே! அவரை அழைத்தீர்; நோயினை
இருதிறத்தவரும் ஒக்கத்தீர்க்கும்படி கூறி, "அவரால் தீர்ந்ததாயினும் யாமும் தீர்த்
தோமாகவும் கூற இசைவீராக" என்றனர்; செய்தவப்பயன் வந்துகூடும் காலம்
பொருந்தியதனாலே அரசன் "தெய்வச்சார்பிலே இருவரும் தனித்தனித் தீருங்கள்;
கைதவம் பேசமாட்டேன்" என்று கூறவே அமணர்கள் எண்ணம் கெட்டிருந்தனர்.

பிள்ளையார் அரண்மனை முற்றத்திற் சிவிகையினின்று இழிந்து உட்புகுந்தருள,
வானினின்று நிலத்திடை நீளிருணீங்க வந்த திங்கள்போன்ற அப்பெருமானை அரசன்
கண்டனன். கண்டபொழுதே அரசன் கையெடுத்து எய்த நோக்கி முடியின் பக்கத்திற்
பீடத்தினைக் காட்டப், பிள்ளையார் அதன்மிசை எழுந்தருளியிருந்தனர். அரசன்
பிள்ளையாரது திருமேனி காணப்பெற்று நோக்கப் பெற்றதனாலே வெப்பு நோய்
மேலும் சிறிது நீங்கிப் பிள்ளையாரை நோக்கித் "தமது பதியாது" என்று விருப்புடன்
கேட்டனன். பிள்ளையார் "திருக்கழுமலம் நாம் கருதும் ஊர்" என்று அதன் பன்னி
ரண்டு பெயர்களையும் பற்றி எழுந்த திருச்சக்கர மாற்றுப் பதிகத்தினைக் கட்டளையிட்
டருளினர். அப்பொழுது பக்கத்திலிருந்த அமணர், பொறாமையினாலே அச்சத்தை
மறைத்துக் காலை எழும் ஞாயிற்றைச் சூழும் கருமுகில் போலப் பிள்ளையாரைச்சூழ்ந்து
கொண்டு ஏலவே வாதில் வெல்வதற் கெண்ணித், தமது புன்னூலினை எடுத்து ஓதிக்
குரைத்தார்கள். அதற்குப் பிள்ளையார் உமது பொருளெல்லையினை உள்ளவாறு
எடுத்து வகுத்துப் பேசுங்கள் என்றருள, அவர்கள் அநேகராய்ச்சூழ்ந்து பதறிக் கதறினர்.
அம்மையார் அது கண்டு பொறுக்கலாற்றாது உண்ணடுங்கி, அரசனை நோக்கிப் "பிள்ளை
யார் திருமேனி எளியர்; அமணர் எண்ணிலர்கள்; உமது நோயினைப் பிள்ளையார்
தீர்த்தருளுவர்; அதன்பின் வல்லார்களாயின் இவ்வமணர் பேசலாமே" என்று கூற,
அரசன் "நீ வருந்தல்" என்று கூறி, அமணரை நோக்கி "அருகராகிய நீங்களும்
சிவனுக்கன்பராகிய இவரும் அவ்வவர் தெளிந்த தெய்வத் தன்மையினை என்னிடைத்
தெரிப்பீராக" என்றனன். பிள்ளையார் அம்மையாரை நோக்கி, "மானினேர் விழி"
என்ற பதிகத்தினாலே "என்னைப் பாலனென்று நீ அஞ்ச வேண்டா; திருவாலவாய்
அரனிற்கவே யான் இவ்வமணர்க்கு எளியே னல்லேன்" என்றருளினர். விடாது
கதறிக் கொண்டிருந்த அமணரையும் பிள்ளையாரையும் நோக்கி, அரசன், "எனது
பிணியினை நீவிர் தனித்தனி இசைவித்துத் தீருங்கள்; தேற்றெனத் தீர்த்தவரே வாதில்
வென்றவராவர்" என்றவுடனே, அமணர், "ஒரு பக்கம் இடப்பாகத்து நோயினை
முன்னர் மந்திரித்துத் தெய்வ முயற்சியாலே தீர்ப்போம்" என்று
சுர வாதம் தாமே முந்திக்கொண்டு அணுக அணைந்து கைப்பீலி கொண்டு மந்
திரித்துத் தடவினர்; வெப்பு மேன்மேல் மூண்டிற்று; அதுகண்டு
அரசன் பிள்ளையாரைப் பார்த்தனன். அரசனது கருத்தினைக் கண்டு பிள்ளையார் ஆலவா

யான் திருநீற்றை இவனது வலப்பால் வெப்பின் "மந்திரமும் மருந்தும் மாகித் தீர்ப்பதாகும்" என்று "மந்திரமாவது நீறு" என்ற திருநீற்றுப் பதிகத்தினை அருளித் திருக் கையினால் திருநீறு கொண்டு தடவி யருளினார்; வெப்பு உடனே நீங்கிப் பொய்கை போல அப்பக்கம் குளிர்ந்தது. இரு பக்கத்தின் வெப்பும் கூடி இடப் பக்கத்தில் அழல்போல நோய் மிக்கது; அமணர் நீங்கி அவ்வெப்புத் தம்மைச் சுடவே அரசனது அருகு விட்டு அகன்று எறி திறபார் அறிவுடையாரைப் போன்றனர். அரசன் "இந்த ஒரு காலத்திலே ஒரு புறம் வெவ்விய நரகமும் ஒரு புறம் வீட்டின்பமும் ஆயிற்று, இவ்வாறு என் வடிவம் ஒன்றிலே இருந்தறத்தியலபும் உற்றேன்" என்று அதிசயித்துக் கூறி, அமணரைப் பார்த்து "நீவிர் தோற்றீர்; என்னை விட்டு அகலப் போமின்" என்று போக்கிப், பிள்ளையாரை நோக்கி "இந்நோய் முற்று நீங்க எனக்கருள் புரிவீர்" என்று சொன்னான் செல்கதிக் கணியனானான்; பிள்ளையார் பதிகம் நிறைவாக்கித், திருநீறு கொண்டு பின்னும் ஒரு முறை தடவ, இடப்பாகத்து வெப்பு நோயும் முழுதும் நீங்கிற்று, வழுதியும் முழுதும் உய்ந்தனன். மாதேவியாரும் குலச்சிறையாரும் "அரசன் பிறவா மேன்மை பெற்றனன்" என்று பிள்ளையாரது பாதங்களை வணங்கினார். அரசன் உச்சிமேற் கைகூப்பி "மானமிலா அமணர்முன்பு பிணி நீங்க ஞானசம்பந்தர் பாதம் கண்ணி நான் உய்ந்தேன்" என்றான். அமணர்கள் அஞ்சித் தமது மந்திரவினைச் முழுதும் பிள்ளையாரது சொல்லினால் ஒழியக் கண்டு, இனித் தர்க்கவாதம் வெல்லலாவதன்று, வேறு தீயினும் நீரினும் வெல்வோம் என்று தம்மில் எண்ணிக்கொண்டனர் பிள்ளையாரும் அவர்களைப் பார்த்து "உங்கள் நூல் உண்மை பேசுங்கள்" என்ன, அமணர் "இரு திறத்தவாதமன்றிக் கண் காணச் செலுத்தத்தக்கது" என்றனர்.

**அனல் வாதம்**

அரசன் "என்து நோய் நீக்க அறிந்திலீர், இப்போது உமக்கு என்னவாது உளது" என்ன, "என்ன வாது" என்ற இகழ்ச்சிக் குறிப்பு மொழியினையே வினவாகக் கொண்டு, "அவ்வவர் நூலின் வாய்மையினை ஏட்டில் எழுதித் தீயில் இட்டால் வேவாதிருப்பதே வெற்றி காட்டுவதாம்" என்றனர் அதற்கு அரசன் எதிர் உத்தரம் சொல்லும் முன்பே, பிள்ளையார் "அப்படியாயின் அதனை அரசன் முன்பு செய்ய வாருங்கள்" என்றருளினர், அவ்வாறே அரசன் தீ அமைப்பித்தான். பிள்ளையார் "சிவனே மெய்ப் பொருள்" என்று தாம் போற்றித் திருமுறை யேட்டினைத் திருநீற்றுடன் கூப்பிய தமது கையிலேயே மறித்து, எடுத்த போது "போகமார்த்த பூண் முலையாள்" என்ற திருநள்ளாற்றுத் திருப்பதிகம் வந்து உதயமாயிற்று. அவ்வேட்டினைக் கழற்றி வேறெடுத்துக் கொண்டு, "இறைவரது திருநாமமே இஃது, இது எரியினிலிடப் பழுதிலலையாகும்" என்று "தளிரிள வளரொளி" எனனும் பதிகம் பாடியருளித் துதித்து, அரசனைக் காணத் தீயினில் மகிழ்ந்து முன் இட்டனர். அவ்வேடு உமையம்மையைப் பாகத்துடைய அட்ட மூர்த்தியைப் பொருளாகக் கொண்டுடைமையாலே தீயினிடையே அப்பொழுதே பசசையாய் விளங்கியது. அமணர்கள் தமது பொருள் எழுதிய ஏட்டினை இஃது உய்யுமோ என ஐயுறவினோடும் தீயினில் இட்டனர், அது தீயில் இட்ட பஞ்சு போலப் பட்டது இசைத்த நாழிகை யளவில் யாவரும் அதிசயிக்கப் பிள்ளையார் தாம் இட்ட ஏட்டினை முன்னையினும் புதுமையும் பசுமையும் பயப்ப எடுத்து அரசனைக் காணக் காட்டித் திருமுறையில் முன்போலவே கோத்தனர். அரசன் வியந்து அமணர்களை நோக்கி, "நீவிர் இட்ட ஏட்டினைக் காட்டுமின்" என்ன, அவர்கள் அதனைத் தேட அணுகியபோது தீக் கதுவ வெந்து பெயர்ந்தமை கண்டு, நீரினை வார்த்து அரசன் தீத் தணிப்பித்தான். அமணர் சாம்பரைப் பிசைந்து பார்க்கச் சாம்பரும் கரியுமே

கண்டனர். அரசன், கையுட் கொண்டு "நீங்கள் அப்பொழுது எனது நோய் நீக்கமாட்டாது தோற்றீர்; இப்பொழுது அதனைத் தொடர்ந்து செய்த இதனிலும் தோற்றிலீர் போலும்?" என்றான்; "போலும்" என்ற இகழ்ச்சிக்குறிப்புச் சொல்லையே பயனாகக் கொண்டு, "தொடர்ந்த வாதம் மூன் இருகாற் செய்தோம்; முக்காலில் ஒரு காலேனும் வெற்றி பெறுவோம்; அதனை இனியும் ஒன்று காண்பது" என்றார். அதனை மன்னவன் மறுத்த பின்னும், பிள்ளையார் "இனி வேற்று வாது என்னை?" என்ன, அவர்கள் "மெய்ப்பொருளை நாமிருவேமும் ஏட்டில் வரைந்து ஓடும் நீரினில் இட்டால் நீரொழுக்கி னோடு செல்லாது முன் நிலைபெறாத தங்கும் ஏடு வெற்றி பெறுவ தாம" என்றனர்; பிள்ளையார் அதனை ஏற்று "அவ்வண்ணமே செய்வோம்" என்றருள, அமைச்சனார் முனபு வந்து "இதில் தோல்வியுற்றார் செய்வதனை ஒட்டியே இவ்வாதம் செய்யததக்கது" என்றார். அமணர் அவர் மேற் சினந்து பொறாமையினாலே தங்கள் வாய் சோர்ந்து, "தனிவாதில அழிந்தோமாகில் எங்களை இவ்வேந்தனே கழு வேற்று வான்" என்று ஒட்டினர். அது கேட்ட அரசன "உங்கள செய்கையை மறநது சினத்தினால் இவ்வகை உரைத்தீர்; நீரினில ஏடு இட வாருங்கள" என்றனன்.

புனல் வாதம்

பிள்ளையார் மணிப பீடத்தினின்றும இறங்கிப போந்து, சிவிகையின மேல் ஏறிச் சென்றனர். அரசன் குதிரையின் மேல் ஏறிப்போநதனன. அமணர் உணர்வு மயங்கி மாலேறிப் பின சென்றனர். இவ்வாறு வரக்கண்ட பெற்ற நகர மாந்தர்கள் பலவாறும பிள்ளையாரை வாழ்த்தினர்; முன நிகழ்ச்சிகளையும் பின விளையக்கூடியவற்றையும் பற்றிப பலபடியாகத தம்முட பேசிக்கொண்டு பிள்ளையாரையும சைவ நெறியின் மேன்மையினை யும் போற்றினர். திருச்சின்னங்கள பிள்ளையாரின புகழ்களைப பலவாறும் எடுத்தியம்பின. முரசங்கள் முழங்கின. அரசனும் தேவியாரும் பினனே வர, அமணர்கள் வேறாக ஓர புடையில் வரப், பிள்ளையார் வைகையாற்றின் கரைமிசை வந்தணைந்தனர். ஆற்றில் நீர் வேகமாய் ஓடும் தன்மை கண்டு அரசன் இருதிறத்தினரையும் நோக்கி நீங்கள் அவ்வவர் குறித்த ஏடு இடுக என்றான நெலலிற பதர்போல் உட்பொருள் இல்லாத அமணர் தமது பொருளை "அத்திநாத்தி" எனவெழுதி நீர் செல்லும வேகத்தினைக் கண்டும் ஆசையி னாலே முன்சென்று இட்டனர்; அதனை ஆற்றுநீர் விரைந்துகொண்டு அப்போதே வேலை யின்மேற படர்ந்தது. அதனை எதிர் அணைபபாரபோல உணர்விலா அமணர் கரையின மிசை ஓடிச் சென்றார். அவ்வேடு எட்டாது நூறு விற்கிடக்கை முன்னே போனது நோக்கிக் காணாராயினார்; அவ்வாறு அவ்வேடு அமணரை நட்டாற்றில விட்டுப்போக அகலச்சென்று சிதறித் திசைதது அஞ்சி அரசனிடம் மீண்டார்கள். தமக்கு முடிவு வந்ததென்று நடுங்கி அவ்வசசத்தினை ஒளிப்பார்போன்று, "மாறுகொண்ட நீவிரும் இட்டால வந்தது காண்போம" என்றார். அமணர்கள் மயங்கிக்கூற அரசனும அவரை விட்டுப், பிள்ளையாரது திருக்குறிப்பினை நோக்க, அவர், பரசமயங்கள்பாறத் திருப்பாசுரம பாடலுற்றனர். அமணர் உண்மைப் பொருளைக் காண்கிலார்களாயினும் பிள்ளையாரது அருட்கையினால தீண்டித திருநீறு பூசப்பெற்று அரசன, முன்னை வலவினையு நீங்கி இருவினை ஒப்புப்பெற்று இறைவனையறியும தன்மை யெய்தியமையாலே, அவனறியும பான்மைபால உலகியல வேதநூல ஒழுக்கமும், மெய்ந்நெறி சிவநெறியேயாமெனபதும் அறிவிக்கும குறிப்புடன் "வாழ்க வந்தணர்" என்றெடுத்துத் திருப்பாசுரப பதிகத்தைத் அருளிச்செய்தனர். அதனுள் வேத சிவாகம புராணேதிகாசங்களின் சாரமாகிய உண்மைப் பொருள்களை எல்லாம வடித்து எடுத்துக்காட்டி உலகுக் குபதேசித்து "ஏடு எதிர்ந்து செல்லின் ஞான மீசனபா லனபே யாகும்" என்று ஆணைதந்து ஏட்டில எழுதி முடித்தருளி அவ்வேட்டினைத் தமது திருக்கையினால் ஆற்றில் இட்டருளினர்.

அது பிறவியாற்றினை எதிர்ந்து மாதவர்களின் மனஞ் சென்றாற்போல, வையையாற்றின் நீரினைக் கிழித்து எதிர்த்து, "இதுவே உண்மைப் பொருள்" என்று காட்டிச் சென்றது. இறைவரைப் பாடும் அப்பதிகத்தில் வேந்தனை ஓங்கப் பாடியதனால் அநபாயரது செங்கோலென்னத் தென்னவனது கூன் அப்பொழுதே நிமிர்ந்தது. ஏடு எதிர்ந்து செல்லும்பொழுது தேவர்கள் பூமழை பெய்தனர்; பாடுசேர் அமணர் எல்லாரும் அஞ்சி நின்றனர். ஏட்டினை எடுத்தற்குக் குதிரையின்மேல் ஏறிக் குலச்சிறையார் சென்றனர். திருவேடகத்துள் ஏடு தங்கப் பிள்ளையார் பாடிட, ஏடும் தங்கிற்று, அமைச்சர் எடுத்துத் தலைமேல் வைத்துக்கொண்டு, அரசன்பால் வந்து பிள்ளையாரைப் பணிந்து அதனை எல்லாருக்கும் காட்டினர். அரவொலி முழங்கிற்று. "ஒட்டித் தோற்ற இவ்வமணர் இத்தோல்வியேயன்றி முன்னமே பிள்ளையார்பால் முற்றவும் அநுசிதம் செய்தனர்; "இவர்களைக் கழுவேற்றி முறைசெய்க" என்று அரசன் அமைச்சரைப் பணித்தனன். பிள்ளையார் அதனைக் கேட்டும், சமணர்பால் இகல்கொண்டாரிலர் எனினும், சைவர்வாழ் மடத்தில் தீத்தொழில் செய்ததனால் அரசன்றானே சாலவுடைத்தேயாம் என்று கருதினாலே மிகையில்லாத அரசனது செய்கையினை விலக்கிடாதிருந்தருளினர். அவ்வாறே அமைச்சர் ஏற்றியிடத், திருமடத்தில் தீயினை நாடியிட்ட எண்பெருங் குன்றத்து அமணக் குருமார் எண்ணாயிரவரும் கழுமுனையில் ஏறினார்கள் அக்கழுவிடைத் தம்பங்களாக சைவ மேன்மையினையும் பிள்ளையாரது புகழினையும் விளக்கிய செய்தத்தம்பங்களேயாகும். அதன்பின் பிள்ளையார் அரசனுக்குத் திருநீறு ஈந்தருளினார்; அவனும் பணிந்துகொண்டு முழுதும் அணிந்தனன். அதுகண்டு அவனது மதுரை வாழ்வாரும் தூய நீறு அணிந்துகொண்டனர் எங்கும் வெந்த நீறேயாயிற்று. வெண்ணீற்றின் விரிந்த சோதி திசையெல்லாம் தூய்மை செய்ய அடப்போந்த அமணர்கள் மாய்ந்தது இவ்வாறு அரசனுக்குயிர்கொடுத்து மெய்ந்நெறி காட்டிச் சமணத்தை நீக்கி உலகினை உய்யக்கொண்ட பிள்ளையாரது வாய்மை உலகிற்பெருகி ஓங்கியிட அன்றே சைவத் திருநெறி நடந்தது. வேதவேள்வியும் மழையும் குறைவின்றி நிகழச் சிவாகமம் ஓதி உலகம் பிறவித்துன்பம் நீங்கப்பெற்றது. அரசரும் அமைச்சரும் மாதேவியாரும் உடன்வரப் பிள்ளையார் திருவாலவாயிறைவரைப் போற்ற எழுந்தருளினார், கவுணியர் நாட்டவர் கண்டு கண்பெற்ற பயன் அடைந்தார்கள் திருக்கோயிலினுட் சென்று கண்ணீரருவி பாயக் கைகுவித்து "அடியேனை அஞ்சல் என்றருளாயல்லையோ" என்று "வீடலாலவாய்" என்ற திருப்பதிகம் பாடிப் பிள்ளையார் துதிசெய்தருளினார் அரசனும் "இறைவரே! சமணரது மாயையினால் மயங்கிக் கிடந்த என்னை எடுத்து ஆட்கொள்ளும் பொருட்டு இன்றுடன் பிள்ளையாரைத் தந்தருளினை" என்று துதித்து வணங்கினான். பின்னர் அரசனையும் தேவியாரையும் மாளிகையினுள் போகவிட்டுப் பிள்ளையார் இறைவரைத் துதித்துத் திருமடத்தில் எழுந்தருளியிருந்தனர். மன்னனும் அரசியாரும் மந்திரியாரும் நாடோறும் பிள்ளையாரது திருவடிகளிற் பணிந்து போற்றினர். பிள்ளையார் ஆலவாயமர்ந்த அண்ணல் பாதம் ஏனையோர்க்கு ஓதி உறைந்தருளினர்.

இவ்வாறுள்ள காலத்தில் இடைப்பட்ட நாள்களில், சீகாழியில் சிவபாத விருதயர், தாம் செய்த தவத்தாற் பெற்றெடுத்த பிள்ளையாரை மிக நினைத்தனர்; திருநாவுக்கரசரிடத்துத் தீமை செய்த அமணர்களிடம் வாது செய்து வெல்வதற்கும், பாண்டி நாட்டில் திருநீறு பெருக்குதற்கும் போன அவர்பால் நிகழ்ச்சிகளைச் சென்று அறிவேன் என்று எண்ணித், தோணியப்பரை வணங்கிப் பாண்டிநாடு நோக்கிப் புறப்பட்டு, இடையில் உள்ள பதிகளில் இறைவரை வணங்கிக் கொண்டு, மதுரையினைச் சார்ந்தனர்; திருவாலவாயிற் சென்று இறைவரை அடிவணங்கி, அங்கு அருகணைந்தார்

களைப் பிள்ளையார் அமர்ந்த திருமடத்தினை வினவினர்; அவர்களும் இங்கு எம்மைக் கண்விடுத்த காழிப் பெருமான் தங்குமிடம் திருநீற்றுத் தொண்டர் குழாம் சாருமிடம் இதுவேயாகும் என்று காட்டச் சென்று அங்குச் சேர்ந்தனர். அது கண்ட அடியார்கள் பிள்ளையாரிடம் அறிவித்தனர். அது பொழுதில் தாதையார் முன்தொழுது சென்றணையத் தவநெறியணையும் தாதையாரெதிர் தொழுவாராகிய, பிள்ளையார், அவர் சாரிஞலே தோணியில் எழுந்தருளிய பவபாசமறுத்தருளிய அம்மையப்பரது திருவடிகளை நினைந்தருளிக் கைகள் கூப்பிக் கொண்டு கண்ணருவிபாய நின்று "அருந்தவத்தீர்! எனையறியாப் பருவத்தே எடுத்தாண்ட பெருந்தகை எம்பெருமாட்டியுடன் இருந்ததே?" என்று வினவும் கருத்துடன் "மண்ணினல்ல" என்ற திருப்பதிகம் அருளிப், போற்றினர். பின் தாதையாருக்கு விருந்தளித்து மேவு நாளில் அடியவர்களோடும் சென்று ஆலவாயிறைவரை வணங்கிப், பிறபதிகளைத் தொழ எண்ணி மதுரையின் புறம் போந்தருளினர். அப்போது அரசனும் அம்மையாரும் ஊனெலாம் நெகிழ மனநெகிழ்ந்து கண்ணீர் பாய்ந்து வழிய உணர்வழிந்து திருவடிகளில் வீழக் கண்டு, "நான் உங்களைப் பிரியா வண்ணம் இந்நாட்டிலே பிறபதிகளையும் உடன் பணிவீர்களாக" என்றருளிச், சென்று திருப்பரங்குன்றம், திருவாப்பனூர் வணங்கித், திருப்புத்தூரினைச் சேர்ந்து வணங்கிச், சிலநாட்கள் அங்கு அமர்ந்தருளினர். அதன்பின், திருப்பூவணம், திருக்கானப்பேர், திருச்சுழியல், திருக்குற்றலம், திருக்குறும்பலா, திருநெல்வேலி முதலாகிய பதிகளைச் சென்று வணங்கினர். பின்னர்த் திருவிராமேச்சுரத்தையடைந்து, திருமால் தாபித்து வழிபட்ட அத்திருக்கோயிலில், இறைவரை அரசனும் தேவியாரும் மந்திரியாரும் உடன்போதச் சென்று துதித்து வணங்கினர். அங்குத் திருத்தொண்டர்களுக் கெல்லாம் பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் குறைவறுத்துப் போற்றியிட அக்கடற்கரை நகரில் நயந்து பிள்ளையார் எழுந்தருளியிருந்தனர். அங்கிருந்தவாறே ஈழநாட்டின் இறைவர் பதிகளாகிய திருக்கோணமலையினையும் திருக்கேதீச்சரத்தினையும் பாடித் துதித்தனர். பின்னர், அங்குநின்றும் தொழுது, வடதிசை மேற்சென்று பல பதிகளையும் வணங்கி கடற்கரை நிலநீங்கித், திருவாடானை - திருப்புனவாயில் என்ற இவற்றை வணங்கித் துதித்து, அவ்வாறே பாண்டி நாட்டில் உள்ள பல பதிகளிலும் சென்று வணங்கி, எங்கும் வேதநெறி விளக்கமும் திருநீற்றின் சார்வும் பெற்று மாந்தர் உய்யும் வண்ணம் அருளிச்செய்து, சென்று, மந்திரியார் பதியாகிய மணமேற்குடியில் வந்து, அங்கு மன்னவனும் அரசியாரும் குலச்சிறையாரும் போற்றியிடத்தங்கிப் பிற பதிகளிலும் சென்று வணங்கி இனிதமர்ந்தருளினர்.

அதன்பின் சோழ நாட்டில் எழுந்தருளத் திருவுள்ளங் கொண்டபோது அரசரும் அம்மையாரும் மந்திரியாரும் பிரிதலாற்றாது அவருடன் போக ஒருப்படவே, அவர்களை நோக்கிப் பிள்ளையார் "நான் சொல்வதனுக்கு இசைந்தீராகில் சிவநெறியினைப் போற்றி இங்கு இருப்பீராக" என்று கூறி, அவர்களது தளாவு நீங்கத் தகுந்த அருள்மொழிகளை உரைத்தருள, அவர்களும் மறுக்கலாற்றாது பிரியாத நண்புடன் தொழுது நின்றார்கள். பிள்ளையார் அந்நாட்டினை அகன்று சோழநாட்டிற் சென்று அங்கங்கும் அடியார்கள் எதிர்கொள்ளச் சென்று, திருக்களர், திருப்பாதாளீச்சரம் முதலியனவாய் முன் அணைந்த பதிகளையும் வணங்கிச் சென்று, முள்ளிவாய்க்கரையினை அணைந்தனர். ஆங்கு

ஓடம் இயங்காதபடி ஆறு பெருகி ஓடிற்று. அதனால் அத்துறையில் ஓடக்கோல் நிலைநிலாமையாலே ஓடக்காரர்கள் ஓடங்களைக் கரையில் நிறுத்திப் போயினர். பிள்ளையார் அந்தக் கரையில் எழுந்தருள எதிர்க்கரையில் திருக்கொள்ளம்பூதூர் முன்னே தோன்ற, அங்குச் சென்று வணங்கு

தற்கு ஓடங்களைக் கட்டவிழ்த்துத் தொண்டர்களுடன் தாமும் ஏறிக், "கொட்டமே கமழும்" என்ற திருப்பதிகத்தைப் பாடியருளி, நாவலமே கோலாக ஓடங்களைச் செலுத்தி ஆறுகடந்து அங்குச் சென்று இறைவரை வணங்கிப் போற்றியருளினர். அங்கு நின்றும் அனல் வாதத்தில் வேவாதிருந் தருள்செய்த திருநள்ளாற்று இறைவரை வணங்கவேண்டி இடையில் உள்ள பதிகளையும் தொழுது சென்று, அங்குச் சேர்ந்து முறைப்படி பணிந்து திருக்கோயிலினுள் அடைந்து வலங்கொண்டு இறைவரை இறைஞ்சிக் கண்ணருவிபாய நின்று "பாடகமெல்லடி" என்ற பதிகத்தினால் துதித்தருளினர். "பாண்டியனது சபையின் முன் அமணருடன் செய்த வாதத்திலே எரியில் இட்ட ஏடு பச்சையாக்கி என் உள்ளத் துணையாகத் திருவாலவாயில் அமர்ந்திருந் தருளியவாறுதா னென்னே!" என்றது திருநள்ளாற்றுத் திருப்பதிகத்தின் கருத்து. அங்குத் தங்கி விடைபெற்றுத் திருத்தெளிச்சேரியினை வணங்கிச் செல்லும் போது வழியிலே புத்தர்களது நகராகிய போதிமங்கை சார, அன்பர்கள் ஆர்த்தனர். "பரசமய கோளரி வந்தான்" என்று தாரைகள் ஊதின. அது கேட்ட புத்தர்கள் பொறாராகிப் புத்தநந்தி என்பவனைத் தலைவனாகக் கொண்டு திரண்டு கூடி, அன்பர் கூட்டத்தின் எதிரே போந்து "இவ்வெற்றிச் சின்னங்களை எம்மை வென்றபின்னன்றோ பிடிப்பது?" என்று வெகுண்டு கூறிச் சின்னங்களை விலக்கினர். அடியவர்கள் சிவிகையின் மேல் வரும் பிள்ளையாருக்கு அறிவிக்கப், பிள்ளையார், "வழியிடையினன்றி, வாது செய்யுமிடத்தில் அவர்களது பொய்ம் மேற்கோள்களை அறிவோம்" என்றருளினர். இதற்கிடையில் திருக்கூட்டத்திலுள் இருந்த திருமுறை எழுதும் அன்பர், *புத்தர்களது அடாத செயலைப் பொறாராகி "நீறணிவார் வினைப் பகைக்கு, அத்திர மாவன அஞ்செழுத்துமே" என்ற பிள்ளையாரது திருவாக்கினை "இப்புத்தனது தலை வீழ்க" என்று கூறி விடுத்தனர். உடனே புத்தநந்தி தலையில் இடி வீழ்ந்தது, அவனது உடலும் தலையும் வேறாய் வீழ்ந்தன, புத்தர்கள் வெருவி ஓடினர். இச்செய்தியினை அடியார்கள் பிள்ளையாருக்கு விண்ணப்பிக்க, அவர், "இது சிவனருள் விதியே யாம் எல்லாரும் அரனும்ம் முழக்குங்கள்" என்றருள, அம்முழக்கம் வானளாவோங்கிற்று.

புத்தநந்தி தலையில் இடி வீழ்ந்தது

அஞ்சியோடிய அப்புத்தர்கள் அதிசயித்து, மீண்டும் கூடி, இது வஞ்சனையோ? அன்றி அவர்களது சைவ வாய்மைதானோ? என்று மருண்டு, தங்களின் மிக்குள்ள சாரிபுத்தனைத் தலைவனாகக் கொண்டு, மீளவும் அணைந்து, மந்திரவாதமன்றிச் சாத்திரவாதம் பேசவேண்டுமென்று கேட்டனர். பிள்ளையார் அதற்கிசைந்தருளிச் சிவிகையினின்றும் இறங்கி வேறோர் சதுரமண்டபத்தில் ஏறி எழுந்தருளி, அவர்களை அவ்வாறே வாதம் பேசுவதற்கு அழைத்தருளினர். அவர்களும் சாரிபுத்தனோடும் அணைந்தனர். புத்தநந்தியினைச் சபித்த அன்பர், பிள்ளையார் திருமுன்பு வணங்கி அவர்களோடு சாத்திரவாதம் புரிந்தனர். அவ்வாதம் அவர்கள் கொண்ட தலைவனையும், அவன் மேற்கொண்டுரைத்த பொருளையும், அவர்களது முத்தி யிலக்கணத்தையும் பற்றி நிகழ்ந்தது. †அவ்வாதத்தில் அவர்களுரைத்த கொள்கைகள் எல்லாம் பொருளன்றாம் படியினை அவர்களறியும்படி அன்பர் எடுத்துக் காட்டிச், சைவ மல்லால் உண்மைப் பொருள் வேறில்லை என்றே கூறும் வேத சிவாகமங்களின் துணிபை எடுத்துக்கூறி, அவர்களை வென்றனர். தோல்வியுற்ற புத்தர்களும் பிள்ளையாரது கருணை நோக்கம் அணைதலினாலே அவர் முன் தொழுது

புத்த வாதம்

---

*இவர் பிள்ளையாரது கல்லம்மான சம்பந்தசரணாலயர் என்று கூறுவர்.

† இவ்வாதத்தின் இயல்பும் பொருளும் முன்னர்ப் புராண உரையினுள் 2814 - 2823 வரை பாட்டுக்களின் கீழ் உரைக்கப்பட்டமை காண்க.

விழுந்து வணங்கிச் சைவரானார்கள். அதன்பின் சராசரங்களனைத்தும் சைவமேயாகும் நிலைமையினை அவர்களுக்கு உரைத்தருளி அங்குநின்றும் நீங்கிப, பிள்ளையார் திருக் கடவூர் சென்று சேர்ந்து வணங்கினர். திருநாவுக்கரசுகள் எங்கரில் எழுந்தருளியது என்று அடியார்களை வினவியருளி, அவர் திருப்பூந்துருத்தியில் திருத்தொண்டு செய்து எழுந்தருளியிருப்பது கேட்டு அங்கு அவரைக் காண பெருவிருப்பபோடும் செல்வாராகி, இடையில உள்ள பதிகளை வணங்கித், திருப்பூந்துருத்தியின மருங்கணையலாயினர். வாகீசர் அது கேட்டருளி, ஆளுடையபிள்ளையாரை எதிர்சென றிறைஞ்சுவது முனனை நல்வினைப் பயனேயாகும என்று மனமகிழ்ந்து, இறைவரை வணங்கிச சென்று, பிள்ளையாரது எழுச்சியில் நிறைந்த தொண்டர் கூட்டத்தினிடையே அவர் காணு வகை தொழுது புகுந்து, அவரது திருமுத்தின் சிவிகையினைத் தாங்குவாருடன் கலந்து தாமும் தாங்கிச் சிந்தை களிப்புற வந்தனர் எவரும் அவரைத் தெளியவில்லை. அப பொழுது பிள்ளையாரது திருவுள்ளத்தில வேறொன்று நிகழ்ந்திட, "இப்பொழுது அப்பா எங்குற்றார்?" என்று வினவியருளினார். அது கேட்டு "ஒப்பற்ற தவத்தினை முன்னர்ச் செய்தேனாதலினால் உமது திருவடிகளை இப்பொழுது தாங்கி வரப்பெற றுய்ந்தேன் யான்" என்று அரசுகள் கூற, அது கேட்டு அஞ்சி, உடனே சிவிகையி னின்றும் இறங்கி, "இவ்வாறு செய்தருளிறறு! என்னே!" என்று அவரை இறைஞ்சு தலும், வாகீசர் "திருஞான சமபந்தருக்கு வேறு எவ்வாறு செயத்தகுவது?" என்று எதிரிறைஞ்சினர். பிள்ளையார் அரசுகளை மிகக ஆர்வத்தோடும தழுவிக் கொள்ளத் தொண்டர்களெல்லாம் ஆர்த்தனர். இருபெருமக்களும உடனுக்ச சென்று திருக் கோயிலினை அணைந்து முடியால் வணங்கி உட்புகுந்து பொய்யிலியாரை வணங்கித் துதித்துத் திருவாயிலின் முன அணைந்திருந்தனர். அப்பொழுது வாகீசர், பிள்ளையாரைப் போக்கும் வரவும் வினவ, அந்நிகழ்ச்சிகளை யெல்லாம் அவர் சொல்லியருளினார். அரசுகள் அவரை வணங்கித் "திருத்தொண்டென்னும வான் பயிர் ஓங்குதற்குச் சூழும் பெருவேலி யானீர்" என்று தொழுதனர். பாண்டியனுக்கு உயிருடனே திருநீறும அளித்து, மாதேவியாருக்கும் அமைச்சருக்கும் அன்பளித்து வைதிக நெறியினை ஆக்கிய தன்மையை வாகீசர் கேட்டு மகிழ்ந்தனர். வாகீசர் தாம பெருந் தொண்டைநனாட டிற் சென்று திரு ஏகாம்பரம் பணிந்து போந்த வரலாறுகளை எல்லாம் சொல்லக் கேட் டுப் பிள்ளையார் தாமும் சென்று போற்ற மனங் கொண்டருளினர். திருவாலவாயிற் சென்று வணங்க வாகீசரும், சீகாழிக்குச் செல்லப் பிள்ளையாரும உளங்கொண்டருளி னர். இறைவரை வணங்கி வாகீசரிடம் விடைகொண்டு பிள்ளையார் புறப்பட்டுச் சென்று காவிரியின் வடகரையில் திருநெய்த்தானமும், திருப்பழனமும் பணிந்து சீகாழியி னருகு சார்ந்தனர். பாண்டி நாட்டிற்சென்று சமணைப் போக்கியும், திருநீற்றினை ஆக்கியும பிள்ளையார் எழுந்தருளும வார்த்தை கேட்டுச் சீகாழி மறை யோர்கள், வேதங்கள் முழங்க வந்து எதிர்கொள்ளச், சிவிகையினின்றும இறங்கிக், கோயில் தோன்றிடக் கைகூப்பி வணங்கி, முறையாலே திருக்கோயிலினுட்புகுந்து வணங்கி, ஏறித், திருத்தோணியில் அம்மையப்பரை வணங்கித் திருமேனி எங்கும புளகங் கொள்ளக் கண்ணீர் பெருக உள்நிறைந்த ஆனந்தம பொழிதரப் பணிந்து "வெற்றியாக மதுரை மன்னவனை யெதிரே கதிமிசை வருகரனே" என்ற குறிப்புடைய திருவியமகத் திருப்பதிகம் பாடிப் போற்றினர். பின்னர்ப் புறம்போந்து கோயிலினை வணங்கிச் சென்று, வழியில் பெண்கள் வாழ்த்துரை மல்கப் போய்த், திருநீலகண்டப் பாணனார்க்கு அருள் விடை கொடுத்து அவரது திருமனையினிற் போக்கித், தமது திருமாளிகை சார்ந்தார்; அப்போது மறைக்குலத் தாயராகிய பகவதி யம்மையார் வந்து அடிவணங்கிடத், தாமும் திருத்தோணியில் உள்ள தாயர்

திருவடிகளை மனங்கொண்டனர். பின்னர், நாளும் திருத்தோணியப்பரை வணங்கிப் பதிகம்பாடிப் போற்றி எழுந்தருளியிருப்பவர் தொண்டைநாட்டினிற் சென்று அம்மை தழுவக் குழைந்த கம்பரை வணங்கி வரத் திருவுளங் கொண்டருளினர்.

## ஆறுவது யாத்திரை - (தொண்டை நாடு)

அதனை அன்பர்களுக்குச் சொல்லியருளித், தோணியப்பரை வணங்கி விடைபெற்று எழுந்தருளும்போது, உடன் வர எழுந்த தாதையாரை "நீர் இங்குத் தங்கித் தீ வேட்டுத் தோணியப்பரைத் தொழுதிரும்" என்று அவருக்கும், மற்றும் மீளும் ஏனையன்பர்களுக்கும் விடை கொடுத்தருளிப் போய், வழியிடைப் பதிகளை வணங்கிக்கொண்டு திருத்தில்லை சார்ந்தருளினர். திருப்புலியூரினை வணங்கி, இறைவரது ஆனந்தத் திருக்கூத்துக் கும்பிட்டருளி மேற்சென்று, திருத்தினைநகர், திருமாணிகுழி, முன்னம் முட்டகால முனிக்கருளிய திருப்பாதிரிப்புலியூர், திருவடுகூர், திருவக்கரை, திரு இரும்பைமாகாளம் முதலிய பதிகளை வணங்கிக்கொண்டு திருவதிகை வீரட்டானஞ் சேர்ந்தனர்; இறைவர் எதிரே பூதகணம் சூழ ஆடும் திருக்கூத்துக் காட்சியருளக் கண்டு "குண்டைக் குறட்பூதம்" என்ற திருப்பதிகம் பாடி, அங்கமர்ந்திருந்து, பின்னர் திருவாமாத்தூர் பணிந்து திருக்கோவலூரையும், திரு அரையணிநல்லூரையும் வணங்கினர். வலங்கொள்ளும்போது அங்குத் திருவண்ணாமலை எதிர் தோன்ற அன்பர்கள் காட்டக்கண்டு, சென்று, வணங்கி, மிக்க ஆர்வத்தோடும் "பூவார் மலர்" என்று போற்றிச் சிலநாள் எழுந்தருளியிருந்து, வடதிசையிற் சென்று இறைவர் பதிகள் பலவும் பணிந்து பெருமலைகளும் காடுகளும் கடந்து, திருத்தொண்டை நன்னாடு சேர்ந்து, திருவோத்தூரினை அணைந்து இறைவரை வணங்கித் துதித்து அமர்ந்திருந்தருளினர். அங்குப் பிள்ளையார் முன்பு, ஒரு தொண்டர் வந்து அழுது வணங்கி நின்று, அறிவிப்பாராகி, "அடியேன் இறைவருக்குப் பயன்படப் பனைகளை வைத்து ஆக்கியிட, அவை யாவும் ஆண்பனைகளாகிக் காயாதனவாகக் கண்டு, அமணர், 'உமது செய்கைக்காக நீர் ஆக்கும் பனைகள் காய்த்தற் கடவுண்டோ' என்று இழித்து நகைக்கின்றார்கள். தேவரீர் அருள வேண்டு"மென்று விண்ணப்பித்தனர்.

**ஆண்பனைகள் பெண்பனைகளாகியது**

அதுகேட்டுப் பிள்ளையார் பரிவுகொண்டு திருக்கோயிலுக்குச் சென்று இறைவரைப் பாடிய பதிகத்தினுள் திருக்கடைக்காப்பிலே "குரும்பை ஆண்பனை யீன்குலை ஓத்தூர்" என்ற வாய்மையினை வைத்துப் பாடியருளினார்; அவ்வாய்மை பொருந்துதலினாலே ஆண்பனைகள் எல்லாம் நிறைந்த குலைகளாய்க் குரும்பையீனும் பெண்பனைகளாயின. கண்டார்கள் எல்லாரும் அதிசயித்தார்கள். இவ்வாறு அன்பர் கருத்தை நேரே முடித்துக் கொடுத்தருளி அப்பதியிற் பிள்ளையார் இனிதமர்ந்தருளினர். அது கண்ட அமணர்கள் நிலைகெட்டு அந்நாட்டினை விட்டகல்வாரும், தம் கையிற் கொண்ட குண்டிகைகள் இவை என்னுடையன என்று தகர்ப்பாருமாகி, ஆதிமுழுமுதல்வர் சிவபெருமானேயாவர் என்று போற்றினார்கள். பிள்ளையாரது திருவாக்கிற் பிறத்தலாலே அப்பனைகளும் முன்புள்ள பாசம் விட்டு நீங்கப், பிறவி நீங்கிக், காலாந்தரத்தில் சிவமே கூடின; பிள்ளையாரது அருளின் வாய்மை கூறுதல் வரம்புபட்டதாமோ.

பின்னர் அங்கு வணங்கிச் சென்று இறைவர் பதி பலவற்றையும் பணிந்து திருமாகறலும், திருக் குரங்கணின்முட்டமும் பணிந்து, திருக்காஞ்சியின் மருங்கு பிள்ளையார் எழுந்தருளினார்; அது தெரிந்த காஞ்சிவாணர்கள் மிக மகிழ்ந்து நகரை அலங்கரித்து மங்கலங்களுடன் பிள்ளையாரை எதிர்கொண்டனர். இவ்வண்ணம் யாவரும் இன்பமடைய அவர்களிடையே எழுந்தருளிச் சென்று பிள்ளையார் திருவே

காம்பரத்தை யணைந்து இறையவரை வணங்கித் திளைத்து "மறையானை" என்ற திருப்பதிகம் பாடிப போற்றி வணங்கிப் புறம் போந்து திருமடத்திலமர்ந் தருளினர். அறப்பெருஞ் செல்வக் காமக் கோட்ட மணைந்திறைஞ்சினர். திருவேகம்ப வாணரை ஒருபோதுந் தப்பாமே சென்று வணங்கினர்; திருவியமகம், திருவிருக்குக்குறள் முதலாகிய திருப்பதிகங்களைப் பாடியருளித் திருக்கச்சி நெறிக் காரைக்காடு, திருக்கச்சியனேக தங்காவதம், திருமேற்றளி முதலாகிய தானங்களைப் பணிந்து ஏத்தி எழுந்தருளியிருந்தனர். பின்னர்ப் பாலியாற்றின் தென்கரை போய்த் திருமாற்பேறும், திருவல்லமும் சென்று வணங்கி, வடகரையில் இலம்பையங் கோட்டூரினை இறைஞ்சித் திருவிற்கோலம், திருவூறல் முதலிய பதிகளை வணங்கித், திருவாலங்காட்டினருகே சார்ந்தருளினர்; அத்திருப்பதியானது உலகெலாம் காண எமது "அம்மை"யாகிய காரைக்காலம்மையார் திருத்தலையாலே நடந்து போற்றும் பதியாதலின் அதனை மிதிக்க அஞ்சிப் பிள்ளையார் அதன் பக்கத்தில் ஓரூரில் அன்றிரவு பள்ளி சேர்ந்தருளினர்; இடையாமத்திலே அவர் கனவில் திருவாலங் காட்டப்பர் எழுந்தருளி "நம்மைப் பாட அயர்த்தனையோ?" என்று அருளிச்செய்ய, அப்போதே தொழுது உணர்ந்து எழுந்து இறைவரது கருணையினைப் போற்றி மெய்யுருகித் "துஞ்சவருவாரும் தொழுவிப்பாரும்" என்று தொடங்கும் (பழம்பஞ்சுரப்பண்) திருப்பதிகம் பாடித் துதி செய்தருளினர். அத்திருப்பதிகத்தில் பழையனூரார் தமது சொல்லையே உயிரினும் பெரிதாகக்காத்த கதையினைச் சிறப்பித்து வைத்துப்பாடினர். காலையில் வந்தணைந்த அடியவர்களுக்கு இச்செய்தியை அருள செய்து மன்மாரப் பாடித் துதித்து அங்கு நின்றும் திருப்பாசூர், திருவெண்பாக்கம் முதலிய பதிகளை வணங்கிப் பாடித் திருக்கண்ணப்ப நாயனாரை நினைவு கொண்டு திருக்காளத்திமலையினைச் சாரச் செல்வாராயினர். நீர் வளமுடைய நாட்டின் பகுதிகளை நீங்கி, வன்புலக்கானடைந்து போய் முகில் நெருங்கு திருக் காரிகரையினை யிறைஞ்சி, மலைகள் நெருங்கிய நிலத்தின் வழிச் சென்றருளினர். திருநீற்றுத் தொண்டர் கூட்டம் கடல் போலச் சூழ்ந்துசெல்லும் பொழுது "திருஞானசம்பந்தன் வந்தா"னென்று எழுந்த திருச் சின்னங்களின் நாத நிறையக் கேட்ட விலங்குகளும் தீவினையொன்றுபட்டு மருங்கு நண்ணின. இவ்வாறு சென்று திருக்கண்ணப்ப நாயனார் திருப்பாதச் செருப்புத் தோய வேட்டையாடிய கானங்களையும், மற்றும் தேவர்களும் வணங்கும் பெருமையுடைய தானங்களையும் கடந்து திருக்காளத்தியினருகு, சென்றபோது தொண்டர் குழாங்களும், சடைத் திருமுனிவர், காபாலியர், பல வேடச்சைவர் முதலாக அப்பதியிலுள்ளோர் கூடி வந்து எதிர் கொண்டனர். பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி வணங்கி அவர்களை நோக்கித் "திருக்காளத்திமலை இம்மலைகளில் யாது?" என்று கேட்டருளினர். அவர்கள் அதனைக்காட்ட மனமகிழ்ந்து தொழுது "வானவர்க டானவர்கள்" என்று கண்ணப்பர் திருத்தொண்டு சிறப்பித்த திருவிராகப் பண் பதிகத்தினைப் பாடியருளி, மலையடிவாரம் சார்ந்து மலையினைத் தொழுது படி வழியேறித் திருக்கோயில் சூழ்வந்து திருமுன்பு சேர்ந்து கைகூப்பி நிலமுற வீழ்ந்து வணங்கி எழுவார், இறைவரைக் கும்பிட்ட பயன் காண்பார்போல் அங்குக் கண்ணப்ப நாயனாரைக் கண்டு வீழ்ந்தார்; அன்பின் மெய்ம்மை உருவினையும் அவ்வன்பினுள்ளே நிலைபெற்று உள்ள இறைவரையும் ஒருசேர வுடன்கண்டு கொண்ட விருப்பத்தினாலே மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கித் திளைத்து அங்கு நின்றும் புறம்போந்து வைகியருளினர்; பல நாட்கள் தங்கிக் காலந்தோறும் இறைவரை வணங்கி யினிதமர்ந்தனர். அங்கு வடதிசையிலும் மேற்றிசையிலும் அருந்தமிழின் வழக்கம் நிகழாமையாலே அங்கங்கும்சென்று வணங்கும் முறைமைபோல அங்கிருந்தவாறே திருக்கயிலை, திருக்கேதாரம், திருக்கோகரணம்,

திருப்பருப்பதம், திருஇந்திரநீலபர்ப்பதம் முதலிய பதிகளை வணங்கித் திருப்பதிகங்கள் பாடியருளி யிருந்தனர். அதன்பின் திருவொற்றியூர் சென்று வணங்கத் திருவுள்ளங் கொண்டு இறைவரருள் பெற்று, அத்திருநகரின் புறம்போந்து அதனை நோக்கி நின்று "எந்தையா ரிணையடி என்மனத் துள்ளவே" என்ற திருப்பதிகம் பாடி இறைஞ்சி மேற்சென்றனர். பாலியாற்றின் வடகரையின் வழியே சென்று, முன் அணைந்த பதிகளையும் திருவேற்காடு, திருவலிதாயம் முதலியவற்றையும் வணங்கித், திருவொற்றியூர் சார்ந்தருளினர்; அந்நகரின் அடியார்கள் தொழுது எதிர் கொள்ளத் தாமும் சிவிகையிழிந்து தொழுது "விடையவன்" என்ற பதிகம் பாடித் திருக்கோயிலை யணைந்து முறையாலே வணங்கித் துதித்துக் காதலித்து அப்பதியில் தொண்டர்களோடும் இனிது எழுந்தருளி யிருந்தார்.

இவ்வாறு பிள்ளையார் இருந்தருளத், திருமயிலாபுரியில் முன் நிகழ்ந்த செயலாவது:

**திருமயிலை எலும்பு பெண் ணுக்கியது**

திருமயிலாபுரியில் சிவநேசர் என்ற வணிகர் மிக்க செல்வமும், சிவனடியார்களிடத்தில் மிகுந்த அன்பும், பரசமயங்களைப் பற்றும் செற்ற மேவிய சீலமு முடையராய் வாழ்ந்தனர். அக்காலத்தில் சீகாழியில் பிள்ளையார் திருவவதாரம் செய்து திருஞான முண்டருளிப் பரசமயங்களை இழித்தழிக்கும் செய்கைகளைக் கேட்டு, அவரது திருவடிகளில் இடையறாத அன்புடையவராகி, அவரது அருட் செயல்களைக் கேட்பதில் மகிழ்வுற்றிருந்தனர்; பெருஞ் செல்வராயினும் அவருக்கு மகப்பேறின்மையினாலே மருண்டு, அரனடியார் உவப்புறும்படி அருச்சனை செய்த நலத்தினாலே அரியதொரு பெண் மகவு பெற்றார். அது பூவினுள் போன்றிருந்தமையால் பூம்பாவை என்று பெயரிட்டு அருமையாக வளர்த்து வந்தனர். அவர் வழியாண்டையக உரியபருவமடைந்து அதற்கேற்ப விளங்கினார். அது கண்டு சிவநேசர் "இவளை மணக்கும் நாயகனே எனது நிதி முழுதுக்கும் உரியவன்" என்று அறைந்தனர். அக்காலத்தில் பிள்ளையார் பாண்டி நாட்டினை அணைந்து பாண்டியன் சுரந்தீர்த்து, மேலும், தீயிலும் நீரிலுமாக அமணரை வாதிட்டு வெற்றிகொண்டு அழித்ததுவும், பாண்டியனுக்கு நீறு நல்கிப் பாண்டி நாட்டில் சைவம் பெருகச் செய்ததுவும் ஆகிய அருஞ் செயல்களையெல்லாம் கேட்டு மகிழ்ந்து பிள்ளையாரைத் திசை நோக்கித் தொழுது நின்று, சுற்றத்தாரெல்லாம் கேட்கப், "பூம்பாவையையும், எனது நிதிக் குவையையும், பிள்ளையார் காழியுடையவர்க்கு கொடுத்தனன்" என்று மொழிந்து மகிழ்ந்திருந்தனர். பூம்பாவை ஒருநாள் முல்லைமலர் கொய்தபொழுது விரலில் நாகந் தீண்டியதும் அது பாம்பு அரவம் தீண்டிற்று; விடந் தலைக்கேறக் கன்னிகை உணர்வழிந்து வீழ்ந்தனள், மந்திர நூலவரும், மந்திரசாதகரும், காருட வித்தை முதலிய விச்சை வல்லவர்களும் எல்லாத் தீர்வுகளும் நாடிச் செய்தும் தீராது கன்னிகையின் உயிர் நீங்கியது, சிவநேசரும் சுற்றமும் துன்புற்றனர். ஆயின், அவளைப் பிள்ளையாருக்கென்று உரைத்துவிட்டதினால் தாம் துன்புறத்தகவில்லை என்று தேறி அவளுடம்பை எரியிலிட்டுச் சாம்பரையும் எலும்பையும் ஒரு குடத்திற் சேமித்தனர். அக்குடத்தைக் கன்னிமாடத்தில் வேறு வைத்து விளக்கு, மாலை, சாந்தம், போனகம் முதலிய உபசாரங்களைத் தோழிமாரால் நாடோறும் செய்வித்துப் போற்றி வந்தனர்.

இவ்வாறு நிகழுநாள்களில், பிள்ளையார் திருவொற்றி மாநகரில் எழுந்தருளிய நற்செய்தியைச் சிவநேசர் கேட்டு மிக மகிழ்ந்து அச் செய்தியினை வந்து சொன்னவர்க்கெல்லாம் பொன்னும் ஆடையும் கொடுத்தனர்; திருமயிலாபுரியினின்றும் திருவொற்றியூரளவும் நடைக்காவணமிட்டும், துகில் விதானித்தும், வாழை கமுகு நாற்றியும், தோரணம் மாலைகள் தூக்கியும், தேவலோகம்

போல அலங்கரித்தனர். தொண்டர்களுடனே தாமும் சென்று பிள்ளையாரை வணங்குதற்குப் புறப்பட்டனர். அவ்வளவில் பிள்ளையாரும் திருவொற்றியூர் பணிந்து திருமயிலாபுரி நோக்கித் தொண்டர் கூட்டத்துடனே எதிர்வந்து தோன்றக் கண்ட சிவநேசர் மகிழ்ச்சியினால் நிலமுற விழுந்து இறைஞ்சினர். பிள்ளையார், சிவிகையினின்றும் இறங்கித் தொண்டர் கூட்டத்தின் முன் தொழுதெழுந்தருளி, அடியார்கள் வணிகரின் திறங்களைச் சொல்லக் கேட்டுத் திருமயிலாபுரியினை அணைந்தனர்; வணிகர் திறத்தின் முன் நிகழ்ச்சிகளைத் திருவுள்ளத்துக் கொண்டு அவர் செயல்வாய்ப்பவும், புறத்துறைகள் அழியவும் கருணை நோக்கங்கொண்டு, இறைவரது திருக்கபாலீச்சரத்தினை வணங்கி, வலஞ்செய்து, திருமுன்பு சென்று, தேவதேவனைத் திருக்கபாலீச்சரத்தமுதைப் பாவை பாகனைப் பரிவுறும் பண்பினால் இறைஞ்சித், துதித்துத் திளைத்துப் புறம் போந்தருளி வணிகரை நோக்கி, "உலகவரறிய உமது மகளின் என்பு நிறைத்த மட்குடத்தைத் திருக்கோயிற் றிருமதிற் புறவாயதலிற் கொணர்க" என்றருளினர்; அவ்வாறே அவரும் சென்று கன்னிமாடத்திருந்த அக்குடத்தினை வேறு எடுத்து, மூடுசிவிகையுள் வைத்துச், சேடியர்சூழத் திருக்கோயிற் புறவாய்தலினை அணைந்து சிவிகையினின்று குடத்தினை எடுத்து அபிமுகத்தினில் அடியுறைப்பினாலே முன்வைத்து வணங்கினர். அப்போது இதன் விளைவினைக் காண்பதற்கு மயிலைமா நகருள்ளார், நாடுவாழ்பவர், நெறியில சமயத்திலுள்ளோர் முதலிய பலரும் வந்து கூடினர். பிள்ளையார் இறைவரது கருணையின் பெருமையினையே கருதி இவ்வுலகத்தில் இறந்தவர்களது எலும்பினை வைத்தே அவ்வுயிரினை நன்னெறிப்படுத்தும் தன்மை அவ்வெலும்பின் றொடர்ச்சியால் வருவது என்று அருளோக்கம் செய்து, "பூம்பாவாய்!" என்று அப்பெண்ணின் பெயர் சொல்லி அழைத்து "உலகிற் பிறந்தார் பெறும் உறுதிப் பயனாவது சிவபெருமானடியார்களை அமுது செய்வித்தலும், இறைவரது திருவிழாக்களைக் கண்ணாரக் காணுதலுமே யாம் என்பது உண்மையாயின் உலகர் முன்னே வா" என்று உரைப்பாராகி, இறைவரைத் தொழுது, "மட்டிட்ட" என்று தொடங்கித் திருப்பதிகம் அருளிச் செய்தனர். அப்பதிகத்தினுள் "போதியோ" என்ற மெய்த் திருவாக்கெனும் அமுதம் அக்குடத்தினுள் எலும்பிற் பொருந்தவே வந்து வந்து உருவமாய்த் திரண்டது; அத்திருப் பாட்டினிடையே போன வாயுவும் வடிவமும் வளர்ச்சியும் பொலிவொடு நிரம்பிக் குடத்தினுள் அடங்கிற்று; அக் குடத்தினின்றும் எழுவதன்முன் பிள்ளையார் சமண் பாட்டினை (பத்தாவது பாட்டு) விரிப்பாராய்த் தெளிதலில்லாத சமண் சாக்கியர்கள் இச்செய்கை ஏற்றதன்றென எடுத்துரைப்பார் என்றபோது வெளியே கை தோன்றிடக், குடம் உடைந்தெழும் பூம்பாவையார், தாமரைப்போது அவிழ்ந்தெழுந்தனள் போன்றாள். முதற்பாட்டினில் வடிவு பெற்று, மேல் எட்டுத்திருப்பாட்டின் அம்முறையே பன்னிரண்டாண்டளவு அணைந்து, சமண்பாட்டினிற் றோன்றிடக்கண்டு, பிள்ளையார் திருக்கடைக் காப்புச் சாத்திப் பதிக நிறைவாக்கியருளினர். அது கண்டவர்கள் அற்புத மெய்த் தொண்டர்கள் அரவொலி முழக்கினர்; விண்ணோர் மலர்மாரி பெய்தனர்; மண்ணோர் கைகுவித்து வீழ்ந்து வணங்கினர்; பரசமயத்திலுள்ளோர் "இஃது எங்குள செய்கை? மற்று என் செய்தவாறு?" என்று மனமும் மெய்யும் கலங்கித் தள்ளாடி வீழ்ந்தார். அவ்வாறெழுந்து நின்ற அணங்கின் முடிமுதல் அடிவரையும் ஒவ்வோர் அவயவமும் அதனதன் விதிப்படி உள்ள உத்தம இலக்கணமும் அழகும் பொருந்த விளங்கின; அப்பூம்பாவையார் விண்ணும் மண்ணும் அற்புத மெய்த் தோன்றி அழகினுக்கணியாய் நின்றாள். எண்ணில்லாத ஆண்டுகள் கொண்ட வயதளவுள்ள பிரமன், அழகு பொருந்தத் தான் படைத்த திலோத்தமையின் மாயை உருவாகிய பெண்ணலமாகிய

அழகினைத் தனது நான்கு முகத்தாலும் கண்டு நலமுணர விழைந்து காமத்துள் மாழ்கினன்; அவ்வாறன்றி, ஈண்டுப், புண்ணியப் பதினாறாண்டு போதப்பெற்ற பிள்ளையார் அவனினும் மிக நல்லாளாகிய பாவையாரிடத்து இறைவரது கருணை வெள்ளத்தினையே ஆயிர முகங்களாற் கண்டருளினார். அது கண்ட சிவநேசர் பிள்ளையாரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்; பூம்பாவையார் இறைவரைப் பணிந்து பிள்ளையாரை வணங்கி நின்றனள். பிள்ளையார் சிவநேசரை நோக்கி "நும் மகளை அழைத்துக்கொண்டு உமது மனையிற் செல்லுக" என்று கூற, அவர் பிள்ளையாரை வணங்கி அடியேனது பாவையைத் திருமணம் புணர்ந்தருளச் செய்ய வேண்டுமென்று வேண்டினார். அதனை மறுத்துப், பிள்ளையார், நீர் பெற்ற பெண் விடத்தினால் வீந்த பின்னர் யான் இறைவரது கருணை காணவர மீள உருப்பெறுவித்த லால் நீர் சொல்வது தகாது என்றருளவே, வருந்தியவராகிய வணிகரும் கிளைஞரும் தெளிய வேதநூற் றுணிபினை அருளி அவர்களைத் தேற்றியருளினார்; அவர்களும் அவ்விருப்பத்தினை யொழிந்தனர். பிள்ளையார் திருக்கோயிலுட் சென்று கருணை செய்து கைதந்த இறைவரை வணங்கிப் போந்தருளினார். சிவநேசர் பாவையாரது மணத்தினை ஏனையோருக்கு இசைகிலேன் என்று அவரைக் கொண்டு, கன்னிமாடத்துச் சேர்த்தனர். பாவையாரும் சிவத்தை யடைந்தனர். பிள்ளையார் சில நாள் அப்பதியில் எழுந்தருளியிருந்து பதியவர்கள் விடைகொள்ளச், சிவநேசரது வருத்தந் தீர மதுர மொழியளித்து விடை கொடுத்துச் சென்று, திருவான்மியூர் சேர்ந்து பிறவிமருந்தாகிய இறைவரை வணங்கி, விருவுரையாகிய பதிகத்தினாற் றுதித்து, அங்கே சிலநாள் இனிது அமர்ந்தருளினர். அங்குநின்றும் திருவிடைச்சுரத்துக்கு எழுந்தருளி இறைவரை வணங்கி அவரது திருமேனி வண்ணங் கண்டதிசயித்து "இவர்வண்ணம் என்கொலோ!" என்று துதித்துப் பதிகம் பாடியருளித், திருக்கழுக்குன்றத்தினைச் சார்ந்து மலையை வலங்கொண்டு இறைவரை வணங்கிக் "காதல் செய்கோயில் கழுக்குன்றே" என்று பாடித் துதித்தருளினர். அதன்பின் திருஅச்சிறுபாக்கத்தினை அணைந்து வணங்கி "ஆட்சி கொண்டார்" என்ற திருப்பதிகம் பாடியின்புற்று அங்கிருந்தருளிப் பின் பிறபதி களிலும் தொண்டர்கள் எதிர்கொள்ளச் சென்று வணங்கித் திருவரசிலி, திருப்புற வார் பனங்காட்டூர் முதலாகிய பதிகளை வணங்கித், திருத்தில்லையை அணைந்தனர். தில்லைவாழந்தணர்களும் திருத்தொண்டர்களும் எதிர்கொள்ளச் சிவிகையினின்றும் இறங்கிப் பெருங்காதலுடன் அஞ்சலிகொண்டு சென்று, திருவெல்லை பணிந்து, வடதிசை வாயிலை வணங்கித் திருவீதியினை இறைஞ்சிச் சென்று, பேரம்பலத்தினைத் தொழுது, திருவணுக்கன் திருவாயிலைப் பணிந்து பொன்னம்பலத்தினைச் சேர்ந்து, ஆனந்தக் கூத்தர் திருக்கூத்துக் கும்பிடுவாராய்த் திருக்களிற்றுப்படியினைத் தொழுது வணங்கித் திளைத்து எழுந்து ஆராத ஆனந்தத்தினை உள்ளலைந்து பொங்கின பத்தி கரைகடந்த நிலையணைந்தனர்; ஆங்கு எய்தாக் காலத்துப் புறம்போந்து காலந்தோறும் வணங்கி அங்கு அமர்ந்தருளினார். பிள்ளையார் அணைந்த செய்தி கேட்டுச் சீகாழியினின்றும் சிவபாத விருதயரும் மறையவரும் தொண்டர்களும் திருத்தில்லை வந்து சார அவர்களுக்குத் தில்லைவாழந்தணர்கள் சிறப்புச் செய்யப், பிள்ளையாருடன் கூடி அம்பலக்கூத்தனைப் பணிந்து இன்புற்றனர். கூத்தப்பெருமானிடம் விடைபெற்றுச் சீகாழியை நோக்கிப் பிள்ளையார் எழுந்தருள்வாராகிப் பல பதிகளையும் வணங்கிச் செல்லும்போது, சீகாழிப் பதி தூரத்தே தோன்றக் கண்டு, சிவிகையினின்று இறங்கி வணங்கி "வண்டார் குழலரிவை" என்றெடுத்து "மாளிகை விண்டாங்குவ போல வேணுபுரம்" என்று பதிகம் பாடித் துதித்தெழுந்தருளினார். அப்பதியின் மேல அணுகிப் புறம்பணையில் சார்ந்தபோது அதனை மலர் தூவித் தூப தீபங்களுடன் எழுந்த "காழிநகர் சேர்மின்"

எனக் கடைமுடிந்த திருப்பதிகம் பாடியருளினர்; திருநகருட் புகுந்தருளி மிக்க காதல் பெருகக் கோயிலினை முறைமையாலே வலங்கொண்டு ஏறித் திருத்தோணியில் அம்மையப்பரைக் கைகுவித்து விழுந்து நிலத்தெழுந்து பெருவாழ் வெய்தி வணங்கிப் பதிகங்கள்பலவும் பாடித்துதித்து அருள் விடைபெற்றுத் திருமாளிகை சேர்ந்து எழுந்தருளியிருந்தனர்.

திருமணம்

அந்நாளில் பிள்ளையாரை வணங்கும் பொருட்டுத் திருமுருகநாயனர், திருநீலநக்க நாயனர் முதலிய திருத்தொண்டர்களும் ஏனையோரும் சுற்றத்தார்களுடன் சீகாழியில் வந்தார்கள். அவர்களோடு உடன் மகிழ்ந்து காலந்தோறும் சென்று தோணியப்பரை வணங்கிச் செந்தமிழின் பந்தத்தாற் றிருப்பதிகம் பல பாடி யிருந்தருளினர் பிள்ளையார். அக்காலத்திற் சிவபாத விருதயரும் சுற்றத்தார்களும் கூடித் திருஞானசம்பந்தர் திருமணஞ் செய்தருளுதற்குரிய பருவமிது என்று எண்ணி அவர்பால் அறிவிப்பார்களாய், "மறை நூல் வழியே வேள்விகளைப் புரிவதற்கு ஒரு கன்னியைத் திருமணஞ் செய்தருள வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அது கேட்டுப் பிள்ளையார் சுற்றம் பொருந்தும் பாசத் தொடர்பினை விட்டு நீங்கும் நிலையினராய் இறைவரது திருவருளை முன்னமே பெற்றவராதலின் அதற்கிசையாது, "நீவிர் சொல்வது உண்மையே யாயினும் அது எனக்குக் கூடாது" என்று மொழிந்தருளினர். மறையவர்கள் பின்னும் கைதொழுது "தேவரீர் இவ்வுலகில் மறை வழக்கத்தினை மேம்பட எடுத்தீராதலின் அம்முறைமையாலே வைதிகமா நெறியில் ஒழுக்கம் பெருகி நிகழ்வதற்குத் திருமணஞ் செய்தருளத் திருவுள்ளங் கொண்டருள வேண்டும்" என்று விண்ணப்பித்தனர். மறை வாழவும், வேதியரொழுக்கத்துறை வாழவும் அவ் விண்ணப்பத்துக்குப் பிள்ளையார் உடன்பட்டருளினர். அவர்கள் எல்லாரும் பெரு மகிழ்ச்சியெய்தி இறைவரை வாழ்த்தினர். மறையவரிற் பொருந்திய குலத்தின் இசைவினாலே திருநல்லூர்த் திருப்பெருமணத்தில் நம்பாண்டார் நம்பியின் மகளாரை மகட்பேசுதல் பொருந்துமென எண்ணி, அவ்வாறே தாதையாரும் சுற்றத்தாரும் அவர்பாற் சென்று மகட்பேச, அவரும் பெருமகிழ்ச்சியோடும் இசைந்து, செல்ல விடுத்தனர். அவர்கள் சீகாழிக்குத் திரும்பிச் சேர்ந்து, அவரது இசைவினை அறிவித்துத், திருமண நாளும் ஓரையும் கணித்து மங்கல நூலோர் வகுப்பத் திருமண நாளோலை பெருஞ் சிறப்பினுடன் போக்கி, நன்னாளில் முளைப்பாலிகை விதைத்தார். நகர் மலங்கரித்தனர். சுற்றத்தார் பலரும் வந்தீண்டினர். திருமண நாளின் முன் ஏழா நாளிலே இயங்கள் முழங்கப் பாலிகைகளிற் புனித முளை பூரித்தனர். மாடங்கள் விளக்கினர். பந்தர்கள் தோரணங்கள் நிரைத்தனர். ஆகுதிப் புகையும் அகிற்புகையும் விம்மி எழுந்தன. பண்டசாலைகள் பலவேறு விதம் பயின்றன. மறைவிதிச் சடங்கின் உபகரணங்களும் குங்குமக் கூட்டும் சாந்தும் பொற்சுண்ணமும் அமைத்தனர். புண்ணிய நீர்க் கலசங்கள் தாபித்தனர். இவ்வகையால் இறைவர் ஏவ நிதிக்கோமானருளே அமைத்ததுபோல மணத்திற்குரிய பெருவளங்கள் யாவும் நிறைந்தன.

மணத்திருநாளில் முன்னாளிலே திருக்காப்பு நாணணியும் சடங்கினை மறையவர்கள் கூடி மறைநூல் விதிப்படி செய்து, திருக்காப்பு நாணை நகர்வலஞ் செய்வித்து வேத முழங்க மங்கல இயங்கள் முழங்கப் பிள்ளையாரது திருக்கையிற் சாத்தினர்கள். மணங்காண வந்தார்களும் தொண்டர்களும் மகிழ்ந்து ஆர்த்தனர். திருஞானசம்பந்தர் புன்னெறிச்சமய இருள் அகல வந்து அவதரித்தாற்போல் இருளை நீக்கிப் பகலோன் எழுந்தனன். திருமணஞ் செயத் தவம்செய்யுநாளிது என்று இருள் கழுவிக் கதிர் அணியைத் திசைகள் அணிந்தன எண்டிசையவர்களும் நெருங்குதலால் திருமணத்தில் வையம்

தனது வரம்பில்லாத பயன் காட்டுவது போன்று விளங்கிற்று ; திருமண எழுச்சியின் முழக்குப்போன்று, திரைச் சுரிவளை ஆர்ப்போடு பெருமுழக்குடன் புணரி எழுந்தது ; மறையவர் ஆகுதி தொடங்கிடா முன்னம் வேதியில் வன்னி வலஞ்சுழித்தெழுந்தது ; பூந்தாது எனும் நீறு தரித்து வண்டொழுங்கு எனும் கண்டிகையும் பூண்டு மருந்து மணம் கொணர்ந்து அன்பர்களுடன் எழுந்தது ; மணவணிகாட்டும் வெண்ணிறக் கொடிகளின் வரிசைபோன்று வெண்மேகங்களுடன் விசும்பு விளங்கிற்று ; இவ்வாறு விளங்கிய நன்னாளிலே பிள்ளையார் காலைச்செயலினை முற்றித், திருத்தோணிமேலமர்ந்த முதல்வரை வணங்கி, அன்பர் கூட்டம் முன்செல்லச் சென்று, வளம்பதியினை வணங்கிச் சிவிகையின்மேற் கொண்டனர், வாகனங்களின் ஏறுவார் ஏறினர். மங்கல இயங்கள் எழுந்தார்ப்ப மறை முழங்கத், திருமணம் எழுந்தது. வேதவொலி முழக்கமும் வீணையாழொலியும் கீதவொலியும் ஒவ்வொருபாலின் எழுந்தன. ஓதுகிடையும் ஆசானும், வேள்வித்தீயினை இலவுடன் கொண்டு போவாரும், திருப்பதிகங்கள் விளம்பிச் சார்வாரும், அறுபகை செற்ற மாதவர்களும், அறவகைச் சைவவிரதிகளும், யோகக்குறிக்கோள் பெற்ற தொண்டர்களும் வெவ்வேறு கூட்டங் கூட்டமாக உடன் சென்றனர். விஞ்சையர் இயக்கர் கின்னரர் அரம்பையர் முதலிய தேவசாதியர் தத்தம் விமானங்களில் ஏறி மண அணிகாண விசும்பிற் சென்றனர். இவ்வாறு சாரும் பிள்ளையார் பவமறுத்தாளவல்ல சிவபெருமானது பாதம் உள்ளத்துக் கொண்டு மண எழுச்சியுடன் திருநல்லூர்த் திருப்பெருமணத்தைச் சேர்ந்து, நகரில் உள்ளார் வந்து எதிர் கொள்ளச் சென்று, திருக்கோயிலினுட்புக்கு இறைவரை வணங்கிப் பாடித் துதித்துப், பின் மணக்கோலம் புனையவேண்டிப் புறத்தில் ஒரு மடத்திலே புகுந்தனர். அவரை வாசப் புனிதநீ ராட்டினர். வெண்பட்டாடையும் உத்தரீயமும் சாத்தினர் ; கலவைச் சாந்தம் அணிந்தனர் திருவடி முதல் திருமுடி வரை தூயமுத்துக்களாலாகிய உரிய அணிகளை அணிந்தனர். திருவுடையாள மாலையினைத் தாம் எடுத்துப்பூண்டு திருவெண்ணீற்றினை அஞ்செழுத்தோதிச் சாத்திச் சிவபெருமானை மனத்துள் வைத்து வணங்கிப் பிள்ளையார் இயங்களும் சங்கமும் முழங்க வந்து சிவிகையினை மேற்கொண்டருளினர். கதிர்நிறை மதியம்போல மணிக்குடை நிழற்றத் தெருவினூடு திருமணம் செல்லச், சின்னங்கள் பிள்ளையாரது திருநாமங்களை எடுத்தியம்பின ; மறையவர்கள் மாடங்களை விளக்க அம்மையாரையும் காப்புச் சேர்த்துச் சடங்கு செய்த பொன்றீபம்போல அழகலங்கரித்து வைத்தார்கள், திருமணத்தெதிர் சென்று மறைக்குல மைந்தர்கள் பொற்சுண்ணமும் நவமணியும் வீசினர். பிரமன் போன்ற பெருமறையோர் அரசிலை தருப்பை தோய்ந்த கலச நீரினை வேத மந்திரங்கள் சொல்லி வீசினர். மந்தமாருதமும் வீசிற்று. புண்ணிய விளைவுபோன்ற பிள்ளையார் பூம்பந்தர் முன்பு சார்ந்து சங்கங்கள் முழங்கச் சிவிகையினின்றும் இறங்கிப், பொற்சுண்ணம் பரந்த பாவாடைமீது எழுந்தருளி வந்தனர். மறையவர் மங்கல மகளிர் நிறைகுடம் விளக்குத் தூபம் மலர்மாலை முளைப்பாண்டில் முதலிய மங்கலங்களை ஏந்தி எதிர்கொள்ளச் செம்பொற் பீடத்தில் ஏறிப் பிள்ளையார் நிற்க, மாதர்கள் வாழ்த்தி வலங்கொண்டெய்தி நீர்வார்த்து உரிய மங்கலச் செயல்கள் செய்தனர். பின்னர் மாதர்கள் மங்கலமேந்தி முன்செல்லச் சென்று பிள்ளையார் செம்பொன்மாடத்துள் ஆதி பூமியினுட் புக்கருளி விதானத்தின்கீழ் மலர்த்தவிசின் வீற்றிருந்தருளினர். பெண்பெற அருந்தவம் முன்பு செய்த அம்மையார் அன்பாலும் நீரும் எடுத்து வந்து வார்ப்பத், திருமகட் கொடுக்கப்பெற்ற நம்பாண்டார் பிள்ளையாரது பாதங்களைச் சிவபெருமானே இவர் என்று தியானித்து விருப்பினால் விளக்கி அந்த நீரினைத் தலையிலும் மாடத்தினுள்ளும் தெளித்து, உள்ளும் பூரித்துக் கிளைஞர்மேலும் தெளித்தப் பின்னர்ப் பிள்ளையாரது

மலர்க்கையில் நீர்வார்த்துத் தமது குலமும் கோத்திரமும் பெயரும் எடுத்துச் சொல்லி, "எனது செல்வமகளைப் பிள்ளையாருக்கு அளித்தேன்" என்று கூறினர். கன்னியார் கையினைப் பிள்ளையார் பற்றும் நல்லவேளை வந்து சாரவே, உடன் பிறந்தாரும் பெற்றவர்களும் அவ்வம்மையாரைக் கொண்டுவந்து, ஏகமாஞ் சிவமெய்ஞ்ஞான மிசைந்த அப்பிள்ளையாரது வலப்பாகத்தில் வெள்ளை மேகத்தினுடனிசைந்த மின்னுக்கொடி போல வைத்தனர். அத்திருக்காட்சியினைக் கண்ணிமையாது கண்டு மனிதர்களும் தேவராயினர்; பந்தரினிடையே திருநீலநக்கர், நம் பெருமான் பாதம் பொருந்தும் உள்ளத்தோடு மறைவழி விதித்த வேள்விச் சடங்குகளைச் செய்தனர். மறை ஒலியுடன் மங்கலவாழ்த்தும் பெருக மணமகளின் கைப்பிடித்துப் பொரியட்டி மந்திர வேள்வித் தீயினை வலம்வரும் சடங்கு செய்வதற்காக அம்மையார் திருக்கையினைப் பிள்ளையார் பற்றி எழுந்தபோது, "நாம் விரும்பும் எரி யாவார் சிவபெருமானே" என்று திருவுள்ளத்திற் கொண்டு, "இந்த இல்வாழ்க்கை வந்து சூழ்ந்து விட்டதே; இவளோடும் சிவன்திருவடி சேர்வன்" என்ற ஆசை மேற் பொங்கத், திருக்கோயிலையடைந்தனர். கிளைஞரும் தொண்டரும் உடன் சூழ்ந்தனர். அளவுபடாத மெய்ஞ்ஞானத்தின் எல்லையினை அடையும் குறிப்புடன் உலகமெங்கு நின்றும் நீங்கச் சிவனுடனாக எழுந்தருளுங் குறிப்பினாலே "பவமற என்னை முன்னாள் ஆண்ட அத்தன்மைக் கேற்பச் சிவபெருமான் என்னைத் திருவடி சேர்த்தி யருளும்" என்ற கருத்துடன் "கல்லூர்ப் பெருமணம்!" என்று தொடங்கி "நல்லூரில் மேவும் நம்பனே உன் பாதம்சேரும் பருவமிது" என்று திருப்பதிகம் பாடியருளினார். சிவபெருமான் திருவருள் செய்து "நீயும் பூவைபோன்ற உன் மனைவியும் உனது புண்ணியத் திருமணத்தில் வந்தார் யாவரும் எனது சோதியினுள் வந்து எய்துங்கள்" என்றருளி, அத்திருக்கோயிலுட்பட மேலோங்கும்படி மூவுலகமும் ஒளியால் விளங்க முழுச் சுடர்த் தாணுவாகி, அதனுள் ஒருவாயிலும் வகுத்தருளினர்; பிள்ளையார் உலகமுய்யும் வழியினை அருள்வாராகி "எவாக்கும் ஞானமெய் நெறியாவது நமச்சிவாயச் சொல்லே யாகும்" என்று, "காதலாகி" என்ற நமச்சிவாயத் திருப்பதிகத்தை வானமும் நிலமும்கேட்க அருளிச்செய்து, இத்திருமணத்தில் வந்தோர் "யாவரும் பிறவி தீரப் புகுக" என்றருளினர். எல்லையில்லாத பிறவிகளாகிய வெள்ளத்தில் வரம்பு காணாது அழுந்தி உடம்பெனும் துன்பக்கூட்டினுள் உய்யும் உணர்வின்றி மயங்குவார்கள் அச்சோதியினுள் புக்கனர்; திருநீலநக்கர், திருமுருகர், முதல் தொண்டர்களும், சிவபாதவிருதயரும், திருநீலகண்டப் பாணரும், மற்றேனையோரும் கிளைஞர் சூழத் தத்தம் மனைவிகளுடனே உட் புகுந்தனர். சிவிகை முதலிய அணிதாங்கிச் சென்றோரும், பணிகள் பலவும் செய்தோரும், பரிசனங்களும் வினைப்பாசம் மறுத்த துணிவினுடன் தொழுது உடன்புக் கொடுங்கினர்; அறுவகைச் சமயத் தருந்தவரும், அடியார்களும், மறை முனிவர்களும், கும்பிட வந்தணைந்தவர்களும், ஒரு தொடர்புமன்றி வேறு திருவருளினாலே வீடுபெற வந்தார்களுமாகிய எல்லாரும் சோதியினுட் புகுந்தனர். அதன்பின், திருஞானசம்பந்தர் காதலியைக் கைப்பற்றிக்கொண்டு அச் சிவச்சோதியை வலம் வந்து அதனுட் புகுவாராய்ப், போதநிலை முடிந்தவழிப் புக்கு ஒன்றி உடனானர். அதன் பின் அச்சோதி வழி கரந்தது; பெருஞ் சோதியும் அடங்கிச் சிவனது பழைய மணக்கோயில் தோன்றியது. உலகில் இப் பேறு பெறாதவர்கள் தெருமந்து வருந்தினர்கள். தூரத்தே கண்ட பிரமன் முதலாகிய தேவர்கள் முதலியோர் துன்ப நீங்கத் துதித்தனர்.

கற்பனை - (1—100) பாட்டுக்களின் கற்பனைகள் முன் 21 சஞ்சிகையிற் றர பட்டன. அதனைத் தொடர்ந்து கொள்ளப்பட்டது.

(18) மக்கள் தம் வாழ்நாளில் என்றும் சிவாலயங்களைச் சென்று தொழுதலையே மேம்பட்ட கடனாகக்கொண் டொழுகுதல் வேண்டும்; "ஆலயந் தானும் அரனெனத் தொழுமே" (போதம் - 12 சூத்) என்றபடி சிவாலயத்தைச் சிவனெனவே கண்டு வழிபடுவது சிவன் முத்தர்களுக்கும் இவ்வுடலுள்ள வரை வாசனாமலம் நீக்கற் பொருட்டே சிவாகமங்களுள் விதிக்கப்பட்டுள்ளது என்பதனால், ஏனையோர்க்கு அது மிக இன்றியமையாத ஞானசாதனம் என்பது விளங்கும். (1998)

(19) பசுபோதம் அற்ற சிவஞானிக்கு வேண்டுவனவற்றை ஆண்டவனே மேற்கொண்டு இயற்றுவன். (2001), (2092), (2290)

(20) சிவஞானிகளைக் காணும் காட்சியே பெரும் பயன் தருவதாம். (2006)

(21) சிவஞானிகளைச் சிவஞானத் தொடர்புபற்றியே வணங்கி வழிபடுதல் சிறப்பு. அஃதன்றி அவரது குல நலம்பற்றி வழிபடுவோரும் உண்டு. அவருள் தாயர் மரபுத் தொடர்பு பற்றி வருவோர் மிகப் பற்றுடையோர்; (2008)

(22) ஆளுடையபிள்ளையார் தலயாத்திரையில் தரையிற் காலினால் நடந்து செல்வதும் அவரைப் பிறரொருவர் தாங்கிச் செல்வதும் பொறாது, தந்தையார் தமது பியலின் மேல்வைத்துச் சுமந்து சென்றார், இது தலையாய தந்தையன்பின் திறமே யன்றி அருந்தவஞ் செய்து பெற்றெடுத்த தலைமைப் பாடும் பற்றியது. (2011)

(23) சிவஞானிகளது திருவாக்கின் வழியே உருக்கொள்வது உலகம்; அவர்களே தமது ஆணையிட்டு அருள வல்லவர்.

(24) இறைவரைப் போற்றுவார் மண்புகார்;

(25) அன்பின்திறத்தான் வரும் நிகழ்ச்சிகளிற் குலநல உயர்வு தாழ்வு குறுக்கிடாது; (2031) ஆயின், சிவாலய வழிபாட்டு முறைகள் சிவாகம விதிகளுக்குட்பட்டு நிகழ்த் தக்கன (2032)

(27) பிள்ளையார், பாணனாரைத் திருக்கோயிற் புறத் திருமுற்றத்திற் கொண்டு புக்கு அங்கு நின்று யாழியற்றச் செய்தருளினார். உலக நிலையில் மக்கள் தங்கும் உறைவிடங்கள் முன்னையோர் கண்ட சமூகநிலை ஒழுக்கநூல் விதிப்படி அமைவுபடுத்தற்பாலன; சமூக ஒழுங்கு நடைமுறைக்கு இஃது இன்றியாதது. இவ்வாறன்றி இற்றைநாட் பேசப்படும் தகாத சமரசங்கள் போலியாம். அவ்வாறு வரும் சமூகநிலை அமைப்புக்களால் அன்பினியலுக்கு இழுக்கில்லை

(27) திருநீலகண்ட யாழ்ப்பாணர் விண்ணப்பித்தவாறே, ஆளுடையபிள்ளையார் அவரையும் அவரது மனைவியார் மதங்கசூளாமணியாரையும் தம்முடன் பிரிவின்றிச் சேவித்தும் பதிகங்களை யாழிலிட்டும் உடனிருக்க இசைந்தருளி, அவ்வாறே கடைமுறைகாறும் செய்வித்தது, முத்தியும் புகுவித்தருளியது அன்பும் அருளும் கொண்ட பண்பாகும்.

(28) ஒரு தலத்தைக் குறித்து யாத்திரை செல்பவர்கள் இடையில் வரும் பதிகளையும் வணங்கிச் செல்லுதல் மரபு. (2043)

(29) பெரியோர்களது வரவு கண்ட சரம் அசரமாகிய எல்லாம் மகிழ்ச்சிக் குறிகாட்டி மலர்தல் இயல்பு. (2040—2050)

(30) சிவனுக்குரிய திருநந்தனவனங்கள் பணித்தற்குரியன. (2051)

(31) அண்ணலார் வெளியே அருட்கூத் தியற்றும் திருவம்பலம் சிவஞானமே யாம். (2058)

(32) சிவனுக்குரிமைத் தொழில் செய்வோர் முன்னர் வைத்து வாழ்த்தத் தக்கார். (2060)

(33) திருத்தில்லைத் திருவீதிகள் நான்குமே உயிர்களுக்கு மாதவப்பயன் தர வல்லன. அவை தொழத் தக்கன. (2063)

(34) திருத்தில்லைப் பதியினுள்ளே மக்கள் தம் உறைவிடம் கொள்ளுதல் தகாதென்று அஞ்சி ஆளுடைபிள்ளையார் திருவேட்களம் தமக்கு வைகுமிடமாக அமைத்துக் காலந்தோறும் வந்து வழிபட்டுச் சென்றருளினர். இந்நாளுலகம் இது கண்டு தக்கவாறு ஒழுகற்பாலது. (2063—2064)

(35) தில்லைவாழந்தணர்கள் இறைவனது ஆடும் கழலுக்கு அணுக்கராம் பரிசினால் சிவகணநாதராந் தன்மை பெற்றவர். (2068) இதனைச் சிவஞானிகளே இறைவரருள் காட்டக் காண வல்லவர்கள்.

(36) பெரியவர்கள் அவதரிக்கும் பேறுபெறும் பதிகள்தாமும் அப்பேற்றினைத் தவஞ் செய்து பெற்றன. (2077).

(37) சிவ வழிபாடு பாச முற்ற உயிர்களே யன்றிப், பாசம் மற்றில்லாத சிவஞானிகளும் செய்யத்தக்கது. (2087)

(38) சிவிகை முதலாகிய உலக அனுபோகப் பண்டங்களைச் சிவஞானிகள் சிவனருளிய ஆணைவழியல்லது கைக் கொள்ளார். (2105)

(39) சிவனருளிய அருட் பண்டங்களைத்தாமும் அவனருளாகவே கண்டு வணங்கியே கைக்கொள்ளற்பாலன. (2114)

(40) பெருங்காதல் மிக்க ஞானிகள் நீண்ட நாட்பிரிவினாலே தம்மை யாட்கொண்டருளிய இறைவரது உருவெளிப்பாடு நிகழக் காண்பார். (2128)

(41) இளைய பிள்ளையார் தாபித்த திருச்சேய்ஞலூர்ப்பதி தன்னுட் சண்டீசப் பிள்ளையார் பான்மையில் வந்தவதரிக்கும் பேறு பெற்றது. அதனை ஆளுடைய பிள்ளையார் வழிபட்டபோது அத்தன்மை மிகவு விளங்கலாயிற்று. (2142 - 2143)

(42) ஆளுடைய பிள்ளையார் ஒரு பிறப்பு மெய்த்தன்மை யுடையாராயினும், உலகியல்பில வேதநெறி விளங்கும்படி இருபிறப்பினிலைமையினைச் சடங்கு காட்டி உபநயனம் கொண்டமைந்து, தோலும் நூலுந் தாங்கினர். சிவஞான நிறைவினாலே முற்றமுணர்ந்த நிலையினராயினும், உலகிற் சரிகருங்காறும் உலகநெறி உறுதி காட்டும் ஒழுக்கத்தின் நிற்கத்தக்கார். ஞானாசாரியர்கள் செயல்களும் இவ்வாறே காணப்படும். (2162)

(43) மந்திரங்களெல்லாம் முதல்வனை ரெழுத்தஞ்சினை முதலாகக் கொண்டு தோன்றுவன. திருவைந் தெழுத்தே ஆதிமந்திரமாம். (2164)

(44) சிவநேய மலிந்த திருவேடம் அரனெனவே கொண்டு தொழுது வழிபடற்பாலது (2168, 2169)

(45) சிவ வேள்விகள் மக்களுக்கு இருமைக்கு மின்பம் அளிப்பன. (2178)

(46) தம்மையடைந்தார்க்கு ஐந்து புலனும் நிலைகலங்குமிடத்து அஞ்சல் என்பவர் சிவபெருமானே யாவர். (2199)

(47) சிவபெருமானது பதிகளை வணங்குவோர் மாதவமுடையோர். (2204)

(48) சிவபெருமான் பாதம் பற்றியே வருங்குலத்துப் பான்மையுடையோர் வேறொரு பரிசினாலும் தீரா நோய்களை உடையவர்பாலே ஒப்புவித்து அவர் திருமுன்பு வரக் கிடக்கும் வகை தேடுவர். (2210); அவ்வாறு ஒப்புவிக்கும்போது சிவபெருமான்றானே உரியவாறு வெளி வந்து அருள் செய்வர். (2211 - 2216)

(49) சிவன் எல்லாவுயிரினும் நிறைந்தவன்; ஆயினும் சிவனையன்றி வேறு நினையாத சிவஞானிகள் உள்ளத்தில் சிவன் வெளிப்பட நிறைந்து விளங்குவன்; ஆதலில் அவர்கள் வாக்குச் சிவனது வாக்காகி, வெளிவரும்போதே குறித்த பயன் தந்து வெளிப்படும். பசுபோதமே நிறைந்து நிற்கும் ஏனையோர் வாக்கு அவ்வாறு பயன் றராமைக்கும் இதுவே காரணம். (2217)

(50) குறவரைத் தேவர்கள் போற்றும் இயல்பினையுடையது திருவீங்கோய் மலை. மக்கள் தேவரைப் போற்றுதலன்றித் தேவர் மக்களைப் போற்ற நிகழ்வது தலச்சிறப்பு.

(51) "திருநீலகண்டம்" என்பது இறைவரது திருவாணை நிகழ்வதொரு மந்...

(52) திருநீலகண்டத்தின் ஆணை வழியே அருளப்பட்ட சிவஞானச் சொல்லின் படி கட்டுண்டு நின்று, நாட்டின் இயல்பாகிய பிணி முதலியனவும் நீங்கும்.

(53) அடியார்க்குக் காவலாக நிகழ்ந்த சிவஞான ஆணைச்சொல், அவர் மட்டுமே யன்றி அந்நாடு முழுதும் காவல் செய்யும். நிகழ்ந்த அந்நாளில் மட்டுமேயன்றி எந்நாளி னும் அவ்வாறே நிகழும். அஃது அச்சொல்லின் பெருமையும் வன்மையும் ஆணை நிகழ்விக்கும் ஞானிகளின் ஆற்றலுமாம். (2234)

(54) கோச்செங்கட் சோழரது அன்பின் பெருமை மிகப்பெரிது; இறைவரது தேவாரத்தில் வைத்துப் போற்றப்படும் பெருமையுடையது (2243)

(55) திருவானைக்காவில் யானையும் சிலந்தியும் மாறுகொண்டு இகல்புப் பூசலிட்டிறந்தன. அப்பூசல் சிவனன்பின் தொண்டு காரணமாக வந்தமையின் இரண்டும் அருட்பேறு பெற்றன. இகல் பற்றி உலகில்வரும் ஏனைப் பூசல்களின் விளைவினின்றும் இவற்றின் இவ் வேறுபாடு உணரத்தக்கது. (2243)

(56) இறைவர்பால் நேசம் செல்லா வகை தடுக்கும் இடும்பைகளை இறைவரே தீர்த்தருள் செய்வார். (2247), "அவனருளாலே அவன்றாள் வணங்கி" (திருவா)

(57) சிவனது திரு அருட் பெருமைகளை அடியார்பாற்கேட்டு மிகுவுரையாடுதல் அவனருளைப் பருகித் திளைக்கும் சிவஞானிகளின் பண்புகளுள் ஒன்று, (2250 - 2251)

(58) ஞாயிறு மிதுன வோரையுடன் சேரும் காலம் கடுமை குன்ற வேனில் மிகும். (2283)

(59) சிவபெருமான் மிகப்பெரிய பொருட்கும் மிகப் பெரியவர், மிகச்சிறியதற்கும் மிகச் சிறியவர் என்பது வேதப் பொருள். (2300)

(60) கங்கை முதற் புனிதமாம் பெருந் தீர்த்தங்களும் தாம் தாம் தூய்மை பெறக் கருதி மாமகத் தீர்த்தத்துள் வந்து ஆடுதல் குடந்தைக் காரோணத் தலச் சிறப்பு; (2307)

(61) நாளுநாளும் பரவுவாரது பிணி தீர்த்தல் திரு நாகேச்சரமுடைய பெருமானது அருட்சிறப்பு (2310)

(62) சிவஞானிகள் பிறர்க்குப் பொருள் தரவேண்டில், சிவனையன்றி வேறொன்று மறியாமையால், அப்பொருளையும் சிவனிடத்திலே வேண்டிப்பெறுவார். (2322-2324).

(63) சிவபெருமான் றிருவருளால் வரும் நிதி, எடுக்க எடுக்கக் குறையாத தன்மை யுடையது (2325 - 2327).

(64) உயர் வேள்விகள் சிவனை முன்னுகவே செய்யத்தக்கன (2327).

(65) இசையாற் றமிழ் பரவும்; ஆனால் பயன் கொடுப்பது தமிழின் பொருளே யன்றி இசையன்று; புலனின்பந் தருதலொன்றே கொண்டு இந்நாள் மாக்கள்

இசைக்கு அடிமைப் பட்டுப் பல்லாற்றாலும் வீழ்ந்து படுகின்றார்கள். பொருளைக் காணாது வெறும் செவிப்புலமாகும் இசையினையே மேம்பட எண்ணி இசையினுக்குத் தகாத ஒரு மேன்மைத தானமும் தந்தொழிகின்றாரகள். "ஓசையின விளிந்த புள்ளுப் போலவும" (கோயிறை - 28). ஐம்புல வினபஙகளும் அகபபடுத்தி வீழத்துவன; இசையின்பம செவியினவழிச் சென்று மனத்துட சென்று மககளை வீழததும் தனமை யுடையது.

(66) ஆளுடைய பிள்ளையார து திருப்பதிகஙகளைத் திருநீலகண்டப் பாணனார் யாழிலிட்டுப் பயிற்றினா. பதிகங்களால் யாழிசை பெருமை பட்டதன்றி யாழினாற் பதிகங்கள் பெருமை பெற்றன அலல.

(67) திருபபதிகத தனமை பூதலததோா கண்டத்தும் கலததினினும் நாதவிசை முயறசிகளா லடஙகாது; (2345); செயய சடையாரது திருவருளின் பெருமை யெல்லாம் யாழ முதலாங கருவிகளி லடஙகா; ஆதலின அருட் பதிகஙகளைக் கருவியளவையின் மககள் தத்தம் இயலபுக்கேறப இயறறுதல் வழககு. (2349) சிறதையா ளவுபடா விசைபபெருமை செயலளவி லெய்துமோ? எய்தாது (2350).

(68) ஒரு கனனிகை, தான் குறிதத நாயகனை மணததின முனனர்த தீண்டுதல் நமது நாட்டில் முந்தையோா மரபனறு. திருமருகலில வணிகனை அரவந தீணடவும் தான் தீணடாது வருநதி அணுக வீழநது புலமபினாள அவனை மணங்குறித்து உடன் போநத கன்னிகை. இதனை இந்நாள நாகரிக மெனற பேரால் வழஙகும அநாகரிக உலகம கணடு திருநத ஒழுகுதல் நலம் (2372).

(69) அரவின் விடம் தீர்க்கக கருடபாவனை, இடிபாவனை முதலிய விஞ்சைகள் உதவுவன. அததகைய விஞ்சை வல்லோா நம நாட்டில் உண்டு. அரவினால் தீமை நோ்ந்தபோது அவர்கள் தாமாகவே எளிதில் வந்து சேர்ந்து உதவிபுரிய மேற கொள்ளுதல் நம் நாட்டுமரபு (2373).

(70) மந்திரததாலும் மருந்தாலும் தீராத விடத்துச் சிவனிடத்து அடைக்கலம் புகுதலும் சிவனையே நோக்கி அபயமாகக் கூவுதலும் புலம்புதலும் மதியுடையோர் செய்கை (2373).

(71) சிவனைக் கண்டு, நோக்கி, வழிபடச் செல்லும்போது சிவஞானிகளுக்கு உலக நிகழச்சிகள் புலப்படா; ஆயின, சிவனையே தஞ்சமாகப் புககவர்களது இரங்க லோசை அவர்களது மெய்த்தனமை விளங்கு திருச் செவிகளிற் புலனாதலும் கூடும். வழிபாட்டினிடையிலேயும் கருணையினால் ஞானிகள், அருள் வழியே நின்று, சிவனைத தஞசமென்ற அடியாாகளின் துன்ப நீஙக அருள் புரிவர் (2379).

(72) பிள்ளையாா திருமருகலில் வணிகக கன்னியினது வருத்தந்தீர வணிகனை விடந்தீர்த்தருளினதும் அவர்களை மணம் புணர்த்தியதுமாகிய செயலகள் சிவன் பற்றே பறறாக நின்று அபயம் புக்க ஒருததியின் துன்ப நீககும அருட் கருணையின்பாலன; அவை செத்தாரை புயிாப்பிபபே னென்னும தறபோததா லல்ல; மற்றும் உலக நிலைபறறி எழுந்தனவுமல்ல (2382).

(73) திருமருகலின வந்து சிறுத்தொணட நாயனாா் பிள்ளையாரைத் திருச்செங காட்டஙகுடியில் எழுநதருளும்படி வேண்டினாா்; பிள்ளையார் திருமருகலில் இறை வனைச சென்றிறைஞ்ச, ஒரு பாகம் பசுமையாக இறைவர் திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரததமர்ந்த கோலம் காட்டியருள, அஙகு வருவது திருவுள்ளமென் றங்குச் சென்றருளினா். ஆயின் பின்னாா்ப புகலி அந்தணர்கள் திருவீழிமிழலையில் வந்து, பிள்ளை யாரைத், தோணியப்பரை வணங்கத தம்மோா டெழுந்தருள வேண்டியபோதும் இவ் வாறே பிள்ளையாருககுத தோணியில் இருந்த வண்ணம அஙகு வீழியில் விமானத்தில்

இறைவர் காட்டியருள, இப்போது அங்குத் திருமப் செல்லாது என்பது பதிகனிற் சென்று வணங்குவது திருவுள்ளமென்று குறிப்புணர்ந்தனர்; இக்குறிப்புகள் திருவருள் வயத்தால் ஏகனுகி யிறைபணி நிற்கும் சிவஞானிகள் தமது உள்ளத்தே உணரத்தக்கனவன்றிப் பசுபோத நிறைந்த உள்ளங்களா லறியத்தக்கனவல்ல.

(74) திருப்புகலூர்ப் புறம்பணையில் வந்து ஆளுடைய பிள்ளையாரை அரசுகள் எதிர்கொண்டனர். அவர்பாற் றிருவாரூர்த் திருவாதிரை நிகழ் செல்வம் கேட்டனர் பிள்ளையார்; கேட்ட அப்பொழுதே அவ்விடத்தினின்றவாறே பிள்ளையார் ஆர்வ மிக்குத் திருவாரூர் சென்றருளினர். இஃது அன்பின் மிக்காரது செயல் (2394).

(75) அடியார்கள் கூடியபோது திருத்தொண்டின் உண்மைத் திறத்தனையே தெளியக் காடி அளவளாவிக் களித்து உடனுறைவின் பயன் பெறுவர் (2421).

(76) பிள்ளையாரும் அரசுகளும் திருப்புகலூரினின்றும் யாத்திரையாகப் புறப்படும்போது சிவிகை பின்வரப், பிள்ளையார் அரசுகளது மருங்குவிட்டகலாதே வழிக்கொண்டனர்; அரசுகள் பிள்ளையாரை "நாயனீர் உமக்களித்த சிவிகையில் எழுந்தருளும்" என்றருளப், பிள்ளையார், "உமது அருளும் இவ்வாறாயின் தேவரீர் தொண்டர்களோடும் முன்செல்ல அவ்விடம் உம்மைப் பின்பற்றி யான் வரப்போவதாகுக!" என்றருளி அவ்வாறே பின்னர் யாத்திரை நிகழ்ச்சிபெற்றது. இதன் உயர்ந்த மரபும் உள்ளுறையும் காணத்தக்கன (2425).

(77) மக்கள் தமது நாண்முறை நிகழ்ச்சிகளிலும் மனமார இறைவரை எண்ணித் தம்மை அவர்பால் ஒப்புவித்து விண்ணப்பித்தால், இறைவரே, செல்லும் நல்வழி காட்டிச் செலுத்துவர் (2457).

(78) உலகில் தோன்றும் பெரும்பஞ்சம் பெரும்பிணி முதலிய எவ்வகைக் கேடுகளாலும் சிவஞானிகள் துன்பப்படார், எஞ்ஞான்றும் திருநீற்றுச் சார்பினோர்க்குக் கவலை வாராது (2462); "வானந் துளங்கிலென்.. ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே" (அரசு).

(79) வினைவயத்தால் உலகிற் கேடுகள் தோன்றும்போது, சிவஞானிகள், தம்மைச் சார்ந்து வழிபடுவோர்க்கு அளித்தற்பொருட்டுப் பொருள் முதலிய சாதனங்களை இறைவர் தாமே அறிந்து உதவி அருள் புரியப்பெறுவர் (2162 - 2163)

(80) கைத்தொண்டு செய்து பெறுங் காசு வாசிபடாது (வாசி - வட்டம்); இந்நாளிலும் அரசாங்கத்தில் சில வருவாய்களுக்கு வருமான வரி யில்லை (Income-tax free) என்ற அமைவு செய்தல் காண்க.

(81) அடியார்க் கமுதளித்தல் உரிய நேரத்தில் காலந் தாழ்வின்றிச் செய்யத்தக்கது; உரிய காலந் தாழச் செய்தல் தீவினையாம்.

(82) அடியார்க் கமுது ஒருநாளில் இரண்டு பொழுதும் அளித்தல் மரபு.

(83) திருமறைக்காட்டில் மறைகள் பூசித்துத் திருக்காப்பிட்ட திருக்கதவினைத் தமிழ் மறையே திறக்கவல்லதாயிற்று; ஒரு பூட்டினைத் திறக்கவேண்டுமானால் பூட்டிய அத்திறவுகோலால் அல்லது அதுவேபோன்ற தொன்றினா லாவதன்றி யியலாது என்பதுணமை (2479)

(84) இறைவர் தமிழ் மறைத் திருவாக்கின் பயனறிந்து நிற்பர் (2481).

(85) இறைவர் மொழிந்த மறைகள் வழிபட்டுக் காப்பிட்ட திருக்கதவினைத் தொண்டர் பெருமக்களின் திருவாக்குக்கள் திறக்கவும் அடைக்கவும் நிகழச் செய்ய வல்லவாயின; மறையுடன் மெய்த்தொண்டர்க் கிடையீடு பெரிதாம் (2491).

(86) இறைவரது அருளிப்பாடுகளின் வரும் ஐயங்களை, அவரை எண்ணியபோது, அவர் தாமே வெளிப்பட்டுத் தீர்ப்பர் (2492).

(87) அறிவு தாபபெற்றும் பொய்ச் சமயச் சாாபுகொண்டு மக்கள் இழுக்குப்பட ஒழுகுதல அவ்வவர் முனசெய் தீவினைப பயததால் ஆவது (2499); அவ்வாறு நல் ஒழுக்கம் தவறிய கேடு, தனித்த மககளுககேயனறி, ஒரு நாட்டிற்கே வரும் (2498).

(88) நாடு முழுதும் வழுக்கி வீழ்ந்து மயஙகினும நல்லோா நெறி திறம்பார் (2502=2503); அவ்வாறு நெறி திறம்பாத ஒருசிலாால் நாடு முழுதும் உரிய காலத்தில் நனனெறிபபட்டுய்யும் காரண முளதாகும்.

(89) தம் நாடு தீநெறி ஒழுகி வீழ்நதநிலை காணிற் கலஙகுதலும், அதனைத தீர்த்து நாட்டினை நல்வழிப படுதத இடைவிடாது முயல்வதும் அருளுடைய நல்லாரியல்பு (2503).

(90) சிவஞானிகளை அடுத்து விண்ணபபித்து நாட்டின் நலனைத் தேடிக்கொள்ளுதலும நல்லார் இயலபு (2506).

(91) அருள் நிறைநத சிவஞானிகளை அடுத்து நிற்கும் வாழ்வுடைய மக்களும் கருணை யுடையோராவர் (2513).

(92) பிள்ளையார் பாணடிநாடு செனறு சமணரை வென்று சைவத் தாபனம் செய்யத் துணிநது எழுந்தபோது, அரசுகள அதனை மறுததது, அமணர் தீயோர் எனவும், நாளும கோளும தீயன எனவும கூறித தடுததனா. இஃது அருட்கருணை யின்மையினாலனறு; பிள்ளையாாபாற் கொணட அளவற்ற காதலினாலாகியது (2515).

(93) இறைவன் நமஉள ளிடஙகொணடுள்ளாஞதலினாற் பழுதிலையாதென்றெணணிப பரவினால நாளுங் கோளும தீயனவேனும நன்காகும (2515); இஙகுப் பிளளையாா அருளிய கோளறுபதிகம், இந்நாளிலும அததனமையில் விளங்கி அனபாகளை இடையூறு வாராமற காதது நிறறல கணடு மககள் பயனபெறுதல நலம்.

(94) "வேயுறு தோளி" எனற பதிகததினுள் "புத்தரொடமணைவாதி லழிவிக்கு மணணல் திருநீறு செமமை திடமே" எனற பின்னிகழ்ச்சியின முறகுறிப்பாய் விளங்கும் உண்மை, சிவஞானம எலலாம் செயயவலல தனமையினைக காட்டுவது.

(95) அரசுகள் மறுததுத் தடுதத காரணமும, அதறகுப் பிள்ளையார் அருளிய விடையும ஆகிய இரண்டும, உணமைகளே யாகும நிலை பின்னிகழ்ச்சிகள் காட்டும்.

(96) தீக கனவுககளும துனனிமித்தஙகளும் பினனர் வரும் கேட்டினை முன் காட்டும குறிபபுகள். இவை திருவருளாணைவழி நிகழ்வன (2539=2536; 2536=2539); நனனிமித்தங்களும அவவாறே பின வரும நனமை காட்டுவன (2541).

(97) மககள வாழும இடங்களின்மேல் கூகை, ஆநதை முதலிய தீயபுட்கள் பூசவிடுதலும், கைககொணட பொருளகள வழுவி வீழுதல், கால்கள் தடுமாறுதல், கண்கள் இடம ஆடித துடிததல, தமமிறறும கனனறு கலாம் கொளளுதல, பொறை முதலியவறறையிழநது குணம் பிறிதாதல் முதலியவை, கெடுவது காட்டும் துன்னிமித்தஙகளாம (2531—2533).

(98) தாம வழிபடு தெயவத்தின் மேலே மரம் வேரறறு வீழ்தல், அததெய்வம் எழுந்து கைகாறறிப் போதல், அதனை ஊரவா ஓடிக் காணுதல, கழுதைமேற் படர்தல், பெண்டிர் ஊளையிட்டுப புலம்பி ஓடல், தமது மாறறச் சமயததவர் மிக்கு வந்து தமமை உழக்குதல் முதலியனவாகக் காணுதல் தீமை பயககும் கனவுக்கள் (2536—2539).

(99) பெரியோர்கள் வருவது தெரிந்தபோது நகரின புறத்துச் சென்று அத்துணையும் தூரததினின்றும் கணடு வணங்கி அவாகளை நல்வரவேறறல் மரபு; வரவேற்கு முறைகளுள் நிலமுற வீழ்ந்து வணஙகுதல் சிறந்ததொன்று.

(100) பெரியோர்கள்பால் "எழுக" என ஆசிபெற எவரேனும் விரும்புவாராயின் அவர்களின் திருவடிக்கீழ் வீழ்ந்து கிடந்து வணங்குபவரே அதை எளிதிற் கைவரப் பெறுவார் (2556).

(101) இறைவரது பதியினையும் கோயிலின் கோபுரத்தையும் கண்டவிடத்தே நின்று வணங்குதல் முறை.

(102) இறைவரைக் காணப்பெற்றபோது கண் பெற்ற பயன் இதுவே என்று கொள்ளுதல் வேண்டும்.

(103) அன்பு நிறைவுடையோர் கணக்கு வரம்பின்றிப் பலமுறையும் வணங்குவர். எத்தனைமுறை வணங்கினாலும் நிறைவுபெறா (2564).

(104) ஆலவா யிறைவரைத் தமிழின் புலவராகக் கண்டு இறைஞ்சினார் ஆளுடைய பிள்ளையார் (2566); அரசர்களும் நம்பிகளும் அவ்வாறே கண்டு வணங்கினர்.

(105) பெரியார்கள் இறைவரைக் கும்பிடத் திருக்கோயிலுட் செல்லும்போது அவர்களது வழிபாட்டுக் கிடையூறாகக் குறுக்கிட்டு அவர்களை வணங்கலாகாது; ஒருபுறம் ஒதுங்கிக்கொள்ளுதல் மரபு (2568).

(106) வீழ்ந்த நிலையினின்றும் மேல் எடுபடவேண்டிய பெரியோர்பால் அடைபவர் அவரடிக்கீழ் வீழ்ந்து கிடந்தால் விரைவில் மேல் எடுக்கப்படுவார்.

(107) உள்ளக் கறுப்பும் பொறாமையும் பொய்யும் உடையவரது கூட்டத்துக்கு இருட்கூட்டமே தக்க உவமைப் பொருளாம் (2577)

(108) உண்மைப் பெரியோ ரியல்பும் செயலும் கண்டு பொறாது உள்ளம் புழுங்கிக் கேடு சூழ்தல் கீழ்மக்க ளியல்பு (2578 - 2579)

(109) பெரியார்களைக் காணலும் கேட்டலும் நன்றென்று நீதிநூல் போற்றிக்க, அதற்கு மாறாகக் "கண்டு முட்டு" "கேட்டு முட்டு" என்று வருந்துதல் கீழ்மக்களின் இழிந்த செயல்கள் (2582 - 2583).

(110) பிள்ளையாரும் தொண்டர்களும் அமர்ந்த திருமடத்தில் தீமூட்டி யழிக்கச் சூழ்ச்சி செய்த அமணர், அதற்கு அரசனது உடம்பாடு பெறச் சூழ்ந்து, "மன்னவோ, உன்றை மடத்தில் விஞ்சைமந் திரத்தொழில் விளைத்தால், நன்மை கிட்டாது" என்று வஞ்சச்சொற் கூறி அனுமதி பெற்றது அவர்களது பொய்யினையும் வஞ்சமனத்தையும் இழிதகைமையும் காட்டுவது (2587)

(111) கணவனது முகம் புலர்தல் காணில் அதன் காரணம் வினவித் தீர்வு தேடுதல் மனைவியின் கடமை (2589—2591).

(112) வஞ்சகப் புலையர், தம்மால் அன்பு செய்யப்பட்டார்க்கு என்ன கேடு சூழ்வரோ என்று எண்ணி அஞ்சுதலும் கேடு வரின் உயிர் துறக்கத் துணிதலும் அன்பின் திறம் (2593 - 2594).

(113) ஆதிமந்திரம் அஞ்செழுத்தே எல்லா மந்திரங்களுக்கும் முதன்மை பெற்றது (2596).

(114) திருவைந்தெழுத்தை ஓதுவார்கள் நோக்கும் திசையிலும் மற்றை மந்திரங்களின் வலி வராது (2597).

(115) பிள்ளையாரது திருமடத்தில் அமணர்கள் செய்த தீத்தொழிலினைச் சொல்லுதலும் தகாது என்று ஆசிரியர் "திருமடப் புறத்தய விருள்போல் வந்து தீத்தொழில் புரிந்தனர்" என்றனர்; இஃது உயர்ந்தோர் மரபு (2599).

(116) அமணர் செய்த தீத்தொழில் தம்பொருட்டே யாயினும், அதுபற்றி யன்றித், திருமடத்தில் துயின்ற மாதவர்களாகிய திருத்தொண்டர்களைப் பற்றியே

பரிவும் அச்சமும் முனிவும் கொண்டருளினர் பிள்ளையார் ; இஃது அன்பின் அருட்டிறம் (2601).

(117) குடிகளை நீதிவழுவா தொழுகுவித்தல் அரசன் கடமை ; குடிகளின் தீமை அரசாங்கத்தினையும் அரசனையுமே சாரும். இந் நியதிபற்றியும், முன்செய் தீவினைப் பயத்தால் அமண் சமயம் சார்ந்தும் அவர் தீத்தொழிலுக்கு உடன்பட்டும இருந்தமை பற்றியும் இங்கு அமணர் இட்ட தழல் போய்ப் "பையவே சென்று பாண்டியற் காகவே" என்று பணித்தருளினா பிள்ளையார் (2603).

(118) தீ முதலிய பூதங்களும் அவற்றின் அதிதெய்வங்களும் சிவஞானிகளின் ஆணைவழி நிகழும். அது சிவனருள் நியதி (2605).

(119) சிவனரு ளாணையின்வழி வரும் நோய் முதலியவை அவ் வருளாணை வழியானன்றி, ஏனை மருந்து மந்திர முயற்சிகள் எவ்வாற்றானும் (மிகுவதன்றித) தீரா (2612).

(120) தீவினைப்பயனாலே தீநோய் வரும், தீவினை செய்தோர் அதன் விளைவாகிய தீப்பயன் வந்து சாருமபோது தமது தீதொழிலை எண்ணி யஞ்சுத லியல்பு (2613).

(121) திருஞான சம்பந்தரெனனு நாமமே நோய் தீர்க்கும் மந்திரமாகும் (2620) ; அத திருநாம மந்திரம் செவியினுட் புக அயாவு நீங்கும்.

(122) ஆவது மழிவும் எலலாம் இறைவர் செயல் (2634).

(123) பாவகாரிகளை நோக்குதலும், அவருடன் வாது செயதலும் அவாகளை வெல்லுதலும அழித்தலும் ஆகிய செயலகளைச சிவ னருள்விடை பெறறாலனறிச் செய்யத் துணியார் பெரியோா. "அவனே தானே யாகிய வந்நெறி, யேக னாகி யிறை பணி நிற்பது" சிவஞானிகளின் செய்கை (2634).

(124) பரசமயப பிணக்கினுட்பட்ட பாவிகள், பொய வஞ்சனை முதலியவறறாலும் தம் சமயததை நாட்ட முயல்வா ; பிறரையும் அவ்வாறு தூண்டுவா (2647).

(125) செய்தவப் பயன் வரும் செவ்வி வந்துறறபோது பொய்நெறி நீஙக நன்னெறி நிறகும் நிலை வரும் (2648).

(126) பிள்ளையாரது தெயவத தன்மையினையும வலிமையினையும உணர்நதிருநதும, அமணர் பலர், அரசன் முன அவரை அனேகராய்ச் சூழநது பதறிக கதறக கண்டு மஙகையர்க்கரசியாா உண்ணடுஙகினா. இது தாயின அனபினியலபு (2656).

(127) "ஆலவா யரன் னுள் இருககயான இவ்வமணர்க ளெளியேனலேன்" என்றனர் பிள்ளையார். இது சிவஞானிகளினியல்பு (2659).

(128) ஆணபாலா ருடம்பில் இடது பாகம் பெணபாகம் எனப்படும் ; அதிற் பற்றிய நோய் எளிதில் அடங்கித் தீர்க்க வரும். இது மருத்துவ நூல், உடற்கூறறு நூல்களிற் கணட உணமை (2661).

(129) திருநீற்றுப் பதிகம் நோய் தீாக்க வல்லது (2664).

(130) உடற்கூற்றில் வலப்பாகம் இடப்பாகமுமாக நேர் பகிர்ந்து பறறும் சுர நோய்களுமுணடு (2664).

(131) தாஙகளிட்ட நெருப்பே பிள்ளையாரது ஆணையாற சென்று சுரமாகப் பற்றவும், பின்னா அவர் ஆணைவழியே நீஙகவும் கண்ட அமணர், நெருப்பு முதலிய பூதஙகள் அவரது ஆணைவழி நிற்றறபாலன என்பதனைத் தெளிந்து உண்மை கணடு உயதி பெற்றிருததல் வேண்டும். அவ்வாறனறி மேலும் அநநெருபபினிலும் நீரினிலும் ஒட்டி வாது செய்ததுமன்றி, அதனாலே மாய்ந்து அழிவும் பெறறனர். இவ்வாறு அழிவு தேடுவது உண்மைச் சமயநெறி வாராது, உணாவுமற்றுப், பொயயினை மெய்ம்மையாக்கப் புகும் பேதை மூர்க்கரின் செயல்.

(132) நெருப்பு, சிவபெருமானது அட்ட மூர்த்தங்களுள் ஒன்று; பிள்ளையாரது "போகமார்த்த பூண்முலையாள்" என்ற திருப்பதிகமும் மலைமகள் பாகத் தட்டமூர்த்தியைப் பொருளாக உடைமையால் நெருப்பில் பழுதின்றி யிருந்தது.

(133) சுரவாதம் கனல்வாதம் இரண்டினும் தோற்றும், புனல் வாதத்தினும், முன்னர்த் தமது ஏட்டினை இட்டு அது நீர்வழியே செல்லக் கண்டு தோல்வியுற்றும் நின்ற அமணர், மூன்றாலும் அறிவு பெறாராகி, "மாறுகொண் டொருமிட்டால் வந்து காண்டு" மென்றார். அந்நிலையிலேனும் பிழையுடன்பட்டு வந்தடைந்து உய்யும்வகை தேடவிடாது, அவர்களது திணிந்த அறியாமையும் பொய்யும் வஞ்சனையும் கூடி அவர்கட்கு அழிவு தேடியது அவரது வல்வினைப் பயன் (27).

(134) சிவஞானத் தலைவராகிய குருமூர்த்திகளால் பாவனை, பார்வை, பரிசம் என்ற தீக்கைமுறைகள் பக்குவ நோக்கிச் செய்யப்பெற்றது, திருநீறும் பூசப்பெற்றதனால், பாண்டியன், முன்னை வல்வினையி னீங்கித் துலைபோல இருவினை யொப்புப் பெற்று முதல்வனை அறியும் தன்மை யடைந்தான். அதனாலே திருப்பாசுரத் திருப்பதிகத்தை உபதேசித்தருளினார் பிள்ளையார். ஞானகுருவின் உபகாரத்தினால் ஞானத்தினை உணரு முறைமையினை இவ்வாறு உணர்ந்துகொள்ளற்பாலது (2717).

(135) திருப்பாசுரம், பாண்டியனாகிய பக்குவமுடைய சீடனுக்கு, வைகைக் கரையாகிய தீக்கை மண்டபத்திலே, ஞானாசிரியரால் செய்யப்பட்ட ஞானோபதேசமாகிய தீக்கைப் பகுதியாம். அது சிவாகமங்களின் முடிந்த சித்தாந்த சாரமாய் விளங்குவது.

(136) பிள்ளையார் ஆற்றிலிட்ட ஏடு நீரினை எதிர்த்துச் சென்றது பிறவியாற்றில் மாதவர் மனம் எதிர்த்துச் சென்றுற போன்றது (2741).

(137) திருப்பாசுரத் திருப்பதிகத்தில் "வேந்தனு மோங்குக" என்ற திருவாக்கின் பயனாகப் பாண்டியனது உடலின் கூனும் நிமிர்ந்தது. ஞானமெய்த் திருவாக்கின் அருள் வன்மை இதனாலு மறியப்படும் (2745).

(138) அரசதண்டனை சால்புற நீதிமுறை வழியே அமைந்தபோது அதனை விலக்க முற்பட்டார்கள் பெரியோர்கள். விலக்காமையால் அவர்களது கருணைக் கிழுக்கில்லை (2752)

(139) அமணர் தமது திருமடத்திற் றீக்கொளுவியது கண்ட பிள்ளையார், "ஐயனே அஞ்ச லென்றருள் செய்யென்னை" என்று சிவபெருமானை வேண்டினார்; வாத முடிவில் வைகைக் கரையில் அமணழிவு கண்டு வந்தபோது இறைவனை "அடியனேனை அஞ்சலென் றருள்வல்ல மெய்யனே!" என்று வணங்கினார். சிவஞானிகள் என்றும் மறவாது சிவனிறைவாகிய ஒருகுணர்வி னுள்ளடங்கி எல்லாச் செயலும் சிவச் செயலாகவே காண்பர் (2764)

(140) மக்களின் அறிவைப்பற்றிய மயக்கமென்கின்ற நோய் நீங்குதல் இறைவரது உபகாரத்தாலன்றி யியலாது. அவ்வாறு அறிவு மயக்க நீங்கித் தெளியப்பெற்றால் அதனை யறிந்து இறைவன்பால் நன்றியறிதல் வேண்டும் (2765).

(141) பலநாட் பிள்ளையைப் பிரிந்த தாதையார் அவரிருக்குமிடம் சென்று காண விரும்புதல் உலகியற்கை. அதிலும் புறச்சமய வன்னெஞ்சர்பால் வாது வெல்லச் சென்ற பிள்ளையைப் பற்றிக் கவலை கொள்ளுதல் தாதையார்க்கு மிகவு மியைவதாம் (2771 - 2772).

(142) அவ்வாறு பிள்ளையைக் காணக் கவலைப்பட்டு விரைந்து செல்லினும் இடையில் நேர்ந்த பதிகளை வணங்கிச் செல்லுதல் திண்ணிய சிவன்பினாலும் தவத்தாலுமேயாம் (2774).

(143) அதினும், பிள்ளை யிருக்கும் பதியிற் சேர்ந்த பின்னும் நேரே திருக்கோயில் சென்று இறைவரை வணங்கிப் பின்னரே பிள்ளை யிருக்குமிடம் வினவிச் சென்று அடைதல் சிவனிடம் வைத்த மிக்க திண்ணிய அன்பின் திறம் (2775).

(144) மதுரை வாழ்வார் "இங்கெம்மைக் கண்விடுத்த காழியா ரினவேறு" என்று பிள்ளையாரை அருமை பெறப் பாராட்டியது அவர்களது நன்றியினையும் அன்பின் பெருக்கத்தையும் காட்டுவது; நன்மக்க ளிடையேதான் இவ்வொழுக்கம் காண லாம் (2776).

(145) ஆலவாயில் தமது தாதையாரைத் திருமடத்திற் கண்டபோது, பிள்ளையார், அவர் சார்வு கண்டருளித் திருத்தோணியில் வீற்றிருந்த திருத்தோணியப்பரைக் கண்டு மனமுருகி "எனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட, பெருந்தகையெம் பெரு மாட்டி யுடனிருந்ததே?" என்று நலம் வினவியருளினார்; இஃது எஞ்ஞான்றும் எங்கும் சிவமே கண்டிருக்கும் சிவஞானிகளின் நிலை (2777—2781).

(146) மதுரையினின்றும் புறப்பட்டுத் தலயாத்திரையாகச் செல்வதற்குப் பிள்ளையார் ஒருப்பட்டபோது பாண்டியரும் தேவியாரும் அமைச்சனாரும் பிரிவாற்றாது அடிவீழ்ந்து, கண்ணீர் வார, உணர்வின்றி வீழக்கண்ட பிள்ளையார், கருணை பெருகி னாலே "யானும்மைப் பிரியாத வண்ண மிந்நாட் டிறைவர்பதி யெனைப்பலவும் பணி வீர்" என்றருளிய அமைதி சிவஞானச் செல்வமுடைய பெரியாரின் அருளியலினைக் காட்டுவது (2783).

(147) கடல் தாண்டிச் செல்லாது ஆளுடைய பிள்ளையார் திருவிராமேச்சுரத்தி னின்றபடியே ஈழநாட்டுத் தலங்களை மனத்துட் கண்டு வணங்கிப் பாடியருளினர். இது முன்னாள் பெரியோர் மரபு (2788).

(148) திருமணமேற்குடியினின்றும் சோழநாடு செல்லப் பிள்ளையார் ஒருப்பட்ட போது மன்னவரும் மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும் பிரிவாற்றாது உடன் போக ஒருப்பட்டனர். பிள்ளையார் அவர்க்குத் தகுவன அருளி, ஈசர்நெறி போற்றி யிருப்பீர் என்று பணித்து, அங்கே யிருக்கச்செய்து போந்தருளினார். இது மேலோர் வழக்கு (2792).

(149) ஞானிகளின் நாவலமே, ஓடக்கோலாக நின்று ஆற்றுவெள்ளத்தி னடுவில் ஓடத்தினைச் செலுத்த வல்லதாகும் (2797).

(150) பொது நடுவழியே செல்லும் சைவ மக்களை அடாது சொல்லித் தடுத்துப் போதிமங்கையிற் புத்தர் தம் அழிவைத் தாமே தேடிக்கொண்டனர். இது புன்னெறிச் சமயச் சார்புற்ற கீழ்மக்கள் இயல்பு (2805—2808).

(151) உண்மைநெறி காணாத புத்த சமயக் கொள்கை, உண்மை கண்ட சைவ நூல் வாதில் தோல்வியுற்றொழிய அழிக்கப்பட்டது இகலினாலன்றி, பொறுமையா லன்றித், தம்மோ டெதிர்ந்து வலிய வாதுக் கழைத்தாரைத் தெருட்டி உய்விக்கும் கரு ணையினாலாகிய செயல் (2823—2825).

(152) போகூழால் வாதிட்டு அழிந்த சமணர்போலாது, ஆகூழாகிய நல்வினைப் பயனால் போதிமங்கையிற் புத்தர்கள் வாதிட்டு உண்மை கண்டு வணங்கி நீறு பெற்றுச் சைவராகி உய்ந்தனர் (2825).

(153) உலகிற் பலவேறு சமயங்கள் நிலவுகின்றன; அவை உயிர்களின் பக்குவ நிலையும் அறிவு வேறுபாடும் பற்றி நின்று, பலவேறு திறத்தனவாய் உயர்ந்தனவும் தாழ்ந் தனவுமாய் நிற்கும். அவற்றின் உண்மை நிலைகளை உண்மைநூற் றுணிபுகொண்டு திரு வருள்வழி நின்று ஆய்ந்து கொள்ளுதல் வேண்டும்; அவ்வகை கூறும் தலைவ னிலக்

கணம், உயிர் இலக்கணம், அளவை நூல்கள், முத்தி யிலக்கணம் முதலிய முடிபுகளைப் பற்றியே ஆராயத் தக்கன (2823 - 2824).

(154) எல்லாச் சமய முடிபுகளும் சைவ சமய முடிபுகளுள் அடங்குவன, சைவமல்லாது மற்றொன்றுமில்லை நிரப்பனவும் சரிப்பனவும் சைவமேயாம் நிலைமை அருட்குருவின் கருணைநோக்கம் அணையும்போது உயிர்களுக்கு விளங்கும் (2824).

(155) திருநாவுக்கரசுகளைத் தம்முடன் வருதலைத் தவிர்த்துத் திருமறைக்காட்டில் விட்டுப் பிரிந்த பிள்ளையார், தாம் சென்ற கருத்தை முற்றிப் பாண்டி நாட்டினின்று மீளச் சோணாட்டில் எழுந்தருளியபோது, "அரசுகள் எங்கெழுந்தருளிற்" றென்று வினவித், திருப்பூந்துருத்தியில் இருந்தமை கேட்டு அவரைச் சென்று கண்டு தலைக்கூடுதற்கு அங்குச் சென்றருளினார், இங்கு அவர்பாற் கொண்ட பேரன்பின் திறம். "உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல், அனைத்தே புலவர் தொழில்" (2825).

(156) பிள்ளையாரது வரவு கேட்டு "நந்தமையாளுடையவரை நாமெதிர்சென்றிறைஞ்சுவது, முந்தை வினைப் பயன்" என்று கொண்டு இறைவரை வணங்கி நகரின் புறத்துப் போய் அடியார் கூட்டத்தின் நெருக்கினிடைக் காணாமே நிலத்துப் பணிந்து சென்று அவரது சிவிகையினைத் தாங்குவாருடன் தாங்கிச் சிந்தை களிப்புற வந்தனர் அரசுகள். இது பிள்ளையாரிடம் அப்பர் கொண்ட பேரன்புப் பெருக்கின் திறம் (2831).

(157) அப்பர் சிவிகை தாங்கிவர, சிவிகைமேல் விருந்த பிள்ளையாரது புந்தியினின்று வேறொன்று நிகழாவிட, "அப்பர் இப்பொழுது எங்குற்றார்" என வினவியருளினார். இவ்வாறே அப்பர்பெருமான், திங்களூரில் அப்பூதியாரது திருமனையில் அமுது செய்ய எழுந்தருளியபோது, திருவுள்ளத்தில் நடுமாற்றமுற்று, "மூத்த திருநாவுக்கரசு எங்கே?" என்று வினவிக் கேட்டறிந்தனர். இவை திருவருள் நிறைவிலே எஞ்ஞான்றும் குடியாக வீற்றிருக்கும் நல்லறிவாளர்களாகிய சிவஞானிகளுக்குத் திருவருளால் நிகழ்வன; ஏனைய எம்போன்ற புல்லறிவினார்க்கு இவற்றின் தன்மைகள் விளங்கா (2833).

(158) அரசுகள் "ஒப்பரிய தவ[illegible]தலின் உம்மையுகள, இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யான்" என்னக் கேட்டு அஞ்சிச் சிவிகையினின்றும் அவனியின்மேல் இழிந்து இறைஞ்சினார் இந்நிலைகள் பெரியோர்பாலே காணப்படுவன; உலகம் கண்டு பின்பற்றி ஒழுகத் தக்கன (2833 - 2834)

(159) பாண்டி நாட்டு நிகழ்ச்சிகளைப் பிள்ளையார் அரசுகளுக்குச் சொல்லக் கேட்டு அரசுகள் உவந்தனர்; தொண்டை நாட்டு நிகழ்ச்சிகளை அரசுகள் பிள்ளையாருக்குக் கூறப் பிள்ளையார் கேட்டுவந்தனர். அடியார்கள் தலைக்கூடியபோது இறைவர் அருளும் அடியார் பெருமையும் மன்றிப் பிற பேச்சுகள் நிகழா (2839—2843)

(160) மங்கையர்க்கரசியார் - குலச்சிறையார் பெருமைகளைப் பிள்ளையார்பாற் கேட்டு அரசுகள் பாண்டி நாடு சென்றனர், திருவேகாம்பரம் பணியும் சிறப்பினை அரசுகள்பாற் கேட்டுப் பிள்ளையார் தொண்டைநாடு சென்றனர். இவ்வாறு அடியார்களை வழிப்படுத்தும் நிலை ஆசாரியர் பெருமக்கள் விளக்கிய உண்மையாம் (2841—2843).

(161) பாண்டி நாட்டினின்றும் தோணிபுரத்தினை மீண்டருளியவுடன் நேரே திருத்தோணி சென்று, அம்மையப்பரை வணங்கி, "வெற்றியாக மீனவனவையெதிர் நதியிசை வருகரனே" என்று, எல்லாம் சிவன் செயலேயாக நிகழ்ந்தமை பாராட்டித் துதித்தருளினார் பிள்ளையார், இவ்வாறு காணுதல் தற்போதமில்லாத சிவஞானிகளின் தன்மை (2852).

(162) திருவண்ணாமலையினை அமரர் பெருமானது வடிவுபோலவே தோன்றக் கண்டு வணங்குதல் பெரியோர்க ளியல்பு (2868)

(163) திருவோத்தூரில் பிள்ளையா ரருளிய திருவாக்கிலே "குரும்பை யாண் பனை யீன்குலை" என்னும் வாய்மை குலவுதலால் ஆண்பனைகள் பெண்பனைகள் ஆயின. இது சிவஞானிகளின் வாய்மைத் திறன (2878).

(164) பிள்ளையாரது திருவாக்கிற் பிறந்ததனாலே அந்தப் பனைகளனைத்தும் இப் பிறவியின் காலங்கள் கழித்துச் சிவமே கூடின. இதனாற் பிள்ளையாரது அருள் திருவாக்கின் பெருமை வரம்பிலது என்ப தறியப்படும் (2881).

(165) தழுவக் குழைந்த திருமேனிக் கம்பரை வணங்கிய பிள்ளையார் தம் பெரிய மனக்காதல் தள்ள நிலமிசைத் தாழ்ந்தார்; அறப் பெருஞ்செல்வக் காமக் கோட்டமுமணைந் திறைஞ்சினார்; திருவியமகம் திருவிருக்குக் குறள் மற்றும் பெருகு மிசைத் திருப்பதிகங்கள் புனைந்தருளினார். இவை கச்சித் திருப்பதிக்குரிய சிறப்பு (2898).

(166) அம்மையார் தலையினா லடந்த திருவாலங்காட்டினுள் மிதிக்க அஞ்சிப் பிள்ளையார் அதன் அருகு ஓர் பதியிற் பள்ளி யமர்ந்தருளினார். இஃது அம்மையாரது பெருமையினை உளங்கொண்டு உலகறியவைத்த அன்பின் திறம்; இவ்வாறன்றித், தாமரைமலர் வாவியினுள் புகுந்து உழக்கும் கருமேதிகள்போல எங்கும் சென்று மிதித்து உழக்குதல் இந்நாள் மாக்களின் நிலையாயினமை உணரத்தக்கது (2907).

(167) ஊரின் மிதிக்க அஞ்சிப் புறத்தில் தங்கித் துயில்பவரைக் கனவில் உணர்த்திப் பாடச் செய்தது இறைவர், பிள்ளையார் பெருமையினையும் அம்மையார் பெருமையினையும் ஒருங்கே உலகுய்யவைத்த அருட்கருணைத் திறம் (2907).

(168) இயம்பு மொழியின் உண்மை காத்து உயிர் துறந்த சிறப்புப் பழயனூர் வேளாளர்க் குரியது. அச்சிறப்புப் பிள்ளையாரால் இறைவரது திருப்பதிகத்திலும் வைத்துப் போற்றத்தக்க பெருமையுடையது (2909).

(169) திருக்கண்ணப்பர் பெருமையினை எண்ணியே பிள்ளையார் திருக்காளத்தி வணங்கப் பெருவேட்கை கொண்டனர். திருக்கண்ணப்பரை இறைவரது திருப்பதிகத்துள் வைத்துப் போற்றியருளினர்; இறைவரது வழிபாடு முடியுமுன் இறைவருடன் ஒருசேர, அவரையும் வைத்து அடிவீழ்ந்து வணங்கினார். இவை மெய்வேடர் பெருமானாரது பேரன்பின் திறங் காட்டுவன

(170) காளத்திமலை கயிலைமலையே.

(171) திருக்கயிலையிற்போலப் பல வேடச் சைவர்களும் குழுமித் தவஞ் செய்யுமிடம் திருக்காளத்தியே.

(172) காளத்தியின் வடதிசையிலும் குடதிசை மேலும் தமிழ் வழக்கம் நிகழ்தலில்லாமையால், அத்திசைப் பதிகளைப் பிள்ளையார், காளத்தியினின்றபடியே வணங்கிப் பாடியருளினர். இஃது ஒருமரபு பற்றியது (2925).

(173) செல்வப் பெருக்கமுடையார் தம்மை உள்ளபடி அறிந்தாராயின், அச் செல்வ முதலிய பாசப் பெருக்கங்களின் மயங்கி அவற்றுக்கே யடிமையா யொழியாது சங்கரற் கடிமையே செய்து மெய்ப்பொரு ளுணர்ந் தொழுகுவர் (2933).

(174) சிவனடியார்களது கூட்டத்தில் மனமுருகுதலும், சைவ நெறியைப் புறம் பேசி இடையூறு விளைக்கும் பரசமயங்களில் வெறுப்பும் உடைமையும், சிவனடிமைத் திறத்தி னிற்போர் செயல்களாம் (2934).

(175) தமது செல்வங்களையும் உடைமைகளையும் சிவனடியார்க்கும் சிவஞானிகள்பாலும் ஆக்குதல் அன்பின் மேலீட்டினா லாவது (2936).

(176) நன்மகப்பே றில்லாத மனைவாழ்க்கை வருத்தந் தருவது (2939).

(177) சிவஞானிகளின் அருட்டிறங்களைத் தாம் பரவுதலும், பிறர் சொல்லக் கேட்பதில் விருப்புறுதலும் சிவனது அடிமைப் பண்புகளிற் சிறப்புடையன (2937).

(178) சிவனை நோக்கிச் செய்யும் தவத்தாலும் அடியார் பூசையினாலும் மகப்பேறுண்டாகும் (2939).

(179) உருவும் திருவும் முதலிய காரணங்களால் மகவுக்குப் பொருந்தும் பெயரிடுதல் மரபு (2943).

(180) ஆளுடைய பிள்ளையாரது அருட்பெருந் திறத்தினைக் கேட்டுத் தினைத்த வணிகராகிய சிவநேசர் தமது மகளையும் செல்வ முழுவதினையும் அவரே உடையவர் என்று உறுதி மொழிந்தார். இஃது அன்பின் பெருக்காலாகியது (2952 - 2958). இவ்வாறே திருநாட்டியத்தான்குடியில் வேளாளர் கோட்புலியார் தமது மக்களிருவரையும் ஆளுடைய நம்பிகளுக்கு அடிமையாகக் கொள்ள அளித்ததுவும் அன்பின் செயல். இவ்வாறு வருவன உலகியலிறந்த அன்பு வயப்பட்ட சிறப்பியலாகிய செயல்களாவன; வன்றிப் படியெடுத்தொழுகும், மறைவிதியாகும், உலகிய லொழுக்கமாகா. ஆளுடைய நம்பிகள் வேளாளர் மகளாராகிய சங்கிலியாரை மணந்ததும் வைதிக விதிக் கட்டைக் கடந்து நிகழ்ந்த செயலாம். இவைபோல்வன செய்வது மறைவிதி வரும் நமது முன்னையோரது சமூக நிலைகளைக் குலைக்கும் வழிநீத்து இந்நாட் சீர்திருத்தக்காரர் மாக்கள் செயல் பொருந்தா என்பது. இக்கருத்துக்களையும் பின்னர்ப் பிள்ளையார் வேதநெறி நூலினை யருள்செய்த சிவநேசரையும் கலைஞானம் தெருட்டியருளினார்.

(181) விதிவயத்தாலும், பிறர் அருள்வயத்தாற் றீவுள்ள நிலையாலும் வரும் நோய்கள் மந்திர முயற்சிகளாற் றீர்வுபெறும் (2961).

(182) தமது மகளாரைப் பிள்ளையாருக்கு அளிக்க உறுதிகொண்ட சிவநேசர் அஃதியலாதவாறு அவள் இறந்துபட, அவளது உடலைத் தீயிலிட்டுச், சாம்பலையும் எலும்பையும் குடத்திலிட்டு, அதனை அவளாகவே ஐந்தாண்டுகள் போற்றிவந்து, பின்னர்ப் பிள்ளையார் வரக் கண்டபோது அக்குடத்தையே அவர்பால் ஒப்படைத்தனர், இஃது உலகிறந்த நிலையின் நிகழும் திண்ணிய அன்பின் திறம்.

(183) உருவம் சாரும்மேல் உறைத்த அன்பினால் பெரியோரை வழிபட்டு வரின் அப் பெரியோர் ஒருநாள் தாமாகவே வந்து அருள்கொடுப்பர் என்பது திண்ணம். இஃது உறைத்த தியானத்தின் பயன். அப்பூதியார் அரசுகளை வழிபட்ட நிலையிலும் இவ்வுண்மை காண்க. ஞான நூல்களுட் கூறும் சிவத் தியானப் பயன் வருதலும் இவ்வாறேயாம்.

(184) இவ்வுலகத்துள் நின்று இறந்து சென்ற உயிரை நன்னெறிப்படுத்தற்கு அது வாழ்ந்த உடலின் எலும்பினை வைத்துச் சடங்கு செய்ய, அப்பயன், உயிரைச் சாரும் என்ற உண்மையினை நிறுவிக்காட்டப், பிள்ளையார், குடத்துள் நின்ற எலும்பினை நோக்கி அவ் வெலும்புக் கூட்டினைக் கொண்டு உடலினுள் முன் வாழ்ந்த உயிராகிய பூம்பாவையாரின் பெயர் சொல்லி அழைத்துப் பாடியருளினர். இவ்வுண்மை உலகம் தெளிந்தறிதற்பாலது (2984).

(185) மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன், சிவனடியார்களை அமுது செய்வித்தலும் சிவனது நல்விழாப் பொலிவு கண்டார்தலுமே யாம் என்பது வேத சிவாகமங்களிற் றுணிந்த உண்மை (2985).

(186) முன் கூறிய அவ்வுண்மையினையே குறிப்பாகக் கூறி, இஃது உண்மையாயின் "உலகர்முன் வருக" எனப் பிள்ளையார் விளிக்கப், பூம்பாவை கழிந்த ஆண்டு வளர்ச்சியுடன் வந்தனள். இஃது அவ்வுண்மைகளின் உறுதியைக் காட்டுவதாகும் (2985).

(187) சிவஞானிகளது அருட்டிருவாக்கே அமுதமாகிப் புகுந்து உயிரற்ற எலும்பி னுள்ளும் உயிரை வருவிக்கும் (2986).

(188) இறைவர் அருளினாலே பிள்ளையார் திருவாக்கின்படி எழுந்த பூம்பாவை எல்லையில்லாப் பேரழகுடன் விளங்கினாள். இது பிரமன் படைப்பில் வாராத சிவ னருட் படைப்பின் இயல்பு; அப் பேரழகினுள்ளே சிவனது கருணை வெள்ளத்தினையே ஆயிர முகத்தானும் பிள்ளையார் காணலாயினர் (3007).

(189) பிரமன் படைப்பினுள் வரும் அழகுகள் எல்லாம் அழியும் தன்மையுடை யன; சிவன் அருட்படைப்பின் அழகு என்றும் மாறாத பெருவளத்தன (3007).

(190) திருவான்மியூரில் இறைவரது திருநாமம் மருந்தீசர் என்பது, அவர் உயிர் களின் பிறவி மருந்தாகிய பெருந்தகைமை குறித்தது (3021).

(191) திருவிடைச்சுர நாதரது திருமேனி "இவரவரை மென்னே" என்று மிகவும் அதிசயிக்கத் தக்க அழகிய திருமேனி (3028).

(192) திருத்தில்லை வழிபாடு விதிமுறையால் எத்தனைதரமும் செய்ய, மேன்மே லும் பேரின்பம் விளைக்கத் தக்கது (3038)

(193) இறுதியாகச் சீகாழியினை நோக்கி வரும் பிள்ளையார் அவ்வளப்பதியினைத் தூரத்தே தொழுது பதிகம் பாடியும், நகரினுட் புகும்போது பதிகம் பாடியும் வந் தணைந்தனர்; அஃது இறுதி முறை என்பது திருவருட் குறிப்புணர்த்திய நிலை போலும் (3045 - 3046)

(194) சீகாழியில் திருமுருக நாயனார், திருநீலநக்க நாயனார் முதற் றொண்டர்கள் வந்து கூடியபோது, அவ்வடியவர்களுடன் கூடி இனிதமர்ந்தருளினார் பிள்ளையார். இஃது அடிமைத் திறம் பூண்டோரது வாழ்க்கைத் திறம் (3052).

(195) சிவஞான நிறைவுடையோராயினும் உலகில் மறையொழுக்கம் காட்டும் பொருட்டு ஒரு கன்னியைத் திருமணம் செய்யும்படி உலக நிலையிற் பெரியோர்கள் வேண்டுதல் மரபு (3054).

(196) சிவனருள் ஞானம் பெற்ற நிலையில் மணத்திறத்துட்படுதல் கூடாதாயினும், உலகம் வாழும் பொருட்டு மறை வழக்கம் காட்ட அச்சடங்குக்கு அவர்கள் உடன்படுத லும் கூடும் (3057).

(197) ஏற்ற குலமும் மரபும் இசையும்படி பொருந்தக் கண்டு மணம் பேசுதல் முன்னோர் மரபு (3059).

(198) மண நாளோலை போக்குதல், முளைப்பாலிகை விதைத்தல், மண நாளுக் கெழுநாளா முன்னாளில் முளை பூரித்தல், மாளிகைகளை மங்கலக்கோலம் புனைந்து பந்தர் கள் புனைதல், பண்டநிறை சாலைகள் அமைத்தல், வேள்வி உபகரணங்கள் சமைத்தல், கலவைக் கூட்டு அமைத்தல், மலர்ப் பிணையல்கள் அமைத்தல் முதலியன மணச்சடங்கு களும் மண முயற்சிகளும் ஆம் (3067—3079).

(199) மண நாளுக்கு முன்னாளில் மணமகன் கையிற் காப்புநாண் உரிய சடங்கு களுடன் அணிதல் வழக்கு (3085).

(200) திருஞான சம்பந்த நாயனாரது திருமணம் சிவனருளின் வழியே உலகுய்ய நிகழ்வதொன் றாகலின், மக்களேயன்றி வையம் முதலாகிய ஐம்பூத பரிணாமங்களும், பகலோனும், திசைகளும் மகிழ்ந்து தம் பயன் காட்டி மணவணி யணிந்தனபோல விளக்கம் காட்டின (3087—3093).

(201) மணத்தின்மேற் செல்லும் பிள்ளையார், தோணியின் முதல்வரையும் வளம்பதி யினையும் வணங்கிச் சென்றருளியது அப்பதியினுள் மீண்டும் வாரா நிலைகாட்டும் அருட்குறிப்பு (3095).

(202) பிள்ளையாரது மணக்கோலத்தினைத் திருவடிமுதல் திருமுடியினகாறும் முத்தணிகளால் அணிந்தமை அன்று அடைந்தார்க்கெல்லாம் முத்தி தரும் ஆசாரியாரதற் குறிப்பு.

(203) மகட் பெற்றோர் மணமகனைச் சிவனாக எண்ணிப் பாலினாற் பாதம் விளக்கி வழிபடலும், கன்னியைத் தம் கோத்திரம் குலம் முதலியவற்றைச் செப்பி நீர் வார்த்து மணமகன் கையிற் கொடுத்தலும் மணச் சடங்குகளுள் முதன்மையானவை (3130—3133).

(204) திருமணச் சடங்கில் மணமகளை மணமகனுடைய வலப்பக்கத்திலும் அதன் பின்னர் இடப்பக்கத்திலும் அமர்த்தல் மரபு (3135).

(205) மணச் சடங்குகள், ஆசாரியனால் சிவபெருமானது பாதங்களிற் பொருந்தும் உள்ளத்தாற் செய்தல் வேண்டும் (3137).

(206) மந்திர முறையினால் உய்த்த எரி வளர்த்தல் மணவேள்வியின் இன்றியமையாத சடங்கு (3138).

(207) மணமகளை மணமகன் கைப்பற்றிப் பொரி கையட்டி எழுமுறை வேள்வித் தீயினை வலம் வருதல் மணச் சடங்கு நிறைவெய்தும் சிறப்புடைய பகுதி (3138-3139).

(208) உலகுக்கு மறையொழுக்கமும் வேள்வி செய்தற்கு மனைவாழ்க்கை வேண்டும் நிலையினையும் வகுத்துக் காட்டுதற்காகத் தம் திருமணம் செய்தற்கு ஒருப்பட்டனர் பிள்ளையார், அவ்வளவேயன்றித் தாம் இல்வாழ்க்கையினை மேற்கொண்டு நடத்தும் விருப்பத்தாலன்று. ஆதலின் எரிவலங்கொள்ள வரும்போது "இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே" என்று எண்ணி, அம்மனைவியாருடனே சிவனருள் சோதியிலே விரும்பிக் "கல்லூர்ப் பெருமணம் வேண்டா" என்று பாடினர் (3140).

(209) விருப்புறும் அங்கியாவார் சிவபெருமானே யாவர் (3139)

(210) இறைவரது உருவம் அருட் பேரொளியேயாம் (3144).

(211) அருட் பேரொளியினுட் சேரும் வாயிலினை இறைவரே வகுத்துக் காட்டி யருளுதல் வேண்டும் (3145)

(212) அவ் வருட்பேரொளியின் வாயிலினுள் அடைதற்கு உலகுக்குக் காட்டப்பட்ட ஞான மெய்ந்நெறியாவது திருவைந்தெழுத்தேயாம் (3146)

(213) பிள்ளையார், "ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக" என்று சிவனருள் வழியே பாவித்துத் திருக்கண்ணோக்கமும் அருளாணையும் நிகழ்த்தித், திருவைந்தெழுத்தும் உபதேசித்தமையால் அத் திருமணத்தில் வந்தோர் யாவரும் முத்திக்குத் தகுதி யுடையாராகி முத்தியும் பெற்றனர்

(218) பிள்ளையார் சிவச் சோதியிற் கலந்த நிலையாவது போதத்தில் முடிந்த வழிப் புக்கொன்றி யுடனுண்மையேயாம் (3151).

## பின்சேர்க்கை - 1

உ

சிவமயம்

# தேவாரப் பாட்டு முதற் குறிப்பு

**[எண் - பக்க எண்]**

உ

சிவமயம்

# பாட்டு முதற் குறிப்பு

குறிப்பு :—தொகுததவா : K. ஆறுமுக நயினா, திருநாவுககரசு நாயனா சைவ சிததாந்த கழகம், திருததுறையூா (நடுநாடு).

பின்சேர்க்கை — 3

உ

சிவமயம்

# திருத்தங்களுட் சில

தடித்த எழுத்தில் உள்ளவை பாட்டும் மேற்கோள்களும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| எஅரு | 22 | நீறகும. | நிற்கும |
| எஅசு | 33 | | நீக்குணத்தலை - எனபனவும சோகக. |
| எஅஅ | 9 | கவலை | செயலற்றுக கவலை - |
| எஅகூ | 12 | | பறித்து வீழ — எனபதும பாடம். - சேர்க்க. |
| எகூ0 | 6 | நேர்வுறு | போவுறு |
| ,, | 9 | கணணுதலை | நுதறகணணை |
| ,, | 35 | மினவன | மீனவன |
| ,, | 40 | முழ்க | முழுக |
| எகூக | 16 | என்பார் | அனாரி னெழவும் |
| ,, | 37 | | (அரிழுந்து — எனபதும பாடம், உழந்தல் - வருநததல ; உழன்று - சுழனறு ; அழுங்கல - அழுதல. -சேர்க்க |
| எகூஉ | 25 | வகஙிற - | வலகுற |
| எகூகூ | 3 | தடர்ந்த | தொடர்ந்த |
| அ00 | 13 | தனிக | தனிபபெருந |
| அ0ரு | 42 | | மானாம் - அளவு ; மானமிலா - அளவிலலாத எனறலுமாம - சேர்க்க |
| அகரு | 19 | எனறு | என்றே |
| ,, | 21 | சிறபபிதது | கொணடதனைச சிறபபிதது |
| ,, | 35 | படியாம | படியாம எனறே எடுதது என ஏகாரம் பிரிததுக கூட்டுக. |
| அகசு | 2 | எனறலுமாம. | எனறலுமாம. கொணடமை தெரிநத குவலயம போறற எனறு கூட்டியுரைததலுமாம. |
| அகக | 32 | நின்றவர் | நிறைவர் - |
| அஉஉ | 17 | | ஆடல் - பெறறியுமாம. -சோகக. |
| ,, | 19-20 | இபபதிகததை...பால | -நீககுக. |
| ,, | 30 | "கருஙகுழற | "கருங்குழற் |
| ,, | 31 | "பருஙகை | பருஙகை - |
| அஉசு | 9 | | வீழ்ந்தார் — எனபதும பாடம். - சோகக. |
| அஉஅ | 17 | ஏல்லையிஃறவந் | எல்லையிறவந் |
| ,, | 32 | சேர்ந்த | சோநத கரிய |
| அரூக | 24 | இழுககாறு. | இழுககாது. |
| அரூரு | 43 | | ஏயினன் - ஏவினன் எனறலுமாம. - சேகக. |
| அரூகூ | 31 | மன்னன. | தெனனன. |
| அசக | 21 | வன்மைத | வனமை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௮௪௪ | 19 | உன | உண |
| ,, | 29 | இறைவனீ | இறைவநீ |
| ௮௪௫ | 4 | தலை | றலை |
| ,, | 38 | ௪௯௧ | ௬௯௧ |
| ௮௪௬ | 6 | வெல்லும | வாநில வெல்லும |
| ௮௪௭ | 16 | சேர்ந்த | சோந்துள்ள<br>வென்றவர்-வெல்பவர் என்ற பொருளில் வந்தது. |
| ,, | 36 | விரியும | சோதசு விரியும |
| ,, | 41 | பெருமை | பெறும் |
| ௮௪௮ | 6 | வேநதன | வேந்தா |
| ,, | 18 | | கொங்கள் தற்கு மகிழ்ச்சி காரணம் என்பதும் குறிப்பு. |
| ,, | 33 | | அணைந்திட - அணைந்திடலால் என்றலுமாம். |
| ௮௬௨ | 28 | னெருப | னெருய |
| ௮௬௫ | 14-15 | கேட்டார்களன்றி ...கேட்டலும | கேட்டார்களன்றி, அது சிந்தைக்கப்பட்டதனையும் தீதின்மையினையும் கேட்டாரல்லர், பிள்ளையார் அருவார்த்தை கேட்டலும - என்று திருத்திக் கொள்க. |
| ௮௬௬ | 8 | உரிய | புரிய |
| ௮௬௭ | 32 | வந்தவர் | லுற்றவர் |
| ௮௬௮ | 3 | | சூறுக்கொண்டு என்பது பாடமாயின் சுறுகாற்றாக கொண்டு எனக. சூறு - மயிர், தோல் முதலியவை பொசுங்கலில் வரும் நாற்றம். - சேர்க்க |
| ௮௭௪ | 35 | ஞுள்ள | ணுள்ள |
| ௮௭௫ | 22 | ௭௪௨ | ௭௨௨ |
| ,, | 29 | என்று | என்னும |
| ௮௮௭ | 34 | அவ்வச்சத்தினைத | அவ்வச்சம |
| ௮௯௦ | 33-34 | எஞ்சுதலாவது ..... ...சோந்தது | எஞ்சுதலாவது-குறைதல; அஃதிலாமையாவது சொல்லிமை ஒன்றும் குறையாது எல்லாம் ஒருங்கு சேர்தல். - திருத்திக்கொள்க. |
| ௮௯௩ | 6 | மென்றே | மென்பெறே |
| ௮௯௫ | 8 | கொடியினர் | சொடியினர் |
| ,, | 28 | | மெய் அணி நீறு - என்று கொண்டு நீற்றின் சிறப்பு எல்லாம் கொள்ள நின்றது. |
| ,, | 38 | | சடையார் மேவும்—என்பதும் பாடம். - சேர்க்க. |
| ௯௦௮ | 10 | அசைச்சரா | அமைச்சரா |
| ௯௧௦ | 14 | சறறி | சத்தி |
| ௯௧௧ | 9 | உடற | உடன |
| ௯௧௩ | 8 | பத்தினல் | பலத்தினல் |
| ,, | 22 | | கைதவன்-கைவந்த தவத்தையுடையவன் என்ற குறிப்புமாம். - சேர்க்க. |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| கOசுரு | 18 | வெய்தியாக | வெயதியவாக |
| கOஎக | 35 | திருநீாளிகக | திருநீறளிக்க |
| கOஎச | 16 | உலவ | |
| ,, | 32 | விளையுளு | |
| கOஎரு | 36 | போனற | போனற சிவநத |
| கOஎஎ | 14 | உலகஙக | மணணெலாம்...கணடு - உலகங்க |
| கOஅசு | 20 | விரும்பினுலே | விருபபினுலே |
| கOஅஎ | 15 | | பரவலுற்றர் எனற பாடமுமுண்டு |
| கOகூO | 34 | கானபேர் | கானபபோ |
| கOகூக | 11 | லாயின | லாயின |
| ,, | 29 | | அருகன்—எனபதும பாடம் - சேர்கக. |
| ககOசு | 12 | நிறை | நிறை - சோகக. |
| ,, | 41 | ரெணக் | றெணக |
| கககஉ | 7 | | ஒடுநீ—எனபதும் பாடம். - சேர்க்க. |
| கககஎ | 3 | மிக்கபேரமி | மிக்கபெரும் |
| ககஉஎ | 40 | கடலேன | கடலின |
| ககஙசு | 33 | வாற்றல் | வாற்றர் |
| ககஙகூ | 27 | தோடும | தோடும ஒரு |
| ககசங | 9 | | கோட்டமென நவின்று—எனபதும் பாடம். - சேர்கக. |
| ககருங | 8 | வேடனுர் | வேடனும் |
| ,, | 27 | | "சதிராலே சாாவானே" (திருவா) - சேர்க்க. |
| ககருசு | 31 | நியதியுடைய | நியதியுடைய அனபர் |
| ககஅக | 11 | நீறறு | திருநீறறு |
| ,, | 14 | மிதகுயாநத | மிசகுயாநத |
| ககஅங | 12 | அடியாாநளை | அடியாாகளை |
| ககஅச | 11 | செல்லுதறகரிய | செலலுதறகரிய |
| கககூச | 20 | தூககினுல - | தூககி(னுல) - மறை |
| கககூஎ | 3 | | ஆக்குதலால் மனனு புகழினை எனறு கூட்டியுரைததலுமாம. - சேர்கக. |
| ,, | 37 | மனனு | யலகு |
| கஉOஉ | 13 | யுடைவே | யடைவே |
| கஉOங | 30 | யுள்ளன. | உள்ளன. |
| கஉகO | 19 | பாலன | பாலன. |
| கஉகங | 35 | அநகு | அலகு |
| கஉகச | 30 | ( ) | (2179) |
| கஉசஎ | 5 | கான | கான |
| கஉககூ | 11 | | —(11) சம்பந்தன் அடிஞானம் - சம்பநதனுற சொலலபபட்ட திருவடிஞானததை - சோகக. |
| ,, | 20 | மேனி | வேணி |
| கஉஉரு | 29 | | மெய் - திருவிளையாடலகளின உணமை என்றலும, துலவிய - குலவும பொருட்டு என்றலும ஆம. - சோகக. |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| கஉஉக | 12 | வியங்கன் - | வியஙகோன் - |
| ,, | 28 | மணறகாடு | மணறகாடு |
| கஉஙங | 39 | செய்வோர் ; | செய்வோர் ; கூரிய அம்பின் கொடுமை வாய்ந்தவர் என்றுமாம். - (சேர்க்க.) |
| கஉஙச | 10 | எழுந்து ; | எழுந்து அதிதது ; |
| கஉஙஎ | 13 | கல்உடை புனைந்த | இழைபோன்ற |
| கஉஙக | 21 | | நின்றுர் - நிலைபெற்றவர் ; (நின்ற திருத்தாண்டகம்) - சேர்கக. |
| கஉசO | 26 | பாடியருளித்தொடஙகி | தொடங்கிப் பாடியருளி ; |
| கஉசக | 14 | | முன்னமே விளைதத சிவபுண்ணியப் பேறறிறுல் சிவததை அடையப பக்குவமாயின் என்றுமாம். - சேர்க்க. |
| கஉசரு | 11 | ணினிதமர்ந்தார் - | ணினிதமர்ந்தார் - |
| கஉசஅ | 8 | விலிவலம் | விலவலம |
| ,, | 37 | நிலம | நீலம |
| கஉசக | 23 | உணிடு | உண்டு |
| கஉருச | 14 | மிகுநத ; | மிகுநத ; எண்பெருக்கும் - அளவுமிகுநத ; |
| கஉஎக | 8 | றெழுந்தருளித் | எழுந்தருளிக் |
| கஉஎங | 29 | பேறின்மையின் | பெற்றின்மையின்—என்பதும் பாடம். |
| கஉஅO | 30 | பிதினியைபு | பிறிதினியைபு |
| கஉஅச | 9 | வாழ்வர்-வாழ்வுடையவா. | ஆழ்வர் - ஆழச் செய்து நலம் தருபவர். |
| கஉகக | 12 | மாதவர்கடுன | மாதவர்கடுண |
| கஉகரு | 19 | பயிலாதாகும | பயிலாதாரும |
| கஙOக | 34 | பாடிநின்று | பாடியாடித் |
| கஙOரு | 27 | பயினறு | பயினறு |
| ,, | 32 | வீறறிருந்தருளும | உமையம்மையாரோடு விற்றிருந்தருளும் |
| ,, | 39 | ஏறறின | குலவு...கொளகை பாடி - விளஙகும் திருப்பததினை சிறப்பினைப பாடி ; ஏற்றின் |
| கஙகO | 20 | காளமதா | தாளமதா |
| ,, | 40 | தருகது | எருதது (தோள) |
| கஙகக | 31 | வேதாகமஙகள் | வேதாஙகங்கள் |
| கஙகங | 9 | மறறைவா | மற்றிறைவா |
| கஙகஎ | 30 | டேத்தி | டோதி |
| ,, | 40 | கோலியா | கோவியா |
| கஙஉசு | 34 | கிறைததல | கிரைததல |
| கஙசரு | 30 | கையில் | சிவந்த கையில் |
| கஙசஅ | 39 | யினைதநியினிற | யினில நியினைப் |
| கஙருச | 3 | மயங்கி | உளம மயங்கி |
| ,, | 13 | பாவை | பாவையார் |
| கஙசுக | 11 | உலகததில் | பெரிய உலகததில் |
| " | 27 | தொழுது | முன்னே தொழுது |
| கஙசுஅ | 34 | வெறறி | மன்மதனுடைய வெற்றி |